

# கம்ப ராமாயணம்

## கிட்கிந்தா காண்டம்



டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை
இணை முயற்சி - மாறன் பதிப்பகம், பெங்களூர்

ஸ்ரீமத்

# கம்பராமாயணம்

## கிட்கிந்தா காண்டம்

(பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன்)







**டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்**



எண். 2, அருண்டேல் கடற்கரைச் சாலை
பெசன்ட் நகர், சென்னை – 600 090
தொலைபேசி: 044–2491 1697
druvslibrary@gmail.com

இணை முயற்சி :

**மாறன் பதிப்பகம்**

எண். 56, 6வது குறுக்கு, நஞ்சப்பா கார்டன்
பாபுஸாபால்யா, பெங்களூர் – 560 043
கைபேசி: 99807 94542, 98411 24542
maranpublications.blr@gmail.com




© காப்புரிமை : டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்

முதற்பதிப்பு : அக்டோபர் 1957
மறுபதிப்பு : பிப்ரவரி 2022

பிரதிகள் : 500

பக்கங்கள் : 32 + 1028 = 1060

விலை : ரூ.6000/–
(ஒன்பது தொகுதிகளுக்கும்)

வெளியிடுவோர் & கிடைக்குமிடம் : டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்
பெசன்ட் நகர், சென்னை – 600 090
044 – 2491 1697, செல்: 80720 70668

இணை முயற்சி & கிடைக்குமிடம் : மாறன் பதிப்பகம்
56, 6வது குறுக்கு, நஞ்சப்பா கார்டன்
பாபுஸாபால்யா, பெங்களூர் – 560 043
செல்: 99807 94542, 98411 24542
maranpublications.blr@gmail.com

அட்டைப்படம் வரைகலை : R. பிரகாஷ், Previz
சென்னை–87. செல்: 90031 90096

அச்சிட்டோர் : ஆர்.என்.ஆர். பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்
8, தாண்டவராயன் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை – 5
044 – 2844 7071, 2844 1856
rnrprintersch5@gmail.com

18/4

# ஸ்ரீமத் கம்பராமாயணம்

## கிட்கிந்தா காண்டம்

### அட்டைப்பட விளக்கம்

**வேண்டியது ஒன்று விளைந்தது ஏழு:** இராமனும் இளவலும் சவரியின் அறிவுரைப்படி சுக்கிரீவனைக் காண, வழியில் பம்பைநதியில் நீராடி, ருசியமூகமென்னும் மலையை அடைந்தனர். அவர்களின்வரவை அறிந்தசுக்கிரீவன், வில்லேந்திய பகைவரோ என ஐயுற்று ஓடி ஒளியத்தலைப்பட்டான். பயந்த மற்ற வானரர்களையும் தேற்றிய அநுமன், ஒரு பிரமசாரி உருவத்துடன் இராமனிருப்பிடம் அடைந்தான். வந்தவர்கள்பெரும் மதிப்புடைய பொருளொன்றை இழந்து தேடுபவராகவும், கருணைக் கடலாகவும், வீரத்திலே யமனை வெருட்டுபவராகவும் காணப்படுகின்றனர் என நினைத்தான். தன்னை அஞ்சனை மைந்தனெனவும், சுக்ரீவனிடத்தில் ஊழியம் செய்பவனாகவும், அவர்களின் வரவால் கலங்கிய தன் தலைவன் அவர்களைப் பற்றி அறிய அனுப்பியதாகவும் கூறினான். விநயத்துடனும், அவர்களைச் சரியாக உணர்ந்தவனாகவும், குறைந்த சொற்களில் மிகுந்த பொருள்பட உரைத்த அநுமனைச் சொல்லின் செல்வன் இவன் என இராமன் இளவலிடம் கூறி, அவர்கள் சுக்கிரீவனைக் காணவே வந்திருப்பதைச் சொன்னான். இளவலும் அநுமனிடத்தில் தங்கள் சரிதம் கூற, வணங்கிய அநுமன் தன் வேடம் கலைத்து, நெடிது உருவுகாட்டி, இருவரையும் தோளில் சுமந்து தன் தலைவனை அடைந்தான்.

அநுமன், சுக்கிரீவனிடம் வாலியின் வாழ்வை முடிக்க அருளின் மேம்பாட்டால் உன்னை அடைந்த இராமனுடன் நட்புக்கொள் என மந்திரியாய் அறிவுறுத்தினான். பரஸ்பர உபசாரத்திற்குப்பின், சுக்கிரீவன் வாலி தன்னைக் கொல்ல வர, தான் உலகம் முற்றிலும் சுற்றி, இவ்விடம் பாதுகாப்பானதால் தங்கியுள்ளதைச் சொல்லி, தன்னைக் காக்க இராமனிடம் சரணடைந்தான். வாலியினால் சுக்கிரீவன் பட்ட துன்பத்தை மேலும் அநுமன் உரைக்க, சினந்த இராமன், வாலியை முடிப்பேன் எனக்கூறி அவன் உறைவிடம் காட்டச் சொன்னான். சுக்ரீவன் தயங்கித் தன் சுற்றத்தாருடன் இராமன் வீரம்பற்றி உறுதி செய்ய உபாயம் தேட அநுமன், செல்லும் வழியிலுள்ள மராமரம் ஏழினுள் ஒன்றைப் பாணத்தால் பிளத்தல் தகுமே என்றான்.

போகும் வழியில் வானளாவி, சூரியன் பாதையை மறித்தும், தன் கிளைகளால் நிலவை உராய்ந்து அதில் கருநிறக் களங்கம் உண்டாக்கியும், பாதாளவுலகு வரை வேரைப்பரப்பியும் நின்றிருந்தன ஏழு மராமரங்கள்; அவற்றில் ஒன்றினை இராமனின் அம்பு துளைத்தல், அவனின் பாராக்கிரமத்திற்குச் சான்றாகும் என்பது சுக்கிரீவனின் கருத்தானதை அறிந்த இராமன், எட்டுத்திக்கும் செவிடாகும்படி நாணொலி எழுப்பினான்; பின்,பொய் பேசாத அநுமன் முதலியோர், இந்த நாணொலியைக் கேட்ட பின்னும் இராமபிரானின் அம்பு எய்யும் திறத்தைக் காண வேண்டுமோ என நினைந்து அருகில் வர, அவர்களை அடியார்களாகக் கொண்ட இராமபிரானும் வலிமை கொண்ட வில்லின் நாணினை முறையாக இழுத்து கொடிய அம்பொன்றைச் செலுத்தினான் என்னும் பொருளினாலான கீழ்க்காணும் கம்பன் பாடல் சித்திரத்தில் இடம் பெற்றதாம்

எய்தல் காண்டும்கொல், இன்னம் ?' என்று, அரிதின் வந்து எய்தி,
பொய் இல் மாருதி முதலினோர் புகழ்வுறும் பொழுதில்,
மொய் கொள் வார் சிலை நாணினை முறை உற வாங்கி,
வெய்ய வாளியை, ஆளுடை வில்லியும், விட்டான்.

**அணியிலே அணங்கைக் கண்ட அண்ணல்:** சுக்கிரீவன் மராமரம் ஒன்றினைத் துளைக்க விடுத்த வேண்டுகோளுக்கிணங்க இராமன் விடுத்த அம்பு, ஏழு மரங்களையும் துளைத்து, கீழேழுலகங்களையும் துளைத்து, மேலும் உலகில் ஏழு எண்ணிக்கைச் சேர்க்கையால் அமைந்த எல்லாவற்றையும் கலங்க வைத்து அண்ணலிடமே வந்து சேர்ந்தது. மேலும் வழியில் கிடந்த துந்துபி என்னும் அரக்கனின் உடலைக்கண்டு, அவன் கதையறிந்த பின், அவ்வுடலை இலக்குவனின் கால்விரல் நுனியால் அகற்ற வைத்தான் இராமன்.

பின் அனைவரும் ஒரு சோலையை அடைந்த வேளையில், சுக்கிரீவன் இராமனிடம், முன்னொரு நாளில் வெகுதூரத்தில் வான்வெளியில் கொடிய இராவணனால் கவரப்பட்டு, துன்பத்தால் வாய்விட்டுக் கதறி ஒருத்தி சென்று கொண்டிருந்தாள்; இப்பொழுது நன்றாகச் சிந்திக்கையில், அவள் தம் தேவியே போலும் என்றான். மேலும், எம்மருகில் கடந்து செல்கையில், தம் நிலையை உணர்த்த வேண்டி, ஆடையின் ஒரு பகுதியில் தம் ஆபரணங்களை முடிந்து வைத்திருந்த சிறு மூட்டையை காதுவரை நீண்டிருந்த தம் அழகிய கண்களிலிருந்து மழையெனப்

பெருகிய கண்ணீருடன் இட்டுப் போயினள் என்றும், அவர்கள் அதைப் பாதுகாத்துவைத்துள்ளனர் என்றும் கூறினான்.

அந்த அணிகலன்களைத் தம் கையில் ஏந்தி சுக்கிரீவன் காண்பித்ததை நன்றாகப் பார்த்த இராமபிரான், எரியும் நெருப்பிலிட்ட மெழுகு போல் உருகினான்; அவைகளை நீராய் அள்ளிப்பருகுவான் போல் அனுபவித்த இராமனின் நிலை வார்த்தை வர்ணனைகளுக்கப்பால் நின்றது; சீதை அந்த அணிகலன்களை எந்த அவயத்தில் அணிந்திருந்தாளோ, அவ்வவயமாகவே அந்த அணிகலன்கள் தோன்றின.

இராமபிரானது சிவந்த இரண்டு கண்களிலிருந்து பெருகிய நீர்வெள்ளங்கள் எல்லாப்பொருட்களையும் இழுத்துக்கொண்டு சென்றன; மயிர்ச்சிலிர்ப்புகள் அவனது திருமேனியை மூடின; பூரிக்கின்ற திருத்தோள்கள் வேர்த்தன என்றோ, தாபமடைந்தான் என்றோ சொல்வேனோ! அப்போது பரிசுத்தனான அவன் அடைந்த நிலையை யான் உரைக்கவல்லனோ என்பதை

ஈர்த்தன, செங் கண் நீர் வெள்ளம், யாவையும்;
போர்த்தன, மயிர்ப் புறம் புளகம்; பொங்கு தோள்,
வேர்த்தன என்கெனோ ? வெதும்பினான் என்கோ ?
தீர்த்தனை, அவ் வழி, யாது செப்புகேன் ?

எனக் கம்பன் கவிதையில் வரைந்ததையும், வான்மீகத்தில் இலக்குமணனைப் பார்த்து இராமன் அந்த அணிகலன்களையெல்லாம் அடையாளம் காணச்சொல்ல, தான் ஒரு போதும் நிமிர்ந்து பார்க்காததால், மற்ற ஆபரணங்களை விட்டுத் தினமும் வணங்கி எழும்போது காணும் காற்சிலம்பு தேவியினுடையதே என்று கண்ணீருடன் அவன் பதில் உரைத்ததையும் இணைந்த எண்ணம் ஓவியமாயிற்றாம்.

**ஊகநாயகன் உயிர் கொண்டது:** (ஊகநாயகன்-வாலி) சுக்கிரீவன் பிராட்டியின் நகைகளைக் காட்டியதும், அவளைக் காக்க முடியாமற்போனதை எண்ணி கலங்குகிறான் இராமன். ஆறுதலாக அநுமன், வாலியைக் கொன்று சுக்ரீவனை வானரத் தலைவனாக்கினால், அரக்கர் கண்ணிமைக்கும் நேரத்தில் தாம் விரும்பிய இடத்தில் தோன்றிக் கிடைத்ததைக் கவர்ந்து தம்மிருப்பிடம் செல்பவராதலின், ஒரே சமயத்தில் இவ்வுலகம் முழுதும் ஓரிடம் விடாது தேடவல்ல எண்ணிக்கை கொண்ட வானரசேனையைக் கொண்டு நாம் தேடுவதே நலம் எனக் கூறுகிறான். அதை அங்கீகரித்த இராமனுடன், நறுமணம் கமழும்

ஏலக்காய் குன்றம் முதலியன கடந்து வாலி இருக்குமிடத்திற்கு அனைவரும் விரைகின்றனர்.

தம்பி சுக்கிரீவன் போருக்கழைக்கும் கர்ஜனையைக் கேட்டு, அலட்சியமாக அவன் கதை முடிப்பேன் எனும் சூளுரையுடன் கிளம்பும் வாலியைத் தன் அறிவார்ந்த சொல்லால் நிறுத்துகிறாள் அவன் மனைவி தாரை; சுக்கிரீவன் தன் உடல்வலியைக் கூட்டியதற்குத் தகவலின்றி, துணைவலியாய் இராமனைச் சேர்த்துக் கொண்டு வாலியை முடிக்க முயலும் தகவலுண்டு என்கிறாள். இராமன் குலம் மற்றும் அவன் பண்பு பற்றிப் பெரிதும் உகந்து பேசிய வாலி அவள் அறிவுரையைப் புறந்தள்ளிப் போருக்குப் புறப்படுகிறான். போரின் வலிமையைப் பலவாறு வருணித்த கம்பன், அவர்கள் போருக்கு உவமை வார்த்தை இல்லை என முடிக்கிறான். சுக்கிரீவனைப் பாறையில் அடித்துக் கொல்லத் தயாராகத் தூக்கி நிற்கும் வாலியை, குரக்கினப் போரில் சிறிதும் ஆவலற்ற தன் இளவலைத் தேற்றிய இராமன், தக்க தருணமென ஒரு அம்பை வாலியின் மார்பில் செலுத்தினான். மேருமலை வேரற்று விழுந்ததுபோல் விழுந்த வாலி, இப்புவியை வேரொடு பறிக்கும் சிந்தனையனாய்ச் சினந்தான். தனக்கு ஊறுவிளைவித்தது எது? யார்? என அறியமுற்பட்டான். அதன் விளைவாக, அஃது ஓர் அம்பு எனத் தெளிந்து, பலவித சஞ்சலமனத்தால் பயனில்லை எனக் கருதி, தன் மார்பில் உயிருடன் ஊடுருவிச் சென்றுள்ள ஒப்பற்ற அந்த அம்பைக் கரங்களாலும், வாலினாலும், கால்களாலும் மார்பிலிருந்து அகற்றி எய்தவன் பெயர் என்று எண்ணிப் பறிக்க முற்பட்டதைக் கம்பன்,

சரம் எனும்படி தெரிந்தது; பல படச் சலித்து என் ?
உரம் எனும் பதம், உயிரொடும் உருவிய ஒன்றை,
கரம் இரண்டினும், வாலினும், காலினும், கழற்றி,
பரமன் அன்னவன் பெயர் அறிகுவென்‘ என, பறிப்பான்

என்று கவிதை செய்ததைச் சித்திரமும் செப்புமாம்.

பிலவ வருடம்
தைத்திங்கள் முதல் நாள்
பெங்களூர்

புதுஅக்ரஹாரம் ச.வாசுதேவன்
மாறன் பதிப்பகம்

******

# உள்ளுறை

உ

ஸ்ரீராமஜயம்

# பதிப்புரை

ஆவாரார் துணையென் றலைநீர்க் கடலுளழுந்தும்
நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்றுநான் துளங்கத்
தேவார் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும்
ஆவாவென் றருள்செய் தடியேனொடு மானனே.

(திருவாய்மொழி)

ஸ்ரீராமபிரானை அறிந்து அடையக் கருவியாய் விளங்கும் இராமாயணத்தில் கிட்கிந்தா காண்டம் என்னும் இப்பகுதி நான்காவது காண்டமாகும். மகா மகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள் அரிதில் தேடிவைத்த சுவடிகளையும், குறித்துவைத்த குறிப்புக்களையும், பிறவற்றையும் துணைக்கொண்டு இந்நூல் நிலையத்தால் பதிப்பிக்கப் பெற்றுவரும் கம்பராமாயணக் காண்டங்களுள் குறிப்புரை முதலியவற்றுடன் பால காண்டம் 1949லும், அயோத்தியா காண்டம் 1951லும் கலா க்ஷேத்திர வெளியீடுகளாக வெளிவந்தன. பிறகு பதவுரை, விளக்க வுரை, முதலியவற்றுடன் இந்நூல் நிலைய வெளியீடுகளாக ஆரணிய காண்டம் 1959லும், சுந்தர காண்டம் 1957லும் வெளியிடப்பெற்றன. இறைவனருளால், இப்பொழுது இக்காண்டம் வெளி வருகின்றது. இஃது ஆரணிய, சுந்தர காண்டங்களைப் போன்றே பதிப்பு முறைகளைப் பெற்றுள்ள தென்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

முன் இரு காண்டப்பதிப்புக்களில் கையாளப்பெற்ற 19 சுவடி களும் அச்சுப் பதிப்புக்களும், காலஞ்சென்ற உயர் திருவாளர் S. வையாபுரி பிள்ளை அவர்களின் நூல் நிலையத்திலிருந்து கிடைத்த 9 ஓலைச்சுவடிகளும், அவர்களின் பாடபேதக் குறிப்புக்களடங்கிய கைப் புத்தகமும் இப் பதிப்புக்குப் பயன்பட்டன, இவற்றை அன்புடன் இரவ லாக அளித்துதவிய திரு. பிள்ளையவர்களின் மருகர் உயர் திருவாளர் S. S. இராமசாமி பிள்ளை, B.Sc.,B.L., அவர்களுக்கு இந்நிலையம் மிகுந்த கடப்பாடுடையது. இவற்றோடு, மகா மகோபாத்யாய ஐயரவர்கள் நெடுநாட்களாக ஆராய்ந்து குறித்துவைத்திருந்த அரிய குறிப்புக்கள் எப்பொழுதும்போல் இப்பதிப்புக்கும் பேருதவியை அளித்தன. இவற்றை அவ்வப்பொழுது கொடுத்துதவும் உயர் திருவாளர் க. சுப்பிரமணிய ஐயர், B.A., அவர்களுக்கு எம் மனமார்ந்த நன்றி என்றும் உரியதாகும். இவற்றை யன்றி, பறங்கி உரை என்ற குறிப்புரை

விளக்கங்களுடன் அமைந்த பழஞ் சுவடி ஒன்றும் சில இடங்களில் சிறந்த பாடங்கள் கொள்ளுதற்கும், பொருள் காண்பதற்கும் பயன் பட்டது. வான்மீகி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், துளசிதாசர் இயற்றிய இராம சரித மானஸம், பாரதம் போன்ற வடமொழி நூல் களும் இப்பதிப்புக்குப் பயன்பட்டன. ஒப்புமை, மேற்கோள் முதலியன பல பண்டைத் தமிழ் நூல்களிலிருந்து எடுக்கப் பெற்று உரை விளக்கங்களுள் காட்டப் பெற்றுள்ளன.

இக் காண்டம் 1004 பாடல்களைக் கொண்ட 16 படலங்களைக் கொண்டுள்ளது. இவ்வெண்கள், வெளிவந்துள்ள அச்சுப்புத்தகங்களி லும் பல ஏடுகளிலும் காணப்பெறும் எண்களுக்கு மாறுபட்டுள்ளமை யையும், பல படலங்களின் பெயர்களும் அவ்வாறே மாறுபட்டுள்ளமை யையும் ஆங்காங்கே சுட்டி விளக்கியுள்ளோம். இப்பதிப்பிற் காணப் பெறும் அதிகப் பாடல்களின் தொகை 78; இவற்றையும் கூட்ட, இக் காண்டத்துக்கு உரியனவாக இப்பதிப்பிற் காட்டப்பெற்ற செய் யுட்களின் தொகை 1082 ஆகும்.

சுவடிகளிலும் அச்சிட்ட பதிப்புக்களிலும் இக்காண்டத்திற் குரியனவாகக் காட்டப்பெற்ற படலங்களினுடையவும் செய்யுட்களி னுடையவுமான எண்ணிக்கைகளின் வேற்றுமைகளைக் காட்ட, உதா ரணமாகச் சிலவற்றை மட்டும் கீழே தருவோம்,

| சுவடி எண் | படலங்கள் | பாடல்கள் |
|---|---|---|
| 357 | 16 | 1040 |
| 358 | 16 | 1040 |
| 361 | 16 | 1040 |
| 362 | 16 | 1040 |
| 366 | 16 | 1000 |
| 367 | 16 | 1031 |
| 368 | 16 | 1025 |
| 370 | 16 | 1040 |

பகுப்பு II

| | | |
|---|---|---|
| பெரிய காகிதப் பிரதி | 14 | 1028 |
| 360 | 14 | 1020 |
| 363 | 16 | 1040 |
| 365 | 14 | 1024 |

## பகுப்பு III

| | | |
|---|---|---|
| 359 | 17 | 1010 |
| 369 | 15 | 912 |

## பகுப்பு IV

| | | |
|---|---|---|
| 364 | 14 | 1080 |
| 374 | 16 | 1026 |

## பகுப்பு V

| | | |
|---|---|---|
| 375 | 17 | 1000 |

(மேலே குறித்த பகுப்புக்கள் ஒருவாறு பிரதேச வாரியாக அமைக்கப் பெற்றவை. இவற்றின் காலம், தன்மை முதலியவற்றை எம் சுவடி விளக்கம் பகுதி 1லும், சுந்தர காண்ட, ஆரணிய காண்டப் பதிப்புரைகளிலும் காணலாம்).

## அச்சிட்ட நூல்கள்

| | | |
|---|---|---|
| கிருஷ்ணமாசாரியார் பதிப்பு | 17 | 1050 |
| இராமரத்னமையர் | 14 | 1052 |
| வாணிவிலாஸம் | 17 | 1042 |
| ஆழ்வார் திருநகரி | 16 | 1028 |
| கோவிந்த பிள்ளை | 16 | 1045 |
| மர்ரே அண்டு கம்பெனியார் | 17 | 1025+51 |
| சென்னை ராஜதானிப் பாடசாலை புத்தகச் சங்கத்தார் பதிப்பு (1888). | 14 | 1031+26 |

இவ்வாறு படலங்களின் பெயர்கள், எண்கள், செய்யுட்களின் தொகை ஆகியவை, சுவடிகளிலும் அச்சிட்ட நூல்களிலும் மாறி மாறி யிருப்பதையும், இப்பதிப்பு சில செய்யுட்களை விட்டுப் பிறவற்றை ஏற்றுக்கொண்டிருப்பதையும் இயன்றவரையில் காரணம் காட்டி ஆங்காங்கே குறித்துள்ளோம். பாடமாக ஏற்றுக்கொள்ளப் பெறாத பாடல்களை அதிகப்பாடல்கள் என்று குறித்துள்ளோம்.

### பிரதி பேதங்கள்

மக்களின் காப்பியமாக ஆயிரம் ஆண்டுகளுக்குமேல் நாட்டில் வழங்கிவரும் இப்பெரு நூலில் பல பிரதிபேதங்கள் நிகழ்ந்திருப்பது இயல்பே. (சுவடிகளை ஒருவாறு பிராந்திய வாரியாகப் பிரித்துப்பார்க்கும்போது, இவ் வேற்றுமைகளும் ஒவ்வொரு வகையாகப் பிரிந்து நிற்கின்றனஎன்பதும் காணப் பெறுகின்றன). இவ்வாறு பெறப்பெற்ற பல்லாயிரம் பாட பேதங்களைத் தொகுத்துவைப்பதே இப்பதிப்புக்களின் முதற்பணியாக ஏற்றுக்கொள்ளப் பெற்றது. இவற்றிலிருந்து ஏற்ற பாடங்களைத் தேர்ந்தெடுக்க ஸ்ரீஐயரவர்களின் குறிப்புக்களும், பழைய இராமாயண வசன நூல்களும், பறங்கியுரை போன்ற பழைய உரைக் குறிப்புக்களும், சிறந்த புலவர்கள் கையாண்ட சுவடிகளும், அச்சிட்டு முன் வெளிவந்த பதிப்புக்களும் பேருதவி புரிந்தன.

### அதிகப் பாடல்கள்

மூல பாடமாக ஏற்றுக் கொள்ளப் பெற்ற செய்யுட்களேயன்றி, பிறவற்றை அதிகப்பாடல்கள் என்று கொண்டு, ஏற்ற இடங்களில் காட்டியுள்ளோம். இவற்றுள் பல ஒரே சுவடியிலும், சில ஒன்றுக்கு மேற்பட்ட சுவடிகளிலும் காணப்பெற்ருலும், ஆசிரியரின் கருத்து, கதையின் போக்கு, செய்யுட்களின் நடை, பழைய சுவடிகளில் அவை இல்லாமை போன்ற காரணங்களால் அவை இடைச்செருகலாகலாம் என்று கருதப்பெற்று மூல பாடங்களில் சேர்த்துக்கொள்ளப் பெருமல், தனியே பாட பேதங்களுக்குக் கீழே அமைக்கப்பெற்றுள்ளன. இன்னும், அச்சுப் புத்தகங்களில் ஏறிய செய்யுட்கள் இப் பதிப்பில் பாடங்களாகச் சேர்த்துக் கொள்ளப் பெரு இடங்களில் காரணங்கள் சுட்டப்பெற்றுள்ளன. இவ்வாறு இக்காண்டத்திற் காட்டப்பெற்ற அதிகப் பாடல்கள் 78 ஆகும்.

பிரதிபேதங்களையும், அதிகப்பாடல்களையும் நீக்கி விடாமல், பதிப்பிலேயே தனித்துக் காட்டுவதால், படிப்பவர்கள் ஷ சுவடிகளை மறுபடியும் நாடவேண்டிய அவசியமில்லை; இப்பிரதிபேதங்களுட் சிலவும் பாடங்களிற் சிலவும் ஏற்றுக் கொள்ளத் தக்கன என்று அறிஞர்களுக்குப் படுமாயின் அவ்வாறு செய்யவும் அவை பயன்படுவனவாகும்.

### உரைகள்

பதவுரைகள் இயன்ற வரையில் பாடல்களின் அந்வயப்படியும், எளிய நடையிலும், பொருத்தமான முறையிலும் அமையவேண்டுமென்ற கருத்துடன் எழுதப்பெற்றுள்ளன. இவ்வாறு செய்வதால்,

பதங்களைப் பிரித்தல் அவற்றை முறைப்படுத்தல் ஆகியவற்றையும் ஒருங்கே செய்து காட்டியதாகும். உரை வகுப்பதில் எம் ஆற்றலுக் கேற்ப மிகுந்த கவனம் காட்ட முயன்றிருக்கிறோம்.

விளக்கவுரை இப்பதிப்பின் ஒரு சிறந்த பகுதியாகும். செய்யுள் களின் பொருள்களின் நயங்களை விளக்கிக் கூறவும், ஆசிரியரின் கவிச் சிறப்பையும் அவர்தம் கொள்கைகளையும் வற்புறுத்தவும், செய்யுளின் நடை, அழகு முதலியவற்றை விளக்கவும், அரிய பிரயோகங்களுக்கு மேற்கோள், ஒப்புமை முதலியவற்றை அமைக்கவும், முதனூல் முதலிய இராமாயணப் பிற நூல்களிலிருந்து ஒப்புமை வேற்றுமைகளைத் தெரி விக்கவும் இப்பகுதி பயன்பட வேண்டுமென்ற கொள்கையுடன் இஃது எழுதப்பெற்றுள்ளது.

இத்தகைய முயற்சிகளால், இன்று எமக்குக் கிடைத்த கருவிகளைக் கொண்டும், இறைவன் திருவருளை முன்னிட்டுக் கொண்டும், தமிழின் மகோபகாரியான டாக்டர் ஐயரவர்கள் விரும்பித் தொடங்கிய இப் பெரும் பணியை, எம் எளிய ஆற்றலுக்கேற்ற முறையில், உலகுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டுமென்ற உள்ளன்புடன் இப் பதிப்புக்களை ஒன்றன்பின் ஒன்றாகத் தமிழன்னையின் திருவடிகளில் சமர்ப்பிக்கின் றோம். ஆயிரம் ஆண்டுகளுக்கு அதிகமாகத் தமிழின் உயிராகவும், தமிழரின் கண்களாகவும் விளங்கும் இம்மகா காவியத்தை அறிஞர் முழுமையும் ஒப்புமாறு பதிப்பிப்பதென்பது எம்போன்ற எளியோர்க்கு இயல்வதன்று; எனினும், ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புக்களும், அவர்கள் தேடி வைத்த கருவிகளும் உலகுக்குப் பயன்படச் செய்ய வேண்டு மென்ற கடமை யுணர்ச்சியுடன் இம்முயற்சி மேற்கொள்ளப் பெற்றது என்பதையும், இவற்றை வெளியிடுவதில் எவ்வளவு பக்தியும், சிரத் தையும், உழைப்பும் எம்மால் இயலுமோ அவ்வளவையும் இதனிற் பயன்படுத்தி யுள்ளோம் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம். இப் பதிப்பில் காணப்பெறும் குறைகளைச் சுட்டியும், இஃது இன்னும் பயனுற வழிகளை வகுத்துக்காட்டியும் உதவும் அறிஞர்களுக்கு என் றென்றும் நன்றியுடையவர்களாவோம்.

கம்ப ராமாயணப் பதிப்புக்கள் சில முன்பே நாட்டில் உலவவும் சில இக்காலத்து வெளிவந்து கொண்டிருக்கவும், இந்நூல் நிலைய வெளியீடு வேண்டுமா என்று சிலர் ஐயப்படக் கூடும். அவர்கள் இப் பதிப்பினை அன்புடன் ஊன்றிப் படித்துப் பார்த்துதவ வேண்டுமென்று அவர்களை மிகுந்த தாழ்மையுடன் வேண்டிக்கொள்கிறோம். இவற்றை வெளியிடுவதில் இந்நிலையம் எடுத்துக்கொள்ளும் முயற்சி கடமையின்

பாற்பட்ட தென்பதையும், தமிழுலகத்திற்குச் செய்ய வேண்டிய இன்றி யமையாப் பணி யென்ற எண்ணத்தின் பாற்பட்ட தென்பதையும் தெரிவித்துக்கொள்ளவும் விரும்புகிறோம்.

நன்றியுரை

இப் பதிப்பு வெளிவர உதவியவர் பலராவர். இந்நூல் நிலையத் தைப் பாதுகாத்து இதன் வழியாக ஸ்ரீ ஐயரவர்களின் புகழை நிலை நிறுத்தப் பேரன்புடனும் அநுதாபத்துடனும் உழைத்துவரும் ஸ்ரீமதி ருக்மிணி தேவியார் அவர்களுக்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறது. இந் நிலையத்தின் அத்யக்ஷரான அவர்களும், இதன் நிதியாளரான உயர்திரு. K. சங்கரமேனோன் அவர்களும் இப் பதிப்பு வெளிவருவதற்கு மிகுந்த சிரத்தை காட்டி நூல் நிலையத்துக்கு உதவி செய்து வருகின்றார்கள். அவர்களுக்கும், இப் பதிப்பின் செலவிற் கணிசமான பங்கை மானியமாகக் கொடுத்து உதவிய இந்திய கவர்ண் மெண்டு Scientific Research and Cultural Affairs Ministry காட்டியுள்ள அன்பிற்கும் இந்நிலையம் மிகுந்த கடப்பாடு தெரிவிக்கின் றது. இதனுள் சேர்க்கப் பெற்றுள்ள படங்களுள், சுக்கிரீவ பட்டாபி ஷேகப் படம் கும்பகோணம் ஸ்ரீ இராமஸ்வாமி கோவில் பிராகாரத்தில் வல்லுநர் ஒருவரால் பழங்காலத்தில் எழுதப் பெற்றதன் பிரதியாகும். அதனை எடுத்து உபகரித்த பிரமஸ்ரீ அ. கோபால ஐயர் அவர்களுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். வாலி சுக்கிரீவர் போர், வாலிவதை ஆகிய இரண்டு படங்களும் எல்லோராக் குகைகளில் உள்ள உருவங்களின் பிரதி ரூபங்கள்; அவற்றை அன்புடன் உபகரித்த ஔரங்கபாத் ஆர்க்கியாலஜி தென்மேற்கு வட்டம் சூபரிண்டெண் டெண்ட் அவர்களுக்கும் எம் நன்றி உரித்தாகும்.

இப் பதிப்புக்குரிய கருவிகளைச் சேகரித்தலும், சுவடிகளைப் படித்துப் பாடங்களைத் தொகுத்தலும், உரை முதலியவற்றைப் பிரதி செய்தலும் ஆகிய இன்னோரன்ன அடிப்படை உதவிகளை இந்நூல் நிலையப் பணியாளர்கள் யாவரும் மிகுந்த அன்புடன் ஏற்றுச் செய்து உதவினார்கள்; பாடம் திட்டமிடல், உரை வகுத்தல் ஆகிய சிறந்த பொறுப்பினை ஆசிரியர் ஸ்ரீ L. ஸ்ரீநிவாஸ ஐயர் அவர்களும், ஆசிரியர் ஸ்ரீ E. S. வரதராஜ ஐயர், பி. ஏ., அவர்களும் அன்புடன் ஏற்றுத் திறம்பட ஆற்றி யுதவினர். இவ்விருவரும் தமிழறிவில் சிறந்து நிற்பவர்களும், கம்பராமாயணப் பதிப்புக்களில் நெடுங்காலம் ஈடுபட்ட வர்களும், பதிப்பாசிரியப் பண்பு நிறைந்து விளங்குபவர்களுமாவர்; இவர்களுடைய அரிய பணி இக் காண்ட வெளியீட்டுக்கு வாய்த்தது

இந்நிலையம் செய்த பாக்கியமே ஆகும்; சுவடிகளையும் குறிப்புக்களையும் உதவிய அன்பர்களின் பெயர்களை முன்பே சுட்டியுள்ளோம்; இவர்கள் யாவர்க்கும் எம் ஆழ்ந்த நன்றி உரியது.

வழக்கம்போல் இவ் வெளியீட்டையும் அச்சிட்டுதவிய சென்னை, ரத்தினம் (கிளை) அச்சகத் தலைவர்க்கும் எம் கடப்பாட்டைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

எல்லா வகையாலும் எளிமையுற்ற எம் முயற்சிக்குத் தோன்றாத் துணையாய் நின்று, அவ்வப்போது தோன்றும் இன்னல்களை நீக்கி, இப் பணி செவ்வனே நிறைவேற உதவி வரும் ஸ்ரீ ராமபிரானின் திருவருளை எப்போதும் இறைஞ்சுகின்றோம்.

31—8—61.

---

உ

ஸ்ரீராமஜயம்.

# நூன் முகம்

பாருருவி நீரெரிகால் விசும்பு மாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற
இமையவர்தம் திருவுருவே றெண்ணும் போது
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோது ஒன்றும் சோதி
முகிலுருவம் எம்மடிக ளுருவந் தானே.

(திருநெடுந்தாண்டகம்—திருமங்கையாழ்வார்)

கிட்கிந்தா காண்டம் என்பது, முன் ஆரணிய காண்டத்தின் இறுதியிற் கண்டபடி, கவந்தனும் சவரியும் கூறிய வண்ணம், இராம லக்ஷ்மணர்கள், சுக்கிரீவன், வாலிக்கு அஞ்சித் தங்கியிருந்த ருச்யமூக மலையின் சாரலை அடைந்தது முதல், அச்சுக்கிரீவன் ஆணையால் பிராட்டி இருந்த இடத்தை நாடி வானர வீரர்கள் பல விடங்களில் அலைந்து, முடிவில், மயேந்திர மலையை அண்மிய வரையிலுள்ள வரலாற்றைக் கூறும் காண்டமாகும். இது நூலின் நான்காவது பெரும் பகுதியாக அமைந்து 16 படலங்களையும் 1004 செய்யுட்களையும் கொண்டு விளங்குகின்றது. இக் காண்டத்தின் நிகழ்ச்சிகள் யாவும் தண்டகார ணியத்திலும் அதனை யடுத்த தென்னிந்தியப் பகுதிகளிலும், ஏறக் குறைய ஐந்தாறு மாதக் கால எல்லையுள் நடந்துள்ளனவாகத் தெரிய வருகின்றன.

வான்மீக ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 67 ஸர்க்கங்களிலும், அத்யாத்ம ராமாயணம் 9 ஸர்க்கங்களிலும், இவ்வரலாறு அமைந் திருக்கக் காண்கிறோம்.

இராமாயணத்தில் பிராட்டியுடன் இல்லாத இராமபிரானை இக் காண்டத்திலும், இராமபிரானுடனில்லாத பிராட்டியைச் சுந்தர காண்டத்திலும் மட்டுமே நாம் காண்கிறோம். இப் பிரிவு நிலை, ஆரணிய காண்டத்தின் பிற்பகுதியில் தொடங்கி, உயுத்த காண்டத்தின் இறுதி வரையிலும் அமைந்திருப்பினும், இராம காதையைப் படிக்கும் நாம் நூலில் பிராட்டியை நேராகக் காணவியலாத காண்டம் இதுவொன்றே யாகும். அன்றியும், இக்காதையை ஒரு நாடகமாகக் கொள்ளுமிடத்து,

இக்காண்டத்தை, முகம், பிரதிமுகம், கருப்பம் என்றவற்றின் பின்னும், துய்த்தலுக்கு முன்னுமுள்ள வினைவாகக் கொள்ளக் கூடும் என்பதை முன், ஆரணிய காண்டத்தின் நூன்முகத்திற் காட்டியுள்ளோம். இக் காண்டத்தில் கம்பநாடர் குறிக்கும் வரலாற்றுச் சுருக்கம் பின் வருமாறு :

இராம லக்ஷ்மணர்கள் மதங்காசசிரமத்தை விட்டு நீங்கி, ருச்யமூக பர்வதத்தில் தங்கியிருந்த சுக்கிரீவனைக் காணச் செல்லும் வழியில், அம்மலையின் அடிவாரத்தில் பம்பைக் கரையை யடைகின்றனர். அவ்விடத்துக் காட்சிகளெல்லாம் இராமபிரானுக்குப் பிராட்டியின் பிரிவால் நிகழ்ந்த விரகத்தை அதிகப்படுத்த, அதனை ஒருவாறு அடக்கிக்கொண்டு அவன இலக்குவனுடன் ருசயமூகத்தை நோக்கிச் செல்கின்றான். அவர்களின் வருகையை மலையுச்சியிலிருந்து கண்ட சுக்கிரீவன் அவர்களை உணராமல், பகைவனான வாலியால் அனுப்பப்பட்டவர்களோ என்று ஐயமுற்று அஞ்சி, அவர்களைப் பற்றிய உண்மையை அறிந்து வருமாறு அநுமனை ஏவ, அவன் தன் அறிவாற்றல்களாலும், பேச்சாலும் அவர்களின் தன்மைகளை அறிந்து, அவர்களை அழைத்துக்கொண்டு சுக்கிரீவனிடம் செல்கின்றான். அங்கு, இராமபிரான் வாலியால் சுக்கிரீவனுக்கு நேர்ந்த துன்பங்களை அவன் சொல்லக் கேட்டு, அவனுக்கு அபயமளிக்கின்றான. இருவர்க்கும் நட்பு உண்டாகிறது. வாலியைக் கொல்லும் திறம் இராமபிரான்பால் உண்டு என்பதைச் சுக்கிரீவன் இரண்டு சோதனைகளால் அறிந்து அவன் துணைகொண்டு, வாலிமேல் போர் தொடங்குகின்றான். அப்போரில் இராமனின் கணையால் வாலி உயிரிழக்க, சுக்கிரீவனுக்கு வானர ராஜ்ய பட்டாபிஷேகம் நடைபெறுகிறது. கார் காலம் குறுக்கிட்டமையால், அக்காலம் முடிந்தவுடன், சுக்கிரீவன் தன் படை வீரர்களை ஏவி, பிராட்டி இராவணனால் சிறைப்பட்டிருக்கும் இடத்தை அறிய ஏற்பாடு செய்கின்றான். இத்தொண்டில் தெற்கு நோக்கிச் சென்ற அநுமன் முதலிய வீரர்கள், சம்பாதி என்ற கழுகரசனால், பிராட்டி இலங்கையில் வைக்கப் பெற்றிருக்கும் செய்தியை அறிந்து, அவ்விடத்துக்கு அநுமனை அனுப்ப முடிவு செய்கின்றனர்.

இக் கதைப் போக்கில் கம்பநாடர் வான்மீகி முனிவரை முற்றிலும் பின்பற்றிச் சென்றாரேனும், பாத்திரங்களின் அமைப்புக்களிலும், நிகழ்ச்சிகளின் நுட்பங்களிலும், தமக்கே உரிய முறையில் அவர் பல மாறுபாடுகளைச் செய்துள்ளனர். அவை உரை விளக்கங்களில் ஆங்காங்கே சுட்டப் பெற்றுள்ளன.

இக் காண்டத்தில் வரும் புதிய பாத்திரங்களில் சிறப்பாகக் குறிக்கப்படுவோர் சுக்கிரீவன், அநுமன், வாலி, தாரை, அங்கதன்,

சுயம்பிரபை, துமிரன், சம்பாதி ஆகியோர் ஆவர். இவர்களுள் சிறந்தோர் முதலிற் கூறப்பெற்ற ஐவரே. இவர்களுள் தாரையின் வரலாற்றை ஆசிரியர் வான்மீகத்தினின்று முற்றிலும் மாற்றி விட்டது கவனிக்கத் தக்கது. அவ்வாறு செய்ய அவருக்கு அத்யாத்ம ராமாயணம் இடங் கொடுத்தது எனினும், கம்பநாட்டாழ்வார் அவ்வம்மையைப் படைத்துள்ள நிலை, நூலிற் கண்டு இறும்பூதடைய வேண்டியதொன்று. இக்காண்டத்தில் கம்ப சிருட்டியாக அமைந்த தனிச் சிறப்பைக் காட்டுவது இப்பகுதியேயாகும். அவ்வாறே அங்கதனுடைய மனப்போக்கையும் செயல்களையும் ஆசிரியர் பெரிதும் மாற்றி, பின் யுத்த காண்டத்தில் அவன் வகிக்க இருக்கும் தூய நிலைக்கு உயர்த்தியிருப்பதையும், சுக்கிரீவனையும் வாலிக்கு யாதொரு துரோகமும் செய்யாத தூயவனாக ஆக்கிக் காட்டியதையும் நாம் ஊன்றிப் பார்ப்பது நலமாகும். இன்னும், இராமாயணத்திலேயே மிகுந்த விவாதத்திற்கு உரியதான வாலிவதைப் படலத்தை ஆசிரியர் ஆழ்ந்த அறிவோடு அமைத்து, பசுகரணம் நிறைந்த வாலியை முனனும், அது நீங்கித் தூய கரணங்களைப் பெற்ற அவன நிலையைப் பின்னும் அமைத்துப பிரித்துக் காட்டி, இப்பிரிவுக்குக் காரணமான தத்துவ ஞானியான இலக்குவனை இடையிலே நிறுத்தியும், முன் மானிடனாகக் கருதப்பெற்ற இராமபிரானை வாலி நிந்தித்த தன் வாயாலேயே அப்பிரானின் தெய்வ நிலையை உணர்ந்தபின் அவனை வாழ்த்தச் செய்தும் புனைந்த கம்ப சித்திரம் மிகவும் போற்றி மகிழத் தக்கதாகும். இசசிறந்த பாத்திரங்களையனறிச் சுயம்பிரபை, துமிரன் ஆகியோர், அநுமன், அங்கதன் ஆகிய இவர்களின் வலிமையைக் காட்டவும், சம்பாதி. மேல் நடக்க விருக்கும் வரலாற்றுக்குக் கால் கொடுக்கவும் பயனபடுகின்றனரே யன்றி வேறு சிறப்புக்களைப் பெறவில்லை.

புதிய பாத்திரங்களைப் புகுத்தும்போதும், கதாநாயகனான இராமபிரானை அவர்கள் முதன முதல் காணும் போது மேற்கொள்ளும் மெய்ப்பாடுகளையும் கருத்துக்களையும் காட்டும்போதும், உரையாடல்களை வகுக்கும்போதும், ஆசிரியர் கையாளும்முறைகள் மிகஅருமையானவை. பிராட்டியின் உருவ வருணனையை இராமபிரான் வாயிலாக அநுமனுக்கு உபதேசிக்கப் பெறும் முறை கம்பநாட்டாழ்வாரின் ஒரு தனிப் படைப்பு. இப்பகுதியைப் பெண்பால் சாமுத்ரிகாலக்ஷணத்தின் இலக்கியமாகக் கொள்ளலாம். முதனூலில் எல்லாத் திக்குக்களுக்கும் சென்ற வானரத் தலைவர்க்குச் சுக்கிரீவன் கூறிய பூலோக வருணனை இங்கு வேண்டப் படாதது எனக் கருதி நம் ஆசிரியரால் விடப் பெற்றதுபோலும்.

## இடப்பெயர்கள்

நாடவிட்ட படலத்திலும் ஆறுசெல் படலத்திலும் கூறப்பெற்ற இடப் பெயர்கள் பலவற்றை நாம் இன்று இடஞ் சுட்டிக் காட்டும் அறிவு பெற்றேமில்லை. இப்பகுதியில் வான்மீகத்திற்கும் கம்பராமாயணத் திற்கும் பலஒற்றுமைகளும் சிலவேற்றுமைகளும் காணப்பெறுகின்றன. வரலாறு நிகழ்ந்த அல்லது எழுதப்பெற்ற காலத்துத் தக்ஷிண, தென் னிந்திய பூகோள அறிவு உறுதியாகும் வரையில் அநுமன் முதலியோர் சென்ற வழிகளை அறுதியிட்டுக் கூற இயலாதவர்களாகின்றேம்.

## இயற்கை வருணனை

இக்காண்டத்தில் கதைப்பகுதி மிகக்குறைவே. எனினும் இயற்கை வருணனை இங்கு அமைந்துள்ளது போல் வேறெந்தக் காண்டத்திலும் அமையவில்லை என்று நாம் கூறக்கூடும். அகப்பொருள் இலக்கணங் களுள் வகுத்துரைக்கப் பெற்ற திணைகளின் முதல், கரு, உரிப்பொருள் களின் விளக்கங்களையும், ஆங்காங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் அவற்றல் கதாநாயகனன இராமபிரான்பால் உண்டான மெய்ப்பாடு களையும் மிகத்திறம்பட இக்காண்டத்தில் ஆசிரியர் காட்டியிருக்கின்ருர், அவன் தங்கின இடங்கள் முழுமையும் குறிஞ்சியும் முல்லையுமே யாகும் என்பதை நாம் கருதுவோமாக.

அவன் வேனிற்கால இறுதியில் பம்பையைக் கடந்து சுக்கிரீ வனுடன் நட்புச்செய்து, வாலியை வதைத்துச் சுக்கிரீவனுக்கு முடிசூட்டு வித்து, கார் கூதிர்ப் பருவங்களில் (அதாவது ஆவணி முதல் கார்த் திகை முடிய) பிரஸ்ரவண மலையில் தங்கியிருக்கிறன். ஆனல் இக்கால மெல்லாம், இவ்விடங்களில் தோன்றிய இயற்கை நிகழ்ச்சிகள் யாவும் அவனுடைய விரக தாபத்தையே ஊக்குகின்றன. நெய்தலுக்கு உரிய இரங்கல் குறிஞ்சிக்கு அமைவது ஓர் அரிய சேர்க்கை. உரிப்பொருளின் வலிமையால் முதற்பொருள்களும் கருப்பொருள்களும் தம்மியல்பு மாறி அவ்வுரிப் பொருளுக்கு உறுதுணையாய் அமையச்செய்த ஆசிரியரின் ஆற்றலை நாம் இங்குக் காண்கிறேம்.

அன்றியும் நீர்க்கரை, மலைச்சரிவு, மலைஉச்சி, காடு, குகை ஆகிய பலவும், அவற்றில் காணப் பெறும் இயற்கைப் பொருள்கள், நிகழ்ச் சிகள் ஆகியவற்றேடு ஒப்பற்ற முறையில் வருணிக்கப் பெறுவது இக் காண்டத்தின் தனிச் சிறப்பு. பூச்சிகள், பறவைகள், விலங்குகள், தாவரங்கள், மரங்கள் ஆகிய உயிர்ப் பிராணிகளும், மலைவழி, கற்பாதை, குகை, மேடுபள்ளங்கள், அருவி வீழ்ச்சி, மேகங்கள், காற்று ஆகிய

இயற்கை அமைதிகள், விதங்களிலும், எண்ணிக்கைகளிலும், வளப்பங் களிலும், வளர்ச்சிகளிலும் பரிபூர்ணமடைந்து ஆங்காங்கே தோற்ற மளிப்பது மிகுந்த இறும்பூதினை விளைப்பதாகும். இம்மலை வளங்களுக் கிடையே வானரர்கள் தம்நகரை, அயோத்தி, இலங்கை போன்ற ஒப்பற்ற வளமிக்க நகரங்களை ஒப்ப, அரண்களையும், வீதிகளையும், அரண்மனை களையும் அமைத்திருப்பது பல நிறம்பெற்ற ஒரு பூமாலையின் இடையிலே சிறந்த அரதனங்களை சேர்ப்பித்த அழகுடன் விளங்குகிறது. இவற்றோடு இவ்வளங்கள் யாவும் ஆங்கு வாழும் உயிர்ப் பிராணிகளுக்கு இன்பத் தையும், விரகத்தில் ஆழ்ந்த இராமபிரானுக்குச் சகிக்க முடியாத சோகத்தையும், மிகுத்துவரும் ஆற்றல் உடைமை கூர்ந்து ஆராய்ந்து மகிழத் தக்கதாகும்,

அநுமன் முதலிய வீரர்கள் ஒருமாத காலம் மலைகளையும், ஆறு களையும், ஊர்களையும், நாடுகளையும் கடந்துகொண்டே சென்றனர். பிராட்டியைத் தேடுவதில் அவர்களின் ஊக்கமும் முயற்சியும் பலிக்கா மையால் அவர்கள் சோர்வு மட்டுமே கொண்டவர்களானார்கள். அவர் களைத் திணைப்பொருள்கள் ஒரு வழியிலும் பாதிக்கவில்லை, ஆனால் பிலம்புகு படலத்தில் கூறப்பெற்ற பாலைநிலத்தை அவர்கள் கடக்க நேர்ந்தபோது, அந்நிலத்தின் கொடுமை அவர்களையும் தம்மைப்பற்றி நினைக்கச் செய்து, தவிப்பினை உண்டாக்கி விட்டது. ஐந்திணைகளில் ஒன்றான பாலையை வருணிக்கவே - பம்பாதீரம் பிரஸ்ரவணம் ஆகிய இடங்களின் நேர் எதிரிடையாக - இப்படலம் யாக்கப்பெற்றதோ என்று எண்ணும்படி ஆசிரியர் இதனை அமைத்துள்ளமை காணத்தக்கது. அதனிடையே பிலத்தினுள் விளங்கிய அரிய தெய்வீக நகரக் காட்சி மிகுந்த வியப்பைத் தருவதாகும். இன்னோரன்ன பல வருணனைகளால் நாம் நம் ஆசிரியரை மிகச் சிறந்த இயற்கைக் கவிஞராகக் காண் கிறோம்.

## கவிப் பண்புகள்

ஓர் உயிர்ப் பொருளின் பொலிவிற்கும் வசீகரத் தன்மைக்கும் ஏற்ப, அதன் பரு உறுப்புக்களான என்பு, நரம்பு, ஊன், தோல் முதலிய வற்றின் வளமையோடு, அவற்றின் அளவு, ஒற்றுமை, ஆத்மீகச் சிறப்பு முதலிய பல காரணங்களும் அமைவன போல, காவியவளமும் அதனில் தோன்றும் பாத்திரங்களின் இயல்புகளாலும், செயல்களாலும் அமைவ தோடு, அவற்றின் தன்மை, இயைபு ஆகியவற்றாலும் அமைகின்றன என்பதை நாம் அறிவோம்,

## பாத்திரங்கள்

காவியத்தின் சிறப்புக்கு அதனிலுள்ள பாத்திரங்களின் அமைதியே முக்கிய காரணமாகும். கம்பராமாயணம் தன்னேரில்லாத பாத்திரங்களைக் கொண்டதாய் கல்வியிற் பெரியாரும் பக்திமானுமான ஆசிரியரால் யாக்கப்பெற்றிருக்கும்போது, அக் காவியம் உலகம் போற்றும் முறையில் அமைந்திருப்பதும், என்றும் நிலைத்திருக்கும் தன்மை பெற்றிருப்பதும் இயற்கையே.

## இராமபிரான்

இக் காண்டத்தில் வரும் பாத்திரங்களுள் இராமபிரானையும் இலக்குவனையும் பற்றி நாம் முன் காண்டங்களின் வரலாறுகளால் நன்கு அறிவோம். இக் காண்டத்தில் இராமபிரானை நாம் ஒரு சிறந்த யோகியாகக் காண்கிறோம். தன் அபிமானம் என்பது ஒரு சிறிதும் இன்றி, அவன், பிராட்டி பிரிவால் தான் அடைந்த விரகத்துக்கு ஆளாகி, அதை மிகுந்த திறமையுடன் பொறுத்துநின்று,தன்கடமைகளையும் நிறைவேற்றிவரும் கர்மயோகியாக அவன் காட்சியளிக்கின்றான். சுக்கிரீவன் நட்பு, வாலிவதை ஆகிய சில உலக நடவடிக்கைகளில் அவன் சில சமயங்களில் ஈடுபட்டிருந்தும், இக் காண்டத்தில் அவன் முற்றிலும் துயரில் ஆழ்ந்த மௌனியாகவே தோன்றுகின்றான். 'ஒன்றுமோ வானமன்றி யுலகமும் பதினாலுள்ள, வென்றிமாக் கடலுமேழேழ் மலையுள்ள வென்னவேயாய், நின்றதோ ரண்டத்துள்ளே யெனினது நெடிய தொன்றோ' (624) என்றபடி, ஆற்றலமைந்த அப்பிரானின் பொறுமைக்களவுண்டோ? அத்தகைய வீரன் சுக்கிரீவன்பால் அருள் கொண்டதும் வாலியை வதைத்ததும் தேவரகசிய மென்பது தெள்ளிதில் விளங்குகின்றது. வாலியின் பழிப்புக்களை யெல்லாம் கேட்டு அவற்றிற்கு நிதானமாக அவன் சமாதானம் கூறியதும், 'முனியாதானை முனிவித்தீர்' (625) என்றபடி, அவனுக்கும் சுக்கிரீவன்பால் முனிவு வந்ததும், அவன் மானிடனாகத் தோன்றிய நிலையை வற்புறுத்துவனவாம். அநுமனைக் கண்டவுடனேயே அவன் ஆற்றல்கள் யாவற்றையும் நுண்ணிதில் அறிந்து அவன் கூறினமையும், சுக்கிரீவனின் தன்மையை இலக்குவன் இகழ்ந்து அவனுடன் உறவாடலாகாது என்றபோது, அவனுக்குக் காரணம் காட்டிச் சமாதானம் செய்தமையும், அவனுடைய அளவுகடந்த அறிவாற்றலையும் உலகியலறிவையும் தெள்ளிதிற் புலப்படுத்துகின்றன. அவன் வில்லின் வலிமை மராமரங்களை எய்தபோதும் வாலியைப் படுத்தபோதும் புலனாயின. அறத்தின்பால் அவன் கொண்டபேரபிமானத்தால் வாலியின் வினாக்களுக்கு அவன் விடைகூறி, அவனையே தலைகுனியச்செய்தது, அவனுடைய நீதியறிவின் உயர்ந்த

நிலையைக் குறிக்கின்றது. அவன் அருள்நிலை சுக்கிரீவனுக்கு அபயமளித்ததில் வெளிப்படுகின்றது. சுக்கிரீவனுக்கு அரசியல் நீதியை உபதேசித்த பகுதி அப்பிரானின் நூலறிவின் உயர்வைக் காட்டுகின்றது. அவனுடைய கருணை தவறு செய்த சுக்கிரீவனைக் கண்டதும் வெகுளிமாறி அவனை அன்புடன் ஏற்றுக்கொண்டதால் புலனாகிறது. இவ்வாறு இக்காண்டத்தில் இராமபிரானுக்கு வெகுளியும் பெருமிதமும் சிற்சில இடங்களில் தோன்றினும், அவனைச் சாந்த மூர்த்தியும் இரக்கத்தின் உருவமுமாகவே நாம் இக்காண்டத்துட் பெரும்பாலும் காண்கிறோம். மானிட வீரனின் பண்புகளையும் செயல்களையும், அவ்வாறே தெய்வங்களின் பண்புகளையும் செயல்களையும் தனித்தனியே வருணித்துக் கூறுவது ஒருவருக்கு இயல்பாகலாம். ஆனால் இருமையும் கலந்த ஓர் ஒப்பற்ற பாத்திரத்தில் அவ் இரண்டு அம்சங்களையும் சமரசப்படுத்திக் காட்டுவது ஓர் அருஞ்சாதனையாகும். இதனை ஆசிரியர் மிகத் திறம்படச் சாதித்திருப்பது மிகுந்த இறும்பூது விளைப்பதாகும்.

### இலக்குவன்

இலக்குவனின் நிலை மிக அடக்கமாக இக்காண்டத்தில் அமைந்துள்ளது. இராமபிரானின் வரலாறு கூறும் வழக்கம் தன்னைச் சார்ந்தது என்பதை இங்கும் அவன் நிலை நிறுத்திக் கொள்கிறான். சுக்கிரீவன் தன் அண்ணனைக் கொல்ல அழைத்துக் கொண்டுவந்ததை எண்ணி அவன் மனம் வருந்தியது, அவனது தூய உள்ளத்தைக் காட்டியதாகும். வாலி இராமபிரான்பால் சுட்டிய குற்றங்களுள் கொடியதான 'மறைந்து நின்றடித்த குற்றத்திற்கு' இலக்குவனே சமாதானம் கூற வேண்டியிருந்தது. இவ்வாறு இலக்குவன் கூறிய உரையே வாலியின் ஞானக்கண்களைத் திறப்பித்து, அவன் இராமபிரான்பால் முன் கொண்ட கருத்தினை முற்றிலும் மாற்றிவிட்டது என்பதை நாம் காணும்போது, இலக்குவனின் ஆன்ம சக்தியின் ஆற்றல் நமக்குப் புலனாகின்றது. காண்டம் முழுமையும் இளவல் அண்ணனின் நிழல் போல் நிற்கிறான். அவனுக்குத் தனக்கென ஒன்றுமில்லை; அவன் தன் அண்ணனைத் தன் கண்களுள் வைத்துக் காக்கின்றான்; அவன் கட்டளையிட்டபோது செயலாற்றுகின்றான்; ஆனால் அண்ணனது கையற்ற நிலைகளில் அவனை அணுகி அவனுக்கு நல்லுரைகள் கூறி அவனுக்கு ஊக்க மூட்டுகின்றான், இவ்வாறு தனக்கென வாழா இயல்பினனான இலக்குவனின் உண்மைப் பெருமைகளை நாம் உணர்வதற்கு இக்காண்டத்தில் சில நிகழ்ச்சிகள் உதவுகின்றன. துந்துபியின் உடலை அவன் தன் கால் விரல்களால் உந்தியபோது அவனது இணையற்ற உடல் வலிமையை நாம் காண்கிறோம். இராமபிரானின் ஆணை

யைச் சிரமேற் கொண்டு அவன் கிட்கிந்தைக்குச் சென்ற வேகத்தினுலும், கோட்டை வாயிலில் வாநரர்கள் அடுக்கி வைத்திருந்த அடைப்புக்களை அவர் தகர்த்தெறிந்ததாலும், வீதியில் அவனைச் சந்தித்த அங்கதன் முதலியோரிடம் அவன் பேசிய உரைகளாலும், அவன் வெகுளியின் அளவு நமக்குப் புலனுகின்றது. பெண்களைக் கண்டு அவன் தலை குனிந்து நின்ற நிலையும், தாரையின் கையறு கோலத்தைக் கண்டு தன் தாயரை நினைத்து அவன் கண்ணீர் உகுத்த பான்மையும், குற்ற மிழைத்த சுக்கிரீவனைக் கண்டு, அவன் குற்றத்தின் காரணத்தை அறிந்து மனமிரங்கி நின்றபோது, வெகுளி மாறிக் கனிந்த உள்ளத்துடன் அவன்முன் நின்ற கோலமும், பின்பு சுக்கிரீவன் அரியணையில் வீற்றிருக்கவும் நீராடி உண்ணவும் அழைத்தபோது அவன் தன் அண்ணன் நிலையை எண்ணி உரைத்த இரங்கத்தக்க கனிவும் அவனுடைய மானிடப் பண்பின் தூய்மையையும் பெருமையையும் நம் கண்முன் நிறுத்துகின்றன. இத்தகைய பாத்திரத்தை ஆசிரியர் நமக்குக் காட்டும் பான்மை எண்ணி யெண்ணி இன்புறத்தக்க தாகும்.

### அநுமன்

அடுத்தபடியாக அநுமனை எடுத்துக்கொள்வோம். 'இவ்வுலகுக் கெல்லாம் ஆணி' என்று இராமபிரானுல் புகழப்பெற்ற இவ்வநுமனே இராமாயணம் என்ற ஒப்பற்ற தேருக்கும் ஆணியாவான் என்று நம் ஆசிரியர் காட்டும் முறையை நாம் இக்காண்டத் தொடக்கத்திலேயே காண்கின்ருேம். சுந்தர காண்டம் முழுவதையும் தனக்கே உரிய தாகக்கொண்டும், உயுத்த காண்டத்தில் இராம லக்ஷ்மணர்க்கு அடுத்த பெரும் பதவியைப் பெற்றும் நிற்கும் இவ்வீரன் காவியத்தில் முதல் முதல் தோற்ற மளிக்கும் இடம் இக் காண்டமே ஆகும். எடுத்த எடுப்பில் இவன் அரிய ஆற்றல்களை யெல்லாம் ஒருமிக்க இராம பிரான் திருவாய்ச் சொற்களாய் அமைத்துக் காட்டும் ஆசிரியர் திறம் மிகவும் போற்றத்தக்கது. இவ்வாறு இவனது பரிபூரண நிலையை முதன் முதலில் நம் கண் முன் நிறுத்தி, காண்ட இறுதியில் அவன் பிறப்பு வளர்ப்பு முதலிய வரலாறுகளைச் சாம்பன் வாயிலாக ஆசிரியர் காட்டுகின்ருர். கதையின் போக்கிற் பற்பல இடங்களில் இவன் தோன்றித் தோன்றி மறைந்து, காண்ட இறுதியில், இவன், 'அண்டம் தாங்கும், பொன்னெடுங் தூணின் பாதச்சிலையெனப் பொலிந்து' நிற்கின்ருன். காரியங்களைக் கைகூட்டிவைக்கவும், சிக்கல்களைத் தீர்க்கவும், அரியசாதனைகளை இயற்றவும் இவன் இக்காண்டத்தில் காட்டிய செயல்கள் பின் காண்டங்களில் இவன் ஆற்றவிருக்கும் மிகமிக அரிய சாதனைகளைச் சூசிப்பிக்கும் முன்னுரைகளாக அமைந்துள்ளமை கருதத்தக்கவை,

**சுக்கிரீவன்**

இம் மூவரையன்றி, நம் கவனத்தைக் கவரத்தக்க வேறு மூன்று பெரிய பாத்திரங்கள் சுக்கிரீவன், வாலி, தாரை என்பவராவர். இம்மூவரையும் பற்றி, முன்பே சில கூறியுள்ளோம். இராமபிரான் தம்பியருள் ஒருவனுகப் பாராட்டப்பெற்ற சுக்கிரீவனிடம் பல அரிய பண்புகள் அமைந்திருக்க வேண்டுமென்பது ஒருதலை. அவ்வெண் ணத்தைக் கருத்திற்கொண்டே அவன் உருவையும் ஒளியையும் ஆசிரியர் சமயோசிதமாகச் சமைத்துக் காட்டுகின்ருர். இவன் கள்ளிலும் காமத்திலும் தன் கடமையை மறந்து சோர்ந்திருந்ததும், வாலியினிடம் இவன் கொண்ட அச்சத்தினுல், இராமபிரான் ஆற்றலில் ஐயம் கொண்டமையும் இவனிடம் காணப்பெற்ற குறைகளே. இக்குறைகளை ஆசிரியர் மிகவும் மெலிவுபடுத்திக் காட்டிய திறம் ஆராய்ந்து போற்றத் தக்கது.

முதனூலில் அங்கதன் கூற்ருல், இவன் தன் அண்ணன் மனைவியை அபகரித்திருந்த செய்தி அமைந்திருக்க, அதனைக் கம்பநாடர் அறவே சுட்டாமல் விட்டு விட்டதையும், இவன்பால் தாரையும் அங்கதனும் முதலில் கொடிய கருத்துக்களைக் கொண்டதாக அம்முதனூலிற் காட்டப் பெற்றிருக்க, அவற்றை முற்றிலும் நீக்கியிருப்பதையும் காண் போமாக.

அன்றியும், மாயாவியினுல் வாலி இறந்தானென்று முடிவுசெய்து, அமைச்சர்கள் சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்டி நாட்டின் காவலை நல முறச்செய்ய உறுதி கொண்டிருந்தும், அவன் அப்பதவியை ஏற்கச் சம்மதியாமலும் அமைச்சர்களின் கருத்தைப் புறக்கணிக்க முடியா மலும் இன்னது செய்வது என்று தர்ம சங்கடத்தில் மூழ்கி மனத்தை அலைத்துக் கொண்டிருந்த நேரத்தில், வாலி வந்து அவனிடம் குற்றங் கண்டு அவனைத் துரத்தினுன் என்ற நுட்பமான செய்தியை ஆசிரியர் அமைத்துக் காட்டிய தன்மையும் கூர்ந்து கவனித்துப் போற்றத் தக்க தாகும். (செய்யுள்கள் 123, 323 இவற்றின் விளக்கங்களைக் காண்க.) பிலத்தை மூடிச் சுக்கிரீவன் தான் மகுடம் சூடிச் சிலகாலம் ஆண்ட பின்பே வாலி வந்தனன் என்று முதனூல் கூற, அவ்வாறு சொல்லாமற் செல்கின்ற நம் ஆசிரியர் நோக்கமும் கவனிக்கத்தக்கது.

சுக்கிரீவனின் நற்பண்புகள் ஆற்றல்கள் முதலியன இக்காண்டத் தில் நன்கு தெரிவிக்கப் பெற்றுள்ளன. இராம பக்தியிலும், நன்றி யறிவுக் குணத்தினும், வீரத்திலும் அவன் இணையற்றவனுயிருந்தும், பின்பு யுத்த காண்டத்தில் அவனுக்கு இராவண கும்பகர்ணர்களால்

விளையப்போகும் இன்னல்களுக்கு அறிகுறியாக அவனிடம் ஊறிக் கிடந்த தாமத குணத்தின் செயல்களையும் இக்காண்டம் தெரிவிப்பது காணத் தக்கது.

### வாலி

இனி, வாலி இக்காண்டத்தில் சித்திரிக்கப் பெற்றிருக்கும் பான்மையை ஒரு சிறிது காண்போம். இவனே இக் காண்டத்தில் மிகவும் மேலாகத் தோற்ற மளிப்பவன். இவன் இந்திர குமாரனும், சிவபக்தியிற் சிறந்தவனும், இராமபிரானுக்கு எவ்வித இடையூறும் புரியாதவனுயு மிருந்தும், இவன் இராமபிரானால் வதைக்கப்பெற்றான் என்பது அவதார ரகசியத்துக்கு ஒத்துவருமா? இவனை இராமபிரான் வதைத்ததும், அதுவும் மறைவிலிருந்து அடித்ததும் பொருந்துமா? இவைபோன்ற கேள்விகள் இராமாயணம் எழுதப்பெற்ற காலம் முதல் எக்காலத்தும் முடிவின்றி வாதிக்கப் பெறும் விஷயங்களாக ஆகிவிட்டன. இவ் வினாக்களை வாலியே தன் இராம நிந்தையில் தீவிரமாக எழுப்பியிருக் கிறான். அவன் கூற்றுக்களை விஞ்சி எவரும் இராமபிரானை நிந்திப்பதில் மேல்போக முடியாதபடி அவன் இராமபிரானை ஏசியிருக்கிறான். ஆனால் அவனே முடிவில் இராமபிரான் செய்தது தனக்கு நன்மையாயிற்று என்பதை ஒப்புக்கொண்டு, இராமபிரான் தாள்களில் தன் தலையை அமைக்கின்றான். இதன் தத்துவத்தையும் இரகசியத்தையும் முடிந்த வரையில் விளக்கமாக உரை விளக்கங்களில் ஆங்காங்குக் காட்ட முயன்றிருக்கிறோம்.

தேவர்களுள் இந்திரன் தாமச குணம் நிறைந்தவன்; தன் ஆணவச் செருக்கால் அவன் கடவுளிடத்திலும் முனிவர்களிடத்திலும் குற்றப் பட்டுப் பல தடவைகள் தன் நாட்டையும் செல்வத்தையும் இழந்து கொடிய தண்டனைகளை அடைந்தவன். ஈசுவரனின் கட்டளையை நிறைவேற்றுவதற்கு உதவியாக இருக்கவேண்டியவன் தன்ஆணவமயக் கால் தன் நிலை இழந்து கொடிய குற்றங்களுக்காளாகிச் சாபங்களை நிரம்பப் பெற்றவன். ஆனால் இறுதியில் கடவுள் அவனைக் காப்பாற்றி அவனை நன்னிலையில் அமைக்கின்றார்.

அவனுடைய அம்சமாகத் தோன்றின வாலியிடமும் அக்குணங் கள் நிரம்பப் படிந்திருந்தன. உலகத்தில் எவ்வளவோ வீரர் களிருக்க, வாலியின் உயிர்த்தோழனாக ஏற்றுக்கொள்ளப் பெற்றவன் இராவணனே. உண்மையிலேயே அவன் நல்லோர்க்கு நண்பனாயிருந் திருந்தால், இராவணனின் படை வீரர்களான கரதூஷணாதிகளை அவன்

தன் நாட்டுக்கு அருகில் வைக்க இடங்கொடுத்திருக்கமாட்டான். அவன் இராமபிரானிடம் பேசிய பேச்சுக்களிலிருந்து பிராட்டியை அந் நண்பன் (இராவணன்) அபகரித்த செய்தியைத் தான் நன் கறிந் திருந்தான் என்பது புலப்படுகிறது. தயரதன் பெருமையையும் இராம பிரான் பெருமையையும் உள்ளவாறறிந்து பேசும் இவனுக்கு, இரா வணன் செயலை அப்பொழுதே கண்டிக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகாமைக்குக் காரணம் அவன் தன் மதோன்மத்த நிலையும், அவன் தன் நண்பனிடம் காட்டும் மறச் சலுகையுமன்றோ? ஆனால், 'புயலைப் பற்றுறும் பொங்கரி போக்கியோர், முயலைப் பற்றுவதென்ன முயற்சி யோ' (315) என்றுகூறிய தானே நின்று இராவணனிடமிருந்து பிராட் டியை விடுவிக்கும் ஆற்றலைப் பெற்றவன், அச் செயலில் உதாசீனனா யிருந்தது ஏனோ? அப்படி அவன் செய்திருந்தால் அவதார காரியமான இராவண வதை நேர்வது எப்படி? தேவர்கள் யாவரும் வாநரராய்ப் பிறந்ததன் பயன்தானென்ன? ஆகவே அவதாரக் கருத்து முற்றுப் பெற வாலிவதை இன்றியமையாததாயிற்று என்பது கொள்ளத் தக்கது. அதற்குக் காரணமாய் அவன் தாமத குணத்தின் இருப்பிடமாக அமைந் தான்.

இலௌகிக முறையில் பார்க்கப் போனாலும், அவனை வதைப்பது இராமபிரானின் கடமையாயிற்று என்பது புலப்படும். தன்பால் அடைக் கலம் புகுந்த தம்பியைக் கொல்ல முயன்றமை, தம்பியின் மனைவியைப் பரிகரித்தமை ஆகிய இரண்டுக்கும் கொலைத் தண்டனையே ஏற்றது என்பது நூல்களால் முடிந்த முடிவு. சக்கரவர்த்தியின் திருக்குமார னும், அச்சக்கரவர்த்தியின் ஆணையால் காடாண்டு வருபவனும், பரத னுடைய ஆட்சியை நிறைவேற்றி வருபவனுமான அரசியல் சிறப்பு வாய்ந்த இராமபிரானுக்கு அவனை உலகினின்று நீக்குவது கடனே யாயிற்று; அன்றியும், 'தீது தீர்ப்பது என் சிந்தைக் கருத்தரோ' (331) என்றபடி அவ்வாறு செய்தது அவன் ஸ்வதர்மமுமாயிற்று.

இவற்றையெல்லாம் இராமபிரான் எடுத்துக் காட்ட, அவற்றை 'அமையக் கேட்ட அரிகுலத்தரசு, அனையதாக' என்று தனக்குத் தண் டனை உரியதே என்று ஒப்புக்கொண்டு விட்டான். ஆகவே, தான் வதை படற்குரிய குற்றவாளி என்பது வாலிக்கும் ஒப்ப முடிந்ததே. ஆனால் மறைந்துஅடித்ததன் காரணம் மட்டும் அவனுக்குப் புலனாகவில்லை; மாயைசூழ்ந்த தன் அறிவினால் இராமபிரான் செய்தது, அவன்தன் கோழைத்தனம் என்பது அவனுக்குப் பட்டது. அதற்கு விடை அளிக்கும் படி அவன் வினவினான். அதற்கு இலக்குவன் ஒரே செய்யுளில் காரணங்

கூற, அவ்விடையில் அமைந்த தத்துவ ஞானம் நேராக அவன் அறிவிற் கூட, அவ்வுபதேசத்தால் அவன் தன் பசுகரணங்கள் மாறி, சிவகரணங்களாகி, உண்மையை அறியும் நிலையை அடைந்தான். இங்கு ஆசிரியர் அரிதில் அமைத்துள்ள,

கவிகுலத் தரசு மன்ன கட்டுரை கருத்திற் கொண்டான்
அவியுறு மனத்த னாகி யறத்திற னழியச் செய்யான்
புவியிடை யண்ண லென்ப தெண்ணினிற் பொருந்த முன்னே
செவியுறு கேள்விச் செல்வன் சென்னியி னிறைஞ்சிச் சொன்னான். 347

என்ற பாடலைப் பல முறை சிந்தித்துப் பார்த்தால் இச் செய்தியைப் பற்றி உலகம் ஓயாமல் நடத்தி வரும் வாதம் நின்று விடும் என்பது தெளிவு.

## தாரை

இனித் தாரையைப் பற்றிச் சிறிது காண்பது பொருந்தும். இப் பாத்திரம் கம்பரின் அரிய படைப்புக்களுள் ஒன்று என்று முன்பே கூறினோம். இது குறித்து அவர்க்கு வழி காட்டியது அத்யாத்ம ராமாயணமாகும். கம்ப நாடர் தாரையைக் கற்பரசிகளில் தலை சிறந்தவளாகவும், அரசியலறிவும் பேச்சுத்திறனும் நன்கு வாய்க்கப் பெற்றவளாகவும், கிட்கிந்தையைத் தாய்போல் நின்று காப்பாற்றியவளாகவும், சுக்கிரீவனைக் காத்துவரும் தெய்வமாகவும், ஆசிரியர் அமைத்துக் காட்டியது அவரது பெருமையை நன்கு புலப்படுத்துகின்றது. உரைகளில் இயன்ற மட்டும் இக் கருத்துக்கள் விளக்கப் பெற்றுள்ளன. அங்குக் காண்க.

## அங்கதன்

இவ்வாறே அங்கதன் குணத்தையும் ஆசிரியர் அழகுறச் சித்திரித்துள்ளார். முதனூலில் அங்கதன் சுக்கிரீவனிடம் பொருமையும் ஐயமும் கொண்டவனாகக் காட்சியளிக்க, இங்கு அவன் சுக்கிரீவனுக்குத் தூய உதவியாளனாகவும் உண்மையுள்ள ஊழியனாகவும் கம்ப நாட்டாழ்வாரால் அமைத்துக் காட்டப் பெற்றிருப்பது, அவன் உயுத்த காண்டத்தில் ஆற்ற விருக்கும் அரிய தியாகங்களுக்கு உரியவனாக நமக்கு அறிமுகப் படுத்துவதாகும். இராமபிரான் அவனை இளவரசனாக ஆக்கியருளினமை மிகவும் பொருந்தும் என்று நாம் உறுதி கொள்கிறோம்.

இவ்வாறு, ஆசிரியர் இக்காண்டத்தில் முதற் பொருள்களின் இயற்கை நலன்களை உள்ளபடி விவரித்ததோடு அவற்றிற்கேற்ப, பாத்திரங்களின் தன்மைகளையும் மனநிலைகளையும் தக்கவாறு அமைத்து, அப்பாத்திரங்களின் இயல்புகளுக்கும் சிறப்புக்களுக்கும் சிறிதும் ஊறு வராமலும், தாம் மேற்கொண்ட கொள்கைகளுக்கு ஏற்பவும் அப்பாத்திரங்களை அமைத்துக்காட்டி, தம் காவியத்தை இணையற்ற முறையிற் சிறப்புறச் செய்துள்ள பான்மை கண்டு கண்டு களிக்கத்தக்கதாம்.

இம் முயற்சிகளுக்கு அவர் கருவியாகக் .கொண்டவற்றுள், தம் பக்தி, கவித்திறன் ஆகியவற்றுடன், (1) சொல்லாட்சி (2) சந்த அமைதி (3) உவமைப் பொருத்தம் முதலியன சிறப்பானவையாம். இவற்றைப் பற்றிப் பரந்த ஆராய்ச்சி செய்வது மிகுந்த பயனுடைத்தாம் எனினும், இக்குறுகிய முகவுரை அவ்வாறு செய்ய இடந்தரவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## சொல்லாட்சி

'இல்லாத வுலகத் தெங்கு மிங்கிவ னிசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக் கடலுமே யென்னுங் காட்சி, சொல்லாலே தோன்றிற் றன்றே யார்கொலிச் சொல்லின் செல்வன்' (61) என்று இராமபிரான் அநுமனைப் பற்றிக் கூறிய செய்தியையே, நாம் கம்ப நாட்டாழ்வாரின் சொல்லின் செல்வத்தைப் பற்றித் திரும்பக் கூறுவதன்றி, வேறு யாது புகல்வோம்? இன்னும், சொல்லின் தன்மைக்கும் பயனுக்கும்இராமபிரான் அம்பையே உவமையாகக் கொள்ளும் அவர், தாம் பயிலும் சொற்களில் எவ்வளவு கருத்தினைச் செலுத்தி யிருப்பார் என்பதும் கூறுமலே அமையும். தெளிவும், செறிவும், ஆற்றலு மமைந்த சொற்களை இடங்களுக்கேற்ப ஆசிரியர் அமைப்பதை நாம் அவர் அருளிய நூல் எங்கும் காண்கிறோம். சந்தங்களுக் கேற்ப எழுத்துக்களைக் கொண்ட சொற்களால் சுவையை மிகுத்துக் காட்டலும், செயல்களின் செறிவைத் தெரிவிக்க ஒரு பொருளமைந்த பல சொற்களைத் தேர்ந்து புகுத்தலும், முற்றிலும் திரிசொற்களை விட்டு யாவர்க்கும் விளங்கக் கூடிய இயற்சொற்களையே பெரும்பாலும் கையாளுதலும், தம் தாய் நாடான சோழ நாட்டில் மட்டும் வழக்கிலுள்ள சிற்சில சொற்களை அருமையாக அமைத்துக் காட்டலும், வடசொற்களைக் கையாள நேரும்போது, அவற்றைத் தமிழ் இலக்கணத்துக் கேற்பத் திருத்தியும் மொழி பெயர்த்தும் அமைத்தலும், வழக்கில் வந்த திசைச் சொற்களை நீக்காமல் சிற்சில இடங்களில் ஏற்றுக் கொள்ளுதலும், எச்சங்களைக் கையாளுங் காலத்து அவை தழுவும் பெயர் வினைகளின்

தன்மைகளை விளக்கிக் காட்டத் தக்க சொற்களையே அமைத்து, மெய்ப்பாடுகளைச் சுவைபட விளக்கும்போது அவற்றிற்கேற்ற வல்லின, மெல்லின, இடையின எழுத்துக்களைக் கொண்ட சொற்களைக் கையாள் தலும் ஆகிய இன்னோரன்ன சொல்லாட்சித் திறன்களால் ஆசிரியர் தம் காவியத்தை யாத்திருப்பது மகிழ்ச்சி விளைப்பதாகும். இவற்றை இப்பதிப்பில் உரிய விடங்களில் உரை விளக்கங்களில் சுட்ட முயன் றிருக்கிறோம்.

## சந்த அமைதி

சந்தங்களைக் கையாள்வதில் நம் ஆசிரியர் மிகச் சிறப்பு வாய்ந்தவர் என்பது யாவரும் அறிந்ததொன்று. வரலாற்றின் பகுதிகள் மாறும் போதெல்லாம் அவர் சந்தத்தை மாற்றிச் செல்வதும், சுவைகளுக் கேற்ற சந்தங்களை அவர் அமைத்துச் செல்வதும், பாத்திரங்களின் மந்தம், விரைவு ஆகிய நடைகளையும், அவர்கள் அவ்வப்பொழுது கொள்ளும் மெய்ப்பாடுகளின் இயல்புகளையும் அவற்றின் தன்மை களையும், மேடு, பள்ளம் ஆகிய நில ஏற்றத் தாழ்வுகளையும், அவ்வவற் றிற்கு ஏற்ற சந்த அமைப்புகளால் ஆசிரியர் அமைத்துக் காட்டு வதும், ஐந்நில வருணனைகளைக் கூறும்போதும், அவற்றில் பாத் திரங்கள் தம் செயல்களை நிகழ்த்தும் போதும், ஏற்ற சந்தங்களால் ஆசிரியர் நம்மை மகிழ்விப்பதுமாகியவற்றை இந்நூலெங்கும் நாம்காண் கிறோம். இவ்வாறு சந்தங்களைக் கொண்டே ஆசிரியர் தம் கம்ப நாட கத்தை நடத்திச் செலுத்தும் தன்மை கூர்ந்து கவனித்து மகிழத்தக்கது. இவற்றைத் திறம்படத் தனியே அறிஞர்கள் ஆராய்ந்து கூறுவது கம்ப நாடரைப் பற்றிய கல்விக்குப் பேருபகாரமாகும்.

## உவமைகள் முதலியன

இனி, நம் ஆசிரியர் உவமைகளைக் கையாளும் முறைகளைக் காண்பதும் பயனுடைத்தாகும். இப் பதிப்பின் அநுபந்தமாகச் சேர்க்கப் பெற்றுள்ள அரும்பத முதலியவற்றின் அகராதியில் சிறப்புப்பெயர் களின் கீழ் அவ்வவற்றின் பகுதிகளுக்கு ஆசிரியர் அமைத்துள்ள உவமைகளையும், உவமைகள் என்ற தனித் தலைப்பின் கீழ் எஞ்சிய வற்றையும், அகர வரிசைப் படுத்தி அமைத்திருக்கிறோம். இவற்றில் ஆசிரியர் பருப்பொருள், நுண் பொருள்கள், செயல்கள், பண்புகள், காட்சிகள், கருத்துக்கள் முதலியவற்றிற்கு அவ்வவற்றின் தன்மைகளுக் கேற்ப உவமைகளை அமைத்து அவற்றின் தன்மைகளை நாம் ஊகித்து ணரும்படி அமைத்திருக்கும் பான்மை விளங்கும். சொற்களாலும்

சந்தங்களாலும் முற்றிலும் காட்டமுடியாத பகுதிகளையும் கருத்துக்களையும் ஆசிரியர் உவமைகளால் விளக்குவதையும் நாம் காண்கிறோம், இவற்றோடு உருவகம், தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சி, ஒட்டு, வேற்றுப்பொருள், முரண் முதலிய பல அணிகளாலும் ஆசிரியர் தாம் கூறும் வரலாறுகளின் தன்மைகளைப் புலப்படுத்துவர். இப் பதிப்பில் இயன்றவரையில் உரை விளக்கங்களில் அவ்வவ்விடங்களில் இவற்றைக் குறித்துள்ளோம். இன்னும் இக் காண்டத்தில் அமைந்திருக்கும் தத்துவ உண்மைகளும், நீதியுரைகளும், நல்வாழ்க்கைக்குரிய வழிகளைக் காட்டும் உபதேசங்களும் பலவாகும்; அவற்றையும் அகராதியில் தொகுத்தமைத்திருப்பதோடு, ஆங்காங்கே சுட்டியுமிருக்கிறோம்.

இவற்றிற்கெல்லாம் மேலே, கதா நாயகனின் தெய்வத் தன்மையையும், அவன் அவதார உண்மையையும் மானிடப் பண்பு நிறைந்துள்ள இக்காவியத்தில் தெளிவுபட அவர் கூறிச் செல்லும் பான்மை அறிந்து போற்றத்தக்கது. குறைகளுள்ள மானிடத் தன்மைகளையும் நிறைவுள்ள தெய்வத் தன்மையையும் சில பாத்திரங்களில் ஒருமித்து இடைவெளி தோன்றாமல் அமைத்துக் காட்டுவதும் மிக அரியதொரு காரியமாம்; இதனை ஆசிரியர் தம் தூய உள்ளத்தாலும், பக்தியினாலும், கல்விச் சிறப்பாலும் மிக அழகுற அமைத்துக் காட்டியுள்ளார். தெய்வத் தன்மைகளைப் பிரித்துக் காட்டும் இடங்களில் தோத்திரங்களையும் அரியசெயல்களையும் புகுத்தி அவற்றை விளக்குகின்றார். இராம லக்ஷ்மணர்கள் அநுமன் ஆகியோர் செய்திகளில் நாம் இவற்றைக் காண்கிறோம்.

இவ்வாறு பல்லாற்றானும் அழகு மிகுந்து தெய்வ மணம் கமழும் இக்காண்டத்தின் அருமைகளைச் சுட்டிக்காட்டுவதென்பது இயலாததொன்று. வேதங்களாலும், தெய்வங்களாலும், முனிவர்களாலும் கூட இறைவனை உணர்ந்துரைக்க வியலாது என்பர்; அவ்வாறே இராம காதையின் சிறப்பையும், அதனை ஆசிரியர் கையாளும் விதத்தையும் எவ்வளவு மேன்மையுற்றவராலும் முழுமையும் அறிந்து கூறுவதென்பது இயலாது. 'மலை கண்டோ மென்பதல்லது மலர்மிசை யயற்கும், இலை கண்டோமெனத் தெரிப்பருந்தரத்தன' (161)... என்றும், 'மண்ணிடை மாக்கள், கடல் கண்டோமென்பர் யாவரே முடிவுறக் கண்டார்' (717) என்றும் ஆசிரியர் கூறியவை எமக்கே மிகவும் பொருந்துவதாகும். அவ்வாறிருக்க, அறிவில் வறியேமாகிய யாம் இச்சிறு நூன்முகத்தில் இக்காண்டத்திற்கு ஏற்ற விமர்

சனம் எழுத முயல்வதென்பது கூடுமோ? இப்பதிப்பைக் கண்ணுறும் அன்பர்கள் எம் எளிமையை நோக்கி மன்னிப்பாராக. ‘ கற்பார் இராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ ’ என்ற பெரியோரின் கருத்தின் படி, கற்கவேண்டிய நூல்களுள் சிறப்பானதான இதனை யாம் பதிப்பிக் கத் தொடங்கியது அப்பெருமானின் திருக்கருணையே யாகும். அக் கருணையின் பெருமையை வாழ்த்தி வணங்குவதே நாம் செய்யக் கூடிய கடப்பாடாகும்.

---

ஸ்ரீ

# இப்பதிப்பில் எடுத்தாளப் பெற்ற நூல்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதி

அகநா—அகநானூறு
அசதிக்கோவை
அண்ணுமலையார் காவடிச்சிந்து
அத்யாத்—அத்யாத்ம ராமாயணம்
அரிச்—அரிச்சந்திர புராணம்
அழகர் கலம்—அழகர் கலம்பகம்
அற்புத அந்தாதி—அற்புதத் திருவந்தாதி
அறநெறிச்—அறநெறிச்சாரம்
ஆசாரக்—ஆசாரக் கோவை
இரத்தினச் சுருக்கம்
இறையனுரகப் பொருளுரை
இன்ன—இன்னநாற்பது
உவமான சங்கிரகம்
ஐங்—ஐங்குறு நூறு
ஔவை பாடல்
கந்த பு—கந்தபுராணம்
கம்ப—பால காண்டம்
—அயோத்தியா காண்டம்
—ஆரணிய காண்டம்
—சுந்தர காண்டம்
—கிஷ்கிந்தா காண்டம்
—யுத்த காண்டம்
—உத்தர காண்டம்
கல்லாடம்
கலிங்கத்துப்பரணி
கலி. / கலித். —கலித்தொகை
களவழி
காஞ்சிப்—காஞ்சிப்புராணம்
கீதை—பகவத்கீதை
குசேலோ—குசேலோபாக்கியானம்
குமரகுரு—குமரகுருபர ஸ்வாமிகள் பிரபந்தம்
குறள்—திருக்குறள்
குறிஞ்சிப்—குறிஞ்சிப்பாட்டு
குறுந்—குறுந்தொகை
கூர்ம—கூர்மபுராணம்
கைந்நிலை
கோடீச்சுரக் கோவை
சடகோபரந்தாதி
சாகுந்தலம்
சாவித்திரி வெண்பா
சிலப்—சிலப்பதிகாரம்
சிந்தா / சீவக —சீவகசிந்தாமணி
சிவஞான சித்தியார்
சிறுபஞ்ச—சிறுபஞ்சமூலம்
சிறுபாண்—சிறுபாணுற்றுப்படை
சீகாளத்திப்-சீகாளத்திப் புராணம்
சூடா—சூடாமணி நிகண்டு
சூளா—சூளாமணி
சேந்தன் திவாகரம்
தக்க—தக்கயாகப்பரணி
தகடூர் யாத்திரை
தனிப்பா—தனிப்பாடல்திரட்டு
தாயுமான—தாயுமானவர் பாடல் (பராபரக்கண்ணி)
திணைமாலை
திணைமொழி
திரிகடுகம்
திருக்காளத்தி-திருக்காளத்திஉலா
திருக்குற்றல—திருக்குற்றல நாதருலா
திருக்கோவை
திருமந்—திருமந்திரம்
திருமுருகு—திருமுருகாற்றுப் படை
திருவரங்கக்கலம்பகம்
திருவரங்கத்தந்தாதி
திருவரங்கத்து மாலை
திருவள்ளுவமாலை

திருவாசகம்
திருவிளை—
திருவிளையாடற் புராணம்
திருவெம்—திருவெம்பாவை
திருவேங்கடத்தந்தாதி
திருவேங்கடமாலை
திவ்ய பிரபந்தம்—
—பெரியாழ்வார் திருமொழி
—திருப்பாவை
—நாச்சியார் திருமொழி
—பெருமாள் திருமொழி
—திருச்சந்த விருத்தம்
—திருமாலை
—பெரிய திருமொழி
—முதற் திருவந்தாதி
—இரண்டாம் திருவந்தாதி
—மூன்ருந் திருவந்தாதி
—நான்முகன் திருவந்தாதி
—திருவிருத்தம்
—திருவாய்மொழி
திவா—திவாகரம்
தேவா—தேவாரம் (சம்பந்தர் தேவாரம்) (திருநாவுக்கரசு தேவாரம்) (சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்)
தொல்—தொல்காப்பியம்
நச். உரை—நச்சினர்க்கினியருரை
நல்வழி
நள—நளவெண்பா
நற்—நற்றிணை
நன்—நன்னூல் சூத்திரம்
நன்னெறி
நாமதீப—நாமதீப நிகண்டு
நாலடி—நாலடியார்
நான்மணிக்—நான்மணிக் கடிகை
நிகண்டு
நீதிநெறி—நீதிநெறி-விளக்கம்
நெடுநல்—நெடுநல்வாடை
நெய்தற்கலி
நைடதம்

பட்டினத்—பட்டினத்தார் பாடல்
பட்டினப்—பட்டினப்பாலை
பத்துப்—பத்துப்பாட்டு
பதிற்—பதிற்றுப்பத்து
பர்த்ருஹரி சதகம்
பரி—பரிபாடல்
பழமொழி—பழமொழி நானூறு
பழையவுரை
பாகவத—பாகவத புராணம்
பாரதம்—வில்லி. பாரதம்
பிங்—பிங்கல நிகண்டு
பிரபுலிங்க லீலை
புருடசூக்தம்
புறநா—புறநானூறு
பு. வெ.—புறப்பொருள் வெண்பா மாலை
பெரிய புராணம்
பெருங்—பெருங்கதை
பெருந்—பெருந்தொகை
பெரும்பாண்—பெரும்பாணாற்றுப் படை
பொருந—பொருநராற்றுப் படை
போஜசம்பு
மணி—மணிமேகலை
மதுரைக்—மதுரைக் காஞ்சி
மலைபடு—மலைபடுகடாம்
முத்தொள்—முத்தொள்ளாயிரம்
முருகு—திருமுருகாற்றுப்படை
முல்லைப்—முல்லைப் பாட்டு
மூதுரை
மூவருலா
மேருமந்தர புராணம்
யாப். காரிகை — யாப்பருங்கலக் காரிகை
வான்மீகம்—வான்மீக ராமாயணம்
விக்கிரமசோழனுலா
விநாயக புராணம்
விஷ்ணு புராணம்

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# ௪. கிட்கிந்தா காண்டம்

---

கடவுள் வாழ்த்து

1. மூன்றுரு வெனக்குண மும்மை யாமுதல்
தோன்றுரு வெவையுமம் முதலைச் சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையி னின்றவும்
சான்றுரு வுணர்வினுக் குவந்த தாயினன்.

முதல் - பரம்பொருள், மும்மை குணம் ஆம் - மூன்று குணங்களாய் அமைந்த, மூன்று உரு என - மும்மூர்த்திகள் என்று சொல்லுவதுபோல, தோன்று உரு எவையும் - (சிருஷ்டியில்) காணப்பெறும் தாவர ஜங்கமப் பொருள்கள் யாவும், அ முதலை சொல்லுதற்கு ஏன்று உரு அமைந்தவும் - அப் பரம்பொருளையே சொல்லும்படி அமைந்தனவான மூர்த்தி வடிவங்களாய் விளங்கும் உருவத் திருமேனிகளும், இடையில் நின்றவும் - அவ்விரண்டுக்கும் இடையே நின்ற ஜீவன் முக்தர்கள் போன்ற மகா புருஷர்களும் ஆகிய யாவற்றிற்கும், சான்று உரு - ஓர் உருவச் சான்றாக அமைந்த இராமபிரான், உணர்வினுக்கு - நம் அறிவிற்கு, உவந்தது ஆயினன் - உவப்பைத் தந்தருள் பவனாகத் திவ்ய வடிவோடு திருவவதரித்துள்ளான்.

மும்மைக் குணம்: சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்பன. மூன்று உரு-பிரமன், திருமால், சிவபிரான் என்பவர். 'மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ' (ஆரணிய. 1171) என இராமபிரானை நோக்கிக் கவந்தன் கூறியதும், 'மூவகை யுலகுமாய்க் குணங்கள் மூன்றுமாய்; யாவையு மெவையுமா யெண்ணில் வேறுபட்

டோவலி ளெருநிலை யொருவன் செய்வினே, தேவரு முனிவரு முணரத் தேயுமோ'' (உயுத்த. இரணியன்வதைப். 62) எனப் பிரகலாத ஆழ்வான் இரணியனே நோக்கிக் கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கன. மேலும், இராமபிரான் மும்மூர்த்தியும் ஒன்ருயமைந்த பரம் பொருள் என்ற உண்மை, பால. திருவவதாரப் 137 ; கடிமணப்: 11, அயோத். மந்திரப்: 38, சுந்தர. 1117, 1122; முதலியவற்ருலும் பிறவற்ருலும் அறியலாம். உருவத்திருமேனிகளே அர்ச்சாவதாரங்கள் என்பர். சான்றுரு: 'யார்க்குஞ் சான்றென நின்ற வீரன் தான் வந்து வீடு தந்தான்'; (383) என்று நல்லுணர்வு பெற்ற வாலியின் கூற்றையும் நோக்குக. திரிமூர்த்திகள் பரம்பொருளின் அம்சமானவர் களே என்பதும், காட்சிப் பொருள்களும், அர்ச்சாவதாரங்களும், ஜீவன் முக்தர்களும் பரம்பொருளின் உண்மையைத் தெரிவிப்பனவே என்பதும், இத்தகைய பரம்பொருளே ஸ்ரீராமபிரான் என்பதும் இச்செய்யுளால் விளங்கும்.

பி - ம். 1. மும்மை யிம்முதல். 2. யிம்முதலேக். 3. மிசைய நின்றவும். 4. சான்றவ ருணர்வினுக், ஊன்றுரு வுணர்விலுக், சான்றுரு வுலகினுக்; உலகந் தாயினுன், உணர்வ தாயினர், உணர்வு மாயினுன், உணர்வ தாயின, உலகந் தாங்கினுன்.

ஒரு பிரதியில் இச்செய்யுளின்முன்,

மற்ளெரு தவமும் வேண்டா மணிமதி லிலங்கை மூதூர்ச்
செற்றவன் விசயப் பாடல் தெரிந்ததி ளுென்று தன்னேக்
கற்றவர் கேட்போர் நெஞ்சங் கருதுவோ ரியாவ ரேனும்
முற்றர சாள்வர் பின்னு மும்பரா முலகிற் சேர்வார்,

என்று ஒரு பாடலும், சில அச்சுப்பிரதிகளில்,

தரலாற்றுங் கவிச்சக்ர வர்த்திசெய்யு
டானுழ முடைமை நோக்கி
வரலாற்று முறையின் மும்மைத் தமிழுணர்ந்த
முதியோரு மற்று ளோரும்
முரலாற்றுங் கடற்பாரிற் கம்பசூத்திர
முதுசொன் மொழிப வன்ஞேற்
கெரலாற்று மால்சங்க மொக்கு மெனின்
யாம்வேளுெப் பியம்ப லாமால்.

என்று தனியுன் என்ற தலைப்பில் ஒரு பாடலும் காணப்பெறும்.

# நூல்

## 1. பம்பைப் படலம்

பம்பைப் படலம்: இது, சவரி கூறிய வழியே சுக்கிரீவனை நாடிச் சென்ற இராம லக்ஷ்மணர்கள் இடையே பம்பை என்னும் பொய்கையை அடைந்ததும், அப்பொய்கையின் இயற்கை வனப்பைக் கண்டு பிராட்டியின் பிரிவை நினைந்து இராமபிரான் வருந்தியதும், இலக்குவன் அப் பெருமானைத் தேற்றியதும் ஆன செய்திகளைக் கூறும் படலம் என விரியும். இது, பம்பைப் பொய்கைப் படலம், பம்பை வாவிப் படலம் எனவும் வழங்கும்.

பம்பை வருணனை

2. தேன்படி மலரது செங்கண் வெங்கைமா
தான்படி கின்றது தெளிவு சான்றது
மீன்படி மேகமும் படிந்த வீங்குநீர்
வான்படிந் துலகிடைக் கிடந்த மாண்பது.

(அப் பம்பைப் பொய்கை), தேன் படி மலரது - வண்டுகள் வந்து தங்கியிருக்கும் மலர்களையுடையது; செம் கண் - சிவந்த கண்களை யுடையனவும், வெம் - அச்சத்தைத் தருவனவுமான, கை மா - யானைகள், படிகின்றது - வந்து குளிக்கப் பெறுவது; தெளிவு சான்றது - மிகத் தெளிவுள்ளது; மீன் படி - நட்சத்திரங்களாகிய (விண்) மீன்கள் பொருந்தியதும், மேகமும் படிந்த - மேகங்களும் தங்கி இருக்கப் பெற்றதுமான, வீங்கு நீர் வான் - மிகுதியான நீரையுடைய ஆகாயமே, உலகு இடை - இவ்வுலகத்தினிடத்து, படிந்து கிடந்த மாண்பது - வந்து கிடக்கின்றது என்று சொல்லக்கூடிய சிறப்பை யுடையது. தான்: அசை.

தேன்படி மலரது - தேன் படிந்து நிறைந்த பூக்களையுடையது என்னலும் ஆம். கை மா - யானை; கை என்ற அடைமொழி, மற்ற விலங்குகளை விலக்கி, யானையை உணர்த்தியது. இதுபோல, யானை, மதமா, கைமலை, மதவரை எனவும் பிறவாறும் வழங்கப்பெறும். செங்கண் வெங்கைமா; சுந்தர: 902. கைம்மா என்பது இங்கு கைமா என இயல்பாய் நின்றது. இனி, செங்கண் வெங்கைமா தான் படிகின்றது, தெளிவு சான்றது என்று கொண்டு, அப் பொய்கை யானைகள் பல வந்து படியும் ஆழமுடையது என்றும், அவை படிந்து

திளைத்தும் கலங்காது விளங்கும் தெளிந்த நீரை யுடையது என்றும், அப் பொய்கையின் ஆழ்ந்து பரந்த பெருமைகளைக் குறித்ததும் ஆம். மீன்படி மேகமும் படிந்த வீங்கு நீர் என்னும் தொடர், சிலேடைப் பொருளில் வானுக்கும் பொய்கைக்கும் இயைவது காண்க. வான், விண்மீன் என்னும் நட்சத்திரங்களையும் மேகங்களையு முடையது; பொய்கை, மச்சங்களையும் மேகங்கள் கடலெனக் கருதி அதன் நீரைப் பருக வந்து படியும் நீர்ப்பரப்பின் பெருமையையு முடையது. மீன் : மின் என்ற முதனிலை திரிந்த சொல் என்பாரும் உளர். இனி, மீன்களாகிய மலர்களையும், யானைகளாகிய மேகங்களையும் தன்னிடம் கொண்டுள்ளது அப்பொய்கை யென்றும் கூற இடமாகும். 'மலர் உடுவாக, ஆனை மேகமாக, தெளிவு வான் ஆக, நிரனிறையாக்கிப் பொருள் கொள்க' என்பது பழையவுரை. மேகமும் : உம்மை, உயர்வு சிறப்பினதாகவும், எதிரது தழுவிய எச்சவும்மையாய் மற்றும் தழுவிய பிறவற்றையும் அடக்கிக் கூறியதாகவும் கொள்ளலாம். பொய்கை மானிடரால் ஆக்கப்பெறாத பெரிய நீர் நிலை; இதனை வடமொழியில் ஸரஸ் என்பர். இராமபிரான் பம்பையை அடைந்த காலம் வசந்தம் என்று வான்மீகம் கூறும்.

பி - ம். 1. *வெங்கண்மாத். வெங்கைம் மாத்.* 3. *படிந்து வீங்கு நீர்.* (1)

3. ஈர்ந்தநுண் பளிங்கெனத் தெளிந்த வீர்ம்புனல்
பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகைச்
சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலான்
ஓர்ந்துணர் வில்லவ ருள்ள மொப்பது.

(அப் பம்பை); ஈர்ந்த நுண் பளிங்கு என - ஆயுதங்கொண்டு அறுத்துச் சாணை பிடிக்கப்பெற்ற நுட்பமான படிகக் கல் போல, தெளிந்த - தெளிவாக விளங்கிய, ஈர்ம் புனல் - குளிர்ந்த அப்பொய்கையின் நீர், பேர்ந்து - (காற்றினால்) இடம் விட்டுச் சென்று, ஒளிர் - பிரகாசிக்கின்ற, நவ மணி படர்ந்த - நவ ரத்தினங்கள் இயற்கையாய்ப் பரவிக் கிடந்த, பித்திகை - சுவர்போன்ற கரைகளில், சேர்ந்துழி சேர்ந்துழி - அலைகளால் போய்த் தாக்கிச் சேரும்போதெல்லாம், நிறத்தை சேர்தலால் - (அப்பித்திகையில் ஆங்காங்குள்ள அந்த அந்த இரத்தினங்களின் ஒளி தன்னுள் பிரதிபிம்பிக்கப் பெற்று) நிற வேறுபாடுகளை அடைவதால், ஓர்ந்து உணர்வு இல்லவர் - தாமே ஊகித்து அறியும் இயற்கையான நல்லறிவு இல்லாதவர்களுடைய, உள்ளம் - மனத்தை, ஒப்பது - ஒத்துள்ளது.

ஈர்தல் - கருவிகொண்டு பிளத்தல். நுண் பளிங்கு ; நுட்பமான சிறு பொருளேயும் தெளிவாக விளக்கிக் காட்டும் ஸ்படிகம் ; பளிங்குக்கு அப் பொய்கைப் புனல், அதன் அடியிற் கிடக்கும் பொருளேத் தெளிவாகத் தெரிவிக்குந் தூய்மையுடைமையால். பளிங்கு தனக்கோர் நிற மின்றித் தன்னேச் சார்ந்த பொருளின் நிறத்தையே தன்னிடங் கொண்டு விளங்கும்; 'அடுத்தது காட்டும் பளிங்கு போல்' (குறள். 706) என்றது காண்க. பித்திகை : பித்திகா என்ற வட சொல்லின் திரிபு. சேர்ந்துழிச் சேர்ந்துழி: அடுக்கு, இங்கு விரைவுப் பொருளது. ஈர்ம் புனல் : ஈர்புனல் என்பது ஈர்ம்புனல் எனலாயிற்று; ஆர் கோடு, ஆர்ங்கோடு என்றதுபோல, (நன். சூ. 224) ; ஈர் - குளிர்ச்சி. சுய அறிவற்றேன் மனம் பிறர் சொல்வன வெல்லாங் கேட்டு ஒரு நிலேயில் நில்லாது அடிக்கடி மாறுவதுபோல, அப்பொய்கைப் புனலும் அங்கங்குத் தான் சார்ந்த நிறத்தை மேற்கொள்ளும் நிலேயை யுடையது; இஃது உவமை யணி. இனி, தனக்கே ஒரு குணமென்பதன்றி வேறு ஒன்றின் குணத்தை ஏற்பதால் இது, பிறிதின்குண மேற்பணியும் ஆம். ஒப்பு : சுந்தர. 197; அதன் உரையையுங் காண்க: இச் செய்யுள் பகுத்தறிவில்லா மக்கள் இயற்கையைப் பொய்கையுடன் இயைத்துக் கூறியது.

பி - ம். 1. வீம்புனல், வின்புனல். 2. படிந்த பித்திகை, 4. யல்லவ ருள்ள. (2)

4. குவான்மணற் றடந்தொறும் பவழக் கொம்பிவர்
கவானரச சன்னமும் பெடையுங் காண்டலில்
தவாநெடு வானகந் தயங்கு மீனொடும்
உவாமதி யுலப்பில வுதித்த வொத்தது.

(அப் பொய்கை), குவால் மணல் தடம் தொறும் - அருகே அங்குக் குவிந்து விளங்கும் மணல் இடங்களிலெல்லாம், பவழம் கொம்பு இவர் - பவழக் கொம்பின்மேல் விளங்குவன போன்ற, கவான் அரசு அன்னமும் - தொடைகளேயுடைய அரச அன்னப் பறவைகளும், பெடையும் - அவற்றின் பெண் அன்னங்களும், காண்டலின் - அங்குக் காணப் பெறுவனவால், (அத் தோற்றத்தால் அப்பொய்கை), தவா நெடு வானகம் - குறைபடாது நீண்ட ஆகாயத்தில், தயங்கு மீன் ஓடும் - விளங்கும் விண்மீன்களோடு, உவா மதி - பூர்ண சந்திரன், உலப்பு இல - அளவில்லாதன பல, உதித்த ஒத்தது - தோன்றின போன்ற தன்மையை அடைந்திருந்தது.

அன்னப்புள்ளின் கால் பவழக் கொம்பு போன்ற செந்நிற முடையதால், பவழக் கொம்பு இவர் கவான் எனப்பட்டது. கவான் - கூட்டமும் ஆம். இங்குப் பரந்து கிடக்கும் மணல் தடங்கள் வானகவும், அவற்றில் ஆங்காங்குத் தங்கியுள்ள ஆண் அன்னங்கள் முழு மதிக ளாகவும், அவ்வாண் அன்னங்களைச் சூழ்ந்து விளங்கும் பெட்டை அன்னங்கள் விண்மீன்களாகவும் உவமிக்கப் பெற்றன. உவா மதி: உவா வென்னும் சொல், அமாவாஸையையும் பௌர்ணமியையும் குறிப்பது. இங்கு உவாமதி என்றமையால், பௌர்ணமியில் தோன் றும் முழுமதி என்க. இது பம்பைப் பொய்கையைச் சார்ந்த மணற் றடங்களின் தோற்றத்தை விளக்கியதாகும். சில சுவடிகளில் இச் செய்யுள் இடம் மாறி உள்ளது.

பி - ம். 1. *குவான் மணித்; கோலிவர், கோலெனக்.*
2. *கவா வர, கவானுன; பெடையுங் காட்டவிற்.*
3. *தயங்கு மின்னேடும்*, 4. *தொத்தது; வுறைதல் போன்றது.* (3)

5. ஓதநீ ருலகமு முயிர்கள் யாவையும்
வேதபா ரகரையும் விதிப்ப வேட்டநாள்
சீதநீ ருவரியைச் செருக்க வாங்கொரு
காதிகா தலன்றரு கடலி னன்னது.

(அப் பொய்கை), காதி காதலன் - காதி என்னும் ராஜ ரிஷியின் புதல்வரான கௌசிக முனிவர், ஓதம் நீர் உலகமும் - கடல் நீர் சூழப் பெற்ற உலகங்களையும், உயிர்கள் யாவையும் - அவற்றில் வாழும் பிராணிகள் அனைத்தையும், வேத பாரகரையும் - வேதங்களின் கரை கண்ட அந்தணர்களையும், விதிப்ப - வேறே தாம் தனியே படைக்கும் பொருட்டு, வேட்ட நாள் - விரும்பிய காலத்தில், சீத நீர் உவரியை செருக்க - குளிர்ந்த நீரையுடைய கடல்களை (அவற்றின் பெருமையை) அடக்க, ஆங்கு - அவ்விடத்தில், தரு - உண்டாக்கிய, ஒரு கடலின் அன்னது - வேறு ஒரு கடலைப் போன்று விளங்குவது ஆகும்.

ஓத நீர் உவரியைச் செருக்க: செருத்தலாவது, தன் பெருமை யாலும், அக் கடல்போல் உப்பு நீராக இல்லாது நன்னீராக உள்ளமை யாலும். பாரகர் - கரைகண்டவர்; பாரம் - கரை; வடமொழி. திரிசங்கு மன்னன் காரணமாகக் கௌசிகமுனிவர், வசிட்டமுனிவ ருடன் மாறுபட்டு, தம் தவ வலிமையால் உலகங்கள் முதல் சீவராசிகள் பலவற்றையும் படைக்கத் தொடங்க, தேவர் வேண்டுகோளினால் அப் படைப்புத் தொழிலை நிறுத்தினர் என்பது; இச் செய்தி,

பால. மிதிலைக் : 117 - 119. பாக்களால் அறியலாம். காதி காதலன் - காதி என்னும் அரசரின் குமாரரான விசுவாமித்திர முனிவர்; பால. அகலிகைப் : 565. இவர் சரித்திரத்தின் விரிவை இந்நூல் பாலகாண்டம் மிதிலைக்காட்சிப் படலத்தும், வியாச பாரதம் ஆதிபருவத்தும், வான்மீகி ராமாயணம் பாலகாண்டத்தும் காணலாம். இச்செய்யுள் பாண மகாகவி அருளிய காதம்பரி என்னும் வடமொழி நூலில் அச்சோதயம் என்னும் ஸரஸின் வருணனையை ஒத்துளது என்பர். வேட்டநாள் - வேள்வி செய்தபோது என்னலும் அமையும்.

பி - ம். 1. ளுயிர்க வியாவையும்.
2. வேதபா ரகரொடும்; விதிக்க வேட்ட நாள்.
3. சீதம் வீங்குவரியை; திரிக்கு, செருக்க மா ரெரு, கெடுக்கும் மாரெரு. 4. கடவின் மாண்பது. (4)

6. எற்படர் நாகர்த மிருக்கை யீதெனக்
கிற்பதோர் காட்சிய தெனினுங் கேழுறக்
கற்பக மனையவக் கவிஞர் காட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்று கின்றது.

(அப் பொய்கை), நாகர் தம் எல் படர் இருக்கை - நாகர்களுடைய ஒளி பரவிய இருப்பிடமான பாதாள உலகம், ஈது என - இதுதான் என்று, கிற்பது - சுட்டிக் காட்டுவது போன்ற, ஓர் காட்சியது எனினும் - ஒப்பற்ற தோற்றத்தை யுடையது என்றாலும், கேழ் உற - (சொல்லாலும் பொருளாலும்) ஒளி பொருந்த, கற்பகம் அனைய - கற்பக மரம் போன்ற, கவிஞர் காட்டிய - (அரிய) கவிவாணர்கள் அருளி அறிவித்த, சொல் பொருள் ஆம் என - சொற்களின் பொருட் சிறப்புப் போலவும், தோன்றுகின்றது - விளங்குகின்றது.

எல் படர் நாகர் தம் இருக்கை - நாகலோகம்; அங்குள்ள பல வகை இரத்தினங்களின் மிகுதியால் ஒளி எப்போதும் பரந்துள்ளது என்பதாம். ஆழ்ந்த பாதலமாகிய நாகலோகத்தின் இரத்தினங்களின் ஒளி, ஆழ்ந்த இப் பம்பைப் பொய்கை நீரிற் பிரதிபிம்பித்து வீசப் பெறுவதால், நாகலோகம் இவ்விடத்ததாய் உள்ளது எனக் காட்டுவது போன்றுள்ளது ; அதாவது, அப் பொய்கை நாகலோகம் வரை யாழ்ந்திருப்பது என்பதோடு அதன் நீரின் தூய்மையையும் விளக்கியவாறும். கவிஞர் காட்டிய சொற்பொருளுக்குக் கற்பகம் : கற்பகம் தன்னை யடைந்தோர்க்கு அவர் விரும்பும் பொருளை யளிப்பது ; அதுபோல,

கவிஞர் சொற்பொருள், அதனைப் படிப்போர்க்கு அறிவுக்குரிய சொற்களில் ஆழ்ந்து கிடக்கும் அரிய பொருள்களை அளிப்பது ஆகும்;

ஒப்பு: "என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போல்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்"

(திருவள்ளுவமாலை, இறையனார்.)

சொற்பொருள் - புகழ் அல்லது கீர்த்தியை அளிக்கும் கல்விப் பொருள் அல்லது உறுதிப்பொருள் என்னலும் ஆம்; இக்கருத்தைக் கொண்டே, "சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி" (ஆரணிய : 220) என முன் நம் ஆசிரியர் சிறப்பித்தமையும் காண்க. இச் செய்யுள் சில பிரதிகளில் இடம் மாறியுள்ளது.

பி - ம். 1. எற் பொரு, எற்பட, ஏற்படி.
2. இற்படக் காட்டிய; காட்சியீதெனுங்; கிழுறக், கேழுள.
3. கற்பக மனைய வாய்க்; கவிஞர் காட்டுநற், கவிஞர் நாட்டிய.
4. தோன்றல் சான்றது. (5)

7. களநவி லன்னமே முதல கண்ணகன்
தளமலர்ப் புள்ளொலி தழங்கி யின்னதோர்
கிளவியென் றறிவருங் கிளர்ச்சித் தாதலின்
வளநகர்க் கூலமே போலு மாண்பது.

களம் நவில் - இனிமையாய் ஒலிக்கின்ற, அன்னம் முதல - அன்னப் புட்களே முதலான, கண் அகல் - இடம் அகன்ற, தள மலர் - இதழ்களையுடைய தாமரை மலர்களில் இருக்கும், புள் ஒலி - பறவைகளின் ஓசைகள், தழங்கி - மிகுதியாக (ஒன்றுகூடி) ஒலித்து, இன்னது ஓர் கிளவி என்று - இஃது இன்ன மொழியென்று, அறிவு அரு - அறிய முடியாத, கிளர்ச்சித்து ஆதலின் - ஒலியின் எழுச்சியை உடையதாதலால், வள நகர் கூலமே போலும் மாண்பது - ஒரு பெரிய நகரத்தின் கடைத்தெருவைப் போன்ற சிறப்புடையது.

களம் - இனிய ஓசை; 'களங்கொள் திருநே ரிசைகள்'; (பெரிய புரா. திருநா : 337); கண்டத்தால் கூவுகின்ற, என்னலும் ஏற்கும். தள மலர்ப்புள்: இதழ்களையுடைய பிற மலர்களில் தங்கியுள்ள பிற பறவைகளையும், வண்டுகளையும் குறித்தது என்னலாம். கிளவி - மொழி;

ப்தினெண் கிளவி'; (கல். 39 : 3). கூலம் - கடைவீதி; விளக்கொளி பரந்த வெறிகமழ் கூலத்து' (பெருங். 1 : 33 : 82). கூலம் புள்ளொலிக்கு; மணி. 14: 26-7; சீவக. 93, 828; திருவிளை. திருநகர்ச் : 67; அன்னமே : ஏகாரம், தேற்றப்பொருளது.

இச் செய்யுள் சிலபிரதிகளில் இடம் மாறியுள்ளது.

பி - ம். 1. லன்னமு.
2. புள்ளொலி தழங்க வின்னதோர், தயங்கி யின்னதோர், தழங்கு வீழ்ந்ததோர்; தளமலி புள்ளொளி, தளிமலர்ப் புல்லொலி.
3. தாகலின், தாகலால், தார்தலின்; விளவி யென்றி யாவதும்.
4. யன்ன மாண்பது. (6)

8. அரிமலர்ப் பங்கயத் தன்ன மெங்கணும்
புரிகுழல் புக்கிடம் புகல்கி லாதயாம்
திருமுக நோக்கலெ மிறந்து தீர்துமென்
றெரிபுகு வனவெனத் தோன்று மீட்டது.

எங்கணும் - அப்பொய்கை இடத் தெங்கிலும், அரி மலர் பங்கயத்து - செவ்வரிகள் படர்ந்து விளங்கும் தாமரை மலர்களிடத்து உள்ள, அன்னம் - அன்னப்பறவைகள், 'புரிகுழல் புக்கிடம் புகல்கிலாத யாம் - புரிபோல் சுற்றிக் கட்டிய கூந்தலையுடைய சீதாப்பிராட்டி போய் இருக்கும் இடத்தைத் தெரிந்து (இராமபிரானிடம்) சொல்ல மாட்டாத நாம், திருமுகம் நோக்கலெம் - அப்பெருமானுடைய திருமுகத்தை பார்க்கமாட்டோம்; இறந்து தீர்தும் - இறந்து ஒழிந்து போவோம்;' என்று - என்று தீர்மானித்து, எரி புகுவன என - நெருப்பிற் போய்ப் புகுவனபோல, தோன்றும் ஈட்டது - (அப் பொய்கை) விளங்கும் தன்மையுடையது.

அரிமலர் - அழகிய மலரும் ஆம்; அரி - அழகு; (பிங்.). புரிகுழல் - முப்புரிகளாய்ப் பின்னி முடிக்கும் கூந்தல்; அன்மொழித் தொகை. பிராட்டி யிருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து இராமபிரானுக்கு வந்து சொல்ல முடியாத அன்னங்கள் அப் பெருமான் முகத்தில் விழிக்க விரும்பாது வருந்தி, நெருப்பில் விழுந்து இறந்து போவன போல, அங்குள்ள தாமரை மலர்களுள் புகுந்துகொண்டன என்னும் காட்சியை யுடையது அப் பம்பைப்பொய்கை என்பதாம். மலர்ந்து விளங்கும் தாமரைகள் நெருப்புக்கு ஒப்பு: பெருமாள் திருமொழி : 8 : 2;

திருவாய்மொழி. 6-10 : 2 ; உயுத்த. மீட்சி : 85 ; நன் : 141 ; 'திருமுகம் நோக்கலெம். பெருமாள் திருமுகத்தை எப்படிப் பார்க்கப் போகிறோம்' என்பது பழையவுரை. இயற்கையில் மலருள் மறையும் அன்னத்தின் செயலை ஆசிரியர் தற்குறிப்பேற்ற அணியில் அமைத்த நயம் ஓர்க. ஈடு - தகுதி அல்லது வலிமையும் ஆம்.

பி - ம். 1. *தன்னம் யாவையும்.*

2. *புகல்இ லாமையாம், புகல்இலா தயர்ந், புகல்இலா தயர்ந்; புக் இடம் புகல் இலா தயர்ந்.*

3. *நோக்கிலம் நோக்கது மிறந்து; திருமென்(று).*

4. *றெரியினிற் புகுவபோற் புகுவ தொப்பது; புகுவ தேய்ப்பது; றெரிபுகு வனமெனத் தோன்று மீட்டது.* (7)

9. காசடை விளங்கிய காட்சித் தாயினும்
மாசடை பேதைமை யிடைம யக்கலால்
ஆசடை நல்லுணர் வனைய தாமெனப்
பாசடை வயின்றொறும் பரந்த பண்பது.

அப்பொய்கை மாசு அடை பேதைமை இடை மயக்கல் ஆல்-குற்றம் பொருந்திய அஞ்ஞானம் இடையே வந்து பேதிக்கச் செய்தலால், ஆசு அடை நல் உணர்வு அனைய - குற்றம் அடைந்த நல்லறிவே போல, (அப் பொய்கை), காசு அடை விளங்கிய - முத்துக்கள் முதலிய இரத்தினங் களைத் தன்னிடங்கொண்டு விளங்கிய, காட்சித்து ஆயினும் - காட்சியை உடையது ஆனாலும், வயின் தொறும் - பல இடங்களிலும், பாசடை பரந்த - பாசிகள் பரவியுள்ள, பண்பது - தன்மையுடையது.

காசு - முத்து முதலிய மணிகள்; (பிங்.). பொய்கையின் அடியிற் கிடக்கும் முத்து முதலிய இரத்தினங்கள் ஆழத்தில் கிடப்பினும், அவை அந்நீரின் தூய்மையால் மேலே தெளிவாய்ப் புலப்படும் தன்மை யுடையது அப் பொய்கை என்பதாம். ஆசு - குற்றம் அல்லது ஆணவ மலம்; 'ஆசலம்புரி யைம்பொறி வாளியும்'; (பால. ஆற்றுப் : 1). பாசடை - பாசி; பசிய இலை என்பாரும் உளர். அஞ்ஞானம் அடிக்கடி வந்து நல்லுணர்வைப் பேதிக்கச் செய்வதை ஒப்பிட்டமை யால், காற்றால் பாசி வந்து நீரை அடிக்கடி மூடிக்கொள்வதைக் கூறுவதே நேர்மையுடைத்தாகும். பாசடைக்கு அஞ்ஞானமாகிய பேதைமை. ஒப்பு :—

"பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கும்
மாசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்தும்
அரனடியை யுணரும்போ தகலும்பின் னணுகும்"

(சித்தியார். 8 : 39)

பாசடைப் பொய்கை; 'பாசடைப் பொய்கை பூத்த பங்கயம்; (உயுத்த. இலங்கைகாண் : 34); 'தெளி நீர் வாவியை.........பாசடை மறைக்கும்' (கல். 7 : 37 - 8); 'பாசி களைந்து நன்னீர் காணும் நல்லோர், சொல்லுணரின் ஞானம் வந்து தோன்றும் பராபரமே'; (தாயுமானவர். பராபரக் கண்ணி.). துளஸிதாஸர் இயற்றிய இராமாயண நூலில் இப்பாடலின் கருத்து முழுவதும் அமைந்துள்ளது என்பர்.

சில பிரதிகளில் இப்பாடல் இடம் மாறியுள்ளது.

பி - ம். 1. *காசட், காசிடை, காசடைந்திலங் கொளி; கருமத் தாயினும்.*
2. *மாசடை பேதைமை; பேதமை யொளிப்படா.*
3. *ஆசட நல்லுணர் விலர்க ளாமெனப்.*
4. *அடர்ந்த பண்பது.* (8)

10. களிப்படா மனத்தவன் காணிற் கற்பெனும்
கிளிப்படா மொழியவள் விழியின் கேளெனத்
துளிப்படா நயனங்க டுளிப்பச் சோருமென்
றொளிப்படா தாயிடை யொளிக்கு மீனது.

(அப் பொய்கை), களி படா - மகிழ்ச்சி தோன்றாத, மனத்தவன் - மனத்தையுடைய இராமபிரான், காணில் - நம்மைக் கண்டால், கற்பு எனும் - கற்பு ஓர் உருக்கொண்டது என்று சொல்லத்தக்க, கிளி படா மொழி அவள் - கிளியினிடம் உண்டாகாத (இனிய) சொற்களை யுடைய சீதாப்பிராட்டியின், விழியின் கேள் என - கண்களுக்கு உறவானவை என்று எண்ணி, துளி படா - கண்ணீர் ஒருபோதும் சிந்தியறியாத, நயனங்கள் துளிப்ப - தன் கண்கள் நீர்த்துளிகளைச் சிந்த, சோரும் என்று - வாடி வருந்துவான் என்று எண்ணி, ஒளி படாது - தம் உருவின் ஒளி தோன்றாதபடி, அ இடை - அந்தப் பொய்கையின் இடத்தினுள்ளே, ஒளிக்கும் - தம்மை மறைத்துக் கொள்ளும், மீனது - மீன்களை யுடையது.

களிப்படா மனத்தவன் காணின் சோரும் என்று ஒளிக்கும் மீனது என இயைக்க. 'துளிப்படா நயனங்க டுளிப்ப' என்பதும், 'ஒளிப் படா தாயிடை யொளிக்கும்' என்பதும் முரண்தொடைகள். பிராட்டி, கற்பு என்பதே ஓர் உருவம் கொண்டது போன்றவள்; 'கற்பெனும் பெயரதொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்' (சுந்தர : 1273). பிராட்டி கிளிமொழியை விஞ்சிய இனிய மொழியுடையவள் என்க. அவள் கண்கள் வடிவாலும் ஒளியாலும் மீன்போன்றவை ஆதலின், நம்மைக் கண்டால் இராமபிரான் சீதையின் கண்களைக் கண்டதாகக் கருதி, அவள் நினைப்புத் தூண்ட, அந் நினைவு அவனை வருத்தும் எனக் கருதி, மீன்கள் நீருள் ஒளித்துக்கொண்டன என்பதாம். ஒளிபடா : எதுகை நோக்கி வலித்தது. இஃது ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.

பி - ம். 4. *ஒளிப்படா வானமே யொதுங்கு; ஒக்குமீனது; ஒளிப்படா வனத்திடை; ஒளிப்படா தங்கே யொளிக்கு மீனது.* (9)

**11. கழைபடு முத்தமுங் கலுழிக் கார்மத**
**மழைபடு தரளமு மணியும் வாரிநேர்**
**இழைபடர்ந் தனையநீ ரருவி யெய்தலான்**
**குழைபடு முகத்தியர் கோலம் போல்வது.**

(மேலும் அப்பொய்கை), கழை படு - மூங்கில்களிலிருந்து உண்டாகும், முத்தமும் - முத்துக்களையும், கலுழி - கலங்கியதான, கார் மத மழை - கரிய மத நீரையுடைய மேகம் போன்றவான யானைகளிடமிருந்து, படு - உண்டாகும், தரளமும் - முத்துக்களையும், மணியும் - மற்றும் பல இரத்தினங்களையும், வாரி - திரட்டித் தன்னிடங்கொண்டு, நேரிழை படர்ந்து - சிறந்த ஆபரணங்கள் விளங்கப்பெற்று, நீர் அருவி - மலை யருவி நீர், எய்தலால் - அங்கு வந்து சேர்தலால், குழைபடு முகத்தியர் - குழை என்னும் காதணிகளை அணிந்துள்ள முகத்தினரான மகளிருடைய, கோலம் போல்வது - அழகை ஒத்து விளங்குவதாகும்.

கார் மத மழை - கரிய மதத்தை மழைபோற் சொரியும் யானை. முத்துக்கள் பிறப்பிடங்கள் பலவற்றுள் மூங்கிலும், யானைத் தந்தங்களும் ஆம் என்பது நூல் வழக்கு; கழை - கரும்பும் ஆம். கோலம் - உருவமும் ஆம். மலை யருவிகள், முத்து, மணி, முதலியவற்றை ஈர்த்துக்கொண்டு வரும் என்பது, பால. ஆற்றுப் : 7. நேரிழை என்பதை அன்மொழித் தொகையாகக் கொண்டு பொருள் கூறினரும் உளர்;

பின்னர் குழைபடு முகத்தியர் கோலம் போல்வது என்றமையால் இங்கே இழைக்கு அணியென்றே பொருள் கொள்ளப்பெற்றது.

பி - ம். 1. கார்மதா. 3. இழைபடா ரீனய.
4. கோலம் போன்றது. (10)

12. பொங்குவெங் கடகரி பொதுளி யாடலின்
கங்குலி னெதிர்பொரு கலவிப் பூசலில்
அங்கநொந் தலசிய விலேயி னுய்வளை
மங்கையர் வடிவென வருந்து மெய்யது.

(அப் பொய்கை), பொங்கு - மேற்கிளம்பி எழுகின்ற, வெம் கடகரி - வெப்பமான மதங்கொண்ட யானைகள், பொதுளி ஆடலின் - அந்நீரில் குடைந்து நீராடுவனவால், கங்குலின் - இராக்காலத்தில், எதிர் பொரு - வந்து தழுவிச் சேரும், கலவி பூசலில் - புணர்ச்சிப் போரில், அங்கம் நொந்து அலசிய - உடல் வருந்திச் சோர்வுற்ற, ஆய்வளை விலேயின் மங்கையர் - சிறந்த வளையல்கள் அணிந்த விலே மாதர்களுடைய, வடிவு என - உருவமே போல, வருந்தும் மெய்யது - வருந்துகின்ற உடல் நிலையை யுடையது.

கடகரி பொதுவி னுடலின் என்ற பாடங்கொண்டு, (பொது மகளைப் போல) யாவர்க்கும் பொதுவான உரிமையோடும் அப் பொய்கையிற் படிந்து ஆடுவதால் என்றும் பொருள் கொள்ளலாம். அலசுதல் - வருந்துதல்; 'திருவுடம் பலச நோற்கின்றான்'; (ஆரணிய: 237). மதயானைகள் பல வந்து படிந்து திளைப்பதால் கலங்கி நிலே தளர்ந்த அப் பொய்கை, காமுகர் மதனப்போர் விளைத்தலால் அங்கம் சோர்வுற்ற விலே மகளிர்க்கு ஒப்பானது. காமுகன் யானைக்கு; சீவக. 191.

இச் செய்யுள் ஓர் அச்சுப் பிரதியில் இல்லே.

பி - ம். 4. வருந்துகின்றது, வருத்து மெய்யது, வருந்த மேயது. (11)

13. விண்டொடு நெடுவரைத் தேனும் வேழத்தின்
வண்டுளர் நறுமத மழையு மண்டலால்
உண்டவர் பெருங்களி யுறலி னேதியர்
தொண்டையங் கனியிதழ்த் துப்பிற் சான்றது.

(அப் பொய்கைநீர்), விண் தொடு - வானைத் தொடுவன போல உயர்ந்து விளங்கும், நெடு வரை தேனும் - நீண்ட மலேகளிலிருந்து

பெருகி வருகின்ற தேனும், வேழத்தின் - யானைகளின், வண்டு உளர் - வண்டுகள் குடையப்பெறும், நறு மத மழையும் - மணமிக்க மதப் பெருக்காகிய மழையும், மண்டலால் - (தன்னிடம்) வந்து நிறைதலால், உண்டவர் - அந்நீரைப் பருகினவர், பெரும் களி உறலின் - பெரிதுங் களிப்பை அடைதலின், ஓதியர் - மகளிரின், தொண்டை அம் கனி இதழ் - ஆதொண்டைக் கனிபோன்ற இதழின், துப்பில் சான்றது - (அதர) பானத்தைப் போலச் சிறந்து விளங்குவது ஆகும்.

விண்டொடு நெடு வரை : வரை - மூங்கிலும் ஆம். 11-ம் செய்யுளில் கூறிய மூங்கிலையும், யானைகளையும் இங்கும் கூட்டி யுரைத்ததாகவும் கொள்ளலாம்; அவ்வாறு கொண்டால், அங்கு மூங்கில்களின் மீது உள்ள தேனிறால்களிலிருந்து வழிந்து பெருகிய தேன் எனக் கொள்க. யானையின் மதத்தை வண்டுகள் உண்ணுதல்; கலி: பா. 66 : 2-4. துப்பு - பானம், உமிழ்நீரும் ஆம்; 'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி' (குறள். 12.) என்றமை காண்க. துப்பு - இனிமை யுடையது; குறள். 1121. இஃது, உயர்வு நவிற்சி யணி.

பி - ம். 1. விண்டொடர். 2. வண்டுழனறு மதம் மண்டலால்.
3. உண்டவர் நெடுங்களி, உண்டிவர்பெருங்களி; களியுறுதலா லொளி, யுற்ற வோதியர், யுறுவ ரோதியர், யுறுவதோதியர்,
4. டுழனி சான்றது, டுழவி சான்றது, தழனி கான்றது. (12)

14. ஆரிய முதலிய பதினெண் பாடையில்
பூரிய ரொருவழி புகுந்த போன்றன
ஓர்வில கிளவிக ளொன்றொ டொப்பில
சோர்வில விளம்புபுட் டுவன்று கின்றது.

ஆரியம் முதலிய - வடமொழியை முதலாகக் கொண்ட, பதின் எண் பாடையில் - பதினெட்டு வகை ஆன மொழிகளில், பூரியர் - இலக்கிய இலக்கண அறிவில்லாத கீழ்மக்கள், ஒரு வழி புகுந்த போன்றன - ஓரிடத்திற் புகுந்திருந்து ஆரவாரம் செய்வதைப் போல, ஓர்வு இல - உணரக் கூடாதவையும், கிளவிகள் ஒன்றோடு ஒப்பு இல - சொற்கள் ஒன்றோடு மற்றொன்று ஒப்பில்லாதவையும், சோர்வு இல - தளர்ச்சி இல்லாதவையுமான ஒலிகளை, விளம்பு - ஒலிக்கின்ற, புள் - பறவைக் கூட்டங்கள், துவன்றுகின்றது - கலந்து நிறையப் பெற்றுள் ளது; அப் பொய்கை என்ற எழுவாய் வருவித்துக்கொள்க.

ஆரியம் முதலிய பதினெண் பாடை : ஆரியத்தைத் தமக்கு முதன் மொழியாகக் கொண்ட பதினெண் பாடைகள்; தமிழொழிந்த பதினேழு மொழிகள் ;

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகம்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம்வங்கம்
தங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலந் தாமிவையே."

தமிழகத்தைச் சேர்ந்த பதினேழ் மொழிகளுடன், ஆரியமும் சேர்ந்து மொழிகள் பதினெட்டு ஆயின என்பதாம். இம் மொழிகள் பயிலப் பெறும் இடங்களைப் பதினெண் தேயங்களாகவும் கூறுவதுண்டு; திருவிளையாடல். திருநகரப் : 67; புள்ளொலிகளுக்குப் பாடைகளின் ஒலிகள் ; சீவக. 93 ; பூரியர் - தம்மைப் பெரியராய்க் கருதும் அற்பர்; அயோத். ஆற்றுப் : 33 ; குறள். 241, 919 ; பரி. 6 : 48.

இதுமுதல் 3 பாடல்கள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. முதவின; பதினெண்ணுடைசொல், பதினெண்ணுயவில்.
2. புகுந்த தாமென, புகுந்தன்றுமென, புகுந்த வாமென, புகுந்த போன்மென.
3. ஓர்கில விளவிகள், ஓர்வுறுவிளவிக னொன்றெ டொன்றுறுச்.
4. சோர்வில பறவைக, டுயன்ற நின்றது; சோர்வில விளம்புவ.(13)

15. தானுயி ருறத்தனித் தழுவும் பேடையை
ஊனுயிர் பிரிந்தெனப் பிரிந்த வோதிமம்
வானர மகளிர்தம் வயங்கு நூபுரத்
தேனுகு மழலையைச் செவியி னோர்ப்பது.

(அப் பொய்கை), தான் உயிர் உற - தன் உயிரோடு ஒன்று படுமாறு, தனி தழுவும் பேடையை - ஒப்பற்ற முறையில் (அதாவது மிக்க அன்போடு), தன்னைத் தழுவி மகிழும் பெண் அன்னத்தை, உயிர் ஊன் பிரிந்தது என - உயிர் உடலை விட்டுப் பிரிந்ததுபோல, பிரிந்த ஓதிமம் - விட்டகன்ற ஆண் அன்னம், வான் அர மகளிர் தம் - அங்கு நீராட வந்த தேவலோகத்துத் தெய்வ மகளிர் களுடைய, வயங்கு - விளங்குகின்ற, நூபுர தேன் உகு - (கால்களில் அணிந்துள்ள) சதங்கைகளின் தேனைச் சிந்துவ போன்று ஒலிக்கும், மழலையை - இனிய மெல்லோசையை, செவியின் ஓர்ப்பது - (தன்

பேடையின் குரலென மயங்கிக்) காது கொடுத்து உணர்ச்சியுடன் கேட்கும் சிறப்புடையது.

அன்னத்தின் ஒலிக்கு மகளிர் சிலம்பின் ஒலி; 'அரங்கி னுடுவார் சிலம்பி னன்னமின் றிரங்கு வார்புனற் சரயு வெய்தினுர்'; (பால. கையடைப் : 21); பால. நகர : 65 காண்க. அன்னத்தின் அன்பு; சீவக. 2890; சூளா. நகரப் : 11; பெருங். 2. 7 : 167. ஊன் - உடல்; ஊனு முயிரு மனையார்' பால: வரைக்காட்சிப் : 69); 'ஊனு முயிரு முணர்வும் போல்' (அயோத். 1;) "ஊனைக் குறித்த வுயிரெல்லாம்'' (குறள். 1013); நூபுரத்திற்குச் சிலம்பு எனப்பெயர் வந்ததும் அதன் ஒலி காரணம் என்னலாம்; சிலம்புதல் - புட்கள் ஒலித்தல். இச் செய்யுள் மயக்கவணியின் பாற்படும். பிரிந்தென : தொகுத்தல் விகாரம்.

இச் செய்யுளால் பம்பைப் பொய்கை, அரமகளிரும் வந்து நீராடும் தூய்மையும் பெருமையு முடைமை விளங்கும்.

பி - ம். 1. *தானுற வுணர்ந்தடி, தானுறப் புணர்ந்தடி என்பது, தானுணர் வுறத்; குறத்தணே, குறத் தரு.*
3. *வானவர் மகளிர், வானுறை மகளிர்*, 4. *செவியி னேற்பது*. (14)

16. ஈறிட லரியமால் வரைநின் றீர்த்திழி
ஆறிடு விரையகி லார மாதியா
ஊறிட வொண்ணக ருரைத்த வெண்டளச்
சேறிடு பரணியிற் றிகழுந் தேசது.

(அப் பொய்கை), ஈறு இடல் அரிய - முடிவிட்டு அளந்து கூறுவதற்கு அரியதான, மால் வரை நின்று - பெரிய மலையினின்று, ஈர்த்து இழி - இழுத்துக்கொண்டு கீழ்நோக்கி வருகின்ற, ஆறு இடு - மலை யருவிகளாகிய ஆறுகள் கொணர்ந்து தள்ளிய, விரை அகில் ஆரம் ஆதியா - மணங்கமழும் அகிற் கட்டைகள், சந்தனக் கட்டைகள் முதலானவை, ஊறிட - ஊறி அவற்றின் இரசம் அங்குப் படிந்திருப்பதால், ஒள் நகர் உரைத்த - சிறப்புள்ள நகர மாந்தர்கள் அரைத்த, வெண் தள சேறு இடு-வெண்மை பொருந்திய களபக் குழம்பு வைக்கப்பெற்ற, பரணியில் - ஜாடி அல்லது செப்பை ஒத்து, திகழும் தேசது - விளங்கும் அழகுடையது.

நகர் - இங்கு இடவாகு பெயராய் அங்கு வாழும் செல்வச் சிறப்பு வாய்ந்த மக்களைக் குறித்தது; நகர் வீடும் ஆம். வெண்டளம் பச்சைக் கற்பூரமும் ஆம். தளம் - சீதளம் என்பதின் முதற்குறை; 'வெண்டளக் கலவைச் சேறு'; (பால. நாட்டுப்: 12); சுந்தர. 3. இனி, சேறிடு பாணியில் என்ற பாடங்கொண்டு, கலவைப் பூச்சை அணிந்துகொண்ட தன்மையை ஏற்றுள்ளது அப் பொய்கை என்னலும் ஒன்றும்; இச்செய்யுளின் மூன்றும் அடி, முற்று மோனையாக அமைந்த சிறப்புடையது. இச் செய்யுள், தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.

பி - ம். 1. ஏறிட்டலரிய; மால் 2. வரையகி.
3. ஊறிடுபயமென, ஊறிடவன்னக ருரைத்த, ஊறி மாயவே ஊறியொண்ணுதலிய ருரைத்த சந்தனச்.
4. நிகழ்ந்த் தேசது, நிகழ்ந்த நேரது, நிறந்த தேசது, நிகழ்ந்த தேசது. (15)

வேறு

17. நவ்வி நோக்கிய ரிதழ்நிகர் குமுதத்தி னறுந்தேன்
வவ்வி மாந்தலின் களிமயக் குறுவன மகரம்
எவ்வ மோங்கிய விறப்பொடு பிறப்பிவை யென்னக்
கவ்வு மீனொடு முழுகின வெழுவன கரண்டம்.

(அப் பொய்கையில் உள்ள), மகரம் - முதலைகள், நவ்வி நோக்கியர் - மான் போன்ற வெருண்ட பார்வையுடைய மகளிர் தம், இதழ் நிகர் - இதழ்களுக்கு ஒப்பான, குமுதத்தின் - செவ்வல்லி மலர்களின், நறும் தேன் - மணம் பொருந்திய தேனை, வவ்வி மாந்தலின் - பற்றிக் குடிப்பதால், களி மயக்கு உறுவன - அவை கட்குடித்தவர் அடையும் மயக்கத்தைக் கொண்டுள்ளன வாயின; எவ்வம் ஓங்கிய - துன்பம் மேம்பட்ட, இறப்பு ஒடு பிறப்பு இவை என்ன - இறப்பும் பிறப்பும் இத்தன்மைய என நமக்கு அறிவிப்பனபோல், கவ்வு மீன் ஒடு - தாம் பற்றிக்கொண்ட மீன்களோடு, கரண்டம் - நீர்க் காகங்கள், முழுகின எழுவன - அந்நீரில் மூழ்கி மீண்டும் மேல் எழுந்துவரும் இயல்புடையன.

நவ்வி நோக்கியர்-மானின் கண் போன்ற கண்களையுடைய மகளிர் என்பதும் ஆம். பிறப்பிறப்பு எவ்வம்; 'பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்'; (மணி. 2: 64.) இறப்பு பிறப்புவை மாறிமாறி வரும் இயற்கைய;

'ஆதலு மழிவு மெல்லா மவைபொருட்கியல்பு கண்டாய்'; (சீவக. 269). கரண்டம் ; இது கரண்டகம் என்ற வடசொல்லின் சிதைவு.

இச் செய்யுளின்பின், 'வெள்ளத்தில்' என்று தொடங்கும் ஒரு பாடல் உண்டு என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு: புழைய உரையில், 'பவளவெள்ளம்' என்ற் ஒரு பாடற் றலைப்பு குறிக்கப் பெற்றிருக்கிறது, அப்பாடல்கள் கிடைக்கவில்லை.

பி - ம். 2. வவ்வு மார்தரில்.
3. எவ்வ நீங்கிய.
4. கவ்வி மீனொடு, குவவு மீனின, மூழுகுன வெழுவன, மூழுகின குரண்டம். (16)

18. கவள யானைய னுற்கந்தக் கடிநறுங் கமலத்
தவளை யீகல மாவது செய்துமென் றருளித்
திவள வன்னங்க டிருநடை காட்டுவ செங்கண்
குவளை காட்டுவ துவரிதழ் காட்டுவ குமுதம்.

(அப் பொய்கையில்), 'கவள யானை அனுற்கு- கவளமாக உணவைப் பெறும் யானைபோன்ற இராமபிரானுக்கு, அந்த கடி நறும் கமலத்து அவளை - சிறந்த மணம் வீசும் தாமரை மலர்மீது விளங்கும் அத் திருமக ளான சீதாப்பிராட்டியை, ஈகலம் - நாம் தேடிக் கொணர்ந்து அளிக்கவல் லோம் அல்லோம் ; (ஆயினும்), ஆவது செய்தும் என்று அருளி-நம்மால் இயன்ற உதவியையேனும் செய்வோம்' என்று அன்பு மேலிட்டு, அன்னங்கள் - அப் பொய்கையில் இருந்த அன்னப் பறவைகள், திவள - விளங்கும்படியாக, திருநடை காட்டுவ - பிராட்டியின் அழகிய நடை யைப் போல நடந்து காட்டுவனவாயும், குவளை - அங்குள்ள நீலோற்பல மலர்கள், செம் கண் காட்டுவ - பிராட்டியின் செவ்வரி படர்ந்த கண் களைக் காட்டுவனவாயும், குமுதம் - அங்குள்ள செவ்வல்லி மலர்கள், துவர் இதழ் காட்டுவ - பிராட்டியின் சிவந்த இதழ்களை காட்டுவன வாயும் விளங்கின.

கவள யானை; 'யானைக்குச் சோற்றைப் பெரிய உருண்டைகளாகத் திரட்டி எடுத்துக்கொடுக்கும் முறையைக் குறித்து வந்த பெயர்; 'கவள யானைக் கொம்பொசித்த கண்ணன்'; (பெரிய திருமொழி: 4-8: 1). கவளம் என்பது கவழம் எனத் திரிந்தும் வ்ழங்கும்; சுந்தர. 719; சீவக. 191. 'திவள - பிரகாசிக்க' (பழையவுரை).

இச் செய்யுளுக்கு ஒப்பு. 'கொங்கை கோங்கவை காட்ட வாய் குமுதங்கள் காட்ட மா பதுமங்கள், மங்கைமார் முகங்காட்டிடு நாங்கூர் வண்புருடோத்தமமே'; 'புள்ளார் புறவில் பூங்காவி புலன்கொள் மாதர் கண்காட்ட, கள்ளார் கமலம் முகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே;' (பெரிய திருமொழி. 4-2 ; 6. 7 : 3).

பிராட்டியைக் கமலத்தவள் என்றது, தாமரையில் வாழும் திருமா மகளே பிராட்டியாக அவதரித்தாள் என்ற உண்மை மேற்கொண்டு; 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' (பால. கோலங் காண் : 35 ;) 'தாமரை தவிரப் போந்தாள்'; (ஆரணிய. 620). இச் செய்யுள் ஏதுத் தற்குறிப்பேற்றவணியின் பாற்படும்.

பி - ம். 1. *யானையன்றானுக்.*
2. *யிகல, யீகிலே; செய்த மென்றஞ்சித், செய்த மென்றிரங்கித், செய்த மென்றருளா.*
3. *செல்நடை காட்டுவ, செல்நடை கிட்டுவ, சென்னடை காட்டுவ தேனர்.*
4. *விழியிதழ்.* (17)

19. பெய்க லன்களி னிலங்கொளி மருங்கொடு பிறழ
வைக லும்புனல் குடைபவர் வானர மகளிர்
செய்கை யன்னங்க ளேந்திய சேடிய ரென்னப்
பொய்கை யன்னங்க ளேந்திய பூங்கொம்பு பொலிவ.

பெய் கலன்களின் - தாம் தாம் கழற்றி வைத்துள்ள ஆபரணங் களிலிருந்து, இலங்கு ஒளி - விளங்கும் சுடர், மருங்கு ஒடு பிறழ - அவ்வவ்விடங்களோடு மாறுபட்டு ஒளிவீச, வைகலும் - நாள்தோறும், புனல் குடைபவர்-அங்கு வந்து நீராடுபவர்களான, வான் அர மகளிர்- தேவலோகத்து அரம்பை மகளிருடைய, செய்கை அன்னங்கள் ஏந்திய- (சிற்பிகளால்) செய்து அமைக்கப்பெற்ற விளையாட்டு அன்னங்களை எடுத்து வந்த, சேடியர் அன்ன - அவர்கள் பணிப்பெண்களைப் போல, பூம் கொம்பு - பூக்களோடு விளங்கும் மரக்கொம்புகள், பொய்கை அன் னங்கள் ஏந்திய - அப்பொய்கையில் வாழும் அன்னப்பறவைகளை ஏந்தினவையாக, பொலிவ - விளங்குவன ஆயின.

புனல் குடையும் வானவர் மகளிர் கழற்றிவைத்த ஆபரணங்கள் அவ்வவ்விடங்களில் உள்ள ஒளிகளோடு மாறுபட்டொளி செய்தன

என்பதாம். பூங்கொம்புகள் சேடியர்க்கும் அவற்றின்மீது விளங்கும் அன்னங்கள் செய்கை யன்னங்களுக்கும் உவமைகள்.

'செய்கையன்னங்க ளேந்திய சேடியர் - சமைத்த பிரசாதங்கள் கொண்டுவந்து நின்ற சேடியரென்ன, அன்னமேந்து பூங்கொம்புகள் பொலிந்தன' என்பது பழையவுரை.

பி - ம். 1. மருங்கொடும் பிறழ. 2. குடைவுறும்; வானவர்மகளிர்.
3. சேடியறென்ப, செவிலிய ரென்ன.
4. பூங்கொம்பு பொலிய. (18)

20. ஏலு நீணிழ லிடையிடை யெறித்தலிற் படிகம்
போலும் வார்புனல் புகுந்துள வாமெனப் பொங்கி
ஆலு மீன்கணம் வெருவுற வலம்வர வஞ்சக்
கூல மாமரத் திருஞ்சிறை புலர்த்துவ குரண்டம்.

(பக்கத்தில்), ஏலும் - பொருந்திய, நீள் நிழல் இடை இடை எறித் தலின் - நீண்ட நிழல் ஆங்காங்குப் படிதலால், படிகம் போலும் வார் புனல் - பளிங்கு போன்று தெளிந்திருந்த அப்பொய்கை நெடிய நீருள், புகுந்துள ஆம் என - (கொக்குகள்) புகுந்துள்ளனவென்று, ஆலும் - அப்பொய்கையில் திரிந்து விளையாடும், மீன் கணம் - மீன் கூட்டங்கள் (அவை தம்மைப் பற்ற வந்துள்ளன என்றெண்ணி), வெருவு உற அலம் வர பொங்கி அஞ்ச - திகைப்பு மேலிட்டு நிலை தளர்ந்து பயப்பட, குரண்டம்-கொக்குகள், கூல மா மரத்து-கரையில் இருந்த மாமரங்களில் இருந்து, இரும் சிறை புலர்த்துவ - தம் பெரும் சிறகுகளை உலர்த்திக் கொண்டிருக்கும். (அத்தகைய காட்சியையுடையது அப்பொய்கை எனப் பொருள் முடிவு செய்க).

பொய்கையை யடுத்துள்ள தோப்பின் மாமரங்களில் கொக்குகள் தம் சிறகுகளை உலர்த்திக் கொண்டிருக்க, அம் மரங்களின் நிழல்கள் அப்பொய்கையில் ஆங்காங்குப் படிவனவால், அதில் மகிழ்ந்து அலைந்து திரியும் மீனினங்கள், அக்கொக்குக்களின் நிழல்களை அந்நீரில் கண்டு, அவை தம்மைப் பிடிக்க வந்துள்ளன என அஞ்சித் திகைப்புற்று வருந் தின என்பதாம்; ஆலுதல் - விளையாடி மகிழ்தல்; 'மயிலினம் ஆலுஞ் சோலை.' (திருமாலை, 14). கூலம் - நீர்க்கரை. புனலுக்குப் பளிங்கு, 3.

பி - ம். 1. எல நீணிழ, எல நீளிலை நிழலிடைப் படிதலிற்; யெறித்தலும் படிகம். 2. புகுந்தள தாமெனப்; தாமெனத் தடவி.
3. மீனகமஞ்சின, வலமர; வரம் வரவஞ்சக், வலம்வா வஞ்சிக். (19)

21. அங்கொர் பாகத்தி னஞ்சன மணிநிழ லடையப்
பங்கு வேறதிற் பதுமரா கத்தொளி பாயக்
கங்கு லும்பக லும்மெனப் பொலிவன கமலம்
மங்கை மார்துணை முலையெனப் பொலிவன வாளம்.

அங்கு ஓர் பாகத்தின் - அப் பொய்கையின் ஒரு புறத்தில், அஞ்சன மணி நிழல் அடைய - நீலமணிகளின் ஒளி வந்து படிய, வேறு பங்கு அதில் - அதன் வேருெரு பகுதியில், பதுமராகத்தின் ஒளி பாய - பத்மராகம் என்ற மாணிக்கமணிகளின் ஒளி பரவ (இவ்விரு நிற வேறுபாடுகளால்), பொலிவன கமலம் - அப் பொய்கையில் விளங் கும் தாமரை மலர்கள், கங்குலும் பகலும் என - இரவும் பகலும் எனவும், வாளம் - அங்குள்ள சக்கரவாகப் புட்கள், மங்கைமார் - மகளிர்தம், துணைமுலை என - இருதனங்கள் போலவும், பொலிவன - உருவால் விளங்கின.

அஞ்சனமணி - நீலமணி, பதுமராகம்; இது மாணிக்க வகைகளுள் ஒன்று. அஞ்சன மணி இருளுக்கும், பதுமராக மணி பகலுக்கும் ஒப்பு. அப் பொய்கை நீரில் ஒரு புறம் நீலமணி நிழல் படர்ந் தமையால் அப் பக்கம் இருள்போலவும், மற்ருெரு புறம் பதுமராக மணி யின் செந்நிறம் பரவியதால் அப்பக்கம் பகல் போலவும் விளங்கின ஆதலின், கமலங்கள் ஒருபுறம் கூம்பியும், மற்ருெரு புறம் மலர்ந்தும் விளங்கின என்க. மங்கைமார் முலையெனும் உருவப் பொலிவுடன் அங்கு விளங்கிய சக்கரவாகப் புட்களும் மேற்கூறிய கமலங்களே போல மயங்கி, அப் பொய்கையில் இருள் உள்ளவிடத்துத் தன் துணையைப் பிரிந்தும், பகல் ஒளிபோன்ற இடத்துத் தன் துணையொடு கூடியும் விளங்கின எனக் கொள்ளற்பாலதாம். வாளங்கள் மகளிர் முலை களுக்கு; 'வாளங்க ளுறைவ கண்டு மங்கை தன் கொங்கை நோக்கும்' (ஆரணிய. 223). சக்கரவாகங்கள் பகலிற் கூடி மகிழ்ந்து இரவிற் பிரிந்து வருந்தும் இயல்பின; சுந்தர. 687. இச் செய்யுளின் கருத்து, மேற் கூறிய சுந்தர. 687-ம் செய்யுளிலும் விளக்கப் பெறுவது காணலாம்; 'செழுந்தரள நிலவு வீசச் சேதாம்பற் பகன்மலருஞ் செல்வநாடன்' (வி. பா. புட்பயாத்திரைச் 16.) என்றமையும் ஒப்பு நோக்குக. இச் செய்யுள் மயக்கவணியின் பாற்படும்.

வாளம் - சக்கரவாளம் என்பதன் முதற்குறை; சக்கரவாளம், சக்கரவாகம் என்ற வடசொல்லின் திரிபு. இது நேமிப்புள் எனவும் வழங்கும்.

பி - ம். 1. *எருணமாமணிநிழ; மணிநிறமடைய.*

2. *பங்குபெற்றநிற்.*

3. *பகலேயெனப், பகலாமெனப், பகலுமெனப்; பொலிவது கமலம், பொலிவது கரைய.*

4. *வார்நடமுலையென; பொலிவன், பொலிந்தது; வனசம்.* (20)

22. வலிந டத்திய வாளென வாளைகள் பாய
ஒலிந டத்திய திரைதொறு முகள்வன நீர்நாய்
கலிந டக்கழைக் கண்ணுள ரெனநடங் கவினப்
பொலிவு டைத்தெனத் தேரைகள் புகழ்வன போலும்.

(அப் பொய்கையில்), வலி நடத்திய வாள் என - வலிமையுடன் வீசிய வாட்களைப்போல, வாளைகள் பாய - வாளை மீன்கள் (நீரில்) பாய்ந்து ஓடவும், ஒலி நடத்திய திரைதொறும் - ஒலிகளையுண்டாக்கிய அலைகளில் எல்லாம், கலி நட கழை கண்ணுளர் என - மகிழ்ச்சியைத் தரும் நடனத்தைச் செய்யும் கழைக் கூத்தர்கள் (உருண்டாடுவது) போல, நீர்நாய் உகள்வன-நீர் நாய்கள் உகளும் தோற்றம், நடம் கவின-நடத்தின் அழகைச் செய்ய, (அவற்றைக் கண்டு), தேரைகள்-தவளைகள். 'பொலிவு உடைத்து என - உங்கள் ஆட்டம் சிறப்புடையது' என்று, புகழ்வன போலும் - புகழ்ந்து பாராட்டுவனபோலும், (விளங்குங் காட்சிகளை யுடையது) என முடிவு செய்க.

வலி நடத்திய வாள் - போர்வலி காட்டிப் பகைவர்மேல் வீசியவாள் என்னலும் ஆம். கலி நடம் - பாட்டொலியோடு கூடிய நடனமும் ஆம்; கலி - ஒலி; கலி - மகிழ்ச்சி, ஒலி, வலிமை எனவும் பிறவும் பொருள் படும். வாளைக்கு வாள் - உருவாலும் ஒளியாலும் உவமை; சீவக. 1180, 2583. 'வாளை பிறழுங் கயங் கடுப்ப' (பு. வெ. 147), நீர் நாய்கள் வாளை மீன்களைப்பற்றி யுண்ணும் இயல்பின; (குறுந். 364) என்பதால், இங்கும் அவ்வாளை மீன்களைப் பற்றவே நீர்நாய்கள் உருள்வன கொள்க. நீர் நாய்களுக்கு கழைக்கூத்தாடு மகளிர் உவமை; அங்குள்ள தேரைகளின் ஆரவார ஒலிகள், நடங்கண்டு (அவையினர்) மகிழ்ந்து பாராட்டும் ஒலிக்கு நிகர். தேரைகளின் ஒலி: பால. நாட்டுப். 13; கண்ணுள் - கூத்து; திவா. கலிநடம் - கழாய்க்கூத்து; சிலப். அரங்கேற்று. 54-55 அடியார்க். உரை; மதுரைக். 555. ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை.

பி - ம். 1. வாவிவாய் வயங்க, வாவிவாய் மீன்கணம், வாவிவாய் பாய, வாவிகள் மயங்கி, வாவிகள் மயங்க.

2. நில நடத்திய, கலிநடத்திய,

3. கலிநடத்திழைக், கலிநடத்துவிக், கலிநடத்தழைக், கலிநடக் குழைக்; கன்றுளர் நன்னடங், கன்றுள்ளராமெனக்; நெடுங் கவினப். பொலிவன போலும். (21)

## இராமபிரான் புலம்பல்

23. அன்ன தாகிய வகன்புனற் பொய்கையை யணுகிக்
கன்னி யன்னமுங் கமலமு முதலிய கண்டான்
தன்னி னீங்கிய தளிரியற் குருகினன் றளர்வான்
உன்னு நல்லுணர் வொடுங்கிடப் புலம்பிட லுற்ருன்.

அன்னது ஆகிய - அத்தகைய காட்சிகளோடு கூடிய, அகல் புனல் பொய்கையை - பரந்த நீரையுடைய அந்தப் பம்பைப் பொய்கையை, அணுகி - (இராமபிரான் தம்பியுடன்) அடைந்து, கன்னி அன்னமும் - அதில் உள்ள இளமையான அன்னங்களையும், கமலமும் முதலிய - தாமரை மலர்கள் முதலான பலவற்றையும், கண்டான் - (இராமபிரான்) பார்த்து, தன்னின் நீங்கிய - தன்னிடத்தினின்று பிரிந்து போன, தளிர் இயற்கு - இளந் தளிர்போன்ற சாயலையுடைய சீதாப்பிராட்டியின் பொருட்டு, உருகினன் - மனம் உருகினவனாகி, தளர்வான் - வருந்தி, உன்னும் நல் உணர்வு ஒடுங்கிட - ஆலோசனைக்குரிய தன் சிறந்த அறிவும் அடங்கிப்போக, புலம்பிடல் உற்ருன் - (பின்வருமாறு) புலம்பி வருந்துவானானான்.

கன்னியன்னம் - இளம் பெண்ணன்னங்களும் ஆம். அன்னங்கள் பிராட்டியின் நடையையும், கமலங்கள் அவள் முகத்தையும் நினைப் பூட்ட வருந்தினன் என்க. தளிரியல், உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ப் பிராட்டியைக் குறிப்பது. கண்டான், உருகினன், தளர்வான் என்னும் வினைமுற்றுக்கள் எச்சப்பொருளில் நின்று புலம்பிடலுற்ருன் என்னும் வினைமுற்றைத் தழுவி நின்றன.

பி - ம். 2. கமலமு முறைவன. 3. நீங்கிய வைதயலுக்; குருகியே தளர்வான் 4. நல்லுணர் வொழிந்திட. (22)

வேறு

24. வரியார் மணிக்கால் வராலினமே
மடவன் னங்கா ளெனை நீங்கித்
தரியா நடையா ளிலளாலெற்
றந்த வேதுந் தகவேயால்
எரியா நின்ற வாருயிருக்
கிரங்கி னுலீ திசையன்றோ
பிரியா திருந்தீர்க் கொருமாற்றம்
பேசிற் பூசல் பெரிதாமோ.

'வரி ஆர் மணி கால் வரால் இனமே - கோடுகள் நிறைந்த அழகிய செதிள்களாகிய கால்களையுடைய வரால் மீன்களே! மட அன்னங்காள்- இளமையான (அல்லது அழகிய) அன்னங்களே ! எனை நீங்கி தரியா - என்னை நீங்கி உயிர் வாழமாட்டாத, நடையாள் - இயல்புடைய சீதை, இலள் - இப்பொழுது என்னுடன் இல்லை ; என் தந்த ஏதும் - எனக்கு அவள் சொல்லிய செய்தி யெதையும், (எனக்குக் கூறினால்), தகவே - அது எனக்கு பொருந்துவதே ஆகும் ; எரியா நின்ற ஆர் உயிர்க்கு - அவள் பிரிவினால் என்னை எரிந்து வருந்துகின்ற என் அரிய உயிருக்கு, இரங்கினால் - நீவிர் இரக்கங்கொண்டு அருளினால், ஈது - இது, இசை அன்றோ - உங்களுக்குப் புகழ் ஆகுமல்லவோ ? பிரியாது இருந்தீர்க்கு- ஆண் பெண் இணைபிரியா திருக்கும் உங்களுக்கு, ஒரு மாற்றம் பேசில்- (இப்பொழுது நீங்கள் அவளைப்பற்றி) ஒரு வார்த்தை எனக்குச் சொன்னால், பூசல் பெரிது ஆமோ - (அதனால் உங்களுக்குப்) பொல்லாங்கு பெரிதும் ஏற்படுமோ ? ஆல், ஈரிடத்தும் அசைகள்.

இது முதல் பத்துச் செய்யுட்கள் பிராட்டியின் பிரிவுத் துயரால் இராமபிரான் அங்குள்ள இயற்கைப் பொருள்களை நோக்கிப் புலம்பினமை கூறும்.

வரால் முதலிய மீனினங்களுக்குக் கால்கள் என்று தனி உறுப்புக்கள் இல்லை ; ஆதலின் மணிக்கால் என்றது அதன் கால் போன்ற செதிள்களைக் குறிப்பது எனக் கொள்ளப்பெற்றது. பெரிதாமோ - அதனால் எனக்கு வருத்தம் அதிகமாகுமோ என்றும், அல்லது உங்களுக்குள்ளே பிணக்கம் பெரிதாய் உண்டாமோ என்றும் பொருள் கூறலாம். தரியா நின்றாள் பேசிற் பூசல் பெரிதாமோ, என்பதற்கு 'அவள் உங்களால் தாங்கப்பட்டு, உங்களிடமே மறைந்துள்ளாள் ; அதை எனக்குத் தெரியப்படுத்தினால் உங்களுக்குள் பிணக்கு உண்டாகி

விடுமோ ?' என்று இராமபிரான் கூறியதாகவும் பொருள் காணலாம். 'வரியார் மணிக்கால் வராலினமே - பிராட்டியின் கணைக்கால் போன்ற வராலினமே, தரியா நடையாள் - உங்களிடத்தும் இராமல் நடந்தாள்'; பழையவுரை. வரியார் மணிக்கால்: இதனை அன்னங்களுக்கும் கூட்டலாம். பேச முடியாதவை பேசுவனபோலக் கூறுவது திணை வழுவமைதியாகும். இவ்வாறே பின்வரும் பாடல்களிலும் கொள்க.

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின் வருமாறு மாறிக் காண்கிறது :—

வரிவா லுடைத்திண் பிடியினங்கள்
மடமா வன்னங் காணீங்கள்
சரியா நடையா டனையெற்குத்
தந்தாற் றரும மிலதாமோ
எரியா நின்ற வுயிரேனுக்
கிரங்கி லீரோ விவ்விடைநீர்
பிரியா திருந்தீ ரொருமாற்றம்
பேசிற் பூசல் பெரிதாமோ.

பா - ம். 1. *வாளமே, யெனை நீங்கள்.*
2. *தரியா நடையா ளிலளாலெற் றந்த தேதர்ந் தக வேயாய் றந்தயாதர் தகையேயோ.*
3. *எரியாநின்ற வுயிராருக்; நின்ற வுயிரேனுக்; லதிசையன்றே; விரங்கிலீரோ விவ்விடைநீர்.*
4. *பிரியா திருந்தீர்க் கொருமாற்றம்.* (23)

25. வண்ண நறுந்தா மரைமலரும்
வாசக் குவளை நாண்மலரும்
புண்ணி னெரியு மொருநெஞ்சம்
பொதியு மருந்திற் றரும்பொய்காய்
கண்ணு முகமுங் காட்டுவாய்
வடிவு மொருகாற் காட்டாயோ
ஒண்ணு மென்னி னஃதுதவா
துலோவீ ஞரு முயர்ந்தாரோ.

'வண்ண நறும் தாமரை மலரும் - அழகும் நன் மணமும் பொருந்திய தாமரை மலர்களையும், வாச நாள் குவளை மலரும் - வாசனையோடு கூடிய அன்று மலர்ந்த நீலோற்பல மலர்களையும், புண்ணின் எரியும்

ஒரு நெஞ்சம் - (சீதை பிரிவால்) புண்பட்டது போன்று எரியும் ஒருவ ஞகிய என் மனத்தில், பொதியும் மருந்தில் - வைத்துக் கட்டும் மருந் தைப்போல, தரும் - எனக்கு அளிக்கும், பொய்காய் - பொய்கையே! கண்ணும் முகமும் காட்டுவாய் - (உன்னிடமுள்ள இந்தத் தாமரை மலர் களாலும் குவளை மலர்களாலும் அச்சீதையின்) கண்களையும், முகத்தை யும், என் எதிரே எனக்குக் காட்டுகின்ருய்; வடிவும் ஒரு கால் காட் டாயோ - அவள் முழு வடிவத்தையும் ஒரு முறை எனக்குக் காட்டமாட் டாயோ? ஒண்ணும் என்னில் - இயலுமானல், அஃது உதவாது - அப் பொருளை உதவாமல், உலோவிஞரும் - உலோபத் தன்மை கொண்டு கொடாதவரும், உயர்ந்தாரோ-மேலோராவார்களோ (ஆகார் என்பதாம்).

தாமரை மலரும் குவளைமலரும் சொல்லி, பின் கண்ணும் முகமுமாக அவற்றை மாற்றிக் கூறியது எதிர்நிரனிறையணி எனப்படும். இச்செய் யுள் வேற்றுப் பொருள் வைப்பணியும் ஆகும். இனி, நான்காம் அடியில், 'உண்ணுமென்னில்' எனக்கொண்டு, உணவு அருந்துவானென்னில் அவனுக்குப் பசி தீர முழு உணவளிக்காது ஒரு சிறிது உதவி, உலோபத் தனம் செய்வோரும் உயர்ந்தாரோ எனப் பொருள் கொள்வாரும் உளர். உலோபிகள் நற்கதி யடையமாட்டார் என்பது இதனுல் விளங்கும் நீதியாகும்; 'உளப்பரும் பிணிப்பரு வுலோப மொன்றுமே, அளப்பருங் குணங்களை யழிக்கும்' (பால. தாடகை. 43) என்றதை ஒப்பு நோக்குக.

குவளை கண்காட்டுவதும்: தாமரை முகங்காட்டுவதும்: 18-ம் செய் யுளையும் அதன் உரையையும் ஒப்பு நோக்குக. மேலும் இங்கு, சீதையின் முகத்தைப்போல் விளங்கும் தாமரை மலர்களையும், அவள் கண்களைப் போல் விளங்கும் நீலோற்பல மலர்களையும், மற்றும் அவள் கடைக்கண் புரட்சியைப்போல் சஞ்சரிக்கும் மீன்களையும் கண்டு, அவ்ளுடைய முகம் முதலிய அவயவங்களை நினைந்து மனம் கலங்கினுன் என வான்மீகம் கூறுவது ஒப்பு நோக்கத்தக்க தாகும்.

பி-ம். 1. மரைமலர்காள் வாசக்குவளை நாண்மலர்காள்.

3. முகமுங் காட்டுகின்றீர்.........காட்டீரோ.

4. உண்ணுமொருகா; உலோபிஞரு முயர்ந்தாரா; உண்ணுமொரு வற் கஃதுதவா(து), உண்ணும் பொருளி னியல் காட்டி; ஒண்ணுமொரு காலத்துதவா. (24)

26. விரிந்த குவளை சேதாம்பல்
விரைமென் கமலங் கொடிவள்ளை
தரங்க நெருங்கு வராலாமை
யென்றிந் தகைய தமைநோக்கி
மருந்தி னனையா ளவயங்க
ளவைநிற் கண்டேன் வல்லரக்கன்
அருந்தி யகல்வான் சிந்தினவோ
வாவி யுரைத்தி யாமென்றே.

விரிந்த குவளை - மலர்ந்த கருங்குவளை மலர்கள், செம்மை ஆம்பல் - செவ்வல்லி மலர்கள், விரை மெல் கமலம் - மணம் நிறைந்த மென்மை யான தாமரை மலர், கொடி வள்ளை - வள்ளைக் கொடி, தரங்கம் நெருங்கு வரால் ஆமை - அலைகளிலே நெருங்கி உலாவும் வரால் மீன்கள், ஆமைகள், என்று இ தகைய தமை - என்று சொல் லப் பெறும் இவ்விதப் பொருள்களைப் பார்த்து, 'ஆவி - ஏ பொய்கையே! மருந்தின் அனையாள் அவயவங்கள் - தேவாமிருதம் போன்று சிறந்த சீதையின் உடல் உறுப்புக்களை, நின் கண்டேன் - உன்னிடம் நான் பார்க்கின்றேன் ; (அவை), வல் அரக்கன் - வலிய இராக்கதனாகிய இராவணன். அருந்தி அகல்வான் - அவளைத் தின்று செல்பவன், சிந்தினவோ - கீழே சிந்துமாறு விட்டுப்போனவைகளோ ? உரைத்தி - நீ சொல்வாயாக ! ஆம், அன்று, ஏ என்பன அசைகள்.

செம்மை ஆம்பல் என்பது பண்பின் விகாரங்கள் பல ஏற்று, சேதாம்பல் என்றுயிற்று. ஆவி - தடாகம் ; இது வாவி என்ற வட சொல்லின் திரிபு.

பொய்கையில் குவளை மலர்கள் சீதையின் கண்கள் போலும், சேதாம்பல் இதழ் போலும், தாமரை மலர் முகம்போலும், வள்ளை இலைகள் செவிகள்போலும், வரால்கள் கணைக்கால்கள்போலும், ஆமை கள் புறவடிகள்போலும் தோன்றின ஆதலின், அவை இராவணன் எடுத்துச் செல்லும்போது அவன் தின்ன அப்போது தவறிச் சிந்தின அங்கங்கள் அப்பொய்கையில் மிதப்பனவாகக் கொண்டு மயங்கி அப் பொய்கையை நோக்கிக் கேட்டான் இராமபிரான் என்பதாம். இனி, தரங்கம், வரால், கொடி வள்ளை என்பனவற்றுள், தரங்கம் வயிற்றின் மடிப்புக்களாகவும், கொடி இடையாகவும் பிரித்தும் பொருள் கொள்ளலாம். மேலும், 'அகல் வான் சிந்தினவோ' எனக்கொண்டு, வான்வழியே சீதையை அரக்கன் எடுத்துச் சென்றபோது, அங்குச் சிந்தி

விட்டுப்போன அவள் அவயவங்கள் இப்பொய்கையில் வீழ்ந்துள ளனவோ எனவும் பொருள்கொள்ள இடமாகும். இச்செய்யுளில் மயக்க வணியும், தற்குறிப்பேற்ற வணியும் விரவியுள்ளமை காண்க. பொய்கை மலர்கள் பெண்ணின் அங்கங்களுக்கு ; 'பைங்குவளைக் கார் மலரால்' (திருவெம். 13.)

பி - ம். 1. கொடி வெள்ளைத். 2. தகைய தளைநோக்கி; தகைநோக்கி; தரக்கஞ் சைவலம் வரால்; யென்னித் தனைய தகை நோக்கி. 3. ணைய வவயவங்க; வாளரக்கன். 4. வாவியுரைக்க லாமன்றே, வாவியெனக்கி தரையாயோ, வாவி யுரைத்திராமன்றே. (25)

27. ஓடா நின்ற களிமயிலே
சாயற் கொதுங்கி யுள்ளழிந்து
கூடா தாரிற் றெரிகின்ற
நீயு மாகங் குளிர்ந்தாயோ
தேடா நின்ற வென்னுயிரைத்
தெரியக் கண்டாய் சிந்தையுவந்
தாடா நின்று யாயிரங்க
ணுடையாய்க் கொளிக்கு மாறுண்டோ.

(இராமபிரான் அங்குத் திரியும் ஒரு மயிலைப் பார்த்து), 'ஓடா நின்ற களி மயிலே - ஓடித் திரிகின்ற மகிழ்ச்சிகொண்ட மயிலே, சாயற்கு ஒதுங்கி, சீதையின் மேனியின் அழகுக்குப் பின்னிட்டு, உள் அழிந்து - அதனால் மனமழிந்து, கூடாதாரில் - பகைவரைப் போல, தெரிகின்ற - காணப்படுகின்ற, நீயும் - நீயும், ஆகம் குளிர்ந்தாயோ - (அவள் அகன்று போனதால்), உன் மனம் குளிர்ந்து களிப்படைந் தாயோ? தேடா நின்ற - யான் தேடிக் கொண்டிருக்கின்ற, என் உயிரை - என் உயிர்போன்ற அரிய சீதையை, தெரிய கண்டாய் - நீ நன்றாகக் கண்டுள்ளாய் ; சிந்தை உவந்து ஆடா நின்றாய் - அவள் அபகரிக்கப்பட்ட களிப்பால் மகிழ்ந்து ஆடுகின்றாய் ; ஆயிரம் கண் உடையாய்க்கு - ஆயிரங் கண்கள் அடையப் பெற்ற உனக்கு, ஒளிக்கும் ஆறு உண்டோ - மறைக்கும் வழி உள்ளதோ ? (இராது என்பதாம்).

ஆயிரங்கண் : மயிலின் தோகையில் கண்கள் போன்ற புள்ளிகள். சீதை மயிலின் சாயலுடையவள் ; பால. கோலங்காண். 25 ; அயோத் சித்திரகூடப். 12. இச்செய்யுளுக்கு ஒப்பு :—

மையில் வாணெடுங் கண்வள ராதுன
மெய்யெ லாமுடை யாய்மெய்ம்மை காணடிநீ
ஐயன் சென்றுழிக் கூறுகென் ருய்மயில்
கையி ஞற்றெழு தாள்கயற் கண்ணிஞள்' (சீவக. 1366.)

பி - ம். 1. ஊடாநின்ற.
2. மாகங்குழைந்தாயோ.
3. தோடாநின்ற வின்னுயிரைத்; தெரியக்காட்டாய்.
4. கண்ணுடையார்க். (26)

28. அடையீ ரெனினு மொருமாற்ற
மறிந்த துரையீ ரன்னத்தின்
பெடையீ ரொன்றும் பேசீரோ
பிழையா தேற்கும் பிழைத்தீரோ
நடைநீ ரழியச் செய்தாரார்
நடுவி லாதார் நனியவரோ
டுடையீர் பகைதா னுமைநோக்கி
யுவக்கின் றேனை முனிவீரோ.

(இராமபிரான்) 'அன்னத்தின் பெடையீர் - அன்னப் பேடுகளே! அடையீர் எனினும் - நீங்கள் என்பால் வரமாட்டீர் என்ருலும், அறிந்தது ஒரு மாற்றம் - நீங்கள் சீதையைப் பற்றி அறிந்துள்ள ஒரு வார்த்தை, உரையீர் - எனக்குக் கூறுவீராக ! ஒன்றும் பேசீரோ - ஒரு வார்த்தையும் பேச மாட்டீர்களோ ? பிழையாதேற்கும் - உங்கள்பால் ஒரு பிழையும் செய்யாத எனக்கும், பிழைத்தீரோ - தவறு இழைத்தீர் போலும் ! நடு இலாதார் - நடு நிலைமை என்பது இல்லாதவராய், நடை நீர் அழியச் செய்தார் யார் - யாரே உங்கள் நடையை அழியுமாறு செய்தார் ? அவரோடு பகைதான் நனி உடையீர்-அவரோடு நீங்கள் பகைமை மிகக் கொண்டுள்ளீர் ; (அது முறையேதான்) ; உமை நோக்கி உவக்கின்றேனை - உம்மைப்பார்த்து மகிழ்ச்சிகொள்ளும் என்னை, முனிவீரோ - வெறுப்பீர்களோ ? (இது தகாது என்பதாம்).

நடுவிலாதார் என்பது, நடுநிலையற்றவர் என்றும், இடை என்னும் உறுப்பு இல்லாத சீதை என்றும் பொருள்பட இரட்டுற மொழிதலாகக் கொள்ள இடமாதல் காண்க. சீதை இடையில்லாதவள் ; மருங்கிலா நங்கை : (பால. மிதிலைக்காட்சி, 38.) ; கார்முகப் - 63 ; அயோத்.

கங்கைப்: 2; ஆரணிய. 359. இனி, நடை நீரழியச் செய்தார் நடு விலாதார், என்பதற்கு சீதைக்கு இடை நுட்பமாதலின், அவள் நடக்கும் போது இயல்பாய் அவள் இடை அசைவதால் அவள் உங்கள் நடையைப் பழித்ததாக ஆகாது என்று சீதை திறத்துப் பகைமை பாராட்டாதிருக்க அன்னங்களுக்கு ஆறுதல் கூறி அவற்றை அழைத்தான் என்பதுமாம். சீதை உங்கள் நடையை அழித்ததாகிய பிழை செய்துள்ளாள் என்று கொண்டாலும், பிழை செய்யாத என்மீது கோபம் ஏன் என்பது கருத்து.

பி - ம். 1. அடையீரேனு; மறிர்துமுரையீ. 2. பெடையீரென்றும்.
3. நடைநீ ரொழியச்; செய்தவளோ; நடுவிலாதாள் நனியவ்வளோ, நடுவிலாதா ரவரோடும்; தனியவரோ.
4. பகை நானுமை நோக்கி; முனிந்திரோ, முனிதிரோ, முனிதிரோ. (27)

29\. பொன்பால் பொருவும் விரையல்லி
புல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பாற் றழுவுங் குழல்வண்டு
தமிழ்ப்பாட் டிசைக்குந் தாமரையே
என்பா லில்லை யப்பாலோ
விருப்பா ரல்லர் விருப்புடைய
உன்பா லில்லை யென்றக்கா
லொளிப்பா ரோடு முறவுண்டோ.

'பொன் பால் பொருவும் - பொன்னின் தன்மையை ஒத்து விளங்கும், விரை அல்லி புல்லி பொலிந்த - வாசனையோடு கூடிய அகவிதழ்களைத் தன்னுட்கொண்டு விளங்கிய, பொலன் தாது - பொன்னிறமான மகரந்தப் பொடிகளை, தன் பால் தழுவும் - தன் மீது தழுவப் பெற்றுள்ள, குழல் வண்டு - குழல்போல் ஒலிக்கின்ற வண்டுகள், தமிழ் பாட்டு இசைக்கும் - இனிய பாட்டுக்களைப் பாடப்பெற்ற, தாமரையே-தாமரைப் பூவே! என்பால் இல்லை - சீதையோ இப்பொழுது என்னிடம் இல்லை; அப்பாலோ இருப்பார் அல்லர் - வேறிடத்திலோ இருக்கக் கூடியவள் அல்லள்; விருப்பு உடைய - அவள் விரும்பி உறைதற்குரிய இடமாகிய, உன்பால் இல்லை என்றக்கால் - உன்னிடத்திலும் அவள் இல்லை என்று சொல்வாயானால், ஒளிப்பாரோடும் - ஒளித்து வைத்துக்கொண்டு பேசுவோரோடும், உறவு உண்டோ - உறவு அல்லது நட்புக்கொள்ளக் கூடியதாகுமோ? (ஆகாது என்பதாம்).

பொன்பால்: பால் - தன்மை (பிங்). அல்லி - அக விதழ்; (பிங்). தமிழ் - இனிமை; 'தமிழ் தழிய சாயலவர்'; (சீவக. 2026 உரை); கூர்ம. வானவர்: 12. 'இனிமையும் நீர்மையும் தமிழென லாகும்' (பிங்). கற்பிற் சிறந்தவளாதலால், தன் கணவனை என்னை விட்டுப் பிரிந்து வேறு இடத்தில் இருக்கமாட்டாள் ஆதலின், சீதை அப்பாலோ இருப்பாரல்லர் என உறுதி கூறினன் இராமபிரான்; 'அவள் உத்தமப் பெண், புகுந்த இடம் அன்றேல் தான் பிறந்த இடத்தே தான் இருக்க வேண்டியவள். அவள் பிறந்த இடம் தாமரையாகிய உன்னிடமே ஆதலால், உன்னிடம்தான் அவள் வந்திருக்க வேண்டும். நீ தான் அவளை யான் காணமுடியாதபடி ஒளித்து வைத்துக்கொண் டிருக்கின்றாய்; ஆதலின் உன்னோடு என்ன உறவின் முறை எனக்கு வேண்டியிருக்கிறது! இதனால் நீ எனக்கு உறவன்று பகையே ஆகிறாய்' என்று கூறினன் இராமபிரான் என்க.

சீதாதேவி தாமரையிற் பிறந்த திருமகளே. ஆதலால் இவ்வாறு கூறினன் இராமபிரான் என்பதாம்; திருமகளுக்கு, பத்மோத்பவா என்றும், பத்மஜா என்றும் வடமொழியில் பெயர்கள் உள்ளமை நோக்குக.

பி - ம். 1. *பொன்பால் பரவும்,* 2. *றமுவுங் களியவண்டு,*
3. *வில்லை யப்பாலே; யிருப்பா எல்லள்; எல்லன் விருப்பான,*
4. *யென்றபோ தொளிப்பா யென்றனக்கே, யொளித்த போதென் னுற வுண்டோ.* (28)

30. ஒருவா சகத்தை வாய்திறந்திங்
குதவாய் பொய்கை யுள்ளொடுங்கும்
திருவா யனைய சேதாம்பற்
கயலே கிடந்த செங்கிடையே
வெருவா வெதிர்நின் றமுதுயிர்க்கும்
வீழிச் செவ்விக் கொழுங்கனிவாய்
தருவா யவ்வா யின்னமிழ்துந்
தண்ணென் மொழியுந் தாராயோ.

பொய்கையுள் ஒடுங்கும் - பொய்கையில் உள்ளொடுங்கிக் குவிந்து கிடக்கின்ற, திருவாய் அனைய செம்மை ஆம்பற்கு - சீதையின் அழகிய வாய்போன்ற செவ்வல்லி மலருக்கு, அயலே கிடந்த-பக்கத்தில் மிதந்துகொண்டு கிடக்கின்ற, செம் கிடையே-செந்நிறமான நெட்டியே!

வெருவா - பயப்படாமல், எதிர் நின்று - என் எதிரே தோன்றி நின்று, அமுது உயிர்க்கும் - அமுதத்தைச் சுரக்கும், வீழி கொழுங்கனி - வீழி யாகிய கொழுவிய பழத்தின், செவ்வி வாய் தருவாய் - அழகு அமைந்த சீதையின் வாயை எனக்குக் காட்டித்தருகின்றாய்; அ வாயின் - அந்தச் சீதை தன் வாயின், இன் அமிழ்தும் - இனிய அமிர்தம்போன்ற பானத்தையும், தண் என் மொழியும் - குளிர்ச்சியான சொற்களையும், தாராயோ - என்னருகில் வந்து எனக்குத் தரமாட்டாயோ? ஒரு வாசகத்தை - ஒரு பேச்சை, வாய் திறந்து இங்கு உதவாய் - இப் பொழுது என்னிடம் நீ வாய் திறந்து பேசி எனககு அருள்வாயாக!

இராமபிரான் அப்பொய்கையை யடைந்தபொழுது—பகற்காலம் ஆதலால், சேதாம்பல் குவிந்தது. அதனைக் கண்டு, அது சீதையின் வாய் இதழைக் காட்டாமல் ஒளித்துக்கொண்டதென்றும், அவ்வா றின்றி ஒருபொழுதும் கூம்பும் நிலையடையாத செங்கிடை வெளியே தோன்றும்படி மிதந்து கிடந்தமையால் அது சேதாம்பல்போல அஞ்சாது வெளிவந்து தன்பால் அன்பு கூர்ந்து பிராட்டியின் வாய் இதழைத் தனக்குக் காட்டிய தென்றும் கருதி, அதனிடம், 'நீ சீதையின் இதழ் மட்டுங் காட்டினால் போதாது; அவள் வாயிற் பிறக்கும் இன்னமிர்தத் தையும், இன்மொழியையும் காட்டித் தந்தருள்வாய்' என்று குறையிரந்து கூறினான் இராமபிரான் என்க. வீழிக்கனி, மகளிர் இத ழுக்கு உவமை; வீழி - ஒரு வகை மருந்துச்செடி; இது விழுதி எனவும் வழங்கும்; திருவீழிமிழலை என்றொரு தலம் தஞ்சை மாவட்டத்தில் உள்ளது; அது வீழிச்செடிகள் அடர்ந்த இடம் ஆனமைபற்றி வந்த பெயராகும். வீழிக்கனி மகளிர் வாய்க்கு; 'வீழியின் கனிவாயொரு மெல்லியல்' (பால. நீர்விளையாட்டு: 28). சேதாம்பல்: 26. செங்கிடை- செந்நிறமான நெட்டி; இது மகளிர் இதழுக்கு உவமை; பால. மிதிலைக்காட்சி: 14. இனி, தருவாய் நீ, கனிவாய் மொழியுந் தாராயோ என்று இரங்கிக் கூறியதாகவும் பொருள் கொள்ளலாம். தருவாய்......தாராயோ; முரண்தொடை.

பி - ம். 1. பொய்கை குவிந்தொடுக்கும்; குரையாய் பொய்கை, டுரையா தொடுக்கும் பூம்பொய்கை.
2. சேதாம்பற் றிடையே; 3. விளங்கு செவ்விக், விழுங்குஞ் செவ்விக்.
4. தருவாயதனின், தருவாயன்னள் முகிழ்நகையும், தருவாயானால், தருவாயதனால்.

31. அலக்க ணுற்றேற் காற்றுவதற்
கடைவுண் டன்ரே கொடிவள்ளாய்
மலர்க்கொம் பனைய மடச்சீதை
காதே மற்ருென் றல்லையால்
பொலக்குண் டலமுங் கொடுங்குழையும்
புனைதாழ் முத்தின் பொற்ருேடும்
விலக்கி வந்தாய் காட்டாயோ
வின்னும் பூசல் விரும்புதியோ.

(இராமபிரான் அப்பொய்கையி லிருந்த வள்ளைக் கொடியை நோக்கி), ' கொடி வள்ளாய் - ஏ வள்ளைக் கொடியே! மலர் கொம்பு அனைய - மலர்களோடு விளங்கும் ஒரு கொம்பே போன்று, மடம் சீதை - இளமைப் பருவத்தளான (அல்லது அழகமைந்த) சீதையின், காதே - (உன் தண்டால்) ' காதேதான், மற்று ஒன்று அல்லை ஆல் - நீ வேருென்று ஆகாய்; (ஆதலால்), பொலன் குண்டலமும், - அவள் அணிந்துள்ள பொற் குண்டலங்களையும், கொடும் குழையும் - வளைந்த குழை என்னுங் காதணிகளையும், புனை தாழ் முத்தின் பொன் தோடும் - அணிந்துள்ள தாழ்ந்து தொங்கும் முத்துக்கள் பதிந்த பொன் தோடுகளையும், விலக்கி வந்தாய் - அணியாமல் நீக்கி வந்துள்ளாய்; காட்டாயோ - நீ அந்தச் சீதையை எனக்குக் காட்ட மாட்டாயோ? அலக்கண் உற்றேற்கு - துன்பமடைந்துள்ள எனக்கு, ஆற்றுவதற்கு அடைவு உண்டு அன்ரே - (அவ்வாறு சீதையை நீ காட்டினுல்) யான் என் 'துயரைத் தணித்துக் கொள்வதற்கு அது தகுதியாக ஏற்படும் அன்ரே? (அவ்வாறின்றி), இன்னும் பூசல் விரும்புதியோ - இனனமும் நீ என்பால் பகை கொள்ளவே விரும்புகின்ருயோ? என்ருன்.

வள்ளைக்கொடியின் தண்டுகளை நோக்கிய இராமபிரான, அவை சீதையின் காதுகளே என்று துணிந்தான் என்க; பெருங். 2 : 15 : 88-9 பூசலை: விரும்புகிருயோ! என்றதால். அது ஏதுத்தற்குறிப்பேற்ற அணி ஆகும். அலக்கண்-துன்பம்; அலம் கண் எனப் பிரித்துப் பொருத்து வர்; அது துன்பத்திற்கு இடம் என்னும் பொருளது. அடைவு - அடைக்கலமும் ஆம். சீதைக்கு மலர்க்கொம்பு; ஆரணிய: 39, 74, 807. சீதை; ஜனகராஜன் வேள்விக்காக இடம் வகுத்த நிலத்தை உழுதபோது அப்படைச்சாலினின்று தோன்றினவளாதலின, சீதை எனப் பெயரிடப் பெற்ருள்; சீதா - உழு படைச்சால். இதனுல் இவள் மானிடப் பிறவியில் தோன்ருது அயோநிஜையாகப் புவியி

னின்றும் தோன்றிய திருமகளாம் என்பதும் பெறப்படும்; பால. கார்முகப்; 17; ஆரணிய: 631. குண்டலம். குழை. தோடு. இவை மகளிர் மூவகைக் காதணிகள். இதுவும் அடுத்த செய்யுளும் சில சுவடிகளில் இடம் மாறியுள்ளன.

பி - ம். 1. கடை வுண்டென்றோ, கடை யொன்றுண்டோ.
2. மலர்க் கொம்பன்ன; பனிய வளப் புடையாள் காரின் வண்ணங் காட்டினையால்.
3. நெடுங் குழையும்; புனை கொள் முத்தின், புனைகோள் முத்தின்; பொலப் பொற்கலனும்.
4. காட்டாதே பின்னும்; பூசல் விளம்புதியோ. (30)

32. பஞ்சு பூத்த விரற்பதுமம்
பவழம் பூத்த வடியாளென்
நெஞ்சு பூத்த தாமரையி
னிலய முவந்தா ணிறம்பூத்த
மஞ்சு பூத்த மழையனைய
குழலாள் கண்போன் மணிக்குவளாய்
நஞ்சு பூத்த தாமென்ன
நகுவா யென்னை நலிவாயோ.

(இராமபிரான் குவளை மலரை நோக்கி), ' பஞ்சு பூத்த - செம்பஞ்சுக் குழம்பு விளங்கிய, விரல் - விரல்களையும், பதுமம் பவழம் பூத்த அடியாள் - தாமரை மலர்களில் பவழங்கள் பொருந்தின போன்று விளங்கும் பாதங்களையு முடையவளும், என் நெஞ்சு பூத்த தாமரையின் - என் மனமாகிய மலர்ந்த தாமரைப்பூவில், நிலயம் உவந்தாள் - இருப்பிடமாகக் கொண்டு மகிழ்ந்து வாழ்பவளும், நிறம் பூத்த - கருமையான தன் நிறத்தாற் சிறந்து விளங்கும், மஞ்சு பூத்த - அழகு விளங்கிய, மழை அனைய - மேகத்தைப் போன்ற, குழலாள் - கூந்தலை யுடையவளுமான சீதையின், கண்போல் மணி குவளாய் - கண்களைப் போல் ஒளிரும் அழகிய (அல்லது நீல மணி போன்ற) குவளைம்லரே! நஞ்சு பூத்தது என்ன - நீ விடமே படர்ந்து விளங்கியது போல, நகுவாய் - என்னைப் பார்த்து இகழ்ந்து சிரிக்கின்றாய்; என்னை நலிவாயோ - (இவ்வாறு) என்னை நீ வருத்துவாயோ? (இது முறையோ? தகாது என்றபடி.) ஆம்: அசை.

என் நெஞ்சுபூத்த........நிலயம்பூத்தாள் - என் இதயத் தாமரையில் வாழ்பவளான சீதை. குவளைக்கு நஞ்சு: அது சீதையின் கண்ணைப்போலக் கருநிறத்தோடு விளங்கி நஞ்சு போல வருத்தத்தைத் தருவதால்; 'நஞ்சினும் கொடிய நாட்டம்' என்றமை நோக்குக; (பால. பூக்கொய்: 7). சீதை கூந்தலுக்கு மழை; 'மழையேந்திய குழலாள்' (அயோத். கங்கைப்: 6). இச் செய்யுள் உயர்வு நவிற்சியோடு தற்குறிப்பேற்றவணியுமாம். ஒரு சுவடியில் இச்செய்யுள் இல்லை.

பி - ம். 1. *பவழம் பூத்த துவர் வாயாள், பவழம் பூத்த துவர்வாலென்; பூத்த வடியாரென்; படியாளென், வடிவா ரென்.*
2. *நிலய முவந்தா ணிறம், நிலய முகந்தார், நிலய முவந்தார், நிலய மிகந்தார்.* 3. *மஞ்சு பூத்த மலர் பூத்த.*
4. *தாமன்ன நகையா ளென்னை.* (31)

வேறு

இராமபிரான் வருந்திய நிலை

33. என்ற யாவுயிர்க் கின்றவ னேடவிழ்
கொன்றை யாவிப் புறத்திவை கூறியான்
பொன்ற யாதும் புகல்கிலை போலுமால்
வன்ற யாவிலி யென்ன வருந்தினன்.

என்று - மேற்கூறியவாறு பம்பைப் பொய்கையில் உள்ள பலவற்றை நோக்கி வருந்திக் கூறி, அயா உயிர்க்கின்றவன் - (பிராட்டியைப் பிரிந்த சோர்வினால் மனம் வருந்திப்) பெருமூச்சு விடும் இராமபிரான், 'ஆவி புறத்து - அப் பொய்கையின் புறத்தேயுள்ள, ஏடு அவிழ் கொன்றை - இதழ்கள் மலர்ந்து விளங்கிய கொன்றை மரமே! இவை யான் கூறி - யான் இவ்வாறு சீதையின் பிரிவால் வருந்திச் சொல்லி, பொன்ற - இறந்து போவேனாய் இருக்க, யாதும் புகல்கிலை போலும் ஆல் - நீ யாதும் எனக்கு ஆறுதல் மொழி கூறாது இருக்கின்றாய் ஆதலின், வன் தயாவிலி என்ன வருந்தினன் - நீ தயையற்ற கொடியவனே ஆவாய்' என்று அதனை நிந்தித்து வருந்தினன்.

இச் செய்யுள், அப்பொய்கையருகே யிருந்த கொன்றை மரத்தை நோக்கிக் கூறியது; பொய்கையை நோக்கிக் கூறியதாகப் பொருள் கொண்டாரும் உளர். பிரிந்தோர்கள் கொன்றையை நோக்கிக் கூறுதல் நூன்மரபு; 'கொன்றைக் கொடியாய் கொணர்கின் றிலையே, என்றைக் குறவாக இருந்தனையே' (489) எனப்பின்னும் கொன்றையை

நோக்கி இராமபிரான் நிந்திப்பதாக உள்ளமை காண்க. கொன்றை கார்காலத்தில் மலரும்; அக் காலம் பிரிந்த தலைவனுக்குப் பெரிதும் துயரத்தை உண்டாக்கும். அவ்வாறு தலைவன் வருந்தாநிற்க, கொன்றை தன் பொன்னிற மலர்களால் நிறைந்து அவன் வருத் தத்தை யுணராது, அழகுற நிற்பது கண்டு அதனைத் தலைவன் சினந்து கூறுவதாகத் தமிழ்நூல்களிற் பயிலப்பெறுவன காணலாம்.

அயா வுயிர்த்தல் - நெட்டுயிர்த்தல். கொன்றை; இங்கு அண்மை விளி; இயல்பாய் நின்றது. தயாவிலி, தயையிலி எனவரற் பாலது திரியாமல், தயாவிலி என இயல்பாய் நின்றது. இவ்வாறு வருதல்: நன். சூ. 239 புறனடைச் சூத்திரத்தால் அறிக. ஆவிப் புறத்து இவை என்பதை, கூறி என்பதனோடு இயைத்துங் கொள்ள லாம். இச்செய்யுள் முதல் இப்படலம் முடிய உள்ள பாடல்கள் கவிக் கூற்று என்க.

பி - ம். 2. கொன்றை யாவிப்புறத்திலுக்; புறத்திது.
3. பொன்றயாதும் புரிகில போதுமால்; போன்ற வீது புரி குதி போ லெறு.
4. வன்றயா வுற வெண்ணி; யென்று வருந்தினன். (32)

34. வார ளித்திள மாப்பிடி வாயிடைக்
கார ளிக்கலு ழ்க்கருங் கைம்மலை
நீர ளிப்பது நோக்கின னின்றனன்
பேர ளிக்குப் பிறந்தவில் லாயினன்.

பேர் அளிக்கு பிறந்த இல் ஆயினன் - பெரிய கருணைக்குப் பிறப் பிடமாக உள்ள இராமபிரான், வார் அளித்து - நீண்ட தன் அன்புக் குரியதான, இள மா பிடி வாய் இடை - இளமைப் பருவத்துத் தன் பிடியின் வாயினிடத்து, கார் அளி - கரிய வண்டுகள், கலுழ - தடு மாறியோட, கரும் கை மலை - பெரிய ஆண் யானை, நீர் அளிப்பது நோக்கினன் நின்றனன் - தன் துதிக்கையால் மொண்டு (அப்பிடியின் வாயில்) நீரை அன்போடு அளிக்கும் காட்சியைப் பார்த்தவனாய் நின்றான்.

இராமபிரான் அன்பிற்கு ஓர் பிறப்பிடமானவன்; 'கருணையின் நிலைய மன்னன்' (உயுத்த. அங்கதன் தூது: 2). கருணாகரன் என்ற பெயர் இராமபிரானுக்கு உண்மையும் இங்கு நோக்கற்பாலதாம். மதத்தையுண்ட அந்த வண்டுகள் தடுமாறியது, அவ் யானை தன் பிடிக்கு

நீரளித்த நிகழ்ச்சியால் நிலை தளர்ந்து வெருண்டு என்க. இச் செய்யு ளுக்கு ஒப்பு :

துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே,

(கலி : பாலை : 11 : 8-9)

புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்' (நள. 384).

இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. வாரளித் தழை, வாரளித் நிழை.
4. போரளிக்கும் புரந்தவில் லாயினுன். (33)

35. ஆண்டவ் வள்ளலை யன்பெனு மாரணி
பூண்ட தம்பி பொழுது கழிந்ததால்
ஈண்டி ரும்புன ரேய்ந்துன் னிசையென
நீண்ட வன்கழ ருழ்நெடி யோயென்ருன்.

ஆண்டு - அப்பொழுது, அன்பு எனும் ஆர் அணி பூண்ட - அன்பு என்னும் அரிய ஆபரணம் தரித்த, தம்பி - இளையபெருமானுன இலக்குவன், அ வள்ளலை - அந்த இராமபிரானை (நோக்கி), 'பொழுது கழிந்தது ஆல் - பகற்பொழுது கடந்து ஸந்தியாகாலம் வந்துள்ளது ஆதலின், நெடியோய் - நீண்ட புகழுடைய பெருமானே! ஈண்டு இரும்புனல் தோய்ந்து - இங்குள்ள இந்தப் பெரிய பொய்கையில் நீராடி, உன் இசை என நீண்டவன் - உன் புகழ்போல் எங்கும் வியாபித்தவனுன ஸ்ரீ நாராயணனின், கழல் தாழ் என்ருன் - திருவடிகளை வணங்கி வந்தனை புரிவாயாக!' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டான்.

இனி ஆண்ட வள்ளலை எனக்கொண்டு, தன்னை அன்புடன் ஏற்றுக்கொண்டு தன்னுடன் வனம் அழைத்துவந்து, அவனுக்குப் பணிவிடை புரிய அருள்புரிந்த இராமபிரானை என்னலும் ஒன்றும்: இராமபிரானை ஆண்டான் என்றும், தன்னை அவன் அடிமை யென்றும் தாஸ உணர்ச்சியில் வழிபாடு புரிபவன் இளைய பெருமா ளுதலின், இராமபிரான் ஆண்ட வள்ளல் எனப்பட்டனன். திரிவிக்கிரம ளுக நீண்ட திருமாலுக்கு இராமபிரான் கீர்த்தியை உவமையாக்கியதால், உபமேயத்தினும் உபமானப்பொருள் சிறப்புடையதாதலின், இராம பிரானுடைய பரத்துவம் இங்கு இளையபெருமான் வாக்கால் உறுதிப் படுத்தப் பெற்றது என்பாரும் உளர். இராமபிரான் மும்மூர்த்திகளின்

மேலான பரம்பொருளே என்பது இந்நூலிற் பரக்கக் காணலாம். அப் பரம்பொருளாகிய இராமபிரான் திருமாலை வணங்கியது, தான் எடுத்த மானிடத் தோற்றத்திற்கு ஏற்றபடி, தன்னைத் தான் வணங்கியதேயாகும். இராமபிரான் திருமாலை வணங்கியது ; 38; அயோத். மந்தரை சூழ்ச்சி 22, 23. 'ஒரு மணித்தடத்திற், சந்தி நோக்கின னிருந்தனன்'' (ஆரணிய. 309.) என்றும், 'நின்றந்த நதியகத்து நிறை தவத்தின் குறை முடித்து வன்றிண்கைச் சிலைநெடுந்தோண் மரகதத்தின் மலைவந்தான்' (ஆரணிய. 332.) என்றும் கூறப்பெற்றமையால், இராமபிரானின் ஸந்தியா நியமநெறி அறியப்பெறுவது காண்க. 'நீண்டவன் கடன்செய் நெடியோயென்முன்' என்று ஒரு சுவடியிற் காணப்பெறும் பாடத்தை யும், அதனில், நீண்டவன் என்பது சூரியனைக் குறிப்பதாகவும் கொண்டு மாலை ஸந்தியாவந்தனம் செய இலக்குவன் இராமபிரானைத் தூண்டினுன் என்றும் பொருள் கொள்வர்.

பி - ம். 1. ஆண்ட வள்ளலை, ஆண்ட வண்ணலை; யன் பெறுமார் பணி, யன் பெறும் பேரணி ; ஆண்ட வண்ணலுக் கன்புடைத் தம்பி தான். 2. பூண்ட தன்பிற் பொழுது கழிப்பதென்.
3. தோய்ந்தழியேகிரி தோய்ந்தழிச் செய்கென ; செய்யென, யேகென.
4. கழலாய் நெடியோய் ; நெடியாய். (34)

இராமபிரான் பம்பையில் நீராடியது

36. அரசு மவ்வழி நின்றரி தேகியத்
திரைசெய் தீர்த்தமுஞ் செய்தவ் முண்மையால்
வரைசெய் மாமத வாரண நாணுற
விரைசெய் பூம்புன லாடலை மேயினன்.

அரசும் - இராமபிரானும், அ வழி நின்று - அவ்விடத்தினின்று, அரிது ஏகி - பிரயாசையுடன் சென்று, அ திரை செய் தீர்த்தமும் - அலை மோதும் அந்தப் பம்பைப் பொய்கை நீரும், செய்தவம் உண்மையால் - முன்னே செய்துள்ள தவப் பயன் தன்னிடம் அமையப் பெற்றிருந்ததால், வரை செய் மா மத வாரணம் - மலை போன்றதும் பெரும் மதப் பெருக்கையுடையதுமான யானை, நாண் உற - தன்னைக் கண்டு வெட்க முறும்படி, விரை செய் பூம் புனல் ஆடலை - மணம் கமழும் பூக்கள் நிறைந்த அப் பொய்கை நீரில் ஆடுதலை, மேயினன் - மேற்கொண்டான் ; (அதாவது நீராடினுன் என்றபடி).

அரசு: அரசிற்குரியவன் என்பதாம். அதுகாறும் பிராட்டியின் பிரிவை நினைந்து அங்கு வருந்தித் தளர்ந்த நிலையில் இருந்தவனாதலின், 'அரிதின் ஏகி' என்னக் கூறப்பெற்றது. தீர்த்தம் செய்தவம் செய்தது: ஒப்பு. அயோத். கங்கைப்: 18, 25. இனி, தீர்த்தனான இராமபிரான் அதில் ஆடியதால் அத் தீர்த்தமும் சிறந்த தீர்த்தமாயிற்று என்னலும் ஒன்றும். இங்கு இராமபிரான் நீராடியதற்கு ஒரு மதயானை நீரில் ஆடியது ஒப்பு: வரைசெய் மாமத வாரணம்; இங்கு, செய் என்பது ஒப்புப்பொருளில் வந்த சொல்லுருபு: 'வேல் நிரைசெய் கண்ணி' (சீவக. 2490.) என்றமைபோல. தீர்த்தம் - பரிசுத்தம்; அது மேலும் தூய்மை அடைந்தது. உம்மை உயர்வு சிறப்பு. பூம்புனல் - மென்மை யான நீர் என்னலும் ஒன்றும்; பூந்துகில், பூம்பட்டு என்பன போல.

பி - ம். 1. *நின்றரி தெய்தியத், யன்றரி தேயெத்; மம்முறை யாற்றுதற் செய்தியத்* 2. *தீர்த்த முன் செய்.*
3. *மும் மதயாரண னாலுற.* 4. *மேவினன்.* (35)

37. நீத்த நீரி னெடியவன் மூழ்கலும்
தீத்த காமத் தெறுகதிர்த் தீயினல்
காய்த்தி ரும்பைக் கருமகக் கம்மியன்
தோய்த்த தண்புன லொத்தத் தோயமே.

நெடியவன் - இராமபிரான், நீத்தம் நீரில் - பிரவாகம் மிக்க அந்தப் பொய்கை நீரில், மூழ்கலும் - மூழ்கி நீராடியபோது, தீத்த - அவன் திருமேனியை வெதுப்பிய, காமம் தெறு கதிர் தீயினல் - விரக மாகிய காய்கின்ற சுடர் விட்டெரியும் நெருப்பினல், அ தோயம் - அந்த நீர், கருமகன் கம்மியன் - கொல்லன், இரும்பை காய்த்து - இரும்பை உலையில் காயவைத்து, தோய்த்த - தோய்த்ததான, தண் புனல் ஒத்தது - குளிர்ந்த நீரைப் போலச் சுறுசுறு எனச் சூடு கொண்டதாயிற்று.

நீத்தம் - வெள்ளம்: நீந்தப்படுவது என்னும் பொருளது. தெறுதல்- எதிர்த்து அழித்தலும் ஆம். காமமும் கனலும் தம்மைச் சேர்ந்ததைச் சுட்டெரிக்கும் தன்மைய என்பது இங்குக் காட்டப்பட்டது. உலையிற் காய்ச்சிய இரும்பைக் கொல்லன் நீரிற்றோய்த் தெடுத்தல் வழக்கமென் பது இங்கு அறியற்பாலது; அப்பொழுது நீர் சூடடையும்; ஒப்பு: தக்க. 653; திருவிளை. நாட்டுச்: 45.

பி - ம். 1. நீர்த்தடத்து நெடியவன்.

2. தீய்த்த நாகத்தெறுங் கதிர்த், தீத்த காமர்தெறுதிறத் தீயினால்; தெறுவிடத் தீயினால்.

3. காய்த்தி மற்றக் கரும்பொனைக் கருமகன், காய்த்த மற்றைக் கரும்பொன்னைக் கம்மியன், காய்த்த மற்றக் கரும்பொனை; கருமகன் கம்பியைத்.

4. வெம்புன லொத்தது தோய்மே, யப்புன லொத்தது. (36)

வேறு

இரவு வருதலும் இராமபிரான் நிலையும்

38. ஆடினா னன்னமா யருமறைகள் பாடினான்
நீடுநீர் முன்னைநூ னெறிமுறையி னேமிதாள்
சூடினான் முனிவரைத் தொழுதுபூஞ் சோலைவாய்
மாடுதான் வைகினா னெரிகதிர் வைகினான்.

அன்னமாய் அருமறைகள் பாடினான் - ஓர் அன்னப்பறவையின் வடிவெடுத்து, வேதங்களை, ஸ்வரப்படி பாடிப் பிரமதேவருக்கு உபதேசித்தருளிய நாராயணன் அவதாரமான இராமபிரான், முன்னை நூல்நெறி முறையின் - பண்டை வேதங்களிற் சொல்லிய விதிப்படி, நீடு நீர் ஆடினான்—நீண்டுபரந்த அப் பம்பைப் பொய்கை நீரில் நீராடி, நேமி தாள் சூடினான் - சக்கராயுதத்தையுடைய திருமாலின் ஸ்ரீ பாதங்களை வணங்கி, முனிவரை தொழுது - அங்குத் தவநியமத்திருந்த முனிவர்களை வணங்கி, பூம் சோலைவாய் - ஒரு பூஞ்சோலையினிடத்து, மாடுதான் வைகினான் - ஒருபுறத்தே தங்கி யிருந்தான்; எரிகதிர் வைகினான் - எரிக்கும் சூரியனும் அத்தமித்தான்.

திருமால் அன்னமாய் அவதரித்தது; ஆரணிய. 60. இது திருமாலின் அம்சாவதாரங்களுள் ஒன்று. அன்னமாய் அருமறைகள் பாடியது: பெரிய திருமொழி. 9-4-2. மறை - வேதம்; இரகசியமான தத்துவப் பொருள்களையுடையது என்னும் பொருளது. நேமி: சக்கரம். அதனையுடைய திருமாலுக்கு ஆயிற்று; இஃது இலக்கணை. நேமி - திருமால்; ஆரணிய. 139, 153; சுந்தர. 1059, 1112. இராமபிரான் திருமாலை வணங்கியது; 35. உரை காண்க. எரிகதிரும் வைகினான் என்ற பாடம் சந்த ஓசைக்கு முரணாகி மிக்கொலிப்பதால், எரிகதிர் வைகினான் என்றே பாடங் கொள்ளப் பெற்றது. இங்கு உம்மை உடனிகழ்ச்சிப் பொருளில் தொக்கி நின்றது என்க.

அதாவது சூரியாத்தமன மாயிற்று என்பதாம். இராமபிரான் பம்பையில் நீராடி அருகிலிருந்த பொழிலில் அனுஷ்டானம் செய்திருந்தபோது, நாரத முனிவர் அங்கு வந்து அப்பிரானிடம் பல அரிய தத்துவங்களை உபதேசம் பெற்றுச் சென்றார் என, துளஸிதாஸர் 'இராமாயணம் கூறும்.

பி - ம். 1. ஆடிஞ எரியி னருமறைகள்.

3. முனிவரைத் தொழுது சேர் தொகுதிதண்; தொழுது தண் சோலையில்.

4. கதிரவன் யைமினுன். (37)

39. அந்தியாள் வந்துதா னணுகவே யவ்வயின்
சந்தவார் கொங்கையா டனிமைதா னுயகன்
சிந்தியா நொந்துதேய் பொழுதவண் சீதநீர்
இந்துவா னுந்துவா னெரிகதி ராயினுன்.

அந்தியாள் வந்து அணுகவே - அந்திப் பொழுது வந்து சேரவே, அ வயின் - அப்போது, நாயகன் - தலைவனான இராமபிரான், சந்த வார் கொங்கையாள் - அழகிய கச்சணிந்த தனங்களையுடைய பிராட்டியின், தனிமைதான் சிந்தியா - தன்னைவிட்டுத் தனியாய்ப் பிரிந்திருக்கும் நிலைமையை எண்ணி, நொந்து தேய் பொழுது - மனம் வருந்திக் குறைவுற்ற பொழுதிலே, அவண் - அவ்விடத்து, சீத நீர் வான் உந்துவான் - குளிர்ச்சியான கடல்நீரை வான்நோக்கி எழுந்து கொந்தளிக்கச் செய்பவனான, இந்து - சந்திரன், எரிகதிர் ஆயினான் - எரியும் சூரியனைப் போல (இராமபிரானுக்குத்) தோன்றுவா னயினன். தான்; அசை.

அந்தியாள்; சந்தியா காலத்தைப் பெண்பாலாகக் கூறுவது கவிமரபு; சுந்தர. 277; 'அந்தியென்னும் பசலை மெய்யாட்டி' (மணி. 5 : 140); நள. 97, 98, உரையையும் நோக்குக. சந்தமார் கொங்கையாள் என்னும் பாடங் கொண்டு, அத்திரி முனிவரின் பத்தினியான அநசூயா தேவியால் அளிக்கப்பெற்ற சந்தன களபங்கள் அணிந்த கொங்கையாளான சீதை என்னலும் ஆம். சந்தம் வார்; சந்தனம் பூசப் பெற்றவையும், கச்சணிந்தவையுமான கொங்கையாள் என்னலும் ஒன்றும்; அநசூயை சீதைக்குச் சந்தனக் கலவை முதலியன அளித்தது; ஆரணிய. 5. சீத நீர் உந்துவான் இந்து; சந்திரன் ஒளியாகிய நிலவு

படக் கடல் நீர் பொங்கும் இயல்பைக் குறித்தபடி; 'தண்ணென் கதிர் வரவாற் பொங்குங் கடல்'; (நன்னெறி : 18) என்றமை காண்க.

பி - ம். 1. *அந்திதான்.*
2. *சந்தமார் கொங்கையா(ள்); தனிமைதன்.*
3. *பொழுதெழு சீதரீர்.*
4. *ரெரிகதிரி னேறினன். ரெரிகதிரு மாயினன்.* (38)

வேறு

இரவுக்கால வருணனை

40. பூவொடுங் கினவிரவு புள்ளொடுங் கினபொருவில்
மாவொடுங் கினமரனு மிலையொடுங் கினகிளிகள்
நாவொடுங் கினமயில்க ணடமொடுங் கினகுயில்கள்
கூவொடுங் கினபிளிறு குரலொடுங் கினகளிறு.

பூ ஒடுங்கின - (அப்பொழுது) அப்பொய்கையில் உள்ள நீர்ப் பூக்கள் குவிந்தன; விரவு-பலவகையாகக் கலந்துள்ள, புள்-பறவைகள், ஒடுங்கின - தந்தம் இருப்பிடங்களிற் போய் அடங்கின; பொருவு இல் மா ஒடுங்கின - ஒப்பற்றனவான மிருகங்கள் யாவும் தம் செய லடங்கிக் கிடந்தன; மரனும் இலை ஒடுங்கின - (அக்கானில் உள்ள) மரங் களும் இலை குவிய ஒடுங்கின; கிளிகள் நா ஒடுங்கின - கிளிகள் தம் அழகிய பேச்சு ஒடுங்கின; மயில்கள் நடம் ஒடுங்கின - மயில்கள் நடனமாடுவதை விட்டு அடங்கின; குயில்கள் கூ ஒடுங் கின - குயில்கள் இனிமையாய்க் கூவுதல் அடங்கி இருந்தன; களிறு - ஆண்யானைகள், பிளிறு குரல் ஒடுங்கின - பிளிறுதலாகிய தம் பேரொலி அடங்கின ஆயின.

ஒடுங்குதல் - உறங்கி அடங்குதல். இனி, விரவு என்னமல் இரவு எனக் கொண்டு அவ்விராப் போதில் அனைத்தும் உறங்கி ஒடுங்கின என்னலும் ஆம். புள் - வண்டுகளும் ஆம். கிளி, மயில், குயில் என்றவற்றைக் கூறியது, அவை ஒவ்வொரு வகையில் பிராட்டியை ஒத்திருந்தமையால் என்க. களிற்றின் முழக்கத்தைப் பிளிறுதல் எனக் கூறுவது மரபு. கூ; முதனிலைத் தொழிற் பெயர். இச்செய்யுள் சுந்தர. 253 ஐ ஒத்திருத்தல் காண்க.

பி - ம். 1. *பூ வொடுக்கின வலிகள்; புள் ளொடுக்கின விரவின்.*
2. *மாவுறங் கினமரனு.*
3. *நாவொ டுக்கின மயிலும்.* (39)

41. மண்டுயின் றனநிலைய் மலைதுயின் றனமறுவில்
பண்டுயின் றனவிரவு பனிதுயின் றனபகரும்
விண்டுயின் றனகழுதும் விழிதுயின் றனபழுதில்
கண்டுயின் றிலனெடிய கடறுயின் றவொர்களிறு.

மண் துயின்றன - பூமியில் வாழும் பிராணிகள் யாவும் உறக்கங் கொண்டன ; நிலைய மலை துயின்றன - சலியாமல் நிலைபெற்றுள்ளவை யான மலைகளில் உள்ள உயிர்கள்யாவும் ஒலியடங்கித் துயின்றனபோல் ஆயின; மறு இல் - மாசு இல்லாத, பண் - நீர்நிலைகள் யாவும், துயின் றன - அசைவற்றுத் தூங்குவனபோல் ஆயின; பனி துயின்றன-பனியும் உறைந்து அடங்கிக்கிடந்தன ; பகரும் விண் துயின்றன - பெருமை யாகச் சொல்லப்படும் ஆகாயமும் துயின்றது போல ஓசையடங்கிய தாயிற்று ; கழுதும் - (இரவில் நெடுநேரந் தூங்காது அலையும்) பிசாசு களும், விழி துயின்றன - கண்மூடித் தூங்குவன ஆயின ; (ஆனால்) நெடிய கடல் துயின்ற ஓர் களிறு - பெரிய பாற்கடலிற் துயின்ற ஒப்பற்ற களிறு போன்ற திருமாலாகிய இராமபிரான், பழுது இல் கண் துயின்றிலன் - குற்றமற்ற தன் கண்மூடித் தூங்கினான் அல்லன்.

நிலையமலை - அசலமாகிய மலை. கழுதும் விழிதுயின்றன - இரவில் தூங்காது அலைந்து திரியும் பிசாசுகளும் தூங்கின என்றமையால், இரவில் சிறிது போது அவை தூங்கும் என்பதாம் ; 'பேயுங் துயின்ற தாற் பேரியாமம்'; 'உயிர்புறம்பே தோன்றுங் கழுதுங் துயின்றதே' (நள. 262, 114.) பண் - நீர்நிலை; (திருக்குற்றாலப் ; திருநதி : 12). இராமபிரான் துயின்றிலன் என்றமையரல், எப்பொழுதுமே உறங்காது விழித்துக் காத்திருக்கும் இயல்புடைய இளைய பெருமான் தூங்கவில்லை யென்பது சொல்லாமலே அமையும். இராமபிரானைக் களிறு என்றது, அவனது பெருமிதம் நோக்கி என்க. இராமபிரானுக்கு யானை ; பால. தாடகை வதைப், 47 ; மிதிலைக் காட்சி; 57 ; அயோத். கங்கைப் 4 ; ஆரணிய. 1104. பழுதுஇல் கண் என்றது ; கண்ணொளியிற் குறை வில்லாத இராமபிரான், பிராட்டி பிரிந்த மனவருத்தத்தால் உறங்காது விழித்திருந்தான் என்பதாம். 'விசாரமுள்ளவன் தூங்கான்' என்பது பழமொழி.

பி - ம். 1. *மண் டுயின்றது நிலையின்,*
2. *பண் றுயின்றன விரவு பனி துயின்றது; பனி துயின்றது பகரும்,*
8. *விண் டுயின்றது ; விழி துயின்றது,* (40)

சூரியோதயம்

42. பொங்கிமுற் றியவுணர்வு புணர்தலும் புகையினெடு
பங்கமுற் றனையவினை பரிவுறும் படிமுடிவில்
கங்குலிற் றதுகமல முகமெடுத் ததுகடலில்
வெங்கதிர்க் கடவுளெழ விமலன்வெந் துயரினெழ.

முற்றிய உணர்வு - நிறைந்த ஞானம், பொங்கி புணர்தலும் - ஒருவருக்கு எழுந்து அமைந்தபோது, புகையினெடு பங்கம் உற்ற அனைய - புகையும் சேறும் பொருந்தியது போன்ற, வினை - (அவனுடைய) தீவினைகள், பரிவு உறும்படி - துன்பமடைந்து நலிவதுபோல, முடிவுஇல் - முடிவில்லாது மிகவும் நீண்டிருந்த, கங்குல் - இரவுப் போது, இற்றது - கழிந்தது; (அப்பொழுது), கடலில் வெம் கதிர்க் கடவுள் எழ - கீழைத் கடலில் வெப்பமான கிரணங்களையுடைய கடவுளான சூரியன் உதிக்கவும், விமலன் - மலமற்றவனான இராமபிரான், வெம் துயரின் எழ - (தான் பட்டிருந்த) கொடிய விரகத் துயரினின்றும் நீங்கவும், கமலம் - தாமரை மலர்; முகம் எடுத்தது - மலர்ந்தது.

கமல முகம் என்பதை இராமபிரானுடைய கமலம் போன்ற முகம், எனவும் கொள்க. புகையும் சேறும் வினைக்கு, புகை மேலுள்ளது; சேறு அடியிலுள்ளது. மேலும் கீழும் மலம் நிறைந்த வினைக்குக் கூறப் பெற்றன. ஞானோதயத்தால் வினைகள் தீருமாப்போலே, சூரியோதயத் தால் இராமபிரானின் இரவில் மிகுந்த விரகத் துயரும் விலகிற்று என்ப தாம். வினைக்குக் கூறும்போது, புகைதல், உருத்தெரியாமல் அழிதல் என்க. விமலன் - மலத்தினின்றும் விடுபட்டவன் என்பதாம். இங்குச் சூரியன் ஒளி ஞானோதயத்திற்கும், கங்குல் இருளாகிய அஞ்ஞானத் துயருக்கும் உவமைகள் ஆயின. ஞானம் - ஒளி, அஞ்ஞானம் - இருள்; 'எங்கு முலக மிருணீங்க விருந்த வெந்தை பெருமானார்'; (சீவக. 2812); 'இருளே யுலகத் தியற்கை' (அறநெறிச். 146) என்றமையுங் காண்க. கமலம் முகம் எடுத்தது: அதுகாறும் இராமபிரான் கொண்ட வருத்தம் தன்னை வருத்த அதனால் ஏங்கிக் கூம்பிச் சோர்ந்திருந்த கமலம் இப் பொழுது தலைநிமிர்ந்து முகம் மலர்ந்தது என்பதும் ஆம்.

பி - ம். 1. *பொங்கு முற்றிய; முற்றிய வறிவு பொலிதலும் புலன் முதல; புணர்தலும் புணர்வினொடும்.*
2. *பங்க முற்றன வல்வினை; பங்கமுற் றிருவினைகள் பாடழிந் தன விரவு.*
3. *கமல முகமெ டுத்தன.*
4. *துயரி லெழ.*

(41)

இராமலக்ஷ்மணர் அங்கிருந்து சென்றமை

43. காலையே கடிதுநெடி தேகினர் கடல்கவினு
சோலையேய் மலைதழுவு கானனீ ணெறிதொலைய
ஆலையேய் துழனியக லுடரார் கலியமிழ்து
போலவே யுரைசெய்புன மானைநா டுதல்புரிஞர்.

ஆலை ஏய் துழனி அகல் நாடர் - கரும்பு ஆலைகளில் உண்டாகும் ஒலிகளோடு கூடிய விசாலமான கோசல நாட்டிற்குரிய அவ்விராம லக்ஷ்மணர், ஆர்கலி அமிழ்து போலவே உரை செய் - பாற்கடலில் உண்டான அமுதம் போல இனிமையாகப் பேசும், புனமானை - வனத்தில் வாழும் மான் போன்ற பிராட்டியை, நாடுதல் புரிஞர் - தேடுதலைச் செய்வார்களாய், கடல் கவினும் - கடல் என விளங்கும், சோலை ஏய் - சோலைகள் பொருந்தியதும், மலை தழுவும் - மலைகள் தழுவப் பெற்றது (போல் விளங்கிய), கானல் நீள்நெறி தொலைய - பரல் பரவிய நீண்ட அவ்வன நெறிகள் முடிவடைய, காலையே - அச்சூரியோதய காலத்திலேயே, கடிது நெடிது ஏகினர் - (அவ்விடம் விட்டு) விரைந்து நெடுந் தூரம் நடந்து சென்றனர்.

ஆலையேய் துழனி யகனுடர்: கோசலநாடு பல கரும்பாலைகள் உடைய நீர் நிலவளங்களாற் சிறந்தது; 'ஆலைபா யமலையாலைச் சாறு பா யோசை'; 'ஆலைவாய்க் கரும்பின் றேனும்..................வுண்டு மீனினங் களிப்ப மாதோ' (பால. நாட்டுப் : 3, 9); 'கருப்பேந்திர, முதலாயின கண்டாளிடர் காணுள்; பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனுள்'; (அயோத். கங்கைப் : 6). புனம் - காடு. சீதையின் சொல் ஆர்கலியமுது: அஞ்சொற்க ளமுதிலள்ளிக் கொண்டவள்'; 'அமுதுகுத் தனைய செய்ய வாயிடை மழலை யின்சொற் கிளியினும் குழறி' (ஆரணிய. 623; 791). கானல் - பரல் நிரம்பிய நிலம்; (பிங்.) 'கவினு - போன்று, துழனி - முழக்கம். புரிஞர் - உத்தியோகிக்கின்றூர்.' பழையவுரை.

குறிப்பு :—வான்மீக ராமாயணம் பம்பை வருணனை கூறும் இந்த இடத்தில் இராமபிரான் அக் கானகத்தின் இயற்கைக் காட்சிகளையும், அவற்றால் தான் அடைந்த விரகதாபத்தையும் பலவாறு இலக்குவனிடம் கூறித் தன்னை மிகவும் வெறுத்துக்கொண்ட செய்தியும், பின் இலக்குவன் ஆறுதலாகக் கூறிய தைரியமொழிகளால் அப் பெருமான் ஒருவாறு ஊக்கம் பெற்றதும் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன,

இராமபிரான் மரம், கொடி, பூ, நீர்நிலை முதலிய அஃறிணைப் பொருள்களை முன்னிலைப்படுத்திப் பேசியதும், அப்பொய்கையில் நீராடித் திருமாலை வணங்கி வழிபட்டதும் அங்குக் கூறப்பெறவில்லை. ஆனால் ஸ்காந்த புராணத்தில் இராமபிரானுடைய அத்தகைய பிரலாபங்கள் கூறப்பெற்றுள்ளன. பம்பைஸரஸ் கால் யோசனை தூரம் நீண்டு பரந்தது, ஸத்புருஷர்கள் திருவுளம்போல் தெளிந்த நீரையுடையது என அத்யாத்ம ராமாயணங் கூறும்.

பம்பாதீரம் பரமபதம் என்பதும், அங்குள்ள பக்ஷி விருக்ஷாதிகள் நித்யஸூரிகள் என்பதும் அங்குள்ள காற்று பகவத்கிருபை என்பதும், புஷ்பங்கள் ஞானுதிகள் என்பதும், ஜலம் ஹ்ருதயம் என்பதும் வைஷ்ணவ சம்பிரதாய அந்தரார்த்தப் பொருளாகக் கூறுவர்.

பி - ம். 1. கடிதவர, நெடிது கடி தேகினர்.
2. சோலைவாய் மலைதழுவ; சோதிநீ ணெறி தொலைய.
3. கலியமுது.
4. புனைமானை. (42)

## பம்பைப் படலம் முற்றும்.

---

## 2. அநுமப் படலம்.

அநுமன் இராமபிரானிடம் வந்து வணங்கி, அவரிடம் சுக்கிரீவனுடைய வரலாறுகளைக் கூறி, அவரால் அருள் செய்யப்பெற்றதும், பின் அவன் சுக்கிரீவனை இராமபிரானிடம் அழைத்துவரச் சென்றதுமான செய்திகளைக் கூறும் படலம் என விரியும். சில பிரதிகளில் அநுமப் படலம் என்று தனியே இராமல், மராமரப் படலத்தினுள்ளேயே இந் நிகழ்ச்சிகள் அடங்கி யிருப்பன காணலாம். இப்படலம் சில சுவடிகளில் அநுமன் வந்தனைப் படலம், அநுமார் காட்சிப் படலம் எனும் பெயர்களுடன் காணப்பெறும்.

இராம லக்ஷ்மணர் வருகை கண்டு சுக்கிரீவன் அஞ்சி ஒளிந்து கொண்டது.

44. எய்தினர் சவரிநெடி தேயமால் வரையெளிதின்
நொய்தினே றினரதனி னோன்மைகூர் கவியரசு
செய்வதோர் கிலனிவர்க டெவ்வரா மெனவெருவி
உய்துநா மெனவிரைவி னோடினன் மலைமுழையின்.

எய்தினர்-அவ்வாறு சென்ற இராம லக்ஷ்மணர்கள், சவரி நெடிது ஏய - சவரி என்னும் வேடமாது விரிவாக வழி சொல்லி ஏவிய, மால் வரை அதனில் - பெரிய ருசியமூக பருவதத்தின் மீது, எளிதின் நொய்தின் ஏறினர் - எளிதில் விரைவாக ஏறிச் சென்றனர்; (அப்போது) நோன்மைகூர் கவி அரசு - (அங்கிருந்த) பொறுமை மிக்க வானரர் தலைவனான சுக்கிரீவன், (அவ்விராம லக்ஷ்மணர்களைக் கண்டு), இவர்கள்-வில்லேந்திய வீரர்களான இவர்கள், தெவ்வர் ஆம் என வெருவி - பகைவரே ஆவர்' என்று அச்சமுற்று, செய்வது ஓர்கிலன் - தான் மேற்செய்யுங் காரியத்தை அறியாதவனாகி, 'நாம் உய்தும் என - நாம் இப்பொழுது தப்பிப் பிழைத்தோடிப்போவோம்' என்று, மலை முழையினில் விரைவின் ஓடினன் - அம்மலையின் குகை ஒன்றினுள் (ஒளிந்து கொள்ள) வேகமாக ஓடினான்.

ஏய - ஏவிய ; 'ஏயின செய்யு மணங்கினர்' (அயோத். கைகேசி சூழ்வினை : 2); 'தந்தை செய்கென வேய' (அயோத். கிளைகண்டு : 127); 'ஏயது மறுக்கலும்' (பெருங். 1-35, 149). சவரி ஏவியது, ஆரணிய. 1193. நோன்மை கூர் கவியரசு; சுக்கிரீவன் தன் உரிமைகளனைத்தையும் இழந்து, மிக்க பொறுமையுடன் இருந்தது பற்றி என்க. இனி, நோன்மைகூர், பெருந்தன்மை அல்லது வலிமை

மிக்க என்னலும் ஒன்றும். அரசு என்றது இங்குத் தலைவன் என்னும் பொருளில் உள்ளது ; இனிக் கவியரசனாகப்போகும் சிறப்பை முற்கூறியதும் ஆம் ; மேலும் சுக்கிரீவனை, மகாராஜா என்று கூறும் சம்பிரதாய வழக்கைக் கொண்டுரைத்தது எனவுங் கொள்ளலாம். சவரி நெடிதேய மால் வரை என்பதற்குச் சவரி நெடுங்காலம் தங்கியிருந்த ருசியமூக பருவதம் என்று பொருள் கூறினாரும் உளர். சவரி யிருந்தமலை ருசிய மூக மலையன்று.

பி - ம். 1. *சவரி மொழியின் பொன்மால் வரை கடிநின், சவரி நெடிதேவு.*
2. *ஞேன்லமைசால்.*
3. *செய்தி யோர்கிலன், செய்த லோர்கிலன், செய்வதோர் குகர் ; ரிலையர் தெய்வராமென.*
4. *மறுகி யோடினன், மறுகி யோடினர், விரைவி னோடினர்.* (1)

45. காலின்மா மதலையிவர் காண்மினோ கறுவுடைய
வாலியே வலின்வரவி னர்கடாம் வரிசிலையர்
நீலமால் வரையனையர் நீதியாய் நினைதியென
மூலமோர் கிலன்மறுகி யோடினன் முழையதனின்.

(அப்பொழுது சுக்கிரீவன் தன்னருகேயிருந்த அநுமனை நோக்கி), காலின் மா மதலை - வாயுதேவனின் பெருமை பொருந்திய மகனே ! இவர் காண்மின்-இவர்களை நோக்குங்கள். வரிசிலையர்-கட்டமைந்த விற்களை யுடையவர்கள்; நீல மால் வரை அனையர்-நீல நிறத்தோடு விளங்கும் பெரிய மலைபோன்ற தோற்றத்தினர் ; கறு உடைய வாலி ஏவலின் - நம்மிடம் பகைமைகொண்ட வாலியின் (ஏவல் அல்லது) தூண்டுதலினால், வரவினர்கள் தாம் - (நம்மை வருத்துவதற்கு) வருபவர்களேயாவர்; நீதியாய் - நியாயம் இன்னதென்று அறிந்து செய்யும் அநுமானே ! நினைதி என - இதனை நன்கு யுணர்வாயாக ' என்று கூறி, மூலம் ஓர்கிலன் - அவர்கள் அங்கு வருவதற்கான மூல காரணத்தை அறியாதவனாய், மறுகி - மனங்குழம்பி, முழை அதனில் ஓடினன் - அங்குள்ள ஒரு குகையிடம் ஒளிந்துகொள்ள ஓடினன். ஓ : அசைச்சொல்.

காண்மினோ ; உடனிருந்தாரையும் கூட்டிச் சொல்லியது. நீல மால் வரை யனையர் - இராமபிரான் நீலமலை போன்றவன், இலக்குவன் மேருமலை போன்றவன் ; மலைகளில் உயர்ந்தது மேரு ; ' மேரு சிகரிணாமகம் ' (கீதை.) என்பது கண்ணன் வாக்கு ; எனவே, நீல மலையினையும் பொன் மேருவினையும் முறையே நிகர்த்தவர்

என்க. காலின் மதலை-அநுமன்; வாயுதேவன் அருளால் அஞ்சனாதேவிக்குப் பிறந்தவன்; பால. திருவவதாரப். 28, ஓகார இடைச்சொல் அச்சப்பொருளது. வரவினர்கள் தாம்: தாம் என்பது அசைச்சொல்; இங்குத் தேற்றப்பொருளில் வந்தது. முன் 44-ம் செய்யுளிலுள்ள கவியரசு என்பதை இங்கு எழுவாயாகக் கூட்டிக்கொள்க. கறு - வன்மம் அல்லது ஆழ்ந்த பகைமை; உயுத்த. கும்பகருணப்: 357. மதலை, அண்மை விளி; இயல்பாயிற்று. இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

இதன்பின் சில பிரதிகளில் அடியிற் காணும் இரு பாடல்கள் அதிகமாக உள்ளன. அவை பழைய பல ஏட்டுப் பிரதிகளில் இல்லை.

1. தாரனீ லனைமருவு தாமமா ருதியைமுதல்
வீரரோ டிரவிசுதன் மேருமால் வரையைநிகர்
பாரமோ மலையினொரு பாகமோ டுதல்புரிய
ஆரமார் பருமதனி னுகுமா றுறல்கருதி.

2. மானனா டுதல்புரிஞர் வாலியே வலின்வருதல்
ஆனவா றலர்மறுகி யாவிசோர் நிலையரென
ஏனவா னரர்சிலரு மேகிமா முழையின்முழு
ஞானநா தரையறிவி னுடிமா ருதிமொழியும்.

பி - ம். 1. *காண்மினோர் கறுவுடையர்.*
2. *வரவினர் கடாம் வரவரிய.*
3. *நீதியாம் முதல்வர், நீதிமா முதல்வர்.*
4. *யோடினர் மலைமுழையில்; மலை யுழையின்.* (2)

அநுமன் அஞ்சிய வானரர்களுக்குத் தேறுதல் கூறியது.

46. அவ்விடத் தவர்மறுகி யஞ்சிநெஞ் சழியமைதி
வெவ்விடத் தினைமறுகு தேவர்தா னவர்வெருவத்
தவ்விடத் தனியருளுந் தாழ்சடைக் கடவுளென
இவ்விடத் தினிதிருமி னஞ்சலென் றிடையுதவி.

அ இடத்து - அம்மலையில், அவர் - அந்தச் சுக்கிரீவன் முதலான வானரர்கள், மறுகி அஞ்சி - மனம் குழம்பிப் பயந்து, நெஞ்சு அழி அமைதி - மனம் நிலை அழிந்து வருந்தும் சமயத்தில், வெம் விடத்தினை- (பாற்கடல் கடைந்தபோது உண்டான) கொடிய விஷத்தைக் கண்டு, மறுகு - குழப்பமுற்ற, தேவர் தானவர் வெருவ - தேவர்கள் அசுரர்கள்

யாவரும் அஞ்சினராக, தவ்விட - (அவ்வச்சம்) நீங்க, தனி அருளும் - தான் (அவ்விடத்தை உண்டு) ஒப்பற்ற அருள்புரிந்த, தாழ் சடை கடவுள் என - தொங்குகின்ற சடையையுடைய சிவபெருமானைப்போல, (அவ் வானரர்களை நோக்கி), 'இ இடத்து - இந்த மலையிடத்து, இனிது இருமின் - நீவிர் கவலையின்றி அமைதியுடன் இருப்பீராக! அஞ்சல் - பயப்படவேண்டா!', என்று இடை உதவி - என்று நடுவே அவர்களுக்கு (அநுமன்) சமாதானமாக அருள்புரிந்து,

இச் செய்யுள் குளகமாய் அடுத்த செய்யுளில், குறுகி, கற்பினினை யும் என்பவற்றோடு இயைந்து வினை முடிவு கொள்ளும். இங்கு அநும னுக்குச் சிவபெருமானை ஒப்பிட்டது, அவன் சிவபெருமான் அம்சமாக அவதரித்தவன் என்னும் தேவரகசியத்தை உட்கொண்டு என்க; பால. திருவவதாரப் : 28. மேலும், "சொல்லின் செல்வன்......விடைவ லானே' (61) 'ஆலமுண்டவனினின்றருநடம் புரிகுவான்' (79) என்றமையும் காண்க. சிவபிரான் விடமுண்டு காத்தது; ஆரணிய. 688, 694; சுந்தர. 317; உயுத்த. விபீடண னடைக்கலப் : 111. 'வெருவல் தவ்விடத்து' என்று பாடங்கொண்டு, அச்சம் மிகுந்த விடத்து என்று பழையவுரை கூறும். இடையுதவி - காலத்தில் உதவி எனினும் ஆம். தவ்வுதல் - நீங்குதல்; உயுத்த. இராவணன் வதைப். 141.

பி - ம். 1. அவ்விடத் தவன்; மறுகி யஞ்சு சிந்தையன் மதியின்.
2. வெவ்விடத்தின் மறுகு; தானவர் வெருவு.
3. தவ்விடத் தினிதருளு; தனியுதவு.
4. இவ் விடத்திடை, இவ்விடத்தி னமைதி ரஞ்சலென்; நிடை யுதவ. (3)

அநுமன் ஒரு மாணவ வடிவமுடன் சென்று இராம லக்ஷ்மணர்களது வரவைக் கண்டு ஆராய்தல்.

47. அஞ்சனைக் கொருசிறுவ னஞ்சனக் கிரியனைய
மஞ்சனைக் குறுகியொரு மாணிநற் படிவமொடு
வெஞ்சினத் தொழிலர்தவ மெய்யர்கைச் சிலையரென
நெஞ்சயிர்த் தயன்மறைய நின்றுகற் பினினினையும்.

அஞ்சனைக்கு ஒரு சிறுவன் - அஞ்சனா தேவிக்கு ஒப்பற்ற குமார னான அநுமன், ஒரு நல் மாணி படிவமொடு - ஒருசிறந்த பிரமசாரிவடிவத் தோடு, அஞ்சனம் கிரி அனைய - மை மலை போன்ற (திருமேனியை யுடைய), மஞ்சனை - சக்கரவர்த்தித் திருமகனான இராமபிரானை, குறுகி -

சமீபித்து, அயல் மறைய நின்று - அருகே (ஓரிடத்துத்) தான் மறைவாக நின்று, 'வெம் சின தொழிலீர் - (இவர்கள்) கொடிய கோபமேற்கொண்ட செயலையுடையவர்; தவ மெய்யர் - தவவேடம் பூண்ட உருவத்தையுடையவர்; கை சிலையர் - கையில் வில்லையுடையவர் என - என்று, நெஞ்சு அயிர்த்து - (அவர்களுடைய வேடத்திற்கும் செயலுக்கும் மாறுபாடாக உள்ள தோற்றத்தையும் மேற்கொண்ட செயலையும் கண்டு), அவர்கள் பால் மனத்தில் ஐயங்கொண்டவனாகி, கற்பினின் நினையும் - தான் கற்றுத் தேர்ந்த கல்வியறிவால் பின்வருமாறு ஆலோசிப்பானாயினன். அநுமன் நினைத்தவை அடுத்த கவிகளால் விளங்குவ காணலாம்.

அஞ்சனாதேவி புதல்வனாதலின், அநுமன் ஆஞ்சனேயன் எனப்படுவன்; இது தத்திதாந்தப் பெயர். இராமபிரானுக்கு அஞ்சனக்கிரி, அவனுடைய திருமேனியின் கருநிறம் பற்றியும், தோற்றச் சிறப்பு நோக்கியும் உவமை; அயோத். தைலமாட்டு. 52; ஆரணிய 191, 305; உயுத்த. விபீடணனடைக்கலப். 137, 144. மஞ்சன்: மைந்தன் என்பதன் போலி. மாணவகன் என்ற சொல் மாணி என்று திரிந்தது; 'மாணியாம் படிவ மன்று மற்றிவன் படிவம் மைந்த' 62; 'கருமாணி யாயிரந்த கள்வனே'; (இரண்டாம்திருவந்தாதி, 61); 'மாணிக் குறளுரு வாய மாயனே' (பெரியாழ்வார்; 5, 2; 5); திருமால் வாமனாவதாரத்தில் சிவபெருமானை வழிபட்டதாக உள்ள திருமாணி குழி என்றொரு தேவாரம் பெற்ற சிவத்தலம் உள்ளதுங் காண்க: வெஞ்சினத் தொழிலர் தவமெய்யர் கைச்சிலையர் என்னும் மூன்றுமடி முரண்டொடையில் அமைந்துள்ளது. நெஞ்சு அயிர்த்தது: தவப் பொலிவுக்கு ஒவ்வாத சினத் தொழிலும், கைச்சிலையுடைமையுங் கருதி என்க. கற்பு - கல் என்ற பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர்: கற்கப்படுவது என்பதாம்; அநுமன் கல்வியிற் சிறந்தோன், 60, 61, 74, 989. அநுமன் இராமபிரானை ஒரு பிக்ஷுகன் கோலத்துடன் வந்து கண்டதாக வான்மீகமும், போஜசம்புவும் கூறும். துளஸிதாஸரும் அத்யாத்ம ராமாயணமுடையாரும் அந்தண மாணவப் படிவங்கொண்டு அநுமன் சென்றனன் என்றே கூறுவர். மாறு வேடம் கொண்டு சென்று ஆராயும்படி சுக்கிரீவனே கூறி அநுமனை அனுப்பினான் என்பது வான்மீகம்.

பி - ம். 2. மஞ்சனைக் குறுகவொரு மாணவப் படிவமொடு, மானவப் படிவமொடு, மானிடப் படிவமொடு, மாதவப் படிவமொடு.
3. வெஞ்சமத் தொழிலர்.
4. கற்பனை நினையும், கற்பவ னினையும், மற்றிவை நினையும். (4)

48. தேவரொப் பருதலைவ ராமுதற் றேவரெனின்
மூவர்மற் றிவரிருவர் மூரிவிற் கரரிவரை
யாவரொப் பவருலகின் யாதிவர்க் கரியபொருள்
கேவலத் திவர்நிலைமை தேர்வதெக் கிழமைகொடு.

(இவர்கள்), ஒப்பு அரு தேவர் தலைவர் ஆம் முதல் தேவர் எனின் - ஒப்புமை சொல்லுவதற்கரிய தேவர் தலைவரான முதற்றேவர் ஆவர் எனக் கருதுவோமானால், அவர் மூவர் - அத் தலைவர்களோ அயன் அரி அரன் என்ற மூன்று பேர்கள் ஆவர்; இவர் இருவர் - இவர்களோ இருவர் களாய் உள்ளார்; (ஆதலின் அத் தேவர் தலைவர் மூவரும் அல்லர் என்றபடி); மூரி வில் கரர் - வலிய வில்லையேந்திய கையர்; உலகில் இவரை யாவர் ஒப்பவர் - இனி உலகில் இவரை ஒப்பாவார் யாரே உள்ளார்? இவர்க்கு அரிய பொருள் யாது - இவர்கள் தேடியடையக் கூடிய பொருள் யாதே உளது? கேவலத்து இவர் நிலைமை - தனி உயர்வு பெற்ற இவர்களது தன்மையை, எ கிழமை கொடு தேர்வது - எந்தத் தொடர்பு கொண்டு அறிவது ஆகும்?

மும்மூர்த்திகளும் அல்லர், மானிடரும் அல்லர் ஆதலின், மானிடர்க்கும் தேவர்க்கும் முதன்மையான பரம்பொருளே இவ்விரு உருவில் வந்தனர் போலும் என்ற உண்மை தொனிக்க அநுமன் கருதினான் என்பதாம்; 'சிவனோ வல்லன் நான்முக னல்லன் திருமாலா மவனோ வல்லன்' உயுத்த. இராவணன் வதைப்: 135. என, இராவணன் போர் முடிவில் தன் உயிர்விடும் போது கொண்ட உண்மை உணர்ச்சியை அநுமன் இங்குக் கண்ட உடனேயே எய்தப் பெற்றான் என்பது மறைபொருளாய் ஒளிர்வது காணலாம். இது, பின், அநுமனால் இராவணனிடத்தும் வலியுறுத்தப் பெறுவதும் காண்க; சுந்தர. 1122. கேவலம் என்பது இணையற்ற உயர்வு என்னும் பொருளைக் குறிப்பதாகும். கேவலத்து இவர், என்றதில் பரம்பொருளாகிய இவர் என்ற பொருளும் தொனிப்பது காண்க. கேவலம் - பரப்பிரமம்; 'கேவலம் பொருளையே பாவித்தல் வேண்டுதலான், (குறள், 358, உரை); அன்றி, கேவலம்; எளிமை என்று பொருள் கொண்டு, எக்கிழமை கொண்டு இவர் நிலை தேர்வது என்பதற்கு, உயர்ஞான நிலையில் ஆராய்ந்து, இவரைப் பரம்பொருள் என்பதா, எளிய நிலையில் ஆராய்ந்து மானிடர் என்பதா என்று அநுமன் ஐயப்பட்டதாகக் கொள்வதும் ஒன்றும்.

பி - ம். 1. முதற் றெரிவரிய, முதற் றேறினவர், முதற் றெரியினயர், முதற் றேயரவர்; தலைவ ராமெனத் தெரியி னவர்.
3. குலவி லியா நிவர்க்.
4. நிவர் நிலைகள். (5)

49. சிந்தையிற் சிறிதுதுயர் சேர்வுறத் தெருமரலின்
நொந்தயர்த் தனரெனினு நோவுறுஞ் சிறியரலர்
அந்தரத் தமரர்சிறு மானிடப் படிவர்மயர்
சிந்தனைக் குரியபொரு டேடுதற் குறுநிலையர்.

'சிந்தையில் சிறிது துயர் சேர்வு உற - (இவர்கள்) மனத்தில் ஏதோ ஒரு சிறு துயரம் வந்துற்றமையால், தெருமரலின் - அக் குழப்பத்தால், நொந்து அயர்த்தனர் - மனம் நோவுற்றுச் சோர்ந்துள் ளார்கள்; எனினும் - அவ்வாறு துயரத்தால் (இப்பொழுது) சோர் வுற்று ரென்றாலும், நோவு உறும் சிறியர் அலர் - அதனால் வருத்தத் தைக் கொண்ட எளியவராகவும் உள்ளார் அல்லர்; (ஆதலின்), அந்தரத்து அமரர் - வானில் வாழும் தேவர்கள், சிறுமானிட படிவர் - சிறிய மனித வேடத்தில் வந்தனர் ஆவர்; (இவர்கள்) மயர் சிந்தனைக்கு உரிய - மயங்கும் மனத்திற்கு உரியதான, பொருள் - அரிய பொருள் ஒன்றை, தேடுதற்கு உறு நிலையர் - தேடுதற்காக இங்கு வந்த தன்மையையுடைய ராவர்.

இவர்கள் - துயரமுற்ற நிலையினும் மனச் சோர்வுறாத நிலையராகக் காணப் பெறுகின்றார்; ஆதலின் தேவர்களே இரு மானிட உரு வத்தில் இங்குவந்துள்ளார்கள் என்று அநுமன் தீர்மானித்தான். தெரு மரல் - திகைத்து வருந்துதல்; தெருமா, பகுதி; 'தெருமந்து தேய்வ ரொருமா சுறின்' (நாலடி. 151). மானிடர் காசிப முனிவரின் மனைவி யருள் ஒருத்தியான மனு என்பாளிடம் தோன்றியவர் என்பதாம்; மானிடர்: மானிடரின் எளிய நிலையைக் குறிப்பிட்டபடி; 'சிறுமானிடர் பொருளோ' (பால. பரசுராமப்; 19) என்று தயரதன் பரசுராம ரிடம் குறை கூறி நயந்தமை காண்க.

பி - ம். 1. துயர் சேர்வரத்; தேர்வரத்.
2. தயர்த்தய ரனையர்.
3. அந்த ரத்தவர் சிறுவர், அந்தரத்தமாமலர், அந்தரத் திரு வொடயர்; படிவ மயல், படிவ மலர், படிவம் வர.
4. சிந்தனைக் கரியபொரு ணேடுதற்; ணேடுதற்கொரு நிலையர், ரேடுதற் குறு நிலையர். (6)

**50. தருமமுந் தகவுமிவை தனமெனுந் தகையரிவர்**
**கருமமும் பிறிதோர்பொருள் கருதியன் றதுகருதின்**
**அருமருந் தனையதிடை யழிவுவந் துளததனை**
**இருமருங் கினுநெடிது துருவுகின் றனரிவர்கள்.**

'(மேலும்) இவர் - இவர்கள், தருமமும் தகவும் இவை - தருமமும் நன்னடையும் ஆகிய இவற்றை, தனம் எனும் தகையர் - தமக்கு உரிய அரும் பொருளாக மதிக்கும் தன்மையுடையவர்கள்; கருமமும் - இவர்கள் இங்கு வருங் காரியமும், பிறிது ஓர் பொருள் கருதி அன்று - வேறு ஒரு பொருளை அடைய எண்ணி அன்று; அது கருதின் - அதை எண்ணிப் பார்த்தால், இவர்கள் - இவ்விருவரும், அருமருந்து அனையது - அரிய தேவாமிர்தம் போன்ற ஒன்று, இடை அழிவு வந்து உளது - இவர்க்கு நடுவே இழந்தமை நிகழ்ந்துள்ளது; அதனை - அப்பொருளை, இரு மருங்கினும் - தம் வலம் இடம் ஆகிய இருபுறங்களிலும், நெடிது - நெடுக, துருவுகின்றனர் - ஆராய்ந்து தேடுகின்றவர்கள் ஆவர்;

தருமமும் தகவு மிவை தனம்; 'அறத்தினூங் காக்கமுமில்லை, 32. குறள். தகவு: தகுதி, குணம் நடுவுநிலை பெருமை என்பனவும் ஆம். அருமருந்து: கிடைத்தற்கரிய தேவாமிர்தம்; பிராட்டிக்கு மருந்து; 'மருந்தி னனையாள்' 26; 'மருந்தனைய தேவி' (சுந்தர. 612). துருவுதல் - ஊடுருவி ஆராய்ந்து தேடுதல். 'தகவு - கிருபை' என்பது பழையவுரை.

பி - ம். 1. *தகவு விவர்; தகையர் வரு, தகைய ரவர்.*
2. *யிது கருதில், யது தெளியின்.*
3. *தனைய பொரு ளழிவு.* (7)

வேறு

அநுமன் இராம லக்ஷ்மணர்களிடம் அன்புகொண்டு நிற்றல்.

**51. கதமெனும் பொருண்மையிலர் கருணையின் கடலனையர்**
**இதமெனும் பொருளலதொ ரியல்புணர்ந் திலரிவர்கள்**
**சதமனஞ் சுறுநிலையர் தருமனஞ் சுறுசரிதர்**
**மதனனஞ் சுறுவடிவர் மறலியஞ் சுறுவிறலர்.**

கதம் எனும் பொருண்மை இலர் - இவர்கள் வீரர்க்குள்ள கோபத் தன்மையை மேற்கொண்டார் அல்லர்; கருணையின் கடல் அனையர் - கருணையில் கடல் போன்றவர்கள்; இதம் எனும் பொருள் அலது - நன்மைதரும் பொருளையே அல்லாமல், இவர்கள் - இவ்விருவர்களும், ஓர் இயல்பு உணர்ந்திலர் - வேறு ஒரு மாறுபாடான தன்மையை நினைப்பவ ரல்லர்; சதமன் அஞ்சுறு நிலையர் - இந்திரனும் கண்டு அஞ்சும் தோற்றப் பொலிவை யுடையவர்கள்; தருமன் அஞ்சுறு சரிதர் - தருமதேவனும் கண்டு அஞ்சும்படியான ஒழுக்க மேம்பாடுடைய வர்கள்: மதனன் அஞ்சுறு வடிவர் - மன்மதனும் (வெட்கி) முன் னிற்க அஞ்சும் திருமேனி அழகமைந்தவர்கள்; மறலி அஞ்சுறு விறலர் - யமனும் கண்டு அச்சங்கொள்ளும் வீரப் பெருமிதமுடையவர் ஆவர்.

இராமபிரானைக் கருணைக்கடல் என்பது 34-ம் செய்யுள் உரையி லும், பால. கடிமணப். : 99; உயுத்த. பிராட்டி களங்காண். 13 என்ற விடங்களிலும் காண்க; இதமெனும் பொருள்-பிறர்க்கு நன்மை செய்வது என்பதை ஒரு நோக்கமாக உடைமை; சதமன்-இந்திரன்; சதமகன் என் பதின் விகாரம். நூறு பரிவேள்விகள் செய்து அதன் பயனுய் அடையக் கூடியது இந்திரபதவி ஆதலின்; அயோத். கிளைகண்டு: 63. தருமன்- தருமராஜன்; இவன் தருமத்தைப் பரிபாலிக்கும் தேவன். சரிதர் - நடை அல்லது ஒழுக்கத்தையுடையர். மதனன் - மன்மதன்; இவன் மதன் எனவும் வழங்கப் பெறுவன். மறலி - யமன்: இவன் தரும னின் வேருனவன் ஆதலின், இங்குத் தருமனினின்று பிரித்துத் தனியே கூறப்பெற்றுன் என்க. மறலி - கொடுமை மிக்கவன்; இச் செய்யுளுக்கு:—

தருமன் றண்ணளி யாறன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே. (சீவக. 160)

என்பது ஒப்புமையாதல் நோக்கத்தக்கது.

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் இருபாடல்கள் அதிகமாகக் காணப்பெறுகின்றன :—

(1) உலகுதங் கியபலதொல் லுயிர்களுய்க் திடுபரிசில்
இலகுமிங் கிதமுடைய ரிசையினின் புறுசுருதி
அலகில்விஞ் சைகளுடைய ரகிலமுந் தொழுகழலர்
விலகுதிண் கொடுவினைகள் வெகுளிகொண் டடுவிறலர்.

(2) சிவனுமம் புயமலரி னயனுமிந் திரைகொழுநன்
அவனும்வந் திடவுதவு மரியெனும் பிரமமது
துவளுமஞ் சனவுருவு தொடருசெங் கமலமலர்
உவமைகொண் டிதிலொருவ னுலகில்வந் ததுகொலென.

பி - ம். 1. கதமெனும் பொறுமையிலர், கதமிகுந் திறலுடையர்.
3. தரும மஞ்சுறு சரிதர், தரும மஞ்சுறு நெறியர்.
4. மறலி யஞ்சுறு மறவர், மறலி யஞ்சுறு வலியர். (8)

52. என்பன பலவு மெண்ணி
யிருவரை யெய்த நோக்கி
அன்பின னுருகு கின்ற
வுள்ளத்த னார்வத் தோரை
முன்பிரிந் தனையர் தம்மை
முன்னினு னென்ன நின்றான்
தன்பெருங் குணத்தாற் றன்னைத்
தானல தொப்பி லாதான்.

தன் பெரும் குணத்தால் - தன்னுடைய பெருமை தங்கிய குணச் சிறப்புக்களால், தன்னை தான் அலது ஒப்பு இலாதான் - தனக்குத் தானே ஒப்புமை அல்லால் உவமை கூற வேறு ஒன்று இல்லாத (உயர்வுடைய) அநுமன், என்பன பலவும் எண்ணி - என்று மேற்கூறியவாறு பலவிதங்களால் எண்ணிப் பார்த்து, இருவரை எய்த நோக்கி - இராம லக்ஷ்மணர்களாகிய அவ்விருவர்களை அடையக் கருதி, அன்பினோடு உருகுகின்ற உள்ளத்தன் - அன்பினால் உருகுகின்ற மனத்தையுடைய வனாகி, ஆர்வத்தோரை - அன்புடையவரை, முன்பிரிந்து - முன்னம் ஒருகால் விட்டுப் பிரிந்து, அனையர் தம்மை-அந்த அன்புடையவர்களை, முன்னினான் என்ன நின்றான்-திரும்பவும் எதிர்ப்பட்டு நேரிற்கண்டவன் போல் மகிழ்ச்சியுடன் நின்றான்.

தன்னைத்............தொப்பிலாதான் ; 'தனக்குவமை யில்லாதான்' (குறள். 7) என்றதை நினைப்பூட்டுவதோடு, 'தன்னலதொரு பொருள் தனக்கு மேலிலான்' (ஆரணிய. 1115), என்ற ஆண்டானாகிய இராம பிரானுக்குரிய சிறப்பாலேயே இங்கு அவனடியானான அநுமனைச் சிறப் பித்த பெருமையும் ஆம். முன் பிரிந்தனையர் எனக் கூட்டியும் பொருள் கூறலாம். 'அன்பின னுருகுகின்ற உள்ளத்தன்.' இவ்வாறே விபீஷ ணாழ்வான், ஸ்ரீ ராமபிரானைக் காண நினைத்தபோதே,

"முன்புறக் கண்டிலேன் கேள்வி முன்பிலேன்
அன்புறக் காரண மறிய கிற்றிலேன்
என்புறக் குளிருநெஞ் சுருகு மேலவன்
புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்"

(உயுத்த. விபீடணனடைக் : 21)

என்ற, அவன் மன ஈடுபாடுகளும் மெய்ப்பாடுகளும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. எய்த நோக்குதல் - உற்று நோக்குதல் ; சுந்தர. 516.

'பண்டிவரைக் கண்டறிவது எவ்வூரில் யாமென்றே பயில் கின்ருளால்' (பெரிய திருமொழி. 8. 1 : 9) என்ற அடிக்குப் பெரியவாச் சான் பிள்ளை அவர்களின் வியாக்யானம் இங்கு நோக்கத்தக்கது.

பி - ம். 1. பலவும் பன்னி ; யிருவரை யியைய நோக்கி.
2. அன்பினே டுருகுகின்ற.
3. முன்பிறந் துடையர் தம்மை முன்னின ரென்ன ; முன்னினு லென்ன.
4. குணத்தாற் றன்னிற் ; தானலா தெய்த லாதான். (9)

53. தன்கன்று கண்ட வன்ன
தன்மைய தறுகட் பேழ்வாய்
மின்கன்று மெயிற்றுக் கோண்மா
வேங்கையென் றினைய வேயும்
பின்சென்று காதல் கூரப்
பேழ்கணித் திரங்கு கின்ற
என்கன்று கின்ற வெண்ணிற்
பற்பல விவரை யம்மா.

'தறுகண் பேழ் வாய் - அஞ்சாமையையும் பிளந்த வாயை யும், மின் கன்றும் எயிற்று - மின்னலும் தன் ஒளியால் குறைந்து வருந்தும்படியான பற்களையுமுடைய, கோள்மா - சிங்கமும், வேங்கை - வேங்கையும், என்று - என்று சொல்லக்கூடிய, இனையவேயும் - இவை போன்ற கொடிய வனவிலங்குகளும், தன் கன்று கண்ட அன்ன - அவை ஒவ்வொன்றும் தத்தம் கன்றைக் கண்டது போல, தன்மைய - அன்புத் தன்மையை உடையனவாய், பின் சென்று காதல் கூர - இவ் விருவர் பின்னே சென்று அன்பு மேலிட, பேழ்கணித்து இரங்குகின்ற - கண்மூடி வருந்துகின்றன ; இவரை - (இவ்வாறு) இவர்களை நினைத்து, பல்பல எண்ணி - பலவாறு எண்ணி, என் கன்றுகின்ற - ஏன் வருந்து கின்றன ? (இஃது எனக்குத் தெரியவில்லை என்றபடி). அம்மா-இரக்கப் பொருளது.

கோண்மா - சிங்கம்; 'கும்பத்தின் கரியைக் கோண்மாக் கொன்றென' (உயுத்த. இரணியன்வதைப். : 125); பேழ் கணித்தல் - கண் மூடி வருந்துதல்; அஞ்சி வெருளுதலும் ஆம்; 'பேழ் கணித்து......... .........துயில் கொண்டார்'; (பெரியபுரா. திருநாவுக். 275.); 'பிற்பானின்று பேழ் கணித்தால்' (திருவாசகம். 45, 7); 'பேழ்கணித்து - பேராசைப்பட்டு' என்பது பழையவுரை. இனையவேயும்; உம்மை உயர்வு சிறப்பை உணர்த்துவது. தன் கன்று கண்டவன்ன; இதே உவமை இராமபிரானைக் கண்ட அயோத்தி நகரமாந்தர்,

> மின்பொருவு தேரின்மிசை வீரன்வரு போழ்தில்
> தன்பொருவில் கன்றுதனி தாவிவரல் கண்டாங்
> கன்புருகு சிந்தையொடு மாவுருகு மாபோல்
> என்புருக நெஞ்சுருக யாருருக கில்லார்.

(அயோத். கைகேசி சூழ்வினை : 94).

என்றவிடத்தும் காண்க. அம்மா, வியப்புப் பொருளதும் ஆம்.

பி - ம். 1. *கண்ட தன்ன, கண்ட வன்னை தன்மையிற்.*

2. *முனைய கோண்மா; நினைய வேனும்; வேங்கையே முதல வெல்வாம்.*

3. *பின் கன்று காதங் கூர; பேய்தணித், பேசணித், பேய் தணித், பேய்தனித், பேய்கிலா, பேய்கணத்; காதல் கூர்ந்த பெரிதுறத் தம்மிற் கூடி.*

4. *என்கன்று இன்ற தென்னிற், என் கன்றுஇன்ற தென்னில்; பற்பல விசைய வம்மா; பற்பல் விரைச வம்மா.* (10)

54. மயின்முதற் பறவை யெல்லா
 மணிநிறத் திவர்தம் மேனி
வெயிலுறற் கிரங்கி மீதாய்
 விரிசிறைப் பந்தர் நீங்கா
இயல்வகுத் தெய்து கின்ற
 வினமுகிற் கணங்க ளெங்கும்
பயில்வுறத் திவலை சிந்திப்
 பயப்பயத் தாழும் பாங்கர்.

'மயில் முதல் பறவை எல்லாம் - மயில் முதலான பறவைகள் யாவும், மணி நிறத்து - அழகிய ஒளி வீசும் இரத்தினங்கள் போன்ற

நிறங்களைக் கொண்ட, இவர் தம் மேனி - இவர்களுடைய திருமேனி களில், வெயில் உறற்கு இரங்கி - வெயில் படுவது கண்டு வருந்தி, மீது ஆய் - இவர்களுக்கு மேலாக, விரி சிறை பந்தர் நீங்கா - விரிந்த தம் சிறகுகளாகிய பந்தல் விட்டு அகலாதபடி, இயல் வகுத்து - அழகுற அமைத்து, எய்துகின்ற-இவர்களைத் தொடர்ந்து உடன் செல்கின்றன ; இன முகில் கணங்கள் - சிறந்த மேகக் கூட்டங்கள், எங்கும் - இவர்கள் செல்லுமிட மெங்கும், பயில்வு உற - பொருந்துமாறு, திவலை சிந்தி - மழைத் துளிகளைச் சிந்தி, பய பய - மெல்ல மெல்ல, பாங்கர் - இவர்கள் அருகே, தாழும் - தாழ்ந்து செல்கின்றன.

மணி நிறம் என்பதற்கு, நவமணி எனப் பொதுவாகக் கொண்டு இராமபிரானுக்கு நீலமணியும், இளைய பெருமானுக்கு மாணிக்கமணி யும் கொள்ளலாம். மயின்முதற் பறவையெல்வாம்...........தெய்து கின்ற : இங்கு ; 'மேலாப் பரந்த வெயில்காப்பான், விநதை சிறுவன் சிறகென்னும், மேலாப் பின்கீழ் வருவானை விருந்தா வனத்தே கண் டோமே' (நாச்சியார் திருமொழி : 14 : 3.) ; 'அவர்திண் சிறை, விரியு நீழலின் மேவவிண் சென்றனன்' (ஆரணிய. 217.) என்பன ஒப்பு நோக்கத் தக்கன. முகிலினக் கணங்கள் எனினுமாம். பயப்பய ; பால : எழுச்சிப் : 53 ; சுந்தர. 1066. பாங்கர் - பக்கம், பாங்கு என்பதன் ஈற்றுப்போலி. 'இயல் - பாட்டு' என்பது பழையவுரை.

பி - ம். 1. *நிறத்தவர் கண்மேனி.*
2. *வெயில்படற் கிரங்கி, கிரங்கி மேலாய், கிரங்கி மீதா ; விருஞ் சிறைப் பந்தர் வீசி.*
3. *எயில் வகுத், வகுத் திரங்கு கின்ற ; விண்முகிற் கணங்கள்.*
4. *பயில்புனற் றிவலை சிந்திப் பறந்தன விசும்பின் பாங்கர் ; சிந்திப் பைப்பயத் தழுவும்.* (11)

55. காயெரி கனலுங் கற்கள்
கள்ளுடை மலரே போலத்
தூயசெங் கமல பாதந்
தோய்தொறுங் குழைந்து தோன்றும்
போயின திசைக டோறு
மரனெடு புல்லு'மெல்லாம்
சாய்வுறுந் தொழுவ போலிங்
கிவர்களோ தரும மாவார்.

காய் எரி கனலும் - சுடும் நெருப்புப்போல எரியும், கற்கள் - இவ் வனத்திலுள்ள பருக்கைக் கற்கள் எல்லாம், தூய செம் கமல பாதம் தோய் தொறும் - (இவர்களுடைய) பரிசுத்தமான சிவந்த தாமரை மலர்கள் போன்ற திருவடிகள் படியும் போதெல்லாம், கள் உடை மலரே போல - தேனைத் தம்மிடங்கொண்ட (புது) மலர்களே போல, குழைந்து தோன்றும் - நெகிழ்ந்து மென்மையுடன் விளங்குகின்றன; போயின திசைகள் தோறும் - இவர்கள் சென்ற திசைகளில் எல்லாம், மரன் ஒடு புல்லும் எல்லாம் - மரங்களோடு புற்கள் முதலிய யாவும், இங்கு தொழுவ போல் - (இவர்களை நோக்கி) இங்கு வணங்குவன போல, சாய்வுறும் - சாய்ந்து நிற்கின்றன; (ஆதலின்), தருமம் ஆவார் - தருமமே உருவெடுத்து வந்தவர், இவர்களோ - இவர்கள் தாமோ ?

மரமும் புல்லும் வணங்குவனவாகக் கூறியது தற்குறிப்பேற்றவணி. இவர்களோ: ஓகார இடைச்சொல் இங்கு ஐயப்பொருளோடு வியப்புப் பொருளையுங் கொண்டது என்னலாம்.

பி - ம். 1. *காயெரி கனலுங்; மலர்கள் போலத்.*

3. *புல்லொடு மரனு மெல்லாம்; மரங்கள் யாவும்.*

4. *சாய்வுறுந் தாழ்வ போலிங்; தொழுவ போன்ற, தொழுவ போன்று, தொழுவ போன்றிங்; சாய்வுறத் தொழுவ வென்ரு, தொழுமீ தென்னே; போன்ற விவர்களே தருமமாவார்* (12)

56. துன்பினைத் தொடக்கு மாயத்
தொல்வினை துடைத்து நீக்கித்
தென்புலத் தன்றி மீளா
நெறியுய்க்குந் தேவ ரோதாம்
என்பெனக் குருகு கின்ற
திவர்கின்ற தளவில் காதல்
அன்பினுக் கவதி யில்லை
யடைவென்கொ லறித றேற்றேன்.

'துன்பினை-துன்பங்களை, தொடக்கும்-சங்கிலி போலப் பிணைக்கின்ற, மாய தொல் வினை துடைத்து நீக்கி - மாயை காரணமாய் வரும் முன்செய்த பழைய கர்ம வினைகளை யெல்லாம் அழித்துப் போக்கி, தென் புலத்து அன்றி - தென் திசையில் உள்ள யமலோகத்தில்

செலுத்தாமல், மீளா நெறி உய்க்கும் - மீண்டு பிறவியில் வருதல் இல்லாத மோட்சம் என்னும் அழியாப்பதத்தில் சேர்ப்பிக்கும், தேவரோ தாம் - கடவுளோ இவர்கள்? என்பு எனக்கு உருகுகின்ற - இவர்களைக் கண்ட எனக்கு எலும்புகளும் உள் உருகுகின்றன; அளவில் காதல் இவர்கின்றது - எனக்கு அளவற்ற அன்பு மேலோங்கா நிற்கின்றது; அன்பினுக்கு அவதி இல்லை - இவர்கள்பால் எனக்குண்டான அன்பிற்கு ஓர் எல்லை இல்லை; அடைவு என் கொல்-இதனால் எனக்கு உண்டாகக் கூடிய நலம் யாதோ? அறிதல் தேற்றேன் - யான் அறிந்து தெளியேன்!'

துன்பு: துன்பம். வினை அநாதி என்றகொள்கைபற்றி, 'தொல் வினை' எனப்பட்டது. இவை ஆகாமிய சஞ்சித பிராரப்தம் என்னும் மூவகை வினைகளால் ஏற்படுவன என்றேனும், ஆதியாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதிதெய்விகம் என்றேனும் கொள்ளலாம். அடைவென் கொல்; இவர்க்கும் எனக்கும் உள்ள தொடர்பு என்னை யென்பது புலப்படவில்லை என்றேனும், இவர்கள் இங்கு வருவதற்குக் காரணம் யாதோ என்றேனும் கொள்ளலாம்; இவர்கள் இங்கு வரும் வரலாறு அல்லது முறை யாதோ? என்னலும் ஒன்றும். என்பெனக்குருகுகின்ற; இக்கருத்தையே அநுமன் பின்பு சுக்ரீவனிடம் கூறுவதும் காண்க; 155. இங்கே, 'என்புறக் குளிருநெஞ் சுருகு மேலவன், புன்புலப் பிறவி யின் பகைஞன் போலுமால்' (உயுத்த. விபீடணனடைக். 21); அன் பினுக் கவதி யில்லை: 652; பாடலும் அதன் உரையும் ஒப்பு நோக்குக. 'அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழ்', (குறள். 71). அவதி - எல்லை; (பிங்).

'தேவரொப்பரு தலைவர்' (48) என்று தொடங்கும் செய்யுள் முதல், 'கதமெனும் பொருண்மையிலர்' என்ற, (51) ஆம் செய்யுள் முடிய உள்ள 4 பாடல்களால் அநுமன் இராமலக்ஷ்மணர்களின் பொலிவையும், செயல்களையும் நன்கு நோக்கி அவர்களிடம் வியப்பும் ஆர்வமுங் கொண்டு நின்று, 'என்பன பலவும்' (52) என்ற பாட லால் அவர்கள் தரிசனத்தால் தான் கொண்ட மாறுதலையும் கூறி, 'த்ன் கன்று கண்ட' (53) என்ற செய்யுள் முதல் 'துன்பினைத் துடைத்து' (56) என்றவரையில் உள்ள நான்கு பாடல்களால் அவர்க ளின் தெய்வசக்தியைத் தாவரங்கள் முதலிய பிற அஃறிணைப்பொருள் களும் காட்டிய செயல்களால் அவன் அறிந்துகொண்ட செய்தியை மிக அழகுற ஆசிரியர் அமைக்கின்றார். அன்றியும் அநுமனுக்கும் இராம பிரானுக்கும் உள்ள தொடர்பையும் நமக்கு அவர் இங்குக் குறிப்பிடுவதை யும் காண்கிறோம், இவ்வாறு இராமாயணத்திற் சிறந்த பாத்திரங்களுள்

ஒருவனுன அநுமனைக் காவியத்தில் முதன்முதற் புகுத்தி அறிவிக்கும் கம்பநாட்டாழ்வாரின் ஆற்றலை உணர்ந்து நாம் இறும்பூதடைதல் தகும். மூல நூலில், வான்மீகி பகவான், அநுமன் நேரடியாக இராம லக்ஷ்மணர்களைச் சந்தித்துப் பேசத் தொடங்கியதாகவே கூறியுள்ளார், அங்கு அவர்களை வினவும் திறம் விரிவாகக் கூறப்பெற்றுள்ளமை காணலாம். அத்யாத்ம ராமாயணத்தில் அநுமன் இராமலக்ஷ்மணரை நர நாராயணராகவே கண்டு, அவர்கள் மானிட வேடத்தில் வந்ததை வினுவி யறிந்தனன் என்று கூறப்பெற்றுள்ளது.

பி-ம். 1. துடைத்து மாயத், துடைத்து நீங்காத்.

2. தென்புலத் தருமல் மீளா, தென்புலனதன்றி மீளா.

3. தென்மனத் தளவில் காதல், நிவர் நிறத் தளவில் காதல்.

4. யடை வென்சொ லறிதற் கென்றுன், (13)

அநுமன் இராம லக்ஷ்மணர்களை அணுகிப் பேசுதல்.

57. இவ்வழி யெண்ணி யாண்டவ்
விருவரு மெய்த லோடும்
செவ்வழி யுள்ளத் தானுந்
தெரிவுற வெதிர்சென் றெய்திக்
கவ்வையின் ருக நுங்கள்
வரவெனக் கருணை யோனும்
எவ்வழி நீங்கி யோய்நீ
யாரென வியம்ப லுற்றுன்.

செம் வழி உள்ளத்தானும் - நல்வழியே செல்லும் மனத்தை யுடைய அநுமனும், இ வழி எண்ணி - இவ்விதம் ஆலோசித்து, ஆண்டு - அவ்விடத்தே, அ இருவரும் - அந்த இராமலக்ஷ்மணர்கள் இருவரும், எய்தலோடும் - வந்து சேர்ந்ததும், எதிர்சென்று தெரிவு உற எய்தி - அவர்களுக்கு எதிரே போய் அவர்கள் தன்னைக் காணும் படி அடைந்து, 'நுங்கள் வரவு கவ்வை இன்று ஆக என - உங்கள் வருகை துன்பமில்லாத நல்வரவு ஆகுக!' என்று இன்மொழி பகர, கருணையோனும் - கிருபை மேற்கொண்ட இராமபிரானும், 'நீ எ வழி நீங்கியோய் - நீ எங்கிருந்து வந்தவன்? யார் - யாவன்?' என - என்று அநுமனைக் கேட்க, இயம்பல் உற்றுன் - அநுமனும் மறுமொழி

கூறத் தொடங்கினன். (அநுமன் கூறிய மறுமொழி அடுத்த இரு செய்யுள்களால் விளங்கும்).

இராமபிரானைக் கருணையோன் என்பது, 51 - வது செய்யுளில், 'கருணையின் கடலனையர்' என்பதன் உரையிற் காண்க. 'நுங்கள் வரவு கவ்வையின்ருக'; நீங்கள்வருவது உலகத்துக்குத் துன்பமில்லாம லிருக்கக்கடவது' என்பது பழையவுரை. ஒப்பு: 'தீதில்வர வாகதிரு நின்வரவு' (ஆரணிய. 257). புதிதாக வருகிறவரை நல்வரவு கூறும் இயல்பு இதுவென உணரலாம். இராமபிரான் அயோத்தி மக்களைக் காணும்போது 'இடரிலை' (பால. திருவவதாரப்: 135) என்று கூறியதுங் காண்க.

பி - ம். 1. இவ்வகை யெண்ணி; யிருவரை யெய்தலோடும், விருயர்க்குத் தெரிவதாகச்.
2. யுள்ளத் தோனுந், தெளிவொடு மெதிர்சென் றேத்தி.
3. கவ்வையின் ருக வுங்கள்; கருணையோடும்.
4. எவ்வயி னுடையோய் நீயா ரியம்பென, எவ்வகை நீங்கி யோய்நீ; விளம்ப லுற்றான். (14)

அநுமன் தன் வரலாறு கூறுதல்.

58. மஞ்செனத் திரண்ட கோல
மேனிய மகளிர்க் கெல்லாம்
நஞ்செனத் தகைய வாகி
நளிரிரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சமொத் தலர்ந்த செய்ய
கண்ணயான் காற்றின் வேந்தற்
கஞ்சனை வயிற்றில் வந்தே
னாமமு மநும னென்பேன.

(அது கேட்ட அநுமன் இராமபிரானை நோக்கி), 'மஞ்சு என திரண்ட கோல மேனிய - மேகம் போல (நீலநிறங்கொண்டு அமைந்த) அழகிய திருமேனியுடையவனே! மகளிர்க்கு எல்லாம் - உன்னைக் காணும் மகளிர் அனைவர்க்கும், நஞ்சு என - விஷம் என்று சொல்லத் தக்க, தகைய ஆகி - தன்மையுடையனவாகி, நளிர் இரும் பனிக்கு தேம்பா - குளிர்ச்சியுடைய பெரும்பனிக்கு வாடாத, கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண - தாமரைமலர்களுக்கு ஒப்பாகி மலர்ந்து

விளங்கும் அழகிய கண்களையுடையோனே! யான் - அடியேனுகிய நான், காற்றின் வேந்தற்கு - வாயுதேவருக்கு, அஞ்சனை வயிற்றில் வந்தேன்-அஞ்சனுதேவியின் வயிற்றில்வந்து பிறந்தேனுவேன்; நாமமும்-என் பெயரும், அநுமன் என்பேன்-அநுமன் என்று அழைக்கப் பெறுவேன்.

இராமபிரான் திருமேனி நீலநிறமாதலின், மஞ்சு என்பதற்கு இங்கு, நீலநிறமான நீருண்டமேகம் எனக் கொள்ளப்பட்டது. இராமபிரான் மேனிக்கு மஞ்சு; சுந்தர. 336. மேகமேனி: மேகம் உலகத்தை உய்விக்க வந்தமையைச் சுட்டியது. மகளிர்க்கெல்லாம் நஞ்சு போன்ற கண்களையுடையவன் என்றது, கண்ட மகளிர்க்குக் காதல்நோய் உண்டாக்கி வருத்துகின்ற தாதலின்; ஒப்பு; 'ஏழைய ராவியுண்ணும் இணைக் கூற்றங் கொலோ அறியேன், ஆழியங் கண்ணபிரான் திருக் கண்கள் கொலோ அறியேன்' (திருவாய்மொழி. 7. 7). நளிரிரும் பனிக்குத் தேம்பாக் கஞ்சமொத் தலர்ந்த கண்ண; இஃது இல் பொருளுவமை. கஞ்சம் கம் - ஜம் - நீரிற் பிறப்பது: கம் - நீர். கமலக்கண்ணன்; பால. கார்முகப்; 62. சுந்தர : 322, 394, 577. அஞ்சனுதேவி; புஞ்சகஸ்தலை என்ற ஓர் அப்ஸரஸ் சாபத்தால் வானரமாகி, கேசரி என்னும் ஒரு வானரனை மணந்தவள்; இவளை வாயுதேவன் விரும்பிக் காதலிக்க இவளிடம் அநுமன் பிறந்தனன் என்னும் இராமாயண உத்தரகாண்டம். அநுமன்; நீண்ட கன்னங்களையுடையவன் என்னும் காரணத்தால் வந்த பெயர்; அநுமன் பிறந்தவுடனே, சூரியன் உதிக்கக்கண்டு ஒருகனி என்று அதனை எண்ணி அதனைப்பற்றித் தின்ன வானில் எழுந்து தாவ, அதைக் கண்ட இந்திரன் சினந்து தன் வச்சிரப்படையால் அவனை அடித்தான்; அவ்வடியால் அவன்தாள் வாய்ப்பூட்டு நழுவித் தாழ்வுற்றது; அவ்வாறு தாழ்வுற்ற கன்னங்களையுடைமையால் அநுமன் எனப் பெயர் வழங்கலாயினன் என்பர். இவனுக்குச் சுவர்ணமேரு என்பது முன் இடப் பெற்ற பெயர் என்பது உத்தர காண்டத்தால் அறியப் பெறுவதாகும்; உத்தர - அநுமப்; 10; மேருமலை போன்ற பேருருவும், பொன்னிறமும் உடைமையால் அப் பெயரிட்டனர் போலும்!

பி - ம்.
1. *மஞ்சன விருண்ட கோல, மஞ்சென கரிய கோல; மேனியீர்.*
2. *நள்ளிரும் பனிக்குத், நளிரும் பனிக்குத்; பனிக்குந் தேம் பாக்.*
3. *கண்ணினீர்.*
4. *எனும வென்றுன, எனும மென்பார், எனும னுமரல்.* (15)

59. இம்மலை யிருந்து வாழு
மெரிகதிர்ப் பரிதிச் செல்வன்
செம்மலுக் கேவல் செய்வேன்
றேவநும் வரவு நோக்கி
விம்மலுற் றனையா னேவ
வினவிய வந்தே னென்ருன்
எம்மலைக் குலமுந் தாழ
விசைசுமந் தெழுந்த தோளான்.

இசை சுமந்து - கீர்த்தியைத் தாங்கி, எ மலை குலமும் தாழ - எந்த மலைக் கூட்டமும் தாழ்வுறும்படி, எழுந்த தோளான் - வளர்ந் தெழுந்த தோள்களையுடைய அநுமன், 'இ மலை இருந்து வாழும் - இந்த ருசிய மூக பருவதத்தில் தங்கியிருந்து வாழ்ந்து வரும், எரி கதிர் பரிதி செல்வன் - எரிகின்ற கிரணங்களோடு கூடிய செல்வனுகிய சூரிய பகவானுடைய, செம்மலுக்கு - புதல்வனுன சுக்கிரீவன் என்பவனுக்கு, ஏவல் செய்வேன் - அவன் ஏவும் பணிகளாகிய தொண்டினைப் புரிந்து வருவேனுவேன்; தேவ நும் வரவு நோக்கி-இறைவ உங்களுடைய வரவை எதிர்பார்த்து. அனையான் - அந்தச் சுக்கிரீவன், விம்மல் உற்று - கலக்கம் அடைந்து, ஏவ - நீவிர் யாவரென்று அறிந்து வருமாறு கட்டளையிட, வினவிய வந்தேன் - உங்களைக் கேட்டறியும் பொருட்டு, யான் இங்கு வந்தேன்', என்ருன் - என்று கூறினுன்.

செல்வன்: இங்குத் தலைவன் அல்லது இறைவன் என்னும் பொருளது; 'ஆலமர் செல்வன்' என்றது போல. செம்மல் - தலைமை; இங்கு மகனுக்கு ஆயிற்று. விம்மல் - அச்சத்தால் உண்டாகும் மெய்ப்பாடு. செம்மலுக் கேவல் செய்வேன்; 'ஏவக் கடவ பணிசெய் வேன்' (சுந்தர. 602). வினவிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினை யெச்சம்; 'நின்னைக் காணிய வந்தே னென்ருள்' (ஆரணிய. 262.) என்பதுபோல. மலைக்குலம்-குலமலைகளும் ஆம்; குலம்-உயர்வு. தேவ: ஒருமைப் பன்மை மயக்கம். நும் என்றது இளைய பெருமானையும் உடன் கூட்டியுரைத்ததும் ஆம்.

பி-ம். 1. மெரிகதிர்ச் செல்வன் றந்த.
3. றனைய னேவ, றவனிங் கேவ; வினவுதற் கடைந்தே னென்ருன். 16)

இராமபிரான் அநுமனைப்பற்றித் தெளிவுறல்.

60. மாற்றமஃ துரைத்த லோடும்
வரிசிலைக் குரிசின் மைந்தன்
தேற்றமுற் றிவனி னூங்குச்
செவ்வியோ ரின்மை தேறி
ஆற்றலு நிறைவுங் கல்வி
யமைதியு மறிவு மென்னும்
வேற்றுமை யிவனோ டில்லை
யாமென விளம்ப லுற்றான்.

மாற்றம் அஃது உரைத்தலோடும் - அந்த மறுமொழி அநுமன் சொன்னவுடன், வரி சிலை குரிசில் மைந்தன் - கட்டுக்கள் அமைந்த வில்லையுடைய அந்த அரசகுமாரனான இராமபிரான், தேற்றம் உற்று - தெளிவடைந்து, இவனின் ஊங்கு செவ்வியோர் இன்மை தேறி - இவனைவிட மேலான சிறப்பமைந்தவர் இல்லை என்பதை உறுதி செய்து கொண்டு, ஆற்றலும் - பராக்கிரமமும், நிறைவும் - நிறைந்த குணங்களும், கல்வி அமைதியும் - கல்வியால் அடையும் அடக்கமும், அறிவும் - ஞானமும், என்னும் - என்று சொல்லக் கூடியவை யனைத்தும், இவனோடு வேற்றுமை இல்லை ஆம் - இவனு டனே வேறுபடாமல் இணைந்துள்ளனவாம்; என - என்று எண்ணி, விளம்பல் உற்றான் - (தன் அருகிலிருந்த இலக்குவனோடு) சொல்லத் தொடங்கினான். (விளம்பியவை பின்வருவனவாம்.)

ஆற்றல்......மறிவுமென்ப; ஆற்றல் முதல் அறிவு ஈறாகக் கூடிய சிறப்புக்கள் யாவும் இவனை விட்டு வேறுபட்டன அல்ல; அதாவது, அக்குணங்களே இவனாக உருக்கொண்டுள்ளன என்பதாம். இது 'கலையின தகலமும், காட்சிக்கின்பமும் சிலையின தகலமும் வீணைச் செல்வமும் மலையினி னகலிய மார்ப னல்லதிவ், வுலகினி லிலையென வொருவ னுயினான்' (சீவக. 411.) என்ற செய்யுளுக்கு ஒப்புமையாக அமைந்துள்ளமை காண்க. இராமபிரான் அநுமனை அறிந்து கொண்ட திறம், 'புலமிக் கவரைப் புலமை தெரிதல், புலமிக் கவர்க்கே புலனாம்'; (பழமொழி. 7.) என்றமையை நினைப்பூட்டுகின்றது.

பி-ம். 1. *மாற்றம துரைத்த லோடும்.*
2. *தேற்றமுற் றறிவி னூங்குஞ்; செவ்வியோ ருண்மை தேரில்.*
3. *ஆற்றலு மிசையுங் கல்வி, ஆற்றலு நிறையுங்; மறிவு மென்ப, மறிவு மெல்லாம், நிலையுங் கல்வி;*
4. *யிவன்பா லில்லை யெனக்கொண்டு.*

இராமபிரான் அநுமனைப் பாராட்டி இலக்குவனிடம் கூறுதல்.

61. இல்லாத வுலகத் தெங்கு
மிங்கிவ னிசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக்
கடலுமே யென்னுங் காட்சி
சொல்லாலே தோன்றிற் றன்றே
யார்கொலிச் சொல்லின் செல்வன்
வில்லார்தோ ளிளைய வீர
விரிஞ்சனோ விடைவல் லானோ.

இங்கு - இவ்வுலகத்தில், இசைகள் கூர - புகழ் மிகும்படி, இவன் கல்லாத கலையும் வேத கடலும் - இவ் அநுமன் பயிலாத கலைகளும் கடல்போலப் பரந்த வேதங்களும், உலகத்து எங்குமே இல்லாத - உலகங்கள் யாவற்றினும் எங்குமே இல்லாதனவாம்; என்னும் - இவ்வாறு கூறுதற்கமைந்த, காட்சி - பிரத்தியட்சப் பிரமாணம் சொல்லாலே தோன்றிற்று - (இவன்) சொற்களினாலே புலப்படுவதாயிற்று; அன்றே - அன்றோ? இ சொல்லின் செல்வன் - இந்தச் சொற்செல்வத்தையுடைய இவன், யார்கொல் - யாராக இருத்தல் கூடும்? வில் ஆர் தோள் இளைய வீர - வில்லைத்தாங்கிய புயத்தையுடைய இளைய வீரனே! விரிஞ்சனோ - இவன் பிரமதேவனோ? விடை வல்லானோ - இடபம் ஏறிச் செலுத்தவல்ல சிவபெருமான் தானோ?'

'வேதக்கடல் என்று கூறும்படி இவன் ஒளி நிறைந்து விளங்குகின்றான்; அஃது இவன் ஆராய்ந்து கூறும் சிற்சில சொற்களாலேயே நன்கு விளங்குகின்றது' என்று கூறினன் இராமபிரான் என்க. எந்த நேரத்தில் இடையூறு விளையுமோ என்ற கவனத்தோ டிருந்ததுபற்றி இலக்குவனை 'வில்லார் தோள் இளைய வீரவென' விளித்தான் இராமபிரான் என்க. 'வில்லை யூன்றிய கையோடும் வெய்துயிர்ப் போடும் வீரன், எல்லை காண் பளவும் நின்றான், இமைப்பிலன் நயனம் என்றான்' என்பது (அயோத். குகப் : 42.); இந்த அறிவாற்றல் படைத்தவனிடம் மிகவும் கவனமாக உரையாடுதல் நலம் என்று அறிவிக்க 'இளையவீர' என்றான் என்னலுமாம். இளையவீரன்; ஒப்பு. அயோத். நகர் நீங்கு : 129 ஆரணிய : 777. காத்தற் கடவுளாகிய திருமால் உருவத்திருமேனி கொண்டு இராமபிரானாக அவண் போந்தனன் ஆதலின், தன்னை நீக்கி

ஏனை யிருவரையுமே இங்குக் குறித்தான் என்பதாம். கொல் - ஐயப் பொருளில் வந்தது.

இனி, இசைவு கூற எனப் பாடங்கொண்டு, இவனுக்கு ஒப்புமை சொல்லப் புலவர்கள் கல்லாதன ஆம். இவன் கலைக்கடல் வேதக்கடல் என்னும் காட்சி சொல்லாலே தோன்றிற்று என்று பொருள்கொள்ளலும் ஏற்கும். முதன்முதலின் இராமன் அநுமனைக் கண்டபோது அவன் உள்ளத்துக் கிளைத்த எண்ணங்கள் இவை என்க. இராவணனும் அநுமனை முதன்முதற் கண்டபோது, 'நேமியோ குலிசியோ நெடுங்கணிச்சியோ, தாமரைக் கிழவனோ தறுகட் பஃறலைப் பூமிதாங் கொருவனோ" (சுந்தர. 1112) என்று ஐயுற்றதையும் ஒப்பு நோக்குக. 'இல்லாத உலகத்தெங்கும் இயங்குவான் - நிலையற்று, புவனத்தில் இயங்கும் ஆதித்தனிடத்திலே, கல்லாத கலை - ஐந்திர வியாகரணம்' என்பன பழையவுரை.

இங்கு இராமபிரான் இலக்குவனிடம் கூறியனவாக வான்மீகத்து உள்ளவை பின்வருமாறு :

'இவன் மொழிவதில் மிகவும் சிறந்தவன். ருக், யஜுஸ், ஸாமம் என்னும் மூன்று வேதங்களையும் உணராதவன் இவ்வாறு பேசுவது இயலாது. ஒன்பது வியாகரணங்களையும் இவன் நன்றாக உணர்ந்திருக்கின்றனன் போலும். இவன் இத்தனை நேரம் பேசியிருப்பினும், அப்பேச்சில் சிறிதேனும் பிழையில்லை; இவன் பேசும்போது முகத்திலாவது, கண்களிலாவது, நெற்றியிலாவது, புருவங்களிலாவது மற்றுள்ள எந்த உறுப்பிலாவது சிறிதும் விகாரம் தோன்றிலது. மிகவும் விரிவின்றியும், ஐயமின்றியும், விரைவின்றியும், மெதுவின்றியும், ஒலிகள் மார்பில் தோன்றிக் கண்டத்தில் ஒலித்து, மத்ய ஸ்வரத்தில் ஒலிக்கின்றன. நன்றாகப் பழக்கங்கொண்டு, பிழை சிறிதுமின்றி, மெதுவும், வேகமுமில்லாமல், நடுத்தரமாக இனிமையாகப் பேசுகின்றான். உதாத்த அநுதாத்த ஸ்வரிதங்களென்னும் ஸ்வரங்களோடு கூடிய வியப்பை விளைக்கின்ற இவனுடைய சொற்களைக் கேட்பின், வெட்டுவதற்காக உருவின வாளுடன் வரும் பகைவனின் மனமும் கொடுமை நீங்கி மகிழ்ச்சியடையா திராது. இவன்போல ஒரு தூதன் எந்த அரசனுக்கு உள்ளானோ அவ்வரசனின் காரியங்கள் எவ்வாறு கைகூடாமற்போகும்? ஆதலின், இவனுடன் நீ மிகவும் அன்புடனும் ஊக்கத்துடனும் பேசுவாயாக'! என்றனன்.

பி - ம். 1. தெங்கு மியங்குவா னியல்பு கூறக், வுலகத் திங்கெ னினிமை கூறக், கெ னியல்பு கூறக்; னியங்குவா னிசைகள் கூறக், னியங்கு வானியல்பு கூறக்; னிசைவு கூறக்.
2. கடனுமே கடந்த காட்சி.
3. சொல்லாலே தோற்றிற் றென்று லாரோவிச் சொல்லின் செல்வன்; யாரேவிச்; தோன்றிற் றென்னே, தோன்று மென்னே.
4. தோளினை யமைந்த; வினைய மைந்தா; விடை வலானே. (18)

62. மாணியாம் படிவ மன்று
மற்றிவன் வடிவ மைந்த
ஆணியிவ் வுலகுக் கெல்லா
மென்னலா மாற்றற் கேற்ற
சேணுயர் பெருமை தன்னைச்
சிக்கறத் தெளிந்தேன் பின்னர்க்
காணுதி மெய்ம்மை யென்று
தம்பிக்குக் கழறிக் கண்ணன்.

'மைந்த! - இளையோனே! இவன் வடிவம் - இவன் உருவம், மாணியாம் படிவம் அன்று - இப்பொழுது காணப்பெறும் சாதாரண பிரமசாரி உருவம் அன்று; மற்று - பின் யாதெனில், இ உலகுக்கு எல்லாம் ஆணி என்னலாம் - இந்த உலகங்களுக்கெல்லாம் ஓர் அச்சாணி என்றே கூறலாம்; ஆற்றற்கு ஏற்ற - இவன் பராக்கிரமத்திற்குத் தக்கதான, சேண் உயர் பெருமை தன்னை - இவனுடைய மிகவும் மேம்பட்ட சிறப்புக்களை, சிக்கு அற தெளிந்தேன் - குற்றமறத் தெளிவாக யான் அறிந்துகொண்டேன்; பின்னர் மெய்ம்மை காணுதி - பிறகு நீயும் இதன் உண்மையைக் கண்டுகொள்ளப் போகிறாய்;' என்று தம்பிக்கு கண்ணன் கழறி - என்று தம்பியாகிய இலக்குவனுக்கு இராமபிரான் கூறி,

இச் செய்யுள் அடுத்த இருபாடல்களுடன் இயைந்து குளகமாய் 63-ஆம் பாடலில் உள்ள 'என்றான்' என்னும் வினைகொண்டு முடியும். மாணி: 47-ம் செய்யுள் உரை நோக்குக; ஆணி - அச்சாணி; குறள். 667. இங்குக் கூறியவாறே, சுந்தர. 28-இலும், 591-இலும் ஆசிரியர் அநுமனைக் கூறுதல் காண்க. சேணுயர் - ஒரு பொருட் பன்மொழியும் ஆம். 'சேணுயர் திருக்காளத்தி மலை' பெரியபு. கண்ணப்ப: 96). ஆணி: பொன்னின் மாற்றை உரைத்து

மதிப்பிடத்தக்க உரையாணி என்னலும் ஆம்; இராமபிரானுக்குக் கண்ணன் என்ற பெயர் பயிலப்பெறுவது இந்நூலிற் பெரிதுங் காணலாம். கண்ணன் என்பதற்கு, அழகிய கண்களையுடையவன்; அருள் உடையோன், கருநிறமுடையவன் எனப் பலபொருள் கூறுவர். மெய்ம்மை: மகரவொற்று மிகுந்தது.

இதன்பின் சில பிரதிகளில்,

"மற்றுமிவ் வுலகத் துள்ள முனிவர்வா னவர்க ளாரிச்
சொற்றிற முடையார் மற்றுச் சுருதியின் றெருகுதி யாவும்
முற்றறி தருமிம் மாணி மொழிக்கெதிர் முதல்வ ராய
பெற்றியர் மூவர்க் கேயும் பேராற்ற லரிது மன்னே"

என ஒரு பாடல் காணப்பெறுகின்றது.

பி-ம். 1. மாணியாம் வேட மன்று, வடிவ மன்று, வடிவு மைந்த; மைந்தா.
2. ஆணியா முலகுக்; மெண்ணலா மமைந்த பிறம்.
3. பெருமைத் தன்மை; சிக்கெனத் தெரிந்தேன்; தெளிந்தேன் பின்னும்.
4. காணுதி யெம்பி யென்று. (19)

இராமபிரான் சுக்கிரீவன் இருப்பிடத்தை வினவுதல்.

63. எவ்வழி யிருந்தான் சொன்ன
கவிக்குலத் தரசன் யாங்கள்
அவ்வழி யவனைக் காணு
மருத்தியி னணுக வந்தேம்
இவ்வழி நின்னை யுற்ற
வெமக்குநின் னின்சொ லன்ன
செவ்வழி யுள்ளத் தானைக்
காட்டுதி தெரிய வென்றான்.

(பின் இராமபிரான் அநுமனை நோக்கி), 'சொன்ன - நீ சொன்ன, கவி குலத்து அரசன் - வாநர குலத்திற்குத் தலைவனான சுக்கிரீவன், எ வழி இருந்தான் - எவ்விடத்தில் உள்ளான்? யாங்கள் - நாங்கள், அ வழி அவனை காணும் - அவ்விடத்திற் சென்று அவனைப் பார்க்கும்; அருத்தியின் - விருப்பத்தோடு, அணுக வந்தேம் - அவனைச் சார வந்துள்ளோம்; இ வழி நின்னை உற்ற எமக்கு - இவ்விடத்தில் உன்னை எதிர்ப்பட்ட எங்களுக்கு, நின் இன் சொல் அன்ன-

உன் இனிய சொல்லே போன்ற, செம் வழி உள்ளத்தானை - நேர்வழி செல்லும் மனமுடைய அந்தச் சுக்கிரீவனை, தெரிய - நாங்கள் தெரிந்து கொள்ளுமாறு, காட்டுதி என்ருன்-எங்களுக்குக் காட்டுவாயாக!' என்று கூறினுன்.

இவ்வழி, எவ்வழி, அவ்வழி என்பவற்றில் : வழி - இடம் ; 'எவ் வழி யுறைந்தா னம்முன்' (அயோத். குகப் : 38) எனக் குகப் பெருமானைப் பரதாழ்வான் உசாவியது காண்க. அருத்தி : ஆர்த்தி என்ற வடசொல்லின் திரிபு. நின் இன் சொல் அன்ன உள்ளம்: உன் சொல் எப்படி இன்பந் தருகிறதோ அப்படி இன்பம் விளைவிக்கும் மனம் ; இதனுல் சுக்கிரீவனுடைய மனம் அநுமன் சொல்லே போலத் தூய்மையும் இனிமையும் தருவது ஆகும் என்று இராமபிரான் ஊகித்துக் கூறினுன் என்க. 59-ஆம் செய்யுளில் அநுமன் தன் தலைவனை 'பரிதிச் செல்வன் செம்மல்' என்று மட்டுமே கூறியிருக்க, இங்கு இராமபிரான் சுக்கிரீவனைக் 'கவிக்குலத்தரசன்' என்று குறித்தது, அவனுக்குப் பின்னே விளையவிருக்கும் நன்மையை உட்கொண்டாகும்.

சில பிரதிகளில் இச்செய்யுளிலிருந்து நட்புக்கோட் படலம் தொடங்கும்.

பி - ம். 1. *கவிக்குலத் திறைவன் ; சொற்ற கவிக்குலத்.*
2. *லனுமி வந்தோம்.*
3. *நின்னை யுற்றேம் ; வெமக்குரீ யின்று சொன்ன, வெமக்கினி யென்கொ லென்ன.*
4. *யுள்ளத் தோனை, யுள்ளத் தோனே.* (20)

அநுமன் இராம லக்ஷ்மணர்களிடம் கூறிய உபசார மொழிகள்.

64. மாதிரப் பொருப்போ டோங்கி
வரம்பிலா வுலகின் மற்றிப்
பூதரப் புயத்து வீரர்
நும்மொக்கும் புனிதர் யாரே
ஆதரித் தவனைக் காண்டற்
கணுகினி ரென்னி னன்னுன்
தீதவித் தரிதிற் செய்த
செய்தவச் செல்வ நன்றே.

'மாதிர பொருப்போடு - திக்குக்களின் எல்லைகளில் சுற்றி அமைந்த சக்கரவாளகிரி என்னும் மலையோடு, ஓங்கி - நிகராக

உயர்ந்து வளர்ந்துள்ள, வரம்பு இலா - எல்லையற்றவையான, உலகின் - உலகத்து, இ - இங்கு எழுந்தருளியுள்ள, பூதர புயத்து - மலைகள் போன்ற தோள்களையுடைய, வீரர் - வீரர்களே ! நும் ஒக்கும் புனிதர் - உம்மை நிகர்க்கும் தூயோர், யாரே - வேறு யாரே உள்ளார் ? (ஒருவரும் இல்லை என்றபடி); அவனை காண்டற்கு - அந்தச் சுக்கிரீவனைக் காண்பதற்கு, ஆதரித்து - விருப்புடன், அணுகினிர் என்னின் - (நீவிர்) வந்து சேர்ந்தீர்கள் என்றால், அன்னான் - அந்தச் சுக்கிரீவன். தீது அவித்து - தீமை விளைக்கும் பாவங்களை அழித்து, அரிதில் செய்த - அருமையாகச் செய்த, செய் தவ செல்வம் - செய்த தவமாகிய பேறு, நன்றே - சிறப்புடையதாகுமே! மற்று - அசை.

மாதிரப் பொருப்பு - உலகின் திக்குக்களில் ஆங்காங்கு உள்ளனவான எட்டுக் குலகிரிகளும் ஆம், பூதரம் - பூமியைத் தாங்குவதான மேருமலை என்னலும் ஒக்கும் ; மேருவுக்கான இக்காரணப் பெயர் மற்ற மலைகளுக்கு வழங்கப் பெறுவதும் உண்டு. வீரர் - அண்மை விளியில் இயல்பாய் நின்றது. ஆதரித்தல் - விரும்புதல் ; 'ஆதரித் தமுதிற் கோலேய்த்து' (பால. மிதிலைக். 5) ; 'ஆதரம் பெருகுகின்ற வன்பினால்' (சீவக. 189). செய்தவம் - செய்யப்படுவதாகிய தவம் ; குறள். 265, பரி. உரை நோக்குக. செய்தவமென அமையாது செய்த செய்தவம் என்றது, தவமும் தவமுடையார்க் காகும்' (குறள். 262) என்ற தமிழ் மறை கொண்டென்க. 'செய்தவம் பயந்த தென்னை' (ஆரணிய. 275). அணுகினிர் : உங்கள் வரவு அவனுடைய தவப் பயனே எதிர் வந்து உதவுவது போன்றது என்பதாம்.

இதன்பின், சில பிரதிகளில் அடியிற் காணும் ஒரு பாடல் காணப் பெறுகின்றது.

இருக்கன்மா மைந்த ரான வாலியு மிளவ ருனும்
செருக்கினே டிருக்குங் காலைச் செருநரிற் சீறி வாலி
நெருக்குற வெருவி யிந்த நெடுங்குவட் டிறுத்தான் றன்பால்
மருக்குலாந் தாரீர் வந்த தவன்செய்மா தவத்தி னன்றே.

பி - ம். 1. *மாதிரப் பரப்போ, மாதிரப் பொருப்பில் வானில், மாதிரப் பெருக்கோ டோங்கும்; வரம்பிலா வுலகின் மீதே.*

2. *பூதரப் புயத்தின் மேலீர், பூதலப் புயத்து வீரர், பூதலப் பரப்பின் வீரர் ; புனிதர் யாரோ.*

3. *கஹனினி ராயி னன்னேன்.*

4. *தீதவித் தமையச் செய்த; மாதவப் பெரிய னன்றோ வென்று பின் வருக்க அற்றான் ; செல்வ மன்றே.* (21)

65. இரவிதன் புதல்வன் றன்னை
 யிந்திரன் புதல்வ னென்னும்
 பரிவிலன் சீறப் போந்து
 பருவரற் கொருவ னுகி
 அருவியங் குன்றி னெம்மோ
 டிருந்தன னவன்பாற் செல்வம்
 வருவதோ ரமைவின் வந்தீர்
 வரையினும் வளர்ந்த தோளீர்.

'வரையினும் வளர்ந்த தோளீர் - மலைகளைவிட மேலாக வளர்ந்து விளங்கும் தோள்களையுடையீர்களே! இரவி தன் புதல்வன் தன்னை - சூரிய குமாரனுன சுக்கிரீவனை, இந்திரன் புதல்வன் என்னும்-இந்திரன் குமாரன் என்று சொல்லப்பெறும், பரிவு இலன் - இரக்கமற்ற வாலி, சீற - பகைத்துக் கோபிக்க, பருவரற்கு ஒருவன் ஆகி - துன்பம் அடைவதற்குத் தான் ஒருவனுகி, அருவி அம் குன்றில் போந்து எம்மோடு இருந்தனன் - அருவிகளையுடைய இந்த அழகிய ருசியமுக மலையில் வந்து எங்களோடு ஒளிந்து வாழ்ந்து கொண்டிருக்கின்ருன்; அவன் பால் - அந்தச் சுக்கிரீவனிடம், செல்வம் வருவது ஓர் அமைவின் - எதிர் பாராத பெருஞ்செல்வம் வந்து சேரற்கேற்ற காலத்தில், வந்தீர் - நீவிர் வந்துள்ளீர்கள்.

இச்செய்யுளிலும் (64போல) இராம லக்ஷ்மணர்களின் தோளுக்கு வரை ஒப்பிடப்பட்டமை காண்க.

சூரியன் புதல்வன் - சுக்கிரீவன்; இந்திரன் புதல்வன் வாலி; பால. திருவவதாரப்: 27. பருவரல் - துன்பம்; அயோத். குகப்: 39; ஆரணிய. 952. அமைவு; இடத்தையும் காலத்தையும் குறிக்கும்.

பி-ம். 1. இரவிதன் சிறுவன் றன்னை; யிந்திரன் றனய னென்னும், யிந்திரன் மைந்த னென்னும், யிந்திரன் சிறுவனென்னும், யிந்திரன் செம்ம லென்னும்.

2. சீறிப் போந்து.

3. குன்றி னென்னோ.

4. ரமைதி வந்தீர்; வருவதற் காக வந்தீர்; மலையினும் வளர்ந்த.

66. ஒடுங்கலி லுலகம் யாவு
　　　　முவந்தன வுதவி வேள்வி
　　தொடங்கின மற்று முற்றத்
　　　　தொல்லறந் துணிவர் சான்றோர்
　　கொடுங்குலப் பகைஞ னாகிக்
　　　　கொல்லிய வந்த கூற்றை
　　நடுங்கினர்க் கபய நல்கு
　　　　மதனினு நல்ல துண்டோ.

'சான்றோர் - மேலோராவார், ஒடுங்கல் இல்-குறைவு படுதல் இல் லாத, உலகம் யாவும்-உலகில் வாழ்வோர் யாவரும், உவந்தன-விரும்பிய (அனைத்தும்), உதவி-அளித்து, தொடங்கின வேள்வி மற்றும் முற்ற - தாம் தொடங்கிய வேள்வி முதலானவற்றைச் செய்து நிறைவேற்ற, தொல் அறம் துணிவர் - பழமையான நல்லறங்களை உறுதியாகக் கொள்வார் ; (ஆயினும்), குல கொடும் பகைஞன் ஆகி - உயிர்த் தொகுதிகட்கே கொடிய பகைவனாகி, கொல்லிய வந்த கூற்றை - கொல்ல வந்த யமனுக்கு, நடுங்கினர்க்கு - அஞ்சி நடுக்கமுற்றோர்க்கு, அபயம் நல்கும் அதனினும் - பயப்படாதே என்று அருள் புரிந்து காப்பாற்றுவதினும், நல்லது உண்டோ - (முன் சொல் அறங்கள்) சிறந்தன ஆமோ ? (ஆகா என்றபடி).

இச்செய்யுளில் கூறப்பெற்ற உயர்வு சிறப்புக்கள் யாவும் தயரத சக்கரவர்த்தியிடம் ஒருங்கே அமைந்திருந்தன என்பது, பால. அரசியற் படலத்தால் நன்கு விளங்குவன காணலாம். தந்தையின் செய்கை தனயனுக் கியைவது என்பது உள்ளுறை பொருளாக அமையவைத்த திறம் இங்கு உணரத்தக்க தாகும். இச்செய்யுளில் ஈகை, வேள்வி என்ற அறங்களினும் அபயதானமே சிறந்தது என்று கூறப்பெறுகிறது. அறம் : செய்யத் தக்கவை இன்ன என்றும் செய்யத்தகாதவை இன்ன என்றும் ஆன்றோர் வரையறுத்துக் கூறியது. கொல்லிய - கொல்லும் பொருட்டு ; வினையெச்சம். கூற்று - உடலினின்றும் உயிரைக் கூறு படுத்துபவன் ; யமன் : இங்கு உவமையாகு பெயராய்ப் பகைவனுக்கு ஆயிற்று.

பி - ம். 1. முவந்தவர்க் குதவி, முவந்தனர்க் குதவி; வுதவிக் கேள்வி.

2. தொடங்கினர் மற்று முற்றித்; மற்று முற்றும்; துணிந்த சான்றோர், துணிவ ரன்றேல், துணிந்த ஞான்றால், துணிவ் ரன்றே, துணிந்து சான்றோர்.

3. பகைகளு ராகிக்.

4. நடுங்குநர்க் கபயம்; மதனினி நல்ல துண்டோ. (23)

67. எம்மையே காத்தி ரென்ற
        லெளிதரோ விமைப்பி லாதோர்
    தம்மையே முதலிட் டான்ற
        சராசரஞ் சமைத்த வாற்றல்
    மும்மையா முலகுங் காக்கு
        முதல்வர்நீர் முருகச் செவ்வி
    உம்மையே புகல்புக் கேமுக்
        கிதின்வரு முறுதி யுண்டோ.

'இமைப்பு இலாதோர் தம்மையே முதல் இட்டு - இமையாத தேவர்களையே முதலாகக் கொண்டு, ஆன்ற - உயர்ந்த, சராசரம் சமைத்த ஆற்றல் - தாவர ஜங்கமப் பொருள்கள் அனைத்தையும் படைத்தமைத்த திறமையுடன், மும்மையாம் உலகும் காக்கும் - சுவர்க்கம், புவி, பாதலம் என்ற மூவகையான உலகங்களையும் காக்கும், முதல்வர் நீர் - தலைவர் நீவிரே ஆவீர்; (அவ்வாறிருக்க), எம்மையே - எளியேமாகிய எங்களையே, காத்திர் என்றல் - நீவிர் காப்பீர் ஆவீர் என்று சொல்லுதல், எளிது - மிகவும் எளிய சொல் ஆகும்; முருக செவ்வி உம்மையே - தெய்வத்தன்மை வாய்ந்த அழகு அமைந்த உங்களையே, புகல் புக்கேமுக்கு - சரணடைந்த எங்களுக்கு, இதின் - உங்கள் இன்னருளைப் பெற்ற இந்தப் பேற்றைவிட, வரும் உறுதி உண்டோ - வந்தடையக் கூடிய நலம் வேறு உள்ளதோ? (இல்லை என்றபடி). அரோ - அசைச்சொல்.

அநுமன், இராம லக்ஷ்மணர்களை, மும்மை உலகங்களையும் படைத்துக் காக்கும் முதல்வரென்று தன்னறிவினு லுணர்ந்து, 'உங்களைச் சரணுகக்கொண்டு புகல் புக்கோம்; எங்களுக்கு உங்கள் அருளிலும் நலந்தரத்தக்கது 'வேறு இல்லை' என்று அவர்களுக்கு நல்வரவு கூறினன் என்பதாம். அழித்தல் தொழிலும் அவருக்கே உண்டென்று உபலக்ஷணத்தாற் கொள்க. எம்மையே, தம்மையே என்பவற்றின் ஏகாரங்கள் முறையே இழிவுப் பொருளையும் உயர்வுப் பொருளையும் குறிப்பன. உம்மையே: இங்கு ஏகாரம் உயர்வு சிறப்பில் வந்த பிரி

நிலைப் பொருளது. முருகச் செவ்வி: முருகு - தெய்வத்தன்மை; புறநா. 259 : 5; இளமையும் ஆம்.

பி - ம். 1. *காத்தி ரென்றற் கெளிதரோ, ரென்றற் கரிதரோ, ரென்றல் பெரிதரோ; விலைப்பி லோர்கள்.*
2. *முதலிட் டாய; சராசரஞ் சமைந்த வாற்றல், சமைந்த சால் பின், சமைந்த சார்பின், சார்வின்.*
3. *மும்மை யேழுலகுங்; முருகற் செவ்வி.*
4. *தெனின்மே லுறுதி.* (24)

அநுமன் வினவ, இலக்குவன் தம் வரலாறு கூறியது.

68. யாரென விளம்பு கேனு
னெங்குலத் திறைவற் கும்மை
வீரர்நீர் பணித்தி ரென்றான்
மெய்ம்மையின் வேலி போல்வான்
வார்கழ லிளைய வீரன்
மரபுளி வாய்மை யாவும்
சோர்வில நிலைமை யெல்லாந்
தெரிவுறச் சொல்ல லுற்றான்.

மெய்ம்மையின் வேலி போல்வான்-உலகில் சத்தியத்தைக் காக்க அமைந்த வேலிபோன்ற அநுமன், (இராம லக்ஷ்மணர்களை நோக்கி), 'நான் அடியேன், எம் குலத்து இறைவற்கு-எங்கள் குலத்தின் தலைவனான சுக்கிரீவனிடம், உம்மை - உங்களை, யார் என விளம்புகேன் - யாவர் என்று கூறுவேன், வீரர் - வீரர்களே! நீர் பணித்திர் - நீவிர் கட்டளையிட்டருளுக' என்றான் - என்று கூறினான்; (அதற்கு), வார் கழல் இளைய வீரன் - பொன்னினால் வார்த்துச் செய்யப்பட்ட நீண்ட வீரக்கழலை அணிந்த இளைய இலக்குவன், வாய்மை யாவும் - உண்மை நிகழ்ச்சிகள் யாவற்றையும், சோர்விலன் - சிறிதும் தவறின்றி, மரபுளி - முறைப்படி, நிலைமை எல்லாம் தெரிவுற - நடந்த எல்லாவற்றையும் அறியுமாறு, சொல்லல் உற்றான் - சொல்லத் தொடங்கினான்.

மெய்ம்மையின் வேலி போல்வான் என்பதை இலக்குவனுக்கும் அமைத்துப் பொருள் கூறலாம். 'உம்மை யாரென விளம்புகேன்' என்பது பண்புடையார் வினவும் வழி. சோர்வு - மறத்தல் முதலிய எளிமைகள்; நாடு துரத்தல், பிராட்டியை இழத்தல் ஆகியவற்றைக் கூற

மனம் வருந்திக் கூறுது விடாமல் எனலுமாம் ; அன்றியும், சொல்லின் செல்வனுகிய அநுமனிடம் பேசும்போது அவன் தன் நிலைக்குத் தாழா மலும் என்றும் கொள்ளலாம். முன் குகனிடமும், சடாயுவிடமும் இராம பிரான் தன் வரலாற்றை இலக்குவனைக் கொண்டே கூறச் செய்த மையும் காண்க. மரபுளி, என்றமையால் இராமபிரான் குறிப்பறிந்து என்றும் கொள்ளலாம். மரபுளி: (உளி இடைச்சொல்); அயோத். கங்கைப் : 48 ; ஆரணிய. 1134 ; திருமுருகு : 95. வாய்மை - தீமை பயவாமற் சொல்லுதல் ; (குறள். 291) ; சொற்றிற முடைமையும் ஆம்.

பி - ம். 1. ஆரென விளம்பு கேளு.
2. மெய்ம்மையின் வேலை போல்வான்.
3. விளைய மைந்தன் ; வாய்மை யாதும், வாய்மை யானும் ; விளைய மைந்தா மற்றுநம் மரபுயாவும்.
4. சோர்விலா நிலைமை, சோர்வில நிலைமை, சோர்விலா துரை யென் றையன் சொல்லலுஞ் சொல்ல லுற்றுன் ; தெளிவுறச் சொல்ல லுற்றன். (25)

69. சூரியன் மரபிற் றேன்றிச்
சுடர்நெடு நேமி யாண்ட
ஆரிய னமரர்க் காகி
யசுரரை யாவி யுண்ட
வீரியன் வேள்வி முற்றி
விண் ணுல கோடு மாண்ட
காரியற் கருணை யன்ன
கண்ணகன் கவிகை மன்னன்.

'சூரியன் மரபில் தோன்றி - சூரியனுடைய குலத்திற் பிறந்து, சுடர் நெடு நேமி ஆண்ட - ஒளிவிட்டு விளங்கும் பெரிய ஆஞ்ஞா சக்கரம் செலுத்தி உலகை ஆண்டு வந்த, ஆரியன் - யாவராலும் ஏற்றப் பெற்றவனும், அமரர்க்கு ஆகி - தேவர்களின் பொருட்டு, அசுரரை ஆவி உண்ட - சம்பரன் உடன் வந்த அசுரர்களைப் போரில் உயிரழித்த, வீரியன் - பராக்கிரம முடையவனும், வேள்வி முற்றி - யாகங்கள் பல வும் செய்து முடித்து, விண் உலகோடும் ஆண்ட - தேவலோகத் தோடும் சேர்த்துப் புவியை ஆட்சி புரிந்த, கார் இயல் கருணை அன்ன

மேகத்தின் தன்மையயான கருணையே போன்றவனும், கண் அகல் கவிகை மன்னன் - இடமெங்கும் அகன்று பரவிய கொற்றக் குடையை யுடைய அரசனும் (ஆவன்).

இச் செய்யுள் குளகமாய் அடுத்துவருஞ் செய்யுள்களோடு தொடர்ந்து வினைமுடிவு கொள்ளும். இவை தயரதச் சக்கரவர்த்தியின் சிறப்புக்களைக் கூறுவன. அமரர் - தேவர்; மரணமற்றவர் என்னும் பொருளது; தேவர் அமிர்தம் உண்டவராதலின் மரண மற்றவராவர். ஆவி யுண்டல் - போரில் உயிரைப் போக்குதல்; இவ்வாறு வழங்கு வது இலக்கணையாகும்; 'நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர்'; (பால. தாடகை வதைப்: 64) என்றமை போல. தயரதசக்கரவர்த்தி அசுரரை ஆவியுண்டு, தேவலோகத்தையும் ஆண்டான் என்பதாம். தயரதன் கண்ணகன் கவிகை மன்னன்: பால. அரசியற்: 80. வேள்வி முற்றி; தயரதன் க்ஷத்திரியர்க்குரிய வேள்விகள் அனைத்தும் செய்து முடித்தவன்; பால. அரசியற்: 3; அயோத். மந்திரப்: 36; என்பன காண்க. காரியல் கருணை; கைம்மாறு கருதாது வழங்குவதால் உவமை.

பி - ம். 1. மரபிற் றோன்றும்; றோற்றித் தொல்லுல காண்ட மேலோன்.
2. னமரர்க் காக வசுரரை.
3. வேள்வி செய்து, வேள்வி வென்று, வேள்வி யென்னும் வேலையின் வேலை கண்ட.
4. காரியற் கருணை போல்வான், காரியற் கருணை யன்னோன், காரியற் கருணை பூண்ட; கண்ணனக் கவிகை மன்னன்; கண்ணகக் கவிகை மன்னன். (26)

இதன்பின், சில சுவடிகளிலும், அச்சுப் புத்தகங்களிலும் அடியிற் காணும் ஒரு பாடல் உள்ளது.

புயறரு மதத்தின் கோட்டுப் புகர்மலைக் கிறையை யூர்ந்து
மயறரு மவுணர் யாரு மடிதர வரிவிற் கொண்ட
இயறரு புலமைச் செங்கோன் மனுமுதல் யாரு மொவ்வாத்
தயரதன் கனக மாடத் தடமதி லயோத்தி வேந்தன்.

இச்செய்யுள் பல பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லை.

70. அன்னவன் சிறுவ னுமிவ்
வாண்டகை யன்னை யேவத்
தன்னுடை யுரிமைச் செல்வந்
தம்பிக்குத் தகவி னல்கி
நன்னெடுங் கானஞ் சேர்ந்தா
னுமமு மிராம னென்பான்
இந்நெடுஞ் சிலைவ லானுக்
கேவல்செய் யடியன் யானே.

'அன்னவன் சிறுவன் ஆம் - அத் தயரதச் சக்கரவர்த்தியின் குமாரனை, இ ஆண்டகை - இந்த ஆடவரிற் சிறந்தவன், அன்னை ஏவ - தன் (சிறிய) தாயாகிய கைகேயி என்பவள் கட்டளையிட, தன் உடை உரிமை செல்வம் - (மூத்த மைந்தன் என்னும்) தனக்கு உரிமையாகிய அரசியற் செல்வத்தை, தம்பிக்கு - தன் தம்பியும் அக் கைகேயி புதல்வனுமான பரதனுக்கு, தகவின் நல்கி - பெருந்தன்மையோடு அளித்து, நல் நெடும் கானம் சேர்ந்தான் - மிகப்பெரிய காட்டை வந்தடைந்தான்; நாமமும் இராமன் என்பான் - இவன் பெயரும் இராமன் என்று சொல்லப்பெறுவான்; இ நெடும் சிலை வலானுக்கு - இந்த நெடிய வில் தொழிலில் வல்ல இராமபிரானுக்கு, ஏவல் செய் - பணிவிடை செய்யும், அடியன் யானே - அடிமை ஆவேன் யான், ஏ: ஈற்றசை.

அன்னை ஏவச் செல்வம் தம்பிக்கு நல்கி முதலியன: இலக்குவன் கைகேயிபால் தான் கொண்ட கறுவை நழுவவிடாமல் நிற்கும் நிலையைக் குறிப்பது காண்க; ஆரணிய. 210 இல், 'தன் சிற்றவை மாதரால் வந்த செய்கை யொழிவின் றுணர்த்தினுன்' என்றதும் இந்நிலையைக் குறித்தது. தகவின் நல்கி; இது, அயோத். கைகேசி சூழ்வினைப்: 109, 110, பாசுரங்களால் விளக்க முறுவது காண்க. ஏவல்செய் யடியன்: அயோத்திவிட்டு வனம் செல்லுமுன் இலக்குவனுக்கு அவன் தாயாகிய சுமித்திரை, 'இவன் பின்செல், தம்பி யென்னும் படியன் றடியாரினில் ஏவல் செய்தி' (அயோத்: நகர்நீங்கு: 151) என்று கட்டளையிட்டுள்ளா ளாதலின், அதையே உறுதியாகக்கொண்டு, இலக்குவன் இராமனுக்கு அடியனாய் நின்று ஏவல் புரிந்ததன்றி, யாரிடத்தும் தான் இராமனுக்குத் தம்பி என்ற உரிமை பாராட்டாதிருந்த சிறப்பும் நோக்கத்தக்கது.

பி - ம். 1. வாண்டகை யனைய வேவத்.
2. யுரிமை யெல்லாம்.
4. சிலையி னானுக், சிலைய லோனுக்; கேவல்செய் யடியனேன் யான், கேவல்செய் தமியன் யானும், கேவல்செய் யடியேன் றானே. (27)

அநுமன் இராமபிரானை வணங்கியது.

71. என்றவன் றோற்ற மாதி
யிராவண னிழைத்த மாயப்
புன்றொழி லிறுதி யாகப்
புகுந்துள பொருள்க ளெல்லாம்
ஒன்றுமாண் டொழிவு றாம
லுணர்த்தின னுணர்த்தக் கேட்டு
நின்றவக் காலின் மைந்த
னெடிதுவந் தடியிற் றாழ்ந்தான்.

என்று - இவ்விதம். அவன் தோற்றம் ஆதி அந்த இராமபிரானுடைய திருவவதாரம் முதல், இராவணன் இழைத்த மாய புன்தொழில் - இராவணன் செய்த வஞ்சனையுடைய அற்பச் செயல், இறுதி ஆக - முடிவு ஆக, புகுந்து உள பொருள்கள் எல்லாம் - நிகழ்ந்த செய்திகள் அனைத்தையும், ஒன்றும் ஒழிவு உறாமல் - ஒன்றும் விட்டுப் போகாமல், ஆண்டு உணர்த்தினன் - அப்போது அவ்விலக்குவன் அநுமனுக்குக் கூறினான்; உணர்த்த கேட்டு - அவ்வாறு அவன் சொல்லக் கேட்டு, நின்ற - அவன் எதிரே நின்ற, அ காலின் மைந்தன் - அந்த வாயு குமாரனான அநுமன், நெடிது உவந்து அடியில் தாழ்ந்தான் - மிகவும் மகிழ்வுற்று, அவ்விராமபிரான் திருவடிகளில் விழுந்து வணங்கினான்.

இராவண னிழைத்த மாயப் புன்றொழிற் செய்தியைத் தம் வாயாற் சொல்லவும் அஞ்சினார் ஆசிரியர் கல்வியிற் பெரியா ரென்பதாம். ஒன்றும் மாண்டு ஒழிவுறாமல் - ஒன்றும் ஒழிந்து நீங்காமல் எனலும் அமையும். காலின் மைந்தன் - காற்றின் மைந்தன்: அதாவது வாயு தேவனுக்கு அஞ்சனை யிடமாகப் பிறந்த அநுமன்; கால் - காற்று. நெடிது வந்து எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். வந்து அடியில் நெடிது தாழ்ந்தான் என இயைத்தலும் அமையும்.

வான்மீகத்தில் பிக்ஷு வேடம் தரித்த அநுமன் இராமலக்ஷ்மணர்களைக் கண்டவுடனேயே அவர்களை நமஸ்கரித்துப் பின்பே பேசத்

தொடங்கினுன் என்று கூறப்பெற்றுள்ளது. அங்கு அந்தண்ன் என்ற குறிப்பு காணப்பெறவில்லை. இங்கு அடுத்துவரும் செய்யுளிற் கூறும் செய்திகளும் வான்மீகத்தில் இல்லை.

பி - ம். 1. ரேற்ற மோதி. 2. பொருள்தன் யாவும்.
3. டொழி வருமை யுணர்த்தினன், டொழி வரும னுணர்த்தின னுணரக் கேட்டு; னுரைத்த கேட்டு.
4. நின்றவன் காலின் மைந்த னெடியவ னடியில் வீழ்ந்தான். (28)

அநுமன் வணங்கியதற்கு இராமபிரான் மறுத்ததும் அதற்கு அநுமன் கூறியதும்.

72. தாழ்தலுந் தகாத செய்த
தென்னைநீ தரும மன்றால்
கேள்விநூன் மறைவ லாளா
வென்றன னென்னக் கேட்ட
பாழியந் தடந்தோள் வென்றி
மாருதி பதுமச் செங்கண்
ஆழியா யடிய னேனு
மரிகுலத் தொருவ னென்ருன்.

தாழ்தலும் - அநுமன் வணங்கியதும், (இராமபிரான் அவனை நோக்கி), 'கேள்வி நூல் மறை வல்லாளா - (தக்கோரிடம்) கேட்டுத் தேர்ந்த சாஸ்திரங்களிலும் வேதங்களிலும் வல்ல அந்தணனே! நீ தகாத செய்தது என்னை - நீ செய்யத் தகாததான என்னை வணங்கிய இச்செயல் ஏன்? தருமம் அன்று - இஃது உன் ஆச்சிரமத்துக்குரிய அறம் அன்றே'; என்றனன் - என்று சொன்னுன்; என்ன கேட்ட - என்று இராமபிரான் சொல்லக் கேட்ட, பாழி அம் தடம் தோள் வென்றி மாருதி - பருத்து அழகிய பெரிய தோள்களையுடைய வெற்றிமிக்க அநுமன், 'பதுமம் செம்கண் ஆழியாய் - செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய சக்கராயுத மேந்திய திருமால் போன்றவனே! அடியனேனும் - உன் அடியனுகிய யானும், அரி குலத்து ஒருவன் - வாநரர் குலத்தில் ஒருவன் ஆவேன்'; என்ருன் - என்று கூறினுன். ஆல - அசை.

அநுமன், மறைவல்ல மாணியாம் வடிவில் வந்து வணங்கினுன் ஆதலின், 'தகாது செய்தாய்; தருமமன்று' இது உன் ஆச்சிரமத்திற் குரியதுமன்று என்ருன் இராமபிரான். மாருதி - மருத்தின் மைந்தன் என்னும் பொருளில் வந்த தத்திதாந்தப் பெயர். ஆழியாய்: என்பதற்கு

ஆஞ்ஞா சக்கரத்தை யுடையவனே! எனப்பொருள் கொண்டாரும் உளர்; அது பதுமச் செங்கண், என்ற அடை மொழிகளுக்கு அவ்வளவு சிறப்பைத் தாராது. அரிகுலம் - வானரச் சாதி; 'அரிகுலத்தரசு'; 345.

இதன்பின் ஒரு பாடல் இருக்க வேண்டுமென ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பிற் காணப்பெறுகின்றது.

பி - ம்., 2. மறையவ் லாள. மறையின் வாய்மை முனிவரீ யென்னக் கேட்ட.
3. தடங்தோள் வீர.
4. யடியேன் ருனு. (29)

அநுமனது விசுவருபம்.

73. மின்னுருக் கொண்ட வில்லோர்
 வியப்புற வேத நன்னூல்
பின்னுருக் கொண்ட தென்னும்
 பெருமையாம் பொருளும் நாணப்
பொன்னுருக் கொண்ட மேரு
 புயத்திற்கு முவமை போதாத்
தன்னுருக் கொண்டு நின்ருன்
 றருமத்தின் றனிமை தீர்ப்பான்.

தருமத்தின் தனிமை தீர்ப்பான் - தருமத்தின் துணையின்றித் தனித்திருக்கும் தன்மையைப் போக்க வந்தவனுன அநுமன், மின் உரு கொண்ட வில்லோர் வியப்பு உற - மின்னல் வடிவை யெடுத்து வந்தாற் போன்ற ஒளிகொண்ட விற்களையுடைய அவ்விராம லக்ஷ்மணர் அதிசயிக்க, வேதம் நல் நூல் - வேதங்கள் முதலான சிறந்த சாஸ்திரங்களே, பின் உரு கொண்டது என்னும் - பிறகு ஓர் உருவெடுத்து வந்தது என்று சொல்லும், பெருமை ஆம் பொருளும் - பெருமை பொருந்தியதாகக் கூறும் பாராட்டுரையும், நாண - வெட்கிக் குறைபட, பொன் உரு கொண்ட - பொன் வடிவமான, மேரு - மேருமலையும், புயத்திற்கு உவமை போதா - தன் தோள்களுக்கு உவமையில் ஒப்பாகாத, தன் உரு கொண்டு நின்ருன் - தன்னுடைய பேருருவை (விசுவருபத்தை) எடுத்துக்கொண்டு அவர்கள் முன் நின்ருன்.

தருமத்தின் தனிமை தீர்ப்பான் - தருமத்திற்கு ஒரு துணையாக அதனைக் காக்க வந்தவன் என்பதாம்; அநுமன் தருமத்திற்குத் துணையானவன்; 'அறத்திற் காங்கொரு தனித் துணையா நின்ற வநுமன்' (சுந்தர. 1041) என்றும், 'அறப்பொருள் நிரப்பும் அண்ணல்;'

(சுந்தர. 28) என்றும் கூறியன காண்க. வில்லுக்கு மின்; 'மின்னின் மின்னும் வரிவிற் குமரா' (அயோத். நகர்நீங்கு : 59); மின், உவமை, அதன் ஒளியின் சிறப்பால். அநுமன் புயத்திற்குப் பொன்மேரு, மேரு போலத் தோற்றப் பொலிவும், பொன்னிறமும் வாய்ந்தவனுதலின்; 'காஞ்சனுத்ரி கமநீய விக்ரஹம்' என்ற ஆன்ருேர் வாக்கும் அவனுக்குச் சுவர்ண மேரு என்ற பெயருண்மையும் இங்கு நோக்கத் தக்கன. அநுமன் பொன்னிறத்தவன்; சுந்தர. 28, 73, 589, 698, 737, 1041; அநுமன் வேத நன்னூல்களே ஓர் உருக்கொண்டு வந்தது போன்றவன் என்ருல், அவ்வுரை தாழ்வுடைத்து என்பதாம்; இதனுல் அவன் வேத சாஸ்திரங்களினும் மேம்பட்ட ஞானி ஆவான் என்க. தன் புயத்திற்குப்...போதாஉரு, என்றும் இயைத்துப் பொருள் கொள்ளலாம்.

இவ்விடத்தில் அநுமன் விசுவரூபம் எடுத்துக்கொண்டு, இராம லக்ஷ்மணர்களின் அனுமதி பெற்று, அவர்களைத் தன் தோள்களில் ஏற்றிக்கொண்டு சுக்ரீவனிடம் சென்ருன் என அத்யாத்ம ராமாயணம் கூறும். வான்மீகம், 'அவன் தன் பிக்ஷு ரூபத்தை விட்டு உண்மையான உருவம் தரித்து, இராம லக்ஷ்மணர்களைத் தன் தோள்களில் ஏற்றிக்கொண்டு சுக்கிரீவனிடம் சென்ருன்' என்னும்.

பி - ம். 2. *பெருமையெப் பொருளுக் தாழப்.*
4. *தனிமை தீர்த்தான், தனிமை மிக்கான்.* (30)

74. கண்டில னுலக மூன்றுங்
காலினுற் கடந்து கொண்ட
புண்டரீ கக்க ணுழிப்
புரவலன் பொலன்கொள் சோதிக்
குண்டல வதன மென்ருற்
கூறலாந் தகைமைத் தொன்ருே
பண்டைநூற் கதிரோன் சொல்லப்
படித்தனன் படிவ மம்மா.

உலகம் மூன்றும் காலினுல் கடந்து கொண்ட - சுவர்க்கம், மத்யம், பாதலம் என்னும் மூவுலகங்களையும், திரிவிக்கிரமாவதாரஞ் செய்து தன் திருவடிகளால் அளந்து கடந்த, புண்டரீக கண் ஆழி புரவலன் - தாமரை மலரின் இதழ்போன்ற கண்களையும், சக்கராயுதத்தையுமுடைய திருமாலான இராமபிரான், பொலன் கொள் சோதி குண்டல வதனம் கண்டிலன் என்ருல் - பொன் போன்று அழகிய ஒளி வீசும் குண்டலங்கள் அணிந்துள்ள அவ்வநுமனுடைய முக மண்டலத்தைக் காணுதவ னுனன் என்று கூறுமிடத்து, பண்டை நூல் - பழமையான

வியாகரணம் முதலிய சாஸ்திரங்களை, கதிரோன் சொல்ல - சூரிய பகவான் கற்பிக்க, படித்தனன் - படித்துத் தேர்ந்தவனான அவ்வநுமன், படிவம் - முழு உருவம், கூறல் ஆம் தகைமைத்து ஒன்றோ - ஒருவரால் எடுத்துக் கூறக்கூடிய தன்மையுடையது ஒன்றாக ஆகுமோ? (ஆகாது என்றபடி). அம்மா, வியப்பிடைச் சொல்.

திருமால் உலகளந்தது; பால. வேள்விப் : 36; கிட்கிந்தா. பில நீங்கு : 70; சிலப். ஆய்ச்சியர் குரவை : 35. புரவலன் : இது காக்குங் கடவுளாகிய திருமால் என்னும் பொருளில் வந்தது. அநுமன் கதிரோனிடம் கல்வி கற்றவன் ; 99. உத்திர. அநுமப் : 35. அநுமனின் விசுவரூப வருணனையை, சுந்தர. 587 - 93 செய்யுட்களிலும் காண்க.

பி - ம். 1. கண்டன னுலக மூன்றுங் கண்ணினுற்.
2. புண்ட ரிகக்கண் ணேமிப் புங்கவன் ; புலன்கொள் சோதிக்.
3. தகைமைத் தன்றால், நகைமைத் தன்றே.
4. பண்டைநூற் பருதி சொல்லப் படித்தவன் படிவமன்றோ ; கதிரோன் நல்கப். (31)

இராமபிரான் இலக்குவனிடம் அநுமனை வியந்து கூறல்.

75. தாட்படாக் கமல மன்ன
தடங்கணான் றம்பிக் கம்மா
கீட்படா நின்ற நீக்கிக்
கிளர்படா தாகி யென்றும்
நாட்படா மறைக ளானு
நவைபடா ஞானத் தாலும்
கோட்படாப் பதமே யைய
குரக்குருக் கொண்ட தென்றான்.

தாள் படா - நாளமாகிய தாளில் தோன்றாத, கமலம் அன்ன - தாமரை மலர் இதழ் போன்ற, தடம் கணான் - விசாலமான கண்களை யுடைய இராமபிரான், தம்பிக்கு - தன் தம்பியாகிய இலக்குவனுக்கு, 'ஐய - அப்பனே! கீழ் படா நின்ற நீக்கி - கீழ்ப்பட்டனவாய் நின்ற நிலைகளை விலக்கி, கிளர் படாது ஆகி - தன் ஒளியிற் குறைவில்லாதது ஆகி, என்றும் - எப்பொழுதும், நாள் படா - கால அளவுக்கு உட் படாத, (அதாவது அழியாத), மறைகளாலும் - வேதங்களாலும், நவை படா - குற்றம் உண்டாக இடம் இல்லாத, ஞானத்தாலும் - அறிவி னாலும், கோள் படா - கொள்ளப்படாத, பதமே - தத்துவ நிலையே,

குரக்கு உரு கொண்டது என்றுன் - இந்த வாநர வடிவத்தை ஏற்றுக் கொண்டுள்ளதாகும்' என்று இராமபிரான் வியந்து கூறினுன். அம்மா வியப்பிடைச் சொல்.

தாட் படாக் கமலம் : இ∴து இல்பொருள் உவ்மை. கமல மன்ன தடங்கணுன் ; புண்டரீகாக்ஷன் என்னும் பொருளது. ஐய : தம்பியை ஐய வென்றது, அன்பினுல் எழுந்த மரபு வழுவமைதி ; 'அத்தா விதுகேள்' (269) ; 'ஐயன் வல்லனென் ருருயிர் வல்லனுல்' (ஆரணிய. 802) ; 'என்னத்த வென்னீ யிறையேனு முனிந்திலாதாய்' (அயோத். நகர்நீங்கு: 126); ஐய? குரக்கு உரு - அழகிய குரங்கு உருவம் என்றும் பொருள் கூறலாம். பதம் - பதவி அல்லது நிலே. கிளர் - ஒளி ; (பிங்) ; பிரபோத ஞான நிலேயே அநுமனுக வடிவெடுத்து வந்துள்ளது என்று இராமபிரான் தன் தம்பி இலக்குவற்குக் கூறினுன் என்பதாம். நாட்படா மறை - காலத்துக்கு உட்படாத மறை ; எனவே அநாதியும் அழிவற்றதுமான வேதம் என்க.

கீழ்ப் படா, என்பது கீட்படா எனத் திரிந்ததும், குரங்கு என்பது குரக்கு என வலித்தல் விகாரம் ஏற்றதும் செய்யுள் விகாரங்கள் ; நாட்படா மறைகளாலும் நவைபடா ஞானத்தாலும் கோட்படாத பதம் ; ஒப்பு :—

'சிறுகா பெருகா நிலேயோ திரியா
குறுகா நெடுகா குணம்வே றுபடா
உறுகால் கிளர்பூ தமெலா முகினும்
மறுகா நெறியெய் துவன்வா னுடையாய்

(ஆரணிய. 93). என்று சரபங்கர் இந்திரனுக்குக் கூறிய பதம் என்க. 'கீட்படா நின்ற நீத்தம் கிளர்படா தாகி - பூமியிலே படாத பெரும்புறக் கடல் மேலிட்ட காலத்தும் அழிக்கப் படாதது. கோட்படாப் பதம் - பரமபதம்; அந்தப் பரமபதத்தினும் அநுமன் வடிவம் சென்றது'. (பழையவுரை). இச்செய்யுளில், படுதல் என்பது, தோன்றுதல், அழிதல் எனும் பொருள்களில் வந்துள்ளமை காண்க.

பி - ம். 1. *தாட்படக் கமல ; தம்பிக் கம்ம.*
2. *கீட்பட நின்ற. கீட்படா நின்ற நீத்தம் ; வெக்தெழு நின்ற காலம் ; கிளர்ப்படா தாகி.*
3. *மறைக ளாலும்.*
4. *பதமு மைய, பதமே யிம்மைக்.* (32)

76. நல்லன நிமித்தம் பெற்றே
நம்பியைப் பெற்றேம் நம்பால்
இல்லையே துன்ப மான
தின்பமு மெய்திற் ருமால்
வில்லினு யினையன் போலாங்
கவிகுலக் குரிசில் வீரன்
சொல்லினு லேவல் செய்வா
னவனிலை சொல்லற் பாற்ரே.

(பின்னும் இராமபிரான்), 'வில்லினுய் - வில்லையுடைய இலக்குவ ! நல்லன நிமித்தம் பெற்றேம் - இவனது வரவினுல் நாம் நல்லதான சகுனம் அடைந்தோம்; நம்பியைப் பெற்றேம் - அதனுல் தான்) நாம் இந்த ஆடவரிற் சிறந்த அநுமனை அடையப் பெற்ருேம்; நம்பால் துன்பம் ஆனது இல்லையே - நம்மிடம் இனித் துன்பம் என்பது இல்லாது விலகியதே ஆகும்; இன்பமும் எய்திற்று ஆம் - இனி நமக்கு இன்ப வாழ்வும் வந்து அடைந்தது; இனையன் - இத் தகைய பெருமைகள் பொருந்திய இவன், கவி குல குரிசில் வீரன் - வானரக் கூட்டத்திற்கு அரசனும் வீரனுமான சுக்கிரீவனுடைய, சொல்லினுல் - கட்டளையிடும் சொற்படி, ஏவல் செய்வான் போல் ஆம் - அவன் ஏவிய பணிவிடைகளைச் செய்பவனுவன் போலும், அவன் நிலை சொல்லல் பாற்ரே - அவ்வாறெனில் அந்தச் சுக்கிரீவனுடைய தகுதிச் சிறப்பை நாம் எடுத்துக் கூற கூடியதாகுமோ? (ஆகாது என்றபடி).

பி - ம். 1. நல்லவா நிமித்தம்; நிமித்தம் பெற்ருேம், நம்பியைப் பெற்ருேம், நம்பியை நணுகப் பெற்ருேம்.
2. இல்லையே நம்பாற் றுன்பம்; மின்பமே யெய்திற் றன்ருல், மின்பமு மெய்திற் றின்னும்.
3. வில்லினு யிவனைப் போலாங், வில்வினுய் நின்னைப் போலக்; நின்னைப் போலாங், யெனையன் போலாங்; கவிக்குலக் குரிசில்.
4. செய்வா னிவனிலை. (33)

அநுமன் சுக்கிரீவனை அழைத்து வருவதாகக் கூறி இராமபிரானிடம் விடைபெற்றுச் சென்றது.

77. என்றக முவந்து கோல
முகமலர்ந் தினிதி னின்ற
குன்றுறழ் தோளி னுனை
நோக்கிய குரக்குச் சீயம்

சென்றவன் றன்னை யின்னே
கொணர்கின்றேன் சிறிது போழ்து
வென்றியி ரிருத்தி ரென்னு
விடைபெற்று விரைவிற் போனன்.

என்று - எனக் கூறி, அகம் உவந்து - மனம் மகிழ்ந்து, கோலம் முகம் மலர்ந்து - அக் களிப்பினால் தன் அழகிய திருமுகம் மலரப்பெற்று, இனிதின் நின்ற-காண மகிழ்ச்சியோடு தன் எதிரே நின்ற, குன்று உறழ் தோளினானை - மலை போனறு விளங்கிய தோள்களையுடைய இராம பிரானை, நோக்கிய குரக்கு சீயம் - பார்த்த வாநரச் சிங்கமாகிய அநுமன், 'சென்று அவன தன்னை இன்னே கொணர்கினறேன் - நான் போய் அந்தச் சுக்கிரீவனை இப்பொழுதே அழைத்துக்கொண்டு வருகின்றேன், வென்றியிர் - வெற்றியுடையவர்களே ! சிறிது போழ்து இருத்திர் - சற்றுநேரம் இங்கே இருப்பீராக!' என்னு - என்று கூறி, விடை.பெற்று - அவ்விராம லக்ஷ்மணர்களிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு, விரைவில் போனன் - வேகமாகச் சுக்கிரீவன் இருக்கு மிடத்திற்குச் சென்றான்.

சீயம் ; ஸிம்ஹம் என்ற வடசொல்லின்றிரிபு ; அநுமனைக் குரக்குச் சீயம் என்பது ; சுந்தர. 36, 948 ; அஞ்சனைச சிங்கம் எனறதும் நோக்குக ; சுந்தர. 921. வென்றியிர் ; இது மங்கள வாழ்த்தும் ஆம். இப்படலம், சேதனனை சுக்கிரீவனைப் பரம்பொருளாகிய இராம பிரானிடம் சேர்த்து உய்விக்கச செய்யும் ஓர் ஆசார்யன் நிலையில் அநுமன் உள்ளதாக ஆன்றோர் பொருள் கூறுவர்.

பி - ம். 1. என்றக மலாந்து ; முகமலர்ந் திறைஞ்சி நின்ற, முகமலர்ந் திமையா நினற.
2. குன்றியல தோளி னாரை, குன்றியர் தோளி னானை, குன்றன்ன தோளி னாரை.
3. றன்னை மீண்டு, றன்னை யீண்டு ; கொணர்குவென் ; சிறிது போதில் ; போழ்தின்.
4. வென்றியீ ரிருததி ரென்ன ; ரிருத்தி ரென்று. (34)

அநுமப் படலம் முற்றும்.

---

## 3. நட்புப் படலம்

இ∴து, இராமபிரானும் சுக்கிரீவனும் ஒருவரோடொருவர் நட்புச் செய்து கொண்ட செய்தியைக் கூறும் படலம் என விரியும். இது சுக்கிரீவன் நட்புப் படலம், நட்புக் கொண்டாட்டப் படலம், நட்புறு படலம், நட்புக் கோட்படலம் என்றும் பிரதிகளில் காணப் பெறுகின்றது. சில பிரதிகளில் இப்பகுதி மராமரப் படலத்துள் அடங்கியுள்ளது.

அநுமன் சுக்கிரீவனைச் சேர்தல்.

78. போனமந் தரமணிப் புயநெடும் புகழினன்
ஆனதன் னரிகுலத் தரசன்மா டணுகினன்
யானுமுன் குலமுமிவ் வுலகுமுய்ந் தனமெனா
மானவன் குணமெலா நினையுமா மதியினன்.

போன - அவ்வாறு சென்ற, மந்தரம் மணி புயம் நெடும் புகழினன் - மந்தரகிரி போன்ற அழகிய தோள்களையும் நீண்டு பரவிய புகழையு முடையவனும், மானவன் குணம் எலாம் - மனுகுலத்தவனை இராமபிரானுடைய திவ்ய கல்யாண குணங்களை யெல்லாம், நினையும் மா மதியினன் ஆன - (எப்பொழுதும்) சிந்தித்துக் கொண்டிருக்கும் பேரறிவுடையனுமான அநுமன், 'யானும் - அடியேனும், உன் குலமும் - உனது வானர குலமும், இ உலகும் - இந்த உலகமும், உய்ந்தனம் - ஈடேறினோம்.' எனா - என்ற சொற்களை முன்னிட்டுக் கூறிக்கொண்டு, தன் அரிகுலத்து அரசன் மாடு அணுகினன் - தனக்குரிய வானர குலங்களுக்கு அரசனான சுக்கிரீவன் அருகே போய் அடைந்தான்.

அநுமனுக்கு மந்தரமலை; சுந்தர. 42, 195, 736, 774. அநுமன் நெடும் புகழினன்; 67, 429, 968. அநுமன் இராமபிரான் அரிய குணங்களை எப்பொழுதும் நினைத்திருப்பவன்; சுந்தர. 197, 329; மானவன் என்ற பெயரால் இராமபிரானைக் குறிப்பது இந்நூலிற் பரக்கக் காணலாம்.

பி - ம். 1. நெடும்புகழி னோன்.
2. பொருமனச் குரிசின்மா; டணுகியே.
3. யானுமென் குலமு; யானுமெங் குலமு.
4. முணருமா மதியினன்; முணருமா மகிழ்வினன். (1)

இராமபிரான் வரலாற்றை அநுமன் சுக்கிரீவனுக்குக் கூறுதல்.

79. மேலவன் றிருமகற் குரைசெய்தான் விரைசெய்தார்
வாலியென் றளவிலா வலியினு னுயிர்தெறக்
காலன்வந் தனனிடர்க் கடல்கடந் தனெமென
ஆலமுண் டவனினின் றருநடம் புரிகுவான்.

(அடைந்த அநுமன்), ஆலம் உண்டவனின்நின்று-ஆலால முண்ட சிவபெருமானைப் போல நின்று, அரு நடம் புரிகுவான் - அரிய திரு நடனம் செய்பவனாய், 'விரை செய் தார் - வாசனையை வீசும் மாலையை யுடைய, வாலி என்று அளவு இலா வலியினன் - வாலியென்று சொல்லப்பெறும் அளவற்ற வலிமை வாய்ந்தவனுடைய, உயிர் தெற - உயிரை அழிக்க, காலன் வந்தனன் - யமன் வந்துவிட்டான்; இடர் கடல் கடந்தனெம் - நாம் துன்பக்கடலைத் தாண்டிவிட்டோம்,' என - என்று, மேலவன் திருமகற்கு - வானிற் செல்லும் சூரியனுடைய திருக்குமாரனான சுக்கிரீவனுக்கு, உரை செய்தான் - கூறினன்.

அருள் நடம் என்று பாடங்கொண்டு தேவர்களும் பிற உயிர்களும் அழியாமல், விடத்தை உண்டு அருண்மேலிட்டு அம்மகிழ்ச்சியிற் புரிந்த நடனம் என்றுங் கூறுவர். அநுமன் சிவபெருமான் அம்சமாய் அவ தரித்தவன் என்ற தேவ இரகசியத்தை அவனுக்கு உவமைமூலம் ஒப் பிட்டுக் கூறுவது நம் நூலாசிரியர் மரபு என்பதை இந்நூலிற் பல விடங் களிற் காணலாம். இடர்க் கடல் கடந்தனெம் : இது துணிவுபற்றி வந்த காலவழுவமைதி.

சிவபிரான் ஆலமுண்டு ஆடியதுண்டா என்பது ஆராயத்தக்கது. இனி, இராம லக்ஷ்மணர்களைப் பகைவரோ என்றயிர்த்து அஞ்சிப் பதுங்கியிருந்த சுக்கிரீவனிடம், அவனுக்கு ஊக்கம் பிறக்குமாறு அநுமன் அவர்களைப்பற்றிக் கூறும் இத்திறம், நோக்கி வியக்கத் தக்கதாம். பின், பிராட்டிபாற் சென்று திரும்பியபோது அவன் இராமபிரானிடம் அவளைப்பற்றிக் கூறும் சுந்தரகாண்டப் பகுதியோடு இதனை ஒப்பு நோக்குக.

பி - ம். 1. மேலவன் றருமகற்.
4. றருணடம். (2)

# 3. நட்புப் படலம்

இஃது, இராமபிரானும் சுக்கிரீவனும் ஒருவரோடொருவர் நட்புச் செய்து கொண்ட செய்தியைக் கூறும் படலம் என விரியும். இது சுக்கிரீவன் நட்புப் படலம், நட்புக் கொண்டாட்டப் படலம், நட்புறு படலம், நட்புக் கோட்படலம் என்றும் பிரதிகளில் காணப் பெறுகின்றது. சில பிரதிகளில் இப்பகுதி மராமரப் படலத்துள் அடங்கியுள்ளது.

அநுமன் சுக்கிரீவனைச் சேர்தல்.

78. போனமந் தரமணிப் புயநெடும் புகழினுன்
ஆனதன் னரிகுலத் தரசன்மா டணுகினுன்
யானுமுன் குலமுமிவ் வுலகுமுய்ந் தனமெனு
மானவன் குணமெலா நினையுமா மதியினுன்.

போன - அவ்வாறு சென்ற, மந்தரம் மணி புயம் நெடும் புகழினுன் - மந்தரகிரி போன்ற அழகிய தோள்களையும் நீண்டு பரவிய புகழையு முடையவனும், மானவன் குணம் எலாம் - மனுகுலத்தவனை இராமபிரானுடைய திவ்ய கல்யாண குணங்களை யெல்லாம், நினையும் மா மதியினுன் ஆன - (எப்பொழுதும்) சிந்தித்துக் கொண்டிருக்கும் பேரறிவுடையனுமான அநுமன், 'யானும் - அடியேனும், உன் குலமும் - உனது வானர குலமும், இ உலகும் - இந்த உலகமும், உய்ந்தனம் - ஈடேறினேம்.' எனு - என்ற சொற்களை முன்னிட்டுக் கூறிக்கொண்டு, தன் அரிகுலத்து அரசன் மாடு அணுகினுன் - தனக்குரிய வானர குலங்களுக்கு அரசனுன சுக்கிரீவன் அருகே போய் அடைந்தான்.

அநுமனுக்கு மந்தரமலை; சுந்தர. 42, 195, 736, 774. அநுமன் நெடும் புகழினுன்; 67, 429, 968. அநுமன் இராமபிரான் அரிய குணங்களை எப்பொழுதும் நினைத்திருப்பவன்; சுந்தர. 197, 329; மானவன் என்ற பெயரால் இராமபிரானைக் குறிப்பது இந்நூலிற் பரக்கக் காணலாம்.

பி - ம். 1. நெடும்புகழி னேன்.
2. பொருமன்ச் குரிசின்மா; டணுகியே.
3. யானுமென் குலமு; யானுமெங் குலமு.
4. முணருமா மதியினுன்; முணருமா மகிழ்வினுன். (1)

இராமபிரான் வரலாற்றை அநுமன் சுக்கிரீவனுக்குக் கூறுதல்.

79. மேலவன் றிருமகற் குரைசெய்தான் விரைசெய்தார்
வாலியென் றளவிலா வலியினு னுயிர்தெறக்
காலன்வந் தனனிடர்க் கடல்கடந் தனெமெனு
ஆலமுண் டவனினின் றருநடம் புரிகுவான்.

(அடைந்த அநுமன்), ஆலம் உண்டவனின்நின்று-ஆலால முண்ட சிவபெருமானைப் போல நின்று, அரு நடம் புரிகுவான் - அரிய திரு நடனம் செய்பவனாய், 'விரை செய் தார் - வாசனையை வீசும் மாலையை யுடைய, வாலி என்று அளவு இலா வலியினன் - வாலியென்று சொல்லப்பெறும் அளவற்ற வலிமை வாய்ந்தவனுடைய, உயிர் தெற - உயிரை அழிக்க, காலன் வந்தனன் - யமன் வந்துவிட்டான்; இடர் கடல் கடந்தனெம் - நாம் துன்பக்கடலைத் தாண்டிவிட்டோம்,' என - என்று, மேலவன் திருமகற்கு - வானிற் செல்லும் சூரியனுடைய திருக்குமாரனான சுக்கிரீவனுக்கு, உரை செய்தான் - கூறினான்.

அருள் நடம் என்று பாடங்கொண்டு தேவர்களும் பிற உயிர்களும் அழியாமல், விடத்தை உண்டு அருண்மேலிட்டு அம்மகிழ்ச்சியிற் புரிந்த நடனம் என்றுங் கூறுவர். அநுமன் சிவபெருமான் அம்சமாய் அவ தரித்தவன் என்ற தேவ இரகசியத்தை அவனுக்கு உவமைமூலம் ஒப் பிட்டுக் கூறுவது நம் நூலாசிரியர் மரபு என்பதை இந்நூலிற் பல விடங் களிற் காணலாம். இடர்க் கடல் கடந்தனெம் : இது துணிவுபற்றி வந்த காலவழுவமைதி.

சிவபிரான் ஆலமுண்டு ஆடியதுண்டா என்பது ஆராயத்தக்கது. இனி, இராம லக்ஷ்மணர்களைப் பகைவரோ என்றயிர்த்து அஞ்சிப் பதுங்கியிருந்த சுக்கிரீவனிடம், அவனுக்கு ஊக்கம் பிறக்குமாறு அநுமன் அவர்களைப்பற்றிக் கூறும் இத்திறம், நோக்கி வியக்கத் தக்கதாம். பின், பிராட்டிபாற் சென்று திரும்பியபோது அவன் இராமபிரானிடம் அவளைப்பற்றிக் கூறும் சுந்தரகாண்டப் பகுதியோடு இதனை ஒப்பு நோக்குக.

பி - ம். 1. *மேலவன் றருமகற்.*
4. *றருணடம்.* (2)

**80.** **மண்ணுளார் விண்ணுளார் மாறுளார் வேறுள்ர்**
**எண்ணுளார் திசையுளா ரியலுளா ரிசையுளார்**
**கண்ணுளா ராயினர் பகையுளார் கழிநெடும்**
**புண்ணுளா ராருயிர்க் கமிழ்தமே போலுளார்.**

'(அவ் வீரர்கள்), மண் உளார் - இந்தப் புவியில் உள்ள மானிடர்களும், விண் உளார் - வானில் உள்ள தேவர்களும், மாறு உளார் - மண் விண் ஆகிய இரண்டுக்கும் மாறான பாதல வுலகில் உள்ளவர்களும், வேறு உளார் - அவற்றிற்கும் வேறான பிற இடங்களில் உள்ளவர்களும், திசை உளார் - திசைகளில் உள்ளவர்களுமான, எண் உளார் - தம்மைக் கருத்திற்கொண்டு தியானிப்பவர்கள் ஒவ்வொருவருக்கும், இயல் உளார் இசை உளார் கண் உளார் ஆயினர் - அறிவிலும் கீர்த்தியிலும் கண்ணிலும் நின்றவர்போல உதவிபுரிபவரும், பகை உளார் - பகையை யுடையவரும், கழி நெடும் புண் உளார் ஆர் உயிர்க்கு - அப்பகைவரால் செய்யப்பட்ட மிகப் பெரிய புண்ணை யுடையவர்களுமான அரிய வுயிர்களுக்கு, அமிழ்தமே போல் உளார் - தேவாமிர்தத்தை ஒத்திருப்பவர்கள்.

இராம லக்ஷ்மணர்கள், புவி, வான், பாதலம், அவற்றின் வேறான பிற இடங்கள், திசைகள் என்ற இவற்றில் உள்ளார்களாய்த் தம்மைக் கருத்திற்கொண்டு தியானிப்பவர்க்கு அறிவும், புகழும், கண்ணும் போல நின்று உதவியளித்துப் பகைவர்களால் பெரும் புண்ணடைந்தவர்க்கு உயிரளிக்கும் அமிர்தமேபோல உதவுவோர் ஆவர் என அநுமன் அவ்விராம லக்ஷ்மணர்களின் வீரம் கருணை ஆகிய சிறப்புக்களை மேலும் சுக்கிரீவனுக்கு எடுத்துக் கூறுவானானான்.

கண்ணுவான் ; ஒப்பு : 'கண்ணுவா னென்றும், மண்ணோர் விண்ணோர்க்கு, தண்ணார் வேங்கட, விண்ணோர் வெற்பனே !' (திருவாய்மொழி. 1, 8, 3). அமிழ்தன்னவன்; ஒப்பு : 'அச்சமுற் றடைந் தார்க் கமிழ்தன்னவன்'; (சீவக. 157). இச் செய்யுளில் இராம லக்ஷ்மணர்களின் தெய்வீகச் சிறப்பை அநுமன் சுக்கிரீவனுக்குக் குறித்தபடி ஆகும்.

பி - ம். 1. *மற்றுளார் வேறுளார்.*
2. *என்னுளா ரிசையுளார்; என்னுவா ராரவர்க், ரெவரெவர்க், குளரவர்க்.*
4. *புண்ணுளா ராருயிர்க் கமுதமே; போன்றுளார்.* (3)

81. சூழிமால் யானையார் தொழுகழற் றயரதன்
பாழியா ருலகெலா மொருவழிப் படரவாழ்
ஆழியான் மைந்தர்பே ரறிவின ரழகினர்
ஊழியா லினிதுனக் கரசுதந் துதவினர்.

'(மேலும் அவ்விருவரும்), சூழி மால் யானையார் - முகபடாம் அணிந்த பெரிய யானையையுடைய அரசர்கள், தொழு கழல் - வந்து வணங்கும் வீரக்கழலையுடைய, தயரதன் - தசரதனென, பாழி ஆர் உலகு எலாம் - பெரியதாய் விளங்கும் உலகங்கள் யாவும், ஒருவழி படர - ஒப்பற்ற தன் ஆஞ்ஞை வழியே அடங்கி நடக்க, வாழ் - ஆட்சிசெய்து வாழ்ந்து வந்த, ஆழியான் மைந்தர் - சக்கரவர்த்தியின் குமாரர்கள், பேர் அழகினர் - மிக்க சௌந்தரியம் வாய்ந்தவர்களும், அறிவினர் - சிறந்த அறிவாளிகளும் ஆவர்; (அவர்கள்), ஊழியால் - (உனது நல்வினையின்) விதியின்படி, உனக்கு இனிது அரசு தந்து உதவினர் - உனக்கு இனிதாக இவ்வாநர ஆட்சியைக் கொடுத்து அருள்புரிந்தவர் ஆவர்.

தயரதன், அரசர்கள் வந்து வணங்கும் கழல்களை யுடையவன்; 'கோவுடை நெடுமணி மகுடகோடியால், சேவடி யடைந்த பொற் கழலுந் தேயுமால்'; (பால. அரசியற்: 8). ஒருவழிப் படர வாழ்ந்தது: 'வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர், உள்ளமு மொருவழிப் படர நின்றவன், தள்ளரும் பெரும்புகழ்த் தயரதப் பெயர், வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே' (பால. அரசியற்: 6). அழகினர்; 'உலகொரு மூன்றுந் தம்முடைமை யாக்குறும் அலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்' (ஆரணிய: 190) எனச் சடாயுவும்,

" கரந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பரந்தரு நான்முகன் பழிப்புற் றுனரோ
இரந்தில னிணையடிப் பொடியு மேற்கிலாப்
புரந்தர னுலகெலாம் புரக்கின்று னென்றுன். (ஆரணிய. 244)

எனவும்,

இருவர் மானிடர் தாபத ரேந்திய
வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர். (ஆரணிய. 365);

எனவும் சூர்ப்பணகையும் புகழ்ந்தமை காண்க. ஊழ் - விதி; இகரச் சாரியை பெற்று வந்தது; 'நல்லூழிச் செல்வம் போல' (கலித். 130:4).

இச் செய்யுளில் சொல்லின் செல்வனான அநுமன், இராம லக்ஷ்மணரின் குலச் சிறப்பையும், அவர்களின் உள்ளழகு புற அழகு

களையும், அவர்கள்பால் சுக்கிரீவன் அடைக்கலம் புகுவதால் அடையக் கூடிய பயனையும் தெரிவிப்பது, படிப்பவர்க்கு ஓர் இறும்பூது விளைப்ப தாகும். உதவினுர் என்றது, தேற்றப் பொருளில் வந்த கால வழுவமைதி.

பி - ம். 1. சூழிமால் யானையான் ஏெருழு; *கழற் றசரதன்*.
2. பாழியா னுலகெலாம்; மொருவழிப் படர்குவான்.
3. ரழகிஞ ரறிவினுர்.
4. ஊழியா ரெளிதினிற், ஊழியா ரினிதுயிற், ஊழியா ரினி யுளக், ஊழியா ரெளிதினிற்; கரசுதற் றுதவுவார்; கரசுதற் தருளுவார். (4)

82. நீதியார் கருணையின் னெறியினுர் நெறிவயின்
பேதியா நிலைமையா ரெவரினும் பெருமையார்
போதியா தளவிலா வுணர்வினுர் புகழினுர்
காதியார் சேய்தருங் கடவுள்வெம் படையினுர்.

'(மேலும் அவர்கள்), நீதியார் - நீதி முறையை மேற்கொண்டவர் கள்; கருணையின் நெறியினுர் - அருள் நெறியிலேயே தம் வாழ்க்கையை நடத்துபவர்கள் ; நெறி வயின் - அந் நீதிமார்க்கத்தினின்றும், பேதியா நிலைமையார் எவரினும் - மாறுபடாத உறுதிநிலை யுடையவர்களான யாவரினும், பெருமையார் - சிறப்பு வாய்ந்தவர்கள்; போதியாது - பிறர் கற்பிக்கப் பெருது, அளவு இலா உணர்வினுர் - அளவிட்டுக் கூற முடியாத இயல்பான அறிவுடையோர்கள் ; புகழினுர் - கீர்த்தியை யுடையவர்கள் ; காதியார் சேய் தரும் - காதி என்னும் அரசரின் குமாரரான கௌசிகமுனிவர் கொடுத்தருளிய, கடவுள் வெம் படையினுர் - தெய்வத்தன்மை வாய்ந்த கொடிய அஸ்திர சஸ்திரங்களை யுடையவர்கள்.

போதியா தளவிலா உணர்வினுர்; இயற்கைப் பேரறிவுடைய திருமால் அம்சமாதலின் கௌசிகமுனிவர் இராம லக்ஷ்மணர்க்குப் படைக்கலங்கள் தந்து மந்திரங்கள் உபதேசித்தது; பால. தாடகை வதைப் : 18; வேள்விப்: 1; குலமுறை : 28. காதியார் : ஆர், சிறப்புப் பன்மைவிகுதி. கடவுட்படை ; ஆரணிய. 148.

பி - ம். 1. கருணையின் நிலைமையார்.
2. பேதியா நிலையினு.
4. காதிசேய் தருகடற்; தருநெடுங், தருங்கடற், தருநடன், கடவு டம்படை, கடவுளர் படையுளார். (5)

83. வேலிகற் சினவுதா டகைவிளிந் துருளவிற்
கோலியக் கொடுமையாள் புதல்வனைக் கொன்றுதன்
காலியற் பொடியினு னெடியகற் படிவமாம்
ஆலிகைக் குரியபே ருருவளித் தருளினன்.

வேல் இகல் - மூவிலை வேலாகிய சூலங் கொண்டு போர்புரியும், சினவு தாடகை - கோபமிக்க தாடகை என்னும் அரக்கி, விளிந்து உருள - இறந்து கீழே உருண்டு விழ, வில் கோலி - வில்லை வளைத்து (அவளை அழித்து), அ கொடுமையாள் - அக்கொடியவளுடைய, புதல்வனைக் கொன்று-மைந்தனாகிய சுபாகு என்பானைக் கொன்று, தன் கால் இயல் பொடியினால் - தன் திருவடிகளில் ஒட்டிக்கொண்டிருந்த தூளியினால், நெடிய கல் படிவம் ஆம் - நீண்ட ஒரு கல் வடிவமாகக் கிடந்த, ஆலிகைக்கு - அகலிகை என்பாளுக்கு, உரிய பேர் உரு அளித்து அருளினான் - முன் உரியதாய் இருந்த பெருமைவாய்ந்த சிறந்த உருவத்தைக் கொடுத்து அருள்புரிந்தான் இராமபிரான்.

வேல் - சூலம் : 'மூவிலை வேலைச் செலவிட்டாள்': (சுந்தர. 182). இராமபிரான் தன் காலின் பொடியால் கல் உருவாய்க் கிடந்த அகலிகை சாபம் நீக்கி நல்லுரு வளித்தது ; பால. அகலிகை. 71, 85 ; குலமுறை : 29. தாடகை : மலைகளிற் சஞ்சரிப்பவள் என்னும் காரணத்தால் வந்த பெயர் ; ஆலிகை ; அகல்யா என்ற வடசொல்லின் திரிபு : ஹல்லிகா, பிராக்ருதம்; இஃது, அழகின்மை என்பது இல்லாதவள் ; அதாவது, அழகே உருவாய் அமைந்தவள் என்பது. உரிய பேருரு - முன் னுரியதான சிறந்த உரு ; "காகுத்தன் கழற்றுகள் கதுவ......................பண்டை வண்ணமாய் நின்றனள்" (பால. அகலிகைப் : 71) ; என்பது காண்க. கால் பொடி ; (ஆரணிய. 189). இதுமுதல், பாடல்கள் சுவடிகளில் பலவாறு இடம் மாறியுள்ளன.

பி - ம். 1. மேலிகற் சினவு.
2. கோலியப் பெருமையாள், கோலியப் பேருளாள், கோலியப் போருளாள், கோலிதற் கொடுமையாள்.
4. ஆலிகைக் கனைய, ஆலிகைக் கரியதோ ருரு, ஆலிகைக் கரிய பேருரு. (6)

84. நல்லுறுப் பமையுநம் பியரின்முன் னவனயந்
தெல்லுறுப் பரியபே ரெரிசுடர்க் கடவுடன்
பல்லிறுத் தவன்வலிக் கமைதியம் பகமெனும்
வில்லிறுத் தருளினன் மிதிலைபுக் கணையுநாள்.

'நல் உறுப்பு அமையும் - நல்ல அங்கலக்ஷணங்கள் அமைந்த, நம்பியரின் - ஆடவரிற் சிறந்தவரான அவ் ிராம லக்ஷ்மணர்களில் முன்னவன் - மூத்தவனான இராமபிரான், மிதிலை புக்கு அணையும் நாள் - மிதிலாபுரியை அடைந்த அக்காலத்தில், எல் உறுப்பு - ஒளிவீசுங் கிரணங்களை உறுப்பாக உடைய, அரிய பேர் எரி சுடர் கடவுள் தன் - அரிதாகிய பெரிய நெருப்புப் போல் ஒளியையுடைய சூரியதேவனுடைய, பல் இறுத்தவன்-பற்களைத் தகர்த்து உதிருமாறு செய்தவனான சிவபெருமானுடைய, வலிக்கு அமை - வலிமைக்கு ஏற்றதாய் அமைந்த, தியம்பகம் எனும் - திரியம்பகம் என்று சொல்லப்பெறும், வில் நயந்து இறுத்து அருளினன் - அவ்வில்லை விருப்பமேலிட்டு (எடுத்து நாணேற்றி) ஒடித்தருளினன்.

எல் - ஒளி; 'எல் வளையார்' (அயோத். கைகேசிசூழ்வினைப் : 37); 'எல் லொடுங்கிய முகத்திளவல்'; (அயோத். கிளைகண்டு : 51); 'எல்லொளிப் பாவை'; (பெருங். 1, 33 : 162). எரிசுடர்க் கடவுள் பல்லிறுத்தது : வீரபத்திரனாகச் சிவபிரான் தக்ஷயாகத்தில் மற்ற தேவர் களோடு வந்திருந்த சூரியன் பற்களைத் தகர்த்ததாக உள்ள வரலாறு. தியம்பகம் - திரியம்பகம்; அதாவது மூன்று கண்களையுடைய சிவ பெருமானது வில். திரியம்பகன் - முக்கண்ணனான சிவபெருமான்; அம்பகம் - கண். இராமபிரான் திரியம்பகம் என்னும் வில்லை எடுத்து வளைத்தொடித்தது; (பால. கார்முக: 34);

பி - ம். 1. நல்லுறுப் பமையு நங்கையரின் மேலவன் பொருட், முன்ப வனயந், முன்பவ னெழில், முன்பவன் முனம், முன்னவன் முனம், முன்பனை யனையவன், முன்னவ னெனில்,
2. எல்லுறுப் புடைய; ரெழுசுடர்க்.
3. பல்லி றுத்தனன்; திரியம்பக மெனும்,
4. புக் கிணைய நாள். (7)

85. உளைவயப் புரவியா னுதவவுற் றொருசொலால்
அளவில்கற் புடையசிற் றவைபணித் தருளலால்
வளையுடைப் புணரிசூழ் மகிதலத் திருவெலாம்
இளையவற் குதவியித் தலையெழுந் தருளினன்.

உளை வயம் புரவியான் - பிடரி மயிர்களையுடைய வலிமைவாய்ந்த குதிரைகளையுடைய தசரதசக்கரவர்த்தியால், உதவ உற்று-(விருப்புடன்) அளிக்கப்பெற்று; அளவு இல் கற்பு உடைய - அளவிட்டுச் சொல்ல முடியாத கல்வியையுடைய, சிற்றவை-தன் சிறிய தாயாராகிய கைகேசி, ஒரு சொலால் - (தசரதசக்கரவர்த்தி முன் அவளுக்கு வரமளித்திருந்த) ஒரு சொல்லின் காரணமாய், பணித்து அருளலால் - கட்டளை யிட்டமை யால், (அதை மேற்கொண்டு), புணரி சூழ் வளையுடை - கடல் சூழ்ந்து வளைந்துள்ள, மகிதலம் திரு எலாம் - புவியாளும் தன் உரிமைச் செல்வம் அனைத்தையும், இளையவற்கு உதவி - தன் தம்பியாகிய பரதனுக்கு அளித்துவிட்டு, இ தலை எழுந்தருளினன்- (வனவாசம் செய்ய வந்தவன்) இங்கு வந்துள்ளான்.

புரவியான் உதவவுற் றொருசொலால்:—முன் தசரதன் கைகே யிக்கு அளித்த வரங்களில் ஒரு சொல்லை மேற்கொண்டு என இயைத் துப் பொருள் கோடலும் அமையும். வளையுடைப் புணரி - சங்குகளைத் தன்னிடங்கொண்ட கடல் என்னலும் ஆம். மகிதலம் - புவியாகிய இடம்; மகி - பூமி, (பிங்); இது வடசொல். மகிதலத் திரு: 'புவியெ னுந்திரு' (அயோத். மந்திரப் : 38); என்றது போல. அளவில் கற்புடைய: தக்கவாறு கூனியால் போதித்து உறுதி யூட்டப் பெற்ற, என்றும் கூறலாம்; கற்பு - போதனை. சிற்றவை பணித்தது; 'நாயகன் உரையான் நாவால் நானிது பகர்வன்' (அயோத். கைகேசி சூழ்வினைப்: 103).

பி - ம். 1. னுதவமற். 2. தருளவே.
3. தரசெலாம். 4. இளவலுக் குதவி, இளையவற் கருளி. (8)

86. தெவ்விரா வகைநெடுஞ் சிகைவிரா மழுவினன்
அவ்விரா மனையுமா வலிதொலைத் தருளினன்
இவ்விரா கவன்வெகுண் டெழுமிரா வணையனும்
அவ்விரா தனையிரா வகைதுடைத் தருளினன்.

'இ இராகவன் - இந்த இராமபிரான், தெவ் இரா வகை - உலகில் பகைவர்களே இராதபடி, நெடும் சிகை விரா - நீண்ட சுடர்கள்

பொருந்திய, மழுவினுன் - கோடாலி என்னும் ஆயுத மேந்தியவனுன, அ இராமனேயும் - அந்தப் பரசுராமன் என்பவனேயும், மாவலி தொலேத்து அருளினுன் - அவன் பெருவலியை ஒழித்து (உலகுக்கு) அருள்புரிந்தான் ; (அதுவன்றி), வெகுண்டு எழும் - தன்மீது கோபித்து எதிர்த்து வந்த, இரா அனேயன் ஆம் - இரவுபோன்ற கருநிறத்தவ ஞன, அ விராதனே - அந்த விராதன் என்னும் அரக்கனே, இராவகை - உலகில் உயிரோடு இராதபடி, துடைத்து அருளினுன் - அழித்து அருள் புரிந்தான்.

இராகவன் பரசுராமன் வலிதொலேத் தருளியது ; பாலகாண்டம், பரசுராமப் படலத்திற் காண்க. விராதன் என்ற சொல்லுக்கே மிகவும் கொடுமை புரிபவன் எனப் பொருள் கூறுவதும் உண்டு. இராகவன் - இரகு என்னும் அரசன் மரபில் உதித்த காரணத்தால் இராமபிரானுக்கு வந்த தத்திதாந்தப் பெயராகும். விராதன் வரலாறு கள் முன் ஆரணிய காண்டத்து விராதன் வதைப்படலத்தால் அறியப் பெறுவன காணலாம். விராதன் இரவு போன்ற கருநிறத்தவன் ; 'தயங்குதின் கரிய காளிமை தழைந்து தவழ ';..................மங்கு பாதகம் விடங்கனல் வயங்கி நிமிரக் கங்குல் பூசிவரு கின்றகலி கால மெனவே' (ஆரணிய. 14) ; என்றமை ஒப்பு நோக்குக. விராம் மழு என்னும் வினேத்தொகை, நிலேமொழி ஈறு கெட்டு விரா மழு என நின்றது. அவ்விராமனேயும் : அ, உலகறி சுட்டு, உம்மை உயர்வு சிறப்பினது. மா வலி - சிறப்புற்ற வலிமை ; வலி - தவ வலிமையும் ஆம். இச் செய்யுளில் இராமபிரான் பரசுராமன், விராதன் இவர்கள் வலிதொலேத் தழித்தவன் என்றமையால், முன் (79) இல், ' வலியென் றளவிலா வலியினு னுயிர்தெறக் காலன் வந்தன னிடர்க்கடல் கடந்தனம் ' எனக் கூறிய மொழியை இங்கு அநுமான் அவ்விராம பிரான் வலிமையையும் வெற்றியையும் விளங்கக்கூறிச் சுக்கிரீவனுடைய அச்சந் தவிர்த்து அவனுக்கு நம்பிக்கையை ஊட்டினுன் என்க.

பி - ம். 1. மழுவுடை.
2. தொலேத் தளியினுன்.
3. டெழுமாா வனேயனும்.
4. பிராவினேயடைத்.

(9)

**87.** கரன்முதற் கருணையற் றவர்கடற் படையொடும்
சிரமுகச் சிலைகுனித் துதவுவான் திசையுளார்
பரமுகப் பகைதுமித் தருளுவான் பரமராம்
அரன்முதற் றலைவருக் கதிசயத் திறலினன்.

(மேலும் அந்த இராமபிரான்), கரன் முதல் கருணை அற்றவர் - கரன் முதலான இரக்கமற்ற அரக்கர்களுடைய, கடல் படையொடும் - கடல் போன்ற பதினாலாயிரப் படை வீரர்களோடும், சிரம் உக - அவர்கள் தலைகள் சிந்தி விழ, சிலை குனித்து - தன் வில்லை வளைத்துக் கொன்று, உதவுவான் - தேவர்களுக்கும் மானிடர்களுக்கும் பேருதவி புரிந்தவனாவான்; (அதுவன்றி), திசை உளார் - திசைகள் எங்கும் உள்ள வர்களான, பர முக பகை - வேற்றுமையுணர்ச்சி கொண்ட பகைவர் களை, துமித்து அருளுவான் - அழித்து யாவர்க்கும் அருள் புரிவோனும் ஆவன்; பரமர் ஆம் - மேலான தேவரான, அரன் முதல் தலைவருக்கு - சிவபிரான் முதலான தேவர்களுக்கும், அதிசய திறலினன் - வியக்கத் தக்க வலிமை வாய்ந்தவனுமாவன்.

கரன் முதலியோரை இராமபிரான் கொன்றது, ஆரணிய காண்டம், கரன் வதைப் படலத்தில் விரிவாக உள்ளமை காணலாம். கடல் படை: என்றது அதன் பெருமையை உணர்த்தியது. பர முகம்: பராங்முகம் என்ற வடசொற்றொடரின் திரிபு; பராங்கதி என்றது போல; இது, பராமுகம் என வருதலும் உண்டு. 'புவியுளார் பரம் உக - உலகத்துப் பாரம் அழிய' என்பது பழையவுரை. இதன் பின் ஒரு பிரதியில்,

பிரிவில்கா னதுதனிற் பெரியசூர்ப் பணகைதன்
கரியமா நகிலொடுங் காதொடும் நாசியை
அரியினு ரவர்சொலத் திரிசிரா வலனொடும்
கரனொடு மவுணருங் காலன்வா யாயினர்.

என்றொரு பாடல் உள்ளது.

பி - ம். 2. சிரமுகச் சிலைவளைத் துதவுவார், சிரமறச் சிலையனைத் துதவுயார் தியுளார்; துதவினர் புவியுளரர். (10)

88. ஆயமா நாகர்தா ழாழியா னேயலால்
காயமா னுயினுன் யாவனே காவலா
நீயமா நேர்தியா னிருதமா ரீசனுர்
மாயமா னுயினுன் மாயமா னுயினுன்.

'காவலா - (எங்கள்) அரசனே! ஆர் மாய மான் ஆயினுன் - நிறைந்த மாயையையுடைய மான்வேடம் பூண்டவனுன, நிருத மாரீசன் - மாரீசன் என்னும் அரக்கனுக்கு, மா யமான் ஆயினுன் - பெரிய யமனுக வந்த இராமபிரான், ஆய - பொருந்திய, மா நாகர் தாழ் - பெருமைவாய்ந்த தேவர்கள் வந்து வணங்கும், ஆழியானே அலால் - திருப்பாற் கடலில் யோகநித்திரை செய்தருளும் திருமாலே அல்லாமல், மான் காயம் ஆயினுன் யாவனே - மானிட சரீரத்தவன் வேறெவன்? (இவனே என்றபடி); (ஆதலால்), நீ அ மான் நேர்தி - நீ அந்த மகானை வந்து எதிர்கொண்டு நட்புக்கொள்வாயாக.

ஆயமா நாகர் என்றுகொண்டு, ஆயமா - கூட்டமாக எனலும் ஆம். நாகர் - தேவர்: இது பலபொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல். ஆழியான் - சுதர்சனம் என்னும் சக்கராயுதத்தையுடைய திருமால் என்னலும் ஒன்றும். காயமானுயினுன்; மான் - மானிடன் - 'மானுடம்பு விடா'; (மேருமந். 72). ஆய மா நாகர் தாழ் - அழகிய பரமபதத்தில் நித்தியர் சேவிக்கும், என்றும் பொருள் கொள்வர். 'காய மானுயினுன் - மானிட வடிவமெடுத்தான். மான் - சுவாமி, நீ யமான் நேர்தி - நீ சுவாமியை வந்து எதிர்கொள். மாய் யமானுயினுன் - மாய்க்கும் யமனுயினுன், யமனே, யமான் என நீட்டல்; மானுயினுன் என்றது முதற்குறை.' என்பன பழையவுரை.

பி - ம். 1. *நாகர் வாழ்; ழாழியா னுமலால், ழாழியானேவலால்.*
2. *யாவரே காவலா, யாவனோ காவலா; காவலாய், காவலான்.*
3. *நீயமா னேர்தியால், நீயமா நேர்தியேல், நீயம்மா யோர்தியா; னேரின்மா ரீசனுர், நிகரின்மா ரீசனுர், நிருதமா ரீசனும்.*
4. *மாயமா னுயினுர்......* (11)

89. உக்கவந் தவவுடற் பொறைதுறந் துயர்பதம்
புக்கவந் தமுநமக் குரைசெயும் புரையவோ
திக்கவந் தரநெடுந் திரள்கரஞ் செலவுதோள்
அக்கவந் தனுநினைந் தமரர்தாழ் சவரிபோல்.

அம் தவ உடற் பொறை துறந்து உக்க - அழகிய தவத்தால் தூய்மையுற்ற உடலாகிய சுமையை விடுத்து இறந்த, அமரர் நினைந்து

தாழ் சவரி போல் - தேவர்கள் மனத்தால் தியானித்து வணங்கும் சவரி என்ற வேட்டுவ முதியாள் போன்று, திக்கு அவம் தர - எல்லாத் திசைகளிலும் உள்ள உயிர்கட்கெல்லாம் கேடு விளைவிக்கும்படி, நெடு திரள் கரம் செலவு தோள் - நீண்டு திரண்ட கைகளை நீளச் செலுத்தும் புயங்களை யுடைய, அ.கவந்தனும் - அந்தக் கவந்தன் என்னும் அரக்கனும், உயர் பதம் புக்க அந்தமும் - உயர்ந்த பரம பதவியை அடைந்த அழகும், நமக்கு - எம் போல்வாருக்கு, உரை செயும் புரையவோ - எடுத்துச் சொல்லும்படி அத்துணை இலேசு அல்லது எளிமையானதோ?

அவம் - கேடு ; 'அவஞ்செயத் திருவுடம் பலச நோற்கின்ருன்' (ஆரண்ய. 237); அந்தம்: என்றதால், கொடிய கவந்தனையும், தூயதவச் சவரியையும் உயர் நெறியில் ஒன்றுகூட்டிய சிறப்பு உணர்த்தப்பெற்றது என்றும் கொள்ளலாம். அந்தம் - முடிவு என்னலும் ஆம்.

பி - ம். 1. உக்கவர் தவ்வுடல்; தவவுடல் முடற்பகை; வந்தவக் கடற் படை, வந்திடு திடற்பொறை.
2. புரையவோ.
3. திக்கு மந்தர நெடுந்; செலவுதோள். (12)

90. முனைவரும் பிறருமே முடிவரும் பகலெலாம்
இனையர்வந் துறுவரென் றியறவம் புரிகுவார்
வினையெனுஞ் சிறைதுறந் துயர்பதம் விரவினர்
எனையரென் றுரைசெய்கே னிரவிதன் புதல்வனே!

'இரவிதன் புதல்வனே - சூரிய குமாரனன சுக்கிரீவனே! முனைவரும் பிறரும் - முனிவர்களும் மற்றவர்களும், இனையர் வந்து உறுவர் என்று - இந்த இராம லக்ஷ்மணர்கள் வந்து அருள் புரிவார் என்று, முடிவு அரும் பகல் எலாம் - ஓர் எல்லையற்ற சிறந்த காலம் எல்லாம், இயல் தவம் புரிகுவார் - சிறந்த தவத்தைச் செய்தவர்களாய், வினை எனும் சிறை துறந்து - இருவினை யாகிய பந்தத்தை விட்டு நீங்கி, உயர் பதம் விரவினர் - சிறந்த மோக்ஷ பதவியிற் போய்க் கலந்துகொண்டனர்; எனையர் என்று உரை செய்கேன் - அப்படி விரவுதற்குக் காரணமான இந்த இராம லக்ஷ்மணர்களை, எத்தன்மையர் என்று யான் எடுத்துரைக்கக் கூடியவனுவேன்! (தன்னால் உரைக்கும் திறனில்லை என்றபடி). ஏ, அசை.

முனைவர் - முனிவர் அல்லது முன்வைத்துக் கருதத்தக்க பெரியோர்; 'வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவன்' (நன். சூ. 6).

முனைவரும் பிறரும் - சரபங்கர், சவரி முதலினோர். இனி, எனைய ரென்றுரை செய்கேன், என்பதற்கு, எத்தனை பேர் என்று யான் எடுத்துரைப்பேன் என்று கூறினான் அநுமன் எனவும் கொள்ளலாம். இயல் தவம் - நெறி தவறாத சிறந்த தவம்; 80 ஆம் செய்யுள் முதல் இதுகாறும் இராம லக்ஷ்மணரின் வரலாறுகள் முழுமையும் கூறி, அவர்களுடைய வலிமை, தெய்வத்தன்மை முதலியவற்றையும் சுக்கிரீவனுடைய உள்ளத்தில் பதியச்செய்த அநுமன் திறம் காண்க.

பி - ம். 1. முனிவரும்; முடிவறும்.
2. இனையன வா; றவம் முயல்குவாா; முயலுவாா; முயலகுவான்.
3. பதா தருவினர், பதம் விரைகுவார், பதம் விரவினோர்.
4. இனைவரென்; றுரைசெயவே; னிரவிதன சிறுவனே. (13)

91. மாயையான் மதியிலா நிருதர்கோன் மனைவியைத்
தீயகா னெறியினுய்த் தனனவட் டேடுவான்
நீயையா தவமிழைத் துடைமையா னெடுமனம்
தூயையா வுடைமையா லுறவினைத் துணிகுவார்.

'ஐயா - ஐயனே! மதி இலா நிருதர் கோன் - அறிவு அற்ற அரக்கர் அரசனான இராவணன், மாயையால் - வஞ்சகச் செயலால், மனைவியை - இராமபிரானுடைய மனைவியாகிய சீதாப்பிராட்டியை, தீய கான் நெறியின் - கொடிய காட்டின் வழியே, உய்த்தனன் - கொண்டு சென்றான்; (அதனால்) அவள் தேடுவான் - அவளைத் தேடியடையும்பொருட்டு, நீ தவம் இழைத்து உடைமையால் - நீ நற்றவம் செய்துள்ளமையாலும், மனம் நெடும் தூயையா உடைமையால் - மனம் பெரிதும் பரிசுத்தம் உள்ளதாக நீ உடைமையால், உறவினை - உன்னுடைய நட்பு உறவை, துணிகுவார் - அடையத் தீர்மானித்துள்ளனர்.

'அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை நின்றாரிற் பேதையாரில்' (குறள். 142) என்றமையால், 'மதியிலா நிருதர் கோன்' எனப்பட்டான். கான் தீய நெறி உய்த்தனன் என மாற்றி, வனத்தில் வசிக்கும்போது கெட்ட வழியில் அபகரித்து எடுத்துச் சென்றனன் என்னலும் ஒன்றும். இராமன் சுக்கிரீவனை நாடி வந்தது, அவன் முன் செய்த தவப்பயனாலும், அவனுடைய மனத் தூய்மையாலுமே ஆம்; மேல், இராமபிரானை நோக்கி, 'பொய்யுடை யுள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவ' (379) என வாலியும், 'அடியேன் அருந்தவத்தா லணுகுதலால்' (ஆரணிய. 61) என விராதனும்;

ஆயிர யுகமுள தவமயர் குவென்யான்
நீயிவண் வருகுதி யெனுநிலை யுடையேன்
போயின தருவினை புகலுறு விதியான்
மேயினை யினியொரு வினையிலை விறலோய்.

(ஆரணிய. 113) எனச் சரபங்க முனிவரும் இராமபிரானை நோக்கிக் கூறியவாற்றுலும் இஃது அறியப் பெறுவதாகும்.

பி - ம். 1. *மாலையயின் மதியிலான், மாய்கையால் மதியிலான்.*

2. *தீயதன் னகரினுய்த், தீயவா னகரினுய்த், தீயதன் னகரின்வைத, தீயதன் மனையில்வைத; தன்னவட்டேடுவான்.*

4. *தூய்மையா முடைமையா, தூயம்யா முடைமையா; ஊறவினைத தொடர்குவார்; தேடுவார்.* (14)

அநுமன் சுக்கிரீவனை இராமலக்ஷ்மணரிடம் நட்புப் பூண அழைத்தல்

92. தந்திருந் தனரருட் டலைமையைப் பகைஞனும்
இந்திரன் சிறுவனுக் கிறுதியின் றிசைதரும்
புந்தியின் பெருமையாய் போதரென் றுரைசெய்தான்
மந்திரங் கெழுமுநூன் மரபுணர்ந் துதவுவான்.

கெழுமு நூல் - சாஸ்திரப் பிரமாணமாகச் சிறந்த, மந்திரம் மரபு உணர்ந்து உதவுவான - மந்திராலோசனையின முறைகளை நன்கு உணர்ந்து சுக்கிரீவனுக்கு அவ்வப்போது அறிவுறுத்தி உதவி புரிபவனுன அநுமன், (சுக்கிரீவனை நோக்கி), ' புந்தியின் பெருமையாய் - புத்தியாற் சிறப்புற்றுேனே ! அருள் தலைமையை தந்திருந்தனர் - அருளின் மேம்பாட்டை உன்பால் அவர்கள் அளித்துள்ளார்கள் ; பகைஞன் ஆம் இந்திரன் சிறுவனுக்கு - நம் பகைவனும் இந்திர குமாரனுமான வாலிக்கு, இறுதி - முடிவு, இன்று இசை தரும் - இப்பொழுது வந்து பொருந்துவதாகும் ; (ஆதலின்), போதர் - நீ அந்த இராம லக்ஷ்மணர்களிடம் புறப்பட்டு வருவாயாக', எனறு உரை செய்தான் - என்று கூறினுன்.

' அருட்டலைமை - முதன்மை பெற்ற அனுக்கிரகம், அருளான தலைமை ' என்பது பழையவுரை. போதர் ; இது போதருக என்பதன் விகாரம். ' போதரா யென்றுன் புலர்ந்து ' (நள. 258). மந்திரங்

கெழுமு நூல் : மந்திரா லோசனைக்குரிய சிறந்த அரசியல் நீதி சாத்தி ரங்கள்.

பி - ம். 1. டனிநெடும் பகைஞரும், டனிலமையின் பகைஞரும், டனிமை நின் பகைஞரும்; தனிமையைப் பகைஞரும்.
3. புந்தியின் பெருமைவாய்ப் போதுகென்; பெருமையார்; போதியென்.
4. மந்திரங் கெழுவு. (15)

சுக்கிரீவன் இராமபிரானை அடைதல்

93. அன்னவா முரையெலா மறிவினு லுணர்குவான்
உன்னையே யுடையவெற் கரியதெப் பொருளரோ
பொன்னையே பொருவுவாய் போதெனப் போதுவான்
தன்னையே யனையவன் சரணம்வந் தணுகினன்.

அன்ன ஆம் - அத்தன்மையவான, உரை எலாம் - அநுமன் சொற்கள் அனைத்தையும்; அறிவினுல் உணர்குவான் - தன் அறிவால் அறிந்துணர்ந்த சுக்கிரீவன், (அநுமனை நோக்கி), 'பொன்னையே பொருவுவாய் - பொன்னையே நிகர்ப்பவனுன அநுமனே! உன்னையே உடைய எற்கு - உன்னையே துணைவனுக அடைந்துள்ள எனக்கு, எ பொருள் அரியது - எந்தப் பொருள் அடைவதற்கு அருமையானது? (எவையும் அடைவேன் என்றபடி); போது - வருவாயாக', என - என்று சொல்லி, போதுவான் - புறப்பட்டவனுய், தன்னையே அனையவன் - தனக்குத் தானே நிகரானவனுன இராமபிரானுடைய, சரணம் வந்து அணுகினன் - திருவடிகளை வந்து அடைந்தான். அரோ - ஈற்றசை.

பொன்னையே பொருவுவாய் : அருமை, பெருமை, நயம், ஒளி, பொறுமை என்ற சிறப்புக்களால் பொன் உயர்வுள்ளது ஆதலின் சிறந்த எதற்கும் பொன்னை உவமையாகக் கூறுவது கவி மரபு : 'பொன்னை யொப்பதோர் பொறையி னின்றுள்' (சுந்தர. 1271). இனிப், பொன்னையே பொருவுவாய் என்று, அநுமனுடைய பொன்னிறத் திருமேனியைக் குறிப்பிட்டதும் ஆம்; (சுந்தர. 73, 1041). மேலும், 'தேவ குருவான பிரகஸ்பதியைப் போன்ற அறிவுடையவனே' என்று அநுமனைச் சிறப்பித்ததும் ஆகும். பொன். - வியாழன்; (பிங்.). இராமபிரான் தன்னையே அனையவன்; அதாவது தனக்கு நிகர் பிறிது இல்லாதவன் (716); இராமபிரான், அநுமனைத் துணைபெற்ற சுக்கிரீ வனைப் புகழ்ந்துள்ளமையை (76) இங்குச் சுக்கிரீவன் கூறியதோடு

ஒப்பிடுக. தன்னையே யனையவன் ; இவ்வாறே அநுமனைக் கூறும்போதும் ஆசிரியர் ' தன்னைத் தானலது தொப்பிலாதான் ' (52) என்று கூறியது காண்க.

பி - ம். 1. அன்னயா றுரையெலா மறிவினுற் கொண்டுளான்.
2. பொருளதோ.
3. போதெனப் போதுயார், போதுவா யென்றனன், போதரென் றுரைசெய்தான் ; பொன்னின் மாமலையனுய் யம்மெனப் போந்துதான். 4. அன்னையே யனையவன் ; வந்தணுகுவான்; வந்தணுகுவார். (16)

வேறு

சுக்கிரீவன் இராமபிரானைக் காண்டல்

94. கண்டன னென்ப மன்னே
கதிரவன் சிறுவன் காமர்
குண்டலந் துறந்த கோல
வதனமுங் குளிர்க்குங் கண்ணும்
புண்டரீ கங்கள் பூத்துப்
புயறழீஇப் பொலிந்த திங்கள்
மண்டல முதயஞ் செய்த
மரகதக் கிரியன் னானை.

கதிரவன் சிறுவன் - சூரியன் மைந்தனான சுக்கிரீவன், புண்டரீகங்கள் பூத்து - தன்னிடம் பல தாமரைகள் மலரப்பெற்று, புயல் தழீஇ - மேகம் தழுவப்பெற்று, பொலிந்த - விளங்கிய, திங்கள் மண்டலம் உதயம் செய்த - சந்திரமண்டலம் உதிக்கப்பெற்ற, மரகத கிரி அன்னானை - ஒரு மரகத மலைபோன்ற இராமபிரானது, காமர் - அழகிய, குண்டலம் துறந்த - குண்டலங்களை நீத்த, கோல வதனமும் - அழகிய திருமுகத்தையும், குளிர்க்கும் கண்ணும் - கருணையால் குளிர்ந்து நோக்கும் திருக்கண்களையும், கண்டனன் - தெரிசித்தான், என்ப, மன், ஓ : ஈற்றசைகள்.

புண்டரீகங்கள் பூத்து...............மரகத கிரி : இஃது இராமபிரானுக்கு இல்பொருளுவமை ; புண்டரீகங்கள் ; கண்கள், வாய், கைகள், நாபி, பாதங்கள் முதலியன ; திங்கள் மண்டலம் - திருமுகம். கருமுகில் தாமரைக் காடு பூத்து ' (பால. திருவவதாரப் : 13) ; ' வாய் கண் கை யுந்திபதம் கோகனதம் பத்தினர் ' (திருவேங்கடமாலை, 8:).

என்று திருமாலுக்குக் கூறப்பெற்ற அங்க லக்ஷணங்கள் இராமபிரானுக்கும் ஒப்பாதல் நோக்குக. இராமபிரானுக்கு மரகதகிரி: (ஆரணிய. 332). குண்டலங் துறந்தது: பூண்ட தவவேடத்திற் கேற்ப மற்ற அணிகலன்களையும் உடன் கூட்டிக்கொள்க. 'புயல் தழீஇப் பொலிந்த திங்கள்; திருக்குழல் தழுவின திருமுகம்': பழையவுரை.

குறிப்பு :...கண்டனன் என்று தொடங்கும் இச் செய்யுளும், பின் நோக்கினன், தேறினன் எனத் தொடங்கும் அடுத்த இரு பாடல்களும், கண்டனன், நோக்கினன், தேறினன் என்ற முறையின் வைப்பில் அமைந்துள்ள சிறப்பு நோக்கத் தக்கது.

பி - ம். 1. காமர்க். 2. குளிர்ந்த கண்ணும், குளிருங் கண்ணும். 3. பொலிந்த திங்கள். 4. கிரியஞனே. (17)

சுக்கிரீவன் இராமலக்ஷ்மணர்களைக் கண்டு மகிழ்தல்

95. நோக்கின னெடிது நின்று
 னொடிவருங் கமலத் தண்ணல்
ஆக்கிய வுலக மெல்லா
 மன்றுதொட் டின்று காறும்
பாக்கியம் புரிந்த வெல்லாங்
 குவிந்திரு படிவ மாகி
மேக்குயர் தடந்தோள் வென்றி
 வீரராய் விளைந்த வென்பான்.

நோக்கினன் - அவ்வாறு இராம லக்ஷ்மணர்களைப் பார்த்த சுக்கிரீவன், நெடிது நின்றான் - (அன்னவர் திவ்ய சௌந்தர்யத்தில் ஈடுபட்டு) நெடுநேரம் வியப்புற்று நின்றான்; 'நொடிவு அரும் - சொல்லுதற்கரிய (சிறப்பமைந்த), கமலத்து அண்ணல் - தாமரை மலர்மீது விளங்கும் பெருமை தங்கிய பிரமதேவன், ஆக்கிய உலகம் எல்லாம் - படைத்த உலகங்களில் உள்ள உயிர்கள் யாவும், அன்று தொட்டு - அப்படைப்புக் காலம் முதலாக, இன்று காறும் - இன்றுவரை, புரிந்த பாக்கியம் எல்லாம் - செய்த நல்வினைப் பேறுகள் எல்லாம், குவிந்து - திரண்டு, இரு படிவம் ஆகி - இரண்டு திருவுருவங்களாகி, மேக்கு உயர் தடம் தோள் - மேம்பட்டு உயர்ந்த பெரிய தோள்களை யுடைய, வென்றி வீரராய் - (இந்த) வெற்றியையுடைய இரு வீரர்களாய், விளைந்த - தோன்றியுள்ளன' என்பான் - என்று கருதுவானானான்.

நொடிவு - சொல்லுதல்; (ஆரணிய. 956); இனி நொடிவு அரும் என்பதற்கு, அழிதல் இல்லாத எனப் பொருள் கொள்ளலும் அமையும். படைப்புக் காலந்தொட்டு அதுகாறும் பல்வேறு உலகங்களில் உள்ளோர் செய்துள்ள புண்ய பலனே இராம லக்ஷ்மணர்கள் என்னும் இரு உருவங்களாய் வந்துள்ளது எனக் கருதினன் சுக்கிரீவன் என்பதாம்; 'அறத்தின் மூர்த்திவந் தவதரித்தான்; (அயோத். மந்திரப் : 37) என்றும், 'தரும நீரர் தயரதன் காதலர்' (ஆரணிய. 365) என்றும் 'இவர்களோ தருமம் ஆவார்' (56) என்றும், கூறப்பெறுவன காண்க. மேக்கு - மேல்; 387; 'மேக்கு நோக்கிய பொங்கிரும் பாற்கடல்' (பால. நகரப் : 27); சுந்தர : 556, 587.

பி - ம். 2. *ஆக்கிய வுலகம் யாவு; வுலகந் தன்னுள்.* 3. *புரிந்த தெல்லாம் குவிந்தொரு வடிவ மாகி, குவிந்தொரு படிவ மாகி.*
4. *தடந்தோள் பெற்ற, தடந்தோள் பெற்று; விளைந்த தென்பான்.*

(18)

சுக்கிரீவன், திருமாலே இராமபிரானெனத் தீர்மானித்தல்

96. தேறினெ னமரர்க் கெல்லாந்
தேவராந் தேவ ரென்றே
மாறியிப் பிறப்பில் வந்தார்
மானுட ராகி மன்னோ
ஆறுகொள் சடிலத் தானு
மயனுமென் றிவர்க ளாதி
வேறுள குழுவை யெல்லா
மானுடம் வென்ற தன்றே.

'மாறி - உருவம் மாறி, மானுடர் ஆகி - மனிதராகி, இப் பிறப்பில் வந்தார் - இந்தப் பிறவியில் வந்து அவதரித்துள்ள இந்த இராம லக்ஷ்மணர்கள், அமரர்க்கு எல்லாம் - தேவர்கள் யாவர்க்கும், தேவர் ஆம் தேவர் - கடவுளாம் தலைவர் (பரம்பொருளே); என்று - என்று, தேறினென்-தெளிந்தேன்; ஆறு கொள் சடிலத்தானும்-கங்காநதியைத் தன் சடையுள் வைத்துள்ள சிவபெருமானும், அயனும் - பிரமதேவனும், என்று - என்று சொல்லப்பெறும், இவர்கள் ஆதி - இவர்களை முதலாகக் கொண்ட, வேறு உள குழுவை எல்லாம் - வெவ்வேறாக உள்ள கூட்டங்களை யெல்லாம், மானுடம் வென்றது-இம்மனிதக்குலம் வென்றுவிட்டது. அன்று, ஏ, மன், ஓ : என்பன அசைகள்.

தேவர்க்கும்.' தேவராம் தேவர் ; தேவர்களுக்கெல்லாம் தெய்வ மாகிய பரம்பொருள் மானிடப்பிறப்புக் கொண்டு இராம லக்ஷ்மண ராகிய இருவராய் வந்துள்ளது. ஆதலின், தேவர் முதலான பல வகைப்பட்ட ஜீவகோடிகளுள் இவர்களைத் தம்முள் இருவராய் அடையப்பெற்ற மனிதச்சாதி, தேவச் சாதிகளைவென்று சிறப்பெய்திய தாயிற்று என்று தேறினன் சுக்கிரீவன் என்பதாம். தேவர்க்குந் தேவர் இது. 'முதலாவார் மூவர் அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணன்' (முதற்றிருவந்தாதி : 15) என்ற ஆழ்வார் அருளிச் செயலின் கருத்தை மேற்கொண்டுள்ளமை காண்க. அப்பர் சுவாமிகள் தில்லை யில் நடராசப் பெருமானைத் தரிசனம் செய்யப் பெற்ற எக்களிப் புடன், 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்தமாநிலத்தே' என்று கூறிய களிவை இது நினைப்பூட்டுகின்றது.

பி. - ம். 1. *தேவர்தந் தேவர்க் கென்றே, தேவர்கள் தேவ ரன்றே.*
2. *மாறிய பிறப்பில், மாறின பிறப்பில் ; மானிட ராகி, மானுய ராகி, மானுட ராக.* 3. *ஆறுள சடிலத் தானு, ஆறுயர் சடிலத் தானு ; சடிலத் தானே யென்றவ ராதியா.*
4. *மானிடம் வென்ற தன்றே.* (19)

இராமபிரான் சுக்கிரீவனை உபசரித்தல்

97. எனநினைந் தினைய வெண்ணி
யிவர்கின்ற காத லோதக்
கனைகடற் றிரையுள் ளாழ்ந்து
கண்ணிணை களிப்ப நோக்கி
அனகனைக் குறுகி னனவ்
வண்ணலு மருத்தி கூரப்
புனைமலர்த் தடக்கை நீட்டிப்
போந்தினி திருத்தி யென்றான்.

என நினைந்து இனைய எண்ணி - என்று இவற்றை மனத்தாற் கருதி மேலும் நிகழவேண்டுவன புத்தியால் ஆலோசித்து, இவர்கின்ற - மேல் எழுகின்ற, காதல் ஓதம் கனை கடல் - அன்பாகிய வெள்ளத்தை யுடைய ஒலிக்கின்ற திரையுள் ஆழ்ந்து - அலைகடலில் முழுகி, கண் இணை களிப்ப நோக்கி - தன் இருகண்களும் கண்டு மகிழுமாறு தெரிசனம் செய்து, அனகனை குறுகினன் - குற்றமற்றவனான இராம பிரானை அணுகினன் ; அ, அண்ணலும் - பெருமை தங்கிய அவ்விராம பிரானும், அருத்தி கூர - ஆசை மேலிட, புனை மலர் தடம் கை நீட்டி -

தன் அழகிய செந் தாமரைமலர் போன்ற பெரிய திருக்கரத்தை நீட்டி, 'போந்து - இங்கே வந்து, இனிது இருத்தி - மகிழ்வோடு இருப்பாயாக!' என்ருன் - என்று உபசாரமொழி கூறி வரவேற்ருன்.

காதல் ஓத கனை கடல்; காதற் கடல் - ஆசைப் பெருக்கைக் குறிப்பிட்ட படி, பெருமைக்குக் கடல் உவமை. அனகன் - குற்ற மில்லாதவன்; இது வடசொல். அருத்தி - ஆசை; 'அருத்தி புரிகின்ற தயோத்திமா நகரம்' (பால. நகரப். 1.); 'அருத்தியுற்ற பின் ஞண முண்டாகுமோ' (பால. உலாவியற்; 38.) கைநீட்டி அசைத்தல் நல் வரவு கூறி உபசரிக்கும் முறையில் அடங்கும். 'தடக்கை நீட்டி' - இங்கு வான்மீகம் கூறுவதாவது:—அநுமான் இவ்வாறு சொல்லக் கேட்ட சுக்கிரீவன் மகிழ்ந்து, அழகிய மானிட உருவம் தரித்து, மிகுந்த அன்புடன் இராகவரை நோக்கி "உம்முடைய...குணங்களனைத் தையும் மாருதி சொல்லக் கேட்டேன்; என்னேடு நீர் நட்புக் கொள்ள விரும்புவது எனக்கு மேன்மையும் பெருஞ்சிறப்பும் ஆகும்; என்னு டைய நட்பு உமக்கு வேண்டுமாகில், இதோ நான் நீட்டும் கையை உம்முடைய கையாற் பற்றி உறுதியைச் செய்து கொள்ளும்' என்ன, இராமபிரான் மிகவும் களிப்புற்றுத் தம் கையால் சுக்கீரீவன் கையைப் பற்றினர். பிறகு அவனைத் தழுவிக் கொண்டார்".

பி - ம். 1. எனநினைந் திரங்கி யெண்ணி. எனையன நினைய வெண்ணி;. எழுகின்ற காத லென்றும்; காத லோடு. கரையின் றேறிக், கரையின் றேறச், கரையு ளாழ்ந்து; றலைமின் றேறி, றுறையின் றேறிக். 3. யனகனு மருத்தி கூறப்; (20)

இராமபிரானுக்கும் சுக்கிரீவனுக்கும் உண்டான நட்பின் சிறப்பு

98. தவாவலி யரக்க ரென்னுந்
தவாவிருட் பகையைத் தள்ளிக்
குவாலற நிறுத்தற் கேற்ற
காலத்தின் கூட்ட மொத்தார்
அவாமுத லறுத்த சிந்தை
யனகனு மரியின் வேந்தும்
உவாவுற வந்து கூடு
முடுபதி யிரவி யொத்தார்.

அவா முதல் அறுத்த சிந்தை அனகனும் - ஆசையின் வேரை (அடியோடு) நீக்கிய மனமுடைய குற்றமற்ற இராமபிரானும், அரியின் வேந்தும் - வாநரங்களின் மன்னனான சுக்கிரீவனும், (அவ்விருவரும் ஒருமித்த போது), உவா உற - அமாவாசை நேர, வந்து கூடும் - ஒன்று சேரும், உடுபதி இரவி - சந்திரனையும் சூரியனையும், ஒத்தார் - போன்றிருந்தனர் ; (அன்றியும்), தவா வலி - கெடாத வலிமையுடைய, அரக்கர் என்னும் தவா இருள் பகையை - அரக்கர் என்கிற (எளிதில்) நீங்காத இருளாகிய பகையை, தள்ளி - நீக்கி, குவால் அறம் நிறுத்தற்கு ஏற்ற - குவிந்த தருமத்தை நிறுவுவதற்குத் தக்க, காலத்தின் கூட்டம் ஒத்தார் - காலங்களின் சேர்க்கையைப் போன்றும் இருந்தனர்.

அவா முதல் அறுத்த, என்றதற்குக் காமம் முதலிய அறுவகைக் குற்றங்களையும் வலியப் போக்கிய எனலும் ஆம் ; ஒப்பு. சுந்தர. 349 ; சீவக; 1167. அரியின் வேந்து என்றது, பின் வரப்போவதைச் சூசிப் பித்தது : அரச உரிமைக்குரியவன் எனலும் ஆம். உவா - அமாவாசை, பௌர்ணமி இரண்டையும் குறிக்கும் ; இங்கு முன்னதைக் குறித்தது ; அமாவாசை, சூரியனும் சந்திரனுங்கூடி வசித்தலுடையது என்ற பொரு ளுடையது. 'இந்துவோ டிரவி கூட்ட மமாவா சையுமென்ப' (சூடா நிகண்டு. 1-85) இரவி - சூரியன் ; இங்கு இராமபிரானுக்கு உவமை ; 'கருஞாயிறு போல்பவர்' (பால. கடிமணப் : 4). உடுபதி - சந்திரன் ; நக்ஷத்திரங்களின் தலைவன் என்ற பொருளது ; இங்குச் சுக்கிரீவனைக் குறித்தது; வாநரங்களை உடுக்களாகவும். சுக்கிரீவனை உடுபதியாகவும் கொள்க குவால் - குவியல். உவாவுற வந்துகூடு முடுபதி யிரவி ஒத்தார் என்பது தன்கலைகளை இழந்த சந்திரன் சூரியனையடைந்து அவனால் கலைகளாகிய ஒளிகள் வளரப்பெறுவதே போலச், சுக்கிரீவனும் இராம பிரானை யடைந்ததால் இனி, அரசியற்செல்வம் முதலிய நலன்கள் அடையப்போவதைக் குறிப்பிட்டபடியும் ஆம்.

இராம சுக்கிரீவர் ஒன்று சேர்ந்த தத்துவக் கருத்தொன்றை ஓர் உவமையாகவும், காட்சிப் பொருள்களின் சேர்க்கையை ஓர் உவமையாகவும் அமைத்துக் காட்டிய சிறப்பை ஓர்க. சுக்கிரீவன் வெண்ணிறமானவன் ஆதலால் உடுபதிக்கும், இராமபிரான் சூரியன் போன்ற ஒளிவீசும் திருமேனி யுடையவனாதலின் அவனை இரவிக்கும் ஒப்பிடப்பட்டது. தவமும் முயற்சியும் முறையே அனகனுக்கும் அரியின்

வேந்தனுக்கும் நிரனிறையாகவும், கல்வியும் ஞானமும் உடுபதி இரவி களுக்கு எதிர்நிரனிறையாகவும் கொள்க.

பி - ம். 1. *தகாவிருட், தகையிருட்.*
2. *குயாஹற, குயாலற நிறுத்தற் கொத்த; கோலத்தின் கூட்ட, கூலத்தின் கூட்ட.*
3. *அவாவினை யறுத்த, சிர்தை யண்ணல்.*
4. *முடுபதி யதனை.* (21)

99. கூட்டமுற் றிருந்த வீரர்
குறித்ததோர் பொருட்கு முன்னுள்
ஈட்டிய தவமும் பின்னர்
முயற்சியு மியைந்த தொத்தார்
வீட்டும்வா ளரக்க ரென்னுந்
தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர் கல்வி யோடு
ஞானமுங் கிடைத்த தொத்தார்.

கூட்டம் உற்று இருந்த - நட்பாய் ஒன்றிக் கூடியிருந்த, வீரர் - வீரர்களான இராமசுக்கிரீவர்கள், குறித்தது ஓர் பொருட்கு - குறிப்பிட்டு நினைத்தகாரியம் நிறைவேறுதற்கு, முன் நாள் ஈட்டிய தவமும் - முற்பிறப்பிற் செய்து தேடிக்கொண்ட தவமும், பின்னர் முயற்சியும் - பின் வந்த இப்பிறப்பில் அத்தவப் பயனை அடைய எடுத்துக்கொண்ட முயற்சியும், இயைந்தது ஒத்தார் - ஒன்று சேர்ந்ததை ஒப்பவர் ஆனார்; வீட்டும் வாள் அரக்கர் என்னும் - பகைவரை அழிக்கும் வாள்போன்ற கொடிய இராக்கதர்களென்னும், தீவினை - பாவத்தை, வேரின் வாங்க - வேரோடு அழிக்க, கேட்டு உணர் கல்வியோடு - ஆசிரியர் பால் கேட்டு அறிந்த கல்வியுடன், ஞானமும் - தத்துவஞானமும், கிடைத்தது ஒத்தார் - வந்து கூடியதை ஒத்தவரானார்.

இச்செய்யுளில் இராம சுக்கிரீவர்கள் சேர்ந்திருந்த தோற்றத்துக்குச் சீரிய இரண்டு கருத்து உவமைகள் அமைந்துள்ளன. குறித்த பொருளை அடைதற்கு, ஒருவர் முன்செய்த தவமும் இப்பொழுது செய்யும் முயற்சியும் ஒன்று கூடிப் பயன்தருவது போலவும், அஞ்ஞான இருளை ஓட்ட நூலறிவும் சுயஅறிவும் கூடி அமைந்தது போலவும், அவர் களுடைய கூட்டக் காட்சி இருந்தது என்பது பொருள். பாலகாண்டம் கடிமணப் படலத்தில், இராம்பிரானும் சீதாப்பிராட்டியும் ஏகாசனத்தில்

வீற்றிருந்த கோலத்தை 'ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்' (86) என்று ஆசிரியர் கூறியதை இவ்வுவமைகள் நினைவூட்டுகின்றன. கிடைத்தல் - சேர்தல்; வந்து கூடுதல்; உயுத்த 'மந்திரப்'. 100. கிடைத்தல் - வாய்த்தல்; எதிர்தல் (நாநார்த்ததீபிகை)

பி - ம். 1. *கூட்டவுற் றிருந்த; பொருட்கு முன்னர்.*
2. *தவமும் பின்னால், தவமு மன்ன, தவமும் பின்னும்; மிலைசந்த தொத்தார்.*
3. *வீட்டுவா ளரக்கர், இட்டும் யாளரக்க.*
4. *கேட்டுணர் மனனுந் தீராக் கல்வியுங்.* (22)

சுக்கிரீவன் இராமபிரானை நோக்கிக்கூறிய உபசாரமொழி

100. ஆயதோ ரவதி யின்க
ணருக்கன்சே யரசை நோக்கித்
தீவினை தீய நோற்று
ரென்னின்யார் செல்வ நின்னை
நாயக னுலகுக் கெல்லா
மென்னலா நலமிக் கோயை
மேயினென் விதியே நல்கின்
மேவலா காதென் னென்றான்.

ஆயது ஓர் அவதியின் கண் - இவ்வாறு அவர்கள் கூடியிருந்த காலத்தில், அருக்கன் சேய் - சூரியபுத்திரனான சுக்கிரீவன், அரசை நோக்கி - இராமபிரானைப் பார்த்து, செல்வ - தலைவ!' உலகுக்கு எல்லாம் நாயகன் என்னலாம் நலம் மிக்கோயை - உலகம் அனைத்திற்கும் தலைவன் என்னுமாறு சிறப்பில் மேம்பட்டவனான, நின்னை - உன்னை மேயினென் - வந்து அடைந்தேன்: தீவினை தீய நோற்றார் - கொடிய பாவ வினைகள் அழியுமாறு தவம்புரிந்தோர்கள், என்னில் யார்-என்னைப்போல (அல்லது என்னைவிட) யாரே உள்ளார்? விதியே நல்கின் - ஊழ்வினையே வந்து கூட்டியருளினால், மேவல் ஆகாது என் - அடையக் கூடாதது யாது உள்ளது? (ஒன்றுமில்லை, என்றபடி) என்றான் - என்று கூறினான்.

உன்னை யான் வந்தடைந்தது யான் முற்பிறவியில் செய்த நல்வினையின் பயனும், ஊழின் செயலுமே ஆம். எனக் கூறினான் சுக்கிரீவன். 'விதியே நல்கின் மேவ லாகாதென்'; 'புண்ணியம் பயக்கின்றுழி யரியதெப் பொருளே' (ஆரணிய: 1170)

என்றதையும் ஒப்பு நோக்குக ; 'முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ' என்ற சேக்கிழார் கூற்றையும் இது நினைப்பூட்டு கின்றது (பெரியபு. மனுநீதிகண்ட 47.); இது வேற்றுப்பொருள் வைப்பணியின் பாலது. தீவினை தீய நோற்றல் : (ஆரணிய : 550); ஆயது • அவ்வாறானது. அவதி - பொழுது. அரசு: இங்குத் தலைவன் என்ற பொருளில் வந்தது. இச் செய்யுளோடு, 'விதியது வலியினாலும் மேலுள விளைவினாலும்' என்ற ஆரண்யகாண்டச் செய்யுளடியை (639) நோக்குக.

பி - ம். 1. *ஆயதோ ரமைதியின்.*
2. *தீவினைதீர.*
3. *நாயக முலகுக் கெல்லா ; மென்னலாம் நலத்தி னானே, மென்றுநன் னலத்தி னானே ; மானதோர் நலத்தோ டின்னே.*
4. *மேவிய விதியே.* (23)

இராமபிரான் தாம் அங்கு வந்த காரணங் கூறுதல்

101. மையறு தவத்தி னான
சவரியிம் மலையி னீவந்
தெய்தினை யிருந்த தன்மை
யியம்பினள் யாங்க ளுற்ற
கையறு துயர நின்னாற்
கடப்பது கருதி வந்தோம்
ஐயநிற் றீரு மென்ன
வரிகுலத் தலைவன் சொல்வான்.

(அது கேட்ட இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி), 'ஐய - ஐயனே! மை அறு தவத்தின் ஆன - குற்ற மற்ற தவநெறியில் நிலைத்து நின்ற, சவரி - சவரி என்னும் மாது, இ மலையில் நீ வந்து எய்தினை இருந்த தன்மை - இந்த ருசிய மூகபருவத்தில் நீ வந்து தங்கி இருந்த தான உன் நிலைமையை, இயம்பினள் - சொன்னாள் ; யாங்கள் உற்ற - யாங்கள் அடைந்துள்ள, கை அறு துயரம் - செயலற்று ஏங்கற்குரிய துன்பம், நின்னால் கடப்பது கருதி - உன்னால் போக்குதற்கு எண்ணி, நின் தீரும் - அது உன்னாலேயே தீர்வதாகும் என்று, வந்தோம் - யாங்கள் இங்கு வந்துள்ளோம்' என்ன - என்றுகூற, அரிகுல தலைவன் சொல்வான் - வாநர குலங்களுக்குத் தலைவனான சுக்கிரீவன்

பின்வருமாறு கூறுவானுனன். (கூறியது அடுத்த செய்யுளிற் காண்க.)

சவரி - சவரன் என்பதின் பெண்பால்; ச்வரன் - வேட்டுவரில் ஒரு வகையினன்; பெருங். 1, 56: 68, சுக்கிரீவன் தான் இராமபிரானை அடையப் பெற்றது தன் தவத்தின் பயன் என்று கூற, இராமபிரான் தான் தன் காரியமாகவே அவனை நாடி வந்ததாகக் கூறிய வினயம் நோக்கற்பாலதாம்.

குறிப்பு: இச்செய்யுளில் இவ்வாறு கூறிய இராமனுக்குச் சமாதானமாகச் சுக்கிரீவன் கூறியதாக ஒரு செய்யுள் இதனை அடுத்து இருந்திருக்கக் கூடும் என்று தோன்றுகிறது.

பி - ம். 1. *தவத்தின் வந்த.*
3. *கருதி வந்தேம்.*
4. *ஐயநிற் றீருமிந்த வவலமென் றரியுஞ் சொன்னுன், றீர்து மென்ன; வரிக்குலத் தலைவன்.* (24)

சுக்கிரீவன் இராமபிரானைச் சரணம் புகுதல்

102. முரனுடைத் தடக்கை யோச்சி
முன்னவன் பின்வந் தேனை
இருணிலைப் புறத்தின் காறு
முலகெங்குந் தொடர வின்குன்
றரணுடைத் தாக வுய்ந்தே
னுருயிர் துறக்க வஞ்சிச்
சரணுனைப் புகுந்தே னென்னைத்
தாங்குத றரும மென்றுன்.

(சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), முன்னவன் - என் தமயனை வாலி என்பான், பின் வந்தேனை - அவனுக்குப்பின் பிறந்த தம்பியாகிய என்னை, முரண் உடை தடம் கை ஓச்சி - தன் வலிமையுள்ள பருத்த கைகளை உயர்த்திக்கொண்டு, இருள் நிலை புறத்தின் காறும் - இருள் நிலையாய்த் தங்கியிருக்கும் இவ்வண்டத்தின் அப்புறம் வரையிலும், உலகு எங்கும்-இவ்வுலகெங்கும், தொடர - என்னைத் தொடர்ந்து வர, ஆர் உயிர் துறக்கல் ஆற்றேன்-அரிய (என்) உயிரை விடமாட்டாது, இ குன்று - இந்த ருசிய முகபருவதம், அரண் உடைத்து ஆக - எனக்குப் பாதுகாவலாக ஏற்பட, உய்ந்தேன் - தப்பிப்பிழைத்தேன்;

வனானேன்; சரண் உனை புகுந்தேன் - இப்பொழுது உன்னையே அடைக்கலமாக வந்து அடைந்தேன்; என்னை தாங்குதல் தருமம் - என்னை ஏற்றுக் காப்பாற்றுதல் தருமம் ஆகும்' என்றான் - என்று கூறினான்.

இக்குன்று அரணுடைத்தாக: வாலி துந்துபி என்னும் அசுரனோடும் போர் புரிந்து அவனைக் கொன்று அவன் உடலைத் தன் காலால் உந்தியெறிய, அஃது இந்த ருசியமுகபருவதத்தில் இருந்த மதங்க மகரிஷியின் ஆச்சிரமத்தில் போய் விழுந்து, அங்கு இரத்த வெள்ளமாக்கி அசுசிப்படுத்தியது; அது கண்ட முனிவர் வெகுண்டு 'இது செய்தவன் இவ்விடம் அடியெடுத்து வைத்தால், அவன் தலை பல துகள்களாக வெடித்து அழிவன்' என்று சபித்தனர். அந்தச் சாபத்தை அறிந்து வாலி அம்மலையருகே வாராமல் ஒதுங்கியிருந்தான்; அச்சாபவுண்மையை அறிந்து சுக்கிரீவன் அம்மலையையே புகலாக அடைந்தனன் என்பதாம்; வாலி, சுக்கிரீவனை வெருட்ட, அவன் தளர்ந்து ஓடும் போது, நாரதமுனிவர் இடைப்பட்டு வாலிக்கு ஏற்பட்ட இச்சாப வரலாற்றை அவனிடம் கூறி அவனை அம்மலையை அடையச் செய்தனர் எனக் கூறப் பெறுவதும் உண்டு.

வான்மீகமும், அத்யாத்மகமும் அக்கினிசாக்ஷியாக இராமபிரானும் சுக்கிரீவனும் நட்புச் செய்து கொண்டனர் என்று கூறும். அதன் பின், சுக்கிரீவன் தான் வாலியால் பட்ட துன்பங்களைக் கூறி அபயம் வேண்டினன் என்றும், அவ்வாறே இராமபிரான் அளித்தனன் என்றும் வான்மீகம் அமைக்கும்.

பி - ம். 1. *முரண்வலித் தடக்கை; பின்வர் தோனை.*

2. *உருணிலைப் புறத்தின்; முலகெலாந் தொடர இருணிலைப் பரப்பின் காறும், முரணிலைப் பரப்பிற் காணு. முலகமுந், ஞருயிர் றைக்க லாற்றேன்.*

4. *சரணுனைப் புரிந்தே; தாங்குதல் கரும மென்றான்.* (25)

இராமபிரான் சுக்கிரீவனுக்கு அபயம் அளித்தல்

103. என்றவக் குரங்கு வேந்தை
யிராமனு மிரங்கி நோக்கி
உன்றனக் குரிய வின்ப
துன்பங்க ளுள்ள முன்னுள்

சென்றன போக மேல்வந்
துறுவன தீர்ப்ப லன்ன
நின்றன வெனக்கு நிற்கு
நேரென மொழியு நேரா.

'என்ற - என்று கூறிய, அ குரக்கு வேந்தை - குரங்குகளுக்கு அரசனான அந்தச் சுக்கிரீவனை, இராமனும் - இராமபிரானும், இரங்கி நோக்கி - மனம் இரங்கிக் கருணையோடு பார்த்து, ' உன் தனக்கு உரிய - உனக்கு உரியனவான, இன்ப துன்பங்கள் உள்ள - இன்பதுன்பங்களாய் உள்ளவற்றில், முன் நாள் சென்றன போக - இதற்குமுன் நடந்தவை கழிவதாக; மேல் வந்து உறுவன - இனிமேல் வந்து நிகழவிருக்கும் துன்பங்களை தீர்ப்பல் - யான் வராமல் நீக்குவேன்; அன்ன நின்றன - அவ்வகை நின்றவையான இன்ப துன்பங்கள், எனக்கும் நிற்கும் நேர் - எனக்கும் உனக்கும் சமமாக இருக்கும்', என - என்று, மொழியும் நேரா - உறுதி மொழியும் கூறி,

இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாக, அடுத்த செய்யுளில் உள்ள, என்றான் என்னும் வினை கொண்டு முடியும். உறுவன - ஊறு. நேரா - நேர்ந்து. தீர்ப்பல்: தன்மை யொருமை வினைமுற்று; அல் விகுதி. நினக்கு என்பது நிற்கு எனத் திரிந்தது.

பி - ம். 1. *இன்றுனக் குரிய, உன்றனக் குள்ள; துன்பங்க ளெவையு, துன்பங்க ளான.*

3. *மேல துறுவன தீர்ப்பெ னென்ன; துறுவன தீர்த லன்றி; தீர்த்த லாகி.*

4. *நின்றன வெற்கு நிற்கு; நேரென நிகழ்த்திப் பின்னும்.* (26)

104. மற்றினி யுரைப்ப தென்னே
வானிடை மண்ணி னின்னைச்
செற்றவ ரென்னைச் செற்றார்
தீயரே யெனினு நின்னோ
டுற்றவ ரெனக்கு முற்றா
ருன்கிளை யெனதென் காதற்
சுற்றமுன் சுற்ற நீயென்
னின்னுயிர்த் துணைவ னென்றான்.

'மற்று - மேலும், இனி உரைப்பது என்னே - நான் இனிச் சொல்லக்கூடியது யாதே உள்ளது; வான் இடை மண்ணில் - வான

கத்திடத்தும், இப்புவியினிடத்தும், நின்னை செற்றவர் என்னை செற்றார்- உன்னைப் பகைத்து வருத்தியவர் என்னை வருத்தியவரே ஆவர்; நின்னோடு உற்றவர் - உன்னோடு நட்புக்கொண்டு சேர்ந்தவர், தீயரே எனினும் - கொடியவரே ஆனாலும், எனக்கும் உற்றார் - அவர் எனக்கும் இனிய நட்பினரே ஆவர்; உன் கிளை - உனக்கு உறவினராய் உள்ளோர் அனைவரும், எனது - என் உறவினரே ஆவர்; என் காதல் சுற்றம் - யான் அன்பு பாராட்டும் என் உறவினர் ஆக உள்ளவர், உன் சுற்றம் - உன் அன்பிற்குரிய உறவினரே ஆவர்; நீ என் இன் உயிர் துணைவன் - நீ என் இனிய உயிரே என்னத்தக்க நண்பன்' என்றான் - என்று உறுதி கூறினான் இராமபிரான்,

'பற்றுதலன்றி யுண்டோ புகலெமைப் பகர்கின்றானை' (யுத்த. வீபீடணனடைக்: 108) என்ற கொள்கையையுடைய இராமபிரானின் அபய மளித்தலின் இலக்கணத்தை விரித்துக் கூறியது போல் இவ்விரு செய்யுள்களும் அமைந்துள்ளமை நோக்குக. பின் 'குன்று சூழ்வான், மகனொடும் அறுவ ரானேம்' (உயுத்த. விபீடணனடைக்: 146.) என்று இராமபிரான் சுக்கிரீவனுக்கு உடன்பிறப்புரிமை அளித்து ஏற்றுக் கொண்ட அருமை காண்க.

பி - ம். 1. *தரைப்ப தென்னோ; மண்ணி னுன்னை.*
2. *ரெம்மைச் செற்றார்.*
3. *ரெமக்கு முற்றார்; யெனதென் காதற், யென்றன் காதற், யென்றன் காயம்.*
4. *சுற்ற நீயென்; நீயே யென்னுயிர்த்; யெம்முயிர்த்.* (27)

வாநரர்களும் தேவர்களும் கொண்ட மகிழ்ச்சி

105. ஆர்த்தது குரக்குச் சேனை
யஞ்சனைச் சிறுவன் மேனி
போர்த்தன பொடித்த ரோம
புளகங்கள் பூவின் மாரி
தூர்த்தனர் விண்ணோர் மேகஞ்
சொரிந்தன கனக மண்ணல்
வார்த்தையெக் குலத்து ளோர்க்கு
மறையினு மெய்யென் றுன்னா.

' அண்ணல் வார்த்தை - இவ்வாறு பெருமைதங்கிய இராமபிரான் கூறிய உறுதி மொழியானது, எ குலத்து உளோர்க்கும் - எந்தக் குலத்தில்

தோன்றியவர்களுக்கும், மறையினும் - வேத வாக்கைவிட, மெய் என்று - சத்தியமானது ' என்று, உன்னு - கருதி, குரக்கு சேனை ஆர்த்தது - வானரச் சேனைகள் (மகிழ்ச்சியால்) ஆரவாரம் செய்தன; அஞ்சனை சிறுவன் - அஞ்சனா தேவியின் குமாரனான அநுமனுடைய, மேனி - திருமேனியை, பொடித்த ரோம புளகங்கள் போர்த்தன - அரும்பிய மயிர்க்கூச்செறிந்து மறைத்தன; விண்ணோர் - தேவர்கள், பூவின் மாரி தூர்த்தனர் - பூ மழை பொழிந்து புவியை நிரப்பி மூடினர். மேகம் சொரிந்தன கனகம் - மேகங்கள் பொன் மழை பொழிந்தன.

குரக்குச் சேனை ஆர்த்ததும், அஞ்சனைச் சிறுவன் மேனி...... ..... புளகங்கள் போர்த்ததும் தன் தலைவனான சுக்கிரீவன் இடர் தீரும் என்றும், இச் சுக்கிரீவன் கூட்டுறவால் இராமபிரான் துயர் நீங்கிப் பிராட்டியை அடைய இடம் ஆகும் என்றும் துணிந்ததாற் பிறந்த மகிழச்சியின் என்க. பூவின் மாரி தூர்த்தனர் விண்ணோர் : இனித் தாம் இராவணனால் அடைந்துள்ள துயர் நீங்கி இன்பமுறுவோம் என்று. மேகம் கனகமாரி பெய்தல் - சுபத்திற்கு அறிகுறி. மறையினும்; உம்மை உயர்வு சிறப்பினது.

பி - ம். 2. போர்த்தன புலக ரோமம் பொடித்தன.

4. வார்த்தையே குலத்த ; மறையெனும். (28)

அநுமன் இராமலக்ஷ்மணர்களைச் சுக்கிரீவன் இருப்பிடத்திற்கு வருமாறு கேட்டுக்கொள்ளலும் இராமபிரான் அதற்கு உடன்படுதலும்

106. ஆண்டெழுந் தடியிற் றாழ்ந்த
வஞ்சனைச் சிங்கம் வாழி
தூண்டிர டடந்தோண் மைந்த
தோழனு நீயும் வாழி
ஈண்டுநுங் கோயி லெய்தி
யினிதினி னிருக்கை காண
வேண்டுதும் மருளு கென்றான்
வீரனும் விழுமி தென்றான்.

ஆண்டு - அப்பொழுது, எழுந்து - எழுந்து வந்து, அடியில் தாழ்ந்த - இராமபிரான் திருவடிகளில் வந்து வணங்கிய, அஞ்சனை சிங்கம் - அஞ்சனாதேவி பெற்ற சிங்கம் போன்ற அநுமன், (அவ்விராம பிரானை நோக்கி), ' தூண் திரள் தடம் தோள் மைந்த - தூண்கள் போலத்

திரண்டு பருத்த தோள்களையுடைய வலியோனே! வாழி - வாழ்வுறு வாயாக! தோழனும் நீயும் வாழி - உன் நண்பனான சுக்கிரீவனும் நீயும் வாழ்வீராக! ஈண்டு - இப்பொழுது, நும் கோயில் எய்தி - உங்கள் மாளிகையை அடைந்து, இனிதின் - இன்பமாக, நின் இருக்கை காண வேண்டுதும் - நீ அங்கெழுந்தருளி யிருத்தலைக் காண்பதை நாங்கள் விரும்புகின்றோம், 'அருளுக என்றான் - அருள் புரிவாயாக' என்று வேண்டிக்கொண்டான்;. வீரனும் - இரகு வீரனான இராமபிரானும், 'விழுமிது என்றான் - நீ கூறியது சிறந்தது' என்று கூறி அதற்கு இசைந்தான்.

வாழி ; அரசர் முதலிய மேலோரிடம் பேசுமுன் தொடங்கும் மங்கல மரியாதைச் சொல்லும் ஆம். நட்புக் கொண்டமையால் அச் சுக்கிரீ வனுக்கும் இராமபிரானுக்கும் இடையே வேற்றுமை இல்லை என்ற உணர்ச்சியால், நுங்கோயில் என்றும், நின்னிருக்கை என்றும் அறிவிற் சிறந்த அநுமன்கூறினான் என்னலும் ஒன்றும் ; 'புதல்வராற் பொலிந்தா னுந்தை' என்பதையும் இங்கு ஒப்பு நோக்குக ; (உயுத்த. விபீடண னடைக்கலப் ; 146). கோயில் - அரண்மனை ; இது இங்கு, அரசனான சுக்கிரீவன் வசிக்கும் குகை. வாழி என்பது வாழிய என்ற வியங் கோள் வினைமுற்று, ஈற்று உயிர்மெய் கெட்டு நின்றது. முதலில் உள்ள வாழி என்ற சொல்லை அசையாகக் கொண்டாரும் உளர். இராமபிரானும் சுக்கிரீவனும் நட்புக்கொண்ட இடம் ருசிய மூகத்தின் தாழ்வரை யாகிய மலய பர்வதம் என்று வான்மீகத்தால் தெரிகிறது.

இதன்பின் அடியிற்காணும் ஒரு பாடல் சில பிரதிகளில் அதிக மாக உள்ளது,

கடுத்தெழு மதத்தைச் சீறுங் கதிர்ச்சுடர்க் கடவு ளாய்ந்து
வடித்தநூல் முழுதுந் தானோர் வைகலின் வரம்பு தோன்றப்
படித்தனன் வணங்கி வாழ்த்திப் பருமணி கனகத் தோண்மேல்
எடுத்தன னிரண்டு பாலு மிருவரை யேக லுற்றான்.

இச் செய்யுள் வான்மீகத்தின் கருத்தைத் தழுவி, இடைச் செருகலாக அமைத்தது என்னற்பாலது.

பி - ம். 1. *ருழ்ந்தவ் வஞ்சனைக்கு; வஞ்சனைச் சிறுவன்.*
2. *தூண்டிகழ் தடந், தூண்டருந் தடம்.*
3. *ஈண்டுநங் கோயி ; யினிதினன் னிருக்கை, யினிதினி யிருக்கை, யினிதுரீ யிருக்கை, னிருத்தல் காண.*
4. *வேண்டுதே மருளென் னென்றான்.* (29)

யாவரும் ஒரு பூஞ்சோலையை அடைதல்

107. ஏகின ரிரவி சேயு
மிருவரு மரிக ளேறும்
ஊகவெஞ் சேனை சூழ்வந்
தடியிணை யுவந்து வாழ்த்த
நாகமு நரந்தக் காவு
நளினவா விகளு மல்கிப்
போகபூ மியையு மேசும்
புதுமலர்ச் சோலை புக்கார்.

இரவி சேயும் - சூரிய குமாரனான சுக்கிரீவனும், இருவரும் - இராம லக்ஷமணர்களான இருவரும், அரிகள் ஏறும் - வானரங்களுள் சிங்கம்போன்ற அநுமனும், வெம் ஊக சேனை சூழ் வந்து - கொடிய வானரச் சேனைகள் சூழ்ப்பெற்றவராய், அடியிணை உவந்து வாழ்த்த - இராமபிரானின் இரு திருவடிகளை விரும்பி வாழ்த்தித் துதிக்க, ஏகினர் - சென்றவராய், நாகமும் - புன்னாக மரங்களும், நரந்த காவும் - நார்த்தை என்னும் மரங்கள் அடர்ந்த சோலைகளும், நளின வாவிகளும் - தாமரைத் தடாகங்களும், மல்கி - மிகுந்து விளங்கி, போக பூமியையும் ஏசும் - போக பூமியாகிய சுவர்க்கலோகத்தையும் பழிக்கும், புதுமலர் சோலை புக்கார் - புதிய மலர்கள் விளங்கும் ஒரு சோலையை அடைந்தனர்.

ஊகம் : குரங்கின் வகையில் ஒன்றும் ஆம் ; கருங்குரங்கு என்பர். நரந்தம் - நாரத்தை என்னும் மரம் ; 'நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்' ; (மணி. 3 : 162) : நரந்தம் - ஒருவகை வாசனைப் புல்லும் ஆம் ; (பொருந. 238). போக பூமி ; இன்பந் துய்த்தற்கிடமான சுவர்க்கம் ; இதனை உத்தரகுரு என்னும் ஓர் உலகு என்பாரும் உளர் ; 'உத்தரகுருவிற் சென்று போகம் துய்ப்பல் என்றும்' இறையனர். 1. உரை). மல்குதல் - செழித்துத் தழைதலும் ஆம்.

பா - ம். 1. ஏகினு ரிரவி, ஏகின ணிரவி ; மரிக ளென்னும்.
2. சூழவந் தடி யுவந்து, யடியிணை யுவந்த.
3. நரந்தைக் காவு ; நளினவா விகளு மல்கி, வாவிகளு நல்கி.
4. பூமியையே யேசும், பூமியையே யேயும். (30)

108. ஆரமு மகிலுந் துன்னி
யவிர்பளிக் கறைய ளாவி
நாரநின் றனபோற் றோன்றி
நவமணித் தடங்க ணீடும்
பாரமு மருங்குந் தெய்வத்
தருவுயர் மரத்தி னாடும்
சூரர மகளி ரூச
றுவன்றிய சும்மைத் தன்றே.

(அச்சோலை), ஆரமும் அகிலும் துன்னி - சந்தன மரங்களும் அகில் என்னும் மரங்களும் நெருங்கி, அவிர் பளிங்கு அறை அளாவி - ஒளிவீசும் பளிங்குப் பாறைகள் கலந்து விளங்கப்பெற்று, நாரம் நின்றனபோல் தோன்றி - அவை தண்ணீர் நிறைந்து நின்றவைபோலக் காட்சி யுடைத்தாகி, நவ மணி தடங்கள் நீடும் - நவரத்தினங் களால் அமைந்த தடாகங்களின் நீண்ட, பாரமும் - கரைகளிலும், மருங்கும் - அவற்றின் பக்கங்களிலும், தெய்வ தரு - கற்பகம் முதலான தெய்வத் தருக்கள் போன்று, உயர் - உயர்ந்து விளங்கும், மரத்தின் - மரங்களிடத்து, ஆடும் - ஆடுகின்ற, சூர் அர மகளிர் ஊசல் - தெய்வ மகளிர்கள் தம் ஊஞ்சல்கள், துவன்றிய - நெருங்கிய, சும்மைத்து - பேரொலியை யுடையது. அன்று, ஏ : அசைகள்.

ஆரம் - சந்தனம் ; '' இணையி லாரமு மின்னகொண் டேகலால் '' (பால. ஆற்று : 7). அகில் - மலை வேம்பு ; அகில் என்னும் ஒரு வாசனை மரக்கட்டை என்பாரும் உளர். பளிக்கறை - பளிங்குப் பாறை : 'பளிக்கறை கண்டதில் வைகல் பயின்றார்' (ஆரணிய. 1066); பளிங்குக் கற்களால் அமைந்த அறை எனப் பொருள் கூறினாரும் உளர். நாரம் - தண்ணீர் : இது வடசொல் ; 'நாரங் கொண்டார் நாடு கவர்ந்தார்' (ஆரணிய : 733). பாரம் - கரை ; (பிங்.) ; இது வடசொல் ; சூரர மகளிர் - தேவ மகளிர் ; (பிங்.) ; சூர் - தெய்வத் தன்மை அல்லது கண்டோர்க்கு அச்சத்தை உண்டாக்கும் வடிவழகு எனவும் கொள்ளலாம் ; சூர் - அச்சம். சும்மை - ஒலி : 'இழுமெனுஞ் சும்மை யிடனுடை வரைப்பின்' (பொருந. 65).

பி - ம். 1. *மகிலுந் தன்றி ; பளிக்கறைக ளார.*
2. *நவமணித் தடத்தினூறும், நவமலர்த் தடங்க ணீடும்.*
3. *பாரமு மருகுந் ; தருவுமா மரத்தி னோங்கும் ; தருவுயர் பண்ணை யாடும்.*
4. *சும்மைத் தம்மா.*

(31)

வேறு

109. அயர்வில் கேள்விசா லறிஞர் வேலைமுன்
பயில்வில் கல்வியார் பொலிவில் பான்மைபோல்
குயிலு மாமணிக் குழுமு சோதியால்
வெயிலும் வெள்ளிவெண் மதியின் மேம்படா.

அயர்வு இல் - தளர்ச்சி இல்லாத, கேள்வி சால் - நூற் கேள்வி களால் நிரம்பப் பெற்ற, அறிஞர் வேலை முன் - அறிவாளிகள் நிறைந்த கூட்டத்தின் முன்னே, பயில்வு இல் கல்வியார் - கல்விப் பயிற்சி இல்லாதவர்கள், பொலிவு இல் பான்மை போல் - மேன்மை யில்லாது தோன்றும் தன்மை போல, குயிலும் - பதித்தது போல் விளங்கிய, மா மணி குழுமு சோதியால் - மாட்சிமையுள்ள இரத்தி னங்கள் பல கூடி விளங்கும் ஒளியின் சிறப்பினால், வெயிலும் - சூரியனும், வெள்ளி வெண் மதியின் - வெள்ளி போன்ற வெண்ணிற மான சந்திரனைப் போல, மேம்படா - (அங்கு) ஒளியால் சிறப்புடன் விளங்காது. முதல் இரண்டடிகளுக்கு, ஒப்பு :

பாசிழை பரவை யல்குற் பண்டரு கிளவித் தண்டேன்
மூசிய கூந்தன் மாதர் மொய்த்தபே ரமலை கேட்டுக்
கூசின வல்ல பேச நாணின குயில்க ளெல்லாம்
வாசகம் வல்லார் முன்னின் றியாவர்வாய் திறக்க வல்லார்.

(பால. பூக்கொய் : 6) ; 'எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும், எழுத்தறிவார்க் காணி னிலையாம்' (நன்னெறி. 21). அச் சோலையில் விளங்கும் சூரியனும் தன் ஒளி குறைந்து தண்ணிய ஒளியுடைய சந்திரன் போலத் தோன்றும் என்பதாம் ; அதாவது, அச்சோலை தன் குளிர்ச்சியாலும் ஒளியாலும், சூரியன் வெம்மையையும் ஒளியையும் மங்கச் செய்து, அதை சந்திரன் எனத் தோன்றச் செய்யும் தன்மை யுடையது என்க. வேலை - கடல் ; கடல்போலப் பரந்துள்ள அறிவாளி களின் மிகுதியைக் குறிப்பது.

பி - ம். 1. லறிஞர் வேலையின்.
2. பயிலில் கேள்வியார் ; பொருளில் பான்மைபோல்.
3. குழுவின் சோதியால், குழுவு சோதியால்.
4. நிலவு மேம்படா, மதியும் மேம்படா.

இராமலக்ஷ்மணரும் சுக்கிரீவனும் அளவளாவுதல்

**110.** ஏய வன்னதா மினிய சோலைவாய்
மேய மைந்தனுங் கவியின் வேந்தனும்
தூய பூவணைப் பொலிந்து தோன்றினர்
ஆய வன்பின ரளவ ளாவுவார்.

ஏய - இவ்விதச் சிறப்புக்கள் பொருந்திய, அன்னது ஆம் இனிய சோலைவாய் - அத்தகைய இன்ப உணர்ச்சியைத் தரும் சோலையினிடத்து, மேய மைந்தனும் - வந்து சேர்ந்த இராமபிரானும், கவியின் வேந்தனும் - குரங்குகளுக்குத் தலைவனான சுக்கிரீவனும், தூய பூ அணை பொலிந்து தோன்றினர் - பரிசுத்தமான மலரணை மீது சிறக்க வீற்றிருந்தனர்களாய், ஆய அன்பினர் - பொருந்திய அன்புள்ள அவர்கள், அளவளாவுவார் - மனம் ஒருமித்து உரையாடுவா ராயினர்.

மைந்தன் : தசரத குமாரன் எனலுமாம் ; மைந்தன் என்று அடைமொழியின்றி இராமபிரானைக் கூறிய இடங்களில் இ∴து ஒன்று. அணை - தவிசு அல்லது ஆசனம் ; 'அரியணை யநுமன் ருங்க' என்றதும் நோக்குக : (உயுத்த. திருமுடிசூட்டுப் : 38). அளவளாவுதல் : அவரவர் நிலையின் அளவைப் (அதாவது ஒருவருக்கொருவர் க்ஷேமலாபங்களை) பேசி அறிந்து கொள்ளுதல் ; 'நெஞ்சு கலப்புத் தன்னளவும் அதனளவும் உசாவுதலால் வருவதாதலின், அளவளாவென்பது ஆகுபெயர்', என்ற பரிமேலழகர் உரை நோக்குக ; (குறள். 523) ; 'அளவளாயினர் - ஒன்றாகக் கூடினர்' என்பது பழையவுரை.

பா - ம். 1. ஏயி னார்கடா மினிய, ஏய வன்னதம், ஏயி னார்களங் கினிய, ஏய தன்னதா மினிய.
2. மேய மைந்தரும்.
4. ஆய வன்பினோ டளவ ளாவுவார். (33)

இராமபிரான் நீராடி விருந்துண்டமை

**111.** கனியுங் கந்தமுங் காயுந் தூயன
இனிய யாவையுங் கொணர யாரினும்
புனிதன் மஞ்சனத் தொழில்பு ரிந்துபின்
இனிதி ருந்துநல் விருந்து மாயினன்.

கனியும் - பழங்களையும், கந்தமும் - கிழங்குகளையும், காயும் - காய்களையும், தூயன இனிய - பரிசுத்தமாயும் இனிமையாயும் உள்ள,

யாவையும் - அங்குள்ள யாவற்றையும், கொணர - (பணிவிடை புரியும் வாநரர்) கொண்டுவர, யாரினும் புனிதன் - யாவரினும் பரிசுத்தனுன ஸ்ரீராமபிரான், மஞ்சன தொழில் புரிந்து - நீராடி, பின் - அதன் பிறகு, இனிது இருந்து - அங்கு விருப்புடன் இருந்து, நல் விருந்தும் ஆயினுன் - நல்ல அதிதியென்னும் விருந்தாளியு மாகி அமுது செய்தருளினுன்.

கந்தம் - கிழங்கு ; வடசொல். மஞ்சனம், மஜ்ஜனம் என்ற வட சொல்லின் திரிபு. விருந்து - புதுமை ; இங்குப் புதிதாய்த் தான் எதிர் பாராது வந்தவனைக் குறித்தது ; இ∴து ஆகுபெயர். விருந்தும் ; உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை ; முன் நட்பாயினதை உடன் தழுவியது. 'உண்பொழுது நீராடியுண்டலும்..........தூஉயம் என்பார் தொழில்' எனவும், (திரிகடுகம் ; 27); 'நீராடிக் கால் கழுவி வாய்பூசி மண்டலஞ்செய், துண்டாரே யுண்டா ரெனப்படு வார்' (ஆசாரக் : 18) எனவும் முறை வகுத்துள்ளமை காண்க.

பி - ம். 1. கனியு மூலமுங் ; தூய நன்.
2. இனிய யாவையுங்.
3. புரிந்தபின்.
4. இனித ருந்திநல். (34)

இராமபிரான் சுக்கிரீவனை அன்பொடு வினவியது

**112.** விருந்து மாகியம் மெய்ம்மை யன்பினோ
டிருந்து நோக்கிநொந் திறைவன் சிந்தியாப்
பொருந்து நன்மனைக் குரிய பூவையைப்
பிரிந்து ளாய்கொலோ நீயும் பின்னென்றான்.

அ மெய்ம்மை அன்பினேடு இருந்து - அவ்வாறு உண்மையான அன்பினேடு இருந்து, இறைவன் - இராமபிரான், விருந்தும் ஆகி - விருந்தாளியும் ஆகி, நோக்கி நொந்து - சுக்கிரீவனைப்பார்த்து மனம் நொந்து, சிந்தியா - ஆலோசித்து, 'பொருந்து நல் மனைக்கு உரிய பூவையை - பொருந்திய நல்ல இல்வாழ்க்கைக்கு உரியவளான மனைவியை, பின் - பின்னொருகால், நீயும் பிரிந்து உளாய் கொல் - (என்னைப் போல) நீயும் பிரிந்து விட்டனை போலும் !' என்ருன் - என்று உசாவினுன்.

இல்லறத்தான் வந்த அதிதியைத் தன் மனைவியோடிருந்து உபசரிக்க வேண்டியது கடமையுட் சிறந்தது ஆதலின், அவ்வாறு மனைவியில்லாததால், 'நீயும் பிரிந்துளாய் கொல்' என்று வினவினன் இராமபிரான், மனையாள் இல்லாத இடத்து, ஒருவன் விருந்தோம்புதல் சிறக்காததோடு அவளே விருந்தோம்பலில் தலைமையுடையவள் என்க; விருந்தோம்பல் மகளிர் கடன்களுள் சிறந்ததென்பது: பால. நாட்டுப்: 36: கலித். மருதம்; 10. அசோகவனத்தில் சிறையிருந்த பிராட்டியார், தன்னுறு துயரினும் தன் தலைவனை இராமபிரான், தான் இல்லாமையால் வரும் விருந்தாளிகளை ஏற்று உபசரிக்க முடியாதே என்றும், அவ்வில்லற தருமத்தின் சிறப்பைத்தான் இழக்கும் நிலை ஏற்பட்டதே என்றும் 'விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்' (சுந்தர: 345) என வருந்தியதையும், கண்ணகி, ஒரு மனையாட்டிக்குரிய கடமையாகிய விருந்தெதிர் கொண்டு உபசரிக்கும் நெறியைத் துறந்து இருந்த தன் குறையை 'விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை' (சிலப், 2.16 73) என நினைந்து கவன்றதையும் காண்க. நீயும்; இறந்தது தழுவிய எச்சவும்மை: தான் இழந்திருப்பதைக் குறிப்பிட்டபடி. பூவை: இங்கு மனைவி என்னும் பொருளில் பெண்பாலை உணர்த்தியது. கொலோ; கொல் ஐயப் பொருளையும், ஓ, வினாப் பொருளையும் உணர்த்துவன. சுக்கிரீவன் இராமபிரானுக்குக் கந்த மூலம் முதலியவற்றால் விருந்தளித்த செய்தியும், அங்குச் சுக்கிரீவன் தன் மனைவியை இழந்திருந்ததை இராமபிரான் அறிந்த செய்தியும் வான்மீக இராமாயணத்தில் இல்லை.

பி - ம். 1. *விருந்து மாயபின்;*
2. *நோக்கினின் றிறைவன்.*
3. *பொருந்து நின்மனைக், பொருந்த நன்மனைக்.*
4. *பிரிந்து ளாய்கொலாம்; நீயும் பின்னெனு.* (35)

அநுமன் இராமனுக்கு வாலியின் பெருமை கூறுதல்

113. என்ற வேலையி னெழுந்து மாருதி
குன்று போலநின் றிருகை கூப்பினன்
நின்ற நீதியாய் நெடிது கேட்டியால்
ஒன்று நானுனக் குரைப்ப துண்டெனு.

என்ற வேலையில் - என்று இராமபிரான் சுக்கிரீவனை வினவிய போழ்தில், மாருதி - அநுமன், குன்று போல எழுந்து நின்று - மலை

போன்று (உயர்ந்து) எழுந்து நின்று, இருகை கூப்பினன் - தன் இரு கைகளையும் குவித்துத் தொழுதவனாகி, (இராமபிரானை நோக்கி), 'நின்ற நீதியாய் - நிலைபெற்ற நீதியையுடையோனே! நான் உனக்கு ஒன்று உரைப்பது உண்டு - அடியேன் உமக்கு ஒரு செய்தி சொல்ல வேண்டியது உள்ளது; நெடிது கேட்டி - அதனை ஆதியோடந்தமாக முழுவதும் கேட்டருள்வாயாக!, என - என்று கூறி; (கூறுவன பின் வரும் பாடல்களால் விளங்கும்). ஆல் - அசை.

வேலை - சமயம்: இது வேளை எனவும் வரும். நின்ற நீதி - அழியாது என்றும் நிலைத்துள்ள நீதி; நெடிது என்ற சொல்லை, நின்ற என்பதுடன் இயைத்துக் கொள்ளலும் அமையும். வாலியின் வரலாற்றைச் சுக்கிரீவனே இராமபிரானிடம் கூறியதாக வான்மீகமும் அத்யாத்ம ராமாயணமும் கூறும்.

பி - ம். 2. *இருகை கூப்பியே.*
3. *நின்ற சீர்த்தியாய், நின்ற கீர்த்தியாய்.*
4. *ஒன்றி நானுனக், ஒன்றி யானுனக்.* (36)

**114.** **நாலு வேதமா நவையி லார்கலி**
**வேலி யன்னதோர் மலையின் மேலுளான்**
**சூலி யின்னருட் டுறையின் முற்றினன்**
**வாலி யென்றுளான் வரம்பி லாற்றலான்.**

'நாலு வேதமாம் - நான்கு வேதங்களாகிய, நவை இல் - குற்றம் அற்ற, ஆர்கலி-கடல்களே, வேலி அன்னது ஓர் மலையின் மேல் உளான்- வேலிபோல் விளங்கும் ஒரு கயிலாய மலைமேல் உள்ளவனான, சூலியின் அருள் துறையின் - சூலப்படையை யுடைய சிவபெருமானது அருளாகிய அநுக்கிரகத்தை, முற்றினன் - முழுவதும் பெற்றவனும், வரம்பில் ஆற்றலான் - எல்லையற்ற வலிமை வாய்ந்தவனுமான, வாலி என்று உளான் - வாலி என்று ஒருவன் உள்ளான்.

வேதங்களை ஆர்கலி என்றது அவற்றின் பரப்பாலும் பேரொலியாலும் என்க. உலகைக் கடல்கள் சூழ்ந்துள்ளன போல, ஆழமுடைமை, பரப்பு, பொருட் செறிவு இவற்றால் நிறைந்து கடல்கள் போல விளங்கும் வேதங்கள் கயிலாயத்தைச் சூழ்ந்திருந்தன என்க. வாலி பரமசிவ பக்தன்; இதனை 'அட்ட மூர்த்திதாள் பணியு மாணையான்' 117; 'பஞ்சின்மெல் லடியாள் பாகன் பதயுக மல்ல யாவும் அஞ்சலித் தறியாச் செங்கை யாணையாய்' (373); என்ற அநுமன் அங்கதன் கூற்றுக்களாலும், அறியலாம்.

" அணங்கார் பாகனே யாசை தோறுமுற்
றுணங்கா வொண்மலர் கொண்டு ளன்பொடும்
இணங்காக் கால மிரண்டொ டொன்றினும்
வணங்கா தித்துணை வைக வல்லையோ ".

என்று தாரை புலம்பலிற் கூறுமாற்றலும் (388) அறிக; மேலும், திருவடகுரங்காடுதுறை, திருக்குரங்கணிமுட்டம் என்னும் தலங்களில் வாலி சிவபெருமானை வழிபட்டு அருள் பெற்றதாக அத் தலபுராணங்கள் கூறுவனவும் காணலாம். சூலி இன்னருட் டுறை என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். சிவபெருமான் அருளால் வாலி வரம்பில் ஆற்றல் பெற்றமை கூறப்பெற்றது.

பி - ம். 1. *நவையில் சாலியின்.*
2. *வேலி யன்னவன், வேலி யன்னவோர், வேலி யன்னதோல்; வெள்ளி வெண்கிரிச்; விமலன் யேறுளான், னமலன் யேறுளான்.*
3. *சூலி தன்னருட்; டுறையு முற்றினன்.* (37)

115. கழறுந் தேவரோ டவுணர் கண்ணிநின்
றுழலு மந்தரத் துருவு தேய்வுற
அழலுங் கோளரா வகடு தீயெழச்
சுழலும் வேலையைக் கடையுந் தோளினன்.

' (வாலி), கழறும்-சிறப்பித்துச் சொல்லப் பெறும், தேவரோடு அவுணர்-தேவர்களுடன் அசுரர்கள், கண்ணி நின்று-(அமுதம் அடைவதை) நோக்கமாகக்கொண்டு, (தலைப்புறம் வால்புறம் ஆக இருபுறமும் பிரிந்து) நின்று, உழலும் - சுழன்று திரியும், மந்தரத்து உருவு தேய்வு உற - மந்தரமலையின் உருவம் தேய, அழலும் - சீறிக் கோபிக்கும், கோள் அரா - வலிய வாசுகி என்னும் பாம்பின், அகடு தீ எழ - வயிற்றினின்றும் நெருப்பு எழுந்து வெளிவர, சுழலும் வேலையை - (குழம்பித்) திரிவுறும் பாற்கடலை, கடையும் தோளினன்-(தான் ஒருவனாக நின்று) கடைந்த புய வலியை யுடையவன்.

வாலி பாற்கடல் கடைந்த வரலாறு அபிஷேக நாடகத்தில் அவனே தாரையிடம் கூறியதாகக் கூறப் பெற்றுள்ளது. இச் செய்தி வான்மீகத்திலோ, அத்யாத்ம ராமாயணத்திலோ காணப்பெற வில்லை.

இது, தேவர்களும் அசுரர்களும் இரு புறமாய்ப் பிரிந்து நின்று வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும், மந்தரம் என்னும் மலையை மத்தாகவும் கொண்டு பாற்கடலி லிருந்து அமுதம் அடையப் பல காலம் வலிந்து கடையவும் அமுதம் பெறாமல் அன்னோர் தத்தளிக்க,

அப்போது அங்கு வந்த வாலி அத் தேவர்களையும் அவுணர் களையும் அகற்றித் தான் ஒருவனாகவே யிருந்து, தன் வாலை மந்தர கிரியிற் சுற்றிக் கயிறாகக் கொண்டு கடைந்து, அமுதம் எழச் செய்து, அவ் வமுதத்தைத் தேவர்க்கு அளித்தனன் என்ற வரலாற்றைக் குறித்த தாகும்; வாலி அமுதங் கடைந்து தேவர்க்கு அளித்த இச் செயலை ஆசிரியர் கம்பநாடர் பல இடங்களில் பின்னும் சிறப்பித்துக் கூறுவர்: 141, 247, 252, 253, 367, 372, 392. உயுத்த. அங்கதன் றூது: 24. பாற்கடலில் அமுதங் கடைந்து கொடுத்த வரலாறு, சூரிய வம்சத் தரசனும் இராமபிரானுக்கு முன்னோனுமான ஓர் அரசன் மேலேற்றி 'நரைதிரைமூப் பிவைமாற்றி யிந்திரரும் நந்தாமற், குரைகடலை நெடு வரையாற் கடைந்தமுதங் கொடுத்தானும்' (பால. குலமுறை: 4) எனக் குறித்ததும் காணலாம். இவ் வேந்தனைப் ப்ருதுலாக்ஷன் என, கன்யா குமாரி சாஸனம் கூறும். மேலும் ' கடல் கலக்க வெழு மின்னமு ததனை யொருவன் கடவுள் வானவ ருண்ண வருள்செய்த கதையும்' எனக் (கலிங்கத்துப்பரணி. இராச பாரம்பரியம்: 13) கூறுவதும், மேற்கூறிய சூரியகுல மன்னன் ஒருவன் கடலைக் கடைந்து வானவர்க் கமுதளித்த செய்தியை வலியுறுத்துவது காணலாம்.

பி - ம். 1. கழறுதேவ, கழலுந்தேவ; கண்ணினின், கன்றகின்.
2. தேய்வுறும், தேயகின், தேய்வுறுத், தேய்விடத், தேயுரு.
3. யகடு தீவிடச், தீவிடாக், தேய்வுறச்.
4. கடைசெய் தோளினன். (38)

116\. நிலனு நீருமாய் நெருப்புங் காற்றுமாய்
உலைவில் பூதநான் குடைய வாற்றலான்
அலையின் வேலைசூழ் கிடந்த வாழிமா
மலையி னின்றுமிம் மலையின் வாவுவான்.

(அவன்), நிலனும் - பூமியும், நீரும் ஆய் - கடல் முதலிய நீரும் ஆகவும், நெருப்பும் காற்றும் ஆய் - தீ காற்று என்பன ஆகவும், உலைவு இல் - அழிவு இல்லாத, பூதம் நான்கு உடைய - நான்கு பூதங்களும் ஒன்று சேர்ந்து கொண்ட, ஆற்றலான் - வலிமை யுடையவன்; அலையின் வேலை சூழ் கிடந்த - அலைகளையுடைய எல்லைப்புறக் கடல்கள் சூழ்ந்து கிடந்ததான, ஆழி மா மலையின் நின்றும் - சக்கரவாளகிரி என்னும் மலையிலிருந்தும், இ மலையில் - இங்குள்ள மலையில் வந்து, வாவுவான் - தாண்டிக் குதிப்பான்.

வாலி, ஐம்பூதங்களில் நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்கின் ஆற்றல் அமைந்தவன், என்றது. மற்றதாகிய ஆகாயம், சூன்யப் பிரதேசமாதலின அதற்குப் பரிமாணம் இல்லாமை கருதி அதனை விலக்கியதாகும்; வாலி மேற்கூறிய நான்கு பூதங்களின் ஆற்றல் ஒருசேரத் தன்னிடம் அமையப் பெற்றவன் என்பது. பின் 289லும் காண்க. இம்மலை: இந்த ருசியமுக பருவதம். வாலி பின் ஏற்றிய துந்துபி உடல் விழுந்த மதங்காச்சிரமத்தின் அருகே போனால் தன் தலை வெடித்துத் தூளாகும் என்று அறிந்து அங்குப் போவதில்லை என்றும் இச்சாப நிகழ்ச்சிக்கு முன் சக்கரவாள கிரியிலிருந்து அம்மலைக்குத் தாண்டிக் குதிப்பவன் என்றுங் கொளற்பாலதாம்.

பி - ம். 1. *நீருமா நெருப்பும், நீரொடு நெருப்பும்; நெருப்புங் கால்வெளி, நெருப்புங் காற்றுமென்,*
2. *உலையில் பூதான், உலவில் பூத,*
3. *அலையும் வேலை,*
4. *நின்றுமா, நின்றுமம்; மலையின் வைகுவான்,* (39)

117. சிட்டு வார்பொரக் கிடைக்கி னன்னவர்ப்
பட்ட நல்வலம் பாக மெய்துவான்
எட்டு மாதிரத் திறுதி நாளுமுற்
றட்ட மூர்த்திதாள் பணியு மாணையான்.

‘(இன்னும் அவன்), பொர கிட்டுவார் கிடைக்கின் - போரிடத்துத் தன்னை அணுகுபவர் வரப்பெற்றால், அன்னவர் பட்ட நல்வலம் - அவர்களிடம் உண்டான நல்ல வலிமையில், பாகம் - சரிபாக அளவை, எய்துவான் - தான் அடையும் வரமுடையவன்; எட்டு மாதிரத்து - அஷ்ட திக்குக்களின், இறுதி - முடிவு எல்லை வரையும், நாளும் உற்று - தினமும் போய் அடைந்து, அட்டமூர்த்தி தாள் (ஆங்காங்குப் பல இடங்களிலுங் கோயில் கொண்டுள்ள) அஷ்டமூர்த்தியாய் விளங்கும் சிவபெருமான் திருவடிகளை, பணியும் ஆணையான் - வணங்கும் நியமத்தை யுடையவன்.

பாகம் - பகுதி; இங்குச் சரிபாதியைக் குறிப்பதாம்; ‘இச்சைப்படி தன்பேரற மெண்ணான்கு வளர்க்கும், பச்சைக்கொடி விடையோனொரு பாகந்திறை கொண்டாள்’. (வி. பா. அருச்சுனன் தீர்த்த). வாலி, தன்னை எதிர்த்தவன் வலியிற் பாதிகவர்ந்து கொள்வன் என்றது, ‘இரங்கியா னிற்ப வென்வலி யவன்வயினெய்த வரங்கொள் வாலிபால் தோற்றனன்’ (உயுத்த. மந்திரப்: 107) என்னும் இராவணன் கூற்றாலும் வலியுறும். இக்கூற்றுக்கு வான்மீகத்திலோ, அத்யாத்ம ராமாயணத்திலோ ஆதாரங்

காணக் கிடைக்கவில்லை. வாலி தினமும் எட்டுத் திக்குக்களின் எல்லை வரைச் சென்று ஆங்காங்கு உள்ள சிவத் தலங்களில் கோயில் கொண்டு விளங்கும் சிவபெருமானை வணங்கும் நியமத்தையுடையவன்; இதனால் அவனது சிவபக்தியின் சிறப்புக் கூறப்பெற்றது. அஷ்டமூர்த்தி: நிலம், வாயு, தேயு, நீர், ஆகாசம், சூரியன், சந்திரன், ஆத்மா, (அல்லது இயமானன்) என்னும் எட்டு ரூபங்களாய் விளங்கும் சிவபெருமான்; (பிங்); 'அட்டமூர்த்தியு மாகிய அப்பனை' (திருநாவுக்: தேவாரம்); இங்கு ஆசிரியர் சிவபெருமானை அட்டமூர்த்தி என்று குறிப்பிட்டது கருதத்தக்கது.

பி - ம். 1: கிட்டினர் பொரக்; கிடைக்கி லன்னவர்.
2. பட்ட நல்வரம், பட்ட மேல்வலம், பட்ட மாபெலம்.
4. யணியு மன்பினன், பணியு மாற்றலான். (40)

118. கால்செ லாதவன் முன்னர்க் கந்தவேள்
வேல்செ லாதவன் மார்பின் வென்றியான்
வால்செ லாதவா யலதி ராவணன்
கோல்செ லாதவன் குடைசெ லாதரோ.

'அவன் முன்னர் - அவ்வாலியின் எதிராக, கால் செலாது - வாயுவும் தன் வலிகாட்டிச் செல்லும் ஆற்றலுடையதன்று; அவன் மார்பின் - அந்த வாலியின் மார்பிலே, கந்தவேள் - முருகக்கடவுளின், வேல் செலாது - வேற்படையும் உட்செல்லாது; வென்றியான் - வெற்றியை யுடைய அவ்வாலியின், வால் செலாத வாய் அலது - வால் செல்லாத இடத்தில் அல்லாமல், இராவணன் கோல்செலாது - இராவணனுடைய ஆட்சி செல்லமாட்டாது; அவன் குடை - அவ்விராவணனது வெற்றிக்குடையும், செலாது - அங்குச் செல்லமாட்டாது. அரோ; ஈற்றசை.

கால் - காற்று; வலிமையிற் சிறந்தவன்; வாயுதேவன்; அந்த வாயுவும் வாலி எதிர்செல்லும் ஆற்றல் உடையவ னல்லன் என்பதாம். கந்தவேள்; கந்தன், ஸ்கந்தன்; சரவணப் பொய்கையில் ஆறு சிறு குழந்தைகளாய் ஒரு தாமரைமலரில் கிடந்தவர்தமை, உமாதேவியார் ஒருசேர வாரி எடுத்து அணைத்தமையால், ஆறு திருமுகங்களும் பன்னிருகரங்களுமுடைய சண்முகமூர்த்தியாக இணைந்த அம்முருகக்கடவுளுக்கு ஸ்கந்தர் எனும் பெயர் உண்டாயிற்று என்பர்; ஸ்கந்தம் - சேர்க்கை; ஸ்கந்த: என்பது தமிழில் கந்தன் எனத்திரிந்து வழங்குவதாயிற்று; கந்தவேள் - கந்தனாகியவேள். வேள் - வேட்கையை யுண்டு பண்ணுபவன்; மன்மதனை, மாரவேள் என்பது நோக்குக. கந்தன் வேல்

செலாது, என்பதற்கு வாலி சிவபக்தன் ஆதலினால், கந்தன் அவனைப் பகைக்க மாட்டான் என்று கொள்வது பொருத்தமாகும். அநுமன், சொல்லின் செல்வன் ஆதலின், அவன் கூற்றுக்களின் பொருள்களை ஆராய்ந்து காண்பது தகும்.

வால் செலாதவாய்......கோல்செலாது: வாலியின் வால், செல்லாத இடங்களில்தான் இராவணன் கோலும் குடையும் செல்லும்; அதாவது வாலியின் வால் செல்லுமிடங்களில் அவன் ஆட்சி செல்லாது என்பதாம். முன் அவ்வாலியின் வாலில் இராவணன் கட்டுண்டு பெரிதும் இடர்ப் பட்டானாதலின், அவ்வாலுக்கு அஞ்சி அங்குச்செல்லான்; வாலுக்கே அஞ்சுபவன் அவ்வாலி தோள்வலிக்கு எதிர்நிற்க மாட்டான் என்பது எளிதில் விளங்க வைத்ததாம்; இந்த வாலி வாலுக்கே இராவணன் அஞ்சுபவன் என்பது: 'வெஞ்சின வாலி மீளான் வாலும்போய் விளிந்த தன்றே' (சுந்தர, 1 : 126): 'நிறையடிக் கோல வாலி னிலைமையை யுன்னுந் தோறும், பறையடிக் கின்ற வந்தப் பயமிகப் பறந்த தன்றே' (371) என்ற அநுமன், அங்கதன் கூற்றுக்களால் முறையே அறியலாம்.

பி - ம். 2. மார்பம் வென்றியான்; பெயரு மேனெடும்.
3. வால்செ லாதவன் வலியி ராவணன்.
4. செலாது வென். (41)

**119.** மேரு வேமுதற் கிரிகள் வேரோடும்
பேரு மேயவன் பேரு மேனெடும்
காரும் வானமுங் கதிரு நாகமும்
தூரு மேயவன் பெரிய தோள்களால்,

அவன் பேருமேல் - அவ்வாலி தன் இடம் விட்டுப் பெயர்ந்து எழுவானானால், மேருவே முதல் கிரிகள் - மேருவை முதன்மையாகக் கொண்ட பருவதங்கள் யாவும், வேரொடும் பேருமே - (அவன் எழும் வேகத்தின் அதிர்ச்சியால்) வேரோடு பறிக்கப் பெற்றுத் தம் இடம் விட்டுப் பெயர்ந்து ஓடும்; அவன் பெரிய தோள்களால் - அவ்வாலியின் பெரிய தோள்களினால், நெடும் காரும் - பெரியமேகங்களும், வானமும் - ஆகாயமும், கதிரும் - சந்திர சூரியர்களும், நாகமும்-சுவர்க்கலோகமும், தூருமே - ஒன்றோடொன்று தாக்கப் பெற்று அழிவுறும்.

மேருவே; தூருமே; ஏகாரங்கள்; வியப்பையும் பெருமையையும் குறிப்பன. நாகமும் தூருமே என்றதற்கு மலைகளும் தூசியாய் உதிர்ந்து நிரப்பும் என்று பொருள் கொண்டாரும் உளர். முன் மேருவே முதல் கிரிகள் என்று கூறியுள்ளமையால், மறுபடியும் நாகம் என்பதற்கு மலை எனப்பொருள் கொள்வது கூறியதுகூற லாகுமாதலால், நாகம்-சுவர்க்கம்

எனப்பொருள் கொள்ளப்பெற்றது. பேரும் - பெயரும் என்பதின் திரிபு. ஒப்பு:—‘ பெயருமேல் நெடும் பூதங்க ளோடும் பெய்ரும் ’; (உயுத்த. இரணியன்வதைப் ; 13). பெரியதோள், உருவாலும் வலியாலும் பெரியதோள்கள் : அவன் தோளாற்றலின் பெருமை, முன், ''அழலுங் கோளரா வகடு தீயெழச் சுழலும் வேலையைக் கடையுந் தோளினன் '' (115) இல், கூறப்பெற்றமையா லறிக. தூர்தல் - மறைதலும் ஆம். மேலும், வாலி தோள்வலி அடுத்தபாடலாலும் விளங்கப் பெறும்.

பி - ம். 2. பெயரு மேனெடும், பெயரு மேயெனிற்.

3. கதிரு காகமும், கதிரு மாழியிற்.

4. தூரு மேகடல் பெரிய. (42)

**120.** பாரி டந்தவெம் பன்றி பண்டைநாள்
நீர்கி டந்தபே ராமை நேருளான்
மார்பி டந்தமா வெனினு மற்றவன்
தார்கி டந்ததோ டகைய வல்லதோ.

‘பார் இடந்த வெம் பன்றி - பூமியைத் தன் கோட்டால் பெயர்த்து மேலெடுத்து வந்த வலிய திருமாலாகிய பன்றியும், பண்டை நாள் - பழங்காலத்தில், நீர் கிடந்த - கடலில் (வியாபித்துக்) கிடந்த, பேர் ஆமை - திருமாலாகிய பெரிய ஆமையும், நேர்உளான் - சமமாகக் கொள்ளத்தக்கவன் ; மார்பு இடந்த மா எனினும் - இரணியன் மார்பைப் பிளந்து அழித்த நரசிங்கமே என்றாலும், அவன் - அந்த வாலியின், தார் கிடந்த தோள் - மாலை தங்கிய தோள்களை, தகைய வல்லதோ - கட்டுப்படுத்தி அடக்கக்கூடிய வலியுடையதாகுமோ ? (ஆகாது என்றபடி). மற்று : அசை.

மார்பிடந்த என்றது, நரசிங்கத்தைக் குறிப்பதாம். நரசிங்கத்தாலும் தகைக்க முடியாதது வாலியின் தோள் என்றபடி. பார்இடந்த வெம் பன்றி ; இரண்யாக்ஷன் என்னும் அசுரன் பூமியைச் சுருட்டி யெடுத்துப் பாதாளத்துள் செல்ல, தேவர்கள் திருமாலைத் துதித்துவேண்ட, அவர் ஒரு பன்றி உருவெடுத்துச் சென்று அவ்விரண்யாக்ஷனைக் கொன்று புவியைத் தம் கொம்பால் ஏந்தி எடுத்து முன்போல் நிலைநிறுத்தினர் என்பதும், தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்தபோது மத்தாக நட்ட மந்தரமலை கீழே ஆழ்ந்துபோகாமல் இருக்கத் திருமால் ஒரு பெரிய ஆமை வடிவாக அடியில் இருந்து அம்மலையைத் தாங்கினர் என்பதும், பாகவதப் புராணச் சரிதங்கள். இச் செய்யுளால் திருமா

லுடைய, வராக கூர்ம நரசிங்க அவதாரங்கள் குறிக்கப்பெற்றன. இனி, நேருளான் என்பதற்குப் பகைவனுன இரணியனுடைய என்று இயைத்தும் பொருள் கூறலாம். இதனுல் வாலி திருமால்போன்ற வலியோராலும் வெல்லமுடியாதவன் என்பதாம். வாலி நரசிங்கத்தாலும் அடக்க முடியாவலியுடையவன் என ஆசிரியர் கூறியிருப்பாரோ என்பது ஐயத்தின் பாற்படும். ஏனெனில், அவருடைய உபாசனுமூர்த்தியே நரசிங்கப்பெருமான் எனக் கூறப்பெறுவதால் என்க. ஆதலின், இப்பாடல் இடைச் செருகலோ எனக் கொள்ளவும் இடமாகும்.

பி - ம். 1. *பார்வி டந்தவெம்.*

2. *நீர் கடைந்த ; பேராண்மை நேருளான் ; ராமை நேரிலான்.*

3. *மார்பிடந்தமா லெனினு, மார்பிடந்த மாவரியு.*

4. *தகைய வல்லவோ, தகைய வல்லவே.* (43)

121. படர்ந்த நீணெடுந் தலைப ரப்பிமீ
தடர்ந்து பாரிடந் தனைய நந்தனும்
கிடந்து தாங்குமிக் கிரியின் மேயினுன்
நடந்து தாங்குமிப் புவன நாளெலாம்.

'அநந்தனும் - அநந்தன் என்னும் ஆதிசேடனுன பாம்பும், படர்ந்த - விரிந்த, நீள்நெடு - நீண்டுபரவிய, தலை - தன் ஆயிரந்தலைகளையும், பரப்பி - பரவச்செய்து,மீது அடர்ந்து - அதன்மீது நெருங்க (அவற்றைக் கொண்டு), பார் இடம் தனை,—பூமியின் இடத்தை, கிடந்து தாங்கும் - அதன் அடியிற்கிடந் திருந்து தாங்கிக்கொண்டிருப்பதாகும் ; இ கிரியின் மேயினுன் - இந்த மலையில் வாழும் வாலியோவென்றுல், இ புவனம் - இந்த உலகத்தை, நாள் எலாம் - பலநாட்களாக, நடந்து தாங்கும் - நடந்து சஞ்சரித்துக்கொண்டே தாங்கி வருவானுவன்.

அநந்தனைப்போல் கிடந்து தாங்காமல் வாலி நடந்து தரங்கி வருகிருன் என்ற நயம் ஓர்க. தாங்குதல் - பொறுத்தல்.

இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 2. (மீ) *தடைந்த பாரம் வந்தற, அடர்ந்த பாரம் வந்தற ; தடர்ந்த பாரிடந்.*

3. *கிடந்த தாங்குமக் கிரியை ; மேவினுன்.* (44)

122. கடலொ லிப்பதுங் கால்ச லிப்பதும்
மிடல ருக்கர்தேர் மீது செல்வதும்
தொடரின் மற்றவன் சுளியு மென்றலால்
அடலின் வெற்றியா யயலி னுவவோ.

'அடலின் வெற்றியாய் - போர்புரியு மிடத்து வெற்றியே யுடையோனே! கடல் ஒலிப்பதும் - கடல்கள் ஓசையுடன் முழங்குவதும், கால் சலிப்பதும் - காற்று உலாவுவதும், மிடல் அருக்கர் தேர் மீது செல்வதும் - வலிய பன்னிரு சூரியர்களும் தத்தம் தேர்மீது ஏறி வான வீதிவழியே செல்வதும், தொடரின் - அவ்வாலியிடம் நாம் அணுகினால், அவன் சுளியும் என்று அலால் - அவன் நம்மைக் கோபிப்பான் என்று அல்லாமல், மற்று அயலின் - வேறு காரணங்களால், ஆவவோ - ஏற்படுஞ் செயல்களாகுமோ? ஆகா என்றபடி.

இதில், இயற்கைப்பொருள்களும் அவன் ஆணைக்கு அஞ்சித் தத்தம் தொழில்களைச் செய்கின்றன என்று கூறியதாம். சூரியர் பன்னிருவராதலின், அருக்கர் எனப் பன்மையிற் கூறியது என்க.

அடலின் வெற்றியாய் - வலிமை போல வெற்றியையும் உடையவனே! என்றும் பொருள் கொள்ளலாம். மற்றவன்; மற்று என்பதை அசையாகக் கொண்டாரும் உளர். இச்செய்யுள் ஏதுத் தற்குறிப்பேற்றவணி.

இச்செய்யுளுக்கு ஒப்பு:

நெடுங்கடல் நிற்பதும் ஞாயிறு காய்வதும் நித்தலுங்கால்
ஒடுங்கி நடப்பதும் தண்கார் பொழிவது முழிதனில்
சுடுங்கனல் பற்றிச் சுடாதே யிருப்பதும் தும்பைபுனைந்து
அடுங்கன லாழி யரங்கேசர் தந்திரு வாணையினே.

(திருவரங்கத்துமாலை: 15)

தினகர ஞர்கலி தீகாற் றெடுங்குஞ் செயுலும்விண்மீ
தினகர ஞர்கொண்ட லேழ்செருக் காமையுஞ் சென்றெதிர்மோ
தினகர ஞருயிர் செற்று ரரங்கர் திகிரிசங்கேந்
தினகர ஞர்நம் பெருமா ளமைந்த திருக்கைகண்டே.

(திருவரங்கத்தந்தாதி: 44)

'கால் சலிப்பது - வாயு நிலை நில்லாது எவ்விடத்தும் நடந்து திரிவது' என்பது பழையவுரை.

பி - ம். 1. கடலு லேப்பதுவ், கடலொ ளிப்பதும்; கால்ச ரிப்பதும்.
2. மிடல ரக்கர்தேர்.
3. சுளியு மேற்றலால், சுளியு னெற்றலால், சுளியி னேறலால், சுளியி னேற்றலால்.
4. ஙயலி ருவதோ, ஙயலி ருபயோ, ஙயலி ருவதே. (45)

123. வெள்ள மேழுபத் துள்ள மேருவைத்
தள்ள லானதோ ளரியின் ருனையான்
உள்ள மொன்றியெவ் வுயிரும் வாழுமால்
வள்ள லேயவன் வலியின் வன்மையால்.

'வள்ளலே - வண்மையனே! மேருவை தள்ளல் ஆன தோள் - மேரு மலையையும் இடித்து அப்புறம் தள்ளக் கூடிய தோள்களையுடைய, வெள்ளம் ஏழுபத்து உள்ள - எழுபது வெள்ளம் என்னும் பேரெண் கணக்குள்ள, அரியின் தானையான் - குரங்குப்படையை யுடையவன். அவன் வலியின் வன்மையால் - இத்தகைய அவனுடைய வலிமையின் மிகுதியால், எ உயிரும் - எல்லாப் பிராணிகளும், உள்ளம் ஒன்றி - (அவன் கருத்துக்கு வேறுபடாது) ஒற்றுமை யுடையனவாகி, வாழும் - உயிர் வாழ்கின்றன. ஆல் : அசை.

வாலியிடங் கொண்ட அச்சத்தினுல் உலகில் உள்ள மற்ற உயிர்கள் யாவும் அவன் கருத்துக்கு மாறுபாடின்றி அவனுடன் ஒன்றுபட்டு உயிர்வாழ்ந்து வருகின்றன என்பதாம்,

இராமபிரானை இங்கு வள்ளல் என்று சொல்லியது, இத்தகைய வலிமையுள்ள பகைவனை ஒழித்துச் சுக்கிரீவனுக்கு அருள்புரிய வேண்டுமென்றதைக் குறித்து. மேருவும் : உம்மை, உயர்வு சிறப்பினது. வெள்ளம் - ஒரு பேரெண் அளவுகொண்ட சேனை ; இஃது, அக்ஷௌணி ஏகம், கோடி, விந்தம், குமுதம், பதுமம், சமுத்திரம் எனப் பல பிரிவு களைக் கொண்டது என்பர். பின், சுக்கிரீவன் எழுபது வெள்ளம் வாநர சேனைகளோடு இராமபிரானுக்குத் துணையாக நின்று இலங்கையில் போர் புரிந்தது இங்குக் கூறப்பெற்ற வாலியின் வாநரப் படைகளைக் கொண்டேயாம் என்க.

பி - ம். 1. பத்துளது மேருவை.
2. தள்ளு தோள்வலிக் கவியின் தானையான்.
3. உள்ள மின்றியவ், உள்ள மன்றியெவ், உள்ள மொர்துமா, உள்ள மொன்றியே, றுயிரு மெஞ்சலால், யெவ்வுயிரு மஞ்ச மால், வுயிரை யஞ்சலால்.
4. வலியின் வன்மையால், வலியின் வண்மையால். (46)

124. மழையி டிப்புரு வயவெஞ் சீயமா
முழையி டிப்புரு முரண்வெங் காலுமென்
தழைது டிப்புறச் சார்வு ருவவன்
விழைவி டத்தின்மேல் விளியை யஞ்சலால்.

'விளியை அஞ்சல் ஆல் - வாலியின் கர்ச்சனையாகிய குரலுக்கு என்றும் பயப்படுதலால், அவன் விழைவு இடத்தின் மேல் - அவ்வாலி விரும்பி வாழும் இடத்திற்கு எதிராக, மழை இடிப்பு உரு - மேகங்கள் இடித்து ஒலிக்க மாட்டா; வயம் வெம் சீயமா - வெற்றி மிக்க கொடிய சிங்கம் என்னும் விலங்குகள், முழை - தாம் வாழும் மலைக் குகைகளில், இடிப்பு உரு - கர்ச்சிக்கமாட்டா; முரண் வெம் காலும் - வலிமையுடைய கொடிய காற்றும், மென் தழை துடிப்பு உற - மெல்லிய தழைகள் நடுக்கமுற, சார்வு உரு - அவற்றின் பக்கத்தில் வராது.

இச்செய்யுள் முன் செய்யுளின் கருத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. சீயம் - ஸிம்ஹம் என்ற வடசொல்லின் சிதைவு. சீயமா; இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. முரண் வெங்கால்: காற்று மிக்க வலிமையுடையது என்பதாம்: மாபலன் என்ற பெயர் அதற்கு உண்மையும் நோக்குக. வாயு முதலிய பூதங்கள் நான்கும் வாலியின் ஆற்றலுக்கு அஞ்சி யடங்கினவை என்பது, 118, 119, 122 பாடல்களால் விளங்குவன காண்க. இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. வலிய சீயமா, வயவு சீயமா.
2. முரனு காலினல், முரனு கானமென், முரண காலமென், முதிரும் மெய்வரா முரண காலுமென், முடிய வவ்விடத்.
3. உழைது டிப்புரு, உழைது டிப்புற, தழைது டிப்புரு சாலும் வல்லரா, தழல்து டிப்புரு சாலும் வல்லரா.
4. அழல்து டிப்புரு மீளி யஞ்சலால்; விளியை யஞ்சுமால், விளியை யஞ்சியே.

(47)

125. மெய்க்கொள் வாலினுன் மிடலி ராவணன்
தொக்க தோளுறத் தொடர்ப டுத்தநாள்
புக்கி லாதவும் பொழிய ரத்தநீர்
உக்கி லாதவு முலகம் யாவதோ.

'மெய் கொள் வாலினால் - தன் உருவில் ஓர் அங்கமாகக் கொண்டுள்ள வாலினால், மிடல் இராவணன் - வலிய இராவண

னுடைய, தொக்க தோள் - இருபது ஆகத் தொகுத்து விளங்கிய அவன் தோள்களை; உற - ஒன்ருகச் சேர்ந்து பிணையும்படி, தொடர் படுத்த நாள் - (வாலி) கட்டிப்பிணித்த அந்நாளில், புக்கு இலாதவும் அவன் போய்ப் புகாததும், பொழி அரத்த நீர் உக்கு இலாதவும் - அவ்விராவணனுடைய இரத்தமாகிய நீர் சிந்தாததுமான, உலகம் யாவதோ - உலகங்கள் வேறு யாவை உள்ளனவாகும்? (வாலி எல்லா உலகங்களிலும் வாலிற் பிணித்த அவ்விராவணனுடன் செல்ல, அவ் விராவணன் உடலிலிருந்து இரத்தம் எங்கும் சிந்தியது என்றபடி).

வாலின் வலியே இவ்வாருனதேல், அவ்வாலியின் தோள் முதலிய அங்கங்களின் வலி கூருமலே அமையும் என்க. தொடர்ப் படுத்தல் - கட்டிப் பிணித்தல் அல்லது விலங்கிடுதல் போல் அகப் படுத்தல்; அரத்தம் : ரத்தம் என்ற வடசொல்லின் திரிபு; இது இரத்தம் எனவும் வழங்கும்.

ஒரு சமயம் வாலி, மாலையம் பொழுதில் கடற்கரையருகே சந்தி நியமத்தில் இருந்த போது, இராவணன் அவனறியா வண்ணம் பின்புறஞ் சென்று தன்னிருபது தோள்களாலும் அவ்வாலி யைக் கட்டிப் பிணிக்க, வாலி அதனையுணர்ந்தும் தனது சந்தி நியமத் திற்குக் குறைவு ஏற்படாமல் அவ்விராவணனைத் தன் வாலால் இறுகப் பிணித்து வைத்து அந்தி வழிபாடு முடிந்தபின் தன் வாலில் தொங்கியபடி அவ்வரக்கன் தன் பத்து வாய்களாலும் இரத்தம் சிந்தி வருந்த உலகிற் பல பாகங்களிலும் சுற்றித் திரிந்தான் என்ப தும், இராவணன் தன் செயலுக்கு வருந்தி வேண்ட, பின் அவனை வாலி விடுவித்தான் என்பதும் இராமாயணம் உத்தர காண்டத்தில் உள்ள செய்திகளாம். இச் செய்திகள் சுந்தர. 580, 1126; செய் யுள்களாலும், உயுத்த : அங்கதன்றூது : 24ம் செய்யுளாலும் விளங்கக் காணலாம்.

இவ்வரலாறுகள் வான்மீகி ராமாயணத்திலாவது, அத்யாத்ம ராமாயணத்திலாவது கூறப்பெறவில்லை.

பி - ம். 1. *மிக்க வாலினுன்.*
2. *தொக்க தோளிறத், தொக்க தோளெலாம், தொக்க தோள் களைத், தொக்க தோளுமத்; துணைதொ டுத்தநாள்.*
3. *புக்கி லாதவெம், புக்கி லாதவேழ், புக்க லாதவெம்; பொழிவி யாதவே(று), பொறிய ரத்தநீர்.*
4. *உக்கி லாதது முலகம், உக்கி லாதவெவ்; வுலக மூழியாய், வுலக மியாவையே, உலக மியாவையோ.* (48)

126. இந்தி ரன்றனிப் புதல்வ னின்னளிச்
சந்தி ரன்றழைத் தனைய தன்மையான்
அந்த கன்றனக் கரிய வாணையான்
முந்தி வந்தன னிவனின் மொய்ம்பினாய்.

'மொய்ம்பினாய் - வலிமையுள்ளோனே! இந்திரன் தனி புதல்வன் தேவேந்திரனுடைய ஒப்பற்ற புத்திரனான அவ்வாலி, இன் அளி சந்திரன் தழைத்து அனைய - இனிமையைத் தருகின்ற சந்திரன் பூர்ண கலைகளுடன் சிறந்து விளங்கினாற்போன்ற, தன்மையான் - வெண்ணிறத் தன்மையையுடையவன்: அந்தகன் தனக்கு அரிய - யமனுக்கும் கடத்தற்கு அரியதான, ஆணையான் - ஆட்சி வலிமையுள்ளவன்; இவனின் - இந்தச் சுக்கிரீவனுக்கு, முந்தி வந்தனன் - முன்னர்த் தமையனாக (ஒரு தாய்வயிற்றில்) தோன்றினவன் ஆவன்.

மொய்ம்பினாய் என்று குறிப்பிட்டது இராமன் அவ்வாலியை வென்று அழிக்கவல்ல வலிமையுடையவன் என்பதை அறிந்து கூறியதாகும். இருக்ஷரஜசு என்ற வானர வீரன், பார்வதி தேவியின் சாபப்படி, பெண் வானரத்தின் உருவை அடைய, அவளை இந்திரனும், சூரியனும் விரும்பியடைய, முறையே, அவளிடமாய் வாலியும் சுக்கிரீவனும் மைந்தர்களாய் உதித்தனர் என்பர். இன்-இனிய; கருணை மிக்க எனினுமாம். சந்திரன் தழைத் தனைய் - சந்திரன் வளர்வது போன்ற செல்வச் சிறப்புடையவன் எனலும் ஒன்றும்.

வாலி வெண்மை நிறத்தினன்; 239. செய்யுள் 113 முதல் 126 முடிய உள்ளவை வாலியின் பெருமைகளை அநுமன் இராமபிரானுக்குக் கூறியவை ஆம். வான்மீகத்தில் சுக்கிரீவனே வாலியைப் பற்றி இராமபிரானுக்குக் கூறியதாக உள்ளது. தம் வரலாற்றைத் தாமே கூறிக் கொள்ளுதல் தகுதியன்று என்ற கருத்துடன், இராமபிரான் வரலாற்றை இலக்குவன் மூலமாகவும். சுக்கிரீவன் வரலாற்றை அநுமன் மூலமாகவும் ஆசிரியர் அமைத்துள்ளார் என்னலாம். அன்றியும், வாலியைப்பற்றி இங்குக் கூறப்பெற்ற செய்திகளிற் சில வேறு இராமாயண நூலிலும் இருப்பதாகத் தெரியவில்லை. இஃது ஆராயத் தக்கது. இனி, வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் உண்டான பிணக்கின் காரணம் கூறப் பெறும்.

பி - ம். 1. *புதல்வ னின்னிசைச், னின்னெழில், னின்னளிர், னின்னகைக்,*
3. *கரிய தன்மையான்.*
4. *மொம்பினேய், முன்பினேய், முன்பினன், முன்பினேன்.* (49)

127. அன்ன வன்னெமக் கரச னுகவேன்
றின்ன வன்னிளம் பதமி யற்றுநாள்
முன்ன வன்குலப் பகைஞன் முட்டினுன்
மின்னெ யிற்றுவா ளவுணன் மேன்மையான்.

அன்னவன் - அத்தகைய வாலி, எமக்கு அரசன் ஆக - வானரராகிய எங்களுக்கு அரசனுயிருக்க, இன்னவன் - இந்தச் சுக்கிரீவன், இளம் பதம் ஏன்று - இளவரசுப் பதவியைத் தாங்கி, இயற்று நாள் - ஆட்சிபுரிந்த காலத்தில், மேன்மையான் - (வலிமையால்) பெருமை வாய்ந்தவனும், முன் அவன் குல பகைஞன் - முன்னமே வாலியின் குலப்பகைவனுய் உள்ளவனுமான, மின் எயிற்று வாள் அவுணன் - (மின்னல் போல) ஒளி வீசும் பற்களையுடைய வாளேந்திய அசுரன், முட்டினுன் - தாக்கினுன்.

மின்வாள் எயிற்று அவுணன் என இயைத்தலும் ஆம். குலப்பகைஞன் - சிறந்த பகைவனும் ஆம். முட்டுதல் - வலிவுடன் தாக்கிப் பொருதல். முன்னவன் குலப்பகைஞன்-மாயாவி; இவன் துந்துபி என்ற அரக்கனின் மூத்தமகன்; 'அவனுக்கும் வாலிக்கும் ஒரு பெண் காரணமாகப் போர் மூண்டது' என்று வான்மீகம் கூறும். 'மயன் மகன் மாயாவி' என்று அத்யாத்மகமும், துளஸீதாசர் நூலும் கூறும். பின் துந்துபிப் படலத்துள் கூறப்பெறும் நிகழ்ச்சி முன்னும், இங்குக் கூறப் பெறும் மாயாவியுடன் போர் நிகழ்ச்சி பின்னுமாக நிகழ்ந்தன என்று கொள்ளற்பாலது. அன்னவன்னெமக் ; றின்னவன்னிள ; செய்யுள் விகாரங்களாய் ஒற்று மிகுந்தன.

பி - ம். 1. அன்ன வன்றனக், அன்ன வன்னகர்க்; கரச னுகவும்.
4. ளவுணன் வெம்மையான் ; மேன்மையால். (50)

128. முட்ட நின்றவன் முரணு ரத்தினுல்
ஒட்ட வஞ்சிநெஞ் சுலைய வோடினுன்
வட்ட மண்டலத் தரிது வாழ்வெனு
எட்ட ரும்பில மதனி லெய்தினுன்.

முட்ட - (மாயாவி என்னும் அவுணன் தன்னை வந்து) தாக்க, நின்றவன் - எதிர்நின்ற வாலி, முரண் உரத்தினுல் - தன் வலிய மார்பினுல், ஒட்ட - நெருங்கித் தாக்க, அஞ்சி நெஞ்சு உலைய ஓடினுன் -

(அந்த மாயாவி) அச்சமுற்று மனம் நடுங்க ஓடினவனாகி, வட்ட மண்டலத்து - வட்டமாய் உள்ள இப் பூமண்டலத்தினுள், வாழ்வு அரிது எனா - இனித் தான் வாழ்வது அரிதேயாகும் என்று, எட்டு அரும் - பிறர் எட்டி அணுகுதற்கு அரியதான, பிலம் அதனில் எய்தினான் - ஒரு குகையுள் போய் அடைந்தான்.

ஒட்டுதல் - நெருங்கித் தாக்குதல்; 'மாந்த ருறைநிலத்தோ டொட்ட லரிது' (குறள். 499. உரை). ஓடினான் - முற்றெச்சம்; வினையாலணையும் பெயரும் ஆம். பிலன்: பிலம் என்பதன் கடைப்போலி.

பி - ம். 1. முட்டி னின்றவன்; மூரனு ரத்தினேர், மூரனு ரத்தினோர், மூரனு ணர்ந்தனேர்.
2. ஓட்ட வஞ்சநெஞ்.
4. பெரும் பிலனு னெய்தினான்; எட்ட ரும்பெரும் பிலனி லெய்தினான்; பிலனு னெய்தினான். (51)

129. எய்து காலையிப் பிலனு ளெய்தியான்
நொய்தி னங்கவற் கொல்வெ னேன்மையால்
செய்தி காவனீ சிறிது போழ்தெனா
வெய்தி னெய்தினான் வெகுளி மேயினான்.

'எய்து காலை - அவ்வாறு மாயாவி குகையுள் ஓடி ஒளிந்த போது, வெகுளி மேயினான் - கோபமேற் கொண்ட வாலி, (சுக்கிரீவனை நோக்கி), 'யான் இ பிலனுள் எய்தி - நான் இந்தத் துவாரத்துள் போய் அடைந்து, நோன்மையால் - என் வலிமையால், நொய்தின் அங்கு அவன் கொல்வென் - விரைவில் அங்கு அவ்வவுணனைக் கொல்வேன்; நீ சிறிது போழ்து காவல் செய்தி - நீ சிறிது நேரம் இப் பில வாயிலில் இருந்து காவல் புரிவாயாக!' எனா - என்று கூறி, வெய்தின் - விரைவாக, எய்தினான் - (அவ்வாலி அப்பிலத்துள்) சென்றான்.

மேயினான்: வினையாலணையும் பெயர்; வாலியைக் குறிப்பதாகும். வெய்தின் - விரைவில்; (குறள். 569). நோன்மை - வலிமை: 'நொய்தினா லமுதங் கொண்ட நோன்மையை நுவலுநாகர்' (சுந்தர: 22.)

பி - ம். 1. காலையிற், காலையுட்.
2. நொய்தி னிங்கவற்; கொணர்வெ னோன்மையாய், கொணருன் காறுமே, கொணர நோன்மையாய்.
3. சிறித போதெனா.
4. செய்தி னேகினான்; வெகுவி மேவினான். (52)

130. ஏகி வாலியு மீருதுவே ழொடேழ்
வேக வெம்பிலந் தடவி வெம்மைசால்
மோக மோடமர் முயல்வின் வைகிடச்
சோக மெய்திநின் றுணை துளங்கினுன்.

' வாலியும் - அந்த வாலியும், வெம் பிலம் வேகம் ஏகி - பயங்கர மான அந்தக் குகையினுள் வேகத்துடன் சென்று, ஏழ் ஒடு ஏழ் இருது - பதினுன்கு இருதுக்கள் கொண்ட காலம், தடவி - அப்பிலத் துள் அம்மாயாவியைத் தேடிப்பார்த்து, வெம்மை சால் - கடுமை மிக்க, மோகம் ஓடு - விருப்பத்தோடு, அமர் முயல்வின் - போரிடும் முயற்சியில், வைகிட - ஈடுபட்டு இருக்க, நின் துணை - உன் தம்பி யான இச்சுக்கிரீவன், சோகம் எய்தி - (தன் தமையனுன) வாலியின் வரவு காணுமையால் அவன் இறந்து விட்டான் எனத் துன்பமுற்றவ ணுகி, துளங்கினுன் - கலக்க முற்றுன்.

இருது,' தமிழ் நாட்டு வழக்குப்படி இரண்டு மாதங்கள் கொண்ட காலம் ; அதாவது ஒரு பருவம் : இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என ஆண்டிற்கு ஆறுபருவங்கள். வாலி அப்பிலத்தினுட் சென்று அவ்வவுணனைத் தேடிப் பொருதது பதினுன்கு பருவங்கள் என்பதால், இரண்டு ஆண்டுகளும் நான்கு மாதங்களும் அப்பிலத்துட் அவன் போர்புரிந்தான் என்பதாம். வான்மீகத்தில், வாலி அப்பிலம் புகுந்து போர்செய்த காலம் ஓர் ஆண்டு எனக் கூறப்பெறுவது காணலாம். அன்றியும், அவ்வாண்டின் இறுதியில் அப்பிலத்தினின்றும் நுரையுடன் கூடிய சிவந்த குருதி வெளிப்பட்ட தென்றும், அப்பிலத்தி னுள் அசுரர்களுடைய கர்ஜனை ஒலியும் வாலி கூப்பாடும் கேட்டது என்றும், அதனுல் வாலி மரண மடைந்தானென்று சுக்கிரீவன் கருதின னென்றும் அந்நூல் கூறும். ஏழ் - ஏழு ; உகரம் சாரியை. சுக்கிரீவன் சோகம் எய்தியது வாலிவரக் காணுததால் மட்டும் அன்று ; அவ்வாலி இறந்துபோனுன் என்ற ஐயத்தாலும் ஆம்.

பி - ம். 1. *மிகுந்த வேழோடேழ்.*

2. *தடவி வெம்மையான், தடவி வெம்மையின்.*

3. *மோக வென்றிமேல், மோக மொன்றிமேல்; முயல்பின் வைகிட.*

4. *மெய்தினன், மெய்தியுன்.* (53)

131. அழுத ழுங்குறு மிவனை யன்பினில்
தொழுதி ரந்துநின் றொழிலி தாதலால்
எழுது வென்றியா யரசு கொள்கெனப்
பழுதி தென்றனன் பரியு நெஞ்சினன்.

'எழுது வென்றியாய்-நூல்களில் சிறப்பித்து எழுதத் தகுந்த வெற்றிச் சிறப்புடைய இராமபிரானே! அழுது அழுங்குறும் - நெடுங்காலம் காத்திருந்தும் வாலியைக் காணுமையால் அழுது வருத்தமுற்ற, இவனை-இந்தச் சுக்கிரீவனை, (அங்கிருந்த வானரர்களாகிய நாங்கள் எல்லோரும்), அன்பினில் - அன்போடு, தொழுது - வணங்கி, இரந்து - குறையிரந்து, 'நின் தொழில் இது ஆதலால் - (பிறப்புரிமையால்) உனக்குள்ள தொழில் இஃது ஆகுமாதலின், அரசு கொள்க என-நீ இவ்வானர அரசுரிமையை ஏற்றுக்கொள்வாயாக' என்று கேட்டுக்கொள்ள, பரியும் நெஞ்சினன் - (தன் தமையன் வாலிபாற்கொண்ட அன்பினுல்) வருந்திய மனத்தனுன இச்சுக்கிரீவன், 'இது பழுது என்றனன் - இச்செயல் குற்றமுடைத்தாகும்' என்று மறுத்துக் கூறினன்.

எழுது வென்றியாய் என்பதைச் சுக்கிரீவனுக்கே இயைத்துப் பொருள் கூறினுரும் உளர்; இனி, எழுது வென்றி; கல் முதலியவற்றிற் பொறித்து எழுதிவைத்துப் போற்றத்தக்க வெற்றி மேம்பாடு; அதாவது மெய்க்கீர்த்தி; 'பழுதிது' என்று சுக்கிரீவன் கூறிய சுருக்கமான விடை சிலப்பதிகாரத்தில் கண்ணகி தேவந்திக்குப் 'பீடன்று' என்று மறுத்துக் கூறியது போன்றது; (சிலப். 9-கனுத்திற. 64).

பி - ம். 1. யவனை யன்பினுல்.
2. தொழுதி ருந்துநின், தொழிலி தாகலின்.
3. எழுது சீர்த்தியா; எழுக வென்றியா; யரசு செய்கெனப். (54)

132. என்று தானுமவ் வழியி ரும்பிலம்
சென்று முன்னவற் றேடு வேனவற்
கொன்று ளான்றனைக் கொலவெ ணுதெனில்
பொன்று வேனெனப் புகுதன் மேயினன்.

'என்று - எனக்கூறி, அ வழி இரும் பிலம் சென்று - வாலி சென்ற அவ்வழியே அந்தப் பெரிய பிலத்தினுட் சென்று, முன்னவன் தேடுவேன் - என் தமையனைத் தேடிப்பார்ப்பேன்; (அவன் இறந்துள்ளான் எனில்), அவன் கொன்று உளான்தனை-அவனைக் கொன்ற அம்மாயாவி

என்னும் அசுரனை, கொல ஒண்ணாது எனில்-என்னால் கொல்ல முடியாமற் போனால், பொன்றுவேன் - யானே என் உயிரை மாய்த்துக் கொள்வேன்', என - என்று உறுதி மொழிகூறி, தானும் புகுதல் மேயினான் - தானும் அப்பிலனுட் புகுந்து செல்லுதலை மேற்கொண்டான்.

முன் அவற் றேடுவேன்; முதலில் அவனைத் தேடிப்பார்ப்பேன்; எனவும் பொருள்கொள்ள இடமாகும். பொன்றுவேன் - மாயாவியுடன் போர்செய்து அதில் மடிவேன் எனவும் ஒன்றும்.

பி - ம். 1. என்று நானுமவ், அன்று தானுமவ்; வழிய ரும்பிலம்.
2. சென்றென் முன்னவற் றேடி நான்வரிற், றேடி நானவற்.
3. கொன்று னார்தமைக் கொல்வெ னன்றெனிற்.
4. புகுதன் மேவினான். (55)

133. தடுத்து வல்லவர் தணிவு செய்துநோய்
கெடுத்து மேலையோர் கிளத்து நீதியால்
அடுத்த காவலு மரசு மாணையில்
கொடுத்த துண்டிவன் கொண்ட தில்லையால்.

வல்லவர் - சொல்வன்மையிலும் அறிவிலும் மேம்பட்டவர்களான வானரப் பெரியோர், தடுத்து தணிவுசெய்து - சுக்கிரீவன் அப்பிலனுட் செல்வதைத் தடுத்து அவனைச் சமாதானப் படுத்தி, நோய் கெடுத்து - அவன் துயர நோயையும் போக்கி, மேலையோர் கிளத்து நீதியால் - முன் பெரியோர்கள் கூறியுள்ள அரச நீதி முறைப்படி, அடுத்த காவலும் அரசும் - இப்பொழுது வந்து சார்ந்துள்ளதான இந்த வானரர்களின் பாதுகாவலையும் அரசுரிமையையும், ஆணையில் - விதி அல்லது மரபின்படி, கொடுத்தது உண்டு - (அவர்கள்) இச்சுக்கிரீ வனிடம் கொடுத்தது உண்டு; இவன்கொண்டது இல்லை - ஆனால் இவன் அவற்றை ஏற்றுக்கொண்டது இல்லை. ஆல்; ஈற்றசை.

ஆணையில்; அப்பெரியோர்கள் இட்ட கட்டளைப்படி என்னலும் ஒன்றும். நோய் கெடுத்து; நோய்: வாலி இறந்தானென்றதால் ஏற்பட்ட துயரநோய். சில பிரதிகளில் உள்ளபடி, இவன் கொண்டனன் கொலாம், என்ற பாடங்கொண்டாலும், இவன் ஏற்றுக்கொண்டானோ? என்ற ஐயப் பொருளில் அரசியலை இவன் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதே உறுதியாவது நோக்கத்தக்கது. இக்கருத்து, பின் 139-ம் செய்யுளாலும் உறுதிப்படுவது காண்க. இதனால் சுக்கிரீவன் வாலி இறந்துவிட்டான் என்பதிலும், தானே அரசனாதற்கு

உரியவன் என்பதிலும் ஐயப்பா டுடையனுய் இருந்தான் என்பதும், பெரியோர்கள் இட்ட கட்டளையைப் புறக்கணிக்காமலும் நாடு அரசனில்லாத நிலையைத் தவிர்த்து அதற்கு ஓர் பாதுகாவல் அளிக்க எண்ணியும் இருந்த திண்டாட்ட நிலையில் வாலி திரும்பி வந்துவிட்டான் என்பதும் கருத்தாகக் கொண்டு, நம் ஆசிரியர் இந்நூற்போக்கை அமைத்துள்ளார் எனக் கொள்ளத்தக்கதாகும். சுக்கிரீவ பட்டாபிஷேகமும் பின் வாலி இறந்தபின் இராமபிரான் கட்டளைப்படி இளையபெருமான் இலக்குவனுல் நடத்திவைக்கப் பெற்றதன்றி, இப்பொழுது நடந்ததாக எந்நூலிலும் கூருமையையும் இங்குக் கருதற் பாலதாம். இதனுல், நம் ஆசிரியர் சுக்கிரீவனுடைய தன்னலமற்ற தன்மையும், வாலிபால் கொண்டுள்ள சகோதரப்பற்றும், அன்பும், அவன் அற நெறியில் நின்ற நிலையும் எத்துணைத் தூய்மையும் உயர்வுமுடையன என்பதை விளங்க வைத்தார் என்றே கொள்ளவேண்டும். இங்கு வான்மீகம், சுக்கிரீவன் முடி சூட்டிக்கொண்டு அரசாண்டதாகவே கூறும்.

பி-ம். 2, *எடுத்த வேலையோர்; ரிலையவி ஞவிலையர், ரிசைவி ஞவிலையர், சேன்வியா விலையர்; னைத்த நீதியின், னைக்கு நீதியின், னைர்வி ஞவிலையர்.*

3, *மரிக ளாணையும், மரிக ளாணையால், ரிளைய ராணையால், மரசு மாணையால்.*

4, *கொண்ட என்கொலாம்.* (56)

**134.** அன்ன நாளின்மா யாவி யப்பிலத்
தின்ன வாயிலு டேறு மென்னயாம்
பொன்னின் மால்வரைப் பொருப்பொ ழித்துவே
றுன்னு குன்றெலா முடன டுக்கினேம்.

'அன்ன நாளில் - அக்காலத்தில், யாம் - யாங்கள், மாயாவி - மாயாவி என்னும் அவ்வவுணன், அ பிலத்து இன்ன வாயில் ஊடு - அந்தப்பிலத்தின் இந்த வாயிலின் வழியே, ஏறும் என்ன - ஏறிவருவான்' என்று, பொன்னின் மால் வரை பொருப்பு ஒழித்து - பொன்னுல் அமைந்த பெரிய மேருமலையை விட்டுவிட்டு, வேறு உன்னு குன்று எலாம் - வேறு மனத்தாற் கருதிய மலைகள் அனைத்தையும், உடன் அடுக்கினேம் - ஒன்று சேரக்கொண்டுவந்து அப்பிலத் துவாரத்தில் அடுக்கி (வழியை) அடைத்து விட்டோம்.

பிலவாயிலை அடைத்தது சுக்கிரீவனே என்பதும், அதன்பிறகே அமைச்சர்கள் அவனை நிர்ப்பந்தத்தால் முடிசூட்டினர் என்பதும் வான் மீகத்தில் கண்ட செய்திகள்.

பி - ம்· 2. இன்ன வாயினூ, டெய்து மென்னயாம்.
3. பொதுவெொ ழித்து.
4. முடன டுக்கினேம், முடன முத்தினேம். (57)

135. சேம மவ்வழிச் செய்து செங்கதிர்க்
கோம கன்றனைக் கொண்டு வந்தியாம்
மேவு குன்றின்மேல் வைகும் வேலைவாய்
ஆவி யுண்டன னவனை யன்னவன்.

' யாம் - யாங்கள், அ வழி - அப் பிலவாயினிடத்து, சேமம் செய்து - (குன்றுகள் கொண்டு அடைத்துப்) பாதுகாவலைச் செய்து, செம் கதிர் கோமகன் தனை - சிவந்த கிரணங்களையுடைய சூரிய குமாரனான சுக்கிரீவனை, கொண்டு வந்து - அழைத்துக்கொண்டு வந்து, மேவு குன்றின் மேல் வைகும் வேலை வாய் - எங்கள் இருப்பிடமாக அமைந்த கிட்கிந்தை மலையின்மீது வந்து தங்கி வருங் காலத்தில், அவனை - அந்த மாயாவி என்னும் அசுரனை, அன்னவன் - அந்த வாலி, ஆவி உண்டனன் - (அப்பிலத்தினுள்) உயிரை அழித்தனன்.

சேமம் - பாதுகாவல்; க்ஷேமம் என்பதன் திரிபு. வந்தியாம் குற்றியலுகரம் யகரம் வர இகரமாய்த் திரிந்தது. உயிரை உண்டனன் உண்ணப் பெருததை உண்டதாகக் கூறுவது இலக்கணை.

பி - ம்· 1. சேம மவ்வழிச்; செய்து வெங்கதிர்க்.
2. கொண்டு வந்துயர்.
3. குன்றின்வாய் வைகும் வேலையின்; மேலெய்தும் வேலையாய்.
4. னவுணன் மானவே. (58)

136. ஒளித்த வன்னுயிர்க் கள்ளை யுண்டுளம்
களித்த வாலியுங் கடிதி னெய்தினன்
விளித்து நின்றுவே றுரைபெ ருனிருந்
தளித்த வாறுநன் றிளவ லாரென.

'ஒளித்தவன் - அப் பிலத்தினுள் ஒளிந்துகொண்டவனான மாயாவியின், உயிர் கள்ளை உண்டு - உயிராகிய மதுவை அருந்தி, உளம் களித்த வாலியும் - மனக் களிப்பினற் செருக்குற்ற வாலியும், கடிதின்

எய்தினுன் - விரைவாக வந்தடைந்து, விளித்து நின்று-தன் தம்பியாகிய சுக்கிரீவனைக் கூவி அழைத்து நின்று, வேறு உரை பெருன் - மறு மொழி ஒன்றும் பெருதவனுகி, 'இளவலார் இருந்து அளித்த ஆறு - என் தம்பியார் இங்குக் காவலாக இருந்து அன்புடன் சேவை புரிந்த விதம், நன்று எனு - நன்ருய் இருக்கிறது!' என்று சொல்லி.

இச்செய்யுள் அடுத்த செய்யுளோடு குளகமாய் இயைந்து வினை முடிவு கொள்ளும். கள்ளை யுண்டுளங்களித்த வாலி என்றது - சுக்கிரீவனுடைய உண்மை மனநிலை அறியப்பெருத மயக்க நிலையை விளக்குவதாகும். இஃது, உயிரைக் கள் என்ற உருவகத்தை அங்கமாகக்கொண்ட தற்குறிப்பேற்ற அணி என்னலாம். அளித்தவாறு நன்று: இஃது எதிர்மறையில் இகழ்ச்சிப் பொருளை யுணர்த்தி நின்ற, பிற குறிப்பு ஆகும். இளவலார்: ஆர், இகழ்ச்சியை யுணர்த்தி நின்ற பன்மை விகுதி. இளவல்: இளமையென்னும் பண்புபடியாகப் பிறந்த பெயர்ச் சொல்; இங்குத் தம்பி என்னும் பொருளது.

பி - ம். 1. *வின்னுயிர்க் கள்ளி னுயிர் தன்னை.* 2. *கடிதி னெய்திமேல்.* 3. *பெருன்விரைக், பெருன்விருக்.* 4. *நிளவ லானெனு.* (59)

137. வால்வி சைத்துவான் வழிநி மிர்ந்துறக்
கால்பெ யர்த்தவன் கடிது தைத்தலும்
நீல்நி றத்தவா னெடுமு கட்டவும்
வேலை புக்கவும் பெரிய வெற்பெலாம்.

அவன் - அந்த வாலி, வான் வழி நிமிர்ந்து உற - ஆகாயத்திடமாக நிமிர்ந்து விளங்க, வால் விசைத்து - தன் வாலை வேகமாகத் தூக்கி, கால் பெயர்த்து - தன் காலை எடுத்து, கடிது உதைத்தலும் - வேகமாய் உதைத்த அளவில், பெரிய வெற்பு எலாம் - (நாங்கள் கொணர்ந்து பில வாயிலை அடைத்து வைத்திருந்த) பெரிய மலைகள் யாவும், நீல் நிறத்த - நீல நிறத்தையுடைய, வான் நெடு முகட்டவும் - வானத்தின் உயர்ந்து பரவிய உச்சியை அடைந்தனவாகவும், வேலை புக்கவும் - கடல்களிற் போய்ப் புகுந்தனவாகவும் (ஆயின.)

ஆயின என்ற வினை வருவித்துக் கொள்ளப்பட்டது. நீல் நிறத்து என்பதை வேலைக்கும் கூட்டிப் பொருள்கொள்ளலாம். நீல்: நீலம் என் பதன் கடைக்குறை: 'நீனிறப் பெருங்கரி' (437) என்றமை போல. நீனிறம் எனப்பாலது இங்கு எதுகை நோக்கித் திரியாது இயல்பாய் நின்றது. விசையுடன் ஒன்றைத் தாக்கும்பொழுதோ ஒன்றின்மேற் பாயும் பொழுதோ விலங்குகள் தம் வாலை வேகமாக விறைப்புடன்

நிமிர்த்திக்கொள்ளும் இயல்பு இங்குக் கூறப்பெற்றது. முகட்ட, புக்க என்பன பலவின்பால் குறிப்பு வினையாலணையும் பெயர்கள்; முகடு - மேற் கூரையின் உச்சி.

பா - ம். 1. யான்யளி நிமிர்த்தென.
2. கால்வி சைத்தயள், கால்பெ யர்த்தலும், காலெ டுத்தவன், கடிதி னெற்றலும்.
3. நீல்கி றத்தயான், நீல்கி றத்தவின். (60)

138. ஏறி னனவ னெவரு மஞ்சுறச்
சீறி னனெடுஞ் சிகர மெய்தினன்
வேறி லாதவன் புதவு மெய்ம்மையாம்
ஆறி னனும்வந் தடிவ ணங்கினன்.

'அவன் - அந்த வாலி, எவரும் அஞ்சுற - கண்டோர் யாவரும் அச்சமடையும்படி, ஏறினன் - அப் பிலத்தினின்றும் வெளியேறினவனாய், சீறினன் - கோபத்தாற் சீறிக்கொண்டு, நெடும் சிகரம் எய்தினன் - நீண்டுயர்ந்த மலைச்சிகரத்தை அடைந்தான்; வேறு இலாத - மாறுபாடு இல்லாத, அன்பு உதவு - தன் அன்பினையே காணிக்கையாகக்கொண்டு அளிக்கும், மெய்ம்மை ஆம் ஆறினனும் - சத்திய நெறியில் நடப்பவனான சுக்கிரீவனும், வந்து - அவ் வாலியின் முன் வந்து, அடி வணங்கினன் - அவன் பாதங்களில் வணங்கினன்.

வேறிலாத அன்பு - மனம் மாறுபாடில்லாத அன்பு; உண்மை அன்புக்கு அடைக்குந் தாழ் இன்மையாதலின், வேறிலாத அன்பு கொண்டவன் சுக்கிரீவன் எனும் உண்மையை இங்குப் புலப்படுத்தினர் நம் ஆசிரியர். சுக்கிரீவன் மாறுபாடு அற்ற தூய மனம் உடையவன்: அதாவது, தான் வேறு, வாலி வேறு என்றிலாத ஒருமித்த மனமுடையவன் எனலும் ஆம்.

பா - ம். 1. னெங்கு மஞ்சுற; னிமிர்ந் தெவரு மஞ்சுற.
2. சிகர மேறினன்.
3. புதல்வன் மெய்ம்மையாம், புதல்வன் மெய்ம்மலை, புதல்வன் வெம்மையால், புகல மெய்மையால், புகவு மெய்ம்மையால், புதவு மெய்ம்மையால்.
4. தடியி றைஞ்சினன். (61)

139. வணங்கி யண்ணனின் வரவி லாமையால்
உணங்கி யுன்வழிப் படர வுன்னுவேற்
கிணங்க ரின்மையா லிறைவ வுன்னுடைக்
கணங்கள் காவலுன் கடன்மை யென்றனர்.

'வணங்கி-(சுக்கிரீவன் வாலியை அவ்வாறு) வணங்கி, 'அண்ணல்-பெரியோய்! நின் வரவு இலாமையால் - (நெடுநாட்களாய் யான் காத்திருந்தும்) நீ வந்து சேராமையால், உணங்கி - அதனுல் நான் வாடி, உன் வழி படர உன்னுவேற்கு - நீ சென்ற இடம் நாடிச் செல்லக்கருதிய எனக்கு, இறைவ - அரசனே! உன்னுடை கணங்கள் - உன்னுடைய இனத்தவரான வாநரக் கூட்டத்தினர், இணங்கர் இன்மையால் - என் கருத்துக்குச் சம்மதிக்காமையால், காவல் உன் கடன்மை என்றனர் - இனி எங்களை ஆட்சி புரிந்து பாதுகாப்பது உன் கட்மையாகும்' என்று கூறினர்.

இணங்கர்: இணங்கு என்னும் குற்றியலுகரம் அர் என்னும் ஈறு பெற்றுப் போலியாயிற்று; இணங்கலின்மையால் என்ற பாடமும் ஏற்கும். உன் வழிப் படர்தல்: நீ சென்ற இடம் தேடிச் செல்லுதல் என்றலோடு, நீ இறந்ததுபோல யானும் இறப்பதை நாடுதல் என்ற பொருளும் அமையக் கிடக்கும்; வாலி இறந்துபோனுன் என்று சுக்கிரீவன் துணிந்தமை (132). இறைவ; என்ற சொல் சுக்கிரீவனை நோக்கி வாநரக் கணங்கள் விளித்துக் கூறியதாகவும் கொள்ளலாம்.

பி-ம். 1. யண்ணநின்.
2. உணங்கி யான்வழிப்; படர வுன்னினேன், படர வுன்னினேற்.
3. கிணங்க ரில்லையா; லிறைவ நம்முடைக்.
4. கடனி தென்றனர், கடமை யென்றலும். (62)

140. ஆணை யஞ்சியிவ் வரசை யெய்திவாழ்
நாணி லாதநீ நவையுள் வைகினுய்
பூணு லாவுதோ ளினைபொ ருயென்க்
கோணி ஞனெடுங் கொடுமை கூறினன்.

'பூண் உலாவு தோளினை - அணிகள் அசைந்து விளங்கும் தோள்களை யுடையவனே! பொருய் என - பொறுத்தருள்வாயாக' என்று சுக்கிரீவன் குறையிரந்து வேண்டவும், 'ஆணை அஞ்சி - வாநர கணங்

களின் கட்டளைக்குப் பயந்து, இவ் அரசை எய்தி வாழ் - இந்த எனக்குரிய அரசினை ஏற்று வாழ்ந்துவந்துள்ள, நாண் இலாத நீ நவையுள் வைகினாய் - வெட்கமில்லாத நீ குற்றத்திற்குள்ளாயினை' (என்று கூறி), கோணினான் நெடுங் கொடுமை கூறினான் - மாறுபட்டவனான வாலி பெரிய கடுமையான சொற்களைச் சொன்னான்.

'வானர கணங்கள் ' உன் கடன்மை ' என்னவும் நான் உடன்படாதிருந்தும்; அவ்வாறிருக்கவும் தானே விழைந்து அரசினைக் கைக்கொண்டதாகக் குற்றம் சாட்டிய தமையனிடம் தன்னை மன்னிக்குமாறு வேண்டிய சுக்கிரீவனைக் கடுஞ்சொற்கள் கூறி நிந்தித்தான் வாலி, என்று அநுமன் கூறினன் என்க. ஆணை, முன் 133ல் கூறியது. இனி நாணிலாத வென்நவையை நல்குவாய் எனப் பாடம்கொள்வாரும் உளர்.

பி - ம். 1. வரசை யெய்தியே, வரசை யெய்தியான்.

2. நாணி லாத நரன் நவையை நாடினேன், நாணி லேனென, நாணி லாதவென் நவையை நல்குவாம்.

3. தோளிறை.

4. கொடுமை கூடினான். (63)

141. அடல்க டந்ததோ ளவனை யஞ்சிவெம்
குடல்க லங்கியெங் குலமொ டுங்கமுன்
கடல்க டைந்தவக் கரத லங்களால்
உடல்க டைந்தன னிவனு லைந்தனன்.

'அடல் கடந்த தோள் அவனை அஞ்சி - வலிமையின் அளவின் எல்லை கடந்த தோள்களையுடைய அவ்வாலிக்குப் பயந்து, எம் குலம் - எங்கள் வானரக்கூட்டம், வெம் குடல் கலங்கி - (அச்சத்தால்) வெம்மை மேலிட்ட தம் குடல்கள் கலக்கமுற்று, ஒடுங்க - ஒடுங்கி இருக்க, முன் கடல் கடைந்த - முன் திருப்பாற் கடலைக் கடைந்த, அ கரதலங்களால்-அந்தத் தன் (வலிய) கைகளால், உடல் கடைந்தனன்-சுக்கிரீவன் உடலைக் குத்திக்கடைவது போலக் கலக்கி வருத்தினான்; இவன் உலைந்தனன் - அதனால் இச்சுக்கிரீவன் (பெரிதும்) வருந்தினான்.

அடல் கடந்ததோள் - பகைவர்கள் தம் வலிமையைப் போரில் கடந்து வெற்றி பெற்ற தோள் என்னலும் ஆம், அவனை அஞ்சி: இது வேற்றுமை மயக்கம், வெம் குடல்-அச்சத்தால் வெம்மை யெய்திய

குடல்; வாலி கடல் கடைந்தது; 115 உரை காண்க. இச்செய்யுளில் 'எதுகை ஓசை நயம் நோக்கி - அடல் கடந்த, கடல் கடைந்த, உடல் கடைந்தனன் என லகர ஒற்று இயல்பாய் நின்றன: எதுகை லகரம் சிறப்பு' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. எவுண ராதியோர். 2. கல்லியே துயர்வு கொள்ளமுன். 3. கடல்க டைந்தியெங். 4. உடல்க ளைந்தனன். (64)

இனி, சில பிரதிகளில் இதன் பின் அடியிற் காணும் மூன்று பாடல்கள் அதிகமாக உள்ளன.

1. இவனு ளைந்துளைந் தெழுக டற்புறத்
தவனி யுங்கடந் தெயில டைந்தனன்
கவன மொன்றிலான் கால்க டாயென
அவனி வேலையே ழரியின் வாவினன்.

2. என்று கான்மக னியம்ப வீசனும்
நன்று நன்றெனு நனிதொ டர்ந்துபின்
சென்று வாலிமுன் சென்ற செம்மருன்
அன்று வாவுதற் கறிந்த னன்கொலாம்.

3. இனைய வாவியந் திளவ றன்னெடும்
வனையும் வார்கழற் கருணை வள்ளல்பின்
பினைய வீரர்செய் தமையி யம்பெனப்
புனையும் வாகையான் புகறன் மேயினன்.

142. நக்க ரக்கடற் புறத்து நண்ணுநாள்
செக்கர் மெய்த்தனிச் சோதி சேர்கலாச்
சக்க ரப்பொருப் பின்ற லைக்குமப்
பக்க முற்றவற் கடிது பற்றினன்.

நக்கரம் - முதலைகளையுடைய, கடல் புறத்து - ஏழு கடல்களுக்கும் அப்பால், நண்ணும் நாள் - சுக்கிரீவன் ஓடியிருந்தபோது, செக்கர் மெய் தனி சோதி - சிவந்த திருமேனியையுடைய ஒப்பற்ற ஒளி வடிவான சூரியன், சேர்கலா - சேராத, சக்கரம் பொருப்பின் தலைக்கும் - சக்கரவாள கிரியின் இடத்திற்கும், அ பக்கம் உற்று - அப்புறத்தே போய், அவன் கடிது பற்றினன் - அங்கு ஒளிந்திருந்த அச்சுக்கிரீவனை அவ் வாலி விரைவில் பிடித்துக்கொண்டான்.

நக்கரக் கடல்; மற்றும் கடலில் வாழும் பிராணிகளையும் உபலக்ஷணத்தாற் கொள்க, சக்கரப் பொருப்பு - ஏழு கடல்களுக்கும் அப்பால் உலக எல்லையின் முடிவில் உலகைச் சூழ்ந்து சக்கரம்போல வளைந்து விளங்கும் மலைத்தொடர், இது லோகாலோக பர்வதம் எனவும் வழங்கப் பெறும். இம்மலைத் தொடர்க்கும் அப்புறத்தே சூரியன் செல்லமாட்டான். அங்கு ஒரே இருண்மயமாய் இருக்கும் ஆதலின், வாலிக்குப் பயந்து சுக்கிரீவன் அவ்விடத்திற்குப் போய் ஒளிந்துகொண்டான்; ஆயினும், வாலி அவ்விடத்திலுந் தொடர்ந்து சென்று அவனைப் பிடித்துக்கொண்டான் என்பது இச்செய்யுளால் விளங்குவது காண்க.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 2. *சேர்கலால், சேர்தலால், சேர்கிலாச்.* (65)

143. பற்றி யஞ்சலன் பழியை வெஞ்சினம்
முற்றி நின்றதன் முரண்வ லிக்கையால்
எற்று வானெடுத் தெழுத லும்பிழைத்
தற்ற மொன்றுபெற் றிவன கன்றனன்.

பற்றி - அவ்வாறு வாலி சுக்கிரீவனை அங்குச் சென்று பற்றி, பழியை அஞ்சலன் - தனக்கு ஏற்படும் நிந்தனைக்கு அஞ்சாதவனாகி, வெம் சினம் முற்றி நின்ற - கொடிய கோபம் முதிர்ந்து நின்ற, தன் முரண் வலி கையால் - தன்னுடைய மிக்க வலிய கரங்களால், எற்றுவான் எடுத்து எழுதலும் - இச்சுக்கிரீவனைத் தாக்கி எறிந்து கொல்ல எழுந்த அளவில், இவன் - இச்சுக்கிரீவன், அற்றம் ஒன்று பெற்று - அவன் அயர்ந்திருக்கும் சந்தர்ப்பம் ஒன்று அடையப் பெற்று, பிழைத்து அகன்றனன் - அவனை விட்டுத் தப்பி ஓடி வந்து விட்டான்.

பழி - பாவமும் ஆம். பிழைத்தல் - (தவறிப்போதல்) - முரண்வலி; ஒரு பொருட் பன்மொழி; மிக்க வலிமை, எற்றுதல் - எறிந்து மோதுதல். கொண்கன் முயக்கற்றம் பரர்க்கும் பசப்பு. அற்றம் - மெலிந்த சமயம்; (குறள், 1186 உரை.)

பி - ம். 1. *அஞ்சிலன்; பழியின் வெஞ்சினம், பழிய வெஞ்சினம்.*

2. *நின்றுதன்; முரணவ லக்கையால்; முற்றி மிக்கதன்.*

3. *தெறிதலும்.* 4. *மியவ னடைந்தனன்.* (66)

144. எந்தை மற்றவ னெயிற துக்குமேல்
அந்த கற்குமோ ரரண மில்லையால்
இந்த வெற்பின்வந் திவனி ருந்தனன்
உந்த வுற்றதோர் சாப முண்மையால்.

(அநுமன் இராமபிரானை மேலும் நோக்கி), எந்தை - எங்கள் தலைவரே ! அவன் - அவ் வாலி, எயிறு அதுக்குமேல் - தன் பற்களை அழுத்திக் கோபிப்பனேல், அந்தகற்கும் - அதுகண்ட யமனுக்கும், ஓர் அரணம் இல்லையால் - ஒரு தற்காப்பிடம் இல்லை ஆதலின், உந்த உற்றது ஓர் சாபம் உண்மையால் - மதங்க முனிவர் சினந்து தூண்ட வந்தடைந்த சாபம் ஒன்று உள்ளதாதலின், இவன் - சுக்கிரீவன், இந்த வெற்பின் வந்து - இந்த மலையிடம் வந்து, இருந்தனன் - தங்கி இருப்பானாயினன். மற்று - அசை.

அந்தகன் - அழிவைச் செய்பவன் ; யமன் ; அந்தகற்கும் : உம்மை உயர்வு சிறப்பினது. அரணம் - பாதுகாவல், ரக்ஷையும் ஆம். வாலி, துந்துபி என்னும் அவுணனுடன் பொருது, அவனைக்கொன்று, அவன் உடலைத் தன் காலால் உந்தி வீச, அது ருசியமூக பருவதத்தைச் சார்ந்த மதங்க முனிவர் ஆச்சிரமத்தில் விழுந்து, அவ்விடத்தை அவன் குருதியாலும் நிணத்தாலும் அசுசிப்படுத்தியது. அதனால் வெகுண்ட அம்முனிவர், அது செய்த வாலி அம் மலையில் அணுகினால் அவன் தலை பல துகள்களாக வெடித்து அழிவுறுமாறு சாபம் இட்டனர் என்பது துந்துபிப் படலத்தால் அறியலாம் ; இம் மதங்க முனிவர் வரலாறு ஆரணிய காண்டம் சவரி பிறப்பு நீங்கு படலத்து இந் நூல்நிலையப் பதிப்பின் உரைப்பகுதிகளால் விளக்கமுறுவது காண்க. எயிறு அதுக்குதல் - கோபக் குறியையுணர்த்தும் மெய்ப்பாடு ; ஆரணிய. 411. சுந்தர. 812. பல பிரதிகளில் இச் செய்யுளின் 3, 4 அடிகள் இடம் மாறியுள்ளன.

பி - ம். 1. *மற்றை வாளெயி றதுக்கி மேல்.*
2. *லரணு மில்லையால், லரண மின்மையால்.*
4. *முந்த வுற்றதோர், முந்தை யுற்றதோர்; சாப வுண்மையால்.* (67)

145. உருமை யென்றிவற் குரிய தாரமாம்
அரும ருந்தையு மவன்வி ரும்பினன்
இருமை யுந்துறந் திவனி ருந்தனன்
கரும மிங்கிதெங் கடவு ளென்றனன்.

எம் கடவுள் - எங்கள் தெய்வமே ! இவற்கு - இந்தச் சுக்கிரீவனுக்கு, உருமை என்று - ருமை என்று அழைக்கப் பெறும், உரிய

தாரம் ஆம் அரு மருந்தையும் - உரிமை மனைவியான அரிய தேவாமிர்தம் போன்றவளையும், அவன் விரும்பினான் - அவ் வாலி விரும்பி அபகரித்துக் கொண்டான்; இவன் - இந்தச் சுக்கிரீ வனே, இருமையும் துறந்து - அரசியற் செல்வம், மனைவியாகிய இல் லறச் செல்வம் இரண்டையும் இழந்து, இருந்தனன் - இருந்தான்; இங்கு கருமம் இது - இங்கு நிகழ்ந்த காரியம் இதுவாகும், என்றனன் - என்று அநுமன் சுக்கிரீவன் வரலாறுகளைக் கூறி முடித்தான்.

அருமருந்து - அரிய தேவாமிருதம் போன்ற சிறப்பு அமைந்தவள். இஃது உவமை ஆகுபெயர். அருமருந்தையும் : உம்மை, இழக்கத்தகாத சிறப்புடைமையை உணர்த்தும் உயர்வுசிறப் பும்மையாகும். விரும்பினான்: வலிதிற் பற்றிக்கொண்ட கொடுஞ்செயலை இடக்கரடக்கரில் மறைத்துக் கூறியது. இருமை - இரண்டு : பண்புப்பெயர் விகுதி. இருமை - இம்மை மறுமையும் ஆகலாம் ; 'இருமை வகை தெரிந்து' (குறள் : 23. பரிமேல். உரை). உருமை - சுக்கிரீவன் மனைவி ; வாலி சுக்கிரீவர்களுக்கு மாமனும், தேவ குருவாகிய பிரகஸ்பதியின் புதல்வனு மான தாரன் என்னும் வானர வீரனுடைய மகள் ; அமுதம் போன்ற சொல்லினள் (691). வாலி, சுக்கிரீவன் மனைவியை அபகரித்தது ; 330, 332 ; சுந்தர. 1128.

113-ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள் முடிய ஒரு தொடர். இதனுடன் இராமபிரான் சுக்கிரீவனுக்கு 'நல்விருந்துமாயின' காலை, அவனை நோக்கி, 'பொருந்து நன்மனைக்குரிய பூவையைப் பிரிந்துளாய் கொலோ நீயும் பின்' என்று (112) வினவியதற்கு விடையாய் அநுமன் கூறிய வரலாறு முடிந்தது. இவ் வரலாற்றினை இராமபிரான் அறி தற்கு நம் ஆசிரியர் அமைத்துக்கொண்ட காலமும் இடமும், அவ் வர லாறு கூறுதற்கு ஏற்ற பாத்திரமாக அநுமனைத் தேர்ந்ததும், அவன் அதனை நிரல் படுத்திய திறமும், இங்கு நோக்கத் தக்கன.

பி - ம். 2. மவன்வி ரும்பினன். 4. மிங்கிதே. (68)

வேறு

அவ்வரலாறு கேட்ட இராமபிரான் வாலிமீது சினங்கொண்டமை.

146. பொய்யி லாதவன் வரன்முறை யம்மொழி புகல
ஐய னுயிரம் பெயருடை யமரர்க்கு மமரன்
வைய நுங்கிய வாயிதழ் துடித்தது மலர்க்கண்
செய்ய தாமரை யாம்பலம் போதெனத் திகழ்ந்த.

பொய் இலாதவன் - பொய் என்பது இல்லாத (அதாவது உண்மையே உரைப்பவனுன) அநுமன், வரன் முறை - கூறவேண்டிய முறைப்படி, அ மொழி புகல - (சுக்கிரீவனைப் பற்றிய) அவ்வரலாறுகளைச் சொல்ல, ஆயிரம் பெயருடை ஐயன் - ஆயிரம் திருநாமங்களையுடைய தலைவனும், அமரர்க்கும் அமரன் - தேவர்க்கும் தேவனுமான இராமபிரானுடைய, வையம் நுங்கிய - உலகமனைத்தையும் பிரளய காலத்தில் விழுங்கிய, வாய் இதழ் - வாயில் உள்ள உதடுகள், துடித்தது - கோபத்தால் துடிப்புற்றன ; கண் செய்ய தாமரை மலர் - அவனுடைய கண்களாகிய சிவந்த தாமரை மலர்கள், ஆம்பல் அம் போது என - செவ்வல்லி மலர்களைப்போல, திகழ்ந்த - விளங்கின.

அநுமன் கூறிய வாலி மீதுள்ள குற்றச் சாட்டைக் கேட்ட இராமபிரானிடம் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் இச் செய்யுளில் அமைந்துள்ளமை காண்க. அநுமன் பொய்யிலாதவன்: மெய்ம்மை பூண்டான் - ஸத்தியவிரத மேற்கொண்டவன் ; சுந்தர. 62 ; பொய்யிலாதவன் வரன்முறை என இயைத்து அத்தொடரைச் சுக்கிரீவனுக்கு ஏற்றலும் அமையும். இராமபிரானை ஆயிரம் பெயருடையவன் என்பது; 'ஆயிரம் நாமச்சிங்கம்' என்றது போல; (பால. கடிமணப். 100). இராமபிரானை அமரர்க்கும் அமரனென்றது ; 'தேவதேவனைத் தென்னிலங்கை யெரியெழச் செற்றவில்லியை' (திருவாய்மொழி. 3. 6 : 2) ; பூதத்தாழ்வார் இரண்டாந் திருவந்தாதி : 28 ; சுந்தர. 1117 ; உயுத்த. அங்கதன் தூது : 21. இராமபிரான் திருமாலின் திருவவதாரமாதலின், அத் திருமால் வையம் நுங்கியதை இராமபிரான் மேல் இங்கு ஏற்றிக்கூறியது ஆகும் ; திருமால் வையம் நுங்கியது ; கம்ப. பால. வேள்விப். : 26 ; பொய்கை யாழ்வார். முதற்றிருவந்தாதி 10 ; பெரிய திருமொழி. 7. 7 : 1. கண் சிவத்தல் : வெகுளியின் அறிகுறி : ' இங்கு இராமபிரானை ' ஆயிரம் பெயருடை யமரர்க்குமமரன் வையம் நுங்கியவன் ' என்றதும், அவன் வாயிதழ் துடித்தது ' என்றதும் அவன் ஆற்றலின் அளவற்ற தன்மையையும், அவன் வெகுளியின் வேகத்தையும் ஆசிரியர் தெரிவித்தபடி என்க. செந்தாமரையினும் செவ்வல்லி சிவந்ததாதலின், அது கோப மிகுதிக்கு உவமையாயிற்று.

பி - ம். 1. வாய்முறை ; விம்மொழி.
2. ஆயிரம் பெயரினன், ஆயிரம் பெரும்பெய ரமரர்க்கு மமலன் ; யமலர்க்கும் மமலன் ; ஆயிரம் பேருடை.
3. யிதழ்து டித்திட மலர்க்கட்.
4. தாமரை சிற்றத்தின் நெருப்பெனச் சிவந்த ; போதெனச் சிவந்த. (69)

இதன்பின் சில பிரதிகளில் அடியிற்காணும் ஒரு பாடல் காணப் படுகின்றது. அது பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லை.

திறத்து மாமறை யயனொடைம் முகன்பிறர் தேடிப்
புறத்த கத்துண ரரியதன் பொலனடிக் கமலம்
உறச்சி வப்பவித் தரைமிசை யுறலற மாக்கல்
மறத்தை வீட்டுத லன்றியே பிறிதுமற் றுண்டோ.

**147.** ஈர நீங்கிய சிற்றவை சொற்றன ளென்ன
வார நீங்கலா விளவற்கு மன்னர சுரிமைப்
பார மீந்தவன் பரிவில னொருவன்ற னிளையோன்
தாரம் வெளவின னென்றசொற் றரிக்குமா றுளதோ.

ஈரம் நீங்கிய - அன்பு என்னும் நீர்ப்பசை அற்ற, சிற்றவை - தன் சிறிய தாய் ஆகிய கைகேசி, சொற்றனள் என்ன - சொன்னாள் என்று, வாரம் நீங்கலா இளவற்கு - அன்பு நீங்காத தன் தம்பியாகிய பரதாழ்வானுக்கு, மன் அரசு உரிமை பாரம்-தனக்குரிய நிலைபெற்ற அரசியல் செல்வத்தை, ஈந்தவன்-அளித்தவனான ஸ்ரீராமபிரான், பரிவு இலன் ஒருவன்-அன்பு இல்லாத ஒருவன், தன் இளையோன் தாரம் வெளவினன் - தன் தம்பியின் வாழ்க்கைத் துணையான மனைவியை அபகரித்துக் கொண்டான், என்ற சொல் - என்று சொல்லப்பட்ட வார்த்தையை, தரிக்கும் ஆறு உளதோ - பொறுத்திருக்கும்படியான முறை உள்ளதாகுமோ? (ஆகாது என்பதாம்).

ஈரம் நீங்கிய சிற்றவை: அதுகாறும் கொண்டிருந்த அன்பாம் பற்று நீங்கி வெம்மைக் குணங்கொண்ட சிற்றவ்வையான கைகேசி என்பதாம்; இஃது ஆசிரியர் கூற்று. ஈரம் நீங்கியது; 'தாயென நினைவான் முன்னே கூற்றெனத் தமியள் வந்தாள்' எனவும், 'இரும்பினாலியைந்த நெஞ்சிற் கொன்றுறழ் கூற்றமென்னும் பெயரினிற் கொடுமை பூண்டாள்' (அயோத். கைகேசி சூழ்வினைப்.: 103, 105) எனவும் வரும் பாடற்பகுதிகளால் விளக்கமுறுவது காண்க. இச் செய்யுளால் தம்பிபால் அன்பிலாது, அவன் தாரத்தையும் அபகரித்த வாலியின் கொடிய செயலே இராமபிரான் வாலிபாற் கொண்ட பகைமைக்குக் காரணமாய் முன்னின்றது என்பதாம். பின், வாலியின் வசைப் பொழிவுக் கெல்லாம் இதுவே விடையாகவும் கொள்க. இது கவிக் கூற்று.

பி-ம். 2. ஆரம் வீங்குதோட் டம்பிக்குத்.
3. பரிவின னொருவன்முன் னிளையோன்; னொருவன்முன் றமியோன்; னொருவனென் றிளையோன்.

ஒரு சுவடியில் இதன் அடியிற் காணும் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

நீல கண்டனும் நேமியுங் குலிசனும் மலரின்
மேலு ளானும்வந் தவனுயிர்க் குதவினும் வீட்டி
ஆலு முன்னர சுரிமையோ டளிக்குவெ னனலோன்
சாலு மின்றென துரைக்கருஞ் சான்றெனச் சமைந்தான். (70)

இராமபிரான், 'வாலியைக் கொல்வேன்; அவன் உறைவிடம் காட்டுக' என்றமை.

148. உலக மேழினோ டேழும்வந் தவனுயிர்க் குதவி
விலகு மென்னினும் வில்லிடை வாளியின் வீட்டித்
தலைமை யோடுநின் றாரமு முனக்கின்று தருவென்
புலமை யோயவ னுறைவிடங் காட்டெனப் புகன்றான்.

'உலகம் ஏழின் ஓடு ஏழும் - பதினான்கு உலகில் உள்ளோர் யாவரும், வந்து - திரண்டு வந்து, அவன் உயிர்க்கு உதவி - அந்த வாலியின் உயிரைக் காக்க உதவிபுரிந்து, விலகும் என்னினும் - என்னின் மாறுபட்டு எதிர்நின்று போர்புரிவா ராயினும், வில் இடை - என் வில்லிடம் (பூட்டிவிடப்பட்ட), வாளியின் - அம்பினால், வீட்டி - அவ்வனை வரையும் கொன்று, தலைமையோடு-அவ் வானரங்களுக்குத் தலைவனாகும் அரசாட்சி யுரிமையோடு, நின் தாரமும் - உன் மனைவியையும், இன்று - இப்பொழுதே, உனக்குத் தருவென் - உனக்கு மீட்டுத் தருவேன்; புலமையோய் - அறிவுடையோனே! அவன் உறைவு இடம் காட்டு - அவ் வாலி தங்கியிருக்கும் இடத்தை எனக்குக் காட்டுவாயாக!' என புகன்றான் - என்று சுக்கிரீவனிடம் இராமபிரான் (உறுதி) கூறி யருளினான்.

இச்செய்யுள், இராமபிரான்.

சூர றுத்த வனுஞ்சுடர் நேமியும்
ஊர றுத்த வொருவனு மோம்பினும்
ஆர றத்தினோ டன்றிநின் றாரவர்
வேர றுப்பென் வெருவன்மி னீரென்றான்;
(ஆரணிய : 139)

என்று, தண்டகாரணிய முனிவரிடம் மொழிந்த சபதத்தை நினைவூட்டுகின்றது.

பி - ம். 1. னுயிர்க்குதயா, னுயிர்க்குதவ. 2. வில்லுடை. 3. முன்றாரமும்; தருவேன். 4. காட்டென்று. (71)

சுக்கிரீவன் ஒரு விண்ணப்பம் கூறுதல்

149. எழுந்து பேருவ கைப்பெருந் திரைக்கட லிரைப்ப
அழுந்து துன்பத்தின் கரைகண்ட கடகளி றனையான்
விழுந்த தேயினி வாலிதன் வலியென விரும்பா
மொழிந்த வீரற்கியா மெண்ணுவ துண்டென மொழிந்தான்.

உவகை பெரும் திரை கடல் இரைப்ப - மகிழ்ச்சி என்னும் பெரிய அலைகளோடு கூடிய ஒரு கடல் மேலெழுந்து ஒலிக்க, அழுந்து துன்பத்தின் கரைகண்ட - ஆழ்ந்த துன்பத்தின் கரையை அடைந்த, கடம் களிறு அனையான் - மதத்தாற் செருக்குற்ற ஆண் யானை போன்ற சுக்கிரீவன், 'இனி வாலி தன் வலி விழுந்ததே என - இனிமேல் வாலியின் வலிமை அழிந்தொழிந்ததே யாகும்' என்று, விரும்பா - விருப்பமுற்றவனாகி, எழுந்து - தன் இருப்பிடம் விட்டு (உவகையுடன்) எழுந்து, மொழிந்த வீரற்கு - தனக்கு உறுதி கூறிய இரகு வீரனான இராமபிரானுக்கு, யாம் எண்ணுவது உண்டு என - யாங்கள் ஆலோசிப்பதான காரியம் ஒன்று உள்ளது என்று, மொழிந்தான் - விண்ணப்பஞ் செய்து கொண்டான்.

விழுந்ததே ; ஏகாரம் வியப்பினால் எழுந்த உணர்ச்சியைக் குறிப்பதும் ஆகும். விழுந்தது என, என்று இறந்த காலத்தாற் கூறியது, தெளிவுபற்றி வந்த கால வழுவமைதி என்க. உவகையைக் கடல் என்றது அதன் பெருமை பற்றிக் கூறிய உவமை. வீரற்கியாம் : இது குற்றியலிகரம். இராமபிரான், 'அவனுறைவிடங் காட்டு' என்று வேகமாகக் கூற, (148), சுக்கிரீவன் தான் தன் அமைச்சர்களோடு ஒன்று ஆராய அநுமதி வேண்டினான் என்க. அவன் மேற் செய்த செயல் அடுத்த பாடலில் கூறப்பெறும்.

பி - ம். 1. கடற்பெருந் திரை.

2. அழிந்த துன்பினுக், அழுந்து துன்பத்தைக் கக்கரை கண்ட னனையான்.

3. வலியென விரும்ப. 4. மொழிந்த வீரயா மெண்ணுவ. (72)

அநுமன் சுக்கிரீவனிடம் கூறியது

150. அனைய வாண்டுரைத் தநுமனே முதலிய வமைச்சர்
நினைவுங் கல்வியு நீதியுஞ் சூழ்ச்சியு நிறைந்தார்
எனைய ரன்னவ ரோடும்வே றிருந்தன னிரவி
தனைய னவ்வழிச் சமீரணன் மகனுரை தருவான்.

இரவி தனயன் - சூரிய குமாரனான சுக்கிரீவன், அனைய ஆண்டு உரைத்து-அச் சொற்களை அங்கு இராமபிரானிடம் விண்ணப்பம் செய்து கொண்டு, நினைவும் கல்வியும் நீதியும் சூழ்ச்சியும் நிறைந்தார் - ஆலோசனையும் கல்வியும் நீதிநெறிகளும் தந்திரமும் நிறைந்தவர்களான, அநுமனே முதலிய அமைச்சர் - அநுமன் முதலாக உள்ள மந்திரிகள், எனையர் அன்னவரோடும் - எத்தனைபேர் உள்ளார்களோ அவர்கள் எல்லாரோடும், வேறு இருந்தனன் - (இராமலக்ஷ்மணர்களினின்று) தனியே ஆலோசனை செய்ய இருந்தான்; அ வழி - அவ்விடத்தில், சமீரணன் மகன் - வாயு குமாரனான அநுமன், உரை தருவான் - பின் வருமாறு கூறுவானானான்.

சுக்கிரீவன் தன் அமைச்சரோடு வேறு இருந்தது, வாலியைக் கொல்லும் ஆற்றல் இராமபிரானுக்கு உண்டோ என்பதை ஆலோசித்து முடிவு செய்ய என்க. அநுமனே; ஏகாரம் தேற்றப் பொருளில், மற்றையோரினும் அவனுக்குள்ள சிறப்பை யுணர்த்துவ தாகும்; அநுமனுக்கு, நினைவு முதலான பண்புகள் அமைந்துள்ளமை, முன், 'ஆற்றலும் நிறைவும் கல்வி யமைதியு மறிவு மென்ப, வேற்றுமை இவனோ டில்லை' என்ற (60) இராமபிரானுடைய கூற்றாலும், 'அறிவு மீதே வுருவீதே யாற்றலீதே யைம்புலத்தின், செறிவு மீதே செயலீதே தேற்ற மீதே தேற்றத்தின், நெறியும் மீதே நினைவீதே நீதி யீதே நினக் கென்றால்' (சுந்தர. 599) என்ற பிராட்டி கூற்றாலும் விளங்குவன காண்க.

இங்குக் கூறியபடி சுக்கிரீவன் தன் அமைச்சருடன் தனியே ஆராய்ந்த வரலாறு வான்மீகத்தில் கூறப் பெறவில்லை. 'வேறிருந் தனன், சமீரணன் மகனுரை தருவான்' என்றதனால், சுக்கிரீவன் தன் கருத்தைத் தெரிவிக்கு முன்பே அதனை அறிந்து அநுமன் உரைக்கலானான் என்க.

நினைவும், கல்வியும், நீதியும், சூழ்ச்சியும்: உம்மைகள் எண் உம்மைகள். அவ்வழி - அப்போது என்னலும் ஆம். தனயன் என்பது எதுகை ஓசை நயம் நோக்கித் தனையன் எனத்திரிந்தது. சமீரணன் - வாயு தேவன்; பால. வேள்விப். 10; ஆரணிய: 568; சுந்தர: 1127.

பி - ம். 1. *அனையவ னெழுதலி னநுமனே, அனைய வாண்டுரைத் தனையவ னெழுந்தபி னமைச்சர், தனையவ னெழுதலி னமைச்சர்.*

3. *எனைய தம்மொடும்.* 4. *மகனுரை சாற்றும்.* (73)

### சுக்கிரீவன் இராமபிரான்பால் கொண்ட ஐயத்தை உணர்ந்து அநுமன் தேற்றுதல்

151. உன்னி னேனுன்ற னுள்ளத்தி னுற்றதை யுரவோய்
அன்ன வாலியைக் காலனுக் களிப்பதோ ராற்றல்
இன்ன வீரர்பா லில்லையென் றயிர்த்தனை யினியான்
சொன்ன கேட்டவை கடைப்பிடிப் பாயெனச் சொன்னான்.

(அநுமன் சுக்கிரீவனை நோக்கி), 'உரவோய் - வலிமையோனே ! உன் தன் உள்ளத்தின் உற்றதை - உன் மனத்தில் தோன்றியுள்ளதை, உன்னினேன்-நான் ஊகித்து அறிந்து கொண்டேன்; (அது யாதெனில்), அன்ன வாலியை - அத்தகைய வலிமை வாய்ந்த வாலியை, காலனுக்கு அளிப்பது - யமனுக்குக் கொடுக்கும்படியான, ஓர் ஆற்றல் - ஒப்பற்ற வலிமை, இன்ன வீரர்பால் இல்லை என்று - இந்த வீரர்களான இராம லக்ஷ்மணர்களிடத்திற் கிடையாது என்று, அயிர்த்தனை - நீ சந்தேகம் கொண்டனை ; இனி - இனிமேல், யான் - யான், சொன்ன கேட்டு - சொன்னவற்றைக் கேட்டு, அவை கடைப்பிடிப்பாய் என - அவற்றை உறுதியாகக் கொண்டு காரியத்தை மேற்கொள்வாய்' என்று, சொன்னான் - சொல்லுவானானான்.

'உற்றது கொண்டு மேல்வந் துறுபொருள் உணருங் கோளார்' என்பனபோன்ற மந்திரிகளுக்குரிய அருந்திறல்களில் அநுமன் சிறந்தவனாதலின், சுக்கிரீவன் மனத்திற் கொண்ட சங்கையைத் தன் அறிவால் உணர்ந்து கொண்டான் என்க. கடைப்பிடித்தல் 'நன்மை கடைப் பிடி' என்றது போல.

பி - ம். 1. *உன்னினே னினது, உன்னினே னுனது; னுள்ளத்தி னுள்ளவை, னுள்ளத்தி னுள்ளதே.*
3. *றயிர்த்தனை யெனில்யான்.* (74)

152. சங்கு சக்கரக் குறியுள தடக்கையிற் றாளில்
எங்கு மித்துணை யிலக்கணம் யாவர்க்கு மில்லை
செங்கண் விற்கரத் திராமனத் திருநெடு மாலே
இங்கு தித்தன னீண்டற நிறுத்துதற் கின்னும்.

(இராமபிரானுடைய) தட கையில் - பெரிய கைகளிலும், தாளில்- திருவடிகளிலும், சங்கு சக்கர குறி உள - சங்கு சக்கரங்களாகிய

இரேகை அடையாளங்கள் உள்ளன ; எங்கும் யாவர்க்கும் - உலகில் வேறு எங்கிலும் யாரிடத்திலும், இ துணை இலக்கணம் இல்லை - இவ்வளவு உத்தம லக்ஷணம் அமைந்தது இல்லை; (ஆதலின்), செம் கண் - சிவந்த கண்களையும், வில் கரத்து - வில்லேந்திய கையையுமுடைய, இராமன் - இந்த இராமபிரான், அ திரு நெடுமாலே - அந்த அழகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவே ஆவன் ; (அத் திருமால்), ஈண்டு - இப்பொழுது, இன்னும் - (முன் மச்ச கூர்ம முதலாக அவதரித்தமைபோல) இன்னமும், ஈண்டு அறம் நிறுத்துதற்கு - இவ்வுலகில் தருமத்தை நிலை நிறுத்தியருளுதற்கு, உதித்தனன் - திருவவதாரஞ் செய்துள்ளான்.

இதுவும் அடுத்த பாடலும் குளகமாய் இயைந்து பொருள் முடிவு கொள்ளும். இனிவரும் நான்கு செய்யுட்களில் அநுமன் வாயிலாக இராமபிரானின் பரத்வம் நிரூபிக்கப்படுவது காண்க. இது, நம் ஆசிரியர் மதம். சங்கு சக்கர ரேகைகள் கைகளிலும் பாதத்திலும் அமைவது உத்தம லக்ஷணங்களாகும்; சங்கு சக்கர ரேகைகள் ஒருவன் கைகளிலும் பாதங்களிலும் அமைந்திருந்தால், அவனைத் திருமாலாகவும், திருமாலின் அம்சமான சக்கரவர்த்தியாகவும் கொள்ளவேண்டும் ; சூளா. குமாரகால: 45; 'நேமியொடு வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை'' (முல்லை.1-2; உரை) என்பதாலும், 'வலம்புரி பொறித்த வண்கை மதவலி' என, (சீவக. 204) சச்சந்தனைச் சிறப்பிப்பதாலும் இதனை அறியலாம். இராமபிரான் சங்கு சக்கர இரேகைகள் அமைந்த கைகளையும் தாள்களையுமுடையவன் என்பது ; (பால. கார்முகப். : 5.). இங்குக் கூறப்பெற்றவையுடன், 'மகரஞ்சங்குவலத்து மிடத்து மாறுற், பகரும் போதவன் பங்கய மார்புள்ளான் ' என்ற சாமுத்ரிகா லக்ஷணப் பாடற்பகுதியையும் ஒப்பிடலாம். நளன் தன்னை வனத்தில் நீத்துச் சென்றதறிந்து தமயந்தி, அவனைத் தேடிச் சென்றவிடத்து, அங்குத் தென்பட்ட அடிச்சுவடுகளில் சங்கம் பத்மம் முதலிய இரேகைகள் பதிந்திருப்பன கண்டு, அவ்வடிச்சுவடுகள் நளனுடையவை எனத் தீர்மானித்தாளெனக் கூறப்பெறுவதும் இங்கு நோக்கத்தக்கது.

இராமபிரான் நல்லறம் நிறுத்தத் தோன்றினவன்; இஃது, 'தோன்றிய நல்லற நிறுத்தத் தோன்றினான் '; (அயோத். நகர்நீங்கு : 168) என்றமையாலும், மற்றும், 146 சுந்தர. 1123. முதலியவற்றாலும் அறியப்பெறுதல் காண்க.

பி - ம். 2. இக்கு மற்றுள விலக்கண.

4. இக்கு நின்றன-னீண்டற ; னீண்டற நிறுவுதற் கென்றும். (75)

**153.** செறுக்கும் வன்றிறற் றிரிபுரந் தீயெழச் சினவிக்
கறுக்கும் வெஞ்சினக் காலன்றன் காலமுங் காலால்
அறுக்கும் புங்கவ னுண்டபே ராடகத் தனிவில்
இறுக்குந் தன்மையம் மாயவற் கன்றியு மெளிதோ.

'செறுக்கும் - யாவரையும் வருத்தி ஒடுக்கும், வன் திறல் - மிக்க வலிமை வாய்ந்த, திரிபுரம் தீ எழ - முப்புரங்களும் நெருப்புப் பற்றி எரிய, சினவி கறுக்கும் - வெகுண்டு கோபிக்கும், வெம் சினம் - கொடிய கோபத்தையுடைய, காலன் தன் காலமும் - யமனுடைய ஆயுட் காலத்தையும், காலால் அறுக்கும் - தம் காலினால் உதைத்தழித்தருளிய, புங்கவன் ஆண்ட - மேலோனான சிவபெருமான் எடுத்து ஆண்ட, பேர் ஆடகம் தனி வில் - பெரிய பொன்மயமான மேருமலை போன்ற ஒப்பற்ற திரியம்பகம் என்னும் வில்லை, இறுக்கும் தன்மை - வளைத்த மாத்திரத்தில் ஒடித்தெறிந்த அருஞ்செயல், அ மாயவற்கு அன்றியும் - அந்தத் திருமாலுக்கே அல்லாமலும், எளிதோ-மற்றவர்க்கு எளியது ஆகுமோ? (ஆகாது என்றபடி.)

திரிபுரம் என்னும் வலிய கோட்டைகளால் அமைந்த மூன்று நகரங்கள் ஓரிடமிருந்து, மற்றோர் இடத்திற்குப் பறந்து சென்று அங்குள்ளவற்றை அழிக்கும் வலிமை பெற்றிருந்தன ஆதலின், 'செறுக்கும் வன்றிறற் றிரிபுரம்' என்னப்பட்டது. கறுத்தல் - கோபித்தல்; 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' (தொல். 372.) என்றாராகலின். ஆடகத் தனிவில்; ஒப்பு. 'ஆடக மால்வரை யன்னது தன்னை .........ஏடவிழ் மாலையி தென்ன வெடுத்தான்.'; பால. கார்முகப் : 33. இவ்வில்லின் வரலாறு, பால. கார்முகப் படலத்திலும், பரசுராமப் படலத்திலும் காண்க. அம்மாயவற் கன்றி, என்றதால் மாயவனான திருமாலே இவ்விராமபிரானாகத் திருவவதரித்தவன் என்பதை உறுதிப்படுத்தியதாகும்.

பி - ம். 3. னுண்டபோ ராடகத், னுண்டவோ ராடகத்; ராடகப் போர்வில், பொருவில்.
4. தன்மையும் வல்லவம்; கன்றியே யெளிதோ; கன்றிமற் றெளிதோ. (76)

154. என்னை யீன்றவ னுலகங்க ளியாவையு மீன்றான்
தன்னை யீன்றவற் கடிமைசெய் தவமுனக் கஃதே
உன்னை யீன்றவெற் குறுபத முளதென வுரைத்தான்
இன்ன தோன்றலே யவனிதற் கேதுவுண் டிறையோய்.

'இறையோய் - அரசனே ! என்னை ஈன்றவன் - என்னைப் பெற்ற தந்தையாகிய வாயுபகவான், (முன் என்னை நோக்கி), 'இ உலகங்கள் யாவையும் ஈன்றான் தன்னை - இந்த உலகங்கள் யாவற்றையும் படைத்த பிரமதேவனை, ஈன்றவற்கு - தன் திருவுந்தியினின்றும் பெற்ற (பரம்பொருளாகிய) திருமாலுக்கு, அடிமை செய் - பணித் தொழில் புரிவாயாக ! அஃதே உனக்கு தவம் - அச் செயலே உனக்கு ஏற்ற தவச் செயலாகும்; (அவ்வாறு நீ புரிவையேல்), உன்னை ஈன்ற எற்கு உறுபதம் உளது - உன்னை மைந்தனாய்ப் பெற்ற எனக்கும் சிறந்த பதவி உள்ளதாகும்', என உரைத்தான் - என்று கூறியுள்ளான்; இன்ன தோன்றலே அவன் - இந்த இராமபிரானாகிய மகா புருஷனே அத்திருமால் ஆவன்; இதற்கு ஏது உண்டு - இதற்கு வேறு காரணமும் உள்ளது. (காரணம் அடுத்த கவியால் விளங்கும்,)

இக்கவிப் பொருள் வாயு தேவன் உரைத்ததைக் கூறியது. உலகங் களியாவையு மீன்றான் தன்னை யீன்றவன் - திருமால்; இங்கு இராமபிரானைக்குறித்தது; 'மூவுலகு மீன்றானை முன்னீன்றானை': (அயோத். குகப்: 65.) உறுபதம்: பெரும்பதம்; அதாவது பரமபதம். உறு-பெருமை; 'உறுமீன் வருமளவும் வாடி யிருக்குமாங் கொக்கு' (மூதுரை: 16). தோன்றல் - ஆடவரிற் சிறந்தோன்; தலைவன்; (பிங்.) ஏது உண்டு; ஏது: மூலகாரணம்; ஹேது என்ற வடசொல்லின் திரிபு; ஏது என்றதற்கு (நான்) கண்டறிந்த வழி என்றும் பொருள் கொள்ளலாம். இது தேவர்கள் முனிவர்கள் வேண்டுகோட்படி இராவண சங்காரஞ் செய்து உலகில் அறம் நிறுத்த அவதரித்த தேவ ரகசியம் என்னுங் குறிப்பை உணர்த்தியபடி; இவ்வுண்மை 'துன்பு தோன்றிய பொழுதுடன் தோன்றுவன்' என்று அடுத்த 155-ஆம் செய்யுளில் அநுமன் அறிவிப்பதால் வலியுறுவது காண்க.

பி-ம். 1. *யீன்றவ னிவ்வுலகி.*

2. *தலைமையு மஃதே, தலைமையு மையா; செய்தவ மஃதெனக் கையா, செய்த வத்திவீ யதனால்.*

3. *உன்னை யீன்றவற்; குறுபதம் பெறவென; குறுபவ மிலையென.*

**155.** **துன்பு தோன்றிய பொழுதுடன் றேன்றுவ னெவர்க்கும்**
**முன்பு தோன்றலை யறிதற்கு முடிவென்னென் றியம்ப**
**அன்பு சான்றென வுரைத்தன னையவென் யாக்கை**
**என்பு தோன்றல வுருகின வினிப்பிறி தெவனோ.**

(மேலும் அநுமன் சுக்கிரீவனை நோக்கி) 'ஐய - தலைவனே! முன்பு - முன், (யான் எந்தையை நோக்கி), 'தோன்றலை அறிதற்கு - அப் பெருமானை யான் இன்னானென்று அறிந்து கொள்வதற்கு, முடிவு என் என்று - உறுதியான உபாயம் யாது?' என்று, இயம்ப - யான் கேட்க, (அவர்) 'எவர்க்கும் துன்பு தோன்றிய பொழுது - யாவர்க்கும் பெருந் துன்பம் உண்டான காலத்தில், உடன் தோன்றுவன் - அத் துன்பத்தைப் போக்கி யருள் புரிவதற்கு அவன் உடனே தோன்றி யருளுவான் (இன்னும் அவனை அறிய); அன்பு சான்று - அப் பரமனைக் கண்டவிடத்து உனக்கு அவன்பால் பேரன்பு உண்டாவதே தக்க சான்றாகும்'; என உரைத்தனன் - என்று கூறினார்; அதற்கேற்ப - அதற்கு ஏற்றவாறே, (அவனை நான் முதல் முதல் கண்டவிடத்து), என் யாக்கை என்பு தோன்றல உருகின எனின் - என் உடல் எலும்புகள் தென்படாமல் உருகின்ற; இனி - இதன்மேல், பிறிது எவனோ - வேறு பிரமாணம் கூற வேண்டியது ஏனோ? (வேறு அத்தாட்சி வேண் டாம் என்றபடி.)

துன்பு தோன்றிய பொழுதுடன் தோன்றுவன்: துன்பு கொண்ட நிலையில்தான் கடவுள் திருவருள் உண்டாகும் என்ற உண்மை இங்கு எடுத்துக் காட்டப் பெற்றது. இவ்வுண்மை கஜேந்தி ராழ்வான் திறத்தும், பாஞ்சாலி திறத்தும் விளங்குவது காண்க. என்பு தோன்றல வுருகின: எலும்பு வலிவானது. அவை தோன்றமல் அவையும் உருகின போல என் உடல் நெகிழ்ந்தது என்பதாம்: இஃது 'அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க் கென்போ டியைந்த தொடர்பு (குறள். 73) என்றதாலும், அவ் வன்பே யாக்கைக்கு அகத்துறுப்பாகும், (குறள். 79) என்றமையாலும் நன்கு உணர்த்தப் பெற்றமை காண்க. என்பும் உருகும் அன்பு: (அயோத். கைகேசி சூழ்வினை: 94). அநுமனுக்கு இவ்வுணர்ச்சி முன் அவன் கூறியுள்ள, 'என்பெனக் குருகுகின்ற திவர்கின்ற வளவில் காதல் (56) என்பதாலும் உணரலாம். இவ்வாறே இராமபிரானைக் கண்ட வீடணன் நிலையையும் ஆசிரியர் கூறுவது காண்க.; முன்புறக் கண்டிலேன் கேள்வி முன்பிலேன், அன்புறக் காரண மறிய

கிற்றிலேன், என்புறக் குளிருநெஞ் சுருகு மேலவன், புன்புலப் பிறவி யின் பகைஞன் போலுமால். (உயுத்த. வீபீடணன். 21.); 'என்பெழுந் துருகுபு சோர வீண்டிய, அன்பெழுந்து' (சீவக. 324.) 'உனக்குத் துன்பம் வந்தபோது, முன்னிற்பவன் என்று வாயு உரைத்தான். இப்படிச் சொன்ன எல்லார்க்கும் முன்னம் உள்ள சுவாமியை நான் எப்படி அறிவ தென்று அநுமன்கேட்க அப்போது உனக்கு அன்பு பெருகும்; அது சாட்சி என்ருன். இப்படி உத்திரப் பிரத் யுத்தரமாகப் பொருள் காண்க. என்பது பழையவுரை.

பி-ம். 1. தோன்றிய போதுடன், ருேன்றுயா னெவர்க்கும், ருேன்றிஞே னெவர்க்கும். 2. தோன்றலை யறிஞர்க்கு முருவன்.
3. வுரைத்தன னென்னி யாக்கை.
4. என்பு தோன்றிய, என்பு தோன்றில; வுருகின தெனிற்பிறவி, வுருகினதினி. (77)

156. பிறிது மன்னவன் பெருவலி யாற்றலைப் பெரியோய்
அறிதி யென்னினுண் டுபாயமஃ தரும்பெரு மரங்கள்
நெறியி னின்றன வேழினென் றுருவவிந் நெடியோன்
பொறிகொள் செஞ்சரம் போவது காணெனப் புகன்ருன்.

பெரியோய் - பெரியோனே! பிறிதும் - மற்றும், அன்னவன் பெரு வலி ஆற்றலை - அந்த இராமபிரானுடைய பெரிய வலிமைச் சிறப்பை, அறிதி என்னின் - நீ அறிய விரும்புவாயாஞல், உபாயம் உண்டு - அதற்கு ஒரு வழி உள்ளது; அஃது - அதாவது, நெறியில் நின்றன - நாம் போகும் வழியில் நிற்பனவான, அரும் பெரும் மரங்கள்- அருமையும் பெருமையும் வாய்ந்த மராமரங்கள், ஏழின் - ஏழு உள்ளவற்றின், ஒன்று உருவ - ஒன்றை ஊடுருவிச் செல்லும்படி, இ நெடியோன் - இந்த நெடியோனுன இராமபிரானுடைய, செம் சரம் போவது - செவ்விய அம்பு செல்வதே ஆகும்,' என புகன்ருன் - என்று அநுமன் சுக்கிரீவனுக்கு எடுத்துக் கூறிஞன்: காண்: முன்னிலை அசை.

அரும் பெரும்: அருமை, அவைபோல் வேறு இல்லாமையால்; பெருமை உருவத்தின் பெருமை. நெடியோன்: முன் திரிவிக்கிரமனுய் நீண்டு வளர்ந்தவன் என்ற சிறப்பை உணர்த்தி நின்றதும் ஆம். மராமரம் - ஆச்சாமரம்: இதனை ஸால விருக்ஷம் என்பர். இது மராம் என்னும் மரத்தினும் வேருனது. இங்குக் கூறியவாறு மராமரம் துளைத்த லாகிய சோதனையை அநுமன் கூறியதாக முதனூலில் கூறப்பெறவில்லை; சுக்கிரீவனே இலக்குவனிடம் 'இராமபிரான் இந்த ஸால விருக்ஷங் களில் ஒன்றை ஒரு பாணத்தால் பிளப்பனேல் போதும்' என்று கூறியதாக உள்ளது.

இதன்பின் சில பிரதிகளில் அடியிற் காணும் ஓர் அதிகப்பாடல் உளது. மேலும் இது, 157-ஆம் பாடலுக்குப் பின்னும் சில சுவடிகளில் எழுதப் பெற்றுள்ளது.

மண்ணு ளோரரா முதுகிடை முளைத்தமா மரங்கள்
எண்ணி லேழுள வவற்றி லொன்று ருவவெய் திடுவோன்
விண்ணுள் வாலிதன் னுருயிர் விடுக்குமென் னுலகின்
கண்ணு ளோர்கடாம் கழறிடுங் கட்டுரை யுளதால்.

பி - ம். 2. பொயமு மரும்பெரு மரங்கள்; பொயம தரும்பெரு மரங்கள்.
3. னுருவலியிர், றுருவியிர், றுருவிட நெடியோன். (78)

157. நன்று நன்றென நன்னெடுங் குன்றமு நாணும்
தன்று ணைத்தனி மாருதி தோளிணை தழுவிச்
சென்று செம்மலைக் குறுகியான் செப்புவ துளதால்
ஒன்று கேளென விராமனு முரைத்தியஃ தென்றான்.

(அது கேட்ட சுக்கிரீவன்), 'நன்று நன்று என - நீ கூறிய உபாயம் மிகவும் நல்லது என்று சொல்லி', தன் தனி துணை மாருதி - தனது ஒப்பற்ற நண்பனான அநுமனுடைய, நல் நெடுங்குன்றமும் நாணும் - சிறந்துயர்ந்த மலையும் வெள்கும்படியான தோள் இணை - இரு தோள்களையும், தழுவி, தழுவிக்கொண்டு, சென்று - (பின்) அவ்விடம் விட்டுப் போய், செம்மலை குறுகி - இறைவனான இராமபிரானை அணுகி, 'யான் செப்புவது ஒன்று உளது ஆல் - யான் விண்ணப்பம் செய்து கொள்வது ஒன்று உள்ளது, கேள் என - அதனைக் கேட்டருள்வீராக!' என்று கூற; இராமனும் - இராமபிரானும், அஃது உரைத்தி என்றான் - அதனைக் கூறுவாயாக என்றான். ஆல் - அசை.

நன்று நன்று: அடுக்கு வியப்பைக் குறிப்பது. 'எம்மலைக் குலமுந் தாழ விசைசுமந் தெழுந்த தோளான்' (89) என்றது, காண்க. குன்றமும்: உம்மை உயர்வு சிறப்பினது; மலை - அளக்கலாகா அளவும் பொருளும், துளக்கலாகா நிலையுந் தோற்றமுமுடைய தாகலின்.

பி - ம். 1. நன்று நன்றென; குன்றமு நாணும்.
2. தன்று ணைப்பெரு; தோளிணைத் தழுவிச், தோளிணைத் தழுவச்; தோள்களைத் தழுவச்.
4. ஒன்று எக்கென; முரைத்திய தென்றான். (79)

—

நட்புப்படலம் முற்றும்.

———

## 4. மராமரப் படலம்

இது, சுக்கிரீவன் வேண்டுகோளின்படி இராமபிரான் ஏழு மராமரங்களைத் தன் ஒரே அம்பினால் துளைத்த வரலாற்றைக் கூறும் படலம் என விரியும்.

சுக்கிரீவன் இராமபிரானை மராமரம் ஏழையும் எய்ய வேண்டுதல்.

158. ஏக வேண்டுமிந் நெறியென வினிதுகொண் டேகி
மாக நீண்டது குறுகிட நிமிர்ந்தன மரங்கள்
ஆக வஞ்சினோ டிரண்டினொன் றுருவநின் னம்பு
போக வேயென்றன் மனத்திடர் போமெனப் புகன்றான்.

(சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), 'இ நெறி ஏக வேண்டும் என - இவ்வழியே நாம் போக வேண்டும்' என்று கூறி, இனிது கொண்டு ஏகி - இனிமையாக அந்த இராம லக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு போய், நீண்டது மாகம் குறுகிட - நீண்டு பரவிய ஆகாயம் தன் அளவிற் குறைவுள்ளதாக, நிமிர்ந்தன - ஓங்கி வளர்ந்தனவான, மரங்கள் - மராமரங்கள், அஞ்சின் ஒடு இரண்டின் ஆக - ஏழு உள்ளன ஆக, ஒன்று உருவ - (அவற்றின்) ஒன்றை ஊடுருவ நின் அம்பு போகவே - உன் அம்பு செல்லவே, என் தன் மனத்து இடர்போம் - என் மனத்திலுள்ள துன்பம் நீங்கும்;' என புகன்றான் - என்று கூறினான்.

மாகம்: மஹாகம் என்னும் வடமொழித் தொடரின் விகாரம்; கம் - ஆகாயம். வானம் மாகம் குறுகிட நிமிர்ந்தன - ஆகாயம் தாழ அவ்வாகாயத்தினும் மேலே எழுந்து உயர்ந்தன அம்மராமரங்கள் என்பதாம். அஞ்சு: ஐந்து என்பதன் போலி. வாலி அம்மராமரங்களை அசைத்து அவற்றின் இலைகள் யாவும் உதிருமாறும், அவை நிலை தளருமாறுஞ் செய்தவன்; அவ்வாற்றல் இராமபிரானுக்கு உளதோ எனக் கண்டறிய அம்மரங்களில் ஒன்றில் அம்பு தூண்டி அதனைத் துளைக்குமாறு இராமபிரானைக் கேட்டுக் கொண்டான் சுக்கிரீவன் என்று வான்மீகமும் அத்யாத்மகமும் கூறும்.

பி - ம். 2. *நீண்டன குறுகிட.*
3. *வைந்தினோ டிரண்டி, யேழையும் தின்றொரம் புருவவே கடிதிற்.*
4. *போக வேமன்ற மனத்தயர், போக மன்றவென் மனத்திடர், பேரக வென்றன் மனத்திடர் போமிலென்றன் மனத்திடாது.* (1)

இராமபிரான் அவ்வாறே செய்வதாக உடன்பட்டுச் செல்லுதல்.

**159.** மறுவி லாதவன் கூறலும் வானவர்க் கிறைவன்
முறுவல் செய்தவன் முன்னிய முயற்சியை முன்னி
எறுழ்வ லித்தடந் தோளினற் சிலையைநா ணேற்றி
அறிவி னுலளப் பரியவற் றருகுசென் றணைந்தான்.

மறு இலாதவன் - (மனத்திற்) குற்றமற்றவனுன. சுக்கிரீவன், கூறலும் - அவ்வாறு சொல்லவும், வானவர்க்கு இறைவன் - தேவர்களுக்குத் தலைவனுன இராமபிரான், அவன் முன்னிய, முயற்சியை முன்னி - அச்சுக்கிரீவன் கருதிய காரியத்தில் கொண்ட ஊக்கத்தை ஊகித்துணர்ந்து, முறுவல் செய்து - புன்சிரிப்புக் கொண்டு, எறுழ் வலி தடம் தோளில்-மிக்க வலிமை வாய்ந்த தன் பெரிய தோளில் (ஏந்தியிருந்த) நல் சிலையை - தன் சிறந்த வில்லை, நாண் ஏற்றி - நாணைப் பூட்டி, அறிவினுல் அளப்பு அரியவற்று - யாரும் தம் அறிவினுல் அளவிட்டு அறிதற்கு அரியவான அம்மரங்களின், அருகு சென்று அணைந்தான் - அருகே போய் அடைந்தான்.

இராமபிரானுடைய வலியைப் பரிசோதித்தான் சுக்கிரீவன் என்று அவன் மீது தோஷங் கற்பிக்கலாகாது; பெருமானது வலியை அறிந்து ஆறுதல் அடையவே மரங்களை எய்யச் செய்தான் என்று நம்மனோர்க்கு அறிவித்தற் பொருட்டு 'மறுவிலாதவன்' என்று சுக்கிரீவனைச் சிறப்பித்தார் ஆசிரியர் என்க: இது முன் அகலிகையை 'நெஞ்சினுற்பிழைப்பிலாள்' என்று ஏற்றங் கூறியது போல என்க. வானவர்க்கிறைவன் இராமபிரான், தேவர்களுக்குத் தலைவனுன திருமாலின் திருவவதாரம் ஆதலின்; இனி 'தெய்வ நாயகன்' என்றமையும், (உயுத்த. அங்கதன் றூது: 21); 'தேவதேவனைத் தென்னிலங்கை யெரியெழச் செற்ற வில்லியை' (திருவாய்மொழி. 3-6 : 2) எனப் பெரியாரும் பணித்தமையும் காண்க. இராமபிரான் முறுவலித்தது, சுக்கிரீவனின் அறியாமையை எண்ணி. எறுழ் வலி, ஒருபொருட்பன்மொழி; 'மிடுக்கு' என்பது பழைய உரை.

பி - ம். 1. மறு விலானது; கூறலும் மாப்பெருங் கடவுள்.
2. முயற்சியை யுன்ன.
3. தோள்களாற் சிலையை, தோளினிற் சிலையை, தோள்களால் நெடுஞ்சிலை; தோளான்றன் சிலையை, தோளினுற் சிலையை; சிலையைநா ணெறிந்தான்.
4. அறிவி னுயெ தவத்தர்தங் கருத்தகத் தொளிர்வான்; சென்றடைந்தான். (2)

மராமரங்களின் வருணனை

160. ஊழி பேரினும் பேர்வில வுலகங்க ளுலைந்து
தாழுங் காலத்துந் தாழ்வில தயங்குபே ரிருள்சூழ்
ஆழி மாநிலந் தாங்கிய வருங்குலக் கிரிகள்
ஏழு மாண்டுவந் தொருவழி நின்றென வியைந்த.

(அம்மரங்கள்), ஊழி பேரினும் பேர்வு இல - யுக முடிவுக் காலம் மாறினாலும் தம் இடம் விட்டுப் பெயராதன; உலகங்கள் உலைந்து தாழும் காலத்தும் - எல்லா உலகங்களும் அழிந்து வீழும் பிரளய காலத்தும், தாழ்வு இல - ஒரு குறைவும் அடையாமல் இருக்கத்தக்கன; தயங்கு பேர் இருள் சூழ் - திகைப்பதற்குரிய பெரிய இருள் சூழ்ந்த, ஆழி மா நிலம் தாங்கிய - கடல் சூழ்ந்த இந்தப் பெரிய பூமியைத் தாங்கிக் கொண்டுள்ள, அரும் குல கிரிகள் ஏழும் - அரிய குல மலைகள் ஏழும், ஆண்டு வந்து - அங்கு வந்து, ஒருவழி நின்ற என – ஓரிடத்தில் நிலைத்தன என்று சொல்லும்படி, இயைந்த - (அவை) அமைந்திருந்தன.

இச் செய்யுளில் முன்னிரண்டு அடிகள் உயர்வு நவிற்சியணி யும், பின்னிரண்டு அடிகள் தற்குறிப் பேற்றவணியும் ஆம். தயங்கு பேரிருள் சூழ் ஆழி; இஃது உலகின் புறத்தே சூழ்ந்துள்ளதாகக் கருதப்பெறும் எல்லைப்புறக் கடலைக்குறிப்பதும் ஆம்; ஒப்பு :- 'அண்டத் தைப்பொதுத் தப்புறத் தப்பினு லாடும்'; மரபின் மாபெரும் புறக்கடன் மஞ்சன மருவி' (உயுத்த. இரணியவதைப் : 4, 9). அருங் குலக்கிரிகள் ஏழு ஒரு வழி நின்றன: பற்பல இடங்களில் இருந்த ஏழு கிரிகளும் ஓரிடத்தில் வந்து நின்றன என்று சொல்லத்தக்கவாறு பெருமையோடு விளங்கின என்பதாம். ஊழி, பிரமனது ஆயுட்கால மாகிய கற்பம் என்னலும் ஒன்றும். பேரினும், காலத்தும் என்பன வற்றிலுள்ள உம்மைகள் சிறப்பையுணர்த்தி நின்றன. சில சுவடிகளில் இச்செய்யுளிலிருந்து மராமரப்படலம் தொடங்கும்.

பி - ம். 1. *ஊழி பேரினும் பேர்விலா, ஊழி பேர்வினும், ஊழி பெயர்வி லுலகங்கள்; லுலகங்க ளுவந்து.*

2. *தயங்குபேர் மொய்ம்பால், தயங்குபே ரருளால், தயங்குமோர் மொய்ம்பால்.*

4. *ஏழு மாண்டுகின் றொருவழி, ஏழு மாண்டுதொக் கொருவழி; யிருந்த, விசைந்த, வியந்த, வியந்தான்.* (3)

161. கலைகண் டோங்கிய மதியமுங் கதிரவன் றானும்
தலைகண் டோடுதற் கருந்தவம் புரிதரும் சாரல்
மலைகண் டோமென்ப தல்லது மலர்மிசை யயற்கும்
இலைகண் டோமெனத் தெரிப்பருந் தரத்தன வேழும்.

ஏழும் - அம்மராமரங்கள் ஏழும், கலை கண்டு ஓங்கிய மதியமும் - பதினாறு கலைகளும் தன்னிடம் உண்டாக நிறைந்த முழுமதியும், கதிரவன் தானும் - சூரியனும், தலைகண்டு ஓடுதற்கு - அம்மரங்களின் தலைப்புறமான உச்சியைக் கண்டு அவற்றைக் கடந்து (வானிற்) செல்லுவதற்கு, அரும் தவம் புரிதரும் - அரிய தவத்தைச் செய்வனவாம்; மலர்மிசை அயற்கும் - தாமரைமலர் மீது அமர்ந்திருக்கும் பிரமதேவனுக்கும், சாரல் மலை கண்டோம் என்பது அல்லது - ஒரு மலைச்சாரலைக் கண்டு அடைந்தோம் என்று சொல்லக்கூடியதல்லாமல், இலை கண்டோம் என - இம்மரங்களின் இலைகளைக் கண்டு விட்டோம் என்று, தெரிப்பு அரும் - எடுத்துக் கூறுவதற்கு முடியாத, தரத்தன - சிறப்புத் தன்மையை உடையன.

சந்திர சூரியர்கள் வானில் இம்மரங்களின் உச்சியைக் கடந்து செல்ல முடியாமல் அவ்வாறு கடக்க அருந்தவம் செய்யாநிற்கும்; அம்மரங்களைக் கண்ட மலர்மிசை அயனுக்கும் 'ஒரு மலைச்சாரலைக் கண்டேன்' என்று சொல்வதல்லாமல், அவற்றின் 'உச்சியில் உள்ள இலைகளைப் பார்த்தேன்' என்று சொல்லமுடியாத பெருந்தோற்றமும் உயரமும் உடையன அம்மரங்கள் என்க. இது 'கடல் கண்டோமென்பர் யாவரே முடிவுறக் கண்டார்' (717) என்பதை ஒப்புமையாகக் கொண்டுள்ளது. கலை - சந்திரனுடைய ஒளியின் பகுதி. கலை கண்டோங்கிய என்றதால் அது தன் பதினாறுகலைகளையும் அடையப் பெற்ற பூர்ண சந்திரன் என்பதாம். இதனால் அம்மரங்கள் சூரிய சந்திரர்கள் தம் வழிச் செல்லமுடியாதபடி அவற்றைத் தடைசெய்வனவாய் உயர்ந்தும், பிரமதேவனும் அம் மரங்களின் தொகுதியைக் கண்டு அது ஒரு மலைச்சாரல் என மயங்கி அவற்றின் இலைகளைக் கண்டான் எனச் சொல்லமுடியாத தோற்றத்தன என்பதாம். 'இனி இலை கண்டலல்லது' எனப்பாடம் ஓதி மலைகளைக் கண்டோமென்று சொல்லாமேயன்றி பிரமனும் இலைகளைக் கண்டாலல்லாமல் மரமென்று அறிந்து சொல்லக் கூடாது எனினுமாம் இச் செய்யுள் உயர்வு நவிற்சியின் பாற்படுவதாகும்.

பி - ம். 1. *கலைகொண் டோங்கிய.*
2. *தலைகொண் டோடுதற்; தொடக்குறுஞ் சாரல், தொடக்குறுஞ் சாரல், தொடுத்தன சால.*
3. *மலர்மிசை யயற்கும், மண்மிசை யவர்க்கும்.*
4. *இலைகண் டல்லது, இலைகண் டன்னது, தெரிப்பருக் தரதன; தரத்த வவ்வேழும்.* (4)

162. ஒக்க நாளெலா முழல்வன வுலேவில வாக
மிக்க தோர்பொரு ளுளதென வேறுகண் டிலெமால்
திக்கும் வானமுஞ் செறிந்தவத் தருநிழற் சீதம்
புக்கு நீங்கலிற் றளர்வில விரவிதேர்ப் புரவி.

நாள் எலாம் ஒக்க உழல்வன - எல்லா நாட்களிலும் (அல்லது பகல் முழுமையும்) ஒருமிக்கத் திரிகின்றனவான, இரவி தேர் புரவி - சூரியனின் தேரிற் கட்டிய குதிரைகள், திக்கும் வானமும் செறிந்த அ தரு சீதம் நிழல் - எல்லாத் திசைகளிலும் வானத்திலும் அடர்ந்துள்ள அம் மராமரங்களின் குளிர்ந்த நிழல்களில், புக்கு நீங்கலின் - புகுந்து வெளிப்படுவதால், தளர்வு இல - தளர்ச்சி பெறுவன அல்ல ; உலேவு இல ஆக - (இவ்வாறு அவை) கேடற்றனவாக அமைவதற்கு, வேறு ஓர் பொருள் - பிறிதொரு காரணம், மிக்கது உளது என - (மேலே காட்டியதைவிடச்) சிறந்தது உள்ளது என்று, கண்டிலெம் - யாம் காணவில்லே. ஆல் : ஈற்றசை.

ஒக்க நாள் எலாம் உழல்வன இரவி தேர் புரவி உலேவில ஆக மிக்கது ஓர் பொருள் உளது என வேறு கண்டிலெம் ; திக்கும் வானமும் செறிந்த அ தரு நிழல் சீதம் புக்கு நீங்கலில் அவை தளர்வில என

இயைக்க. சீதம் புக்கு நீங்கலின், என்பதற்கு, அச்சீதம் அக்குதிரைகள் மீது பட்டு நீங்குதலினுல் என்றும் பொருள் கொள்வர். முந்திய செய்யுளில் கதிரவன், மரங்களின் தலே கண்டோட இயலாமை கூறி, இச் செய்யுளில் அவன் அவற்றின் சீத நிழலுள் புகுந்தோடியது கூறப் பெற்றது என்க. இச் செய்யுள் தற்குறிப்பேற்ற அணி.

பி - ம். 1. வுலேவிலா வான, வுலேவிலா வனவும்.
2. தெனவொன்று கண்டிலமால்.
3. சிறந்த திருநிழற் சீதம், தருநிழற் சீதம், செறிமரத் திருநிழற் சீதம். (5)

163. நீடு நாட்களுங் கோட்களு மென்பமே னிவந்து
மாடு தோற்றுவ மலரெனப் பொலிகின்ற வளத்த
ஓடு மாச்சுடர் வெண்மதிக் குட்கறுப் புயர்ந்த
கோடு தேய்த்தலிற் களங்கமுற் றுமெனுங் குறிய.

(அம்மரங்கள்), நீடு - நெடுங்காலமாக உள்ள, நாட்களும் கோட்களும் - நட்சத்திரங்களும் கிரகங்களும், என்ப - என்று சொல்லப்படு

பவை, மேல் நிவந்து - வானின்மேலே உயர்ந்து, மாடு தோற்றுவ - (அம்மரங்களின்) பக்கங்களில் விளங்குவன, மலர் என பொலி கின்ற வளத்த - அவற்றின் மலர்கள் என விளங்கும் காட்சிச் சிறப்புடையன; ஓடும் மா சுடர் வெள் மதிக்கு - வானில் சஞ்சரிக் கும் சிறந்த நிலவினையுடைய வெள்ளிய சந்திரனுக்கு, உள் கறுப்பு - அதனுள் அமைந்துள்ள கறுப்பு, உயர்ந்த கோடு தேய்த்தலில் - அம் மரங்களின் (வானளாவி)யுயர்ந்த கொம்புகள் உராய்ந்து தேய்த்தலால், உற்று களங்கம் ஆம் எனும் - பொருந்திய மறுஆகும் என்று சொல்லக் கூடிய, குறிய - அடையாளக் குறிப்பை உடையன.

இச் செய்யுளின் முன்னிரண்டு அடிகள் தன்மைத் தற்குறிப்பேற்ற வணியும், பின்னிரண்டு அடிகள் ஏதுத் தற்குறிப்பேற்றவணியும் ஆகும். தோற்றுவ, வளத்த, குறிய இவை வினையாலணையும் பெயர்கள்; பொலிகின்ற : பெயரெச்சம். உற்று என்பது உற்ற எனத் திரித்துப் பொருள் கொள்ளப்பட்டது; (சிந்தா. 273).

பி - ம். 1. நாள்களும் கோள்களுமென்ன ; மேனிமிர்ந்த; நிவந்த.

2. மாடுதோற்று மலரெனப், மாடு தோற்றுமம் மரங்களின் மல ரெனப் பொலிவ.

3. மதிக்குக் கறுப்புயர்ந்த.

4. களங்கமுற் றுமெனக், களங்கமுற் றுலெனக், களங்கமுற் றுலெனுங், களங்கமுற் றுலன, களங்கமுற் றுமென்ன, களங்க முற் றுடையது குறிக்கின். (4)

164. தீத றும்பெருஞ் சாகைக டழைத்ததோர் செயலால்
வேத மென்னவுந் தகுவன விசும்பினு முயர்ந்த
ஆதி யண்டமுன் பளித்தவ னுலகிலங் கவனூர்
ஓதி மந்துணைப் பெடையொடும் புடையிருந் துறைவ.

(மேலும் அம்மரங்கள்), தீது அறும் - அழிவு அற்ற, பெரும் சாகைகள் தழைத்தது ஓர் செயலால் - பெரிய கிளைகள் செழித்து விளங்குகின்ற செய்கையால், வேதம் என்னவும் தகுவன - (அவை) வேதங்கள் என்று சொல்லவும் தகுதியுடையன; விசும்பினும் உயர்ந்த - வான மண்டலத்தினும் உயர்ந்து விளங்குவன ; ஆதி அண்டம் முன்பு அளித்தவன் - பழமையான இவ்வண்டங்களை முன் படைத்தளித்த

பிரமதேவனுடைய, உலகில் அங்கு - ஸத்தியலோகமாகிய அவ்விடத்தில், அவன் ஊர் - அவன் ஏறிச் செல்லுகின்ற, ஓதிமம் - அன்னப் புள், துணை பெடையொடும் - தன் துணைவியான பெட்டையன்னத்தோடும், புடை இருந்து உறைவ - அம்மரங்களின் ஓர் இடத்தே தங்கியிருந்து அவை வாழ இடமாவன ஆம்.

வேதங்களின் சாகைகள் அழிவற்றனவாயும் அளவற்றனவாயும் இருத்தல்போல இம்மரங்களின் கிளைகளும் அழிவற்று அளவற்று விளங்குகின்றன என்றார். சாகை - வேதங்களின் கிளைப்பகுதி ; கிளை : இங்குச் சிலேடையில் அமைந்தது. விசும்பினும் : உம்மை, உயர்வு சிறப்பினது ; விசும்பின், இன், எல்லைப் பொருளது. புடை இருந்து உறைவ என்றமையால், அம்மரங்களின் மற்றப் பக்க இடங்களின் உயர்வு, விரிவு முதலிய அளவின் பெருமை குறிப்பிட்டதாகும். பிரமனுக்குரிய அன்னப்பறவை தங்குமிடம் என்றமையால், இவற்றின் உயரம் ஸத்யலோகம் வரையில் சென்றது என்றதாம் ; இஃது உயர்வு நவிற்சி.

பி - ம். 1. தீதரும் பெருஞ். 
3. முன்படைத்தவ. 
4. ஓதி மர்தனி ; மடையிருந், மிடையிதுர். (5)

165. நாற்ற மல்குபோ தடைகனி நனைமுத னுறு
வீற்றின் மண்டலத் தியாவையும் வீழ்கில யாண்டும்
காற்ற லம்பினுங் கலிநெடு வானிடைக் கலந்த
ஆற்றின் வீழ்ந்துபோ யலைகடற் பாய்தரு மியல்ப.

காற்று அலம்பினும் - காற்று வீசியசைத்தாலும், நாற்றம் மல்கு - (அம்மரங்களில் உள்ள) மணம் மிகுந்த, போது - பூக்களும், அடை - இலைகளும், நனை கனி - அரும்புகளும் பழங்களும், முதல - முதலாய் உள்ள அனைத்தும், நானு வீற்றின் - பலவகைத் துண்டுகளாய்ச் சிதறப் பட்டு, யாவையும் - அவை அனைத்தும், மண் தலத்து யாண்டும் - இப்புவியிடத்து எங்கணும், வீழ்கில - உதிர்ந்து வீழ்வனவல்ல ; (ஆனால் அவை), வான் இடை கலந்த - ஆகாயத்திலே பொருந்திய, ஆற்றின் வீழ்ந்து போய் - கங்கையில் விழுந்து சென்று, கலிநெடும் அலைகடல் பாய்தரும் இயல்ப - ஓசைமிக்க பெரிய அலைகளையுடைய கடலிற் சென்று சேரும் தன்மையையுடையன,

நாற்றம் - இங்கு நறுமணம். வீற்று : வீறு; பகுதி; வேறுபட்டது. ' வீற்று மண்டலத்து - வேறுவேருகிய பூமியில் ' என்பது பழையவுரை. வானிடைக் கலந்த என்பதைக் கடலுக்கும் கூட்டுக. ஆறு, இங்கு, ஆகாச கங்கை ; அலம்புதல் - அசைத்தல். பாய்தரும் ; தரும் என்பது இங்குத் துணைவினை. இச்செய்யுள் உயர்வு நவிற்சியணியின் பாற்படும்.

பி - ம். 1. *நாற்ற நல்கு பூவடை கனிகாய், முதல்யாவும், முதல்நாளு.*
2. *வேற்று மண்டலத், வீற்ற மண்டலத் ; மீள்இல, வீழ்இலா தெழுந்து.*
3. *கதிர்நெடு வானிடைக், கவினெடு கானிடைக் ; நெடுவானிடைக்.*

166. அடிய நான்மறை யந்தண னண்டத்துக் கப்பால்
முடியின் மேற்சென்ற முடியன வாதலின் முடியா
நெடிய மாலன்ன நிலையன நீரிடைக் கிடந்த
படியின் மேனின்ற மேருமால் வரையினும் பரிய.

(அம்மரங்கள்), நான் மறை அந்தணன் - நான்கு வேதங்களை ஓதிய பிரமதேவனுடைய, அண்டத்துக்கு அடிய - அண்டத்தின் வேர்களாகிய அடிப்பகுதிகளை உடையன ; அப்பால் - அவ்வண்டத்துக்கு அப்புறம் உள்ள, முடியின் மேல் - உச்சி முகட்டின் மேலாக, சென்ற முடியன ஆதலின் - வளர்ந்து சென்ற உச்சிகளையுடையன ஆதலால், முடியா - முடிவு என்ற ஒன்று இல்லாத, நெடியமால் அன்ன - நீண்ட திரிவிக் கிரமனான திருமாலே போன்ற, நிலையன - தோற்றத்தையுடையன ; நீர் இடை கிடந்த படியின் மேல் - கடல் நீரிற் கிடக்கும் இப்பூமியின்மீது, நின்ற - நிலைபெற்று நின்றதான, மேருமால் வரையினும் - மேரு என்னும் பெரிய மலையை விட, பரிய - பருமையுடையன.

அந்தணனண்டம் - பிரமாண்டம். நீரிடைக்கிடந்த படி ; நீரிடத்தில் தோன்றிய பூமி ; நீரிலிருந்து புவி உண்டாயிற்று என்றது, ' ஆபப்ரு திவீ ' என்றது வேதவசன மாதலின். மேருமால் வரையினும் ; உம்மை உயர்வு சிறப்பினது. முடியா நெடிய மால் : அளவிட முடியாது திரிவிக் கிரமனாய் நீண்ட திருமால் ; திரிவிக்கிரமனின் பெருமை ; ' படிவட்டத் தாமரை பண்டுலக நீரேற், றடிவட்டத் தாலளப்ப நீண்ட, முடிவட்டம், ஆகாய மூடறுத் தண்டம்போய் நீண்டதே, மாகாய மாய்நின்ற மாற்கு ' (மூன்றாந் திருவந்தாதி. 13.) இனி, பிரமனின் நான்மறை போன்று தோற்றம் காண வியலாத அடியின வென்றும், அவன் அண்டத்தையும் கடந்து, சென்ற முடியின வென்றும் கூறினும் ஒன்றும்.

பரிய: பரி—பெருமை (திவா). அம்மரங்களின் உயரம் நெடிய திருமாலுக்கும், பருமன் மேருவுக்கும் உவமை ஆயின.

பி-ம். 1. அடியி னுலல கஎந்தவ.
2. சென்று முடியன ; முடியன வாகலின், முடிவன வாகலின்.
3. நெடிய மாலெனும் நிலையின ; நிலையன்ன ; நீரிடை யலைந்த.
4. வரையினும் பழைய. (7)

167. வள்ள லிந்திரன் மைந்தற்குந் தம்பிக்கும் வயிர்த்த
உள்ள மேயென வொன்றினென் றுள்வயிர்ப் புடைய
தெள்ளு நீரிடைக் கிடந்தபார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண்படங் குடைந்துகீழ் போகிய வேர.

(அம்மரங்கள் மேலும்), வள்ளல் இந்திரன் மைந்தற்கும்-கொடைத் தன்மையின் மிக்க இந்திரனுடைய குமாரனை வாலிக்கும், தம்பிக்கும் - அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கும், வயிர்த்த உள்ளமே என-பகைமை முற்றிய மனமே போல, ஒன்றின் ஒன்று - அம்மரங்களில் ஒன்றைவிட மற்றென்று, வயிர்ப்பு உடைய - உள்ளே வயிரம் என்னும் உறுதித் தன்மையை யுடையன ; தெள்ளு நீர் இடை கிடந்த - தெளிவான நீரை யுடைய கடலினிடத்தே தங்கிய, பார் சுமக்கின்ற - இப்பூமியைத் தாங்கு கின்ற, சேடன் - ஆதி சேடன் என்னும் அரவின், வெள்ளி வெண் படம் - வெள்ளிபோலும் வெண்ணிறமுள்ள படத்தை, குடைந்து - துளைத்துக்கொண்டு, கீழ் போகிய - பாதாள லோகத்திற்கும் கீழாகச் சென்றதான, வேர் - வேர்களையுடையன.

வாலி ஒருவனுகவே பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்து அதனைத் தான் சிறிதும் பயன்படுத்திக்கொள்ளாமல், தேவர்க் குதவினுனுதலின் அவனைச் சிறந்த வள்ளல் எனச் சிறப்பித்தது என்க; இது, 373, 393, பாடல்களால் விளங்கும். வயிர்த்த உள்ளம் - பகைமையில் முற்றிய உள்ளம். மரங்கள் வயிர்த்தமை-நெடுங்காலமாய் முற்றி வயிரம் பாய்ந்து உறுதி பெற்றமை. வயிர்த்தல் என்ற சொல், இங்கு வாலி சுக்கிரீவர் பகைமை உள்ளங்களுக்கும், மரங்களின் வயிரத்தன்மைக்கும் செம். மொழிச் சிலேடையாய் அமைந்துள்ளது. சேடன் - யாவும் அழிந்த பொழுதும் தான் அழியாது எஞ்சி நிற்பவன் என்னும் பொருளைக் கொண்டது. இச்செய்யுளால், அம்மரங்களின் வேர்கள் பாதாள உலகத்

தையும் ஊடுருவி ஆழ்ந்து கீழே சென்றன என்பதாம். இங்கு, சரித்திரப் பகுதியே உவமையாக அமைந்தமை காண்க.

பி - ம். 1. தம்பிக்கும் வலிந்த, தம்பிக்கும் வயிர, தம்பிக்கும் வலித்த.
2. ஒன்றொடொன் றுள்வயிர்ப் படைய; வயிர்ப்புடைத்த.
3. இடந்துபார் சுமந்தயச் சேடன்; சுமந்தயன் சேடன்.
4. போகிய வேர்கள். (8)

168. சென்று திக்கினை யளந்தன திசைகளிற் றேவர்
என்று நிற்குமென் றிசைப்பன விருசுடர் திரியும்
குன்றி னுக்குயர்ந் தகன்றன யாதினுங் குறுகா
ஒன்றினுக் கொன்றி னிடைநெடி தியோசனை யுடைய.

(அம்மரங்கள்), சென்று - வியாபித்து வளர்ந்து போய், திக்கினை - எட்டுத் திக்குகளையும், அளந்தன - அளந்து பார்த்தன போல் பரவி உள்ளன; திசைகளில் தேவர் - அந்த எண்டிசைகளில் உள்ள தேவர்களான திக்பாலகர்கள், என்றும் நிற்கும் என்று இசைப்பன - என்றும் அவற்றில் தங்கியிருப்பார்கள் என்று சொல்லக் கூடியன; இருசுடர் திரியும் - சந்திர சூரியர்களாகிய இரு சுடர்களும் சுற்றி வருகின்ற, குன்றினுக்கு - மேரு மலைக்கும், உயர்ந்து அகன்றன - மேலாக உயர்ந்தும் அகன்றும் உள்ளன; யாதினும் குறுகா - எவற்றினும் தம் உருவிற் குறைவனஅல்ல; ஒன்றினுக்கு ஒன்றின் இடை - அந்த மரம் ஒவ்வொன்றிற்கும் இடையே, நெடிது - நீளமானது, ஒரு யோசனை உடைய - ஒரு யோசனையை உடையதாக அமைந்துள்ளன.

திக்கினை அளந்தன என்பதற்குத் திக்குக்களின் எல்லை அளவும் பரந்துள்ளன என்பது பொருள். முன் 167-இல் இம்மரங்களின் பருமனைக் குறித்து இங்கு அவற்றின் உயரத்தைக் குறித்தார். மேரு மலையை இரு சுடர்களும் சுற்றி வருகின்றன என்பது புராணவரலாறு. இச் செய்யுள் அதிசயோக்தி எனும் கவிமதம் எனக் கொள்ளப்பாலது. யோசனை - ஒரு நீட்டலளவு; நாற்காத தூரம் என்றும், பிறவாறுங் கூறுவர்.

பி - ம். 1. வெண்களிற் றேவர்.
2. திசைத்தன விருசுடர்; விரிசுடர்.
3. குன்றினுக் ககன்று; எண்ணினுங் குறுகா, யாதினுங் குறையா.
4. கொன்று தானிடை நெறியுடைய. (9)

## இராமபிரான் அம்மரங்களின் மீது அம்பு எய்ய நாணொலி எழுப்புதல்

169. ஆய மாமர மனைத்தையு நோக்கிநின் றமலன்
தூய வார்கணை துரப்பதோ ராதரந் தோன்றச்
சேய வானமுந் திசைகளுஞ் செவிடுறத் தேவர்க்
கேய லாததோர் பயம்வரச் சிலையினா ணெறிந்தான்.

ஆய - அத்தன்மையனவான, மா மரம் அனைத்தையும் - பெரிய அந்த மராமரங்கள் யாவற்றையும், அமலன் - பரிசுத்தனான இராம பிரான், நோக்கி நின்று - பார்த்து நின்று, தூய வார் கணை - பரிசுத்த மான நீண்ட தன் அம்பை, துரப்பது ஓர் ஆதரம் தோன்ற - தூண்டு வதான ஒரு விருப்பம் தனக்கு உண்டாக, சேய வானமும் - மிக தூரத் தில் உள்ள தேவலோகத்தவர்களும், திசைகளும் - நான்கு திசைகளில் உள்ள மற்றோர்களும், செவிடு உற - காது அடைத்துச் செவிடாகும் படியும், தேவர்க்கு ஏய் அலாத - (அதுவரை) தேவர்களுக்குப் பொருந் தாத, ஓர் பயம் வர - ஓர் அச்சம் உண்டாகுமாறும், சிலையின் நாண் எறிந்தான் - தன் வில்லிற் பூட்டிய நாணைத் தெறித்து ஓசையை எழுப்பினான்.

இங்கு நாணின் ஒலியின் சிறப்பு கூறப்பெற்றது. இராமபிரானை அமலன் என்பதற்கேற்ப அவன் கணையைத் தூய வார்கணை என்றார். அக்கணையின் தூய்மை: ஆரணிய. 486. ஆதரம் - அன்பு, ஆசை; 'ஆதரம் பெருகுகின்ற அன்பினால் அன்னமொத்தும்' (சீவக. 189); 'ஆதரம் பெருக வைத்த அழகனூர்' (திவ்ய. திருமாலை.16); 'ஆதரித்தார் தம்மோடவையகத்தே'; 'அடியேங்கட் காதரவு தோன்ற'; (நள. 88, 223). ஏய் - ஏய்வு என்பதன் பகுதி; இங்கு முதனிலைத் தொழிற் பெயராயிற்று.

பி - ம். 2. *துரப்பதோர் நெடுந்தொழில் தோன்ற.*
4. *ஏய்வி லாததோர் பயமுறச்.* (10)

**170.** ஒக்க நின்றதெவ் வுலகமு மங்கங்கே யோசை
பக்க நின்றவர்க் குற்றது பகர்வதெப் படியோ
திக்க யங்களு மயங்கின திசைகளுந் திகைத்த
புக்க யன்பதி சலிப்புற வொலித்ததப் போர்வில்.

ஓசை - அந்நாணோசையானது, எ உலகமும் - எல்லா உலகங்களிலும், அங்கங்கே - அவ்வவ்விடங்களிலே, ஒக்க நின்றது - ஒரு படியாகப் போய்ப்பரவி நின்றது; பக்கம் நின்றவர்க்கு - அம்மரங்களின் அருகே நின்றவர்களுக்கு, உற்றது - ஏற்பட்ட நிலைமையை, பகர்வது எப்படியோ - நாம் எடுத்துச் சொல்வது எப்படி முடியும்? (சொல்ல முடியாது என்றபடி): திக் கயங்களும் - எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகளும், மயங்கின - மயக்க முற்றன; திசைகளும் திகைத்த - நான்கு திசைகளும் கலக்க முற்றன; அ போர்வில் - அந்த இராம பிரானுடைய போர்க்குரிய கோதண்டம் என்னும் வில்லின் நாணொலி, அயன் பதி சலிப்பு உற - பிரமனது சத்தியலோகமும் அதிர்ச்சியடைய, புக்கு ஒலித்தது - அங்கும் புகுந்து ஒலி செய்தது.

திக்: வடசொல்; இது தமிழில் திக்கு எனவரும். திக்கயங்கள் எட்டு. திக்கயங்களும், திசைகளும்; இவற்றின் உம்மைகள் உயர்வு சிறப்பின, இச்செய்யுள் தொடர் நிலை உயர்வு நவிற்சியணியின் பாற் படும். எப்படியோ, ஓகாரம் எதிர்மறைப் பொருளது. எவ்வுலகமும்; உம்மை, முற்றும்மை. ஒலி: நாண் ஒலி. இதனை வடமொழியில் குணத்வனி என்பர். குணம் - நாண் அல்லது கயிறு.

பி - ம். 1. வெவ்வுல கத்தும்; வெவ்வுல கிற்கும்,
3. திசைகளுந் திகைக்க; திசைகளுஞ் சிதைந்த.
4. பொலிந்ததோர் பொருவில்; பொருநாண். (11)

**171.** அரிந்த மன்சிலை நாணெடி தார்த்தலு மமரர்
இரிந்து நீங்கினர் கற்பத்தி னிறுதியென் றயிர்த்தார்
பரிந்த தம்பியே பாங்குநின் றுன்மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை யுரைசெயிற் பழியவர்ப் புணரும்.

அரிந்தமன் - பகைவர்களை அடக்குபவனான இராமபிரானுடைய, சிலை நாண் - வில்லின் நாண், நெடிது ஆர்த்தலும் - நீண்ட நேரம் ஒலித்தலும், அமரர் - தேவர்கள், கற்பத்தின் இறுதி என்று அயிர்த்தார் - அது பிரமகற்ப காலத்தின் முடிவு ஆன பிரளயம் என்று ஐயமுற்றவர்களாய், இரிந்து நீங்கினர் - தத்தம் இடங்களினின்றும் நிலை கெட்டுச் செல்ல

லுற்றனர்; பரிந்த தம்பியே - இராமபிரான் பால் பேரன்புகொண்ட அவன் தம்பியாகிய இலக்குவனே, பாங்கு நின்ருன் - (அங்கு) அவ் விராமபிரான் அருகே நின்றவனுனன்; மற்றை பல்லோர் - மற்று முள்ள சுக்கிரீவன் முதலிய பலரும், புரிந்த தன்மையை - மேற்கொண்ட நிலைமையை, உரைசெயில் - எடுத்து விரித்துரைப்போமாளுல், பழி அவர் புணரும் - அவர்கள் பால் நிந்தனே அடைவதாகும்.

அரிந்தமன் - பகைவர்களே அடக்குபவன்; அரிந்தம: என்பது வட சொற்ருெடர்; இதற்குப் பாவத்தைப் போக்குபவன் என்றும், பிறவாறும் பொருள் கொள்வார் உளர்; பாகவத புரர. 1408. தம்பியே: ஏகாரம் பிரிநிலைப் பொருளது. தம்பியே; இராமபிரான் வில் நாண் ஏற்றுவதால் உண்டாகும் ஒலியை இதற்கு முன் பலமுறை உடனிருந்து கேட்டவன் ஆதலாலும், மற்றையோரினும் ஆற்றலிற் சிறந்தவன் ஆதலானும் அவன் அஞ்சாது பாங்கு நின்ருன் என்க. இராமபிரானின் விண்ணுெலியின் சிறப்பு: பால. கார்முகப்; 60; ஆரணிய. 24; உயுத்த. முதற்போர்ப். 142. உரைசெயிற் பழியவர்ப் புணரும்; எள்ளற்குரிய நிலைகளே அவர்கள் அடைந்தமையால் அவற் றைச் சொல்லாமல் விடுவதே நலமாகும் என்று கவி தம் குறிப்பைத் தெரிவித்தார் என்க.

பி - ம். 1. *அருந்த வன்சிலே; நாணெறிந்.*
2. *னிறுநியென் றேங்கி, னிறுநியென் றயிர்த்தே.*
3. *மற்றப் பல்லோர்.*
4. *பழியவாய்ப் புணரும்; சரிந்த தன்மையை யுரைசெயிற் பெரும்பழி சாரும்.* (12)

இராமபிரான் அம்பு எய்தல்

**172. எய்தல் காண்டுங்கொ லின்னுமென் றரிதின்வந் தெய்திப்**
**பொய்யின் மாருதி முதலினர் புகலுறும் பொழுதில்**
**மொய்கொள் வார்சிலே நாணினே முறையுற வாங்கி**
**வெய்ய வாளியை யாளுடை வில்லியும் விட்டான்.**

பொய் இல் மாருதி முதலினர் - பொய், பேசுவ தில்லாத அநுமன் முதலிய வாநரர்கள், 'இன்னும் எய்தல் காண்டும் கொல் - (இந்நாணுெலியை விட) இன்னும் இராமபிரான் அம்பு எய்தலேக் காணவேண்டும் போலும்!' என்று -என்று தம்முள் சொல்லிக் கொண்டு, அரிதின் வந்து எய்தி - மிக்க பிரயாசையுடன் இராமபிராளிடம்

வந்தடைந்து, புகல் உறும் பொழுதின் - அணுகிவரும் பொழுதிலே, ஆளுடைவில்லியும் - எம்மை அடியார்களாய்க் கொண்டுள்ள வில்லாளி யாகிய இராமபிரானும், மொய் கொள் வார் சிலை - வலிமை கொண்டு நீண்ட வில்லிற் பூட்டிய, நாணினை - நாணியை, முறை உற வாங்கி - முறைப்படி நன்ருக இழுத்து, வெய்ய வாளியை விட்டான் - (அதிற் பூட்டிய) ஒரு கொடிய அம்பைச் செலுத்தினன்.

அரிதின் வந்தெய்தி - மற்றையோர் நாணொலி கேட்டு நடுங்கி அலமர, அநுமன் முதலிய ஒருசில வாநரவீரர்களே தேறி அரிதின் முன்வந்தனர் 'என்பதாம். பொய்யில் மாருதி; முன் (146) 'பொய் யிலாதவன்' என்றமையும், 'மெய்ம்மை பூண்டவன்' (சுந்தர. 62) என்றமையும் நோக்குக. ஆளுடைவில்லி; இவ்வாறு ஆளுடைய பிள்ளை, ஆளுடை அரசு, ஆளுடை நம்பி, ஆளுடை அடிகள் எனச் சைவ சமயாசாரியர்களைச் சிறப்பித்துக் கூறுவதும் காண்க. ஸ்ரீ கம்ப நாடர் இராமபிரானை, 'ஆளுடை ஐயன்', 'ஆளுடைய நாயகன்' என்றும், 'ஆண்டான்' என்றும் பாராட்டும் பக்தி உணர்ச்சியின் பெருக்கை இந்நூலிற் பல இடங்களிலும் காணலாம்.

பி - ம். 1. கொலினும்.

2. புகழ்வுறும், புடையுறும்; போழ்தின்.

3. முறைமையின் வாங்கி, முன்கையின் வாங்கி, வாளியொன் றினை யாதினா யகன்விடுத் திடவே. (13)

இராமபிரான் தூண்டிய அம்பு அம்மரங்களோடு கீழேழ் உலகங்களையும் தொளைத்துச் சென்றமை

173. ஏழு மாமர முருவிக்கீ ழுலகமென் றிசைக்கும்
ஏழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற
ஏழி லாமையான் மீண்டதவ் விராகவன் பகழி
ஏழு கண்டபி னுருவுமா லொழிவதன் றின்னும்.

இராகவன் அ பகழி - இராமபிரானுடைய அவ்வம்பு, ஏழு மா மரம் உருவி - அந்த ஏழு பெரிய மரா மரங்களையும் தொளைத்து, கீழ் உலகம் என்று இசைக்கும் ஏழும் - கீழ் உலகங்கள் என்று சொல்லப் பெறும் ஏழையும், ஊடு புக்கு உருவி - உட்புகுந்து துளைத்துச் சென்று, பின் - அதன்மேல், உடன் அடுத்து இயன்ற - அவற்றைத் தொடர்ந்து பொருந்தியுள்ள, ஏழு இலாமையால் - ஏழு என்னும் தொகைகொண்ட

பொருள் வேறு இலாமையாலே, மீண்டது - திரும்பி வந்து விட்டது (அவ்வம்பு) ; இன்னும் - மேலும், ஏழு கண்டபின், ஏழு என்று எண்ணப்படும் பொருள்களைக் கண்ட பிறகு, உருவும் - (சென்று) தொளைத்து விடும் ; ஒழிவது அன்று - அவ்வம்பு அதோடு ஒழிந்து விட்டுவிடுவதன்று. ஆல் : ஆசை.

இராமபிரான் விடுத்த அம்பு ஏழு மராமரங்களையும் தொளைத்து, அவற்றின் கீழுள்ள ஏழு உலகங்களையும் தொளைத்து, மீண்ட அருஞ் செயலை அவற்றோடு அமையவிட மனமின்றி, நம் ஆசிரியர், மேலும் ஏழாய் இணைந்த பொருள் வேறு இல்லாமையால் மீண்டது என ஒரு காரணத்தை முன்னிட்டு முடித்ததால், இஃது ஏதுத்தற்குறிப் பேற்ற அணியாகும் ; மூன்றும் அடியிலும், நான்காம் அடியிலும் உள்ள ஏழு என்னும் சொற்கள் எண்ணலளவை ஆகுபெயர்கள். இராமபிரான் அம்பு, இம்மராமரங்கள் ஏழொடு கீழேழ் உலகங்களையும் ஊடுருவிச் சென்று மீண்டது என்ற செய்தியை அழகிய மணவாளதாஸர் என்னும் பிள்ளைப் பெருமாளையங்கார்,

மாதவ ரும்பர் பெருமா ளரங்கர் வலியுணரா
தாதவன் மைந்த னயிர்த்தவந் நாளிலக் காயநெடும்
பாதவ மேழு முடனே நெடுங்கணை பட்டுருவப்
பூதல மேழு மெழுபா தலங்களும் புண்பட்டவே.

(திருவரங்கத்து மாலை. 41.)

இராமபிரான் அம்மரா மரங்களின் மீது ஏவிய அம்பு ஸப்த ஜாதி என்பர். இதுவும், அடுத்த செய்யுளும் மிகவும் நயமுடைய செய்யுட்கள் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 2. னடுக்கியன்ற, னெடுத்தியன்ற.
3. ஏழி லாமையின் ஞெழிந்தது, ஏழி லாமையா லொழிவ தின்று; லொழிந்ததால்.
4. லொழிந்தயன் றின்னும்.

ஏழாய் உள்ள பல பொருள்களும் அஞ்சினமை

**174.** ஏழு வேலையு முலகமே லுயர்ந்தன வேழும்
ஏழு குன்றமு மிருடிக ளெழுவரும் புரவி
ஏழு மங்கைய ரெழுவரு நடுங்கின ரென்ப
ஏழு பெற்றதோ விக்கணைக் கிலக்கமென் றெண்ணி.

ஏழு வேலையும் - ஏழு கடல்களும், உயர்ந்தன மேல் உலகம் ஏழும் - மேலே உயர்ந்துள்ளனவான உலகங்கள் ஏழும், ஏழு குன்றமும் - ஏழு குலகிரிகளும், இருடிகள் எழுவரும் - ஏழு முனிவர்களும், புரவி ஏழும்-சூரியன் இரதத்தை இழுத்துச் செல்லும் ஏழு குதிரைகளும், மங்கையர் எழுவரும் - ஸப்த கன்னியர்களும், இ கணக்கு இலக்கம் ஏழு பெற்றதோ என்று எண்ணி - இந்த அம்புக்குக் குறி ஏழு என்னும் தொகைப் பொருள்கள் அனைத்துமோ என்று எண்ணி, நடுங்கினர் - (அஞ்சி) நடுக்கமுற்றனர். என்ப, அசை.

இச்செய்யுளில் ஏழு என்னும் எண்ணால் தொகுதியாய் உள்ள பொருள்களை ஒன்றுகூட்டிக் கூறியது கவிசாதுரியமாம். ஏழுவேலை : உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றையுடைய கடல்கள். மேலேழுலகம் : பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜநலோகம், மஹாலோகம், தபோலோகம், ஸத்தியலோகம் என்பன. ஏழுகுன்றம் ; கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஹேமகூடம், கந்தமாதனம் என்பன. இருடிகள் எழுவர் : அத்திரி, பிருகு, குத்ஸவர், வசிஷ்டர், கௌதமர், காசியபர், ஆங்கிரஸர் என்பவர். புரவி ஏழு : சூரியன் இரதத்தில் பூட்டப் பெறும் குதிரைகள் ஏழு : வேத சந்தஸ்களான, காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதி என்பனவே சூரியன் தேரில் குதிரைகளாக அமைந்துள்ளன என்பாரும் உளர். மங்கையர் எழுவர் ; பிராஹ்மி, மாகேச்வரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி எனப்படுவர். இச்செய்யுளில், அஃறிணை உயர்திணைப் பொருள்கள் விரவி, உயர்திணை வினை கொண்டு முடிந்தமை, உயர்திணையின் சிறப்பு நோக்கி; இது திணைவழு வமைதியாகும் (நன். சூ. 368 ) என்ப. இராமபிரான் அம்பின் திறம் ; 'அலையுருவக் கடலுருவத் தாண்டகைத னீண்டுயர்ந்த, நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா, உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைத னுரமுருவி, மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி' (பால. குலமுறை. 26) ; ஒப்பு : 'வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி, பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப், புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக், கேழற் பன்றி வீழ வயல, தாழற் புற்றத் துடும்பிற் செற்றும், வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்'; (புறம். 152 : 1-6.)

இராமபிரான் மராமரம் ஏழினையும் துளைத்த செய்தியைத் திருத்தக்க தேவர் புகழ்ந்தது : 'மராமர மேழு மெய்த வாங்குவிற் றடக்கை

வல்வில், இராமனே வல்ல னென்ப திசையலாற் கண்ட தில்லை' (சீவக. 1643) என்ற செய்யுட் பகுதியிற் காண்க. இவ்வாறு ஒரே அம்பு கொண்டு பலவற்றை அடித்து வீழ்த்தும் அரிய விற்றொழிலை வல்வில் வேட்டம் என்பர்; புறநா. 150; பெரிய திருமொழி. 5 : 1-4. வல்வில் ஓரி - ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்ல எய்யும் வில் உடையவன்; ஐங். 373-3; குறுந். 100-5, உரைக் குறிப்புக் காண்க. புத்தக ஏடுகளை ஒன்றுபோல் பலவற்றைத் துளைக்கும் ஓர் அற்ப ஜீவனான பூச்சிக்கு, 'இராமபாணம்' என்ற பெயரமைந்ததும் உண்மையான இராமபாணத்தின் வலியின் சிறப்புக்கு ஓர் எடுத்துக்காட்டு என்னலாம்.

பி - ம். 3. நடுங்கின வென்ப, நடுங்கின வென்னே, நடுங்கின ரென்ன.
4. எழின் மேலதோ, எழு பெற்றபேர், எழு பெற்றதோர், எழின் மேற்றதோ. (15)

சுக்கிரீவன் கூறியது

175. அன்ன தாயினு மறத்தினுக் காருயிர்த் துணைவன்
என்னுந் தன்மையை நோக்கின ரியாவரு மெவையும்
பொன்னின் வார்கழற் புதுநறுந் தாமரை பூண்டு
சென்னி மேற்கொண்ட வருக்கன்சே யிவையிவை செப்பும்.

அன்னது ஆயினும் - அவ்வாறு எங்கும் பெரிய அச்சம் உண்டானாலும், அறத்தினுக்கு ஆர் உயிர் துணைவன் என்னும் - தருமத்திற்கு அரிய உயிர்த்துணைவனாய் இருப்பவன் என்று சொல்லும், தன்மையை- தகுதியை, யாவரும் எவையும் நோக்கினர் - எல்லோரும் யாவையும் நோக்கி அச்சம் ஒழிந்தவராயினர்; (அப்பொழுது), பொன்னின் வார் கழல் - பொன்னால் அமைந்த நீண்ட வீரக்கழல் அணிந்த, புது நறும் தாமரை பூண்டு - அன்று மலர்ந்ததும் நல்ல மணமுடைய தேனோடும் கூடி விளங்கும் தாமரை மலர் போன்றதுமான இராமபிரான் திருவடிகளை ஏற்று, சென்னிமேல் கொண்ட - தன் சிரமேற் கொண்டு வணங்கிய, அருக்கன் சேய் - சூரிய குமாரனான சுக்கிரீவன், இவை இவை செப்பும் - இந்த இந்த வார்த்தைகளைச் சொல்லலானான்: (சொன்னவை அடுத்துவரும் கவிகளால் விளங்கும்).

இச் செய்யுளில், வானரத் தலைவர்கள் அச்சம் நீங்கினமைக்குக் காரணம் கூறப்பெற்றுள்ளது. இராமபிரான் அறத்தினுக் காருயிர்த் துணைவன்; ஆரணிய. 938: சுந்தர. 363, 1120, 1123. இராமபிரான் தருமாத்மா என்றும், அறந் தலைநிறுத்த வந்தவன் என்றும் இந்நூலிற் பெருவழக்காகப் பல விடங்களில் அறுதியிட்டு உறுதிப்

படுத்தியுள்ளமை காணலாம் ; 'அறநெறி நிறுத்த வந்த இறை' 360. யாவரும் எவையும் அச்சம் நீங்கினமைக்குக் காரணம், அவ்வம்பு அற மல்லாததைச் செய்யாது என்ற உறுதியான நம்பிக்கையால் என்க. இனி அனைத்திற்கு மாருயிர்த் துணைவன் என்ற பாடங் கொண்டு, உயர்திணை அஃறிணைப் பொருள் யாவற்றிற்கும், எனவும் பொருள் கொள்ளலும் ஒன்றும். கழற்றாமரை - கழலணிந்த தாமரை போன்ற பாதம் ; இஃது இல்பொருளுவமை ; தாமரை இங்கு உவமையாகு பெயர். யாவரும் எவையும் நோக்கினர் : உயர்திணையோடு சேர்ந்த அஃறிணைப் பொருளும் உயர்திணை வினைகொண்டது ; 174. இவை இவை : அடுக்கு இசைநிறைப் பொருளது.

பி - ம். 1. *வங்கறத்திற் ; மனைத்திற்கு மாருயிர்த்.*

2. *கினைந்தன ரியாவரு மெவரும், நோக்கின யாவையு மெவையும், நோக்கின ரமரர்க ளியாவரும்.*

3. *புதுவிறத் தாமரை ; கிறந்தாமரை கழல்பொலி நறுந்.*

4. *மேற்கொளுஉ, மேற்கொளும், யிவை யிவை புகலும்.*

சில சுவடிகளில் இதனோடு மராமரப் படலம் முடிவுறும். (16)

வேறு

சுக்கிரீவன் இராமபிரானைத் துதித்தல்

176. வையநீ வானுநீ மற்றுநீ மலரின்மேல்
ஐயனீ யாழிமா மாலுநீ யரனுநீ
செய்யதீ வினைதெறுந் தேவுநீ நாயினேன்
உய்யவந் துதவினை யுலகமுந் துதவினாய்.

(சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), " வையம் நீ - பூமியும் நீயே ; வானும் நீ - ஆகாயமும் நீயே ; மற்றும் நீ - ஒழிந்த மற்ற பூதங்களாகிய நீர், காற்று, தீ என்பனவும் நீயே ; மலரின் மேல் ஐயன் நீ - தாமரை மலர்மீது வாழும் தலைவனான பிரமதேவனும் நீயேதான் ; ஆழிமா மாலும் நீ - திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டுள்ள மாட்சிமைபெற்ற திருமாலும் நீயே ; அரனும் நீ - சிவபெருமானும் நீ ; தீவினை தெறும் - பாவங்களை அழிக்கும், செய்ய தேவும் நீ - சிறந்த தேவனும் நீயே ; உலகு முந்து உதவினாய்-உலகங்களை முன்காலத்துப் படைத்த நீ, நாயினேன் உய்ய - நாய் போன்ற அடியேன் நற்கதிபெற, வந்து உதவினாய் - என்னை நாடி வந்து திருவருள் புரிந்தனை.

முன்பு இராமபிரானின் ஆற்றலில் ஐயங்கொண்டிருந்த சுக்கிரீவன் இப்பொழுது தன் முன் நிற்பவனான இராமபிரான் பிரமன் திருமால் சிவபிரான் என்னும் முத்தேவர்களும், பஞ்ச பூதங்களுமாய் நிறைந்த

பரம்பொருளே என்று முன் அநுமன் கூறிய உண்மையை உணர்ந்து கூறினன் என்க. இராமபிரான் மும்மூர்த்தியும் ஒன்றாய் அமைந்த ஆதிப்பரம் பொருளே என்பது இந்நூலில் காண்டந்தோறும் முதலில் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுள்களாலும், தண்டகாரணியத்து முனிவர்கள், விராதன், இந்திரன், கவந்தன், சவரி முதலினோர் துதிகளாக உள்ள பாடல்களாலும், ஆங்காங்கு அநுமன் கூற்றுக்களாலும் விளங்கப் பெறுவன காணலாம். தேவு - தெய்வம் (பிங்); 'நரகரைத் தேவு செய்வானும்' (தேவாரம்.)

பி - ம். 1. சுருதிநீ மலரின்மேல்.
2. யாழிநீ யாழிவா ழமலனீ, யாழிவாழ் மாலுநீ, யாழிமேலாழியாம் மாலுநீ, யாழியார் மாலுநீ.
3. செய்யநீ யனையவத் தேவுநீ, செய்யதீ வினைகளை தேவு, செய்யதீ வினையறுந், 4. யுலகமுண் டுதவினாய்.

177. என்னெனக் கரியதெப் பொருளுமெற் கெளியதால்
உன்னையித் தலைவிடுத் துதவினர் விதியினர்
அன்னையொப் புடையவுன் னடியருக் கடியன்யான்
மன்னவர்க் கரசவென் றுரைசெய்தான் வசையிலான்.

வசை இலான் - குற்றமற்ற அச்சுக்கிரீவன், (மேலும் இராமபிரானை நோக்கி), 'மன்னவர்க்கரச-அரசர்களுக்கெல்லாம் அரசனே! விதியினர் (முற்பிறப்பில் யான் செய்த நல்வினையின் பயனால்) விதிபானது, உன்னை இ தலை விடுத்து - உன்னை இங்கு வருமாறு செய்து, உதவினர் - எனக்கு உதவி செய்தது; என் எனக்கு அரியது - எனக்கு இனி எதுதான் அரியதாகும்? எ பொருளும் எற்கு எளியது ஆல் - எந்தப் பொருளும் எனக்கு எளிதில் அடையக் கூடுவதே ஆகும்; ஆதலின், அன்னை ஒப்பு உடைய உன் - தாய்க்கு ஒப்பாகும் (அன்புடைய) உனது, அடியருக்கு-அடியவர்களுக்கு, யான் அடியன் - யான் அடியவன் ஆவேன்' என்று-என, உரை செய்தான் - சொல்லித் துதித்தான்.

இராமபிரானை, மன்னவர்க் கரச என்றது, சக்கர்வர்த்தி திருக்குமாரனானதால். விதியினர் உதவினர் என்றது, விதிக்கு உள்ள சிறப்பு நோக்கிக் கூறிய பன்மை: இது, திணை வழுவமைதியோடு எண் வழுவமைதியும் ஆகும். அடியருக் கடியன்; யான் இனி உன்னடியார்க் கடியனாய் இருந்து உனக்குப் பணி புரிவேன் என்பதைப் புலப்படுத்தியது.

பி - ம். 1. பொருளுமற் றெளிதலால், பொருளெனத் தெளிதலால் பொருளுனக் கெளிதலா(ல), பொருளினி தேயனால்.
2. உதவினர் யாவரே, உதவினர் கதியினர்.
4. கடியனியான், கடியனுன்,

மற்றை வானர வீரர்களின் மகிழ்ச்சி

178. ஆடினர் பாடின ரங்குமிங் குங்கலந்
தோடின ருவகையா நறவையுண் டுணர்கிலார்
நேடினும் வாலிகா லனையென நெடிதுநாள்
வாடினர் தோளெலாம் வளரமற் றவரெலாம்.

நெடிது நாள் வாடினர் அவர் எலாம் - (வாலியின் கொடுமையால்) நெடுங்காலமாய் வாடி வருந்தினவர்களான அந்த வானரர் எல்லாரும், 'வாலி காலனை - வாலிக்கு யமனை, நேடினும் - தேடி யடைந்தோம்'; என - என்று, உவகையின் நறவை உண்டு - மகிழ்ச்சி என்னும் கள்ளை அருந்தி, உணர்கிலார் - தம்மை அறியும் உணர்ச்சி அற்றவர்களாகி, தோள் எலாம் வளர - புயங்கள் எல்லாம் (மகிழ்ச்சியால்) வளர்ந்து பூரிக்க, ஆடினர் பாடினர் - ஆடிப் பாடினர்கள்; அங்கும் இங்கும் கலந்து ஓடினர் - கண்ட இடங்களில், ஒன்று கூடி ஓடினர்கள். மற்று; அசை.

இச்செய்யுளுக்கு ஒப்பு: 'ஆடினர் பாடின ரங்கு மிங்குமாய் ஓடின ருவகையின் நறவுண் டோர்கிலார்' (பால. திருவவதாரப்: 15): 'அந்தமில் லுவகைய ளாடிப் பாடினள்' (பால, கார்முகப்: 57): 'ஓடின னுலாவின னுவகைத்தே னுண்டான்' (சுந்தர: 396); 'அழுதனர் சிலவர் முன்னின் ருர்த்தனர் சிலவ ரண்மித், தொழுதனர் சிலவ ராடித் துள்ளினர் சிலவர்' (சுந்தர. 1248.); 'ஓடுவார் விழுவாருகந் தாலிப்பார், நாடுவார்நம் பிரானெங்குற்ரு னென்பார், பாடுவார்களும் பல்பறை கொட்டநின் ருடுவார்களு மாயிற்றுய்ப் பாடியே' (பெரியாழ்வார், 1, 2, 2.). இனி, மற்று என்பதை அசையாகக் கொள்ளாமல், மற்றவ ரெல்லாம் என இயைத்து, அநுமன் சுக்கிரீவ னொழிந்த மற்ற வானரர்களை எல்லாம் எனக் கொள்ளலும் அமையும். வாலிகாலன்; திருவரங்கக் கலம்பகம்: 38.

பி - ம். 1. மிங்குமிரிந், மிங்குங்கலித், மிங்குங்குதித்.
2. ருவகையின் நறவை, ருவகையார் நறவை, ருவகைமா நறவை.
4. வாழமற் றவரெலாம்.

மராமரப் படலம் முற்றும்.

## 5. துந்துபிப் படலம்

இது, முன் வாலியாற் கொல்லப்பட்டவனும், மாயாவி என்பவன் தம்பியும், எருமைக் கடாவின் உருவமைந்தவனு மான துந்துபி என்னும் அசுரனுடைய, உலர்ந்து கிடந்த எலும்புக் கூட்டின் வரலாற்றை யறிந்து இராமபிரான் ஏவ, இலக்குவன் அதனைத் தன் கால் விரலால் எற்றிப் பல யோசனை தூரத்திற் கப்பால் அது போய் விழச்செய்த செய்தியைக் கூறும் படலம் என விரியும். இத்துந்துபி, அசுர சிற்பியான மயன் என்பானுடைய மைந்தன் என்பர். இவன் உடலை, மராமரங்களைத் தொளைத்ததற்கு முன்பே இராமபிரானே தன் கால் விரலால் உந்தி எறிந்ததாக வான்மீகமும், அத்யாத்மகமும் கூறும்.

இராமபிரான் துந்துபியின் உடற்றொகுதியைக் கண்டது

**179.** அண்டமும் மகிலமு மடையவன் றனலிடைப்
பண்டுவெந் ததுநெடும் பசைவறந் திடினும்வான்
மண்டலந் தொடுவதம் மலையின்மேன் மலையெனக்
கண்டனன் றுந்துபிக் கடலனு னுடலரோ.

அண்டமும் - அண்ட கோளமும், அகிலமும் - அதனுள் அடங்கிய எல்லா உலகங்களும், அடைய - ஒரு சேர, அன்று - அப்பிரளய முடிவில், அனல் இடை பண்டு வெந்தது - (அப்போது உண்டான) ஊழித் தீயில் முன்வெந்தது என்று சொல்லத் தக்கதும், நெடும் பசை வறந்திடினும் - அதனிடமிருந்த நிணம், ரத்தம் தசை முதலியவற்றில் இருந்தபற்றுக்கள் அழிந்து உலர்ந்த நிலையிலும், வான்மண்டலம் தொடுவது - ஆகாய மண்டலத்தைப் போய்த் தொடுவதுமான, கடல் அனன் துந்துபி உடலை - கடல் போன்று பரவிக்கிடந்த துந்துபி என்னும் அசுரன் உடலை, அ மலையின் மேல் மலை என, அந்த ருசியமூக பருவ தத்தின் மீது, மற்றொரு மலைகிடப்பது போன்று கிடக்க, கண்டனன்- இராமபிரான் பார்த்தான். அரோ : ஈற்றசை.

பசை வறந்திடினும்; தோல் நிணம் தசை முதலியவற்றுடன் இருந்த நிலையில் அவன் உடலின் பருமனையும் வலிமையையும் உணர வைத்ததாம். மலையின் மேன்மலை ; ஒப்பு : 'முந்தொரு கருமலை முகட்டு முன்றிலின், சந்திர னொளியொடு தழுவச் சாத்திய, அந்தமில் கனைகட லமரர் நாட்டிய, மந்தர கிரியென வயங்கு வான்றனை' (ஆரணிய. 178). உகாந்த பிரளய முடிவில் உண்டாகும் ஊழித்

தீயில் எரிந்து கிடந்த இவ்வண்ட கோளமே போன்றும், வானமண்டலத்தைத் தொட்டும் கடல்போற் பரந்தும் துந்துபியின் உடலின் என்புக்கூடு கிடந்தது என்க. துந்துபி: துந்துபி என்னும் பேரிகை வாத்தியம் போலும் பெருமுழக்க மிடுபவன் என்று பொருள் கூறுவர்; அவ்வாருயின், ஒலிக் குறிப்பினுல் வந்தபெயர்; இச்சொல் துந்துமி என மாறி வழங்குவதும் உண்டு. இச்செய்யுளில், வான் உயரத்திற்கும், கடல் பெருமைக்கும் உதாரணங்களாயின.

பி - ம். 1. மகிலமு முடையயன், மகிலமு முண்டயன், வயினிடை.
2. வெந்தனநெடும் வெந்ததென.
3. தொடுவதோர்.
4. றுந்துமிக். (1)

சில பிரதிகளில் இதனுடன் மராமரப் படலம் முற்றுப் பெறும்.

இராமபிரான் இஃது என்ன என்று கேட்டது

180. தென்புலக் கிழவனூர் மயிடமோ திசையின்வாழ்
வன்புலக் கரிமடிந் ததுகொலோ மகரமீன்
என்புலப் புறவுலர்ந் ததுகொலோ விதுவெனு
உன்புலக் குரியநீ யுரைசெயா யெனவவன்.

(அதனைக் கண்ட இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி), 'இது - இதோ தெரியும் இது, தென்புலம் கிழவன் - தெற்குத் திசைக்குரிய தேவனுன யமன், ஊர் - ஊர்ந்துசெல்லும், மயிடமோ - எருமைக் கடாவோ? திசையின் வாழ் - எட்டுத்திக்குக்களிலும் தங்கி வாழும், வன்பு உலம் கரி - வலிய பருத்த யானைகளில் ஒன்று, மடிந்தது கொலோ - மடிந்து விட்டதோ? மகர மீன் - சுரு என்னும் பெரிய மீன், உலப்பு உற - அழிய, என்பு உலர்ந்தது கொலோ - அதன் எலும்பு உலர்ந்து கிடக்கின்றதுதோ?' எனு-என்று வியந்து, 'உன் புலக்கு உரிய - உன் அறிவுக்கு உரியவற்றை, நீ உரை செயாய் என - நீ (உணர்ந்து) சொல்லுவாயாக,' என்று கேட்க, அவன் - அந்தச் சுக்கிரீவனும்;

இதுவும் அடுத்த இரு செய்யுள்களும் தொடர்ந்து குளகமாக இயைந்து, உரை செய்தான் (182) என்னும் வினை முடிவுகொள்ளும். தென்புலக்கிழவன்; இரு நிலக் கிழவன் என்பது போல; கிழமை - உரிமை. மயிடம், மஹிஷம் என்ற வடசொல்லின் திரிபு. உலம் - வலிமை. வன்புல கரி என்று பிரித்தும் பொருள் கூறலாம்; வன்புலம் - குறிஞ்சி நிலம். மகரமீன்; சுரு எனும் மீன். புலக்குரிய; தொகுத்தல்

விகாரம். கொலோ: கொல், ஐயப்பொருளை உணர்த்தி நின்றது; இச் செய்யுள் பல வகையாய் ஐயமேற் கொண்டு கூறியதாதலின், ஐய வணியின் பாற்படும்.

பி - ம். 1. கிழவனே, மயிடமா, மயிடனோ.

2. மகர நீர்; மடிந்தது கொலா.

3. என் புலப்பற; வுலந்தது கொலாம்; விதமெனக்.

4. உன்புலப் பரிவினை னுரைசெய்வாய்; உன் புலத்தறியினி; நீயறிதியா னுரைசெயாயென, (2)

சுக்கிரீவன் துந்துபியின் வரலாற்றை இராமபிரானிடங் கூறுதல்

181. துந்துபிப் பெயருடைச் சுடுசினத் தவுணன்மீ
இந்துவைத் தொடநிமிர்ந் தெழுமருப் பிணையினன்
மந்தரக் கிரியெனப் பெரியவன் மகரநீர்
சிந்திடக் கருநிறத் தரியினைத் தேடுவான்.

'மீ இந்துவை தொட - மேலே (வானில்) உள்ள சந்திரனைப் போய்த் தொடும்படியாக, நிமிர்ந்து எழு - மேலெழுந்து வளர்ந்துள்ள, மருப்பு இணையினன் - இரண்டு கொம்புகளையுடையவனும், மந்தர கிரி என பெரியவன் - மந்தரமலைபோன்ற பெரிய உருவையுடையவனுமான, துந்துபி பெயருடை - துந்துபி என்னும் பெயரையுடைய, சுடு சினத்து அவுணன்-சுடுகின்ற (தீப்போன்ற கொடிய) கோபத்தையுடைய அசுரன், மகர நீர் சிந்திட - கடலில் உள்ள நீர் சிதறிச் சிந்தும்படி, கருநிறத்து அரியினை - கரிய நிறத்தையுடைய திருமாலை, தேடுவான் - (போரிடத்) தேடிச் சென்றான்.

முன், 180 இல், தென்புலக் கிழவனூர் மயிடமோ என்றதாலும், இங்கு மருப்பிணையினன் என்றதாலும், அத்துந்துபி எருமையின் உருவம் அமைந்தவன் என்பது விளங்குதல் காண்க. மந்தரக்கிரி சந்தம் நோக்கி ஒற்று மிகுந்தது; சடாயுவை, 'மந்தர கிரியென வயங்கு வான்றனை, (ஆரணிய. 178); அநுமனை, 'மகவாமை முதுகிற் றோன்றும் மந்தர கிரியுமானன்'; (1001) என ஒப்பிட்டமை காண்க. துந்துபி திருமாலைத் தேடிச் சென்றது, அவரொடும் போர் புரிய. இஃது அடுத்த செய்யுளால் விளங்குவது காண்க. நீர் சிந்திட, என்றமையால் துந்துபி திருமால் பள்ளிகொண்டிருந்த கடற்குச் சென்றமை கூறப்பெற்றது.

பி - ம். 1. தவுணன்வான்.

3. கிரியெனும்.

4. சிந்தியக் கருநிறத்; கருநிறக் கிரியினைத்; தேடினான். (3)

182. அங்குவந் தரியெதிர்ந் தமைதியென் னென்றலும்
பொங்குவெஞ் செருவினிற் பொருதியென் றுரைசெயக்
கங்கையின் கணவனக் கறைமிடற் றமலனே
உங்கதப் பெருவலிக் கொருவனென் றுரைசெய்தான்.

'அங்கு - அவ்விடத்தில், அரி வந்து எதிர்ந்து - திருமால் வந்து எதிர்ப்பட்டு, 'அமைதி என் என்றலும் - நீ இங்கு வந்த தன்மை என்ன' என்று வினவலும், (அவன்), 'பொங்கு வெம் செருவினில் சினம் பொங்குகின்ற கொடிய போரில், பொருதி - என்னோடு போர் புரிவாயாக!' என்று உரை செய - என்று சொல்ல, (அத்திருமாலும் அவனை நோக்கி), 'கங்கையின் கணவன் - கங்காதேவியின் கணவனான, அ கறை மிடற்று அமலனே - விஷம் தங்கிய கழுத்தை யுடைய பரிசுத்தனான அச்சிவபெருமானே, உம் கத பெருவலிக்கு - உங்களைப் போன்றவர்களின் கோபமிக்க பெரிய வலிமைக்கு, ஒருவன் என்று - எதிரிடக் கூடிய ஒருவனுவான்' என்று, உரை செய்தான் - மறுமொழி கூறினன்.

சிவபெருமானுக்குக் கங்கையும் ஒரு தேவியார்வாள்; பால: ஆற்றுப்: 3. கறை - விஷம் (பிங்); கறைமிடற் றமலன், இது முரணணியும் ஆகும். கதம் - சினம்: வடசொல்.

பி - ம். 1. *றமைதி யென்றதும்.* 2. *செருவினிற் புகுதியென்.*
3. *கங்கைதங் கணிசடைக்.*
4. *பெருவிறற்; உங்கள்வெங் கதவலிக், குரைசெய.* (4)

183. கடிதுசென் றவனுமக் கடவுடன் கயிலையைக்
கொடியகொம் பினின்மடுத் தெழுதலுங் குறுகிமுன்
நொடிதிநின் குறையையென் றலுநுவன் றனனரோ
முடிவில்வெஞ் செருவெனக் குதவுவான் முயல்கெனு.

அவனும்-அந்தத் துந்துபி என்னும் அவுணனும், கடிது சென்று - வேகமாகப் போய், அ கடவுள் தன் கயிலையை - அக் கடவுளின் இருப்பிடமான கயிலாய மலையை, கொடிய கொம்பினில் மடுத்து - தன் கொடுந்தன்மையையுடைய கொம்புகளால் குத்திப் பெயர்த் தெடுத்து, எழுதலும் - எழுந்தபோது, முன் குறுகி - (அச்சிவ பெருமான்) அவன் முன் அணுகி, 'நின் குறையை - நொடிதி என்றலும், - உன் குறையைச் சொல்' என்று கூறலும், 'முடிவு இல் வெம் செரு - முடிவு இல்லாத கொடிய போரினை, எனக்கு உதவுவான்

முயல்க எனு - எனக்கு கிட்டும்படி முயல்வாயாக !' என்று, (அதாவது போர் செய்ய வருவாயாக என்று), நுவன்றனன்-அத்துந்துபி கூறினுன். அரோ : அசை.

இதில் சிவபெருமான் என்ற எழுவாய் வருவிக்கப் பெற்றது. நொடித்தல் - சொல்லுதல் ; 'நெடியோன் விளம்ப நொடிவான்' (ஆரணிய : 956). செய்வான் முயல்க : செய்வான் - செய்யும் பொருட்டு : முயல்க எனு என்பது முயல்கெனு எனத் தொகுத்து நின்றது செய்யுள் விகாரம்.

பி - ம். 1. கைலையைக், கைலேயிற். 2. கொம்பினி லெடுத்திடுதலும்' 3. குறையையென் றனுறவன் றனனரோ, குறையெனச் சடையினு னுவலலும். 4. வெஞ்சமரநீ முயலுவா. (5)

184. மூலமே வீரமே மூடினு யோடுபோர்
ஏலுமே தேவர்பா லேகெனு வேவினன்
சாலநாள் போர்செய்வா யாதியேற் சாரல்போய்
வாலிபா லேயெனு வானுளோர் வானுளான்.

(அது கேட்ட சிவபிரான்), ' மூலமே வீரமே மூடினுயோடு - ஆதி முதற் கொண்டே வீரத் தொழிலிலேயே மூடிக்கிடக்கும் உன்னேடு, போர் ஏலுமே - போரிடுவது இயலுமோ ? (இயலாது என்றபடி) ; ஆதலின்), தேவர்பால் ஏகு எனு - நீ தேவர்களிடம் போர் செய்யப் போவாயாக' என்று, ஏவினுன் - அவனை அங்குச் செல்ல விடுத்தான் ; (அவ்வாறு அவ்வவுணன் தேவர்களிடஞ்சென்று அவர்களைப் போருக்கழைக்க), வான் உளோர் வான் உளான் - சுவர்க்கத்தில் உள்ள வானவர்களுக்குத் தலைவனுன இந்திரன், சால நாள் போர் செய்வாய் ஆதியேல் - (நீ) பலகாலம் போரிட வந்தவன் ஆவாயெனில், வாலி பாலே - வாலியினிடத்தே, போய் சாரல் - போய்ச் சேருவாயாக !' எனு - என்று,

இதுவும் அடுத்துவரும் இருபாடல்களும் குளகமாய் இயைந்து வினை முடிவு கொள்ளும். மூடுதல் - நிரம்பிக் கவிந்துகொள்ளல். ஏலுமே: ஏகாரம் எதிர்மறை வினுப் பொருளது. சாரல்......ஏய். மலைச் சாரல் வழிச்சென்று வாலியை அடை எனலும் ஆம்.

பி - ம். 1. வீரமோ மூடினுய், வீரமா மூடினுய், வீரமே மூடினுர் ; மூலமாய் வீரமே மூடுமுன் ஞேடுபோர்.
2. தேவர்பா லென்றெனு, தேவர்பா லேகெனு.
3. ஞரியோ சாதியோ, யாதினி சாருவாய்.
4. லேவினுன், லேகெனு லேகென்முன், (6)

185. அன்னவன் விடவுவந் தவனும்வந் தரிகடம்
மன்னவ வருகபோர் செயவெனு மலையினைச்
சின்னபின் னம்படுத் திடுதலுஞ் சினவியென்
முன்னவன் முன்னர்வந் தவனொடும் முனைதலும்.

அன்னவன் விட - அவ்வாறு இந்திரன் சொல்லி அனுப்ப, அவனும் - அத்துந்துபியும், உவந்து வந்து - மகிழ்ச்சியோடு கிட்கிந்தைக்கு வந்து (வாலியை நோக்கி), 'அரிகள் தம் மன்னவ - வாநரங்களுக்கு அரசனே! போர் செய வருக எனு - என்னோடு போரிட நீ வருவாயாக!' என்று கூறி, மலையினை - அவ்வாலிக்கு உரிய அம் மலையை, சின்ன பின்னம் படுத்திடுதலும் - பல துண்டுகளாகத் தகர்த்தலும், என் முன்னவன் - என் தமயனான வாலி, சினவி - கோபங் கொண்டு, முன்னர் வந்து - எதிரே வந்து, அவனொடு - அத்துந்துபியுடன், முனைதலும் - போர் செய்யும் அளவில்,

இதுவும் அடுத்த செய்யுளோடு குளகமாய்த் தொடர்ந்து முடியும். அன்னவன் : அகரச்சுட்டடியாக வந்த சொல். சின்ன பின்னம் - சிறிதும் பெரிதுமான துண்டங்கள்; இது வடமொழித் தொடர்: சுந்தர. 463 ; உயுத்த. அங்கதன்றூது ; 11. இது, கண்ட துண்டமெனவும் வழங்கும். சினவி : சினவு என்ற வினையடியாகப் பிறந்த வினையெச்சம். முனைதல் - போர்புரிதல் ; தொழிற்பெயர்.

பி - ம். 1. தவனுமவர் தங்குமவர்; தங்குமின், தங்கும்மவர்.
2. மன்னவன் வருக ; செய்கெனு.
3. சின்னபின் னப்படுத் தெய்தலும் ; படுத்திடுதலும்.
4. தனையவன் முனைதலும் ; முனையமற் றவனொடும்.

186. இருவருஞ் செருவுறும் பொழுதினின் னவர்களென்
றொருவருஞ் சிறிதுணர்ந் திலர்களெவ் வுலகமும்
வெருவருந் தகையினர் விழுவர்நின் றெழுவரால்
மருவருந் தகையர்தா னவர்கள்வா னவர்கடாம்.

'இருவரும் - வாலி துந்துபி ஆகிய அவ்விருவரும், செரு உறும் பொழுதின் - போரிடும் போது, இன்னவர்கள் என்று - அவர்கள் இன்னாரென்று, ஒருவரும் சிறிது உணர்ந்திலர்கள் - யாரும் சற்றும் அறிந்து கொண்டாரல்லர் ; எ உலகமும் - எந்த உலகத்தவர்களும், வெருவரும் தகையினர் - அஞ்சத்தக்க தன்மையரான அவ்வாலியும் துந்துபியும், விழுவர் நின்று எழுவர்ஆல்-(அப்போரில்) கீழே விழுவாரும்

மீண்டு எழுவாரும் ஆயினர் ஆதலால், தானவர் வானவர்கள் தாம் - அதைக் கண்ட அசுரர்களும் தேவர்களுமே, மருவு அரும் தகையர் - அருகில் வருவதற்கு முடியாத தன்மையர் ஆயினர்.

உணர்ந்திலர்கள்: விகுதிமேல் விகுதி: ஒப்பு; 'என் மகளைச் செய்தனகள் எங்ஙனம் நான் சிந்திக்கேனே' (பெரியதிருமொழி, 5-5 : 1). தகையினர்: தகை - மேம்பாடு. தானவர் வானவர்கள் தாம்: தாம் அசையும் ஆம். தானவரை முற்கூறியது, அவர்கள் அத்துந்துபியின் இனத்தவர் என்ற சிறப்பைக் கருதி. ஒருவரும் சிறிது முணர்ந்தி லாமை, அவ்விருவரின் உருவின் பெருமையாலும், போரிடும் விசை யினாலும் என்க.

பி. ம். 1. இருவருந் திரிவுறும். 2. வெவ்வுலகினும்.
3. தலைகவிலார், தலைகயிலார், தகையராய்; விழுவர்மே லெழுவரால்.
4. மருவருந் தகைய தானவர், மருள்வருந் தகையர்; வானவர்க டானவர்கடாம். (8)

187. தீயெழுந் ததுவிசும் புறநெடுந் திசைமிசைப்
போயெழுந் ததுமுழக் குடனெழுந் ததுபுயல்
தோயமும் புணரியுந் தொடர்தடங் கிரிகளும்
சாயழிந் தனவடித் தலமெடுத் திடுதலால்.

'அடி தலம் எடுத்திடுதலால் - (அங்கு) அவர்கள் தம் பாதங்களைத் தூக்கி வைத்தலால், தீ விசும்பு உற எழுந்தது - (அவ்வேகத்தால் உண்டான) நெருப்பு வானில் போயடையும்படி மேற்கிளம்பியது; முழக்கு - அவர்கள் இட்ட ஆரவாரம், நெடும் திசைமிசை - நீண்ட திக்குகளின் மீதெல்லாம், போய் எழுந்தது - சென்று ஒலித்தது; புயல் - மேகமும், உடன் எழுந்தது - அத்தகைய பெருமுழக்கத்தோடு மேற்கிளம்பி எழுந்தது; தோயமும் - நல்ல நீர்நிலைகளும், புணரியும் - கடல்களும், தடம் தொடர் கிரிகளும் - இடமகன்ற மலைத்தொடர்களும், சாய் அழிந்தன - அவற்றின் ஒளி அழிந்தன ஆயின. சாய்; அழகு, நிறம், புகழ் என்ற பல பொருள் கொண்ட ஒரு சொல் ஆம்.

பி - ம். 1. தீயெழுந்தன; திசையெலாம்; திசையிசை; விசும்பொடுநெடுந்.
2. போயெழுந் தனமுழக்; யெழுந் ததுபுகை.
3. தோயநன் புணரி, தோயமுன் புணரி, தோய்நெடும் புணரி; சுடர்தடம். (9)

இதன்பின், சில சுவடிகளில் அடியிற்காணும் ஒரு பாடல் அதிகமாக உள்ளது; அது,

புயலுவா னகமுமப் புணரியும் புணரிசூழ்
அயலும்வீழ் தூளியா லறிவருந் தகையவாம்
மயனின்மா மகனும்வா லியுமறத் துடலினர்
இயலுமா மதியமீ ராறும்வந் தெய்தவே.

**188.** **அற்றதா கியசெருப் புரிவுறு மளவினில்**
**கொற்றவா லியும்வயக் குவவுதோள் வலியினால்**
**பற்றியா சையினவன் பணைமருப் பிணைபறித்**
**தெற்றினா னவனும்வா னிடியினின் றுரறினான்.**

'அற்றது ஆகிய - அத்தன்மைத்தான, செரு புரிவுறும் அளவினில் - போரினை அன்னோர் செய்யும்போது, கொற்ற வாலியும் - வீரம் மிக்க வாலியும், வயம் குவவு தோள் வலியினால் - தன் வெற்றி மிக்கனவும் பருத்துயர்ந்தனவுமான புயங்களின் வலிமையினால், அவன் பணை மருப்பு இணை - அந்தத் துந்துபியின் பருத்த இரு கொம்புகளையும், பற்றி - பிடித்து, பறித்து - பிடுங்கியெடுத்து, ஆசையின் எற்றினான் - திக்குக்களில் போய்த் தாக்க வீசி யெறிந்தான்; அவனும் - அத் துந்துபியும், வான் இடியின் - வானில் உண்டாகும் இடியைப்போல, நின்று - அங்கு நின்று, உரறினான் - பெருமுழக்கமிட்டனன்.

ஆசை - திக்கு. (பிங்.); 'அற்ற கண்டமவை யாசையின தந்த முறவே'; (ஆரணிய. 28); 'ஆசைகள் பத்திற்கு மின்றே பலியீவது பார்த்தி யென்றான்' (ஆரணிய. 910). உரறுதல்; ஆரணிய. 24, 602.

பி - ம். 1. *புரியுமவ் வளவினில்; பயில்வுறு மளவினில், மளவையிற்.*
2. *மவன் குவவு தோள்; தோள்வலியொடு.*
3. *யாசையி னெடும்பணை, யாசையி னவன்படர் நெடும்பணை மருப்பிணை.*
4. *எற்றினா னிவனும்; னிடியினின் றாற்றினான்.*

இதன் பின், சில பிரதிகளில் அடியிற்காணும் ஒரு பாடல் அதிகமாக உள்ளது.

தலையின்மே லடிபடக் கடிதுசாய் நெடியதாள்
உலையவாய் முழைதிறந் துதிரவா றெழுகமா
மலையின்மே லுருமிடித் தென்னவான் மண்ணெடும்
குலையமா திசைகளுஞ் செவிடுறக் குத்தினான்.

189 கவரியங் கிரியினைக் கரதலங் கொடுதிரித்
திவர்தலுங் குருதிபட் டுயர்நெடுந் திசைதொறும்
துவரணிந் தனவெனப் பொசிதுதைந் தனதுணைப்
பவர்நெடும் பணைமதம் பயிலும்வன் கிரிகளே.

'கவரி அம் கிரியினை - எருமை வடிவான அழகிய மலை போன்ற அந்தத் துந்துபி எனும் தானவனை, கரதலம் கொடு - (வாலி) தன் கைகளிற் கொண்டு, திரித்து இவர்தலும் - சுழற்றிக் கொண்டு உலாவிய அளவில், குருதிபட்டு - (அத்துந்துபி) உடலின் இரத்தம் பட்டு, உயர் நெடும் - மிகவும் உயர்ந்த, திசைதொறும் - திக்குகள் எட்டிலும், துணை - ஒன்றுக்கொன்று துணையாய் உள்ள, பவர் - நெருங்கிய, நெடும் - நீண்ட, பணை - பருத்த, மதம் பயிலும் - மதப்பெருக்கு ஒழுகும், வன் கிரிகள் - வலிய மலைகள் போன்ற திக்கயங்கள், துவர் அணிந்தன என - சிவப்பு நிறத்தை மேவியவைபோல, பொசி - உதிரக்கசிவு, துதைந்தன - அடர்ந்து படியப்பெற்றன.

கவரியங்கிரி ; கிரி, உருவினாலும் வலியினாலும் உவமை. கவரி - எருமை ; (பிங்.) ; கவரியங்கிரி என்பதற்கு ருசியமூக பருவதம் எனப் பொருள் கொண்டாரும் உளர். ருசியம் - மான் ; கவரியும் ஒருவகை மான் ஆகலின், 'மானநோக்கிற் கவரிமா வனைய நீரார்' (அயோத். மந்திரப். : 7) : பெருங். 1-50 : 20 ; குறள். 969. இவர்தல் - உலாவுதல் ; 'இரைதேர்ந் திவருங் கொடுந்தாண் முதலை' ; (மலைபடு. 90) என்பதில் இவரும் என்பதற்கு உலாவும் என்று உரை வகுத்துள்ளமை காண்க. துணை - உலகைத் தாங்குவதில் துணையான என்க. மதம் பயிலும் என்ற குறிப்பால், வன்கிரி யானை என்பதாயிற்று. மேலும், யானைக்கு மதமலை, மதகிரி எனப் பெயர்கள் வழங்கப் பெறுவனவும் நோக்குக. 'துவர் - சிவப்பு. பொசி துதைந்தன - இரத்த ஊற்றினால் அஷ்ட கஜங்களும் அழுந்துபட்டன. பவர் - விரிந்த' : பழையவுரை.

பி - ம். 1. கவரியின் கிரியென.
2. டிசைதொறுந் திசைதொறுந்.
3. துதைந்தன தினை ; துதைந்தன விழிப்.
4. பகையில்வன் கரிகளே ; கவரின்வன் கிரிகளுந் துணைமதக் கரிகளும்

**190.** புயல்கடந் திரவிதன் புகல்கடந் தயலுளோர்
இயலுமண் டிலமிகந் தெனேயவுந் தவிரமேல்
வயிரவன் கரதலத் தவன்வலித் தெறியவன்
றுயிரும்விண் படரவிவ் வுடலுமிம் பரினரோ.

(பிறகு), அவன் - அந்த வாலி, புயல் கடந்து - மேக மண்டலத்தைத் தாண்டி, இரவி தன் புகல் கடந்து - சூரியன் புகுந்து செல்லும் இடங்களேயும் தாண்டி, அயல் உளோர் இயலும் மண்டிலம் இகந்து - அவற்றிற்கு அப்பால் உள்ள தேவர் முதலிஞேர் இருந்து வாழும் (சுவர்க்கம் முதலிய) மண்டலங்களேயும் கடந்து, எனேயவும் - மற்றுமுள்ள உலகங்களும், தவிர - பிற்பட, மேல் - மேலே, வயிர வன் கர தலத்து - உறுதியான தன் வலிய கைகளால், வலித்து எறிய - (அவ்வசுரனே) இழுத்து வீசி யெறியவே, அன்று - அப்பொழுது, உயிரும் விண் படர - அத் துந்துபி உயிரும் அவனுடலே விட்டு வான் உலகு செல்ல, இ உடலும் இம்பரின் அரோ - இந்த அவன் உடலும் இவ்வுலகில் கிடப்பதாயிற்று அன்ருே?

அரோ என்னும் இடைச்சொல் அசைச்சொல்லாக நிற்பது மட்டுமன்றி இவ்வாறு வியப்புப்பொருளேயும் விஞப்பொருளேயும் ஏற்று வருவது இந்நூலில் மற்றும் பல இடங்களில் காணலாம்.

வலித்தல் - இழுத்தல்; 'ஆயிரந் தடக்கை பரப்பிமீ வலிப்ப'; (பால. அகலிகைப். ; 21).

பி - ம். 1. *திரவிதன் புவிகடர்.*
2. *மிகந்தனேய மீனுயரமேல் ; மீ துயரமேல்.*
3. *வலிந்தெறிய, வலித்தெறியவே.*
4. *வுடலுமிப் பரிசரோ'; துயரமென் பதுதெறத் தொலேயுமிவ் வுலகமே.* (12)

**191.** முட்டிவான் முகடுசென் றணவியிம் முடையுடல்
கட்டிமால் வரையைவந் துறுதலிற் கருணேயான்
இட்டசா பமுமெனக் குதவுமிவ் வியல்பினில்
பட்டவா முழுவதும் பரிவினு லுரைசெய்தான்.

இ முடை உடல் கட்டி - இந்த முடை நாற்றமுடைய துந்துபியின் உடலாகிய மாமிசத் தொகுதி, வான் முகடு முட்டி சென்று - ஆகாயத்தின் உச்சி மோட்டைத் தாக்கிச் சென்று, அணவி - அங்குப் படிந்து, மால் வரையை வந்து உறுதலில் - இந்த ருசியமுக மலேயை வந்து

அடைந்ததனுல், கருணையான் - இங்கிருந்த அருளுடைய மதங்க முனிவர், இட்ட சாபமும். (வாலிக்குத்) தந்த சாபமும், எனக்கு உதவும் - எனக்கு உதவி புரிவதாகின்றது;' (என்று), இ இயல்பினில் - இத்தன்மையில், பட்டவா முழுவதும் - தான்துய்த்த துன்பங்களின் விதங்கள் அனைத்தையும், பரிவினுல் - வருத்தத்தோடு, உரை செய்தான் - (சுக்கிரீவன் இராமபிரானிடம்) எடுத்துரைத்தான்.

முடை - புலால், அல்லது மாமிசம்; (பிங்); நாலடி: 48. கட்டி - வலிய பிண்டமும் ஆம்; அணவுதல் - படிதல், 'கொண்டல்மீ தணவுஞ் சோலை' (திருமாலை. 14.) மதங்க முனிவர் வாலிக்கு இட்ட இந்தச் சாப வரலாறு, முன் இராமபிரானுக்கு அநுமான் உரைத்த (144) பாடலாலும் அறியக்கிடக்கும். கருணையான்; அம்முனிவர் யாவர் மாட்டும் கருணையுள்ளவர் என்பதோடு அவர் வாலிக்கு இட்ட சாபம் தனக்குக் கருணையாக உதவியதைச் சுக்கிரீவன் கருதிக் கூறியதும் ஆகும். பரிவு - துன்பம்; 'துணையிலேன் பரிவு தீர்த்த வாழிய வள்ளலே' (சுந்தர, 561). 'கம்பஞ்செய் பரிவு நீங்கி'; (சீவக. 1737.)

பி - ம். 1. *மனவியிம், மனுமியிம்.*
2. *கட்ட மால்வரை; வந்தறுதலும், வர்துறைதவிற்.*
3. *கருணையோ; னுதவுமுன், னுதயவும்; பிம்மலையினில்.* (13)

வேறு

இராமபிரான் கட்டளையால் இலக்குவன் அதனை எறிந்தது

**192.** கேட்டன னமலனுங் கிளந்த வாறெலாம்
வாட்டொழி லிளவலை யிதனை மைந்தநீ
ஒட்டென வவன்கழல் விரலி னுந்தினுன்
மீட்டது விரிஞ்சனு டுற்று மீண்டதே.

அமலனும் - பரிசுத்தனுன இராமபிரானும், கிளந்த ஆறு எலாம - சுக்கிரீவன் சொல்லிய வரலாறுகள் அனைத்தையும், கேட்டனன் - கேட்டு, வாள் தொழில் இளவலை - வாட்போர் புரிவதில் வல்ல தன் தம்பியாகிய இலக்குவனை, (நோக்கி), 'மைந்த நீ இதனை ஓட்டு என - 'வீரனே! நீ இந்தத் துந்துபி உடலை அப்பால் ஓடச்செய்' என்று கூற, அவன் - இலக்குவனும், கழல் விரலின் - தன் கால் விரல்களால், உந்தினுன் - முன் செல்லுமாறு அதனை உதைத்துத் தள்ளினுன்; அது - அந்த்த்

துந்துபியின் உடல், மீட்டு - மறுபடியும், விரிஞ்சன் நாடு உற்று - பிரம தேவனது சத்திய லோகம் சென்று, மீண்டது - திரும்பிவந்து வீழ்ந்தது. ஏ : ஈற்றசை.

இளவலை ஒட்டு என்றது, தன் தம்பியின் ஆற்றலையும் அறிவுறுத்திச் சுக்கிரீவனுக்கு ஊக்கமும் வலிமையும் உண்டாக்கக் கருதி ; மைந்த என்றது, அன்பினால் வந்த மரபு வழுமைதியாய், தமயன் தந்தைக்கு நிகரானவன் என்ற உரிமைபற்றியுமாம். துந்துபியின் உடலை உந்தியது, அப்பெருமான் மராமரங்களைத் தொளைத்தற்கு முன்னர் நிகழ்ந்தது என்றும், இராமபிரானே உந்தினான் என்றும் முதனூல் கூறும். மீட்டது விரிஞ்சனா டுற்று மீண்டது; மீட்டது என்றமை, முன் வாலி வீசியெறிந்ததைக் குறிப்பிட்டபடி. விரிஞ்சன் - பிரமன்; இச்சொல் விரிஞ்சி எனவும் வழங்கும்.

பி - ம். 1. *விளைத்த வாறெலாம், விளர்த்த வாறெலாம்.*
3. *ஒட்டென வனைக்கழல் விரலி னுந்தினான், ஒட்டென வவன் கழல், ஒட்டுடன் வனைகழல் விரலி னுந்தினான்.*
4. *மீட்டுமவ் விரிஞ்ச, மீட்டது விசும்புற்று வேலை புக்கதே.* (14)

## துந்துபிப் படலம் முற்றும்.

———

## 6. கலன்காண் படலம்

இது, சீதாப்பிராட்டி இராவணனுல் அபகரிக்கப்பெற்று அவளை அவன் வான் வழியே எடுத்துச் சென்றபோது, அப்பிராட்டி அங்குப் போட்டுச் சென்ற அணிகலன்களைச் சுக்கிரீவன் கொண்டுவந்து காட்ட, அவற்றைக் கண்டு இராமபிரான் வருந்தியதையும், சுக்கிரீவன் இராம பிரானைத் தேற்றியதையுங் கூறும் படலம் என விரியும். கலன் - அணி கலம்; இது கலம் என்பதன் ஈற்றுப் போலி. இவ்வரலாறு, இராமபிரான் சுக்கிரீவனோடு நட்புச்செய்து கொண்ட அவ்விடத்திலேயே நிகழ்ந்ததாக வான்மீகம் கூறும்.

சுக்கிரீவன் தனக்குக் கிடைத்த சில அணிகலன்களைப் பற்றி இராமபிரானிடம் கூறல்

**193.** ஆயிடை யரிக்குல மசனி யஞ்சிட
வாய்திறந் தார்த்தது வள்ள லோங்கிய
தூயவச் சோலையி லிருந்த சூழல்வாய்
நாயக வுணர்த்துவ துண்டு நானென.

அ இடை - அப்போது, அரி குலம் - வானரக் கூட்டம், அசனி அஞ்சிட - இடியும் அச்சம் அடைய, வாய்திறந்து ஆர்த்தது - வாய் விட்டுப் பேரரவம் செய்தன; வள்ளல் - இராமபிரானும், ஓங்கிய நல் தூய சோலையில் இருந்த சூழல்வாய்-உயர்ந்த அழகிய ஒரு பரிசுத்த மான சோலையிடத்தே போய்த் தங்கியிருந்த சமயத்தில், (சுக்கிரீவன் இராமபிரானை யணுகி), 'நாயக - தலைவனே! நான் உணர்த்துவது உண்டு - நான் தெரிவித்துக் கொள்ளவேண்டியது ஒன்று உள்ளது;' என - என்று:

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து 196 இல் உள்ள காட்டினன் என்னும் வினைகொண்டு முடியும். அரிக்குலம் ஆர்த்தமை மகிழ்ச்சியின் உணர்ச்சி மிகுதியால், சோலையில் தங்கியிருந்தது, மராமரங்களைத் துளைத்தும், துந்துபியின் உடலை உந்தியும் சுக்கிரீவனுக்கு ஆறுதலும், நம்பிக்கையும் அளித்தமையால் என்க.

பி - ம். 1. அரிக்குல வசனி; மசனி யஞ்சி, மசனி யஞ்சுற.
2. வள்ள லேகியத், வள்ள லேகினன்.
3. தூயதன். 4. நாயகர்க் குணர்த்துவ; நாவென்றான். (1)

194. இவ்வழி யாமியைந் திருந்த தோரிடை
வெவ்வழி யிராவணன் கொணர மேலைநாள்
செவ்வழி நோக்கினெம் தேவி யேகொலாம்
கவ்வையி னரற்றினள் கழிந்த சேணுளாள்.

'மேலை நாள் - முன்னொரு நாளில், இ வழி யாம் இயைந்து இருந்தது ஓர் இடை - இந்த மலையினிடத்தில் யாங்கள் கூடித் தங்கியிருந்த ஒரு சமயத்தில், வெம் வழி இராவணன் - கொடிய நடத்தையுடைய இராவணன், கொணர - (ஆகாய மார்க்கமாய்) எடுத்துக் கொண்டுவர, கழிந்த சேண் உளாள் - வெகு தூரத்தில் ஆகாயத்தில் இருந்த ஒருத்தி, கவ்வையின் அரற்றினள் - துன்பத்தால் வாய்விட்டுக் கதறி அழுதாள்; செம்மை வழி நோக்கினெம் - (இப்பொழுது) நன்றாக ஆலோசித்துப் பார்த்தோம்; தேவியே கொல் ஆம் - (அவ) தேவியாகிய சீதாப்பிராட்டியே போலும்!

செம்மை+வழி=செவ்வழி; வெம்மை வழி=வெவ்வழி. கழிந்த சேணுளாள்: இது வடமொழி நடை. ஆகாயத்தில் வெகு தூரத்தில் இருந்து அரற்றினாளாதலின், அவள் இன்னாள் என்றும், இன்ன அடையாளமுள்ளவள் என்றும் என்னால் அப்போது அறிய முடியவில்லை, எனவும் இப்பொழுது உங்கள் தேவியென்று தெரிகின்றது என்றும் கூறினான் சுக்கிரீவன் என்க.

சில பிரதிகளில் இதுமுதல் கலன்காண் படலம் தொடங்கும்.

பி - ம். 1. *யாமிருந் தியைந்த தோரிடை, யாமிவ்வ னிருக்கு மேல்வையின்; திருந்த வாயிடை.*
2. *கொணர்ந்த மேலைநாள்.*
3. *செவ்வழி வள்ளனின், செவ்வழி நோக்கினேன்.*
4. *கழிந்த விண்ணுளாள், கழிந்து விண்ணுளாள்.* (2)

195. உழையரி னுணர்த்துவ தென்ப துன்னியோ
குழைபொரு கண்ணினாள் குறித்த தோர்ந்திலெம்
மழைபொரு கண்ணிணை வாரி யோடுதன்
இழைபொதிந் திட்டனள் யாங்க ளேற்றனெம்.

'குழை பொரு கண்ணினாள் - குழை என்னும் காதணியைப் போய் மோதுகின்ற கண்களையுடைய அவள், உழையரின் - அருகேயிருந்த

எம்மிடம், உணர்த்துவது என்பது உன்னியோ-(தன் நிலையைத்) தெரிவிப்பது என்பதைக் கருதியோ, குறித்தது ஓர்ந்திலெம் - (அவள்) கருதியதை யாங்கள் அறிந்தோ மல்லோம்; தன் இழை பொதிந்து - தன்னுடைய அணிகலன்களைத் தன் ஆடைத்துண்டத்தில் முடிந்து, மழைபொரு - மழை பொழிவதுபோன்ற, இணை கண் வாரியோடு - தன் இரு கண்களினின்று பெருகிய நீரோடு, இட்டனள் - (இப் பொதியைக்) கீழே போட்டனள்; யாங்கள் ஏற்றனெம் - யாங்கள் இதனை எடுத்து வைத்துக் கொண்டோம்.

பிராட்டி இராவணனால் விமானத்தில் எடுத்துச் செல்லப்பட்ட போது, ருசியமுக பருவதத்தில் சுக்கிரீவன் தன் நான்கு நண்பர்களுடன் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்துத் தன் அணிகலன்களைத் தன் உத்தரீயத்தில் பொதிந்து அவர்கள் நின்ற இடம் நோக்கி எறிந்தனள் என்று வான்மீகம் கூறும். உன்னி,' உழையரின் உணர்த்துவது, என்றது,) இவ்வணிகலன்கள் அருகேயுள்ள ஏவலாளர் (அல்லது தூதுவர்) போல உணர்த்தும் எனவும், இவை அவள் நிலைமையை இங்கேயுள்ள எங்கள் மூலம் உமக்கு அறிவிக்கும் எனவும் உன்னி, எனவும் பொருள் கொள்ளலாம். கண்ணிணைவாரி யோடிட்டனள்: இது பிராட்டியின் துயரின் மிகுதியை விளக்கியது. குழை பொருகண்: கண்கள் காதளவு நீண்டிருக்கும் உத்தமலக்ஷணம் உணர்த்தியது ஆம். சுந்தர. 335, 1284, 1287. புறநா. 78: 15-21. சுக்கிரீவன் முதலிய வானரவீரர் காணக் கூடிய தூரத்திலேயே பிராட்டி பிறகு தென் பட்டாள் என்பதை அறிவுறுத்துவது காண்க. துளஸிதாஸர் கலன்களைக் கூறாமல், பிராட்டி ஆடைத் துண்டொன்றையே போட்டுச் சென்றதாகக் கூறியுள்ளார். குழை பொரு கண்ணினாள் குறித்த தோர்ந்திலெம்' என்றமை குறித்து, 'இது கம்பர் சொற்றிறம்' என்ற ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு காணப்பெறுகின்றது.

196. வைத்தனெ மிவ்வழி வள்ள நின்வயின்
உய்த்தன தந்தபோ துணர்தி யாலெனக்
கைத்தலத் தன்னவை கொணர்ந்து காட்டினன்
நெய்த்தலைப் பால்கலந் தனைய நேயத்தான்.

நெய் தலை பால் கலந்தனைய நேயத்தான் - தேனில் பால் கலந்தது போன்று (இராமபிரானிடம்) ஒற்றுமையிற் சிறந்த அன்புடைய

சுக்கிரீவன், 'வள்ளல் - வரையாது அருளும் இராமபிரானே! உய்த்தன - இவ்வாறு எம்மிடம் போடப்பட்ட அணிகல முடிப்பை, இ வழி வைத்தனெம் - இவ்விடத்தே யாங்கள் எடுத்து வைத்திருக்கின்றோம்; (அதனை) நின் வயின் தந்தபோது - உம்மிடத்தே கொடுத்தபோது, உணர்தி - நீவிர் பிராட்டியினுடையனவா அன்ரு என்பதை அறிந்து கொள்வீர்' என - என்று கூறி, அன்னவை - அந்த அணிகலன்களை, கை தலத்து கொணர்ந்து - தன் கையில் எடுத்துக்கொண்டுவந்து, காட்டினன் - இராமபிரானுக்குக் காட்டினன். ஆல்: அசை.

நெய் - தேன்; சீவக. 1198, 1761; பெருந். 1, 51: 17, 2, 8 12; கலித்: குறிஞ். 6: 22.

பி - ம். 1. வைத்தனென், வைத்தனோம்.
2. உய்த்தனென் றந்தபோ, உய்த்தவை தந்தபோது; யாமெனக்.
3. கைத்தலத் தன்னவும்.
4. கலந்தன்ன, (4)

இராமபிரான் அணிகலன்களைக் கண்டு வருந்துதல்

197. தெரிவுற நோக்கினன் றெரிவை மெய்யணி
எரிகன் லெய்திய மெழுகின் யாக்கைபோய்
உருகின னென்கிலெ முயிருக் கூற்றமாய்ப்
பருகின னென்கிலெம் பகர்வ தென்கொலாம்.

தெரிவை மெய் அணி - பிராட்டியின் திருமேனியில் அணிந்திருந்த அவ்வணிகலன்களை, தெரிவு உற நோக்கினன் - (இராமபிரான்) நன்ருகப் பார்த்தருளினன்; (அங்ஙனம் நோக்கிய மாத்திரத்தில்), எரி அனல் எய்திய மெழுகின் - எரியும் நெருப்பில் பட்ட மெழுகைப் போல, யாக்கை போய் உருகினன் - தன் உடம்பு நெகிழ்ந்து உருகிப் போனன், என்கிலெம் - என்று சொல்லவல்லோம் அல்லோம், (அல்லது), உயிருக்கு ஊற்றம் ஆய் - தன் உயிருக்கு ஒரு வலிமை அல்லது பற்றுக்கோடு அளிக்கும் பொருளாகக் கருதி, பருகினன் என்கிலெம் - அவ்வணிகலன்களைப் பருகினன் போலச் சுவைத்துப் பார்த்தான் என்றும் சொல்லவும் வல்லோம் அல்லோம்; பகர்வது என் கொல் ஆம் - அந்நிலையை யாம் எவ்வாறு கூறுவோம் ?

ஆசிரியர் தம் காப்பியத்தில் மிகச் செறிந்த மெய்ப்பாடுகளை உணர்த்தும் முறைக்கு இச்செய்யுள் ஓர் எடுத்துக்காட்டு. ‘பருகினன் என்கிலெம்; ஆபரணத்தை முகந்து அதை அமுதைப் போலப் பருகினனும்; அது அல்லதுமாம் எனச் சந்தேகம்’: என்பது பழையவுரை. ‘பகர்வதென்கொலாம்’ என்று இங்குக் கவிக்கூற்ருக உரைத்த வண்ணமே, பின் அநுமன் வாயிலாய், ‘கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்தபோ தடுத்த தன்மை, பெற்றியி னுணர்தற் பாற்றே’ (சுந்தர 523) என்று பிராட்டியிடம் கூறியுள்ளமையுங் காண்க. இது முதல் 203 ஆம் செய்யுள் முடிய, கவிக்கூற்று.

தெரிவை; இது பெண் என்னும் பொதுப் பெயரில் பிராட்டியைக் குறிப்பது; இவ்வாறின்றி அது காலம் பிராட்டி தெரிவைப் பருவத்தினள் எனக் குறித்தாரும் உளர்; தெரிவைப் பருவம், 25 முதல் 31 வயது வரையுள்ளது, எரியனல் மெழுகு; சுந்தர, 548; அயோத். கங்கைப்; 60: சீவக, 710; பெருங். 1, 47; 67. பருக முடியாததைப் பருகுதல் என்பது இலக்கணை என்பர், கணையாழியைக் கண்ட பிராட்டி அதனை ‘விழுங்கலு றுகின்ருள்’ (சுந்தர, 554) என்றமையும் காண்க. என் கொல்: கொல் என்பது இங்கு ஈரிடத்தும் வினப் பொருளை உணர்த்துவது. அருந்தியது துயராலும், பருகியது அன்பாலும் என்க.

பி - ம். 1. தெரிவா நோக்கினன்; தேவி மெய்யணி.
2. எரிகன லேத்திய; யாக்கை போல்.
3. மூயிருங் கூற்றமாய்ப், மூயிரிற் கூற்றமாய், மூயிரைக் கூற்றமே.
4. பருகிய தென்கொலாம்; தென்கொல்யாம். (5)

198\. நல்குவ தென்னினி நங்கை கொங்கையைப்
புல்கிய பூணுமக் கொங்கை போன்றன
அல்குலி னணிகளு மல்கு லாயின
பல்கலன் பிறவுமப் படிவ மாயவே.

(அவ்விராமபிரானுக்கு), நங்கை கொங்கையைப் புல்கிய பூணும் - பிராட்டியின் தனங்களைத் தழுவியவாறு அணியப் பெற்றிருந்த (ஆரம் முதலிய) அணிகலன்களும், அ கொங்கை போன்றன-அப்பிராட்டியின் கொங்கைகளே போலத் தோன்றின: அல்குலின் அணிகளும் அல்குல் ஆயின - அல்குலின் மீது அணியப் பெற்ற மேகலாபரண முதலியன அவள் அல்குலே போன்றன ஆயின: பல்கலன் பிறவும் - பிறஇடங்களில்

அணிந்தனவான மற்றுமுள்ள ஆபரணங்களும், அ படிவம் ஆயின - அந்தஅந்த அவயவங்கள் போன்றே விளங்கின; இனி நல்குவது என் - இனி அவ்வணிகலன்கள் அப்பெருமானுக்கு வேறு என்ன செய்யக் கூடியன? (வேறு இல்லை என்றபடி).

பிராட்டியின் அணிகலன்களைக் கண்டபோது, இராமபிரானுக்கு அவை பிராட்டியின் அவயவங்களாகவே தோன்றின என்பதாம்; படிவம் - வடிவம், இதனால் அவ்வணிகலன்கள் அப்பெருமானுக்குப் பேருதவி புரிந்தன என்பதாம். இது, பிராட்டி போகட்ட அணி கலன்களை, வாநரங்கள் எடுத்து அணிந்த நிலையை நகைச்சுவை படக் கூறியுள்ள புறநானூற்றுச் செய்யுளை நினைப்பூட்டுகின்றது; புறநா. 378. இச்செய்யுளின்கண் நினைப்பணியும் மயக்க வணியும் தற்குறிப்பேற்ற வணியும் விரவிய அரியசிறப்புக்கள் காணலாம்.

பி - ம். 1. *நல்குவ தென்றினி.* 2. *புல்லிய பூணும்.*
4. *மப்படிக ளாயின, படிக ளானவே, படிவ மானவோ.* (6)

199. வீட்டபே ருணர்வினை விளித்த வென்கெனோ
அட்டன வுயிரையவ் வணிக ளென்கெனோ
கொட்டின சாந்தெனக் குளிர்த்த வென்கெனோ
சுட்டன வென்கெனோ யாது சொல்லுகேன்.

அ அணிகள் - அந்த ஆபரணங்கள், விட்ட பேர் உணர்வினை - அது காறும் நீங்கிப் போயிருந்த இராமபிரானுடைய சிறந்த அறிவை, விளித்த என்கெனோ - திரும்பி அழைத்தன என்று சொல்வேனோ? (அவை), உயிரை - அப்பெருமான் உயிரை, அட்டன என்கெனோ - மாய்த்துவிட்டன என்று தான் சொல்வேனோ? கொட்டின சாந்து என - அப்பிரான் மீது மிகுதியாகக் கொட்டப்பெற்ற சந்தனக் குழம்புபோல, குளிர்த்த என்கெனோ - திருமேனியைக் குளிரச் செய்தன என்று சொல் வேனோ? சுட்டன என்கெனோ - அல்லது திருமேனியை அவை (விரகதாபத்தை உண்டாக்கிச்). சுட்டன என்று சொல்வேனோ? யாது சொல்லுகேன் - நான் என்னவென்று சொல்லுவேன். (சொல்லுந் திறமுடையே னல்லேன் என்பதாம்!)

இவ்வணிகளைக் கண்ட இராமபிரான் அடைந்த ஒன்றுக்கொன்று மாறுபாடான உணர்ச்சிகளை இச் செய்யுள் காட்டிய தென்க. இவ் வாறு ஒரே நிகழ்ச்சி, நேர் எதிரிடையான பயன்களை ஒரே காலத் தில் கொடுக்கலாகும் என்ற அரிய கருத்தை, ஆசிரியர் வேறிடங்களி லும் காட்டுவது காணலாம்; பால. மிதிலைக். 4: சுந்தர, 337; 555.

இங்கு, அணிகலன்களைக் கண்ட இராமபிரான் அடைந்த மெய்ப் பாடுகளைப் பின் கணையாழி கண்ட பிராட்டியுற்ற மெய்ப்பாடுகளோடு (சுந்தர. 554–558) ஒப்பிட்டு நோக்கல் தகும்.

அட்டன ; அடு பகுதி ; அடுதல் - அழித்தல். சுட்டன ; சுட்டன போல வெதுப்புண்டு தவிக்கச் செய்தன : கொட்டின ; மிகுதியைக் குறிப்பது.

பி - ம். 1. *விட்டன வுணர்வினை, விட்டனெ னுணர்வினை ; விளிந்ததென் கெனோ, விளைத்த தென்கெனோ ; தென்கெனு.*
3. *சாந்தெனக் குளிர்ந்த ; சந்தெனக்.*
4. *சுட்டன வெம்மனைப் பியாது சொல்லுகேன்.* (7)

200\. மோந்திட நறுமல ரான மொய்ம்பினில்
ஏந்திட வுத்தரீ யத்தை யேய்ந்தன
சாந்தமு மாயொளி தழுவப் போர்த்தலால்
பூந்துகி லானவப் பூவை பூண்களே.

அ பூவை பூண்கள் - அந்த நாகணவாய்ப்புள் போன்று (இன் சொல் பேசும்) பிராட்டியின் அணிகலன்கள், மோந்திட நறுமலர் ஆன - (இராமபிரானுக்கு). முகர்ந்து பார்த்தபோது நன் மணம் வீசும் மலர்கள் போல ஆயின ; மொய்ம்பினில் - தன் தோள்களில், ஏந்திட - அவன் தாங்கிக் கொண்டபோது, உத்தரீயத்தை ஏய்ந்தன - அவை அவனுடைய மேலாடையை ஒத்து விளங்கின ; (மேலும் அவை), சாந்தமும் ஆய் - (பூசிய) சந்தனம் போலவும் ஆகி, ஒளி தழுவ போர்த் தலால் - ஒளி பொருந்த மேலே போர்த்தமையால், பூம் துகில் ஆன - அழகிய சித்திர ஆடை போலும் ஆயின. ஏ : ஈற்றசை.

பூவை; உவமை ஆகுபெயராய்ப் பிராட்டியைக் குறித்தது. இச் செய்யுள் இராமபிரான் அவ்வணிகலன்களை, முகர்ந்து பார்த்தும், தோள் களில் ஏந்தியும், தன் உடலில் எங்கும் படுமாறு தழுவியும், மகிழ்ந்த நிலையைக் கூறுவதோடு, அவை பல வகையாய் விளங்கி அப்பெரு மானுக்கு இன்பம் விளைத்ததையும் விளக்கியது என்க. ஆன என்பது ஈரிடத்தும் வினை முற்றுக்கள். பூந்துகில் : இங்குப் பல வகைச் சித்திர வேலைப்பாடமைந்த ஆடை யென்க. ஒளி என்பதைச் சாந்தத்தோடும் துகிலோடும் கூட்டிக்கொள்ளலும் தகும்.

பி - ம். 1. *மொய்ம்பினுல்.*
2. *வுத்தரீகத்தை.*
4. *பூந்துகி லாயவப், பூந்துகிலானதம்.* (8)

201. ஈர்த்தன செங்கணீர் வெள்ளம் யாவையும்
போர்த்தன மயிர்ப்பெரும் புளகம் பொங்குதோள்
வேர்த்தன னென்கெனோ வெதும்பி னானென்கோ
தீர்த்தனை யவ்வழி யாது செப்புகேன்.

ஈர்த்தன - இழுத்தோடி வந்த, செம் கணீர் வெள்ளம் யாவையும் - (இராமபிரானுடைய) சிவந்த கண்ணீர்ப் பெருக்கு எல்லாவற்றையும், மயிர் பெரும் புளகம் - அப்பெருமானது பெரும் மயிர்க் கூச்செறிப்பு, போர்த்தன - போர்த்தன போல மூடிக்கொண்டன; (அந்நிலைமையில்), பொங்கு தோள் வேர்த்தனன் என்கெனோ - அப்பெருமான் பூரித்த தோள்கள் வியர்வை யுள்ளனவாய் ஆயினான் என்று சொல்வேனோ? (அல்லது) வெதும்பினான் என்கோ - விரகதாபத்தால் வெப்பமுற்று வாடினான் என்று சொல்வனோ? தீர்த்தனை - பரிசுத்தனான இராமபிரானது அ வழி - அந்நிலையை, யாது செப்புகேன் யான் என்ன கூற வல்லவனாவேன்; (தன்னால் கூற முடியாமையைக் குறிப்பிட்டபடி.)

இராமபிரான் கண்களினின்றும் பெருகி, விரைந்தோடி வந்த கண்ணீர் வெள்ளத்தை, அவன் திருமேனியில் உண்டான மயிர்க்கூச்செறிப்புகள் மூடி மறைத்தன, அந்நிலையில், இராமபிரான் வியர்த்தான் என்றோ, வெதும்பினான் என்றோ சொல்ல முடியவில்லை என்பதாம். இனி, வேர்த்தன எனப் பாடல்கொண்டு ஈர்த்தன செங்கணீர் வெள்ளம் யாவையும் வேர்த்தன என்கெனோ; போர்த்தன மயிர் பெரும் புளகம் பொங்குதோள் வெதும்பினான் என்கோ எனப்பிரித்து நிரனிறை யணியாகக் கொண்டு பொருள் கூறலும் அமையும். தீர்த்தன் - பரிசுத்தன்; இராமபிரானைத் தீர்த்தன் என்பது; பால, திருவவதாரப்; 117; உலாவியற்; 32; ஆரணிய: 547; சுந்தர; 677. மயிர்ப்பெரும் புளகம்; 105. இச்செய்யுளில் முதல் இரண்டடிகள் உயர்வு நவிற்சி யணியும், பின்னிரண்டடிகள் மயக்கம் அல்லது ஐயவணியும் ஆம். இங்கு, திருவணிகளைக் கண்ட இராமபிரான் பெரிதும் துயருற்று, அருகில் நின்ற இலக்குவனிடம் தன் வருத்தத்தைக் கூற, அவ்விலக்குவனும் அவற்றை ஆராய்ந்து, அவற்றுள் பிராட்டியின் சிலம்பு தண்டைகளை மட்டும், தான் அறிவதாகக் கூறினான் என்ற செய்தி வான்மீகத்தில் காணப் பெறுகிறது.

பி - ம். 1. ஈர்த்தது. 2. மயிர்ப்புறம்.
3. மெய்யெலாம் வெதும்பி னானென்கோ.
4. தீர்த்தனுக் கென்கொலோ தெரிந்த தில்லையால்; யாது கூறுகேன். (9)

இராமபிரான் மூர்ச்சித்ததும் சுக்கிரீவன் அப்பெருமானைத் தாங்கித் தேற்றியதும்.

202. விடம்பரந் தனையதோர் வெம்மை மீக்கொள
நெடும்பொழு துணர்வினோ டுயிர்ப்பு நீங்கிய
தடம்பெருங் கண்ணனைத் தாங்கி னன்றன
துடம்பினிற் செறிமயிர் சுறுக்கொண் டோடவே.

(அப்பொழுது), விடம் பரந்தனையது - உடலில் விஷம் பரவினாற் போன்ற, ஓர் வெம்மை மீ கொள - ஒரு வெப்பம் மேலோங்கி நிற்க, நெடும்பொழுது - நெடுநேரம், உணர்வினோடு உயிர்ப்பு நீங்கிய - உணர்ச்சியோடு மூச்சும் நீங்கியது போன்ற நிலையில் இருந்த, தடம் பெரும் கண்ணனை - அகன்ற பெருங் கண்களையுடைய் இராமபிரானை, (சுக்கிரீவன்) தனது உடம்பினில் செறிமயிர் - தன் உடலில் அடர்ந்து விளங்கிய உரோமங்கள், சுறு கொண்டு ஓட - தீய்ந்துபோக, தாங்கினான் - தாங்கி அணைத்துக் கொண்டான். ஏ ; ஈற்றசை.

ஒவ்வோரிடமாகத் தொடர்ந்து விடம் பரவுவது விரைவில் ஆதலின், இராமபிரான்கொண்ட தாபத் தீக்கு அஃது உவமையாயிற்று. தடம் பெரும் : ஒரு பொருட் பன்மொழி. சுறுக்கொள்ளுதல் - தீப்பட்டுக் கருகிப் போதல் ; பால. மிதிலைக் காட்சி ; 50 ; ஆரணிய, 602 ; சுந்தர : 931, 1110; சுறீர் என்ற ஒலியை மேற்கொண்டு கருகுதல் என்னலும் ஆம். இராமபிரான் அயர்ந்து உணர்வும் மூச்சும் அற்றவன் போல இருந்த நிலையில், அங்கிருந்த சுக்கிரீவன் அப்பெருமானை அணைத்துக் கொள்ள அவனுடைய உடலின் உரோமங்கள் இராமபிரான் உடலின் வெம்மையால் சுறுக்கொண்டு தீய்ந்தன என்க. உள்ளக் கொதிப்பால் உடலும் கொதிப்புறும் ; அக்கொதிப்பு சார்ந்தவனையும் பற்றும் என்பது இங்குக் கூறப்பெற்றது ; ஒப்பு. 37. வானரங்களுக்கு உடல் முழுவதும் உரோமம் அடர்ந்திருக்கும் ஆதலின், செறிமயிர் என்னப் பட்டது.

பி - ம். 1. விடங்கரந் தனைய, விடங்கலந் தனைய.
2. தயிரினோ டுணர்வுநீங்கிய.
3. தடம்புயத் தண்ணலை.
4. சுறுக்கென் றேறவே ; சுறுக்கொண் டேறவே. (10)

**203.** தாங்கின னிருத்தியத் துயரந் தாங்குரு
தேங்கிய நெஞ்சின னிரங்கி விம்முவான்
வீங்கிய தோளினுய் வினையி னேனுயிர்
வாங்கினெ னிவ்வணி வருவித் தேயெனு.

தாங்கினன் இருத்தி - (சுக்கிரீவன்) அவ்வாறு இராமபிரானைத் தாங்கித் தன்மீது சாய்ந்திருக்கச் செய்து, அ துயரம் தாங்குருது - இராம பிரானுக்கு உண்டான அந்தத் துன்பத்தைத் தான் தாங்கமாட்டாது, ஏங்கிய நெஞ்சினன்-ஏக்கமுற்ற மனத்தினனுய், (இராமபிரானை நோக்கி), 'வீங்கிய தோளினுய் - பருத்த தோள்களையுடைய பெருமானே ! வினை யினேன் - (ஆராய்ந்து உணராச்) செயலையுடைய பாவியாகிய யான், இ அணி வருவித்தே - இந்த அணிகலன்களை உம்மிடம் கொண்டுவரச் செய்தே, . உயிர் வாங்கினென் - உமது உயிரைப் போக்கினேன் ஆனேன்' எனு - என்று கூறி, இரங்கி விம்முவான் - விம்மிலுற்று வருந்தினுன்.

தாங்கினன் இருத்தி - தாங்கிப் பிடித்து இராமபிரானை உட்கார வைத்து என்றலும் ஒன்றும். இது முதல் 210, முடிய ஒரு தொடராக் கியும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. *துயரந் தாங்கலா(து).*
2. *னிருந்து விம்முவான் ; விம்மியே.*
3. *தோளுடை விமல வுன்னுயிர்.*
4. *வருவித்தே யென்றுன் ; வா ங் க யே ா விவ்வணி வழங்கி னேனென்றுன் ; விவ்வழி வழங்கினே னென்றுன்.* (11)

**204.** அயனுடை யண்டத்தி னப்பு றத்தையும்
மயர்வற நாடியென் வலியுங் காட்டியுன்
உயர்புகழ்த் தேவியை யுதவற் பாலனுல்
துயருழந் தயர்தியோ சுருதி நூல்வலாய்.

(மேலும், அவன் இராமபிரானை நோக்கி), 'சுருதி நூல் வலாய் - வேதசாஸ்திரங்களில் வல்லோனே ! அயன் உடை அண்டத்தின் அ புறத்தையும் - பிரமாண்டத்திற்கு அப்பாற்பட்ட இடங்களையும், மயர்வு அற - மயங்குதலின்றி, நாடி - தேடிப்பார்த்து, என் வலியும் காட்டி - எனது வலிமையையும் தெரியப்படுத்தி, உன் உயர் புகழ் தேவியை - உமது சிறந்த புகழ்வாய்ந்த தேவியாகிய பிராட்டியை, உதவல் பாலனுல் - யான் உம்மிடம் மீட்டுக்கொண்டு வந்து அளிக்கக் கடவேன் ஆதலின், துயர் உழந்து அயர்தியோ - நீவிர் துன்பத்தில் வருந்தித் தளர்வுறுவீரோ ? (தளரவேண்டாம் என்றபடி.)

இது முதல் 210 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர்; அச்செய் யுளிலுள்ள 'என்ருன்' என்பதோடு முடியும். அயனுடைய அண்டம்: பிரமதேவனுல் படைக்கப்பெற்ற அண்ட கோளம். உன் உயர் புகழ்த் தேவி: 'பெரும்புகழ்ச் சனகியோ நல்லள்' (அயோத். மந்திரப்: 40) என வசிட்ட முனிவரும், 'உயர்புகழ்க் கொருத்தி' (சுந்தர. 1272) என அநுமனும் பிராட்டியின் ஏற்றங் கூறினமை காண்க. புகழ்: 'தன்மாட்டுப் புகழாவது, வாழுமூர் கற்பாற் றன்னைப் புகழ்வது'; (குறள். 56; பரி. உரை.)

பி - ம். 2. மயர்வற ஞறி, மயர்வர காட்டி; வலியுங் காட்டியும்.
4. தயருழன் றயர்தியோ; தயர்வுறேல். (12)

205. திருமக ளனையவத் தெய்வக் கற்பினுள்
வெருவரச் செய்துள வெய்ய வன்புயம்
இருபது மீரைந்து தலையு நிற்கவுன்
ஒருகணைக் காற்றுமோ வுலக மேழுமே.

'திருமகள் அனைய - இலக்குமி தேவியை ஒத்த, அ தெய்வ கற்பினுள் - தெய்வத்தன்மை பொருந்திய கற்பினையுடைய அச் சீதாப்பிராட்டி, வெருவர செய்து உள - அஞ்சும்படி அவள் திறத்துக் கொடுமை செய்துள்ள, வெய்யவன் - கொடியோனுன இராவணனுடைய, புயம் இருபதும் - இருபது தோள்களும், ஈர் ஐந்து தலையும் - பத்துத் தலைகளும், நிற்க - கிடக்கட்டும்; உன் ஒரு கணைக்கு — (நீவிர் ஏவினுல்) உமது ஓர் அம்புக்கு, உலகம் ஏழும் ஆற்றுமோ - உலகங்கள் ஏழும் ஏற்றுத் தாங்கும் வலியுடையன ஆகுமோ? (ஆகா என்றபடி).

பிராட்டி, தெய்வக் கற்பினுள்: 'வானுயர் கற்பினுள்', (சுந்தர. 1276.); 'சோகத்தா ளாய நங்கை கற்பினுற் றெழுதற் கொத்த......... வான் சிறப்புற்ருர்' (சுந்தர. 1278); 'புத்தேளிரும் பேணப் பெறுங் கற்பு' (குறள். 58, பரி. உரை.); 'கற்புக்கடம் பூண்டவித் தெய்வ மல்லது பொற்புடைத் தெய்வம்யாங் கண்டிலம்'; (சிலப். மதுரைக். 2. 15: 143-4.); 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றெழுவாளைத் தெய்வந் தொழுந் தகைமை திண்ணிதால்' (சிலப். மதுரைக். 23: ஈற்றுவெண்பா) என்பன நோக்குக. பிராட்டியின் கற்பை, இங்குத் தெய்வக்கற்பு என்றதுபோல், சடாயுவின் மரணத்தைத் தெய்வ மரணம் என ஆசிரியர் ஏற்றங் கூறிப் பாராட்டியதுங் காண்க. (உயுத்த. விபீடணன் அடைக் கலப்: 116.)

பி - ம். 1. திருமக ளருந்ததித் தெய்வக் கற்பினுள்.
3. தலையு மேவினுன், தலையு மேவின, தலையு மேவிகின்.
4. வுலகந் தாங்குமோ, வுலகம் போதுமோ. (13)

206. ஈண்டுநீ யிருந்தரு ளேழொ டேழெனப்
பூண்டபே ருலகங்கள் வலியிற் புக்கிடைத்
தேண்டியவ் வரக்கனைத் திருகித் தேவியைக்
காண்டியா லிவ்வழிக் கொணருங் கைப்பணி.

'ஈண்டு நீ இருந்து அருள் - இங்கேயே நீவிர் இருந்தருள்வீராக! ஏழ் ஒடு ஏழ் என பூண்ட - பதினான்கு எனும் தொகை கொண்ட, பேர் உலகங்கள் - பெரிய உலகங்களுள், வலியில் புக்கு - நான் என் வலிமையினால் புகுந்து, இடை - அவ்விடங்களில், தேண்டி - பிராட்டியைத் தேடி, அ அரக்கனை திருகி - அந்த இராக்கதன் இராவணனை (உடலை) முறுக்கி வருத்தி, தேவியை இ வழி கொணரும் - தேவியாகிய பிராட்டியை இவ்விடம் யான் கொண்டு வந்து சேர்க்கும், கை பணி - என் கைத்தொழில் திறத்தை, காண்டி - பார்ப்பீராக; ஆல் - ஈற்றசை.

தேண்டி: இது தேடி என்பதன் விரித்தல் விகாரம். திருகி: தலைகளைத் திருகிக் கொன்று; 'யாக்கையைத் திசைமுகன் படைசென்று திருக' ; (சுந்தர. 1037). என் கைப்பணி - என் சிறு கைங்கரியம் அல்லது குற்றேவல் என்னலும் ஒன்றும்; கை: சிறுமையை உணர்த்தும் சொல்; கை வாள், கையாள், கைக்குட்டை என்பன போல.

பிராட்டியைக் கொண்டுபோனவன் இராவணனே என்று சுக்கிரீவன் உணர்ந்தும் அவளை அவன் வைத்துள்ள இடம் அறியாமையால் இவ்வாறு கூறினான் என்க. பின் நாடவிட்ட படலத்தில், நாற்றிசைகளிலும் பிராட்டியைத் தேட வானர வீரர்களை அவன் அனுப்பியதற்கும் இதுவே காரணமாகும்.

பி - ம். 2. புக்கியே, புக்கிடை.
3. *திண்டிய வரக்கனைத்; செயிர்த்துத் தேவியை; திருத்தித் தேவியை.*
4. *காண்டிநான்; கொணர்வல் காவலோய்; கோணருங் காட்சியை.* (14)

207. ஏவல்செய் துணைவரேம் யாங்க ளிங்கிவன்
தாவரும் பெருவலித் தம்பி நம்பிநின்
சேவக மிதுவெனிற் சிறுக நோக்கலென்
மூவகை யுலகுநின் மொழியின் முந்துமோ.

'யாங்கள் - அநுமான் முதலாகிய யாங்கள், ஏவல் செய் துணைவரேம் - நீவிர் ஏவிய பணிகளைச் செய்யும் துணைவர்களாய் உள்ளோம்;

ஈங்கு இவன் - இங்கு உம் அருகே உள்ள இந்த இலக்குவனே, தா அரும் - அழித்தற்கு அரிய, பெருவலி - பெரிய வலிமை வாய்ந்த, தம்பி - தம்பியாக உள்ளான்; நம்பி - புருடோத்தமனே! நின் சேவகம் - உம்முடைய வீரத்தன்மை, இது எனில் - யான் கூறிய இத் தன்மைத்து ஆனால், சிறுக நோக்கல் என் - (உம்மை நீவிர்) குறை வாகக் கருதுவது ஏனோ? மூவகை உலகும் - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூன்று வகைப்பட்ட உலகங்களும், நின்மொழியின் முந்துமோ - உமது கட்டளையாகிய வார்த்தையைக் கடந்து செல்லுமோ? (செல்லா - என்றபடி,)

ஈங்கு யாங்கள் ஏவல்செய் துணைவரேம், எனவும் இயைத்துக் கொள்ளலாம். நம்பி - ஆடவரிற் சிறந்தோன் அதாவது புருடோத் தமன். சேவகம்: வீரம்; 'என்னெடுஞ் சேவகந் தோற்க' (உயுத்த. நாகபாசப்: 10); வீரனிற் சிறந்த இராமபிரானே இந்நூலிற் சேவகன் என்றே பல விடங்களிலும் கூறுவது காண்க.

பி - ம். 1. *துணைவரோ, துணைவரோம், துணைவரோ டியாங்கள், துணை வராய் யாங்களும்,* 2. *நம்பிநன்.* 3, *சிறிது நோக்கியென், சிறிது நோக்கிலென், சிறுகுமை நோக்கி லென்.* 4. *முந்துமே.* (15)

208. பெருமையோ ராயினும் பெருமை பேசலார்
கருமமே யல்லது பிறிதென் கண்டது
தருமநீ யல்லது தனித்து வேறுண்டோ
அருமையே துனக்குநின் றவலங் கூர்தியோ.

'பெருமையோர் ஆயினும் - பெருமைக்கு உரியவர் ஆனாலும், கருமமே அல்லது - தாம் மேற்கொண்ட காரியத்திலே (நோக்கமாய்) அதனைச் செய்து முடித்தல் அல்லாமல், பெருமை பேசலார் - தம் பெருமையைத் தாமே பேசமாட்டார்; பிறிது என் கண்டது - இது வன்றி வேறு எவ்வுண்மை (உலகில்) காணப்படுவதாகும்? தருமம் நீ அல்லது தனித்து வேறு உண்டோ - தருமம் என்பது நீவிரே அல்லா மல் வேறு ஒன்று தனியே உள்ளதோ? (இல்லை என்றபடி); உனக்கு அருமை ஏது - உமக்குச் செய்தற்கு அரிதாகிய செயல் என்பது எது உள்ளது? (ஒன்றும் இல்லை என்றபடி); நின்று அவலம் கூர்தியோ - இவ்வாறாகவும் நீவிர் திகைத்து நின்று சோகம் மிகுந்து வருந்துவீரோ? (வருந்துதல் கூடாது என்ற குறிப்பு).

பெருமையோர் பெருமை பேசலர்: இது அநுமன் திறத்து, சுந்தர. 1233, 1244 செய்யுட்களிலும் காண்க. 'தரும நீ யல்லது தனித்து வேறுண்டோ': 'தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ' (258) என்று வாலி தாரைக்கு எடுத்து கூறியதையும் ஒப்பு நோக்குக. மேலும், அறத்தின் மூர்த்திவந் தவதரித்தான்'; (அயோத். மந்திரப்: 39); 'மெய்யற மூர்த்தி' (சுந்தர. 1120) என்றும், தயரதசக்கர வர்த்தியின் அரசசபையினரும், அநுமனும் வலியுறுத்திக் கூறி யுள்ளமை காண்க: வான்மீகமும் இராமபிரானை உருவெடுத்து வந்த தர்மம் என்று கூறியதும், மேகநாதன் உயிரைக் கவர இளைய பெருமான் அம்பு ஏவிய நிலையில், "தர்மாத்மா ஸத்யஸந்தச்ச ராமோ தாசரதேரதி' என்று அறுதியிட்டுக் கூறிய வான்மீக இராமாயண சுலோகத்தையே, இராமாயண பாராயணக் கிரமத்திற்கு மூலமந்திர மாக நம்மனோர் கொண்டுள்ள சிறப்பும் இராமபிரான் தருமமூர்த்தி என்பதை உறுதிப் படுத்துவதாகும். அவலம் - துன்பம், கூர்; மிகுதிப் பொருளையுணர்த்தும் உரிச்சொல்: 'கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்' (தொல். உரி: 18). பெருமையோராயினும்: உம்மை உயர்வு சிறப்பு, இனி, 'பெருமையோராயினும் பெருமை பேசுவார்' என்ற பாடங் கொண்டு, பெரியவராலும் வேளைவந்தவிடத்துத்தம் பெரு மையைப் பேசுவார்கள்' என்று பழையவுரை கூறும்.

பி-ம். 1. பெருமையோ ராயினும், பெருமையோ ரானவர்; பெருமை பேசுவார், பெரித பேசுவார், பெருமை பேசுவர்; பெருமைப் பேறெனப்; (16)

209. முளரிமேல் வைகுவான் முருகற் றந்தவத்
தளிரியல் பாகத்தான் றடக்கை யாழியான்
அளவியொன் றுவதே யன்றி யையமில்
கிளவியாய் தனித்தனிக் கிடப்ப ரோதுணே.

ஐயம் இல் கிளவியாய் - சந்தேகத்திற்கு இடமின்றித் தெளிவாய்ப் பேசும் ஐயனே! முளரிமேல் வைகுவான் - தாமரை மலர்மீது வாழும் பிரமதேவன், முருகன் தந்த அ தளிரியல் பாகத்தான் - முருகக் கடவுளை அளித்த அழகிய தளிர்போன்ற (மென்மை அழகுவாய்ந்த) உமாதேவியைத் தன் வாமபாகத்திற் கொண்ட சிவபெருமான், தட கை ஆழியான் - (தன்) பெரிய கையில் சுதர்சனம் என்னும் சக்கரத்தை யுடைய திருமால் (ஆகிய மும்மூர்த்திகளும்), அளவி - கலந்து, ஒன்று ஆவதே அன்றி - ஒன்றாக அமைந்தால் அல்லாமல், தனி தனி-அன்னார்

ஒவ்வொருவராகத் தனித்து, துணை கிடப்பரோ - உனக்கு ஒப்பாக அமைவார்களோ? (மாட்டார் என்றபடி.)

அ. உலகறி சுட்டு. துணைகிடத்தல் - ஒப்பாதல்; துணை - ஒப்பு; துணையற வறுத்துத் தூங்க நாற்றி' (முருகு. 237, உரை). இனி கிடைப்பரோ துணை எனும் பாடங்கொண்டு, ஒப்பமைவார்களோ எனவும் பொருள் கொள்வர். இச்செய்யுளால் இராமபிரான் மும்மூர்த்திகளும் ஒருமித்த பரம்பொருள் என்பது பெறப்பெற்றது. இது, இக்காண்டம் 1. கடவுள் வாழ்த்து; பால. திருவவதாரப். 137, கடிமணப்: 61, 69; சுந்தர. 1122 முதலியவற்ருலும், விராதன், கவந்தன், வாலி முதலானோர் துதிகளாலும், பிறவாற்ருனும் இந்நூலில் ஆங்காங்கு விளங்கப்பெறுவது காணலாம், இதுவே நம் ஆசிரியர் கம்பநாடரின் கொள்கையும் ஆம். முளரி: முட்களை அடியில் உடையது என்னும் பொருளில் தாமரையைக் குறிப்பது; இது காரண இடுகுறிப்பெயர். தளிரியல்: உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அளவுதல் - அளாவுதல், கலத்தல்; கிளவி: கிள என்பது பகுதி.

பி - ம். 4. கிளவிவாய், கிளவியர் தனித்தனிக்; கிடப்ப ரோதுணை கிடைப்ப ரோதுணை. (17)

210. என்னுடைச் சிறுகுறை முடித்த லீண்டொரீஇப்
பின்னுடைத் தாயினு மாக பேதுறும்
மின்னிடைச் சனகியை மீட்டு மீடுமால்
பொன்னுடைச் சிலையினுய் விரைந்து போயென்ருன்.

பொன் உடை சிலையினுய் - அழகிய வில்லையுடைய பெருமானே என்னுடை சிறு குறை முடித்தல் - என்னுடைய சிறிய குறையை! நிறைவேற்றுதல், பின்னுடைத்து ஆயினும் ஆக-பின் நடைபெறுவதாக ஆயினும் ஆகட்டும்; ஈண்டு ஒரீஇ - இப்பொழுது அதனைத் தவிர்ந்து, விரைந்துபோய் - நாங்கள் விரைவிற் சென்று, பேது உறும் - இராவணனுல் துன்புற்று வருந்தும், மின் இடை சனகியை - மின்னல் போன்ற இடையையுடைய சானகிப் பிராட்டியை, மீட்டு - அவ் விராவணனிடமிருந்து மீட்டுக்கொண்டு, மீள்தும் - திரும்பி வருவோம்;' என்ருன் - என்று சுக்கிரீவன் கூறினுன். ஆல்: அசை.

இராமபிரான் துயரை நீக்குதலே தான் முதலிற் செய்யவேண்டியது என்ற சுக்கிரீவனின் சீரிய கருத்து இங்கு நோக்கத்தக்கது. சுக்கிரீவன், தன் குறையைச் சிறிது என்றமையால் பிராட்டியை மீட்டலாகிய இராம

பிரான் குறை பெரிது எனக் கருதினன் என்க : குறை காரியம் அல்லது இன்றியமையாச் செயலும் ஆம் ; ஆரண்ய. 149. பொன்னுடைச் சிலை: பொன்-அழகு; (பிங்); பொற்பூண்களாகிய கட்டுக்கள் அமைந்த சிலையும் ஆம். பேது - துன்பம் ; சீவக. 1744. ஒரீஇ ; சொல்லிசையளபெடை. மின்னிடை : மின்னல் ஒளியினாலன்றித் தன் உருவினால் விளங்காமை போலப் பிராட்டியின் இடையும் உருவு காண முடியாத நுட்பமானது என்க ; 'மின்னேபுரை யிடையாளொடு மினிதேகினன் வீரன்' (பால. பரசுராமப் : 4); 'மின்னிடை யலசவோடி' (ஆரணிய 285). மீள்தும் என்பது மீடும் என்று திரிந்தது.

பி - ம். 1. என்னுடைச் சிறுமையை; முடிப்ப நீண்டொரீஇ.
2. மாகப் பேதுறும், பெய்துறும், பெய்துற.
3. மீட்டு மீட்டுமால், மீட்டு மீள்வ மால்.
4. விரைந்து போதுமால். (18)

இராமபிரான் தெளிவுற்றுச் சுக்கிரீவனை நோக்கிக் கூறுதல்.

211. எரிகதிர்க் காதல னினைய கூறலும்
அருவியங் கண்டிறந் தன்பி னோக்கினன்
திருவுறை மார்பனுந் தெளிவு தோன்றிட
ஒருவகை யுணர்வுவந் துரைப்ப தாயினன்.

எரி கதிர் காதலன் - சுடும் கிரணங்களையுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவன், இனைய கூறலும் - இவ்வாறான சொற்களைச் சொன்ன அளவில், திரு உறை மார்பனும் - திருமகள் தங்கியிருக்கும் மார்பை யுடைய இராமபிரானும், தெளிவு தோன்றிட - மூர்ச்சித்திருந்த நிலையிலிருந்து (ஒருவாறு) தெளிவு உண்டாக, ஒரு வகை உணர்வு வந்து - ஒருவாறு தன்நினைவு வரப்பெற்று, அருவி அம் கண் திறந்து - அருவி போல் கண்ணீர் சோரும் தன் அழகிய கண்களைத் திறந்து, அன்பின் நோக்கினன் - அன்போடு அச் சுக்கிரீவனைப் பார்த்து, உரைப்பது ஆயினன் - பின் வருமாறு சொல்லலானான்.

எரி கதிர் ; வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை. காதலன் - மகன் ; 'தன் காதலன் வைகு மாலிலை யன்ன வயிற்றினை...........பிசையும்' ; (அயோத். நகர் நீங்கு : 11) ; அருவி அம்கண் - அருவி போன்று நீர் பெருகும் கண் என்றுமாம். அம் - நீர்.

பி - ம். 1. இரவி காதல னினைய. 2. தன்பி னோக்கியே.
3. திருவுடை மார்பனுந் ; தெளிவு கொள்ள வந்து. (19)

212. விலங்கெழிற் றோளினாய் வினையி னேனுமிவ்
விலங்குவிற் கரத்தினெ னிருக்க வேயவள்
கலன்கழித் தனளிது கற்பின் மேவிய
பொலன்குழைத் தெரிவையர் புரிந்து ளோர்கள்யார்.

'விலங்கு எழில் தோளினாய் - மலைகள் போன்று அழகிய தோள்களையுடைய பெருமானே! வினையினேனும் - பாவ வினையை யுடைய யானும், இ இலங்கு வில் கரத்தினென் இருக்கவே - விளங்குகின்ற இந்த வில்லை ஏந்திய கையனாய் இருக்கும்போதே, அவள் - அந்தச் சீதை, கலன் கழித்தனள் - தன் அணிகலன்களை நீக்கினாள்; இது - இச் செய்கை, கற்பின் மேவிய - மனையற நெறியை மேற்கொண்ட, பொலன் குழை தெரிவையர் - பொன்னாலான குழையென்னும் காதணிகளை யணிந்த மகளிர், புரிந்துளோர்கள் யார் - செய்தோர்கள் வேறுயாரே யுள்ளார்? (ஒருவருமில்லை என்றபடி).

விலங்கு - இது விலங்கல் என அல் விகுதி பெற்றும் வரும்; 'விலங்கல்வலி கொண்டெனது வேள்விநலி கின்றாள்', (பால. தாடகைவதைப்: 43). இலங்கு விற்கரத்தினெனிருக்க, 'கையில் வில்லோடு உயிரும் வைத்துக்கொண்டு பயனற்றவனாய் இருக்க' என்று தன்னையிழித்துக் கூறிக்கொண்டதுமாம்! வில்லின் பயனற்றிருக்கும் தன் செயலை இராமபிரான் பின்வரும் 213-ம் செய்யுளிலும், 'வன்றாட் சிலையேந்தி வாளிக் கடல்சுமந்து, நின்றேனு நின்றே னெடு மரம்போ னின்றேனே'; 'வில்லுடையே னின்றேன் விறலுடையே னல்லேனோ' (ஆரணிய. 989, 990.) என்ற இடங்களிலும் காண்க. குழையும் மங்கல அணிகளுள் ஒன்று; மூவருலா. 1 : 77.

மகளிர் கலன் கழித்தல் அமங்கலமானது: பிராட்டி கலன்களைக் கழித்தது அவளுக்கு மங்கலமாகவே முடிந்ததை அநுமன், 'இற்றைநா ளளவு மன்னா யன்றுநீ யிழித்து நீத்த மற்றைநல் லணிகள் காணுன் மங்கலங் காத்த மன்னோ' என்று சிறப்பமையக் கூறியதும் இங்குச் சிந்திக்கத் தக்கது.

பி - ம். 1. வினைய னேனுமிவ்.

2. இலங்குவிற் கரத்தி னிருக்க; கரத்தினி லிருக்க, கரத்தினு மிருக்க; இலங்கெழிற் புயனியி லிருக்க; கற்பின் மேவிய.

3. பொலங்குழை.

213. வாணெடுங் கண்ணியென் வரவு நோக்கயான்
தாணெடுங் கிரியொடுங் தருக்க டம்மொடும்
பூணெடும் புலம்பியே பொழுது போக்கியிந்
நாணெடுஞ் சிலைசுமந் துழல்வெ னுணிலேன்.

'வாள் நெடும் கண்ணி - வாள் போன்று கூர்மையும் ஒளியுங் கொண்ட நீண்ட கண்களையுடைய சீதை, என் வரவு நோக்க - யான் வந்து அவளை மீட்பேன் என்று, என் வரவை எதிர்நோக்கி (வருந்தியிருக்க), யான்'- யானே, தாள் நெடும் கிரி ஒடும் - அடிவாரங்களோடு நீண்டுயர்ந்த மலைகளோடும், தருக்கள் தம் 'ஒடும் - மரங்களோடும், பூண் ஒடும் - அவள் கழற்றிப் போகட்டுச் சென்ற இவ்வணிகலன் களோடும், புலம்பியே - பிரலாபித்துக் கொண்டே, பொழுது போக்கி - காலத்தை வீணாகக் கழித்து, இ நாண் நெடும் சிலை சுமந்து - நாணோடு விளங்கும் இந்த நெடிய வில்லையும் (வீணே) சுமந்து கொண்டு, நாண் இலேன் - வெட்கமில்லாதவனாய், உழல்வென் - திண்டாடுகின்றேன்.

வாள் கண்ணுக்கு; 'வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்'; (பால. உலாவியற் ; 19). தாள் - மலையின் அடிவாரம் ; இதனைப் பாதசைலம் என்பர். சிலை சுமந்து ; 212 ஆம் செய்யுளின் உரை காண்க. சிலை சுமந்துழல்வது ; ஒப்பு : 'தெவ்வர் சொல்லுஞ் சொல்லுஞ் சுமந்தேனிரு தோளெனச் சோம்பி யோங்கும், கல்லுஞ் சுமந்தேன் கணைப்புட்டிலுங் கட்டமைந்த, வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன், (அயோத். நகர் நீங்கு : 136). இ நாள் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 2. *தடக்கை தம்மொடும்.*
3. *புலம்பினென், புலம்பினேன் ; போக்கியென், போக்கினேன், போக்கியே, நோக்கியிந்.* (21)

214. ஆறுடன் செல்பவ ரரிவை மார்தமை
வேறுளோர் வலிசெயின் விலக்கி வெஞ்சமத்
தூறுறத் தம்முயி ருகுப்ப ரென்னையே
தேறினள் புன்கணோய் தீர்க்க கிற்றிலேன்.

'ஆறு உடன் செல்பவர்-வழியே தன்உடன் செல்பவரான, அரிவை மார் தமை - மகளிரை, வேறு உளோர் வலி செயின் - வேறு இடைவந்த கொடியோர் துன்புறுத்துவாரானால், விலக்கி - அக் கொடியரை விலக்கி, வெம் சமத்து - அவ்வாறு விலக்குவதால் ஏற்பட்ட கொடிய போரில், ஊறு உற - தமக்கு ஆபத்து உண்டாக, தம் உயிர்

உகுப்பர் - தம் உயிரையே அதன்பொருட்டுச் சிந்துவர்; (ஆன்றோர் செயல் அவ்வாருக, யானோவென்ருல்), என்னையே தேறினள் - என்னையே நம்பியவளான சீதையின், புன்கண் நோய் - துன்பமாகிய நோயை, தீர்க்ககிற்றிலேன் - போக்கும் ஆற்றலில்லாதவனாய் இருக்கின்றேன்.

பிறரால் துன்புறுத்தப்பெற்ற மகளிரைக் காக்கும் செயலில், தம் உயிரையும் அளிக்கவல்ல ஆடவரின் வீரவாழ்க்கையின் சிறப்புக்கு ஓர் ஒப்பற்ற உதாரணமாக, 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' (சுந்தர. 566) என அநுமனாலும், 'சரணெனக் கியார்கொ லென்று சானகி யழுது சாம்ப, அரணுனக் காவென் வஞ்சி யஞ்சலென் றருளி னெய்தி, முரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யமர் முடித்துத் தெய்வ மரணமென் ருதை பெற்ற தென்வயின் வழக்கன் ருமோ' (உயுத்த. வீடணனடைக்கலப்; 116) என இராமபிரானாலும் புகழப்பெற்ற சடாயுவின் சிறப்பு இங்கு உய்த்துணரப்பாலதாம். மேலும், பரதாழ்வான் கோசலாதேவியிடம் தான், இராமாபசாரத்திற்கு உடந்தையாய் இருந்தவனாவனேல், இன்ன இன்ன தீச்செயல்கள் புரிந்தோர் அடையும் கதிக்குள்ளாவேன் என்று வஞ்சினங் கூறுமிடத்து, 'ஆறுதன் னுடன் வரு மஞ்சொன் மாதரை ஊறுகொண் டலைக்கத்தன் னுயிர்கொண் டோடினேன்' (அயோத். பள்ளியடைப். 106) என்று குறிப்பிட்டமை இங்கு ஒப்புநோக்கத் தக்கது. வேறுளோர் - நற்குணத்தினின்றும் வேறுபட்டுள்ள கொடியோர் எனலும் ஏற்கும், ஊறு - துன்பம்; முதனிலை திரிந்த தொழிற்பெயர். புன்கணோய் - துன்பமாகிய நோய்; இஃது இருபெயரொட்டுப் பண்புத்தொகை: புன்கண்; ஆரணிய. 923; புறநா. 72 : 17; மணி. 11 : 112; பெருங். 1-44 : 5. தீர்க்ககிற்றிலேன் : இதில், கில் என்பது ஆற்றலை உணர்த்தும் இடைநிலை.

பி - ம். 1. ரரிவை மாதரை, ரருமை மாதரை.
2. வேறுளோர் வலிசெயில் விலக்கி வெஞ்சமத்; வலிந்திடின்.
3, ருகுப்ப ரென்னொடும், ருகுப்ப ரென்னையே. (22)

215. இந்திரற் குரியதோ ரிடுக்கண் டீர்த்திகல்
அந்தகற் கரியபோ ரவுணற் றேய்த்தனன்
எந்தைமற் றவனின்வந் துதித்த யானுளேன்
வெந்துயர்க் கொடும்பழி வில்லிற் ருங்கினேன்.

'எந்தை - என் தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி, இந்திரற்கு உரியது ஓர் இடுக்கண் தீர்த்து - இந்திரனுக்கு நேர்ந்த ஒரு துன்பத்தைப்

போக்கி, அந்தகற்கு அரிய - யமனும் எதிர்நிற்க அரியவனை, இகல் போர் அவுணன் தேய்த்தனன் - மாறுபாடுகொண்ட போரில் வல்ல சம்பரன் என்னும் அசுரனை அழித்தனர்; மற்று - அவ்வாறிருக்க, அவனில் வந்து உதித்த யான் - அவருக்கு மைந்தனாக வந்து பிறந்த யானே, வெம் துயர் கொடும்பழி - பெரும் துன்பத்திற்கு இடமான பெரிய நிந்தையை, இ வில்லில் தாங்கினேன் - இந்த வில்லில் தாங்கிக் கொண்டிருக்கிறேன்.

தசரதன் சம்பரனை அழித்து இந்திரன் துயரந் தீர்த்தது; பால. கையடைப்; 8; அயோத். மந்திரப். 21; திருவடி சூட்டு: 63; ஆரணிய. 199. வில்லிற் றாங்கினேன்: நாணொடுஞ்சிலை சுமந்துழல்வன்றியினேன் (213) என்றமை போன்றது, இனி வில்லைத் தாங்குவது போல என்றும், வில்லுடன் என்றும் பொருள் கொள்ளலுமாம்.

பி - ம். 1. *இந்திரற் குற்றதோர், இந்திரற் கரிய் தோர்.*
2. *அந்தரத் தரிய போர், அந்தகற் கரிய பேர்; தேயத்தன்.*
3. *துதித்த நானுளேன், துதித்தியானெனில்.*
4. *வில்லிற் றுங்குவேன்.* (23)

216. கருங்கட லொட்டனர் கங்கை தந்தனர்
பொரும்புலி மானொடு புனலு மூட்டினர்
பெருந்தகை யென்குலத் தரசர் பின்னொரு
திருந்திழை துயரநான் றீர்க்க கிற்றிலேன்.

'கரும் கடல் தொட்டனர் - பெரிய கடலைத் தோண்டினர்; கங்கை தந்தனர் - (வானில் இருந்த) கங்கா நதியைப் புவியிற் கொண்டுவந்து நமக்கு உதவியுள்ளார்; பொரும் புலி - போரிடும் தன்மையுள்ள புலியை, மான் ஒடு - அதனைக்கண்டு அஞ்சும் மானோடு, புனலும் ஊட்டினர் - சேர்ந்து தண்ணீரும் பருகச் செய்தனர்; (அத்தகையரான), பெரும் தகை என் குலத்து அரசர் - பெருந்தன்மை அமைந்த என் குலத்து மூதாதையர்களான அரசர்கள்; பின்நான் - (அவர்களின்) பின்னுதித்த யானேயென்றால், ஒரு திருந்திழை துயரம் தீர்க்க கிற்றிலேன் - (என் மனைவியாகிய) ஒரு பெண்ணின் துன்பத்தை நீக்குந் திறமையற்றவனானேன்.

கருங்கடல்: கருமை - பெருமை; கரிய கடல் என்பாரும் உளர். தொடுதல் - தோண்டுதல்; 'தொட்டனைத் தூறும் மணற்கேணி' (குறள். 396); 'காவோ டறக்குளந் தொட்டானும்' (திரிகடுகம். 70); கருங் கடல் தொட்டவர்கள் சகர குமாரர்கள்; 'சகரர் தொட்டலாற் சாகரமெனும் பெயர் தழைப்ப' (பால. அகலிகை: 43); பால. குலமுறை

கிளத்து. 8-ம் செய்யுளும் நோக்குக. கங்கை தந்தனர் : கங்கை தந்தது பகீரதன் ; தந்தனர் எனப் பன்மையிற் கூறியது, அவனது முயற்சி யில் ஈடுபட்டு அருந்தவம் புரிந்து இறந்த அஞ்சுமன் முதலியோரையும் உடன்கூட்டி என்னலாம் ; (பால. குலமுறைகிளத்து : 9-ம் காண்க). பொரும்புலி மாவொடு புனலு மூட்டினர் : இது செய்தவன் மாந்தாதா என்னும் அரசன் ; 'புலிப்போத்தும் புல்வாயும் ஒருதுறையில் நீருண்ண வுலகாண்டோ னுளனொருவன்' (பால. குலமுறை : 5). இராம பிரானுடைய மூதாதையர்களையெல்லாம் குலமுன்னோரென்ற முறை யில் சோழமன்னர்கள் பால் மேற்கண்ட அருஞ்செயல்களைப் பாராட்டிப் பேசுவதைக் கலிங்கத்துப்பரணி, மூவருலா முதலிய நூல்களிலும், சோழமன்னர் சிலாசாஸனங்களிலும் செப்பேடுகளிலும் காணலாம்.

திருந்திழை : அன்மொழியாய்ப் பெண் என்ற அளவில் சீதாப் பிராட்டியாரைக் குறிப்பது. தீர்க்ககிற்றிலேன் ; 214 உரையில் உள்ளபடி கொள்க.

பி - ம். 3. *பெருங் குலத் தரசரிற் பிறந்த பின்னொரு, தரசரிற் பின்வந் தேனொரு.*

4. *தீர்க்க நோக்கிலேன், தீர்க்க நோற்றிலேன்.* (24)

217. விரும்பெழி லெந்தையார் மெய்ம்மை வீயுமேல்
வரும்பழி யென்றியான் மகுடஞ் சூடலேன்
கரும்பழி சொல்லியைப் பகைஞன் கைக்கொளப்
பெரும்பழி சூடினேன் பிழைத்த தென்னரோ.

விரும்பு - யாவரும் விரும்பத்தக்க, எழில் - தோற்றப்பொலிவு அமைந்த, எந்தையார் - என் தந்தையாகிய தசரதசக்கரவர்த்தி யின், மெய்ம்மை வீயும் ஏல் - ஸத்தியம் அழிவுறுமானால், பழி வரும் என்று - அதனால் என் புகழுக்குப் பழி உண்டாகும் என்று அஞ்சி, யான் மகுடம் சூடலேன் - நான் அரசனாக மகுடம் புனைய வில்லை ; (அத்தகைய யான் இப்பொழுது), கரும்பு அழி சொல்லியை - கரும்பைச் சுவையில் அழியச் செய்யும் இனிய சொற்களையுடைய சீதையை, பகைஞன் - பகைவனான இராவணன், கை கொள - அப கரித்துக் கொள்ள, பெரும்பழி சூடினேன் - பெரிய பழியைச் சூட்டிக் கொண்டேன் : பிழைத்தது என் - என்ன பிழை செய்துவிட்டேன் !' அரோ : அசை.

எந்தையார் விரும்பு எழில் மெய்ம்மை, என இயைத்தும் பொருள் கொள்ளலாம்; தயரதன் வாய்மை காத்துத் துறக்க முற்றவனுதலால்; ஆரணிய: 195. எழில் - அழகு; வலிமையும் ஆம். கரும்பழி சொல்லியை; இராவணன் பிராட்டியைக் 'கரும்புண்ட சொல் மீள்கிலள்' (ஆரணிய. 908) என்றமையும் ஒப்பு நோக்குக. 'தந்தைக்குண்டாகும் பழிக்கஞ்சி அதுதீர மகுடந்துறந்து வனம்புகுந்த நான் என்மனைவியைப் பிறன் கைக்கொள்ளப் பெரும்பழிக் குள்ளானேன்' என்று இராமபிரான் வருந்தினுன் என்க. 215 ஆம் செய்யுள் முதல் இச்செய்யுள் முடிய, இராமபிரான் தான் பிராட்டியை இழந்து நிற்கும் நிலையில் தன்னைத்தானே நொந்துகொண்டு கூறியவை ஆம்.

பி - ம். 1. லெர்தைதன்; மெய்மை நீங்குமேல். (25)

சுக்கிரீவன் இராமபிரானை மீட்டும் தெளிவித்தல்

218 என்னநொந் தின்னன பன்னி யேங்கியே
துன்னருந் துயரத்துச் சோர்கின் ருன்றனை
பன்னருங் கதிரவன் புதல்வன் பையுள்பார்த்
தன்னவெந் துயரெனு மளக்கர் நீக்கினுன்.

என்ன - என்று, நொந்து - மனம் வருந்தி, இன்னன பன்னி - இவ்விதம் பல சொல்லிப் பிரலாபித்து, ஏங்கியே - மனம் ஏக்கமுற்று, துன்ன அரும் துயரத்து - அடைதற்கரிய துன்பத்தினுல், சோர்கின்ருன் தனை - மனம் தளர்கின்ற இராமபிரானுடைய, பன்ன அரும் பையுள் - சொல்லற் கரிய துன்பத்தை, கதிரவன் புதல்வன் பார்த்து - சூரிய குமாரனுன சுக்கிரீவன் கண்டு, அன்ன - அத்தகைய, வெம் துயர் எனும் - கடும் துன்பம் என்று சொல்லக்கூடிய, அளக்கர் நீக்கினுன் - கடலினின்றும் அப்பெருமானைக் கரையேற்றினுன்.

பன்னுதல் - விளம்பிச் சொல்லுதலும் ஆம்; 'என்றென்றுன்னும் பன்னியிரங்கும்' (அயோத். கைகேசி சூழ்வினைப் : 41). பையுள்-துன்பம்; அயோத். தைலமாட்டுப் : 86. அளக்கர் - கடல்; பால. அரசியற் 5. அயோத். மந்தரை சூழ்ச்சிப் ; 52.

பி - ம். 1. இன்னன பலவினை தெண்ணி யேங்கியே; தேங்கி யெண்ணியே; பன்னி யிடழிக்.

2. துயருறத் தளர்ந்து சோர்ந்தவன்; துயரு ழந்து சோர்கின்ருன் றனைப்; உன்னருந் துயரத் தனைகின் ருன்றனைப். (26)

இராமபிரான் கூறியது.

219 ஐயநீ யாற்றலி னாறி னேனலா
துய்வனே யெனக்கிதி னுறுதி வேறுண்டோ
வையகத் திப்பழி தீர மாய்வது
செய்வெனின் குறைமுடித் தன்றிச் செய்கலேன்.

(ஒருவாறு துயர் நீங்கிய இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி), 'ஐய - அன்பனே! நீ ஆற்றலின் - நீ தணிவித்ததனால், ஆறினேன் அலாது - (நானும் என் துயரம்) தணிந்தேன் அல்லாமல், உய்வனே - யான் இத் துயரினின்றும் நீங்கிப் பிழைக்கக் கடவேனோ? (உய்ய மாட்டேன் என்ற படி); எனக்கு இதின் உறுதி வேறு உண்டோ - எனக்கு இந்த உன் உதவியினும் நலந்தரத் தக்கது வேறு உள்ளதோ? (இல்லை என்றபடி); (ஆதலின்) வையகத்து - உலகில், இ பழி தீர - (ஏற்பட்ட) இந்த நிந்தனை என்னைவிட்டு நீங்க, மாய்வது செய்வென் - யான் இறந்து போதலையே செய்வேன்; (ஆனால்) நின் குறை முடித்து அன்றி - உன் காரியத்தைப் பூர்த்தி செய்தால் அல்லாமல், செய்கலேன் - நான் அவ்வாறு செய்யமாட்டேன்.

இது முதல் எட்டுச் செய்யுட்கள் குளகமாய் இயைந்த ஒரு தொடரேயென்னலாம். சுக்கிரீவனை ஐய என்றது, அன்பின் முதிர்ச்சி யால்; தம்பியாக ஏற்றுக்கொண்ட நட்பு முறையின், அன்பால் வந்த மரபு வழுவமைதியாகவுங் கொள்ளலாம்; இலக்குவனை ஐய என்றது போல: அயோத். கிளைகண்டு: 50; ஆரணிய, 802; முதலிய காண்க. குறை - முடிக்கப் பெறும் பொருள்; அல்லது காரியம்; 'பயக்குறையில்லை தாம் வாழுநாளே', (புறநா. 188); 'வினைக் குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு', (குறள்.612 பரி.உரை); 'அகத்தியற் காண்ப தோர் குறைகிடந்த தினியெனக் கூறினன்'; (ஆரணிய 149). இங்கு, சுக்கிரீவன் இராமபிரான் குறை தீர்த்தலையே பெரிதாகக் கருதியது (210) போலவே இராமபிரானும் சுக்கிரீவன் குறை தீர்த்தலையே பெரிதாகக் கருதியது நோக்கத்தக்கது; இதுகொண்டு, தம் நலத்தினும் நண்பனின் நலமே பெரிதாக மதித்த உத்தம நண்பர்கள் இவர்கள் என்பது விளங்குவது காண்க.

பி - ம். 1. னாறி னேனது, னாறி னல்லது; னாற்றி னேனல (கு).
2. யெனக்கினி னுறவு வேறுண்டோ.
3. வையகத் தென்னுயிர் தன்னை மாய்ப்பது, வையகத் தின்னுயிர், எய்திய பழியினி யின்ன வானபின், யின்ன தியான் பிற, யின்ன தானபின்.
4. செய்யகின், செய்யவுன், செய்வுறன்; குறை முடி பன்றிச்.(27)

அநுமன் கூறியவை

220 என்றன னிராகவ னினைய காலையில்
வன்றிறன் மாருதி வணங்கி நோக்கினான்
குன்றிவர் தோளினாய் கூறல் வேண்டுவ
தொன்றுள ததனைநீ யுவந்து கேளெனா.

என்றனன் இராகவன் - என்று இவ்வாறு உறுதி கூறினான் இராமபிரான் ; இனைய காலையில் - இவ்வேளையில், வல் திறல் மாருதி - மிக்க வலிமை வாய்ந்த அநுமன், வணங்கி நோக்கினான் - இராம பிரானை வணங்கிப் பார்த்தவனாய், 'குன்று இவர் தோளினாய்- மலைபோல் உயர்ந்த தோள்களையுடைய பெருமானே ! கூறல் வேண்டுவது ஒன்று உளது - (அடியேன்) தெரிவித்துக் கொள்ள வேண்டியது ஒன்று உள்ளது ; அதனை நீ உவந்து கேள் - அதை நீவிர் மனம் விரும்பிக் கேட்டருள்வீராக !' எனா - என்று விண்ணப்பஞ் செய்து கொண்டு.

இது முதல், இப்படலம் முடியக் குளகமாய் ஒரு தொடராய் இயைந்து வினைமுடிவு கொள்ளும். வன்றிறல் ஒருபொருட் பன்மொழி. இவர்தல் - ஒத்தல், விரும்புதல் எனவும் பொருள்படும் ; இதனை உவம வாசகம் எனக் கொள்ளலும் ஒன்றும். இங்கு, சமயோசிதமாக அநுமன் முன்வந்து பேசுந்திறம் நோக்கத்தக்கது.

பி - ம். 1. னென்ற காலையில்.
2. வணங்கி னானெடுங்.
3. குன்றுயர் தோளினாய்.
4. தையநீ ; கேளென் றோதியான். (28)

221 கொடுந்திறல் வாலியைக் கொன்று கோமகன்
கடுங்கதி ரோன்மக னாக்கிக் கைவளர்
நெடும்படை கூட்டினா லன்றி நேடரி
தடும்படை யரக்கன திருக்கை யாணையால்.

'கொடும் திறல் வாலியை கொன்று - கொடிய திறமை வாய்ந்த வாலியைக் கொன்று, கடும் கதிரோன் மகன்-வெப்பம் மிகுந்த கிரணங் களையுடைய சூரிய குமாரனான சுக்கிரீவனை, கோமகன் ஆக்கி - வானர அரசனாகச் செய்து, ஆணையால் - (பின்) அரசனான அச்சுக்கிரீவன் கட்டளைப்படி, கை வளர் - பல இடங்களிலும் போர் முறைகளிலே மிகவும் பழகி வளர்ந்த, நெடும் படை கூட்டினால் அன்றி - பெரும்

வானரப் படைகளை ஒன்று கூட்டிவரச் செய்தால் அல்லாமல், அடும் படை அரக்கனது - பகைவர்களை அழிக்கும் படைகளையுடைய அரக்கனான இராவணனுடைய, இருக்கை - இருப்பிடத்தை, நேடு அரிது - தேடிக் கண்டுபிடிப்பது அரிய செயலாகும்.

கைவளர் : கை, வலிமையும் ஆம் ; இனி கை என்பதற்குப் படையின் உறுப்பு அல்லது பக்கம் என்பதும் ஆம் ; சுந்தர, 163, 833, 878. ஆணையால் : ஆணையின் சிறப்புக்குச் சுக்கிரீவனுக்கு என்ற வழக்கும் இங்கு நோக்கத்தக்கது.

பி - ம். 1. *கொடுந்தொழில் வாலியைச்; கோமுறை.*

2. *கைவரு நெடும்படை, கைவரை நெடும்படை.*

3. *கூடினு லன்றி, கூட்டிடி லன்றி.*

4. *தடும்படை யாக்க ; யரக்கர திருக்கை, யரக்கர்தம் மிருக்கை ; யாழியாய், யாணையாய்.* (29)

222 வானதோ மண்ணதோ மற்றும் வெற்பதோ
ஏனமா நாகர்த மிருக்கைப் பாலதோ
தேனுளர் தெரியலாய் தெளிவ தன்றுநாம்
ஊனுடை மானுட மாவ துண்மையால்.

'தேன் உளர் தெரியலாய்! - வண்டுகள் குடையும் மாலையுடைய இராமபிரானே ! வானதோ மண்ணதோ மற்றும் வெற்பதோ - (அவ்விராவணன் முதலிய அரக்கர்களின் இருப்பிடம்) வானின் இடத்தேயுள்ளதோ, அல்லது இப்புவியினிடத்தே உள்ளதோ ? பிறமலைகளினிடத்ததோ ? ஏனை - மற்றை, மா - பெரிய, நாகர் தம் இருக்கை பாலதோ - நாகர்கள் வாழும் பாதாள உலகினிடமாக உள்ளதோ ? நாம் ஊனுடை மானுடம் ஆவது உண்மையால் - நாம் மாமிசத்தாலான சரீரமாகிய மானுடப் பிறவியினர் ஆகியுள்ளமையால், தெளிவது அன்று - நிச்சயித்துத் தெரிந்து கொள்ளக் கூடியதன்று.

தேன் உளர்தல், அதிலுள்ள தேனைப்பருக. அரக்கர்கள் நினைத்த இடஞ்செல்லும் திறமையுடையவர்; மானிடர்க்கு அவ்வித ஆற்றல் இல்லை ; ஆகவே பலர் வெவ்வே றிடங்களுக்குச் செல்ல வேண்டும் என்று அநுமன் கூறினான் ; நாம் ஊனுடை மானுடம் என்று இணைத்துக் கூறியது, வானரரும் நரரில் ஒரு வகையினர் என்ற கருத்துக் கொண்டு போலும், நாம் தேவர்கள் போலத் திவ்ய சரீரிகள் அல்லர் ;

நம்மால் நினைத்த இடங்களுக்கெல்லாம் போக முடியாது என்பதைக் குறித்தபடி. மானுடம்-மனிதப்பிறவி; 'மானுடம் வென்ற தன்றே' 96.

பி - ம். 1. மாறு வெற்பதோ, மற்றும் வேறதோ.
3. தேனுலாங், தேனமர், தேனுள, தேனுறு; தெரிவ தன்றுதாம், தெளிவ தன்றுநாம், தெரிவ தன்றவர், தெளிய லாவதோ.
4. மானிட மான; ஊர்நமக் குற்றுழி யுறுவ தன்மையால், அறுத லுண்மையால். (30)

223 எவ்வுல கத்தினு மிமைப்பி னெய்துவர்
வவ்வுவ ரவ்வழி மகிழ்ந்த யாவையும்
வெவ்வினை வந்தென வருவர் மீள்வரால்
அவ்வவ ருறைவிட மறியற் பாலதோ.

(மேலும் அவ்வரக்கர்கள்), இமைப்பின் - கண் இமைக்கும் நேரத்திற்குள், எ உலகத்தினும் எய்துவர் - எந்த உலகத்தையும் சென்றடைவர்; அ வழி-அந்த இடங்களில், மகிழ்ந்த யாவையும்-தாம்விரும்பிய அனைத்தையும், வவ்வுவர் - கவர்ந்து கொள்வர்; வெவ்வினை- வந்தது என - ஒருவர் செய்த வினை (மறுபிறவியிலும்) தொடர்ந்து வந்ததே போல, வருவர் - எதிர்பாராதபடி வந்து சேர்வர்; மீள்வர் - திரும்பிச் செல்வர்; ஆதலின், அ அவர் உறைவிடம் - அத்தன்மையுடைய அவ்வரக்கர்கள் இருக்கும் இடம், அறியல் பாலதோ - நாம் அறியக்கூடியதாகுமோ? (ஆகாது என்றபடி). ஆல் - அசை.

இமைப்பு; கண் இமைக்கும் கால அளவு; இஃது ஒரு மாத்திரை என்னும் நேரம். வவ்வுதல்; வலிமையால் அபகரித்துக் கொள்ளுதல்; 'கைக்கொளு மடைக்கலங் கரந்து வவ்வினேன்' (அபோத். பள்ளியடைப்; 102). ஒருவனை அவன் செய்த வினை தொடர்ந்து வருதல்; 'கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே' (பால, ஆற்றுப்: 17). 'பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு'; (நாலடி, 101). இங்கு அரக்கர்க்கு வெவ்வினை உவமையாயிற்று. இஃது உவமையணி.

பி - ம். 1. எவ்வுல கங்களு.
2. வருவ யாவையும்.
3. வெவ்வினை மிகவினைத் திடுவர்.
4. ருறையிட; மளவின் பாலதோ, மறிய லாவதோ, மறிதற் பாலதோ. (31)

224 ஒருமுறை யேபரந் துலகம் யாவையும்
திருமக ளுறைவிடந் தேர வேண்டுமால்
வரன்முறை நாடிடில் வரம்பின் றுலுல
கருமையுண் டளப்பரு மாண்டும் வேண்டுமால்.

'வரன் முறை நாடிடில் - வரிசையாய் ஒவ்வோர் இடமாகத் தேடுவ தானல், உலகு வரம்பு இன்று ஆல் - இவ்வுலகம் எல்லையற்றதாக விரிந்துள்ளது ஆதலின், அருமை உண்டு - அதில் பாடு அதிகம் உண் டாகும்; அளப்பு அரும் ஆண்டும் வேண்டும் ஆல் - அளவிட்டுக் கூறமுடியாத வருடங்களும் அவ்வாறு தேடவேண்டியதா யிருக்கும்; ஆத லால், ஒரு முறையே - ஒரே தடவையில், உலகம் யாவையும் பரந்து - உலகமெங்கும் சென்று பரவி (அதாவது வியாபித்து), திருமகள் உறை விடம் - திருமகளான பிராட்டியார் இருக்கும் இடத்தை, தேரவேண்டும்- ஆராய்ந்து கண்டு கொள்ளவேண்டும்.

நான்காம் அடியிலுள்ள, ஆல், ஈற்றசை. முன் (223) இல் கூறியபடி அரக்கர்கள், எய்துவர், வவ்வுவர், வருவர் ஆதலின், நாம் ஒரு புறந் தேடினுல் அவர்கள் மறுபுறத்தே பிராட்டியை எடுத்துச் செல்வர், ஒவ்வோர் இடமாய்ச் சிலர் தேடிச்சென்ருல் உலகம் பெரிது; இதில் பல ஆண்டுகள் கழிந்துபோம்; நம் காரியமும் கைகூடிவராது; ஆதலின், பெருந் தொகையினராக ஒரே சமயத்தில் உலகு எங்கும் பரந்து சென்று பிராட்டியைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கூறினன் அநுமன்.

பி - ம். 1. ஒருமுறை யேபெயர்ந்.
2. திருவுறை யேறிடந்; தேட வேண்டுமால்.
3. வரன்முறை நாடிட. 4. டளப்பிலா யாண்டும். (32)

225 ஏழுபத் தாகிய வெள்ளத் தெண்படை
ஊழியிற் கடலென வுலகம் போர்க்குமால்
ஆழியைக் குடிப்பினு மயன்செ யண்டத்தைக்
கீழ்மடுத் தெடுப்பினுங் கிடைத்தல் செய்யுமால்.

ஏழு பத்து ஆகிய வெள்ளத்து எண் படை - எழுபது வெள்ளம் என்ற கணக்கில் உள்ள வானரப்படைகள், ஊழியில் கடல் என - யுக முடிவுக் காலப் பிரளயத்தில் கடல் பொங்கி எழுவதே போன்று, உலகம் போர்க்கும் ஆல் - உலக முழுவதையும் மூடிப் போர்த்தாற் போலக் கவிந்து கொள்ளும் ஆதலின், ஆழியை குடிப்பினும் - அவை கடல் களையே குடிப்பதானுலும், அயன் செய் அண்டத்தை - பிரமதேவனுல் படைக்கப் பெற்றுள்ள பிரமாண்டத்தையே, கீழ் மடுத்து எடுப்பினும் - அடியோடு பெயர்த்து எடுப்பதானுலும், கிடைத்தல் - எதிர்ப்பட்ட அக்காரியங்களை, செய்யும் - செய்யவல்லனவாம். ஆல்: ஈற்றசை.

ஏழு பத்தாகிய வெள்ளத் தெண்படை ; (133). ஊழியின் கடல் ; 'ஊழியாழி' (ஆரணிய. 475.) படை செய்யும் என வினை முடிவு செய்க. இங்கு அநுமன் கூறிய வானரப்படையின் வீரச்சிறப்புக்கள், 'மலையகழ் குவனே, கடல்தூர்க்குவனே, வான்வீழ்க்குவனே, வளிமாற்றுவனே' எனும் (பட்டினப், 271-3) அடிகளை நினைப்பூட்டுகின்றது. கிடைத்தல் - எதிர்ப்படுதல் ; 'கிடந்தானை கிடைத்திரு தடக்கை கூப்பினன்'; (576).

பி - ம். 1. எழுபத் தியற்றிய, எழுபத் தெனவுள ; வெள்ளத் தெம்படை, வெள்ள மெம்படை. 2. பூழியிற் கடலென.
3. மயன்செய் முட்டையைக்; குடிக்கு மண்டத்தைக்.
4. சேழ்மடுத் தெடுப்பினு மெடுக்குஞ் சேர்த்தியாய். (33)

அநுமன் கூறியதை ஏற்று, அனைவரும் வாலியிருப்பிடம் நாடிச்சென்றது

226 ஆதலா லன்னதே யமைவ தாமென
நீதியாய் நினைந்தனெ னெனநி கழ்த்தினன்
சாதுவா மென்றவத் தனுவின் செல்வனும்
போதுநாம் வாலிபா லென்னப் போயினர்.

'நீதியாய் - அரசநீதி முறை அறிந்த இராமபிரானே! ஆதலால் - ஆகையால், அன்னதே - அவ்வாறு வானரப்படைகளைத் திரட்டி அவற்றைப் பிராட்டியார் இருக்குமிடத்தைத் தேடி அறிந்து வர விடுத்தலே, அமைவது ஆம் என - பொருத்தமான செயல் ஆகும் என்று, நினைந்தனென் - அடியேன் எண்ணுகிறேன்', என நிகழ்த்தினன் - என்று அநுமன் தெரிவித்துக்கொண்டான் ; 'சாது ஆம் என்ற - அதுவே ஏற்றது ஆகும்' என்று அதனை ஆமோதித்துச் சொல்லிய, அ தனுவின் செல்வனும் - வில்லைத் தன் அரும் செல்வமாகக் கொண்ட அந்த இராமபிரானும், வாலிபால் போதும் நாம் என்ன - 'நாம் அவ் வாலி இருக்கும் இடம் போவோம்' என்று கூற, போயினர் - அவர்கள் அனைவரும் அங்குச் சென்றார்கள்.

சாது - நல்லது அல்லது ஏற்கத் தக்கது ; 'சாது வென்றுணர் கிற்றியேல்'; (சுந்தர, 1133). தனுவின் செல்வன் : இராமபிரான், அநுமனைச் சொல்லின் செல்வன் (61) என்றது போன்றது. இச் செய்யுளின் முதலடிச் சீர்கள், முற்றுமோனையாய் அமைந்துள்ளமை காண்க.

பி - ம். 1. யமைத என்றெரு. 2. நினைத்த னெனென.
3. தனுவி னுதனும். 4. போயினன். (34)

கலன்காண் படலம் முற்றும்

## 7. வாலி வதைப் படலம்

இஃது, இராமபிரான், கிட்கிந்தையின் மன்னனுன வாலியைக் கொன்ற நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி என விரியும்.

இராமபிரான் முதலியோரின் வழிநடை

227. வெங்க ணாளி யேறு மீளி மாவும் வேக நாகமும்
சிங்க வேறி ரண்டொ டுந்தி ரண்ட வன்ன செய்கையார்
தங்கு சால மூல மார்த மால மேல மாலைபோல்
பொங்கு நாக முந்து வன்ற சார லூடு போயினர்.

வெம் கண் - அச்சத்தைத் தரும் கண்களையுடைய, ஆளி ஏறும் - ஆண் யாளியும், மீளி மாவும் - வீரம் மிக்க புலியும், வேகம் நாகமும் - விரைந்து செல்லும் யானையும், சிங்க ஏறு இரண்டொடும்- இரண்டு ஆண் சிங்கங்களுடனே, திரண்ட அன்ன - ஒன்று கூடின போன்ற, செய்கை யார் - செயலை மேற்கொண்ட சுக்கிரீவன் முதலான வாநர வீரர்கள், தங்கு - அங்கு நிலைபெற்று விளங்கிய, சாலம் - ஆச்சாமரங்களும், மூலம் - மூலம் என்னும் மரங்களும், ஆர் - ஆத்தி மரங்களும், தமாலம்- பச்சிலை மரங்களும், ஏலம் - சடாமஞ்சிகை என்னும் மரங்களும், மாலை போல் பொங்கு-தொடுத்த மாலைகளைப்போலப் பூக்கள் மிகுந்து விளங்கும், நாகமும் - புன்னாக மரங்களும், துவன்ற - நெருங்கித் தழைந்த, சாரல் ஊடு - அம்மலைச் சாரல்களின் வழியே, போயினர் - செல்வாராயினர்.

இது முதல் 8 செய்யுட்களால் இராம லக்ஷ்மணர்களுடன் சுக்கிரீ வன் முதலியோர் கிட்கிந்தைக்குச் சென்ற வழி நடை விளக்கப்பெறு கின்றது. இங்கு மிகுந்த மனக்கிளர்ச்சியுடன் வீரர்கள் ஏகும் தன்மைக்கு ஏற்ற சந்தமும் வருணனைகளும் அமைந்துள்ளமை காண்க. சில சுவடி களில் இப்பகுதி முன் படலத்தின் இறுதியில் அமைந்துள்ளது.

ஆளி: இது யாளி எனவும் வழங்கப்பெறும்; இது யானை போலத் துதிக்கையும், சிங்கம் போலக் கூரிய நகங்களும், கொடிய பறவை போல அலகும் இறக்கைகளும் அமையப் பெற்ற ஒரு வகைக் கொடிய விலங்கு. இவ்வின விலங்கு நூல்களிலும் நம் நாட்டுப் பழைய சித்திரங்கள், பிரதிமைகள் முதலியவற்றிலும் காணப்பெறுவன வன்றி, இப்பொழுது அருகிப் போயிற்று என்னலாம். மீளிமா, வீரத் தன்மை யுடைய மிருகம் அதாவது புலி; மீளி - வீரம், வலிமை (பிங்): மீளிமா என்றமையாலும் பின் சிங்கவேறு என வேறு குறிக்கப்பெறுவ தாலும், மீளிமா என்பதற்குப் புலி எனப்பொருள் கொள்ளப்பெற்றது.

நாகம் - யானை; 'நாகமு நாகமு நாண நடந்தான்.' (பால. கார் முகப். 32) என்றது காண்க. சிங்க வேறுடன், இரண்டு என்ற சொல்லை யியைத்த சிறப்பால் அவை இராம லக்ஷ்மணர்களைக் குறிப்ப தாகும். இவ்வாறே, இராம லக்ஷ்மணர்களை இரண்டு சிங்கங்களாய்த் திரிசடை தன் கனவில் கண்டதாகக் கூறியதைக் காண்க; சுந்தர. 379. மற்றை ஆளி, மீளிமா, நாகம் முதலியன, சுக்கிரீவன், அநுமன், நளன், நீலன், தாரன் ஆகிய வானர வீரர்களைக் குறிப்பிட்டபடி. இராம லக்ஷ்மணர்களோடு மேலே குறித்த நான்கு வானரத்தலைவர்களே சுக்கிரீவனுடன் கிட்கிந்தைக்குச் சென்றனர் என்று வான்மீகம் கூறும். மூலம் - ஒரு வகை மரம். தமாலம்; பச்சிலைமரம் என்னும் ஒருவகை மரம்; பால. ஆற்றுப் 13 ; சிலப். 8: 45. மாலைபோல் பொங்கு நாகம் - மாலை தொடுத்தாற்போல் கிளைகளில் கொத்துக் கொத்தாகப் பூத்துத் தொங்கும் புன்னாக மரம். ஏலம் : ஏலம் என்னும் நறுமணக் காய்களைத் தரும் செடி அன்று; சடாமாஞ்சில் என்னும் ஒரு வகை மரமே எனக் கொள்ளற் பாலது.

பி - ம். 1. வெங்க ணாகம், வெங்கண் யானை; யோடு வரயும்.
3. தங்கு மால மூலமார்; மேலம் வாழைமா; தமால மேக வர்ழை மா; மேக மாலை போல்.
4. மூன்று வன்று. (1)

228. உழையு லாநெ டுங்கண் மாத ரூச லூச லல்லவேல்
தழையு லாவு சந்த லர்ந்த சாரல் சார லல்லவேல்
மழையு லாவு முன்றி லல்ல மன்ற னாறு சண்பகக்
குழையு லாவு சோலை சோலை யல்ல பொன்செய் குன்றமே.

(அந்த வழி யெங்கும்), உழை - மான்போல, உலாம் - மருண்டு நோக்கும், நெடு கண் மாதர் ஊசல் - நீண்ட கண்களையுடைய மகளிர்கள் ஆடும் ஊஞ்சல்கள்; ஊசல் அல்ல ஏல் - ஊஞ்சல் இல்லாத இடங்கள், தழை உலாவு - தழைகள் காற்றில் அலைந்தாடப்பெற்ற, சந்து அலர்ந்த - சந்தனமரங்கள் மலர்ந்துள்ள, சாரல் - மலைச்சாரல்கள்; சாரல் அல்லவேல் - சாரல் அல்லாத இடங்கள், மழை உலாவு முன்றில் - மேகங்கள் சஞ்சரிக்கும் மலைகளின் முன்புறங்கள்; அல்ல - அவை அல்லாத இடங்கள், மன்றல் நாறு குழை உலாவு சண்பகம் சோலை - மணங்கமழும் தழைகள் அசையப்பெற்ற சண்பக மரங்கள் அடர்ந்த சோலைகள்; சோலை அல்ல - அச்சண்பகச் சோலைகள் அல்லாத இடங்கள், பொன் செய் குன்றமே - பொன் போன்று அழகு செய்யும் மலைக் குன்றுகளே ஆம்.

உலாம், உலாவும் என்பதின் விகாரம். உழையுலாம் நெடுங் கண் மாதர்; 'உழையுலா நயனத்தார்' பால. (கோலங்காண். 20); உழை உலாம் - பக்கங்களின் உலாவும் இயல்புடைய எனவும் பொருள் கொள்ளலாம். சந்து : சந்தனமரம்; இது சாந்து, சாந்தம் எனவும் வழங்கப் பெறும். ஊசல்; ஊஞ்சல். என வழங்கும். மன்றல் - வாசனை; (பிங்); 'மன்றலங் கோதையாள்' (பால. கடிமணப் 81). முன்றில் - முன்புறம்; இலக்கணப்போலி. பொன்செய் குன்றம்; பொன்னை விளைவிக்கும் மலை என்றலும் ஒன்றும். முன்பொருளில் செய் என்பது உவம வாசகம். இச்செய்யுள் மாலையணியின் பாற் படும். 'ஊசலூச லல்லவேல் - ஊசலே மிகுதி என்போமானால், அதுவல்ல; மலைப்பக்கமிகுதி; இப்படி முற்றுங் கண்டு கொள்க;' என்பன பழையவுரை.

பி - ம். 1. ருச லல்ல வல்லவேல்; பொருங்கண் மாதர்.

2. தழையு லாவு சந்து லாவு; சார லல்ல வல்லவேல்; சாரல் சாரல் கனிப்பிலா.

3. மன்ற ளூறு தண்பொழிற் (குழை).

4. சோலை யன்ன பொன்செய். (2)

229. அறங்க ணாறு மேனி யார ரிக்க ணங்க ளோடுமங்
கிறங்கு போது மேறு போது மீறி லாத வோசையால்
கறங்கு வார்க ழற்க லன்க லிப்ப முந்து கண்முகிழ்த்
துறங்கு மேக மும்மு ணர்ந்து மீது லாவுமே.

அறங்கள் நாறும் மேனியார் - தருமங்கள் தோன்றப்பெற்ற திரு மேனியரான இராம லக்ஷ்மணர்கள், அரி கணங்களோடும் - வானரக் கூட்டங்களோடும், அங்கு இறங்கு போதும் ஏறு போதும் - அம்மலைப் புறங்களில் இறங்கி ஏறிச் செல்லும் போதெல்லாம், ஈறு இலாத ஓசை யால் - முடிவற்ற ஓசையோடு, கறங்கு வார் கழல் கலன் - (அவர்கள் காலில் அணிந்துள்ள) ஒலிக்கின்ற உருண்ட வீரக் கழல்களாகிய அணிகள், கலிப்ப - ஒலிப்ப, (அவ்வொலிகளால்) முந்து கண் முகிழ்த்து உறங்கு மேகமும்-முன்னமே கண் மூடிக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்த மேகங்களும், உணர்ந்து - நன்றாய் விழிப்புற்று, மீது உலாவும் - வானில் எழுந்து சஞ்சரிக்கும். ஏ : ஈற்றசை.

அறங்கணாறு மேனியார்: அறத்தின் மூர்த்திகள் என்றபடி; அயோத். மந்திரப், 39; சுந்தர. 1120. கறங்குதல்: ஒலித்தல்; 'கரம்பயின் முரசினங் கறங்க'; (சுந்தர. 663,) கலித்தல் - ஒலித்தல்;

'கலித்தானைக் கடல்' (பால. கார்முகப்: 20.) மேகம் கண் முகிழ்த் துறங்குவது என்பது இலக்கணையாகக் கூறுங் கவி மரபு; இது, கார் காலம் அல்லாமையின் என்க.

பி - ம். 1. கணங்க ளோடவர் ; கணங்க டம்மொடும், இறங்கிலா தயர்ந்த குன்ற மீதி னேறு போதெலாம்.

2. திறங்கு போது ; வோதையால், வோசையால்.

3. கழற்கலன் கறங்க ; கண்மு கிழ்ந்த ; கண்முகந் ; கண்ணிமிழ்த்.

4. மேக நன்குணர்ந்து, மாக முணர்ந்துணர்ந்து, மாக மீது லாவுமே; நாகுலார்ந்து ; மேக சால மங்க ளுண்டு உணர்ந் தயர்ந்து. (3)

230. நீடு நாக மூடு மேக மோட நீரு மோடவே
ஆடு நாக மோட மான யானை யோட வாளிபோம்
மாடு நாக நீடு சாரல் வாளை யோடும் வாவியூ
டோடு நாக மோட வேங்கை யோடும் யூக மோடவே.

நீடு நாகம் ஊடு மேகம் ஓட-நீண்ட மலைகளின் வழியாக மேகங்கள் ஓடவும், நீரும் ஓட - அம்மலைகளில் நீர் பெருகிப் பாயவும், ஆடும் நாகம் ஓட - படமெடுத்து ஆடும் பாம்புகளும் (அஞ்சி) ஓடவும், மானம் யானை ஓட - பெரிய யானைகள் ஓடவும், ஆளி போம் - யாளிகள் சஞ்சரிக்கும், மாடு நாக நீடு சாரல் - பக்கத்திலே தேவருலகம் இருக்கும் வண்ணம் நீண்ட மலைச் சாரலிலே (உள்ள), வாவி ஊடு - குளங்களின் உள்ளே, வாளையோடும் ஓடு நாகம் ஓட-வாளை மீன்களுடன் விரைகின்ற பாம்புகளும் ஓட, வேங்கையோடும் ஊகம் ஓட - புலிகளும் கருங்குரங்கு களும் ஓட. ஏ : ஈற்றசை.

இச் செய்யுள் குளகமாய் 232 ஆம் செய்யுளிலுள்ள 'ஏறவே' என்பதனுடன் தொடர்பு படும். இங்கு, நாகம் என்ற சொல் பல பொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல்லாய் வந்துள்ளமை காண்க. 'நாக மூடும் - சுவர்க்கத்தை மறைக்கும்', பழையவுரை.

பி - ம். 1. மோடு மேக மோட வோடு நீருமே, மோட நீரு மோடநேர், மோடு நீரு மாடநேர்.

2. வாளை யோடு மாளிபொன், யாளி யோடு யாளிபோம், மான யாளி யான தோடவே. வாளிபேர்ல்.

3. நாக மோடு சாரல், மூடு சாரல்: வாளை யோட வாவிநேர், வாவி வாய், வாவி யோடு, வாவியான்.

4. மோடு வேங்கை, யூக வேகசால், மூடு நாக மோட வேங்கை; மோட வேக மாடு மூக மோடவே, யூக வேக மோடவே. (4)

231\. மருண்ட மாம லைத்த டங்கள் செல்ல லாவ தல்லமால்
தெருண்டி லாத மத்த யானை சீறி நின்றி டித்தலால்
இருண்ட காழ சிற்ற டத்தொ டிற்று லர்ந்த சந்துவந்
துருண்ட போத ழிந்த தேனொ ழுக்கு பேரி ழுக்கினே.

மால் தெருண்டு இலாத - மயக்கம் தெளிவு அடையாத, மத்த - மதம்கொண்ட, யானை - அம்மலையில் உள்ள யானைகள், சீறி நின்று - கோபத்தால் சீறிக்கொண்டு நின்று, இடித்தலால் - தாக்கி எறிதலாலும், இருண்ட காழ் அகில் தடத்து ஒடு - இருட்டைப்போன்ற வயிரம் பிடித்த அகில் கட்டைகளோடு, இற்று - ஒடிபட்டு, உலர்ந்த - காய்ந்து போன, சந்து வந்து - சந்தனமரங்கள் வந்து, உருண்ட போது-உருண்டு கீழே விழுந்தபோது, அழிந்த - சிதைந்து சிந்திய, தேன் ஒழுக்கு பேர் இழுக்கின் - தேன் ஒழுகி ஓடும் பெரிய வெள்ளத்தின் வழுக்குதற்றன்மையாலும், மருண்ட - யாவரும் மயங்கத்தக்க, மா மலை தடங்கள் - பெரிய அம்மலைப் பிரதேசங்கள், செல்லல் ஆவது அல்ல - யாரும் கடந்து செல்லக்கூடியன அல்ல. ஆல்; அசை.

மருண்ட மாமலை; 'குறவரும் மருளுங் குன்று' என்பது காண்க. தெருள் - தெளிவு. மத்த யானை - மதங்கொண்ட யானை; 'மத்த யானை வருந்தாதோ' (சுந்தர. 547); 'மத்தக் களிற்று வசுதேவர்' (பெரியாழ்வார் 1.2: 6). சந்து - சந்தனமரம்; 228. இடித்தலால், இழுக்கினே. மலைத்தடங்கள் செல்லலாவ தல்ல என இயைக்க. இழுக்கம் - இறங்குதலுமாம்.

பி-ம். 1. மலைத்த லத்தின் மீதுமா மதத்தினர்; மருண்ட மாலை கற்ற டங்கள்; சொல்ல லாவ வல்ல.
2. தெருண்டிடா மதக்கை யானை; மதத்த யானை; மதக்கை யானை; யானை சிந்துநின்று.
3. நிடிந்து லர்ந்த, தொடிந்து லர்ந்த, தொடிற்று வீழ்ந்த, தொடிந்து வந்த.
4. தழிந்ததேன்; னொழுக்கி லாறி ழுக்கவே; நிழுக்கரோ; ரொழுக்கு பேரி ழுக்கவே. (5)

232\. மீனன்ம ணிக்கு லந்து வன்றி வில்ல லர்ந்து விண்குலாய்
அனல்ப ரப்ப லொப்ப மீதி மைப்ப வந்த விப்பபோல்
புனல்ப ரப்ப லொப்பி ருந்த பொன்ப ரப்பு மென்பரால்
இனைய விற்ற டக்கை வீர ரேறு கின்ற குன்றமே.

இனைய வில் தட கை வீரர் - இத் தன்மையரான வில் லேந்திய பருத்த கைகளையுடைய அந்த இராமலக்ஷ்மணர்கள், ஏறுகின்ற -

ஏறிச்செல்கின்ற, குன்றம் - அம் மலை, மினல் மணி குலம் - மின்னல் போல (விட்டுவிட்டு) ஒளிவீசும் இரத்தினங்களின் தொகுதிகள், துவன்றி - நிறைந்து, வில் அலர்ந்து - ஒளி பரப்பி, விண்குலாய் அனல் பரப்பல் ஒப்ப - ஆகாயமளவும் விளங்கி நெருப்பைப் பரவச் செய்தல் போல, மீது இமைப்ப - அம் மலைமீது ஒளி வீச, வந்து அவிப்ப போல் - அந் நெருப்பை வந்து அவித்து அழிப்பனபோல, புனல் பரப்பல் ஒப்பு இருந்த - நீரைச் சொரிந்து பரப்புவன ஒத்து இருந்த, பொன் பரப்பும் என்பர் - பொன் ஒளியை அதன்மீது பரவச்செய்து இருந்தது என்று சொல்வார். ஏ, ஆல் : ஈற்றசைகள்.

தடக்கை - வலிய கையும் ஆம். குலாய் - குலவுதலைச் செய்தல் : அதாவது கலந்து விளங்குதல். இமைத்தல் - ஒளி செய்தல் ; 'மின்னிமைக்கும் பூணுள்' (நள. 336). இராம லக்ஷ்மணர்கள் நடந்துசென்ற அம் மலை, தன் மீதுள்ள இரத்தினத் தொகுதிகளின் ஒளியை வீச, அவ்வொளிகள் வானளவும் நெருப்பைப் பரப்புவன என்றும், அவ்வாறு பரவிய அந்நெருப்பை நீரால் அவிப்பனபோலும் அங்குள்ள பொற்றெகுதியின் ஒளி விளங்கியதென்றும் கவிகள் கூறும் சிறப்புடையது என்க. இது தொடர்பு நவிற்சியணியில் வந்த தற்குறிப்பேற்றவணி.

'மணிகள் நெருங்கி விண்ணுகிய மேகத்தினுள்ளே கலந்து இருளிலுண்டான நெருப்புப் பரப்பினதுபோலப் பிரகாசிக்கும் அந்த ஒளியாகிய நெருப்பை உலக்க, இமைப்பால் நீர்வந்து பரப்பினதுபோலப் பொன் பிரகாசிக்கும் ; இது பொருள். பொன் பரந்து கிடக்கக் கோள் மிகுதியைப்பற்றி நீருக்கு உவமை சொன்ஞர்.' இவை பழையவுரை.

பி - ம். 1. *வில்ல லர்ந்து மண்குலாய், கண்குலாய், கங்குல் வாய், கங்குலாம் ; விண்குலாம் ; மின்குலாய்.*

2. *பரப்பி யொப்ப, பரப்ப வொப்ப, பரப்ப தொப்ப ; ஒப்பமீதலைப்ப ; வந்தி மைப்பபோல்.*

3. *பரப்ப தொப்பி ருந்த ; வெப்பி ருந்த ; பரப்ப மாரி சிந்து.*

4. *யேகு கின்ற குன்றமே.* (6)

**233.** தேனி முக்கு சாரல் வாரி செல்ல மீது செல்லுநாள்
மீனி முக்கு மன்றி வான வில்லி முக்கும் வெண்மதிக்
கூனி முக்கு மாறு லாவுகோளி முக்கு மென்பரால்
வானி முக்கு மேல வாச மன்ற ஞறு குன்றமே.

வான் இழுக்கும் - வானில் உள்ள தேவர்களையும் (தன் நறுமணத்தால் வசப்படுத்தி அங்கு இழுத்துவரச் செய்யும், ஏலம் வாசம் மன்றல்

நாறும் - ஏலக்காய்களின் நறுமணம் வீசப்பெற்ற, குன்றம் - அம் மலையில், தேன் இழுக்கு சாரல் வாரி செல்ல - தேன் சொரிவு கொண்டு செல்லும் அம் மலைச்சாரல்களில் வெள்ளம் சென்று கொண்டிருக்க, மீது செல்லும் நாள் மீன் இழுக்கும் - மேலே வானில் செல்லும் நட்சத்திரங்களாகிய வான் மீன்களை அவ்வெள்ளம் இழுக்கும்; அன்றி - அல்லாமல், வான வில் இழுக்கும் - வானவில்லாகிய இந்திர தனுவையும் கீழே இழுக்கும்: வெண்மதி கூன் இழுக்கும் - வெள்ளிய வளைந்த இளம்பிறையையும் இழுக்கும்; மாறு - ஒன்றுக்கொன்று மாறி, உலாவு - சஞ்சரிக்கின்ற, கோள் இழுக்கும் - நவக்கிரகங்களையும் இழுக்கும், என்பர் - என்று ஆன்றோர் சொல்வர், ஆல், ஏ என்பன ஈற்றசை.

அம் மலைகளில் வளரும் ஏலம் முதலிய வாசனைப்பொருள்கள் தேவர்களையும் அங்கு இறங்கிவரச் செய்யும். அம் மலைச்சாரல்களில் பெருகியோடும் தேன் வெள்ளத்தால், வானிலுள்ள நட்சத்திரங்களும், வான வில்லும், பிறைமதிக் கோடும், நவக்கிரகங்களும் இழுக்கப்பெறும் என்பர். இச் செய்யுள், தொடர்பு நவிற்சியணியோடு, தற்குறிப்பேற்றவணியும் ஆம். வான் இழுக்கும், என்பதைப் பிறவற்றோடு கூட்டி வானையும் இழுக்கும்; (வான் - மேகம்) என்றும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. *சால வாரி; செல்வின் மீது செல்லநாள்; செல்லுகாண், செல்ல நாள், செல்லுவாள்.*

3. *மீனி ழுக்கு மின்றி வான மின்னிழுக்கும் மற்று லாவு, மூற்று லாவு, வெயிறு லாவு.*

4. *மேல வாவு, தென்றல் வாச மன்றல், தென்றல் வாசம் குன்றமே; மேல வாய.* (7)

234. மருவி யாடும் வாவி தோறும் வான யாறு பாயும்வந்
திருவி யார்த டங்கண் மீனி னேறு பாயு மாறுபோல்
அருவி பாயு மொன்றி னொன்றி னூடு பாயு மேனலில்
குருவி பாயு மோடி மந்தி கோடு பாயு மாடெலாம்.

மாடு எலாம் - அம் மலைப்பக்கங்களிலெல்லாம், மருவி ஆடும் வாவி தோறும் - யாவரும் (வந்து) பொருந்தி நீராடும் (சுனைகளாகிய) தடாகங்களிலெல்லாம், வான யாறு வந்து பாயும் - ஆகாய கங்கை வந்து பாய்ந்து கொண்டிருக்கும்; (அவ்வாவியிலுள்ள), மீனின் ஏறு - வலிய

ஆண் மீன்கள், இருவி ஆர் தடங்கள் பாயும் - ஏனலில் கதிர்கள் கொய்யப்பெற்றுத் தாள்களோடு விளங்கும் தினை நிறைந்த புனங் களில் வந்து துள்ளிப் பாயும்; ஆறுபோல் - ஆறுகளேபோல, அருவி பாயும் - மலையருவிகள் பெருகிப்பாயும்; ஒன்றின் ஒன்றின் - அம்மலை யருவிகள் ஒவ்வொன்றிலும், ஆனை பாயும் - யானைகள் தாவி வந்து விளையாடும்; ஏன்லில் - தினைப்புனங்களில், குருவி பாயும் - குருவிகள் பல பாயும்; மந்தி - குரங்குகள், ஓடி கோடு பாயும் - மரக் கொம்பு களில் விரைந்து பாயும்.

இருவி - கதிரறுக்கப் பெற்ற தினைத்தாள்; 'இருவி செய்தாளினி ருந்தின்று காட்டு மிளங்கிளியே' (திருக்கோவை: 144). மந்தி இங்குக் குரங்கின் பொது: கோடு - மலைச் சிகரமும் ஆகும்.

பி-ம். 1. மருவி யோடும்; பாயவர்; பாயவத்; பாயகர்; பாயு மாறு போல்.
2. இருவிசேர்; இருவிபாய்; அருவிபாய்; தடங்க டோறு.
3. முன்றி லொன்றி யானைபாயு, மொன்றலிற்; முன்றிலிற்; மென்றலிற்.
4. மந்தி கொம்பு பாயு, (8)

235. அன்ன தாய குன்றி னாறு சென்ற வீர ரைந்தொடைந்
தென்ன லாய யோச னைக்கு மும்ப ரேறி யிம்பரில்
பொன்னி னாடி ழிந்த தன்ன வாலி வாழ்பொ ருப்பிடம்
துன்னி னார்கள் யாது செய்து மென்று சொற்ற போதினே.

அன்னது ஆய - அத்தன்மைத்தான, குன்றின் ஆறு - மலைவழி யிடமாய், சென்ற - போன, வீரர் - இராமபிரான் முதலான வீரர்கள், ஐந்து ஒடு ஐந்து என்னல் ஆய - பத்து என்று சொல்லக்கூடிய, யோசனைக்கும் உம்பர் ஏறி - யோசனைகளுக்கும் மேலான உயரம் ஏறி, இம்பரில் - இவ்வுலகில், பொன்னின் நாடு இழிந்தது அன்ன - பொன் மயமான சுவர்க்க நாடே அங்கு இறங்கி வந்துள்ளது போன்ற, வாலி வாழ் பொருப்பு இடம் துன்னினார்கள் - வாலி வாழும் மலையின் இடத்தை அணுகிய அவர்கள், யாது செய்தும் என்று - இனி நாம் செய்யக் கூடிய காரியம் யாது என்று, சொற்ற போதின் - சொன்ன சமயத்தில். ஏ: ஈற்றசை.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாகி அடுத்த செய்யுளிலுள்ள என்றனன் என்ற வினைகொண்டு முடியும். 227-235 முடிய செய்

யுட்களில் ருசியமூக மலையினின்று கிட்கிந்தைக்குச் செல்லும் வழி கூறப் பெற்றுள்ளது. சுக்கிரீவனுக்கும் வாலிக்கும் இரு நாட்கள் போர் நிகழ்ந்ததென்றும், இரண்டு முறை அவனுடன் இராம லக்ஷ்மணர்கள் அவ்வழியே சென்றனர் என்றும், இரண்டாம் முறையில் அவர்கள் ஸப்தஜனம் என்னும் ஒரு புனித வனத்தைக் கண்டு வணங்கிச் சென்றனரென்றும் வான்மீகம் கூறும்.

பி - ம். 1. சென்று வீரர்.
2. என்ன தாய; தன்ன லாய; வோசை லைக்கு; மூம்ப செய்தி யிம்ப ருற்று.
3. டிழிந்த வன்ன; டிழிந்த தென்ன.
4. யென்று நின்று; யென்னை யொன்று நின்று; சொல்லுவான். (9)

சில சுவடிகளில் இதனுடன் கலன்காண் படலம் முற்றும்.

236. அவ்வி டத்தி ராம னீய ழைத்து வாலி யானபேர்
வெவ்வி டத்தின் வந்து போர்வி ளைக்கு மேல்லை வேறுநின்
றெவ்வி டத்து ணிந்த மைந்த தென்க ருத்தி தென்றனன்
தெவ்வ டக்கும் வென்றி யானு நன்றி தென்று சிந்தியா.

அ இடத்து - அப்போது, இராமன் - இராமபிரான், அழைத்து - சுக்கிரீவனைத் தன் அருகே கூப்பிட்டு, நீ வாலி ஆன பேர் வெம் விடத்தின் - நீ வாலி என்ற பெரிய கொடிய விஷத்தினோடு, வந்து - எதிர் வந்து, போர் விளைக்கும் ஏல்லை - போர் செய்யும் பொழுது, வேறு நின்று - தனியே ஒரு புறம் நின்று, எவ்விட - அவன் மீது அம்பு தூண்ட, துணிந்து அமைந்தது இது-நிச்சயித்துப் பொருந்தியதாகிய இது, என் கருத்து என்றனன் - என் எண்ணம் என்று கூறினான்; (அப்பொழுது), தெவ் அடக்கும் வென்றியானும் - தன் பகைவனை வாலியை அடக்கி ஒழிக்கும் வெற்றியை விரும்பிய அச் சுக்கிரீவனும், இது நன்று என்று - இச்செயல் நல்லதே யாகும் என்று, சிந்தியா - எண்ணி.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து வினை முடிவு கொள்ளும். வெவ்விடம் - வெம்மை விடம். ஏல்லை; இது எல்லை எனவும் வரும். எவ்விடல் - அம்பு தூண்டல்; எவ்வு, ஏவு என்பதன் விகாரம்; 'எவ்விய தென்னை யென்றான்' (347; 'தீக்கணை மேருவைக் கால்வளைத் தெவ்வினான்'; (சுந்தர. 272); 'எவ்வரி வெஞ்சிலைத் தடக்கை யிராமன்றன்னை,' (பெருமாள்திருமொழி. 10 : 3), தெவ் - பகை; இது

தெவ்வு எனவும் வரும். வாலியை வெவ்விடம் என்றது, அவன் கொடுஞ் செயல்பற்றி. வாலியான பேர் என்பதை, பேர் வாலி ஆன என இயைத்துங் கொள்ளலாம்.

பி - ம். 1. யழைத்த வாலி ; யானதோர் ; யான போர்.
2. வெவ்வி டத்தி னுன ; வெவ்வி டத்தை வந்து ; விளக்கும் வேலே ; வேலையின் வேறு.
4. தெவ்வ றுக்கும், தெவ்வ டர்க்குஞ் ; நன்ற தென்று. (10)

237. வார்த்தை யன்ன தாக வானி யங்கு தேரி னுன்மகன்
நீர்த்த ரங்க வேலை யஞ்ச நீல மேக நாணவே
வேர்த்து மண்ணு ளோரின் விண்ணு ளோரி ரிந்து விம்மமேல்
ஆர்த்த வோசை யீச னுண்ட வண்ட முற்று முண்டதே.

வார்த்தை அன்னது ஆக - இராமபிரான் அருளிய வார்த்தை அவ்வாருக, (அது கேட்டு), வான் இயங்கு தேரினுன் மகன் - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தேரையுடைய சூரியன் குமாரனுன சுக்கிரீவன், தரங்க நீர் வேலை அஞ்ச - அலைகளோடு கூடிய நீர் நிறைந்த கடல்களும் அச்சங்கொள்ள, நீல மேகம் நாண - நீருண்டு கறுத்த மேகங்களும் வெட்கமுற, மண் உளோரின் - பூமியில் வாழும் மானிடரே போல, விண்ணுளோர் - வானில் வாழும் தேவர்களும், வேர்த்து இரிந்து விம்ம - (அச்சத்தால்) உடல் வியர்த்து, நிலைகெட்டுத் தேம்பி வருந்த, மேல் ஆர்த்த ஓசை - அவை யனைத்திற்கும் மேலாகக் கர்ச்சித்த ஓசையானது, ஈசன் உண்ட - ஈசனுகிய திருமால் பிரளய காலத்தில் எடுத்து உண்டு திருவயிற்றினுள் அடக்கிய, அண்டம் முற்றும் - (அண்ட கோளகையாகிய) பிரமாண்டம் முழுவதும், உண்டது- தன்னுள் அடக்கியது போல வியாபித்துக் கொண்டது. ஏகாரங்கள், அசைகள்.

சுக்கிரீவன் ஆர்த்த ஓசை அண்ட கோளம் முழுவதும் பரவிற்று என்பதாம். நீல மேகம் - நீருண்டதால் கறுத்து விளங்கும் மேகம். உடல் வியர்த்தல், இரிந்தோடுதல், விம்மலுறல் இவை அச்சத்தால் உண்டாகும் மெய்ப்பாடுகள். ஈசன் - இங்குத் திருமாலைக் குறித்து நின்றது. இராமபிரானை ஈசன் என்ற பெயரால் குறிப்பது : 'என்றனர் சாதக மீசற்கு' (பால. திருவவதாரப். 111). வேலை : வேலா என்ற வடசொல்லின் திரிபு. தரங்கம், நீலம், மேகம் என்பன வடசொற்கள்.

பி - ம். 2. நாணநேர், நாணமேல், நாணதேர்.
3. மண்ணு ளோரி ரிந்து, விம்மநேர், விம்பிநேர்.
4. யீச னன்ன, யீச னென்ன, (11)

**238.** இடித்து ரப்பி வந்து போரெ திர்த்தி யேல டர்ப்பெனென்
றடித்த லங்கள் கொட்டி வாய்ம டித்த டுத்த லங்குதோள்
புடைத்து நின்று ளைத்த பூசல் புக்க தென்ப மிக்கிடம்
துடிப்ப வங்கு றங்கு வாலி திண்செ வித்தொ ளைக்கணே.

(உடனே சுக்கிரீவன்), 'வந்து போர் எதிர்த்தியேல் - என்னுடன் நீ போரில் எதிர்த்து வருவாயானால், அடர்ப்பென் என்று - யான் உன்னைக் கொல்லுவேன்' என்று, இடித்து உரப்பி - அதட்டிக் கூறி, அடி தலங்கள் கொட்டி - தன் பாதங்களை ஓசையுண்டாகும்படி கொட்டி நடந்து, வாய் மடித்து - சினத்தால் வாய் உதடுகளை மடித்துக் கொண்டு, அடுத்து அலங்கு தோள் புடைத்து - இருபுறமும் அடுத்து அசைந்து கொண்டிருக்கும் தன் தோள்களைத் தட்டி ஒலியுண்டாக்கி, நின்று உளைத்த பூசல் - நின்று கூவி அழைத்த ஒலியானது, இடம் மிக்கு துடிப்ப - தனது இடது பக்கம் மிகவும் துடிக்க, அங்கு - அக்கிட்கிந்தா புரியில், உறங்கு - தூங்கிக்கொண்டிருந்த, வாலி திண் செவி தொளை கண் - வாலியின் வலிய செவித் துவாரங்களினிடத்து, புக்கது என்ப - புகுந்தது என்று சொல்லுவர். ஏ, ஈற்றசை.

அடித்தலம் கொட்டுதல் - பாதங்களைக் கொட்டிக் கொட்டி ஓசையுண்டாகும்படி நடத்தல். வாய்மடித்தல்; வெகுளியின் மெய்ப்பாடு. உளைத்தல் - அழைத்தல் (திவா). ஆடவருக்கு இடம் துடித்தால், அது வரும் தீங்குக்கு அறிகுறி ; உயுத்த. கும்பகருணன் வதைப். 77 ; பெருங். 2. 18 : 33 ; சீவக. 1156 ; இது வாலியின் அழிவைக் குறித்தது என்க. பூசல் - பேரொலியும் ஆம்.

பி - ம். 1. வந்த போரெ திர்ந்த வேட வேடவென் ; யேடா வேடா.
2. தடுத்த லங்கரோள் ; கறங்குதோள் ; தடித்தலங் கறங்குதோள்.
3. நின்ற ரைத்த, நின்றி ளைத்த.
4. துடிக்கவங் ; வாலி வன்செவி ; வண்செவி ; தொளைக்குளே, துளைக்கவே. (12)

அழைப்பொலி கேட்ட வாலி செயல்.

வேறு

**239.** மாற்பெருங் கடகரி முழக்கும் வாளரி
ஏற்பது செவித்தலத் தென்ன வோங்கிய
ஆர்ப்பொலி கேட்டன னமளி மேலொரு
பாற்கடல் கிடந்ததே யனைய பான்மையான்.

அமளி மேல் - தன் படுக்கை மீது, ஒரு பால்கடல் கிடந்ததே அனைய பான்மையான் - ஒப்பற்ற பால்கடல் படுத்திருந்தது போன்ற

தன்மையுடைய வாலி, மால் பெரும் கடகரி - மயக்கம் கொண்ட ஒரு பெரிய மதயானையின், முழக்கம் - பிளிறும் ஓசையை, வாள் அரி செவி தலத்து ஏற்பது என்ன - ஒரு கொடிய சிங்கம் தன் காதுகளில் உணர்த் தக் கேட்டது போல, ஓங்கிய - மிகுதியாக எழுந்த, ஆர்ப்பு ஒலி கேட்ட னன் - சுக்கிரீவன் கர்ச்சனையின் ஓசையைக் கேட்டனன்.

மலை முழையுள் படுத்துறங்கிக் கொண்டிருந்த ஒரு சிங்கம் ஒரு மதயானை பிளிறும் ஒலியைக் கேட்டது போல வாலி, தன் அரமனையுள் படுத்து உறங்கும்போது, சுக்கிரீவன் போருக்கழைத்து முழக்கிய கர்ச் சனையைக் கேட்டனன் என்க. பாற்கடல் கிடந்ததே யனைய பான்மை யான் என்றமையால், அவ்வாலியின் மேனி நிறம் வெண்மையானது என்பது விளங்கும். இராவணன் அமளியில் படுத்திருந்ததை, 'மாற் கருங்கடல் வதிந்ததே யனையதோர் வனப்பினிற் றுயில்வானை' (சுந்தர. 301) என்றமைபோல. வாலியைக் கரி முழக்கங் கேட்ட அரிக்கு உவமித்தமையால் வாலியின் வலியின் சிறப்புத் தோன்ற வைத்ததும் ஆகும். இச் செய்யுளில் பல உவமைகள் விரவி வந்துள்ளன.

பி - ம். 1. *மாப்பெரும்.* 2. *ஓர்த்தது.*
4. *யனைய பண்பினன்.* (13)

240. உருத்தனன் பொரவெதிர்ந் திளவ லுற்றமை
வரைத்தடந் தோளினன் மனத்தி னெண்ணினன்
சிரித்தன னவ்வொலி திசையி னப்புறத்
திரித்ததவ் வுலகமோ ரேழொ டேழையே.

வரை தடம் தோளினன் - மலைகள் போன்ற பெரிய தோள்களை யுடைய வாலி, இளவல் - தன் தம்பி சுக்கிரீவன், உருத்தனன் பொர எதிர்ந்து உற்றமை-கோபித்தவனாய்த் தன்னுடன் போர் செய்ய எதிர்ந்து வந்ததை, மனத்தின் எண்ணினன் - மனத்தில் நினைந்தவனாய், சிரித் தனன் - சிரித்தான்; அ ஒலி - வாலியின் அந்தச் சிரிப்பின் ஓசை, திசையின் அ புறத்து - நான்கு திசைகளுக்கும் அப்பால் உள்ள இடங் களிலும் போய், அ உலகம் ஓர் ஏழ் ஒடு ஏழை - ஒப்பற்ற அப் பதினான்கு உலகங்களையும், இரித்தது - நிலை கலங்கி ஓடச் செய்தது. ஏ: ஈற்றசை.

தடம் - பெருமை; (திவா.) வாலியின் சிரிப்பொலியின் சிறப்பு கூறப் பெற்றமை உயர்வு நவிற்சியணியின் பாற்படும். நகை, எள்ளல் பற்றி வந்தது. ஒலி இரித்தது என இயைக்க. உலகம் இடவாகு பெயராய் அங்கு வாழ்பவரைக் குறித்தது.

பி - ம். 1. *இளவ லுற்றதை, இளவ லுற்றன.* 2. *மனத்தி னெண்ணியே;*
4. *எரித்ததவ் வுலகமோ, ரேழொ டேழையும்.* (14)

241. எழுந்தனன் வல்விரைந் திறுதி யூழியில்
கொழுந்திரைக் கடல்கிளர்ந் தனைய கொள்கையான்
அழுந்திய தக்கிரி யருகின் மால்வரை
விழுந்தன தோள்புடை விசைத்த காற்றினே.

ஊழி இறுதியின் - கற்ப முடிவுக்காலத்தில், கொழும் திரை கடல் கிளர்ந்தது அனைய - பெரிய அலைகளோடு கூடிய கடல் பொங்கி யெழுந்தது போன்ற, கொள்கையான் - தன்மையுடைய அந்த வாலி, வல் விரைந்து எழுந்தனன் - (சுக்கிரீவன் மேல் சினந்து தன் படுக்கையை விட்டு) மிக வேகமாக எழுந்தனன்; (அவ்வேகத் தாலும் மிடுக்காலும்), அ கிரி அழுந்தியது - அந்தக் கிட்கிந்தையிருந்த மலை கீழே ஆழ்ந்து அழுந்தியது; தோள் புடை விசைத்த காற்றின் - அவன் தோள்களைத் தட்டியதால் எழுந்து வேகமாய்த் தாக்கிய காற்றினால், அருகின் மால் வரை - அருகே யிருந்த பெரிய மலைகள், விழுந்தன - தகர்ந்து கீழே விழுந்தன. ஏ : ஈற்றசை.

வல் : விரைவை யுணர்த்தும் இடைச்சொல்;' வல்லே சென்றான் (சுந்தர. 176); வல்விரைந்து; இது ஒரு பொருட் பன்மொழியாய் விரைவின் மிகுதியைக் குறிப்பது. தோள் புடை காற்று - தோள் வீச்சினால் அடித்த காற்று எனலும் ஆம். இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி.

பி - ம். 1. எழுந்தனன் வரவிரைந் ; எழுந்தன னவனிரைந்து.
2. கொழுந்திரைக் கடல்பெயர்ந்ததே யனைய ; கொழுங்கடல் ; பெயர்ந்ததே ; பெயர்ந்தனைய.
3. அழுந்திய மதக்கிரி ; மதகரி யருகின்.
4. விசைத்த காற்றினே, விசையக் காற்றினே. (15)

242. போய்ப்பொடித் தனமயிர்ப் புறத்த் வெம்பொறி
காய்ப்பொடுற் றெழுவட கனலுங் கண்கெடத்
தீப்பொடித் தனவிழி தேவர் நாட்டினும்
மீப்பொடித் தனபுகை யுயிர்ப்பு வீங்கவே.

வெம் பொறி - அவ்வாலியின் கோபத்தால் எழுந்த கொடிய அனற் பொறிகள், மயிர் புறத்த - உரோமங்கள் அடர்ந்த அவன் உடலின் வெளிப்புறத்தே, போய் பொடித்தன - சென்று எழுந்தன; விழி - கண்கள், காய்ப்பு ஒடு - கோபத்தோடு, உற்று எழு - பொருந்தி மேற் கிளம்பும், வட கனலும் கண் கெட - வடவைத் தீயும் காணிற் கண் ஒளி கெடும்படி, தீ பொடித்தன - நெருப்பை வெளிப்படச் செய்தன; உயிர்ப்பு வீங்கவே - அவனுடைய மூச்சுக்காற்று மேலோங்கி வளரவே,

புகை - அதனால் உண்டான புகை, தேவர் நாட்டினும் - தேவர் உலகத்திற்கும், மீ - மேற்சென்று, பொடித்தன - தோன்றின.

வடவைக்கனல்: கடலில் பெண் குதிரை முகவடிவில் உள்ள கொடிய தீப் பிழம்பு. இது வடமொழியில் படபாமுகாக்நி எனப்பெயர் பெறும். (படபா - பெண்குதிரை); பால. திருவவதாரப் : 23; அயோத் மந்திரப். 91; ஆரணிய. 26, 687, 1144.) பொடித்தல்-தோன்றுதல், முளைத்தல்: 'புண்மே லிரத்தம் பொடிப்ப.' (277.); ஆரணிய. 1007; சுந்தர. 1031

பி - ம். 1. மயிர்ப்புறத்து வெம்; மயிர்ப்புறத்தின் வெம்பொறி.
2. காய்ப்பொடும் றனவட, சாய்ப்பொடித் தற்றன, சாய்ப் பொடித் தெழுபெருங் கடலுங் காந்திட.
3. தீப்பொடித்தது; தீப்பொறித்தன; தேவர் நாட்டிடம்; நாட்டிடை.
4. மீப்பொடித் ததுபுகை, யுயிர்ப்பு வீக்கமே. (16)

243. கைக்கொடு கைத்தலம் புடைப்பக் காவலின்
திக்கயங் களுமதச் செருக்குச் சிந்தின
உக்கன வுருமின முலைந்த வும்பரும்
நெக்கன நெரிந்தன நின்ற குன்றமே.

கை கொடு கை தலம் புடைப்ப - (வாலி கோபத்தால்) தன் ஒரு கையோடு மற்றொரு கையை ஓங்கித் தட்ட, (அந்த அதிர்ச்சியால்), காவலின் திக்கயங்களும் - உலகத்தைக் காவல் செய்யும் திக்கு யானைகளும், மத செருக்கு சிந்தின-தம் மதம் உண்டாவதற்குக் காரணமான ஆண்மையைச் சிந்துவன ஆயின; உரும் இனம் - இடியின் கூட்டங்கள், உக்கன - (தம் வலிமை குறைந்து) சிந்தின ; உம்பரும் - தேவர் உலகங்களும், உலைந்த - வருந்தின ; நின்ற குன்றம் - இடம் பெயராது நிலை பெற்றிருந்த மலைகளும், நெக்கன நெரிந்தன - பிளவுபட்டுத் தூளாயின. ஏ : ஈற்றசை.

நெக்குதல் - தூளாகுதல். 'நெட்டிருப்புப் பாறைக்கு நெக்கு விடாப் பாறை. பசுமரத்து வேருக்கு நெக்கு விடும்.' (நல்வழி. 33).

பி - ம். 1. புக்கிரு கைத்தலம், புக்கிரு கைத்தலங் கையொடு ; புடைப்பக் காவலர்.
2. செருக்குஞ் சிந்தின ; செருக்கிச் சிந்தின.
3. உலைந்த தும்பரும்.
4. நெக்கது நெரிந்தது ; நெடுங்குன்றமே; நேமிக்குன்றமே. (17)

**244.** வந்தனென் வந்தனெ னென்ற வாசகம்
இந்திரி முதற்றிசை யெட்டுங் கேட்டன
சந்திரன் முதலிய தார கைக்குழாம்
சிந்தினடவவன்முடிச் சிகரந் தீண்டவே.

வந்தனென் வந்தனென் என்ற வாசகம் - இதோ வந்து விட்டேன்! வந்து விட்டேன் !' என்று வாலி வீரத்தோடு கூறிய சொற்கள், இந்திரி முதல் திசை - இந்திரனுடைய கீழ்த்திசை முதல், எட்டும் - எட்டுத் திக்குகளிலும், கேட்டன - (அங்கங்கு உள்ளோர்களால்) கேட்கப்பெற்றன; அவன் முடி சிகரம் தீண்ட - அவ்வாலியின் கிரீடத்தின் உச்சி தம் மேல் தாக்கினமையால், சந்திரன் முதலிய தாரகை குழாம் - சந்திரனைத் தம் தலைவனாகக் கொண்ட நட்சத்திரக் கூட்டங்கள், சிந்தின - கீழே உதிர்ந்தன. ஏ - ஈற்றசை.

வந்தனென் வந்தனென் : அடுக்கு வெகுளியின் வந்த விரைவுப் பொருளது. இந்திரி - இந்திரனது திசையாகிய கிழக்கு. எட்டும் இனைத்தென்று அறிபொருள். சந்திரன் நட்சத்திரங்களுக்கு நாயகன்; தாரகாபதி, உடுபதி எனும் பெயரால் அவன் வழங்கப் பெறுவது காண்க. இச் செய்யுள் உயர்வுநவிற்சி யணியின் பாற்படும். மணி முடிச் சிகரம் தீண்ட என்றமை அவனுடைய உருவின் உயர்வும் பெருமையும் குறித்தது என்க.

பி - ம். 1. *என்றலும் வாசகம்.*
2. *இந்திரன் முதற்றிசை, இந்திரன் திசை முதல்.*
3. *தாரகைக் குலம்.* 4. *சிந்தின மணிமுடி.* (18)

**245.** வீசின காற்றின்வேர் பறிந்து வெற்பினம்
ஆசையை யுற்றன வண்டப் பித்திகை
பூசின வெண்மயிர்ப் புறத்த வெம்பொறி
கூசின னந்தகன் குலைந்த தும்பரே.

வீசின காற்றின் - (வாலி) எழுந்த வேகத்தால் வீசின காற்றினால், வெற்பு இனம் - மலைக்கூட்டங்கள், வேர் பறிந்து - தம் வேர் அறுந்து, ஆசையை உற்றன - திக்குக்களைப்போய் அடைந்தன; வெண்மயிர் புறத்த - வெண்மையான உரோமங்கள் அடர்ந்த உடலின் வெளிப்புறத்தில் உண்டான, வெம் பொறி - கொடிய கோபத்தீயின் பொறிகள், அண்ட பித்திகை பூசின - அண்டச் சுவராகிய மதில்களிற்பூசின போல விளங்கின; அந்தகன் - யமன், கூசினன் - அவ்வாலியைக் காணவும்

கூச்சமடைந்தான்; உம்பர் குலைந்தது - வானுலகம் நிலைதளர்ந்து வருந்தியது. உம்பரே: ஏகாரம், ஈற்றசை.

வீசினகாற்று; 241. ஆசா, பித்திகா என்னும் வடசொற்கள் ஆசை, பித்திகை எனத்திரிந்து நின்றன. அண்ட பித்திகை பூசின - என்றமையால் அண்டச்சுவர்கள் வரை இவன் கோபத் தீயின் பொறிகள் போய் ஒளிவீசின என்பதாம். பித்திகை - சுவர். (4) அந்தகன் - உயிருக்கு முடிவைச் செய்யும் யமன்.

பி - ம் 1. *வீசின கரத்தின், வீசின காற்று மேற்பறிந்து; காற்று நேர் பறிந்த.*
2. *ஆசையிலுற்றன; ஆசையை யுற்றதால்.*
3. *பூசின வெம்மறி பொடிந்த போயது; பூசின மெயம்மயிர்; வெம்மறி பொடித்துப் போயின.* (19)

246. கூடித்தவா யெயிறுகு கனல்கள் கார்விசும்
பிடித்தவா லுகுமுரு மினத்திற் சிந்தின
தடித்துவீழ்ந் தனவெனத் தகர்ந்து சிந்தின
வடித்ததோள் வலயத்தின் வயங்கு காசரோ.

கடித்த வாய் எயிறு உகு - (வாலி கோபத்தால்) கடித்த வாயிலுள்ள பற்களினின்றும் சிந்திய, கனல்கள் - நெருப்புப்பொறிகள், கார்- மேகங்கள், விசும்பு இடித்தவால் - ஆகாயத்தில் இடித்ததால், உகும் - சிந்தும், உரும் இனத்தில் - இடிகளின் கூட்டம் போல, சிந்தின - சிதறி விழுந்தன; (அவன் தோள் தட்டி ஆர்த்த போது), வடித்த - சிறந்த, தோள் வலயத்தின் வயங்கு காசு - அவனுடைய தோள் வளைகளில் விளங்கிய இரத்தினங்கள், தடித்து வீழ்ந்தன என - மின்னல்கள் கீழே விழுந்தன போல, தகர்ந்து சிந்தின - சிதறிச் சிந்தின. அரோ: அசை.

எயிறு தோன்ற வாயைக் கடித்தல், வெகுளியிற் றோன்றும் மெய்ப்பாடு; ஆரணிய. 465. காசு - இரத்தினம்; 'காசுலாங் கனகப்பைம் பூண் காகுத்தன்' (பால. தாடகைவதைப்; 77.) தடித்து - மின்னல்; (பிங்).

பி - ம் 1. *கடித்த வாயெயிறுகு கனலிற்; வாளெயிற்றுகு, வாளெயிறுகு, எயிறுகள்; கனல்களார் விசும்.*
2. *இடித்த வாயுகு. இடித்த லாலுகு, இடித்த வாயுகு; உருமுகும்.*
3. *தடித்துவீழ் வனவெனத்.*
4. *இடித்ததோள் வலயத்தி னிலங்கு காசரோ; இலங்கு காசரோ, ஆசில் காசரோ, காசெலாம்.* (20)

247. ஞாலமு நாற்றிசைப் புனலு நாகரும்
மூலமு முற்றிட முடிவிற் றீக்குமக்
காலமு மொத்தனன் கடலிற் றுன்கடை
ஆலமு மொத்தன னெவரு மஞ்சவே.

(அப்பொழுது வாலி), எவரும் அஞ்ச - கண்டவர்யாவரும் பயப் படும்படி, ஞாலமும் - இப்புவியும், நால் திசை புனலும் - நான்கு திசை களிலும் உள்ள கடல்களும், நாகரும் - தேவர்களும், மூலமும் - அவற் றின் ஆதிகாரணமான மூலதத்துவப் பொருள்களும், முற்றிட - அழிந்து போக, முடிவில் - யுகமுடிவில், தீக்கும் - எரித்தொழிக்கும், அ காலமும் ஒத்தனன் - அந்த யுகாந்த பிரளயகாலத்தையும் ஒத்து விளங்கினன்; (மேலும்), கடலில் தான் கடை ஆலமும் ஒத்தனன் - பாற்கடலில் தான் முன் கடைந்த காலத்திற் றோன்றிய ஆலகால விஷத்தையும் போன்ற வனானன். ஏ: ஈற்றசை.

நாகர் - பாதாள வாசிகளும் ஆம். வாலி கடல் கடைந்தது; 115 உரையிற் காண்க. 238 முதல் இச் செய்யுள் முடிய சுக்கிரீவன் ஆர்த்த ஒலி கேட்ட வாலி சினந்து எழுந்த தன்மையை விளக்குவன.

பி - ம் 1. நாற்றிரைப் புனலும், மெண்டிசைப் புனலும்.
2. தீக்குறும், தீர்க்குமக், தீர்வரும். (21)

தாரை தடுத்தலும், வாலி விடையும்.

248. ஆயிடைத் தாரையென் றமுதிற் றோன்றிய
வேயிடைத் தோளின ளிடைவி லக்கினள்
வாயிடைப் புகைவர வாலி கண்வரும்
தீயிடைத் தன்னெடுங் கூந்த றீகின்றுள்.

அ இடை - அவ்வாறு வாலி கோபித்து எழுந்தபோது, தாரை என்று- தாரை யென்று பெயர் கூறப் பெறும், அமுதில் தோன்றிய - தேவாமிர் தம் போல விளங்கிய, வேய் இடை தோளினள் - மூங்கிலினிடம் தான்பெற்ற (அழகிய) தோள்களையுடையவளான அவன் மனைவி, வாய் இடை புகை வர - வாயினின்றும் கோபத்தால் புகை வரும்படி யாக, வாலி - வாலியின், கண்வரும் - கண்களினின்று வெளிவந்த, தீ இடை - கோபத்தீயினிடையே, தன் நெடும் கூந்தல் தீகின்றுள் - தன் நீண்ட கூந்தல் எரியப் பெற்றவளாய், இடை விலக்கினள் - அவன் எழுந்து செல்வதை நடுவிற் புகுந்து தடுத்தாள்.

ஆயிடை : அகரச் சுட்டு நீண்டு நின்றது ; செய்யுள் விகாரம் ; அவ் என்னும் வகர வீற்றுப் பெயர் ஆயிடை யென முடிந்தது என்பது பதிற்றுப்பத்துரை. அமுதிற்றோன்றிய வேயிடைத் தோளினுள் ; முன் (247) செய்யுளில், 'கடலிற்றான்கடை யாலமு மொத்தனன்' என்றமையால், அதனை இங்குக் கொண்டு கூட்டி அவ்வாலத்திற்குப் பிறகு அப்பாற்கடலில் அமுதத்தோடு தோன்றிய திருமகளை யொத்த தாரை என்றும் பொருள் கொள்ளக் கிடக்கின்றது ;

"வில்லென்னும் நெடுவரையால் வேந்தென்னுங் கடல்கலக்கி
எல்லென்னும் மணிமுறுவ லிந்துமதி யெனுந்திருவை
அல்லென்னுந் திருநிறத்த வரியென்ன வயனென்பான்
மல்லென்னுந் திரள்புயத்துக் கணியென்ன வைத்தானே"

என்று அயமகாராஜன் (பால. குலமுறை; 12) திறத்துச் சற்று விரித்துக் கூறிய சிறப்பும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. இனி, தாரை உண்மையிலேயே பாற்கடலில் அமுதத்தோடு பிறந்த திருமகள் முதலாகிய அரிய பொருள்களோடு தோன்றியவளா என்பது ஆராய்ச்சிக்குரியதாகும். தாரையின் தந்தை ஸுஷேணன் என்று வான்மீகம் கூறுவதும் காண்க. இங்கு வாலியின் கோபத் தீயை ஆலகாலத்திற்கும், அங்கு இடைப்பட்ட தாரையை அவ்வாலகாலத்திற்குப் பின் தோன்றிய அமுதத்திற்கும் உவமையாக்கப் பெற்ற அருமை நோக்கி இன்புறத்தக்கது. வாயிடைப் புகைவர ; கண்களிற் றோன்றிய கோபத்தீயில் உண்டான புகை, வாயிடமாக வெளிவந்தது என்க. தீகின்றுள்; தீகுதல் - கருகி நாற்ற மடைதல் ; காந்துதலும் ஆம். ஒருவன் ஒரு காரியமாய் எழுந்து செல்லும் போது அவன் மனைவி தடுத்தால் அக்காரியம் நிறைவேறாததோடு அவனுக்குக் கேட்டையும் உண்டாக்கும் என்பது நிமித்தக் குறியாகும். முன் வாலிக்கு இடம் துடித்ததோடு (238) இப்பொழுது தாரை தடுத்ததும் பின் அவன் கேட்டுக்கு அறிகுறியாயின வென்க.

பி - ம். 1. ஆயிடை தாரையென் ; லமிழ்திற் றோன்றிய; யென்றுரைக்குமாயிழை.

2. வேயிடை தோளினள், வேயுடை தோளினள் ; விரைவிற் பற்றினள்.

3. வாயுடைப் புகையொடும், புகையுடை.

4. கூர்த்த நீயவே. (22)

249. விலக்கலை விடுவிடு விளித்து ளானுரம்
கலக்கியக் கடல்கடைந் தமுது கண்டென
உலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவென்
மலைக்குல மயிலென மடந்தை கூறுவாள்.

(வாலி தாரையை நோக்கி), 'மலை குல மயில் - மலையில் வாழும் சிறந்த மயில் போன்றவளே! விலக்கலை - என்னை விலக்காதே! விடு விடு - என்னைத் தடைசெய்யாது விட்டுவிடு; அ கடல் கடைந்து அமுது கண்டு என - முன் நான் அந்தப் பாற்கடலைக் கலக்கிக் கடைந்து அமுதம் வரச் செய்தது போல, விளித்து உளான் உரம் கலக்கி - என்னைப் போருக்கு அழைத்த அச்சுக்கிரீவன் வலி குலையச் செய்து, உலக்க இன் உயிர் குடித்து - அவன் அழிய அவன் இனிய உயிரைப் பருகி, ஒல்லை மீள்குவென் - விரைவில் மீண்டு வருவேன்' என - என்று, (தாரைக்கு வாலி ஆறுதல் கூற), மடந்தை - அத்தாரை, கூறுவாள் - மேலும் சொல்லலானாள். (சொன்னவை பின்வரும் பாடலிற் காண்க.)

மயில்: உவமையாகு பெயராய்த் தாரையைக் குறிப்பது; குலம் - உயர்வு: 'குலம் வேண்டின் வேண்டுக யார்க்கும் பணிவு' (குறள். 960). உலக்குதல்-அழியச் செய்தல்; 'உலக்குநர் வஞ்சகர்' (பால. திருவவதாரப். 122). உயிர் குடித்து; இஃது இலக்கணை; குடித்து என்றது அச் செயலின் எளிமையைக் குறிப்பிட்டபடி. மயில், அண்மை விளி. இயல்பாய் நின்றது. விலக்கலை: எதிர்மறை யொருமை ஏவல் வினைமுற்று. விடுவிடு; விரைவும் வெகுளியும் கொண்ட அடுக்குத் தொடர்.

பி - ம். 1. *விளித்த ளானுளம்; விளித்த ளான்றனை.*
2. *தமுது கொண்டென.*
3. *உலக்க வுற்றுயிர்; உலக்கு வித்துயிர்; ஒல்லை மீள்கின்றேன்.* (23)

250. கொற்றவ நின்பெருங் குவவுத் தோள்வலிக்
கிற்றனன் முன்னைநா ளீடுண் டேகுவர்ன்
பெற்றிலன் பெருந்திறல் பெயர்த்தும் போர்செயற்
குற்றது நெடுந்துணை யுடைமை யாலென்றாள்.

(அது கேட்ட தாரை வாலியை நோக்கி), 'கொற்றவ - அரசனே! முன்னை நாள் - முன்னமே, நின் பெருங் குவவு தோள் வலிக்கு - உன்னுடைய பெருமைதங்கிய பருத்துயர்ந்த புயவலிமைக்கு, இற்றனன் -

அழிந்து ஓடி ஒளிந்தவனான அச்சுக்கிரீவன், ஈடு உண்டு - எளிவரவு உற்று, ஏகுவான் - சென்றவன், பெரு திறல் பெற்றிலன் - (இப்பொழுது) தான் பெரும் உடல் வலிமையை அடைந்தானல்லன்; (அவ்வாறாக), பெயர்த்தும் போர் செயற்கு உற்றது - மீண்டும் உன்னோடு போர் செய்வதற்கு வந்த இச் செயலானது, நெடுந்துணை உடைமையால் - பெருந்துணை வேறு பெற்றுள்ளமையால்' என்றாள் - என்று கூறினாள்.

ஈடு - எளிவரவு; ஒப்பு; 'ஈடுபடு மிறைமகள்' (தக்க. 61. உரை). ஈடுண்டு, தன் வலிமை இழந்து என்றலும் ஆம். பெற்றிலன் பிறந்திலன் என்ற பாடங்கொண்டு, இப்போது தவம் பெற்றானுமில்லை; வேறொரு சன்மம் எடுத்தானுமில்லை; என்பது பழையவுரை.

பி - ம். 1. வுன்பெருவ்.

2. மிற்றைய தல்லனால்; மிற்றைய னல்லனால், இற்றைய நல்ல நாள்.

3. பெற்றவன் பெருந்திறல் பெற்றிலன் பிழைத்திலன், பெற்றனன் பிறந்திலன், பெற்றிலன் பிறந்திலன், பெற்றிலன் பெயர்த்தும், பெற்றனன் பெருந்திறல்.

4. குற்றது பெருந்துணை, குற்ற தரிமையால். (24)

251. மூன்றென முற்றிய முடிவில் பேருல
கேன்றுட னுற்றன வெனக்கு நேரெனத்
தோன்றினுந் தோற்றவை தொலையு மென்றற்குச்
சான்றுள வன்னவை தையல் கேட்டியால்.

(அதற்கு, வாலி அவளை நோக்கி), 'தையல் - பெண்ணே! மூன்று என முற்றிய - சுவர்க்கம், பூமி, பாதலம் என மூன்றாக வகுக்கப் பெற்று நிறைவு அடைந்துள்ள, முடிவு இல் பேர் உலகு - கணக்கிட்டு முடிவு சொல்ல முடியாத பெரிய உலகங்களில் உள்ள பிராணிகள் யாவும், எனக்கு நேர் என - எனக்கு எதிராக, ஏன்று - ஏற்று, உடன் உற்றன - ஒன்று சேர்ந்தனவாய், தோன்றினும் - வந்து தோன்றினாலும், அவை தோற்று தொலையும் என்றற்கு - அவை அனைத்தும் தோல்வியுற்று அழியும் என்று சொல்வதற்கு, சான்று உள - சாட்சிகள் பல உள்ளன; அன்னவை கேட்டி - அவற்றை நீ கேட்பாயாக! ஆல்: ஈற்றசை.

இச் செய்யுள் முதல் 255 முடிய ஒரு தொடர்.

தையல் : அழகுடையவள் ; அண்மைவிளி ; இயல்பாய் நின்றது. உலகு ; இங்கு இடவாகு பெயராய் அவற்றில் உள்ள பிராணிகளைக் குறிப்பது. நேர்தல் - எதிர்ப்படுதல்.

பி - ம். 1. முன்றென முட்டிய.
2. ஞற்றெதிர் ; விலக்கு நேரென.
3. தோன்றலுந், தொலையுமென்றலின், தொலையு மென்பது, தொலையு மாலெனில் ; தோற்றலை தொலையு மென்றலின்.
4. தன்னது. (25)

252. மந்தர நெடுவரை மத்து வாசுகி
அந்தமில் கடைகயி றடைக லாழியான்
சந்திரன் றூணெதிர் தருக்கின் வாங்குவார்
இந்திரன் முதலிய வமர ரேனையோர்.

மந்தர நெடுவரை மத்து-மந்தரம் என்னும் நெடியமலை மத்தாகவும், வாசுகி அந்தம் இல் கடை கயிறு - வாசுகி என்னும் பாம்பு முடிவு இல்லாது நீண்ட கடையும் கயிருகவும், ஆழியான் - சக்கராயுதனான திருமால், அடைகல் - அந்த மத்தாகிய மந்தரகிரி கீழே ஆழ்ந்து போகாமல் தாங்கிய ஆமையான அடைகல்லாகவும், சந்திரன் தூண் - சந்திரன் மத்தான மந்தரகிரியை அணைத்து நிறுத்தும் தூணுகவும், எதிர் தருக்கின் வாங்குவார் - பெருமிதத்தோடு அக்கயிற்றை இழுத்து எதிர் நின்று கடைபவர், இந்திரன் முதலிய அமரர் - இந்திரன் முதலிய தேவர்களும், ஏனையோர் - (மறு புறத்தில் இழுத்துக் கடைந்தோர் அவர்களுக்கு விரோதிகளான) அசுரர்களும் ஆவர் ;

அடைகல் - அடியிற்றங்கும் பட்டடைக்கல் ; "சுட்டமெல்லிரும் படைகலைச் சுடுக்லாதனபோல்" (சுந்தர. 1012). ஏனையோர் - அவரினும் வேறுபட்டவர், அதாவது பகைவர்; தேவர்க்குப் பகைவர் ஆதலின் அசுரர்கள் எனக்கொள்ளப்பட்டது.

பி - ம். 1. நெடுவரை யமைத்த வாசகி, நடுவரை யமைத்த, நடுவுற வமைத்த. 3. வாங்குநர். (26)

253. பெயர்வுற வலிக்கவு மிடுக்கில் பெற்றியார்
அயர்வுற லுற்றதை நோக்கி யானது
தயிரெனக் கடைந்தவர்க் கமுதந் தந்ததும்
மயிலியற் குயின்மொழி மறக்கற் பாலதோ.

மயில் இயல் - மயில் போன்ற சாயலும், குயில் மொழி - குயிலின் குரல்போன்ற சொல்லும் உடைய பெண்ணே! பெயர்வு உற வலிக்கவும் - அந்த மத்தாகிய மந்தரகிரி பெயர்ந்து சுழல இழுக்கவும், மிடுக்கு இல் - வலிமை இல்லாத, பெற்றியார் - தன்மையரான அவ்வானவர்களும் அசுரர்களும், அயர்வு உறல் உற்றதை நோக்கி - தளர்ச்சியடைந்த நிலையைப் பார்த்து, யான் - நான், (அவர்களை நீக்கி), அது தயிர் என கடைந்து - அதைத் தயிர் கடைவதேபோலக் கடைந்து, அவர்க்கு அமுதம் தந்ததும் - அவர்களுக்கு அமுதம் கிட்டச்செய்து அதனைக் கொடுத்த திறமும், மறக்கல் பாலதோ - நீ மறக்கக் கூடியதாகுமோ? (மறக்கத் தக்கதன்று என்றபடி).

மயில் இயல், குயில் மொழி ; உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைகளாய அண்மை விளிகள், மறக்கலாவதோ என்றமையால்; வாலி கடல் கடைந்து அமுது கண்டு, அதனைத் தேவர்களுக்கு அளித்த செய்தி தாரை அறிந்ததே என்று அவளுக்கு வாலி நினைப்பூட்டினான் என்பதாம்.

வாலி கடல் கடைந்த செய்தி பாஸர் இயற்றிய அபிஷேக நாடகத்தில் வாலிகூற்றாகவே அமைந்துள்ளது. ஆனால் வான்மீகம், அத்யாத்மம் ஆகிய இரு நூல்களிலும் அவன் கடல்கடைந்து அமுதத்தை எடுத்த செய்தி கூறப்பெறவில்லை.

பி - ம். 1. *பேர்வுற மிடுக்கில் பெற்றியர்.*
2. *அயர்வுற வுற்றனாளதனை, அயர்வுற வுற்றனர், அயர்வுற வழுங்கினர் ; ஒய்வுற வுவர்ந்தனர்.*
4. *மயிலியற் கிளிமொழி ; மறுக்க லாகுமோ.* (27)

ஒரு சுவடியில் இப்பாடல்,
பேர்வுற வலிக்கவு மிடுக்கில் பெற்றியார்
நேர்வுற வுலந்தன ரதனை நோக்கியான்
ஆர்கலி தனைக்கடைந் தமுது கண்டனென்
போர்வலி யழிந்து போயப் புறந்தந் தோடலேன்.
என மாறியுள்ளது.

254. ஆற்றலி னமரரு மவுணர் யாவரும்
தோற்றன ரெனேயவர் சொல்லற் பாலதோ
கூற்றுமென் பெயர்சொலக் குலேயு மாரினி
மாற்றவற் காகிவந் தெதிரு மாண்பினர்.

'ஆற்றலின் - என்வலிமைக்கு எதிரில், அமரரும் - தேவர்களும், அவுணர் யாவரும் - அசுரர்கள் எல்லோரும், தோற்றனர் - தோற்றுப் போனவர், எனேயவர் - எத்தனே பேராவர்? சொல்லல் பாலதோ - அது கணக்கிட்டுச் சொல்லக் கூடியதாகுமோ? (ஆகாது என்றபடி); கூற்றும் - யமனும், என் பெயர் சொல - என் பெயரைப் பிறர் சொல்லக்கேட்டு, குலேயும் - அஞ்சி நடுங்குறுவன்; (ஆதலின்), மாற்றவற்கு ஆகி வந்து - என் பகைவனுன இச்சுக்கிரீவனுக்கு உதவியாக வந்து, இனி எதிரும் - இனி என்னேப் போரில் எதிர்க்கும், மாண்பினர் - திறமையுடையவர், ஆர் - யாரே உள்ளார்? (ஒருவரும் இலர் என்றபடி).

கூற்றும் : உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 1. ஆற்றினெ னமரரு, ஆற்றல்செய் யமரரு, ஆற்றவன் றமரரு, ஆற்றலா லமரரு, ஆற்றிலென் னமரரும்.
2. தோற்றன ரேனேயர், பாலரோ, சொல்ல லானதோ; தோற்றன ரெனக்கெனச் சொல்ல வேண்டுமே.
3. குலேயுமாலினி, குலேயுமாறினி.
4. மாற்றல ராகியவ், மாற்றவர்க் காகியெ; மாண்பினேர்; ஆற்ற லராகியவ் தெதிர்த்தல் யாவரோ. (28)

255. பேதைய ரெதிர்குவ ரெனினும் பெற்றுடை
ஊதிய வரங்களு முரமு முள்ளதில்
பாதியு மென்னதாற் பகைப்ப தெங்ஙனம்
நீதுய ரொழிகென நின்று கூறினுன்.

'பேதையர் - அறிவில்லாத அவர்கள், எதிர்குவர் எனினும் - அவ் வாறு என்னே எதிர்த்துப் போர் புரிவார் என்ருலும், பெற்றுடை - அவர்கள் அடைந்துள்ள, ஊதியம் வரங்களும் - (தம் தவப்பயனுய்) அடைந்துள்ள வரங்களும், உரமும் - வலிமைகளும், உள்ளதில் - உள்ள வற்றில், பாதியும் என்னது ஆல் - சரிபாதி என்னுடையனவாம்; ஆத லால், பகைப்பது எங்ஙனம் - என்னேப் பகைத்துப் போரிடுவது அவர் களால் எவ்வாருகும்? (ஆதலின்), நீ துயர் ஒழிக - நீ கொண்ட துன் பத்தை விடுவாயாக' என - என்று, நின்று - நிதானித்து, கூறினுன் - ஆறுதல் மொழிந்தான்.

எதிர்குவர்; கு, சாரியை. ஒழிகென; ஒழிகவென என்பதன் தொகுத்தல் விகாரம். எனக்கு இயற்கையாயுள்ள வலிமையோடு என்னை எதிர்ப்போர் வலியிற் பாதி எனக்கு வந்து சேருமாதலால் நீ துயரொழிகெனத் தாரைக்கு ஆறுதல் கூறினன் வாலி. பகைவர் வலியிற் பாதி பெறும் வரம் வாலிக்குச் சிவபிரான் அளித்தது,,உயுத்த. மந்திரப். 107. இக்கூற்றிற்கு வான்மீகம் முதலிய நூல்களில் ஆதாரங் கிடைக்கவில்லை. 'ஊதியம் - இலாபம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. ரெதிர்க்கு வரெனினும், ரெதிர்க்குந ரெனினும். ரெதிர்குவதெனினும்; பேதைமை பிடித்தவ ரெதிர்க்கப் பெற்றுடை.
2. ஒதிய வரன்களு முணர்வு; முரனு முள்ளமும், முற்றிலன்;
3. பாதியு மென்னிற்று; மென்னிற்றூப், பாதியு மெனிற்றரப்.
4. கின்று கூறுவான். (29)

மேலும் தாரை கூறல்

256. அன்னது கேட்டவ ளரச வாயவற்
கின்னுயிர் நட்பமைந் திராம னென்பவன்
உன்னுயிர் கோடலுக் குடன்வந் தானெனத்
துன்னிய வன்பினர் சொல்லினு ரென்ருள்.

அன்னது கேட்டவள் - அவ்வாறு வாலி சொல்லக் கேட்ட தாரை, (வாலியை நோக்கி), 'அரச - அரசனே! இராமன் என்பவன் - இராமன் என்னும் ஒருவன், ஆயவற்கு - அந்தச் சுக்கிரீவனுக்கு, இன் உயிர் நட்பு அமைந்து - இனிய உயிர்த்துணைவனாக ஆகி, உன் உயிர் கோடலுக்கு உடன் வந்தான் என - உன் உயிரைக் கவர்ந்து கொள்ள அவனுடன் வந்துள்ளான் என்று, துன்னிய அன்பினர் - நம்மிடம் நெருங்கிய அன்புடையவர், சொல்லினர்-எனக்கு உரைத்தனர்' என்ருள் - என்று கூறினள்.

இக் கூற்ருல், தாரை அரசியலறிவு பெற்று ஆங்காங்கு நடந்து வரும் நிகழ்ச்சிகளை ஒற்றர்கள் வழியாக அறிந்து வந்தனள் என்பது புலனாகிறது. இராமபிரான் துணை பெற்றுச் சுக்கிரீவன் இரண்டு முறைகள் வாலி மீது போருக்கு எழுந்தான் என்றும், முதல் முறை அவன் சென்றபோது, தாரை அதனை அறியவில்லை யென்றும், இரண்டாம் முறையே அவள் தடுத்தாளென்றும் வான்மீகத்தால் அறிகிரும். இராம லக்ஷ்மணர்களின் உதவி சுக்கிரீவனுக்குக் கிடைத்தசெய்தி

தாரைக்கு அங்கதன் மூலமாய்க் கிடைத்தது என்றும் அந்நூல் கூறு கின்றது.

பி - ம். 1. அன்னவன் கூறலினரசு கேளவற், அன்னவன் கூறலு மரச கேளவற் ; கூறலுமைய வாயவற்.
2. நட்பவ னிராம. 4. றன்னிய நண்பினர். (30)

வாலியின் விடை

257. குழைத்தவல் லிருவினைக் கூறு காண்கிலா
தழைத்தய ருலகினுக் கறத்தி னாறெலாம்
இழைத்தவற் கியல்பல வியம்பி யென்செய்தாய்
பிழைத்தனை பாவியுன் பெண்மை யாலென்றான்.

(அச்சொற்களைக் கேட்ட வாலி, தாரையை நோக்கி), 'பாவி - தீவினையுடையவளே ! குழைத்த-வருத்திய, வல் இரு வினைக்கு—வலிய பெரிய தீவினைகளுக்கு, ஊறு காண்கிலாது - அழிவு காணத்தக்க உபா யத்தைக் காண முடியாது, அழைத்து - நீயே வந்தருள் செய்வாயாக என்று வேண்டி அழைத்து, அயர் - வருந்திய, உலகினுக்கு - உலக மக்களுக்கு, அறத்தின் ஆறு எலாம் - தருமத்தின் வழிகளையெல்லாம், இழைத்தவற்கு-தன் நடை முறையால் காட்டிய அந்த இராமபிரானுக்கு, இயல்பு அல இயம்பி - பொருந்தாதவற்றைச் சொல்லி, என் செய்தாய்- என்ன அபசாரப்பட்டு விட்டாய் ? உன் பெண்மையால் - உன் பெண் புத்தியினால், பிழைத்தனை - பெருந்தவறிழைத்து விட்டாய்'; என்றான் - என்று வாலி தாரையை நோக்கி வருந்திக் கூறினான்.

குழைத்தல் - வருத்துதல் ; வல் இருவினை, எளிதிற் போக்கற்கரிய வான புண்ணிய பாவமாகிய இருவினைகளும் ஆம். புண்ணிய பாவங்கள் தொடர்ந்து வந்து அணுகும் வலியுடையனவாதலால், வல்லிருவினை என்னப்பட்டது. ' இருள் சேரிருவினை ' (குறள். 5) என்றதும் நோக்குக. ஊறு - துன்பம் அல்லது கேடு; இஃது உறு, என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர். இங்கு ஊறு காண உபாயம் காண்கிலாது, என்று பொருள் கூறப் பெற்றது. இராமபிரான் அறத்தின் ஆறு இழைத்தவன், 'மண்ணிடை யாவ ரிராகவ னன்றி மாதவ மறத்தொடும் வளர்த்தார்'; (பால. நகரப் ; 5); ' தோன்றிய நல்லறந் தோன்றத் தோன்றினான்'; என் பன வொடு, ' அறைகழ லிராமனாகி யறந்தலை நிறத்த வந்த விறை' என்பன அவ்வாலி தன் கூற்றாலாயே வலியுறுவதுங் காண்க (360). பிழைத்தனை பாவி ; நீ தவறிழைத்தாய் ; இனி இவ் விராமாபசாரம் ' செய்த நீ ஒரு பெண் ஆதலால் பிழைத்தாய் ; மற்றை ஆடவர் இவ்வாறு

கூறினுல் நான் அப் பாவியரைக் கொன்றே விடுவேன் என்றும் பொருளுங் கொள்ள இடந்தருகின்றமை காண்க. பெண்மையால் பிழைத்தனே; 'நுண்ணறிவுடையோர் நூலோடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே' (இறையனுரகப் பொருளுரை); 'பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்' என்று பிராட்டி தன்னைக் கூறிக்கொள்வதுங் காண்க; (சுந்தர: 618). பாவி என்றது, அவள் செய்த ராமாபசாரத்தைக் கருதி. இச் செய்யுளால், வாலி இராமபிரான் அவதார உண்மையை அறிந்தவன் என்பது புலனுகின்றது.

பி - ம். 1. உழைத்தன விருவினைக்; யிருவினை யீறு; உழைத்த வல்லிரு வினைக்கூறு.

2. தழைத்தய ருலகினுக்; தழைத்தயல் னுயிர்த்தொகைக்.

3. இழைத்தியல் பல்லதை, இழைத்தயற் கியல்பல வியம்பி, இழைத்தய னியற்றுமோ.

4. யாவியுன்; பெண்மையா லென்னே, பெண்மை யாயெனு. (31)

258. இருமையு நோக்குறு மியல்பி னுற்கிது
பெருமையோ விங்கிதிற் பெறுவ தென்கொலோ
அருமையி னின்றுயி ரளிக்கு மாறுடைத்
தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ.

இருமையும் நோக்குறும் - இருதரப்பினையும் கருதிப் பார்க்கும், இயல்பினுற்கு-குணமுடைய அந்த இராமபிரானுக்கு, இது பெருமையோ-நீ கூறிய இச் செய்கை புரிவது பெருமையாகுமோ? (ஆகாது என்றபடி); இங்கு இதில் பெறுவது - இங்கு வந்து இவ்வாறு துணை கொள்வதில் அவன் அடையக் கூடியது, என்கோலோ - யாதே யாகும்! அருமையின் நின்று - அடைதற் கரிய பொருளாய் நின்று, உயிர் அளிக்கும் - உலகத்தில் உள்ள பிராணிகளைக் கருணையோடு காக்கும், ஆறு உடை - நடையை மேற்கொண்டுள்ள, தருமமே - தருமந்தானே, தன்னை தான் தவிர்க்குமோ - தன்னைத் தானே அழித்துக் கொள்ளுமோ? (கொள்ளாது என்றபடி). அரோ: ஈற்றசை.

இருமை: இம்மை, மறுமை; புண்ணியம், பாவம்; வாதி, பிரதி வாதி போன்ற எல்லா எதிரிடைகளையும் நோக்கி. ஒருநிலை வகிப்பவன் எனலும் ஆம். இது, ஒரு குரங்கினிடம் நட்புக்கொண்டு, மற்றொரு குரங்குக்குத் தீங்கு செய்யும் இச்செயல். தருமமே தவிர்க்குமோ; இராமபிரான் தருமமே உருவெடுத்து வந்தவன் ஆவன்; 'அறத்தின் மூர்த்தி வந்ததவரித்தான்' (அயோத். மந்திரப். 37.); 'மெய்யற மூர்த்தி வில்

லோன்' (சுந்தர 1120): என்றமையும், சுந்தர. 1123 முதலியவற்றையும் நோக்குக. தவிர்க்குமோ: ஓகாரம் எதிர்மறைப் பொருளது. முன் செய்யுளில் இராமபிரானை, 'அறத்தின் ஆறெல்லாம் இழைத்தவன்' என்று கூறி, இங்கு அவனைத் 'தருமமே' என்றதும் கருதத் தக்கது.

பி - ம். 2. பெருமையன் றிங்கிதிற், பெருமையிங் கிதனினில், பெருமையே யிங்கிதிற், பெருமையோ விதிலவன்.

3. நின்றுல களிக்கும்; மாண்புடை, மாயிடை.

4. தருமமே தப்புமோ தன்னைத் தானென; தன்னைத்தானென்றான். (32)

259. ஏற்றபே ருலகெலா மெய்தி யீன்றவள்
மாற்றவ ளேவமற் றவடன் மைந்தனுக்
காற்றரு முவகையா லளித்த வையனைப்
போற்றலை யின்னன புகறற் பாலையோ.

ஏற்ற பேர் உலகு எலாம் - தன் தந்தை தாங்கி வந்த பெரிய உலகின் ஆட்சி உரிமை அனைத்தும், எய்தி - அவன் அளிக்கத் தனக்கு உரிமையாக அடைந்து, (பின்), ஈன்றவள் மாற்றவள் - தன்னைப்பெற்ற தாயாகிய கோசலா தேவிக்கு மாற்றாள் ஆகிய கைகேயி, ஏவ - கட்டளையிட, மற்று - மற்றும், அவள் தன் மைந்தனுக்கு - அவள் குமாரனான பரதனுக்கு, ஆற்று அரும் உவகையால் - புரிதற்கு அரிய மகிழ்ச்சியோடு, அளித்த ஐயனை - அவ்வரசுரிமையை அன்போடு தந்த பெரியோனை, போற்றலை - நீ பாராட்டாமல், இன்னன - இத்தன்மையான பழிமொழிகளை, புகலல் பாலையோ - கூறத்தகுவையோ? மற்று - அசையுமாம்.

ஏற்ற பேருலகு; தான் மூத்த மைந்தன் என்ற உரிமையால் தனக்கு ஏற்கத் தகுந்த உலகு என்றும் கொள்ளலாம். கைகேயியின் கொடுமை காரணமாக, அவள் பெயரைக் கூற வாலி விரும்பாது சக்களத்தி என்ற பகைமைப்பாடு தோன்ற மாற்றவள், என்றும் மற்றவள் என்றும் வெறுப்புகள் தோன்றக் கூறினான் என்னலும் ஒன்றும்; அன்றியும் கைகேயி வரம் பெற்றமைக்குக் கோசலைமீது கொண்ட பொறாமையே காரணம் என்பது, அயோத். மந்தரை சூழ்ச்சிப் படலத்திலும் காண்க. மாற்றவளாய் இருந்தும் அவளும் ஒரு தாய் என்ற உயர்முறை பாராட்டிய சிறப்புடைமையும் ஆம். உவகையாலளித்தது;

மன்னவன் பணியன் ருகி னும்பணி மறுப்ப னேவென்
பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ
என்னினி யுறுதி யப்பா லிப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னெளிர் கான மின்றே போகின்றேன் விடையுங் கொண்டேன்.

(அயோத். கைகேசி சூழ்வினைப் : 110)

என்றமையாலும், கவிக் கூற்ருக அமைந்த, 'இப்பொழு தெம்மனோரால்' (அயோத். கைகேசி சூழ்வினைப் : 108;) என்ற செய்யுட் கொண்டும் அறியலாம். போற்றலை; முன்னிலையொருமை எதிர்மறை வினைமுற்று; இங்கு எச்சப் பொருளில் வந்துளது. புகலற்பாலை : பாலை - பான்மையுடையாய்: இது முன்னிலைக் குறிப்பு வினைமுற்று.

பி - ம். 1. *யீன்ற தாய், யீன்றவம்,*
2. *மாற்றவ ளாகமற், மற்றவள் மைந்தனும்.*
3. *முவகையோ டளித்த ; ஆற்றிய வுவகையோடு.*
4. *இன்னவை புகல லாகுமோ.* (33)

இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

260. நின்றபே ருலகெலா நெருங்கி நேரினும்
வென்றிவெஞ் சிலையலாற் பிறிதும் வேண்டுமோ
தன்றுணை யொருவருந் தன்னில் வேறிலான
புன்ரெழிற் குரங்கொடு புணரு நட்பெனே.

'நின்ற பேர் உலகு எலாம் - நெடுங்காலமாய் நிலைபெற்று நின்ற பெரிய உலகங்கள் யாவும், நெருங்கி - ஒன்றுகூடி, நேரினும் - எதிர்த்தாலும், வென்றி வெம் சிலை அலால் - அச்சத்தை உண்டாக்கும் அவனுடைய விஜய கோதண்டமே அல்லாமல், பிறிதும் வேண்டுமோ-வேறும் ஒரு துணை அவனுக்கு வேண்டற் பாலதோ? தன் துணை தன்னில் வேறு ஒருவரும் இலான் - தனக்கு நிகர் தானேயல்லாமல் வேறு ஒருவரும் இல்லாத இராமபிரான், புன் தொழில் குரங்கொடு - அற்பமான செயலையுடைய ஒரு குரங்கினோடு, புணரும் நட்பு எனோ - அடையக் கூடிய நட்பு ஏனோ?

தன்றுணை யொருவரும் தன்னில் வேறிலான்; 'ஸமான ரஹிதன்' என்ற வட சொற்றொடரின் கருத்தைக் கொண்டது; 'தன்னொப்பாரில்லாதான்' என்பதாம்; திரு விண்ணகரில் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள திருமாலுக்கு ஒப்பிலியப்பன் என்ற பெயர் உண்மையும் நோக்குக. ஒப்பு : 'தன்னிற்றுனல தொப்பிலாதான்' (52). 'தனக்குவமை யில்லாதான்' (குறள். 7.) இராமபிரான் தன் வில்லையே துணையாக வுடை

யவன்; அயோத். தைலமாட்டு : 48. நட்பெனே; ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்த துணிவுப் பொருளைக் குறிப்பது.

பி - ம். 1. நெருங்கி நேரினும். 2. வேறு வேண்டுமோ.
3. தன்றுணை யொருத்தனுர்; யொருவனும்; தன்னில் வேறுண்டோ.
4. புணரு நட்பனே; நட்பெரு. (34)

261. தம்பிய ரல்லது தனக்கு வேறுயிர்
இம்பரி னில்லென வெண்ணி யேய்ந்தவன்
எம்பியும் யானுமுற் றெதிர்ந்த போரினில்
அம்பிடை தொடுக்குமோ வருளி னுழியான்.

'தம்பியர் அல்லது - தன் தம்பிகளே அல்லாமல், தனக்கு வேறு உயிர் - தனக்குத் தனியாக வேறு ஓர் உயிர், இம்பரில் - இவ்வுலகில், இல் என எண்ணி - இல்லை யென்று கருதி, ஏய்ந்தவன் - அவர்களோடு ஒன்றி வாழ்ந்தவனும், அருளின் ஆழியான் - அருட்கடலானவனுமான அவ்விராமபிரான், எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில் - என் தம்பி சுக்கிரீவனும் யானுமாகப் பொருந்தி எதிர்த்து நடத்தும் போரில், இடை அம்பு தொடுக்குமோ - நடுவே புகுந்து தன் அம்பை எய்வானே? (மாட்டான் என்றபடி).

இராமபிரான் அருளின் ஆழி ; கருணைக்கடல் ; (பால. கடிமணப் : 99) : 'அளிக்கு நாயகன்', (அயோத். சித்திரகூடப் : 11) என்பன நோக்குக. இராமபிரான் தன் தம்பியை ஆருயிர் என்றது ; (ஆரணிய : 1095; 1097.)

பி - ம். 2. இம்பரி லில்லென வெண்ண நீர்ந்தவன், இம்பரி னுளதென ; வெண்ணித் திர்ந்தவன்.
3. யானும்வர் தெதிர்ந்த போரினில்.
4. அம்பிடை கோக்குமோ. (35)

262. இருத்திநீ யிறையிவ ணிமைப்பில் காலையில்
உருத்துயிர் குடித்தவ னுடன்வந் தாரையும்
கருத்தழித் தெய்துவென் கலங்க லென்றனன்
விரைக்குழல் பின்னுரை விளம்ப வஞ்சினள்.

'நீ இறை இவண் இருத்தி - நீ சிறிது பொழுது இங்கு இருப்பாயாக! இமைப்பு இல் காலையில் - கண்ணிமைக்கும் பொழுதும் இல்லாத நேரத்

திற்குள், உருத்து - கோபித்து, உயிர் குடித்து - அச்சுக்கிரீவனுடைய ஆவியைப் பருகி, அவன் உடன் வந்தாரையும் - அவனுடன் துணை வந்ததாக நீ கூறிய அவர்களையும், கருத்து அழித்து - எண்ணம் நிறை வேறுமற் செய்து, எய்துவென் - இங்கு யான் திரும்பி வருவேன்; கலங்கல் - நீ கலக்கம் அடையாதே!' என்றனன் - என்று தாரைக்கு வாலி ஆறுதல் கூறினான்; விரைகுழல் - நறுமணமுள்ள கூந்தலையுடைய தாரையும், பின் - அதற்கு மேலும், உரை விளம்ப அஞ்சினாள் - மறு வார்த்தை சொல்ல அச்சமுற்று அடங்கிவிட்டாள்.

இறை; மிகச் சிறியது; ('இறையு ஞானமு மிலாத வென் புன் கவி,' (பால. பாயிரம்: 10.); 'இறையொரு சங்கை யின்றி யெண்ணுதி, (360). உயிர் குடித்தல்; 249. உரை காண்க. உருத்தவன் உயிர் குடித்து எனினும் ஒன்றும். உடன் வந்தார்; தாரை இராம லக்ஷ்மணர் சுக்கிரீவனுக்குத் துணைவந்துள்ளார் என்று கூறிய போதிலும், அவர்கள் துணையாக வாராரென்றும், வரினும் தன்னுடன் போரிட மாட்டார் என்றும் துணிவு கொண்டவன் ஆதலால், துணை வந்தவர் வேறு யாவரேனும் இருக்கலாம் என்ற நோக்கத்துடன் கூறினான் எனலும் ஆம்: இனி, இராமலக்ஷ்மணர்களே துணையாக வந்தால் அவர்களைத் தான் வென்று அழிக்க முடியாது என்பதும், தன்னையும் அவர்கள் வென்று அழிக்க முடியாது என்பதையும் கருதிக் கருத்தழிக்கும் மாத்திரையே கூறினான் என்னலும் ஒன்றும். விரைக் குழல், அன்மொழித்தொகை: இங்குப் பெண் என்ற பொருளில் நின்றது.

பி - ம். 1. *விமைப்பில் காலையின்.* 2. *உருத்தவ னுயிர்குடித்.* 3. *கருத்தழித் தேகுவென்.* (36)

வாலி போர்க்கெழுதல்

263. ஒல்லைச் செருவேட் டுயர்வன்புய வோங்க லும்பர்
எல்லைக்கு மப்பா லிவர்கின்ற விரண்டி னோடும்
மல்லற் கிரியின் றலைவந்தனன் வாலி கீழ்பால்
தொல்லைக் கிரியின் றலைதோன்றிய ஞாயி றென்ன.

வாலி - (இவ்வாறு தாரைக்கு ஆறுதல் கூறிய) வாலி, ஒல்லை - விரைவில், செரு வேட்டு - போரை விரும்பி, உயர் - (போர் என்ற எண்ண முண்டான போதே) பூரித்து உயர்ந்த, உம்பர் எல்லைக்கும் அப்பால் இவர்கின்ற - தேவர் உலகின் எல்லைக்கும் அப்பாலும்

மேலெழுந்து வளர்ந்த, வன் புய ஓங்கல் இரண்டினோடும் - வலியதன் புயங்களாகிய மலைகள் இரண்டோடும், கீழ்பால் - கிழக்குத் திசையில், தொல்லை கிரியின் தலை - பழமையான உதயகிரி என்னும் மலையின் உச்சியில், தோன்றிய - விளங்கிய, ஞாயிறு என்ன - சூரியனே போல, மல்லல் கிரியின் தலை - வளம் பொருந்திய அந்த மலையின் மேலே, வந்தனன் - போரிட வந்தான்.

செருவேட்டுயர் தோள் : வீரர்க்குப் போர் என்று கேட்டவுடன் தோள்கள் பூரித்து ஓங்குமாதலின் ; "போரென்ன வீங்கும் பொருப் பன்ன பொலன்கொடிண்டோள்" (பால. பூக்கொய் : 18 ;) என்றதும், காண்க. ஒல்லை ; இடைச் சொல். ஓங்கல் - மலை ; காரணப் பெயர். வாலிக்குச் சூரியன் உவமை.

பி - ம். 1. வெல்புய வோங்கல், வான் புயவோங்கல். மல்புய வோங்கல்.
2. எல்லைக்கு மப்பாற் கடந்திட, எல்லைக்கு முப்பால்.
3. ஞாயி றெப்பான், ஞாயி றெத்தான் ; சூரனென்ன. (37)

264. நின்றா னெதிர்யா வருநெஞ்ச நடுங்கி யஞ்சத்
தன்றோள் வலியாற் றகைமால்வரை சாலும் வாலி
குன்றூ டுவந்துற் றனன்கோ ளவுணன் குறித்த
வன்றூ ணிடைத்தோன் றியமாநர சிங்க மென்ன.

தன் தோள் வலியால் - தனது புயவலிமையினால், தகைமால் வரை சாலும் - சிறப்பமைந்த பெரிய மேரு வரை யொக்கும், வாலி - வாலி யானவன், கோள் அவுணன் குறித்த - கொடுமை மிக்க அசுரனான இரணியன் சுட்டிக் காட்டிய, வல் தூண் இடை தோன்றிய - வலிய தூணிடத்திருந்து வெளிப்பட்ட, மா நரசிங்கம் என்ன - மாட்சிமையுற்ற நரசிங்க மூர்த்தி போல, எதிர் யாவரும் - எதிரே கண்ட எல்லாரும், நெஞ்சம் நடுங்கி அஞ்ச - மனம் நடுங்கி அச்சங்கொள்ள, குன்று ஊடு வந்து உற்றனன் நின்றான் - அம்மலையின் இடையே வந்தடைந்து நின்றான்.

வந்துற்றனன் நின்றான் எதிர் எனக் கொண்டு - சுக்கிரீவன் எதிர் நின்றான் எனவும் வினை முடிவு செய்யலாம். வாலியின் தோளுக்கு மால் வரை ; 266, 271, கோள் - வலிமையும் ஆம், சாலும் - போலும் ; உவம வாசகம். முன்பாடலில் மலைமேல் தோன்றிய வாலிக்கு உதயகிரியிற்றோன்றும் சூரியனை உவமையாக்கி, பின் அம்மலையின் இடையே தோன்றிய அவனுக்கு, வன்றூணிடைத்

தோன்றிய நரசிங்க மூர்த்தியை உவமை யாக்கியது மேன்மேல் உயர்வு நவிற்சியணியாகும்.

'உற்றனன் - ஊற்றுப் பொருந்தினன்' என்பது பழையவுரை.

பி - ம். 1. *நின்றானிறை, நின்றான் நின்ற ; நெஞ்ச நடுங்கி.*

2. *நட்டமாமலை சாலும், தனிமா மலை, தனிமால் வரை.*

3. *கோளவுணற் குறித்து.*

4. *மாநர சிய மென்ன ; சிய மான.* (38)

**265.** ஆர்க்கின்ற பின்னோன் றனைநோக்கினன் றானு மார்த்தான்
வேர்க்கின்ற வானத் துருமேறு வெறித்து வீழப்
போர்க்கின்ற வெல்லா வுலகும்பொதிர் வுற்ற பூசல்
கார்க்குன்ற மன்னா னிலந்தாவிய காலி னென்ன.

ஆர்க்கின்ற பின்னோன்தனை - போர்வேண்டிக் கர்ச்சனை புரிந்த தன் தம்பியாகிய சுக்கிரீவனை, நோக்கினன் - பார்த்து, தானும் ஆர்த்தான் - வாலி தானும் எதிர்க் கர்ச்சனை செய்தான் ; வேர்க்கின்ற - அச்சத்தால் வேர்க்கின்ற, வானத்து உரும் ஏறு - வானிலுள்ள இடியேறுகள், வெறித்து - விரைப்புற்று, வீழ - கீழே விழும்படியும், கார் குன்றம் அன்னான் - கரிய (அல்லது மேகங்கள் படிந்த) மலை போன்ற திருமால், நிலம் தாவிய - திரிவிக்கிரமனாய்ப் புவியைத் தாவியளந்த, காலின் என்ன - ஸ்ரீ பாதங்களைப் போல, பூசல் - அவ்வாலி சுக்கிரீவர்கள் செய்த பேரொலிகள், போர்க்கின்ற எல்லா உலகும் - இவ்வுலகைச் சூழ்ந்து கவிந்துள்ள மற்ற எல்லா உலகங்களிலும், பொதிர்வு உற்ற - நிறைந்து விளங்கின.

வெறித்தல் - நடுங்குதலும் ஆம் ; உரும் ஏறு வேர்த்தல் - நீரைச் சிந்துதல். 'வெறித்து நின்றுலகமெல்லாம் விம்முறுகின்ற வேலை' (ஆரணிய. 1007). புவியை யளந்த திருமால் மற்றோரடியால் புவியைச் சூழ்ந்த மேலுலகங்களை அளந்து வியாபித்தது போல, இவ்வாலி சுக்கிரீவர்கள் இட்ட கர்ச்சனைகள் வானுலகெங்கும் சென்று மிகுந்து விளங்கின. 'நின்றகான் மண்ணெலா நிரப்பியப்புறம், சென்றுபா விற்றிலை சிறிது பாரெனா, ஒன்றவா னகமெலா மொடுக்கி யும்பரை, வென்றகான் மீண்டது வெளி பெருமையே'; (பால. வேள்விப் : 36) என்றமை காண்க. வாலி சுக்கிரீவர் ஆர்ப்பொலி பரவிய விரைவுக்கு நிலந்தாவிய காலை ஒப்பிட்டமையால், கால் வானுலகம் சென்று பரவிய

விரைவுச் சிறப்பும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாம். இனி, நிலந்தாவிய காலினென்ன, வாலி உயர்ந்து நின்று ஆர்த்தான் எனக் கொள்ளலும் ஆம். முன் செய்யுளில் நரசிங்காவதாரத்தையும், இங்குத் திரிவிக்கிரம அவதாரத்தையும் ஒப்பிட்ட சிறப்பு நோக்கற்பாலது. கால் - காலமும் ஆம். பொதிர் - வீங்குதல் அல்லது மிகுதல் 'புனைதார் பொரநொந்து பொதிர்ந்த'; (சீவக. 1380). பொதிர்வு, நடுக்கமும் ஆம். இனி. 'பொதிவுற்ற பூசல்' என்ற பாடம் கொள்ளுதலும் ஏற்கும்; பொதிதல் - நிறைதல்; 'மிக்கனம் பொதிந்த நூல்' (நாலடி. 341.)

பி - ம். 1. ஆர்க்கின்ற தன்றம்பியை ; நோக்கினனின் ருனு மார்த்தான்.
2. வேர்த்து வீழ்ந்த.
3. போர்க்கின்ற தெல்லாம் பொதிவுற்ற.
4. காலி னன்ன, காலி தென்ன ; உறத்தாவிய காலின் வீழ. (39)

266. அவ்வேலை யிராம னுமன்புடைத் தம்பிக் கைய
செவ்வே செலநோக் குதிதானவர் தேவர் நிற்க
எவ்வேலை யெம்மேரு வெக்காலொடெக் கால வெந்தீ
வெவ்வே றுலகத் திவர்மேனியை மானு மென்ருன்.

அ வேலை - அப்போது, இராமனும் - இராமபிரானும், அன்பு உடை தம்பிக்கு - தன்பால் அன்புடைய தம்பியாகிய இலக்குவனிடம், 'ஐய - அப்பனே! செவ்வே செல நோக்குதி - நன்ருக ஊன்றி நோக்குவாயாக! தானவர் தேவர் நிற்க - அசுரர்களும் தேவர்களும் ஒரு புறம் நிற்கட்டும்; வெவ்வேறு உலகத்தின் - தனித்தனியாய் வேறுபட்டுள்ள பல உலகங்களினிடத்தும், எ வேலை - எந்தக் கடல், எ மேரு - எந்த மேருமலை, எ கால் ஒடு - எந்தக் காற்றுடன், எ கால வெம் தீ - எந்தக் கொடிய காலாக்கினி, இவர் மேனியை மானும் - இந்த வாலி சுக்கிரீவர்களுடைய உடல் வடிவுகளுக்கு ஒப்பாகும்' என்ருன் - என்று கூறினுன்.

தானவர் தேவர் மட்டும் அல்லாமல், எந்த உலகிலும் உள்ளதான கடல், மேகம், காற்று, காலாக்கினி ஆகிய அனைத்தும் இவ்வாலி சுக்கிரீவர் உடல்களுக்கு ஒப்பாகா என்பதாம். தானவர் தனு என்பாளுக்குக் காசிபர் மூலம் பிறந்தவர்; தத்திதாந்தப் பெயர்; இவர்கள் அசுரர்கள். தம்பியை ஐய என்றது, அன்பினுல் வந்த மரபு வழுவமைதி. வெவ்வேறு: வேறு வேறு என்பதன் தொகுத்தல் விகாரம். தம்பிக்கு ; வேற்றுமை மயக்கம்.

பி - ம். 1. மன்பமர் தம்பிக்; , மன்பமர் தம்பியை நோக்கி.

2. செல நோக்கிது; நோக்கியத் தானவர்; செவ்வேயியன் றன்மை நோக்கிடில் தானவ ரோடு தேவர்.

4. மாறு மென்னே. (40)

சில பிரதிகளில் இதன் பின் 'ஆற்ருது பின்னும்' எனும் பாடல் உள்ளது.

267. வள்ளற் கிளையான் பகர்வானிவன் றன்முன் வாணுள்
கொள்ளக் கொடுங்கூற்றுவனைக் கொணர்ந் தான்குரங்கின்
எள்ளற் குறும்போர் செயவெய்தினெ மென்னு மின்னல்
உள்ளத்தி னூன்ற வுணர்வுற்றிலெ னென்று மென்ருன்.

வள்ளற்கு - வள்ளலாகிய இராமபிரானுக்கு, இளையான் - இளைய சோதரனுகிய இலக்குவன், பகர்வான் - மறுமொழி கூறுவானுய், 'இவ்ன் - இந்தச் சுக்கிரீவன், தன் முன் - தன் தமயனுடைய, வாழ்நாள் கொள்ள - ஆயுளை அபகரித்துக்கொள்ள, கொடும் கூற்றுவனை - கொடிய யமனை, கொணர்ந்தான் - இங்கே அழைத்துக் கொண்டு வந்துள்ளான்; குரங்கின் எள்ளற்கு உறும் - குரங்குகளோடு நிந்திப் பதற்கு இடமாய் அமைந்த, போர் செய் எய்தினெம் - போர் செய்ய யாம் வந்துள்ளோம், என்னும் இன்னல் - என்ற துன்பம், உள்ளத்தின் ஊன்ற - என் மனத்தில் ஆழ்ந்து பதிந்து நிற்க, ஒன்றும் உணர்வு உற்றிலென் - நான் இச் செயல் ஒன்றிலும் அறிவு செல்லாதவனுய் இருக்கின் றேன்,' என்ருன் - என்று மனம் வருந்திக் கூறினுன்.

தன் தமையனுகிய இராமபிரானுக்கு வனத்தில் வரும் தீங்குகளை முன்னின்று தவிர்த்து, அவனுக்கு அருந்தொண்டு புரிவதே தன் கடமை எனக் கொண்டு தனக்குரிய நலன்களைத் துறந்து, இரவு பகல் ஓய் வின்றிப் பணி புரிந்து வந்த இளைய பெருமான், பிறனெருவன் தன் தமையன் உயிருக்கே கோளிழைக்க முற்படுகையில் அதற்கு உதவி புரியும் நிலை தமக்கு ஏற்பட்டால் அதனை எவ்வாறு ஏற்பான்? ஆதலின், அந்த அவல நிலையில், அவன் மனம் ஆழ்ந்து வருந்தி யிருந்தான் என்பதும், அந்நிலையில் இராமபிரான் கூற்றில் அவன் மனம் நாட வில்லை யென்பதும் விளங்குவனவோடு, இலக்குவனுக்கு மூத்த சகோதர பக்தியில் உள்ள ஈடுபாடு எத்தகைய உச்ச நிலையை யெய்தி யிருந்த தென்பதும், சுக்கிரீவன்பால் அவன் கொண்டிருந்த மதிப்புக்

குறைவும், தாம் குரங்கோடு போர் செய்ய வந்த புன்மை நிலையும் தன்னை வருத்தின தென்பது புலப்படுவது காணலாம். கூற்று வன் என்றது இராமபிரானை; முன் 79, 178 பாடல்களில் வாலி காலன் என இராமபிரானைக் கூறியுள்ளமையும் நோக்குக; இஃது இராமபிரான் வாலியைக் கொல்வது திண்ணம் என்ற உறுதி பற்றிக் கூறிய உவமை ஆகு பெயர்.

பி - ம். 2. குரங்கென் (றெள்ளற்)

3. எள்ளற் கரும்போ ரஃதிசைகல மென்னு மின்னல்;
எள்ளற் குறுபோர்செய வெண்ணினன்,
எள்ளற் கரும்போர திசைகல
னென்னு மின்னல்; வெண்ணி னின்னம்.

4. உள்ளத்திடை யூன்ற; வுணர்ந்தே னிலை, வுணர்ந்தேனிலன்: வுணர்ந்தில னென்று மென்றான். (41)

ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை. சில சுவடிகளில் இச் செய்யுள் இடம் மாறி உள்ளது.

268. ஆற்றாது பின்னும் பகர்வானறத் தார முங்கத்
தேற்றாது செய்வார் களைத்தேறுதல் செவ்வி தன்றால்
மாற்றா னெனத்தன் முனைக்கொல்லிய வந்து நின்றான்
வேற்றார்க டிறத்தி வன்றஞ்சமென் வீர வென்றான்.

ஆற்றாது பின்னும் பகர்வான் - (இலக்குவன்) மனம் பொறாது மேலும் கூறுவானாய், ' வீர - பெரு வீரனான பெருமானே ! அறத்து ஆறு அழுங்க - தரும மார்க்கம் கேடுற, தேற்றாது செய்வார்களை - தெளிவு பெறாது (தீய) காரியத்தைச் செய்வார்களை, தேறுதல் - தெளிதல், செவ்விது அன்று - சிறப்புடைத்தாகாது ; தன்முனை - தன் தமையனை, மாற்றான் என - தனக்குப் பகைவன் என்று, கொல்லிய வந்து நின்றான் - கொல்லும் பொருட்டு இங்கு வந்து சுக்கிரீவன் நின்றுள்ளான் ; (ஆதலின்), வேற்றார்கள் திறத்து - இவன் இனத்தில் வேறுபட்ட நம்மிடத்து, இவன் தஞ்சம் - இவன் தஞ்சமாக வந்தடைந் தான் என்று இவனை ஆதரிப்பது, என் - என்ன பயனுடைத்தாகும் ? ' என்றான் - என்று இராமபிரானிடம் கூறினான். ஆல் : ஈற்றசை.

இங்கு இலக்குவன் மற்றொரு வகையில் குறை காண்பது காண்க. தன் தமையனையே கொல்ல வந்த இச்சுக்கிரீவன் பிறர்பால் நல்லவனாய்

நடந்து கொள்வான் என்று நினைப்பது தக்கதன்று என்பதே அவன் கருத்து. இனி, இவன் தஞ்சம் என்பதற்கு இவனைப் பற்றுக்கோடாக நாம் கொள்வது என்றும் கொள்ளலாம். முனை - முன்னை என்பதின் இடைக்குறை, கொல்லிய ; எதிர்கால வினை யெச்சம் ; 'காணிய வந்தேன்' என்றது போல. தேற்ருது : வினையாலணையும் பெயர் ; ஆராயாது என்று வினையெச்சமாகவும் கொள்வர், அறத்தாறு ; குறள். 37.

பி - ம். 1. *னறத் தாறிழுக்கி.*
2. *தேறுதல் செய்வி நாமோ, தேற்றுதல் செய்வி தன்ருல்.*
4. *தஞ்சமென் னிய தென்ருன், தஞ்சமென் வீர மென்ருன்.* (42)

ஒரு சுவடியில் இதன் பின் 'வள்ளற் கிளையான்' என்ற பாடல் உள்ளது.

**269.** அத்தா விதுகே ளெனவாரியன் கூறு வானிப்
பித்தாய விலங்கி னொழுக்கினைப் பேச லாமோ
எத்தாயர் வயிற்றி னும்பின்பிறந் தோர்க ளெல்லாம்
ஒத்தாற் பரதன் பெரிதுத்தம னாத லுண்டோ.

'அத்தா - அப்பனே ! இது கேள் என - யான் கூறும் இதனை நீ கேட்பாயாக!' என்று, ஆரியன் கூறுவான் - பெருமைக்குரிய இராம பிரான், (இலக்குவனை நோக்கிப்) பின் வருமாறு சொல்லத் தொடங்கினான் ; ' பித்து ஆய இ விலங்கின் ஒழுக்கினை - பைத்தியம் கொண்டது போன்றதும் அறிவற்ற மிருக வகையின்பாற் பட்டதுமான விலங்காகிய இவன் ஒழுக்க முறையை, பேசல் ஆமோ - நாம் இங்கு நம் போல் மனிதனாகமதித்துப் பேசுதல் கூடுமோ ? (கூடாது என்றபடி) ; எ தாயர் வயிற்றினும் - எந்தத் தாய்மார் வயிற்றிலேயும், பின் பிறந்தோர்கள் எல்லாம் - தம்பியரான அனைவரையும், ஒத்தால் - ஒப்பிட்டுப் பார்த்தால் (அவர்களுள்) பரதன் பெரிது உத்தமன் ஆதல் - பரதனைப் போல மிகவும் உத்தமனாகக் கூடியவர், உண்டோ - உள்ளாராவது ஏற்படுமோ ? (இல்லை என்றபடி).

இனி, எந்தத் தாய்மார் வயிற்றிலும், பின்னே தோன்றியவர்கள் அனைவரும் (தம்தம்) அண்ணன்மாருடன் நல்ல முறையில் இணங்கி வாழ்ந்தால், பரதன் சிறந்தவன் என்று கூறற்கிடமுண்டோ என்றும் பொருள் கொள்ளலும் ஒன்றும்.

சுக்கிரீவன் தன் தமையனைக் கொல்லத் தம்மை அழைத்து வந்தது தகாத காரியம் என்றெண்ணிய இலக்குவன், இராமபிரானுக்கு எச்சரிக்கை புரிவதாக முன்பாடல் அமைந்துள்ளது. தமையனுக்குத் துரோகம்

செய்பவன் பாதகன் என்பதும், அவனை நம்புதல் தகாது என்பதும் அவ் வெச்சரிக்கையின் பயனும். இவ்வாறு இராமபிரானுக்கு உபதேசிக்கத் தக்கவர் பெற்றோர் முதலிய பெரியோர்களே ஆவர். இலக்குவன் பல நிலையில் நின்று இராமபிரானுக்கு அறிவு புகட்டிய இடங்களிலெல்லாம் இராமபிரான் அவனை அறிவிற் பெரியோனாகக் கொண்டு அவனிடம் நல்வார்த்தை கூறியிருப்பதை நாம் இந்நூலில் காண்கிறோம். அன்றியும், உயுத்த காண்டம் பிரமாத்திரப்படலத்தில், இலக்குவன் மூர்ச்சையுற்று விழுந்திருந்த நிலையில் அவனைக் கண்ட இராமபிரான், 'தாயு நீயே, தந்தையு நீயே தவநீயே' என்று கூறியிருப்பதையுங் காண்க. ஆகவே, தன் நன்மையைக் கூறிய இலக்குவனை நோக்கி, 'அத்தா' என்று இராம பிரான் விளித்தது, அவன் இளவல்பால் கொண்ட பெருமையை விளக் குவதாகும். அத்தன் - தந்தை; இதனால், இலக்குவனை இராமபிரான் தம்பி என்ற முறையினும் மேலாகத் தந்தையென்னும் முறையில் வைத் துப் பெருமைப்படுத்திய சிறப்பும் விளங்கவைத்ததாகும்; 'த்வயா புத்ரேண தர்மாத்மா நஸிம் விருத்த பிதாமம' (வான்மீகம்-ஆரண்ய. 15) என்று இராமபிரான் இலக்குவனைப் பாராட்டியதும் காண்க.

'பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ' என்றது வாலி சுக்கிரீவரின் விலங்குப் பிறப்பை இழித்துக் கூறியதன்று. பின் 339-343 செய்யுட்களில் 'யாவர்க்கும் மேன்மையும் கீழ்மையும் வினையினால் வருமே அன்றிப் பிறப்பினால் வாரா' என்று வற்புறுத்திய தால், இராமபிரான் 'குரங்கென்று' சுக்கிரீவனை இழித்துக் கூறியவன் ஆகான். விலங்கென்றது, அவன் பண்பாட்டின் குறைவையே குறித்த தாகும். பித்து - மருள்; பகுத்தறிவின்மை. ஒழுக்கம் - பண்புடைமை.

தன்பொருட்டு எல்லாச் சுயநலங்களையும் தியாகம் செய்து, தன்னுடன் நிழல்போல் நிற்கும் இலக்குவனிடமே, அவனை விடுத்து பரதனைப் புகழ்ந்தது, இலக்குவன்பால் இராமன் கொண்ட மதிப்புக் குறைவைச் சுட்டும் என்று சிலர் குறை கூறுவர்; அஃதன்று. இலக்குவன், தன் உணர்ச்சி வலிமையால் உண்மையை உணர மாட்டாமல் பிழைபட்ட இடங்கள் பல உண்டு. தந்தை சொல்லைக் காக்க இராமபிரான் காட்டுக்குப் புறப்பட்ட போதும், பரதன் சித்திர கூடத்துக்கு வருவதைக் கண்டபோதும் அவன் இராமபிரான்பால் கொண்ட உழுவலன்பினால் மயங்கிப் பரதனை வெகுண்டதுண்டு. இங்கும், சரணடைந்தவனைக் கொல்ல வந்தவனும், தம்பி மனைவியை அபகரித்தவனுமான வாலியைக் கொல்வது அறமேயெனத் துணிந்து நின்ற இராமபிரானுக்கு, அவன் செய்வது அநீதியெனக் கூறுவான்

போல எச்சரிக்கை செய்ய வந்த இலக்குவனுக்கு அறிவுரை கூற வேண்டுவது இராமபிரானுக்குக் கடமையாயிற்று. அன்றியும், அவன் தன் அண்ணனுன பரதனைக் கொல்லத் துணிந்த குறைபாடுடையவன்; அவ்வாறிருக்க, அவன் சுக்கிரீவன்பால் குறைகாண்பது தகாது என்று எடுத்துக்காட்டியதும் சுட்டப்பெற்றது ஆகலாம். பரதனே எந்நிலையினும் ஒரே நிலையில் நின்று அறக்கடப்பாட்டை நிறைவேற்றுபவன் ஆதலானும், கோசலை, வசிட்டர், பரத்துவாஜர், குகன் முதலியோரால் மிகவும் தூயவன் என்று கூறப்பெற்ற பெருமை வாய்ந்தவனுதலானும், இராமபிரான் எப்பொழுதும் விருப்பு வெறுப்பு இன்றி நடுநிலையின் நின்று உண்மை பேசுபவனுதலானும் இலக்குவனுக்கு முன்னே அவனையே புகழாமல் பரதனைப் புகழ்ந்தது நேர்மையேயாகும். இதனுல், இலக்குவனை அவமதித்தனன் என்ற இழுக்கு அவன்பால் சாராது; இதனை நன்கறியத் தக்கவன் இலக்குவனே என்பதையும் நாம் உணரலாம்.

இச் செய்யுளால், பரதன் (இராமபிரான் வாக்கால்) சகோதரருள் 'பெரிதும் உத்தமன்' என்ற பெயர் பெற்றமை காணத்தக்கது. இராமபிரான் இங்குப் பரதனுக்கே ஏற்றமளித்ததுபோல, வரதுங்கராம பாண்டியர் வாக்காக அமைந்துள்ள பின்வரும் பாடலும் இங்கு ஒப்பு நோக்கத் தகும்.

செஞ்சுடரோன் மைந்தனையும் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே — துஞ்சா
விரதம் தனைக்கொண்டு மெய்யன்பு பூண்ட
பரதனையும் ராமனையும் பார்.

இவ்வாறு இலக்குவன் வெறுப்படைந்ததும், இராமபிரான் விடையிறுத்ததுமான செய்திகள் வான்மீகத்திலோ, அத்யாத்மராமாயணத்திலோ காணப்பெறவில்லை.

பி - ம். 2. *பித்தாய குரங்கி னெழுக்கினைப், பித்தாய வொழுக்கின் விலங்கினைப்; பேசலாமே.*

3. *வயிற்றினிற் பிறந், வயிற்றினும் பின் பிறந், வயிற்றினிற் பின்பிறந்.*

4. *ஞுவ தண்டோ, ஞுகை யுண்டோ.* (43)

270. விற்ருங்கு வெற்பன் னவிலங்கெழிற் ருேள மெய்ம்மை
உற்ருர் சிலரல் லவரேபல ரென்ப துண்மை
பெற்ரு ருழைப்பெற் றபயன்பெறும் பெற்றி யல்லால்
அற்ருர் நவையென் றலுக்காகுந ரார்கொ லென்ருன்.

(மேலும் இராமபிரான்), ' வில் தாங்கு வெற்பு அன்ன-வில்லேந்திய மலைபோல, இலங்கு எழில் தோள - விளங்கும் அழகமைந்த தோள்களை யுடைய இலக்குவ! மெய்ம்மை உற்ருர் சிலர் - (உலகில்) தவரு நல்லொழுக்கம் பெற்றவர் ஒரு சிலரே ஆவர், அல்லவரே பலர் - அந் நல்லொழுக்கம் தவறியவரே பலர் ஆவர், என்பது உண்மை - என்று சொல்வது உண்மையேயாகும்; பெற்ருர் உழை - நமது நட்புப் பெற்ற வர்கள் இடத்து, பெற்ற பயன் - பெற்ற நல்ல பலனை, பெறும் பெற்றி அல்லால் - ஏற்றுக்கொள்ளும் சிறப்பே அல்லாமல், நவை அற்ருர் என்றலுக்கு ஆகுநர் - குற்றமற்றவர் என்று சொல்லுதற்கு ஆவார், ஆர் கொல் - யாரே உலகில் இருக்கின்றனர்!' என்ருன் - என்று கூறினன்.

உலகில் நல்லொழுக்க முடைய மேலோர் சிலராகவும், அவ் வொழுக்க மேம்பாடில்லாதவர் பலராகவும் உள்ளாராதலின், நாம் நட்புக் கொள்பவரிடமுள்ள நற்குணங்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமே யன்றி, குற்றம் நாடுதல் தக்கதன்று, என்பது இராமபிரானது உபதேச மாகும். ஏனெனில், உலகில் குற்றமற்றவர் என்று ஒருவரைக் காண்பது அரிதாதலின் என்க. இஃது அரசியற்றருமத்தை மேற் கொண்ட உறுதி மொழி. 'குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை' என்பதையும், 'நல்லா ரெனத்தா னனிவிரும்பிக் கொண்டாரை, அல்லா ரெனினு மடக் கிக் கொளல்வேண்டும், நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்கு முண்டு" (நாலடி: 221); 'குணநாடிக் குற்றமு நாடி யவற்றின் மிகைநாடி மிக்க கொளல்' (குறள். 504), என்பனவற்றையும் நோக்குக. 'பெற்ருருழை எவன் வந்தடைந்தானே அவனிடத்தில் உள்ள குணங் கிரகிக்கின்றதே போலும்' என்பது பழையவுரை.

விற்ருங்கு வெற்பு; இல்பொருள் உவமை. எழில் தோள் - ஓங்கி விளங்கும் தோள் என்னலும் அமையும்; எழில் - உயர்ச்சி. பெற்றி - பேறு, அல்லது சிறப்பு; 'உழந்து பெற்ற யோகத்தின் பெற்றியாலே' (ஆரணிய, 1195). ஆகுநர்; ந - பெயரிடைநிலை, கொல் என்பதை அசையாக விடுத்தலும் ஏற்கும். இனி, 'விற்ருங்கு வெற்பென்ன விளங்கெழிற் ருேள' என்று பாடங் கொள்ளலும் ஒன்றும்.

பி - ம். 1. வெற்பென்ன விளங்கெழில் ; ரேளின் மேன்மை, ரேளின் மென்மை ; ரேள மென்மை.

2. ரல்ல திங்கே யயனென்ப தன்மை, ரில்லதிங் கெப்பய; னென்ன தன்மை.

3. யுற்றபயன் பெறு பெற்றி யல்லால் ; பெற்றி தேரினல்லால் ; யுற்றபயம் பெறு பெற்றி யெல்லாம்.

4. நவை யென்றலுக் காக்குநர். (44)

சுக்கிரீவன் வாலி போர்

271. வீரத் திறலோ ரிவரின்ன விளம்பும் வேலை
தேரிற் றிரிவான் மகனிந்திரன் செம்ம லென்றிப்
பாரிற் றிரியும் பனிமால்வரை யன்ன பண்பார்
மூரித் திசையா னையிரண்டென முட்டி னரே.

வீரம் திறலோர் இவர் - வீரமும் வலிமையும் வாய்ந்த இந்த இராம லக்ஷ்மணர் இருவரும், இன்ன விளம்பும் வேலை - இவ்வாறு உரையாடிக் கொண்டிருந்த பொழுது, தேரில் திரிவான் மகன் - தேர்மீது ஏறி வானம் எங்கும் சுற்றித்திரிபவனான சூரியன் குமாரனான சுக்கிரீவன், இந்திரன் செம்மல் என்று - இந்திரன் குமாரனான வாலி என்று முறையே சொல்லப் பெறும், இ பாரில் திரியும் பனிமால் வரை அன்ன பண்பார் - இந்த உலகில் சஞ்சரிக்கும் பனி அடர்ந்த பெரிய மலைகள் போன்ற (தோற்றச்) சிறப்பு நிறைந்தவர்கள், மூரி திசை யானை இரண்டு என முட்டினார் - வலிமை மிக்க திசை யானைகள் இரண்டு எதிர்த்தாற்போல ஒருவரை யொருவர் தாக்கினர். ஏ : ஈற்றசை.

தேர் - ஓராழித்தேர். சுக்கிரீவன் சூரியன் குமாரன்; வாலி இந்திரன் குமாரன் ; (85) ; பால. திருவவதாரப் : 27. பாரிற்றிரியும் பனிமால் வரையன்ன ; இஃது இல்பொருளுவமை. இனி இந்திரனாற் சிறகறு படாமல் பாரிற் றிரியும் மலையன்ன திசையானை இரண்டென்ன எனக் கூட்டியும், பண்பு ஆர் மூரித் திசையானை யென இயைத்தும் பொருள் கொள்ளலும் ஆம்.

பி - ம். 1. ரிவையின்ன, ரவையன்ன, ரிவனின்ன, னவனன்ன னவ்வயி னின்ன.

3. பருமால் ; வரை யன்ன பண்பர் ; பண்பாம், பண்பாய், பண்பா ;

4. முட்டி னரால், முட்டி னர்கள், மோதி னரே. (45)

272. குன்ருேடு குன்ருெத் தனர்கோளரி கொற்ற வல்லே
றென்ருேடு சென்ருென் றெதிருற்றன வேயு மொத்தார்
நின்ருர் திரிந்தார் நெடுஞ்சாரி நிலந்தி ரிந்த
வன்ருேட் குயவன் றிரிமட்கலத் தாழி யென்ன.

குன்று ஓடு குன்று ஒத்தனர் - மலையோடு மலை எதிர்ந்தது போன்ற னர்; கொற்ற வல் ஏறு கோளரி - வெற்றியும் வலிமையும் அமைந்த ஆண் சிங்கங்கள், ஒன்ருேடு ஒன்று எதிர் சென்று உற்றனவேயும் - ஒன்றுடன் ஒன்று எதிரிட்டு நெருங்கித்தாக்கின போலவும், ஒத்தார் நின்ருர் - ஒத்திருந்து நின்றவர்களான அவ்வாலி சுக்கிரீவர்கள், நெடுஞ் சாரி திரிந்தார் - பெரியதான இடசாரி வலசாரியாகச் சுற்றித்திரிந்து போரிட்டனர்; வல் தோள் குயவன் திரி - தோள்வலி பெற்ற ஒரு குலாலன் சுற்றிவிட்ட, மண் கலத்து ஆழி அன்ன - மட்பாண்டத்தை வனையும் சக்கரமே போல, நிலம் திரிந்த - இந்தப் பூமியில் உள்ள பொருள்கள் யாவும் சுழல்வுற்று நிலை கலங்கின.

குன்ருேடு குன்று: வாலி சுக்கிரீவர்களுக்கு உவமை; 'பாரிற்றிரியும் பனிமால் வரையன்ன பண்டார்' (271) என்றமை காண்க, மட்கலத்தாழி சுற்றுதல்; 'குலான்மகன் முடுக்கி விட்ட மட்கலத் திகிரி'; (பால. மிதிலைக்: 13); 'கூட்டுற முடுக்கி விட்ட குயமகன் றிகிரி போல' (சீவக. 786). நிலம்: இடவாகுபெயர். சாரி - வட்டமாய் ஓடித் திரிகை; இது, சாரிகை எனவும் படும்; ஆரணிய. 37; சுந்தர. 803; உயுத்த. நிகும்பலைப்: 104.

பி - ம். 1. குன்ருேடு குன்றுற்றனர். 2. வேயு மொத்து.
3. நின்ரு றெதிர்ந்தார், நெடுஞ்சாரி நிலந்தி ரிந்தார்.
4. குயவன்றிணி, குயவன்றனி; தாழி மான. (46)

273. தோளோடு தோடேய்த் தலிற்ருென்னிலந் தாங்க லாற்ருத்
தாளோடு தாடேய்த் தலிற்றந்த தழற்பி றங்கல்
வாளோடு மின்னே டுவபோனெடு வானி னேடும்
கோளோடு கோளுற் றனவொத்தடர்த் தார்கொ தித்தார்.

(அவ்வாலி சுக்கிரீவர்கள்) தோள் ஓடு தோள் தேய்த்தலில் - ஒருவர் தோளோடு மற்ருெருவர் தோள் தாக்கித் உராய்வதினுலும், தொல் நிலம் தாங்கல் ஆற்ரு - பழமை யான இந்நிலவுலகம் தாங்க முடியாத, தாள் ஓடு தாள் தேய்த்தலின் - ஒருவர் பாதத்தோடு மற்

றொருவர் பாதம் தேய்ப்பதினாலும், தந்த - உண்டான, தழல் பிறங்கல் - நெருப்புத் தொகுதி, வாள் ஓடு மின் ஓடுவ போல் - ஒளியோடு மின்னல் ஓடுவன போலும், நெடு வானின் ஓடும் - பரந்து நீண்ட வானத்தில் விரைந்து செல்லும், கோள் ஓடு கோள் உற்றன ஒத்து - ஒரு கிரகத் தோடு மற்றொரு கிரகம் எதிருற்றுத் தாக்கின போலும், கொதித்தார் அடர்ந்தார் - கோபத்தால் கொதிப்புற்றுத் தாக்கிப் பொருதனர்.

அவ்வாலி சுக்கிரீவர் தம் தோளோடு தோளும் தாளோடு தாளும் தாக்குவதாலும், தேய்ப்புறுவதாலும் உண்டான நெருப்புப் பிழம்பு, வானில் மின்னோடுவ போலும், இரு கோள்கள் தாக்குவன போலும் ஆகிக் கொதித்து அடர்த்தனர் என்க. கோளொடு கோளுறுதல் கிரக யுத்தம் எனப்படும்; 'வெண் பொன் போருறு காலை' (புறநா. 389:4); 'ஆதி சான்ற மேதகு வேட்கையின், நாளுங் கோளும் மயங்கிய ஞாட் பின், மதியமும் ஞாயிறும் பொருவன போல' (பாரதம்) என்பன இங்கே அறியற்பாலன. நிலம் தாங்கலாற்றுமை : அவ்வாலி சுக்கிரீவர் தாள் கொண்டு தாளைத் தேய்க்கும் வலிதாங்ககில்லாது ; முன், 271 இல் பனிமால் வரை இரண்டிற்கும், மூரித் திசையானை இரண்டிற்கும் ஒப்புரைத்தமை போல, இங்கு, ஒன்றையொன்று தாக்கும் மின்னல் இரண்டிற்கும் கோளிரண்டுக்கும் அவ்வாலி சுக்கிரீவர் உவமையாக்கப் பெற்றனர். கொதித்தார் - முற்றெச்சம்.

பி - ம். 1. *தோளெற்றலிற் ; றுரணிதாங்க லாற்றுத்.*
2. *தாளெற்றலிற் ; தழற்பிறங்கல்.*
3. *னெடு வானி னூடு.* (47)

274. தந்தோள் வலிமிக் கவர்தாமொரு தாய்வ யிற்றின்
வந்தோர் மடமங் கைபொருட்டு மலைத லுற்றார்
சிந்தோ டரியுண்கட் டிலோத்தமை காதற் செற்ற
சுந்தோப சுந்தப் பெயர்த்தொல்லையி னேரு மொத்தார்.

தம் தோள் வலி மிக்கவர் - தமது புயவலிமை மிகுந்தவர்களும், தாம் ஒரு தாய் வயிற்றின் வந்தோர் - தாம் ஒரு தாய் வயிற்றிலிருந்து பிறந்தோர்களும், மட மங்கை பொருட்டு மலைதல் உற்றார் - ஓர் இளம் பெண் நிமித்தமாய்ப் போரிடத் தொடங்கியவர்களுமான அவ்வாலி சுக்கிரீவர், சிந்து ஓடு - கடல் தன் பெருமைக் குறைவால் பின்னிட்டு ஓடும், அரி - செவ்வரி படர்ந்த, உண்கண் - கடல் மை எழுதப்பெற்ற கண்களையுடைய, திலோத்தமை காதல் செற்ற -

திலோத்தமை என்னும் ஒரு தேவ மாதினிடங் கொண்ட காதல் காரண மாகப் பகைத்துப் போர் செய்த, சுந்த உபசுந்த பெயர் - சுந்தன் உப சுந்தன் என்னும் பெயர்களை யுடைய, தொல்லையினேரும் - பண்டை அசுரர்களையும், ஒத்தார் - ஒப்பாராயினர்.

மடமங்கை பொருட்டு: சுக்கிரீவன் மனைவியாகிய உருமை என் பாளை வாலி அபகரித்துக் கொண்டமை காரணமாக; வாலி உருமையை அபகரித்துக் கொண்டது; 145, 147, 330. இச் செய்யுளில் முதல் இரண்டு அடிகளும், வாலி சுக்கிரீவர்களுக்கும், சுந்தோபசுந்தர்களுக்கும் சிலேடையாக, அன்வயிக்கும்படி சொற்றொடர்கள் அமைத்துள்ள திறம் நோக்கற்பாலதாம்.

சுந்தோபசுந்தர் வரலாறு: சுந்தன், உபசுந்தன் எனும் இரு சகோதரர், இரணியகசிபு என்னும் அசுரன் மரபில் வந்த நிகும்பன் என்பானுடைய மைந்தர்கள், இவர்கள் பிரமதேவனைக் குறித்து அருந் தவம் செய்து, பல அரிய வரங்கள் பெற்று, அவற்றின் வலிமையால் தேவர்களை வருத்தி வரவே, தேவர்கள் வேண்டுகோட்படி, திருமால் விசு வகர்மனைக் கொண்டு திலோத்தமை என்னும் ஓர் அழகுள்ள தேவமா தைச் சிருட்டித்து இவர்களிடம் அனுப்பினர். அவ்வவுணர் இருவரும் அத்திலோத்தமை எழிலில் மயங்கி, அவளை அவ்விருவருங் காதலிக் கவே, அது கண்ட அம் மங்கை, 'உங்களில் யார் வலியுள்ளாரோ அவரையே மணப்பேன் என்றனள். அத்திலோத்தமையைப் பெறும் பொருட்டு அவ்விருவரும் தம் வலி காட்டிப் போர் புரிந்து அப்போரில் மடிந்தனர் என்பது வரலாறு.

இச் சரிதம் விரிவாக ஸ்ரீவியாஸ மகாபாரதம், ஆதிபருவம், இருநூற்று முப்பத்தாறுவது அத்தியாயத்தாலும், குறிப்பாக வில்லிபுத்தூ ராழ்வார் பாரதம் இந்திரப்பிரத்தச் சருக்கம், 43, 44 பாடல்களாலும் விளங்குவது காணலாம். திலோத்தமை அழகுள்ள பொருள்கள் ஒவ் வொன்றினின்றும் எள் அளவாக எடுத்துத் தொகுத்துச் செய்யப் பட்டவள் ஆதலின், அது காரணமாக வந்த பெயர். சிந்தோடு அரியுண்கண் என்பதற்குச் சிதறியோடும் அரியுண்கண் என்றும், கடல்போன்று பரந்த கண் என்று கொள்ளலும் ஆம்.

பி - ம். 1. வலிமிக்குநர், மிக்கனர்; தம்மொரு,
2. மலைய லுற்றார், மலைக்க லுற்றார்.
3. டரியொண்கட், டரிவாட்கட்.
4. தொல்லையி ருரு மொத்தார். (48)

275. கடலொன் றினெடொன் றுமலைக்கவுங் காவன் மேருத்
திடலொன் றினெடொன் றமர்செய்யவுஞ் சீற்ற மென்ப
துடல்கொண் டிரண்டாகி யுடற்றவுங் கண்டி லாதேம்
மிடலிங் கிவர்வெந் தொழிற்கொப்பன வேறு காணேம்.

கடல் ஒன்றினெடு ஒன்று - ஒரு கடல் மற்றொரு கடலோடு, மலைக்கவும் - எதிர்த்துப் போர் செய்யவும், காவல் மேரு திடல் - புவியைக் காக்கும் மேரு என்னும் மலை (இரண்டாகி), ஒன்றினெடு ஒன்று அமர் செய்யவும் - அவை ஒன்றினேடு ஒன்று எதிர்த்துப் போர் புரியவும், சீற்றம் என்பது - கோபம் என்ற குணம், இரண்டாகி உடல் கொண்டு - இரண்டு வடிவாய் உருவமைந்து, உடற்றவும் - ஒன்ருேடொன்று தாக்கி வருத்தவும், கண்டிலாதேம் - பார்த்திராத யாம், இங்கு - இவ்வுலகில், இவர் மிடல் வெம் தொழிற்கு - இந்த வாலி சுக்கிரீவரின் வலிய கொடிய போர்த்தொழிலுக்கு, ஒப்பன வேறு காணேம் - உவமையாக உள்ள வார்த்தைகள் வேறு அறியோம்.

வாலி, சுக்கிரீவர்களின் தோற்றத்துக்கு உவமைகள் கூறி, அவர்கள் செய்த போருக்கு உவமை கூற இயலவில்லை என்று ஆசிரியர் கூறிய நயம் ஓர்க. இங்கு ஒப்புமை கூறப்பெற்றவை இல்பொருளுவமைகள் ; மலைக்குப் பூதரம் என்ற பெயருண்மையால், காவன்மேரு என்னப்பட்டது ; மேரு மலைகளுள் பெருமை வாய்ந்ததாகலின் அதனைக் கூறியதாம்; இனி மேரு என்பதை மலை என்பதின் பொதுப்பெயராகவுங் கொள்ளலாம் ; திடல் - மேடு; இங்கு உயர்ந்த மேட்டுப்பாங்கான மலையைக் குறித்தது ; திடல் - மலை; உயுத்த. முதற் போர்ப் : 195 ; இது திடர் எனப் போலியாகவும் வழங்கும். உடற்றல் - வருத்துதல் ; 283; 'உண்ணின் றுடற்றும் பசி' (குறள். 13).

பி - ம். 3. கண்டி லேம்நோர், காண்கி லாதேம், காண்கிலாதோம், கண்டி லாதே.

4. மிடலங்கவர், மிடல் கொண்டவர் ; கொப்பனவை, கொப்புமை, கொப்பமை, கொப்புவே றுண்மை காணேம் ; காணேம். (49)

276. ஊகங் களின யகர்வெங்க ணுமிழ்ந்த தீயால்
மேகங் கள்கரிந் தனவெற்பு மெரிந்த திக்கின்
நாகங் களடுங் கினநானில முங்கு லேந்த
மாகங் களைநண்ணிய விண்ணவர் போய்ம றைந்தார்.

ஊகங்களின் நாயகர் - வானரர்களின் தலைவர்களான அவ்வாலி சுக்கிரீவர்களுடைய, வெம் கண் உமிழ்ந்த தீயால் - உக்கிரமான கண்கள் சொரிந்த நெருப்பால், மேகங்கள் கரிந்தன - வானிலிருந்த மேகங்கள் எரிந்து கருகிப் போயின; வெற்பும் எரிந்த - மலைகளும் தீப் பற்றி எரிந்தன; திக்கின் நாகங்கள் நடுங்கின - திக்கயங்கள் (அஞ்சி) நடுக்க முற்றன; நானிலமும் குலைந்த - பூமியின் நால் வகைப்பட்ட நிலங்களும் தம் நிலைமை கெட்டழிந்தன; மாகங்களை நண்ணிய விண்ணவர் - வானுலகைச் சார்ந்து வாழ்ந்த வானவர்களும், போய் மறைந்தார் - வேறு ஒதுக்கிடங்களிற் போய் ஒளிந்து கொண்டனர்.

ஊகம் - வானரம், (திவா. பிங்); நானிலம் என்ற சொல் பொதுவாகப் பூமி என வழங்கப் பெறுமெனினும், குலைந்த என்ற பன்மை வினை கொண்டமையால் நால் வகையான நிலங்கள் எனப் பொருள் கொள்ளப்பட்டது, நிலம் நால்வகை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன. மாகங்களை நண்ணிய விண்ணவர் போய் மறைந்தார்: வாலி சுக்கிரீவர் புரியும் போரினைக் காண வானவெளியில் வந்து நின்ற தேவர்கள், அப்போரின் கொடுமையைக் காண அஞ்சினவர்களாய்த் தாம் வாழும் வானுலகங்களையடைந்து அங்கு ஒளிந்து கொண்டனர் எனலும் ஒன்றும். மாகங்களை என்று பன்மையிற் கூறியது, வானுலகம் பலவாதலின். நண்ணிய மறைந்தார், நண்ணியவர்களாய் அல்லது நண்ணும் பொருட்டு மறைந்தனர் எனக் கொள்ளலும் ஏற்கும். இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி.

பி - ம். 1. வெங்க ணிழந்த தீயான்,
2. மேகங் களெரிந்த, கரிந்தன வேலைக ணெரிந்த;
3. குலைந்து. 4. மாகங்களி னண்ணிய. (50)

277. விண்மே லினரோ நெடுவெற்பின் முகட்டி னரோ
மண்மே லினரோ புறமாதிர வீதி யாரோ
கண்மே லினரோ வெனயாவருங் காண நின்றார்
புண்மே லிரத்தம் பொடிப்பக்கடிப் பார்பு டைப்பார்.

(அவ்வாலி சுக்கிரீவர்). விண்மே லினரோ - வானுலகின் மேல் உள்ளாரோ? நெடு வெற்பின் முகட்டினரோ - நீண்டுயர்ந்த மலைச்

சிகரங்களின் மேலுள்ளாரோ, மண்மேலினரோ - அல்லது தரைமீது தான் உள்ளாரோ? புறம் மாதிரம் வீதியாரோ - (அன்றி) இவ்வுலகங் களுக்கு அப்பால் உள்ள திசைகளின் எல்லை வீதி வழியில் உள்ளா ரோ? கண் மேலினரோ - அல்லது நமது கண் செல்லும் வழியே செல்லுகின்றாரோ? என - என்று பலவிதமாகச் சொல்லி, யாவரும் - எல்லோரும், காண - காணும்படியாக, நின்றார் - எங்கும் திரிந்து நின்ற வர்களாய் புண் மேல் இரத்தம் பொடிப்ப - அவர்கள் உடல்களில் புண்கள் பல உண்டாகி அவற்றின் மேல் இரத்தம் தோன்றி எழ, கடிப்பார் புடைப்பார் - ஒருவரையொருவர் கடித்தும் அடித்தும் போர் புரிந்தனர்.

அவ்வாலி சுக்கிரீவர் - விண் மீதும், மலைகண் மீதும், தரை மீதும், எல்லைப்புற வீதிகளினிடத்தும் சென்று, பொருதனர் என்பதும், அவ் வாறு ஓரிடத்தில் இராமல் அன்னோர் பல இடங்களிலும் சுழன்று திரிந்து பொருதமையால், பார்த்தோர் கண்கள் நோக்குமிட மெல்லாம் காணப்பட்டன ராதலின், கண் மேலினரோ என்று ஐயுறுமாறு இருந் தனர் என்பதும் கூறப்பெற்றது.

மாதிர வீதி - ஆகாய வீதியும் ஆம்; 'நானுவிதமா னளிமாதிர வீதியோடி' (பால. நகரப். 70.)

பி - ம். 1. விண்மே வினரோ; நடுவெற்பின்.
2. பிறமாதிர. 3. எண்மே வினரோ.
4. கடித்தார், புடைத்தார்; கடித்தார் புரண்டார். (51)

278. ஏழொத் துலகந் திசையெட்டொ டிரண்டு முட்டி
ஆழிக் கிளரார் கலிக்கைம்மடங் கார்ப்பி னோதை
பாழித் தடந்தோ ளினுமார்பினுங் கைகள் பாய
ஊழிக் கிளர்கா ரிடியொத்தது குத்து மோதை.

ஆர்ப்பின் ஓதை - அவர்கள் இட்ட கர்ச்சனையின் ஓசையானது, உலகம் ஏழ் ஒத்து - ஏழுலகங்களோடு கூடி, திசை - (அவற்றை யடுத் துள்ள) திசைகள், எட்டு ஒடு இரண்டும் - பத்தும், முட்டி - போய்த் தாக்கி, ஆழி - கடல்களில், கிளர் - கொந்தளித்து எழுகின்ற, ஆர் கலிக்கு - யுக முடிவில் எழும் பேரொலிக்கு, ஐம்மடங்கு - ஐந்து மடங்கு அதிகப்பட்டதாய் இருந்தது; பாழி தடம் தோளினும் - வலிய பெரிய தோள்களிலும், மார்பினும் - மார்புகளிலும், கைகள் பாய - கைகள் விரைந்து செல்லும்படி, குத்தும் ஓதை - அவர்கள் ஒருவரை

யொருவர் குத்திய ஓசையானது, ஊழி கிளர் கார் இடி ஒத்தது - யுக முடிவில் எழுகின்ற மேகங்களின் இடி முழக்கத்தை ஒத்திருந்தது.

ஆர்ப்பு, குத்து இவற்ருல் எழுந்த ஓசைகளின் கடுமை இச் செய்யுளில் விளக்கப் பெற்றது. வாலி சுக்கிரீவர் செய்த கர்ச்சனை ஏழு உலகங்களோடு பத்துத் திசைகளிலும் சென்று தாக்கிக் கடல் களின் கர்ச்சனைக்கு ஐம்மடங்கு அதிகமாக ஆயிற்று. அவர்கள் ஒருவரை யொருவர் குத்தியதால் உண்டான அவ்வோசை, ஊழிக் கால மேகங்களின் இடி முழக்கத்தை ஒத்திருந்தது என்பதாம். ஆர்கலி: வினைத்தொகை. திசைகள் பத்தாவன; எட்டுத் திசைகளுடன் ஆகாயமும் பாதலமும் சேர்ந்தவை என்க; 'ஆசைபத்துக்கு மின்றே பலியீவது பார்த்தி யென்ருன்'. (ஆரணிப. 910.)

பி - ம். 1. *ஏழொத் தடனுந்திசை, தடன்வன்றிசை, தடனுற்றிசை, தட னுர்திசை ஏழொக் கடற்றிசை; இரண்டுமட்டும், முட்ட, எட்டோடி ரண்டு முட்ட,*

2. *ஆழுற்ற காலத்தி னுர்ப்பவ ரார்க்கு மோதை; ஆர்ப்பி னேசை.*

3. *வாழித் தடந்தோளினும் மார்பினுங் கைக ளாய;*

4. *காரிடிப் பொத்தது, காருரு மொத்தது, காருரு மொத்தன; ஒத்ததக் குத்து மோசை, குத்தி னேசை.* (52)

279. வெவ்வா யெயிற்ருன் மிடல்வீரர் கடிப்ப மீச்சென்
றவ்வா யெழுசோ ரிகளாசைக டோறும் வீச
எவ்வா யுமெழுந் தகொழுஞ்சுடர் மீன்கள் யாவும்
செவ்வா யைநிகர்த் தனசெக்கரை யொத்த மேகம்.

மிடல் வீரர் - வலிய வீரர்களான அவ்வாலி சுக்கிரீவர், வாய் வெம் எயிற்ருல் - தம் வாயில் உள்ள கொடிய பற்களால், கடிப்ப - ஒருவரை யொருவர் கடிக்க, அ வாய் எழு சோரி - கடித்த அவ்விடங் களில் எழுந்த இரத்தப் பெருக்குகள், மீ சென்று - மேலே சென்று, ஆசைகள் தோறும் வீச - திசைகளெங்கும் போய்ப் பரவிப்படிய, எ வாயும் எழுந்த - எவ்வெவ்விடங்களிலும் உதித்து மேற்ருேன்றிய, கொழும் சுடர் மீன்கள் யாவும் - செழித்த ஒளியோடு கூடிய விண்மீன்கள் எல்லாம், செவ்வாயை நிகர்த்தன - (ஒவ்வொன்றும் தனித்தனியே) செவ்வாய் என்னும் கோளைப்போலச் செந்நிறமாயின; மேகம் - மேகங்க ளெல்லாம், செக்கரை ஒத்த - செவ்வானத்தை ஒத்து விளங்கின.

இதில் அவ்வாலி சுக்கிரீவர் உடல்களிலிருந்து எழுந்து பரந்த சோரியின் மிகுதி கூறப் பெற்றது. சுடர் மீன் - ஒளி வீசும் மீன்;

அதாவது நட்சத்திரம்; மீன்; சோரி என்பன முதனிலை திரிந்த தொழிற் பெயர்கள். மின், சொரி என்பன பகுதிகள். செக்கர் - செவ்வானம், இது செக்கல் என்ற சொல்லின் ஈற்றுப் போலி; பின் குணவாகு பெயராயிற்று; பந்தல் - பந்தர் என்பதுபோல.

பி - ம். 1. கடிப்பல் மீச்சென்(று); மேச்சென்(று).
2. தொறுந் தாரைகள்; எவ்வாய் தொறுந்தாரைகள். அவ்வாய் தொறுமெழு சோரியின்; யெழுதாரைகள்.
3. எவ்வாயும் பாய்தலிற் கொழுஞ்சுடர், மீன்களெல்லாம்.
4. நிகர்த்தது செக்கரை. (53)

280. வெந்த வல்லிரும் பிடைநெடுங் கூடங்கள் வீழச்
சிந்தி யெங்கணுஞ் சிதறுவ போற்பொறி தெறிப்ப
இந்தி ரன்மகன் புயங்களு மிரவிசே யுரனும்
சந்த வன்னெடுந் தடக்கைக டாக்கலிற் றகர்வ.

வெந்த வல் இரும்பு இடை - (உலையிலிட்டுப்) பழுக்கக் காய்ச்சிய வலிய இரும்பின் மீது, நெடு கூடங்கள் வீழ - பெரிய சம்மட்டிகள் தாக்கி (மாறிமாறி) வீழ்வதால், பொறி தெறிப்ப எங்கணும் சிந்தி சிதறுவபோல் - நாற்புறமும் நெருப்புப் பொறிகள் தெறிக்கும்படி சிந்திச் சிதறி வீழ்வன போல, இந்திரன் மகன் புயங்களும்-இந்திர குமாரனான வாலியின் தோள்களும், இரவி சேய் உரனும் - சூரியன் மகனான சுக்கிரீவன் மார்பும், சந்தம் வல் நெடும் தடம் கைகள் தாக்கலில் - அழகிய வலிய நீண்ட பருத்த கைகள் கொண்டு (ஒருவரையொருவர்) அறைவதால், தகர்வ - உடைந்து சிதறுவனவாயின.

உரன் - உரம் என்பதன் போலி. வெந்த வல் இரும்பு - நெருப்பிலிட்டுக் காய்ச்சியதால் வெந்தது போல நெகிழ்வுற்ற வலிய இரும்பு. கூடம் - சம்மட்டி. (பிங்.) 'தகரா கொல்லுலைக் கூடத்தினால்'; (நீதி நெறி விளக்கம் : 14); பால. எழுச்சி, 38. கூடங்கள் எனப் பன்மையாற் கூறியது. கொல்லர் இருவர் எதிராக நின்று ஒவ்வொருவரும் ஒரு சம்மட்டி கொண்டு மாறி மாறி யடிப்பராதலின். இங்கு வாலி சுக்கிரீவர்களுடைய கைகள் கூடங்களாகவும், அன்னோர் மார்பும் தோள்களும், அடைகற்களாகவும் கூறப் பெற்றன என்க. சுக்கிரீவனும் வாலியும் ஒருவர்க்கொருவர் கைக்கொண்டு தாக்க, அன்னோர்

தோள்களினின்றும் மார்புகளினின்றும் நெருப்புப் பொறிகள் எங்கும் சிதறி விழுந்தன என்பதாம்.

பி - ம். 1. கூடங்கள் வீழ்ப்ப. 2. பொறி தெறித்தன்ன.
3. இந்திரன் மகனுரங்களு.
4. தந்தம் மென்னெடுந், சந்தமென்னெடுந். (54)

281. உரத்தி னுன்மடுத் துந்துவர் பாதமிட் டுதைப்பர்
கரத்தி னுல்விசைத் தெற்றுவர் கடிப்பர்நின் றிடிப்பர்
மரத்தி னுலடித் துரப்புவர் பொருப்பினம் வாங்கிச்
சிரத்தின் மேலெறிந் தொறுக்குவர் தெழிப்பர்தீ விழிப்பர்.

(அவ்விருவரும் ஒருவரை யொருவர்) உரத்திஞல் மடுத்து உந்துவர் - தத்தம் மார்பினல் தாக்கித் தள்ளுவார்கள்; பாதம் இட்டு உதைப்பர் - பாதத்தைத் தூக்கி நீட்டி உதைப்பார்கள்; கரத்திஞல் விசைத்து எற்றுவர் - கைகளால் வேகமாய்த் தாக்குவார்கள்; கடிப்பர் - வாயிஞல் கடிப்பார்கள்; நின்று இடிப்பர் - ஒருவரையொருவர் எதிர் நின்று இடிப்பார்கள்; மரத்திஞல் அடித்து உரப்புவர் - மரங்களைக் கொண்டு அவற்ருல் ஒருவரையொருவர் அடித்து அதட்டிக் கூச்சலிடுவார்கள்; பொருப்பு இனம் வாங்கி - மலைக்கூட்டங்களைப் பெயர்த்து, சிரத்தின் மேல் எறிந்து - தலை மேல் வீசி, ஒறுக்குவர் - தண்டிப்பர்; தெழிப்பர் - முழக்கமிடுவர்; தீ விழிப்பர் - (சினத்திஞல்) நெருப்புப் போல விழித்து நோக்குவர்.

உரப்புதல்: அதட்டி அச்சுறுத்தலும் ஆம்; சுந்தர. 466, 479, 481; இஃது உரற்றுதல் எனவும் வழங்கும். ஒறுக்குதல் - தண்டித்தல்.

பி - ம். 1. னெடுத்துந்துவர் பாதமிட் டெறிவர்.
2. கரத்தி னுற்பிசைந், விசைந். 3. மரத்தினு லடர்த்.
4. லெறிந் தறுக்குவர்; தெறிப்பர். (55)

282. எடுப்பர் பற்றியுற் றொருவரை யொருவர்விட் டெறிவர்
கொடுப்பர் வந்துரங் குத்துவர் கைத்தலங் குளிப்பக்
கடுப்பி னிற்பெருங் கறங்கெனச் சாரிகை பிறங்கத்
தடுப்பர் பின்றுவ ரொன்றுவர் தழுவுவர் விழுவர்.

ஒருவரை ஒருவர் பற்றி உற்று - ஒருவரையொருவர் பிடித்துக் கொண்டு, எடுப்பர் - எடுத்து, விட்டு எறிவர் - வீசி எறிவார்; உரம் கொடுப்பர் வந்து - தாமே வந்து, தம் மார்பைக் காட்டுவர்; கை தலம் குளிப்ப - தன் கை முட்டி உள் புதையும்படி, குத்துவர் - எதிரியின்

மார்பில் குத்துவார் ; கடுப்பினில் - விரைவாக, பெரு கறங்கு என - பெரிய காற்றாடி போல, சாரிகை பிறங்க - இடசாரி வலசாரி முறைகள் விளங்க, தடுப்பர் - பாய்ந்து ஒருவரையொருவர் மேற் செல்ல விடாமல் தடுப்பார்கள்; பின்றுவர் - கையில் அகப்படாமல் பின் வாங்கிக் கொள்வர் ; ஒன்றுவர் தழுவுவர் விழுவர் - இருவரும் ஒன்றி நிற்பர்; தழுவிக்கொள்வர் ; கீழே விழுவார்.

கறங்கு - காற்றாடி ; அயோத். கிளைகண்டு: 58 ; சுந்தர. 803 ; உயுத்த: கும்பகருண : 161. பின்றுதல்-பின்னிட்டுத் தாக்குதலும் ஆம். 'பின்றுவர் - பிணங்குவர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. எடுப்பர் மற்றொருவர் ; எடுப்பர் பற்றி மறம்.
2. குத்துவர் கரதலங் குழிப்ப, கைத்துணை குளிப்பக்.
3. பெருஞ் சாரிகை கறங்கெனப் பிறங்கத் ; சாரிகை திரிவர்.
4. ரொன்றுவர் பின்றுவர் ; பின்னுவர் ; விழுவார், (56)

283. வாலி னாலுரம் வரிந்தனர் நெரிந்துக வலிப்பர்
காலி னானெடுங் கால்பிடித் துடற்றுவர் கழல்வர்
வேலி னாலுற வெறிந்தன விறல்வலி யுகிரால்
தோலி னாக்கைக ணெடுவரை முழையெனத் தொளைப்பர்.

வாலினால் உரம் வரிந்தனர் - ஒருவரை யொருவர் தம் வாலினால் மார்பைச் சுற்றிப் பிணித்து, நெரிந்து உக - உடல் நெரிபட்டுச் சிந்த, வலிப்பர் - இழுப்பர் ; காலினால் நெடு கால் பிடித்து உடற்றுவர் - தம் கால்களால் மற்றவர் கால்களை மடக்கிப் பிடித்து இழுத்து வருத்துவார் ; கழல்வர் - பின் அப்பிடிப்பினின்றும் கழன்று தப்பித்துக் கொள்வர் ; வேலினால் உற எறிந்தன - வேலால் நன்றாய்ப் போய் உடலிற் பதியுமாறு வீசி எறிந்தாற் போல, விறல் வலி உகிரால் - மிக்க வலியுடைய தம் நகங்களால், தோலின் ஆக்கைகள் - தோலினால் மூடுண்ட அன்னோர் உடல்களை, நெடு வரை முழை என - பெரிய மலைகளின் குகைகளைப் போல, தொளைப்பர் - ஆழமாகத் துளைப்பார்கள்.

எறிந்தன (எறிந்தது + அன) - எறிந்தது போல ; இது தொகுத்தல் விகாரம். உகிருக்கு, வேல்.

பி - ம். 1. லுரம் வரிகுவர் ; வலிந்தனர், வலிகுவர், வரிந்தன தெரிந்துக ; வலித்தனர் நெரிந்துக.
2. நெடுங்கால் பிணித்து ; காலினாற்றம தடலொடிந் நிடக்கடிது தைப்பர் ; கால்மடித் துடற்றுவர்.
3. வேலினு லிறவெறிந்தென ; விறல் வலியுகிரோம்.
4, தோலி னோடுடனெடு, தோலி னோடுரன், தோலி னாலும். (57)

284. மண்ண கத்தன மலைகளு மரங்களு மற்றும்
கண்ண கத்தினிற் றோன்றிய யாவையுங் கையால்
எண்ண கப்பறித் தெறிதலி னெற்றலி னிற்ற
விண்ண கத்தினை மறைத்தன மறிகடல் வீழ்ந்த.

மண் அகத்தன - பூமியிடமாக உள்ள, மலைகளும் - மலைகளையும், மரங்களும்-மரங்களையும், மற்றும்-மேலும், கண் அகத்தினில் தோன்றிய- கண்களிடமாகத் தென்பட்ட, யாவையும் - எல்லாப் பொருள்களையும், கையால் - அவர்கள் இருவரும் தத்தம் கைகளால், எண் நக பறித்து - எண்களை இழித்து நகை செய்யுமாறு பலவாகப் பறித்தெடுத்து, எறிதலில் - ஒருவர் மேலொருவர் வீசி எறிதலாலும், எற்றலில் - அவற்றைக் கைக்கொண்டு வீசித் தாக்கி அடித்தலாலும், இற்ற - ஒடிந்து சிதறிய அவை, விண்ணகத்தினை - வானமண்டலத்தை, மறைத்தன - (உலகினோர்) காண முடியாதபடி மறைத்தனவும், மறிகடல் வீழ்ந்த - மடங்கி வீழும் (அலைகளையுடைய) கடலில் வந்து வீழ்ந்தனவுமாயின.

எண்ணக (எண் + நக) - எண்ணிக்கை அளவிற் குறைந்தது என்று அதை நகும்படியாக அதனின் மேம்பட்ட அளவாக. இற்ற, மறைத்தன : இவை வினையாலணையும் பெயர்கள். இற்ற என்பதை முற்றெச்சமாகவும் கொள்வர் ; இறு, பகுதி.

பி - ம். 1. மண்ணகத் தனைமலைகளும் ; மரங்களும் மலைகளும்.
2. தோன்றி யாவையும்; கரத்தால்.
3. எண்ணு கப்பறித், எண்ண றப்பறித், எண்ணி றப்பறித்; தெற்ற லினிற்றன யாவும்.
4. விண்ண கத்தையும்; வீழ்வ, வீழ்ந்து. (58)

285. வெருவிச் சாய்ந்தனர் விண்ணவர் வேறென்னை விளம்பல்
ஒருவர்க் காண்டம ரொருவருந் தோற்றில ருடன்று
செருவிற் றுய்த்தலிற் செங்கனல் வெண்மயிர்ச் செல்ல
முரிபுற் கானிடை யெரிபரந் தனவென முனைவார்.

ஆண்டு அமர் - அவ்விடம் நிகழ்ந்த அப்போரில், ஒருவரும் ஒருவர்க்கு தோற்றிலர் - ஒருவரும் மற்றொருவர்க்குத் தோல்வி யடையாதவராய், உடன்று - கடுமையாய் எதிர்த்து, செருவில் துய்த்தலில் - போரில் மூழ்கி ஈடுபட்டிருந்ததினால், செம் கனல்-(உண்டான) செம்மையான கோபத்தீ, வெண் மயிர் செல்ல - அன்னோர் வெண்ணிற உரோமக் கால்களின் வழியே வெளிப்பட்டுச் செல்ல, (அது) முரி புல் கான்

இடை - உலர்ந்த புற்கள் அடர்ந்த காட்டினிடத்து, எரி பரந்தன என - நெருப்பு பரவியது என்று சொல்லும்படியான ஒரு தோற்றம் உண்டாக, முனைவார்-போர்புரி வாராயினர் ; விண்ணவர் - (அந்நிலை கண்ட) தேவர்கள், வெருவி சாய்ந்தனர் அச்சமுற்று நிலை தளர்ந்து வீழ்ந்தனர் ; வேறு விளம்பல் என்னை - (அப் போரின் கடுமையை) அல்லது நிகழ்ச்சிகளைக் குறித்து மற்றும் கூற என்ன உள்ளது ?

உடற்றல் - வருத்துதல் ; 283. துய்த்தல் - அனுபவித்தல் ; இங்கு முழு உணர்ச்சியோடு ஈடுபட்டதைக் குறித்தது செங்கனல், செம்மை வெகுளி மேற்றுதலின் கோபத்தீ எனக் கொள்ளப்பட்டது; செந்நிறமான தீ என்னலும் ஆம். செங்கனல் வெண் மயிர்ச்செல்ல - கோபத்தால் எழுந்த சிவந்த தீ அன்னோர் உடலில் அடர்ந்த வெண் மயிர்த் தொகுதிகளிற் போய்ப்பரவ என்னலும் அமையும்; வானரர்களுக்கு உடலில் வெண் மயிர் அடர்ந்திருத்தலை இங்கு முரிபுற்கானுக்கு உவமித்தது, காய்ந்த புல் வெண்ணிறமாய் இருக்கும் ஆதலின் : கான், என்றது, அடர்த்தியையும் மிகுதியையும் குறித்தபடி. செங்கனல் வெண் மயிர்ச் செல்ல ; இது முரண்தொடை

பி - ம். 1. *வெருவிச் சார்ந்தனர்; வேறென்ன விளம்பில், வேறென விளம்பில்.*

2. *ஒருவர்க் காரம ரொருவருந், ஒருவர்க் கண்டவ ரிருவ ரென் றுணர்கிலர், ஒருவர்க் கான்றவ ரொருவருந்; தோற்றிலா ருடன்று ; தோற்றில ருடலஞ்.*

3. *செருவிற் றேய்த்தலிற்; செங்கதிர் வெம்மையிற் செல்ல ; செங் கனல் வெம்மையிற் செல்ல, செங்கனல் வெண்மையிற் செல்ல.*

4. *முரிபுற் கான்வரை ; காய்வரை, கான்முறை ; முனைப்பார், முனைப்பார் ; முரிபுற் கான்வரை பெரிபடர்ந் தாலென முனைப் பார் ; கானிடை முழங்கெரி பரந்தன வெனமுழக்கா.* (59)

286. அன்ன தன்மைய ராற்றலி னமர்புரி பொழுதின்
வன்னெ டுந்தடந் திரள்புயத் தடுதிறல் வாலி
சொன்ன தம்பியைத் தும்பியை யரிதொலைத் தென்ன
கொன்ன கங்களிற் கரங்களிற் குலைந்துக மலைந்தான்.

அன்ன தன்மையர் - அப்படிப்பட்ட தன்மையுடையவரான அந்த வாலி சுக்கிரீவர், ஆற்றலின் - வலிமையோடு, அமர்புரி பொழுதின்-

போர் செய்த போதில், வல் நெடும் தடம் திரள் புயத்து - வலிய நீண்ட பெரிய பருத்த தோள்களையுடைய, அடு திறல் வாலி - பகை வரை அழிக்கும் வலிமை வாய்ந்த வாலியானவன், சொன்ன தம்பியை - தன்னைப் போருக்குக் கூவி அழைத்த அவன் தம்பியாகிய சுக்கிரீவனை, தும்பியை அரி தொலைத்து என்ன - யானையைச் சிங்கம் அழிப்பது போல, கொல் நகங்களில் - கொலை செய்யும் வலிமை வாய்ந்த தன் நகங்களாலும், கரங்களில் - கைகளாலும், குலைந்து உக - வலிதளர்ந்து விழும்படி, மலைந்தான் - போர் செய்தான்.

சொன்ன தம்பி; 'இடித்து உரப்பி வந்து போரெதிர்த்தியே லடர்ப்பென்' (238) என்று அறை கூவிச் சொன்ன தம்பியாகிய சுக்கிரீவன்; சொன்ன, மேற் சொன்ன எனலும் ஆம். தும்பி - யானை (பிங்); தும்பி என்னும் ஓர் உறுப்பைத் தன் துதிக்கையில் உடைமையால் வந்தபெயர்; தும்பிக்கை என்பதும் நோக்குக; இவ்வித உறுப்பு உடைமைபற்றி வண்டுக்கும் தும்பி எனும் பெயருண்மை காண்க. வாலிக்குச் சிங்கமும், சுக்கிரீவனுக்கு யானையும் உவமைகள்; இதனால் வாலியின் ஆற்றல் மிகுதி கூறப் பெற்றது. அரி, ஹரி என்ற வடசொல்லின் திரிபு; ஹரி: ஸம்ஹரிக்கும் அதாவது அழிக்கும் வலிமையுடையது என்னும் பொருளில் சிங்கத்தைக் குறிப்பது. தொலைத்தன்ன: இது தொகுத்தல் விகாரம்; முன் 283 இல், எறிந்தன என்றமை போல.

பி - ம். 1. *அன்ன தன்மையி னூற்ற வமர்பொரு பொழுதின்.*
3. *அன்ன தம்பியைத்.*
4. *கொன்ன கப்பெருங் கரங்களிற் குறைந்திட மலைத்தான்.*

இதன் பின் சில சுவடிகளில், கக்கினனுயிர் என்ற பாடல் உள்ளது.

இச் செய்யுளை அடுத்து, சில ஏட்டுப் பிரதிகளிலும், அச்சுப் பிரதிகளிலும் அடியிற் காணும் பாடல்கள் அதிகமாக உள்ளன. சிறந்தனவும், பழயனவுமான பல ஏடுகளில் அப்பாடல்கள் இல்லை. வான்மீகத்தில் உள்ளவாறு சுக்கிரீவனுக்குக் கொடிப் பூச் சூட்டி அனுப்பிய செய்தி இந் நூலில் இல்லாமை கண்டு, ஒருவர் இப்பாடல்களை யியற்றி இடைச்செருகலாகச் சேர்த்துள்ளார் என்றே கருத வேண்டியிருக்கிறது. மேலும், அவ்வதிகப் பாடல்களில் நிகழ்ச்சித் தொடர்பும் பொருந்தா திருத்தலும் இங்கு நோக்கத்தக்கதாகும். முதலில் சுக்கிரீவன் வாலியிடம் முதன் முறை அடிபட்டுத் தப்பியோடி இருசியமுக பர்வதமடைந்து இராமபிரானிடம் வந்து, அவர் வாலிமேல் அம்பு தூண்டாததைக் கூறி வருந்த, இராமபிரான், 'உங்கள் இருவருள்

வேற்றுமை தெரியாததாலும், ஒருகால் உன்மீது அம்பு பட்டால், அது விபரீதமாகுமே என்று அஞ்சியும் யான் அம்பு தூண்டவில்லை' யென்று ஆறுதல் கூறி, மறுமுறை ஒரு பூங்கொடியை அடையாளமாக இலக்கு வணக்கொண்டு அணிவித்து, நெடுந்தூரம் அவனுடன் வந்து, சுக்கிரீவனுல் வாலியைப் போருக்கு அழைக்கச் செய்ததாகக் கூறியுள்ள வான்மீகத்தின் போக்கை முற்றிலும் மாற்றி, நம் ஆசிரியர் கம்பநாடர், வழிநூல் என்ற முறைக்கேற்ப, தம் நூலில் வாலி சுக்கிரீவர் போரினை ஓரிடத்தில், ஒரே காலத்தில் நிகழ்ந்ததாக அமைத்துள்ளார். அன்றியும், சுக்கிரீவன் இராமபிரானைக் கண்டு குறை கூற வைப்பது அவனுடைய சீரிய தன்மைக்குப் பொருந்தாததாகு மென்பதும், இடையிலே போரை நிறுத்தி மற்றொன்று நிகழ்த்துவதைத் தடுப்பதால் போரின் தொடர்பு தடைப்படுதலாகிய குற்றம் இல்லாமையும் காண்க.

அதிகப் பாடல்கள் :

1. மலைந்த போதினைத் திரவிசே யையன்மா டணுகி
உலைந்த சிந்தையோ டுரைத்தன னுணங்கிட வுள்ளம்
குலைந்தி டேலுமை வேற்றுமை தெரிந்திலெங் கொடிப்பூ
மிலைந்து செல்கென விடுத்தன னெதிர்ந்தனன் மீட்டும்.

2. தயங்கு தாரகை நிரைதொடுத் தணிந்தன போல
வயங்கு சென்னியன் வயப்புலி வானவல் லேற்றோ
டுயங்கு மார்ப்பின னெல்லைவந் தடுதிறல் வாலி
பயங்கொ ளப்புடைத் தெற்றினன் குத்தினன் பலகால்.

3. அயிர்த்த சிந்தைய னந்தகன் குலைகுலைந் தஞ்சச்
செயிர்த்து நோக்கினன் சினத்தொடு சிறுநகை செய்யா
வயிர்த்த கையினுங் காலினுங் கதிர்மகன் மயங்க
உயிர்த்த லந்தொறும் புடைத்தன னடித்தன னுதைத்தான். (60)

287. கக்கி னுனுயி ருயிர்ப்பொடுஞ் செவிகளிற் கண்ணின்
உக்க தாங்கெரிப் படலையோ டுதிரத்தி னோதம்
திக்கு நோக்கினன் செங்கதி ரோன்மகன் செருக்கிப்
புக்கு மீக்கொடு நெருக்கின னிந்திரன் புதல்வன்.

ஆங்கு - அங்கிலையில், செம் கதிரோன் மகன் - சூரிய குமாரனுன சுக்கிரீவன், உயிர்ப்பொடும் - பெருமூச்சுடன், உயிர் கக்கினுன் - உயிரை வெளியே கக்கலானுன்; செவிகளில் கண்ணில் - அவன் காதுகளி னின்றும் கண்களினின்றும், உதிரத்தின் ஓதம் - இரத்த வெள்ளம், எரி படலை ஓடு - நெருப்புத் தொகுதியோடு, உக்கது - சிதறி வீழ்ந்தது;

திக்கு நோக்கினன் - (அதனால் அவன் செயலற்றவனாய்) எல்லாத் திக்குக்களையும் நோக்கினான்; இந்திரன் புதல்வன் - இந்திரகுமாரனான வாலி, செருக்கி - தருக்குற்று, மீ கொடு புக்கு - மேலும் அவனிடம் புகுந்து, நெருக்கினன் - அவனைத் தாக்கி வருத்தினான்.

எரிப்படலை - நெருப்பின் படர்ச்சி அல்லது பரப்பு. திக்கு நோக்கினன் - தனக்குக் கதி அல்லது தஞ்சமான இராமபிரானை நோக்கினன் என்னலு மேற்கும். மீக்கொடுபுக்கு - மேலெழுந்து புகுந்து என்றும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. *கக்கினன் றனதுயிர்ப் பொடுஞ், கக்கின னுயிருயர்ப் பொடுஞ்;*
2. *டுதிரத்தி னெழுக்கம்.*
3. *மீக்கொள, மீக்கொண்டு,* (61)

இராகவன் வாலிமீது அம்பு விடுதல்

288. எடுத்துப் பாரிடை யெற்றுவென் பற்றியென் றிளவல்
கடித்த லத்தினுங் கழுத்தினுந் தன்னிரு கரங்கள்
மடுத்து மீக்கொண்ட வாலிமேற் கோலொன்று வாங்கித்
தொடுத்து நாணொடு தோளுறத் திராகவன் றுரந்தான்.

பற்றி எடுத்து பார் இடை எற்றுவென் என்று - பிடித்து எடுத்துத் தரையோடு மோதித் தாக்குவேன் என்று, இளவல் - தன் தம்பியாகிய சுக்கிரீவனை, கடி தலத்தினும் - இடையிலும், கழுத்தினும் - கழுத்திலும், தன் இரு கரங்கள் மடுத்து - தனது இருகைகளையும் சேர்த்துப் பிணைத்து, மீ கொண்ட - அச்சுக்கிரீவனை மேலே தூக்கிக்கொண்ட, வாலி மேல் - வாலியின்மீது, இராகவன் - இராமபிரான், கோல் ஒன்று வாங்கி - (தன் அம்புப்புட்டிலிலிருந்து) ஓர் அம்பை எடுத்து, தொடுத்து - வில்லில் பூட்டி, நாண் ஒடு தோள் உறுத்து - வில்நாண் தன் தோளை உற இழுத்துப் பிடித்து, துரந்தான் - தூண்டி விட்டான்,

இளவல் - தம்பி; அல் - பெயர்விகுதி. கடிதலம் என்பது எதுகை நோக்கி, தகரவொற்று இரட்டித்தது; மடுத்தல் - புகுத்திச் செலுத்தலும் ஆம், கோல் - அம்பு; 'வேழத்திற் பட்டுருவுங் கோற்பஞ்சிற் பாயாது'. (நல்வழி. 34); ''இச்சிலையுதைத்த கோற் கிலக்கம் யாதென்பார்'' (பால. கார்முகப். 9;) 'கோல்வாள் சாபங்கொண்ட கரத்தாள்; (சுந்தர. 173).

செய்யுள்கள் 271-285 வரை வாலி சுக்கிரீவர்கள் ஒத்த வலிமையுடன் போர் புரிந்த பெருமைகளையும், செய்யுள்கள் 286-287 இல் சுக்கிரீவன் வலி தளர, வாலி மேலோங்கி வருவதையும், இச் செய்யுளில்

வாலி சுக்கிரீவனைக் கொல்லப்போகும் நேரம் வரை காத்திருந்து, தான் கொடுத்த வாக்கின்படி இராமபிரான் வாலிமீது அம்பு தூண்டியதையும், நாடக முறையில் நேரில் நாம் காண்பதுபோல ஆசிரியர் சித்திரித்துள்ள திறம் வியக்கத்தக்கதாகும். இக்காண்டத்திற்கே கதையின் திருப்புமுகம் இச் செய்யுளில் அமைந்துள்ளமையும் காண்க.

பி - ம். 1. *யெற்றுவாம் பற்றி, யெற்றுவம் பற்றி, பற்றின ளிளவல்.*
2. *கடிதடத்தினுங் கையினுர்.*
3. *மடுத்து மேக்கொண்ட வாலியைக்.*
4. *நாவெனுடுர் தோளிறுத்.* (62)

289. காரும் வார்சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேருஞ் சூசியிற் சென்றது நின்றதென் செப்ப
நீரு நீர்தரு நெருப்பும்வன் காற்றுங்கீழ் நிரந்த
பாருஞ் சார்வலி படைத்தவ னுரத்தையப் பகழி.

அ பகழி - இராமபிரான் எய்த அந்த அம்பு, நீரும் - தண்ணீரும், நீர் தரு நெருப்பும் - அந்நீரைத் தந்த நெருப்பும், வல் காற்றும் - அந்த நெருப்பை யுண்டாக்கிய வலிய காற்றும், கீழ் நிரந்த பாரும் - இந்த நீர் முதலிய காற்று ஈருகவுள்ளவற்றிற்குக் கீழே பரவியுள்ள பூமியும், (ஆகிய இந்நான்கு பூதங்களும்,) சார் - அடைந்த, வலி படைத்தவன் - வலிமை பெற்றவனுன வாலியின், உரத்தை - மார்பினுள், காரும் வார் சுவை - முதிர்ந்த மிக்க சுவையமைந்த, கதலியின் கனியினை - வாழைப் பழத்தை, கழிய சேரும் - முழுவதும் ஊடுருவி எளிதிற் செல்லும், சூசியின் - ஊசியைப்போல, சென்றது - விரைவிற் சென்றது, நின்றது என் செப்ப - மேலும் சொல்ல நின்றது என்ன உள்ளது? (ஒன்றும் இல்லை என்றபடி.)

பகழி - அம்பு ; (பிங்). நிரந்த - பரவியிருந்த. வாலி நீர், நெருப்பு, காற்று, புவி ஆகிய நான்கு பூதங்களின் வலி ஒரு சேரத் தன்னிடம் அமையப்பெற்றவன் ; 119, 344. கதலி, சூசி என்பன வட மொழிச் சொற்கள். கதலீ என்பது கதலி என்றும், சூசீ என்பது ஊசி யென்றும் தமிழிற் றிரிந்து வழங்கும். 'வாழைப்பழத்தில் ஊசி நுழைவதுபோல' என்பது ஒரு பழமொழி. முயற்சி இன்மையும், விரைவும் பொருந்தும் செயலுக்கு இஃது ஓர் உதாரணம். நான்கு பூதங்களின் வலிமை வாய்ந்த வாலி உரத்திலே இராமபாணம் வாழைப் பழத்தில் ஊசி நுழைவது போலச் சென்றது என்றமையால் அதன்

வலிமையையும் விரைவையும் விளக்கியதாகும் ; இது தாடகை மார்பில் இராமபிரான் தன் கன்னிப் போரில் தூண்டிய அம்பு,

'சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி ணுண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே.'
(பால. தாடகை வதைப் : 73)

என்று அருளிய பாசுரத்தை நினைப்பூட்டுகின்றது.

நீர்தரு நெருப்பு : 'தீமுரணிய நீரும்; ' (புறநா. 2-5); 'அக்நிராப' என்பது சுருதிவசனம். இது 'வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பு' என்ற (அயோத். 1) கடவுள் வாழ்த்துப் பாடலாலும் விளங்க வைத்தமை காண்க. 'நீர்தரு நெருப்பு - நீரைப்பெற்ற கனல்' என்பது பழைய வுரை.

பி - ம், 1. காருண் வார்சுவைக், காரின் வார்சிலைக்.
2. நின்றதென் செப்பின், நின்றதென செல்ல, நின்றதென் செவ்வி ; சேருஞ் சூசியிற் சென்றன ; நின்றன செறிந்த, சேரு மூசியிற் சேரு முள்ளெனச் ;
3. வெங்காற்றுங், கீழ்கியந்த, கீழ்கிமிர்ந்த, கீழ்கியர்ந்த. (63)

290. அலங்கு தோள்வலி யழிந்ததன் றம்பியை யருளான்
வலங்கொள் பாரிடை யெற்றுவா னுற்றபோர் வாலி
கலங்கி வல்விசைக் கால்கிளர்ந் தெறிவுறுங் கடைநாள்
விலங்கன் மேருவும் வேர்பறிந் தாலென வீழ்ந்தான்.

அலங்கு தோள் வலி அழிந்த - விளங்கும் தோள்வலிமை அழிந்து போன, தன் தம்பியை - தன் தம்பியாகிய சுக்கிரீவனை, அருளான் - (அவனிடஞ் சிறிதும்) இரக்கங்கொள்ளாதவனாகி, வலம் கொள் பார் இடை - வலிமையமைந்த தரையிடத்தே, எற்றுவான் உற்ற - மோதிக்கொல்லத் தொடங்கிய, போர் வாலி - போரிடுவதிற்சிறந்த வாலியானவன், கலங்கி - குழப்பமுற்று, வல் விசை கால் கிளர்ந்து - வலுவுடன் விரைந்து வீசும் காற்று மேற்கிளம்பி, எறிவு உறும் - யாவற்றையும் தாக்கி யெறியும், கடைநாள் - ஊழிக்காலத்து, விலங்கல் மேருவும் - மேருவென்னும் மலையும், வேர் பறிந்தால் என - வேர் பறிக்கப்பெற்று விழுந்தது போல, வீழ்ந்தான் - கீழே சாய்ந்து விழுந்தான்.

அலங்குதோள் - அசைந்தாடுந் தன்மையுடைய தோள் என்றும், தத்தளித்த தோள் என்றுங் கொள்ளலாம். மேருவும் ; உம்மை உயர்வு

சிறப்பினது; எஞ்சிய, எச்சவும்மையாகவும் கொள்ளலாம். நன் னெடுங்கால்; நல் என்பது நெடுமையின் மிகுதியைக் குறித்தபடி. கடை நாள்: உலகம் யாவும் அழியும் முடிவுக்காலம். அதாவது மகாப்பிரளயமென்னும் ஊழிக்காலம். இச் செய்யுளில் பல காட்சிகள் ஒருமிக்கத் தோன்றி நிகழ்ந்தமையாக அமைத்த கவித்திறம் நோக்குக. ஊழிக்கால், இராமபிரான் அம்பின் வலிமைக்கும் வேகத்துக்கும், மேரு, வாலியின் பருமனுக்கும் வலிமைக்கும் உவமைகள்.

பி - ம். 1. *யழிந்தன தம்பியை, யழிந்தவத் தம்பியை,*
2. *பாரிடையெற்ற வானுற்ற.*
3. *கலங்க நன்னெடுங், கலங்கு நன்னெடுங்; கடைக்கால்.*
4. *வேர்பறிந் தாமென.*

இதன்பின், சில பிரதிகளில்,

மோடு தெண்டிரை முரிதரக் கடன்மிக முழங்கி
ஈடு பேருல கிறந்துள தாமெனற் கெளிதோ
காடு மானெடு விலங்கலுங் கடந்தன கடலின்
ஊடு போதலுற் றுயர்ந்தன வொத்துள துதிரம்.

என்றொரு பாடல் அதிகமாகக் காணப்பெறுகின்றது. மற்றும் ஒரு பிரதியில், மேற்கூறிய 'அலங்கு தோள்வலி' என்ற பாடலுக்குப் பின் 'வாசத் தாரவன்' என்னும் 300 ஆவது எண்ணையுடைய பாடல் உள்ளது. இன்னும் சில பிரதிகளில் இச்செய்யுளின் பின்,

1. சையம் வேரொடு முருமுறச் சாய்ந்தெனச் சாய்ந்தான்
வைய மீதிடைக் கிடந்தபோ ரடுதிறல் வாலி
வெய்ய வன்றரு மதலையை மிடல்கொடு கவரும்
கைநெ கிழ்த்தன னெகிழ்ந்திலன் கடுங்கணை கவர்தல்.

2. வெற்றி வீரன தடுகணை யவன்மிட லுரத்தூ
டுற்ற தப்புறத் துருதமு னுறுவலிக் கரத்தால்
பற்றி வாலினுங் காலினும் பிணித்தகப் படுத்தான்
கொற்ற வெங்கொடு மறலியுஞ் சிரதலங் குலைந்தான்.

என்று இரு செய்யுள்களும் அதிகமாக உள்ளன. இவை, பழைய சிறந்த ஏட்டுப் பிரதிகளில் இல்லாமையால், இங்குப் பாட வரிசையில் தொடர் எண் தொடுத்துச் சேர்க்காமல், தனியே எடுத்துக் காட்டப் பட்டன. மேலும் இவ்வதிகப் பாடல்கள், அம்பால் அடியுண்ட வாலி யின் இயற்கைச் செயல்களைத் தடைப்படுத்திச் சுவை கெடுப்பதுங் காண்க. (64)

291. எழுந்து வான்முக டிடித்துகப் படுப்பலென் றிவரும்
உழுந்து பேர்வுழித் திசைதிரிந் திறுப்பலென் றுறுக்கும்
விழுந்து பாரினை வேரொடும் பறிப்பலென் றோரும்
அழுந்து மிச்சர மெய்தவ னார்கொலென் றயிர்க்கும்.

(அம்புபட்டுக் கீழே சாய்ந்து விழுந்த வாலி) எழுந்து - எழுந்திருந்து, 'வான் முகடு இடித்து - வானகத்தின் உச்சி முகட்டை இடித்து, உக படுப்பல் என்று - கீழே உதிர்ந்து விழச் செய்வேன்' என்று, இவரும் - மேலே எழுவான்; 'உழுந்து பேர்வு உழி - உழுந்து என்னும் ஒரு தானியம் நிலைபெயர்ந்து உருளும் நேர அளவில், திசை திரிந்து - நாற்றிசையுஞ் சுற்றித் திரிந்து, இறுப்பல் என்று - அத்திசைகளில் உள்ள அனைத்தையும் முறித்து அழிப்பேன்' என்று, உறுக்கும் - கோபிப் பான்; விழுந்து - கீழே பாய்ந்து, 'பாரினை - இப்புவியை, - வேர் ஓடும் பறிப்பல் என்று - வேரோடும் பறிப்பேன்', என்று ஓரும் - என்று கருது வான்; 'அழுந்தும் இ சரம் - (வலிய) என் மார்பில் ஆழ்ந்து பாய்ந்து செல்லும் இந்த அம்பை எய்தவன், ஆர்கொல் என்று - தூண்டியவன் யாரே ஆவன்?' என்று, அயிர்க்கும் - ஐயமேற் கொள்வான்.

வாலி தன்மீது வலுவில் அம்பு பாய்ந்த கோபத்தால் வான்முகட்டை இடித்தெறிவேன், என்பனபோன்ற சொற்களைத் தனக்குரிய பெரு மிதங்கொண்டு கூறினன் என்பதாம். இவர்தல் - மேலெழுதல். உழுந்து; இஃது இப்பொழுது உளுந்து எனத் திரிந்து வழங்கும். 'உழுந் திட விடமில்லை' (பால. எழுச்சிப் : 24); 'நெய்யொடு மயக்கிய உழுந்து நூற்றன்ன'; (ஐங்குறு. 211); 'உழுந்து பயறுப்பரிசி' (சீவக. 2486). உழுந்து விரைவில் உருண்டோடும் இயல்புடைமையால், நேரத்தின் மிகச் சிறு அளவிற்கு உழுந்துருளும்போழ்து என உவமிப்பது வழக்கம்; சுந்தர. 52, 1032 பாடல்களை நோக்குக.

இறுத்தல் - ஒடித்தல்; பால. கோலங்காண் : 6,39. உறுக்குதல் - கோபித்தல். 'காலனைத் தானலற வுறுக்கிய சேவடியான் கடவூருறை யுத்தமனே' (திருநாவுக். தேவாரம்). வாலி அயிர்த்தது, யாருக்கு அவ் வலியுண்டு என்று; இனி, சுக்கிரீவனுக்கு, 'இராமன் என்பவன் இன் னுயிர் நட்பமைந்து உன்னுயிர் கோடலுக்கு உடன் வந்தான்' என்று தாரை கூறியதற்கிணங்க (256) அவ்வாறு இராமபிரான் வந்து எய்தானோ? என்றும் அயிர்த்தான் என்க.

பி - ம். 1. தகப்படுப்ப.

2. பேர்வுறிஇத், பேருமுன், போகமுன், திசைதிரித் தொறுப்பல், திசை திரிந் தொறுப்பல், திசைதிறந் தொறுப்பல், திசை தெரிந் தறுப்பென், திரிந்தொறுப்பென்.

3. ஒழிந்த பாரினை ; பறிக்கென வெருளும், நிருக்கும், றுன்னும், றேங்கும்.

4. அழுந்த விச்சரம், றயிர்ப்பான். (65)

292\. எற்றுங் கையினை நிலத்தொடு மெரிப்பொறி பிறக்கச்
சுற்று நோக்குறுஞ் சுடுசரத் தைத்துணைக் கரத்தால்
பற்றி வாலினும் காலினுங் பல்லினும் பறிப்பான்
உற்றொ ணுமையி னுலைவுறு மலையென வுருளும்.

(மேலும்), கையினை நிலத்தொடு எற்றும் - வாலி தன் கைகளைத் தரையோடு மோதுவான் ; எரி பொறி பிறக்க சுற்றும் நோக்குறும் - நெருப்புப் பொறிகள் எழும்படி நாற்புறமும் சுற்றிப்பார்ப்பான் ; சுடு சரத்தை - சுடுகின்ற அக்கொடிய அம்பை, துணை கரத்தால் பற்றி - தன்னிருகைகளாலும் பிடித்து, வாலினும் காலினும் பல்லினும் - தன் வாலாலும் கால்களாலும் பற்களாலும், பறிப்பான் - பிணைத்துப் பறிப் பான் ; உற்று ஒணுமையின் - அவ்வாறு செய்தும் அது பறிக்க முடியாமையால், உலைவு உறும் - வருந்துவான் ; மலையென உருளும் - (பின்) மலைபுரள்வது போலத் தரையிற் கிடந்து உருள்வான்.

இச் செய்யுளில் அம்பு பட்ட நிலையில் வாலி அடைந்த பல வகைத் துயரச் செயல்கள் குறிக்கப்பெற்றன. பறிப்பான், இதனைப் பறிக்கும் பொருட்டு என எச்சப்பொருளிலுங் கொள்ளலாம். சுடுசரம் - நெருப் புப்போல் உட்புகுந்து எரிக்கும் அம்பு; பால. தாடகைவதைப் : 73. இது வினைத்தொகை. உலைவு - நடுக்கமுமாம்.

பி - ம். 1. எற்றுங் கைகளை ; பறக்க, பிறங்க,

2. சுடுசரந் தனைத்துணைக்.

3. பற்றி வாலினுங் காலினும் வலியுறத்.

4. உற்று ருமையி. (66)

293. தேவ ரோவென வயிர்க்குமத் தேவரிச் செயலுக்
காவ ரோவவர்க் காற்றலுண் டோவெனு மயலோர்
ஏவ ரோவென நகைசெயு மொருவனே யிறைவர்
மூவ ரோடுமொப் பான்செய லாமென முனியும்.

தேவரோ என - (இவ்வம்பை என்மேல் எய்தவர்) தேவர்களோ என்று, அயிர்க்கும் - ஐயமுறுவான்; அ தேவர் - அத்தேவர்கள், இ செயலுக்கு ஆவரோ - இத்தகைய முறையற்ற செய்கைக்கு உள்ளா வரோ? அவர்க்கு ஆற்றல் உண்டோ எனும் - அத்தேவர்க்கு என்னை எதிர்க்க வலியுண்டோ என்று கூறுவான்: அயலோர் ஏவரோ என - இது செய்தவர் அயலார் யாவரோ என்று எண்ணி, நகைசெயும் - சிரிப்பான்; ஒருவனே - அவன் ஒப்பற்ற சிறப்புடையவனே ஆன, இறைவர் மூவரோடும் ஒப்பான் செயல் ஆம் - தலைமைத் தேவர்களான திரிமூர்த்திகளுக்கு ஒப்பாகக் கருதக் கூடியவன் செயல் ஆம், என - என்று, முனியும் - வெகுள்வான்.

தேவரோ என வயிர்க்கும் - தேவர்க்கும் வாலிக்கும் ஒரு விரோதம் இன்மையாலும், தன்னால் அவர்கள் அமுதம் அடைந்து நலம் பெற்றவர் கள் ஆதலாலும் அன்னோர் இத்தீச் செயலுக் காவரோ என்று என்க. நகை செயும்: நகை செய்தது இவ்வாறு தேவர்களே தன் மீது அம்பு தூண்டியவரானால், அவர்களுக்கு இது உதவி கொன்ற இழிவாயிற்றே என அவர் கள்பால் இரக்கங்கொண்டும், யான் இதை அறியாமற் போனேனே என்று தன்னையே இழித்துக்கொண்டுமாம். மூவரோடும் ஒப்பான்; இராமபிரான், திரிமூர்த்திகளும் ஒன்றாய் அமைந்த பரம் பொருளுக்கு ஒப்பாக மதிக்கக் கூடியவன் ஆவன் என்று தீர்மானங் கொண்டான் என்பதாம். இதனால் மும்மூர்த்திகள் தனித்தனியே வந்து இவனை வென்று அழிக்க முடியாது என்பதும் பெறப்பட்டது. அது, 'மார் பிடந்தமாவெனினு மற்றவன், தார்கிடந்ததோள் தகைய வல்லதோ' (120) என்று அநுமன் இவ்வாலியின் வலிமையை முன் இராமபிரா னிடம் எடுத்துக் கூறியுள்ளமையால் அறியலாம். இது மற்றைய அய னுக்கும் அரனுக்கும் ஒக்கும். ஏவர்: எவர் என்பதன் நீட்டல் விகாரம். எனும், செயும் என்பன இடைக்குறைகள்.

பி - ம். 2. னுண்டோ வென்னு.

3. யாவ ரோவென, எவ ரேயென.

4. மொப்பா னவன்செய லாமென; மொழியும். (67)

294. நேமி தான்கொலோ நீலகண் டன்னெடுஞ் சூலம்
ஆமி தாங்கொலோ வன்றெனிற் குன்றுரு வயிலும்
நாம விந்திரன் வச்சிரப் படையுமென் னடுவண்
போமெ னுந்துணைப் போதுமோ யாதெனப் புழுங்கும்.

'நேமி தான்கொலோ - (என்மீது பாய்ந்துள்ள இப்படைக்கலம்) திருமாலுடைய சுதர்சன மென்னும் சக்கராயுதமே ஆகுமோ? நீலகண் டன் நெடு சூலம் இது ஆம் கொலோ - (அல்லது விடமுண்டு) கறுத்த மிடற்றையுடைய சிவபெருமானது நெடிய திரிசூலம் இஃதாக ஆனதோ? அன்று எனில் - அல்லாவிடில்; குன்று உருவு - கிரௌஞ்சம் என்னும் மலையை ஊடுருவித் தொளைத்துச் சென்ற, அயிலும் - குமாரக்கடவுளது வேலாயுதமும், இந்திரன் நாம வச்சிரப்படையும் - தேவேந்திரனுடைய அச்சத்தைத் தரும் வச்சிராயுதமும், என் நடுவண் - என் உடலின் நடுவே, போம் எனும் துணை - செல்லும் என்று சொல்லத்தக்க அளவு, போதுமோ - வலிமை போதுமானதாக அமைந்துள்ள தாகுமோ? யாது என - இது யாதோ தெரியவில்லையே என்று, புழுங்கும் - மனம் புழுங் கித் தவிப்பான்.

முன் செய்யுளில் எய்த கருத்தா யாரென்று ஆராய்ந்து, இதனில் எய்த கருவியை ஆராய்ந்தனன் வாலி என்க. குன்று உருவு அயில்; குமாரக் கடவுள் கிரௌஞ்சம் என்னும் ஒரு மலையில் ஒளிந்திருந்த தார கன் என்னும் அசுரனை நாடி அம் மலையைத் தன் வேலாற் பிளந்து அவனை அழித்ததைக் குறிப்பது; (சிலப். குன்றக்குரவை, தெய்வம் பராயது; 10); மணி 5; 13. முதலியவற்றுட் காண்க. இனி,

"........தளர்வுற்றிடை தளரும்,
அமையத்துயர் பறவைக்கினி தாரும்வகை சீருச்
சிமையக்கிரி யுருவத்தனி வடிவாளிகள் தெரிவான்"

(பால. பரசுராமப்: 14) என்ற பாடலை ஆதாரமாகக்கொண்டு பரசுராமன் கிரியைப் பிளந்த செய்தியைக் குறிப்பிடுவாரும் உளர். பரசுராமன் அயில் கொண்டு மலையைப் பிளக்கவில்லை. அம்பு கொண்டே பிளந் தான் ஆதலால், அது வேறு செய்தியென விடுக்கற் பாலதாம். இவை வாலி தன் மீது பாய்ந்தது இன்னதென்று அறியாத நிலையிற் கூறியவை.

பி - ம். 1. *நீலகண்டன் றருஞ் சூலம்.*
2. *குன்றுவிய வேல, குன்றுரு வயிலோ; வன்றனி லறுமுக னயில் கொலோ;*
3. *படையுமே நடுவட்; நடுவுட்; படையுமோ.*
4. *யாதென புகலும்; புகனும், புகளும்.*

சில சுவடிகளில் இதன் பின், 'சரமெனும்படி' என்னும் 296 ஆம் பாடல் உள்ளது.

(68)

வாலி இராமபாணத்தைக் கண்டது

295. வில்லி ஞற்றுரப் பரிதிவ்வெஞ் சரமென வியக்கும்
சொல்லி ஞனெடு முனிவரோ தூண்டினு ரென்னும்
பல்லி ஞற்பறிப் புறும்பல காலுந்தன் னுரத்தைக்
கல்லி யார்ப்பொடு பறிக்குமப் பகழியைக் கண்டான்.

தன் உரத்தை கல்லி - தன்மார்பை அகழ்ந்து, ஆர்ப்பு ஒடு பறிக்கும் - பேரொலியோடு பறித்துக்கொண்டிருக்கும், அ பகழியை கண்டான் - அந்த அம்பைக் கண்ட வாலி, ' இ வெம் சரம் - இந்தக் கொடிய அம்பு, வில்லினுல் துரப்பு அரிது - ஒரு வில்லால் எய்யக் கூடியதன்று ' என வியக்கும் - என்று ஆச்சரியப்படுவான், ' சொல்லினுல் - தம் நிறை மொழிகளால்; நெடு முனிவரோ தூண்டினுர் என்னும் - மகரிஷிகள் இதை ஏவினுர்களோ ' என்றும் கருதுவான், பலகாலும் - பலமுறையும், பல்லினுல் - தன் பற்களால், பறிப்புறும் - அந்த அம்பைக் கடித்துப் பறிக்கப்பார்ப்பான்.

இது, சரம் என்று அறிந்த நிலேயில் கூறியது. இவ்வாறு படிப் படியாக அமைத்துக் கூறுவது இயற்கையாக நிகழும் நிகழ்ச்சிகளே நிரல் படுத்தி, நிலேமையை நம் கண்முன் நிறுத்தும் உபாயமாகும்.

சொல்லினுல் தூண்டல் - மந்திரமொழிகளே உச்சரித்து அவற்ருல் ஏவுதல் என்னலும் ஏற்கும். நெடுமுனிவர் : நெடுமை - பெருமை ; சீவக. 1951 உரை. ஆதலின் மகருஷிகள் என்னப்பட்டது. முனிவர் சொல்லே அம்புபோன்றது ; ' சொல்லே ருழவர்.' (குறள். 872.) ' வில்லம்பு சொல்லம்பு மேதினியில் ரெண்டுண்டு ' (தனிப்பாடல்). சொல்லம்பு - சாபச்சொல்; பால. அகலிகைப் : 78 ; ' சொல்வில்லா லுலகளிப்பாய் ' என்று சதாநந்தர் கௌசிகரைக் கூறியதும் காண்க ; (பால. கார்முகப் : 22) ; இதனுல் வில்லம்பினும் சொல்லம்பின் வலிமை கூறப்பெற்றமை காண்க.

பி - ம். 1. *தரப்பரித வெஞ்சரம்.*

2. *முனிவரே தூண்டின், முனிவரர் தூண்டினு.*

3. *பல்லாற் பறிப்புறும் பல்லாற் கறிப்புறும், கடிப்புறும், பல்லி ஞற் கையிற் பலபலகாலுந் தன்னுரமார்பு.*

4. *கல்லினுற் பின்னும். கல்லினேறிடப் பறிப்பரும்.*

சில சுவடிகளில் இதன்பின், ''நேமி தான்கொலோ'' என்றும் 294 ஆம் பாடல் உள்ளது. (69)

**296.** சரமெ னும்படி தெரிந்தது பலபடச் சலித்தென்
உரமெ னும்பத முயிரொடு முருவிய வொன்றைக்
கரமி ரண்டினும் வாலினுங் காலினுங் கழற்றிப்
பரம னன்னவன் பெயரறி குவெனெனப் பறிப்பான்.

(பகழியைக் கண்ட வாலி), ' சரம் எனும்படி தெரிந்தது - இஃது ஓர் அம்பு என்ற உண்மைநிலை தெரிந்தது ; பலபட சலித்து என் - இனி யான் பலவிதமாகச் சஞ்சலப்பட்டு என்ன பயன் ? உரம் எனும் பதம் உயிர் ஒடும் உருவிய ஒன்றை - என் மார்பு என்னும் இடத்தை என் உயிரோடு ஊடுருவிச் சென்றுள்ள ஒப்பற்ற இந்த அம்பை, கரம் இரண்டிலும் - என் இரு கைகளாலும், வாலினும் - என் வாலினாலும், காலினும் - என் கால்களாலும், கழற்றி - என் மார்பினின்றும் கழற்றி, பரமன் அன்னவன் - மேலோனான அவனுடைய, பெயர் அறிகுவென் - பெயரைத் தெரிந்துகொள்வேன்', என - என்று எண்ணி, பறிப்பான் - அவ்வம்பைப் பற்றிப் பிடுங்குவானானான்.

உரமெனும் பதம் - மருமஸ்தானம். பதம்-நிலை அல்லது இடமுமாம்; 'கோட்படாப் பதமே ஐய குரக்குருக்கொண்ட தென்றான்' ; (75); பரமபதம் என்ற சொல்லையும் நோக்குக. கழற்றல் - அசைத்து நழுவச் செய்தல். பரமன் அன்னவன் : சிறந்தோன், கடவுள் போன்றவன் என்க. சரம் - சரிப்பது அதாவது வருத்துவது அல்லது அழிப்பது என்னும் காரணத்தைக் கொண்ட தொழிற் பெயர் என்பர் ; இது வடசொல் ;

இதில் கரம், வால், கால் என்ற முறையால் வாலியின் பல முயற்சிகளையும் சரத்தின் வலிமையையும் ஒருமிக்கச் சித்திரித்தமை புலப்படுவதாம்.

பி - ம். 1. *பல்படச் சலித்தான் ; சலித்தோன்.*
2. *உரமெ னுந்தலம்.*
3. *காலினும் வாலினுங்.*
4. *ரறிகு வெலெனைப்.* (70)

**297.** ஓங்க ரும்பெருந் திறலுடை மனத்தனுள் ளத்தன்
வாங்கி னான்மற்றவ் வாளியை யாளிபோல் வாலி
ஆங்கு நோக்கின ரமரரு மவுணரும் பிறரும்
வீங்கி னார்கடோள் வீரரை யார்விய வாதார்.

யாளி போல் வாலி - யாளி என்னும் கொடிய விலங்குபோல வாலியானவன், ஓங்கு அரும் பெருந் திறல் உடை மனத்தன் - (யாவரும்)

பெறுதற்கரிய பெரிய உயர்ந்த வலிமையுடைய மனத்தினனாகவும், உள்ளத்தன் - ஊக்கமுடையவனாகவும், அ வாளியை - அந்த இராம பாணத்தை, வாங்கினான் - (மேற்செல்லாமல்) இழுத்துப் பிடித்துக் கொண்டான் ; ஆங்கு நோக்கினர் - அங்கு அதைப் பார்த்தவர்களான, அமரரும் அவுணரும் பிறரும்-தேவர்களும் அசுரர்களும் மற்றையோரும், தோள் வீங்கினார்கள் - (வாலியின் ஆற்றலைக் கண்டு வியந்து) தம் புயங்கள் பூரிப்படைந்தனர் ; வீரரை வியவாதார் யார் - உலகில் வீரரைப் புகழ்ந்து கொண்டாடாதவர்கள் யாவரே உள்ளார்? மற்று - அசை.

ஓங்கு அரும் பெருந்திறல் - ஓங்குதிறல், அரும்பெருந்திறல் என்ப தாம். உள்ளம் - ஊக்கம், 'உள்ள முடைமை யுடைமை' (குறள். 592 பரி. உரை); சீவக. 36. நச். உரை. வாங்குதல் - பிடித்திழுத்தல் ; 'தருக்கின் வாங்குவா ரிந்திரன் முதலிய வமர ரேனையோர்'; (252); 288 ஐயும் நோக்குக. வீரனை வியத்தல் உலகிற் பொதுவாய் நிகழும் செயல்.

இராம பாணத்தைத் தடுத்து நிறுத்தும் வலிமை வாலிக்கே யன்றி, வேறு எவர்க்கும் இல்லாமை இங்கு அறிவிக்கப் பெற்றது காண்க.

பி - ம். 1. *திறவினு மனத்தினுங் கரத்தாய் திறலுடை மனத்தின் னுர வோன், திறலுடை மனத்தினு னுரத்தின், திறவினன் வாவினுங் கரத்தும், திறலுடை தரத்தினும் வாவினு முரத்தும், திறவினுங் காலினுங் கரத்தும்.*

2, *வாங்கினேன் மற்றை, வாங்கினன் பெருவாளியை,*

3. *ஆங்கு நோக்கிய வமரரு ; ரவுணரு.*

4. *வீரனையார் ; யார் விரும்பாதார்.*

இதன் பின் சில பிரதிகளில் அடியிற்காணும் ஒரு பாடல் அதிக மாக உள்ளது.

மோடு தெண்டிரை முரிதரு கடலென முழங்கி
ஈடு பேருல கிறந்துள தாமென்ற லெளிதோ
காடு மாநெடு விலங்கல்கள் கடந்தவக் கடலின்
ஊடு போதலுற் றதனையொத் துயர்ந்துள துதிரம்.

சில பிரதிகளில் இதன்பின், 'பறித்த வாளியை' என்னும் (299) ஆவது பாடல் உள்ளது.

(71)

298. வாசத் தாரவன் மார்பெனு மலைவழங் கருவி
ஓசைச் சோரியை நோக்கின னுடன்பிறப் பென்னும்
பாசத் தாற்பிணிப் புண்டவத் தம்பியும் பசுங்கண்
நேசத் தாரைகள் சொரிதர நெடுநிலஞ் சேர்ந்தான்.

வாசம் தார் அவன் - நன் மணமுடைய மலர் மாலையை அணிந் திருந்த அந்த வாலியின், மார்பு எனும் - மார்பு என்று சொல்லப்பெறும், மலை வழங்கு - மலையினின்றும் வெளிப்படுகின்ற, அருவி-அருவியாகிய, ஓசை சோரியை - ஒலியுடன் கூடிய இரத்தப் பெருக்கை, உடன் பிறப்பு என்னும் பாசத்தால் பிணிப்பு உண்ட- கூடப் பிறந்தவன் என்னும் (அன் பாகிய) கயிற்றுல் கட்டப்பெற்ற, அ தம்பியும்- அந்த வாலி தம்பி சுக்கிரீ வனும், நோக்கினன் - பார்த்து, பசுங்கண் நேச தாரைகள் சொரிதர - பசுமையான தன் கண்களில் அன்பினுல் கண்ணீர் ஒழுக்குச் சொரிய, நெடு நிலம் சேர்ந்தான்-நெடியதரையில் வீழ்ந்தான்.

பாசம் - பற்று; பிணிக்க வல்லது ஆதலின் கயிற்றுக் காயிற்று. தாரை - தொடர்ந்த ஒழுக்கு; தாரா என்ற வடசொல்லின் திரிபு: சொரிதர: தர துணைவினை. 'தானுடா விடினும் தன் சதை ஆடும்' என்னும் பழமொழிக்கு இஃதோர் எடுத்துக்காட்டு. 'மரணுந்தாநி வைராநி; கடுத்த பகையும் கல்லறை கடவாது'; என்ற மூதுரைகளின் கருத்து இங்கே உறுதிப்படுதல் காண்க. மார்பை மலை என்றதற் கேற்ப அங்கிருந்து பெருகிய இரத்தம் அருவி எனப்பட்டது. நெருங்கிய சகோதரன் ஒருவன் நெடுநாட் பகைமை காரணமாக வெறுத்து விலகி யிருந்தாலும், அவன் உயிர் நீத்ததும் அப்பகைமை போய் இயற்கையன்பு தோன்றப்பெறுவது கண்கூடு. மலையினின்று வீழும் அருவி ஓசையிடு வது போன்று மார்பினின்று பெருகும் உதிரம் ஓசையிடுதலின் ஓசைச் சோரி என்னப்பட்டது. சுக்கிரீவன் இங்கு விடுத்த கண்ணீர் மோசத் தாரை யன்று; நேசத்தாரையே என்று அச் சொற்றொடரை எதுகை யின் அமைத்த ஆசிரியரது உலகியலறிவு இங்கே போற்றத்தகும்.

பி - ம். 1. *வாசத் தார்புனை.*
3. *பிணிப்புண்டவன் தம்பியும்; தம்பியும் பாங்கர்.*
4. *தாரைக ளிழிதர,*

சில சுவடிகளில் இப்பாடல் இல்லை. இதன் பின், சில சுவடிகளில் 'எழுந்து வான்முகடு' என்னும் 291 ஆம் பாடல் காணப்பெறு கின்றது. (72)

299. பறித்த வாளியைப் பருவலித் தடக்கையாற் பற்றி
இறுப்பெ னென்றுகொண் டெழுந்தனன் மேருவை யிரண்டாய்
முறிப்பெ னென்னினு முறிவதன் றாமென மொழியாப்
பொறித்த நாமதிதை யறிகுவா னோக்கினன் புகழோன்.

(அவ்வாலி) பறித்த வாளியை - தன்மார்பைத் தோண்டி உள் சென்றஅம்பை, பரு வலி தட கையால் - தனது பருத்து வலிமைவாய்ந்த பெருங் கைகளால், பற்றி - பிடித்து, இறுப்பென் என்று கொண்டு - அதனை ஒடிப்பேன் என்று கொண்டு, எழுந்தனன் - எழுந்திருந்து, மேருவை இரண்டாய் - மேருமலையையும் எடுத்து இரண்டாய், முறிப் பென் என்னினும் - யான் முறிக்கவல்லேன் ஆனாலும், முறிவது அன்று ஆம் என - இவ்வம்பு முறியக் கூடியது அன்றும் என்று, மொழியா - சொல்லி, புகழோன் - புகழுக்குரிய அவ்வாலி, பொறித்த - அவ்வம்பில் அடையாளமாகச் செதுக்கப்பெற்ற, நாமத்தை - பெயரை, அறிகு வான் - அறியும் பொருட்டு, நோக்கினன் - உற்றுப் பார்த்தான்.

மேருவை யிறுப்பென் என்றது அவன்தன் வலிமை குறித்தபடி. பொறித்தல் எழுதலும் ஆம் : (பிங்). புகழோன் ; வீரத்தாற் புகழ் வாய்ந் தவன் ; தாரக மந்திரமாகிய ராமநாமத்தை நோக்கிய பேறடைந்தமை யால் பெற்ற புகழையுடையவன் எனினும் ஆம். அறிகுவான் : கு சாரியை.

பி - ம். 1. பறித்தவ்வாளி; பருஉ வலித் தடக்கையாற், தடக்கையிற்.
2. டெழுந்தவன் ; மேருவை யிறுப்பேசன்.
3. இறுப்ப னிக்கணத் தென்றவன் மேருவை யெடுத்தே ; முறிப்ப னென்னனு முறிவதன் றாமென ; முறிவதன் றாமிதன் மேலே.
4. நாமத்தை யறிகுவ னோக்கினன் புகல்வான் ; நோக்குவ மெனப் புல னுணர்ந்தான்.

ஒரு சுவடியில் இதன் பின், 'எழுந்து வான்முகடு', என்னும் 291-ஆம் பாடல் உள்ளது. (73)

இராமநாமத்தைக் கண்ட வாலியின் நிலை.

வேறு

300. மும்மைசா லுலகுக் கெல்லா
மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமக்கு நல்குந்
தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே மறுமை நோய்க்கு
மருந்தினை யிராம வென்னும்
செம்மைசேர் நாமந் தன்னைக்
கண்களாற் றெரியக் கண்டான்.

(நோக்கிய வாலி), மும்மைசால் - மூன்று என்னும் தொகை பொருந்திய, (சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும்) உலகுக்கு எல்லாம் - உலகங்கள் யாவற்றிற்கும், மூலமந்திரத்தை - ஆதிகாரணமாய் அமைந்தமந்திரத்தை, முற்றும் - குறைபடாது முழுதுமாய், தமக்கு தம்மையே நல்கும் - தம் ஸ்வரூப சாக்ஷாத்கார ஞானநிலையையே வழிபடும் அவர்க்கும் அளிக்கும், தனி பெரும் பதத்தை - ஒப்பற்ற பெருஞ் சிறப்பமைந்த சொல்லை, தானே இம்மையே மறுமை நோய்க்கும் மருந்தினை - இப்பிறவியிலேயே இனிவரும் பிறவியாகிய நோய் வராமல் தான் தனித்தே தடுக்க வல்ல உயரிய மருந்து போன்றதை, (இ)ராம என்னும்-ராம என்று சொல்லப்பெறும், செம்மைசேர் நாமம் தன்னை - பெருமை அமைந்த திருநாமத்தை, கண்களில் தெரிய கண்டான் - தன் கண்களில் (அவ்வம்பில்) தெளிவாக விளங்கப் பார்த்தான்.

மும்மைசா லுலகு ; இப்பிறவி, முற்பிறவி, இனிவரும் பிறவி என்னும் மூவகைப் பிறவிகளுக்கு இடமான உலகில் வாழும் உயிர்களும் ஆம். மும்மைசால் மூலமந்திரம் என இயைத்துக் கூறுவாரும் உளர் ; மும்மைசால் மூலமந்திரமாவது — மும்முறை சேர்த்து உச்சரிக்க வேண்டியதாய் அமைந்த மூலமந்திரம் என்பதாம். ''ஸ்ரீராம ராம ராமேதி......ஸ்ரீராமநாம வராநனே'' என்பது ஆன்ரோர் அறிந்து கூறிய முறையாதலால். இனி, இதற்கு மற்றும் பலவாறு பொருள் கூறுவாரும் உளர். அவை விரிவுடையனவாதலின் அவற்றை வல்லோர் வாய் நேரிற் கேட்டுணர்தல் ஏற்கும். தம்மையே தமக்கு நல்கும் - தாம் இன்னர் என்ற ஆத்ம ஞானத்தை அறிவிக்கும் ; அதாவது, 'அஹம் பிருஹ்மா அஸ்மி' என்ற ஞானம். தனிப்பெரும் பதம் - ஒப்பும் அதனிலும் உயர்ந்ததும் வேறு இல்லாத நிலை அல்லது பதவியை அளிக்கும் பதம். செம்மைசேர் நாமம் : 'ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராம

நாம வராநனே,' என்று ஸ்ரீ உமாதேவிக்குச் சிவபிரான் உபதேசித்தார் எனக் கூறப் பெறுவதால் இஃது அறியப்பெறும். இம்மையே ; ஏகாரம் தேற்றப் பொருளது. மறுமை நோய்க்கு மருந்து : மறுபிறவி என்னும் நோய் வராமல் இப்பிறவியிலேயே தடை செய்யும் மருந்து : பிறவியை நோய் என்றமையால் ராமநாமம் அந்நோய் தீர்க்கும் மருந்து என்னப் பட்டது. 'சன்மமு மரணமு மின்றித் தீருமே இம்மையே ராம வென் றிரண் டெழுத்தினல்' (பாயிரம்.) '' நோவினையு நோயினையு நோய்செய் வினையினையும், வீவினையுந் தீர்த்தருளும் வேங்கடமே'' —(திருவேங்கட மாலை. 14) என்றவற்றை ஒப்பு நோக்குக.

மூலமந்திரம் : எல்லா மந்திரங்கட்கும் மூலாதாரமான ராம என்னும் மந்திரம். மேலும், இந்த ராமநாமத்தின் சிறப்பு இந் நூற்பாயி ரப் பகுதியில், ''இறுவ ரம்பினி லிராமவென்ருேரும்பர் நிறுவரென்பது நிச்சய மாதலால்'', என்ற உறுதி கூறியுள்ளமையாலும், சம்பாதி, ''எல்லீ ருமவ்வி ராம நாமமே, சொல்லீர்'' என்று அநுமன் முதலிய வாநரர்களைச் சொல்லச் செய்து (983) அதனுல், தான் முன் இழந்த சிறகுகளை அடையப் பெற்றமையாலும் நன்கு விளங்குவது காணலாம். சில அருஞ் செயல்களாலும், தாம் அருளிச்செய்த நூற்பிரமாணங்க ளாலும், நிலைநாட்டியருளிய ஸ்ரீராமநாமச் சிறப்பை ஸ்ரீ காஞ்சி காம கோடி பீடாதிபதிகளாய் எழுந்தருளியிருந்த ஜகத்குரு ஸ்ரீ நாம போதேந் திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் சரிதத்தில் நன்கறிந்து உய்ய இடமாகும்.

இச் செய்யுள் கவிக்கூற்று. இது, வாலி, இராமபிரானின் நாமத் தைக் கண்டும், அவன் பரம்பொருளே என்பதை உணரத்தக்க பக்குவ நிலையை இன்னும் அடையாமையால், அவனை ஒரு சிறந்த ஆடவன் என்ற நிலையிலே வைத்துக் கூறியது. இது, மேல் வரும் பாடல்களாலும் விளங்குவது காண்க.

பி - ம். 1, மும்மையா முலகுக்,

2. தம்மையே தமர்க்கு நல்கும், யாவர்க்கு நல்கும், யெவர்க்கு நல்கும் ; பெருக்கும் ; பெருந்தவத்தைத் தானே.

3. எம்மையே யெழுமை நோய்க்கு மருந்தினை; யெழுமை நோக்கும் மருந்தினை.

4. நாமந் தன்னை நோக்கினன் றெரியக் கண்டான். (74)

301. இல்லறந் துறந்த நம்பி
யெம்மனோர்க் காகத் தங்கள்
வில்லறந் துறந்த வீரன்
றோன்றலால் வேத நன்னூல்
சொல்லறந் துறந்தி லாத
சூரியன் மரபுந் தொல்லை
நல்லறந் துறந்த தென்னா
நகைவர நாணுக் கொண்டான்.

இல்லறம் துறந்த - இல்வாழ்க்கையை நீத்து வனத்தில் வந்து தவ வாழ்க்கையை மேற்கொண்ட, நம்பி - ஆடவரிற் சிறந்தவனும், எம்மனோர்க்கு ஆக - கேவலம் எளிய குரங்குகளாகிய எங்கள் பொருட்டாக, தங்கள் வில் அறம் துறந்த - தங்கள் மரபுக்குரிய விற்போரின் தருமத்தை விட்டொழித்த, வீரன் - வீரனுமான இராமபிரான், தோன்றலால் - அவதரித்ததால், வேதம் நல் நூல் சொல் அறம் துறந்திலாத - நல்ல வேத சாஸ்திரங்கள் கூறும் தருமங்களை விட்டு விலகாத, சூரியன் மரபும் - சூரிய குலமும், தொல்லை நல் அறம் துறந்தது என்னா - தொன்றுதொட்டுள்ள நல்ல தருமத்தைக் கைவிட்டது என்று எண்ணி, நகை வர - சிரிப்புத் தோன்ற, நாணு கொண்டான் - வாலி வெட்கமேற் கொண்டவனானான்.

இல்லறம் துறந்தது, இல்வாழ்க்கையின் இன்பங்களை நீக்கியது; வில்லறம் துறந்தமை, தனக்கு நேர்ப் பகைவனல்லாத ஒருவன் மீது, மறைவினின்று அம்பு எய்தது. நகை எள்ளற்பொருட்டு; நாணுக் கொண்டமை, அரசநீதி கெட்டமையாலும், தன்னை உள்ளிட்ட அரசர் யாவர்க்கும் இழிவு உண்டானமையை நோக்கியும், இராமபிரானைப் பற்றித் தாரையிடம் தான் பேசிய உயர்வெல்லாம் பழுதுற்றமை கருதியும் என்க. 'எம்மனோர்' என்றது, வானர குலத்தைச் சார்ந்த தம் புன்மை நோக்கிக் கூறியதாம்; வாலி தன் குலத்தை இழிவாகக் கருதியது; 'புன்றொழிற் குரங்கொடு புணரும் நட்பெனோ' (260); சுக்கிரீவனும் அவ்வாறே கருதினான் என்பது, 'எங்கள் வானரத் தொழிலிற் கேழ்ப்பப் புன்பகை காட்டும் யானோ' (உயுத்த. மகுடபங்கப்: 35) என்றமையால் காண்க. நாணு: உ. சாரியை; தொல். பொருள்: 113; குறள் - 1011. மணி - 2-41;

இராமபிரான், தந்தையைப் பொய்யனாக்காமலும், ஒரு தாயின் விருப்பத்தை நிறைவேற்றவும் இல்லறவாழ்க்கையைத் துறந்து தவ

வாழ்க்கையை மேற்கொண்ட அருஞ்செயலைக் குறித்து, நம்பி என அவனை ஏத்தியும், ஒரு குரங்கின் பொருட்டுத் தன்னுடைய குலச் சிறப்பான விற்போரின் தருமத்தைத் துறந்ததால் வீரன் என்ற சொல்லால் இழித்தும் கூறினான். இது,

தார மற்றொரு வன்கொளத் தன்கையிற்
பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே; (321)

சூரி யன்மர புக்குமொர் தொல்மறு
ஆரி யன்பிறந் தாக்கினை யாமரோ; (318)

என வாலி இராமபிரானை நேரிற்கண்டு நிந்திப்பதாலும் விளங்கும்.

பி - ம். 1. யெங்களுக் காகத்.
2. வேதநூலிற், வேதநூலின் வேதநன்னூற் றுறந்து வீரன்.
3. தொல்லறந் துறக்கிலாத; மரபிற் றெல்லோர்; மரபிற் றெல்லை.
4. சுறந்த தென்ன; நாணுட் கொண்டான். (75)

302. வெள்கிடு மகுடஞ் சாய்க்கும்
வெடிபடச் சிரிக்கு மீட்டும்
உள்கிடு மிதுவுந் தானே
ரோங்கற மோவென் றுன்னும்
முள்கிடுங் குழியிற் புக்க
மூரிவெங் களிநல் யானை
தொள்கொடுங் கிடந்த தென்னத்
துயருழன் றழிந்து சோர்வான்.

(அவ்வாலி), வெள்கிடும் - வெட்கமுறுவான்; மகுடம் சாய்க்கும் - (அவ்வெட்கத்தால்) கிரீடம் சாயக் குனிந்து கொள்வான்; வெடிபட சிரிக்கும் - வெடிப்புண்டதுபோல் ஒலி உண்டாக நகைப்பான்; மீட்டும் உள்கிடும் - மறுபடியும் (ஆழ்ந்து) ஆலோசிப்பான்; இதுவும் ஓர் ஓங்கு அறம் தானே என்று உன்னும் - இராமபிரான் அம்பு எய்த இச்செய்கையும் ஓர் சிறந்த தருமம்தானோ என்று கருதிப் பார்ப்பான்; குழியில் புக்க - ஒரு குழியில் வீழ்ந்து அகப்பட்டுக்கொண்ட, மூரி வெம் களி நல் யானை - வலிய கொடிய மதங்கொண்ட ஒரு சிறந்த ஆண் யானை, முள்கிடும் - மூழ்கியுள்ளே அழுந்தச் செய்யும், தொள்கு ஒடும் கிடந்தது என்ன - சேற்றுள் கிடந்தாற்போன்று, துயர் உழன்று - துன்பத்திற் கிடந்துதத்தளித்து, அழிந்து - தன் வலி குறைந்து, சோர்வான் - தளர்ச்சியுறுவானானான்.

வெள்குதல் - வெட்கமுறுதல்; சுந்தர. 115, 133, 667. 1253. 'இதுவுந்தானோ ரோங்கறமோ'; 'தரு'மமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ' (258) என்றபடி; முன், வாலி இராமபிரான் தருமமே ஓர் உருவானவன் எனும் எண்ணங்கொண்டவன் ஆதலால்; 350, 352 செய்யுள்களைக் காண்க. தொள்கு - பெருஞ் சேற்றுப் பள்ளம். தொள்கு - வலையுமாம் (ஆரணிய. 934). கடற்கரையை அடுத்த சில விடங்களில் ஆழ்ந்து சேறு நிரம்பிய பள்ளங்கள் உண்டென்றும், அதில் மான் முதலிய விலங்குகள் அறியாமல் இறங்கி அச்சேற்றில் ஆழ்ந்து வெளிவரமுடியாமல் இறந்து போம் என்றும் கூறுவது உண்டு. இவ்விதச் சேற்றுப்பள்ளங்கள் வேதாரணியத்தை அடுத்த கடற்கரையில் ஓரோரிடத்து இருப்பனவாகக் கூறுவர். 'முள்கிடும் - முட்டுக் கட்டிக் கொண்டிருக்கும், இதற்குதாரணம் ''பசுபோல்வார் என்னும் பாட்டு' பழையவுரை.

பி - ம். 1. வெள்கிட மகுடஞ்; வெடுவெடுக்கும்; சிரிக்கும் மட்கும்; சிரிக்கும் பின்னை; சிரிக்கும் மீண்டு; மீள்கும்;
2. தானெவ் வோங்கறமோ, தானவ் வோங்கறமோ.
3. முள்கிடு முயிர்ப்பு நீங்கும்; குழியிற் புக்கு.
4. தொள்கொடு தொடர்ந்த தென்ன, தொள்கிடு கிடந்த தென்ன; தொழிலிழந் தழிந்து சோர்வான். (76)

இராமபிரான் வாலிமுன் தோன்றுதல்

303. இறைதிறம் பினனா லென்னே
யிழிந்துளோ ரியற்கை யென்னின்
முறைதிறம் பினனா லென்று
மொழிகின்ற முகத்தான் முன்னர்
மறைதிறம் பாத வாய்மை
மன்னர்க்கு மனுவிற் சொல்லும்
துறைதிறம் பாமற் காக்கத்
தோன்றினான் வந்து தோன்ற.

'இறை திறம்பினன் ஆல் - அரசனான இராமனே நடுவுநிலைமையி னின்றும் மாறுபட்டமையால், இழிந்துளோர் இயற்கை என்னே - இனி, கீழ்ப்பட்ட நிலையில் உள்ளவர்தம் தன்மையென்னாகும்? என்னின் முறை திறம்பினனால் - அதுவும் (ஒரு குரங்காகிய) என் பொருட்டு நீதிமுறையில் தவறினானே!' என்று மொழிகின்ற-என்று (தனக்குள்ளே) சொல்லி வருந்தாநின்ற, முகத்தான் முன்னர் - முகத்தையுடைய வாலி

முன்பாக, வாய்மை - உண்மையான, மன்னர்க்கு மனுவில் சொல்லும் - அரசர்களுக்கு மனுதர்ம சரஸ்திரத்தில் கூறப்பெறும், மறை திறம் பாத - வேதத்தின் கருத்துக்கு மாறுபடாத, துறை திறம்பாமல் காக்க - வழிகள் பிறழாமல் காத்தருள, தோன்றினுன் - (உலகில்) அவ தரித்தவனுன இராமபிரான். வந்து தோன்ற - அவன் முன் வந்து தென்பட ;

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இணைந்து, அடுத்த செய்யுளிலுள்ள, கண்ணுற்ருன் என்னும் வினைகொண்டு முடியும். இச் செய்யுளில் வாலி எக்குற்றங்களை இராமபிரான்பால் கண்டதாகக் கருதினுனே, அக்குற்றங்கள் உலகில் நிகழாமல் தவிர்க்க அவதாரம் செய்தவனே அப்பிரான் என்பதை ஆசிரியர் கொண்டமையும், வாலி, மேலே கூறுவனவெல்லாம் அவன் அகப்பற்றுக் கொண்ட நிலையில் கூறியவை என்பதையும் அவர் வகுத்துக்காட்டுவது காண்க. அகப்பற்று நீங்கி வாலி உண்மையை உணர்ந்த பின், அவன் இராம பிரானைக் காணும் காட்சியெல்லாம் முற்றிலும் மாறப்போவதைப் பின் காண்போம் என்பதையும் நாம் இங்குக் கருதவேண்டும்.

முறைதிறம்பினனுல் : இதில் ஆல் என்பது வியப்புப் பொருளைக் குறிக்கும் இடைச் சொல். முகத்தான் : வடமொழி நடை பற்றி இங்கு முகம் என்பதற்கு வாய் எனப் பொருள் கொள்ளலும் ஆம். துறை - மனு முதலிய நீதி நூல்களில் கூறப்பெற்ற வழிகள். இராமபிரான் அறங்காக்கத் தோன்றியவன் ; 'மண்ணிடை யாவ ரிராகவ னன்றி மாதவ மறத்தொடு வளர்த்தார்' (பால. நகரப்: 5) ; மேலும், இவ் வுண்மை, சுந்தர. 1123-இல் இராவணனுக்கு அநுமன் கூறியதாலும் பிறவாற்ருலும் ஆங்காங்கு விளங்கப் பெறுவது காணலாம்.

பி - ம். 1. *திறம்பினனு லஃதே ; யியற்கை யெண்ணின், யியற்கை யென்று,யியற்கை யென்ன, யியற்கை யென்னை.*

2. *பினதாலென்று நேர்கின்ற ; நோகின்ற.*

3. *திறம்பாமற் காக்கும் ; முன்னஞ் சொன்ன ; மன்னர்க்கும் சொல்லும் நீதி,*

4. *தோன்றினன் வந்து தோன்றி, தோன்றினுன் வந்து நின்ருன்.* (77)

வாலி இராமபிரானை ஏசியவை

304\. கண்ணுற்றான் வாலி நீலக்
கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று வரிவி லேந்தி
வருவதே போலு மாலைப்
புண்ணுற்ற நிறத்திற் சோரி
பொங்கியே பொடிப்ப நோக்கி
எண்ணுற்றா யென்செய் தாயென்
றேசுவா னியம்ப லுற்றான்.

நீலம் கார்முகில் - கருநிறமான கார்காலத்து மேகம், கமலம் பூத்து - தன்னிடம் பலதாமரை மலர்கள் மலரப்பெற்று, வரிவில் ஏந்தி - ஒரு கட்டமைந்த வில்லை ஏந்தி, மண்உற்று - தரையை அடைந்து, வருவதே போலும் - வருவது போன்ற, மாலை - திருமாலாகிய இராமபிரானை, கண்உற்றான் வாலி - கண்களால் நோக்கிய வாலி, புண் உற்ற நிறத்தில் - புண்பட்ட தன் மார்பில், சோரி பொங்கியே பொடிப்ப - குருதி பொங்கி மேற்றோன்ற, நோக்கி - அவ்விராமபிரானைப் பார்த்து, '(என்) எண் உற்றாய் என் செய்தாய் - என்ன நினைத்தாய்? என்ன காரியம் செய்தாய்?' என்று - என்று கூறி, ஏசுவான் - பழிப்பவனாக, இயம்பல் உற்றான் - சொல்லத் தொடங்கினான்.

மாலை, என்றது வரை, கவிக்கூற்று. நீல கார்முகில் கமலம் பூத்து மண்ணுற்றது: இஃது இல்பொருளுவமை; 'கருமுகி றாமரைக் காடு பூத்துப்' (பால. திருவவதாரப்: 13): அயோத். நகர்நீங்கு: 125. எண்ணுற்றாய் என்பதை இராமபிரானை நோக்கிக் கூறிய விளியாகக்கொண்டு, 'எல்லார் மதிப்பிற்கும் உரியவனாய் இருந்தவனே!' என்று பொருள் கொள்ளலும் அமையும். எண் - கீர்த்தி அல்லது மதிப்பு; (வி. பா. அருச்சுனன்றவ: 168): இஃது ஏண் எனத் திரிந்தும் வரும்; அயோத். கைகேசி சூழ்வினைப்: 46. என் செய்தாய் - 'நான் பெருமதிப்புக் கொண்டுள்ள நீயே இப்படித் தகாத காரியத்தை ஏன் செய்தாய்?' என்று வாலி இரங்கிக் கூறினனும் ஆம். இது, பின், 308 ஆம் பாடலாலும் தெளிவாதல் காண்க.

பி - ம். 1. *நீலக் கருமுகில்.*
2\. *மண்ணிற்றான் வரிவில் லேந்தி; வந்தென நிற்கின் றானைப்.*
3\. *புண்ணுற்ற தனைய சோரி, புண்ணுற்ற நயனச் சோரி, புண்ணுற்றா னனைய சோரி; பொறிப்ப நோக்கி.*
4\. *எண்ணுற்றா னென்செய் தாயென்; றேசுவா னெடுத்துக் கொண்டான்,* (78)

305. வாய்மையு மரபுங் காத்து
மன்னுயிர் துறந்த வள்ளல்
தூய்மையன் மைந்த னேநீ
பரதன்முன் றேன்றி னுயே
தீமைதான் பிறரைக் காத்துத்
தான்செய்தாற் றீதன் றுமோ
தாய்மையு மறையும் நட்புந்
தருமமுந் தழுவி நின்ருய்.

தாய்மையும் - தாய்போன்ற அன்புடைமையையும், மறையும் - வேதநெறியையும், நட்பும் - நேசப்பான்மையையும், தருமமும் - தருமத்தையும். தழுவிநின்ருய் - ஏற்று அவற்றை மேற்கொண்டுநின்ற இராமபிரானே! வாய்மையும் - சத்தியத்தையும், மரபும் - தன்குல ஒழுக்கத்தையும், காத்து - குறைவுபடாமல் காத்து, (அவற்றை நிலை நிறுத்தி), மன் உயிர் துறந்த - அவற்றின் பொருட்டாகவே தன் நிலை பெற்ற உயிரைவிட்ட, வள்ளல் - வரையாமல் அளிப்ப வனும், தூய்மையன் - பரிசுத்தனுமாகிய தசரத சக்கரவர்த்தியின், மைந்தனே - குமாரனே! நீ பரதன் முன் தோன்றினுயே - நீ பரதனுக்கு முன்னர் அவன் தமையனுகப் பிறந்தாயே! (இது தகாது என்றபடி); தீமை பிறரை காத்து - தீயசெயல் பிறரிடம் அடையாமல் விலக்கி, தான் செய்தால் - அத்தீமையைத் தானே செய்தால், தீது அன்று ஆமோ - அது தீமை அல்லாது நன்மை யாகுமோ? (ஆகாது என்றபடி). தான் - அசை.

இது முதல் 320 ஆம் பாடல் வரை, வாலி இராமபிரானை ஏசியவை. இராமபிரான் தாய்மைத் தன்மை கொண்டமை, 'அன்னையே யனைய வன்பி னறவோர்கள்' (ஆரணிய. 40) எனப் பிராட்டியும், 'தாய்வர நோக்கிய கன்றின் பான்மையோர்;' (ஆரணிய. 122) எனத் தண்டக வனத்து முனிவர்களும் கூறியவற்றுலும்; நட்பின் தன்மை, குகன் சுக்கிரீவன், இவர்கள்பாற்கொண்ட அன்பினுலும்; தருமத்தை மேற் கொண்டமை, இவன் சரிதமாகிய இக்காப்பிய முழுவதுமே ஆங்காங்கு நிறைந்துள்ளமையாலும் அறியலாம். இதனுல் இராமபிரானிடம் தாய்மை, மறைநெறி, நட்பு என்னும் இம்மூன்று அருங்குணங்கள் நிறைந்துள்ளன என்பதை வாலி நன்குணர்ந்தவன் என்பது விளங்கு வதாம். இது, வாலி போருக்குப் புறப்படுமுன் தாரைக்குக் கூறிய, 257 258 பாடல்களால் வலியுறுவதும் காண்க. நீ பரதன் முன் தோன்றி னுயே: பரதனுடைய உத்தம குணச் சிறப்பை வாலி அறிந்து கூறினுன்

என்பதாம். பரதன் குணச்சிறப்புக்கள் :—பால. குலமுறை : 21-இல், கௌசிக முனிவராலும், அயோத். நகர் நீங்கு: 5-இல், கோசலா தேவி யாலும், குகப். 35-இல், குகப்பெருமானுலும் பாராட்டப்பெற்றமை காண்க. இது, வாலி இராமபிரான்பால் முன்னமே கொண்டிருந்த நன் னேக்கமும், பெருமதிப்புமே முன்னின்றதால், அம்பு தூண்டித் தன்னை வீழ்த்திய கொடுமையையுங் கடந்து அப்பெருமான் செயலுக் கிரங்கிக் கூறியது ஆகும். இஃது இகழ்ச்சியால் பிறந்த வெகுளியை இரக்கம் வென்ற நிலை என்க.

பி - ம். 1. வாய்மையும் வழக்கும்; துறந்த மேலாக்.

2. தூயவன் மைந்தனே ; ரேன்ற லாமோ, தோன்ற லானே.

3. தீவினை பிறரைக் காத்துத்; பிறரைக் காக்க ; நீங்கன் ருமோ.

4. தாய்மையும் மன்றி மற்றை ; தாய்மையு மன்ற மற்றைத் ; நட்பார் தருமமும் ; தருமத்தைத் தழுவி னின்ருல் ; தழுவி னின்ரேய், தழுவும் வள்ளல். (79)

306. குலமிது கல்வி யீது
கொற்றமீ துற்று நின்ற
நலமிது புவன மூன்றின்
நாயக மீது நின்ரேள்
வலமிதிவ் வுலகந் தாங்கும்
வண்மையீ தென்ருற் றிண்மை
அலமரல் செய்ய லாமோ
வறிந்திருந் தயர்ந்து ளார்போல்.

'இது குலம் - நீ பிறந்த குலமோ இத்தன்மையது; கல்வி ஈது - நீ கற் றுள்ள கல்வியோ இத்தன்மையது ; கொற்றம் ஈது - வெற்றி என்பதும் இத்தன்மையது ; உற்றுநின்ற நலம் இது - உன்னை வந்தடைந்துள்ள நலந்தரும் தன்மைகளும் இவை ; புவனம் மூன்றின் நாயகம் ஈது - மூவுலகாட்சியும் இந்த உன்னிடமே அமைந்துள்ள தன்மையும் இது ; நின்தோள் வலம் இது - உன் புயவலியும் இது ; இ உலகம் தாங்கும் வண்மை ஈது - உலக பாரத்தை ஏற்றுக் காக்கும் வள்ளன்மை இது, என்ருல் - என்று உன்னைச் சிறப்பித்து உலகம் சொல்வதானுல், அறிந் திருந்து- நீ இப்பெருமைகளை யெல்லாமுடையவன் என்பதைத் தெரிந்து கொண்டிருந்தும், அயர்ந்து உளார் போல் - மதிமயங்கி மறந்தவர்போல, திண்மை அலமரல் - மேற்கூறிய உன்னையடைந்துள்ள உறுதிகள் யாவும் நிலைகலங்குதல் ஆகிய செயலை, செய்யலாமோ - நீ செய்ய லாகுமோ ? (செய்தது தகுதியன்று ; தவறு என்றபடி).

மிகச் சிறந்தவை என்று உலகம் கூறும் குலம் முதலியவை பெற்றிருந்தும், அவற்றைக் காக்க மறந்தவன்போல் அயர்ந்து நடந்து கொண்டாயே என்று வாலி கூறினன் என்க.

குலம் இது : சூரியகுலம், இக்ஷுவாகுகுலம், இரகுகுலம் என்று உலகம் சுட்டிக் கூறும் பெருமை வாய்ந்தது. கல்வி ஈது ; வசிட்டர், விசுவாமித்திரர் முதலியோரால் பெற்ற கல்வி. வலமிது : வலம் முற் கூறிய கொற்றத்துள் அடங்குமாறு அறிக. உற்று நின்ற நலம் : 'குலங்களா லுயர்ந்த வள்ளல்' (பால. அகலிகை : 86) ; 'அந்தமில் பெருங் குணத்தன்,' (அயோத். பள்ளியடைப் : 58) ; 'எண்டகு குணத்தினன்,' (அயோத், கிளைகண்டு: 77) முதலியவற்றால் விளங்கும். ஈது: இது என்பது நீண்டது ; இது செய்யுள் விகாரம் ; ஈது என்பது காகுசுரம் அதாவது சொல்லின் ஓசை வேறுபாடு என்பர். இது, ஈது என்பன இத் தன்மையது என்று பிரமாணமாகச் சுட்டிக் காட்டும் பெருமையுடையன என்பதுமாம்; இவற்றை இசை எச்சங்கள் எனவும் கொள்வர். உலகம் தாங்கும் வண்மை; வண்மை என்பதற்குச் செழிப்பு என்றொரு பொருளும் உண்டு ; குறள். 239 - பரிமேல். உரை. திண்மை - மனவுறுதி ; உன் பால் யான்கொண்ட வலிய நம்பிக்கைகள் யாவும், என வாலி மேலேற்றியும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. குலமீது.

2. நலமீதலக, நாயக மீது மின்றேய், நாயகமீது நல்லோர், நாயக மிதுவின் றேயின், நாயக விதுவின் றேயின், நாயக முன்ன தன்றே.

3. வலமிக வுலகந், வலமிகு முலகம், வலமிநிய் வுலகந் ; தென்றுற் றண்மை.

4. அலமரச், அலம்வரச், தயர்ந்து வளார்போல், தறிவி லார்போல்.

(80)

307. கோவியற் றரும முங்கள்
குலத்துதித் தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுத வொண்ணு
வுருவத்தா யுடைமை யன்றே
ஆவியைச் சனகன் பெற்ற
வன்னத்தை யமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத்
திகைத்தனை போலுஞ் செய்கை.

'ஓவியத்து எழுத ஒண்ணு உருவத்தாய் - சித்திரத்தில் எழுத முடியாத வடிவழகு அமைந்த இராமனே! கோ இயல் தருமம் - அரசர்க் குரிய அறநெறி என்பது, உங்கள் குலத்து உதித்தோர்கட்கு எல்லாம் - உங்கள் குலத்தில் பிறந்த அனைவர்க்கும், உடைமை அன்றோ - உரியது அன்றோ? (அவ்வாறாக, நீ அரசநீதி முறைமாறி என்னை அடித்ததால்), ஆவியை - உன் உயிர் ஆனவளும், சனகன் பெற்ற அன்னத்தை - சனகராஜன் (யாக பூமியிலிருந்தும்) அடைந்த அன்னப் பறவை போன்றவளும், அமிழ்தின் வந்த தேவியை - தேவாமிர்தம்போல (அருமையாய் உனக்குக் கிடைக்க) வந்தவளுமான உன் மனைவியான சீதாதேவியை, பிரிந்த பின்னை - நீ விட்டு நீங்கிய பிறகு, செய்கை திகைத்தனை போலும் - உன் செயலில் தடுமாற்ற மடைந்துள்ளாய் போலும்!

முன் 'அயர்ந்துளாய்' என்று கூறி, அதன் காரணத்தை இங்கு அமைக்கின்றான் வாலி என்க. ஓவியத்தெழுத வொண்ணு உருவத்தாய்;

'ஓவியஞ் சுவைகெடப் பொலிவதோ ருருவொடே......
ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினான்'

(பால. எதிர்கோட் : 22)

என்றமையாலும் விளங்கும். 'வனைய லாகா வுருவம்' என்றதுபோல; (சீவக. 1417). "எழுதரிய பெருமானென் றெண்ணு தெழுதி யிருந் தேனே" என்று ஒரு தலைவி கூற்றாக, அழகிய மணவாள தாஸர் என்னும் பிள்ளைப்பெருமாளையங்கார் அருளியதையும் ஒப்புநோக்குக. (திருவரங்கக் கலம்பகம்: 93).

இனி, வாலி இராமபிரானுடைய சௌந்தரியத் திருமேனியைப் புகழ்ந்ததாகக் கொள்ளாது, உன் உருவச் சிறப்புக் கேற்பக் குணமோ செயலோ அமையவில்லையே என்று இரக்கங் கலந்த முறையில் இராம பிரானை நிந்தித்தான் என்பது தொனிக்க நிற்பதும் ஆகும். 'கோவியற் றருமம் உங்கள் குலத்துதித் தோர்கட்கெல்லாம்...... உரிமையன்றோ!' மனு என்பவன் இராமபிரான் குலத்துதித்த முன்னோனும், மனு தர்ம சாஸ்திரம் என்னும் நீதி நூலை உலகுக்கு உபகரித்தவனும் ஆவன்; ஆதலின், அந்நூலிற் கூறியுள்ள அரசியற்றருமங்கள் யாவும் உனக்குப் பிதுரார்ச்சிதமான உரிமைச் செல்வமாகும்; அப்பிறப்புரிமைச் செல் வத்தை என்பொருட்டுத் தகாத முறையிற் செலவிட்டுப் பாழ்படுத்திக் கொண்டாயே என்று இராமபிரான்பால் இரக்கமும் இழிதகவும் தோன் றக் கூறினான் வாலி என்க. ஆவியை: உன் உயிரானவளை; சீதாப் பிராட்டியே இராமபிரான் உயிர்: "ஈண்டுநீ யிருக்க வாண்டங் கெவ்

வுயிர் விடுமிராமன்'' ; (சுந்தர. 525) என்று அநுமன் அப்பிராட்டியிடம் கூறிய வாற்ருல் இஃது உறுதிப்படும் ; மேலும், இவ்வுண்மையை அநுமன், பிராட்டியைப் பிரிந்து இராமபிரான் தேடியலைந்த செய்தியை, ' இன்னுயிரின்றி யேகு மெந்திரப் படிவ மொப் பான் ' (சுந்தர. 366) எனப் பிருண்டுங் கூறி உறுதிப் படுத்தியதும் நோக்கத் தக்கது. சனகன் பெற்ற அன்னம்: தத்துவ ஞானம் நிரம்பிய மகானும் ராஜருஷியுமான ஜனகராஜன் குமாரியாக அமையப் பெற்றவள் ஆதலின் ; ' ஜனகஸ்ய குலே ஜாதாம் தேவமாயேவ நிர்மிதாம் ' என்று வான்மீக முனிவரும் சிறப்பித்தமை காண்க. அன்னத்தை: பிராட்டியை அன்னம் எனக் கூறுவது இந்நூலிற் பெரு வழக்காக உள்ளமை ஆங்காங்குக் காணலாம். அமுதின் வந்த தேவி: பாற்கடலில் அமுதத்தோடு பிறந்த ஸ்ரீதேவியாகிய இலக்குமியின் திருவவதாரமே பிராட்டி யானவள் என்பதைச் சிறப்பாகக் கூறியது: தேவி-மனைவி; சீவக. 1403. உங்கள்: முன்னிலை யிடத்து உளப்பாட்டுப் பன்மை, அதாவது படர்க்கை யிடத்தாரை உடன் கூட்டும் முன்னிலை என்க; ' உங்கள் பானின்று மெம்பாற் போந்தன னும்பி யென்ருன் ' (உயுத்த. அங்கதன் தூது: 28); ' உங்களர சொருவ ளைநீ ரோடிப்போங் - திங்களுறைத விழுக்கன்றே ' (நள. 372).

பி - ம். 2. ஓவியத் தெழுதா, ஓவியர்க் கெழுத ; வருவத்தோய், வருவத்தா லுடையை, வருவத்தை யுடைய ; யன்றே.

3. யமுதின் வந்த, யமிர்தின் வந்த.

4. பிரிந்த பின்னர்த், பிரிந்த வன்றே, பிரிந்த போதே ; போலுஞ் செய்யோய், போலுஞ் தந்தைச் சித்தம் போலுஞ் செல்வ. போலுஞ் செல்ல. (81)

308. அரக்கனே ரழிவு செய்து
கழிவனே லதற்கு மாருேர்
குரக்கர சதனைக் கொல்ல
மினுநெறி கூறிற் றுண்டோ
இரக்கமெங் குகுத்தா யென்பா
லெப்பிழை கண்டா யப்பா
பரக்கழி விதுநீ பூண்டாற்
புகழையார் பரிக்கற் பாலார்.

'அரக்கன் ஓர் அழிவு செய்து கழிவனேல் - இராக்கதனான இராவணன் உனக்கு ஒரு கேடு செய்து சென்ருனாைல், அதற்கு மாறு -

அதற்குப் பிரதியாக, ஓர் குரக்கு அரசு அதனை கொல்ல - ஒரு குரங்கரசனை என்னைக் கொல்லுமாறு, மனுநெறி கூறிற்று உண்டோ - (உங்கள் குலத்துக்குரிய) மனுதர்ம சாஸ்திரம் சொன்னது - உள்ளதோ? இரக்கம் எங்கு உகுத்தாய் - இரக்கம் என்னும் கருணைக் குணத்தை எங்கே சிதறி வீழுமாறு விட்டொழித்தாய்? என்பால் எ பிழை கண்டாய் - என்னிடத்தில் நீ என்ன குற்றத்தைக் கண்டாய்? இது பரக்கழிவு - இந்தப் பெரும் பழியை, நீ பூண்டால் - நீ ஏற்றுத் தாங்கிக் கொள்வதானல், புகழை - புகழ் என்பதை, யார் பரிக்கல் பாலார் - (உலகில்) வேறு யாரே தாங்கும் தன்மை யுடையவராவர்? (உலகில் உன்னைவிட ஒருவரும் தகுதி யுடையோர் இல்லையே என்றபடி). அப்பா: அன்பு. அதிசயம், துன்பம், இரக்கம் முதலிய உணர்ச்சிகளை உணர்த்தும் சொல்.

அரக்கர் என்று பன்மையிற் பாடங்கொண்டு மாரீசனது செயலையும் உடன் கூட்டிக் கூறுவாரும் உளர். அரக்கன் கேடு சூழ அதற்கு ஒரு குரங்கைக் கொல்வதான இது, குற்றம் ஒருவன் புரிய மற்றொருவனுக்குத் தண்டனை விதிப்பது போலாகும், என்னும் கருத்திற் கூறியது. மனுநெறி: 307. பரக்கழிவு. (பரக்கு+அழிவு); பரக்கு - பெரியது; அழிவு - கேடு; பெருங்கேடு; அபகீர்த்தி; என்பர் பழைய உரைகாரர். இச் சொல் பரக்கழி யெனவும் வழங்கும்; 'ப்ரக்கழி யாமெனப் பரந்து நீண்டதால்' (உயுத்த. இராவணன் வதை: 229); 'நின்மலனென் ருேதிப் பரக் கழிந்தா' (பெரியதிருமொழி. 4. 8; 5.); 'கொந்தள மாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வான்'; (நாச்சியார்திருமொழி. 12; 3.). பரித்தல் - தாங்குதல்; இது வடசொல்லின் திரிபு; 'பாந்தளின் மகுடகோடி பரித்தபார்' (பால. திருவவதாரப்: 34.); சுந்தர. 164, 365. மாறு: அரக்கனுக்கு முற்றும் மாருனவனும், உனக்கு எந்த விதமான தீங்கு செய்யாதவனும், ஓர் எளிய குரங்குமாகிய என்னை என்பதுமாம்.

இரக்கம்: உனக்கும், உன் குலத்தவர்களான உன் முன்னோர்களுக்கும் இயற்கையாய் அமைந்ததான இரக்கம்; முன்னோர்: இங்குப் புறவின் பொருட்டுத் தன்னுடலையே அரிந்து கொடுத்த சிபிச்சக்கரவர்த்தியையும், பசுவின் பொருட்டுச் சிங்கத்தினிடம் தன்னையே உணவாக்கிக் கொள்ளுமாறு அருளிய திலீபனையும் குறித்துக் கூறியதென்க. உகுத்தல் - வேண்டுமென்றே சொரிதல்; 'அழகெல்லாம் புல்லிடையே யுகுத்தீரே' (ஆரண்ய. 343).

இங்கு வாலி, அரக்கனுன இராவணன் அழிவு செய்ததைத் தான் அறிந்துள்ளதைக் கூறுகின்றுன் ; அவ்வாறிருக்க, அவனை வாலி தடை செய்யாமை கருதத்தக்கது என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. *அரக்கரோ ரழிவு, அரக்கரோ ரிழிவு, அரக்கரோ வழியச், அரக்கரே யழிவு ; ல்தற்கு வேரூேர், லவற்கு மாரூேர்.*

2. *குரக்கினத் தரசைக் கொல்ல, குரக்கர சினைக்கொல் லென்று; மனுவினிற்.*

3. *இரக்கமெங் கொளித்தா லெப்பழி ; கண்டா யையா ;*

4. *பரப்பழி யிது, பரக்கழி வசைசீ பூண்டாற்; யிதுசீ கொண்டாற்.*

இதன் பின் ஒரு சுவடியில், ' அறைகழ லலங்கல்வீர ' என்னும் (313) ஆம் பாடல் உள்ளது.

309. ஒலிகட லுலகந் தன்னி
 லூர்தரு குரங்கின் மாடே
கலியது காலம் வந்து
 கலந்ததோ கருணை வள்ளால்
மெலியவர் பால தேயோ
 விழுப்பமு மொழுக்கந் தானும்
வலியவர் மெலிவு செய்தாற்
 புகழன்றி வசையு முண்டோ.

கருணை வள்ளால் - வரையின்றி யருளும் இராமா ! ஒலி கடல் உலகம் தன்னில் - ஒலிக்குங் கடலாற் சூழப்பட்ட இப் புவியாகிய உலகத்தில், ஊர்தரு குரங்கின் மாடே - மரங்களிலும் மலைகளிலும் ஊர்ந்து திரியும் குரங்கின் இடத்திலேதான், கலி அது காலம் - கலிக்கு உரிய கொடிய காலம், வந்து கலந்ததோ - வந்து விரவியதோ ? விழுப்பமும் ஒழுக்கம் தானும் - மேன்மைக் குணமும் நன்னடத்தையும், மெலியவர் பாலதேயோ - வலிமை குறைந்தவரிடத்திற்ருன் இருக்க வேண்டுவனவோ ? (வலியோரிடத்தில் இருக்கவேண்டாவோ என்றபடி) ; வலியவர் மெலிவு செய்தால் - வன்மை யுடையோர் இழி தொழிலைச் செய்வாராளுல், புகழ் அன்றி - அன்னோர்க்கு அது புகழாய் ஆவது அல்லாமல், வசையும் உண்டோ - நிந்தனைக் கிடமாகாது போலும்!

இவை யெல்லாம் கலியின் கொடுமை யல்லவோ என்கிருன் வாலி. கருணை வள்ளால் : இது வஞ்சப் புகழ்ச்சியும் ஆம் ; வள்ளால் : வள்ளல் என்ற சொல்லின் விளி ; ஈற்றயல் நீண்டது ; (நன். சூ. 312.)

ஊர்தரு : தரு, துணைவினை. கலியது காலம் : கலி - கலிபுருடன் ; கலி காலத்தில் தீய செயல்கள் தலையோங்கி வளரும் என்பது நூற்றுணிபு. (ஸ்ரீ மகாபாரதம் வனபருவம்); இந்த இராம சரிதம் துவாபர யுகத்தில் நடந்தது ; ஆதலின், அது முடிவடையப் பல்லாயிரம் வருஷ காலம் இன்னும் இருக்கத் திடீரென்று எவ்வாறு கலியுகம் வந்து விட்டது ? அப்படிக் கலி வந்தாலல்லாமல் இம்முறை தவறிய காரியம் நடைபெற இடமில்லையே ! அப்படிக் கலியுகம் விரைவில் மாறி வந்தாலும் எவ்வளவோ வலியுடைய பிராணிகள் இருக்க, ஓர் எளிய குரங்காகிய யான்தானோ அதற்குக் குரியனானேன் என்றும் இரங்கிக் கூறினன் என்க. குரங்கு பிராணிகளுள் அற்பமானது என்பது; 'புன்றொழிற் குரங்கொடு புணரு நட்பெனோ' (260) என்ற வாலி வாக்கிலேயே அறியற்பாலதாம். குரங்கின் மாடு : மாடு - இடம் ; இது ஏழனுருபு. விழுப்பமும் ஒழுக்கந்தானும் ; இது பன்மை ஒருமையில் முடிந்தது ; எண் மயக்கம். விழுப்பம் : உரிச்சொல். 'வலியவர் மெலிவு செய்தால்...... ........வசையு முண்டோ ? இது, ' வல்லான் வகுத்ததே வாய்க்கால் ' என்ற முதுமொழியை யொற்றி வந்தது.

பி - ம். 1. ஞறைதரு குரங்கின், குரங்கின் மாட்டே.
2. காலம் வந்து பிறந்ததோ ; காலம் வந்து பார்ந்ததோ ; கழிந்ததோ; கருணை வள்ளல், கருணை மூர்த்தி, கருணை யுள்ளாய்.
3. வொழுக்கமும் விழுப்பந் தானும்.
4. பிழையே செய்தால், பிழையைச் செய்தால், மெலிமை செய்தால், முறைமை செய்தால், ரழிவு செய்தால், பலப்பல ரிழிவு செய்தால், றெளியர்ச் செற்றால்; வசை யன்றிப் புகழு முண்டோ; வசையுண் டாமோ, வசையின் றாமோ. (83)

310. கூட்டொரு வரையும் வேண்டாக்
கொற்றவ பெற்ற தாதை
பூட்டிய செல்வ மாங்கோர்
தம்பிக்குக் கொடுத்துப் போந்து
நாட்டொரு கருமஞ் செய்தாய்
யெம்பிக்கிவ் வரசை நல்கிக்
காட்டொரு கருமஞ் செய்தாய்
கருமந்தா னிதன்மே லுண்டோ.

'கூட்டு ஒருவரையும் வேண்டா - (தனக்குத்) துணையாக வேறு ஒருவரையும் விரும்ப வேண்டாத, கொற்றவ - வெற்றியை

யுடைய இராமா! பெற்ற தாதை-உன்னை மகனாகப் பெற்ற உன் தந்தை யாகிய தசரத சக்கரவர்த்தி, பூட்டிய செல்வம் - (மூத்த மைந்தனான உன்னிடம் நீ விரும்பாமலே வலிதில்) தந்த அரசியல் செல்வத்தை, ஆங்கு - அவ்விடத்திலே, ஓர் - ஒப்பற்ற, தம்பிக்குக் கொடுத்து - தம்பி யாகிய பரதனுக்கு அளித்து, நாட்டு ஒரு கருமம் செய்தாய் - நாட்டிலே நீ ஒரு காரியம் செய்தாய்; போந்து - அந்நாட்டையும் தனக்குரிய செல் வங்களையும் துறந்து காட்டிற்குச் சென்று, எம்பிக்கு - என் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு, இ அரசை நல்கி - (என்னுடையதான) இந்த வானர ஆட்சியைக் கொடுத்து, காட்டு ஒரு கருமம் செய்தாய் - காட்டிலே வந்து வழக்கத்திற்கு மாறாக ஒரு காரியத்தை நீ செய்தாய்; இதன்மேல் கருமம்தான் உண்டோ - இவற்றிற்கு மேலான காரியம் வேறு உண்டோ? (இல்லை என்று எதிர்மறையில் நிந்தித்ததாகும்).

கூட்டு-துணை; கூட்டாளி என்னும் பொருள் தொக்கிநிற்பது காண்க. 'கூட்டொரு...........கொற்றவ', என்றது அஸகாய சூரன் என்றபடி; 'துணை யில்லாதவர்' என்று இராம லக்ஷ்மணரை, ஆரணிய. 1183 செய்யுள் கூறியதும் காண்க. முன் வாலி தாரைமுன் இராம பிரானைத் "தன்றுணை யல்லது தன்னில் வேறிலான்" (260) என்றதும் காண்க. இது, 'துணைவேண்டாச் செரு வென்றி' (புறநா. 16: 10) என்றமை போன்றது. இது ஏற்றிப் புகழ்ந்தது போன்றதுஆம்.

மூத்தவன் உரிமையைத் தம்பியர்க்கே அளிப்பது உன் இயல்பா யிற்று என்று இகழ்ந்து கூறியதாகும். இனி, கருமம் என்பதை நாட்டில் தயரதன் இறத்தற்கும், காட்டில் வாலி யிறத்தற்கும் காரண மான செயல்கள் எனக் கொள்வாரும் உளர். இதன்மேலுண்டோ என்றது, இராவணன் மாட்டும் அவ்வாறே நடக்கப் போவதையும் சூசித்ததுமாகும் என்க.

பி - ம். 1. செல்வ மாங்கே; கொடுத்தும் போந்து.

2. காட்டொரு தருமஞ் செய்தாய்; யெம்பிக்கு மரசு நல்கி.

4. காட்டொரு தருமஞ் செய்தாய்; னிதில்வே றுண்டோ.

இதன்பின் ஒரு பிரதியில், 'இருவர் போர் எதிர்ந்த' என்னும் (314) ப்பாட்டு உள்ளது.

(84)

311. அறைகழல் அலங்கல் வீரர்க்
கடுத்ததே புரிவ தாண்மைத்
துறையென லாயிற் றன்றே
தொன்மையி னன்னூற் கெல்லாம்
இறைவனீ யென்னைச் செய்த
தீதெனி லிலங்கை வேந்தை
முறையல செய்தா னென்று
முனிதியோ முனிவி லாதாய்.

'முனிவு இலாதாய் - கோபம் சிறிதும் இல்லாத இராமா! அறைகழல் அலங்கல் வீரர்க்கு - ஒலிக்கும் வீரக்கழலையும் (வெற்றி) மாலையும் அணிந்த வீரரானவர்க்கு, அடுத்ததே - பொருந்திய செயலையே, புரிவது - செய்வது, ஆண்மை துறை எனல் ஆயிற்று அன்றே - ஆண்மைக்குரிய செயல் என்று சொல்வது உண்டு அல்லவா? தொன்மையின் நல் நூற்கு எல்லாம் - பழமையான சிறந்த அறநூல் களுக்கு எல்லாம், இறைவன் நீ - தலைவனான நீ, என்னை செய்தது ஈது எனில் - என்பாற் புரிந்தது இந்தத் தகாத தீய செயல் என்றால், இலங்கை வேந்தை - இலங்கைக்கு அரசனான இராவணனை, முறை அல செய்தான் என்று - நீதிமுறைக்கு மாறானவற்றைச் செய்தான் என்று, முனிதியோ - அவன்பாற் சினமுறுவாயோ? (சினமுறுதல் தகாது என்றபடி.)

இராமன் தன் இயல்புக்கும் நீதிக்கும் மாறாகத் தீங்கு செய்தானென் றும், தன் குற்றம் காணாது தீங்கு புரிபவனான அவன் இராவணனின் பிறன்குற்றம் காண்பது எவ்வாறு பொருந்தும் என்றும் வாலி வின வினான் என்க.

முனிவிலாதாய்: 'முனியாதானை முனிவித்தீர்' என்று இலக்கு வன் இராமபிரானைச் சிறப்பித்ததுங் காண்க; (626). இனி, முனிதியோ முனிவிலாதாய் என்பதற்கு, 'முனியவேண்டிய காலத்தில் இராவண னிடம் நீ முனிய வில்லையே' என்று இராமபிரானை இடித்துரைத்து இகழ்ந்ததும் ஆகும்.

பி - ம். 1. வீரராயவர் புரிவ; யலங்கல் வீரா; கடுத்தது, செய்வ தாண்மை; செய்யா தாண்மைத்.
2. தொன்மைநான் மறைகட் கெல்லாம், தொன்மையே யிலையந்த னாருன், தொன்மையி னன்னூருனே, தொன்மைய விலையந்த,
3. இலங்கை வேந்தன்; முறையல செய்தா யென்று. (85)

312. இருவர்போ ரெதிருங் காலை
யிருவரு நல்லுற் ருரே
ஒருவர்மேற் கருணை தூண்ட
வொருவர்மே லொளித்து நின்று
வரிசிலை குழைய வாங்கி
வாயம்பு மருமத் தெய்தல்
தருமமோ பிறிதொன் ருமோ
தக்கில தென்னும் பக்கம்.

இருவர் போர் எதிரும் காலை - (அந்நியர்களான) இரண்டுபேர்கள் ஒருவரை யொருவர் எதிர்த்துப் போர் செய்யும்போது, இருவரும் நல் உற்ருரே - அவ்விருவரும் தனக்கு விரோதியர் அன்றி நல்ல உறவினர் போலவே ஆவர்; (அவ்வாறிருக்க), ஒருவர்மேல் கருணை தூண்ட - அவ்விருவருள் ஒருவர்மீது அருளானது செலுத்த, ஒளித்து நின்று - தன்னை அறியாமல் மறைத்துக்கொண்டு நின்று, ஒருவர்மேல் வரிசிலை குழைய வாங்கி - மற்றவர்மேல் கட்டுக்கள் அமைந்த வில் மிகவும் வளையும்படி செய்து, வாய் அம்பு மருமத்து எய்தல் - கூரிய வாயையுடைய அம்பை மார்பில் எய்வது, தருமமோ - தரும மாகுமோ? (அல்லது) பிறிது ஒன்று ஆமோ - தருமத்தினும் மாருன அதருமம் அல்லது அடாத செயல் ஆகுமோ? தக்கிலது என்னும் பக்கம் - அது தகுதி யுடையதன்று என்னும் பக்கத்திற் சேர்க்கவேண் டியதே ஆகும்.

மருமம் - மார்பு: அல்லது உயிர்நிலை உறுப்பு; 'மருமத்தி னெறிவேல் பாய்ந்த புண்ணில்' (பால. கையடைப்: 11), குழைய வாங்கி - நன்ருய் வளைத்து; வாங்குதல் - வளைத்தல்; (சூடா.) 'வாங்கு வில்லன் வரும்வரு மென்றிரு' (ஆரணிய. 1039); 'வாங்கினனப் பூங்கமலக் கையாலு மொருசாபம்', (வி. பா. 12-ஆம் போர், 1.). தக்கிலது - தகுதியற்றது; ஆரணிய. 289; திருக்கோ. 376. பக்கம் - பக்ஷபாதமும் ஆம். 'தக்கிலதென்னும் பக்கம் - தகாதென்பரயலார்': பழையவுரை'

பி-ம். 1. யிருவர்க்கு நடுநில் லாமல், யிருவரு நல்லும் ருரேல்.
2. கருணை தூண்ட, கருணை யாகி.
3. வாய்ப்புற மருமத் தெய்தால்.
4. தகுமில தென்னும் பக்கம், தராதரத் தென்னும் பக்கம்.

சில பிரதிகளில் அடியிற்காணும் ஓர் அதிகப் பாடல் இதன்பின் காணப்படுகிறது.

ஒன்ருக நின்னேேடுறுஞ்செற்ற மில்லை
யுலகுக்கு நான்செய்த தோர்குற்ற மில்லை
வென்ருள்வ தேயென்னில் வேருென்று மில்லை
வீணே பிடித்தென்றன் மேலம்பு விட்டாய்
தன்ருதை மாதாவு டன்கூடி யுண்ணத்
தண்ணீர்சு மக்குந் தவத்தோனை யெய்தான்
நின்ருதை யன்றேயும் நீயும் பிடித்தாய்
நெறிபட்ட வாறின்று நேர்பட்ட தாமே. (86)

வேறு

313. வீர மன்று விதியன்று மெய்ம்மையின்
வார மன்றுநின் மண்ணினுக் கென்னுடல்
பார மன்று பகையன்று பண்பொழிந்
தீர மன்றியி தென்செய்த வாறரோ.

வீரம் அன்று - (நீ செய்த இச்செயல்) உன் வீரச் சிறப்பைக் காட்டுவதன்று (வீரக் குறைவையே காட்டும் என்றபடி); விதி அன்று - யுத்த தருமத்தில் விதித்துள்ள நெறி அன்று; மெய்ம்மையின் வாரம் அன்று - உண்மையின் எல்லையில் அடங்கியதும் அன்று; நின் மண்ணினுக்கு - உனக்கு உரிய இப்புவிக்கு, என் உடல் - என்னுடைய உடம்பு, பாரம் அன்று - ஒரு சுமை என்று சொல்லக் கூடியதும் அன்று; பகை அன்று - உனக்கு நான் விரோதியும் அல்லன்; பண்பு ஒழிந்து - (அவ்வாருக), நீ உன் பெருமைக்குணம் நீங்கி, ஈரம் அன்றி - அன்பு என்பதும் அல்லாததாகி, இது என் செய்த ஆறு - இக்காரியம் செய்த முறை எதனுல்? அரோ-ஈற்றசை.

வாரம் - எல்லை. நின் மண்ணினுக்கு: சக்கரவர்த்தி குமாரனுதலாலும், இக்ஷுவாகு குல வரசர்க்குப் பூமி முழுவதும் உரியது என்றது பற்றியும் என்க.

நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே' (பால. அரசியற்: 7.)

என்று தசரத சக்கரவர்த்தி சிறப்பிக்கப் பெற்றமை காண்க; இவ்வாறே வான்மீக ராமாயணம், இரகுவமிசம் முதலிய நூல்களும் கூறும்,

பண் பொழிந்து : பண்பு ; 'பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்', (கலி. 133) என்றமை நோக்குக. ஈரமன்று : வாலி கூறிய இந்த ஈரமற்ற செய்கை, அவ் வாலிபாலேயே உள்ளதென்பதை (330) ஆம் செய்யுளால் இராமபிரான் விளக்கிய தன்மை நோக்கற் பாலதாம்.

பி - ம். 1. வீரமன்று வினையன்று வெம்மைமேல் ; மெய்ம்மையால், மெய் மைசால், மெய்ம்மைமேல், மெய்ம்மை சேர்.
2. நம்மண்ணினுக், நின்மண் மகட்கென்னுடல்.
3. பண்பழிந்.
4. திரமன்றிஃ, திரமன்றிதென் ; ஈரமன்றியிதென் ; வாறுநீ. (87)

314. இருமை நோக்கிநின் றியாவர்க்கு மொக்கின்ற
அருமை யாற்றலன் றேவறங் காக்கின்ற
பெருமை யென்பதி தென்பிழை பேணல்விட்
டொருமை நோக்கி யொருவற் குதவலோ.

'இருமை நோக்கி நின்று - இரு பக்கத்தாரையும் சமநோக்கத் துடன் வேறுபாடின்றிப் பார்த்து, யாவர்க்கும் ஒக்கின்ற - உலகில் யாவர்க்கும் ஒப்புக்கொள்ளக் கூடியதாகின்ற, அருமை ஆற்றல் அன்றே - ஓரம் செய்யாமல் அரிய நீதியைப் புரிதல் அல்லவோ, அறம் காக்கின்ற பெருமை என்பது - தருமத்தைப் பாதுகாக்கின்றது என்னும் பெருமைக் கிடமாவது ? (அவ்வாறின்றி), பிழை பேணல் விட்டு - தவற்றினின்று உன்னைப் பாதுகாத்தலை விடுத்து, ஒருமை நோக்கி - ஒருபக்கம் நோக்கமுடையவனாகி, ஒருவற்கு உதவல் ஓ - உன் விருப் பிற்கொண்ட ஒருவனுக்கே உதவி புரிதலோ ? இது என் - இது என்ன நியாயம் ? (நியாயமன்று என்றபடி).

இருமை நோக்கி : இம்மை மறுமைப் பயன்களைக் கருதிப் பார்த்து, எனப் பொருள் கொண்டாரும் உளர். இச் செய்யுள், 'தகுதியென வொன்று நன்றே, பகுதியால் பாற்பட் டொழுகப் பெறின்' (குறள். 111) என்ற கருத்தை அடியொற்றி அமைந்தது என்னலாம்.

பி - ம். 1, நோக்கினை, நோக்கிநீ, பிழைநோக்கல்விட்டு.
2. வறங்காப்பது, அறங்காக்குறுங்.
3. யென்பதபின், ுயென்பதவன், என்பது நோக்கல் விட்டு, பெருமை யென்பதை, பிழை நோக்கல், யன்பிழை நோக்கல் விட், பெருமை யென்பதிலென் பிழை நோக்கல்விட்டு.
4. டொருமை நீக்கி, யொருவற் குதவலே, ஒருமை யெய்தி யொருவர்க் குதவியே. (88)

**315. செயலைச் செற்ற பகைதெறு வான்றெரிந்
தயலைப் பற்றித் துணையமைந் தாயெனின்
புயலைப் பற்றுமவ் வெங்கரி போக்கியோர்
முயலைப் பற்றுவ தென்ன முயற்சியோ.**

'செயலை செற்ற - உன் இல்வாழ்க்கைச் செயலை அழித்த, பகை தெறுவான் தெரிந்து - பகைவனை இராவணனை அழிக்கும் பொருட்டு ஆராய்ந்து, அயலை பற்றி - அயலான் ஒருவனைச் சார்ந்து, துணை அமைந்தாய் எனில் - நீ அவனைத் துணைவனாகச் சேர்த்துக்கொண்டாய் ஆனால், புயலை பற்றும் - மேகத்தைப் பற்றி யிழுக்கும், அ வெம் கரி போக்கி - கொடிய யானையை விடுத்து, ஓர் முயலை பற்றுவது-ஓர் அற்ப முயலைத் துணையாகப் பற்றிக்கொள்வது, என்ன முயற்சியோ - என்ன முயற்சியாகும் ? (சிறந்த முயற்சி அன்று என்றபடி.)

'செயலைச் செற்ற பகை, முறைகெடுத்த இராவணன்' என்பது பழைய வுரை. இதனால் எதனையும் நிறைவேற்றவல்ல தான் இருக்கத் தன் துணை நாடாது, மிக எளிய சுக்கிரீவனைத் துணை நாடிக்கொண்டது வீண்காரியம் என்பது வாலி கருத்தாதல் காண்க. புயலைப் பற்றுமவ் வெங்கரி :- யானை புயலைப்பற்றுவது, நீர்வேட்கை தணித்துக் கொள்ளவும், அதனை ஒரு பிடி என்று மயங்கியும் ஆம். ஒப்பு : அயோத். வனம் புகு: 47; சித்திரகூடப் : 2; திருவேங்கடமாலை 31. யானை, பெருமைக்கும் வலிமைக்கும், முயல் எளிமைக்கும் சிறுமைக்கும் உதாரணங்களாய் நின்றன.

இச் செய்யுளாலும், 'அரக்கனோ ரழிவு செய்து' என்னும் (308) ஆம் செய்யுளாலும் இராவணன் பிராட்டியை அபகரித்துச் சென்றதை வாலி முன்னரே அறிந்தவனாதல் வேண்டும். அவ்வாறாக இராவணனது தீய செயலை அறிந்திருந்தும் வாலி, சடாயு போல இராவணனை எதிர்த்துப் பிராட்டியை மீட்கக் கருதாது வாளாவிருந்தது ஏனெனில், முன் தன் வாலிற் கட்டுண்டிருந்த இராவணன், தன் பிழை பொறுத்தருளுமாறு குறையிரப்ப, அவனை விடுவித்ததோடு, 'இனி நீ என் சகோதரன், போல்வாய்; இனி உன்னைத் துயருறுத்தேன்;' என்று உறுதி கூறியதாலும் என்னலாம். மேலும், கவந்தன், சாபத்தால் அடைந்த தீய இராக்கத உரு நீத்து நல்லுருவும் நல்லுணர்வும் அடைந்த நிலையில், இராமபிரானை நோக்கி, 'நல்லோர் துணைபெற வேண்டும் ஆதலின் நீ சுக்கிரீவன் துணை நாடிக்கொள். அவன் இருப்பிடம் சவரி கூற அறியலாம்' என்று கூறிச் சென்றபடி, சவரியை நாடி அவள் கூறிய வழியே சென்று சுக்கிரீவன் நட்பை இராமபிரான் பெற்றான் என்பதாம்; அநுமனும் இராமபிரானிடம் வாலி, சுக்கிரீவனுக்கு இழைத்த கேடு

பலவற்றோடு அவன் மனைவி உருமை என்பாளையும் கைப்பற்றிக் கொண்ட கொடுஞ் செயலையும் கூறியுள்ளதும், (145) பாடலால் அறியத்தக்கதாம். உண்மை இவ்வாறிருக்க, வாலி இங்குக் கூறியது பொருத்தமன்று என்பது காண்க.

பி - ம். 1. செயலைச் செற்றுப்; பகையடுவான், பகை தெரிவான் தெறுவே தெளிர்.

2. யமைந்தாய் மழைப், மறந்தாயெனின், யமர்ந்தா யெனின்.

3. பற்றுமப் பொங்கரி, பற்றுறும்.

4. முயலைப் பற்றினை ; முயற்சியே. (89)

316. காரி யன்ற நிறத்த கவங்கமொன்
றூரி யவ்ற மதிக்குள தாமென்பர்
சூரி யன்மர புக்குமொர் தொன்மறு
ஆரி யன்பிறந் தாக்கினை யாமரோ.

'ஊர் இயன்ற- சஞ்சரிக்கும் இயல்புடைய, மதிக்கு - சந்திரனுக்கு; கார் இயன்ற நிறத்த - கருமை பொருந்திய நிறத்தையுடைய, களங்கம் ஒன்று - ஒரு மறு, உளது ஆம் என்பர் - உள்ளது என்று கூறுவர்; சூரியன் தொல் மரபுக்கும் ஓர் மறு - பழைய சூரிய குலத்திற்கும் ஒரு களங்கத்தை, ஆரியன் - பெருமைக்குரிய நீ, பிறந்து ஆக்கினை ஆம் - நீ தோன்றி உண்டாக்கி விட்டாய் போலும்! அரோ, ஈற்றசை; வினப் பொருளில் வந்ததுமாம்.

ஊர்; முதனிலைத் தொழிற் பெயர்; 'ஊர்தரு குரங்கின் மாடே' (309) என்றது போல; 'வானூர் மதியம் சகடணைய' (சிலப். 1, 50.) கார்: பண்புப் பெயர். களங்கம் - குற்றம் அல்லது தோஷம் (பிங்). சந்திரனுக்கு உள்ளது போன்ற மறுவைச் சூரியனுக்கும் அக்குலத்திற் பிறந்த நீ உண்டாக்கி விட்டாய்: இதனல் ஒருவன் செய்த குற்றமோ நன்மையோ அவன் பிறந்த குலத்து முன்னோரைப் போய்ச் சாரும் என்ற உண்மை விளக்கப் பெற்றது காண்க. இந்நூலில் அரோ, என்பது வினப்பொருளையும் ஏற்று வருதல் மற்றும் பல இடங்களிற் காணலாம். ஆரியன் என்றது இங்கு வஞ்சப் புகழ்ச்சியாக இழித்துரைத் ததாகும். ஆரியன் பிறந்தாக்கினை : இடவழுவமைதி.

பி - ம். 1. காரியன்ற களங்க நிறத்தொன்மை; நிறத்த தழங்களல், நிறத்த களங்கமல்; களங்க முன்; களங்கனல்.

2. வாரியென்ற மதிக், வாரியவ்பு மதிக்; ஊருகின்ற மதிக்; மதிக் குளதாமெனச்.

3. மரபிற்குமொர், மரபுக்கொரு தொன்மறு, மரபுக்குள தொன்மறு. (90)

317. மற்றொ ருத்தன் வலிந்தறை கூவவந்
துற்ற வென்னையொ ளித்துயி ருண்டநீ
இற்றி தற்பி னிகலரி யேறென
நிற்றி போலுங் கிடந்த நிலத்தரோ.

'மற்று ஒருத்தன் வலிந்து அறை கூவ - உனக்கு எந்த விதத்திலும் தொடர்பில்லாத அந்நியனான சுக்கிரீவன் (என்னை அணுகி) வலுவிலே என்னைப் போருக்கு அழைக்க, (அதனால்), வந்து உற்ற என்னை - இங்கு அவனோடு போர் புரிய வந்தடைந்த என்னை, ஒளித்து உயிர் உண்ட நீ - ஒளிந்திருந்து (அம்பு ஏவி என்) உயிரைக் கவர்ந்த நீ, இற்று இதன் பின் - நீ இவ்வாறு ஆன இதன் பிறகு, கிடந்த நிலத்து - நான் இறக்கும் நிலையில் சோர்ந்து வீழ்ந்து கிடக்கின்ற இப்போர்க்களத்தினிடத்து, இகல் அரி ஏறு என - போரிற் சிறந்த ஒரு சிங்கம் போல, நிற்றி போலும் - வெட்கமின்றிப் பெருமிதத்தோடு நிற்கின்றாய் போலும்! அரோ - அசைச் சொல்.

அறை கூவல் : தன் வீரத் தன்மையைக் கூறிப் போருக்கழைத்தல், கிடந்த நிலத்து - பரந்து கிடந்த இப்புவியிடத்து, என்றலும் ஆம், அரோ : 313இல் உள்ளபடி வினாப்பொருளை உணர்த்துவதும் ஆம்.

பி - ம். 1. *தறை கூறவர்.*
2. *துற்ற போரி லொளித்; துயிருண்டனை, துயிருண்டசீர்.*
3. *இற்றையிற் பிறகு மிக, எற்றகும்படி யாவிகலேறென, இற்றையிற் பிறர்க்கு.*
4. *நிற்றல் சாலுங் கிடந்த; கிடத்த னிறத்தரோ.* (91)

318. நூலி யற்கையு நுங்குலத் தந்தையர்
போலி யற்கையும் சீலமும் போற்றலை
வாலி யைப்படுத் தாயலை மன்னற
வேலி யைப்படுத் தாய்விறல் வீரனே.

நூல் இயற்கையும் - சாத்திரங்கள் கூறும் இயல்பான முறைகளையும், நும் குல தந்தையர் போல் - உங்கள் குலத்து முதாதையரைப் போல, இயற்கையும் - அவர்கள் வழக்கத்தையும், சீலமும் - அவர்களுடைய நல்லொழுக்கத்தையும், போற்றலை - நீ ஏற்று நடந்தாயல்லை! வாலியை படுத்தாய் அலை - வாலியை வீழ்த்தி அழித்தாயல்லை; (ஆனால்), மன் அறம் வேலியை - அரச தருமம் என்ற (உலகைப் பாது

காக்கும்) வேலியையே, படுத்தாய் - அழித்தவன் ஆனாய்; விறல் வீரனே - நீ வலிமை வாய்ந்த சுத்த வீரன் ஆவாயோ?

இயற்கை- 'உலகத்தியற்கையறிந்து செயல்'; (குறள். 637) என்றது போல. சீலம் - நல்லொழுக்கம்; இதனைச் சதாசாரம் என்பர் வட மொழியில்; 'சீலமும் புகழ்க்கு வேண்டும் செய்கையும்' (அயோத். மந்திரப் : 8). வாலியைப் படுத்தாயலை...; வாலியை அழித்து விட்டேன் என்று இறுமாந்து பெருமைப்படாதே! அரச நீதி என்ற (உலக) வேலியையே நீ அழித்து விட்டாய் என்று எண்ணிக்கொள்' என்று இராமபிரானுடைய செயலைத் தகாதது என்று சுட்டிக் காட்டினன் வாலி என்க; இஃது ஒழிப்பணி எனப்படும்: 'மூக்கரிந்து நுங்குலத்தை முதலரிந்தீர்'; 'உன்னை முனிவித்துன் குலத்தை முனிவுற்றாய்' (ஆரணிய. 343, 744) என்பன போன்றது. அற வேலி - தருமவேலி; ஆரணிய. 944. விறல் வீரனே; இஃது இகழ்ச்சியின் மேற்று. இதனை இராம பிரானை நோக்கிய விளியாக முன் கூட்டியுரை கொண்டாரும் உளர்: நுங்குலம்; உளப் பாட்டுத் தன்மைப் பன்மை: 3-4 அடிகள், 'கம்பர் திறமை' என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. நங்குலத் தந்தையர்; னுந்தையோர், தந்தையோர், தந்தையே.
2. போலியற்கையிற்.
3. மன்னர் தம், மன்னரண், மன்னற,
4. வேலியைப் பிரித்தாய். (92)

ஒரு சுவடியில் இதன்பின்; 'என்று தானும்' எனத் தொடங்கும் (322) ஆம் செய்யுள் உள்ளது.

319. தார மற்றொரு வன்கொளத் தன்கையில்
பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே
நேரு மன்று மறைந்து நிராயுதன்
மார்பி னெய்யவோ வில்லிகல் வல்லதே.

'தாரம் - உன் மனைவியை, மற்றொருவன் கொள - அயலான் ஒருவன் கவர்ந்து கொள்ள, (என்னை நீ அடித்தது), தன் கையில் - உன் கையில் நீ கொண்டுள்ள, பாரம் வெம் சிலை - பளுவான கொடிய வில்லினது, வீரம் - வீரத் தன்மையை, பழிப்பது - பழிப்பதற்கு இடமாக்கியதாகும்; (அப்பழியோடு அமையாது) நேரும் அன்று - நேரில் நிற்பதும் அல்லாமல், மறைந்து - ஒளிந்திருந்து, நிராயுதன் மார்பின் - ஆயுதங்

கொள்ளாத எனது மார்பில், எய்யவோ - அம்பு எய்வதற்காகவோ, வில் இகல் வல்லது - விற்போர் புரிதலில் நீ வல்லவன் என்று சொல் லப்படுவது ?' ஏகாரங்கள், முன்னது அசையும், ஈற்றது எதிர்மறை வினவும் ஆம்.

பாரவெம் சிலை வீரம் பழிப்பது - பாரமும் கொடுமையும் அமைந்த உன் வில், 'நீயும் ஒரு வீரன் போல் என்னை வீணே ஏந்திக் கொண்டி ருக்கின்றாயே!' என்று உன்னைப் பழிப்பது போன்றது என்று கூறினும் அமையும். வில்லிகல் வல்லதே; மனைவியை அபகரித்துச் சென்ற இராவணனிடம் எதிர் நின்று பொர இயலாது, நிராயுதனான என்மீது யாதொரு காரணமுமின்றி, மறைந்து நின்று கொன்ற உன் விற்போர்த் திறம் நன்று என்று இகழ்ந்ததும் ஆம். நேரும் அன்று - நீதியும் அன்று எனலும் ஆம். இனி, நீ வில் வித்தை கற்ற பெரியோருக்கு இகழ்ச்சி தருவதும் ஆம் எனச் சுட்டியதும் ஆம்.

நிராயுதன் - ஆயுதம் இல்லாதவன்; வாலி, சுக்கிரீவன் முதயலி வானரர்கள், தம் தோள் வலி கொண்டு தாக்கியும் மரம், மலை, முதலிய வற்றைப் பிடுங்கி அவற்றை ஓச்சியும் போரிட்டவரே அன்றி, மானி டர் அரக்கர் போலப் போர்க் கருவிகள் கொண்டு போரிடாதவர்கள் என்பதாம். போரில் நிராயுதனைப்படை கொண்டு பொருவது முறை யன்று; உயுத்த. முதற்போர். 251; புறநா. 130 : 7; சிறுபஞ்ச. 41; பெரிய. ஏனாதி : 39.

பி - ம். 2. *பாரவெஞ் சிலை வல்லோ பழியன்றோ; தானும் பழியுற; பழுதுற; வீரம் பழியுற.*

3. *நேரு மென்று, நேரு மன்றி.*

4. *மார்பி னெய்திடல் வீரத்தின் மாட்சியோ.* (93)

குறிப்பு :-

இச் செய்யுள் பழைய ஏட்டுப் பிரதி யொன்றில் இல்லை. இஃது இடைச் செருகலோ என்ற ஐயத்திற்கு இடமாகிறது. இராவணனிடம் இராமன் போரிட மாட்டாமையும், மறைந்து நின்று தன்மீது அம் பெய்தமையும் வாலி பின் பிற இடங்களில் சுட்டிக்காட்டி வினவு தலால், இங்கு இச் செய்யுள் மிகையாகத் தோன்றுகிறது. ஆயினும், யாம் ஆராய்ந்த ஏட்டுச் சுவடிகளிலும், அச்சுப் பிரதிகளிலும் இப் பாடல் உள்ளமையால் இது விலக்கப் பெறாது, தொடர்பெண் கொடுத்துப் பாட வரிசையில் இங்குச் சேர்த்துக் கொள்ளப் பெற்றது.

320. என்று தானு மெயிறு பொடிபடத்
தின்று கான்று விழிவழித் தீயுக
அன்ற வாலி யனையன கூறினன்
நின்ற வீர னினைய நிகழ்த்துவான்.

என்று - மேற்கண்டவாறு, அ வாலிதானும் - அந்த வாலியும், எயிறு பொடி பட தின்று - (கோபத்தால்) தன் பற்கள் பொடியாகும் படிக்கடித்து, விழி வழி - அவன் கண்களின் வழியாக, தீ கான்று உக-நெருப்பு வெளிப்பட்டுச் சிந்த, அன்று - அப்பொழுது, அனையன கூறினன் - அச்சொற்களைச் சொன்னான்; நின்ற வீரன் தானும் - அவன் எதிர் நின்ற வீரம் நிறைந்த இராமபிரானும், இனைய - இத் தன்மையவான மறு மொழிகளை, நிகழ்த்துவான் - சொல்வானானான்.

வாலி கூறியன யாவும் அவன் வெகுளி நிலையிற் கூறியன என் பதையும், 'வீரன்' என்றமையால், இராமபிரான் பிழை புரிந்தவன் அல்லன் என்பதையும் இங்கு ஆசிரியர் நுட்பமாகச் சுட்டியது காண்க. எயிறு தின்று பற்களைக் கடித்து; கோபத்தை யுணர்த்தும் மெய்ப்பாடு; பால. : தாடகைவதைப் ; 51 ; ஆரணிய. 602 ; அன்றவ் வாலி எனற் பாலது இயல்பாய் நின்றது.

பி - ம், 1. மெயிறு பொறி யெழ.

2. தின்று காந்தும், தின்று காந்தி.

3. வென்றி வாலி யனைய விளம்பினன் ; அனையன சொல்லினன்.

4. வீர னிதனை ; வீரன் நெடிதுரை பேசினன் ; யினைய நிகழ்த் தினன். (94)

321. பிலம்புக் காய்நெடு நாள்பெய ராயெனப்
புலம்புற் றுன்வழிப் போதலுற் றான்றனைக்
குலம்புக் கான்ற முதியர் குறிக்கொளீஇ
அலம்பு தாரவ நீயர சென்றலும்.

பிலம் புக்காய் - (முன்னாள் மாயாவி என்னும் அசுரனைத் தொடர்ந்து' பிலத்தினுள்ளே புகுந்த நீ, நெடுநாள் பெயராய் என - நெடு நாட்களாகியும் வராது இருந்தாய் என்று, புலம்பு உற்று - வாய் புலம்பி வருந்தி, உன்வழி போதல் உற்றான் தனை - (நீ சென்ற அப் பிலத்தின் வழியே), உன்னைத் தொடர்ந்து தேடிப் போகத் தொடங் கிய உன் தம்பியாகிய சுக்கிரீவனை, குலம் புக்கு ஆன்ற முதியர் - உங்கள்

வானர குலத்திற் றேன்றி நல்ல அறிவால் நிறைந்த பெரியோர்கள், குறி கொளீஇ - அவனுடைய குறிப்பான எண்ணத்தை மனத்திற்கொண்டு (அவனை நோக்கி), 'அலம்பு தாரவ - அசையும் மாலையையுடைய சுக்கிரீவ! நீ அரசு என்றலும் - இனி எங்கட்கு நீதான் அரசன்' என்று எடுத்துக் கூறலும்.

இச் செய்யுள் முதல் 336 முடிய வாலியின் பெருங் குற்றங்களை இராமபிரான் சுட்டிக் காட்டியதைக் கூறும். இதுவும், அடுத்து வரும் இரு செய்யுள்களும் குளகமாய் இயைந்து ஒருவினை கொண்டு முடியும். குலம் புக்கு ஆன்ற முதியர் - குலத்தாலும் அறிவாலும் சிறந்த பெரியோர் என்க. குறிக் கொளீஇ - கொளீஇ; சொல்லிசை யளபெடை; குறிக்கொள்ளுதல் - மனத்திற் குறிப்பாய் ஊன்ற ஏற்றுக் கொள்ளுதல்; 'வீமன்றன் கோக்கா தலியைக் குறிக்கொண்மின்', (நள. 273). இங்கு, அவர்கள் சுக்கிரீவனும் இறக்கத் துணிந்தமையைக் குறிக் கொண்டது என்க.

பி - ம் 1. வெகு நாட் பெயராய், பெயரா; செடுநாமனைப்.
2. புலம்புற் றும்பியும்.
3. குறிக் கொளா.
4. அலங்கற் றேளவ், அலம்பொற் றாரவ னேயர சென்னலும்; சென்னவும். (95)

322. வான மாளவென் றம்முனை வைத்தவன்
தானு மாளக் கிளையு மிறத்தடிந்
தியானு மாள்வெனி ருந்தர சாள்கிலென்
ஊன மான வுரைபகர்ந் தீரென.

(அதைக் கேட்ட சுக்கிரீவன்), 'என் தம்முனை - என் தமையனை, வானம் ஆள வைத்தவன் தானும் - இறந்து வீரசுவர்க்கம் ஆளச் செய்த மாயாவியும், மாள - இறக்கும்படியாகவும், கிளையும் இற - அவன் சுற்றத்தாரும் அழியவும், தடிந்து - கொன்று', யானும் மாள்வென் - (பின்) நானும் இறப்பேன்; இருந்து அரசு ஆள்கிலென் - இனி என் தமையனுக்குப் பின் யான் இவ் வுலகிலிருந்து இந்த அரசாட்சியை ஏற்று ஆள்மாட்டேன்; ஊனம் ஆன உரை பகர்ந்தீர் - நீங்கள் எனக்குக் குறைவுதரும் சொற்களைச் சொன்னீர்;' என - என்று கூற;

வான மாள: இறந்தான் என்று அமங்கலமாய்ச் சொல்ல விரும்பாமல், மங்கலமாய்க் கூறியது: வீரர்கள் போரில் எதிர்த்து நின்று

இறந்தால் வீரசுவர்க்கம் அடைவர் என்ற மரபு பற்றியுங் கூறியதாகும்; இது பிறிதினவிற்சி அணி என்பர். தம்முன் - தமையன்; 'மருதிப் பொருட்டான் மடிந்தோன் றம்முன்'; (மணி. 22 : 147).

வாலி மாயாவியால் இறந்ததாகக் கருதிய சுக்கிரீவன் போர்புரிந்து அம் மாயாவியை அழித்துப் பின் தானும் இறப்பதாகக் கூறிய இச் செய்தி, முன், 132, 133 பாடல்களால் விளக்கப் பெற்றது காண்க. ஊனம், இழிவும், குற்றமும் ஆம்.

பி - ம். 1. வாள மாளுதற் கெம்முனே.
2. இளையினிறத், இளையின் றளேறடிர், இளையின் றவைதடிர்; இளையின் மாளச்ச மரிடைத் தாக்கியே.
3. தரசாற்றிலேன்.
4. வுலை புரிந்திரென, வுரைபுகன் றீரென; புரிந்தி ரென்ருன்; புரிந்திரெனு. (96)

323. பற்றி யான்ற படைத்தலை வீரரும்
முற்று ணர்ந்த முதியரு முன்பரும்
எற்று றும்மர செய்திலை யேலெனக்
கொற்ற நன்முடி கொண்டிலன் கோதிலான்.

'(அது கேட்டு), ஆன்ற படை தலை வீரரும் - சிறந்த வானரப் படைத் தலைவர்களாகிய வீரர்களும், முற்றுணர்ந்த முதியரும் - நன் குணர்ந்த, அறிவாலும் வயதாலும் முதிர்ந்த (மந்திரிகள் முதலிய) பெரியோர்களும், முன்பரும் - மற்றை மேலோர்களும், பற்றி - அச்சுக்கிரீவனைப் பிலத்துட் புகாது பிடித்துக்கொண்டு, 'அரசு எய்திலையேல் - நீ அரசாட்சியை அடையவில்லை என்ருல், எற்று உறும் - (நம் வானர சமூகம்) என்ன கதி அடையும்?' என - என்று நிலையை விளக்கி வற்புறுத்திக் கூறியபோதும், அ கோது இலான் - அந்தக் குற்ற மற்ற சுக்கிரீவன், கொற்றம் நல் முடி கொண்டிலன் - அரசற்குரிய அழகிய முடியை (அப்பொழுதும்) ஏற்றுக் கொண்டானல்லன்.

ஆன்ற - நிறைந்த எனலும் ஏற்கும். முன்பர் : முன்பு - வலிமை, தலைமை; 'முன்பனில் வந்து மொழிந்தனன்'; (அயோத். குகப். 24; சுந்தர. 61.) இங்கு அமைச்சர் முதலியோர் 'நீ அரசேற்காவிடில் நாடு நாசமுறும்' என்று அவன் கடமையைச் சுட்டி வற்புறுத்தினர் என்பது குறிக்கப்பெற்றது. இவ்வாறே வற்புறுத்தப் பெற்ற பரதன், அரசியலை மறுத்ததும் காண்க.

இச் செய்யுளின் ஈற்றடி, 'கொற்ற நன்முடி கொண்டிலன் கோதிலான்' எனச் சில பழைய சுவடிகளில் உள்ளவாறே எடுத்துக் கொள்ளப் பெற்றது. இவ்வாறே முன், அநுமன் இராமபிரானிடம் சுக்கிரீவன் வரலாறு கூறுமிடத்தும்,

> தடுத்து வல்லவர் தணிவு செய்துநோய்
> கொடுத்து மேலையோர் கிளத்து நீதியால்
> அடுத்த காவலு மரசு மாணையில்
> கொடுத்த துண்டிவன் கொண்ட தில்லையால். (133)

எனச் சுக்கிரீவன் அப்போது அரசனாக முடி சூட்டிக்கொள்ள வில்லை என்றே கொண்டுள்ளமை காணலாம்; இதனால் சுக்கிரீவன் அப்போது முடி சூட்டிக்கொள்ள மறுத்துவிட்டான் என்பதும், பின் இராமபிரான் வாலியை வதைத்த பிறகே, அவ் விராமபிரானால் ஏவப்பெற்று அரசுரிமையை மேற்கொண்டு முடி சூட்டிக்கொண்டான் என்பதும் விளங்குவன காணலாம். இக்கொள்கை, வான்மீகர் முதலியோர் கருத்துக்கு மாறுபட்டிருப்பினும், அறிவிற் சிறந்த ஆசிரியர் கம்பநாடர், தாம் யாத்த வழிநூல் என்னும் முறையையும் உரிமையையும் மேற்கொண்டு, தாரையின் இயல்பை மாற்றி யமைத்தது போல, சுக்கிரீவனுடைய குணச் சிறப்பையும் தம் கொள்கைக்கு ஏற்ப எடுத்துக்காட்டினர் என்பதாம். இராமபிரானுடைய நற்றுணைவராய் அமைந்தவர் யாவரும் நற்குணச் சிறப்புக் கொண்டவரே எனும் கொள்கையைக் கொண்ட நம் ஆசிரியரின் பெருந்தகைமையும், பக்தி மேம்பாடும் இங்குத் தெள்ளிதில் புலப்படுவன காண்க. 'கோதிலான்' என்று சுக்கிரீவனை இங்குக் கூறியதும், அக்கருத்தை வலியுறுத்துவதாகும்.

பி - ம். 1. பற்றி யந்தப், பற்றி யுற்ற, பற்றி யாண்டப், பற்றி யாளும்.

2. முதியகு மன்பரும், முதியரும் பின்னுமே.

3. இற்ற தம்மர செய்தலை யேலெனக், எற்று தம்மர செயதனை யென்னவும், எற்றனும் மா செய்தலை யேலெனக், எற்றவன்றர ; இற்ற தன்னர செய்தவி யென்றவர்க் ; யெய்த லையா,மெனக்.

4. கொண்டநிக் கோதிலான், கொண்டவிக் கோதிலான், கொண்டிலன் கோதிலான், கொண்டிலனக் கோதிலான், கொற்ற நன்முடி சூட்டினர் கொண்டிலான். (97)

324. வந்த நின்னை வணங்கி மகிழ்ந்தனன்
எந்தை யென்கணி னத்தவ ராற்றலின்
தந்த துன்னர சென்று தரிக்கிலேன்
முந்தை யுற்றது சொல்ல முனிந்துநீ;

வந்த நின்னை - பின் மாயாவியைக் கொன்று திரும்பி வந்த உன்னை, மகிழ்ந்தனன் வணங்கி - (உன் தம்பி) மகிழ்ச்சிகொண்டு வணங்கி, 'எந்தை - என் தந்தை போன்றவனே! இனத்தவர் - நம் இனத்தாரான வானரத் தலைவர்கள், என் கண் - என்னிடத்து, ஆற்றலில் - தம் உணர்ச்சி வலுவால் (வற்புறுத்தி), தந்த - கொடுத்த, உன் அரசு - உன்னுடைய அரசை, தரிக்கிலேன் - நான் ஏற்றுக் கொள்ளவில்லை'; என்று - இவ்வாறு, முந்தை உற்றது - முன் நடந்த சம்பவங்களை யெல்லாம், சொல்ல - எடுத்துக் கூறவும், நீ முனிந்து - நீ அவ்வார்த்தைகளை ஏற்காது அவன்மீது கோபமுற்று;

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து வினைமுடிவு கொள்ளும். சுக்கிரீவனின் தூய தன்மை இங்கும் வற்புறுத்தப் பெற்றமை காண்க. எந்தை: தமையன் தந்தைக்கு ஒப்பானவன் என்னும் முறைப்படி கூறியது; இஃது அண்மை விளியாதலின் இயல்பாய் நின்றது. முந்தை: ஐயீற்றுடைக் குற்றியலுகாம்; உற்றது; வினையாலணையும் பெயர். முனிந்து: முனிவு; வெறுப்பும் ஆம்.

பி - ம். 1. வந்த வுன்னை.
3. தந்த வுன்னர, தந்த வின்னரச சென்று தரித்திலான், தருக்கிலான். (98)

325. கொல்ல லுற்றனை யும்பியைக் கோதவற்
கில்லை யென்ப துணர்ந்து மிரங்கலை
அல்லல் செய்ய லுனக்கப யம்பிழை
புல்ல லென்னவும் புல்லலை பொங்கினாய்.

'உம்பியை கொல்லல் உற்றனை - உன் தம்பியை நீ கொல்ல வந்தாய்: அவற்கு கோது இல்லை என்பது உணர்ந்தும் - அந்தச் சுக்கிரீவனிடம் குற்றம் இல்லை என்பதை நீ அறிந்தும், இரங்கலை - அவன் பால் நீ இரக்கங் கொள்ளவில்லை; 'அல்லல் செய்யல் - (அவன் உன்னை நோக்கி), என்னைத் துன்புறுத்தாதே! உனக்கு அபயம் - உன் பால் அடைக்கலமானேன்; பிழை புல்லல் - என்பாற் குற்றங் கொள்ளாதே!' என்னவும் - என்று உன்னை அவன் இரந்து வேண்டிக்

கொள்ளவும், புல்லலே பொங்கினுய் - அதை ஏற்றுக் கொள்ளாது அவன்பாற் சீற்றம் கொண்டாய்.

இச் செய்யுளில், குற்ற மற்றவனே ஒறுத்தலும், தஞ்சமடைந்தவனே அழிக்கத் தொடங்கலும் ஆகிய வாலியின் இழிந்த செயல்கள் எடுத்துக் காட்டப் பெற்றன. இது, 'என்பா லென்பிழை கண்டாய்' (308) என்ற வாலியின் வினுவுக்கு விடையாகும். அவற்கு: உருபு மயக்கம். செய்யல்; எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. 'பயனில் சொல் பாராட்டு வானே மகனெனல்' (குறள். 196.) என்றமை போல. அபயம் - பயமில்லாமை என்னும் பொருளது; இங்கு அடைக்கலம் என்ற கருத்தை யுணர்த்தி நின்றது; 'ஒப்பு: அருளுடை வீரநின் னபயம் யாமென்ருர்' (ஆரணிய: 133); உயுத்த. வீடணனடைக்கலப்: 120-ம் நோக்குக.

பி - ம். 2. யென்பது கண்டு மிரங்கிலே.
3. அல்லல் செய்யே; யெனக்கபயம்; பிழைப் (பில்லே).
4. பில்லே யென்னவும்; கொல்ல வென்னவுன் கொண்டில கோத ளாய்; புல்வி தென்னவுங். (99)

326. ஊற்ற முற்றுடை யானுனக் காரமர்
தோற்று மென்று தொழுதுயர் கையனேக்
கூற்ற முண்ணக் கொடுப்பெனென் றெண்ணினுய்
நாற்றி சைக்கும் புறத்தையு நண்ணினுன்.

ஊற்றம் முற்று உடையான் உனக்கு - வலிமை முழுவதும் அடைந் துள்ளாணுகிய உனக்கு, ஆர் அமர் தோற்றும் - பொருந்திய இப் போரில் யான் தோற்றவனே ஆவேன்;' என்று - எனத் தன் வலியின்மையை எடுத்துக் கூறி, தொழுது உயர் கையனே - உன்னே வணங்கித் தூக்கிக் கூப்பிய கைகளேயுடைய இச்சுக்கிரீவனே, கூற்றம் உண்ண - யமன் பற்றி யுண்ணும்படி, கொடுப்பென் என்று எண்ணினுய் - கொடுப்பேன் என்று தீர்மானித்தாய்; (அதனுல் அவன் பயந்து), நால் திசைக்கும் புறத்தையும் நண்ணினுன் - நான்கு திசைகளினிடத்தையும் அவற்றிற்கு அப்பாலுள்ள இடங்களேயும் போய் அடைந்தான்.

ஊற்றம் - வலிமை; 'உனக்கியாதுள தூற்ற மென்ருன்;' (அயோத். நகர் நீங்கு: 137); 'நிருதி யூற்ற மிழந்துயிர் நீங்கவே'; (தக்க. 685); தோற்றும்: செய்யும் என்னும் வாய்ப்பாட்டு எதிர்கால வினைமுற்று. உயர்கை - தலேமேல் உயர்த்திக் கூப்பிய கை; 'தொழுதுயர் கையினன்' (அயோத். கிளேகண்டு: 49). கூற்றம்: தொழிலாகு பெயராய், யமனேக்

குறிப்பது. திசைக்கும் - வேற்றுமை மயக்கம். எண்ணுதல் - தீர்மானித்தல் (பிங்.) 'ஊற்றமுடையான் - அன்புடையான்' என்பது பழையவுரை; இவ்வுரைப்படி இத்தொடர் சுக்கிரீவனைக் குறிக்கும்.

பி - ம். 1. ஊற்ற முன்னுடை, ஊற்றமும் முடையா யோரமர்.
2. தோற்றே னென்று; தொழுதவ னின்னுயிர்.
3. றென்றுன்னிஞய், றுன்னவும்.
4. காற்றிசைக்கப் புறத்தையும். (100)

327. அன்ன தன்மை யறிந்து மருளலை
பின்ன வன்னிவ னென்பதும் பேணலை
வன்னி தானிடு சாப வரம்புடைப்
பொன்ம லைக்கிவ னண்ணலிற் போகலை.

'அன்ன தன்மை அறிந்தும் - அப்படி அவன் அஞ்சி ஓடி ஒளிந்து கொண்ட நிலைமையை நீ அறிந்தும், அருளலை - நீ இவன்பால் அருள் செய்யவில்லை; இவன் பின்னவன் என்பதும் பேணலை - இவன் உன் பின் பிறந்த தம்பி என்ற அபிமானமும் கொண்டாயல்லை; வன்னிதான் இடு - பிரமசாரியான மதங்கர் என்னும் முனிவர் இட்ட, சாபம் வரம்பு உடை - சாபத்தின் எல்லைக்குட்பட்ட, பொன் மலைக்கு - அழகிய ருசியமூகம் என்னும் மலையினிடத்து, இவன் நண்ணலின் - இவன் போய் அடைந்தமையால், போகலை - நீ அங்குச் செல்லவில்லை; (அதனால் அவன் உயிர் பெற்றவனானன் என்பதாம்).

பின்னவன் - தம்பி; அயோத். குகப் : 16. அருளலை, பேணலை, போகலை என்பன முன்னிலை யொருமை எதிர்மறை இறந்த கால வினை முற்றுக்கள். வன்னி : வர்ணி என்ற வடசொல்லின் திரிபு; துரியாச்சிரமியாகிய சங்கியாசி என்றலும் ஆம். வாலி, வன்னி சாபம் பெற்றது; (114).

பி - ம். 1. யறிந்த மிரங்கலை.
2. பின்ன வன்னெனப் பேர்க்தோன்றுன் னோக்கலை, பின்னவ னென்று நோக்கலை பின்னரும், பின்னவ னென்றும் பேணலை பேதை நீ; பேர்க்தோன்றும் னோக்கலை.
3. வன்னி தன்னிடு சாப, மன்ன மாமுனி சாப, மன்மதங்கன் சாப.
4. பொன்னின் மலைக்கவ லேகலிற்; புக்கலிற் போகலை; நண்ணலிற் பொன்றிலன்; யொன்றிலன். (101)

328. ஈர மாவது மிற்பிறப் பாவதும்
வீர மாவதுங் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவது மற்றொரு வன்புணர்
தார மாவதைத் தாங்குந் தருக்கதோ.

'ஈரம் ஆவதும் - தயை அல்லது அன்புடைமை யாவதும், இல் பிறப்பு ஆவதும் - நல்ல குலத்திற் பிறந்த பெருமையாவதும், வீரம் ஆவதும் - வீரத்தன்மையுடைமை யாவதும், கல்வியின் மெய் நெறி வாரம் ஆவதும் - கல்வி கற்று நன்னெறியில் உயர்வு அல்லது எல்லையை அடைந்தமையாவதும், மற்று ஒருவன் புணர் - வேறு ஒருவன் மணந்து கூடி வாழ்ந்து வரும், தாரம் ஆவதை - மனைவி யாவாளை, தாங்கும் தருக்கு அதோ - தன் வலிமையால் ஏற்றுக் கொள்ளும் செருக்குடைமை ஆகுமோ? (ஆகாது என்றபடி).

இங்குக் கூறியது வாலியின் மீதுள்ள மூன்றாவது பெருங்குற்றமான அவன் பரதாரத்தை விரும்பிக்கொண்டதாம். இது நற்குணங்களை யெல் லாம் நசிப்பிக்கும் பெருங்குற்றம் என்பது கூறப்பெற்றது. தான் பிறன் மனை நாடாதிருந்தும், தன் தமையனான இராவணனுக்கு அடங்கியிருந் ததே, அவன் செய்த தீச்செயலுக்குத் தன்னைப் பொறுப்பாளியாக்கும் என்று கருதிய கும்பகருணன், 'பிறர்மனை நோக்கு வோமை யுறவெனப் பெறுதி போலாம்' என்று இராவணன் செய்த பழிச் செயலைத் தன் மேலேற்றிக் கூறித் தன்னை யிழித்துரைத்துக் கொண்டதும்; (உயுத்த. கும்பகருணன் வதை: 133); 'என்றொருவ னேதின் மனையாளை நோக்கு' (நாலடி, 86) என்றதும், பிறன்மனைவியை நோக்குதலே குற்றமாகும் என்று விளக்குதல் காண்க. 'பிறர்மனை நின்றாரிற் பேதையாரில்'; (குறள். 142) என்றதையும் காண்க. ஈரம் - நைப்பு அல்லது இளகிய தன்மை; வாரம் - எல்லை அல்லது உயர்ச்சி; 328; 'வார மென்னினிப் பகர்வது' (அயோத். மந்திரப்: 39).

பி - ம். 2. கல்வியும் மெய்ந்நெறி.

4. தார மாயது, தார மாவது; தாங்குவ் கருத்தரோ, தாங்குந் தருக்கிரோ.

329. மறந்தி றம்பல் வலியமெ னுமனம்
புறந்தி றம்ப லெளியவர்ப் பொங்குதல்
அறந்தி றம்ப லருங்கடி மங்கையர்
திறந்தி றம்ப றெளிவுடை யோர்க்கெலாம்.

தெளிவு உடையோர்க்கு எலாம் - தெளிந்த நல்லறிவைப் பெற்றவர்களுக்கெல்லாம், அரும் கடி - அரிய இல்வாழ்க்கையாகிய பாதுகாவலில் உள்ள, மங்கையர் திறம் - மகளிர் பொருட்டு, திறம்பல் - முறை தவறி நடந்து கொள்ளுதலும், வலியம் எனு - நாம் வலிமையுடையோம் என்று, மறம் திறம்பல் - சுத்த வீரச் செயலில் மாறுபட்டு வஞ்சகத்தை மேற்கொள்ளுதலும், மனம் புறம் திறம்பல் - தன் மனச்சாட்சிக்கு மாருக நடத்தலும், எளியவர் பொங்குதல் - எளியார் மீது (வலுவில்) ஆக்கிரமித்தலும், அறம் திறம்பல் - தருமத்திற்கு மாறுபட்ட பாவச் செயல்கள் ஆகும்.

இச் செய்யுள்: முதல் இரண்டடிகளால் மறம் திறம்பலேயும், பின்னிரண்டு அடிகளால் அறம் திறம்பலேயும் குறித்ததாகவும் கொள்வர்.

பி - ம். 1. மெனுமனத்.
2. திறந்திறம்ப வெளியவர்ப்.
3. கொடி மங்கையர், குலமங்கையர், கடை மங்கையர். (103)

330. தரும மின்ன தெனுந்தகைத் தன்மையும்
இருமை யுந்தெரிந் தெண்ணலே யெண்ணினல்
அருமை யும்பிதன் னுருயிர்த் தேவியைப்
பெருமை நீங்கிட வெய்தப் பெறுதியோ.

'தருமம் இன்னது எனும் - தருமம் இத்தன்மையது என்று சொல்லப் பெறும், தகை தன்மையும் - அதன் சிறப்புத் தன்மையையும், இருமையும் - இம்மை மறுமைகளேயும், தெரிந்து எண்ணலே - நீ ஆராய்ந்து கருதவில்லே ; எண்ணினல் - அவ்வாறு நீ ஆலோசித்திருந்தால், அருமை உம்பிதன் - உன் பெறுதற்கு அரிய தம்பியின், ஆர் உயிர் தேவியை - அரிய உயிர் போன்ற சிறந்த மனேவியை, பெருமை நீங்கிட - பெருந்தன்மை உன்னேவிட்டு விலகிப் போக, எய்த பெறுதியோ - நீ அடையப் பெறுவாயோ ?

இருமை: இம்மையிற் புகழும் மறுமையில் நற்கதியும்: 258 உரையையும் நோக்குக, தகை - சிறப்பு அல்லது மேம்பாடு;

'தண்டா வீகைத் தகைமாண் குடுமி' (புறநா. 6 : 26); 'தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்' (குறள். 56). இச்செய்யுளுக்கு ஒப்பு :

அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்றாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள். (நாலடி : 82)

'பிறன்கடை நின்றாரிற் பேதையாரில்' (குறள் - 42) என்றமையாலும் பிறதாரம் விழைவான் இழிவு கூறப்பெற்றமை காண்க.

பி - ம். 1. *தருமமன்றி தெனுந்தகைத்.*
2. இருமையுந் தெளிந்; தெண்ணலெ யெண்ணிலெ, யெண்ணிலா தெண்ணலெ.
4. பெருமை நீங்கினை. (104)

331. ஆத லானு மவனெனக் காருயிர்க்
காத லானென லானுநிற் கட்டனென்
ஏதி லாரையு மெளியரென் றாரையும்
தீது தீர்ப்பதென் சிந்தைக் கருத்தரோ.

'ஆதலானும் - (இவ்வாறு நீ செய்தாய்) ஆகையாலும், அவன் - அந்தச் சுக்கிரீவன், எனக்கு ஆர் உயிர் காதலான் எனலானும் - எனக்கு அரிய உயிர் போன்ற அன்புடைய நண்பன் என்ற முறையாலும், நின் கட்டனென் - உன்னைக் களை பறிப்பதுபோல அழித்தொழித்தேன்; (மேலும்), ஏது இலாரையும் - குற்றமற்றோரையும், எளியர் என்றாரை யும் - வலிமையிற் குறைந்தோரையும், தீது தீர்ப்பது - அவர்க்கு உண்டான துன்பத்தை நீக்கிக் காப்பது, என் சிந்தை கருத்து - என் கோட்பாடு. அரோ : ஈற்றசை.

ஆதலான் என்றது. முன் கூறியவற்றைக் குறித்தது; இவை, 'என்பால் எப்பிழை கண்டாய்' என்றதற்கு, விடையாக அமைந்துள் ளமை காண்க.

கட்டல் - களை பிடுங்குதல்; 'வன்சொற் களைகட்டி' (அறநெறிச். 6); 'ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின், நீரினு நன்றதன் காப்பு'; (குறள். 1038). அறவளர்ச்சிக்கு வாலி களைபோலிருந்த தன்மை

புலப்படுத்தப் பெற்றது. ஏதிலார் - குற்றமற்றவர் ; ஏது - குற்றம்; இஃது ஏதம் எனவும் வழங்கும். எளியர்-வலியற்றோர்.

பி - ம். 1. ஆத லாலு மய, ஆத லாலு மெனக்கவன்.
2. காத லானத னாலும், காத லாதவி னாலும்; பிதென்கடன், பிதென் கைக்கடன்.
3. ஏதிலாரு மெளிய ரென்றுரையும்; மெளிய ரென்றுரவர். (105)

வாலி கூறிய விடை

332. பிழைத்த தன்மை யிதுவெனப் பேரெழில்
தழைத்த வீர னுரைசெயத் தக்கிலா
திழைத்த வாலி யியல்பல வித்துணை
விழைத்தி றத்தொழி லென்ன விளம்புவான்.

'பிழைத்த தன்மை இது என - நீ தவறுசெய்த விதம் இஃது ஆகும்' என்று, பேர் எழில் தழைத்த வீரன் - மிக்க அழகு நிரம்பிய மகா வீரனான இராமபிரான், உரை செய - வாலிக்கு எடுத்துரைக்க, தக்கு இலாது இழைத்த வாலி - தகாதது புரிந்த அந்த வாலி, (இராமபிரானை நோக்கி), 'இ துணை - (நீ கூறிய) இவ்வளவு நீதிகளும், இயல்பு அல - வானரராகிய எங்கள் பிறப்பின் தன்மைக்கு ஏற்றன அல்ல, விழை திறம் தொழில் - (எங்கள் முறைப்படி), விரும்பின விதம் செய்வதே ஆகும்;' என்ன விளம்புவான் - என்று பின்னும் விளக்கிக் கூறுவானானான்.

வாலி தன்மீது கூறப்பட்ட குற்றத்தின் கொடுமையை உணர்ந்து, வேறொரு வகையால் அவன் அதனின்று தப்ப முயன்றமை இங்குக் கூறப்பெற்றது. பேரெழில் தழைத்த வீரன் ; அழகு நிரம்பிச் செழித்து விளங்கிய வீரன் ; 'அந்தமில் லழகன்' என்றமை காண்க. (பால. மிதிலைக் காட்சி: 39). தக்கு - தகுதி ; 341 உரை நோக்குக. தக்கிலாது : வினையாலணையும் பெயர். விழைத்திறம் தொழில் - விருப்பத்தின் தன்மைக்கு ஏற்றபடி, அதாவது மனம் போனவாறு செய்தலே எங்கள் தொழிலாகும் என்பதாம். விழை : முதனிலைத் தொழிற்பெயர்.

பி - ம். 1. யிதுவெனிற் பேதைமை.
2. தழைத்த விற்லிவை செய்யத் தகாதே.
3. யியம்பெனக், யியல்பெனக் ; இத்தொழில்.
4. விழைத் திறத்த சொல்லென விளம்பினன். விழைத்தி ரிப்பிழைக் கோவென வின்னுயான். (106)

333. ஐய நுங்க ளருங்குலக் கற்பினப்
பொய்யின் மங்கையர்க் கேய்ந்த புணர்ச்சிபோல்
செய்தி லன்னெமைத் தேமலர் மேலவன்
எய்தி னெய்திய தாக வியற்றினுன்.

"ஐய - ஐயனே! நுங்கள் அரும் குல கற்பின் - உங்கள் அரிய மானிடக் குலத்திற்கு ஏற்றதான கற்பின் வழிப்பட்ட, அ பொய் இல் மங்கையர்க்கு ஏய்ந்த - அந்தப் பொய்மை இல்லாத நன்னெறியை யுடைய மகளிர்க்குப் பொருந்திய, புணர்ச்சி போல் - விவாக முறை யான சேர்க்கை போல, எமை - வானரராகிய எங்களுக்கு, தேமலர் மேலவன் - தெய்வத்தன்மை பொருந்திய தாமரை மலர் மீது வீற்றிருக் கும் பிரமதேவன், செய்திலன் - ஏற்படுத்தினுன் அல்லன்; எய்தின் எய்தியது ஆக - நேர்ந்தபோது சேர்வது என்பதாக, இயற்றினுன் - விதித்துள்ளான்.

கற்பு - கணவனுலும் ஆன்ருேராலுங் கற்பிக்கப்படும் நெறி. பொய்யின் மங்கையர் - தம் ஒழுக்கத்திற் றவரு மங்கையர்; பொய்மை - தவறு; 'விண்ணின்று பொய்ப்பின்': ''பொய்யாமை பொய்யாமை யாற்றின்' (குறள். 297); இன்னும், வி. பா. 12-ம் போர்ச்: 1. என்பன போல. புணர்ச்சி - விவாக முறைப்படி ஆன சம்பந்தம். தேமலர்: தே - தெய்வத் தன்மையுடைய தாமரை மலர்; தே - தெய்வம் (பிங்.); செய்திலன் னெமை: ஒற்று மிகுந்தது செய்யுள் விகாரம்.

பி - ம். 1. *கற்பிலப்.* 3. *செய்திலன் னெமைத் தேமலர் மன்னவன்.*
4. *எய்தி னெய்தின தாக, எய்தி யெய்திய தாக.* (107)

334. மணமு மில்லை மறைநெறி வந்தன
குணமு மில்லைக் குலமுதற் கொத்தன
உணர்வு சென்றுழிச் செல்லு மொழுக்கலால்
நிணமு நெய்யு மிணங்கிய நேமியாய்.

'நிணமும் - (போரில் பகைவர் மீது பாய்ச்சினதால்) அன்னோர் உடலின் கொழுப்பும், நெய்யும் - (அதற்குத் துருப் பற்ருமலிருக்கப் பூசப்பட்ட நெய்ப்பசையும், இணங்கிய-ஒன்ருகப் பொருந்தி விளங்கிய, நேமியாய் - சக்கராயுதத்தையுடைய இராமபிரானே! உணர்வு சென்ற உழி - மனம்போன வழியே, செல்லும் ஒழுக்கு அலால் - நடக்கும்

வழக்கம் அல்லாமல், மறை நெறி வந்தன - வேத விதிப்படி மரபில் வந்ததான, மணமும் இல்லை - விவாக முறைகளும் எங்களுக்குக் கிடையா; குல முதற்கு ஒத்தன - (மானிடராகிய உங்கள்) குலத்தின் சிறப்புக்கு ஏற்றவாறு, குணமும் இல்லை - எங்களிடத்தில் குணச்சிறப்பும் கிடையாது.

வீரனின் வேல் முதலிய ஆயுதங்களைச் சிறப்பிக்கும் போது, அவற்றில் பகைவர் ஊன் இரத்தம் முதலியன தோய்ந்திருப்பதாகக் கூறுவது மரபு; அஃது, அவ் வீரனது போர்ச் சிறப்பை விளக்குவது ஆகும்; 'ஊன் செய்த சுடர்வடிவே லுரோமபதன்' என்றமை காண்க; (பால. திருவவதாரப்: 61); வேலுக்கு நெய் பூசுதல்; 'இழுதார் வேற்றானை'; (பு-வெ. தானை மறம்); 'நெய் தாழும் வேலா னொடு நெஞ்சு புலந்து நின்றாள்' (பால. பூக்கொய்: 16). நேமி இங்கு ஆயுதப் பொதுப் பெயருமாம்.; இனி, இங்கு நேமியாய் என்று இராமபிரானைச் சுட்டியதால், திருமாலே இராமபிரான் என்ற உண்மை, அவன் யறியாமலே அவன் வாயில் வந்தது என்னலும் ஆம்; ஏனெனில், இராமபிரானின் உண்மை நிலையை அவன் அறிவது பின்பே ஆதலால்; சென்றுழி: சென்ற உழி என்பதன் தொகுத்தல் விகாரம். ஒழுக்கு - ஆசாரம்; நடை. இனி, குல முதற்கொத்தன, என்பதை உணர்வு சென்றுழி என்பதுடனியைத்து, வானர குலக்குணச் சிறப்புக்கு ஒத்த எனப்பொருள் கொண்டாரும் உளர்.

பி - ம். 1. வந்ததோர், வந்நநற். 2. குண முதற் கொத்தன.
3. நெய்யு மிலங்கிய; நெய்யு மிழுங்கிய; நிறைந்தன வேலினாய்.

335. பெற்றி மற்றிது பெற்றதோர் பெற்றியில்
குற்ற முற்றிலெ னீயிது கோடியால்
வெற்றி யற்றதொர் வெற்றியி னாயெனச்
சொற்ற சொற்றுறைக் குற்றது சொல்லுவான்.

(மேலும் வாலி இராமபிரானை நோக்கி),' வெற்றி அற்றது ஓர் வெற்றியினாய் - உண்மையில் வெற்றி அல்லாத ஒரு (போலி) வெற்றியை அடைந்தவனே! பெற்றி இது - இஃது எங்கள் பிறப்புக்குரிய தன்மை; (ஆதலின்), பெற்றது ஓர் பெற்றியில் - யான் அடைந்துள்ள பிறவித் தன்மையின்படி, குற்றம் உற்றிலென் - யான் யாதொரு குற்றமும் அடைந்தேனல்லேன்; நீ இது கோடி - நீ இதனை மனத்திற்

கொள்வாயாக!' என - என்று, சொற்ற சொல் துறைக்கு - வாலி கூறிய சொற்களின் போக்குக்கு, உற்றது - பொருத்தமாயுள்ள மறு மொழியை, சொல்லுவான் - இராமபிரான் சொல்லத் தொடங்கினன். மற்று, ஆல் என்பன அசைகள்.

கோடி - கொள்+தி; (அயோத். மந்தரை சூழ்ச்சிப். 81); சுந்தர. 141, 689. தி: முன்னிலை ஏவல் விகுதி. சொற்ற: ற் இறந்தகால இடைநிலை. இப் பாடலில், முதலடியும் நான்காமடியும் பிராஸம் என்னும் சொல்லணியில் அமைந்துள்ளது. 'பெற்றி - முறை;' பழைய வுரை. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. *பெற்றியோர் பெற்றியில், பெற்றதோர் பெற்றியால், பெற்றன பெற்றியாக்.*

2. *னிற்றிது கோடியால், நிற்கிது கோடியால், நிற்பது கோடியால் னுற்றுது கோடியால்.*

3. *வெற்றி யுற்றதோர்; வெற்றியி னுயெனு.*

4. *சொற்ற சொற்குரை நாயகன் சொல்லுவான்.* (109

இராமபிரான் மறுப்புரை.

336. நலங்கொ டேவரிற் றேன்றி நவையறக்
கலங்க லாவற நன்னெறி காண்டலின்
விலங்க லாமை விளங்கிய தாதலான்
அலங்க லாய்க்கி தடுப்பதன் றுமரோ.

(அதற்கு இராமபிரான்),' நலம் கொள் - நன்மையை மேற்கொண் டுள்ள, தேவரில் - தேவர் போல, தோன்றி - பிறந்து, நவை அற - குற்றம் நீங்கும்படி, கலங்கலா - குழப்பமின்றி, அறம் நல் நெறி காண் டலின் - தருமத்தின் நன் மார்க்கத்தை நீ அறிந்துள்ளமையால், விலங்கு அலாமை - மிருகம் அல்லாத தன்மை, விளங்கியது - தெளி வாகத் தெரிகின்றது; ஆதலால் - ஆகையால், அலங்கலாய்க்கு - வீர மாலையணிந்த உனக்கு, இது அடுப்பது அன்று ஆம் - நீ கூறிய இந்த (நீ விலங்கு என்ற) சமாதானம் பொருந்துவது அன்றும். அரோ: ஈற்றசை,

இது முதல் 9 செய்யுட்கள் இராமபிரான் உயிர்களின் உயர்வு தாழ்வுகள் பிறப்பினலன்றிக் குணத்தினல் அமையும் என்ற உண் மையை வற்புறுத்துவனவாம். இஃது இந்நூலில் அமைந்த ஒரு சிறந்த நீதிப் பகுதியாகும். தேவரிற்றேன்றி: இது வாலி இந்திரன் அம்சமாகப் பிறந்தவன் என்றதை உட்கொண்டு கூறியதாகவும் கொள்ளலாம்: (பால. திருவவதாரப்: 27); காண்டல் - எடுத்துரைத்தலும் ஆம்:

முந்தையோர் கண்ட முறை ' (ஆசாரக். 4) என்பது போல. வாலி கூறியவற்றால் அவன் அறநெறி, மரபுநெறி, அரசியல்நெறி ஆகியவை நன்கு உணர்ந்தமை விளங்கினவாதலால், ' நவையறக் கலங்கலா நெறி நீ காண்டலின் ' என்று கூறினன் இராமபிரான் என்க. அலங்கல் இந்திரனால் அவனுக்கு அளிக்கப் பெற்ற அரதன மாலையும் ஆம். இனி விலங்குகளுக்கு இயல்பல்லாததாய், மானிடர், தேவர் போல வாலி மாலை யணிந்து போர்க்கு வந்தமையே, அவன் விலங்கு ஆகக் கொள்ளத்தக்கவ னல்லன் என்பதை உறுதிப்படுத்தியது என்பதுமாம்.

தேவரிற்றோன்றி - தேவேந்திரனுக்குப் பிறந்து ' என்பது பழையவுரை.

பி - ம். 1. றோன்றி நவையெனும்,

2. கலங்க லாதற, கலங்க நீர்ந்தள நன்னெறி கண்டுநீ ; நன்னெறி காண்டலால். 3. விளங்கிய தாகலான்.

4. அலங்க லாய தடுப்பதன் றுமரோ, அலங்க லாயி தடுப்ப, அலங்கலாய் நிற்கடுப்ப, அலங்கலார்க் கிதடுப்ப. (110)

337. பொறியின் யாக்கைய தோபுல னோக்கிய
அறிவின் மேலதன் றோவறத் தாறுதான்
நெறியி னோன்மையை நேர்நின் றுணர்ந்தநீ
பெறுதி யோபிழை யுற்றுறு பெற்றிதான்.

'அறத்து ஆறு தான் - தருமத்தின் வழிதான், பொறியின் யாக்கையதோ - ஐம்பொறிகளுக்கு இடமான உடலைப் பற்றியதாகுமோ ? புலன் நோக்கிய - ஐம்புலன்களால் ஆராய்ந்து உணர்கின்ற, அறிவின் மேலது அன்றோ - அறிவைப் பற்றியது அன்றோ ? நெறியின் நோன்மையை - அவ்வற நெறியின் வலிமையை, நேர் நின்று உணர்ந்த நீ - நேரே உன் அனுபவங்களால் அறிந்துள்ள நீ, பிழை உற்று உறு பெற்றிதான் - தவறு ஏற்படும் நிலைமையைத் தான், பெறுதியோ - அடைவாயோ? (அடைய மாட்டாய் என்றபடி).

' பொறிகள் எல்லா உயிர்களுக்கும் உண்டு ; புலனறிவோ உயிர்களின் சிறப்புக்கு ஏற்றவாறு உயர்வு பெற்றிருக்கும். நீ அறிவு மிகப் படைத்தவன் ; பொறிகளை மட்டும் கொண்டு உன்னை விலங்கென்பது தகாது ' என்றனன் இராமபிரான் என்க. அறநெறிகளின் சிறப்பை நன்குணர்ந்த அறிவுடையவன் தன்னை மிருகம் என்று சொல்லித் தவறிழைத்தல் தகுதியுடையதாகாது என்பதாம். ' மக்கள் தாமே யாறறிவுயிரே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே ' (தொல். மரபு. 33) என்று

விதித்தமை காண்க. இவ்வுண்மை நிலையை மேல்வரும் பாடல்களால் இராமபிரான் மேலும் விளக்குவது காணலாம்,

பி-ம். 1. பொறியில் யாக்கை; புலனுகிய; புலனுக்கிய.

3. நெறியு நீர்மையு நேரி துணர்ந்த நீ, நேரிதி னுணர்ந்தநீ.

4. பிழை யாற்றுறு, பிழை யுற்றதப், பிழை யாற்றும் பேதைமை; பெற்றியாய். (111)

338. மாடு பற்றி யிடங்கர் வலித்திடக்
கோடு பற்றிய கொற்றவற் கூயதோர்
பாடு பெற்ற வுணர்வின் பயத்தினல்
வீடு பெற்ற விலங்கும் விலங்கரோ.

இடங்கர் - ஒரு முதலை, பற்றி - தன்னைப் பற்றிக்கொண்டு, மாடு வலித்திட - ஒருபுறம் வலிவுடன் இழுக்க, பாடு பெற்ற உணர்வின் பயத்தினல் - பெருமை அமைந்த தன் அறிவின் பயனுல், கோடு பற்றிய கொற்றவன் - (பாஞ்சசன்யம்) என்ற சங்கினைத் தாங்கிய வெற்றி வீரனுன திருமாலை, கூயது - கூப்பிட்டதாகி, ஓர் - ஒப்பற்ற, வீடுபெற்ற-(முதலை வாயினின்றும்) விடுதலை பெற்று நற்கதி அடைந்த, விலங்கும் - கஜேந்திரனுன யானையும், விலங்கு அரோ-சாமானிய மிருக மாகக் கருதத்தக்கதோ ? (அன்று).

இச் செய்யுளில் ஒரு விலங்கு உதாரணமாகக் கூறப்பெற்றது. மாடு பற்றி - ஒருபுறம் தன் காலைப்பற்றி, என்னலும் ஆம். இடங்கர் - முதலை; (பால. நகரப்: 17); இஃது இடங்கர்மா எனவும் வழங்கப்பெறும். கோடு - சங்கு; (பிங்). வீடு பெற்ற - பரமபத மாகிய மோட்சத்தை அடைந்த என்னலும் ஒன்றும். இந்தக் கஜேந்திராழ் வானுடைய சரிதையின் விரிவை ஸ்ரீ பாகவத புராணத்தும், ஸ்ரீ அரி தாஸர் என்பார் இயற்றியருளிய கஜேந்திர மோக்ஷம் என்னும் தமிழ் நூலிலும் காண்க. கஜேந்திரனுக்குத் திருமால் அருள் புரிந்த செய்தி யைப் பெரிதும் பாராட்டிச் சிறப்பித்துள்ளமை ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலும், இக்காப்பியத்துள் பலவிடங்களிலும் விளங்கக்காண லாம். கூயது - கூவியது; கூ பகுதி : ய் இறந்த கால இடைநிலை; போயது என்பதுபோல. அரோ, எதிர்மறை வினுப்பொருளது.

பி-ம். 2. கொற்றவற் கூவியே.

4. விலங்கதோ, விலங்குமோ, விலங்கள்ரே; வீடு பெற்ற விலங்கும் விலங்குமோ? (112)

339. சிந்தை நல்லறத் தின்வழிச் சேர்தலால்
பைந்தொ டித்திரு வின்பரி வாற்றுவான்
வெந்தொ ழிற்றுறை வீடுபெற் றெய்திய
எந்தை யும்மெரு வைக்கர சல்லனோ.

'நல் அறத்தின் வழி - சிறந்த அற நெறியிலே, சிந்தை சேர்தலால்- தன் மனம் சார்ந்தமையால், பைந்தொடி திருவின் - பசிய (பொன்னால் ஆன) தொடி என்னும் வளையல்களை அணிந்த திருமகள் போன்ற சீதாப் பிராட்டியின், பரிவு ஆற்றுவான் - துன்பத்தைத் தணிப்பவனாகி, வெம் தொழில் துறை - இராவணனோடு எதிர்த்த கொடிய போர்த்தொழிலால், வீடு பெற்று எய்திய - மோட்சநிலை அடைந்த, எந்தையும் - எங்கள் பெரிய தந்தையாகிய சடாயுவும், எருவைக்கு அரசு அல்லனோ - கழுகுகளுக்கு அரசனல்லனோ?

முன் செய்யுளில், விலங்காகிய ஒரு மதயானை யடைந்த உயர்நிலையையும், இச் செய்யுளில் இழிந்த பிறவியாகக் கருதப்பெறும் ஒரு கழுகு அடைந்த நற்கதியையும் கூறியது காண்க. பைந்தொடி : பசுமை - புதுமையும் ஆம் ; தொடி - கையிற் பதிந்தாற்போல் மற்ற வளைகளுக்கு முன் அணியப்பெறும் ஒருவகை வளை. பரிவு - துன்பம் ; 'துணையிலேன் பரிவு தீர்த்த வாழிய வள்ளலே' (சுந்தர. 561). வீடு-மோக்ஷம்; விடுபட்டோர், அதாவது பற்றினின்று விடுபட்ட முமுட்சுக்கள் அடையும் நிலை ; முதனிலை திரிந்த தொழிற் பெயர். சடாயுவை இராமபிரான் எந்தை என்பது ; ஆரணிய. 986. எந்தையும் ; உம்மை உயர்வு சிறப்பினது. சடாயு தன்னை யிழிந்த பிறப்பாகக் கூறிக்கொண்டது; ஆரணிய; 198, 993. எந்தையும் மெருவைக்கரசு: மகரவொற்று மிகுந்தது செய்யுள் விகாரம். முன் செய்யுளில் 'விலங்கும் விலங்கரோ' என்று கூறி, இச் செய்யுளில் 'எருவைக் கரசல்லனோ' என்று வினவுவதால், ஒரே கருத்தை வற்புறுத்திக் கூறும் முறைகளை ஆசிரியர் கையாளும் வழி காணத்தக்கதாம்.

பி - ம். 1. லறத் தின்வழிச் சேறலால் ; லறத் தின்வழிச் சேர்த்தலால், லறத் தின்வழித் தேறலால்.
3. தொழிற்றிறல், திறற்றுறை.
4. லரசல்லவோ, இறை யல்லனோ. (118)

340. நன்று தீதென் றியறெரி நல்லறி
வின்றி வாழ்வ தன்றோவிலங் கின்னியல்
நின்ற நன்னெறி நீயறி யாநெறி
ஒன்று மின்மையுன் வாய்மை யுணர்த்துமால்.

'நன்று தீது என்று - இன்னது நல்லது இன்னது கெட்டது என்று, இயல் தெரி - அதனதன் தன்மையை உள்ளவாறு உணர்கின்ற, நல் அறிவு இன்றி வாழ்வது அன்றோ - சிறந்த பகுத்தறிவு இல்லாமல் உயிருடன் வாழ்ந்திருப்பது அல்லவோ, விலங்கின் இயல் - மிருகங் களின் இயல்பு ? நின்ற நல் நெறி - உலகில் நிலை பெற்று 'விளங்கும் நன்மார்க்கங்களுள், நீ அறியா நெறி - நீ உணராத வழி, ஒன்றும் இன்மை - ஒன்றும் இல்லாமை, உன் வாய்மை உணர்த்தும் - நீ இப் பொழுது பேசின உன் வாய்மொழியே நன்கு அறிவிப்பதாகும். ஆல் - ஈற்றசை.

நல்லறிவு - விவேகம். வாய்மை - பேச்சு, வாயின் தன்மை ; உண்மையும் ஆம் ; 'சேரமான் வாராயோ வென்றழைத்த வாய்மை யும்' (தனிப்பாடல், ஔவையார்). விலங்கின்னியல் ; னகர வொற்று விரிந்தது விகாரம் ; முன் செய்யுளில், எந்தையும் மெருவைக் கரசு' என்றமைபோல. 'விலங்குக்குப் பகுத்தறிவு கிடையாது என்றனை : ஆனால், நீ அறியாத நன்னெறி இல்லை என்பது உன் பேச்சினாலேயே புலப்படுகின்றது ; ஆதலின், 'நீ உருவினால் விலங்காயினும், அறி வினால் மானிடனாவாய்' என்று கூறியதாம்.

பி - ம். 1. *றறிதரு நல்லறி(வு) ; றியலறி நல்லறி(வு).*
2. *இன்றி வீழ்வ தன்றோ ; விலங்கின்நிலை, விலங்கினிடை.*
3. *நின்ற நின்னெறி, நின்ற தன்னெறி, நின்று நன்னெறி ; நீயறியும் நெறி, நீயறி யுன்னெறி, நீயறி புன்னெறி.*
4. *மின்மையின் வாய்மை யுணர்த்துதல்.* (114)

341. தக்க வின்ன தகாதன வின்னவென்
றுக்க வுன்னல ராகி யுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும் புத்தேளிரே.

'இன்ன தக்க - இவை ஏற்றுக்கொள்ளத்தக்கவை, இன்ன தகாதன - இவை ஏற்றுக்கொள்ளத் தகாதவை, என்று - என்பதாக,

ஒக்க உன்னலர் ஆகி - யாவற்றையும் சேர்த்துத் தராதரம் பார்த்துத் தீர்மானிக்காதவராகி, உயர்ந்து உள மக்களும் - (உருவாலும் பிறப்பாலும் மட்டும்) உயர்நிலை யடைந்த மானிடர்களும், விலங்கே - மிருகங்களுக்கு ஒப்பானவர்களே ஆவர்; அ விலங்கும் - (உருவாலும் பிறப்லும் இழிந்த) அம்மிருகங்களும், மனுவின் நெறி புக்கவேல் - மனுவினால் ஆக்கப்பெற்ற நீதி, சாஸ்திரத்திற்குட்பட்ட நன்னெறியில் நடக்குமானால், புத்தேளிரே - அவை தேவர்களாகவே கொள்ளவேண்டுவனவாம்.

அறிவும் ஒழுக்கமும் கொண்ட விலங்குகள் தேவர்க்கு நிகராவன என்பதும், அவையற்ற மானிடர், விலங்குக்கு நிகராவர் என்பதும் இங்குக் கூறப்பெற்றன. ஒக்க - ஒரு சேர, மிகுதியாக; இச் சொல் கொங்கு நாட்டில் மிகுதியும் பயிலப் பெறுவது காணலாம்; 'ஒக்கத் தொழுகிற்றிராகிற் கலியுக மொன்று மில்லையே' (திருவாய்மொழி. 5·2:10) ஒக்க என்பதற்கு ஒப்புடைத்தாக என்று பொருள் கொண்டாருமுளர். புத்தேள் - தெய்வம், அல்லது தேவர்; புறநா. 22:35; மணி. 22:118.

பி - ம். 1. தக்க நின்ன தகாதன வின்ன மென்(று)

2. ராக வுயர்ந்துள, ராகி னுயர்ந்துள, ராகி னுயர்ந்தன.

3. மனு னானெறி. 4. புக்க தேலவ், புக்கவ், புக்கயல்ல விலங்கும்.

(115)

342. கால னாற்றல் கடிந்த கணிச்சியான்
பாலி னாற்றிய பத்தி பயத்தலான்
மாலி னாற்றரு வன்பெரும் பூதங்கள்
நாலி னாற்றலு மாற்றுழி நண்ணினாய்.

'காலன் ஆற்றல் கடிந்த - யமனுடைய வலியை அழித்த, கணிச்சியான் பாலின் - மழுவென்னும் ஆயுதத்தையுடைய சிவபெருமான் திறத்து, ஆற்றிய-நீ புரிந்த, பத்தி பயத்தலால்-பக்தியுடன் கூடிய வழிபாடுகள் பயன் தந்தமையால், மாலினால் - (சிவபெருமான் உன்பால்) கொண்ட விருப்பத்தால், தரு - அருளிய, வல்பெரும் பூதங்கள் - வலியவும் பெரியனவுமான பூதங்கள், நாலின் - காற்று, தீ, நீர், புவி என்னும் பூதங்கள் நான்கின், ஆற்றலும் - வலிமையையும், மாற்று உழி - போக்கும் நிலையை, நண்ணினாய் - நீ அடையப் பெற்றாய்.

மால், அன்பு அல்லது விருப்பம்; 'பிச்சனுக்கே, மால்கொண்டாளென்றன் மகள்;' 'மாலுங் கருங்கடலே யென்னோற்றாய் (முதற்றிரு

வந்தாதி. 19) என்ற ஆழ்வார் அருளிச் செயலையும் நோக்குக. வாலி நான்கு பூதங்களின் வலிமை பெற்றவன் ; 116, உரை காண்க. வாலி சிவபிரானிடம் வரம் பெற்றது (114). கணிச்சியான் காலன் ஆற்றல் கடிந்தது, மார்க்கண்டேயன் என்னும் ஓர் அந்தணச் சிறுவன்பொருட்டு; இது சிவபிரானுடைய வீரட்டச் செயல்களுள் ஒன்று. இனி, பாலனுற்றிய பத்தி பயத்தலான் என்ற பாடங்கொண்டு பாலன் என்பதற்கு மார்க்கண்டேயன் எனப் பொருள் அமையக் கொள்ளலும் ஆம். ஆற்றுழி - முறையாக எனினுமாம்.

பி - ம். 1. *கடந்த கணிச்சியான்.* 2. *பால னுற்றிய.*
3. *மாலி னுற்றல் வரும் பெரும்.*
4. *நாலி னுற்றலி . னுற்றலை ; னுற்றுழி நண்ணியே, மாற்றுற நண்ணினுய் ; மாற்றலு நண்ணினுய்.* (116)

343. மேவ ருந்தரு மத்துறை மேவினர்
ஏவ ரும்பவத் தாலிழிந் தோர்களும்
தாவ ருந்தவ ரும்தம தன்மைசால்
தேவ ரும்முளர் தீமை திருத்தினர்.

மேவு அரும்-அடைவதற்கு அரிய, தரும துறை மேவினர் ஏவரும்-அறநெறியிற் பொருந்தினோர் யாவரும், பவத்தால் இழிந்தோர்களும்-தாம் முன் செய்த பாவத்தால் கீழான பிறவி யடைந்தோர்களும், தாஅரும் தவரும் - குற்றமற்ற தவசிகளும், தம - தங்களுடைய, தன்மை சால் - குணத்தினல் மேம்பட்ட, தேவரும் - தேவர்களும், தீமை திருத்தினர் - தீமை பல செய்துள்ளார்கள் ; உளர் - (கீழோர்களும், மேலோர்களும் தீவினை புரிவோர்களுமாக உலகில்) இருக்கின்றனர்.

ஏவர் ; எவர் என்பதன் விகாரம். பவம் - பிறப்பு ; இது வடசொல். தா - குற்றம் அல்லது அழிவு ; ' தாவில் வெண் கவிகைச் செங்கோற் சனகன் ' (பால. கோலங்காண் : 1). தேவரும் முளர் : மகர வொற்று விரிந்து நின்றது செய்யுள் விகாரம். பிறப்பால் உயர்ந்தவர்கள் தீமை புரிதலும், இழிந்தவர்கள் அறநெறி நிற்றலும் உலக இயற்கை; ஆகவே தான் பிறப்பால் விலங்கென்று வாலி கூறியது ஏற்கத்தக்கதன்று என்று இராமபிரான் இச்செய்யுள்களால் அவனுக்கு அறிவுறுத்தினன் என்க. திருத்துதல் - செய்தல் ; அயோத். மந்திரம் : 37. ' திருந்தினர் ' என்ற பாடங் கொண்டாரும் உளர்.

பி - ம். 1. *துறை மேயினர்.* 2. *பல ராலிழிந் தோர்களும்.*
3. *புல தன்மைசால்.* 4. *தீமை திருந்தினர்.* (117)

344. இனைய தாதலி னெக்குலத் தியாவர்க்கும்
வினையி னுல்வரு மேன்மையுங் கீழ்மையும்
அனைய தன்மை யறிந்து மழித்தனை
மனையின் மாட்சியென் ருன்மனு நீதியான்.

மனுநீதியான் - மனு நீதியைக் கடைப்பிடித் தொழுகுபவனுன இராமபிரான், (வாலியை நோக்கி) ‘இனையது ஆதலின் - நூல்களின் உண்மை நிலை இத்தன்மைய தாதலால், எ குலத்து யாவர்க்கும் - எந்தக் குலத்தவராயினும் அவர்கள் எல்லாருக்கும், மேன்மையும் கீழ்மையும் - உயர்வும் தாழ்வும், வினையினுல் வரும் - அவரவர் செயலுக்கு ஏற்ப வந்தடையும்; அனைய தன்மை அறிந்தும் - அத்தகைய உண்மை நிலையை நீ அறிந்திருந்தும், மனையின் மாட்சி அழித்தனை - இல்லறத்தின் சிறப்பை (அதாவது பிறன்மனைவியின் கற்பினை) நீ அழித்து விட்டாய்’; என்ருன் - என்று வாலிக்கு எடுத்துரைத்தான்.

வினையினுல் வரும் மேன்மையுந் தீமையும்; ஒப்பு: ‘பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம், கருமமே கட்டளைக் கல்’ (குறள். 505): பாவங்கள் பல உள்ளன வெனினும், அவற்றுள் மிகக் கொடியது பிறன் மனை நயத்தல்; அத்தகைய கொடும் பாவத்தை நீ செய்தாயாதலின், உன்னைக் கொல்ல நான் அம்பு தூண்டியது அறத்தைக்காக்க என்ருன் இராமபிரான் என்க. இந்தத் தன் செயல் அறத்தைக் காப்பதும் அவ்வறப்பயிர் வளரக் களைகட்டலுமே யாகும் என்பதையும் அவ்வறத்தைக் காப்பதே தான் கொண்ட கோட்பாடு என்பதையும், ‘மனுநீதியான்’ என்ற சொற்ருெடரால் விளங்கவைத்த நயம் ஓர்க.

பி - ம். 1. இனைய தாகலின், எக்குலத் தோருக்கும்.
2. வினையி னுலங்கு மேன்மையுங் கீழ்மையும்.
4. மனையி னீதி யென்ருன்; மறை நீதியான்; மனையி னீதியான்.

(118)

வாலி மேலும் வினுயது

345. அவ்வுரை யமையக் கேட்ட
வரிகுலத் தரசு மான்ற
செவ்வியோ யனைய தாகச்
செருக்களத் துருத்தெய் தாதே
வெவ்விய புளினு னென்ன
விலங்கினை மறைந்து வில்லால்
எவ்விய தென்னை யென்ரு
னிலக்குவ னியம்ப லுற்ருன்.

அ உரை அமைய கேட்ட - இராமபிரான் கூறிய அச் சொற்களைப் பொருந்தக் கேட்ட, அரி குலத்து அரசும் - வானர குலங்களுக்கு அரசனை வாலியும், (இராமபிரானை நோக்கி), 'ஆன்ற செவ்வியோய்-உயர்ந்த செம்மைக் குணம் நிரம்பியவனே! அனையது ஆக-நீ கூறியவை அனைத்தும் உண்மையே யாகட்டும்; (ஆனால்) செரு களத்து உருத்து எய்தாதே - போர்க்களத்தில் சினந்து வராமல், வெவ்விய புளிஞன் என்ன - கொடிய வேடனைப் போல, விலங்கினை மறைந்து - விலகி ஒளிந்து, வில்லால் எவ்வியது - வில்லைக் கொண்டு (என் மீது) அம்பைத் தூண்டியது, என்னை என்றான் - என்ன நியாயம்?' என்று கேட்டான்; இலக்குவன் இயம்பல் உற்றான் - அதற்கு இலக்குவன் பின்வருமாறு மறுமொழி கூறத் தொடங்கினான். (கூறியது அடுத்த செய்யுளிற் காண்க.

அமையக் கேட்டல் - தன் அறிவில் பொருந்துமாறு தெளிவாய்க் கேட்டல்; ஆக : ஆகுக என்பதன் தொகுத்தல் விகாரம்; இது வியங்கோள் வினைமுற்று; ஆகும் என்பது ஆம் என வருதல்போல. வெவ்விய - கொடுமை மேற்கொண்ட; வெம்மை பகுதி. புளிஞன்; புளிந்த என்ற வடசொல்லின் திரிபு; அயோத். குகப்: 12, 33, புளிஞர் மறைந்து எய்தல்; 'புதன் மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று' குறள். 274). எவ்வியது - அம்பை ஏவியது; எவ்வுதல் - ஏவுதல்; 236; சுந்தர. 272. வெவ்விய புளிஞன் விலங்கினை யென்ன மறைந்து எய்தது எனக்கொண்டு, கொடிய வேடன் மிருகங்களை யெய்து கொல்வதுபோல மறைந்து நின்று எனக் கோடலும் ஆம்.

பி - ம். 1. *அரிக்குலத் தரசு.*

2. *தருச்செய் யாதே; தருந்தெய் யாதே, யெதிர்த் தெய்யாதே. யெதிர்செய் யாதே, யெதிர்ச்செய் யாதே; செருக்களத் தமர் செய் யாதே; செருக்களத் தூறுசெய் யாதே.*

3. *புளஞ ரென்ன; விலங்கியே மறைந்து.*

4. *எவ்விய தென்கொ லென்றான்,; இலக்குவன் விளம்ப லுற்றான்; இலக்குவ னிதனைச் சொன்னான்.* (119)

இலக்குவன் விடை

346. முன்புநின் றம்பி வந்து
சரண்புக முறையி லோயைத்
தென்புலத் துய்ப்பெ னென்று
செப்பினன் செருவி னீயும்
அன்பினை யுயிருக் காகி
யடைக்கல மியானு மென்பாய்
என்பது கருதி யண்ணல்
மறைந்துநின் றெய்த தென்றான்.

'நின் தம்பி முன்பு வந்து சரண் புக - உன் தம்பி சுக்கிரீவன் முன்னமே வந்து சரணுகதியடைய, (இராமபிரான்), முறை இலோயை - முறை கெட்ட உன்னை, தென் புலத்து உய்ப்பென் என்று - (கொன்று) தென்றிசையில் உள்ள யமபுரியில் செல்லச் செய்வேன்' என்று, செப்பினன் - உறுதி மொழி கூறினன்; 'செருவில் - அந்தப் பொருகளத்தில், நீயும் உயிருக்கு அன்பினை ஆகி - நீ உன் உயிரினிடம் பற்றுடையவனாகி, யானும் அடைக்கலம் என்பாய் என்பது கருதி - யானும் உன் அடைக்கலம் (என்னை நீ காப்பாய் என்று சொல்லிச் சரணம் புகுவாய்) என்பதை (முன்கூட்டி) ஆலோசித்து, அண்ணல் - பெருமை தங்கிய இராமபிரான், மறைந்து நின்று எய்தது என்றான் - உன் எதிரே நில்லாமல் மறைவாக நின்று உன் மீது அம்பு எய்தது ஆகும்' என்று வாலிக்கு இலக்குவன் மறுமொழி கூறினான்.

வாலியை 'முறையிலோய்' என்றது, தம்பி மனைவிபால் முறை தவறிய தீய செயலைக் குறிப்பா லுரைத்தது. தென்புலம் - தெற்கே யுள்ள உலகம்; அதாவது யமலோகம்; புலம் - இடம்; பிதுருலகமும் ஆம்; 'தென்புலன் வாழ்நர்க் கருங்க டனிறுக்கும்' (புறநா, 9 : 3)

பி - ம். 1. *முறையி லோனைத்*, 2. *துய்ப்ப லென்று.*
3. *அன்புற வுயிருக் காகி; யுயிருக் காக, யானுமென்றி; யடைக்கல மென்று கூறி.*
4. *கருதி யன்னன், கருதி வள்ளல்.* (120)

வாலி சமாதானம் அடைதல்

347. கவிகுலத் தரசு மன்ன
கட்டுரை கருத்திற் கொண்டான்
அவியுறு மனத்த ஞகி
யறத்திற னழியச் செய்யான்
புவியிடை யண்ண லென்ப
தெண்ணினிற் பொருந்த முன்னே
செவியுறு கேள்விச் செல்வன்
சென்னியி னிறைஞ்சிச் சொன்ஞன்.

கவி குலத்து அரசும் - வானர குலத்திற்கு அரசஞன அவ்வாலியும், அன்ன கட்டுரை - இளைய பெருமான் கூறிய அவ்வுறுதி மொழியை, கருத்தில் கொண்டான் - மனத்திற் கொண்டவஞய், அவி உறு மனத்தன் ஆகி - அடங்கிய மனமுடையவஞகி, அண்ணல் - பெருமைக் குரிய இராமபிரான், புவி இடை - உலகினிடத்து, அறம் திறன் - தருமத்தின் சிறப்பு, அழிய செய்யான் - அழியும்படி ஒரு காரியத்தைச் செய்யமாட்டான், என்பது - என்ற உண்மைத் தத்துவம், எண்ணினில் பொருந்த - தன் மனத்தில் வந்து நன்கு அமைவுற, செவி உறு கேள்வி செல்வன் முன்னே - ஆன்ருேர்கள்பால் கேட்டுத் தெளிந்த அறிவை யுடைய இராமபிரான் முன்னர், சென்னியின் இறைஞ்சி - தலையால் வணங்கி, சொன்ஞன் - பின்வருமாறு சொல்வாஞனன்.

முன்னே செவியுறு கேள்விச் செல்வன், என்பதை வாலிக்கு ஆக்கிப் பொருள் கொள்வாரும் உளர். இராமபிரானைச் செவியுறு கேள்விச் செல்வன் என்றது, அவன் வசிட்ட விசுவாமித்திரர் முதலிய ஆன்ருேர்களிடம் முன்னே கேட்டுத் தெளிந்த சிறப்புடையவன் என்பதாம். கேள்வியைச் செல்வம் என்றது, ' செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் '; (குறள். 411) என்றமையால். அவியுறுமனம் - ஆய்ந்துணர்ந்து அடங்கிய மனம். சென்னியி னிறைஞ்சி - வீழ்ந்து வணங்க முடியாத நிலையில் உள்ளவஞதலால் தலை குனிந்து தனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டான் என்னலாம். வாலி இராமபிரானுடைய குணச்சிறப்புக்களை முன்னமே ஒருவாறு உணர்ந்தவஞயினும், தான் என்ற அபிமானத்தாலும், செருக்கிஞலும் மூடுண்டு, அப்பெருமானைப் பலவாறு இழித்துரைத்தான்; பின் இளையபெருமான் அருளிய கட்டுரையால், அவன் தன் அஞ்ஞானம் நீங்க, நல்லறிவு கொளுத்தப் பெற்ருன் என்க. இதனல், ஒருவன் எவ்வளவு அறிவுடையவஞயினும், ஒரு ஞானசிரியரது உபதேசம் பெற்ருலன்றி உண்மைத் தத்துவத்தை

உணர முடியாது என்பது விளங்குவது காண்க. மேலும், வாலி செய்த பண்டை நல்வினைப் பயத்தால் பரம பாகவதனான இளைய பெருமான் அவனுக்கு ஞானாசிரியனாக அமைந்த பெருமையை அடையவே, இராம பிரான் ஸ்ரீ பரம்பொருளே என்ற உண்மை நிலையை அவன் உணர லானான் எனக் கொள்ளற்பாலதாம்.

பி - ம். 1. மன்னதா மெனக் கருத்தில். 2. யறத்திற னழியச் செய்தேன்.
3. புவியுடை யண்ணல்; யன்ன லென்ன, வெண்ணிற் பொருந்த; பொருமி விம்மி; யண்ண லெனவே ;நாணிப் புங்கவன் கமல பாதம்.
4. சென்னியை யிறைஞ்சி, சென்னியால் வணங்கிச். (121)

வாலி இராமபிரானை வேண்டல்

348. தாயென வுயிர்க்கு நல்கித்
தருமமுந் தகவுஞ் சார்வும்
நீயென நின்ற நம்ப
நெறியினி னோக்கு நேர்மை
நாயென நின்ற வெம்பா
னவையுற லுணர லாமே
தீயன பொறுத்தி யென்றான்
சிறியன சிந்தி யாதான்.

சிறியன சிந்தியாதான் - அற்பத்தனத்தைக் கருதாது பெரு நோக்கங்கொண்ட வாலி (இராமபிரானை நோக்கி), ' தாய் என உயிர்க்கு நல்கி - தாயைப் போல எல்லாப் பிராணிகளிடத்தும் அருளி, தருமமும் தகவும் சார்வும் - தருமமும், நடுநிலைமையும், ஒரு பற்றுக் கோடும், நீ என நின்ற நம்ப - நீயேதான் என்று சொல்லும் வண்ணம் நிலை பெற்று விளங்கிய ஆடவரிற் சிறந்தோனே ! நெறியினில் நோக்கும் நேர்மை - (நூல்கள் கூறிய) உயர்ந்த நெறியில் நின்று நீ நோக்கும் சிறப்பை (மனத்தெண்ணி), நாய் என நின்ற எம்பால் - நாய் போல ஓர் இழிந்த நிலையில் உள்ள எம் போன்றவர் இடத்து, நவை உறல் - குற்றம் பொருந்துவதை, உணரல் ஆமே - ஆராய்தல் தகுமா ? (ஆகாது என்றபடி); (ஆதலின்), தீயன பொறுத்தி - தீமைகளை யெல்லாம் நீ பொறுத்தருள்வாயாக !' என்றான் - என்று இராமபிரானிடம் குறை யிரந்து கேட்டுக்கொண்டான்,

இனி, ' நாயென நின்ற எம்மால் நவையற வுணரலாமே ' என்ற பாடங்கொண்டு, நாய்போன் றிழிந்த என்போலியரால் அறியலாகாதது

என்றும் கொள்வர். வாலி, தன் மலம் நீங்கி, ஞானம் பெற்று, இராம பிரானின் உண்மை நிலை உணர்ந்து கூறும் செய்யுட்கள் இது முதல் தொடர்கின்றன, ‘சிறியன சிந்தியாதான்’ என்ற தொடர், இது வரை அழியும் மாலைத்தாகிய பொருள்களை மதித்து இராமபிரானை நிந்தித்த வாலி, அந்நிலையைக் கடந்து, ‘பெரியன சிந்திக்கும்’ நிலையை அடைந் ததைச் சூசிப்பித்தமை காண்க.

தாயென : தாய் தான் பெற்ற மக்கள் அல்லது குட்டிகளினிடத்து அன்பு காட்டுவது போல ; ‘தாயொக்கு மன்பில்’ (பால. அரசியற்: 4); ‘ஆருயிரின் தாயே’ (நள. 221). தருமமுந்தகவுஞ் சார்வும் நீ ; தருமம், நடுநிலைமை, உயிர்களின் பற்றுக்கோடு இவையாவும் ஓர்வடி வெடுத்து வந்தாற் போன்றவன் இராமபிரான் என்பதாம் ; இது வாலி தாரைக்கு முன் கூறிய, ‘அருமையி னின்றுயி ரளிக்கு மாறுடைத், தருமமே தவிர்க் குமோ தன்னைத் தானரோ’ (258) என்றமையாலும் விளங்குவது காண்க. நாயென : இங்கு நாய் ஓர் இழிந்த பிறவி என்பதைக் குறித்து நின்றது. சிறியன சிந்தியாதான் : அற்ப விஷயங்களில் மனம் நாடாத பெருமைக்குணம் இப்பொழுதுதான் ஏற்பட்டது என்பதன்றி, அது எப்பொழுதுமே அவன் பால் அமைந்த குணம் எனக் கொள்ளலும் ஆம். ‘நோக்கு நோன்மை’ என்ற பாடம் பழையவுரை கொள்ளும்.

‘இராமபிரானல் அடிபட்டு ஞானமடைந்த வாலியை நோக்கி, அப் பெருமான், அவனுக்கு மறுபடியும் உயிரையும் உடலையும் அளிப்ப தாகக் கூற, வாலி அதனை மறுத்து அப்பெருமான் சந்நிதியில் இறந்து போவதையே பெருமையாகக் கொண்டான்’ என்று ராமசரிதமானஸம் என்னும் துளஸீதாஸர் இராமாயணம் கூறும்.

பி - ம். 1, தருமமுந் தகவுஞ் சால்பும்.
2. நின்ற நம்பி ; நெடிதுநீ நோக்கும் நோன்மை.
3. நின்ற வெம்மால்; நவையறல் ; லுணரலாமோ, லுணரற் பாற்றே, லுணர்த லாமோ லுரைத்த லாமோ ; நவைகளை யுணர லாமோ.

(122)

349. இரந்தனன் பின்னு மெந்தை
யாவது மெண்ண றேற்குக்
குரங்கெனக் கருதி நாயேன்
கூறிய மனத்துக் கொள்ளேல்
அரந்தைவெம் பிறவி யென்னேய்க்
கருமருந் தனைய வையா
வரந்தரு வள்ளா லொன்று
கேளென மறித்துஞ் சொல்வான்.

இரந்தனன் பின்னும் - வாலி மேலும் இராமபிரானை நோக்கிக் குறையிரந்து வேண்டிக்கொள்பவனாய், 'எந்தை - எங்களுக்கெல்லாம் தந்தைபோன்றவனே! அரந்தை வெம் பிறவி என் நோய்க்கு - துயரத்திற்குக் காரணமான கொடிய பிறவி என்னும் பிணிக்கு, அரு மருந்து அனைய ஐயா - அரிய ஔடதம் போன்ற ஐயனே! வரம் தரு வள்ளால் - விரும்பிய வரன்களை அளிக்கும் வள்ளன்மை யுடையோனே! யாவதும் எண்ணல் தேற்று - எதையும் ஆராய்ந்து நோக்கும் திறமை யற்ற, நாயேன் குரங்கு என கருதி - எளியேன் குரங்குதானே என்று உன் திருவுளத்து எண்ணி, கூறிய - உன்னை நிந்தித்துக் கூறியவற்றை, மனத்து கொள்ளேல் - உன் திருவுளத்தில் கொள்ளாதே! ஒன்று கேள் - மேலும் யான் கூறுவதொன்றைக் கேட்டருள்வாயாக! என - என்று, மறித்தும் சொல்வான் - மீண்டுங் கூறலானான்.

செஞ்சரத் தூய்மையால் தன் பிறவி நீக்கியதாலும், அந்தமில் இன்ப வாழ்வாகிய பரமபதப்பேற்றை அருள அவன் முன் வந்தமை கருதியும், 'அரந்தை வெம் பிறவி நோய்க்கு அருமருந்து' என்றும், 'வரந்தரு வள்ளால்' என்றும் இராமபிரானது கருணைப் பெருக்கில் ஈடுபட்டுத் துதித்தான் வாலி என்க. 'பிறவி என் நோய்க்கு'; என் பிறவி வியாதிக்கு எனவும் பொருள் கொள்வர்.

மரம்பொ தச்சரம்து ரந்து வாலி வீழ முன்னொர்நாள்,
உரம்பொ தச்சரம்து ரந்த வும்ப ராளி எம்பிரான்,
வரங்கு றிப்பில் வைத்த வர்க்க லாது வான மாளினும்,
நிரம்பு நீடு போக மெத்தி றத்தும் யார்க்கு மில்லையே,

(திருச்சந்தவிருத்தம். 73) என்றதும் காண்க. 'வாலி மதனழித்த வில்லாளன்' என்றமையால், திருமழிசையாழ்வார் (நான் முகன் 85) வாலி அஞ்ஞானம் நீங்கியது இராமபிரான் பாணத்தால் என்பதும் காணலாம்.

பி - ம். 1. பின்னு மெந்தாய்.

2. மனத்திற் கொள்ளேல், மனத்துட் கொள்ளேல், மனத்தில் கொள்ளேல்.

3. பிறவி வெந்நோய்க், பிறவி யென்னோய்க், நோய்க்கும்.

4. வள்ள லொன்று; மறுத்துஞ் சொல்வான், மற்றுஞ் சொல்வான்.

(123)

வாலி இராமபிரானைத் துதித்தல்

350. ஏவுகூர் வாளியா லெய்துநா யடியனேன்
ஆவிபோம் வேலைவா யறிவுதந் தருளினாய்
மூவர்நீ முதல்வனீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ.

'ஏவு கூர் வாளியால் - தூண்டும் கூரிய உன் அம்பினால், எய்து - என்னைக் குறிக்கொண்டு அடித்து, நாய் அடியனேன் - நாய் போன்ற கீழ்ப்பட்ட அடியவனான எனது, ஆவிபோம் வேலை வாய் - உயிர் போகும் சமயத்தில், அறிவு தந்து அருளினாய் - நீ உண்மையான ஞானத்தை எனக்கு அளித்து அருள் செய்தாய், மூவர் நீ - பிரம விஷ்ணு சிவன் என்னும் திரிமூர்த்திகளும் நீயே ஆவாய்; முதல்வன் நீ அம்மூர்த்திகளுக்கும் ஆதிகாரணனும் நீயே; முற்றும் நீ - உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் நீயே; மற்றும் நீ - மற்றும் எல்லாமும் நீயே, பாவம் நீ - பாவமும் நீயே; தருமம் நீ - அறம் என்பதும் நீயே; பகையும் நீ - பகைமை என்பதும் நீயே; உறவும் நீ - உறவும் நீயேதான்.

வாலிவதைப் படலமே, மாயையால் மூடப்பட்ட நிலையில் ஒருவர் காண்பனவும், அது நீங்கின நிலையில் அவர் காண்பனவுமான வேற்றுமைகளைப் புலப்படுத்துவதென்பது விளங்குவது காண்க.

திரிமூர்த்திகள் முதல் யாவரும், பாவம் தருமம் என்பனவும், பகையுறவு என்பனவும், பிறவும் நீயே உன்னையன்றி ஒன்றுமேஇல்லை; அதாவது, எல்லாம் உன்னிடமே அடங்கியுள்ளன; இந்த உண்மை அறிவை எனக்கு நீ என் உயிர் நீங்கும் இத்தருணத்தில் கொடுத் தருளினாய் என்று இராமபிரானின் மகத்துவ நிலையை அறிந்து புகழ்ந் தான் வாலி என்க. 'மூவர் நீ முதல்வனீ': 'முத்தேவரின் மூல முதற் பொருள்' (ஆரணிய; 904) குறிப்புக் காண்க. இவ்வுண்மையறிவு, முன் விராதன், கவந்தன் முதலினோர் துதிகளாலும் விளங்குவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பி-ம். 1. வாளியால் வந்து, வாளியா லெய்து வந்து.

2. யறிவுந்தர் தருளினை.

3. மூவர்நீ மற்றுநீ முற்றுநீ முதல்வனீ, மூவர்நீ மற்றுநீ முதல்வநீ முற்றுநீ.

351. புரமெலா மெரிசெய்தோன் முதலினோர் பொருவிலா
வரமெலா முருவியென் வசையிலா வலிமைசால்
உரமெலா முருவியென் னுயிரெலா முருவுநின்
சரமலாற் பிறிதுவே றுளதரோ தருமமே.

'புரம் எலாம் எரி செய்தோன் முதலினோர் - திரிபுரங்கள் முழுதும் எரிந்து அழியச் செய்த சிவபிரான் முதலிய தேவர்கள், பொருவு இலா வரம் எலாம் - (எனக்கு அருளிய) ஒப்பற்ற வரங்கள் யாவற்றையும், உருவி - கழலச் செய்து, என் - என்னுடைய, வசை இலா - குற்றமற்ற, வலிமைசால் - வலிமை மிக்க, உரம் எலாம் உருவி - மார்பகம் முழுவதும் ஊடுருவிச் சென்று, என் உயிர் எலாம் உருவும் - என் பிராணன் அனைத்தையும் இழுத்து உட்கொள்ளும், நின் சரம் அலால் - உன் அம்பு அல்லாமல், தருமம் பிறிது வேறு உளது அரோ - தருமம் என்பது வேறொன்று தனியாக இருக்கின்றதோ? (இராம சரமே தருமம் என்றபடி). அரோ; என்னும் அசைச் சொல் இங்கு வினாப்பொருளை உணர்த்தி நின்றது.

புரமெலாமெரி செய்தோன் முதலினோர் என்றமை: வாலிக்கு இந்திரன் முதலிய மற்றையோர் அருளிய வரங்களைக் குறித்தபடி. உரமெலாம் - மார்பு முதலிய உயிர் நிலைகளை. உயிர் எலாம்என்றது: பஞ்சப் பிராணன்களை. இராமபிரான் சரத்தைத் தருமம் என்றது, தீயன ஒழித்துத் தருமம் நிலைபெறச் செய்தலால். தருமம் ஈர்வது;

நாரங் கொண்டார் நாடு கவர்ந்தார் நடையில்லா
வாரங்கொண்டார் மற்றொரு வற்கா மனைவாழும்
தாரங் கொண்டார் என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங்கண்டாய். (ஆரணிய. 734)

உயிரை நுகர்தல் என்பது இலக்கணை. புரமெரித்தது சிவபிரான் செய்த எட்டு வீரச் செய்கைகளுள் ஒன்றாகும்.

பி-ம். 1. முதலினோர் பொலியுமா.
2. வசையினார் வலிமைசால், வசையினால் வலிமைசால், வசையிலா வலிமைசால்; முருவியர்; முருவியெவ் வசையினு.
3. னுயிரெல்லாம் நுகருநின் 4. சரமலா தலதில். (125)

இதன்பின், அடியிற் காணும் ஒருபாடல் சில பிரதிகளில் காணப் பெறுகின்றது:—

மாவலச் சூலியார் வாழ்த்துநர்க் குயர்வரம்
ஓவலற் றுதவனின் னொருதனிப் பெயரியம்
பாவலிப் புடைமையா லாகுமப் பொருளையாம்
தேவநிற் கண்டவெற் கரிதெனோ தேரினே,

352. யாவரு மெவையுமா யிருதுவும் பயனுமாய்
பூவுநல் வெறியுமொத் தொருவரும் பொதுமையாய்
யாவனீ யாவதென் றறிவினு ரருளினுர்
தாவரும் பதமெனக் கருமையோ தனிமையோய்.

'தனிமையோய் - ஒப்பற்ற தனிப்பரம் பொருளாகிய ஸ்ரீராம! யாவரும் - எல்லா உயர்திணைப் பொருள்களும், எவையும்ஆய் - எல்லா அஃறிணைப் பொருள்களும் ஆகியும், இருதுவும் பயனும் ஆய் - வசந்தம் முதலிய ஆறு இருதுக்களும் அவற்ருல் அடையக் கூடிய பலன்களும் ஆகியும், பூவும் நல் வெறியும் ஒத்து - மலரும் மணமும் போல ஒன்று கூடி, ஒருவு அரும் பொதுமையாய் - நீங்குதல் இல்லாத பொதுப்பொருள் ஆவோனே! நீ யாவன் யாவது என்று - நீ யார் என்றும் உன் தன்மை யாது என்றும், அறிவினுர் அருளினுர் - என் உண்மை அறிவு எனக்கு அறிவுறுத்தியது; (ஆதலால்), தா அரும் பதம் - அழிவில்லாத மோக்ஷ மாகிய பரமபத வாழ்வு, எனக்கு அருமையோ - எனக்கு கிடைத்தற் கருமையாகுமோ? (அருமையாகாது; கிடைப்பது நிச்சயம் என்றபடி).

ஆறு இருதுக்கள்: வசந்தருது, கிரீஷ்மருது, வருஷருது, சரத்ருது, ஏமந்தருது, சிசிரருது என்பன. ஒருவு அரு - நீங்குதல் இல்லாத; ஒருவு, முதனிலைத் தொழில் பெயர். அருமை இன்மை மேற்று. 'ஒருவரும் பொதுமையாய் - நீங்குதற்கரிய பரிபூர்ணுக இருப்பை' என்பது பழையவுரை. 'இருதுவும்பயனு'மாய் என்றது காரணமும் காரியமும் நீயே என்றதாம். அறிவினுர்: அறிவின் சிறப்பு நோக்கி ஆர் என்னும் உயர்திணைப் பன்மை விகுதியேற்று வந்தது; திணை வழுவமைதி யாகும்; ஒப்பு: செந்தாரப் பசுங்கிளியார் (சீவக. 1036). 'என் அறிவினுரருளினுர் - என்ஞானம் நீ பரமெனச் சொல்லிற்று' என்பது பழையவுரை; ஒப்பு: அறிவெனுமமைச்சன் (சீவக. 232). உன் செஞ்சரத் தூய்மையால் நீ பரம் பொருள் என்னும் உண்மையறிவைப் பெற்றேனுதலின், இனி யான் மோக்ஷமாகிய பரமபத நிலையும் அடைவது திண்ணம் என்ற நிச்சய புத்தி வரப்பெற்று, அஃது எனக்கு இனி அருமை அன்று எனக் கூறினுன் வாலி என்க; யாவரும் மெவையு மாய்: மகர வொற்று விரித்தல் விகாரம். இச்செய்யுள், 'வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனுமுயிரு முணர் வும்போ லுள்ளும் புறனு முளனென்ப' என்னும் (அயோத். 1) பாடலின் கருத்தை ஒருவாறு விளக்குவதாக அமைந்தது என்னலாம்.

பி-ம். 1. யாவையு மெவையுமாய்; பயனுமென்.
2. தெரிவரும் பெருமையாய்; மொத் துயிர்தோறும் பொலிவதாம்.
3. ஆவனென் றறியவென்; ஆவநீ யாவதென் னறிவினுர்; யாவரும் யாவதென் றறிகிலா வருளினுர். (125)

353. உண்டெனுந் தருமமே யுருவமாய் நின்றநின்
கண்டனென் மற்றினிக் காணவென் கடவனே
பண்டொடின் றளவுமே யென்பெரும் பழவினை
தண்டமே யடியனேற் குறுபதந் தருவதே.

'உண்டு எனும் - என்றும் உள்ளதென்று நூல்கள் கூறுகின்ற, தருமமே - தருமம் என்பதையே, உருவமாய் நின்ற - வடிவமாகக் கொண்டு நின்ற, நின் கண்டனென்—உன் உண்மை நிலையை நான் உன்னிடம் தெளிவாகக் கண்டு கொண்டேன்; (ஆதலின்), மற்று - மேலும்; இனிகாண என்கடவனே-இனிமேல் நான் காணக்கூடிய ஒன்று உள்ளதாக வேறு உடையவன்ஆவனே ? (ஆகேன் என்றபடி); என் பெரும் பழ வினை-எனது முன் செய் பெரு வினைகள் யாவும், பண்டு ஒடு இன்று அளவுமே-முன்னிருந்து இன்று அளவுமேதான் உள்ளது ஆகும்; (இனி இரா என்றபடி); தண்டமே - என்னை உன் அம்பினால் அடித்து வீழ்த்திய தண்டனையே, அடியனேற்கு -அடியேனாகிய எனக்கு, உறுபதம் தருவதே - பெரும்பதவியாகிய பரமபதத்தைத் தருவதாகும்.

இராமபிரான் தருமமே வடிவெடுத்து வந்தவன் ; அதாவது, தரும மூர்த்தி என்றபடி. முன் வாலி, தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ (258) என்றமையும், 'மெய்யற மூர்த்தி வில்லோன்' (சுந்தர. 1120) என்ற அநுமன் கூற்றினையும் நோக்குக. காண என் கடவனே ; முன் 'யாவையு மெவையுமாய்' என்று தொடங்கும் (354) பாடலால், யாவும் இராமபிரானே என்று அறிந்துள்ளான் ஆதலின், இனி 'உன்னையன்றி வேறு காணக்கூடியது இல்லை' யென்றான், அதாவது எல்லாப் பொருளிலும் நிறைந்து விளங்கும் பரம்பொருளே இராமபிரான் என்பதாம்.

தண்டம் - தண்டனை ; நால்வகை உபாயங்களுள் இது நான்காவது; "தண்டமுந் தணிதி நீ பண்டையிற் பெரிதே" (புறநா. 10:6). தண் டமே ; ஏகாரம் தேற்றப் பொருளது ; பிறிதன்று என்றபடி. வாலிக்கு இராமபிரான் விதித்த தண்டனையாக அவன்மீது அம்பு எய்த செயலே, அவ்வம்பின் தூய்மையால் அவனுக்கு நல்லறிவு உண்டாக்கியதோடு அதனால் அவனுக்குப் பரமபத வாழ்வை அளிக்கும் உயர்நிலை வந்தது என்று உறுதிகொண்டு கூறினான் வாலி என்க. தண்டனை பதந் தருவது ; ஒப்பு ;

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடினு றுக்கி வளாரினு லடித்துத் தீய,
பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்

(சிவஞானசித். சுபக். 2:16)

உறுபதம் - பெருவாழ்வாகிய பரமபத நிலை; உறு; மிகுதிப் பொருளையுணர்த்தும் உரிச்சொல்.

பி - ம். 1. உண்டெனுந் தன்மையே; யுருவமா நின்ற.

2. கண்டுகொண் டேனினிக், கண்டுகொண் டனனினிக்.

3. பண்டொடின் றென்னெனக் கருமையென் பழமையோய்; பழமையாய்; யென்பெரும் பழமையால். பழவினைத்.

4. அண்டமெய் யடியனேற் குறுபதன் றுமரோ; குயர்பதந் தருமதே, குறுபதந் தந்ததே; தருமமே. (126)

354. மற்றினி யுதவி யுண்டோ
வானினு முயர்ந்த மானக்
கொற்றவ வுன்னை யென்னைக்
கொல்லிய கொணர்ந்து தொல்லைச்
சிற்றினக் குரங்கி னோடுந்
திரிவுறச் செய்த செய்கை
வெற்றர செய்தி யெம்பி
வீட்டர செனக்கு வீட்டான்.

வானினும் உயர்ந்த மான கொற்றவ - வானத்தைக் காட்டிலும் உயர்ந்த பெருமை வாய்ந்த வெற்றியுடைய இராமபிரானே! எம்பி - என் தம்பியாகிய சுக்கிரீவன், என்னைகொல்லிய உன்னைக் கொணர்ந்து- என்னைக் கொல்லும் பொருட்டு உன்னை இங்கு அழைத்துக் கொண்டு வந்து, தொல்லை சிறு இனகுரங்கினோடும் - தொன்மைச் சிறு சாதி யான குரங்குகளோடும், திரிவு உறசெய்த செய்கை - ஒரு மாறுபாடு உண்டாகுமாறு செய்த செயலினால், வெறுமை அரசு எய்தி-பயனற்ற குரங்குகளுக்கு அரசனாகும் இந்தத் தன்மையைத்தான் அடைந்து, எனக்கு வீடு அரசு விட்டான் - எனக்கு மோக்ஷமாகிய பேரரசைத் தந்து விட்டான்; (ஆதலின்) மற்று இனி உதவி உண்டோ - இதனினும் இனி மேலான உதவி அவன் எனக்குச்செய்யக் கூடியது உள்ளதோ? (இல்லை என்றபடி)

வானினு முயர்ந்த; மற்றபூதங்கள் நான்கினும், பெருமையாலும், பழமையானும், அப்பூதங்கள் உண்டாவதற்கு இடமாய் நின்றமையாலும் உயர்வானது வானம் ஆதலின்; 'வான் சிறிதாப் போர்த்துவிடும்' (நாலடி. 38) என்று பெருமைக்கு வானை எடுத்துக் காட்டியது நோக்குக.

குறிப்பு:—இச்செய்யுள் குற்றத்தைக் குணமாகப் பாராட்டும் சிறப்புக்கு ஓர் ஏற்ற எடுத்துக் காட்டு; வாலியின் இக் கூற்றுக்கு ஒப்பு:

"தம்முனார் கமலத் தண்ணல் தாதையார் சரணந் தாழ,
என்முனா ரெனக்குச் செய்த வுதவியென் றேம்ப லுற்றான்."

(உயுத்த. விபீடணனடைக். 138).

பி - ம். 1. வானினு முயர்ந்த வீரக், உயர்ந்த வான வானவர் பரவு மேலாம்.
2. கொற்றவ நின்னை யென்ன; வுன்னை யென்னைக் கொல்லிய.
3. சிற்றினக் குரக்கி னோடும், குரங்காமென்முன்; தெரிவுரச், திரிதர.
4. வெற்றர செய்தி நம்பி வீட்டர செனக்குத் தந்தான். (127)

வாலிஇராம பிரானிடம் வரம் வேண்டுதல்

355. ஓவிய வுருவ நாயே
னுளதொன்று பெறுவ துன்பால்
பூவிய னறவ மாந்திப்
புந்திவே றுற்ற போழ்தில்
தீவினை யியற்று மேனு
மெம்பியைச் சீறி யென்மேல்
ஏவிய பகழி யென்னுங்
கூற்றினை யேவ லென்றான்.

(வாலி மீட்டும் இராமபிரானை நோக்கி), 'ஓவிய உருவ - சித்திரம் போல் அழகமைந்த உருவமுடையோனே! நாயேன் உன்பால் பெறுவது ஒன்று உளது - எளியவனான யான் உன்னிடமிருந்து அடையக்கூடிய வரம் ஒன்று உள்ளது; (அது யாதெனில்), பூ இயல் நறவம் மாந்தி புந்தி வேறுற்ற போழ்தில் - மலர்களிலிருந்து உண்டாகும் தன்மையுடைய கள்ளைக் குடித்துத் தன் புத்தி மாறுபாடு அடைந்தபோது, தீவினை இயற்றுமேனும் - செய்யத் தகாத அபசாரச் செயல்களைச் செய்தாலும், எம்பியை சீறி - என் தம்பியாகிய சுக்கிரீவனை நீ சினந்து, என்மேல் ஏவிய பகழி என்னும் கூற்றினை - இப்பொழுது என் மீது தூண்டிய உன் அம்பு என்னும் யமனை, ஏவல் - ஏவிவிடாதே!' என்றான் - என்று கேட்டுக்கொண்டான்.

இது, தன்னைக் கொல்வித்த தம்பியிடம் வாலி அருள் சுரந்து கூறியது. நறவம்-தேன் அல்லது கள். மாந்துதல்- அருந்துதல், குடித்தல்

'தேம்பிழி நறவம் மாந்தி; (பால. நாட்டுப் : 8); இச் சொல், நறை, நறவு நரு எனவும் வழங்கும்; நறவம் மாந்துதல் வாநரங்களி னியல்பு; பின் சுக்கிரீவன் நறவுண்டு பிராட்டியைத் தேடும்பணியை மறப்பதை இங்கு வாலி மூலம் ஆசிரியர் முன்கூட்டி அறிவித்ததும் ஆகும். போழ்து : பொழுது என்பதன் விகாரம். பகழியென்னும் கூற்று; கூற்றினைப் போல இராமபாணமும் ஏவப்பெற்றோர் உயிரை அபகரித்துச் செல்லுங் கொடுமையுடைமையால். ஏவல் : முன்னிலை எதிர்மறை வினைமுற்று; 'மகனெனல்' (குறள். 196) என்றது போல.

பி - ம். 1. வருவினையென்; பெறுவ துண்டால்.
2. பூவினை நறவு; வேறுற்றபோது.
3. இயற்றி மேனும்; யெம்பிமேற் சிறி, யெம்பிக்குச் சிறியேன் மீதில்.
4. பகழி யென்னும் யாவர்க்குங் கூற்றை யேவல், யேவல். (128)

356. இன்ன மொன் றிரப்ப துண்டா
லெம்பியை யும்பி மார்கள்
தன்முனைக் கொல்வித் தானென்
றிகழ்வரேற் றடுத்தி தக்கோய்
முன்னமே மொழிந்தா யன்றே
யிவன்குறை முடிப்ப தைய
பின்னிவன் வினையின் செய்கை
யதனையும் பிழைக்க லாமோ.

(வாலி மேலும் இராமபிரானை நோக்கி), 'தக்கோய் - மேன்மைக் குணமுடையவனே! இன்னம் ஒன்று இரப்பது உண்டு - யான் உன்னை இன்னமும் இரந்து கேட்டுக் கொள்ளும் ஒரு வரம் உண்டு : (அது யாதெனில்), உம்பிமார்கள் - உன் தம்பியர்கள், எம்பியை - என் தம்பியாகிய இச்சுக்கிரீவனை, தன் முனை கொல்வித்தான் என்று - இவன் தன் தமையனைக் கொல்லச் செய்தவன் என்று, இகழ்வரேல் - நிந்திப் பார்களானல், தடுத்தி - நீ அவர்களைத் தடுத்து அடக்குவாயாக! (ஏனெனில்), ஐய - ஐயனே! இவன் குறை முடிப்பது - இந்தச் சுக்கிரீ வனுக்கு ஆக வேண்டிய காரியங்களை நீ முடித்தருள்வது என்று, முன் னமே மொழிந்தாய் அன்றே - நீ முன் நட்புக்கொள்ளும் போதே (உறுதி) கூறியுள்ளாய் அல்லவா? (ஆதலின்), பின் இவன் வினையின் செய்கை அதனையும் - பிறகு இவன் வினையின் விளைவுகளினின்றும், ஐய - ஐயனே! பிழைக்கல் ஆமோ - விட்டு நீங்கல் ஆகுமோ? (ஆகாது என்றபடி) ஆல்: அசை.

இராமபிரானுடைய தம்பியர்கள், தமையனாகிய அப்பெருமானிடத்தில் பெரும் பற்றும் ஈடுபாடும் உடையவராதலால், அவ்வித அபிமான மற்றுத் தன்னைக் கொல்லச் சூழ்ச்சி செய்த சுக்கிரீவனை அவர்கள் நிந்திக்கலாம் என்பதை உணர்ந்து, அந்த நிந்தனையும் தன் தம்பிக்கு வரக்கூடாது என்ற அபிமானமேலிட்டு அக்குறையை நீக்க, முற்பட்ட வாலியின் இப் பெருந்தன்மை சாலச் சிறப்புடைய தென்னலாம். ஐய! என்ற விளி இரந்து கேட்டுக்கொள்ளும் நிலையைப் புலப்படுத்தி நின்றது; இச்செய்தி பொருகளத்தில் இராமபிரான் வாளிகளால் தன் யாக்கை பல கூறுகளாய்த் துண்டிக்கப்பட்டுத் தன் உயிர் போகும் நிலையில் இருந்த கும்பகருணன், தன் தம்பியாகிய வீடண ஆழ்வான் மீது அன்பு மீதூர அவ்விராமபிரானை நோக்கி,

'தம்பியென நினைந்திரங்கித் தவிரானத் தகவில்லான்
நம்பியிவன் றனைக்காணிற் கொல்லுமிறை நல்கானல்
உம்பியைத்தா னுன்னைத்தா னுமனைத்தா னொருபோதும்
எம்பிபிரி யானாக வருளுதியான் வேண்டினேன்.'

(உயுத்த. கும்பகருணன் வதை: 358) என்று குறையிரந்து கேட்டுக்கொண்ட சகோதராபிமான அருஞ் செயலை நினைப்பிக்கின்றது.

முன்னமே...பிழைக்கலாமோ ? ஒப்பு: 'அறனிழ லெனக்கொண்டா யாய்குடை யக்குடை, புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவள்' (கலித். 99: 8) தன்முனைக் கொல்வித்தான் என்ற இகழ்ச்சி; 'எந்தையை யாயை முன்னைக் கொன்றுவந் தானென்றுண்டோர் வடைக்கலங் கூறுகின்றான்' '(உயுத்த. விபீடண னடைக்கலப்: 109) என்ற இராமபிரான் கூற்றினை ஒத்து நின்றது.' 'பின்னிதன் வினையின் செய்கை யதனையும் பிழைக்கலாமோ', என்று பாடங்கொண்டு, பிற்படும் பிரதியுபகாரம் செய்கிறது தப்பக்கூடாது சுக்கிரீவனுக்கும் என்று கொள்க. என்று பழையவுரை கூறும்,

பி - ம். 1. இன்னுமென் ; னுரைப்ப; நிரப்ப தண்டேல், , நிசைப்ப தன்டால் ; யெம்பியை, யும்பர் காணத்,

2. யிகழ்தலைத் தவிர்த்தி ; தவிர்தி; இழித்தலைத் தவிர்த்தி,

3. முன்னே, குற்றம் முடிக்கிலாமை, முடிவிலாமை, முடித்திலாமை, முடித்தாலீண்டு.

4. பின்னிதென் ; பின்னவன் ; பின்னிதன் ; விதியின் செய்கையாமெனிற் பிழையு முண்டோ ; வினையேன் செய்கையான் செயல் பிழைக்கலம்மா. ; செய்கை யதன்செயல் பிழைக்கலாமோ. (129)

வாலி இராமபிரானிடம் அநுமனைப் பாராட்டிக் கூறியது.

357. மற்றிலெ னெனினு மாய
வரக்கனை வாலிற் பற்றிக்
கொற்றவ நின்கட் டந்து
குரக்கியற் றொழிலுங் காட்டப்
பெற்றிலென் கடந்த சொல்லிற்
பயனில்லை பிழைப்ப தின்றி
உற்றது செய்கென் றாலு
முரியனிவ் வநும னென்றான்.

'கொற்றவ - வெற்றியுடைய பெருமானே' மற்று இலென் எனினும் - வேறு ஒன்று உன் திறத்துயான் (உதவி) செய்யாதவன் ஆனாலும், மாயம் அரக்கனை வாலில் பற்றி - வஞ்சனையுடைய இராக்கதனான அவ்விராவணனை என் வாலினால் சுற்றிப்பிடித்து, நின் கண் தந்து - உன்னிடம் கொண்டுவந்து கொடுத்து, குரங்கு இயல் தொழிலும் காட்ட பெற்றிலென் - ஒரு குரங்கின் செயல் இத்தன்மையது என்று உனக்குக் காட்டும் பேறும் யான் அடைந்தேன் அல்லேன்; கடந்த சொல்லில் பயன் இலை - கழிந்து போன செயலை இப்பொழுது சொல்வதில் பயனில்லை; (ஆனால்), பிழைப்பது இன்றி - தவறில்லாமல், உற்றது செய்க என்றாலும் - நிகழும் இச் செயலை நீ செய்வாயாக என்று கட்டளையிட்டாலும், இ அநுமன் - இந்த அநுமன், உரியன் என்றான் - அச் செயலைப் புரிய தகுதியுடையனாவன் என்று வாலி இராமபிரானுக்கு உறுதி கூறினான்,

இஃது இராவணனது தீச்செயலை நோக்காது இராமபிரானை இகழ்ந்து பேசிய வாலி, உண்மை அறிந்த நிலையில் இராமபிரானுக்காக இராவணனை வென்று பிராட்டியைக் கொண்டுவராமைக்கு வருந்துவதாகும். அன்றியும், வாலி, சுக்கிரீவன் பால் பகைமை யொழிந்து இரக்கங்கொண்டது போல, அநுமனிடமும் பெருமித உணர்ச்சி கொண்டு கூறியது, வாலியின் தூயநிலையை அறிவிப்பதோடு அவ்வநுமனது ஆற்றலை அவன் நன்குணர்ந்துள்ளமையும் புலப்படுத்தியதாகும். பிழைப்பது - தவறுவது; 'என் பிழைத்தனை யென்றுநின் றேங்குமால்' (அயோத். நகர்நீங்கு : 13.)

பி - ம். 1. மற்றில னெனினு, மற்றில தெனினு மாயா.
2. குரக்கியற், குரக்கிய லடிமையாக.
3. பெற்றிலேன்; பிறிதோன் றேனும் பெற்றிய னடந்த சொல்லிற் பயனிலை பிழைத்த தேனும்; பெற்றிலன் கிடக்கச் சொல்லிப் பயனிலை பிழைப்ப தின்னும்; பயனிலைப் பிழைத்த தேனும்.
4. உரியவ னநும னென்றான், னென்பான்; னிவனு மென்றான்.

வாலி இராமபிரானிடம் மற்றும் கூறுதல்

358. அனுமனென் பவனை யாழி
 யையநின் செய்ய செங்கைத்
தனுவென நினைதி மற்றென்
 தம்பிநின் தம்பி யாக
நினைதியோர் துணைவ ரின்னோ
 ரனையவ ரிலைநீ யீண்டவ்
வனிதையை நாடிக் கோடி
 வானினு முயர்ந்த தோளாய்.

ஆழி ஐய - சக்கராயுதத்தையுடைய தலைவனே! வானினும் உயர்ந்த தோளாய் - வானைவிட மிக உயர்ந்த தோள்களையுடையவனே! அநுமன் என்பவனை - அநுமானை, நின் - உன்னுடைய, செய்ய - அழகமைந்த, செம் கை தனு என - சிவந்த கையில் ஏந்தியுள்ள வில்லாகிய கோதண்டமே என்ன, நினைதி - கருதுவாயாக! மற்று - மேலும், என் தம்பி - என் தம்பியாகிய சுக்கிரீவனை, நின் தம்பி ஆக நினைதி - உன் தம்பியருள் ஒருவனாகக் கருதுவாயாக! இன்னோர் அனையவர் ஓர் துணைவர் இலை - இவர்களைப் போன்ற, ஒப்பற்ற துணைவர் உனக்கு வேறு இல்லை, ஈண்டு - இவர்களைத் துணைக்கொண்ட இந்நிலையில், நீ அ வனிதையை - நீ அந்தச் சீதாப்பிராட்டியை, நாடி கோடி - தேடிப் பெற்றுக் கொள்வாயாக!

ஆழி ஐய - ஆக்ஞா சக்கரத்தையுடைய அரசனே! என்னலும் ஆம், வானினு முயர்ந்த தோளாய்; வான் - பெருமையாலும், உயர்வாலும் ஒப்பு: 'வானினு முயர்ந்த மானக் கொற்றவ' (354) என்றதை நோக்குக; தம்பியாக - இந்த உன் தம்பி இலக்குவனே யென்பதாக எனவும் கொள்ளலாம். (ஒப்பு:) 'உம்பியைத்தான் உன்னைத்தான் அநுமனைத்தான் எம்பி பிரியானாக' (உயுத்த. கும்ப. 358) கோடி - (கொள் + தி) கொள்வாயாக! அயோத். மந்தரை சூழ்ச்சிப்: 81; சுந்தர. 441, 689. இங்கு அநுமனை இராமபிரானின் கைத்தனு என்று கூறிய சிறப்பு நோக்குக.

பி - ம். 1. வாழி யைய; செய்ய யங்கைத்.
2. தம்பியை யும்பி யாக, னெம்பியுன் றம்பி யாக; னெம்பியு மும்பி யாக.
3. நினையொரு துணைவ ரின்னோர் நிகர்ப்பவ ரில்லை யீண்டவ்; யின்னே யனையா நினையில்லை. (131)

வாலி சுக்கிரீவனை நோக்கிக் கூறியவை.

359. என்றவற் கியம்பிப் பின்ன
ரிருந்தன னிளவ றன்னைத்
தன்றுணைத் தடக்கை நீட்டி
வாங்கினன் றழுவி மைந்த
ஒன்றுனக் குரைப்ப துண்டா
லுறுதியஃ துணர்ந்து கோடி
குன்றினு முயர்ந்த தோளாய்
வருந்தலை யென்று கூறும்.

என்று அவற்கு இயம்பி - என்று (வாலி) அந்த இராமபிரானுக்கு எடுத்துக்கூறி, பின்னர் இருந்தனன் இளவல் தன்னை - வருத்தத்துடன் அவனுக்குப்பின்னே நின்றுகொண்டிருந்த தன் தம்பியாகிய சுக்கிரீவனை, தன் துணை தட கை நீட்டி - இருபெருங் கைகளை நீட்டி, வாங்கினன் தழுவி - இழுத்துத் தழுவிக்கொண்டு, 'மைந்த - பிள்ளாய்! குன்றினும் உயர்ந்த தோளாய் - மலையினும் உயர்ந்த தோள்களை யுடையவனே! ஒன்று உனக்கு உறுதி உரைப்பது உண்டு - உனக்கு நான் இப்பொழுது கூறவேண்டிய நன்மை தரும் காரியம் ஒன்று உள்ளது: அஃது உணர்ந்து கோடி - அதனை நீ உணர்ந்து ஏற்றுக்கொள்வாயாக! வருந்தலை - வருந்தாதே!' என்று கூறும் - என்று பின்வருமாறு கூறுவானானான். ஆல் - அசை.

பின்னர் இருந்தது: தன் செய்கையால் வெட்கி முன்வர வெட்கமுற்று என்பதுமாம்; பின்னர் - அதன் பிறகு எனப் பொருள்கொண்டாரும் உளர். வாங்குதல் - அருகே இருந்து எடுத்துச் கொள்ளல்; 'உயிர் வாங்கினெ னிவ்வணி வருவித்தே' (203) உறுதி: நன்மை தரும் சொல்லும் ஆம். மைந்த: என்றது, தம்பி மைந்தனுக்கு நேரானவன் என்ற முறைபற்றி. இருந்தனன், முற்றெச்சம். வருந்தலை: முன்னிலையொருமை எதிர்மறை ஏவல் வினைமுற்று. கோடி: 358 உரை. நோக்குக.

பி - ம். 1. என்றவர்க்; பின்னை யிருந்தவ னிளவ, பின்ன ரிளைந்தவ னிளவ. பின்ன ரிருந்ததோ ளிவினை.
3. லுறுதிய துணர்ந்து கோடி.
4. யென்று கூறி. (132)

**360.** மறைகளும் முனிவர் யாரும்
மலர்மிசை யயனும் மற்றைத்
துறைகளின் முடிவுஞ் சொல்லுந்
துணிபொரு டிணிவிற் றூக்கி
அறைகழ லிராம னாகி
யறநெறி நிறுத்த வந்த
திறையொரு சங்கை யின்றி
யெண்ணுதி யெண்ண மிக்கோய்.

(வாலி சுக்கிரீவனை நோக்கி), 'எண்ணம் மிக்கோய் - ஆலோசனை யிற் சிறந்தோனே! மறைகளும் - வேதங்களும், மற்றை துறைகளின் முடிவும் - மற்ற நூல் துறைகளின் முடிவும், முனிவர் யாரும் - எல்லா முனிவர்களும், மலர்மிசை அயனும் - தாமரை மலர் மீது வாழும் பிரமதேவனும், சொல்லும் - சொல்லுகின்ற, துணிபொருள்- நிச்சயமாய்த் தெளிந்த பரம்பொருள், திணி வில் தூக்கி - வலிய வில்லைத் தாங்கி, அறை கழல் இராமன் ஆகி - ஒலிக்கும் வீரக் கழல் அணிந்த (இந்த) இராமபிரானாகி, அறநெறி நிறுத்த வந்தது - தரும மார்க்கத்தை உலகில் நிலைநிறுத்துதற்காக இங்கு அவதரித்து வந்துள்ளது; (இவ்வுண்மையை) இறை ஒரு சங்கை இன்றி - சிறிதும் சந்தேகங் கொள்ளாமல், எண்ணுதி - நீ கருதுவாயாக!

இது, வாலி சுக்கிரீவனுக்குச் செய்த உபதேசம்; இது முதல் 360-365 முடிய, ஒரு தொடராக அமைந்து அச்செய்யுளிலுள்ள 'இயம்பி' என்பதனோடு இயையும்.

எண்ணம், சூட்சியும் ஆம்; (பிங்.) மறைகளுக்கு அடுத்துப் பிரமாண மாயுள்ளவை, மற்ற சாஸ்திரங்கள் ஆதலின், அம்முறைபற்றி, 'முனிவர் யாரும்' என்பதற்கு முன்னதாக மற்றைத் துறைகளின் முடிவு என்ப தோடு கொண்டுகூட்டாக முன்வைத்து உரை கொள்ளப்பட்டது. இச் செய்யுளின் கருத்தையே சற்று விரிவாக விளக்கி, இராவணனிடம் அநுமன்,

மூலமு நடுவு மீறு மில்லதோர் மும்மைத் தாய
காலமுங் கணக்கும் நீத்த காரணன் கைவில் லேந்தி
சூலமுந் திகிரி சங்குங் கரகமுந் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்;

(சுந்தர. 1122) என்று கூறியது இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். மேலும் இக்கருத்து, இந்நூலில், அயோத். கைகேசி சூழ்வினைப் : 91 ; ஆரணிய. 904, 1171. ; சுந்தர. 1123 முதலிய பாடல்களால் விளக்கமாகவும், மற்றும் பல விடங்களிற் குறிப்பாகவும் உணர்த்தப் பெறுவது காணலாம்.

இறை - சிறிது. 'துணிவிற்றூக்கி - தூணியும் வில்லும் ஏந்தி' என்பது பழையவுரை.

பி - ம். 1. *மறைகளு மயன்மா ரீச ளுதியாய் மற்று மேலைத்; முனிவர் தாமும்; மலர்மிசை யவனும்.*

2. *நிறைகளி னின்ற சொல்லி நண் பொரு டுணிவிற்றுகில்; முடிவு சொல்லுங். தனிவிற் றூக்கி, குனிவிற் றூக்கி, வரிவிற் றூக்கி, துணிவிற் றூக்கி.*

3. *கழலிராமனுயிவ் வறநெறி; நிறுத்த வந்தான்.*

4. *சங்கை யன்றி; யெண்ணு மிக்கோய்; யெண்ண மிக்காய்.* (133)

361. நிற்கின்ற செல்வம் வேண்டி
நெறிநின்ற பொருள்க ளெல்லாம்
கற்கின்ற விவன்றன் நாமங்
கருதுவ விவனைக் கண்டாய்
பொற்குன்ற மனைய தோளாய்
பொதுநின்ற நிலைமை நோக்கின்
எற்கொன்ற வலியே சாலு
மிதற்கொன்று மேது வேண்டா.

பொன் குன்றம் அனைய தோளாய் - மேருமலை போன்ற தோள்களை யுடையவனே! நிற்கின்ற செல்வம் வேண்டி - என்றும் அழியாமல் நிலைத்து நிற்பதான மோக்ஷமென்னும் செல்வத்தை அடைய விரும்பி, நெறிநின்ற - நன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து நின்ற, பொருள்கள் எல்லாம் - பொருள்களாகிய உயிர்கள் யாவும், இவன் தன் நாமம் - இவனுடைய பெயராகிய இராமநாமத்தையே, கற்கின்ற - வாக்கால் பாராயணம் செய்கின்றன; இவனை கருதுவ - இவ்விராம பிரானையே மனத்தால் தியானமும் செய்கின்றன; கண்டாய் - இதனை நீ உணர்ந்து கொள்வாயாக! பொது நின்ற நிலைமை நோக்கின் -

பொதுவாக யாவருக்கும் தெரியக்கூடியதான நிலைமையில் வைத்து ஆராய்ந்து பார்த்தால், என் கொன்ற வலியே சாலும் - இவ்விராம பிரான் என்னைக் கொன்ற வலியுடைமையே அதற்குப் போதுமான சான்றாகும்; இதற்கு ஒன்றும் ஏது வேண்டா - இதற்கு வேறு ஒரு காரணமும் வேண்டுவதின்று.

உலகில் நாம் காணும் செல்வமெல்லாம் அழியும் நீர்மையது; 'செல்வம் சகடக்கால் போல வரும்' (நாலடி. 2) என்றமை போல்; மோக்ஷமாகிய செல்வமோ, 'சிறுகா பெருகா நிலையோ திரியா, குறுகாநெடுகா குணம் வேறுபடா, உறுகால்கிளர் பூதமெ லாமுகினும் மறுகாநெறி' என்று சரபங்கர் கூறியபடி அழியாப் பெருமை யுடையது ஆதலின், நிற்கின்ற செல்வம், என்று உணர்ந்து கூறினன் வாலி என்க, கண்டாய்: முன்னிலையில் தேற்றப் பொருளை யுணர்த்தும் சொல்; முன்னிலை யேவல்வினையாக நின்று அறிவுறுத்தியது; இங்கு அசையாகக் கொண்டு நீக்கப் பெறுது; கற்கின்ற இவன்றன் நாமம்; 'கற்பாரி ராம பிரானையன்றி மற்றுங் கற்பரோ' (திருவாய் மொழி. 7·5:1) என்ற அருளிச் செயலாலும்,

> ஆரே யொருபெயர் சொல்லத் தொடங்கினு மவ்விடத்துன்
> பேரே வருமென்ன பேறுபெற் றேன்பெரு நான்மறையின்
> வேரே மிதிலையின் மின்னுட னேவெய்ய கானடைந்த
> காரே கடல்கொளுந் தச்சிலை வாங்கிய காகுத்தனே;

என்ற தனிப்பாடலாலும் இராமநாமத்தின் சிறப்பு கூறப்பெறுவது காண்க.

எந்த எந்தத் தெய்வத்தைக் குறித்துத் தியானித்தாலும், அந்த அந்தத் தெய்வமும் இவ்விராமபிரானாகிய பரம்பொருளின் அங்கமே ஆதலால், அவரவர் செய்யும் தியானம் அல்லது வணக்கம் யாவும், அப்பெரு மானையே சாரும் என்ற உண்மை நிலையை யுணர்ந்த வாலி, தானடைந்த அந்த நல்லுணர்வைத் தன் தம்பியும் அடையவேண்டும் என்ற அன்பு தூண்டப்பெற்று 'யாவரும் கருதுவது இவனையே !' இதனை நீ உறுதியாய் உணர்ந்து கொள்! என்று உபதேசித்தான் என்க. மேலும் இவ் வுண்மை; முன் வாலி, (354) இல், தான் அடைந்த நல்லுணர்வாகிய பேற்றைப் பாராட்டி இனித்தா னடையக்கூடிய பெரும் பதத்தையும் குறிப்பிட்டமையாலும் விளங்குவது காணலாம். இக்கருத்து, ஆரணிய காண்டத்து, விராதன், இந்திரன், கவந்தன் முதலாயினோர் துதிக ளாலும் விளக்கமுறும். மேலும், இக் காப்பியத்திற் பற்பல இடங்

களிலும் சரிதத்தலைவனான ஸ்ரீராமபிரான் பரம்பொருளே என்ற உண்மையை நம் ஆசிரியர் ஸ்ரீ கம்பநாடர், ஆங்காங்கு நிலை நாட்டி நமக்கு அறிவுறுத்திச் செல்லும் அருமை பெருமைகள் நம்மால் அளவிட்டுரைத்தற் கரியனவாம். எற்கொன்ற வலி: பிறர் யாராலும் கொல்ல முடியாத என்னைக் கொன்ற வலி;

'ஆற்றலில் லமரரு மவுணர் யாவரும்
தோற்றன ரெனையவர் சொல்லற் பாலரோ
கூற்றுமென் பெயர்சொலக் குலையும்' (254)

என்று தன் வலிமையின் சிறப்பை வாலி தாரைக்குக் கூறியதுங் காண்க. சாலும் - போதும்; 'இந்திரனே சாலுங் கரி' (குறள். 25); 'அழுக்கா றுடையார்க் கதுசாலும்' (குறள். 165).

பி - ம். 1. நிற்கின்ற செல்வ, வென்றி நிறைமறைப் பொருள்கள்; நிற்கின்ற செல்வம் வேறு; நெறிநின்ற வுயிர்க ளெல்லாம்.

2. கருதப விவனைக், கருதுவ திவனைக்.

3. பொற்குன்றம் பொருவு தோள பொதுநின்ற தன்மை.

4. இதனுக்கோ ரேது; மேது வுண்டோ, மேது வேண்டாம். (134)

362. கைதவ மியற்றி யாண்டுங்
கழிப்பருங் கணக்கி றீமை
வைகலும் புரிந்து ளாரும்
வானுயர் நிலையை வள்ளல்
எய்தவர் பெறுவ ரென்று
லிணையடி யெய்தி யேவல்
செய்தவர் பெறுவ தைய
செப்பலாஞ் சிறுமைத் தாமோ.

'ஐய - அப்பனே! கைதவம் இயற்றி - வஞ்சனைகள் பல செய்து, யாண்டும் கழிப்பு அரு - எப்பொழுதும், எவ்விடத்தும் போக்கற்கரிய, கணக்கு இல் தீமை - எண்ணுக் கடங்காப் பாவங்களை, வைகலும் புரிந்துளாரும் - நாள்தோறும் செய்தவர்களும், வள்ளல் எய்தவர் - இராமபிரானால் அம்பு எய்யப் பெற்று மாண்டவர், வான் உயர் நிலையை - மிகவுயர்ந்த நிலையான பரமபத வாழ்வை, பெறுவர் என்றால் - அடைவார் என்றால், இணை அடி எய்தி - அவ்விராமபிரானுடைய இரு

திருவடிகளைச் சரணமாக அடைந்து, ஏவல் செய்தவர் - அவன் ஏவிய பணிகளைப் புரிந்தவர், பெறுவது - அடையக்கூடிய பதவியின் சிறப்பு, செப்பல் ஆம் சிறுமைத்து ஆமோ - நம்போல்வரால் சொல்லக்கூடிய அவ்வளவு எளிய தன்மையுடையதாமோ? (ஆகாது என்றபடி.)

ஐய என்றது அன்பினால் வந்த மரபு வழுவமைதி. கைதவமியற்றி... யெய்தவர் பெறுவர்; என்பது, விராதன், கவந்தன், முதலிய தீயோரும் நற்கதி பெற்றதையும், கரன் முதலிய அரக்கர் பல்லாயிரவரும் செஞ் சரத் தூய்மையால் தேவரானமையையும் குறிப்பிட்டபடி. புரிந்துளோரும்: உம்மை இழிவு சிறப்பினது. இணையடியெய்தி யேவல் செய்தவர் பெறுவது; அது புண்ணிய வசத்தால் அடையும் 'பேறு என்பதும், அவ்வரிய பேறு உனக்கு வலுவில் எதிர் வந்தது, ஆதலின் நீயே பாக்கியசாலி என்பதும் சுக்கிரீவனுக்கு வாலி எடுத்துக்கூறி அவனைக் கொண் டாடினான் என்பதாம். இச்செய்யுள் ஒன்று உரைக்கப் புகுந்து அதனால் மற்றொன்றை விளங்கக் கூறுதல் என்னும் மரபுபற்றி, தொடர்நிலைச் செய்யுட் பொருட் பேறணி என்பதில் அடங்கும்; இதனைத் தண்டாபூபிகா நியாயம் என்பர் வடமொழியார். நல்லோரை ஒப்பத் தீயோர்க்கும் இன்னருள் புரியும் இராமபிரானுடைய பெருங் கருணையைக் கருதி, வள்ளல் என்று சிறப்பிக்கப் பெற்றது. யாண்டும்: இஃது, எப்பொழுதும் எனக் காலத்தைக் குறிப்பதும் ஆகும். இனி, சரபங்கர் இராமபிரானைத் தரிசித்து, அளவளாவி மகிழ்ந்து உயிர் நீத்த நிலையில், நம் ஆசிரியர் கல்வியிற் பெரியார்,

'அண்டமு மகிலமு மறிவரு நெறியால்
உண்டவ னொருபெய ருணர்குநருறுபே
றெண்டவம் நெடிதுயி ரிறுதியி லவனைக்
கண்டவ ருறுபொருள் கருதுவ தெளிதே

(ஆரணிய. 117) என அறிவுறுத்தியுள்ளமை இங்குச் சிந்திக்கப் பாலதாம்.

பி - ம். 1. கணிப்பருங் குணக்கடமை.

2. வானுயர் வீடு, வானுயர் நிலையின், வானுயர் நிலையில் புரிந் னோரும்.

3. எய்தவர் பதவி யென்று; யிணையடி யிறைஞ்சி.

4. செப்பலார் தன்மைத் தாமோ; சீர்மைத் தாமோ. (135)

63. அருமையென் விதியி னூரே
யுதவுவா னமைந்த காலை
இருமையு மெய்தி னுய்மற்
றினிச்செயற் பால தெண்ணின்
திருமறு மார்ப னேவல்
சென்னியிற் சேர்த்திச் சிந்தை
ஒருமையி னிறுவி மும்மை
யுலகினு முயர்தி யன்றே.

'விதியினுரே - விதியே, உதவுவான் அமைந்த காலை - உதவிபுரிய நேர்ந்தபோது, அருமை என் - பெறுதற்கு அருமையாவது யாதே ஆகும்? (எதையும் அடையலாம் என்றபடி) ; (ஆதலின்), இருமையும் எய்தினுய்- நீ இம்மை மறுமைகளில் அடையக்கூடிய நற்பயன்களை அடைந்தாய்! இனி செயல் பாலது எண்ணின் - இனி நீ செய்யத் தக்கதைக் கருது மிடத்து, திரு மறு மார்பன் - ஸ்ரீவத்ஸம் என்னும் ஒரு மச்சத்தைத் தன் மார்பிற் கொண்டுள்ள திருமாலாகிய இந்த இராமபிரானுடைய, ஏவல் - கட்டளைகளை, சென்னியில் சேர்த்தி - உன் தலைமேல் ஏற்றுக்கொண்டு, சிந்தை - உன் மனத்தை, ஒருமையின் நிறுவி - ஒரே வழியில் நிலை நிறுத்தி, மும்மை உலகினும் உயர்தி - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூவுலக வாழ்வினும் மேலான பரமபதப் பதவியை அடைவா யாக! மற்று, அன்று, ஏ; அசைகள்.

விதியினுர் : ஆர் விகுதி, சிறப்பின் பாலாய் வந்த திணைவழு வமைதி ; ஏகாரம் தேற்றப் பொருளது. திரு மறுமார்பன் : திருமகளும் ஸ்ரீ வத்ஸம் என்னும் மறு ஆகிய இரண்டையும் தன் மார்பில் அணிந் துள்ள திருமால் எனக் கொள்ளலும் ஆம் : பால. அகலிகைப் : 19. சேர்த்தி : இ, வினையெச்ச விகுதி. சிந்தை யொருமையின் நிறுவுதல்: ஏகாக்ர சித்தம் என்பர் வடமொழியில். 'விதி உதவும் பொழுது அருமை என்?' என்பது ஒரு சிறந்த உண்மையாகும். 'விதியே நல் கின் மேவலா காதென்' (100) என சுக்கிரீவன் வாக்கால் இவ் வுண்மை தெரிவிக்கப்பெற்றது காண்க.

பி - ம். 1. *அருமையின் விதியி னூரே ; விதியினூர் வந்துதவுதற் கமைந்த; னமைந்தா ரையா.*
2. *செயற்பால தெண்ணித் ; செயற்பால தென்னின்.*
3. *சென்னியிற் கொண்டு சிந்தை ; சாத்திச் சிந்தை.*
4. *ஒருமையி னிருத்தி.* (136)

ஒரு பிரதியில் இச்செய்யுளுடன் இப்படலம் முடிவுறும் ; பின் அரசியற் படலம்.

364. மதவியல் குரக்குச் செய்கை
மயர்வொடு மாற்றி வள்ளல்
உதவியை யுன்னி யாவி
யுற்றிடத் துதவு கிற்றி
பதவியை யெவர்க்கு நல்கும்
பண்ணவன் பணித்த யாவும்
சிதைவில செய்து நொய்திற்
றீர்வரும் பிறவி தீர்தி.

'மத இயல் குரக்கு செய்கை - (மடமையால் விளைந்த) செருக்குச் செயலையுடைய குரங்கின் செயலையும், மயர்வொடு - மயக்கத்தையும், மாற்றி - போக்கி, வள்ளல் உதவியை உன்னி - வள்ளலாகிய இராம பிரான் உனக்குச் செய்த உபகாரத்தை (மறவாமல்) மனத்திற்கொண்டு, உற்றிடத்து - அவனுக்கு ஆபத்து உண்டான இடத்தில், ஆவி உதவு கிற்றி - உன் உயிரையும் கொடுத்து அவனுக்கு உதவி புரிவாயாக: (மேலும்) பதவியை எவர்க்கும் நல்கும் பண்ணவன் - நல்லவர் யாவர்க்கும் நற்கதி அளிக்கும் தேவனாகிய அவ்விராமபிரான், பணித்த யாவும் - உனக்குக் கட்டளையிட்டவைகளை யெல்லாம், சிதைவு இல செய்து - குறைவு படாமற் செய்து, தீர்வு அரும் பிறவி - நீங்குதற்கு அரிய பிறவி யென்னும் நிலையை, நொய்தில் தீர்தி - எளிதில் நீங்கி நற்கதியடைவா யாக.

உற்றிடத்து: 'உற்றவிடத்தி லுயிர் வழங்கும் தன்மையோர்' (மூதுரை. 6). பண்ணவன் - கடவுள் அல்லது தேவன்: (பிங்.). பதவி - பெருமையைத் தரும் இடம்: இங்கு நற்கதி எனக் கொள்ளப்பெற்றது.

பி - ம். 1. மதவிய குரக்குச்; மயர்வற மாற்றி, மயக்கத்தை மாற்றி; உயிரொடு மாற்றி.
2. உதவியை யுள்ளி, உதவிய வுன்னி; உற்றுழி யுதவுகிற்றி; உற்றிடத் துதவி பற்றி; யாவி யெழுந்திட வரினு மேலாம்.
3. எவைக்கு நல்கும்; பதமவை யெவர்க்கு.
4. சிதையிலசெய்தி; சிதைவறச் செய்தே யுன்றன்றமை சேர் பிறவி தீர்தி; யுன்றன்றீமைசேர் பிறவி தீர்த்தி; பிறவி நொய் தாம், தீர்தரும் பிறவி. (137)

365. அரசியற் பாரம் பூரித்
தயர்த்தனை யிகழா தையன்
மரைமலர்ப் பாதம் நீங்கா
வாழுதி மன்ன ரென்பார்
எரியனற் குரிய ரென்றே
யெண்ணுதி யெண்ணம் யாவும்
புரிதிசிற் றடிமை குற்றம்
பொறுப்பரென் றெண்ண வேண்டா.

'அரசு இயல் பாரம் பூரித்து - நீ இனி அடையப் போகும் அரசப் பதவியான பொறுப்பில் முதிர்ந்து பெருமிதமடைந்து, அயர்த்தனை இகழாது - அறிவு மயங்கி இகழ்ச்சி செய்யாமல், ஐயன் - இராமபிரானுடைய, மரைமலர் பாதம் நீங்கா - தாமரை மலர் போன்ற திருவடிகளை விட்டுப் பிரியாமல், வாழுதி - நீ வாழக்கடவாய்; மன்னர் என்பார் - அரசராவார், எரி அனற்கு உரியர் என்றே - பற்றி எரியும் தீக்கு உவமையாகும் உரிமைய்யுடையவர் என்றே, எண்ணுதி - நீ நினைத்துக் கொள்; எண்ணம் யாவும் புரிதி - அவருடைய கருத்து இன்னதென்று அறிந்து அவை அனைத்தையும் நீ செய்யக்கடவாய்; 'சிறு அடிமை - யான் சிறிய அடிமை, குற்றம் பொறுப்பர் என்று - என் குற்றங்களைப் பொறுத்துக் கொள்வார் என்று, எண்ணவேண்டா - நீ நினைக்காதே.'

மன்னர் எரியனற் குரியார்; 'அகலா தணுகாது தீக்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்' (குறள். 691) என்றமை காண்க. இச்செய்யுள், குறள். 698, 699, 700-ஆம் செய்யுட்களையும், நாலடியார். 161-ஆம் செய்யுளையும், ஆசாரக்கோவை 84-ஆம் செய்யுளையும் உட்கொண்டு கூறினமை என்னலாம்; ஒப்பு. சீவக. 25()ஃ; நீதிநெறி. 46. மரை மலர்: தாமரை மலர் என்பதன் முதற்குறை. வேண்டா: எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

பி - ம். 1. பூரித் தயர்ந்தனை; யிகவாது.
2. நீங்காய் வாழுதி; வாழுதி மற்றிம் மேலோன்; மன்ன ரென் போர், மன்ன ரென்ப,
3. எரியெனற் குரியர்; குரிய நீரார்; யிட்டது றகர்தி யாண்டும்; யீண்டினி றகர்தி யாண்டும்; யெண்ணி யாண்டு, யெண்ணம் யாதும்,
4. சிற்றடிமைக் குற்றம்; பொறுப்பரென் றியற்றல் போற்று. (138)

வாலி, சுக்கிரீவனை இராமபிரானிடம் அடைக்கலமாக அளித்தல்

366. என்னவித் தகைய வாய
வுறுதிகள் யாவு மேங்கும்
பின்னவற் கியம்பி நின்ற
பேரெழி லானை நோக்கி
மன்னவர்க் கரசன் மைந்த
மற்றிவன் சுற்றத் தோடும்
உன்னடைக் கலமென் றுய்த்தே
யுயர்கர முச்சி வைத்தான்.

என்ன இ தகைய ஆய - என்று இத்தன்மையவான, உறுதிகள் யாவும் - க்ஷேமம் அளிக்கத்தக்க புத்திமதிகள் யாவற்றையும், ஏங்கும் - தன் பிரிவுக்காக ஏங்கி வருந்தும், பின்னவற்கு - தன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு, இயம்பி - (வாலி) எடுத்துக் கூறி, நின்ற - தன் எதிரே நின்ற, பேர் எழிலானை - மிக்க அழகுடைய ஸ்ரீ ராமபிரானை, நோக்கி - பார்த்து, 'மன்னவர்க்கு அரசன் மைந்த - அரசர்களுக்கெல்லாம் அரசனான தசரத சக்கரவர்த்தியின் குமாரனே! இவன் - இந்தச் சுக்கிரீவன், சுற்றத்தோடும் - இவனது உறவினர்களோடும், உன் அடைக்கலம் - உனது அடைக்கலப் பொருளே ஆவன்', என்று உய்த்து - எனக்கூறி அச் சுக்கிரீவனை அவ்விராமபிரான் முன் செலுத்தி, உயர் கரம் உச்சி வைத்தான் - உயர்த்திய கைகளைத் தன் தலைமீது வைத்து வணங்கினான். மற்று, ஏ—அசைகள்.

ஏங்கும் பின்னவன்; தான் அவன் உயிர் அழிவுக்குக் காரணமான தற்காக ஏங்கும் தம்பியாகிய சுக்கிரீவன் எனலும் ஒன்றும். பேரெழிலானை: ஆடவர் அங்கலக்ஷணமனைத்தும் ஒருங்கே தன்னிடம் அமையப் பெற்றவனை: 'ஓர் அழியா அழகுடையான்' (அயோத். கங்கைப்: 1); 'அந்தமி லழகன்'; (பால. மிதிலைக். 39) என்றமை காண்க. உயர்கரம் உச்சி வைத்தான் என்பதற்கு, இராமபிரானுடைய திருக்கரத்தைப் பற்றிச் சுக்கிரீவன் தலை உச்சியில் வாலி வைத்தான் எனப் பொருள் கொண்டாரும், 'வாலி சுக்கிரீவன் தலையில் கைவைத்து அடைக்கலமாகக் கொடுத்தான் என்று கூறுவாருமுளர். இராமபிரானைச் சக்கரவர்த்தித் திருமகன் என்ற பெயரால் அழைப்பதே பெருவழக்காதலின், அம்முறைகொண்டு, 'மன்னவர்க் கரசன் மைந்த' என்றான்

வாலி ; 'சக்கரவர்த்தி தநுஜாய, சார்வபௌமாய, மங்களம்' என்று ஆன்ரோர் மங்களாசாஸனம் செய்துள்ளமையும் நோக்குக.

பி - ம். 1. *தகைய யாக வியம்பி யாய்மைகள் யாவும் மோங்கு, யாவு மெண்ணி, யாவு மெங்கும்; இயம்பி யெங்கும்.*

2. *பின்னவற் குரைத்து.*

4. *கலமென் ரேறி, கலமென் றுந்தி, கலமென் றுச்சி யுயர்கர மதனை வைத்தான்.* (139)

வாலி அங்கதனை வருவித்தல்

367. வைத்தபின் னுரிமைத் தம்பி
மாமுக நோக்கி வல்லை
உய்த்தனை கொணர்தி யுன்ற
னோங்கரு மகனை யென்ன
அத்தலை யவனை யேவி
யழைத்தலி னணைந்தா னென்ப
கைத்தலத் துவரி நீரைக்
கலக்கினான் பயந்த காளை.

வைத்தபின் - அவ்வாறு தன் கரம் உச்சிவைத்து வணங்கிய பிறகு, உரிமை தம்பி மா முகம் நோக்கி - தனக்கு உரிய தம்பியாகிய சுக்கிரீவனுடைய மாட்சியுற்ற முகத்தைப் பார்த்து, 'உன் தன் ஓங்கு அரு மகனை - உன்னுடைய சிறந்த அரிய குமாரனான அங்கதனை, வல்லை - விரைவில், உய்த்தனை கொணர்தி - இங்கு அழைத்துக்கொண்டு வருவாயாக', என்ன - என்று கூறி, அ தலை - அவ் வங்கதன் இருந்த இடத்திற்கு, அவனை ஏவி அழைத்தலின் - அச் சுக்கிரீவனைப் போகச்செய்து அழைத்ததினால், கை தலத்து உவரி நீரை கலக்கினான் - தன் கை வலியால் கடல்நீரைக் கலக்கினவனான வாலி, பயந்த காளை - பெற்ற இடபம் போன்ற அங்கதன், அணைந்தான் - (அங்கு) வந்து சேர்ந்தான். என்ப : அசை.

'உன்றன் மகன்' என்றது; இனிச் சுக்கிரீவனே, அங்கதனை மகன் போலக் காப்பாற்ற வேண்டிய உரிமையைக் குறிப்பிட்டுக் கூறியது. அத்தலை அணைந்தான் ; அந்த வாலி கிடந்த இடத்து. என இயைத்தும் பொருள் கொள்ளலாம். காளை: இளமையும் பெருமிதமு முடையவனைக் காளையெனக் கூறுதல் கவி மரபு; 'கைவரை யெனத் தகைய காளை' (பால. தாடகை வதைப் : 47) என இராமபிரானைக்

குறித்தது காண்க; காளை: ஆகுபெயர். உவரி நீர் என்பது - உப்பு நீரையுடைய கடலைக் குறிப்பது எனினும், இங்கு வாலி கலக்கியது என்றமையால், அது அவன் கலக்கி அமுதங் கடைந்தெடுத்த பாற்கடல் என்பதாம்; இங்கு உவரி என்ற சொல் கடல் என்ற பொதுப் பெயரில் வந்தது. இனி அமுதங் கடைந்தெடுத்தது உவரிநீர்க் கடல் என்பாரும் உளர்: தக்க. 284. உரை. வாலி கடல் கடைந்தது: 247, 249, 252-3, 372, 393; உயுத்த. அங்கதன்றூது: 24.

பி - ம். 1. வைத்தபி னருக்கன் மைந்தன் மாமுக நோக்கி.

2. கொணர்தி யோடி யுன்னொரு மகனை; வல்லே கொணர்தி போதி யுன்னொரு மகனை. 3. அத்தலை யனைய வேயத் தழைத்தலின்.

4. துவரி வேலை. (140)

அங்கதன் வாலியைக் காணுதல்

368. சுடருடை மதிய மென்னத்
தோன்றலுந் தோன்றி யாண்டும்
இடருடை யுள்ளத் தோரை
யெண்ணினு முணர்ந்தி லாதான்
மடருடை நறுமென் சேக்கை
மலையன்றி யுதிர வாரிக்
கடரிடைக் கிடந்த காதற்
றாதையைக் கண்ணிற் கண்டான்.

சுடர் உடை மதியம் என்ன - ஒளியுடைய (பூர்ண) சந்திரன் போல, தோன்றலும் - அவ்வாலி குமாரனும், யாண்டும் - ஒரு போதும், இடர் உடை உள்ளத்தோரை - துன்பமுடைய மனத்தவரை, எண்ணினும் - தன் மனத்தாற் கூட, உணர்ந்திலாதான் - எண்ணி அறியாதவனுமான அவ்வங்கதன், தோன்றி - அங்கு வந்து சேர்ந்து, மடர் உடை நறு மென் சேக்கை மலை அன்றி - மலர் இதழ்களையுடைய நன்மணங் கமழும் படுக்கையாகிய மலை மீது அல்லாமல், உதிர வாரி கடர் இடை கிடந்த - இரத்தவெள்ளம் நிறைந்த கடலிடையே படுத்துக் கிடந்த, காதல் தாதையை - தன்பால் அன்புசிறந்த தன் தந்தையாகிய வாலியை, கண்ணில் கண்டான் - தன் கண்களால் நன்கு தெரியக் கண்டான்.

சுடருடை மதியம் - ஒளி நிரம்பிய முழுமதி; வாலி வெண்ணிறமுள்ளவன் ஆதலின், அவன்மைந்தன் அங்கதனும் அவ் வெண்ணிறமே அமைந்தனன் என்பதாம். வாலி வெண்ணிறமானவன்;

239. தோன்றல் - மைந்தன் ; (பிங்.). எண்ணினும் - இறந்தது தழுவிய எச்சவும்மை ; வாக்கினுலும், செயலாலும் அறியாதவன் என்றவை குறிப்பிட்டது. இடருடை......முணர்ந்திலாதான்: அதுவரை அங்கதன் துன்பம் என்பதையே சிறிதும் உணராதபடி வளர்ந்து வந்த சிறப்புணர்த்தியது. மடர், கடர் என்பன ஈற்றுப் போலி. உதிரவாரி - இரத்தப் பெருக்கு ; இஃது இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. மதியம் : அம் சாரியை. சேக்கைக்கு மலே - பெருமையையும், உயர்வையுங் குறித்தது. கண்ணிற் கண்டனன் - கண்களால் நேரில் விளங்கக் கண்டான் என்பதாம்; 'கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்' (சுந்தர. 1269) என்றது போல. 'இடருடை உள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான், தன் காதற் றந்தை துன்புற்று உதிரவாரிக் கடலிற் கிடந்ததைக் கண்ணிற் கண்டான்' என்றதன் உணர்ச்சி நயம் ஓர்க.

பி - ம். 1. *தோன்றினன் றோன்றி, தோன்றிய தோன்றல், தோன்றினுன் றோன்றயாண்டு.*

2. *இடருடை முகத்தி னேரை; யெண்ணத்து முணர்க லாதான் ; முணர்வி லாதான் ; உள்ள மென்ப தியாதினு.*

3. *மலரின்றி யுதிர வாரி.* (141)

அங்கதன் வாலிமேல் விழுந்தழுதல்

369. கண்டகண் கனலு நீருங்
குருதியுங் கால மாலேக்
குண்டல மலம்பு கின்ற
குவவுத்தோட் குரிசி றிங்கள்
மண்டல முலகில் வந்து
கிடந்ததம் மதியின் மீதா
விண்டல மதனி னின்றோர்
மீன்விழுந் தென்ன வீழ்ந்தான்.

கண்ட கண் - (வாலியை அந்நிலேயிற்) கண்ட தன் கண்கள், கனலும் - நெருப்பையும், நீரும் - கண்ணீரையும், குருதியும் - உதிரத்தையும், கால - சொரிய, குண்டலம் அலம்புகின்ற - குண்டலங்கள் அசைந்து ஒளிரப்பெற்ற, மாலே குவவு தோள் - மாலே யணிந்து திரண்டுயர்ந்த புயங்களேயுடைய, குரிசில் - அரசிளங்குமரனுன அங்கதன், திங்கள் மண்டலம் உலகில் வந்து கிடந்தது - சந்திரமண்டலம் இவ்வுல

கில் வந்து கிடந்தது ஆக, அ மதியின் மீதா - அவ்வாறு கிடந்த அந்தச் சந்திரன் மேலே, விண்தலம் அதனின் நின்று - வானத்திலிருந்து, ஓர் மீன் விழுந்து என்ன - ஒரு நட்சத்திரம் வந்து விழுந்தது என்று சொல் லும்படி, வீழ்ந்தான் - வாலி உடலின் மீது விழுந்தனன்.

கனல் கான்றது: தன் தந்தையை ஒருவன் கொன்றுனே என்ற சினத்தால் எழுந்தது; நீரும்: நீர் சோகத்தால் எழுந்தது; குருதி: அதிர்ச்சியால் எழுந்தது என்க. அலம்புதல்-அசைதல்; 321. திங்கள் மண்டலம் இங்கு வாலிக்கும், மீன் அங்கதனுக்கும் ஒளியாலும் பெருமை சிறுமைகளாலும் உவமைகள் ஆயின. மீன்; மின் என்னும் வினையடி யாகப்பிறந்த முதனிலை திரிந்த தொழிற் பெயர். மீன்-இங்கு விண்மீன். வீழ்ந்தென்ன; வீழ்ந்த தென்ன என்பதன் தொகுத்தல் விகாரம், குரிசில் - பெருமையிற் சிறந்தவன்: இஃது ஆண்பாற் சிறப்புப் பெயர்.

பி-ம். 1. கண்டனன் கண்ணி னீரும்; கலுழி நீரும், கண்ணு நீரும்; கண்டனன் கண்ணீர் பாயக் காலையின் வெயிலிற் சோதி; கண்டகண் கனலு நீங்குங் குருதியுங் கால மாலைக்.

2. குண்டல மிலங்கு கின்ற.

3. மண்டல முலகின் வந்த வதனத்தான்; தாதை தன்பால்; மண்டல முதையம் போலும் வதனத்தன் ருதை மார்பின்; தன் மதியின் மீதாம்.

4. விண்டலங் தன்னி னின்றோர்; மின்வீழ்ந் தென்ன. (142)

அங்கதன் புலம்பல்

370. எந்தையே யெந்தை யேயிவ்
வெழுதிரை வளாகத் தியார்க்கும்
சிந்தையாற் செய்கை யாலோர்
தீவினை செய்தி லாதாய்
நொந்தனை யதுதா னிற்க
நின்முக நோக்கிக் கூற்றும்
வந்ததே யன்றோ வஞ்சா
தாரதன் வலியைத் தீர்ப்பார்.

(அங்கதன் தன் தந்தையை நோக்கி), 'எந்தையே எந்தையே - என் தந்தையே! என் தந்தையே! இ எழு திரை வளாகத்து - இந்த ஏழுகடல்கள் சூழ்ந்த நிலப்பரப்பில், யார்க்கும் - எவர்க்கும், சிந்தையால் - மனத்தினுலும், செய்கையால் - செயலாலும், ஓர் தீவினை செய்திலாதாய் - ஒரு தீய காரியமும் புரியாதவனே! நொந்தனை - (அத்தகைய நீ இப்பொழுது) இத்தகைய துயரத்திற் காளானுய்; அது தான் நிற்க அது கிடக்கட்டும்; நின்முகம் நோக்கி - உன் முன்பாக, கூற்றும் அஞ்சாது வந்ததே அன்றோ - யமனும் அச்சமில்லாமல் வந்து விட்டானல்லனோ? ஆர் அதன் வலியை தீர்ப்பார் - அக்கூற்றின் வலிமையை ஒழித்து அடக்குவார் யாரே உளர்! (ஒருவரும் இல்லை என்றபடி).

எந்தையே எந்தையே; அடுக்கு, புலம்பலில் இருமுறை வந்தது. எழுதிரை வளாகம் - எழுந்தோங்கும் திரைகளையுடைய கடலாற் சூழப்பட்ட உலகம் எனலும் ஆம்; வளாகம் - பரவிய இடம்; அதாவது உலகம்; (பிங்.); 'ஏழ்பெரு வளாக வேந்தர்'; (உயுத்த. திருமுடிசூட்டுப்:6). அங்கதன், வாலி தன்னை வலுவில் எதிர்த்தோரையன்றித் தானே தன் வலி காட்டி வலுவிற் பிறருக்குத் தீங்கு நினைத்தவனும் செய்தவனும் அல்லன் என்பது இதனுல் விளங்கும். சிந்தையையும் செய்கையையும் சொன்னதால், உபலக்கணத்தால் வாக்கையையுங் கூட்டிக் கொள்க. கூற்றுமென் பேர் சொலக் குலையும் என்று வாலி (254) கூறினுனாக, 'யமனும் அஞ்சாது உன்னை அணுகிப் பற்றிப் போக வந்துவிட்டானே' என்று அங்கதன் அங்கலாய்த்தான் என்க. 'யாரதன் வலியைத் தீர்ப்பார்' என்றது, வேற்றுப்பொருள் வைப்பணியும் ஆம். கூற்றும்; முன் உன் ஆற்றலுக்கு அஞ்சிய கூற்றும் என்க. உம்மை இங்கு இழிவுப் பொருளது.

பி - ம். 1. வேழ்கட லுலகத். 2. சிந்தையிற் செய்கையால்.

3. நொந்தயிதென் னதுதான்; நின்முக நோக்கிச்; உன்முக நோக்கி.

4. வஞ்சா தாரவன் வலிமை; வஞ்சா தியாவர்தம் விதியை வெல்வார்; வந்ததே யென்றுற் பின்னை யாரதன் வலியைத். (143)

371. தறையடித் தடுபோற் றீராத்
 தகையவித் திசைக டாங்கும்
கறையடிக் கிழிவு கண்ட
 கண்டக னெஞ்ச முன்றன்
நிறையடிக் கோல வாலி
 னிலைமையை நினையுந் தோறும்
பறையடிக் கின்ற வந்தப்
 பயமறப் பறந்த தன்றே.

'தறை அடித்தது போல் - தறையலாணி தைத்ததுபோல, தீரா தகைய - இடம் விட்டு நீங்காது நின்ற தன்மையுடைய, இ திசைகள் தாங்கும் கறை அடிக்கு - இந்த எண்டிசைகளிலும் நின்று இவ்வுலகைத் தாங்கும் உரல் போன்ற கால்களையுடைய திசையானைகளுக்கு, இழிவு கண்ட - தோல்வியை உண்டாக்கிய, கண்டகன் - முள்போன்ற கொடியவனான இராவணனுடைய, நெஞ்சம் - மனம், உன் தன் - உன்னுடைய, நிறை அடி கோல வாலின் - பருத்து நிறைந்த அடிப்பக்கத்தையுடைய அழகிய வாலினது, நிலைமையை - வலித்தன்மையை, நினையும் தோறும் - நினைக்கும் போதெல்லாம், பறையடிக்கின்ற அந்தப் பயம் - பறையடிக்கின்றது போல நடுங்குதலுற்ற அந்த அச்சம், அற - இனி அவனை விட்டு ஒழியும்படி, பறந்தது அன்றே - பறந்தோடிப் போயிற்று அல்லவோ ?

தறைதல் - தைத்தல்; தறை, முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஆணிகளில் தறையலாணி என ஒருவகை யுள்ளமை காண்க. இனி, தரை, எதுகை நோக்கித் தறையென்றாயிற்று எனக்கொண்டு, தரையில் ஆழமாக ஆணி வைத்து அறைந்தது போல, என்பாரும் உளர். கறை - உரல்; (பிங்.); உரல் போன்று பருத்த கால்கள் உடைமையால் யானை சினையாகுபெயராய்க் கறையடி எனப்படும். கண்டகன் - முள் போன்ற கொடிய செயலுடைய இராவணன்; சுந்தர. 318, 659, 1075; அரக்கர்களைக் கண்டகர் எனக் கூறுவது; ஆரணிய. 485, 734, 972, 1079; பால. திருவவதாரப். 9; மற்றும் பலவிடங்களிலும் பயிலப்பெறுவது காண்க. நிறையடிக் கோல வாலின்: வாலின் இவ்வழகு பற்றியே அவனுக்கு வாலி எனப் பெயர் வந்தது என்பதும், இங்கு நோக்கத்தக்கது. நெஞ்சு பறையடித்தல்: 'பறையிடு நெஞ்சினன் பதைக்கு மேனியன்' (940.); பெருங். 4:13. 75; வி. பா. இராசசூய. 24; 'பந்தடிக்குந் தொறும் நெஞ்சம் பறையடிக்கின்றது' (சடகோபரந்தாதி). வாலியின் பெயரைச் சொல்வதால் அவன் வாலின்

செய்கை தன் மனத்தில் வர, இராவணன் நடுங்குவான் என்ற குறிப்பில், அநுமன், "வெஞ்சின வாலி மீளான் வாலும்போய் விளிந்த தன்றே" (சுந்தர. 1126) என இனி, நகைச்சுவையுந் தோன்றக் கூறியதும் நோக்குக. 'தறையடித் தகைபோற் றீராத் தகையவித்' என்ற பாடங் கொண்டு, 'பூமியில் அடித்தகை இலக்குத் தப்பாது படுவது போல் விதி தப்பாது' என்று பழையவுரை பொருள் கூறும்.

பி-ம். 1. *தறையடித் தகைபோற் றீராத் தகைவிதி ; சொற்றீரா, தகையடி; தகைவிதி திசைக ; திசைக டாங்கும், தகையினென் டிசைகடாங் கும், தகையவி விசை கடாங்கு.*

2. *கறையடிக் கழிவு செய்த ; இழிவு கண்ட, கழிவே கண்ட.*

3. *திறையிடிக் கோல வாலின்; கண்டக னெஞ்சமுற்ற.*

4. *பறையடிக் கின்ற வாற்றல்; வன்னேன் பயமறப் பலித்த தம்மா ; பயமுறப் பறந்த தன்றே; பயந்த தன்றே.* (144)

372. குலவரை நேமிக் குன்ற
மென்றவா னுயர்ந்த கோட்டின்
தலைகளு நின்பொற் றாளிற்
றழும்பினித் தவிர்ந்த வன்றே
மலையுட னரவு மற்று
மதியமும் பலவுந் தாங்கி
அலைகடல் கடைய வேண்டி
னாரினிக் கடைவ ரையா.

'ஐயா - ஐயனே! குலவரை - எட்டுக்குல மலைகளும், நேமி குன்றம் என்ற - சக்கரவாளகிரி என்று சொல்லப்பெறும், வான் உயர்ந்த கோட்டின் - வானளாவி உயர்ந்த மலையின், தலைகளும் - சிகரங்களும், நின் பொன் தாளில் தழும்பு - உன்அழகிய பாதங்களின் (படுதலால் ஏற்படும்) சுவடுகள், இனி தவிர்ந்த அன்றே - இனி நீங்கப்பெற்றன வல்லவோ? மலையுடன் - மந்தரம் என்னும் மலையோடு, அரவும் - (கடைகயிருகக் கொண்ட) வாசுகியென்னும் பாம்பையும், மதியமும் - (அடைகல்லாகக் கொண்ட) சந்திரனையும், மற்றும் பலவும் - மேலும் பல உபகரணங்களையும், தாங்கி - ஏற்று, அலைகடல் கடைய வேண்டின் - (மறுபடியும்) அலைகளையுடைய பாற்கடலைக் கடையவேண்டுமானால், ஆர் இனி கடைவர் - (நீ இறந்துபோவதால்) இனி யார் வந்து

கடைந்து அமுது அளிக்கவல்லவர் ஆவர்?' (ஒருவரும் இல்லையே என்று அங்கதன் ஏங்கினன் என்றபடி.)

மற்றும் என்பதைக் கடையவேண்டின் என்பதோடு இயைத்துப் பொருள் கோடலும் ஒன்றும். வாலி கடல் கடைந்தது; 367 உரையிற் காண்க. கோடு - மலை (பிங்.); நேமிக்குன்றம் - சக்கரவாளகிரி. இஃது இவ்வுலகத்தின் எல்லைகளைச் சுற்றி வளைந்து அமைந்த மலைத் தொடர் என்பர். தழும்பு - வடுவும் ஆம். குலவரைகள் எட்டு. அவை இமயம், மந்தரம், கயிலாயம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம். (பிங்.)

பி - ம். 1. மென்றில்வா னுயர்ந்த, மென்றுயா னுயர்ந்த, மின்றியா னுயர்ந்த, மென்றி வற்று, யென்னும்வா னுயர்ந்த.

2. நின்பொற் றேளிற்; றழும்பினிற் றவிர்ந்த; றவழ்ந்த வன்றே.

3. மலைகளு மியாவு மற்றும். மலையொடு பாம்பு மாக மாட்டிய மத்துங் தாம்பும்; மலைகொளு மரவும்; பலவுள மத்தும் மரவு மற்றும் மற்றுள பிறவுங்; மத்தும் பிறவுள தாங்கி.

4. கடைவ தையா, கடைவா ரையா. (145)

373. பஞ்சின்மெல் லடியாள் பங்கன்
பதயுக மல்ல யாதும்
அஞ்சலித் தறியாச் செங்கை
யாணையா யமரர் யாரும்
எஞ்சல ரிருந்தா ருண்ணு
தின்னமு தீந்த நீயோ
துஞ்சினை வள்ளி யோர்கு
ணின்னின்யார் சொல்லற் பாலார்.

'பஞ்சின் மெல் அடியாள் பங்கன்-பஞ்சு போன்று மென்மையான திருவடிகளையுடைய உமாதேவியைத் தன் திருமேனியின் ஒருபாகத்தே கொண்ட சிவபெருமானுடைய, பத யுகம் அல்ல - இரு திருவடிகளை அல்லாதனவற்றை, யாதும் - வேறு எதையும், அஞ்சலித்து அறியா - கூப்பி வணங்கியறியாத, ஆணை - நியமத்துடன் கூடிய, செம் கையாய் - சிவந்த கைகளையுடையவனே! அமரர் யாரும் - (நீ கடைந்தளித்த அமுதத்தை அருந்திய) தேவர் எல்லாரும், எஞ்சலர் இருந்தார் - (ஆயுள்) குறையாதவர்களாய் வாழ்ந்து இருந்தவர் ஆனர்; இன்அமுது உண்ணுது

ஈந்த நீயோ - அந்த இனிய அமிர்தத்தை அருந்தாமல் அத்தேவர்க்கே கொடுத்த நீயோவெனில், துஞ்சினை - இறந்தவனானாய்; (ஆதலின்), நின்னின் - உன்னைவிட, வள்ளியோர்கள் - கொடையாளிகள் என்று, சொல்லல் பாலார் - சொல்லத்தக்கவர், யார் - யாவரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி.)

வாலி சிவபக்தியிற் சிறந்தவன்; 114, 117; வாலி வழிபாடு இயற்றிய வடகுரங்காடுதுறை முதலிய சில சிவத்தலங்கள் உள்ளன காணலாம். இங்கு, தன் வலிகொண்டு கடைந்தெடுத்த அமுதத்தைத் தான்உண்ணாமல் பிறர்க்கு அளித்த வாலியின் வள்ளன்மையின் சிறப்புக் கூறப்பெற்றது; வாலியின் இவ் வருஞ்செயல், ' தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம் வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர் ' (நன். னெறி : 10) என்ற பெருமைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். வாலியின் இச்செயல் தனக்கு அருமையாய்க் கிடைத்த நெல்லிக் கனியை ஔவைக்களித்த அதிகமான் அஞ்சியின் வள்ளன்மையை நினைப்பூட்டுகின்றது. பதயுகம்: வடமொழித்தொடர்; யுகம் - இரட்டை ' பதயுகத் தொழில்கொடு பழிப்பி லாதன ' (பால. நகரப்: 49); பஞ்சின் மெல்லடி, என்பதற்கு, செம்பஞ்சு ஊட்டப்பெற்ற மென்மையான பாதம் எனலும் அமையும்.

பி - ம். 1. *மெல்லடியாள் பாகன்; பாதக மல்லதி, பதமல ரலது; பாதம லாதி யாதம்.*

2. *தறியாச் செய்கை; யாழியாச் செய்கை யானையா லமரார்; செங்கை யார்கவி கடைந்த முன்னம்; அறியாக் கையா லார்கவி கடைந்த முன்னாள்.*

3. *தஞ்சவி லமரருண்ண, துஞ்சலாரி ருந்தா.*

4. *நின்னின் செய்கையார் சொல்லற் பாலார், நின் னில்லைமையென் சொல்லற் பாலார்.* (146)

வாலி அங்கதனைத் தழுவி ஆறுதல் கூறல்

374. ஆயன பலவும் பன்னி
யழுங்கினன் புழுங்கி நோக்கித்
தீயுறு மெழுகிற் சிந்தை
யுருகினன் செங்கண் வாலி
நீயினி யயர்வா யல்லை
யென்றுதன் னெஞ்சிற் புல்லி
நாயக னிராமன் செய்த
நல்வினைப் பயனீ தென்றான்.

(அங்கதன்) ஆயன பலவும் - அவ்வாறுன பலவற்றையும், பன்னி - அடுத்தடுத்துப் பிரலாபித்துக்கூறி, புழுங்கி அழுங்கினன் - (உடல்) வெம்பி வருந்தினனுகி, நோக்கி - அவ்வாலியைப் பார்த்து, தீ உறு மெழுகில் - நெருப்பிலிட்ட மெழுகைப் போல, சிந்தை உருகினன்- மனம் உருகி வருந்தினுன் ; செம் கண் வாலி - சோகத்தாற் கலங்கிச் சிவந்த கண்களையுடைய வாலியும், (அவ்வங்கதனை நோக்கி), 'நீ இனி அயர்வாய் அல்லை என்று - நீ இனி வருந்தாதே என்று. ஆறுதல் கூறி, தன் நெஞ்சில் புல்லி - அவனைத் தன் மார்போடு அணைத்துத் தழுவிக் கொண்டு, நாயகன் இராமன் - உயிர்கள் அனைத்திற்கும் தலைவனுன இராமபிரான், செய்த ஈது - செய்ததான இச்செயல், நல்வினை பயன் என்றுன் - நான் முன் செய்த நற் செயல்களின் விளைவாகும்' என்று கூறினுன்.

இங்கு, உருகினன் என்றதை முற்றெச்சமாகவுங் கொள்ளலாம். நெஞ்சு : இது, மார்பு, இதயம், தொண்டை என்பன குறிக்கும் ஒரு பொதுச் சொல், நாயகன் ; இராமபிரானை; 'பூதநாயகன் நீர் சூழ்ந்த புவிக்குநா யகனப் பூமேற் சீதை நாயகன்வே றுள்ள தெய்வ நாயகனீ செப்பும், வேதநா யகன்மே னின்ற விதிக்கு நாயகன்' (உயுத்த. அங்கதன் றூது : 21.) என அங்கதன் இராவணனுக்கு இராமபிரானுடைய நாயகச் சிறப்பை எடுத்துக் கூறியது காண்க. இனி, இராமன் செய்த நல்வினைப்பயன் எனவே கொண்டு, ' இராமபிரான் எனக்குச் செய்த மகோபகாரச் செயல் ஆகும் என வாலி பாராட்டிக் கூறியதாகக் கொள்ளலும் தகும். நல்வினைப் பயனுவது, இனித்தான் அடையப் போகும் பரமபத வாழ்வு. ஈது : இது என்பதன் விகாரம்.

பி - ம். 1. ஆயவன் பலவும், ஆயவன் பிறவும்; புழுங்கின னழுங்கி நோக்கத்.
2. சிந்தை யுருகுவான் செங்கண் வாலி. சிந்தை யலம்வருஞ் செங்கண் வாலி, சிந்தை யுருகினுேன் றன்னை வாலி, சிந்தை யுருக்கினன் செங்கண் வாலி.
3. நீயினி னைவா யல்லை.
4. பயனி தென்றுன். (147)

375. தோன்றலு மிறத்த ருனுந்
துகளறத் துணிந்து நோக்கின்
மூன்றுல கத்தி னோர்க்கும்
மூலத்தே முடிந்த வன்றே
யான்றவ முடைமை யாலிவ்
விறுதிவந் தியைந்த தியார்க்கும்
சான்றென நின்ற வீரன்
றான்வந்து வீடு தந்தான்.

(மேலும் வாலி அங்கதனை நோக்கி), 'தோன்றலும் இறத்தல் தானும் - பிறப்பதும் இறந்துபோதல் என்பதும், துகள் அற துணிந்து நோக்கின் - குற்ற மற உறுதியுடன் பார்க்குமிடத்து, மூன்று உலகத்தி னோர்க்கும் - சுவர்க்கம் பூமி பாதலம் என்னும் மூவுலகங்களில் வாழ் வோர்க்கும், மூலத்தே முடிந்த - ஆரம்பத்திலேயே நிச்சயித்து முடிவு பெற்ற செயல்களாம். (அவ்வாருக), யான் தவம்உடைமையால் - நான் முன் புரிந்த தவத்தை யுடைமையால், இ இறுதி வந்து இயைந்தது - இந்த நன்முடிவு எனக்கு வந்து கூடியது; (அதன் காரணமாகவே), யார்க்கும் சான்று என நின்ற வீரன் - எல்லோர்க்கும் ஒரு பிரமாணமாக விளங்கும் இந்த மகாவீரனுன இராமபிரான், தான் வந்து - தானே என்னைத் தேடி வந்து, வீடு தந்தான் - மோக்ஷ பதவியை எனக்கு அளித்துள்ளான். அன்று, ஏ: அசைகள்.

துகளறத் துணிந்து நோக்கின் - குற்றமில்லாது பொது நிலையில் நின்று உண்மையைக் கடைப்பிடித்துப் பார்க்குமிடத்து என்பதாம். மானிடர்போலத் தேவர், நாகர் இருதிறத்தோர்களும் தம் புண்ணியப் பயன் அற்ருல், மீண்டும் வேறு பிறவி அடைவர் என்பது மூன்றுலகத்தி னோர்க்கும் என்றதால் பெறப்பெற்றது. இறப்பும், பிறப்பும் தொடுத்து வருவன என்பது;

'இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கும், மறப்பெனி னதனின்மேற் கேடு மற்றுண்டோ' (அயோத். மந்திரப்; 21)
இறக்குமா றிதுவென் பான்போல் முன்னொா ளிறந்தான் பின்னுட், பிறக்குமா விதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா வெய்யோன்,' (அயோத். கங்கைப்: 50); மேலும், குறள். 339; சீவக. 269.

என்பன இங்கு ஒப்பு நோக்கத் தக்கன. சான்றென ; பிரமாணமாய் ; ஒரு சாக்ஷிபூதமாய் என்னலாம். வீடு : விடுபட்டோன் அடையும் நிலை. இது விடு என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர். 'மூலத்தே முடிந்தவன்றே - ஆதிகாலத்திலே தொடர்ந்து நடக்கின்ற இயற்கை யன்றோ' என்பது பழையவுரை,

இச் செய்யுளில் வாலி, மூவுலகத்தார்க்கும் ஒப்ப முடிந்த இறத்தல், பிறத்தல் என்ற சூழ்வின்றி, தானினிப் பிறக்கப் போகா வீட்டினை உதவிய இராமபிரானின் பேருதவியைக் கொண்டாடினான் என்க.

பி - ம். 1. தனித்து நோக்கின்.

2. மூன்று லகத்து ளோர்க்கும் ; முடிந்த தன்றே, முடிந்த தம்மா, முடிந்தன்றே.

3. திசைந்த தியார்க்கும், தடைந்த தியார்க்கும், திசைந்த தாகும், இசைந்த யார்க்கும். 4. நின்ற நம்பன். (148)

376. பாலமை தவிர்தி யென்சொற்
பற்றுதி யென்னி னைய
மேலொரு பொருளு மில்லா
மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக்
கால்தரை தோய நின்று
கட்புலக் குற்ற தம்மா
மால்தரும் பிறவி நோய்க்கு
மருந்தென வணங்கு மைந்த.

'ஐய - அப்பனே ! பாலமை தவிர்தி - நீ உன் சிறு பிள்ளைத்தன் மையைவிட்டு நீங்குவாயாக ! என் சொல் பற்றுதி என்னின் - (உந்தை யாகிய) என் வார்த்தையை உறுதியாக ஏற்றுக்கொள்வாயானால், மேல் ஒரு பொருளும் இல்லா மெய் பொருள் - தன்னிலும் மேலான ஒரு பொருள் இருக்கப் பெறாததும், என்றும் அழியாததுமான பரம்பொருள், வில்லும் தாங்கி - ஒரு வில்லையையும் ஏந்திக்கொண்டு, கால் தரை தோய நின்று - தன்பாதம் தரையிற் படும்படியாக (இம்மானிட வடிவத் தோடு வந்து) நின்று, கண் புலக்கு உற்றது - நமது கண்களால் கண்டுகொள்ளும் வண்ணம் (இவ்விராமபிரானாக) வந்துள்ளது, (ஆதலின்), மைந்த - குமாரனே ! மால் தரும் பிறவி நோய்க்கு - மயக் கத்தை உண்டு பண்ணும் நம் பிறவி என்னும் நோயினைப் போக்கு வதற்கு, மருந்து என - (இவ்விராமபிரானே) ஏற்ற ஒளடதமாவான் என்று, வணங்கு - நீ இவனை வணங்குவாயாக ! அம்மா; வியப்பை உணர்த்தும் உரிச்சொல்.

வில்லும் தாங்கி: நினைத்த மாத்திரத்தில் எதையும் இயற்ற வல்ல பரம்பொருளா யிருந்தும், தேவர், முனிவர் முதலினோர் இடர் தீர்த்தருள வேண்டித் தான் மானிட உரு எடுத்ததோடு அதற்கியைய ஒரு வில்லை யும் ஏந்தினன் என்பதாம்; உம்மை எண்ணும்மை, கால் தரைதோய நின்றது; கடவுளர் தம் கால்கள் தரையிற் றோயாத சிறப்புடையவ ராயினும், நம் பொருட்டு அக் கடவுள் இராமபிரானாக அவதரித்துத் தம் கால் தரைதோய வந்து நின்றான் என்பதாம்; 'கானிலந்தோயாக் கடவுளை' (நாலடி, கடவுள் வாழ்த்து); நளவெண்பா. 150 முதலியன காண்க. மேலும், இந்திரன் இராமபிரானைத் தரிசித்து, "இருநிலத்த வோநின் னிணையடித்தா மரைதாம்" (ஆரணிய. 100) என்று ஆற்றா மையாற் கூறிய அருமையையும் இங்கு நோக்குக. கட்புலக் குற்றது; யோகிகள் முனிவர் முதலானோர் தம் ஞானக்கண்ணா லும் அறிதற்கரிய பரம்பொருள் இங்கு ஊனக் கண்கொண்ட நம் போன்றவர்களுக்கும் காட்சிக் கெளியனாகி வந்த கருணையைப் பாராட் டிக் கூறியதும் ஆகும். பிறவி நோய்க்கு மருந்து: பேஷஜம், பிஷக் என்றும், ஒளஷதம் என்றும் பெயர்கள் திருமாலுக்குக் கூறப்பெறுவ தாலும், வைத்யோ நாராயணோ ஹரி; என்ற ஆன்றோர் அருளியுள் ளமையாலும் அத்திருமாலின் அவதாரமாகிய இராமபிரானுக்கும் அப்பெயர் பொருந்தும் என்க; மேலும், "வெந்திற லரக்கர்விட வேர்முத லறுப்பான், வந்தனன் மருத்துவ னெனத்தனி வலிப்பான்" (ஆரணிய. 161) என அகத்திய முனிவர் கூற்றால் நம் ஆசிரியர் கல்வியிற் பெரியார் இராமபிரானை ஏத்திப் புகழ்ந்தமையும் காண்க. கால்தரை, மால்தரும், என்றவை எதுகை ஓசை நயம் நோக்கித் திரியாமல் இயல் பாய் நின்றன. பாலமை - சிறுபிள்ளைத் தன்மையால் அழுவது'; பழையவுரை.

பி-ம். 1. *பாலதை தவிர்த்தி; பற்றுதி யாகிற் றன்னின்.*

3. *கால்செகந் தோய நின்று கண்ணுக்கு மொளிய னானன்.*

4. *மானுறு பிறவி; மாறரு பிறவி தீர்க்கும், மால்வரு பிறவி தீர்க்கும் மருந்தென நினைதி மைந்தா; மருந்திவன் வணங்கு மைந்த.* (149)

377. என்னுயிர்க் கிறுதி செய்தா
னென்பதை யிறையு மெண்ணு
துன்னுயிர்க் குறுதி செய்தி
யிவற்கம ருற்ற துண்டேல்
பொன்னுயிர்த் தொளிரும் பூணுய்
பொதுநின்று தருமம் போற்றி
மன்னுயிர்க் குறுதி செய்வான்
மலரடி தொழுது வாழ்தி.

'பொன் உயிர்த்து ஒளிரும் பூணுய் - பொன்னுல் உண்டாக்கப் பெற்று ஒளிவீசும் அணிகளையுடையவனே! என் உயிர்க்கு இறுதி செய்தான் என்பதை - (இந்த இராமபிரான்) என் உயிருக்கு ஓர் அழிவைச் செய்தான் என்பதை, இறையும் எண்ணுது — சிறிதுங் கருதாமல், உன் உயிர்க்கு உறுதி செய்தி - உன் உயிருக்கு நன்மை தரும் செயலைப் புரிவாயாக! (அது யாதெனில்), இவற்கு - இந்த இராம பிரானுக்கு, அமர் உற்றது உண்டேல் - போர் நிகழுமானுல், பொது நின்று தருமம் போற்றி - நடுநிலையில் பிறழாது நின்று தருமத்தை ஆதரித்து, மன் உயிர்க்கு - நிலைபெற்று வாழும் எல்லாப் பிராணிகளுக் கும், உறுதி செய்வான் - நலத்தைச் செய்பவனுன இந்த இராமபிரானு டைய, மலர் அடி - தாமரை மலர் போன்ற திருவடிகளை, தொழுது - வணங்கி, வாழ்தி - அவன் ஏவிய தொண்டு புரிந்து வாழ்வாயாக'!

உயிர்த்தல், தோன்றச் செய்தல், உண்டாகச் செய்தல்: 'வல்லியை உயிர்த்த நிலமங்கை' (பால. கோலங்காண்: 24)

பி-ம். 1. என்னிதி னுறுதி யப்பா லுண்டென விறையுங் கொள்ளேல்; என்பதை யிறையுங் கொள்ளேல்.

2. குறுதி செய்தி யுரைத்த வுவந்து நோக்கிப்; உரைத்தன வுவந்து நோக்கிப்; உரைத்தன னுவந்து;

3. பொன்னுருத் தொளிரும்; போதுதி நிலைமை நோக்கி பொது நின்று தருமம் போற்றது, பொதுநின்ற தருமம் போற்றும்.

4. தொழுது வாழ்த்தி. (150)

இதன் பின் சில சுவடிகளில் 'நெய்யடை நெடுவேல்' (379) என்று தொடங்கும் பாடல் காணப்பெறுகின்றது.

வாலி அங்கதனை இராமபிரானிடம் கையடையாக அளித்தல்

378. என்றன னினைய வாய
வுறுதிகள் யாவுஞ் சொல்லித்
தன்றுணைத் தடக்கை யாரத்
தனயனைத் தழுவிச் சாலக்
குன்றினு முயர்ந்த திண்டோட்
குரக்கினத் தரசன் கொற்றப்
பொன்றிணி வயிரப் பைம்பூட்
புரவலன் றன்னை நோக்கி;

குன்றினும் சால உயர்ந்த - மலைகளைவிட மிகவும் உயர்ந்தனவான, திண்தோள் - வலிய தோள்களை யுடைய, குரங்கு இனத்து அரசன் - வானர சாதிகளுக்கு அரசனான அவ் வாலி, என்றனன் - என்று, இனைய ஆய - இத்தன்மையவான, உறுதிகள் யாவும் - நன்மை பயக்கும் செய்திகள் யாவற்றையும், சொல்லி - கூறி, தன் துணை தட கை- தன்னுடைய இருபெருங் கரங்களால், தனயனை - தன் மைந்தனான அங்கதனை, ஆர தழுவி - நன்குறுகத்தழுவி அணைத்துக்கொண்டு, கொற்றம் - வெற்றியோடு கூடியவனும், பைம் பொன் திணி - பசிய பொன்னிற் பதித்த, வயிரம் பூண்-வயிரத்தால் செய்யப்பட்ட ஆபரணங்கள் அணிந்தவனுமான, புரவலன் தன்னை - அரசனான இராமபிரானை, நோக்கி - பார்த்து.

இதுவும் அடுத்த இரு செய்யுள்களும் குளகமாய் இயைந்து வினைமுடிபு கொள்ளும்.

பி- ம். 1. *னினைய யாவு, முறுதிகள் பலவுஞ்; என்று மகனுக் கெல்லா வுறுதிக ளெடுத்துக் கூறி.*

3. *குரக்கினுக் கரசன் கொற்றப், குரக்கினத் தரசன் கோதில்.*

4. *பொன்றிணி புயத்து மேலாம் புங்கவன் றன்னை நோக்கி.* (151)

இச் செய்யுள் சில சுவடிகளில் இல்லை. இதன் பின் ஒரு சுவடியில் அடியிற் காணும் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

இடைக்கல மல்ல னேவிய தோர்பணி
கிடைத்த போதது செய்யுமிக் கேண்மையன்
படைக்கலக் கைப்பழம் பேரரு ளேகின
தடைக்கல மடியேன் பெற்ற வையனே.

379. நெய்யடை நெடுவேற் ருனை
நீனிற நிருத ரென்னும்
துய்யடைக் கனலி யன்ன
தோளினன் ருெழிலுந் தூயன்
பொய்யடை யுள்ளத் தார்க்குப்
புலப்படாப் புனித மற்றுன்
கையடை யாகு மென்றவ்
விராமற்குக் காட்டுங் காலை;

'பொய் அடை உள்ளத்தார்க்கு - பொய் அடைந்த மனத்தினர்க்கு, புலப்படா - தோன்ருத. புனித - பரிசுத்தமானவனே! (இவன்) நெய் அடை நெடு வேல் தானை - (இவ்வங்கதன்) நெய் பூசப்பெற்ற நீண்ட வேலேந்திய சேனைகளையுடைய, நீல் நிற நிருதர் என்னும் - கருநிறமமைந்த இராக்கதர்களென்னும், துய் அடை-பஞ்சுப் பொதிக்கு, கனலி அன்ன - நெருப்புப் போன்ற, தோளினன் - தோள்களை யுடையவன்; தொழிலும் தூயன் - தன் செயல்களாலும் குற்றமற்ற பரிசுத்தமானவன்; மற்று - இனி, உன் கையடை ஆகும் என்று - இவன் உன் அடைக்கலப் பொருள் ஆவன்' என்று கூறி, அ இராமற்கு - அந்த இராமபிரானுக்கு, காட்டும் காலை - அங்கதனை அப்பெருமானிடம் காட்டி ஒப்புவித்தபோது,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாகி வினை முடிவுகொள்ளும். பொய் என்பது சுய அபிமானம் என்னும் மாயையால் ஏற்படுவதால் அஃது உள்ளோர் மனத்தில் ஞானம் உதிக்காது என்பதாம். வேலுக்கு நெய் தடவுதல் அது துருப்பிடிக்காமல் விளங்க. நீல் - நீலம் என்பதன் குறை. நிருதர்: நிருதி என்பாளிடம் தோன்றியவர்; இது தத்திதாந்தம், துய்-பஞ்சின் நுட்பமான பாகமும் ஆம். கனலி; இ, சாரியை. கையடை-கையில் ஒப்புவிப்பது; அதாவது அடைக்கலமாக்குவது; கையடைப் படலம் என்றமைகாண்க.

பி - ம். 1. செய்யுடை, செய்யிடை; நிருதர்க ளென்னுங் கானில்,
2. துய்யிடைக் கனலி, துய்யுடைக் கன்லி; தோளிணைத் தொழிலும் தூய.
3. பொய்யுடை யுள்ளத், புலப்படாப் புயல்வண் ணுவுன், புலப்படா வுருவ, புலப்படாப் புலவ, புனித வுன்றன்.
4. கையடை யிவன்கா ணென்று; கையடை யாகுமென்ன; விராமற்குக் காட்டிப் பின்னை. (152)

இராமபிரான் அங்கதனை ஏற்றுக் கொண்டதும், வாலி பரமபதம் அடைந்ததும்

380. தன்னடி தாழ்த லோடுந்
தாமரைத் தடங்க ணானும்
பொன்னுடை வாளை நீட்டி
நீயிது பொறுத்தி யென்றான்
என்னலு முலக மேழு
மேத்தின விறந்து வாலி
அந்நிலை துறந்து வானுக்
கப்புறத் துலக னானான்.

தாமரை தட கணானும் - தாமரை யிதழ்போன்று அகன்ற பெரிய சிவந்த கண்களையுடைய இராமபிரானும், தன் அடி தாழ்தலோடும் - தன் திருவடிகளில் (அங்கதன் வந்து) வணங்கிய அளவில், பொன் உடைவாளை நீட்டி-பொன்னாற் செய்யப்பட்ட உடைவாளை (அவ் அங்க தனிடம்) நீட்டி, 'நீ, இது பொறுத்தி-நீ இதனை ஏற்றுக்கொள்'; என்றான்-என்று அதனை அவனிடம் கொடுத்தான்; என்னலும் - இராமபிரான் அவ்வாறு அவனுக்கு அன்போடு அருள் புரிந்ததும், உலகம் ஏழும் ஏத்தின - ஏழு வகைப்பட்ட உலகங்களில் உள்ளார் அனைவரும் இராமபிரானுடைய கருணையையும் அங்கதன் அடைந்த பெருமையை யும் புகழ்ந்து பாராட்டினர்; (அப்போது), வாலி அ நிலை துறந்து இறந்து - வாலியும் தன் பூதவுடலுடன் கூடிய நிலையைவிட்டு இறந்து, வானுக்கு அ புறத்து உலகன் ஆனான், தேவருலகுக்கு அப்பாலதான பரபதமாகிய உலகத்தை அடைந்தவனானான்.

இந்நூலிற் கண்டபடி, அங்கதனை வாலி இராமபிரானிடம் அடைக் கலமாக ஒப்புவித்ததும், அவனுக்கு இராமபிரான் தன் உடைவாளை அளித்து ஆண்டருளியதுமான செய்திகள் வான்மீகம், அத்யாத்மம் முதலிய நூல்களில் இல்லை. வாலி அங்கதனைச் சுக்கிரீவனிடத்திலே ஒப்புவித்து உயிர் நீத்தான் என அந்நூல்கள் கூறும்; நம் ஆசிரியர் ஸ்ரீ கம்ப நாடரோ, அங்கதனுடைய உண்மைச் சிறப்புக்களை நம்மனோர்க் கறிவிக்கக்கருதி, அவனை ஸ்ரீ ராமபிரான் அடைக்கலமாக ஏற்றுக் கொண்டு தன் அன்புக்குரிய உடற்காப்பாளனாக உயர்நிலையில் வைத்து ஆண்டருளியதாகப் பெருமைப்படுத்தியுள்ளார். இது, 'மார்க் கடஞ் சூழ்ந்தவைப்பை அங்கதன் மருங்கு காப்ப,' (உயுத்த. வீடண னடைக்கலப்; 132) என்றும், 'அரியணை யநுமன் றாங்க வங்கத னுடை வா ளேந்த,' (உயுத்த. திருமுடி சூட்டுப்; 38) என்றும் ஏற்றவிடங்களில்

வைத்து அவனைச் சிறப்பித்தமையாலும், பின், அங்கதன்றூது என்று ஒரு தனிப்படலம் விரிவாக அமைத்து, அவன் வீரத்தையும், எவர்க்கும் அஞ்சா ஆண்மையையும் தம் நூல் மூலம் உலகில் நிலைநிறுத்தியதாலும் விளக்குவது காண்க.

தாமரைத் தடங்கணான்: புண்டரீகாக்ஷன் என்றபடி. அந்நிலை: பிராணன் உடலோடு ஒன்றியிருந்த நிலை. உலகம் ஏழும் ஏத்தியது, சுக்கிரீவனுக்குக் கேடிழைத்த கொடியோனுக்கும், அவன் மைந்தனுக்கும் அருள்புரிந்த இராமபிரானுடைய கருணைப் பெருக்கை நினைந்து என்க; மேலும், வாலிக்குப் பரமபதம் அருளியது, 'வைதாரையும் வாழ்வித்து வைகுந்தம் சேர்க்கும் பிரான்' என்ற ஆன்றோர் கூற்றுக்கு ஓர் ஒப்பற்ற உதாரணமும் ஆகும்.

பி-ம். 1. *தன்னடி தழுவ லோடுந், தன்னடி மைந்தன் ரூழத், ரூழுங் காலே.*
2. *வாளி வீட்டி.* 3. *மேத்தினன் கிடந்த வாலி, விறந்து வாலி.*
4. *அந்நிலை தீர்ந்து வானினைப் புறத்துலக மாவான், இந்நிலை திரிந்து; தலைக ளுவான்; தலைவி னானன், தொருவ னானன்.*

பல சுவடிகளில் இதனுடன் இப்படலம் முற்றும். (153)

வாலி மார்பினின்ற அம்பு கழன்று இராமபிரானிடம் மீண்டது

**381.** கையவ ணெகிழ்த லோடுங்
கடுங்கணை காலன் வாலி
வெய்யமார் பகத்துட் டங்கா
துருவிமேக் குயர மீப்போய்த்
துய்யநீர்க் கடலுட் டோய்ந்து
தூய்மல ரமரர் தூவ
ஐயன்வெந் விடாத கொற்றத்
தாவம்வந் தடைந்த தன்றே.

அவண் கை நெகிழ்தலோடும் - அப்பொழுது இராமபாணத்தைப் பற்றியிருந்த அவ்வாலியின் கை தளர்ந்த அளவில், கடும் கணை காலன் - அந்தக் கொடிய அம்பு என்னும் யமன், வாலி-வாலியின், வெய்ய மார்பு அகத்து உள் - வலிய மார்பினுள், தங்காது - தங்கியிராமல், உருவி - அதனை ஊடுருவிக்கொண்டு, மேக்கு உயர மீ போய் - மேனோக்கி உயரத்தில் எழுந்து சென்று, துய்ய நீர் கடலுள் தோய்ந்து-பரிசுத்தமானநீரையுடைய கடலுள் படிந்து நீராடி, தூய் மலர் அமரர் தூவ - தூய்மையான

தெய்வமலர்களைத் தேவர்கள் இறைக்க, ஐயன் - இராமபிரானுடைய, வெங் விடாத - முதுகை விட்டு நீங்காததும், கொற்றத்து - வெற்றிக்கிட மானதுமான, ஆவம் வந்து அடைந்தது - அம்புப்புட்டிலை வந்து சேர்ந் தது, அன்று, ஏ : ஈற்றசைகள்,

அவண் : இங்குக் காலத்தைக் குறித்து நின்றது. கணையெனுங் காலன், உருவகம். துய்ய - தூய என்பதன் விகாரம். ஐயன் : தலைவன் என்னும் பொருளது, ஆவம் - அம்புப் புட்டில் ; சுந்தர. 532 ; வி. பா. 12-ம் போர்ச் ; 1. இராமபாணத்தினியல்பு ; பாயிரம் ; தாடகை வதைப். 73 ; உயுத்த. இராவணன்வதைப் : 199. இராமபிரானுடைய அம்புப் புட்டிலை அம்பருத்தூணி என்பர் ; அம்புகள் குறைவுபடாது நிரம்பியிருக்கும் புட்டில் என்பது இதன் பொருள்.

பி - ம். 1. *கையது நெகிழ்த்த, கையவ னெகிழ்த்த ; கடுங்கணை யென்னுங் காலன் ; கால வாலி.*
3. *நற்கடலுட் டோய்ந்து ; தூய்மலர் மாரி தூவ,*
4. *ஐயன்பின் றூங்கு கொற்றத்.*

இப்பாடல் சில சுவடிகளில் இல்லை ; பல பிரதிகளில் இதனோடு வாலிவதைப் படலம் முடிவுறும். (154)

தாரை வாலிமேல் விழுந்து புலம்பல்

382. வாலியு மேகி னன்விண்
வரம்பிலா வாற்ற லோடும்
பாலியா முன்னர் நின்ற
பரிதிசேய் செங்கை பற்றி
ஆலிலைப் பள்ளி யானு
மங்கத னோடும் போனன்
வேல்விழித் தாரை கேட்டாள்
வந்தவன் மெய்யில் வீழ்ந்தாள்.

வாலியும் விண் ஏகினன் - வாலியும் பரமபதம் அடைந்தான் ; ஆல் இலை பள்ளியானும் - பிரளய காலத்தில் ஓர் ஆலிலையின்மீது சிறுபாலகனாய்ப் பள்ளி கொண்டருளும் திருமாலின் அவதார மான ஸ்ரீ இராமபிரானும், வரம்பு இலா ஆற்றலோடும் - எல்லையற்ற திறலுடனே, முன்னர் நின்ற - தன் எதிரே நின்ற, பரிதி சேய் - சூரிய

குமாரனான சுக்கிரீவனின், செங்கை பற்றி - சிவந்த கையைப் பிடித்துக் கொண்டு, பாலியா - அவனுக்கு அருள் புரிந்து, அங்கத னோடும் - அங்கதனுடனே, போனான் - (அப்பால்) சென்றான்; வேல் விழி தாரை கேட்டாள் - வேல் போன்ற கண்களையுடைய தாரை வாலி இறந்த செய்தியைக்கேட்டு, வந்து அவன் மெய்யில் வீழ்ந்தாள் - (அப்போர்க்களத்திற்கு) வந்து அவன் உடல்மீது வீழ்ந்தாள்.

ஆலிலைப்பள்ளியானும், அங்கதனோடும், சுக்கிரீவன் செங்கை பற்றிப் போனான் என இயைக்க. உம்மைகள் எண்ணுப் பொருளன. இராமபிரானை ஆலிலைப் பள்ளியான் என்றல்: இராமபிரான் வனம் போதலைக் கேட்ட கோசலை, 'தன் காதலன் வைகு மாலிலை யன்ன வயிற்றினைப் பெய்வளைத் தளிர்க்கையாற் பிசையும்' (அயோத். நகர் நீங்கு: 11) என்றமையும்; இராமபிரானை நோக்கி நல்லுருப் பெற்ற கவந்தன், "ஆலமோ வாலி னடையோ வடைக்கிடந்த பாலனோ வேலைப் பரப்போ பகராயே" (ஆரணிய.1172) என்றமையும், ஆழ்வார் ஸ்ரீகுலசேகரப் பெருமான், 'ஆலினிலைப் பாலகனா யன்றுலக முண்டவனே வாலியைக்கொன் றரசிளைய வானரத்திற் களித்தவனே' (பெருமாள் திருமொழி. 8: 7) என்று கண்ணபுரத்தொளிர் காகுத்தன் தாலாட்டுப் பாசுரத்தால் குறிப்பிட்டமையும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கனவாம்.

பி - ம். 1. *வாலிதா னிறந்த பின்னர் வாலியு மேக ; யார்க்கும் வரம்பிலா வுலகவின்பம் ; வரைவிலா வரம்பி லின்பம் ; வரம்பிலா வுலக மெல்லாம்.*

2. *பாலனஞ் செய்யா நின்ற ; முன்னம் நின்ற, முன்னி னின்ற, வுன்னி நின்ற.*

3. *மங்கத னோடு நிற்ப.*

4. *தாரை கேட்டு வந்தவன் மேல் ; மேலே வீழ்ந்தாள் ; னடிமேல் வீழ்ந்தான் ; மேனி வீழ்ந்தாள்.*

(155)

இதுமுதல், புதல்வன் பொன்மகுடம் எனத் தொடங்கும், 400 ஆம் பாடல் வரை, தாரை புலம்புறுபடல மெனச்சில பிரதிகளும், இதுமுதல் அரசியற் படலம் எனவே சில பிரதிகளும் கொண்டுள்ளன.

383. குங்குமங் கொட்டி யன்ன
குவிமுலைக் குவட்டிற் கொத்த
பொங்குவெங் குருதி போர்ப்பப்
புரிகுழல் சிவப்பப் பொற்றோள்
அங்கவ னலங்கன் மார்பிற்
புரண்டன ளகன்ற செக்கர்
வெங்கதிர் விசும்பிற் றோன்று
மின்னெனத் துவளு மெய்யாள்.

குவி முலை குவட்டிற்கு ஒத்த - தாரையின் குவிந்த முலைகளென்னும் மலைச் சிகரங்களுக்கு ஏற்றவாறு, குங்குமம் கொட்டி அன்ன - குங்குமத் தைக் கொட்டி மூடியதுபோன்று, பொங்கு வெம் குருதி போர்ப்ப- வாலியினுடைய உடலிலிருந்து பொங்கும் இரத்தம் போர்த்தது போல் படிய, புரி குழல் சிவப்ப - சுருளான அவள் கூந்தல் சிவப்பு ஆக, அங்கு-அப்பொழுது, பொன் தோளவன் அலங்கல் மார்பில் - அழ கிய தோள்களையுடைய அவ்வாலியின் மாலை யணியப்பெற்ற மார்பில், அகன்ற செக்கர் வெம்கதிர் விசும்பில் தோன்றும் மின் என - விரிந்த செவ்வானமாகிய வெப்பமான சூரிய கிரணங்களையுடைய ஆகாயத்தில் தோன்றும் ஒரு மின்னலே போல, துவளும் மெய்யாள் - துள்ளித்துடிக் கின்ற உடலினளாய், புரண்டனள் - அவள் புரண்டு அழுதாள்.

குங்குமம் - குங்குமப்பூ முதலியவற்றால் ஆன மெய்ப்பூச்சுச் சுண் ணமும் ஆம். குவடு - மலைச்சிகரம்; மலையும் ஆம். பருமையாலும் உருவாலும் உவமை. செக்கர் வெம்கதிர் விசும்பிற்றோன்று மின்; வெங் கதிர் விசும்பு, இரத்த வெள்ளம் பரவிநின்ற வாலியின் உடலுக்கும், மின், தாரைக்கும் உவமைகள்; துவளும் தன்மையாலும் ஒளியின் சிறப்பாலும் மின் தாரை உடலுக்கு உவமையாயிற்று; இவ்வுவமையே வான்மீகத்திலும் காணப்படுகிறது. இனி, வெங்கதிர் தோன்றும் செக்கர் விசும்பின் மின்னென, என இயைத்தும் பொருள் கொள்ளலாம். இறந்து கிடந்த இராவணன் உடலின்மீது மண்டோதரி விழுந்ததை 'தரங்கநீர் வேலையிற் றடித்து வீழ்ந்தென' (உயுத்த. இராவணன் வதைப் 237) என்று கூறுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பி - ம். 1. கோட்டியென்ன. கொட்டி யென்ன, குவட்டுக் கொத்த, குவட்டிற் கோத்த, குவட்டிற் கொக்க, கோட்டிற் கொத்த.
3. குருதி யார்ப்ப, குருதி சோர; பொற்றூர்.
4. செக்கதிர்......த் திகழு மெய்யாள்; தோன்று மெய்யாள். (156)

384. வேய்ங்குழல் விளரி நல்யாழ்
வீணையென் றிணைய நாண
ஏங்கின ளிரங்கி விம்மி
யுருகின ளிருகை கூப்பித்
தாங்கின டலையிற் சோர்ந்து
சரிந்துதாழ் குழல்க டள்ளி
ஓங்கிய துயராற் பன்னி
யின்னன வரற்ற லுற்றாள்.

வேய் குழல் - புல்லாங்குழலின் ஒலியும், விளரி நல் யாழ் - விளரி என்னும் இரங்கற் பண்ணிற் சிறந்த யாழின் இசையும், வீணை - வீணையி னொலியும், என்று இணைய - என்று (சொல்லும்) இத்தகைய இன்னிசை களும், நாண-நாணும்படியாக, ஏங்கினள்(தாரை) அழுது, இரங்கி விம்மி- இரக்கமும் விம்மலும் அடைந்து, உருகினள் - மனம் உருகி, தலையில் இருகை கூப்பி தாங்கினள் சோர்ந்து-இரண்டு கைகளையும் தன் தலையில் தாங்க வைத்துக் குவித்துத் தளர்வுற்று, தாழ் குழல்கள் தள்ளி - தொங்கு கின்ற தன் கூந்தலைப்புறத்தே தள்ளிவிட்டுக் கொண்டு, ஓங்கிய துயரால்- மேலோங்கிய துன்பத்தோடு, பன்னி - பலவாறு திரும்பத் திரும்பச் சொல்லி, இன்னன - (பின்வரும்) இவ்விதமாக, அரற்றல் உற்றாள் - கூவி அழலானாள். (அழுதமை அடுத்துவரும் பாடல்களால் அறியலாம்).

விளரி : இசையின் ஒருவகை நிலையும் ஆகும் ; (பிங்). வீணை வேறு யாழ் வேறு என்பர்; விக்கிரம சோழனுலா; 102. வீணை, வடசொல் திரிபு; யாழ், வீணை போன்று நம் தமிழ் நாட்டில் பண்டு வழங்கி வந்த ஓர் இசைக் கருவி ; இஃது உருவில் வீணையினும் வேறுபட்டது. காலப் போக்கின் மாறுதலால், யாழ் வீணை என்பன ஒன்றாகவே கருதப்பெறு வன காணலாம். தாரை துயரத்தோடு வருந்திப் பிரலாபிக்கும் நிலையிலே அவள் குரல் யாழும் விணையும் தோற்று நாணும்படியானது என்றால், மகிழ்ச்சி நிலையில் அவள் குரலின் இனிமையை என்னென்று புகழ்வது! மகளிர்க்குத் தம் கணவன்மார் இறந்த நிலையில் தோன்றும் மெய்ப் பாடுகள் இங்கு நன்கு கூறப் பெற்றமை காண்க. ஏங்குதல் - அழுதல்: (பிங்) ; ஏக்க முறுதலும் ஆம். இச்செய்யுளின் கருத்துக்கு ஒப்பு : புறநா. 143. 15 ; நற். 113; ஐங். 306 ; சீவக. 2945. பன்னுதல்-பலவாறு விரித்துக் கூறுதல் ; 388 ஆம் செய்யுளையும் காண்க.

பி-ம். 1. விளிகொ ணல்யாழ் ; நிலையும் நாண, யெலையும் நாண, நிலைகள் நாண.

2. விம்மி யிருகையான் மடிமேல் வைத்து.

3. தாங்கிய தலையள் சோர்ந்து ; சேர்த்தி; தலையள் சோரி துவண்டு பைங் குழலுந் தாழ ; குழல்க டாங்கி.

4. ஏங்கிய குரலாற் பன்னி யின்னன வுரைக்க லுற்றாள் ; ஏங்கிய குழலாற் பன்னி, ஓங்கிய குரலால். (157)

வேறு

385. வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்
கரைசே ராவிட ரெல்லை கண்டிலேன்
உரைசே ராருயி ரேயென் னுள்ளமே
அரைசே யானிது காண வஞ்சினேன்.

'உரை சேர் ஆர் உயிரே - புகழ் அடைந்த என் அரிய உயிரே! என் உள்ளமே - என் மனமே! அரைசே - என் மன்னனே! வரை சேர் தோள் இடை - மலை போன்ற உன் தோள்களிடத்தே, நாளும் - நாள் தோறும், வைகுவேன் - நான் தங்கியிருந்து மகிழ்பவளாவேன்; கரை சேரா இடர் எல்லை கண்டிலேன் - (இப்பொழுது), கரை சென்றடைய முடியாத இத் துன்பத்தின் எல்லையைக் காணுதவளாய் இருக்கின்றேன்; யான் இது காண அஞ்சினேன் - இத்துயரைக் காண்பதற்கு யான் அச்சமுறுகின்றேன்.

வரைசேர் : சேர், உவம வாசகம். உரை - புகழ் ; 'உரைசால் பத்தினி' (சிலப். பதிகம்) என்றது போல. ஆருயிரே, உள்ளமே என்றது, கணவனும் மனைவியும் ஓருயிரே போலும் ஒரு மனத்தினர் போலும் ஒன்றி யிருந்த சிறப்பைக் கூறியது. அரைசே : எதுகை நோக்கிப் போலியாக வந்தது.

பி-ம். 2. விடர் வேலை காண்கிலேன், விடர் வல்லை கண்டிலேன் ; காண்குவேன். 4. நானிது காண ; வாயினேன். (158)

386. துயரா லேதொலை யாத வென்னையும்
பயிரா யோபகை யாத பண்பினேய்
செயிர்தீ ராய்விதி யான தெய்வமே
உயிர்போ னுலுட லாரு முய்வரோ.

'பகையாத பண்பினேய் - இதுவரை என்னிடம் விரோதம் பாராட்டாத குணச் சிறப்புடையவனே! துயராலே தொலையாத என்னையும் -

இத்துன்பத்தால் இறந்து போகாத என்னையும், பயிராயோ - கூப்பிட்டு அழைக்க மாட்டாயோ? செயிர் தீராய் - என்பால் உள்ள குற்றத்தை நீக்கியருள்வாயாக! விதி ஆன தெய்வமே - ஊழின் விதியால் அமைந்த என் தெய்வம் போன்றவனே! உயிர் போனல் - உயிர் நீங்கினல், உடலாரும் - அவர் உடலும், உய்வரோ - (தனியே) நிலைத்திருக்குமோ, (நிற்காது என்றபடி).

பயிர்தல்: அழைத்தல்; 'கடுவன் துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்' (புறநா. 158; 23:24) 'காட்டிறை பயிருங்காலை முரசம்'; (சிலப். 26 : 52); 'பயிரும் பைங்கிளி;' (சீவக. 992). உடலாரு முய்வரோ: கணவனை வாலியை உயிராகவும் தன்னை உடலாகவும் கொண்ட நிலையில், உடலின் இழிந்த நிலையைக் குறிப்பிட்டபடி; பன்மை விகுதி; இங்கு வஞ்சப்புகழ்ச்சியில் வந்தது. உய்வரோ: எதிர்மறைவினை. வாலியும் தாரையும் உயிரும் உடலும் ஆவர்; 390. ஒப்பு: 453, 456; பால. எழுச்சிப் : 22; கடிமணப். 19; சுந்தர. 525.

பி - ம். 1. யுலையாத வென்னையும்; வென்னை நீ.

3. செயிர்தீ ராவிதி; வினையான தெய்வமோ.

4. உயிரே போனு லுடலாரு முய்வரோ; லுடலான துய்யுமோ.

387. நறிதா நல்லமிழ் துண்ண நல்கலின்
பிறியா வின்னுயிர் பெற்ற பெற்றிதாம்
அறியா ரோநம ஞர தன்றெனின்
சிறியா ரோவுப காரஞ் சிந்தியார்.

'நமனர் - (உன் உயிரைப் பறித்துச் சென்ற தேவர்களில் ஒருவரான) யமனர், நறிது ஆம் -(நல்ல) சுவையும் மணமும் உள்ளதான, நல் அமிழ்து உண்ண நல்கலின் - சிறந்த அமிர்தத்தை அந்தத் தேவர்கள் உண்ணும்படி நீ கொடுத்ததால், பிறியா இன் உயிர் பெற்ற பெற்றி - நீங்காத இனிய உயிரை அடைந்த தன்மையை, தாம் அறியாரோ - தாம் அறியமாட்டாரோ? அது அன்று எனில் - அஃது அன்று என்ருல், உபகாரம் சிந்தியார் - நீ அமுதளித்ததான அம் மகோபகாரத்தை எண்ணுத அவர் சிறியாரோ - அற்பரோ?

நமனர்: வஞ்சப் புகழ்ச்சியாக, ஆர் என்னும் பன்மை விகுதி பெற்றது. பிறியா: பிரியர் என்பது எதுகை நோக்கித் திரிந்தது. பெற்றி, தன்மை, சிறப்பு, பேறு என்னும் பொருளது. 'மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி'; (உயுத்த. விபீடணனடைக்கலப்: 108).

சிறியோரே செய்ந்நன்றி மறப்பவ ராதலின், 'சிறியாரோ வுபகாரம் சிந்தியார்' என்னப்பட்டது; செய்ந்நன்றி மறத்தல் ஓர் உயிரைக் கொலை செய்த கொடுமையே போன்றது; குறள். 110. வாலி கடல் கடைந்து அமரர்க்கு அமுதம் ஈந்தது, (372) பாடலாலும், பிறவற்றாலும் விளங்கும். தேவர் அனைவரும் வாலிக்குக் கடமைப்பட்டிருக்க, இங்கு நமனைக் குறிப்பிட்டது, அவன் வாலி உயிரைக் கொண்டு போன தால் என்க. வளர்த்த உயிரை ஒருவன் கொண்டது கொடியதாம் என்பது கருத்து.

பி-ம். 1. நறிதால் நல்லமிழ், நறிதாய, நறியா.
2. பிறிதா வின்னுயிர்; பெற்றிதான்.
3. அறியாரோ நமனார்; ரதன்றெனிற்,
4. வுபகார சிந்தையால்; சிந்தையார். (160)

388. அணங்கார் பாகனை யாசை தோறுமுற்
றுணங்கா வொண்மலர் கொண்டு ளன்பொடும்
இணங்காக் கால மிரண்டொ டொன்றினும்
வணங்கா தித்துணை வைக வல்லையோ.

ஆசைதோறும் உற்று - திக்குக்கள் ஒவ்வொன்றிலும் சென்று, உள் அன்பொடும் இணங்கா-உள்ளத்துப் பக்தியோடும் கூடி, உணங்கா ஒள் மலர் கொண்டு - வாடா ஒளிதங்கிய மலர்களைக் கொண்டு, காலம் இரண்டொடு ஒன்றினும்-காலை மாலை நண்பகல் ஆகிய மூன்று காலங் களிலும், அணங்கு ஆர் பாகனை - உமாதேவியாகிய ஒரு மாதைத் தன் ஒரு பாகத்திற் கொண்ட சிவபெருமானை; வணங்காது - (வழக்கப்படி) வணங்கி வழிபடாது, இ துணை - இவ்வளவு கால நேரம், வைக வல் லையோ-தங்கியிருக்கக் கூடியவன் ஆவையோ? (மாட்டாயே என்றபடி.)

வாலி நாள்தோறும் பல திக்குக்களுக்கும் சென்று சிவபிரானை மூவேளைகளிலும் பூசிக்கும் நியமமுடையவன் என்பது: 114, 117, 375 செய்யுட்களிற் காண்க. அணங்கார்பாகன்: சிவபெருமான். உணங்கா நாண்மலர்; வழிபாட்டுக்குரிய மலரின் தன்மை கூறியதாம். மேலும், வாலி பல தலங்களுக்கும் சென்று சிவபெருமானை வணங் கினான் என்பது, தமிழ்த்திரு மறைகளாகிய தேவாரங்களாலும், பல தமிழ் நாட்டுத் தலபுராணங்களாலும் விளங்குவது காணலாம்; 'கோலமா மலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டு போற்றி, வாலி

யார் வழிபடப் பொருந்தினர்'; 'நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொ டொல்க, வாலினாற் கட்டிய வாலி வழிபட வணங்குங் கோயில்', (திருஞானசம்பந்தர் தேவாரம். வடகுரங்காடுதுறை: 6, 8.)

பி-ம். 1. அணங்கோர் பாகனை.
2. றுணங்கா நாண்மலர்; மலர்தூவு மன்புளோய்.
3. இணங்கார் காலம்.

ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை. (161)

389. வரையார் தோள்பொடி யாட வைகுவாய்
தரைமே லாயுறு தன்மை யீதென
கரைவே னின்றிடு பூசல் கண்டுமொன்
றுரையா யென்வயி னூன மியாவதோ.

தரை மேலாய் - தரையின் மீதே, வரை ஆர் தோள் பொடி ஆட வைகுவாய் - மலைகள் போல விளங்கும் உன் தோள்கள் தூசிபடியக் கிடப்பவனே! உறு தன்மை ஈது என - நீ அடைந்த கதி இதுவோ வென்று, கரைவேன் - புலம்பிக் கூவுவேனாகிய நான், இன்று இடு பூசல் கண்டும் - இப்பொழுது உண்டாக்கும் பேரொலியைப் பார்த்தும், ஒன்று உரையாய் - எனக்கு ஆறுதலாக நீ ஒரு மொழியும் பேசாதிருக்கின்றாய்; என் வயின் ஊனம் யாவதோ - என்னிடம் உள்ள குறை யாதோ? (அறியேனே! என்றபடி.)

பொடியாடல் - தூசி படிந்திருத்தல்; 'புண்பொழி குருதிவிராய்ப் பொடியாடிக் கிடப்பதோ' (சிலப். ஊர்சூழ்வரி: 48): 'தன்காற் பொடியாடத் தேவியொடும் போயினான்' (நள. 219). பூசல் - அழுகை, ஆரவாரம்; ஆரணிய. 253, 1107; புறநா. 25-11; நள. 167. கரைதல் - கத்துதல்; 'கரையாய் காக்கைப் பிள்ளாய்' (பெரியதிருமொழி. 10. 10: 2); கரைதல், உருகுதலும் ஆம். ஊனம் - குறை; "நாளுறு சிலைதான் ஊனம் முளது" (பால. பரசுராமப்: 25.)

பி-ம். 1. அரசே பூவணை யாட வைகுவாய.
2. தன்மை யீதென்கொல், தன்மை யாதெனுக்.
3. கரையா தேனிடு.
4. உரையா யோருரை; உரையாயோ வையா; வூன மென்னதோ, வூன மென்னவோ, வூன மென்னதே, வூனமென் மேலுளதோ.

390. நையா நின்றனெ ஞனி ருந்திங்ஙன்
மெய்வா னோர்திரு நாடு மேவினய்
ஐயா நீயென தாவி யென்றதும்
பொய்யோ பொய்யுரை யாத புண்ணியா.

'பொய் உரையாத புண்ணியா - பொய் பேசாத புண்ணிய மூர்த்தியே! நான் இங்ஙன் இருந்து - நான் இங்கே இருந்து, நையாநின்றனென் - வருந்துகின்றேனுக, மெய் வானோர் திரு நாடு மேவினய் - (நீ) மெய்மை பூண்ட தேவர் திருநாடாகிய சுவர்க்கத்தை யடைந்தாய்; ஐயா - தலைவனே! 'நீ எனது ஆவி என்றதும் - நீ என் உயிரே ஆவாய்' என்று முன் என்னைச் சிறப்பித்துக் கூறியதும், பொய்யோ - பொய்தானே ?

பொய்யுரையாத புண்ணியனுன நீ என் பொருட்டுப் பொய் உரைத்தனையே என்று வருந்தினுள் தாரை என்க. வாலி தாரையைத் தன் உயிராகக் கூறியது, 386, 390. பொய்யுரையாமையே பெரும் புண்ணியச்செயல், அச்சிறப்புடையவன் வாலி என்பதாம்; இது, 'பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற, செய்யாமை செய்யாமை நன்று'. (குறள். 297) என்ற பொய்யாமொழியாற் காண்க. ஐயா. என்றது இரக்க மீதூர எழுந்த மரபு வழுவமைதியும் ஆகும். பொய்யோ : ஒகாரம் ஐயவினு. 'நீயெனது ஆவி' என்றதும் என்பதற்கு, வாலி தாரையைத் தன் உயிராகக் கொண்டிருந்தனன் என்பது பொருள். அவ்வாறு கொள்ளுமிடத்து தாரை, முன் 'அரசே ஆருயிரே' என்றும், 'உயிர் போனுலுடலாரு முய்வரோ' என்றும் முன் கூறியதற்கு முரணுகுமே யெனின், அன்று; தலைவன் தலைவியருள் ஒவ்வொருவரும் தம்மை உடலாகவும், மற்றவரை உயிராகவும் கூறுவது இயல்பும் மரபும் ஆகும். இதனுல், அவ்விருவரும் ஒருவர்பால் ஒருவர் கொண்டுள்ள நேசத்தின் மதிப்பும் உயர்வும் புலப்படுவது என்க.

பி - ம். 1. நையா நின்றுள; நானிருந் திங்ஙனம், இருந்தரீ, நானி ருந்திவண்; இருந்துநின்.
2. மையார் கண்ணியர் வான மேறினுய் ; வான மெய்தினுய், மெய் வான் மங்கையர் கொங்கை மேவினுய். 3. தாவி யென்பதும்.

391. செருவார் தோளநின் சிந்தையு ளேனெனில்
மருவார் வெஞ்சர மெனையும் வவ்வுமால்
ஒருவே னுள்ளுளை யாகி லுய்தியால்
இருவே முள்ளிரு வேமி ருந்திலேம்.

'செரு ஆர் தோள - போர்த் தொழிலிற் சிறந்த தோள்களையுடையோனே! நின் சிந்தை உளேன் எனில் - உன் மனத்தில் யான் இருப்பவளானால், மருவார் வெம் சரம் - உன்னையடித்த பகைவரது கொடிய அம்பு, எனையும் வவ்வுமால்-(அந்த உன் சிந்தையில் உள்ள) என்னையும் பற்றி உடன்கொண்டு சென்றிருக்குமே; (அவ்வாறின்றி), ஒருவேன் உள் உளை ஆகில் - ஒருத்தியான என் மனத்தினுள்ளே நீ நீங்காது இருப்பவனானால், உய்தி ஆல் - நீ இறவாது பிழைத்தே யிருப்பாய்: (ஆதலின்), இருவேம் உள் - ஒருவர் உள்ளத்தில் ஒருவராக, இருவேம் இருந்திலேம் - நாம் இருவரும் இருந்தோம் அல்லோம்;

ஒருவேன் : உன்னைவிட்டு நீங்காத என்னுடைய என்றும் பொருள் கொள்ளலாம் ; ஒருவுதல், நீங்குதல், 'பல்பொருள் முற்றுற் றொருவாத வேதம்' (ஆரணிய. 1162.); 'ஒருவே னுனதொழில் பேழ்வாய்ச் சேர்ந் தேகு கின்றேன் ; (சுந்தர. 70). ஒருவேன், இருவேம் - எண்ணடியாகப் பிறந்ததன்மைப் பெயர்கள். உளை : முன்னிலை யொருமை வினைமுற்று. ஆல் என்பது இரண்டிடத்தும் தேற்றப் பொருளது.

இச் செய்யுளில் அன்புமிக்க கிழவன் கிழத்தியர் தம்முள் ஒருவர் மனத்தே ஒருவர் உறைவதாகக் கூறும் மரபு காட்டப் பெற்றது. ஒப்பு : 'இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்'; (பால. மிதிலைக். 37.); பு. வெ. பா. 262. இச் செய்யுள், 'உடையா ளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி' என்று தொடங்கும் (திருவாசகம். கோயில் மூத்த. 1.) பதிகத்தையும், 'மங்கைநல் லாயெழில் கோடீச் சுரநம்பர் மால்வரைமேல், தங்குறு வெண்மல ராலெறிந் தானது தண்புனத்தோர், பைங்கிளி மேற்பட் டுருவியென் னெஞ்சினும் பட்டலைத்த, திங்குனக் கோதின னீநகை யாலெறிந் தீர்ந்தனையே' என்னும் கோடீச்சுரக் கோவைச் (122) செய்யுளையும் நினைப்பூட்டுகின்றது.

பி - ம். 1. சிந்தை யேயெனில், சிந்தை யாளெனில்.
2. மென்னையும் வெளவுமால்.
3. னுள்ளிருந் தாயெனி; லுய்தியேல்.
4. இருவேமு மிருவே முள்ளி ருந்திலேம், இருவேமு மொருவாம லிருந்துளோம் ; லிருந்துளோம். (164)

392. எந்தாய்! நீயமிழ் தீய யாமெலாம்
உய்ந்தே மென்றுப கார முன்னுவார்
நந்தா நாண்மலர் சிந்தி நண்பொடு
வந்தா ரோவெதிர் வானு ளோரெலாம்.

வான் உளோர் எலாம் - சுவர்க்கத்தில் உள்ள தேவர்கள் யாவரும், உபகாரம் உன்னுவார் - நீ செய்த நன்றியை நினைப்பவர்களாய், ' எந்தாய் - எம் தந்தை போன்றவனே! நீ அமிழ்து ஈய - நீ பாற்கடலிற் கடைந்து எடுத்த அமுதத்தை எங்கட்குக் கொடுக்க, யாம் எலாம் உய்ந்தேம் - நாங்கள் அனைவரும் அதனை உண்டு இறப்பின்றி வாழப் பெற்றேம் ' என்று - என உனைப் புகழ்ந்து, நந்தா நாண் மலர் சிந்தி - ஒரு போதும் வாடாத அப்பொழுது மலர்ந்த கற்பகம் முதலிய தெய்வ மலர்களை உன்மீது பொழிந்து, நண்பு ஒடு - நட்புரிமையோடும், எதிர் வந்தாரோ - உன்னை அழைக்க அங்கு எதிர்கொண்டு வந்தாரோ ?

முன் நமனை உபகாரம் சிந்தியாதவன் என்று (387) நிந்தித்த தாரை, இப்பொழுது மனம்மாறித் தேவர்களின் உபகார சிந்தையைக் கூறுவாளானாள். நந்தா நாண்மலர் : அவை, சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்பன. உபகார முன்னுவார் வானு ளோர் எலாம் நாண் மலர் சிந்தி எதிர் வந்தாரோ என இயைக்க. வந்தாரோ, ஓகாரம் ஐயவினா.

பி - ம். 2. உய்ந்தா மென்றுப கார ; றுபசார சிந்தையார்.
3. நாண்மலர் தூவி, நன்மலர் சிந்தி.
4. வெதிரேயவ் வானுளோர். வெதிரவ் வானுளார். (165)

393. ஓயா வாளி யொளித்துநின் றெய்யவே
ஏயா வந்த விராம னென்றுளான்
வாயா லேயின னென்னின் வாழ்வெலாம்
ஈயா யோவமிழ் தேயு மீகுவாய்.

ஒளித்து நின்று - (எதிர்வராமல்) தன்னை மறைத்துக் கொண்டு நின்று, ஓயா வாளி எய்யவே - உயிரைக் கவர்ந்தாலன்றிப் பகைவனை விட்டு நீங்காத தன் அம்பை எய்வதாக, ஏயா வந்த - (சுக்கிரீவனால்) ஏவப்பெற்று வந்த, இராமன் என்றுளான் - இராமன் என்றுள்ள ஒருவன், வாயால் ஏயினன் என்னின் - தன் வாயால் உன்னை இரந்து கேட்டுக்கொண்டான் என்றால், அமிழ்து ஏயும் ஈகுவாய் - (கிடைத்தற் கரிய) தேவாமிதத்தையும் விரும்பிய தேவர்க்கு ஈந்தநீ, வாழ்வு எலாம் ஈயாயோ - உன் வாழ்க்கைச் சிறப்பாகிய அரசியற் செல்வமனைத்தையும் (அச்சுக்கிரீவனுக்கு) நீ கொடுக்க மாட்டாயோ ? (கொடுத்து விடுவாயே என்றபடி.)

இராமனென்றுளான்: முன் 'இராமனென்பவன்' என்று அவனைக் குறித்தமை காண்க (256); சிறப்பில்லாத யாரோ ஒருவன். என்றபடி.

உன்னிடம் நேரில்வந்து இரந்து பெருது, உன் உயிரை மறைந்து கொன்று, உன்னுரிமையைக் கவர்ந்தானே என்ற எண்ணத்துடன், 'இராமன் என்றுளான்' என்று இழிவு தோன்றப் பராமுகமாய்க் கூறினுள் என்க. வாழ்வெலாம் -இராமன் பிராட்டியை அடையவே சுக்கி ரீவுனிடம் நட்புக் கொண்டதை யுட்கொண்டு, இழந்த மனைவியோடு, அவன் இழந்த அரசியலையும் எனவும் கொள்ளலாம்; அமிழ்தேயும், உம்மை உயர்வு சிறப்பினது. ஏயா - ஏய்ந்து, அதாவது சுக்கிரீவன் விருப்பத்திற்கு உடன்பட்டு என்னலும் ஒன்றும். ஏயினன் - ஏவினன் என்பதின் திரிபு; மேவினுன் என்பது மேயினுன் என வருதல் போல. ஈகுவாய் : கு, சாரியை : இது, வாலியின் வள்ளன்மையைக் குறித்தது. இஃது, 'ஆடினிர் பாடினிர் செலினே, நாடுங் குன்று மொருங்கீ யும்மே' என்ற கபிலர் பாடலின் பகுதியை (புறநா. 109. 17-18) நினைப்பூட்டு கின்றது.

பி - ம். 1. கின்றெய்குவான், கின்றெய்யவே.
2. ஏயா மேய, ஏயா கின்ற.
3. னென்னின் மன்னர (ச்) ; ஏயின னன்றி வாளியால்; யென்றும் வாளியால், யென்னில் வல்லீர்.
4. மீயாயோ ; வீயா யேமமு தியு மீளியாய். (166)

394. சொற்றேன் முந்துற வன்ன சொற்கொளாய்
அற்ரு னன்னது செய்க் லானென
உற்ரு யும்பியை யூழி காணுநீ
இற்ருய் நானுனே யென்று காண்பெனே.

'முந்துற - நீ போருக்குப் புறப்படும் முன்னதாக, சொற்றேன் - (சுக்கிரீவனுக்குத் துணையாக உன்னேடு போரிட இராமன் என்பவன் வந்துள்ளான் என்று செய்தியை) நான் சொன்னேன் ; அன்ன சொல் கொளாய் - அந்த என் வார்த்தையை நீ ஏற்றுக்கொள்ளதவனுய், அற்ருன் - அந்த இராமன், அன்னது செய்கலான் என - அத்தகைய காரியத்தைச் செய்ய மாட்டான் என்று, உம்பியை உற்ருய் - (போரிட) உன் தம்பியைப் போய் அடைந்தாய் ; ஊழி காணும் நீ - இன்னும் பல ஊழிக்காலம் இருந்து அவற்றைக் காணும், ஆயுள் வலியுடைய நீ இற்ருய் - இறந்து போனுய் ; நான் உனே என்று காண்பெனே-இனியான் உன்னே என்று காணப்போகின்றேனே ?

சொற்றேன் : சொன்னது, 256 நோக்குக. அற்ருன் - அவன் : அத்தகைய இராமன் என்னலும் ஆகும் ; 'அற்ருன் - ஒருவரிடத்திலும்

வருவது அற்றவனான இராமபிரான்' பழையவுரை. தகைமையாவன: வாலிமுன் தாரைக்குக் கூறிய, 257-261 முடிய உள்ள பாடல்களால் விளங்கும் இராமபிரானுடைய சிறப்புகள்.

பி-ம். 2. செய்க லானென்று. 3. காணரீ.
4. இற்று யானனே, கற்று யானனே; காண்கெனே, காண்பெறல்.

395. நீறு மேருவு நீநெ ருங்கினல்
யாறோர் வாளியுன் மார்பை யீர்வதோ
தேறேன் யானிது தேவர் மாயமோ
வேறோர் வாலி கொலாம்வி ளிந்துளான்.

'நீ நெருங்கினல் - நீ அணுகினல், மேருவும் நீறு ஆம் - மேருமலையும் சாம்பற் பொடியாகும்; (அங்ஙனமாக), மாறு - உனக்கு எதிராக, ஓர் வாளி - ஓர் அம்பும், உன் மார்பை ஈர்வதோ - உன் மார்பை வந்து பிளப்பதோ? யான் இது தேறேன் - நான் இஃது உண்மை யென்று துணியமாட்டேன்; தேவர் மாயமோ - இது தேவர்கள் புரிந்த மாயச் செயலோ? விளிந்துளான் - இறந்து கிடக்கின்ற இவன், வேறு ஓர் வாலி கொலாம் - வாலி என்ற பெயருடைய வேறு ஒருவன் தானே?

மாயம் - மனிதர்களால் இயற்றற்கரிய அதாவது அமானுடமான தேவர்களின் விசித்திரச் செயல். வாலி இவ்வம்பினல் விளியக்கூடிய அவ்வளவு எளியனல்லன் என்று அவள் உறுதியாய் நம்பியிருந்தாளாகையால், இறந்த இவன் தன் கணவனான வாலி அல்லனே என்று ஐயமுற்றாள் தாரை என்பதாம்.

பி-ம். 1. நெருக்கினல்.
2. மார்பி றந்ததோ, மார்பி றந்தார், மார்பி டந்ததே; யீர்வதே யாவதோ.
3. தேவர் மாயையோ.
4. விளிந்ததே, விளிந்தரீ மடிந்துளான். (168)

396. தகைசேர் வண்புகழ் தின்று தம்பியார்
பகைநேர் வாருள ரான பண்பினல்
உகவே சிந்தை யுலந்த ழிந்ததால்
மகனே கண்டிலை யோநம் வாழ்வெலாம்.

(பிறகு தாரை தன் மைந்தனை நோக்கி), 'மகனே - என் மைந்தனான அங்கதனே! தம்பியார் - உன் தந்தைக்குத் தம்பியாகிய சுக்கிரீவர், தகை

சேர் - பெருமை பொருந்திய, வண் புகழ் தின்று - செழித் தோங்கிய புகழைத் தான் தின்றதுபோல அழித்து, பகை நேர் வார் உளர் ஆன பண்பினல் - விரோதியாய் எதிர்ப்பவரான தன்மையினல், நம் வாழ்வு எலாம் - நம் வாழ்க்கைச் சிறப்புக்கள் யாவும், உகவே - சிந்தியழியவே, சிந்தை உலந்து அழிந்தது - நம் மனம் வாடி அழிந்தது, கண்டிலேயோ- நீ இதனை இன்னும் காணவில்லையோ ? ஆல் : அசை.

இனி, மகனே என்பதற்குக் கணவனே என்ற பொருள் கொண்டு தாரை வாலியையே நோக்கிக் கூறியதாகப் பொருள் கொள்வாரும் உளர் ; மகன் என்பது கணவனையுங் குறிப்பது :-சிலப், 16:17 ; மணி 21:29 ; இவையன்றி மகன் என்ற சொல் வீரரிற் சிறந்தோனையும் குறிக்கும் ஆதலின், அக்கருத்தைக் கொண்டு தாரை, வாலியையே குறித்துக் கூறினள் எனக் கொள்ளலும் பொருந்தும் ; மகன் - வீரரிற் சிறந்தோன்; 'வேந்தர், மனம்போல வந்த மகன்' (பு.வெ. 26). தம்பியார், பன்மை விகுதியிற் கூறியது வெறுப்பினல்; வஞ்சப் புகழ்ச்சி. உக நேர் சிந்தி என்ற பாடங்கொண்டு, 'வாலி சரீரம் உக்கி நம் முன்னே சிதறி' என்பது பழையவுரை.

பி - ம். 1. *தகைநேர் வண்பழி கொண்ட தம்பியார் ; நின்று தம்பியார்.*
2. *ருளரான பண்பினர்.* 3. *உகநேர் சிந்த.*
4. *வாழ்வெனு.* (169)

**397.** அருமந் தற்ற மகற்றும் வில்லியார்
ஒருமைந் தற்கு மடாத துன்னினர்
தருமம் பற்றிய தக்க வர்க்கெலாம்
கருமங் கட்டளை யென்றல் கட்டதோ.

'அருமந்து - அரிய மருந்துபோல, அற்றம் அகற்றும் வில்லியார் - துன்பத்தைப் போக்கியருளும் வில்லையுடைய இராமபிரானர், ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினர் - ஒரு வீரனுக்கும் அடுக்காத காரியத்தை நினைந்து செய்து விட்டார் ; தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம் - தருமத்தை உறுதியாகப் பற்றி நடக்கும் மேலோர்க் கெல்லாம், கருமம் கட்டளை என்றல் - அவரவர் செய்யும் செயலே அவரவர் தகுதியை அளக்கும் அளவுக் கருவி ஆகும் என்ற நீதிமொழி, கட்டதோ- அழிக்கப் பெற்றதோ ? '

அருமந்து - அரிய மருந்து. இது மரூஉச் சொல் ; மருந்து என்ற சொல், தெலுங்கில் மந்து எனவே வழங்கி வருதலுங் காண்க. ' ஒரு மைந்தற்கும் - தந்தைக்குப் பின் உரியவனும், என் ஒரே மைந்தனுமான

அங்கதனுக்கும் அடாதது உன்னினுர்-அடுக்காத காரியத்தைச் செய்யக் கருதினுர்; என்று, தன் மைந்தனுக்குரிய அரசியற் சிறப்பை, அவனடையாமல் அவன் சிற்றப்பன் சுக்கிரீவன் அடையச் செய்தார்' என்றதைக் குறித்துக் கூறினுள் எனப் பொருள் கொண்டாரும் உளர். கட்டளை: ஒரு பொருளைச் செய்ய அளவாகக் கொண்ட அச்சு. கருமம் கட்டளை: 'பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம், கருமமே கட்டளைக் கல்'; (குறள். 505) என்றமை காண்க. 'கட்டளை, நடக்கும் நீதி' என்பது பழையவுரை. கட்டது - அழிக்கப்பட்டது; நிற்கட்டனன் (331) என்றமையும் அதன் உரையையும் நோக்குக. இனி, கட்டதோ என்பதற்கு: இஃது உண்மையல்லாத ஒரு கட்டுப்பாட்டுப் பொய்யுரையோ அல்லது பொய் வழக்கோ எனவும் பொருள் கொள்ளலாம்; கட்டு - பொய்யுரை.

பி-ம். 1. அருள்வர் தற்ற.
2. ஒரு மைந்தற்கு, ஒருமைந் தற்குயி ரொழிய.
3. தக்க வர்க்கமெலாம்.
4. யென்கை விட்டதோ, விட்டதே; யென்றல் கைவிட்டதே.

(170)

அநுமன் செயல்

398. என்ருளின்னன பன்னி யின்னலோ
டொன்ரு வுள்ளுணர் வேது முற்றிலாள்
நின்ருளந்நிலை நோக்கி நீதியால்
வன்ருண் மால்வரை யன்ன மாருதி

என்ருள் - என்று கூறிய தாரை, இன்னன - இவ்விதமாகப் பலவற்றை, பன்னி - பலமுறை திருப்பித் திருப்பிக் கூறி, இன்னலோடு - துன்பத்தோடு, ஒன்ரு - ஒன்றுபட்டு, (அதாவது வேறுபடாது கலந்து), உள் உணர்வு ஏதும் உற்றிலாள் - தன் உள்ளத்து உணர்ச்சி சிறிதும் அடையாதவளாய், நின்ருள் - திகைத்து நின்ருள்; அ நிலை நோக்கி - (தாரையின்) அந்த நிலைமையைக் கண்டு, நீதியால்-நியாய முறையினுல், மால் வரை அன்ன - பெரிய மேருமலைக்கு ஒப்பானவனும், வல் தாள் - வலிய முயற்சியை யுடையவனுமான, மாருதி - அநுமன்,

இஃது அடுத்த பாடலோடு குளகமாய் இயைந்து வினைமுடிவு கொள்ளும். மாருதிக்கு மால்வரை உவமை: அநுமனுக்கு மலை; 73-ஆம் செய்யுளின் உவமை காண்க. தாள் என்பதை வரைக்குங் கூட்டலாம்.

பி-ம். 2. டொன்ரு நாளுணர்; யொன்று முற்றிலன்; ளுணர்வே துற்றிலன்.
3. நின்ருளைத் தனிநெடிது தேற்றியே; நெடிது நோக்கியே; நீதி சால் நீதியான். 4. யன்ரேண் மால்வரை.

(171)

399 மடவார் சூழ மடந்தை தன்னைவாழ்
இடமே வும்படி யேவி வாலிபால்
கடன்யா வுங்கடை கண்டு கண்ணனே
டுடனு வுற்ற வெலாமு ணர்த்தினன்.

(அதன் பின் அநுமன்), மடவார் சூழ் - (வானர) மகளிர் சூழ்ந்து இருந்த, அ மடந்தை தன்னை - அந்தத் தாரை என்பாளை, வாழ் இடம் மேவும்படி ஏவி - அவள் இருப்பிடமாகிய அந்தப்புரத்திற்குச் செல்லும் படி அனுப்பிவிட்டு, வாலி பால் கடன் யாவும் கடைகண்டு - வாலியின் பொருட்டுச் செய்ய வேண்டிய ஈமக் கடன்கள் எல்லாம் அங்கதனைக் கொண்டு செய்து முடித்து, உடனு - உடனே, கண்ணனேடு - செந்தாமரைக் கண்ணனுன இராமபிரானேடு, உற்ற எலாம் - நடந்த மேற் கூறிய செய்திகள் அனைத்தையும், உணர்த்தினன் - தெரிவித்தான்.

கடை காண்டல் - முடிவுறச் செய்தல். கண்ணன்: அழகிய கண்ணை உடையவன்; கிருஷ்ணன் (கருநிறமானவன்) என்ற வட சொல்லின் சிதைவும் ஆம். இராமபிரானைக் கண்ணன் என்றல்; பால. உலாவியற் : 6 ; கோலங்காண் : 4 ; ஆரணிய. 38, 254 ; பிறவும் ஆம். வாலியின் ஈமக்கடன்கள் மிகச்சுருக்கமாக இங்குக் கூறியிருக்க, வான்மீகத்தில் மிக விரிவாக அதனை அமைத்திருப்பது காணலாம்.

பி - ம். 1. மடவா ராய, மடமாதினை ; மடவார் தம்மொடு மாதை வல்லைவாழ்.
3. கடனு யுள்ளது, கடனு யுள்ளன, கடனு யாவையுங், கடனும் யாவையுங் ; 4. டுடனு முற்ற வெலாமு ணர்த்தலும். (172)

இதன் பின் சில பிரதிகளில் அடியிற்காணும் மூன்று பாடல்கள் அதிகமாக உள்ளன. அவை சிறந்த பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லாமையால், அவற்றைப் பாடவரிசையில் சேர்க்கவில்லை.

1. அகம்வே ரற்றுக வீச ருக்கனுர்
புகமே லைக்கிரி புக்க போதினில்
நகமே யொத்த குரக்கு நாயகன்
முகமே யொத்தது மூரி மண்டிலம்.

2. மறைந்தான் மாலை யருக்கன் வன்ளியோன்
உறைந்தான் மங்கை திறத்தை யுன்னுவான்
குறைந்தா னெஞ்சு குறைந்த மூங்குவான்
நிறைந்தார் கங்குலின் வேலை நீங்கினன்.

3. புதல்வன் பொன்மகு டம்பொ றுக்கலால்
முதல்வன் பேரு வகைக்கு முந்துவான்
உதவும் பூமகள் சேர வொண்மலர்க்
கதவஞ் செய்ய கரத்தி னீக்கினன்.

## குறிப்பு

385-397 செய்யுட்களில், வாலி இறந்ததைக் கேட்ட தாரையின் நிலையையும், அவள் கூறிப் புலம்பினவற்றையும் கம்பநாட்டாழ்வார் தாம் கொண்ட கொள்கையின் வழியே அமைத்துள்ளார். இங்கு, வான்மீகம், அத்யாத்ம ராமாயணம் போன்ற பிற நூல்களில் இப்பகுதி எவ்வாறு கூறப்பெற்றிருக்கிறது என்பதைச் சுருக்கமாகக் காண்பது நலமாகும்.

வான்மீகம். கிஷ்கிந்தா-சர்க்கம் 19-24 :—வாலி மூர்ச்சையற்றுக் கிடந்தானேயன்றி இறக்கவில்லை; வானரர் வாலி இறந்தானென் றெண்ணி அஞ்சியோட, அவர்களிடமிருந்து இராமபிரானால் வாலி வதைக்கப்பட்ட செய்தியைத் தாரை கேட்டனள். அப்பொழுது அவள், அவ்விடம் சென்ற பிறகு கிடந்த வாலியைக் கண்டு, அவன் இறந்தான் என்று கொண்டு, பலவாறு புலம்பி, அங்கதனை நோக்கி வருந்தியும், சுக்கிரீவனை நோக்கிச் சில சொற்கள் கூறியும், முடிவில் தன் இறந்த கணவனுடன் தானும் இறக்கத் துணிந்தாள். அப்பொழுது அநுமன் அவளருகில் வந்து, அவளைப் பல சொற்களால் தேற்றி, அங்கத குமாரன் பொருட்டு, அவள் உயிர்வாழ வேண்டு மென்றும், அவனுக்குப் பட்டா பிஷேகம் செய்வித்து அவனுக்கு உறுதுணையாய் ஒன்றி வாழவேண்டு மென்றும் வற்புறுத்தினன். அவள் அவற்றைச் செவியில் ஏற்காமல், 'இனி, சுக்கிரீவரே எதனையும் செய்யத்தக்கவர்; அவரே அங்கதனைப் பார்த்துக் கொள்வர்; நான் என் நாதன் சென்றவிடத்துக்குச் செல் வேன்!' என்று உறுதியாய் நின்றனள்.

இவ்வாறு நிகழும் போது, வாலி சற்று மூர்ச்சை தெளிந்து, சுக்கிரீ வனை நோக்கி, அவனே தனக்குப்பின் வானர அரசை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும், அங்கதனையும் தாரையையும் அவனே காப்பாற்ற வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு, தனக்கு இந்திரனால் முன் அளிக் கப்பெற்ற 'பொன்மலர் மாலை'யையும் அவனுக்கு அணிவித்தான். பிறகு அவன் அங்கதனுக்கும் சில நன்மொழிகளைக்கூறி இறந்தான். இவற்றை யெல்லாம் கண்ட தாரை வெட்டுண்ட மரம்போல் வீழ்ந்து மறுபடியும் புலம்பலானாள். அவள், வாலியின் உடலில் பதிந்திருந்த இராமபாணம்

தடைசெய்தலால், அவனைத் தழுவ முடியாமல் தவித்தாள். நீலன் என்னும் சேனாதிபதி அக்கணையைப் பிடுங்கினான். தாரை தன் கணவன் உடல்மீது விழுந்து மேலும் புலம்பினாள். இவற்றையெல்லாம் கண்டு நின்ற சுக்கிரீவனும் மனம் சோர்ந்து தானும் இறந்துவிடத் துணிந்து அவ்வாறு செய்ய இராமபிரானின் அனுமதி கேட்டு நின்றான்.

இராமபிரான் எல்லாவற்றையுங் கண்டு, தாமும் வருந்தி, சிறிது நேரம் ஆராய்ந்து, வாலி விழுந்து கிடந்த இடத்திற்கு வந்தனன். அவனைக் கண்ட தாரை அவனுடைய திவ்வியமங்கள உருவத்தில் ஈடுபட்டு, அவனைப் பலவாறு புகழ்ந்து, தன்னையும் ஒரு பாணத்தால் வதைத்து வாலி சென்ற இடத்துக்கு அனுப்புமாறு வேண்டிக் கொண்டனள். இராமபிரான் அவளை இன்மொழிகளால் தேற்றி, அவள் மனந் தேறச் செய்தனர். சுக்கிரீவனும் தன் சோர்வு நீங்கினான். பிறகு இராமபிரான் கட்டளையின்படி சுக்கிரீவன் அங்கதனைக் கொண்டு இறந்த வாலிக்கு ஈமக்கடனும், நீர்க்கடனும் செய்வித்து இராமபிரானை அடைந்தான்.

அத்யாத்ம ராமாயணம் - கிஷ்கிந்தா காண்டம் 2 - 3 சருக்கங்கள்

வாலி தன்னை அடித்த வீரன் இலக்ஷ்மிகாந்தனென்றறிந்து அவனைப் பலபடி புகழ்ந்து, அவன் கையால் தன்னைத் தொட வேண்டுமென்று பிரார்த்தித்தான் ; இராமபிரான் அவ்வாறே செய்து, அவன் மார்பில் தைத்திருந்த பாணத்தை எடுத்தார். உடனே வாலி உத்தம பதவியை யடைந்தனன். இச் செய்தி கேட்ட தாரை ஓடிவந்து தன் கணவனைக் கண்டு மிகவும் வருந்தினாள் ; இராமபிரானை நோக்கி வாலி சென்ற இடத்துக்குத் தன்னையும் அனுப்ப வேண்டினாள். அப்பொழுது இராமபிரான் மிக விரிவான முறையில் தத்துவோபதேசம் செய்து, அவளுக்குத் தம் சுய உருவத்தைக் காட்டினார் ; அதைக் கண்டதும் அவள் தன் மயக்கம் நீங்கப்பெற்று ஜீவன்முக்தை யாயினாள்.'

துளசிதாஸர் கூறுவது.

துளஸிதாஸரும் அத்யாத்மம் கூறியதையே பெரும்பாலும் பின்பற்றியுள்ளார். இராமபிரானுடைய தத்துவோபதேசத்தைக் கேட்ட தாரை, அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினாளென்றும், பிறகு இராமபிரான் இலக்குவனைக் கொண்டு சுக்கிரீவனுக்கு மகுடம் சூட்டுவித்தார் என்றும் அவர் கூறுகின்றார்.

## வாலி வதைப் படலம் முற்றும்

## 8. அரசியற்படலம்

இது, இராமபிரான் கட்டளையினுல் சுக்கிரீவன் முடி சூட்டப் பெற்றதையும், அவன், அப்பிரான் அருளிய உபதேசங்களைப் பெற்று அரசியலை ஏற்றுக்கொண்டதையும் கூறும் படலம் என விரியும். இது, சுக்கிரீவன் முடிசூடு படலம் என்று ஓர் பிரதியிற் காணப்படுகின்றது, இப்படலத் தொடக்கம் பிரதிகளில் பலவாறு உள்ளது.

சுக்கிரீவனுக்கு முடிசூட்டுமாறு இராமபிரான்
இலக்குவனுக்குப் பணித்தல்

400. அதுகா லத்தவ் வருட்கு நாயகன்
மதிசா றம்பியை வல்லை யேவினுன்
கதிரோன் மைந்தனை யைய கைகளால்
விதியால் மௌலி மிலைச்சு வாயெனு.

அது காலத்து - அந்த வேளையில், அ அருட்கு நாயகன் - அந்தக் கருணு மூர்த்தியான இராமபிரான், மதிசால் தம்பியை - அறிவு நிறைந்த தன் தம்பியான இலக்குவனை (நோக்கி), 'ஐய - ஐயனே! கதிரோன் மைந்தனை - சூரியன் புதல்வனுன சுக்கிரீவனுக்கு, கைகளால் - உன் கைகளால், விதியால் மௌலி மிலைச்சுவாய் - முறைப் படி முடி சூட்டுக' எனு - என்று, வல்லை ஏவினுன் - விரைந்து கட்டளை யிட்டான்.

அது காலத்து ; முன்படலத்தில் சுட்டிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்த பின், என்றபடி. 'சுபஸ்ய சீக்ரம்'; 'ச்ரேயாணிபகுவிக் நாநி'; 'நல்லதற்கு நாற்பதிடையூறு' என்ற முதுரைகளைக் கருதி, 'வல்லைமிலைச்சுவாய்' எனப் பணித்தான் என்க. விதி - முடிசூட்டற்கு நூல்கள் கூறும் முறைமை. ஐய என்பதை விளியாக்காது அழகிய எனினுமாம் ; அருட்கு நாயகன்; இவன் அருளின் அருமையை, 'கருணைவள்ளால்' (609) ; 'கருணை வள்ளல்' (உயுத்த. வீடண:, 140); 'கருணையால் அமிழ்தம் காலும் முழுமதி முகத்தினுன்'; (உயுத்த. வீடண : 136); என்ற தொடர்கள் கொண்டுணர்க. மௌலி - வடசொல் ; இது மோலி எனவும் வழங்கும். ஏழிரண்டாண்டுகள் வனத்துறைவதாகத் தான் கொண்ட விரதத்துக்கேற்ப, நகருட் புகாது இலக்குவனையே முடிபுனைவிக்குமாறு இராமபிரான் கட்டளையிட்டருளினன். பின், விபீடணனுக்கும் அவ்வாறே செய்விப் பதும் காண்க.

வாலியின் ஈமக்கிரியைகள் முடிந்த பிறகு அனுமான் இராமபிரானை நகருக்கு வந்து சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்தருளுமாறு வேண்ட, அப்பிரான் அவ்வாறு வர மறுத்து, அநுமனையே பிற வானரத் தலைவர்களுடன், அங்குச் சென்று அப் பட்டாபிஷேகத்தை நிறைவேற்றப்பணித்து, சுக்கிரீவனை முடிசூட்டிக்கொள்ளவும், அங்கதனுக்கு இளவரசுப் பட்டம்சூட்டவும் கூறியருளினன் என்பது வான்மீகம். அத்யாத்மராமாயணமும், துளஸிதாஸர் இராமாயணமும் இலக்குவனைக் கொண்டு முடி சூட்டப்பெற்ற செய்தியையே கூறும்.

பி - ம். 1. *அதுகா லத்தி, அதுகா லத்தது, அதிகாலத்த அதிகாலத்தி.*

2. *மதிசேர் தம்பியை*

3. *மைந்தனை யுன்றன்.*

4. *விதிசால் மௌலி மிலைச்சி யாலெனு; மிலைச்சுவா யென்றான்.*(1)

அநுமன் ஆவன கொணர்தல்

401. அப்போ தங்கரு ணின்ற வண்ணலும்
மெய்ப்போர் மாருதி தன்னை வீரநீ
இப்போ தேகொண ரின்ன செய்வினைக்
கொப்பாம் யாவையு மென்று ணர்த்தலும்.

அருள் நின்ற அண்ணலும் - (இராமபிரானுடைய) திருவருள் ஆணைப்படி யொழுகுகின்ற பெருமைசான்ற இலக்குவனும், அப்போது- அந்தக் கணத்திலேயே, அங்கு - அவ்விடத்திற்றானே, மெய் போர் மாருதிதன்னை - உண்மை நெறி வழுவாது போர் புரிவதில் வல்ல அநுமனை (நோக்கி), 'வீர - வீரனே! நீ - நீ, இன்ன செய் வினைக்கு - இப்படிப்பட்ட முடிசூட்டிற்கு, ஒப்பு ஆம் யாவையும் - தக்க எல்லாப் பொருள்களையும், இப்போதே கொணர் - இப்பொழுதே கொண்டு தருக', என்று உணர்த்தலும் - என்று அறிவித்தவுடனே.

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகம். அருள் நின்ற அண்ணலது அருள் ஏவல் வழி நின்ற. மெய் போர் மாருதி - 'அறத்தா றழியாமை மறிந்துருளப் போர் வாலியை வெல்லும் மதிவல்லீர்' (988) என்று சாம்பவான் அநுமனைப் புகழ்வது காண்க. மெய்ப் போர் மாருதி' என்ற பாடத்துக்கு உண்மையான புகழ்வாய்ந்த மாருதி என்க. ஒப்ப - தக; 'ஒப்ப நாடி யத்தக வொறுத்தி' (புறநா. 10)

கொணு என்றும் பாடம். செய்வினை; 'செய்வினை வசிட்டன் செய்ய' (உயுத்த. திருமுடி. 37)

பி - ம். 1. அப்போதே, அப்பொழ்தே, வள்ளறும் அருளண்ணல் பின்னரும்.

3. அப்போதே, இப்போதே, இப்பொழ்தே; கொணுவின்ன. கொணரினிய செய்வினை, செய்விக்க.

4. மென்று ஊரத்தலும். (2)

402. மண் ணு நீர்முதன் மங்க லங்களும்
எண் ணும் பொன்முடி யாதி யாவையும்
நண் ணும் வேலையி னம்பி தம்பியும்
திண் ணஞ் செய்வன செய்து செம்மலை.

மண்ணும் நீர் முதல் மங்கலங்களும் - (சுக்கிரீவனை) நீராட்டுதற்கு வேண்டிய புண்ணிய தீர்த்தம் முதலான மங்கலப் பொருள்களும், எண்ணும் பொன்முடி ஆதி யாவையும் - நன்கு மதிக்கப்படும் பொன்னுற் செய்த முடி முதலிய எல்லாப் பொருள்களும், நண்ணும் வேலையில் - (அநுமனுல் கொணரப்பட்டு) வந்தடைந்த நேரத்தில், நம்பி தம்பியும் - ஆடவரிற் சிறந்த இராமபிரானுடைய தம்பியாகிய இலக்குவனும், செம்மலை - தலைமை பெற்று விளங்கும் சுக்கிரீவனுக்கு, திண்ணம் செய்வன செய்து - (முடிசூட்டும் முன்பு) திட்டமாகச் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து,

இச்செய்யுள் 'மௌலி சூட்டினுன்' என அடுத்த செய்யுளொடும் தொடர்ந்து குளகமாய் முடியும்.

மண்ணுதல் - நீராட்டுதல்; 'வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணுன்'; (அயோத். குகப். : 39); 'மங்கல மண்ணுநீர் மரபினுட்' (பெருங். இலாவாண : 7 : 148) செம்மல் - தலைமை : 'தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்'. (புறநா. 43); 'நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே' (புறநா. 47). செம்மலை - உருபு மயக்கம். ஈற்றடி முற்றுமோனை.

பி - ம். 1. மண்ணிடை, மண்ணு நீருமுதல், மண்ணின் நீர்.

2. எண்ணிய எண்ணும், இயைந்த யாவையும், பொன்முடி யோடு யாவையும், முதல, முடியாதும், யாளதும்.

3. நண்ணிய வேலையில் போதினில்; நம்பிதன் தம்பியின்.

4. திண்ணிய செய்வினை செய்து. (3)

முடி சூட்டு

403. மறையோ ராசி வழங்க வானுளோ
நறைதோய் நாண்மலர் தூவ நன்னெறிக்
கிறையோன் றன்னிளை யோனவ் வேந்தலைத்
துறையோர் நூன்முறை மௌலி சூட்டினன்.

மறையோர் - அந்தணர், ஆசி வழங்க - வாழ்த்துரை கூறவும், வான் உளோர் - தேவர்கள், நறை தோய் நாள் மலர் தூவ - நறுமணம் நிறைந்த அன்றலர்ந்த (மந்தார, கற்பக) மலர்களைப் பொழியவும், நல் நெறிக்கு - சிறந்த ஒழுக்கத்திற்கு, இறையோன்தன் - தலைவனான இராமபிரானுடைய, இளையோன் - தம்பியான இலக்குவன், அ - அந்த, ஏந்தலை - பெருமையால் உயர்ந்த சுக்கிரீவனை, துறையோர் நூல் முறை - நன்னெறிக்கண் நின்றொழுகும் முதியோர் மொழிந்த நூல்களிற்கண்ட விதிப்படி, மௌலி சூட்டினன் - முடி புனைவித்தான்.

நன்னெறிக்கிறைவன் இராமன்: 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண் மறைகள், உன்செய்கை அன்னவைதான் சொன்ன வொழுக்கினவோ' (ஆரணிய. 1173); 'தோன்றிய நல்லற நிறுத்தத் தோன்றினான்' (அயோத். நகர்நீங்கு: 168); 'அறந்தலை நிறுத்தி' (சுந்தர. 1123); 'நியாயமத் தனைக்குமோர் நிலைய மாயினான், (அயோத். திருவடி: 55); 'அறத்தை முற்றும் காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடம் காட்டி' (உயுத்த. கும்ப: 149); 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன இராமன்' (அயோத். மந்தரை; 47); 'இராமனாகி அறநெறி நிறுத்த வந்த' 360; 'தருமமே வுருவமாய்நின்ற' 353; என்றவை இதனை விளக்குவன காண்க. நறைதோய் - தேன் படிந்த, எனினுமாம். 'நன்னெறிக் கிறையோர் முன்வினை செய்ய' என்ற பாடங்கொண்டு, 'புரோகிதர்கள் முடி சூட்டிற்கு முன்னர்ச் செய்ய வேண்டுவனவற்றைச் செய்ய' என்றும் கூறுவர். துறையோர் - முடிசூட்டுந் துறைகளை அறிந்தோர் எனினுமாம். இந்த முடிசூட்டுவிழா மிக விரிவாக வான்மீகத்திற் கூறப்பட்டுள்ளது.

பி - ம். 2. நன்மலர்; நாள் முதல்; தூவ வங்கெறி.
3. இளையோ னாகிய இரவி மைந்தனை, இறையோன் முன் வினை செய்ய, இலறயோர் இறையோன் முன்பினை, யேகவேந்தலை, இறையோன் முன்னாகிய இரவி மைந்தனை.
4. துறையோர் நன்முடி, துறையோனன், துறையோர் நூல்வழி; மோலி சூட்டினான். (4)

சுக்கிரீவனுக்கு இராமபிரான் அறிவுரை கூறல்

404. பொன்மா மௌலி புனைந்து பொய்யிலான்
தன்மா னக்கழ ருழும் வேலையில்
நன்மார் பிற்றழு வுற்ற நாயகன்
சொன்னான் முற்றிய சொல்லி னெல்லையான்.

(சுக்கிரீவன்) பொன்மா மௌலி புனைந்து - பொன்னாற் செய்த சிறந்த (மணி) முடி தரித்து, பொய் இலான் தன் - பொய்ம்மொழி பேசாதவனான இராமபிரானுடைய, மானம் கழல் - பெருமை வாய்ந்த திருவடிகளில், தாழும் வேலையில்-(அவன்) வீழ்ந்து வணங்கும் அளவில், (அவனை), நல்மார்பில் தழுவுற்ற- அழகிய (தனது) மார்பில் அணைத்துக் கொண்ட, முற்றிய சொல்லின் எல்லையான் - வரம்பின் நிறைந்து விளங் கும் மொழியின் இலக்கண எல்லையைக் கண்டவனும், நாயகன் (இயங்கு பொருள் நிலைப்பொருள்களாகிய) எல்லாவற்றிற்கும் தலைவனு மான இராமபிரான், சொன்னான் - அறிவுரைகளைச் சுக்கிரீவனுக்குப் பின்வருமாறு கூறினான்.

மார்பில் தழுவிக் கொள்ளுதல் - பால எதிர்கோட். 24 ; அயோத். மந்திரப் : 61 ; கங்கைகாண். 32 : உயுத்த. வீடண. 122. 'வில்லிடை வாளியின் வீட்டித் தலைமையோடு நின்றுரமு முனக்கின்று தருவேன்; 148, என்று தான் கூறியதைத் தவறாது நிறைவேற்றினன் ஆதலின், இராமபிரானைப் 'பொய்யிலான்' என்றார். இதனைச் சுக்கிரீ வற்கேற்றிப் பொருள் கூறுவாருமுளர். இராமபிரானைப் பொய்யிலான் என்றார். 'முற்றிய சொல்லி னெல்லையான்' என்பது, 'வேதாந் தத்துக்கு முடிவான பெருமான்' என்பது பழையவுரை. தென் சொற் கடந்தான் வடசொற் கடற்கெல்லை தேர்ந்தான்' (அயோத். நகர்நீங்கு : 137) ; 'செந்தமிழ் வட எல்லை தெரிந்தவர், (திருவிளை. தடாதகை. 51)) முற்றிய பொருட் கொரு முடிவுளான்றனை (உயுத்த. கும்ப. 289) என்பனவும் காண்க.

அயோத்தியில், இராமபிரான் முடிசூடக் குறித்த நாட்கு முன்பு வசிட்டர் அவனுக்குக் கூறியதையும், சித்திரகூடத்தில் பரதாழ்வான் தன்னைவந்து கண்டபோது இராமபிரான் அவனுக்குக் கூறியதையும், இங்கும் சுக்கிரீவனுக்கு இராமபிரான் அவ்வாறே கூறுவதையும்

நோக்குங்கால், முடிசூட்டு விழாவை ஒட்டி, முடியேற்பார்க்குப் பெரியோர்கள் அறவுரை கூறுவது வழக்கம் என்பது புலனாகின்றது.

பி - ம். 1. மோலி, புனைந்த. 2. வேலையின். 3. தழுவுற்று.
4. சொன்னான் சொல்லு மொழுக்கத் தன்மையே ; எல்லையோன்.

இங்கு வாலி வதைப் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் காணப்படுகிறது.

வேறு

405. ஈண்டுநின் றேகி நீநின்
 னின்னிய லிருக்கை யெய்தி
வேண்டுவ மரபி னெண்ணி
 விதிமுறை யியற்றி வீர
பூண்டபே ரரசுக் கேற்ற
 யாவையும் புரிந்து போரின்
மாண்டவன் மைந்த னோடும்
 வாழ்திநற் றிருவின் வைகி.

'வீர - வீரனே! நீ - நீ, ஈண்டு நின்று ஏகி - இவ்விடத்திலிருந்து சென்று, நின் இன் இயல் இருக்கை எய்தி - உனக்கு இனிதாகவும் உரியதாகவும் பொருந்திய இருப்பிடத்தை (கிட்கிந்தைத் தலைநகரை) அடைந்து, வேண்டுவ - நீ புரிய வேண்டிய காரியங்களை, மரபின் எண்ணி - முறைப்படி ஆராய்ந்து, விதி முறை இயற்றி (நூல்களிலே விதிக்கப்பட்டவற்றை) நெறிப்படி செய்து, பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற - நீ மேற்கொண்ட பெரிய அரசாட்சிக்குத் தகுந்த, யாவையும் - எல்லாச் செயல்களையும், புரிந்து - செய்து, போரில் மாண்டவன் மைந்தனோடும்-யுத்தத்தில் மடிந்த வாலியின் மகனான அங்கதனோடும், நல்திருவின் வைகி வாழ்தி - சிறந்த செல்வத்தில் அமர்ந்து நிலைபெற்று வாழ்வாயாக!

ஈண்டு என்றது, வாலி இறந்தபிறகு, இராமபிரான் தங்கியிருந்த இடம். போரில் மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி என்றமையின், அங்கதனுக்கும் அரசியல் அலுவல்களில் பங்கு கொடுத்து ஆதரவளிக்குமாறு கூறியவாறும். மாண்டவன் என்று வாளா கூறாது 'போரில் மாண்டவன்' என்றது வாலி வீரத்தைக் குறித்தபடி. 'சூழ்வார் கண்ணாக வொழுகிக் காரியங்களை நல்லமைச்சரோடும் எண்ணித் துணிந்து,

காலமறிந்து, இடமறிந்து, தெரிந்து தெளிந்து இயல்புளிக் கோலோச்சுவது' சிறந்த மன்னன் செயல்களாகலின், 'மரபின் எண்ணி விதிமுறையியற்றி' என்றார். இச்செய்யுள், வணங்கினவனுக்கு வாழ்த்துக் கூறியதாம்.

பி-ம். 1. நீ நின்னியல்பமை, னின்னிலை, நின்றனியனமை யிருக்கை யெய்தி, மற்றுன் னியல்பெனும், நின்னிருக்கையை யியல்பி னெய்தி, நின்றனினின் னிருக்கை.
2. மரபினெய்தி. 3. அரசுக் கொத்த.
4. மைந்தனோடு வாழி நற்றிருவின், திருவி னெல்லாம், வரம்பக திருவில். (6)

406. வாய்மைசா லறிவின் வாய்ந்த
மந்திர மாந்த ரோடும்
தீமைதீ ரொழுக்கின் நின்று
தெறுதொழின் மறவ ரோடும்
தூய்மைசால் புணர்ச்சி பேணித்
துகளறு தொழிலை யாகிச்
சேய்மையோ டணிமை யின்றித்
தேவரிற் றெரிய நிற்றி.

வாய்மை சால் - உண்மை நிறைந்த, அறிவின் வாய்ந்த - அறிவு பொருந்தப்பெற்ற, மந்திரம் மாந்தரோடும் - (அமைச்சர், புரோகிதர்) முதலிய அரசியல் அறிஞரோடும், தீமை தீர் ஒழுக்கின் நின்று - குற்றமற்ற நல்லொழுக்கத்தில் தலை நின்று, தெறு தொழில் மறவரோடும் - பகைவரைப் (போரில்) அழிக்கும் செயலில் வல்ல வீரர்களான படைத் தலைவர்களோடும், தூய்மை சால் புணர்ச்சி பேணி - (உடல், மொழி, உள்ளம் என்ற இவற்றின்) தூய்மை நிறைந்தமைந்த கூட்டுறவை அவர்கள்பால் விரும்பி, துகள் அறு தொழிலை ஆகி - குற்றமற்ற செயல்களை புரிபவனாய், சேய்மையோடு அணிமை இன்றி - (அரசியற் சுற்றத்துடன்) மிகவும் விலகாமலும், மிகவும் நெருங்காமலும், தேவரில் தெரிய நிற்றி - தேவரைப் போல விளங்கி நிற்பாயாக!

'ஒருவரோடும் கிட்டி நெருங்கவும் வேண்டா, விட்டு நீங்கவும் வேண்டா' என்பது பழையவுரை. இனி, 'அமைச்சர் முதலாயினோர் உன்னுடன் பழகுமிடத்து உன்னை யகன்று நெடுந்தூரத்து நிற்றலும், உன்னை மிக அணுகுதலு மில்லாமல், (உன்னைத்) தேவர்கள் போலக் கருதும்படி நிற்பாயாக,' எனினுமாம். 'மன்ன ரென்பார் எரியனற்

குரிய ரென்றே எண்ணுதி' (365) என வாலி சுக்கிரீவனுக்கு உரைத்த தையும், அகலா தணுகாது தீக்காய்வார் போல்க இகல் வேந்தர்ச் சேர்ந் தொழுகுவார்'; (குறள். 691) என்றதையும் காண்க. அகலாமலும் அணுகாமலும் இருத்தல் இரு திறத் தார்க்கும் ஒப்பக் கூறியதாம். தேவரிற் றெரிய நிற்றி 'இளைய ரினமுறையா ரென்றிகழார் நின்ற ஒளியோ டொழுகப் படும்' (குறள். 698) என்றதும், 'ஒளி - உறங்கா நிற்கவும் தாம் உலகம் காக்கின்ற அவர் கடவுள் தன்மை; அதனோடு பொருந்த ஒழுகுத லாவது, அவர் கடவுளரும் தாம் மக்களுமாய் ஒழுகுதல்' என்ற அதன் விளக்க வுரையும், 'திலக நீண்முடித் தேவரும் வேந்தரும் உலக மாந்தர்கள் ஒப்பவென் றோதுப' (சீவக. 246) என்ற அடிகளும் காணத்தகும். இனி, 'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட் கிறையென்று வைக்கப்படும்; (குறள். 388) என்ற இடத்து 'அரசன் பிறப்பான் மகனே யாயினும், செயலான் மக்கட்குக் கடவு ளென்று வேறு வைக்கப்படும்' என்றதும் அறிக. இனி 'மன்ன ரென்பார் எரியனற் குரிய ரென்றே யெண்ணுதி'; 'மன்னர் தீ யீண்டு தன் கிளையோடு மெரித்திடும் (சீவக. 250). தேவரில்: இனித் தேவர் மானிடரை நயந்தபக்கத்து அவரிடம் முழுத் தொடர்பின்றியும், சிறிது தொடர்பு பூண்டும் ஒழுகுவது போன்று என்றும் கொள்ளலாம். சேய்மையோ டணிமை யின்றி என்ற கருத்து முதனூலிலும் வாலி அங்கதனுக்கு அறிவுகூறுமிடத்தும் காணலாம்.

பி - ம். 1. வாய்த்த, வந்த; மந்திரிமார்களோடும், மந்திரக் கிழவரோடும்.
2. திறந்தொழி லறவரோடும்.
3. புணர்ச்சி யெண்ணி, அன்பு பேணித் தொடருநட் பமைந்த மற்றும், தொழிற்றுயர் நீக்கித் துய்யைச், தொழிலை யாக்கி.
4. திமையோ டகன்று வானிற் றேவரிற் றிரிய, சேய்மையோ டண்மை யின்றி, டணுமை யின்றி; திகழ நிற்றி. (7)

407. புகையுடைத் தென்னி னுண்டு
பொங்கன லங்கென் றுன்னும்
மிகையுடைத் துலக நூலோர்
வினயமும் வேண்டற் பாற்றே
பகையுடைச் சிந்தை யார்க்கும்
பயனுறு பண்பிற் றீரா
நகையுடை முகத்தை யாகி
யின்னுரை நல்கு நாவால்.

'உலகம் - உலகத்தில் உயர்ந்த மக்களின் திரள், புகை உடைத்து என்னின் - ஓரிடம் புகை யுடையதாக இருந்தால் (அதுபற்றி), அங்கு - அவ்விடத்தில், பொங்கு அனல் உண்டு-மேலெழுந்து எரிகின்ற இயல்பு வாய்ந்த நெருப்புண்டு, என்று உன்னும் - என்று கருதுகின்ற, மிகை உடைத்து - சிறப்பறிவை யுடையது ; (ஆயினும்), இந்த அநுமானத் தோடு, நூலோர் வினயமும் - நூல் வல்லோராற் கூறப்படும் (இடங்கட் கேற்ற) சூழ்ச்சியும், வேண்டல் பாற்றே - (மன்னர்க்கு) விரும்பத்தக்க தேயாம் ; பகையுடை சிந்தையார்க்கும் - உன்பாற் பகைமை பூண்ட மனப்பான்மை யுடையவர்கட்கும், பயன் உறு பண்பில் தீரா - (அவ ரவர்க்குத் தக்க) பயன் விளையும் இயல்புகளினின்றும் நீங்காதபடி, நகை யுடை முகத்தை ஆகி- மலர்ச்சி கொண்ட மனத்தை யுடையவனாகி, நாவால் இன் உரை நல்கு - நாவினால் இனிமையான சொற்களைக் கூறுவாயாக !

உலகம் அநுமானத்தையே பின்பற்றிச் செல்வது ; ஆயினும் ஆகமமுங் கொள்ளற் பாலது என்பதும், பகைவரிடத்தும் இன் முகமும் இன்னுரையும் வேண்டற்பாலன என்பதும், இச்செய்யுளில் கூறப்பெற்றன. மூவகைப் பிரமாணங்களுள் முதலாவதான பிரத்தி யக்ஷம் அல்லது காட்சி மிக எளியதாதலின், அதனை விடுத்து ஏனைய இரண்டையும் சுட்டினார் என்க. இப் பிரமாணங்கள் உண்மையைக் காண்டற்கு வழிகளாகும். பகைவரிடமும் இன்முகமும் இன்னுரையும் கொள்கை ; (குறள். 487, 488, 830) ; 'பகையுடைச் சிந்தை யார்க்கும்' என்ற உம்மையால், யாவரிடமும் இன்முகமும் இன்னுரையும் வேண்டும் என்பது வற்புறுத்தப்பட்டது ; குறள். 829 ; அயோத். மந்தரை. 13. பண்பு : பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்' (கலி. 143 - 8).

பி - ம். 1. உண்டாம் பொங்கழலன்.

2. விளங்கத் தேறி.

3. படையுடை சிந்தை நீக்கி யென்பெரு நட்பிற் றீரா, பண்பெனு நண்பிற் பயனுறு பண்பிற்றீர்.

4. நவிற்றி நாவில், நல்கு நாவின், நவில்வர் யார்க்கும், நவிறி நாவில், நாவால்.

(8)

408. தேவரும் வெஃகற் கொத்த
செயிரறு செல்வ மஃதுன்
காவல தருமைத் தென்ரு
லன்னது கருதிக் காண்டி
ஏவரு மினிய நண்ப
ரயலவர் விரவா ரென்றிம்
மூவகை யியலோ ராவர்
முனேவர்க்கு முலக மூன்றின்.

தேவரும் வெ∴கற்கு ஒத்த - தேவர்களும் விரும்பத் தகுந்த, செயிர் அறு செல்வம் அ∴து - குற்ற மற்ற பெருஞ் செல்வமானது, உன் காவலது அருமைத்து - உனது அருமையான பாதுகாப்பில் அமைந் துள்ளது. என்ருல் - என்று சொன்னல், அன்னது கருதி - அச் செல் வத்தின் காவல் அருமை பெருமைகளே மனத்திற் கொண்டு, காண்டி - (அதனேப் போற்றிக் காப்பதில்) கண்ணும் கருத்துமாக விருப்பாயாக! முனேவர்க்கும் - முனிவர்களுக்கும், உலகம் மூன்றின் - மூன்று உலகங் களிலும் உள்ள, ஏவரும் - யாவரும், இனிய நண்பர் விரவார் அயலவர் என்று இ மூவகை - இனிய நண்பரும், பகைவரும் (இவ் விருவரு மல்லாமல்) குறைகூறும் அயலோரும் என்ற இம் முத்திறப் பட்ட, இயலோர் ஆவர் - இயல்பினே யுடையவர் ஆவர்.

ஏவரும் ஆவர் என்றியைக்க. தேவரும் வெ∴கற்கொத்த : (ஒப்பு.) தெய்வமும் விழையும் மைதவழ் கோயில்' (பெருங். 3 : 23 : 5.)

(காய்தல் உவத்தல் நீத்த) முனிவர்க்கும், மேற்கூறிய மூவுலகத்தின் உள்ளோர் யாவரும் பகையாதி மூவகை யியல்பினர் ஆவர் எனின், பொருளில் திளேக்கும் உன்திறத்துக் கூறவேண்டுவ தின்று என்றவாறு. உம்மை, உயர்வு சிறப்பு. இவ்வாறு கூறியதால், அரசன் நேர்மையின்றி நண்பு, பகைமை, நொதுமல் என்ற வேற்றுமையால் அளவு மிஞ்சிய ஈகை, இவறல், இகழ்ச்சி முதலியன மேற்கொள்ளலாகாது என்பது கூறப்பெற்றது. 'செயிர் அறு செல்வம்' என்றதனல், நடுவிகந்து ஆன ஆக்கமல்லாது, தூய வழியிலேயே ஈட்டிய பொருள் எனப்பட்டது. முனேவர் - முனிவர்; 'முனேவர்தம் முனேவனர்' (சீவக, 707), என்ற இடத்து முனேவரைத் 'தவக் கூற்றினுன் மிக்க இருடிகள்' என்பர் நச்சினர்க்கினியர். முனிவர் - மஹாத்மாக்கள்' என்பது பழையவுரை. காவலது - உன் பாதுகாப்பில் அமைந்தது. அருமைத்து - பிறர் எய்தற் கரியது, என்றும் பொருள் கொள்ளலாம்,

பி - ம். 1. தேவரும் மருடற், விரும்பற்; வியத்தற் செயலது, செயதுற, செல்வம் எல்லாம் ; அஃதாம், அஃதன்.
2. காவலர்க் குரிய தென்றூல், குரிமைத் தென்றூல் ; அன்னது காத்துக் கேட்டி; கோடி.
3. விழுலர் விவார், இரவலர், மமைச்சர், உரவோர் கண்ப ரிரவ ரிவர்க ளாதி, இயல்ப தாகு.
4. மூவகை யியல்பிற் றூரும், மூவகை யியல்ப தாகு முதல்வருக் குலவில் மன்னே; முனைவர்க்கு முயல்க முன்னே, முதல்வர்க்கு முலவில் மன்னே ; முயல்க முன்னே, உலக முன்னே, உலகின் முன்னே. (9)

409. செய்வன செய்தல் யாண்டுந்
தீயன சிந்தி யாமல்
வைவன வந்த போதும்
வசையில வினிய கூறல்
மெய்சொலல் வழங்கல் யாவும்
மேவின வெஃக லின்மை
உய்வன வாக்கித் தம்மோ
டுயர்வன வுவந்து செய்வாய்.

'யாண்டும் - மேற்கூறிய பகைவர், நொதுமலர், நண்பர் என்ற முத்திறத்தோருள் எவரிடத்தும், தீயன சிந்தியாமல் - தீமை பயக்கும் காரியங்களைக் கருதாமல், செய்வன செய்தல் - புரிதற் கேற்றன வற்றைப் புரிதலும், வைவன வந்தபோதும் - (பிறர் கூறிய வசை யுரைகள்) செவியில் தாக்கிய போதும், வசை இல இனிய கூறல் - (அவர்களிடத்தும்) பழிச்சொற்களைத் தவிர்த்து இனிய உரைகளை மொழிதலும், மெய் சொலல் - உண்மையே பேசுதலும்; யாவும் வழங்கல் - (தாம் தரக்கூடிய) பொருள்கள் அனைத்தும் (வேண்டிவந் தோர்க்குக்) கொடுத்தலும், மேவின வெ஀்கல் இன்மை - பிறரிடத்துப் பொருந்திய பொருள்களை வௌவுதல் இல்லாமையும், (ஆகிய இச் செயல்கள்) உய்வன ஆக்கி - தம்மைக் கடைப்பிடித்துள்ள உயிர்களை நற்கதியடையும்படி ஆக்கி, தம்மோடு உயர்வன - அவ்வுயிர்களோடு தாமும் மேம்பட விளங்குவனவாம் ; உவந்து செய்வாய் - (ஆதலின் இவற்றை நீ) மகிழ்ந்து செய்வாயாக!

முன் பாட்டிற் செல்வத்தைப் போற்றிக் காக்கவேண்டும் என்றார். இச் செய்யுளில், அச் செல்வம் குன்றாமைக்கு ஏது கூறு கின்றார். 'அ஀்கா்மை செல்வத்துக் கியாதெனின் வெ஀்காமை வேண்டும்

பிறன்கைப் பொருள்'; (குறள். 178); 'அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேரும், திறனறிந் தாங்கே திரு', (குறள். 179); 'முன்னிய பல்பொருள் வெஃகும் சிறுமை செல்வம் உடைக்கும் படை' (திரிகடு. 38) என்பன காண்க. 'வைவன வந்தபோதும் வசையில இனிய கூறல்: 'வைததனை யின்சொல்லாக் கொள்வானும்', (திரிகடு. 48); 'வைய வயப்பட்டான் வாளா விருப்பானேல் வைதான் வியத்தக்கான் வாழு மெனின்', (நாலடி. 325) என்றமை காண்க. இச் செய்யுளிற் கூறப்பெற்ற நீதிகள் குறள், இனியவை கூறல், தெரிந்து செயல்வகை, வெஃகாமை, வாய்மை, ஈகை முதலிய அதிகா ரங்களில் விரித்துரைக்கப்பட்டமை காணலாம். யாவும் வழங்கல், தம்மிடம் உள்ள பொருள்கள் அல்லாமல் தம் உயிரையும் வழங்கல் எனக் கொள்ளத்தக்கது. இது, தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு திறத்தும், சிபிச்சக்கரவர்த்தி திறத்தும், அறியற்பாலதாம். இனி, ஆக்கி, தம்மோடு எனும் பாடம் கொண்டு, ஆக்கி என்பதை வியங்கோ ளாகக் கொள்வாரும் உளர்; 'உருவும் புகழு மாகி' (புறநா. 6 : 8) என்பது போல.

பி - ம். 1. செய்யல், செய்கல்; தீயன செய்தல் யாண்டும், தீயினம் சிந்தியாமை.
2. வந்த போதும், வந்த போழ்தும், வசையின்றி யினியகூறல், வசையில னினிய கூறல், வசையிலா தினிகூறல்.
3. யாவு மேகென வேவ லின்மை, வெகுள்த லின்மை, மேயன வெள்க லின்மை, மேயன, மேலன, விரும்ப லின்மை.
4. உய்வன வாகி, வாகத், யுயர்ந்த தோளாய்; உயர்ந்த செய் வாய், டியர்ந்தன வுகந்து. (10)

410. சிறியரென் றிகழ்ந்து நோவு
செய்வன செய்யன் மற்றிந்
நெறியிகந் தியானோர் தீமை
யிழைத்தலா லுணர்ச்சி நீண்டு
குறியதா மேனி யாய
கூனியாற் குவவுத் தோளாய்
வெறியன வெய்தி நொய்தின்
வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்.

'குவவு தோளாய் - திரண்ட தோள்களை யுடையவனே! சிறியர் என்று இகழ்ந்து - (உருவத்தாலோ, உணர்வாலோ, வன்மையினாலோ,)

சிறியர் என்பது பற்றி இகழ்ச்சி செய்து, நோவு செய்வன செய்யல் - (எவரிடத்தும்) வருத்தம் விளைப்பனவான செயல்களைச் செய்யாதே; மற்று - மற்றும், யான் - நான், இ நெறி இகந்து - (நல்லதான) இந்த வழியைக் கைவிட்டு, ஓர் தீமை இழைத்தலான் - ஒரு கெடுதி புரிந்ததனுல், உணர்ச்சி நீண்டு - பகை உணர்வு வளர்ந்து, குறியது ஆம் மேனி ஆய - குறுகிய யாக்கைபெற்ற, கூனியால் - கூனியாகிய மந்தரையால், வெறியன எய்தி - வறுமைகளை யடைந்து, நொய்தின்- விரைவாக, வெம் துயர் கடலின் வீழ்ந்தேன் - கொடிய துன்பக் கடலில் விழுந்து வருந்தினேன்.

சிறியரை இகழ்வதால் தீமை விளைதற்குத் தன் சரிதையையே எடுத்துக் காட்டினுன் இராமபிரான்; 'பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமிழ் உண்டையுண் டதனைத்தன் உள்ளத் துள்ளுவாள்' என்ற (அயோத். மந்தரைசூழ்ச்சி. 41). செய்யுளடி, இராமபிரான் கூனியை இகழ்ந்த வரலாற்றினை விளக்கும். இச் செய்தி, உயுத்த. கும்பகருணப்.17; திருச்சந்த விருத்தம். 49-ஆலும் விளக்கப்பெற்றமை காண்க. இதனுல் தனக்கு விளைந்த துயரை இராமபிரான் சுக்கிரீவ னுக்குக் கூறி எச்சரித்தான் என்க. உண்டைவில்லா லடித்த இச் செய்தி முதனூலிற் குறிக்கப்படவில்லை. சிறியரென் றிகழ்தல் தீது; 'உருவுகண் டெள்ளாமை வேண்டும்', (குறள். 667) 'எள்ளற்க வென்றும் எளிய ரென்று', (நான்மணி. 3). 'வெறியன வெய்தி': என்றதனுல், தான் பெற்றுத் துய்க்க வேண்டிய போகங்கள் அனைத்தை யும் இராமபிரான் இழக்க நேர்ந்தமை குறித்தவாறும். வெறுமை - இல்லாமை; 'வெறிய ரன்றே குணங்களால் விரிஞ்சன் முதலாம் மேலானுர்'; (சுந்தர. 599). அரச போகங்கள் பலவாகலின் 'வெறியன' எனப் பன்மையாற் கூறப்பட்டன. நொய்தின் - எளிதின் எனினுமாம். வெந்துயர் - சீதையைப் பிரிந்த துயரம்.

பி - ம். 1. சிந்தை தேய்வன யாவும் செய்யல், சிந்தை நேர்வன, செருக்கிச் செய்யேல், நோவன செய்கலெம், நோக்கிச் செய்வன, செய்ய மற்று நொய்து செய்வன, நோக்கி நோவன செய்த லாதி, நோவன செய்தல் செய்யேல்.

2. நெறியி கழ்ந்து, நினைவு குன்றி; உணர்ச்சி நீண்டு, உணர நீண்டு.

3. குறியதா மேனி மாருக் கூனியாற்; மானக், மாளுக், மாறும்.

4. செய்து.

411. மங்கையர் பொருட்டா லெய்து
மாந்தர்க்கு மரண மென்றல்
சங்கையின் றுணர்தி வாலி
செய்கையாற் சாலு மின்னும்
அங்கவர் திறத்தி னுனே
யல்லலும் பழியு மாதல்
எங்களிற் காண்டி யன்றே
யிதற்குவே றுவமை யுண்டோ.

'மங்கையர் பொருட்டால் - மகளிர் காரணமாக, மாந்தர்க்கு மரணம் எய்தும் - ஆடவர்க்குயிரிறுதி வந்தடையும், என்றல் - என்னும் உண்மையை, வாலி செய்கையால் - வாலியின் செயலால், சங்கை இன்று உணர்தி - ஐயமின்றி அறிந்து கொள்வாயாக! சாலும் - (இந்த உண்மை தேர்தற்கு இஃது ஒன்றே) அமையும்; இன்னும் - மேலும், அவர் திறத்தினுனே - அந்த மகளிர் காரணமாகவே, அல்லலும் பழியும் ஆதல் - துன்பமும் வசையும் நிகழ்தல், எங்களில் காண்டி அன்றே - எங்களிடத்துக் காண்கின்ருய் அல்லவோ? இதற்கு வேறு உவமை உண்டோ - இதற்குக் கூறத்தக்க உவமானம் வேறுள்ளதோ? அங்கு: அசை.

எங்களில் என்றதனுல் தயரதனையும் உளப்படுத்திச் கூறியது என்க. அல்லலும் பழியும் கைகேயிக்கு வரமளித்துத் தயரதன் துன்புற்று உயிரிழந்ததும் ஆம். தன்னேக் குறிக்குமிடத்து, சீதையின் சொல்லேக் கேட்டு மானேத் தான் பிடிக்கச் சென்றதும், பின்னர் மனேவியைப் பிரிந்து வருந்திப் பிறர் கூறும் பழிக்காளானதும் முதலியனவாம்; 'சீதை யென் ெருருத்தியால் உள்ளம் தேம்பிய பேதையன்' (உயுத்த. மருத்து: 70); 'எம்பிசொன்ன சொற்கொளேன் போயினென் பெண்ணுரை மருது போகலால், ஆயதிப் பழியுடையானி' (உயுத்த. மருத்து: 71); 'பெண்மேல் வைத்த காதலி னிப்பேறுகள் பெற்றேன்' (உயுத்த. பிரமாத்திர. 212) என இராமபிரானே பின் கூறியுள்ளமை காண்க. மாந்தர் என்பது ஆடவர்க்கும் மகளிர்க்கும் பொதுவான சொல்லேனும் இங்கே குறிப்பினுல் ஆடவரைக் குறித்தது; 'பெயரினும் தொழிலினும் பிரிபவை யெல்லாம் மயங்கல் கூடா வழக்கு வழிப்பட்டன' (தொல். சொல். 50) என்பது விதி. இன்று - இன்றி; செய்யுளாகலின் உகர மிகரமாய்த் திரிந்தது; (தொல். எழுத். 238). அல்லலும் பழியுமாதல்: 'சிந்தோ டரியுண்கண் திலோத்தமை காதல் செற்ற' சுந்தோபசுந்தரின் வரலாறு (274) இங்கே அறியத்தகும். இங்கே சுக்கிரீவன் மனேவி உருமை

என்பவனை விரும்பியதன் காரணமாகவே, வாலி இறக்க நேர்ந்தமையைக் குறித்ததும் ஆம்; எங்களிற்காண்டி என்பதற்கும் இது பொருந்தும். சங்கை : சங்கா என்ற வடசொல்லின் திரிபு.

பி - ம். 1. *திறத்தாலென்று மாந்தர்க்குத் திறத்தா லெய்தி; மான மென்ற.*

2. *செய்கையே சாலும், செய்கையிற் காண்டி, சங்கையின் றுணர வாலி செய்கையே சாலு மின்னும்.*

3. *திறத்தி னாலே அல்லலும் மழிவு, பழியு மாகும்.*

4. *எங்கள்பாற் காண்டி, இதற்கு வேறுவமை யாதோ, றுவமை வேறென் றுரைப்ப துண்டோ, இதனின் வேறுறுதி, றுரைப்பதி யாதோ, வேறேதி யாதோ, றுவமை யென்னே.* (12)

412. நாயக னல்ல னம்மை
நனிபயந் தெடுத்து நல்கும்
தாயென வினிது பேணத்
தாங்குதி தாங்கு வாரை
ஆயது தன்மை யேனு
மறவரம் பிகவா வண்ணம்
தீயன வந்த போது
சுடுதியாற் றீமை யோரை.

'நாயகன் அல்லன் - (இவன் நமக்குத்) தலைவனான அரசன் அல்லன், நம்மை பயந்து எடுத்து - நம்மைப் பெற்றெடுத்து, நனி நல்கும் தாய் - நன்றாகப் புரந்தருளும் தாய், என - என்று (நினைந்தும் சொல்லியும்) இனிது பேண - இனிதாக (உன்னை மக்கள்) ஆதரிக்கும்படி, தாங்குவாரை தாங்குதி - பாதுகாத்தற்குரிய குடிகளைப்பாது காப்பாயாக! ஆயது தன்மை ஏனும் - அங்ஙனம் தாங்குதலை இயல்பாகக் கொண்டாலும், தீயன வந்த போது (எவராலேனும்) தீமை பயக்கும் செயல்கள் நேர்ந்த காலத்து, தீமையோரை - தீங்கிழைத்தவரை, அறம் வரம்பு இகவாவண்ணம் - தருமத்தின் எல்லையைக் கடவாதபடி, சுடுதி - (காய்ந்து) தண்டிப்பாயாக! ஆல் : அசை.

தன் கீழ்க்குடிகள் மாட்டு அன்பு காட்டி ஒழுகுதலும், அங்ஙனம் ஒழுகுமிடத்தும், குற்றம் புரிந்தோரைக் கண்ணோட்டமின்றிக் குற்றத்திற் கேற்றபடி, தண்டம் செய்தலும் அரசற்கு முறை என்பது கருத்து; 'குடி

புறங் காத்தோம்பிச் குற்றங்கடிதல், வடுவன்று வேந்தன் தொழில்'; (குறள் : 549); 'கொலேயிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களேகட் டதனெடு நேர்'; (குறள் : 550); 'தக்காங்கு நாடித் தலைச் செல்லா வண்ணத்தா லொத்தாங் கொறுப்பது வேந்து': (குறள். 561); 'கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன், அடுமுரண் தேய்க்கு மரம்'; (குறள். 567) என்ற குறட்பாக்களும் அவற்றிற்குப் பரிமேலழகர் வரைந்துள்ள விசேடவுரைகளும் இங்கே அறியத்தக்கன.

நாயகன் அல்லன் என்ற உண்மையை மறைத்துத் தாய் என மற்ருெரு தன்மையை ஏற்றிக் கூறியது ஒழிப்பணியின் பாற்படும்; 'ஈன்ருளு மாயென்க் கப்பனுமாய்' (தேவா - தல 1011) 'மிகுதலும் குறைதலும் தாழ்தலு முயர்தலும் பால் மாறுபடுதலும் பாகுபாடுடைய' என்றலின், ஆண்பாற்குப் பெண்பாலுவமையாயிற்று; மன்னனேயும் கடவுளேயும் தாயெனக் கூறுதல் மரபு; 'தாயொக்கும் அன்பில்' (பால: அரசியற் 4). 'தாயென வுயிர்க்கு, நல்கி (348). 'அம்மையே யப்பா' (திருவாச. பிடித்த 3). 'அப்பனீ யம்மைநீ' (தேவா. 1228). நாயகன் நல்லன் என்று பிரித்தும் பொருள் கூறலாம்; கண்டேனல்லேன் என்ற இடத்துப்போல. இனிது பேணித்தாங்குதி என்ற பாடத்துக்குத் தாயென்று குடிகள் கருதும்படி அவர்களே இனிது காத்தருள்வாயாக என்க. தீயன வந்தபோது சுடுதல்; ஒப்பு. 'நோயொக்கு மென்னின் மருந்தொக்கும்' (பால. அரசியற். 4.)

பி - ம். 1. நாயக னப்ப னெம்மை; ஞாயிறின் சிறுவா நம்மை; னிபயந் தெடுத்தாற்.

2. தாயென் வினிது பேணுதி; தாயர் போலினிது பேணித் தாங்குதி தரணி யோரை; தாங்கு வோரை.

3. யாவது தன்மை யென்னு மறத்திற மகலா வண்ணம்; யாயது நன்மை என்னு மறவரம்பு, மறைவரம் பிகழா, அறத்திற மகலா வண்ணம்.

4. தீயபேர் கண்ட போது, தீயன வந்த போதே, போழ்தே, சுடுதியாற் றீய்மை யோரை. (13)

413. இறத்தலும் பிறத்த ருனு
மென்பன விரண்டும் யாண்டும்
திறத்துளி நோக்கிற் செய்த
வினைதரத் தெரிந்த வன்றே
புறத்தினி யுரைப்ப தென்னே
பூவின்மேற் புனிதற் கேனும்
அறத்தின திறுதி வாழ்நாட்
கிறுதியஃ துறுதி யன்ப.

'அன்ப - அன்பனே! திறத்து உளி நோக்கின் - செம்மையாகப் பார்க்குமிடத்து, இறத்தலும் பிறத்தல் தானும் என்பன இரண்டும் - சாதலும் பிறத்தலும் என்று கூறப்படும் இரண்டும், யாண்டும் - எக்காலத்தும் அல்லது எவ்விடத்தும், செய்த வினைதர தெரிந்த அன்றே - (உயிர்கள்) புரிந்த கருமங்கள் கூட்ட விளைவன அன்றோ? பூவின்மேல் புனிதற்கு ஏனும் - (திருமாலின்) உந்தித்தாமரை மேல் தோன்றிய தூய பண்புகளையுடைய (படைத்தற் கடவுளாகிய) பிரமனுக்கேயாயினும், அறத்தினது இறுதி - தருமத்தினின்று ஒழிவு, வாழ் நாட்கு இறுதி - ஆயுள் முடிவிற்குக் காரணமாம்; அஃது உறுதி - அது நிச்சயம்; (ஆதலின்), இனி புறத்து உரைப்பது என்னே - வேறுகக்கூற வேண்டுவது யாது? (யாதொன்றுமில்லை).

உளி என்பது மூன்றும் வேற்றுமைப் பொருள் படுவதோரிடைச் சொல்; 'இயல்புளி' (குறள். 545) என்ற விடத்துப்போல. இறத்தலும்... தெரிந்தவன்றே; ஒப்பு. 375; 'சாதலும் பிறத்த ருனும் தம்வினைப் பயத்தி ஞகும்; (சீவக: 269) 'வினைப்போகமே யொருதேகம் கண்டாய் வினைதா னெழிந்தால், தினைப் போதளவு நில்லாது கண்டாய்'; (பட்டினத். பொது: 7 'அருடருந் திறத்தற னன்றி வலியதுண் டாமோ (ஆரணிய. 449); 'அறத்தினூங் காக்கமுமில்லை யதனை, மறத்தலினூங் கில்லை கேடு' (குறள். 32) என்ற பகுதிகள் இங்கே நோக்கத்தக்கன. 'அ∴தறிதி' என்றும் பாடம் 'அறத்தினிறுதி வாழ்நாட் கிறுதி அ∴துறுதி' என்ற அரும்பிரயோகம் குறிக்கற்பாலது. 'ஆக்கமுங் கேடும்' என்ற தொடர் திருக்குறளிலும் காணலாம். (642).

பி - ம். 1. மாமென, மென்பவை, விரண்டும்மாயுற, விரண்டும் மாண்டு; மென்பின்.

2. திறத்துழி நோக்கிச் செய்த வினயத்திற், வினயத்தாற் றெரிந்த, றெரித்த வாறே, - திறத்துளி. வினையென வினயத்தி றுரைப்ப

தென்னே, தெரித்த, தெரிந்த, தெளிர்த்த, தெரிந்த தன்பற், தெளிந்த தன்றோ, நோக்கிற் செய் வினையும், வழிக்கிடந்த தன்றே.

3. பூமிசைப், கேயும்.

4. யறுதி யன்றே, யறுதியன்ப, தறுதி யம்மா ; அறத்தினைமறுதி யாணுட் குறுதியா மறிதி யன்ப. (14)

414. ஆக்கமுங் கேடுந் தாஞ்செ
யறத்தொடு பாவ மாய
போக்கிவே றுண்மை தேரார்
பொருவரும் புலமை நூலோர்
தாக்கின வொன்றே டொன்று
தருக்குறுஞ் செருவிற் றக்கோய்
பாக்கிய மன்றி யென்றும்
பாவத்தைப் பற்ற லாமோ.

தக்கோய் - தகுதி வாய்ந்தவனே ! ஒன்றோடு ஒன்று தாக்கின தருக்கு உறும் - (உயிர்கள்) ஒன்றோடொன்று மோதினவாய்ச் செருக் கடைதற்கிடமான, செருவில்-போரில், ஆக்கமும் கேடும் - செல்வமும் அதன் அழிவும், தாம் செய் அறத்தொடு பாவம் ஆய - அவ்வவ் வுயிர்கள் புரியும் புண்ணிய பாவங்களால் ஆவன ; போக்கி - அக்கார ணங்களை விடுத்து, வேறு உண்மை - பிறிது காரணம் இருத்தலை, பொருவு அரும் புலமை நூலோர் - ஒப்பற்ற நூல் அறிஞர், தேரார் - தெளியமாட்டார்; (ஆகவே), பாக்கியம் அன்றி-செல்வத்திற்குக் காரண மான நல்வினையைச் செய்வதன்றி, பாவத்தை - வறுமையை விளைக்கக் கூடிய தீச்செயலை, என்றும் - எக்காலத்தும், பற்றலாமோ-மேற்கொள்ள லாமோ ? (ஆகாது).

ஆக்கத்திற்குக் காரணம் அறம், அதன் அழிவுக்கு காரணம் பாவம்; ஆகவே ஆக்கம் தரும் அறத்தைக் கடைப்பிடித்தலே நலம். வறுமை யைத் தரும் பாவத்தைக் கைக்கொள்ளலாகாது என்பது கருத்து. 'அருடருந் திறத்தற னன்றி யாக்கமுண் டாமோ' (ஆரணிய. 449), ' அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை மறத்தலி னூங்கில்லை கேடு'; (குறள்.32); 'அறத்திறனாலே எய்தினை யன்றோ வதுநீயும், புறத்திறனாலே பின்னு மிழக்கப் புகுவாயோ'; (ஆரணிய. 733) 'ஏவலெவ் வுயிரும் செய்யச் செல்வநிற் கியைந்த வென்றால், பாவமோ முன்னீ செய்த தருமமோ தெரியப் பாராய்' (சுந்தர. 459); 'சிறப்பீனும் செல்வமு மீனும்

அறத்தினுங் காக்க மெவனோ வுயிர்க்கு' (குறள். 31) என்பன காண்க. ஆக்கம் - பொருள்; பாக்கியம் - புண்ணியம்.

பி - ம். 1. அறத்தொடும் பாவம்; மாயப்; பாவமீது.
2. நோக்கி; தேரார்; முனிவரும், முனிவரும்; பொருளுடைப் புலமை மிக்கோர், மேலோர்.
3. முருக்குவ செருவில்; தக்காய், தக்கோர்.
4. ஒன்றும், யொன்றும் அன்றிமற்றும், கொடுத்தச் சூழும், கெடுக்கச் சூழும். (15)

415. இன்னவை தகைமை யென்ப
வியல்புளி மரபி னெண்ணி
மன்னர சியற்றி யென்கண்
வருவழி மாரிக் காலம்
பின்னுற முறையி னுன்றன்
பெருங்கடற் சேனை யோடும்
துன்னுதி போதி யென்றான்
சுந்தர னவனுஞ் சொல்வான்.

'இன்னவை தகைமை என்ப - கீழே கூறிய இவை (மன்னர்க்குத்) தக்க முறைமையாமென்று (அறிஞர்) கூறுவர்; (ஆதலால்), இயல்பு உளி - (நூல்களிற் கூறிய) இயல்பின்படி, மரபின் எண்ணி - முறைப் படி ஆராய்ந்து, மன் அரசு இயற்றி - நிலைபேறுடைய அரசாட்சியை நடத்தி, மாரி காலம் பின் உற - மழைக்காலம் பிற்பட்டுப் போக (கழிய), என் கண் வருவழி - நீ என்னை நாடிவரும் போது, முறையின் - முறைப் படி, உன் தன் பெரு கடல் சேனையோடும் - உனது பெருமை வாய்ந்த கடல் போலப்பரந்த சேனையுடனே, துன்னுதி-வந்து சேர்தி; போதி இப்பொழுது செல்வாயாக' என்றான், சுந்தரன்-அழகனான இராமபிரான் (சுக்கிரீவனை நோக்கிக்) கூறினான்; (அது கேட்டு) அவனும் - அச்சுக்கிரீ வனும், சொல்வான் - கூறுவான். அவன் கூறுவதை அடுத்த இரண்டு செய்யுட்களிற் காண்க.

செய்யுட்கள் 405 - 415, இராமபிரான் சுக்கிரீவனுக்குக் கூறிய அறவுரைகளாம். இவற்றை அயோத்தியா காண்டத்தில் வசிட்டர் இராமபிரானுக்குக் கூறிய (மந்தரை சூழ்ச்சிப்: 17-22) உறுதிமொழிக ளொடும் ஒப்பு நோக்கிக் காண்க. இங்குக் கம்பநாடர் தாம் காட்டப் புகும் அறவுரைகளை அரசியற்குரியன, பொதுவாவன, ஆன்மத் தொடர்பமைந்தன என்ற முறையில் நிரல் படுத்தியுள்ளமை காணத்

தக்கது. இவ்வித அரசியல்தருமம் சுக்கிரீவன் முதலானோர்க்கு இராமபிரான் கூறியதாக முதனூலிற் காணப்படவில்லை. ஆவணி புரட்டாசி மாதங்கள் கார்காலம் என்பர். ஆயினும், ஆவணிக்கு முன்னரும் புரட்டாசியை அடுத்தும் கார்காலத் தொடர்புண்மைபற்றி, ஆடியாதி நான்கு மாதங்களையும் மாரிக்காலம் என்றே வழங்குவர்; அன்றியும் ஆடியும் புரட்டாசியும் போர்க்குரிய காலமல்லாமையால் அவற்றையும் கூட்டினர் என்பாரும் உளர். முதனூலிலும் இவ்வாறே கொள்ளப்பட்டது. இயல்புளி - உளி பகுதிப் பொருள் விகுதி; உங்கள் குல வழக்கின்படியும் எனினுமாம். முறையின் துன்னுதி என்பதற்கு, நீ உதவி புரியவேண்டிய முறையுணர்ந்து, வருக எனினுமாம்; முறையின் பின்னுறவெனக் கூட்டியுரைத்தலுமாம், சுந்தரன் சுந்தர. 197, பால. மிதிலைக், 39 ; உயுத்த : மருத்துப் : 107.

பி - ம். 1. இன்னது தன்மை யென்பதியல்புளி.
2. மருவுழி, வருவுழி என்பால் வருவது, என்பால் மருவுதி.
3. நின்றன், உன்றன் ; பின்னுறும் முறையின், படையிரோடும் பின்னுறின். 4. சொன்னான். (16)

நகர்க்கு வருமாறு சுக்கிரீவன் இராமபிரானை வேண்டுதல்

416. குரங்குறை யிருக்கை யென்னுங்
குற்றமே குற்ற மல்லால்
அரங்கெழில் துறக்க நாட்டுக்
கரசென லாகு மன்றே
மரங்கிள ரருவிக் குன்றின்
வள்ளனீ மனத்தி னெம்மை
இரங்கிய பணியாஞ் செய்ய
விருத்தியாற் சின்னா ளெம்பால்.

(சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), வள்ளல் - வண்மையோய்! (எங்கள் நகர்), குரங்கு உறை இருக்கை - குரங்குகள் தங்கும் இடமாகும், என்னும் - என்கின்ற, குற்றமே குற்றம் அல்லால் - குற்றம் ஒன்றையுடையதே யல்லாமல், எழில் அரங்கு துறக்கம் நாட்டுக்கு - அழகு பெற்றொளிரும் மேடையையுடைய (சுதன்மை என்ற சபா மண்டபத்தைக் கொண்ட) சுவர்க்க லோகத்தினும், அரசு எனல் ஆகும் - முதன்மை பெற்று விளங்குவது என்று கூறத்தக்கதாகும் ; (ஆதலால் எங்களுக்குரிய), மரம் கிளர் அருவி குன்றின் - மரங்கள் ஓங்கிவளரப் பெற்றதும், நீரருவிகளையுடையது மான மலையில், நீ - நீவிர், மனத்தின் எம்மை இரங்கிய பணி - திருவுள்

ளத்தில் எம்மிடம் இரக்கங்கொண்டு கட்டளையிடும் குற்றேவல்களை, யாம் செய்ய - நாங்கள் புரிய, சில் நாள் எம்பால் இருத்தி - சில தினங்கள் எம்முடன் இருப்பீராக! ஆல், அன்று, ஏ : அசைகள்.

வள்ளல்; அண்மைவிளி; இழந்த மனைவியையும் அரசினையும் தனக்கு அளித்தது கருதிக் கூறியது. இராமபிரானை வள்ளல் என்றது; உயுத்த. ஒற்றுக். 28; முதற்போர் - 256. அரங்கு - நாட்டிய சாலையும் சபையுமாம். மரம் கிளர் அருவி குன்றில் - மரங்கள் ஊடே கிளர்ந்து செல்லும் அருவிகள் நிறைந்த மலையில் எனினுமாம். கிளர்தல் - மேலெழுதல். சுதன்மம - தேவேந்திரன் சபாமண்டபம்.

பி - ம். 1. அரண்செழு, அரங்குறு தறக்க, நாட்டுக் கருகென.
2. கருகெனலாய தன்றே, லாகு மன்றே, நாட்டுக் காசென லகைமந்த தன்றே, ஆயதன்றே.
3. குன்றில், வள்ளியோய், வழங்கு மேவற்.
4. பணியா மெய்த, பயனியா மெய்தச், சிலநாள் எய்தி. (17)

417. அரிந்தம நின்னை யண்மி
யருளுக்கு முரியே மாகிப்
பிரிந்துவே றெய்துஞ் செல்வம்
வெறுமையிற் பிறிதன் றாமால்
கருந்தடங் கண்ணி னாளை
நாடலாங் காலங் காறும்
இருந்தரு டருதி யெம்மோ
டென்றடி யிணையின் வீழ்ந்தான்.

'அரிந்தம - பகைவர்களை யழிப்பவனே! நின்னை அண்மி (நாங்கள்) உன்னைப் புகலடைந்து, அருளுக்கும் உரியேம் ஆகி - உனது கருணைக்கும் பாத்திரராயிருந்து, பிரிந்து - உன்னை விட்டுப் பிரிந்து, வேறு எய்தும் - தனியே அடைந்து துய்க்கின்ற, செல்வம் - செல்வமானது, வெறுமையில் பிறிது அன்று ஆம் - இல்லாமையினும் வேறாகாது; (ஆதலின்), கரு தடம் கண்ணினாளை - கரிய பெரிய கண்களையுடைய பிராட்டியை, நாடல் ஆம் காலம் காறும் - தேடுதற்கேற்ற காலம் வருமளவும், எம்மோடு இருந்து அருள் தருதி - (நீவிர்) கிட்கிந்தா நகரத்துள் எங்களுடன் தங்கி அருள்புரிவீராக', என்று - என்று கூறி, அடி இணையின் வீழ்ந்தான் - (இராமபிரானுடைய) தாளிணைகளில் விழுந்து வணங்கினான் (சுக்கிரீவன்). ஆல் : அசை.

அரிந்தம, என விளித்தது வாலியைக்கொன்றது பற்றி; உயுத்த. இராவணன் வதைப் : 4 ; மருத்து : 21. அண்மி - அண்மு பகுதி. காறு - அளவு. வெறுமையிற் பிறிதொன்ருமோ - அடைந்தும் அடையாதது போலாம் ; 'இன்மையு ளின்மை விருந்தொரால்'; (குறள். 153) என்ற குறட்பாவும், 'அறனல்லாத விருந்தொரால் பொருளுடைமை யாகாது' என்ற பரிமேலழகர் உரையும் இங்கே காணத்தகும்.

பி - ம். 1. அகுளினுக் குரிய ராகி, அருளுறு முரிய ராகி அண்மிப் பணி செய்யு, நின்னை யன்றி.
2. பிறிதென் ருமோ, பிறிதொன் ருமால், பிறிதொன் ருமே; யிருந்தி யாஞ் செல்வத் தெய்தல்; பெரும்பழிப் பிணக்குண் டாமால்; வறுமையிற் பிறிதன்று. 3. தேடற்காங் காலங் காறும்.
4. யெம்மா டென்றடி. (18)

அவ்வேண்டுகோளை இராமபிரான் காரணங்காட்டி மறுத்தல்

418. ஏந்தலு மிதனைக் கேளா
வின்னிள முறுவ னுற
வேந்தமை யிருக்கை யெம்போல்
விரதியர் விழைதற் கொவ்வா
போந்தவ ணிருப்பி னெம்மைப்
போற்றவே பொழுது போமால்
தேர்ந்தினி தியற்று முன்ற
னரசியற் றருமந் தீர்தி.

ஏந்தலும் - அரசனுன இராமபிரானும், இதனை கேளா - இவ்வுரையைக் கேட்டு, இன் இள முறுவல் நாற - இனிய புன்னகை தோன்ற, (சுக்கிரீவனை நோக்கி), 'வேந்து அமை இருக்கை - அரசர்க்குரிய அரண்மனையில் வசித்தல், எம்போல் விரதியர் - எம்மைப்போன்ற தவவிரதம் பூண்டவர்க்கு, விழைதற்கு ஒவ்வா-விரும்பத்தகாததாகும் ; (அன்றியும்), அவண் போந்து இருப்பின் - அவ்விடத்தில் (கிட்கிந்தை நகருள்) நாங்கள் வந்து வசித்தால், எம்மை போற்றவே பொழுது போம் - எம்மை வழிபடுவதிலேயே (உன்) காலம் கழியும் : ஆல் - ஆதலால், தேர்ந்து இனிது இயற்றும் உன் தன் அரசியல் தருமம் - ஆராய்ந்து இனிது நடத்தும் உன் அரசாட்சியின் முறைமையினின்றும், தீர்தி-நீங்கினவன் ஆவாய்.

இது முதல் 423 முடிய ஒரு தொடராய் 423-இல் உள்ள 'என்றான்' என்றதுடன் வினை முடிவு கொள்ளும்.

ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன்; இராமபிரான். வேந்து அமை இருக்கை - வேந்தர்களுக்கு அமைந்த இருப்பிடம்; அரண்மனை. விரதியர் - இங்கு, வானப்பிரத்தர். முறுவல் - அன்புபற்றியெழுந்தது. கேளா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நாற - தோன்ற; 'நெற்றியிற் கற்றை நாற', (அயோத், நகர்நீங்கு: 116) 'அருமணி மரகதத் தங்க ணூறிய', (சீவக. 183); மற்றும் (ஆரணிய. 713); பெருங். 2 : 11, 51. தேர்ந்தினி தியற்றும்; 'தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க் கரும்பொருள் யாதொன்று மில்'; (குறள். 462.)

பி - ம். 1. மதனைக்; விளரிலா; முறுவ ரேன்ற, முறுவலெய்தி.
2. வேந்தரி ருக்கை, வேந்தர்கள் விழைதற் கொவ்வா.
3. போந்தினி திருப்பின் போது போமால், காலம் போமால்.
4. சேர்ந்தனை நினைக்கு, நின்ற னரசியல், சேர்ந்துட னிருக்கி னுன்றன், சேர்ந்துட னிருக்கின் முன்ப. (19)

419. ஏழிரண் டாண்டி யான்போந்
தெரிவனத் திருக்க வேன்றேன்
வாழியா யரசா வைகும்
வளநகர் வைக லொல்லேன்
பாழியந் தடந்தோள் வீர
பார்க்கிலை போலு மன்றே
யாழிசை மொழியோ டன்றி
யானுறு மின்ப மென்னே.

'வாழியாய் - வாழ்வையுடையவனே! ஏழ் இரண்டு ஆண்டு - பதினான்கு வருடகாலம், யான் போந்து எரிவனத்து இருக்க - நான் சென்று வெம்மை மிக்க காட்டில் உறைவதாக, ஏன்றேன்-ஏற்றுக்கொண்டேன்; (ஆதலால் அந்தக் கால வெல்லைக்குள்), அரசர் வைகும் வளநகர் வைகல் ஒல்லேன் - மன்னர் வசித்தற்குரிய செல்வவளம் வாய்ந்த நகரில் தங்குதற்கு உடன்படேன்; (மேலும்), பாழி அம் தடதோள் வீர - வலிமை வாய்ந்த அழகிய பெரிய புயங்களையுடைய வீரனே! யாழ் இசை மொழியோடு அன்றி - யாழின் இசைபோலும் சொல்லையுடைய சீதையோடு அல்லாமல், யான் உறும் இன்பம் என்னே - யான்

(தனியே) அடையும் இன்பம் என்ன பயனுடைத்து? பார்க்கிலேபோலும்- இதனை நீ எண்ணிப் பார்த்திலேபோலும்! அன்று, ஏ: அசைகள்.

வாலி மடிந்த பின்பு கிட்கிந்தை நகர்க்கு எழுந்தருளிச் சுக்கிரீவனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று விண்ணப்பித்த அநுமனிடம், இராகவன் 'என் தந்தையின் கட்டளைப்படி ஏழிரண்டாண்டுகள் காட்டிலேயே உறைதல் வேண்டும்; நகருட் புகுதல் தகாது' என்று கூறிச் சுக்கிரீவன் முடிசூட்டு விழாவைக் கிட்கிந்தை நகரில் நடத்துமாறு கூறினன். இச்செய்தி வான்மீகத்திலும் கூறப்பெற்றுள்ளது.

பிராட்டியின் சொல்லுக்கு யாழ்; 'குறிநரம் பெறிவுற் றெழுவு தண்டமிழ் யாழினுமினிய சொற்கிளியே' (அயோத். சித்திரகூடப்; 30) 'குழலும் யாழும் கொழும்பாகும், அயிரு மமுதும் சுவைநீத்த மொழி' (ஆரணிய. 1058), நகர் - அரசன் அரண்மனையுமாம்; நகர் - மனை, 'நீணகர் நிறையாற்றுன்' (கலித். நெய்தல். 9, 14). பாழி - வலிமை, 'பாழிய பணைத்தோள் வீர'; (சுந்தர. 561). எரிவனம் - கதிரவன் கடுமையால் தீப்போற் சுடுகின்ற காடு.

பி-ம். 1. யாண்டுங் கானத் தெய்தவ னெனுஞ்சொ லுள்ளேன்; டாண்டு நான்; சென்றேன், வென்றேன்.

2. வாழு மாநகரிருக்க மாட்டேன்; யரசின், வைகும், யாழும்; வளர் நகர், வைக மாட்டேன், யரசின் வைகு மாநகர் வைக மாட்டேன்.

3. பாழியம் புயத்த விர; பார்த்திலை, போறு மன்னே,

4. மொழியா ளின்றி, மொழியோ டின்றி; யானுய்க்கும். (20)

420. தேவிவே றரக்கன் வைத்த
சிறையினு ளிருப்பத் தான்றன்
ஆவியந் துணைவ னோடு
மளவிடற் கரிய வின்பம்
மேவின னிராம னென்று
லையவிவ் வெய்ய மாற்றம்
மூவகை யுலக முற்றுங்
காலத்து முற்ற வற்றோ.

"ஐய - ஐயனே! தேவி - என் மனைவியானவள், வேறு - தனித்து, அரக்கன் வைத்த சிறையினுள் இருப்ப - இராவணன் கொண்டு வைத்த

காவலகத்தின் உள்ளேயிருக்க, இராமன்-இராமபிரான், தான்-தான், தன் ஆவி அம் துணைவனோடும் - தனதுயிர் என்று சொல்லும் அழகிய நண்பனுடனே, அளவிடற்கு அரிய இன்பம் - மதிப்பிடற்கரிய இன்பத்தினை, மேவினான் - விரும்பினான்' என்றால் - என்று மக்கள் கூறநேர்ந்தால், இ வெய்ய மாற்றம் - இந்தக் கடுமையான சொல், மூவகை உலகம் முற்றும் காலத்தும் - (மேல் கீழ் நடு) என்ற மூவகைப்பட்ட உலகங்களும் அழியுங்காலத்திலும், முற்றவற்றோ - முடியவல்ல தாகுமோ? (உலகம் அழிந்தாலும் இப்பழிச் சொல் அழியாது என்றபடி.)

உலகம் முற்றும் காலம் - ஊழிமுடிவு. கீழ்ச்செய்யுளில் யாழிசை மொழியோ டன்றி யானுறு மின்ப மென்னோ, என்பதனை ஒட்டி மனைவி அரக்கன் சிறைக்காவலிலிருப்ப, இராமன்தனித்துப் போகங்களைவிழைந்தான் என்று உலகம் கூறும் பழிச்சொற்கு அஞ்சினான் இராமபிரான் என்க. மேவுதல் - விரும்புதல், 'மேவன செய்தொழுகலான்;' (குறள். 1073). உலக அபவாதத்தை இராமபிரான் அஞ்சுதலுக்கு இஃதோர் எடுத்துக் காட்டு. பின்னர் உத்தர காண்டத்தில் வண்ணான் பேசியது கேட்டுப் பிராட்டியை வனத்துய்த்ததும் காண்க. (உயுத்த. சீதை வனம்புகு : 34.)

பி - ம். 2. சிறையிடை யிருப்ப, ளிருக்க, ளிருப்ப, சேமத்து ளிருக்கத், தேயத்து ளிருக்க.
2. ஆவியாந் துணை, ஆவிபோற், அளவிடற் குரிய வின்பம்.
3. அவ்வெய்ய. 4. முற்ற லாமோ, முடிய வற்றோ. (21)

421. இல்லறந் துறந்தி லாதோ
ரியற்கையை யிழந்து போரின்
வில்லறந் துறந்து வாழ
வெள்கினென் மேன்மை யல்லாச்
சில்லறம் புரிந்து நின்ற
தீமைக டீரு மாறு
நல்லறந் தொடர்ந்த நோன்பி
னவையற நோற்ப னாளும்.

'இல் அறம் துறந்திலாதோர் இயற்கையை இழந்து - மனைவாழ்க்கையைக் கைவிடாதவர்களுடைய இயல்பினைக் கைவிட்டு, போரின் வில் அறம் துறந்து - போரில் விற்பிடித்தியற்றும் முறைமையும் தவிர்ந்து, வாழ வெள்கினென் - வாழ்வதற்கு நாணுகின்றேன்; மேன்மையல்லா - மேம்பட்டனவல்லாத, சில் அறம் - சிறுமைப்பட்ட

ஒழுக்கங்களை, புரிந்துநின்ற தீமைகள் தீரும் ஆறு - செய்துநின்ற கேடுகள் அகலும்படி, நல்அறம் தொடர்ந்த நோன்பின்-நல்லொழுக்கத்துடன் தொடர்புகொண்டு விளங்குவதாகிய விரதத்தில் நின்று, நாளும் - தினந்தோறும், நவை அற நோற்பல் - குற்றம் நீங்கத் தவம் புரிவேன்.

தனது இல்லக் கிழத்தியைக் காவாது கைவிட்டமையின் இல்லற தருமத்தினின்றும் வழுவியதாகக் கூறினான். மனைவியைக் கவர்ந்து சென்றவனை ஒழித்து அவளை மீட்காமல் உயிர் வாழ்தல் பற்றி வில்லறம் துறந்ததாகக் கூறினான். வில்லறம் - விற்கொண்டு செய்யும் போர் முறை. 'தயாவெனுமீரம் தானகத்தில்லை யென்றாலும் தன், வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்'; (சுந்தர. 636); 'சொல்லினாற் சுடுவேன் அவன் வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்'; (சுந்தர.624) என்று பிராட்டி கூறிய சொற்களிலிருந்து அரசர் வழிப்போந்தார்க்கு வீரத்தைக் காப்பது கடமை என்பதும், காவாதொழிதல் இழிவுமாம் என்பதும் பெறப்படும்.

'இல்லறத்தில் வாழ்வேனென்கிற உலகத்தார், இப்படி வாழ்கிறானென்று இப்போது சொல்லும்படி முன்செய்த சிறியதனம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. எதிர்ந்த போரின், எதிர்ந்த போரின், யெதிர்ந்த போரின்; இல்லறந் துறந்தும் வாழ்வே மென்கின்ற மெய்ம் மையில்லா, இல்லறந் துறந்தி லாதோம்; யெதிர்ந் தேனுகி யிழிந்தும் போரில்; மெய்ம்மை வில்லார், வில்லறந் துறந்து வாழ்ந்தே மென்கின்ற மென்மை; விளிவில்வீர.

3. சில்லறம் புரிந்து நின்று தீமையுங் கடிந்து, மற்ற, சில்லறமழிய மன்னு விதித்தனன் தீமை தீர.

4. நல்லறந் துறந்த நோன்பை, நோற்பென், துறந்த நோன்பி னேற்பல் நாளும். (22)

**422.** அரசியற் குரிய யாவு
மாற்றுழி யாற்றி யான்ற
கரைசெயற் கரிய சேனைக்
கடலொடுந் திங்க ளான்கின்
வீரசுவ தென்பா னின்னை
வேண்டினென் வீர வென்றான்
உரைசெயற் கெளிது மாகி
யரிதுமா மொழுக்கி னின்றான்.

உரை செயற்கு எளிதும் ஆகி அரிதும் ஆம் - சொல்லுதற்கெளிதாகிக் கடைப்பிடித்தற் கரியதாகவுள்ள, ஒழுக்கில் - நல்லொழுக்கத்தில், நின்ருன் - (தளராது) நிலை நிற்பவனுன இராமபிரான் (சுக்கிரீவனை நோக்கி), 'வீர - வீரனே! அரசு இயற்கு உரிய யாவும் - அரசாட்சிக்கு வேண்டிய அனைத்தும், ஆற்றுழி ஆற்றி - செய்யவேண்டியபடி செய்து, ஆன்ற - பெரிய, கரை செயற்கு அரிய - 'அளவிட்டறிதற் கருமையான, சேனை கடலொடும் - கடல்போற் (பரந்த) சேனையுடனே, திங்கள் நான்கில் - நான்கு மாதங்கள் கழிந்த அளவில், என்பால் - என்னிடம், விரசுக - வந்து கூடுவாயாக: நின்னை வேண்டினென் - (இஃது) உன்னை விரும்பிக் கேட்கின்றேன்' என்ருன் - என்று சொன்ருன்.

ஒழுக்கம் சொல்லுதற் கெளிது, அனுட்டித்தல் எளிதன்று; 'சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம், சொல்லிய வண்ணம் செயல்' (குறள். 664). திங்கள் நான்கின் - 'ஏயானிருந்தானிடை திங்களிரண்டிரண்டும்' (சுந்தர. 581). கடல் - பெருமையைக் குறிப்பது.

பி - ம். 1. *யாற்றவு மாற்றி, திரை செயற்குரிய.* 2. *திங்க ளுவில்.*

3. *விரைசுவ தென்பா லுன்னை, விரைகுவ தென்பா லுன்னை, வேண்டி னனின்னை யென்ருன்.*

4. *உரை செய்தற் கெளியனுகி யரியமா னெழுக் கினின்ருன், கரிதுமாகி யெளிதுமா யுவந்து நின்ருன்.* (23)

சுக்கிரீவன் நகர்க் கேகல்

423. மறித்தொரு மாற்றங் கூருன்
வானுயர் தோற்றத் தன்னுன்
குறிப்பறிந் தொழுகன் மாதோ
கோதில ராத லென்னு
நெறிப்படர் கண்கள் பொங்கி
நீர்வர நெடிது தாழ்ந்து
பொறிப்பருந் துன்ப முன்னுக்
கவிக்குலத் தரசன் போனுன்.

(அம்மொழிகளைக் கேட்டு), கவிகுலத்து அரசன் - குரங்குகளின் கூட்டத்திற்குத் தலைவனுன சுக்கிரீவன், மறித்து ஒரு மாற்றம் கூருன் - தடுத்து ஒரு வார்த்தையும் பேசவியலாதவனுய், வான் உயர் தோற்றத்து

அன்னுன் குறிப்பு அறிந்து-மிகவுயர்ந்த தவ வடிவையுடைய அந்த இராம பிரானது நினைவையுணர்ந்து, ஒழுகல் - அதன்படி ஒழுகுவதே, கோது இலர் ஆதல் என்ன - குற்றமற்றவர் ஆவதற்குப் பொருந்தும் நெறி என்று, படர் கண்கள் நீர் பொங்கி நெறிவர - பரந்த விழிகளில் நீர் நிறைந்து முறையாக ஒழுக, நெடிது தாழ்ந்து - நெடுஞ்சாண் கடையாக வீழ்ந்து வணங்கி, பொறிப்பு அரு துன்பம் உன்ன - கணக்கிட முடியாத துயர்தனை உள்ளத்திற்கொண்டு, போனுன் - கிட்கிந்தா நகர் நோக்கிச் சென்றுன். மாது, ஒ - அசைகள்.

மறுமாற்றம் கூருது, நகர் நோக்கி எழுந்தான் சுக்கிரீவன் என்ருர். குறிப்பறிந்தொழுகலே அறிஞர் கடன் ஆதலின், 'பணிமொழி கடவாதான்... விடைகொண்டான்' என்ருன். குகனை இத்தகையதொரு நிலையில் ஆசிரியர் கூறியதும், (அயோத். குகப் : 45.) இங்கு நினைத் தற்குரியது. குறிப்பறிதல் மிகவும் சிறந்த பண்பு என்பது, திருவள்ளுவர் அதற்கென்றே ஓர் அதிகாரம் வகுத்தமை கொண்டு பெறப்படும். குறிப்பறிய மாட்டாதவ னன்மரம்' (ஔவை) ; 'இங்கிதஞ்ஞா ; கோஸ லாஸ்து' என்றமை காண்க. 'கொண்டான் குறிப்பறிவாள் பெண் டாட்டி' (திரிகடு. 96) ; 'கொண்கன் நினைப்பறிந்தொழுகு நீராள்' (குசேலோ. குசேலர் மேற்' கடல் : 60). 'வானுயர் தோற்றம்' (குறள். 272) என்பதற்கு, 'வான்போலுயர்ந்த தவவேடம்' என்பர் பரிமே லழகர். 'வானினு முயர்ந்த மானக் கொற்றவ' 354. பொறிப்பு அரு துயரம்; சீதையைப் பிரிந்து வருந்திய இராமபிரானது வருத்த நிலை, அதனைக்கண்டு சுக்கிரீவன் கண்ணீர் விடுத்தான் என்க. இராமபிரானைப் பிரிவதனுலாகிய வருத்தமுமாம். மறித்தல் - தடுத்தல்; 'மறு பிறப்போட மறித்திடுமே' (திருவாச. 36, 2). நெடிது தாழ்தல் - எட்டுறுப்புக்களும் பூமியிற் படும்படி வீழ்ந்து வணங்கல் ; இதனைச் சாஷ்டாங்க நமஸ் காரம் என்பர். துன்பம் முன்ன; என்பதற்குத் துன்பத்தினை முன்னிட்டுக் கொண்டு என்றுமாம்; முன்னுக என்பதன் ஈறு குறைந்தது. கவிக் குலம் - குரங்கின் கால்வழியுமாம். முன்னுதல் - கருதுதல் என்னலும் பொருந்தும்.

பி - ம். 1. *கொற்றத் தன்னுன், தோற்றத்.*

2. *ராதன் முன்ன ; கோதிலராத லென்னே, கோதிலனுத லென்ரு தொழுகி யன்றே.*

3. *சென்றுன்.*

4. *துன்பு முன்பாய், முன்பாக், துன்பத் தோமே,*

இராமபிரான் அங்கதனுக்குக் கூறியது

424. வாலிகா தலனு மாண்டு
மலரடி வணங்கி னானை
நீலமா மேக மன்ன
நெடியவ னருளி னோக்கிச்
சீலநீ யுடையை யாத
லிவன்சிறு தாதை யென்னா
மூலமே தந்த நுந்தை
யாமென முறையி னிற்றி.

மலர் அடிவணங்கினான் - (அப்பொழுது) தன் தாமரை மலர் போன்ற பாதங்களிற் பணிந்தவனாகிய, வாலி காதலனும் - வாலியின் மகனான அங்கதனையும், ஆண்டு - அவ்விடத்தில், நீலம் மா மேகம் அன்ன நெடியவன் - நீல நிறம் வாய்ந்த சிறந்த மேகத்தை ஒத்த பெரியோனான இராமபிரான், அருளின் நோக்கி - கருணையுடன் கடைக்கணித்து, ' நீ சீலம் உடையை - நீ தூய ஒழுக்கம் உடையவன், ஆதல்- ஆகுக ; இவன் - இந்தச் சுக்கிரீவனை, சிறுதாதை என்னா - உன் சிறிய தந்தை என்று எண்ணாமல், மூலமே தந்த நுந்தை ஆம் என - உன் பிறப்பிற்குக் காரணமான உன்னைப் பெற்ற தந்தையாகவே (மனத்துட்) கொண்டு, முறையின் நிற்றி - (தந்தை தனயன் என்ற) உறவு முறையில் நிற்பாயாக !'

இச்செய்யுள் அடுத்த செய்யுளிலுள்ள 'என்றான்' என்பதனோடு இயையும். வணங்கினான் வாலி காதலனையும் என உருபு பிரித்துக் கூட்டுக. காதலன் - புதல்வன்; ' எரிகதிர்க் காதலன் ' 211. ஆண்டு- அப்பொழுது எனினுமாம். நீல மேகத்தை இராமபிரானுக்குப் பல விடங்களிலும் உவமையாகக் கூறுவர் ஆசிரியர். நெடியவன் - நெடுமை, பெருமை மேற்று ; மாவலியின் பொருட்டு நீண்டவனுமாம். தாதை - தாத என்ற வடசொல் ஐயீறு பெற்றது. ஆதல் என்பதற்கு ஆதலால், என்றும் பொருள்கூறலாம். மூலமே தந்த நுந்தை - ஜனகபிதா; இது சுமித்திரை இளைய பெருமானுக்கு உபதேசித்தனுப்பியதை ஒருவாறு ஒக்கும். மேகம் என்றதற்கேற்ப அருளினோக்கினன் என்றார்.

பா-ம். 1. மீண்டு ; வணங்கா முன்னம்.
2. மேகம் போலும், மேருவன்ன ; னெடியவ னெடிது நோக்கி.
3. யுடைமை யன்றே, யுடைமை யாமில், உடைமை யாவி.
4. மூல மேதானத் தந்தை, தந்த வுந்தை; முன்னி நிற்பாய். (25)

இராமபிரான் அங்கதனுக்கும் அநுமனுக்கும் விடையளித்தல்

425. என்னமற் றினைய கூறி
யேகவற் ருெடர வென்ருன்
பொன்னடி வணங்கி மற்றப்
புகழுடைக் குரிசில் போனுன்
பின்னர்மா ருதியை நோக்கிப்
பேரெழில் வீர நீயும்
அன்னவ னரசுக் கேற்ற
தாற்றுதி யறிவி னென்ருன்.

என்ன மற்று இனைய கூறி - என்று மேலும் இத்தன்மையவான வார்த்தைகளைச் சொல்லி, 'அவன் தொடர ஏகு என்ருன் - அச்சுக்கிரீவ வனுடன் கூடச்செல்க', என்று கூறினுன்; மற்று - அதன்பின், அ புகழ் உடை குரிசில் - அந்தக் கீர்த்தி வாய்ந்த பெருந்தகையான் ஆன அங்கதன், பொன் அடி வணங்கி - (இராமபிரானுடைய) அழகிய பொன் போன்ற பாதங்களில் வணங்கி, போனுன் - கிட்கிந்தை நகர்க்குட் சென்ருன்; (இராமபிரானும்), மாருதியை நோக்கி - அநுமனைப்பார்த்து, பின்னர் - பிறகு, 'பேர் எழில் வீர - மிக்க அழகையுடைய வீரனே! நீயும்-நீயும் சென்று, அன்னவன் அரசுக்கு ஏற்றது-அச்சுக்கிரீவனுடைய அரசியற்கு வேண்டிய மந்திரத் தொழில்களை, அறிவின் ஆற்றுதி - (உனது) மதிநுட்பத்தால் செய்து வருவாயாக!' என்ருன் - என்று கூறினுன்.

அ - பண்டறிசுட்டு. பேரெழில் வீர என்றது அநுமனை. அநுமனுக்குச் சுந்தரன் என்ற ஒரு பெயருண்டு. உருவ எழில் மட்டுமன்றி உயிர்ப்பண்பாகிய வீரமும் உடையவன் என்றவாறு.

பி - ம். 1. யேகனுக், ருெடர்க வென்ருன், யேகமற் ருெடர வென்ருன்.

3. பின்னை மாருதியை.

4. அன்னவ னரசிற் கேற்ற வாற்றுதி. கேற்றி தாற்றுதி போயச் சென்ருன்.

அநுமன் வேண்டுகோளும் இராமபிரான் அதற்கு உடன்படாமையும்

426. பொய்த்தலி லுள்ளத் தன்பு
பொழிகின்ற புணர்ச்சி யானும்
இத்தலை யிருந்து நாயே
னேயின வெனக்குத் தக்க
கைத்தொழில் செய்வெ னென்று
கழலிணை வணங்குங் காலை
மெய்த்தலை நின்ற வீர
னிவ்வுரை விளம்ப லுற்றான்.

பொய்த்தல் இல் - பொய் கருதுதல் இல்லாத, உள்ளத்து - மனத்தில், அன்பு பொழிகின்ற புணர்ச்சியானும் - அன்பு (மிகுதியாகச்) சொரிகின்ற சேர்க்கையனுகிய அநுமனும், (இராமபிரானை நோக்கி), 'நாயேன் - அடியேன், இ தலை இருந்து - இவ்விடத்திலேயே தங்கி, ஏயின-உம்மால் கட்டளையிடப்படுவனவும், எனக்குத்தக்க - என் ஆற்றலுக்கு ஏற்றனவுமான, கைத்தொழில் - குற்றேவல்களை, செய்வென் - செய்வேன்' என்று - என்று கூறி, கழல் இணை வணங்கும் காலை - அப்பெருமானுடைய அடியிணையில் வீழ்ந்து பணிந்தபோது, மெய்தலை நின்ற வீரன் - சத்தியத்தில் ஊன்றி நின்ற வீரனான இராமபிரான், இ உரை விளம்பல் உற்றான் - பின்வரும் இந்த வார்த்தைகளைக் கூறலானான். அவற்றை யடுத்துவரும் இரண்டு கவிகளிற் காணலாம்.

பொய்கருதாமை, அன்புடைமை என்ற அநுமன்றன் சிறப்பியல்கள் இங்கே குறிக்கப்பட்டன; 'நீதியினின்றீர் வாய்மை யமைந்தீர்' (990), 'சொல்லுதி மெய்ம்மை தொடர்ந்தோய்' (சுந்தர. 684); 'அண்ணல் மைந்தற்கன்பு செறிந்தீர், (991). நாயேன் என்றதனால் அடிமைத்தன்மையும், ஏயினசெய்வேன் என்றதனால் ஏவல் மருமையும், எனக்குத் தக்க கைத்தொழில் என்றமையின், தருக்கு நீங்கிய பணிவும் கூறப்பட்டன. 'ஏவக்கடவ பணி செய்வேன்' (சுந்தர. 602), என்று அநுமன் தன் நிலையைப் பிராட்டியிடம் பின் கூறுவதுங்காண்க; 'ஆண்டா னடிமைத் தொழி லாற்றலி னுற்றலுண்டே' [சுந்தர. 62.] என்பது அநுமன் கூற்று. கைத்தொழில் - குற்றேவல் ; கை - சிறுமை; 'கைஞ்ஞானம் கொண்டொழுகும் காரறிவாளர் ;' (நாலடி. 311) ; கைக்கிளை என்ற இடத்தும் கை, என்பது சிறியதென்று பொருள்படுதல் காண்க. மெய்த்தலை நின்ற என்பதற்குச் சத்தியத்தை முக்கிய இடமாகக்கொண்டு நின்ற

என்றும் கொள்ளலாம்: 'அறந்தலை நின்றவற் கன்பு பூண்டனன்' உயுத்த. விபிடணன். 18) என்ற விடத்துப்போல.

பி - ம். 1. புணர்ச்சி யோனும்.

3. புரிவன், கழலடி வணங்குங்காலை, தழுவுங்காலை.

4. மைத்தலை; விளம்பி யிட்டான், விளம்பி விட்டான், விளம்பு கின்றான். (27)

427. நிரம்பினு னொருவன் காத்த
நிறையர சிறுதி நின்ற
வரம்பிலா ததனை மற்றோர்
தலைமகன் வலிதிற் கொண்டால்
அரும்புவ நலனுந் தீங்கு
மாகலி னைய நின்போற்
பெரும்பொறை யறிவி னோரா
னிலையினைப் பெறுவ தம்மா.

'நிரம்பினன் ஒருவன் - அரசற்குரிய பண்புகள் நிறைந்த ஒப்பற்ற மன்னன் (வாலி), காத்த - புரந்தருளிய, நிறை அரசு - எல்லாச் செல்வங்களும் நிறைந்து விளங்கும் சாம்ராஜ்யம், இறுதி நின்ற வரம்பு இலாதது - கடையெல்லை யில்லாதது; அதனை - அந்த அரசாட்சியை, மற்று ஓர் தலைமகன் - மாற்றரசன் ஒருவன், வலிதின் கொண்டால் - வலாற்காரமாகக் கைப்பற்றினால், (அந்த அரசியலில்) நலனும் தீங்கும் - நன்மையும் தீமையும், அரும்புவ - தோன்றும்; ஆகலின் - ஆதலால், (அத்தகைய ஆட்சி), ஐய -ஐயனே, நின்போல் - நின்னையொத்த, பெரும் பொறை அறிவினோரால் - பொறுமையும் அறிவும் நிறைந்தவர்களாலேயே, நிலையினை பெறுவது - அசையாத நிலையை அடைவதாகும். அம்மா: அசை.

நிரம்பினன் - திருவள்ளுவர் இறைமாட்சி யென்ற அதிகாரத்தில் அரசற்கு இன்றியமையாதனவாகக் கூறிய அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை முதலிய நற்பண்புகள் நிறையப்பெற்றவன்; நிறை அரசு - இறை மாட்சியினும், நாடு என்ற அதிகாரத்தினும், ஒரு நாட்டிற்கும் அரசுக்கும் திருவள்ளுவரால் கூறப் பெற்ற செல்வ வளங்கள். இறுதி நின்ற வரம்பு-அழிவு; வரம்பிலாதது - எல்லையற்றது. பெரும் பொறை அறிவினோர் என்பதற்கு, பெரிய அரசபாரத்தைத் தாங்கவல்ல அறிவினையுடையார் என்றும் கூறுவர். முன் பாட்டில் அநுமனது சத்தியத்தையும் அன்பையும் கூறியவர்,

இக்கவியில் அவனுடைய பொறுமையையும் அறிவையும் அரசியலுக்கு அவன் இன்றியமையாமையையும் கூறினர், 'அரக்க ரைவர் அஞ் செனும் புலன்க ளொத்தார் அநுமனு மறிவை யொத்தான்;' (சுந்தர. 927) என்றவிடத்தும் அநுமன் புகழப்படுவது காண்க.

பி - ம். 1. நிரம்பினோ ளொருவன் ; சுறுதி நின்ற, யியற்கை யென்னும்.

2. வரம்பிலாத் தன்மை, தலைமை, தானே.

3. நலனு நீங்கு; அரும்புவ னவனும் நீங்கும், அரும்புதல் வனுமே நீங்கும், அரும்புத லன்பு நீங்கும், அருந்துணை கொண்டு காத்தல்.

428. ஆன்றவற் குரிய தாய
வரசினை நிறுவி யப்பால்
ஏன்றெனக் குரிய தாய
கருமமு மியற்றற் கொத்த
சான்றவர் நின்னி னில்லை
யாதலாற் றருமந் தானே
போன்றநீ யானே வேண்ட
வத்தலைப் போதி யென்றான்.

'ஆன்றவற்கு உரியது ஆய அரசினை-(எல்லாப் பண்புகளும்) நிறைந் தவனான சுக்கிரீவனுக்கு, உரியதுஆய அரசினை - உரியதான அரசாட் சியை, நிறுவி-நிலைபெறும்படி செய்து, அப்பால்-பின்பு, எனக்கு உரியது ஆய கருமமும்- என் பொருட்டுச் செய்ய வேண்டிய காரியத்தை யும், ஏன்று - ஏற்றுக்கொண்டு, இயற்றற்கு ஒத்த - செய்தற்குத்தக்க, சான்றவர்- பெரியோர், நின்னின் இல்லை - உன்போல் (எவரும்) இல்லை; ஆதலால் - ஆதலால், தருமம் தானே போன்ற நீ - அறமே உருவெடுத் தாற் போன்ற நீ, யானே வேண்ட - என் வேண்டு கோளின்படியே, அ தலைபோதி - அவ்விடத்திற்கு (சுக்கிரீவனிடம்) செல்லக்கடவாய்', என்றான் - என்று அநுமனை நோக்கிச் சொன்னான்.

ஆன்றவற்கு - மேலோனான ஒருவனுக்கு என்றும், நிறுவி - சுக்கிரீ வன் பால் நிலை நிறுத்தி என்றும் கொள்ளலும் அமையும். தருமந்தானே போன்றவன் அநுமன், (சுந்தர. 774).

பி - ம். 1. கரியவான, கரியதான, குரியவாய.

2. கரியதாய, குரியத்தான, என் றதற் கரியதாய. 3. யாகலாற்.

4. யென்னை வேண்டில் ; யென்னை வேண்டி லத்தலை, போன்றினி யானே வேண்ட. (29)

## அநுமன் கிட்கிந்தைக்கும், இராம இலக்குமணர் வேறு மலைக்கும் செல்லுதல்

429. ஆழியா னனைய கூற
வாணையீ தாகி னஃதே
வாழியாய்! புரிவெ னென்று
வணங்கிமா ருதியும் போனன்
சூழிமால் யானை யன்ன
தம்பியோ டெழுந்து தொல்லை
ஊழிநா யகனும் வேறோ
ருயர்தடங் குன்ற முற்றான்.

ஆழியான் - சுதரிசனம் என்னும் சக்கரப் படையையுடைய திருமாலின் அவதாரமான இராமபிரான், அனைய கூற - அத்தகைய வார்த்தைகளைச் சொல்ல, (அது கேட்டு) மாருதியும் - அநுமானும் (அவ்விராமபிரானை நோக்கி), 'வாழியாய் - நல்வாழ்வையுடையாய், ஆணை ஈது ஆகின் - உமது கட்டளையிதுவானால், (யான்) அஃதே புரிவென் என்று - அடியேன் அதனையே செய்வேன்' என்று சொல்லி, வணங்கி - (இராமபிரானை) வணங்கி, போனன் - கிட்கிந்தையை நோக்கிச் சென்றான்; தொல்லை ஊழி நாயகனும் - பழமையான (பல ஊழிக் காலங்களுக்கும்) தலைவனான இராமபிரானும், சூழி மால் யானை அன்ன தம்பியோடு எழுந்து - (ஓடையென்ற) முகப்படாத்தை யணிந்த பெரிய யானையை யொத்த தனித்தம்பியான இலக்குவனுடன் புறப்பட்டு, வேறு ஓர் உயர் தட குன்றம் - உயர்ந்த பெரிய வேறொரு மலையை, உற்றான் - அடைந்தான்.

அநுமான் இராமனது கட்டளையை ஏற்று விடைகொண்டவுடன், இராமபிரானும் அவன் தம்பியும் வேறோர் மலையை யடைந்தனர் என்பதாம்; இந்தமலை பிரஸ்ரவணகிரி என்று அத்யாத்ம ராமாயணம் கூறும். வாழியாய்; அடியனாகிய அனுமன் இவ்வாறு வாழ்த்துவது முறையோ என்னில், சிறந்த பக்தர்கள் அன்புமேலீட்டால் அங்ஙனம் வாழ்த்துவது மரபு என்க. பெரியாழ்வார் திருமாலுக்குப் பல்லாண்டு கூறியதும், பிள்ளைத் தமிழ்களில் பாட்டுடைத் தலைவனான இறைவற்குக் காப்புக் கூறி வாழ்த்துவதும் இம்மரபினை யொட்டியே யென்க. இறைவனை வாழ்த்துவதும் தாம் நல்வாழ்வு வாழ என்பது கருத்து; 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்' (திருவாச. திருச்சதகம்: 20) என்றது காண்க. அன்றி, இது எவரும் மன்னருடன் பேசும்போது, 'வாழ்க' எனறு கூறும் வழக்கத்தை ஒட்டியது எனலும் ஆம்.

சூழியானை என்றதனால், பழகிய யானையைக் குறித்ததாம்; அந்த யானை பாகற்கு அஞ்சி ஒழுகுவது போல இராமபிரானது ஏவலைச் சிர மேற் கொண்டொழுகுபவன் இலக்குவன் என்பது பொருள். இனி, சூழி மால் யானை யன்ன தொல்லை ஊழிநாயகன் என இராமபிரானுக்குக் கூட்டி யுரைப்பினும் அமையும். ஆழியான் - பாற்கடலிற் பள்ளிகொள்ப வனுமாம்; உயுத்த. விபீடண: 142; ஆழியான் - நிறத்தானும் அருள் வழக்கானும் கடல்போன்றவனுமாம். "அருளின் ஆழியான்" 261.

பி - ம். 1. *யீதாமி லஃதே, யீதாமி லற்றே, யிலதாமி லஃதே, லற்றே.*
2. *பிறிவ னென்று, புரிவ னென்றே.*
3. *தம்பியுந் தானுந் தொல்லை, தானுந் தம்பியுந் துணையாய்த்.*
4. *தடக்குன்ற முற்றான்.* (30)

சுக்கிரீவன் அரசாட்சி

430. ஆரிய னருளிற் போயவ்
வகன்மலை யகத்த னான
சூரியன் மகனு மானத்
துணைவருங் கிளையுஞ் சுற்றத்
தாரையை வணங்கி யன்னா
டாயெனத் தந்த சொற்கள்
சீரியர் சொல்லே யென்னச்
செவ்விதி னரசு செய்தான்.

ஆரியன் அருளின் போய் - இராமபிரான் கட்டளைப்படிச்சென்று, அ அகன் மலை அகத்தன் ஆன - பரந்த அந்தக் கிட்கிந்தை இடத்திருப்பவனான, சூரியன் மகனும் - சுக்கிரீவனும், மானம் துணை வரும் கிளையும் சுற்ற - பெருமை வாய்ந்த (மந்திராலோசனைக்குத்) துணையாயுள்ள அமைச்சர் புரோகிதர் முதலியோரும் உறவினரும் (தன்னைச்) சூழ்ந்து நிற்க, தாரையை வணங்கி - (தன் அண்ணன் மனைவியான) தாரையைப் பணிந்து, அன்னாள் தாயென - அவள் தனக் குத் தாயென்று சொல்லும்படியாக, தந்த சொற்கள் - அவள் கூறிய அறவுரைகளை, சீரியர் சொல்லே என்ன - சான்றோர் மொழிந்த உறுதிச் சொற்களாகவே மனத்துட்கொண்டு, செவ்விதின்-செம்மையாக (செங் கோல் வழுவாது), அரசு செய்தான் - அரசாண்டிருந்தான்.

தமையன் தந்தையை ஒப்பானாதலின், அவன் மனைவியைத் தாயெனக் கருதி வணங்கியதோடு அவள் கூறிய அறவுரைகளின்படி,

சுக்கிரீவன் நடந்தான் என்பது கருத்து. இவ்வாறு அரசகாரியங்களிலும் புத்திகூறும் கல்வியும் உலகியல் அறிவும் தாரைக்குண்டென்பதை வாலிவதைப்படலத் தொடக்கத்தில் தாரை தன் கணவனைப் போர்க்குச் செல்வதினின்றும் தடுத்து நின்றபோது, இருவர்க்கும் நிகழ்ந்த உரையாடல்களினின்றும் அறிக. இதனுல் தாரையும் அரசியல் மந்திராலோசனைக் குரியவள் என்பது விளங்கும். இலக்குவன் தன் அண்ணியாரான பிராட்டியைத் தாயாகவே கருதி ஒழுகின செய்தி, 'நாகம் ஜானுமி கேயூரே' எனத் தொடங்கும் வான்மீக ராமாயண ச்லோகத்தினின்றும், 'தாயர்நம் பூங்குழற் சீதை யென்றே யேகாய்' என்று இலக்குவனுக்குச் சுமித்திரை கூறி அனுப்பிய செய்தியினின்றும் (அயோத். நகர்நீங்கு: 150) உணரலாம். மானத்துணேவர் ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும், மற்றும் மந்திரச் சுற்றத்தாருமாம். 'தம்முயிர்க்கிறுதி யெண்ணுர்' (அயோத்.மந்திரப்: 9), 'உற்றது கொண்டு மேல்வந்துறுபொருள் உணருங் கோளார்' (அயோத். மந்திரப்:7) என்று தொடங்கும் செய்யுட்களில் அமைச்சர்க்குக் கூறப்பட்ட எல்லாப் பண்புகளும் வாய்ந்திருந்தனர் என்பார், 'மானத்துணேவர்' என்ருர். மற்றும் சூழ்வார் கண்ணுக அரசன் ஒழுக வேண்டுமாகலின், 'அமைச்சர் முதலியோர் சுற்ற' என்ருர். 'சீரியர் சொல்லேயன்ன' என்பதற்கு இராம இலக்குவர் கூறிய சொற்படியே என்னலும் ஆம். வான்மீக ராமாயணம் கிட்கிந்தா காண்டம் 33, 35 ஸர்க்கங்களில் தாரை சுக்கிரீவனுடன் ஒன்றுபட்டு வாழ்ந்தாளென்று கூறப்பெற்றிருக்க, கம்பநாடர் அவளுடைய பண்பை மிகஉயர்த்தியே அமைத்துக் காட்டியிருப்பது நோக்கத்தக்கது. அத்யாத்ம ராமாயணம் அவள் இராமபிரான் உபதேசம் பெற்று வாலியின் மறைவால் நேர்ந்த மனத்தளர்ச்சி நீங்கி, மெய்ஞ்ஞானம் உற்று ஜீவன் முக்தி நிலையடைந்தாள் என்று கூறுகிறது. இக்கருத்தையே நம் ஆசிரியர் கடைப்பிடித்துள்ளனர் என்று கொள்ள வேண்டும்.

பி-ம். 1. னருளினுற் போய்; அகத்த ருய. 2. மான்ற.

3. டரயெனக் கொண்டு முந்தை; தந்தை முந்தை.

4. சொல்லே யாக, செய்வதென் னரசு; சீரியன் சொல்லி லான்ற, செவ்விதின் றரசு செய்தான், செய்தவன் சீரியோர் சொல்லே யன்ன, சீரிய சொல்லே, சீரியோன் சொல்லி லான்ற, லான.

431. வளவர செய்தி மற்ற
வாநர வீரர் யாரும்
கிளைஞரி னுதவ வாணை
கிளர்திசை யளப்பக் கேளோ
டளவில வாற்ற லாண்மை
யங்கத னறங்கொள் செல்வத்
திளவர சியற்ற வேவி
யினிதினி னிருந்தா னிப்பால்.

(சுக்கிரீவன்) வளம் அரசு எய்தி - (படைகுடிகூழ் அமைச்சு நட்பு அரண்களும், மற்றும் நாடு முதலிய) வளங்களும் ஒருசேரப் பொருந்திய ஆட்சியை அடைந்து, மற்ற வாநரவீரர் யாரும் கிளைஞரின் உதவ - பிற வாநர வீரர்களும் சுற்றத்தாரைப்போல அவன் வேண்டுவன புரியவும், ஆணை கிளர்திசை அளப்ப - அரசவாணை விளங்குகின்ற திசைகளின் எல்லை வரையிற் செல்லவும், அளவு இல ஆற்றல் ஆண்மை அங்கதன் - அளவற்ற வலிமையும் வீரமுமுடைய அங்கதன், கேளோடு - உறவினரோடு, அறம்கொள் செல்வத்து - அற வழியில் ஈட்டப்பட்ட செல்வத்தமர்ந்து, இளவரசு இயற்ற-இளவரசனாக ஆட்சிபுரியுமாறு, ஏவி - கட்டளையிட்டு, இனிதினின் இருந்தான் - இனிமையாகத் தன் நகர்க்கண் வீற்றிருந்தான்; இப்பால் - இதன் பிறகு.

கிளைஞரின்; இன், ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருளது. கேள் - அரசியற் சுற்றமும் உறவியற் சுற்றமும்; ஒருவர் ஒருவருடைய நன்மைகளைக் கேட்கும் உரிமைபற்றிக் கேள் எனப்பட்டது. அங்கதன் ஆட்சி புரிய, சுக்கிரீவன் இன்பத் துறையில் எளியனாகி இனிதிருந்தான் என்றது தொனி. மேலே சுக்கிரீவன் செய்தியைக்கூறிய ஆசிரியர், இனி இராமபிரான் செய்தியைக் கூறுகின்றார் ஆகலின் 'இப்பால்' என்றார்; இவ்வாறு அடுத்துவரும் செய்தியைத் தொடங்கிக் காட்டுவது, கம்பநாட்டாழ்வாரின் முறை; ஆரணிய: 226; சுந்தர. 690; உயுத்த. இந்திரசித்து: 71.

பி-ம். 1. மற்றை. 2. கிளை பொருட்குவைக, ளாணை கேடிலாசிட்டக் 4. சியற்ற மேவி; யினிதினி னிருந்தான் வீரன். (32)

அரசியற் படலம் முற்றும்.

# 9. கார்காலப் படலம்

இராம இலக்குமணர்கள் பிரஸ்ரவண மலையில் தங்கியபோது தோற்றிய கார் கால நிகழ்ச்சிகளை விரித்துக் கூறும் படலம் என விரியும். இது சரற்காலப்படலம் என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது.

432. மாவியல் வடதிசை நின்றும் மானவன்
ஓவிய மேயென வொளிக்க வின்குலாம்
தேவியை நாடிட முந்தித் தென்றிசைக்
கேவிய தூதென விரவி யேகினன்.

ஓவியமே என - சித்திரத்தில் தீட்டிய உருவேபோல, ஒளி கவின் குலாம் - ஒளி பொருந்தி அழகுடன் விளங்கும், தேவியை - (தன் மனைவியான) சீதாதேவியை, நாடிட - தேடும் பொருட்டு, முந்தி - (அநுமன் முதலிய வாநர வீரர்களை) அனுப்புவதற்கு முன்னரே, மானவன் - மனுகுலத்தில் அவதரித்த இராமபிரான், தென் திசைக்கு ஏவிய - தெற்குத்திசைக்கண் விடுத்த, தூதுஎன - தூதுவன்போல், இரவி - சூரியன், மா இயல் வடதிசை நின்றும் - பெருமை பொருந்திய வடக்குத்திசையிலிருந்தும், ஏகினன் - தென்திசை நோக்கிச் செல்லலானன்.

சூரியன் தென்திசையாக ஒதுங்கிச் செல்லுதலைத் தட்சிணாயனம் என்ப; தெற்கே செல்வது என்பது இதன் பொருள்; ஆடிமாதம் முதல் மார்கழி ஈருக உள்ள ஆறுமாதங்களும் இதன் கண் அடங்கும். அநுமனுக்கு முன்னதாகவே இராமபிரான் இலங்கையை நோக்கி ஏவின தூதன் என்று சொல்லத்தக்கவாறு தென்திசைக்கண் கதிரவன் செல்லலானன் என்று கூறினர்; இது தற்குறிப்பேற்றவணி. இங்கே ஓவியமே யெனப்பிராட்டியைக் கூறும் கம்பர், 'மதனற்கும் எழுத வொண்ணுச் சீதை', (பால. மிதிலைக். 5] யெனப் பிறிதோரிடத்திற் கூறி அவளுடைய தீட்டற்கரிய எழிலைப் புகழ்வர்; 'அநங்கவேள் செய்த ஓவியம்', (சுந்தர. காட்சிப்: 11) என்றும் புகழ்வர். 'மாவியல் வடதிசை,' வடதிசையைப் புண்ணியத்திசை என்பராகலின்; 'புண்ணியத் திசை போகிய வந்நாள்'; (சிலப். இந்திர விழா: 94) என்னுமிடத்தில், புண்ணியத்திசை பெருந்திசை யென்று அடியார்க்கு நல்லாரும், வடதிசை என்று அரும்பதவுரைகாரரும் கூறினமை காண்க. வடக்குத்திசை குபேரன் வாழும் இடமாதலின் செல்வமிக்க திசையுமாம்; மா-திருமகள். ஓவியமே என; ஏகாரம், தேற்றம். சிறந்த ஓவியன் தீட்டிய ஓவியம் பிறவுருவங்கள் தீட்டற்கு மேல்வரிச்சட்டமாக அமையும் என்பர். அது போன்றே சீதையும் விளங்கினுள் என்க. இது பற்றியே 'தெரிவை மார்க்கொரு கட்டளை

யெனச் செய்த திருவே', (அயோத். சித்திரகூடப் : 33) என இராம பிரானே தன் தேவியைப் புகழ்ந்தது காண்க. குலாவும் என்பது குலாம் எனத் தொகுத்தது. 'மானவன் ஓவியம் - பெருமாள் விரும்பும் ஓவியம் போலும் உருப்பெற்ற பிராட்டி' என்பது பழையவுரை. நாடியிட - நாடிட. 'பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்', (தாயுமான. 163); 'கூடுமாகில் நீ கூடிடு கூடலே', (நாச்சியார் திருமொழி : 4 : 5) என்ற இடங்களிற்போல. தேவியை - இச் செய்யுள் கவிக்கூற்றுதலின், நம் தேவியாகிய பிராட்டியை எனலும் ஆம். இனி, தேவியை நாடும் இடம் என்று கொண்டு, பிராட்டியைத் தேடவேண்டியதாகவுள்ள தெற்குத் திசை என்றும் கொள்ளலாம்.

பி - ம். 1. வடவரை நின்றும்; நின்றுவானவன், நின்றும் வானவன்.
2. ஓவிய வொருவனைப், ஓவிய மிதுவென; வுரைக்க வொண்ணிலாத், வொளிக்க, பிரிந்த வொண்டொடி.
3. தேவியை நாடியே, தேடிட; விந்தத் தென்றிசை.
4. விரவி யெய்தினன். (1)

மேகங்களின் வருணனை

433. பைவிரி பல்தலைப் பாந்த ளேந்திய
மொய்நிலத் தகளியின் முழங்கு நீர்நெயின்
வெய்யவன் விளக்கமா மேருப் பொற்றிரி
மையக லொத்தது மழைத்த வானமே.

மழைத்த வானம் - மேகத்தால் மூடுண்ட ஆகாயம், பைவிரி - படத்தை விரிக்கின்ற, பல் தலை - பல தலைகளையுடைய, பாந்தள் - (அரவரசனான) ஆதிசேடன், ஏந்திய - தாங்குகின்ற, மொய் நிலம் - வலிய பூமியாகிய, தகளியில் - அகலில், முழங்கும் நீர் நெயின் - மிகுந்து ஒலிக்கின்ற கடல் நீராகிய நெய்யினில், மேரு பொன் திரி - மேருமலையாகிய அழகிய திரியில், வெய்யவன் விளக்கம் ஆ - சூரியனை ஒளி யாகக்கொண்டு, மை அகல் ஒத்தது - (பெண்கள்) மைகூட்டும் அகலை ஒத்து நின்றது. ஏ : ஈற்றசை.

'பூமி - திருவிளக்குத்தகளி ; சமுத்ரம் நெய் ; சூரியன் - சுடரொளி; 'மேகம் பற்றினது, பெண்கள் விழிக்கு எழுதும் மைபற்றவைத்த தொத்தது' என்பது பழையவுரை, பூமியாகிய அகலில், கடல் நீராகிய நெய்யில், மேருமலையாகிய திரியில், சூரியனாகிய ஒளிக்கற்றையில்,

வானமாகிய கலயத்தில் மைகூட்டினுற் போன்றது. நீர்கொண்டகரிய மேகம் வானிற்பரந்த காட்சி என்பது கருத்து. தற்குறிப்பேற்ற வணி. 'வையந் தகளியா வார்கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காக' என்ற பொய்கையாழ்வார் பாடலை அடியொற்றியது இச் செய்யுள். 'பாந்தளின் ஞாலமெல்லாம் தாங்கும்' என்றது ஆதிசேடன் தாங்கிய ஞாலம் என்றவாறும். (உயுத்த. நிகும்பலைப்: 72). பாந்தளை இங்கு விளக்குத் தண்டாகக் கொள்க. அகலில் எண்ணெய் வார்த்துத் தீயிட் டெரித்து, அதனுல் உண்டாகும் கரித்திரளைக் கலயத்தின் அடிப்பாகத்திற் படியச்செய்து, மகளிர் மை கூட்டும் வழக்கம் இங்கே குறிக்கப்பட்டது. மொய்-(அணுக்கள்) செறிந்த எனினுமாம். நெயின்-தொகுத்தல்: இதனை மூன்ரும் வேற்றுமைச் சொல்லுருபு போல வைத்து நெய்யைக்கொண்டு என்றும் பொருள் கூறலாம். இனி, பொன் மா மேரு என வியைத்துப் பொருள் கூறலுமாம். மை எடுத்தது ஒத்தது என்பதற்கு விளக்கிலிருந்து மையேறியதுபோல மேகம் ஆகாயத்திற் பரவியது என்றும் கூறலாம்; ஒப்பு: 'வேனிலான் புகழைத் தீட்டு தாரகை யெழுத்தொளி சிறந்திட வணிவான் கூட்டு மையெனச் சிறந்தது கூரிருட் பிழம்பே', (நைடத. மாலைப்: 11). பைவிரி என்பதற்கு விஷப் பையை விரிக்கின்ற என்றும் கூறுவர். மழை - மேகம் (சிலப். ஊர் காண்: 104). (ஒப்பு) "திணிமை யிழைத்தாலு மொவ்வா விருள்;" (ஆரணிய. 696); "கூட்டுமை போற்சிறந்த கூரிருள்"; (நள. சுயம்வரப்: 102); "காலனிறத்தை யஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின் மேலும் மெழுகாய்ப் பூசியதோ"; (பால. மிதிலைக்: 67).

பி-ம். 1. பைகிறப் பஃறலைப், பையணை, பையினிற், பைபெறும், பையுடை, பையவாற், பாந்த ளேந்துபார்,
2. மொய் நிறத் தகளி; மொய்சிலை.
3. வெய்யவெங் கதிரெனும், கதிர்நெடு விளக்கின் மீதெழு, விளக் கின் மீமிசை; விளக்கமாய் மேரு.
4. மையெடுத் தொத்தது, மையடுத் தொத்தது, மையதே; மழை யின் வானமே. (2)

இப் பாடல் ஒரு சுவடியில் இல்லை. இப் பகுதியிலுள்ள பாடல்கள் சில பிரதிகளில் இடம் மாறிக் காண்கின்றன.

434. நண்ணுத லருங்கட னஞ்ச நுங்கிய
கண்ணுதல் கண்டத்தின் காள மாமென
விண்ணக மிருண்டது வெயிலின் வெங்கதிர்
தண்ணிய மெலிந்தன தழைத்த மேகமே.

விண் அகம் - ஆகாயம், நண்ணுதல் அரு - பிறர் அணுகுதற்கு முடியாத, கடல் நஞ்சம் - (பாற்) கடலில் எழுந்த விடத்தை, நுங்கிய - உண்ட, கண்நுதல் கண்டத்தின் - (அனல்) விழியை நெற்றியில் உடையவனான சிவபெருமானுடைய கழுத்தில் உள்ள, காளம் ஆம் என - கரு (விஷம்) என்னுமாறு, இருண்டது - கறுத்தது; வெயிலின் வெம்கதிர் - சூரியனுடைய வெம்மை பொருந்திய ஒளிக்கற்றைகள், தண்ணிய - குளிர்ச்சியை யுடையனவாய், மெலிந்தன - சோர்ந்து வேகம் குறைந்தன; இவ்வாறு (இந்தவிதமாக இவை ஆகுமாறு), மேகம் - மேகங்கள், தழைத்த - நீர் மிகுதியும் கொண்டு செழித்தன. ஏ : ஈற்றசை.

நுங்குதல் - விழுங்குதல்; 'விடநுங்கிய கண்ணுடையார்' (ஆரணிய. 697). கண்ணுதல்; இலக்கணப்போலி; முன்றில், கால்வாய் என்பனபோல. கண்டம் - கழுத்து, வடமொழி. காளம் - கறுப்பு. 'காளமேகத்தைச் செக்கர் கலந்தெனக் கரிய குன்றம்' (உயுத்த. இந்திரசித்து: 68); 'காளமேகத்தைச் சார்ந்த கதிரவன்', (உயுத்த. நாகபாசப்: 118). இனி, தழைத்த மேகம் என்று முதற்கண் எடுத்து அந்த மேகங்களால் மேற்கூறிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன எனக் கூறலும் ஆம்; தழைத்த மேகம் - என்பதற்கு நீர் சூல்கொண்டு தாழ்ந்த வெனினுமாம். மெலிந்தன தழைத்தன - முரண்தொடை.

பி - ம். 1. கண்ணுத விருங்கட னஞ்ச, நண்ணரும் கருங்கட னஞ்ச; னஞ்சு நுங்கிய, னஞ்சை.

2. களங்கமில் காட்சிக் கார்வர, காண்வர, கருமை நாணுற, களத்திற் கார்வர.

3. செங்கதிர்.

4. தண்ணிதின் மெலியவும்; தண்ணவி மலிந்தன; தளிர்த்த மேகமே.

435. நஞ்சினி னளிர்நெடுங் கடலி னங்கையர்
அஞ்சன நயனத்தி னவிழ்ந்த கூந்தலின்
வஞ்சனை யரக்கர்தம் வடிவிற் செய்கையின்
நெஞ்சினி னிருண்டது நீல வானமே.

நீலம் வானம் - நீல நிறம் வாய்ந்த ஆகாயமானது, நஞ்சினின் - விடம் போன்றும், நளிர் நெடு கடலின் - குளிர்ந்த பெரிய கடல் போன்றும், நங்கையர் அஞ்சனம் நயனத்தின் - பெண்களின் மையெழுதப்பெற்ற கண்கள் போலவும், அவிழ்ந்த கூந்தலின் - (அம்மகளிருடைய) விரிந்த தலைமயிர் போலவும், வஞ்சனை அரக்கர்தம் வடிவின் - வஞ்சனைகள் மிக்க இராக்கதருடைய உருவம் போலவும், செய்கையின் - (அவர்களின்) தீய செயல்கள் போலவும், நெஞ்சினின் - அன்னாருடைய மனம் போலவும், இருண்டது - (கரிய மேகங்கள் கவிந்தமையின்) கறுத்து விளங்கியது. ஏ ; ஈற்றசை.

நஞ்சினினளிர்: விஷம் குளுமையானது ; 'சிங்கி குளிர்ந்துங் கொலும்'; (நீதிநெறி. 58). இதில் நீலவானம் இன்னின்னவாறு இருண்டு விளங்கியது என்றார் ; இதனை மாலை யுவமை யென்ப. இவ்வாறு ஒரே பொருள் அல்லது நிகழ்ச்சிக்குப் பல உவமைகளை யடுக்கிக் கூறுதல் ஆசிரியர் வழக்கு ; அயோத். கங்கை: 1 ; பால. மிதிலைக். 65, 67 ; சுந்தர. 554. நயனத்திற்கு இயல்பாகவே கருமையுண்டு, 'அவன் வாங்கியவென் பாசத்திற்கார்ரென்று' (திருக்கோவை. 109); ஆயினும் இங்கே அஞ்சன நயனம் என்றது கருமையை மிகுத்துக்காட்ட வென்க. நயனம்-வடசொல். அரக்கர் மனம் மொழி காயம் என்ற மூன்றினாலும், இருணிறத்தவாகக்கூறும் பாவச் செய்கைகள் புரிபவர் என்பதை, 'அரக்கர்தம் வடிவில் செய்கையில் நெஞ்சில் இருண்டது' என்றார். மேகத்தின் விரிந்து பரந்த தன்மையை, 'அவிழ்ந்த கூந்தலின்' என்ற தொடராற் குறித்தார். மேகம் போன்ற கூந்தல் என்னாது மாற்றிக் கூறியது எதிர்நிலையணி. நெஞ்சின் இருண்டது, 'கூழின் மலிமனம் போலிருளாநின்ற கோகிலமே' (திருக்கோவை. 322); (ஒப்பு) பெரியபு. தடுத்தாட் கொண்ட: 159) : குறள். 277.

பி-ம். 1. நஞ்சின; நளிர்கரும் ; நங்கைமார்.
2. நயனத் தவர்தம் மோதியின் ; அஞ்சன நீலத்தின் ; நிலத்தில், வீழ்ந்த, விழுந்த, விழியினில்.
3. வடிவின் மற்றவர், வடிவிற் செங்கையின். 4. நீரவானமே. (4)

436. நாட்களி னளிர்கட ஞர நாவுற
வேட்கையிற் பருகிய மேக மின்னுவ
வாட்கைகண் மயங்கிய செருவின் வார்மதப்
பூட்கைக ணிறத்தபுண் டிறப்ப போன்றவே.

நாள் களின் - அன்றெடுத்த கள் (உண்பது) போல, நளிர் கடல் நாரம் - குளிர்ந்த கடலின் நீரை, நா - நாவினால், உற - மிகுதியாக, வேட்கையின் பருகிய - ஆர்வத்துடன் குடித்த, மேகம் - மேகங்கள், மின்னுவ - மின்னுபவை, வாள் கைகள் மயங்கிய செருவின் - (வீரர்களின்) வாட்படைகளை யேந்திய கைகள் ஒன்றோடொன்று கலந்து செய்யும் போரில், வார் மத பூட்கைகள் - ஒழுகுகின்ற மத நீரையுடைய யானைகள், நிறத்த புண் திறப்ப - (அவ்வாட்களால் வெட்டப்பட்டு) மார்பில் தைத்த தசைகளை வெளிக்காட்டுவனவற்றை, போன்ற - காணப்பட்டன. ஏ - அசை.

கரிய மேகங்கள் மதயானைகட்கும், புண் திறத்தல் மின்னல் வீச்சுக்கும், வாள்கள் மின்னல்களுக்கும் உவமைகள். நாட் கள் மேகம் கடல்நீரைப் பருகற்குரிய நாட்களைக் கொண்ட கார்காலம் எனினுமாம். நாரம் - நீர்: 'நாரமுண் டெழுந்த மேகம்' (ஆரணிய. 658). பூட்கை - யானை; வலிமையைக் குறித்த குணவாகு பெயர். 'பொற்றடந்தேரும் மாவும் பூட்கையும்'; (உயுத்த. இராவணன் வதை: 13); முதற் போர்; 58. நிறத்தபுண் - என்பதற்கு உதிரத்தாற் சிவந்த நிறத்தையுடைய புண் எனினுமாம்; புண் - தசை; சீவக. 2822.

பி - ம். 1. கார நாவுற, நாற நாவுற, ஞர நீவுற. 2. பெருகிய மேகம்.
3. வாட்கையர் மருவிய, வாட்கணம் மயங்கிய, வாட்கையன் செருக்கிய, வாட்கையின் மள்ளர்கள் செருவின், வாட்கைகள் மயங்கின, மயங்கிய செருவின், மயக்கிய செருவில்.
4. பூட்கைகள் பொலிநிறம், நிறந்த புண் திறந்த; பூட்கை கடித்திறம் போல போன்றதே. இலங்கல்; போன்றமே. (5)

437. நீனிறப் பெருங்கரி நிரைத்த நீர்த்தெனச்
சூனிற முகிற்குலந் துவன்றிச் சூழ்தர
மானிற நெடுங்கடல் வாரி மூரிவான்
மேனிறைந் துளதென முழக்க மிக்கதே.

சூல் - கருக்கொண்ட (நீரைப் பருகிய), நிறம் - கருநிறம் மிகுந்த, முகில் - மேகங்களின், குலம் - கூட்டம், நீல் நிறம் பெருங்கரி - நீல

நிறத்துடன் கூடிய பெரிய யானைகள், நிரைத்த நீர்த்து என - வரிசை யாக நிறுத்தப்பட்ட தன்மை போல, துவன்றி - நெருங்கி, சூழ்தர - சுற்ற, மால் நிறம் - கருநிறமுள்ள, நெடுகடல் - பரந்தகடலின், வாரி - தண்ணீர், மூரி வான் மேல் நிறைந்து உளது என - (மேலெழுந்து) ஆகாயத்தில் பரவி நின்றாற்போல, முழக்கம் மிக்கது - பேரொலி மிகுந்தது. ஏ - அசை.

கரிய பெரிய யானைகள் வரிசையாக நின்றாற்போலச் சூற்கொண்ட கருமேகங்கள் நெருங்கிக் குமுறுவது, பெரிய கடல் வானத்தெழுந்து பேரொலிவிரித்தாற் போன்றிருந்தது என்பதாம். (ஒப்பு) : 'வீங்கிருள்வே றிருந்தமால் யானையீட்டமெனவந்து பரந்ததன்றே' (பால, வரைக். 70). மால் நிறம் - திருமாலின் கரிய நிறமுமாம். நிறமும் நெடுமையும் மால் கடல் என்ற இரண்டிற்கும் ஏற்கும். மூரி - பெரிய்; உயுத்த. மீட்சி; 346; மூலபல : 101; இராவணன் சோக, 27; களிற்றுக்கு மலை; புறநா. 38, 42. யானை முழக்கிற்கு இடிமுழக்குவமை. முகில்கள் மலைக்குவமை புறநா. 61, 81 ; 'யானை முழக்கம் கேட்ட கதியிற்றே காரின் குரல்; பரி. 8, 17. துவன்றி - 'நெடுவாநரத் தானையுந் துவன்றி', (உயுத்த. பிரமாத்திர. 105); 'காம்பம லிறும்பிற்பாம்பு படத்துவன்றி'; (அகம். 88).

பி. - ம். 1. *நீல் நிறப் பெருங்கிரி; நிரைத்த நீர்த்தெனச் நிறைத்த நீர்ப போல், நிரைத்த நீர்மை போல்; நீத்தம்.*

2. *முகிலினம்; சூழ்நிரை, சூழ்வன, சூழ்ந்தன, சூழ்நிரை, சூன்மிசை,*

4. *மேனிரைந் துளதென, மேனிமிர் களிப்பினில்.* (6)

**438.** அரிப்பெரும் பெயரவன் முதலி னோரணி
விரிப்பவு மொத்தன வெற்பின் மீதுதீ
எரிப்பவு மொத்தன வேசி லாசைகள்
சிரிப்பவு மொத்தன தெரிந்த மின்னெலாம்.

தெரிந்த மின் எலாம் - (மேகங்களிற்) காணப்பட்ட மின்னல் களெல்லாம், அரி பெரும் பெயரவன் முதலினோர்- அரி யென்னும் உயர்ந்த பெயர் வாய்ந்த இந்திரன் முதலிய தேவர்களுடைய, அணி விரிப்பவும் - ஆபரணங்கள் ஒளி பரப்புவனவற்றையும், ஒத்தன - நிகர்த்தன ; வெற்பின் மீது தீ எரிப்பவும் ஒத்தன - மலைகளின் மேல் நெருப்புப்பற்றி யெரிப்பவற்றையும் நிகர்த்தன ; ஏசு இல் ஆசைகள்

சிரிப்பவும் ஒத்தன - பழிப்பற்ற திசைகள் சிரிப்பனவற்றையும் போன்றன.

தேவர்களுடைய அணிகள் விட்டுவிட்டு ஒளிர்வன போலவும், மலைகளில் வேய் முதலிய மரங்கள் ஒன்றோடொன்று உராய்தலால் மூட்டாது இயல்பாகப் பற்றியெரிகின்ற தீச்சுடர்கள் போலவும், திசைகள் (ஒன்றை யொன்று பார்த்துச்) சிரிக்கும் நகையொளி போல வும் மேகங்களின் மின்னல்கள் விளங்கின.

அரி - இந்திரன்; திருமால், அக்கினி முதலிய பல பொருள் குறிக்கும் வடசொல்; 'இரண்டரிகளரு ளாண்மையோரும்' (வி.பா.இராச சூய. 17). ஏசுதல் - பழித்தல், 'இருந்தவ ளிவளென வேச நிற்பனே'; (சுந்தர. 507). ஆசை - திசை 'ஆசைகள் சுமந்தபே ரமரி யானைகள்'; (ஆரணிய: 848); 'ஆசைகடோறு மள்ளின கொள்ளி;' (உயுத்த. மாயா சீதை; 22);

பி. - ம். 2. வெற்பின் மீதுதி. 3. வேதி லாசைகள். (7)

439. மாதிரக் கருமகன் மாரிக் கார்மழை
யாதினு மிருண்டவிண் ணிருந்தைக் குப்பையின்
கூதிர்வெங் காலெடுந் துருத்திக் கோளமைத்
தூதுவெங் கனலுமி ழுலையு மொத்ததே.

யாதினும் இருண்ட விண் - எப் பொருளைக் காட்டிலும் கறுத்த ஆகாயமானது, மாதிரம் கருமகன் - திசையாகிய கொல்லன், மாரி கார் மழை - மழைக்காலத்துக் கருமேகமாகிய, இருந்தை குப்பையில் - கரித் தொகுதியில், வெம் கூதிர் கால் நெடும் துருத்தி கோள் அமைத்து - விசை மிக்க வாடைக் காற்றாகிய பெரிய ஊதுலைத் துருத்தியின் வலிமை யைக் கொண்டு, ஊது - ஊதி யெழுப்பிய, வெம் கனல் - சூடான நெருப்புச் சுடர்களை, உமிழ் - வெளிப்படுத்துவதான, உலையும் - உலைக் களத்தையும், ஒத்தது - நிகர்த்திருந்தது. ஏ: ஈற்றசை.

விண் ஒத்தது என இயைக்க. கார்காலம் கருமானாகவும், காள மேகம் கரியாகவும், கூதிர் துருத்தியாகவும், தீச்சுடர் மின்னலாகவும் உருவகிக்கப்பட்டன; இது முற்றுருவகம். மாதிரம் - திசை; உயுத்த. கும்பகருணப்: 3; புறநா. 90; மணி. 12, 91. கருமகன் - கொல்லன்; கரும்பொன் என்ற இரும்பிற் பணி செய்வோன் ஆகலின் கருமகன் எனப்பட்டான் போலும்; கருமை - வலிமையுமாம் 'கருங்கைக் கொல்

லன் '. இருந்தை - கரி; 'இருந்தையி லெழுதீ யொத்து' (அயோத்: வனம் புகு. 8); மற்றும் சுந்தர. 665; இலங்கையெரி, 22 பெரியதிரு. 2, 10, 3; நாலடி. 258. என்பன காண்க. இஃது இருந்தில் எனவும்படும். துருத்தி- இது குருகெனவும் படும். ' ஊதுலைக் குருகின் உயிர்த்தனள் ஒடுங்கி ' (சிலப். 2, 59; 13:45, 22:152); 'பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீரா கிற் பொல்லாப்புலால் துருத்தி போக்கலாமே' (தேவா. பொது. பல வகைத். 1); பட்டினத்து: திருவேகம்ப. 27 ; தனிப்பா. அந்தகக்கவி, 7; தாயு. 101. காண்க.

பி. - ம். 1. கம்மியன், மாரிக் கார்வர, மாரிக் கான்றிடும், மின்னுகார்.
2. மேருவினிருண்ட, மிருண்டன; விருந்தை, விருந்திற், இருந்துக் குப்பையின், யாதினு மிருந்ததை.
3. கோள் மழைத் துருத்தி கொண்டமைத்.
4. ஒத்தவே. (8)

**440.** பிரிந்துறை மகளிரும் பிலத்த பாந்தளும்
எரிந்துயிர் நடுங்கிட விரவி யின்கதிர்
அரிந்தன வாமென வசனி நாவென
விரிந்தன திசைதொறு மிசையின் மின்னெலாம்.

மிசையின் - மேலே (வானத்தில்), திசைதொறும் - ஒவ்வொரு திக்கிலும், மின் எலாம் - (ஒளிவிடுகின்ற) மின்னல்கள் யாவும், இரவி யின் கதிர் அரிந்தன ஆம் என - சூரியனுடைய ஒளிக் கற்றைகளை அறுத்துவைத்தாற் போலவும், அசனி நா என - இடிகளின் நாவினைப் போலவும், பிரிந்து உறை மகளிரும் - கணவன்மாரைப் பிரிந்துவதி கின்ற மகளிரும், பிலத்த பாந்தளும் - பாழிகளில் உறையும் பாம்பு களும், எரிந்து உயிர் நடுங்கிட - (உடல்) வெம்பி உயிர் துடிக்கும்படி யாக, விரிந்தன - பரந்து காணப்பட்டன.

மின்னல் ஒளிகள் கார்காலத்தைக் குறித்தன ; அக்காலம் பாசறைப் பிரிவையோ, பொருட் பிரிவையோ மேற்கொண்டு பிரிந்த கணவன், வினைமுடித்து மீள்வதாகச் சொல்லிச் சென்ற காலம் ஆதலினாலும், அவன் வரவில்லையேயென வருந்தும் தலைவிக்கு, ஒரு நாள் ஏழு நாளாகவும், ஓர் யாமம் ஓர் யாண்டாகவும் கழியு மாகலினாலும், அக்கார் காலம் உணர்த்திய மின்னல் கண்டு வருந்தும் பிரிந்துறை மகளி ரைக் கூறினார். பிரிவு இருபாலார்க்கும் உரியதாயிருக்க மகளிர் வருத்தத்தை விதந்து கூறிய தென்னையெனின், இயல்பிலே மெல்லி

யராதல் பற்றியென்க. இனி பத்துப்பாட்டுள் ஒன்ருகிய நெடுநல் வாடை யென்ற பாட்டில், உரைகாரர் நச்சினுர்க்கினியர், 'வாகைதானே பாலையது புறனே' எனப் பாலைக்குப் புறனுகக் கூறிய வாகைத்திணையாய் அதனுள், 'கூதிர் வேனில் என்றிரு பாசறைக் காதலிஞென்றிக் கண்ணிய மரபினும்' எனக் கூறிய கூதிர்ப் பாசறையேயாயிற்று. தலைவனைப் பிரிந்திருந்து வருந்தும் தலைவிக்கு ஒருபொழுது ஓருழிபோல நெடிதாகிய வாடையாய்ப் பாலையாகிய உரிப்பொருள் உணர்த்திற்று. அகத்தொடுங்கிப் போகம் நுகர்வார்க்குச் சிறந்த காலமாயினும், அரசன் போகம் வேண்டிப் பொதுச் சொற் பொருளுய் அப்போகத்தில் மனமற்று வேற்றுப் புலத்துப் போந்திருக் கின்ற இருப்பாகலின் அவற்கு நல்லதாகிய வாடையாயிற்று. எனவே காமத்திடத்து வெற்றியேயாதலின் வாகைத் திணையாயிற்று' என்று எழுதியது கொண்டு பிரிந்துறை மகளிரின் மெலிவே கூறப்பட் டது என்க. 'விரிநிற நாகம் விடருள தேனும் உருமின் கடுஞ்சினம் சேணின்று முட்கும்; (நாலடி. 164) என்பராதலின், நாகம் இடியோசை கேட்டு நடுங்கும் இயல்பினைக் கூறினர் என்க. அரவு இடிக்குடைதல், பால. உலாவியற். 30 ; அயோத். தைல மாட்டுப். 25; ஆரணிய. 809; இராவணன் தேரேறு. 8; முதலிய இடங்களிற் காண்க. பிலத்த பாந்தள்'. சீவக. 3071. பிலம் - புற்று. அசனி - இடி; உயுத்த. வேலேற்ற. 4. இடிக்கும் மின்னலுக்கும் உள்ள ஒற்றுமை கருதி இரண்டையும் ஒன்றுபடுத்தி யுரைத்தார்; அசனியில் நெருப் புண்மையின் அசனி நாவென்ருர்: அக்கினிக்கு ஸப்த ஜிஹ்வா என்ற பெயருண்டு; தமிழில் எழுநா எனவழங்கும். இங்கும் அசனிக்கு நாவுண்டு எனக் கூறினர்.

பி. - ம். 3. *அரிந்தன வனமென ; வசனி நாமென, வசனி யோடுற, வசனி யாமென, வசனி யோவென.*

4. *இரிந்தன, மிசையின் மின்னெனு, வசையின் மின்னெலாம் வசைவில், மசைந்து திசைதொறு.* (9)

441. சூடின மணிமுடித் துகளில் விஞ்சையர்
கூடுறை நீக்கிய குருதி வாட்களும்
ஆடவர் பெயர்தொறு மாசை யானையின்
ஓடைக ளொளிபிறழ் வனவு மொத்தவே.

(மேலும் அம்மின்னல்கள்), சூடினமணி முடி - அணிந்த அரதன மகுடத்தையுடைய, துகள் இல் - குற்றமற்ற, விஞ்சையர் - வித்தியா தரர்கள், கூடு உறை நீக்கிய - (போர் செயற்காகக்) கூடாகிய உறையி

னின்று உருவியெடுத்த, குருதி வாட்களும் - (பகைவருடைய) உதிரம் தோய்ந்த வாட்படைகளையும், ஆடவர் பெயர்தொறும் - (திசை காக்கின்ற) பாலகர்கள் இடம் விட்டுச் செல்லுந்தோறும், ஆசை யானையின் ஓடைகள் ஒளி பிறழ்வனவும் - அத்திக்குக்களிலுள்ள யானைகளின் நெற்றிப்பட்டங்கள் அசைய விட்டுவிட்டு ஒளி விளங்குவன வற்றையும், ஒத்த - போன்றன. ஏ, அசை.

இல்; போரில் பின்னிடுதலாகிய குற்றம் இல்லாத. ஆடவர் என்றது பின் 'ஆசையானை' என்றமையால், இந்திரன் முதலிய எண்டிசைக் காவலரை : இவ் எண்மருக்கும் எட்டு யானைகள் உண்டு. அவை ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பன. இவ் யானைகள் போர்க்குச் செல்லும்போது அவைகளின் நெற்றிப்பட்டம் ஒளி செய்வது மின்னல் ஒளிர்வதற்குவமை; ஒப்பு. 'கதிர் மணி யறிக்கும் ஓடையால், வில்லிடு முகிலெனப் பொலிந்த வேழமே' (பால. எழுச்சிப் : 11) என்ற சொற்றொடர்களை இங்கு ஒப்பு நோக்குக. இது, ஆசை யானையின் என்ற தொடர்க்குத் திக்குகளாகிய யானைகளின் என்றுரைப்பர் ஒருசாரார். இதன்பின் 'பிரிந்துறை' என்று தொடங்கும் பாடல் ஓர் பிரதியிலும், தலைமையின் எனத்தொடங்கும் பாடல் ஓர் பிரதியிலும் அரிப்பெரும்' என்பது பிறிதோர் பிரதியிலும் காணப்படுகின்றன,

பி. - ம். 1. சூடிய மணிமுடித் துகளும், துகளின்; துளங்கு விஞ்சையர்.

2. கூடுக ணீக்கிய, கூடுறை நீத்திய.

3. ஆடுவ தொறும் பெரி, ஆடுவ பெயர்தொறு, ஆடவில் பெயர், ஆடுறுந் தொறுந் தொறும்; தானை யாலசையின், மாலசை யானையின் மாலசை யங்கரி.

4. ஓடைகள் துளி, ஓடையின் ஒளி, ஓடைகளணி வொளிபெறப்; பிறழ்வ தொத்ததே, பிறழ்ந்தன. (10)

**442.** எண்வகை நாகங்க டிசைக ளெட்டையும்
நண்ணின நாவலைத் தனைய மின்னகக்
கண்ணுதன் மிடறெனக் கருகிக் கார்விசும்
புண்ணிறை யுயிர்ப்பென வூதை யூதின.

எண்வகை நாகங்கள் - (எட்டுத் திசைகளிலுமுள்ள) எட்டுவகைப் பாம்புகளும் (எழுந்து), திசைகள் எட்டையும் - எட்டுத்திக்குகளையும்.

நண்ணின - அணுகித் தீண்ட நினைந்தனவாய், நாவளைத்து அனைய - (தம்தம்) நாக்குக்களை வெளியே நீட்டி அவற்றால் அத்திசைகளை வளைத் தாற் போன்று, மின் நக - மின்னல் ஒளி வீச, கார்விசும்பு - கரிய மேகங்கள், கண்ணுதல் மிடறு என கருகி - நெற்றியில் அக்கினிக் கண்ணையுடைய சிவபிரானுடைய கரிய கண்டம் எனக்கறுத்து, உள் நிறை உயிர்ப்பென - தம்முள்ளே நிறைந்த மூச்சை (வெளிவிட்டாற்) போல, ஊதை ஊதின - வாடைக் காற்றை உலாவச் செய்தன.

எண் வகை நாகங்கள் - அவை கீழ்த்திசை முதலாக முறையே, வாசுகி, அநந்தன், தட்சகன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்ப. சூல் கொண்டு'கறுத்த மேகம் அச்சூல் முதிர்ச்சியால் நெடிதுயிர்த்தாற் போலக் குளிர்காற்று வீசியது என்பது கருத்து. விசும்பு - ஆகாயம்; புறநா. 2 : கலித். 102 ; பெரும்பாண், 1, இங்கே இடவாகு பெயராய் மேகத்தைச் சுட்டியது, 'விசும்பின்துளி' (குறள். 16) என்ற இடத்துப் பரிமேழகர், 'மேகத்திற்றுளி' என்றது காண்க. ஊதை; அகம். 90, பால. நாட்டு : 51 : உயுத்த. கும்ப. 295, இந்த ஊதையே இப்போது-ஊதல் என வழங்கும். 440ம் பாட்டில் மின்னெலாம் அசனிநாவென விரிந்தன என்றதற்கேற்ப, இங்கே மின்னகுவன திசை நாகங்கள் நாவளைத்தாற் போன்றன என்னப்பட்டது.

பி - ம். 1. *நாகமுந்திசை.*

2. *மின்னகப், மின்னின், மின்னக்க, மின்னுதன், மின்னிமை.*

3. *கண்ணன் மெய் வடிவெனக்; கருகி, கறுக்கும், கார்முகில்.*

4. *வூதைவீசிற்றே ; ஊதையோடின, பொங்கவே, வீசிற்றே, வுலாய தூதையே, வூதை யாட்டின, வூதை போதவே.* (11)

இஃது ஒரு பிரதியில் மிகைப் பாடல் எனக் காணப்படுகின்றது. இதன்பின் 'சூடின' என்று தொடங்கும் செய்யுள் வேறு ஒரு பிரதியிற் காணப்படுகிறது.

**443.** தலைமையுங் கீழ்மையுந் தவிர்த லின்றியே
மலையினு மரத்தினு மற்று முற்றினும்
விலைநினைந் துளவழி விரும்பும் வேசையர்
உலைவுறு முளமென வுலாய தூதையே.

ஊதை - அந்தக் காற்றானது, தலைமையும் கீழ்மையும் தவிர்தல் இன்றியே - உயர்ந்த இடம் தாழ்ந்த இடம் என்று கருதி நீங்காமல்,

மலையினும் மரத்தினும் - மலைகளிலும் மரங்களிலும், மற்றும் முற்றினும் - மற்றும் எல்லா இடங்களிலும், விலை நினைந்து (பொருள் கொடுப்பவருடைய உயர் விழிவு கருதாமல் தம் இன்பத்திற்கு விலையாகக் கொடுக்கக் கூடிய) பொருள் ஒன்றையே கருதி, உள வழி விரும்பும் - (அப்பொருள் மிகுதியும்) உள்ள இடங்களையே விரும்புகின்ற, வேசையர்-விலை மாதருடைய, உலைவு உறும் உளம் என - (அடிக்கடி மாறிச்) சுழல்கின்ற மனம்போல, உலாயது - வீசியது. ஏ - அசை.

பொருள் ஒன்றையே குறிக்கொண்டு ஏனைய உருவம், பருவம், குணம், உயர்வு, தாழ்வு, என்ற ஒன்றையும் நினையாது போகம் விற்கும் பூவையர் மனம் ஒரு நிலையில் நில்லாது சுழல்வது போல, ஊதையும், மேல் கீழ் என்ற வேறுபாடின்றி நேர்ந்த இடத்தில் எங்கும் வீசிற்று என்பது கருத்து. விலைமாதர் பொருட்பெண்டிர் எனப்படுவர்; 'பொருட் பெண்டிர்' (குறள்; 913) என்ற இடத்தில், 'கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொதுமகளிர்' என்றது காண்க. இவரையே வரைவில்மகளிர் என்றும் கூறுவர்; குறள் 914. அவர் மனம் நிலையுருமை: 'மெய்வரு போகமொக்க வுடனுண்டு விலையும் கொள்ளும் பையர வல்குலார்தமுள்ளம்' (பால. மிதிலைக்: 16); 'நிலையாமன வஞ்சனை நேயமிலா விலை மாதர்'; (ஆரணிய: 768); 'நிதிவழி நேய நீட்டும் மன்றலங் கோதை மாதர் மனம்'; (ஆரணிய: 797) சிந்தாமணியில் இவர் தன்மையை, 'உப்பமை காமம்' (107) என்ற இடத்து உரைகாரர், 'இதற்கு இது அளவென்று உய்க்குமாறு போலக் கொடுக்கும் பொருளளவான அன்பு' என்றது காண்க. உளவழி - அப்பொருள் கொடுப்போர் உள்ளக் கருத்தின்படி என்றும், தமது உள்ளம் போன போக்கில் எனவும் பொருள்படும். கடையடி முற்று மோனை.

பி - ம். 1. கிண்மையுங்; லன்றியே, யின்றித்; தாவிய.
2. மாறு முற்றினும்.
3. விலை சிறந்துள வழி, விழி; விலையளந்துள வழி, விலை வனைந்துளவழி; வேசியர். (12)

**444.** அழுங்குறு மகளிர்த மன்பிற் றீர்ந்தவர்
புழுங்குறு புணர்முலை கொதிப்பப் புக்குலாய்க்
கொழுங்குறைத் தசையினை யரிந்து கொண்டது
விழுங்குறு பேயென வாடை வீங்கிற்றே.

வாடை - வாடைக்காற்றானது, தம் அன்பில் தீர்ந்தவர்-தம் கணவர் அன்பினின்றும் விலகியவராய், அழுங்குறு-(மனம்) வருந்துன்ற, மகளிர்

பெண்களுடைய, புழுங்குறு புணர்முலை - (உள்ளிருக்கும் மன வேதனை யினால்) வெம்மை கொண்ட ஒன்றோடொன்று நெருங்கிய தனங்கள், கொதிப்ப - மிகவும் கொதிக்கும்படி, புக்கு உலாய் - (அவற்றின் மேல்) தாக்கி வீசி, (அக்கொங்கைகளின்), கொழும் குறை தசையினை - செழித்த இறைச்சித்துண்டுகளை, அரிந்து கொண்டு - அறுத்துக் கொண்டு, அது விழுங்குறு - அத்தசையை விழுங்குதற்குவந்த, பேய் என - பிசாசுபோன்று, வீங்கிற்று - ஓங்கி வளர்ந்தது.

புழுங்குதல் - வெம்புதல். புணர்முலை இரு முலைகள் எனினுமாம். வடக்கிருந்து வீசுதலின் வாடையெனப்பட்டது; இது கணவரைப் பிரிந்த மனைவியரின் கொங்கைகள் மிகக்கொதிக்குமாறு வீசி, அவ் விறைச்சித்துண்டங்களை உண்ணவந்த பேய்போல மிகவும் வளர்ந்தது என்பதாம். பிரிந்துறை மகளிரை வாடைவருத்தும் என்பது; 'தழல் வீசியுலாவரு வாடை தழீஇ' (சுந்தர ; 493); 'பனிப்பியல்வாகவுடைய தண் வாடையிக் காலமிவ்வூர், பனிப்பியல் வெல்லாந் தவிர்ந்தெரிவீசும்' (திருவிருத்தம் 5); 'காக்கவரிய விளவாடைக் காற்றுக் குடைந்து'; (குமர குரு. காசிக். 45). அழுங்குதல் - வருந்துதல் ; 'இனைய நினைந்தழுங்கு வேலை' (பால. மிதிலைக். 69). குறைத்தசை யென்பது தலையற்ற உடற் குறையின் தசை.யெனவும் தொனித்தல் காண்க. பேய், பிறர் அஞ்சத் தக்க பேருருக் கொண்டாற்போன்று வாடையும் விஞ்சியது என்று காட்டி, வாடைவீசிற்று என்னாது வீங்கிற்று என்றார்.

பி - ம். 1. *அழுங்குற வன்பரைப் பிரிந்த வாவினில்; மன் பர்த்தீர்ந்தவர்.*
2. *மணமுலை.*
3. *கொழுங்குயத் தசை, தசையென; வரிந்து, யினையீர்ந்து தசையி லென்பீர்ந்து கொண்டது.*
4. *தீயென வாடை வீசிற்றே, விழுங்கிய பேயென.* (13)

445. ஆர்த்தெழு துகள்விசும் படைத்த லானுமின்
கூர்த்தெழு வாளெனப் பிறழுங் கொட்பினும்
தார்ப்பெரும் பணையின்விண் டழங்க லானுமப்
போர்ப்பெருங் களமெனப் பொலிந்த தும்பரே.

ஆர்த்து - பெருமுழக்கம் செய்துகொண்டு, எழு துகள் - மேலே கிளம்பும் புழுதி, விசும்பு அடைத்தலானும் - ஆகாயத்தை நிரப்பி மறைத் தலாலும், மின் - மின்னல்கள், கூர்த்து எழுவாள் என - கூர்மைகொண்

டெழுகின்ற.வாட்படைகள் போல, பிறழும் - அசைந்து ஒளி விடுகின்ற, கொட்பினும் -சுழற்சியானும், விண் -மேகங்கள், தார்பெரும் பணையின்-மலர் மாலையணிந்த பெரிய முரசங்களைப்போல், தழங்கலானும் - (ஆகா யத்தில்) பெரிதும் ஒலித்தலானும், உம்பர் - ஆகாயமானது, அ பெரு போர்க்களம் என பொலிந்தது - அழகிய பெரிய போர்க்களம் போன்று விளங்கியது. ஏ - அசை.

சேனைகள் செல்லும் போது அவற்றின் கால்கள் பட்டுமேலெழும் தூளி வானத்தை மறைப்பது போன்று, இங்குக் காற்றடித்தலால் தூளி மேற்கிளம்பி வானத்தை மறைத்தது என்க. (ஒப்பு): 'கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள் ககனம் சுலாவி யநிலகதியுற' (வி. பா: பதி ஞரும் போர்ச். 73): வானில் மின் ஒளிர்தல் வீரர்களின் வாட்படைகள் ஒளிர்வது போலும் என்றார். கொட்பு - சுழற்சி; 'கொட்புறு கலினப் பாய்மா' (பால. மிதிலைக்13); மற்றும், உயுத்த, பிரமாத்திர:54. கூர்த்து-கூர்மைகொண்டு; 'கூர்த்து நாய் கௌவிக்கொளக் கண்டும்' (நாலடி: 70). கூர்த்து,.மிகுத்து எனினுமாம், 'கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக் கும்', (தொல். சொல்: 314). அ-அழகு (பொருந, 6). தார்ப்பெரும்பணை. போர் முரசைத் தெய்வமாகக் கருதி அதற்கு மாலை சூட்டுவதும் பலியிடு வதும் பண்டைத்தமிழர் வழக்கங்கள். பணை-முரசு; போர்ப்பணை முழங்கப் போனான்' (உயுத்த. பிரமாத்திர: 4); 'மேருவை யுள்ளுறத் துளைத்தொரு பணையாக்கி' (உயுத்த. கும்ப : 347); பால். எதிர் கோட்; 31; ஆரணிய. 570. 'தழங்கல் - ஒலித்தல்; பணை - வாத்தியம் ;' என்பது பழையவுரை.

பி - ம். 1. தெழும்துகள் ; லாவுமின். 2. பிறங்கு கோட்பினும்.
3. தழங்கு காரினும், கற்பினும், நாரினும், தழங்கு தாரினும், தயங்கு. (14)

446. இன்னகைச் சனகியைப் பிரிந்த வேந்தல்மேல்
மன்மதன் மலர்க்கணை வழங்கி னானெனப்
பொன்னெடுங் குன்றின்மேற் பொழிந்த தாரைகள்
மின்னெடுந் துவன்றின மேக ராசியே.

இன் நகை சனகியை - இனிய புன்முறுவலையுடைய சீதாப்பிராட் டியை, பிரிந்த ஏந்தல்மேல் - நீங்கிநின்ற இராமபிரான் மீது, மன்மதன் மலர்கணை வழங்கினான் என-மாரன் தன் மலர் அம்புகளை எய்தான்போல, மின்னெடும் துவன்றின - மின்னல்களுடனே நெருங்கிநின்ற, மேக ராசி - மேகத்தின் தொகுதிகள், பொன் நெடுங் குன்றின் மேல் -

அழகிய பெரிய மலைமேல், தாரைகள் பொழிந்த - மழைத்தாரைகளைச் சொரிந்தன. ஏ - அசை.

இராமபிரான் மீது மன்மதன் மலர்க்கணை சொரிந்தாற்போல, மேகங்கள் நீர்த்தாரைகளைக் குன்றின்மேல் வழங்கின என்பது கருத்து. பொன் நெடுங்குன்று என்பதற்குப் பொன்னைத் தன்னிடம் கொண்ட மலை யெனினுமாம். இந்த மலை இராமபிரான் தங்கியிருந்த பிரச்ரவணம் என்பதாம். தாரைகள் பொழிந்த என முடிக்க. ஒருவர் ஒருவரைப் பிரிந்து நிற்கும் காதலர் காதலியர் மேல், மாரன் மலர்க்கணை யெய்தல் இயல்பாகலின் பிரிந்த ஏந்தல் மேல் என்றார். சானகியின் இன்னகை இராமபிரான் துயரம் மிகுதற்கு ஏதுவென்க. இன்னகை - இனிய அழகிய பற்களுமாம்.

பி - ம். 1. *பிரிந்த ராமன் மேல்.*

3. *குன்றமேற்; பொழிந்த யாமழை.* 4. *திவன்றன.* (15)

447. கல்லிடைப் படுந்துளித் திவலை காரிடும்
வில்லிடைச் சரமென விசையின் வீழ்ந்தன
செல்லிடைப் பிறந்தசெங் கனல்கள் சிந்தின
அல்லிடை மணிசிதர்ந் தழலி யற்றல்போல்.

கார் இடு வில்லிடை சரம் என - மேகங்களில் காணப்படுகின்ற இந்திர வில்லிலிருந்து பாய்கின்ற அம்புகள் போல, கல் இடை - (அந்த மலையிலுள்ள) கற்களின் இடையே, படும் - (மேகங்கள்) வீழ்க்கின்ற, துளி திவலை - மழைத் துளிகள், விசையின் வீழ்ந்தன - வேகத்தோடு வீழ்ந்திட்டன; செல்இடை பிறந்த செம் கனல்கள் - (அம்) மேகங்களிலிருந்து தோன்றிய செந்நிறம் கொண்ட இடியாகிய நெருப்புகள், மணி அல்லிடை சிதர்ந்து அழல் இயற்றல் போல் - (அம் மலைக்கணுள்ள) இரத்தினங்கள் இரவிலே சிதறி அக்கினிச் சுவாலை போன்ற ஒளியை வீசுதல் போன்று, சிந்தின - சிதறி வீழ்ந்தன.

மழைத்தாரைக்கு அம்புகள்; சீவக. 33, 508. கல் - மலையுமாம்; 'கல்லிடைப் பிறந்து போந்து' (பால. ஆற்று. 19); 'தென்குமரி வட பெருங்கல்' (புறநா. 17). காரிடு வில்; இதனை வானிடு வில் என்றும் வழங்குவர். (நாலடி. கடவுள்). செல் - இடி; 'செல் உறழ் தடக்கை' (திருமுருகு. 5); 'நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை' (பதிற். 52). செல் - மேகமுமாம். செல்வது என்ற

இயல்பு பற்றி மேகம் செல்லெனப்பட்டது. இச்செய்யுள் தற்குறிப் பேற்ற வணி.

பி - ம். 1. படுதளித் திவலை, க்கலவக்; தவலைகாரிடும், கவலைக் காரிடும், திவலை காரொடும்.

2. வில்லிடு விடுகணை ; வில்லிடை விடுசரம் ; விசையின், மேவின, மீண்டன.

3. வெங்கனல்கள், வெங்கனலிற், சிந்திய.

4. எல்லுடை மணி சிதர்ந்து, இல்லிடை சிறந்தழ; சிதைந்தழ, தழலியற்றலால். (16)

448. மள்ளர்கண் மறுபடை மான யானைமேல்
வெள்ளிவே லெறிவன போன்ற மேகங்கள்
தள்ளருந் துளிபடத் தகர்ந்து சாய்கிரி
புள்ளிவெங் கடகரி புரள்வ போன்றவே,

மறு படை மள்ளர்கள் மான-(பகைவர் சேனையை) எதிர்த்துப் போர் புரியவல்ல வீரர்கள் ஒப்ப, யானை மேல் வெள்ளிவேல் எறிவனபோன்ற மேகங்கள் - யானைகளின் மேல் வெண்ணிறமான வேலாயுதங்களை எறி வன போன்றவாகிய மேகங்களின், தள் அரும் துளி பட - விலக்க முடியாத மழைத் தாரைகள் வீழ்தலின், தகர்ந்து சாய் கிரி - பிளந்து வீழ் கின்ற மலைப்பாறைகள், புள்ளிவெம் கடகரி புரள்வ போன்றவே - உத்தமவிலக்கணமாகிய செம்புள்ளிகளையும் வெம்மைவாய்ந்த மதத் தினையுமுடைய யானைகள் புரண்டு வீழ்வன போன்றன.

மேகங்களுக்கு மள்ளர்களும், கிரிக்குக் கரிகளும் உவமைகள். மழைத்தாரைகள் வேலுக்குவமை; பால. ஆற்று. 4; சீவக. 33. மள் ளர்கள் - போர்வீரர்; 'மகளிர் மலைத்த லல்லது மள்ளர் மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப' (புறநா. 10: 77, 89); 'மள்ளர் குழீஇய விழவினுனும்', (குறுந்.31). 'மள்ளர்-யானைப்பாகர்' என்பதுபழையவுரை. முதலிரண்டடிகள் தற்குறிப்பேற்றவணி. மறுபடை-மாறுபாடு கொண்ட சேனை எனினுமாம். வெள்ளிவேல் - வெள்ளியாற் செய்த வேலுமாம். யானைகளின்மீது வீரர்கள் வேல் எய்தல் பண்டைப் போர் முறை; குறள். 500, 774; சீவக. 783, 785, 786. மான என்பதனை உவம உருபாக்கிப் பொருள் கூறுவர் ஒரு சாரார்; ஆனல் மான, போன்ற என்ற இரு சொற்கள் இருத்தலின் அங்ஙனம் கோடற்கில்லை. தள்ள ரும் - விலக்கற்கரிய; 'தள்ளரிய பெருநீதித் தனியாறு' (பால. குல முறை. 21); மற்றும், பால. எழுச்சி. 37.

பி - ம். 1. மதம் பெறு ; ஏறுபடை.
3. தள்ளிருர், தள்ளிய, இடிபட, முடிபட, பிடிபடத் தாழ்ந்து, தளர்ந்து, மழைபடத் தளர்ந்த சாய்கிரி.
4. போன்றதே. (17)

449. வானிடு தனுநெடுங் கருப்பு வின்மழை
மீனெடுங் கொடியவன் பகழி வீழ்துளி
தானெடுஞ் சார்துணை பிரிந்த தன்மையர்
ஊனுடை யுடம்பெலா முருக்க லொத்தவே.

மழை - மேகம், மீன்நெடு கொடியவன் - மீன் உருவம் எழுதப் பெற்ற உயர்ந்த கொடியையுடைய மாரனுக, வான்இடு தனு - அம் மேகத்தில் தோன்றிய இந்திர வில், நெடு கருப்பு வில் - நீண்ட கரும்பு வில்லாக, வீழ்துளி - மேகத்தினின்று வீழும் தாரைகள், பகழி - (அவன் எய்யும்) அம்புகளாக, நெடுஞ்சார் - நீண்ட மலைச்சாரல்கள், துணை பிரிந்த தன்மையர் - தத்தம் துணைவர்களைப் பிரிந்த இயல்புடைய வராக, ஊன் உடை உடம்பு எலாம் உருக்கல் ஒத்த - (அவர்களின்) தசையுடன் கூடிய உடல்கள் முழுவதையும் உருக்குவ போன்றன. தான், ஏ - அசைகள்.

இஃது இயைபுருவகம் அல்லது முற்றுருவகம் என்ப. மன்மத னுக்கு மீனக்கொடியோன் என்று பெயர். வானிடுதனு ; இந்திரவில், திருவில் என்றும் வழங்கப்பெறும்; 'திருவிலல்லது கொலைவில் லறியார்' (புறநா. 20). மழைத்தாரைகள் மலைச்சாரல்களைக் கரைத் துக்கொண்டு பெருகுதல், மாரன் மலர் அம்புகள் துணைவரைப் பிரிந்தா ருடைய உடலை உருக்கினுற் போலும் என்க. மழைத்தாரைக்கு அம்பு கள்; 'எரிகணையெழு கார்மழை பொழிவது போல' (சுந்தர. அக்க. 962). சார் - மலைச்சார்வு ; முதனிலைத் தொழிற்பெயர். சாரல் என்பது தன் விகாரமுமாம். ஊனினை உருக்கி நிலைகுலையச் செய்தல்; 'ஊனினை உருக்கி' (திருவாச. 542) என்றதனுற் காண்க. இனி, தாநெடுஞ் சார் துணை' என்ற பாடங்கொண்டு, தாம் நெடுங்காலமாகச் சார்ந் துள்ள துணைவர்களைப் பிரிந்தவர்களுடைய உடம்புகள் என்றும் உரைக் கலாம். இம்மையிலே மட்டுமன்றி மறுமையிலும் தொடரும் உழுவ லன்பினர் ஆகலின், நெடுஞ்சார் துணை என்ருர்; 'பிறப்பானடுப்பினும் பின்னும் துன்னத்தகும் பெற்றியரே' (திருக்கோவை 205); 'இம்மை மாறி மறுமையாயினும் நீயாகியரெங் கணவனை, யானாகியர் நின்நெஞ்சு நேர்பவளே'; (குறுந். 49) என்பன காண்க.

பி - ம். 1. *தனுவொடுந்; தழைத்த வான்மழை, வன்மழை, வின்மழை.*
2. *மீனிடு; கொடியவன், கொடிய்ன்; வீழ்ந்திழி.*
3. *தன்மையோர்.*
4. *முருப்பவொத்ததே, லொத்ததே, உடம்புயிருக்க தொத்ததே.*

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

450. தீர்த்தனுங் கவிகளுஞ் செறிந்து நம்பகை
பேர்த்தன ரினியெனப் பேசி வானவர்
ஆர்த்தென வார்த்தன மேக மாய்மலர்
தூர்த்தன வொத்தன துள்ளி வெள்ளமே.

தீர்த்தனும் - தூய்மை வாய்ந்த இராமபிரானும், கவிகளும் - வானரங்களும், செறிந்து - ஒன்று கூடியதால், இனி - இனிமேல், நம்பகை பேர்த்தனர் - நம் விரோதிகளாகிய இராவணன் முதலிய அரக்கர்களை (உலகினைவிட்டு அவர்கள்) அகற்றிய வராவர்' என பேசி - என(த்தங்களுக்குள்) உரையாடிக்கொண்டு, வானவர் - தேவர்கள், ஆர்த்து என - (உவகையால்) பேரிரைச்சல் விளைத்தாற்போல, மேகம் - மேகங்கள், ஆர்த்தன - பெருமுழக்கம் செய்தன; துள்ளி வெள்ளம் - மழைத் துளிகளின் தொகுதிகள், ஆய் மலர் தூர்த்தன ஒத்தன - (அங்ஙனம் மகிழ்ந்த தேவர்கள்) அழகியு (கற்பகம் முதலிய) மலர்களை (அவ்விராம பிரான் மீதும் குரங்குகளின் மீதும்) சொரிந்து நிரப்பினாற் போன்றன. ஏ - அசை.

மேகங்களின் முழக்கம் இராமபிரானும் வானரங்களும் கூடியதால் தம் பகைவர்கள் அழிவுறுவர் என்று தேவர்கள் ஆரவாரித்தது போலும் என்றும், மழைத் துளிகள் அவர்கள் மகிழ்ச்சியால் பெய்தமலர் மழை போலும் என்றும் உரைக்கப்பட்டன. பாலகாண்டம் திருவவதாரப் படலத்து வரும் 'வானுளோ ரனைவரும் வானரங்கள்' (திருவவ. 20); 'வாயு மற்றெனது கூறு மாருதி' (திருவவ.27); 'செப்பியென் குரங்காய் வந்தார் தனித்தனித் தேவர் என்றார்'; உயுத்த (இலங்கைகாண்-11) என்பன குறித்தல் காண்க. இது தற்குறிப்பேற்றவணி. 'தீர்த்தனும் கவிகளும் பேர்த்தனர்' என்ற இடத்து உயர்திணையும் அஃறிணையும் விரவிச் சிறப்பினால் உயர்திணை முடிபைப்பெற்றது திணைவழுவமைதி; பேர்த்தனர் என இறந்தகாலத்தாற் கூறியது விரைவும் தெளிவும் பற்றி என்க. துளி - துள்ளி என விரிந்தது; 'துள்ளி சோர் வெள்ளக் கண்ணன்' (ஆரணிய. 1027); சுந்தர. 150. தீர்த்தன் - புனிதன்; ஆரணிய. 547. 'புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்' (மணி. 5. 98). தங்கள்

பொருட்டு அவதரித்த இராமபிரானுடைய வெற்றிச் செயல்களை அவ் வப்பொழுது வானவர்கண்டு ஆரவாரித்ததை ஆரணிய. 547; சுந்தர. 962; உயுத்த; மருத்துமலை. 107; இந்திர சித்து 56, இராவண ன்வதை, 199 என்ற இடங்களிற் காணலாம். ஆர்த்தால் என என்பது ஆர்த்து என நின்றது. ஆய்மலர் - அழகியமலர்; குறுங். 401; பெருங். உஞ்சைக். 53, 131. இவ்வாறு கம்பநாடர் அடிக்கடி கூறிச்செல்வது இராமாவதாரம் தேவகாரியத்தின் பொருட்டே என்னும் தம் மதத்தை நிறுவுதற்காக என்க.

பி - ம். 1, *செறிந்த நம்வினை, தம்பகை, திரங்கு நம்பகை.*

2. *ரினிதெனப், நீயெனப், பேர்த்தன.*

3. *வார்த்தன, ஆர்த்தென விடித்தன ; ரனவில் மாமலர்.*

4. *தூர்த்தெனத், தூர்த்தன, வேர்த்தனரென, மழைசொரிந்த மேகமே, துளியின் வெள்ளமே.* (19)

451. வண்ணவிற் கரதலத் தரக்கன் மண்ணொடும்
விண்ணிடைக் கடிதுகொண் டேகும் வேலையில்
பெண்ணினுக் கருங்கல மனைய பெய்வளை
கண்ணெனப் பொழிந்தது கால மாரியே.

வண்ணம் வில் கரதலத்து அரக்கன் - அழகிய வில்லேந்திய கையினையுடைய இராவணன், மண்ணொடும் (ஒரு யோசனை அளவு) நிலத்துடன், கொண்டு - சீதாப்பிராட்டியை எடுத்துக்கொண்டு, விண் ணிடை - ஆகாயத்தில், கடிது ஏகும் வேலையில் - விரைந்து செல்லும் போதில், பெண்ணினுக்கு அரு கலம் அனைய - மகளிர்க்குப் (பெறற் கரிய) அணிபோன்ற, பெய்வளை கண் என - தரித்த வளையல்களை யுடைய பிராட்டியின் விழிகள் (நீர் சொரிந்தாற்) போல, காலம் மாரி பொழிந்தது - கார்காலத்து மேகம் நீரை மிகுதியாகப் பெய்தது. ஏ - அசை.

இராவணன் விண்வழியாகத் தூக்கிச்சென்றபோது பிராட்டி விடுத்த கண்ணீர்போன்று மழை பொழிந்தது என்க. வரலாற்றுக் குறிப்பே இங்கு உவமையாக்கப்பட்டது. போர் செய்து பற்றிச் செல்லாது வஞ்சனையால் தூக்கிச்சென்றதை உணர்த்த வண்ணவிற் கரதலம் என்றார்; வில் அணிமாத்திரையாய் நின்றது. இராம இலக்குவர் ஒரு சமயம் பின்தொடர்ந்தால் யாதாய் முடியுமோ என்ற அச்சத்தால், 'கடிதுகொண்டேகும்' எனப்பட்டது. அருங்

கலம் - விலை மதித்தற்கரிய அணியெனினுமாம். 'பூவினிற் கருங்கலம்' (தேவா. பக். 1182. 2); அருங்கலம் - மாணிக்கமுமாம்; 'அருங்கலப் பாவை'; இரத்தினப் பாவை. (சிலப். மதுரை. வேட்டுவ. 71). கரதலம்; 'கரதல முற்றுளெிர் நெல்லி கடுப்ப'; (பால. திருவவ. 117). பெய் வளை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, 'பெற்றது வேறெங்கென்று பெய்வளையார் தமைக் கேட்டான்' (பெரியபு. காரைக்கால்: 26). இலங்கேசன் எடுத்துச் சென்றபோது பிராட்டி அவலித்துக் கண்ணீர் பொழிந்ததை, 'மழைபொரு கண்ணிணை வாரி யோடுதன் இழைபொழிந் திட்டனள்' 195; 'மழைக்கண்' என்பது காரணக் குறியென வகுத்தாள். (சுந்தர. 335). என்பன காண்க. "காலமாரிபோற் கண்ணீர் பொழிந்தது" என்பதை மாற்றிக் "கண் ணெனப் பொழிந்தது காலமாரியே" என்றது எதிர்நிலையணி.

பி - ம். 1. மண்ணொடு, வானினி, வானினின், வானினன், வானிலே,
2. டேகுமேல் வையிற்.
4. பொலிந்தது. (20)

452. பரஞ்சுடர்ப் பண்ணவன் பண்டு விண்டொடர்
புரஞ்சுட விடுசரம் புரையு மின்னினம்
அரஞ்சுடப் பொறிநிமி ரயிலி னாடவர்
உரஞ்சுட வுளைந்தனர் பிரிந்து ளோரெலாம்.

பரம் சுடர் பண்ணவன் - மேலான சோதி மயமாகிய சிவபெருமான், பண்டு - பண்டைக்காலத்து, விண்தொடர் புரம் சுட - ஆகாயத்தில் தொடர்ந்தியங்கிய முப்புரங்களை எரிக்க, விடு சரம் புரையும் மின் னினம் - செலுத்திய அம்பினை நிகர்த்த மின்னல்களின் தொகுதி, அரம் சுட பொறி நிமிர் அயிலின் - அரத்தினால் தேய்க்கப்பட்டு ஒளி விடு கின்ற வேற்படைகள் போன்று, ஆடவர் உரம் சுட - (தலைவியரைப் பிரிந்து நின்ற) தலைவருடைய மார்பை எரிப்ப, பிரிந்து உளோர் எலாம்- பிரிந்து நின்ற அந்த ஆடவர் எல்லோரும், உளைந்தனர் - மனத்துயர் எய்தினர்.

சிவபிரான் புரமெரிக்க எய்த எரிநுனி வாய்ந்த அம்புபோன்ற மின்னற்றொகுதிகள் தலைவியரைப் பிரிந்த ஆடவர் நெஞ்சைச் சுட, அவர்கள் வருந்தினர். புரமெரித்தது: 'ஓங்குமலைப் பெருவிற் பாம்பு நாண்கொளீஇ ஒருகணைகொண்டு மூ வெயிலுடற்றி, வெற்றிதந்த கறை மிடற்றண்ணல்' (புறநா. 55); மற்றும் கலித். 2, 37; சிலப். 6: 40-41,

உயுத்த. கும்ப. 26; மூலபல. 38, 173, 183; திருக்கோவை. 186. பண்ணவன் - கடவுள்; ஆரணிய. 817; உயுத்த. இரணிய. 102; பிரமாத்திர. 80; இராவணன் வதை. 88. சிலப். நாடுகாண். 188. இனி, "அரம் சுடப் பொறிநிமிர் அயில்' என்பதற்கு, அரத்தால் அராவப்பட்டுத் தீப்பொறிகள் நிமிர்ந்து விளங்கும் அயில் எனினுமாம். உரம் - மார்பு; இடவாகுபெயராக நெஞ்சினைக் குறித்து நின்றது; உரம் சுட - மனத்தின் வன்மையைப் போக்க என்றுமாம்.

பி - ம். 1. சிரஞ்சுடர் மதிபுனை தேவன்.
2. மின்னென.
3. நிமிர்ந்தன வாடவர்.
4. வுனைத்தனர், உரஞ்சுடநிமிர்ந்தன. (21)

இப்பாடல் ஓர் பிரதியில் இல்லை.

453. பொருடரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற்
குருடரு தேர்மிசை யுயிர்கொண் டுய்த்தலான்
மருடரு பிரிவெனும் மாசு ணங்கெடக்
கருடனைப் பொருவின கால மாரியே.

பொருள்தர போயினர் பிரிந்த - செல்வம் ஈட்டற்காக அயல்நாடு சென்ற தலைவரைப் பிரிந்த, பொய் உடற்கு - (உயிர்த் துணைவரைப் பிரிந்ததனால்) உயிர் அற்ற உடம்பு மாத்திரம் சுமந்துள்ள தலைவியரிடம், உருள் தரு தேர் மிசை - உருண்டு செல்ல வல்ல சக்கரங்களுடன் கூடிய தேர்களின் மேல், உயிர் கொண்டு - (பிரிந்த தலைவர்களாகிய) உயிர்களை மீட்டுக் கொண்டு, உய்த்தலான் - சேர்த்தலின், காலம் மாரி - கார்காலத்து மழைகள், மருள்தரு பிரிவு எனும் மாசுணம் கெட - மயக்கத்தைச் செய்கின்ற (அத்தலைவியருடைய) பிரிவென்னும் பாம்பு அழியும்படி (வந்த), கருடனை - பறவை யரசனை, பொருவின - ஒத்தன. ஏ: அசை.

இதனை ஏது உவமையணி என்ப. தானே யீட்டிய தனமே உத்தம மானதென்று கூறப்படுவதால், வேற்றுநாடு சென்று பொருளீட்டுதல் பண்டைத்தமிழர் வழக்கு. 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்பது ஔவை முதுமொழி; 'ஈதலும் துய்த்தலு மில்லோர்க்கில்லெனச் செய்வினை கைம்மிக வெண்ணுதி'; (குறுந்; 63); 'புணரிற் புணராது பொருளே பொருள் வயிற் பிரியிற் புணராது புணர்வே'; (நற்; 16) என்பனவும் காண்க. அங்ஙனம் ஈட்டற்குச் செல்லும் தலைவன் தலைவி

யின்பால் மீளுங்காலம் பெரும்பாலும் கார்காலமாகும். எனவே அவன் குறித்த காலம் வரையில் முல்லை சான்ற கற்பினளாய் உயிரற்ற உடல் போன்றிருக்கும் தலைவி, அக்காலம் எய்தவே, ஊக்கங்கொண்டு பிரிவு நோய் தீர்ந்து மகிழ்வாள். பொருள் முடித்து மீளுங்கால் பரித்தேரை விரைந்து செலுத்துமாறு தலைவன் பாகற்குக் கூறுவதை அகத்தில் முல்லைப் பகுதியில் பரக்கக்காணலாம்; (ஒப்பு): 'பந்தருட் பாசறைப் பொருள் வயிற் பருவந், தந்த கேள்வரை யுயிருறத் தழுவினர் பிரிந்த, ... கழலோர் வந்த போதவர் மனம் எனக் குளிர்ந்ததவ் வனமே' (அயோத். வனம் புகு. 46), பொய்யுடற்கு; 'பூண்ட மெய்யுயிரோ போகாப் பொய்யுயிரோடு நின்ருன் ஆண்டகை' (சுந்தர. 525) என்றது காண்க. அருவமாகிய உயிர் பிரிக்கக்கூடிய பொருளன்றேனும் இவ்வாறு கூறுவது கவிமரபு; 'ஈண்டுநீ யிருந்தா யாண்டங் கெவ்வுயிர் விடுமிராமன் (சுந்தர. 525); 'வாழ்தல் உயிர்க் கன்னள் ஆயிழைசாதலதற் கன்ன ணீங்குமிடத்து' (குறள்: 1124) என்பன நோக்குக. கார்காலம் எய்தவே தலைவனும் தேர்மீது திரும்புவான் ஆகலின், 'உருள்தரு தேர்மிசை யுயிர் கொண்டுய்த்தலான்' என்ருர். 'பொருள் வயிற் பிரிவோர் வரவெதி ரேற்கும், கற்புடைமாதரிற் கதுமென வுரறி, ஊற்று நீர்வையக முழுது முவப்பக், கருவி மாமழை பருவ மொடெதிர' (பெருங். 1, 49; 76-79). 'பிரிவினேய்' என்றும் பாடம் உண்டு. பிரிவைத் துயராகவும் பிணியா கவும் அழலாகவும் கூறுதல், 'பிரிவெனுந் துய ருருவுகொண்டா லன்ன பிணியாள்' (சுந்தர: 336); 'பிரிவெனு மழல்சுடப் பெடை யிறக்குமே' (நைடத, அன்னத்தைக் கண். 72). பிரிவெனும் மாசுணம்' என்ருர், 'நல்லராக் கதுவியாங்கென்னல்லல் நெஞ்சம் அலமலக்குறுமே' (குறுந். 43). இங்கே பிரிவுப் பிணியைப் பாம்பாகவும், அதனைப் போக்கித் தலைவியை மகிழ்விக்கும் கார்காலத்தைக் கருடனுகவும் உருவகம் செய்தார்.

பி-ம். 1. போயினர் பிரிந்த; பூவையர்.

2. தேர்மே லுயிர், தேரின் மேலுயிர்; கருடரு மன்பரைக்; டுய்த்தலான், கடிதங் குய்த்தலால்.

3. பிரிவினேய், பிரிவினேர்; மாசுணம்.

4. காரின் மாரியே. (22)

454. முழங்கின முறைமுறை மூரி மேகநீர்
வழங்கின மிடைவன மான யானைகள்
தழங்கின பொழிமதத் திவலை தாழ்தரப்
புழுங்கின வெதிரெதிர் பொருவ போன்றவே.

மூரி மேகம்-வலிய மேகங்கள், முறை முறை முழங்கின-மாறிமாறி இடி முழக்கம் செய்தனவாய், நீர் வழங்கின மிடைவன - மழையைப் பொழிந்து கொண்டு ஒன்றோடொன்று பிணைந்தவை, மானம் யானைகள்-பெரிய யானைகள், தழங்கின - பிளிறிக்கொண்டு, பொழிமதம் திவலை தாழ்தர - தம்மிடமிருந்து மதநீர்த் தாரைகள் பெருகிவிழ, புழுங்கின எதிர் எதிர் பொருவ போன்ற - சினந்து ஒன்றோடென்று எதிர்த்துப் போர் புரிவனவற்றை நிகர்த்து நின்றன. ஏ : அசை.

மேகம் மிடைவன யானைகள் பொருவ போன்ற, என இயைக்க. யானைக்கு மேகம் ; 'களிற்றீட்டம் போல் கலங்கு தெண்டிரை மேய்ந்து கணமழை கொன்றையினான் சடைபோல் மின்னி' (சீவக. 32). முழக்கமும், நீர் வீழ்த்தலும், ஒன்றோடொன்று நெருங்குதலும் மேகம், யானை என்ற இரண்டற்கும் உண்டு என்பதை உவமை முகத்தால் விளக்கினார். முழங்கின, வழங்கின, தழங்கின, புழுங்கின, - இவை முற்றெச்சம். போன்ற - முற்று. தாழ்தர - தர, துணைவினை. திவலை - துளிகள்.

பி - ம். 1. *முழங்கி மேக நீர்.*
3. *தழங்கின பொழிமதத் திவலை, துளிகள் பொழிமதத் திவலை.*
4. *போன்றதே ; போந்த போன்றதே.* (23)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

455. விசைகொடு மாருத மறித்து வீசலால்
அசைவுறு சிறுதுளி யப்பு மாரியின்
இசைவுறழ்ந் தெடுப்பன விசைய வாயிருந்
திசையொடு திசைசெருச் செய்வ போன்றவே.

விசைகொடு - வேகமாக, மாருதம் - காற்று, மறித்து வீசலால் - மாறி மாறி யடித்தலால், (மேகங்கள்) அப்பு மாரியின் - அம்பு மழை யொப்ப, இசைவு உறழ்ந்து எடுப்பன அசைவு உறு சிறு துளி - தம்முட் பகைமைகொண்டு உயர்த்துவனவான அசைகின்ற மழைத் திவலைகள் கொண்டு, இசைய-பொருந்த, ஆய் இரும் திசையொடு திசை-அழகிய பெரிய திசையுடன் திசையானது, செரு செய்வ போன்ற - போர் புரிவதை யொத்தன. ஏ : அசை.

அடிக்கடி திசை மாறி வீசும் காற்றின் வேகத்தால் மழைத்தாரை களை மேகங்கள் எதிரெதிரே வாரி வீசுதல், திசைகள் தம்முள் மாறு பட்டு அம்பு தொடுத்துச் சண்டை செய்வது போன்றிருந்தன. இது தற் குறிப்பேற்றவணி. இசைவு-இணக்கம், உறழ்ந்து-மாறுபட்டு. அசைவு உறு சிறுதுளி - மேகத்தினின்று நீராகமாறி அசைந்து விழுகின்ற மழைத்தாரை. கீழ் 7 ஆம் செய்யுளில் ஆசை சிரிப்பனபோன்ற என்ருர் ; இங்கு பொருவனபோன்ற எனக் கற்பனை செய்தார். அப்பு - அம்பு. வலித்தல் விகாரம் ; 'அக்கணத் தடுகளத் தப்பு மாரியால்' (உயுத்த. நிகும். 56) 'அம்புப்புதையும் அணிவரிச் சிலையும்' (பெருங். 1. 52 ; 16). இனி, விசையவாய் - வேகத்துடன் கூடியவையாய் என்றுமாம்.

பி - ம். 1. விசையொடு, விசை நெடு; வெறித்த, மடுத்த, மெடுத்த, மெதிர்ந்த.

2. துளிவிழ ; வப்பு மாரிகள்.

3. இசையுறழ்ந் நிலையவாய்ப் வெடுப்பன, படுப்பன, விடைய.

4. செருச்செய்கை செய்தவே; செய்த வொத்தவே, போலவே யெய்தவே, யேய்த்தவே, செய்தவே, வய்ந்தவே.

இப்பாடல் ஓர் பிரதியில் இல்லை.

கார்கால நிகழ்ச்சிகள்

456. விழையுறு பொருடரப் பிரிந்த வேந்தர்வந்
துழையுற வுயிருற வுயிர்க்கு மாதரின்
மழையுற மணமுற மலர்ந்து தோன்றின
குழையுறப் பொலிந்தன வுலவைக் கொம்பெலாம்.

விழையுறு - யாவராலும் வேண்டப்படுகின்ற, பொருள் - செல் வத்தை, தர - ஈட்டிவருவதற்காக, பிரிந்த - (தம்மை விடுத்து) வேற்று நாட்டுக்குச் சென்ற, வேந்தர் - (தமது தலைவர்), வந்து உழை உற - (அவர்கள் மீண்டு வருவதாகச் சொல்லிய கார்காலம் வந்தவுடன்) வந்து தம்மையடைய, (அதனால்), உயிர் உற (தம்மைத் துறந்தது போன்றிருந்த) உயிர் வந்து பொருந்த, உயிர்க்கும் - மூச்சுவிடுகின்ற, மாதரின் - தலைவியர் போல, உலவை கொம்பு எலாம் - உலவை மரங் களின் கிளைகள் யாவும், மழை உற - மழை வந்து பொருந்த, மணம்

உற - நறு மணம் செறிய, குழை உறபொலிந்தன - தழைகள் பொருந்தி விளக்கம் பெற்றனவாகி, மலர்ந்து தோன்றின - முகம் மலர்ந்து காணப் பட்டன.

பிரிவால் உயிரற்ற உடலினர் போன்றிருந்த மகளிர் தலைவரைக் கூடிய நிலையில் முகம் மலர்ந்தாற்போல, மாரியின்றி உலர்ந்த உலவை மரங்கள் மழை பெய்த அளவில் தழை நிரம்பி மலர்ந்து விளங்கின. வேந்தர் அரசர் எனக்கோடலுமாம். 'ஓதல் முதலிய பிரிவுகள், மன்னர்க்கும் உண்டென்பதை, 'ஓதலும் பகையும் தூதிவை பிரிவே' (தொல் அகத். 25) முதலிய சூத்திரங்களான் அறிக. 'பொரு ளில்லார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு'; (குறள். 247); 'நடுவண தெய்த விருதலையு மெய்தும்' (நாலடி. 114); 'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுல் முடியும் (திருக்கோவை; 332); 'கைப்பொருளொன் றற்று ளிளமையும் போலே கொதிக்கும் அருஞ்சுரமே' (அசதிக்) 'வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்' (பாலைக். 10). எனக் கூறி யாங்குப் பொன்னை விழையாத மக்கள் இலராகலின், 'விழையுறு பொருள்' என்றூர். மற்றும், 'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும், பெரிதாய பகைவென்று பேணுரைத் தெறுதலும், புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப் பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்' (கலித். 11) என்றபடி இல்வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதாகலின் இங்ஙனம் கூறினூர் எனினுமாம். தலைவனும் தலைவியும் ஈருடலும் ஓருயிரும் கொண்டோராகலின், உயிர் போன்ற தலைவன் வந்து அணையத் தலைவி மகிழ்வுகொண்டாள் என் ரூர்; 'கொழுநன்வர வெதிர் நோக்கி மணித்தேரோடும் கண்டு மனம் களிசிறப்ப ஒளிசிறந்து மெலிவகலும் கற்பினூர்' (பால. மிதிலைக். 152). முகமலர்ச்சியை மரங்கள் தழைத்து மலர்ந்ததற்கு உவமையாக்கினூர். மாதரின் என்பதில் இன், ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளது. உலவை : 'மரமும்மரத்தின் கோடும் காற்றும் உலவை' (பிங்); 'உலவை நீள்வனத்தூதமே' (பால. வரை 7), 'உலவை - வளரிளங் கொம்பு ;' பழையவுரை.

பி - ம். 1. விழைவுறு.
2. உழைவுறக் கன்னியர்; வுரைக்கு மாதரின், உவக்கு மாறுபோல்.
3. வனமுற ; தளிர்முதல், வயக்கித் தோன்றின.
4. புலர்ந்திடும், பொலிவுறு, பொலிந்திடு. (25)

வேறு

457. பாடலம் வறுமை கூரப்
பகலவன் பசுமை கூரக்
கோடல்கள் பெருமை கூரக்
குவலயஞ் சிறுமை கூர
ஆடின மயில்கள் பேசா
தடங்கின குயில்க ளன்பர்க்
கேடுறத் தளர்ந்தார் போன்றுந்
திருவுறக் கிளர்ந்தார் போன்றும்.

பாடலம் - பாதிரி மரங்கள், வறுமை கூர - (மலர்கள் இன்மை யின்) வெறுமை நிலையை அடைய, பகலவன் - சூரியன், பசுமை கூர - குளிர்ந்ததன்மை மிக, கோடல்கள் - வெண்காந்தட் செடிகள், பெருமை கூர - (மலரப் பெறுதலாற்) பெருமை மிக, குவலயம் - குவளை மலர்கள், சிறுமை கூர - வாட்டம் மிக, மயில்கள்- மயில்கள், திரு உற கிளர்ந்தார் போன்று - பொருட் செல்வம் கைவரப் பெற்றதால் மன வெழுச்சி யுற்றனபோல, ஆடின - நடித்தன; குயில்கள் - குயில்கள், அன்பர் கேடுற தளர்ந்தார் போன்று - தம்முடைய அன்பர் வறுமையால் நிலைத் தளர்வினை யெய்த அதுகண்டு மனம் நெகிழ்ந்தவர் போன்று, பேசாது அடங்கின - கூவாது ஒடுங்கின.

பாடலம்-வடசொல்: பாதிரி மரம். இம்மரம் கோடையில் மலர்வது; இதன் மலர் வெண்ணிறமும் நறுமணமு முடையதாகலின், இதனைப் பருகு நீர்ப்பானைகளில் இடுவது வழக்கம். கூர - மிக; 'கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்' ; (தொல். சொல். 314); 'கோடல்கள் பெருமை கூர - கார்த்திகைப் பூ புஷ்பிக்க' என்பது பழையவுரை ; குவலயம் - வடசொல்; 'குவலயம் - நீலோற் பலம்' என்பது பழையவுரை; இது குவளையெனத் திரிந்து வழங்கும். கார்ப்பருவம் ஆதலின் மயில்கள் ஆடின; 'கார்பெற்ற தோகையோ' என்பது நளவெண்பா (404); அன்பர்க்குக் கேடுறின் அது கண்டு தளர்தல் வேண்டும், கிளர்தல் சிறியார் செய்கை என்பதை, 'மிக்கார் தம் கேட்டின்கண் மேன்மை யில்லாச் சிறியார் போல்' (சீவக. 1227) என்ற இடத்துக் காண்க. 'கிளைஞருடைய மனப்பான்மையை அளக்கும்கோல் ஒருவற் குறுங்கேடு' என்பர் திருவள்ளுவர் ; குறள். 796. மற்றும் இச் செய்யுட் கருத்து, நாலடி. 208, 209; என்ற செய்யுட்களின் கருத்தை ஒருபுடை ஒத்தி ருத்தல் உய்த்துணர்க. இச்செய்யுள் உவமையணி. வறுமை, பசுமை

பெருமை, சிறுமை, ஆடின, அடங்கின, தளர்ந்தார், கிளர்ந்தார் என்ற இடங்களிற் சொல் முரண் காண்க. உம்மைகள் இறந்ததும் எதிரதும் தழுவி நின்றன. திருவுறக் கிளர்ந்தார் போன்று மயில்களும், கேடுறத் தளர்ந்தார் போன்று குயில்களும் என்க.

பி - ம். 1. வறுமை கூர்ந்த.
2. கூர்ந்த.
3. குயில்கள் ஆக்கம்.
4. தேடுவார் பொலிந்தார் போன்றும், பிறந்தார், வளர்ந்தார், திதறக் கிளைஞர் போன்றும், கிரியுறக் ; (26)

458. வாளெயிற் றரவம் போல
வான்றலை தோன்ற வார்ந்த
தாளுடைக் கோட றம்மை
தழீஇயன காத றங்க
மீளல வவையு மன்ன
விழைவன வுணர்வு வீந்த
கோளர வென்னப் பின்னி
யவற்றொடுங் குழைந்து சாய்ந்த.

வாள் எயிறு அரவம் - வாட்படை போன்ற (கூரிய) நச்சுப்பற்களை யுடைய நாகங்கள், வான் தலை போல-தம்முடைய உயர்ந்த தலையைப் போன்று, தோன்ற வார்ந்த - தெரியும்படி நீண்ட, தாள் உடை கோடல் தம்மை - தண்டினையுடைய வெண்காந்தட் செடிகளை (அரவங்கள் என்றே எண்ணி), காதல் தங்க தழீஇயன - ஆசை பொருந்த அணைந்தனவாய், மீளல - விட்டு நீங்காமலிருந்தன; அவையும் - அந்தவெண் காந்தட் செடிகளும், அன்ன விழைவன - அவ்வாறே விரும்புவனவாய் (அக்காதற் பெருக்கால்), உணர்வு வீந்த கோள் அரவு என்ன - (தமக்கு இயல்பாகவுள்ள) தீண்டும் உணர்ச்சி நீங்கிய நாகங்கள் போல, அவற்றொடும் பின்னி குழைந்து சாய்ந்த - அந்த நல்ல பாம்புகளுடனே பிணைதலுற்றுச் சாய்ந்து கிடந்தன.

தாம் உயர்த்தும் படம் போன்று மலர்ந்த வெண்காந்தட் செடிகளை நாகங்கள் தழுவா நிற்க, அந்தச் செடிகளும் நாகங்கள் ஒப்ப அவற்றைப் புல்லின என்க. நாகங்கள் ஈருடலும் ஒருடலாகக் காணுமாறு பின்னிப்புணரும் என்பர், இதனைத் ' தோளும் தாளும் பிணைந்துருவொன்

றெய்தி, நாளும் நாகர் நுகர்ச்சி நலத்தரோ ’ (சீவக. 1347); மற்றும் சீவக, 189 ; 217; பெருங், 4, 4, 100-102. என்பன கொண்டறிக. மலர்ந்த வெண் காந்தள் பாம்பின்படம் போன்று காணப்படும் ஆகலின், இவ்வாறு கூறினர். ஒப்பு : ‘அரவு பைத்தாவித்தன்ன வங்காந்தள் அவிழ்ந்தலர்ந்து’ (சீவக, 1651); மற்றும் திணைமொழி. 29 : திணைமாலை, 107, 119, 150 ; கார். 11 ; குறுந். 185. கலித் : 45. என்ற இடங்களைக் காண்க. இச்செய்யுள் மயக்கவணி. ஊற்றுணர்ச்சி ஓரறிவுயிரான செடிகட்கும் உண்டாகலின், அவை இன்பவுணர்ச்சி யுற்றனவாகக் கூறினர்.

பி - ம். 1. *போல வன்றலை; கான்ற மானத் ; போன்ற மானத் ; தோற்ற வார்ந்த, தோற்ற மானத்.*

2. *கோட றம்பில்; தழீஇயன காதற் றங்கி.*

3. *மீனல வலையும், மீனுமெல் லணையின் மன்னன், மீளமெல் லணையின் மன்னன், மீனுநா ளணையின் மன்னன், மீனுநாள் வைகு மன்ன; விழவினுள் ளணிகள், விலைழவின வுருவுவீர்ந்த.*

4. *அரவென்ன மின்னி, வொன்றி மின்னி, தோளெனப் பின்னி யாங்கே யவற்றெடும் துலங்கிச் சாய்ந்த.* (27)

இது ஒரு பிரதியில் இடமாறி யுள்ளது. இதன்பின் ‘வள்ளெ யிற்று’ என்ற செய்யுள் ஒரு பிரதியில் உள்ளது.

459. நானிறச் சுரும்பும் வண்டும்
நவமணி யணியிற் சாரத்
தேனுக மலர்ந்து சாய்ந்த
சேயிதழ்க் காந்தட் செம்பூ
வேனிலை வென்ற தம்மா
காரென வியந்து நோக்கி
மானிலக் கிழத்தி கைகண்
மறித்தன போன்ற மன்னே.

நால்நிறம் சுரும்பும் வண்டும் - பல நிறங்களையுடைய சுரும்புகளும் வண்டுகளும், நவமணி அணியின் சார - ஒன்பது வகை இரத்தினங்கள் பதித்துச் செய்யப்பெற்ற வளைகள்போல (காந்தள் மலரின்மேல்) மொய்க்க, தேன் உக மலர்ந்து சாய்ந்த - தேன் ஒழுகும்படி விரிந்து சாய்ந்துள்ள, சேய்இதழ் காந்தள் செம்பூ - சிவந்த இதழ்களையுடைய செங்காந்தள் மலர்கள், மால்நிலம் கிழத்தி - பெருமைசான்ற பூமிப்

பிராட்டி, நோக்கி - (கார்ப்பருவத்தின் எழிலைக்) கண்ணுற்று, 'வேனிலை வென்றது கார் அம்மா - வசந்தகாலத்தையும் மிஞ்சிவிட்டது கார்காலம்' என்று வியப்புற்று, மறித்தன கைகள் போன்ற - (தன் வியப்பை வெளிக்காட்டுமாறு) மடக்கி நின்றலகைகளை ஒத்தன. மன், ஓ: ஈற்றசைகள். அம்மா, வியப்பிடைச்சொல்.

இது தற்குறிப்பேற்றவணி. கார்காலத்திற் செங்காந்தள் மலர்கள் விரிந்து சாய்ந்திருந்தமை, பூமகள், 'வசந்த காலத்தையும் வெற்றிகொண்டது கார்ப்பருவம்' என்று வியந்து கைமறித்தாற் போன்றிருந்தது. முதுவேனிற் காலத்து நிகழும் வெப்பம், வியர்வு, அசதி முதலியவற்றை யொழித்தமையினால், வேனிலைக் கார் வென்றது என்றார். நானிற வண்டு - நான்குசாதி வண்டு; 'நானாவிதச் சுரும்பு என்பாருமுளர்' என்பது பழையவுரை. இதனைப் பற்றிய அரிய குறிப்புக்களை சீவக. 892, 893-ஆம் செய்யுட்களின் உரையில் காணத் தகும். செங்காந்தள் மகளிர் கைக்கு; 'காந்தள் நறுங்குலை யன்ன நலம் பெறு கையினள்' (ஐங்குறு. 293); மற்றும், அகம். 108; 15-18; பெருங். 2, 15, 73-74; 4. 11. 78-79; சூளா. நாடு 1. முதலிய இடங்களிற் காண்க. மாநிலம் எதுகை நோக்கி மானிலம் என வந்தது மாம். இனி மறித்தல் என்பதற்குத் தடுத்தல் எனப் பொருள் கொண்டு, வேனில் தன்னியல்பினைக் கெடுக்க வெழுந்த கார்ப்பருவத்தை வாராமற் றடுத்தது எனவும் கொள்ளலாம். 'கை மறித்தல் - கை விரித்துக் கொண்டாடுதல்' என்பது பழையவுரை. மறித்தல்; அயோ. நகர்நீங்கு. 136; சீவக. 1227.

பி - ம். 1. வண்டு நவமணி, சுரும்பு விண்ட.
2. தேனுக மலர்ந்த சந்தச், மலர்ந் தலைசந்த, மலர்ந்த செவ்விதழ். 3. வேனலை.
4. மா நிலக்; மறிப்பன; போன்றுமன்னோ, போன்றயன்றே, போன்றதன்றே. (28)

460. எள்ளிட விடமொன் றின்றி
யெழுந்தன விலங்கு கோபம்
தள்ளுறத் தலைவர் தம்மைப்
பிரிந்தவர் தழுவத் தூய
கள்ளுடை யோதி யார்தங்
கலவியிற் பலகாற் கான்ற
வெள்ளடைத் தம்பற் குப்பை
சிதர்ந்தென விரிந்த மாதோ.

எள் இட இடம் ஒன்று இன்றி - ஓர் எள்ளைப் போடுவதற்குக்கூடச் சிறிதும் வெற்றிடமில்லாதபடி, எழுந்தன - கிளம்பினவாய், இலங்கு - விளங்கும், கோபம் - இந்திரகோபம் என்னும் தம்பலப்பூச்சிகள், தள்ளூற-சிறிது அப்பால் அகன்றிருக்குமாறு, தம்மை பிரிந்தவர்- (தம்மை விடுத்துப் பிரிவுகளை மேற்கொண்டு) வேற்றுநாடு சென்றிருந்த, தலைவர் - தமது கணவன்மார், தழுவ - (கார்ப்பருவத்தில்) மீண்டு வந்து அணைய, தூய கள் உடை ஓதியார் - பரிசுத்தமான (தாம் அணிந்த அன்றலர்ந்த மலர்களின்) தேன் நிறைந்த கூந்தலையுடைய மகளிர், தம் கலவியில் - தமது புணர்ச்சியில், பலகால் கான்ற - பல தடவைகளில் உமிழ்ந்த, வெள்அடை தம்பல் குப்பை - வெற்றிலை உமிழ்நீர்களின் குவியல், சிதர்ந்து என - இறைந்து கிடந்தாற்போல, விரிந்த - பரந்து கிடந்தன. மாது, ஓ; அசைகள்.

தானியங்களில் மிகவும் சிறிதான எள்ளினைப் போடவும் இடமின்றி எழுந்தன தம்பலப் பூச்சிகள் என்று அவற்றின் மிகுதி கூறப்பட்டது. 'எள்ளிருக்கும் இடமின்றி' (உயுத்த. இராவணன் வதை. 239). எள் என்பது தொல்காப்பியத்திலும் பிற நூல்களிலும் எண் என்றே வழங்கியுள்ளது, சீவக. 93 ; 538, 635. ஒன்று - சிறிது. 'யாவர்க்காயினுந் தீதொன்றின்றி' (பெருங். 4. 2 ; 53) ; கோபம் - இந்திரகோபம். இது செந்நிறமாகலின் தம்பலத்துக் குவமித்தார். 'இராவணன் கோபநிற்க இந்திரகோபமென்னே' 462 ; தள்ளூற-காலம் செல்ல : 'காலம் தள்ளுதல்' என்ற வழக்குக் காண்க. ஓதி-பெண்மயிர்; ஆரணிய. 623, 642; சிலப். காடுகாண். , 195; 'ஓதியிருந்தும் அறிவில்லையோ சொலுமுங்களுக்கே' (தஞ்சைவாணன்). தூயவோதியார் - கணவனன்றிப் பிறரால் தீண்டப்பெருத கூந்தலையுடையவர் என்க. கூந்தற் றீண்டுதல் மணந்த கணவற்கே உரியதென்பது சங்கப்பனுவல்களிற் காணலாம்; கலித். 87 ; 89 ; குறுந். 225 ; புறநா. 113 ; சீவக. 1229. கான்ற - உமிழ்ந்த : இதனை இடக்கர்ச் சொல்லாகக் கூறுவர். 'பகல்கான்றெழுதரு பல்கதிர்ப் பரிதி' (பெரும்பாண். 2) காண்க. 'பச்சைமாலனைய மேகம் பௌவ நீர்பருகிக் கான்ற எச்சில் நாற்றிசையு முண்ணும்' (டாக்டர் சாமிநாதையர் தனிப்பாடல்). தம்பல்-தம்பலம் ஈறுகுறைந்து நின்றது ; இதனைத் தாம்பூலம் என்ற வடசொற் சிதைவு என்பர்; குறிஞ்சிக்கலி. 29; 'மேவரு கோப மன்ன வெள்ளடைத்தம்பல் கண்டார்' (பால. வரைக்காட்சி 49). வெள் அடை; இது வெள்ளிலை யெனவும் படும். 'மேனகை வெள்ளடை யுதவ'

(சுந்தர. 408). இதனை மெல்லிலை யென்றும் வழங்குவர் ; சீவக. 62.

பி - ம். 1. *விடனு மின்றி; விடமு மின்றி, எங்கனு மெழுந்த கோபம்.*

2. *தள்ளலி னன்பர் தம்மை, தழுவித் தாமத், தழைய, தழீஇய தூய, தழீஇய தூமத்.*

3. *கள்ளிடை, கள்ளுடை.*

4. *வெள்ளடைத் தம்ப லெங்குஞ் சிதர்ந்தன, சிறந்தன, இசைந்தன, விரிந்த; சிந்தியே, விலங்கல் போனும்.* (29)

இஃது ஓர் பிரதியில் இல்லை.

461. நன்னெடுங் காந்தட் போதி
னறைவிரி கடுக்கை மென்பூத்
துன்னிய கோபத் தோடுந்
தோன்றிய தோற்றந் தும்பி
இன்னிசை முரல்வ நோக்கி
யிருநில மகள்கை யேந்திப்
பொன்னெடுங் காசை நீட்டிக்
கொடுப்பதே போன்ற தன்றே.

நல் - அழகிய, நெடு - நீண்ட, காந்தள் போதில் - செங்காந்தட் பூவில், நறைவிரி கடுக்கை மெல் பூ - தேன் நிறைந்த கொன்றையின் மெல்லிய மலர்கள், துன்னிய கோபத்தோடும் - (அவற்றிடம்) வந்து பொருந்திய தம்பலப் பூச்சிகளுடன், தோன்றிய - காணப்பெற்ற, தோற்றம் - காட்சி, இன்இசை முரல்வ தும்பி நோக்கி - இனிய இசையைப் பாடுவனவாய்த் (தம்மிடம் வரும்) வண்டுகளைப் பார்த்து, இருநில மகள் - பெரிய பூமிப்பிராட்டி, கை ஏந்தி நீட்டி - தன் கைகளை உயர உயர்த்தி நீட்டி, பொன்னொடும் காசை-பொன்னுடன் அரதனங்களையும், கொடுப்பதே - ஈவதையே, போன்றது - ஒத்திருந்தது. அன்று, ஏ— ஈற்றசை.

தற்குறிப்பேற்றம். இங்குக் காந்தள்கை, கொன்றை மலர் பொன், இந்திர கோபம் மாணிக்கம், கொன்றைப் பூ இதழ் பொன்: 'கொன்றை கொடை வேந்தனெனப் பொன் சொரியும் வெங்கடமே' (திருவேங்கட; 45). நறைவிரி - மணம்பரந்த எனினுமாம். வண்டுகளின் ரீங்காரத்தை இசையாகக் கூறுவது கவிமரபு. 'குழல் வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே' (29) 'தென்ன தெனவென்று வண்டு

முரல்; (திருவாய். 3, 9 ; 1). 'வாசவண்டு மோகன முகாரிராகம் பாடுமே'; (அண்ணுமலை. காவடிச்சிந்து) என்பன காண்க. காசு நவ மணிகளின் பொதுப் பெயர்; இங்கே மாணிக்கத்தைக் குறித்தது. 'திங்குயில் மணந்து தேன் துஞ்சவண்டு பாண்செய, வேங்கை நின்று பொன்னுகுக்கும் வெற்பு' (சீவக ; 149) என்ற வரிகளை இங்கு ஒப்பு நோக்குக. தும்பி தோற்றம், தும்பி முரல்வன என்று இணைத்தலும் ஆம்.

பி - ம். 1. நறவிரி கடுக்கை நன்பூத், தன்பூத்.
3. மின்னிசை முரல நோக்கி, யிருநில மலர்க்கை யேந்தி, நிலமக ளுவகை யெய்தி, நிலமகப் பெண்கை யேந்தி, யிருநிலப் பெண்கை யேந்தி, யிருநில முவகை யெய்தி, நிலமக ளுவகை யேற, யேற்ப.
4. பொன்னெடுங் காசை, காசை யீட்டிக்; கொடுப்பவே போன்ற வன்றே, கொடுப்பன, தன்றே, தன்றே, போன்ற தன்றே.(30)

462. தீங்கனி நாவ லோங்குஞ்
சேணுயர் குன்றிற் செம்பொன்
வாங்கின கொண்டு பாரின்
மண்டுமால் யாறு மான
வேங்கைநன் மலருங் கொன்றை
விரிந்தன வீயு மீர்த்துத்
தாங்கின கலுழி சென்று
தலைமயக் குறுவ தம்மில்.

தீம் - இனிமையான, கனி - பழங்களைத் தாங்கிய, நாவல் ஓங்கும் - நாவல் மரம் உயர்ந்து விளங்கும், சேண் உயர் குன்றின் - விண் வரை உயர்ந்திருந்த மேருமலையினின்று, வாங்கின செம்பொன் கொண்டு - இழுத்துக் கொண்டு வந்த சிவந்த பொன்னைச் சுமந்து கொண்டு, பாரில் மண்டு - தரையில் மிக்குச் செல்கின்ற, மால் யாறு - பெரிய (ஜம்பு) என்னும் நதியை, மான - ஒப்ப, (அருகிலுள்ள மலையி லிருந்து) வேங்கை நல் மலரும்-வேங்கை மரத்தின் சிறந்த மலர்களையும், கொன்றை விரிந்தன வீயும் - கொன்றை மரத்தில் மலர்ந்தனவான

அரும்பூக்களையும், ஈர்த்து தாங்கின - இழுத்துக் கொண்டு சுமந்துவந்த, கலுழி - கலங்கிய வெள்ளநீர் ஆறுகள், சென்று - ஓடி, தம்மில் தலை மயக்கு உறுவ - தமக்குள் கலந்து ஒன்றுபடுவனவாயின.

தீங்கனி நாவலோங்கும் தீவு சம்புத் தீவென்பர். இதன் வரலாற்றை (மணி 6: 192 ; 9 ; 17) உரை விளக்கத்திற் காண்க. இதன் காவல் தெய்வதம் சம்பாபதி யென்ப. விரிந்தன - வினையாலணையும் பெயர். வீ - காயரும்பு; மலரும் ஆம். ஈர்த்து - இழுத்துக் கொண்டு 'முத்தீர்த்துப் பொன் திரட்டி' 740. தலைமயக்குறுதல் - கலத்தல் 'தள்ளு நீர்மையிற் றலைம யங்குமே' (பால. நாட்டு. 54); 'தன்னில் வந்து தலைமயக் குற்றனர்' (உயுத்த. முதற்போர்; 46). வேங்கை மலரும் கொன்றை மலரும் பொன்னிறத்தன ஆகலின் பொன்னுக்குவமை யாக்கினர்.

பி - ம். 2. *வாங்கினன் கொண்டு ; மால் மகளிர் மான, யானை மான.*

3. *வேங்கை நாண் மலரும்; விரிந்தன, விரிந்தன் ; விரிந்த நாள், மீந்தன, வீயு மீய, வீயுமாயா, வீயு மீதாய், வீயு மெய் தாய், வீய்ந்தன, வீயு மன்பார்த்.*

4. *நதிகள் சென்று; வொன்றே டொன்று, நிகழ்வ சென்று, தலைமயக் குறுவ தம்மா ; தம்மின்.* (31)

இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

463. கிளைத்துணை மழலை வண்டு
கின்னர நிகர்த்த மின்னும்
துளிக்குரன் மேகம் வள்வார்த்
தூரியந் துவைப்ப போன்ற
வளைக்கையர் போன்ற மஞ்ஞை
தோன்றிக ளரங்கின் மாட்டு
விளக்கின மொத்த காண்போர்
விழியொத்த விளையின் மென்பூ.

கிளை - கைக்கிளை யென்னும் இசையை, துணை - ஒத்த, மழலை வண்டு - இனிய ஓசையையுடைய வண்டுகள், கின்னரம் நிகர்த்த - கின்னர யாழைப் போன்றன; மின்னும் துளி குரல் மேகம்-மின்னுகின்ற நீர்த்துளியையும் இடியோசையையுமுடைய மேகங்கள், வள் வார் தூரியம் துவைப்ப போன்ற - அடர்ந்த தோல் வாரினாற் பிணிக்கப்பட்ட மத்தளங் கள் ஒலிப்பன போன்றன ; மஞ்ஞை - மயில்கள், வளை கையர் போன்ற- வளையல் அணிந்த கைகளையுடையவர்களான மகளிரை நிகர்த்து விளங் கின ; தோன்றிகள் - செங்காந்தட்பூக்கள், அரங்கின் மாட்டு - நாட்டிய சாலையில் (ஏற்றி வைக்கப்பட்ட), விளக்கு இனம் ஒத்த - தீபங்களின் கூட்டத்தை ஒத்தன ; விளையின் மெல்பூ - கருவிளையின் மெல்லிய மலர்கள், காண்போர் விழி ஒத்த - பார்ப்பவர்களுடைய கண் களைப்போன்றன.

'தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கம் தாங்கக் கொண்டல்கள் முழவினேங்கக் குவளை கண் விழித்து நோக்கத் தெண் டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகரயாழின், வண்டுகள் இனிதுபாட மருதம் வீற்றிருக்கும் மாதோ'; (பால. நாட்டு, 4); 'ஆடமைக்குயின்ற வவிர்துளை மருங்கிற் கோடை யவ்வளி குழலிசையாகப், பாடின்னரு விப்பனி நீரின்னிசைத் தோடமை முழவின் துதை குரலாகக், கணக்கலை யிருக்கும் கடுங்குரல் தூம்பொடு. மலைப் பூஞ்சாரல் வண்டு யாழாக, வின்பலிசை கேட்டுக் கலிசிறந்து, மந்தி நல்லவை மருள்வன நோக்கக் கழைவள ரடுக்கத் தியலியாடுமயில், நனவுப்புகும் விறலியிற்றோன்றும் (அகம். 82); என்ற பாடல்களும் பால. அகலிகை. 64,ம் இங்கே ஒப்பு நோக்கத்தகுவன.

இஃது இயைபுவமை யணி. கிளை, ஏழு இசைகளில் ஒன்று; மற்றவை, குரல், துத்தம், உழை, இளி, விளரி, தாரம் என்பன. கர்நாடக சங்கீதத்தில் உள்ள சட்சமம் முதலிய ஏழிசைகளுள் மூன்ருவ தான காந்தாரமே இந்தக் கிளை யென்பர். 'மந்தார மாலை மலர் வேய்ந்து மகிழ்ந்து தீந்தேன், கந்தாரம் செய்து களிவண்டு முரன்றுபாட', (சீவக. 1959). மின்னும் மேகம், துளிக்குரல் மேகம் எனப் பிரித்துக் கூட்டுக. கின்னரம் - யாழ்; கின்னரம் முறை நிறுத் தெடுத்த', (சுந்தர) 417). துவைத்தல் - ஒலித்தல் (பால. எழுச்சி. 59) ஆரணிய; 570. மஞ்ஞை மகளிர்க்குச் சாயலான் உவமை; மஞ்ஞை போன்று வளைக்கை யர் என்றும், விளையைப்போலும் விழி என்றும் கூருமல் மாற்றிக் கூறி யது எதிர் நிலையணி. வண்டுபாட மயிலாடுதல்; சீவக. 1560. தோன்றிக்கு விளக்கு; 'தோன்றி சுடர்' (சீவக. 1563); 'தோன்றி

தோன்றுபு புதல் விளக்குரு' (நற். 69). கின்னரர் - யாழுடையோர். விளி - கருவிளை; காக்கணம்பூ என்பது பழையவுரை.

பி - ம். 1. நிகர்த்துப் பின்னும்,

2. வள்வாய்த் தூரியம், வள்வார்த் தூம்பினம்; வல்வாய்த் தூம்பினம், வாயாற் றூரியம்; வான்வாய்த் துயின்றன; துயில்வ போன்ற; துளைக்குரல்; மேகம் மாயோய் துயில்வன போன்று தோன்ற.

3. தோன்றின அரங்க மாட்டு.

4. நிகர்த்த காண்போர், விழியொத்த வீயின் வேய்ந்த, மென்பூ, விள்வின்விழி, கரு விளம் வீயொத்த, கருங்குவளை யெய்ந்த.(32)

464. பேடையு ஞிமிறும் பாயப்
 பெயர்வுழிப் பிறக்கு மோசை
ஊடுறத் தாக்குந் தோறு
 மொல்லொலி பிறப்ப நல்லார்
ஆடியற் பாணிக் கொக்கு
 மாரிய வமிழ்தப் பாடற்
கோடியர் தாளங் கொட்டன்
 மலர்ந்தகூ தாள மொத்த.

ஞிமிறும் - ஆண்வண்டுகளும், பேடையும் - பெண் வண்டுகளும், பாய - (ஒன்றின்மீதொன்று) தாக்குமாறு, பெயர்வுழி - செல்லும் பொழுது, பிறக்கும் - எழும், ஓசை - ஓசையும், ஊடு உற தாக்கும் தோறும் - (அவ்வண்டுகள்) தமக்குள்ளே நுழைந்து ஆரவாரிக்கும் போதெல்லாம், பிறப்ப - எழுவனவாகிய, ஒல் ஒலி - ஒல் என்னும் ஓசையும், நல்லார் ஆடு இயல் பாணிக்கு ஒக்கும் - அம்மலையில் தேவமாதர் வந்தாடுகின்ற நடிப்புமுறைக்கேற்ற கைத்தாளத்தை ஒத்திருக்கும்; மலர்ந்த கூதாளம் - கூதாளிகள், ஆரிய அமிழ்தம் பாடல் - ஆரியக் கூத்தர்களின் அமுதம் ஒத்த இனிய பாடல்கட்கேற்ப, கோடியர் தாளம் கொட்டல் ஒத்த - கூத்தர்தாளம் கொட்டுவதை நிகர்த்தன.

மிஞிறு-ஞிமிறு. இலக்கணப்போலி. இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி. ஆரியப் பாடல் - சிறந்த பாடல். கோடிய தாளம் என்ற பாடத்

திற்குப் புதியதாளம் என்க. கோடியர் - 'கோடியர் நீர்மைபோல, ஆடுநர் கழியு மிவ்வுலகத்து'; (புறநா. 29), பாணி - கைத்தாளம் சுந்தர. 1090; ஆரணிய. 566; 575. 'அழிந்து அந்த வண்டுகள் ஊடுறத் துறந்து அப்பால் ஓடுந்தோறும் சிறுக அனுகரண ஒலி உண்டானது, பெண்கள் கூத்துக்குளார்க்கும் அமுதப்பாடலாயிற்று. நட்டுவர் கைத்தாளம்போல மலர்ந்தது கூதாளம் என்னும் பூ. இந்தக் கவிக்கு இசைப்பாடலும் தாளமுமென இரண்டு பொருள் கண்டு கொள்க' என்பன பழையவுரை.

பி - ம். 1. மிஞிறும், பெயர்வுறப், பேர்வுறப், பேருறப் பிறக்கு மோசை, பெயர்வுறும்.
2. ஊடலில், ஊடனுற் றார்க்குந் தோறும்.
3. ஆடலின் பாணிச், ஆடிய பாணிச், பாணிக் கேற்கு.
4. கோடியர் கரங்கள் கொட்ட, கோடல்கள் கரங்கள் கொட்ட கூதாள மன்னோ, கூதாளி மாதோ. (33)

465. வழைதுறு கான யாறு
மாநிலக் கிழத்தி மக்கட்
குழைதுறு மலைமாக் கொங்கை
சுரந்தபா லொழுக்கை யொத்த
விழைவுறு வேட்கை நாளும்
வேண்டினர்க் குதவ வேண்டிக்
குழைதொறுங் கனகந் தூங்கு
கற்பக நிகர்த்த கொன்றை.

வழை துறு - சுரபுன்னை மரங்கள் அடர்ந்த, கானயாறு - காட்டாறுகள், மா நிலம் கிழத்தி - பெரிய பூமிப்பிராட்டி, மக்கட்கு - (தன்) புதல்வர் புதல்விகளின்பொருட்டு, உழை துறு மலை மா கொங்கை - பக்கங்களில் அடர்ந்து நெருங்கிய மலைகளாகிய தனது பெரிய தனங்களிலிருந்து, சுரந்த - (அன்புமிகுதியாற்) பெருகவிட்ட, பால் ஒழுக்கை - பாலின் தாரைகளை, ஒத்த - போன்றன; கொன்றை - (பொன்போன்ற மலர்களைப் பூத்த) கொன்றை மரங்கள், விழைவு உறு வேட்கை - (பொருள்களின்மேல்) அவாக்கொள்ளும் ஆசையினால், நாளும் வேண்டினர்க்கு - தினந்தோறும் விரும்பி வந்தோர்க்கு, உதவவேண்டி - ஈவதைக் கருதி, குழைதொறும் கனகம் தூங்கும் - தளிர்கள்தோறும் பொன்னைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கும், கற்பகம் நிகர்த்த - கற்பக மரங்களை ஒத்தன.

இது தற்குறிப்பேற்றவணி. மலையைப் பூமிப்பிராட்டியின் கொங்கையாகக் கூறினர்; ஒப்பு. 'பணைத்தோள் மாநில மடந்தை யணிமுலைத் துயல்வருஉம் ஆரம்போல' (சிறுபாண். 1-2); 'சோதிமதி வந்து தவழ் சோலைமலையோ டிரண்டாய், மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடமே' (திருவேங்கடமாலை: 2); 'கொங்கையே பரங்குன்றமும் கொடுங்குன்றும்' (திருவிளை. நகர. 2). யாறு நிலமகள் மக்கட்குக் கொங்கை பால்சுரப்பது போன்றது என்றார்; 'சரயுவென்பது தாய்முலை யன்னது' (பால. ஆற்றுப். 12); 'சரையெனும் பெயருடைத் தடங் கொள் வெம்முலைக் குரைபுனற் கன்னிகொண் டிழிந்த தென்பவே' (சீவக. 39), 'தடம் - மணற்குன்று; முலைபோற் சுரத்தலின் முலையாம்' (ஷை நச். உரை) என்பன காண்க. 'இது வேண்டும் என்றெழுதல் அவா, சென்றேயது பற்றுதல் ஆசை' என்னும் வேறுபாடு தோன்றக் கூறினமையின், 'விழைவுறு வேட்கை' என்றார். வேட்கை யொருதலை யுள்ளுதல்' (தொல். களவி: 9); 'வேட்கையை வேட்கும்' (உயுத்த. நாகபாச: 299). தூங்குதல் - தொங்குதல்; (குறுந். 18). இனி விழைவுறு வேட்கையால் உதவவேண்டிக் குழைதொறுங் கனகம் தூங்கப்பெற்ற கற்பகம் எனக் கொண்டுகூட்டிப் பொருள் கொள்ளலுமாம். 'விழைவுறு வேட்கையின்றி' என்ற பாடத்துக்கு, விருப்பத்துடன் பிரதியுதவிக்கு ஆசைப்படாமல் என்பர். 'உதவாமல் ஒருவன் செய்த வுதவிக்கு', 617; 'செய்யாமற்செய்த வுதவிக்கு' (குறள்.101) என்ற இடத்து 'மறித்துதவ மாட்டாமை யுள்ளவிடத்துச் செய்தவுதவி' என்றதும் நோக்குக.

பி - ம். 1. *மழை.*

2. *குழைவுறு, குழைவுற, குழைவற, குழைநறு; சொரிந்த பாலொழுக்கை, ஊர்ந்த.*

3. *விழையிறு வேட்கையோடும், வேட்கை காலும், வேட்கை யின்றி; வேண்டினார்க்.*

4. *கனகந் தூக்கும், தூர்க்கும்; நிறத்த கொன்றை,* (34)

இஃது ஓர் பிரதியில் இல்லை.

466. பூவியல் புறவ மெங்கும்
பொறிவரி வண்டு போர்ப்பத்
தீவிய களிய வாகிச்
செருக்கின காமச் செவ்வி
ஓவிய மான்க டோறு
முரைத்தற வுரிஞ்சி யொண்கேழ்
நாவியின் மணங்க ணாறக்
கலையொடும் புலந்த நவ்வி.

பூ இயல் புறவம் - மலர்கள் செறிந்த காடுகள், எங்கும் - முழுவதும், பொறிவரி வண்டு போர்ப்ப - உடற்புள்ளிகளையும் இசைப்பாடல்களையுமுடைய வண்டுகள் மொய்ப்ப, தீவிய களிய ஆகி - (நோக்குவோர்க்கு) இனிய மகிழ்வைத் தருவனவாய், செருக்கின - தழைத்து விளங்கின ; (அங்கே ஆண்மான்கள்), காமம் செவ்வி - (தாம்கொண்ட) காதல் முதிர்வால், ஓவியம் மான்கள்தோறும் - சித்திரம் போன்று அழகிய நாவி மான்கள் மீதெல்லாம், உரைத்து அற உரிஞ்சி-உராய்ந்து நன்கு உடல் தேய்ந்துவந்து, ஒள்கேழ் நாவியின் மணங்கள் நாற - ஒளிபொருந்திய நல்ல பக்குவம் முதிர்ந்த கத்தூரியின் நறுமணம் (உடலில் கமழ), கலையொடும் - அந்த ஆண் மான்களோடும், நவ்வி - பெண் மான்கள், புலந்த - (அவற்றை இனம் வேறுபட்ட கத்தூரி மானோடு புணர்ந்து வந்தன எனக் கருதி) ஊடின.

தீவிய - தீம் என்றதன் அடியாகப் பிறந்த பெயரெச்சம். வரி - வரிப்பாட்டு; 'கானல் வரி, வேட்டுவ வரி' (சிலப்.). செவ்வி - பக்குவம், ' மலரினும் மெல்லிது காமம் சிலரதன், செவ்வி தலைப்படுவார் ' (குறள். 1289). ஓவியமான்-(ஒப்பு): பெரியாழ். 3, 6, 9. உரைத்தல்-உராய்தல்; பால. வரைக். 8 ; உரிஞ்சி - உராய்ந்து (பிங்.). நாவி - கத்தூரி; 'நாவி யகலமெழுதி'; (பிரபுலிங்க. பிரபுதேவ. 28.) நாவி என்பது 'நாபி' என்ற வடசொல்லின் விகாரம். நாபியில் விசேஷமுடையது (தக்க. 34). நவ்வி-மான்; இங்கே பெண்மான். ஆரணிய. 256, அயோத்தி. கைகேசி 88 ; கிளைகண்டு 11. கலை - ஆண் மான் ; ' இரலையும் கலையும் புல்வாய்க் குரிய' (தொல். மரபி. 44). நவ்வி இனம் நாவியினின்றும் வேறுபட்டதாதலின், நாவி மணம் கமழப்பெற்ற ஆண் மானுடன் ஊடிற்று என்க. (ஒப்பு) : சிலப் : இந்திரவிழா, 224-34.

பா - ம். 1. ஒக்கும்; போல, போன்ற.

2. தேவியல் களிப்ப, தேவிய களிப்பதாகி, தேவியற் களியவாகி, திவிய களிப்பதாகி, திவிகள் களியவாகி, இனியவாகி.

3. ஒவின, ஒவிய; மரன்கடோறு; முரைத்தவற் றுரிஞ்சி, உரைத்தவற் றுரிஞ்சிப் போன, றுரிஞ்ச. (35)

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

வேறு

467. தேரி னன்னெடுந் திசைசெலச் செருக்கழிந் தொடுங்கும்
கூர யின்னெடுங் கண்ணெனக் குவிந்தன குவளை
மார னன்னவர் வரவுகண் டுவக்கின்ற மகளிர்
மூரன் மென்குறு முறுவலொத் தரும்பின முல்லை.

(தன்னைப் பிரிந்த தலைவன்), தேரினன் - தேரின் மேற்கொண்டவனாய், நெடுதிசை செல - (பிரிந்து) வெகுதூரம் செல்ல, செருக்கு அழிந்து ஒடுங்கும் - அதனால் மகிழ்ச்சி நீங்கி (உடலும் உள்ளமும்) ஒடுங்கப்பெற்ற (தலைவியின்), கூர் அயில்நெடு கண் என - கூர்மையான வேல்போன்ற நீண்ட கண்கள்போல, குவளை குவிந்தன - கருங் குவளை மலர்கள் இதழ் குவியப் பெற்றன: மாரன் அன்னவர் வரவு கண்டு - மன்மதனை யொத்தவரான (பேரெழில் வாய்ந்த) தமது தலைவர் (அம்மாலைக்காலத்தில்) மீண்டு வருவதைப் பார்த்து, உவக்கின்ற - மகிழ்ச்சி மிகுகின்ற, மகளிர் - பெண்களுடைய, மெல் குறு முறுவல் மூரல் - மெல்லிய புன்னகையுடன் கூடிய பற்களை, ஒத்து - போன்று, முல்லை அரும்பின - முல்லைக் கொடிகள் அரும்பீன்றன.

மகளிர் விழிகள் போன்று கருவிளை மலர்கள் இதழ்குவிந்தன: அவர்களுடைய புன்முறுவலொத்து முல்லைகள் அரும்பின. மகளிர் கண்களுக்குக் கருங்குவளையும், பற்களுக்கு முல்லையரும்புகளும், நிறமும் வடிவும் பற்றிய உவமைகள். (ஒப்பு): 'கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளை' (அகம். 228); 'முல்லை நீ நின் சிறு வெண்முல்லையின் முறுவல் கொண்டனை', (குறுந். 162). அயில் நெடுங்கண் எனவே, கண்ணின் கூர்மை பெறப்படுமாயினும் மிகுதி கருதிக் கூர் அயில் என்றார். கண் கட்கு அயில், ஆடவரை வருத்துதலானும் ஆம் என்க. இனித் தேரினன் என்பதை ஒற்றை யாழித் தேரோனான சூரியன் எனக் கொண்டு அவன் மாலை நேரத்தில் பிறிதொரு பெருந்திசையாகிய மேற்குத் திசைக்கண் செல்ல எனப் பொருளுரைப்பர் ஒரு சாரார். ஆயி

னும் குவளை குவிந்ததாகக் கூறினமையின் அந்த உரை பொருந்தாது. குவளை, ஆம்பல் முதலியன மாலையில் மலருமன்றிக் குவியா ; 'குன்றிற் கார்த்திகை விளக்கிட்டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்' (சீவக. 255). இங்கே கூறியது செங்குவளை; மாரிக்காலத்தில் குவளை செவ்வியழியும். இனி 'மாரனன்னவர்' என்ற தொடரை இடை நிலைவிளக்காக்கி தேரில் நன்னெடும் என இணைத்துப் பொருள் கோடலுமாம். பிரிந்த மகளிர் முகம் குவிதலும் கூடிய மகளிர் முகமலர்தலும் இயல்பு. இச் செய்யுள் உவமையணி.

பி - ம். 1. தேரு நன்னெடுஞ், ஒரு நன்னெடுஞ்', செல, செயல்; செருக்கழிந் தொடுங்கி, ஓடி.
2. கூரெயிற்றியர், ரயிற்றருங், ரயிற்கருங்.
3. வரவுகண் டுவப்புறு. (36)

இஃது ஓர் பிரதியில் இல்லை.

468. களிக்கு மஞ்ஞையைக் கண்ணுள ரினமெனக் கண்ணுற்
றளிக்கு மன்னரிற் பொன்வழங் கினமலை யருவி
வெளிக்கண் வந்தகார் விருந்தென விருந்துகண் டுள்ளம்
களிக்கு மங்கையர் முகமெனப் பொலிந்தன கமலம்.

களிக்கும் மஞ்ஞையை - மகிழ்ந்து நடிக்கும் மயில்களை, கண்ணுளர் இனம் என - கழைக் கூத்தரின் கூட்டம் என்று நினைந்து, கண்ணுற்று - (அவற்றின் நடிப்பை) நோக்கி, அளிக்கும் - அன்புடன் (அவற்றிற்குப் பொன்னைப்) பரிசாகக் கொடுக்கின்ற, மன்னரின் - அரசர்களைப்போல், மலை அருவி-மலைகளினின்று வீழும் நீர்ப் பெருக்குக் கள், பொன் வழங்கின-(மலை முழைகளிலிருந்து தாம் அடித்துக்கொண்டு வந்த) பொன்னைப் பொழிந்தன ; வெளி கண் வந்த கார் - ஆகாயத்தில் தோன்றிய மேகங்களை, விருந்து என - விருந்தாளிகள் என்று கருதி, விருந்து கண்டு - விருந்தாளி வந்தது கண்டு, உள்ளம் களிக்கும் - மனம் மகிழ்கின்ற, மங்கையர் - மாதர்களின், முகம் என - முகம் போல, கமலம் - தாமரைக் கொடிகள், பொலிந்தன - (நீரில் இருந்தே) பொற் பொடு விளங்கின.

இதுவும் உவமையணி. களிப்பு என்பது சங்ககாலத்துக் களிப்புண்டு மகிழ்ந்ததையே சிறப்பாகக் குறித்து நின்றது; 'களித்தானைக் காரணம் காட்டுதல்' (குறள். 929); நாளடைவில் இச்சொல் மகிழ்ச்சி என்ற பொதுப் பொருள் கொண்டது. 'கார்பெற்ற தோகையோ' (நள. 404)

என்றதால், 'களிக்கு மஞ்ஞை' யென்ருர். கண்ணுளர் - கூத்தர், கண்ணுள் - கூத்து; இனி, கண்ணுளர் - அறுபதடி மூங்கிற் கம்பத்தேறி யாடும் கூத்தாடிகளுமாம். கண் - கணு; மூங்கிற்கு ஆகுபெயர். மலை யருவிகளிற் பொன் கிடக்கும் என்பர்; 'முத்தீர்த்துப் பொன்றிரட்டி' (739); காவிரிக்குப் பொன்னி யென்று பெயர் வந்ததும் இது கருதி யென்க. மலையருவி ஐந்தாம் வேற்றுமை நீங்கற் பொருளில் வந்தது. கண்ணுளர் கண்ணுற்று என்பதில் எதுகை நயமும் பொருள் நயமும் காண்க. காரினை விருந்தாகக் கொண்டது'; (ஒப்பு) 'காதலர் தூ தொடு வந்த கனவினுக்கியாது செய்வேன் கொல் விருந்து' (குறள். 1211). விருந்து போற்றுதல்; பால, நாட்டுப் 15, 36; சுந்தர. 344; சிலப். 16, 73. இனி இருந்து கண்டென எனப் பிரித்தலுமாம். உள்ளம் களிக்கும் மங்கையர் முகம் 'உள்ளத்தினுள்ளதை யுரையின் முந்துற, மெள்ளத் தன் முகங்களே விளம்புமாகலான்' (உயுத்த. விபீடண 91), பொலிந் தன - பொற்புடன் விளங்கின; 'பொற்பே பொலிவு' (தொல். சொல். 335).

பி - ம். 2. பொன்மழை வழங்கின அருவி.

3. விளிக்க வந்தகார்; வெளிக்கண் வந்தனர்; காரகன்றது வியந்துகண் டுள்ளம், விரிந்தன.

4. தளிர்க்கும், குளிர்க்கும், தழைத்தன, களித்தன, தழைத்தது கமலம்; தளிர்த்தன, தளிர்த்தது மங்கையர் முகமெனக் குளித்தன போலும். (37)

இப்பாடல் ஓர் பிரதியில் இல்லை.

469. சரத நாண்மல ரியாவையுங் குடைந்தன தடவிச்
சுரத நூனெறி விடரெனத் தேன்கொண்டு தொகுப்ப
பரத நூன்முறை நாடகம் பயனுறப் பகுப்பான்
இரத மீட்டுறுங் கவிஞரைப் பொருவின தேனீ.

சுரத நூல் நெறி விடர் என - காம நூலிற் கூறப்படும் முறைகளை நன்குணர்ந்த காமுகர் போன்று, நாள் மலர் யாவையும் - (தேனுடன் கூடிய) அன்றலர்ந்த மலர்களை யெல்லாம், சரதம் குடைந்தன தடவி - இரசத்தைத்துளைத்துத் தீண்டி, தேன் கொண்டு - (அவற்றின் கண் உள்ள) தேனைச் சேகரித்து, தொகுப்ப - தொகுப்பனவான, தேனீ - தேனீக்கள், பரதம் நூல் முறை - நாட்டிய நூல்கள் விதித்தபடி, நாடகம் - நாடகத்தை, பயன் உற பகுப்பான் - (நோக்குவார்க்கு இனிய)

பயன் உண்டாகுமாறு அமையப் புரியும் பொருட்டு, இரதம் ஈட்டுறும் - (ஒன்பான்) சுவைகளையும் ஒருங்குகூட்டி இயற்றுகின்ற, கவிஞரை பொருவின - கவிகளை ஒத்து விளங்கின.

தேனிறைந்த புதுமலர்களை யெல்லாம் கொழுதித் தேன் கூட்டும் தேனீக்கள் பல மகளிரிடமும் சென்று கூடியின்பம் துய்க்கின்ற காமுகர் போன்றிருந்தன; மேலும் அத்தேனீக்கள், தாம் பெற்ற தாதுக்களைத் தேனாக மாற்றியமைப்பது ஒன்பது சுவைகளையும் கூட்டி நாடகம் இயற்றும் நாடக ஆசிரியர்களின் செயலையும் ஒத்தது. வண்டுக்கு-விடர்; உதயகுமரனை வண்டாகவும், மணிமேகலையை மலராகவும் சாத்தனார் கூறியது காண்க. (மணி, 16 : 25 - 28 17 ; 56 - 60); ‘ தவழ் மதுக் கோதை மாதர் தாமரைப் பூவதாக வுமிழ் சுடர் வேலினானும் ஒண்சிறை மணி வண்டொத்தான்' (சீவக. 101). சரதம் - சரஸம் என்ற வட சொற்றிரிபு : இரசத்துடன் கூடியது என்பது பொருள். இனி, சரதம் என்பதற்கு நிச்சயம் எனப்பொருள்கொண்டு உறுதியாக அன்றலர்ந்த மலர் எனினுமாம். சுரதம், விடர் வடசொற்கள்; விடர் - தீய நடையை உடைய காமுகர்; ‘ விடரும் தூர்த்தரும் ' (மணி. 15: 60; 14 ; 61). தேன் தொகுப்ப; ‘கொங்கெங்கே யெங்கேயென்று தனித்தனி குடையும்' (வி.பா. நிவாதகவசர்.76) என்ற தொடரும், ‘நாவலர் தம் புத்திரரும் நண்ணும் பிரமரமும், காவியங்கள் ஆயும் கலைசையே' (கலைசைச். 6) என்ற தொடரும் இங்கே ஒப்பு நோக்கத் தகுவன. பரதம் - பாவம், ராகம், தாளம் என்று மூன்றும் கூடிய பரத நாட்டியம் என்பர். நாடகம் - கதை தழுவி வருங் கூத்து. கவிஞர் நாடகக்காப்பியம் அமைப்பவர்; ஒன்பான் சுவைகளும் பொருந்த அமைத்துக் காட்டுவது அவர் தொழில் என்பது கூறப்பட்டது. கம்ப நாடகம் என்று பெயர்கொண்டு விளங்கும் இந் நூலில் சுவைகள் சொட்டச் சொட்ட அமைத்துக் காட்டிய நம் கவிஞர் பெருமான் கம்பநாடரே இக்கூற்றுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாவர். இனி, ‘ சுரத நூல் தெரிவிடரெனத் தேன்கொண்டு தொகுப்ப ' என்பதற்குப் பெண்கள் அவயவத்தில் உள்ள காமம் எல்லாம் ஒருவழியில் ஆக்குமாபோலே என்பது பழையவுரை.

பி - ம்.
1. *சுருதி, கலவிச்.*
2. *நூறெரி; தேன்கொடு தொகுப்ப, தேன்கண்டு, தோள்கொடு.*
3. *நாடகப்பயனுற; பகுவர், பகுப்பார்.*
4. *மீட்டிய.*

(38)

**470. நோக்கி னனமை நோக்கழி கண்டநுண் மருங்குல்**
**தாக்க ணங்கருஞ் சீதைக்குத் தாக்கருந் துன்பம்**
**ஆக்கி னனம துருவினென் றரும்பெற லுவகை**
**வாக்கி னுரை யாமெனக் களித்தன மான்கள்.**

'நோக்கினல் - (தனது) பார்வை யழகினல், நமை'- நம்மை, நோக்கு அழி கண்ட - பார்வையின் அழகு கெடுமாறு செய்த, நுண் மருங்குல் - நுட்பமான (கட்புலனுகாத) இடையினையுடைய, தாக்கு அணங்கு - (நல்லவர் தீயவர் என்ற எல்லோரிடமும் சென்று) தங்கும் திருமகள் போன்ற, அரும் சீதைக்கு - (உவமை கூறற்கு) அருமையான பிராட்டிக்கு, தாக்கு அரு துன்பம்-பொறுத்தற்கரிய துயரத்தை, நமது உருவின் ஆக்கினுன் - (மாரீசன் என்னும் அரக்கன்) நம்முடைய வடிவை யேற்றுச் செய்தான், என்று - என்று எண்ணுவதால், (நம்மிடத்தில் எழுகின்ற) பெறல் அரும் உவகை - பெறுதற்கரிய மகிழ்ச்சியை, வாக்கினுன் உரையாம் - வாய்திறந்து கூவி வெளிப்படுத்தக் கடவோமல்லோம்', என - என்று (இராமனிடத்துள்ள அச்சம் காரணமாகக் கூவாமற் களித்தாற்போல) மான்கள் களித்தன - மான்கள் குரல் காட்டாமல் இன்புற்றன.

மகளிர் நோக்கிற்கு மானேக்கு மருண்டு நோக்குதல்பற்றி யெழுந்த உவமை; (பால, கோலங் 7); திருக்கோ: 11; உயுத்த. இலங்கை காண். 46; சீவக. 2578; கலித், 69, 28. நோக்கழி காணுதல் - பார்வையால் வெல்லுதல். தாக்கணங்கு என்பதற்குப் பிறர்க்குக் காமத்தை யூட்டி வாட்டும் தெய்வம் என்றும் கூறுவர்; 'தாக் கணங்கு தானைக் கொண்டன்ன துடைத்து' (குறள். 1082); இங்கே தானே தாக்கி வருத்துவதோர் அணங்கு என்ருர் பரிமேலழகர்; 'நோக் கினுள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு தானைக் கொண்டன்ன துடைத்து' என்ற குறள் முழுவதுமே இங்குக் கருதத்தக்கது. இவ் வணங்கை மோகினி என்றும், கொல்லிப்பாவை என்றும் கூறுவர் ஒரு சாரார். தாக்கரும்-தாக்க அரும் என்பது அகர வீறு தொக்கது; தாங்க- தாக்க என வலித்தது. 'அரும் பெறல் உவகை' என்பதைப் பெறலரும் உவகையென மாற்றுக. தமதுருக் கொண்டு சென்ற மாரீசனுகிய மான் பட்ட பாட்டைக் கேள்வியுற்றிருந்தன வாகலின், மான்கள் வாக் கினுல் உரைக்க அஞ்சின என்ருர்; வாக்கினுல் உரைத்தல் - குரல் காட் டுதல் ; தற்குறிப்பேற்றவணி. மதங்கர் முதலிய முனிவர்களுடைய தவத் திற்கு இடையூருகுமோ வென வஞ்சி, மான்கள் குரல்காட்டாமல் ஊமைகள் போலிருந்தமைபற்றி, அம்மலைக்கு ருசியமூக மலை என்று

பெயரெழுந்த தென்பது கருதத்தக்கது. (ருச்யம்-மான், மூகம் - ஊமை) இனி மான்கள் அடைந்த மகிழ்ச்சி சொல்லுக் கடங்காமை பற்றி 'வாக் கினுலுரை யாம்' எனக் கூறியதாகக் கோடலுமாம். மகிழ்ச்சி மிகுதியி ஞல் வாய்திறந்து ஒன்றும் சொல்ல முடியாதிருத்தல் இயல்பு. 'மேக்கு நீங்கிய வெள்ளவுவகையா லேக்க முற்ரென்றியம்புவதியாதென நோக்கி நோக்கி யரிதென நொந்துளேன்.' (உயுத்த. மீட்சி; 26) எனப் பிராட்டி கூறுதல் காண்க. அச்சத்தாலும் இயல்பான மன உணர்ச்சியை வெளிக் காட்டாதடக்குவதற்கு அதிகாயன் இறந்த பொழுது ஒப்புரவுக்காக அரக்கர் ஒப்ப அழுதார்; என்றும், கும்பகன்னன் இறந்ததைக் கேட்ட பிராட்டியைக் 'கெண்டையங் கண்ணியும் உள்ளே கிளுகிளுத்தாள்' என்றும் கூறுவன காண்க.

இச் செய்யுளில் ருச்யமூக மலேயில் மான்கள் குரல் காட்டாமை கார் காலத்தில் அவை களிப்படைதல் ஆகிய உண்மைகளேக் கதை யுடன் தொடர்ப்படுத்தி ஆசிரியர் வருணித்திருக்கும் சிறப்பு நோக்கத் தக்கது.

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லே.

பி-ம். 1. நோக்கழி செய்த, செய்திடு; நடங்குநண் மருங்குல்.
2. தாங்கருர்.
3. ஆக்கினு முருவாலெனும், ஆக்கினேர்; உவமை.
4. உரையாவெனு. (39)

471. நீடு நெஞ்சுறு நேயத்தா னெடிதுறப் பிரிந்து
வாடு கின்றன மருளுறு காதலின் மயங்கிக்
கூடு நன்னதித் தடந்தொறுங் குடைந்தன படிவுற்
ருடு கின்றன கொழுநரைப் பொருவின வன்னம்.

நெடிதுஉற பிரிந்து - நீண்டகாலம் மிகவும் பிரிந்திருந்து, நெஞ்சு உறு நீடு நேயத்தால் - உள்ளத்தில் பொருந்திய மிக்க அன்பினுல், வாடுகின்றன - வாட்டம் அமைந்தனவாய், மருள் உறுகாதலின் மயங்கி- மயக்கத்தைச் செய்யக் கூடிய மிக்க ஆசையுடன் வந்து, கூடும் நல் நதி தடம் தொறும் - தாம் வந்தடைந்த சிறந்த நதித் தலங்கள் தோறும், குடைந்தன - முழுகினவாய், படிவுற்று - பொருந்தி, ஆடுகின்றன - விளேயாடுகின்றனவான, அன்னம் - அன்னப் பறவைகள், கொழுநரை பொருவின - கணவரை ஒத்தன.

அன்னத்திற்குக் கூறப்பட்ட அடைமொழிகள் கொழுநர்க்கும் இயைவ காண்க. இனி நல் நதி கூடும் தடம்தொறும் என மொழி மாற்றிச் சிறந்த நதியின் வெள்ளம் வந்து கூடும் குளங்களில் எல்லாம் என்றும் பொருள் கூறலாம். வாவியில் அன்னம் குளித்து விளையாடினது தலைவியைக் கூடின தலைவனை யொத்தது என்பது பழையவுரை. நதித் தடங்களைத் தலைவியராகவும் அன்னங்களைக் கொழுநராகவும் உவமித் தார். கோடையில் நீரற்றுக் கிடந்தமையால் பிரிந்து சென்றிருந்து கார்காலத்தில் அவற்றில் நீர் நிறைந்தமை யுணர்ந்து பின்னும் வந்து கூடிய அன்னங்கள், பலநாட்களாகப் பிரிந்து வாடிப் பின்னர் உள்ளத் தில் மிக்க காதலோடு தத்தம் தலைவியரைக் கூடிமகிழ்ந்த தலைவரைப் போன்றன என்க.

பி - ம். 1. *நேயத்தாற், நேயத்த, நேயத்தர், நேயத்தை; பிரிந்தழி; விளைத்து, விளைந்த.*

2. *வாடுகின்ற, ஓடுகின்றன; மாதரிற், மகளிர் தம், காதலின், கோகில முயங்கி, னுயங்கி, மயங்கி.*

3. *கூடுகின்றன; நதித்தடம், தடந்தொறும்; பிரிந்தது குடைவுற்று, படிந்தன குடைவுற்று, குழைவுற்று, குடைவுற்று.* (40)

இஃது ஓர் பிரதியில் இல்லை

472. காரெ னும்பெயர்க் கரியவன் மார்பினிற் கதிர்முத்
தார மென்னவும் பொலிந்தன வளப்பரு மளக்கர்
நீர்மு கந்தமா மேகத்தி னருகுற நிரைத்த
கூரும் வெண்ணிறத் திரையெனப் பறப்பன குரண்டம்.

அளப்ப அரும் - அளத்தற்கு அரிய, அளக்கர் - கடலினின்று, நீர் முகந்த-நீரைப் பருகிச் செல்கின்ற, மாமேகத்தின்-கரிய மேகத்தின், அருகுஉற - அண்மையிலே பொருந்த, நிரைத்த - வரிசையாக உள்ள, வெள் நிறம் கூரும் திரையன - வெண்மை நிறம் மிக்கு விளங்கும் அலை போன்றனவாய், பறப்பன குரண்டம் - பறந்து செல்கின்ற கொக்குகள், கார் எனும் பெயர் கரியவன் - நீலமேகன் எனப்பெயர் பெற்ற திருமாலின், மார்பினில் -மார்பில் உள்ள, கதிர் முத்து ஆரம் என்னவும்- ஒளி வாய்ந்த முத்துமாலை போலவும், பொலிந்தன - (பொற்புடன்) விளங்கின.

உவமையணி; நிறமும் தோற்றமும் பற்றி வந்தது. கரியகார் - நீலமேகம்; அதன் பெயர் கொண்டவன், நீலமேகனான திருமால்,

திருமால் மார்பில் அணியும் மாலையைக் கௌஸ்துப மாலை என்பர். அளப்பருந் அளக்கர் என்றதில் இணையெதுகைநயம் காண்க. அளப்ப அரும் என்பது தொகுத்து அளப்பரும் என்ருயது. 'நிரைத்துக் கூரும் வெண்ணிறத் திறத்தன' என்றும் பாடம். 'நீர்முகந்த மாமேகம்'; 'குணகுடல் முகந்த கொள்ளை வானம்' (அகம். 278). குரண்டம் - கொக்கு; (20). 'ஆரம் என்னவும் பொலிந்தன' என்பதில் உம் இறந்தது தழுவிய எச்சம். (ஒப்பு): 'நெடுவேள் மார்பினாரம் போலச் செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்தும் பைங்காற் கொக்கினிரைபறை' (அகம்.120); கொக்கின் ஒழுங்கிற்கு முத்து ; தக்க. 93.

பி - ம். 1. பெரியன், பெரியவன், நிறக்கரியவன்; கவின்முத், கதழ்முத்.
2. வளப்பிலா வளக்கர்.
3. நீர்நுகர்ந்தமர் மேகத்தின்; மருங்குற நிரைத்து, நிறைத்து, நினைத்த.
4. வெண்டிரை நிகர்த்தன, மெண்ணருந்திறத்தன ; வெண்ணிற மேகமுநிகர்த்தன. வெண்ணிற மொத்தன; பறப்பன நிகர்த்த.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை. (41)

473. மருவி நீங்கல்செல் லாநெடு மாலைய வானிற்
பருவ மேகத்தி னருகுறக் குருகினம் பறப்ப
திருவி னுயக னிவனெனத் தேமறை தெரிக்கும்
ஒருவன் மார்பினி னுத்தரீ யத்தையு மொத்த.

மருவி - (பல) ஒன்ருகப் பொருந்தி, நீங்கல் செல்லா - (வெளித் தோன்ருதபடி) ஒன்றைவிட்டு ஒன்று நீங்காமல், நெடுமாலைய - நீண்ட வரிசைப்பட்டனவாய், வானின் - ஆகாயத்தில், பருவம் மேகத்தின் அருகுஉற - கார்ப்பருவத்தில் கரிய மேகத்தின் அண்மையிற் பொருந்த, பறப்ப - பறக்கின்றவையான, குருகு இனம் - நாரைகளின் தொகுதிகள், 'திருவின் நாயகன் இவன் என - திருமாலின் கணவன் இவன்' என்று, தே மறை தெரிக்கும் - தெய்வத்தன்மை வாய்ந்த வேதங்களால் அறிவுறுத்தப்படுகின்ற, ஒருவன் - ஒப்பற்ற (ஏக மூர்த்தியான), திருமாலின் - மஹாவிஷ்ணுவின், மார்பினில் - மார்பினில் சார்த்தப் பெற்ற, உத்தரீயத்தையும் - மேலாடையையும், ஒத்த- ஒத்து விளங்கின.

தொடர்ந்து வானிற் பறந்த நாரைகள் திருமாலின் உத்தரீயம் போன்ற என்பது கருத்து. மாலே - வரிசை. குருகு - பறவைப்பொது; இங்குச் சிறப்பாக நாரையைக் குறித்தது. (குறுந். 381, 163, 226). உவமையணி. உத்தரீகம் - மேலாடை ; சுந்தர. 41, 146, 411, 421 ; உயுத்த. நாகபாசப்: 130 உயுத்த. இராவணன் தானே: 5 ; தே - தெய்வம். 'தேவிய னேமியானில்' தேமறை - தேம்மறை, செவிக்கினிய மறையுமாம் வேதத்துக்கு தெய்வத்தன்மை. நித்யமாயிருத்தல் இறைவனுல் வெளிப்படுத்தப்படுதல், எல்லோராலும் அங்கீகரிக்கப்படுதல் முதலியன. திருவினுயகன். (அயோத். மந்திரப். 48, ஆரணிய. 982).

பி - ம். 1. *மருவளிக்கல், மருவினிக்கி ; நெடுமாலியவான்.*
3. *தொன்மறை.*
4. *உத்திரீ கத்தினே கத்தையு.* (42)

**474.** தேன வாமலர்த் திசைமுகன் முதலினர் தெளிந்தோர்
ஞான நாயக னவையற னோக்கின நல்கக்
கானம் யாவையும் பரப்பிய கண்ணெனச் சனகன்
மானே நாடிநின் றழைப்பன போன்றன மஞ்ஞை.

தேன் அவாம் மலர் திசைமுகன் முதலினர் தெளிந்தோர் - சாதி வண்டுகள் விரும்பி மொய்க்கும் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் முதலான தெளிந்த அறிவினருடைய, ஞான நாயகன் - புத்தியில் உறையும் தலைவனுன இராமபிரானுடைய (தேவியைப் பிரிந்ததனுலாகிய), நவை அறல் - துன்பம் அகலுதலை, நோக்கின நல்க - நோக்கினவாய் அவனுக்கு அவன் மனைவியைத் தேடியுதவும் பொருட்டு, கானம் யாவையும் பரப்பிய - காட்டில் எல்லாப் பக்கங்களிலும் பரவச் செய்த, கண்என - கண்கள் என்று கூறும்படி, மஞ்ஞை - மயில்கள் (தோகையின் கண்களை விரியச்செய்து), சனகன் மானே நாடி நின்று - சனகன் மகளான மான்போன்ற (மருண்ட) பார்வை வாய்ந்த ஜானகியைத் தேடி நின்று, அழைப்பன போன்றன - அழைப்பனவற்றை ஒத்தன.

தேனவாம் என்றே கொண்டு தேனையுடையவான என்றும் கொள்ளலாம். மலர்த்திசை முகன் என்பதற்குத் திருமாலின் நாபிக் கமலத்தெழுந்த நான்முகன் என்றும் கூறுவர். இச்செய்யுள் தற்குறிப்

பேற்றவணி. ஞானநாயகன் - ஞானவடிவான நாயகன் எனலும் ஆம். நவை அற நோக்கின என்று கொண்டு துன்பத்தை நன்றாக நோக்கின வாய் என்றும் கொள்ளலாம். இதற்கு, 'அங்கண் வானக முழுவது மறிவொளி பரப்பிக், கங்குல் வாயடர் தாரகை யெழுந்தன கடலுட், பொங்கு வெங்கதிர் மணிவிழுந் தெனத்திசை புரப்போ, ரெங்கு நாடுதற் கெடுத்தவஞ் சுடரென வியையும்' (நைடத. மாலை: 9) என்ற செய்யுளை ஒப்பு நோக்குக. தேயமிடையிட்டவற்றையும் காலமிடையிட்டவற்றை யும் அறியவல்ல தீர்க்கதரிசிகள் என்பார் 'தெளிந்தோர்' என்றார். மயில் கள் தமது தோகைக்கண்கள் கொண்டு துருவியும், குரல்கொண்டு கூவி யழைத்தும் நின்றன என்க. 'தேடா நின்ற வென்னுயிரைத் தெரியக் கண்டாய் சிந்தையுவந், தாடாநின்ற யாயிரங்கண்ணுடையாய்க் கொளிக்கு மாறுண்டோ' 27 என்று, சென்றவழி காட்டுமாறு கூறியதும் காண்க. ஆட்டத்திற் சிறந்த மஞ்ஞை நாட்டத்திற் சிறந்த மானை நாடிநின் றழைப்பன போன்றன என்பது நயம்.

மி - ம். 1. முதலிய ; தெளிந்தார்.
2. எவையற, நவையுற ; நோக்கென, நோக்கெலா, நோக்கலா, நோக்கினோ; எல்கி, நல்க, நல்கின நோக்கி, எவையற நோக்கித், நோக்கினு எல்கி, நோக்கின ராகி;
3. கானிவியாவையும்; கண்ணின. (43)

475. உறவெ துப்புறுங் கொடுந்தொழில் வேனிலா னொழிய
திறநி னைப்புறுங் காரெனுஞ் செவ்வியோன் சேர
நிறம னத்துறு குளிர்ப்பினி னெடுநில மடந்தை
புறம யிர்த்தலம் பொடித்தன போன்றன பசும்புல்.

பசும் புல் - பசுமையான புற்கள், வெதுப்பு உற உறும் கொடுந் தொழில் - வெப்பமுண்டாகும்படி வந்தடைகின்ற கொடுந்தொழிலை யுடைய, வேனிலான் - கோடைக் காலமாகிய அரசனுடைய, திறம் ஒழிய - வன்மை யகலும்படியாக, நினைப்பு உறு - (எல்லோருடைய) எண்ணத்திலும் வந்தடையத்தக்க, கார் எனும் செவ்வியோன் - கார்கால மாகிய நற்பண்புகளையுடையவன், சேர - அரசனாய் வந்தமர, (அது பற்றி), நெடு நிறம் நிலம் மடந்தை - பெரிய உடற் பரப்பைக்கொண்ட பூமகள், மனத்து உறு - தன் உள்ளத்தில் பொருந்திய, குளிர்ப்பினின் - குளிர்ச்சியால்; புறம் மயிர் தலம் பொடித்தன - உடல் முழுவதும் மயிர்க் குச்செறிந்தது, போன்றன - ஒத்தன.

உறவெதுப்பு உறும் என்று கொண்டு மிகுதியான வெம்மையைச் செய்கின்ற வென்றுமாம். பருவங்களையும் அவற்றின் இயற்கை மலர்ச் சிகளையும் அரசர்களாக உருவகிப்பது கவி சமயம். 'ஒருகோ லோச்சி யுலகாண்ட அரசனிரியத் தலையெடுத்த குறும்பு போன்ற தரக்காம்பல்' (பால. மிதிலைக். 73). நெடுநிற நில மடந்தை யென்று, மொழி மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது. இனி நெடு நிலமடந்தை நிறப்புறம், அல்லது, நில மடந்தை நெடு நிறப்புறம் எனக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலும் ஏற்கும். நிறம் - உடல்; நிறம் மார்புமாம் மழை பெய்யவே காய்ந்து கிடந்த பூமியின் உள்ளகம் குளிர்ந்ததென் றும், அது காரணமாகப் பசும் புல் எங்கும் முளைத்ததை, நிலமடந்தை உடல் மயிர் சிலிர்த்ததாகவும் அழகுறக் கூறினர். ஒப்பு : ஆரணிய. 238. இது தற்குறிப்பெற்றவணி. காலம், ருது என்பன வடமொழியில் ஆண்பாற் சொற்களாகலின், அவற்றை வேனிலான், செவ்வியோன் என்று ஆண்மக்களாகக் கூறினர். உலகத்தின் ஆக்கல் அழிவிற்குத் துணைக் காரணம் ஆகலின் அதனை அரசன் என்றார்; சிலப். 14, 96 ; அடிக்கு அடியார்க்கு நல்லார் கூறும் உரை இங்கே காணத்தகும். 'பனியரசியாண்டுளன்' (சிலப். 14, 112) 'இன்னிள வேனில் யாண்டு ளன்' (14, 117.) 'என்றனவும் காண்க. காரரசன்-காரையாளுமரசன், நினைப்புறுந்திறம் என்று கொண்டு யாவரும் நினைக்கும் தன்மை வாய்ந்த எனினுமாம். வேனிலின் வெம்மையும், அது மாறவந்தடைந்த காரின் தன்மையும் ஏற்ற அடை மொழிகளான் உணர்த்தப்பட்டன.

பி - ம். 1. *கடுந்தொழில்.*
2. *தெறநினைப்பரும்.*
3. *நிறைமனத்துறு, நிறமனத்துறு, மனைத்தமொண்.*
4. *புறமயிர்க்குலம்.........போன்றன, புற்கள் மயிர்ப் புளம் பொடிப்பன பொன்றன, பொடித்தன போன்றன; வொளிர்புல்.*

இதன்பின் 'பொழிந்த மாநிலம்' என்ற பாடல் ஓர் பிரதியிற் காணப்படுகிறது. (44)

476. செஞ்செ வேலவர் செறிசிலைக் குரிசில ரிருண்ட
குஞ்சி சேயொளி கதுவுறப் புதுநிறங் கொடுக்கும்
பஞ்சி போர்த்தமெல் லடியெனப் பொலிந்தன பதுமம்
வஞ்சி போலியர் மருங்கென நுடங்கின வல்லி.

செம் செவ்வேலவர் - (பகைவருடைய உதிரம் தோயப் பெற்றதால்) மிகச் சிவந்த நுதியையுடைய வேற்படை தாங்கியவர்களும், செறி

சிலை குரிசிலர் - நன்கு கட்டமைந்த வில்லேந்திய வீரத்தலைவர்களும் என்ற இவர்களுடைய, இருண்ட குஞ்சி - இருள்போன்று கறுத்த மயிர்முடி, சேய் ஒளி கதுவுற - சிவந்த ஒளியைப்பற்றிக் கொள்ளுமாறு, புதுநிறம் கொடுக்கும் - (அதற்குப்) புதிய வர்ணத்தை அளிக்கின்ற, பஞ்சி போர்த்த - செம்பஞ்சிக் குழம்பினால் முழுதும் பூசப் பெற்ற, வஞ்சி போலியர் - வஞ்சிக்கொடி போன்ற மகளிருடைய, மெல் அடி என - மிருதுவான பாதங்கள் போல, பதுமம் பொலிந்தன - செந்தாமரைகள் விளங்கின ; (அந்த வஞ்சி போலியருடைய) மருங்கு என - (நுண்ணிய) இடைபோன்று, வல்லி நுடங்கின - பூங்கொடிகள் அசைந்தன.

மகளிரடிக்குப் பதுமமும் அவர் தம் இடைக்கு வல்லியும் உவமையாக்கப்படுதலின் எதிர் நிலையணி. செவ்வேலவர் என்றாலே அமையும், செஞ்செவேலவர் என்றது பல பகைவர்களைக் கொன்றதனால் கறைபட்ட உதிர மிகுதியைக் காட்ட என்க. மகளிரடி இயல்பாகவே செந்நிறமுள்ளது; செம்பஞ்சி பூசப்பட்டுப் பின்னும் செந்நிறம் பெற்றதையும் இங்கே கருதலாம். (ஒப்பு) 'கேகயன் மடந்தை யேடவிழ் நொய்தலர் தாமரை நோற்ற நோன்பினாற், செய்த பேருவமைசால் செம்பொற் சீறடி' (அயோத். மந்தரை, 43). செஞ்செவேலவர், இருண்ட குஞ்சி என்பதில் முரண் தொடை காண்க. குஞ்சி - ஆண் மயிர்; சுந்தர. 546. ஊடற் காலத்து மகளிரின், பிணக்கைத் தவிர்ப்பதற்காக அவர்களின் கொழுநர் அவருடைய பாதத்தில் சிரம்படும்படி வீழ்ந்து வணங்குதல் உண்டென்றும், அப்பொழுது அவர்களுடைய பாதத்திற் பூசப் பெற்ற செம்பஞ்சிக் குழம்பு அவர்களின் தலையிற் படுவதுண்டு என்றும் இலக்கியங்கள் கூறும்; 'மாதர் புலவிகடிருத்திச் சேந்த குஞ்சி (பால. மிதிலைக். 20); 'ஊடலிற்கனன்று மறிக்கண் நோக்கியர், மலரடிப் பங்கயப்பஞ்சில் குறித்த, கோலங்கள் பொலிந்தில வரக்கர் தம்குஞ்சி' (சுந்தர. 127). மற்றும் இவ்வழக்குண்மை, 'மாதர் வலிய நெடும்புலவியினும் வணங்காத மகுடநிரை' (ஆரணிய. 556); 'வணங்குதல் மகளிரூடல் நாளினு முளதோ' (உயுத்த. இரணிய. 146) என வருவன கொண்டும் காணலாம். பஞ்சி பூசிய, தீட்டிய என்னாது போர்த்த என்றது அந்த மெல்லிய பூச்சையும் பொறாத அவர்கள் பாதத்தின் மென்மை பற்றி. போர்த்த - மேலாகப் போர்த்த அல்லது தடவிய. மகளிரின் அடி எண்மைக்கு ; குறள். 1115 ;

பி - ம். 1. செறிநிலை, தெறுநிலை.
2. போதுநிறம்.

3. பஞ்சியொர்ந்த, பஞ்சியொத்த; பொலிந்தது.
4. மருங்குல் போல், மருங்கினில் ; நடங்கிய (45)

இஃது ஓர் பிரதியில் இல்லை.

477. நீயி ரன்னவள் குதலைய ராதலி னேடிப்
போயத் தையலைத் தருதிரென் றிராகவன் புகலத்
தேய மெங்கணுந் திரிந்தன போந்திடைக் தேடிக்
கூய வாய்க்குரல் குறைந்தபோற் குறைந்தன குயில்கள்.

'நீயிர் - நீங்கள், அன்னவர் குதலையர் ஆதலின் - அந்தச் சீதா தேவியினுடைய மழலைபோன்ற இனிமையான குரலுடையீர் ஆதலால், நேடிப்போய் அத்தையலை தருதிர் - தேடிச்சென்று அந்தச் சீதாதேவியைக் கொண்டுவந்து தருவீராக' என்று, இராகவன் புகல - இராமபிரான் (குயில்களை நோக்கிச்) சொல்ல, குயில்கள் - குயில்கள் (அதற்கு இணங்கி), தேயம் எங்கணும் திரிந்தன போந்து - பலவிடங்கள் தோறும் பறந்து சென்றுவந்து, இடை தேடி - அந்த அந்த இடங்களில் (அவளைத்) தேடி, கூய ஆய் - கூவி யழைத்தனவாய். குரல் குறைந்த போல் - குரல் கம்மினபோல, குறைந்தன - (கார் காலமாதலின்) கூவுதல் ஒழிந்தன.

கார்காலத்தில் குயில்கள் கூவாமைக்குத் தற்குறிப்பேற்றமாகக் காரணம் அமைக்கின்றார் ஆசிரியர். 'கூசின வல்ல பேசநாணின குயில்கள் எல்லாம்' (பால. பூக்கொய்; 6) என்பதை ஒப்பு நோக்குக. போய தையல் - என்ற பாடத்துக்குக் கைவிட்டுப் போன தையல் என்க. தையல்-அழகு; அஃது வாய்ந்த மகளிர்க் காயிற்று. விலங்குகளையும் பறவைகளையும் நோக்கி இவ்வாறு கூறுவது கவிமரபு; 'கேட்குநபோலவும் கிளக்குநபோலவும்...அஃறிணை மருங்கினு மறையப்படுமே' (நன் ; 318) என்பது இதன் விதி. இடம், தேசம் எனினுமாம். கூய குயில்கள் வாய்க் குரல் குறைந்தன வெனக் கொண்டு, வாயின் நலிவு புலப்படுத்தினதாகவும் பொருள் கூறலாம். கூய வாய்க்குரல் குறைந்துபோய் என்பதற்குக் கூப்பிட்டுக் கூப்பிட்டு அரிகுரற்பட்டது போல் என்பது பழையவுரை.

பி - ம். 1. குதலையி.
2. புலம்பத்.
3. பரந்திடைத் தெடி.
4. குழைந்த, மெலிந்த; குழைந்தன. வொடுங்கின, மெலிந்தன, கூய தாற்குரல் குறைந்தபோ லொடுங்கின குயில்கள். (46)

478. பொழிந்த மாநிலம் புற்றரக் குமட்டிய புனிற்ரு
எழுந்த வாம்பிக ளிடறின செறிதயி ரேய்த்த
மொழிந்த தேனுடை முகிழ்முலை யாய்ச்சியர் முழவிற்
பிழிந்த பால்வழி நுரையினைப் பொருவின பிடவம்.

பொழிந்த மாநிலம் - மழை மிகுதியாகப் பெய்யப் பெற்ற பெரிய பூமி, புல்தர - பசும் புற்களையுண்டாக்கிக் கொடுக்க, குமட்டிய - (அவற்றை) வயிருர மேய்ந்து தெவிட்டிய, புனிறு ஆ - ஈன்றணிமை யுள்ள பசுக்கள், எழுந்த ஆம்பிகள்-பூத்துயர்ந்த காளானகளை, இடறின- (காலகளால்) இடறிவீழ்ததின, (அங்ஙனம் இடறப்பட்ட காளான்கள்), தயிர் செறி ஏய்தத - தயிர்க்கட்டிகளின தொகுதியை ஒத்து விளங்கின; பிடவம் - பிடவம் என்னும் செடியின மலர்கள், மொழிந்த தேன் உடை- பேசுகின்ற தேன் போன்ற இனிய சொற்களையுடைய, முகிழ்முலை ஆய்ச்சியர் - அரும்பிய தனங்களையுடைய இடைப் பெண்கள், முழவிற் பிழிந்த - பால்மிடாக்களிற் சொரிந்த, பால் - பாலினின்று, வழி - வழி கின்ற, நுரையினை - நுரையை, பொருவின - ஒத்தன.

ஆம்பிகள் தயிர்ச செறிகளையும், பிடவம் பால் நுரையினையும் ஒத்தன ; உவமையணி ; நிறமும் வடிவும் பற்றிவந்தன. இச்செய்யுளில் நிலத்துக் கேற்ற உவமை வந்துள்ளமை காண்க. சிந்தாமணியில் கோவிந்தக்கோன தன் மகளைப்பற்றி, 'வெண்ணெய் போன்றூறினியள் மேம்பால்போற் றீஞ்சொல்லள் உண்ணவுருக்கிய ஆனெய் போன் மேனியள்' (சீவக ; 480) எனக் கூறியதும், 'கண்ணப்பன் வங்கினைப் பற்றிப் போகாவல்லுடும் பென்ன நின்ருன்' (பெரியபு: கண்ணப்ப, 116) என்ற நாணன் கூற்றும் இடங்கட் கேற்றவுவமைகளாக வந்தமைபோல. குமட்டுதல்-நிறையவுண்டு தெவிட்டுதல்; இப்பொழுது உமட்டுதல் என வழங்குகின்றது. ஆம்பி - காளான்; 'ஆம்பி பூப்பத் தேம்பசி யுழவா' ஆம் பிக்குத் தயிர் ; புறம். 164 ; பெரும்பாண் ; 157-8 ; 'ஆம்பிவான் முகையன்ன கூம்புமுகிழ் உறையமை தீந்தயிர்' கல்லாடம்: 15, 10-11. 'காளாம்பி போனறவே' (களவழி ; 36) எனபன காண்க. பிடவம் - இது முல்லை நிலமலர்; கார்காலத்து மலர்வது, நிறைநத மணமுடையது. இதனைக் குட்டிப் பிடவம் எனனும் ஓர்கொடி யென்றும் கூறுவர் அடியார்க்கு நலலார். (சிலப் ; 13, 158. உரை). 'சேணுறு பிடவமொடு பைம்புதலெருக்கி' (முல்லைப் ; 25). இஃது குறிஞ்சியில் மலர்வது 'எந்நிலமருங்கிற் பூவும் புள்ளும் அந்நிலம் பொழுதொடு வாராவாயினும் வந்த நிலத்தின பயத்தவாகும்' (தொல் ; அகத். 19) எனறதனுற் கொள்க. தேன என்றது தேன் போன்ற மொழிக்கு ஆகுபெயர். பாலைக்கறந்த என்னுது பிழிந்த என்றது பசுவின்

முலைக் காம்புகளின் சுரப்பு மிகுதி பற்றி, பிழிதல், ஊற்றுதலுமாம். முழவு - மிடா.

பி - ம். 1. வார்விலம், வானிலம், பானிலம், ஆனினம், வானிடைப்; புனல்பட நிலத்தினில் குமட்டா; குன்றில்.

2. யேய்ந்த, வேய்ப்ப.

3. முடிவில், முழாவிலே.

4. பொருவின நிரையன பிடவம்; நிரையென மலர்ந்தன, நிரை யெனமலர் நிட்டன பிடவம். (47)

479. வேங்கை நாறின கொடிச்சியர் வடிக்குழல் விரைவண்
டேங்க நாகமு நாறின நுளைச்சிய ரைம்பால்
ஆங்கு நாண்முல்லை நாறின வாய்ச்சிய ரோதி
ஞாங்க ருற்பல முழத்தியர் பித்திகை நாற.

கொடிச்சியர் வடி குழல - குறத்தியருடைய வாரி முடிக்கப்பட்ட கூந்தல், வேங்கை விரை நாறின - வேஙகை மலர்களின் மணம் கமழப் பெற்றன; நுளைச்சியர் ஐம்பால் - செம்படவ மகளிருடைய கூந்தல், வண்டு ஏங்க - வண்டுகள் மொய்த்து அரற்றும்படி, நாகமும் நாறின - சுரபுன்னை மலர்களின் மணம் கமழ்ந்தன; ஞாங்கர் - பக்கத்தில், உழத்தியர் பித்திகை உற்பலம் நாற - இடைப் பெண்களின் கூந்தல் செவ்வாம் பல் மலர் மணம் கமழ, ஆங்கு - அம்மலை வெளியில, ஆய்ச்சியர் ஓதி நாள் முல்லை நாறின - இடைப் பெண்களுடைய கூந்தல் அன்றலர்ந்த முல்லை மலர்களின் வாசனை வீசின.

அம்மலையில் நானில வளங்களும் உண்டென்று காட்டற்குக் குறிஞ்சி, நெய்தல், முல்லை, மருதம் என்ற நிலங்களின் கருப்பொருள் களான வேங்கை, சுரபுன்னை, முல்லை, செவ்வாம்பல் என்றவற்றைக் கூறினர். 'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்' எனத் தொல்காப்பியத்து, ஆசிரியர் முறை கூறியிருககவும், அதில் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' எனற இடத்துச் சொலலியும் எனற உம்மையால், சொல்லாத முறை தழுவியும் சொல்லப்படும் எனறதுபற்றி முறை மாற் றிக் கூறினர் என்க. 'எங்கில மருங்கிற் பூவும் புள்ளும், அங்நிலம் பொழு தொடு வாராவாயினும், வந்த நிலத்தின பயத்தன' (தொல். அகத: 19) ஆகலின, குறிஞ்சி நிலத்தில் பிறமலர்கள் வந்து மயங்கியதாகப் பாடினர். கொடிச்சியர், நுளைச்சியர், ஆய்ச்சியர், உழத்தியர் எனபன முறையே மேற்கூறிய நிலத்துமகளிர்க்கு அமைந்த குலப் பெயர்கள் என்ப, (தொல், அகத்: 20). வடிக்குழல் - எண்ணெய் தடவித்திருத்தப்பட்ட கூந்தல்;

வடித்தல் - திருத்தமாகச் செய்தல்; வாரிமுடித்தல். 'வடித்தார் பூங்குழலாளை' (சுந்தர: 328); 'வடிக்கொள் கூழை' (நற்: 23). நாறுதல்-நறுமணம் கமழ்தல். 'ஐம்பால் - கூந்தல்; ஐந்துவகையாக முடிக்கப்படுவது; 'குழலையும் அளகத்தையும் வகுத்தும், கொண்டையைத் தொகுத்தும், பனிச்சையையும் துஞ்சையையும் விரித்தும் முடிக்கப்படுவது,' சீவக: 2437; உரை; குழல், ஐம்பால், ஓதி, பித்திகை என்ற நான்கும் பெண்கள் தலைமயிரின் பெயர்கள் என்பாரும் உளர். ஐம்பால் என்பதற்கு ஐந்து தன்மையையுடைய கூந்தல் என்று கொண்டு மணம், மது, மென்மை, நெய்ப்பு, கருமை, என்றும் உரைப்பர். வேங்கை முதலியன முதலாகு பெயர்களாய்த் தத்தம் மலர்களைக் குறித்து நின்றன. இனி வேங்கை மலர்கள் முதலியன குறத்தியர், நுளைச்சியர், ஆய்ச்சியர், உழத்தியர் என்ற இம்மகளிருடைய கூந்தலுக்கு இயற்கையாகவுள்ள நறுமணத்தைப் பெற்றுத் தம் இயற்கை மணம் மாறின எனினும் ஆம்.

பி - ம். 1. வெடிக் குழல்; விழைவண்டு, விளிவண்டு, விழாவண்டு.
2. எங்கு நாகமும், நாதமும்; வெயினர்றண் ணிலடச்சியர். வெயிற்றியர்.
3. ஓங்கு; இடைச்சியர்.
4. காய்கருப்பலம்; பரத்தியர், உழத்தியர். (48)

இஃது ஓர் பிரதியில் இல்லை.

இராமபிரான் வருத்தம்

480. தேரைக் கொண்டபே ரல்குலா டிருமுகங் காணான்
ஆரைக் கண்டுயி ராற்றுவா னல்லுணர் வழிந்தான்
மாரற் கெண்ணில்பல் லாயிர மலர்க்கணை வகுத்த
காரைக் கண்டனன் வெந்துயர்க் கொருகரை காணான்.

தேரை கொண்ட பேர் அல்குலாள் திருமுகம் காணான் - தேர்த்தட்டை ஒத்த அகன்ற அல்குலினையுடைய பிராட்டியின் அழகிய முகத்தைக் காணப்பெறாத இராமபிரான், மாரற்கு - (தனக்கு வேதனை தருகின்ற) மன்மதனுக்கு, எண் இல் பல் ஆயிரம் மலர்கணை வகுத்த- கணக்கில்லாத பல ஆயிரம் மலரம்புகளை உண்டாக்கித் தந்த, காரை - அந்தக் கார்ப்பருவத்தை, கண்டனன் - பார்த்து, வெம் துயர்க்கு - (தனது) கொடிய துன்பமாகிய கடலுக்கு, ஒரு கரை - ஒரு முடிவெல்லையை, காணான் - காணாதவனாய், நல் உணர்வு அழிந்தான் - நல்ல அறிவு நீங்கப்பெற்றவன் ஆனான்; ஆரை கண்டு உயிர் ஆற்றுவான்-

வேறு யாரைக்கண்டு (தன் துயர் தணிந்து அமைதிபெற்று) உயிர் வாழ்வான்?

பிரிந்தாரை மாரனுடைய மலர் அம்புகள் வருத்துமாகலின் காதலியைப் பிரிந்த இராமபிரான் காரையும் மலர்களையும் கண்டு உயிர் தரியான் என்றார். நான்காமடியில் கண்டனன் காணான் என்பது முரண்தொடை. துயரத்தைக் கடலாகக் கூறியதற்கேற்ப, கரைகாணான் என்றார். இதுகாறும் கார்கால நிகழ்வுகளைக் கூறி இச்செய்யுள் முதல் கார்காலம் இராமபிரானுக்கு விளைத்த துயரினை ஆசிரியர் கூறலுற்றார் என்க. கார் ஆயிரம் கணைவகுத்தது, கார்காலத்தில் மலர்கள் மிகுந்து மலர்ந்தமை குறித்தது.

பி - ம். 1. கண்டபேரல்குறன்.
3. வடிக்கணை. (49)

481. அளவில் காரெனு மப்பெரும் பருவம்வந் தணைந்தால்
தளர்வ தென்பது தவம்புரி வோருக்குந் தகுமால்
கிளவி தேனினு மமிழ்தினுங் குழைத்தவள் கிளைத்தோள்
வளவி யுண்டவன் வருந்துமென் றாலது வருத்தோ.

அளவு இல் - ஓர் அளவில்லாத (எல்லையற்ற சிறப்பினையுடைய), கார் எனும் அ பெரும் பருவம் - கார் என்ற அந்தப் பெருமை சான்ற காலம், வந்து அணைந்தால் - வந்து பொருந்தினால், தளர்வர் என்பது - மனவுறுதி நெகிழப் பெறுவர் என்று சொல்வது, தவம் புரிவோருக்கும் தகும் - (எல்லா வற்றையும் துறந்து) தவம் செய்யும் முனிவர்கட்கும் பொருந்தும்; ஆல் - ஆதலால், வள்கிளை தோள் - பெரிய மூங்கில் போன்ற தோள்களையுடைய பிராட்டியின், தேனினும் அமிழ்தினும் குழைத்த கிளவி - தேனிலும் அமிழ்திலும் குழைத்துச் செய்யப்பெற்ற இனிய மொழிகளை, வளவி உண்டவன்-நெஞ்சு கலந்து (செவியாரப்) பருகினவன், வருந்தும் என்றால் - வருந்தினன் எனின், அது வருத்தோ - அது எளிமையாகக் கூறப்படும் வருத்தமாகுமா? அன்று.

இனி, ஆல் என்பதை அசையாக்கிப் பருவம் வந்தணைந்த அளவில் எனினும் பொருந்தும். கார் என்பது இலக்கணம் கூறும் ஆறு பெரும் பொழுதுகளில் ஒன்றாகலின் பெரும் பருவம் என்றார். அ என்பது சிறப்பு நோக்கியெழுந்த சுட்டு. இப்பெரும்பொழுது இருத்தலும் இருத்தல் நிமித்தமும் தனக்குரியதாகக்கொண்டது; 'காரும் மாலையும் முல்லை' (தொல். அகத். 6) என்றது காண்க. அடைந்தால் என்று கூறாது

அணைந்தால் என்றதில் பிரிந்தவர்கள் கூடி அணைதற்குரிய காலம் அஃது என்பது தொனித்தல் காண்க. 'தவம் புரிவோருக்கும் தகுமால்' என்றது, இராமபிரான் சாதுர் மாஸ்ய விரதத்தில் நின்றதைச் சுட்டி, அந்நிலையிலும் கார்காலத்தின் வலிமையால் அவன் மனம் தளர்ந்தான் என்பதைக் குறித்ததாகவும் கொள்ளலாம்; மற்றும், உயர்வு சிறப்பும்மையால் ஏனையோர் தளர்வர் என்பது கூறுமலே அமையும்; 'அருந்தவ முனிவர்க்கும் அமைந்த வீடு மீட்குறும் மேனகை' (சுந்தர. 1090); 'இரங்காத அரக்கிமாருந்தளர்ந்தழுதார்' (உயுத்த. பிராட்டி. 5). என்ற இடங்களை ஒப்பு நோக்குக. இங்ஙனம் கூறுவது உயர்ந்த கவிகளின் மரபு. பிராட்டியின் மொழிக்குத் தேனும் அமிழ்தும் குழைத்தது உவமை; ஆரணிய. 1124; ஒப்பு: 'தேனு மாரமுதும் குயிலினிற் குரலும் கிளியினின் மொழியுங் குழலும் யாழுங் குழைத்திழைத்து' (அரிச்.4-12) என்றதும் காண்க. கிளை-மூங்கில்;'கிளையினு நாம்பினும் நிரம்புங்கேண்மை' (அயோத்.475). வளவி; வளாவி - நெஞ்சு கலந்து; குறள் 523. உரை. இனி, தேனினும் அமுதினும் குழைத்த கிளவியை யுடையாளுடைய மூங்கில் போன்ற தோள் நலத்தைக் கலந்துண்டவன் எனினுமாம். 'தோணலமுண்டு துறக்கப்பட்டோர்' (கலித், 23); 'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலுமரபே' என்றதால் தோள் நலம் உண்டவன் என்றார் எனலும் ஆம். அருந்தோ என்று பாடங்கொண்டு அருமையோ என்றும் பொருளுரைப்பர்; இஃது, 'அருமையானதோ' என்றதன் மரூஉவாதல் கூடும். அருமருந்தன்ன என்றது அருமந்த எனத் திரிந்தாற் போல என்க.

பி - ம். 1. காரிழி கூதிரின் பருவம், காரெனு மரும் பெரும் பருவம்; அடைந்தால்.

2. தளர்வதென்பது; புரிவாருக்கும்; புரிந்தோர்கட்கும்.

3. படைத்தவள், கிடைத்தவள், இனைத்தவெள், வனைத்தோள், குழைத்தவ ளிதழ்த்தேன்.

4. வது மருந்தோ, வருந்தோ. (50)

482. காவி யுங்கருங் குவளையு நெய்தலுங் காயாம்
பூவை யும்பொரு வானவன் புலம்பினன் றளர்வான்
ஆவி யுஞ்சிறி துண்டுகொ லாமென வயர்ந்தான்
தூவி யன்னமன் னடிறத் திவையிவை சொல்லும்.

காவியும் - காவி மலரையும், கருங்குவளையும் - கருநீல மலரையும், நெய்தலும் - நெய்தல் மலரையும், காயாம் பூவையும் - காயாமலரையும்,

பொருவான் (தன் நிறத்தால்) ஒப்பவனுன, அவன்-அந்த இராமபிரான், புலம்பினன் தளர்வான் - (தனித்துப்) புலம்பித் தளர்ச்சி யுறுபவனுய், ஆவியும் சிறிது உண்டு கொல் ஆம் என - (இவன் உடலுள்) ஒரு சிறிதேனும் உயிர் உள்ளதோ என்று ஐயுற்றுக் கூறுமாறு, அயர்ந்தான் - சோர்ந்தவனுகி, தூவி அன்னம் அன்னுள் திறத்து - மெல்லிய இறகையுடைய (நடையால்) அன்னம் போன்றவளான சீதாதேவியினிடத்துத் (தான் கொண்ட காதற் பெருக்கால்), இவை இவை சொல்லும் - இந்த இந்த வார்த்தைகளை மொழியலானுன். இவற்றை அடுத்துவரும் பன்னிரண்டு செய்யுட்களிற் காண்க.

காவி, கருங்குவளை, நெய்தல், காயாம்பூ என்ற இவைகள் இராமபிரான் திருமேனிக்குவமை; 'கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயாநறும் போதோ, படர்பூங் குவளை நறுமலரோ, நீலோற் பலமோ பானலோ' (பால. மிதிலைக். 65); மற்றும் பால. மிதிலைக். 90; அயோத்தியா. கங்கை. 1. இச் செய்யுளால் காவி வேறு, கருங்குவளை வேறு என்று உணரப்பெறும். பொரு வானவன்-ஒப்பு நேர்கின்ற தேவனுகிய இராமபிரான் எனினுமாம். கொல் - ஐயப்பொருளில் வந்தது. தூவி - சூட்டு ; 'துணை புணரன்னத்தின் தூநிறத்தூவி' (நெடுநல். 131-133); சிலப். 4, 66-67 ; நைடதம். மணம். 26-உம் காண்க. பூவை - காயாம்பூ; 'மாயா விழுப்புகழ்ப் பூவை நிலையும்' (தொல். புறத். 5); மற்றும் பரி 1-7; சிலப். 16, 47; காண்க. ஆவியும் சிறிதுண்டு கொல் என - சீதாப்பிராட்டியே அவன் உயிர்; அவள் பிரிந்த நிலையில் ஆவி பிரிந்தவன் போல நின்ருன்; சுந்தர.525 என்றும், மூச்சின் இயக்கத்தால் உயிர்ப்புண்டு எனவும் செயலற்ற நிலையில் உயிர் நீங்கப் பெற்றதோ எனக் கருதும்படியாகவும் இருந்தனன் எனவும் பொருள்பட நின்ருன் என்க.

பி - ம். 2. *செறிமேகமும், செழும் பரவையும், போல்வான், புலம்பிடைத்.*

3. *மென வயிர்ப்பான், வயர்த்தான், வயர்வான், வயிர்த்தே.*

4. *வாவியன்ன மன்னுள்; சொன்னுன், சொல்வான்.* (51)

வேறு

483. வாரேய் முலையா ளைமறைக்கு நர்வாழ்
ஊரேயறி யேனுயி ரோடு மூல்வேன்
நீரே யுடையா யருணின் னிலையோ
காரே யெனதா விகலக் குதியோ.

'காரே - காளமேகமே! வார் ஏய் முலையாளை - கச்சணிந்த தனங்களையுடைய சீதையை, மறைக்குநர் வாழ் ஊரே அறியேன் - (கவர்ந்து சென்று) ஒளித்து வைத்திருப்பவராகிய அரக்கர் உறையும் ஊர்கூடத் தெரிந்துகொள்ளமாட்டாமல், உயிரோடு உழல்வேன் - (அவமே) உயிருடன்கூடி (நடைப்பிணமாகத்) திரிந்து வருகின்றேன்; நீரே உடையாய்-நீ நீரையே உடைத்தாயிருக்கின்ருய் (நல் நீர்மையையுடையையாக உள்ளாய்)! (அப்படியிருந்தும்), அருள் நின் இலையோ - அருள் உன்பால் இல்லையோ? எனது ஆவி கலக்குதியோ - (அல்லது வேண்டுமென்றே) எனது உயிரைக் கலங்கச் செய்கின்ருயோ?

வார் - கச்சு; 'வார்காத்த வனமுலையார்'; (பால. குலமுறை 16). ஊரேயறியேன் என்ற ஏகாரத்தால், மறைத்தவருடைய உருவம், வலிமை முதலியன விருக்க, அவர் உள்ள இடமும் அறியேன் என்று வருந்தியபடி; மறைத்துப் பெருங்கேடு விளைத்தவர்களை யொறுக்காமல் வாளா உயிர் வாழ்தற் கிரங்குகின்ருன். உயிரோடுழல்வேன் - மன்ருடுகின்றேன் என்றபடி. நீர் என்பது தண்ணீர் என்றும் நன்னீர்மை (அருள்) என்றும் பொருள்படும். பெயர்க்கேற்ற பண்பில்லையேயெனக் குறை கூறுகின்ருன்; ஒருவேளைக்குண்ண அன்னமில்லாதவளை அன்னபூரணி என்பது போல. நின் அருள் இலையோ - உனது அருள் என்பாலிலையோ எனினுமாம்.

இச்செய்யுள் போன்ற கலிவிருத்தங்கள் இரங்குதலைக் குறிக்கும் புலம்பற் சந்தம், பால. கடிமணப். (3—18); சுந்தர. உருக்காட்டுப். (3—10); நைடதம் சுயம்வரப்; சீவக. (1514-26) என்ற இடங்களிற் காண்க.

பி - ம். 1. *வாரேர்; முலையாரை; மறைக்குனர் மறைக்குநன், மறைத்தனர் மறைந்தனர்;*
2. *ஊரே தறியேன்; உலைவேன்;*
3. *யருணின்றிலையோ, யருளின் னிலையோ.*
4. *கலக்குதிரோ.* (52)

484. வெப்பார் நெடுமின் னினெயிற் றைவெகுண்
டெப்பா லும்விசும் பினிருண் டெழுவாய்
அப்பா தகவஞ் சீவரக் கரையே
ஒப்பா யுயிர்கோண் டலதோ வலையோ.

'வெப்பு ஆர் - வெப்பம் அல்லது கடுமை நிறைந்த, நெடு மின்னின் - நீண்ட மின்னல்களாகிய, எயிற்றை - பற்களையுடையாய்! இருண்டு - கறுத்து, வெகுண்டு - சினந்து முழங்கி, விசும்பின் - ஆகா

யத்தில், எப்பாலும் - எந்தப் பக்கத்திலும், எழுவாய் - தோன்றுவாய்; (ஆதலின்), அ பாதகம் வஞ்சம் அரக்கரையே ஒப்பாய்-கொடுந்தொழிலை யும் வஞ்சனையையுமுடைய அந்த இராக்கதர்களையே நிகர்க்கும் நீ, உயிர்கொண்டு அலது ஒவலையோ - (எனது) உயிரைக் கவர்ந்துகொண் டன்றி ஒழியமாட்டாயோ ?

மின்னல் மேகத்தின் கோரப்பற்களுக்கு, விளக்குமிடர் பற்றி; இந்தக் கோரப்பற்களும் இருள்நிறமும் கொடுஞ்செயலும் அரக்கர்க்கும் உண்மைபற்றி, அரக்கர் ஒப்பு. ஓவல் - ஒழிதல், நீங்குதல்; 'ஓவுநா ளுணர்வழியுநாள்' (தேவா. 927, 3); மற்றும் (ஆரணிய. 522, 560) (பால. புனல் 31) காண்க. அரக்கர்க்கு மேகம் உவமை (சுந்தர. 796).

பி - ம். 1. னெயிற்றின் வெகுண்டு.
2. விளம்பிலிருண் டெழுவாய்.
3. வரக்கனையோ.
4. தோய்விலையோ, தேய்குதியோ தோவிலையோ, ஓர்மிலையோ. உயிர்கோடல தொக்குதியோ.

இஃது ஒரு சுவடியில் இல்லை. (53)

485. அயிலேய் விழியார் விளையா ரமிழ்தின்
குயிலேய் மொழியார்க் கொணராய் கொடியாய்
துயிலே னொருவே னுயிர்சோர் வுணர்வாய்
மயிலே யெனைநீ வலியா டுதியோ.

'மயிலே - மயிலே! அயில் ஏய் விழியார் - வேலை ஒத்த (கூரிய) கண்களையுடையவரும், விளை ஆர் அமிழ்தின்-(பாற்கடலில்) உண்டான (திகட்டாத) அமுதத்தையும், குயில் ஏய் மொழியார்-குயிலின் குரலையும் ஒத்த மொழியையுமுடைய சீதையை, கொணராய்-தேடிக்கொண்டுவந்து தரமாட்டாய்; கொடியாய் நீ - கொடும் பண்பையுடையாய் நீ; துயிலேன் ஒருவேன் உயிர் சோர்வு உணர்வாய் - நித்திரை கொள்ளாதவனும் (மனைவியைப் பிரிந்து) தனித்திருப்பவனுமான என்னுடைய உயிர் வாடு வதைத் தெரிந்துள்ளாய்; (தெரிந்திருந்தும்), எனை வலி ஆடுதியோ - என்னை (இச்சங்கடமான நிலையில்) உன் வலிமை காட்டி வருத்தற் பாலையோ ?

மகளிர் விழிக்கு வேல்; (திருவிளை. வளையல்: 9 ; பால. உண்டாட்டு. 22); அமிழ்தின் மொழியார் ; 483; ஆரணிய. 623 குயிற் கிளவி ; 'செவ்வரி பரந்த கட்குயிலே' (அயோத். சித்திரகூட. 3);

'குயிலிதன்றே யென்னலாம் சொல்லி' (திருக்கோ. 285). மயிலைக் கண்டு இராமன் இவ்வாறு கூறியது, அதன் தோகையும் சாயலும், பிராட்டியின் கூந்தலையும் சாயலையும் நினைப்பூட்டியதா லென்க. ஆர் அமிழ்து - அருமை அமிழ்து. வலியாடுதல் - துன்புறுத்துதல். வன்மை காட்டி வருத்துதல்.

பி -ம். 1. *அயிலேர்; அயில்போல் விழியார், சுவையார்.*

2. *குயில்போல் மொழியாடனை நீ கொணர்வாய், குயிலேர்.*

3. *துயிலா; துழல்வேன்; வுரை சோர்வுணர்வாய்.*

4. *வலியாடுவதோ.* (54)

486. மழைவா டையொடா டிவலிந் துயிர்மேல்
நுழைவாய் மலர்வாய் நொடியாய் கொடியே
இழைவா ணுதலா ரிடைபோ லிடையே
குழைவா யெனதா விகுழைக் குதியோ.

'கொடியே - கொடியே! மழை வாடையொடு ஆடி - மாரிக் காலத்து வீசுகின்ற வாடைக்காற்றில் அசைந்து; (வாடைக் காற்றுடன் ஊடாடி), வலிந்து உயிர் மேல் நுழைவாய் - வாதித்து (எனது) உயிர்க்குள் புகுவாய்; மலர்வாய் - மலர் தாங்கி நிற்பாய்; (நான் முகம் வாடி நிற்ப) நீ முகமலர்ந்திருப்பாய்; இழை - சுட்டி யணிந்த, வாள் நுதலார் - ஒளி பொருந்திய நெற்றியையுடையவளான சீதையின், இடைபோல்-(ஒல்கி யொசிகின்ற) இடையொப்ப, இடையே குழைவாய், நடுப்புறம் துவண்டு காட்டி, எனது ஆவி குழைக்குதியோ - எனது உயிரைத் தளரச்செய்குவையோ? நொடியாய் - மொழிவாயாக!

'சீரியரல்லாதார் போன்ற மாரிக்காலத்து வாடையுடன் ஏற்பட்ட பழக்கத்தால், கொடியே, நீயும் கொடியையானுய் போலும்; உன் துவட்சியால் பிராட்டியின் இடையை நினைவுறுத்தி என்னை வருத்துகின்ருய்' என்று புலம்பினன். மலர்வாய் - என் துயர் கண்டு நீயும் முகம் வாடாமல், மலர்ந்த முகத்துடன் காணப்படுகின்ருய். நொடியாய் - சொல்லாமலிருக்கின்ருய் என்றும் கொள்ளலாம். மலர் வாய் நொடியாய் எனக்கூட்டி மலர்ந்த வாயினுல் ஒன்றும் கூருய் எனினுமாம்; 'தழல் வீசவுலாய் வருவாடை தழீஇ, அழல்வீரென தாவி யறிந்திலரோ, நிழல் வீரையனுடனே, உழல்வீர், கொடியீருரை யாடிலிரோ' (சுந்தர, 493) எனப்பிராட்டி வருந்திக் கூறியது இங்கே காணத்தகும்; 'மனத்தால் மறுவில ரேனும்தாஞ் சேர்ந்த வினத்தால்

இகழப்படுவர்' (நாலடி. 180); 'சான்றாண்மை தீயினம் சாரக்கெடும்' (நாலடி. 179) என்றபடி நல்ல தன்மையுடையாரும் தீ நட்புக்கொண்டால் தாமும் கொடியராவார் ஆகலின், நலியும் வாடையுடன் கூடிக் கொடியும் கொடிதாயிற்று என்றான். 'தீயாரோடிணங்கியிருப்பதுவும் தீது' (மூதுரை, 9) என்றதும் காண்க. பிறர் நோய் கண்டுள்ளம் எரியின் இழுதாவது நல்லோரியல்பு; அவ்வாறின்றி வாடையுடன் கூடித் தனக்குப் பிராட்டியின் இடைபோல் துவண்டுகாட்டி வருத்தலின், கொடியைப் பழித்தான். இழைதல் - நெருங்கிப் பழகுதல். 'கொடியாய் கொடியே' 'இடைபோலிடையே'; 'குழைவாய் குழைக்குதி' என்ற இடங்களில் எதுகை நயம் காண்க. நொடித்தல் - சொல்லுதல்; 'நொடிப்ப தென்னினி' (உயுத்த. இராவணன் வதை, 145).

பி - ம். 1. *யொடாடினை.*

2. *மலரார் கொடியாய்; மலரார் நொடியாய் கொடியே.*

4. *குழைக்குவையே, குழைக்குதிரோ, உழையீரெனதாவி யுழக்குதிரோ,* (55)

487. விழையேன் விழைவா னவைமெய் மையினின்
றிழையே னுணர்வே னவையின் மையினால்
பிழையே னுயிரோ டுபிரிந் தனரால்
உழையே யவரெவ் வுழையா ருரையாய்.

'உழையே - மானே! விழைவு ஆனவை விழையேன் - விரும்பத் தக்க பொருள்களை விரும்பிலேன்; மெய்மையின் நின்று இழையேன்- சத்திய நெறியினின்றும் (சிறிதும்) நெகிழேன்; உணர்வேன் - (பொருள்களின் நலந்தீங்குகளை) அறிவேன்; (ஆயினும்), அவை - அப்பண்புகள், இன்மையினால் - (என்னிடம்) இல்லாமற் போய்விட்டமையினால், பிழையேன் - பிழையிழைத்தவன் ஆனேன்; (ஆதலால்), உயிரோடு பிரிந்தனர் - (என்னுடைய) உயிரோடு சீதை என்னை விடுத்துப் பிரிந்து சென்றனள்; அவர் எ உழையார் உரையாய்-அவள் (இப்பொழுது) எங்கிருக்கின்றாள் கூறுவாயாக. ஆல் - அசை.

இனி, மானே! (உன்னை) விழைவான் விழையேன் - ஆசை தூண்டப் பிடிக்க விரும்பேன்; மெய்ம்மையின் நின்று இழையேன் - நான் சொன்ன உண்மையான வார்த்தையினின்றும் நெகிழேன்; உணர்வேன் (உன்னுடைய) மெல்லிய தன்மையை அறிவேன், நவை இன்மையினால் பிழையேன் - உன்பால் ஓர் குற்றமுமின்மையின் (அம்பெய்தல்

முதலான) தவறுதலை யான் புரியேன் என்று பொருள் கொள்ளலும் ஏற்கும். மான், முன்பு தன்னினத்ததாகிய ஒன்று பட்டபாட்டைக் கண்டு அஞ்சி ஓடுமோ என்று கருதி இராமன் இவ்வாறு கூறினன். மற்றும் முதலடிக்கு நவை விழைவான் விழையேன் என்றுகொண்டு குற்றத்திற் கிடமாயுள்ள எந்தப்பொருளையும் ஆசைகொண்டு விரும்பேன் எனினுமாம். நவை என்ற பண்பு நவையுள்ள பொருள்கட்காகி வந்தது. உரையாய் என்பதை உரைப்பாயாக, உரைக்கமாட்டாய் என்று உடன்பாடாகவும் எதிர்மறையாகவும் பொருள்கொள்ளலாம். 'மேன்மை யினின்றும்' என்றும் பாடம். 'உணர்வு ஏனவை யின்மையினற் பிழையேன்' என்றுகொண்டு, உணரும் மனமும் மற்றும் புத்திசித்தம் முதலியனவும் சரியாகத் தொழிற்படாமையால் நான் பிழைக்கமாட்டேன் என்பாருமுளர். மான் மருண்ட பார்வையால் சீதையை ஒக்குமாகலின் அதனை முன்னிலைப்படுத்திக் கூறினன். உயிரோடு பிரிந்தனர்-இராமன் உயிரைக் கைக்கொண்டு பிராட்டி சென்றனர். 'ஈண்டு நீ யிருந்தா யாண்டவ் வெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. 525); 'பூண்ட மெய்யுயிரோ போகாப் பொய்யுயிரோடு நின்றான்' (சுந்தர. 525); 'ஓருயிராக வுணர்க வுடன்கலந்தார்க் கீருயிரென்பா ரிடை தெரியார்' (பு. வெ. மா. 262) என்பன காண்க. 'வாழ்தலுயிர்க் கன்னளாயிழை சாத லதற் கன்ன ணீங்கு மிடத்து (குறள். 1124) என்ற இடத்துப் பரிமேலழகர் உரைவிளக்கம் இங்குக் காணத்தகும். (திருக்கோ. 23 ; 36)ம் காண்க. உழை - மான். 'உழுவைப் போத்தை யுழையு யிருண்பதே' (உயுத்த; இராவணன் சோக. 17). உழை என்ற சொல்லை இருவேறு பொருள்களில் ஈற்றடியில் அமைத்த கவிநயம் காண்க,

பி - ம். 1. விழையேன் விழைவால்; லருண், லவண் மேன்; மை யினின்று.

2. இழையேன், இழவேன், னுறையே னுணர்வேன்.

3. ரோடு பிறந்தனரால், பிரிந்தனரான்.

4. ருரையே, ருயிராய். (56)

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு மாறி அமைந்துள்ளது :

'இழைநோய் முலையாய் விழை வெண் ணுகில்நும்
முழைதா னுணர்வேன் உயிரின் மையினால்
பிழையெ னுயிரோ டுபிரிந்த னவால்
உழைகாள் அவளெவ் வுழையா ளுரையீர்'

488. பயில்பா டகமெல் லடிபஞ் சனையார்
செயிரே துமிலா ரொடுதீ ருதியோ
அயிரா துடனே யகல்வா யலையோ
உயிரே கெடுவா யுறவோர் கிலையோ.

'உயிரே - (எனது) உயிரே! பயில் - பொருத்தமாக அமையப் பெற்ற, பாடகம் - பாடகம் என்னும் காலணியையுடைய, மெல் அடி - மிருதுவான பாதங்கள், பஞ்சு அனையார் - பஞ்சுபோல மென்மையா யிருக்கப் பெற்றவரும், செயிர் ஏதும் இலாரொடு - எந்தவிதக் குற்றமு மில்லாதவருமான பிராட்டியொடு, தீருதியோ - (நீயும் என்னைவிட்டு) நீங்கிச் செல்வாயோ? (அப்படிச் செல்வதானால்), அயிராது உடனே அகல்வாய் அலையோ - ஐயம் கொள்ளாமல் அவள்பிரிந்த அன்றே அவ ளுடன் சென்றிருப்பாயல்லையோ? கெடுவாய் - கேடடைந்தவனே! உறவு ஓர்கிலையோ - (எனக்கும், உயிர் போன்றவளாகிய சீதைக்கும் உள்ள) உறவினை (அன்றே) அறிய வில்லையோ?

'உயிரே, நீ அவள்பிரிந்த அன்றே என்னுடலைவிட்டு அகன்றிருந் தால் வருத்தமில்லாதிருக்குமே' என்றபடி. 'எனக்கும் என் உயிராகிய அவளுக்கும் உள்ள உறவை நீ உணராயா? நாங்கள் இருதலைப் புள்ளின் ஒருயிர் போல்வம்; ஒரு குற்றமுமில்லாத அவளோடு உறவு ஓர்கிலை; ஓர்ந்திருந்தால் அவள் போனவுடனே நீயும் போயிருப் பாய்' என்று சொல்லிப் புலம்பினன் என்க. (ஒப்பு) 'செருவார் தோள நின் சிந்தையு ளேனெனின் மருவார் வெஞ்சர மெனையும் வவ்வுமால் ஒருவே னுள்ளுளை யாகி லுய்தியால், இருவே முள்ளிரு வேமு மிருந்தி லேம்.' 391. 'கெடுவாய்' என்ற சொல் நிந்தை வெளிப்பட விளிக்கும் சொல். 'ஊட்டி வளர்க்கானே ஓகெடுவா யன்னுய் கேள், வாட்டம் உனக்கேன்' (தனிப்பா: ஔவை). 'செயிர் - சினம், தீருதியோ - பிராட் டியுடன் இருக்கின்ருயோ' என்பன பழையவுரை.

பி-ம். 1. பஞ்சினு மெல்லடியார். பஞ்சணையார்.
2. துயிலாரொடு.
3. அயரா துடனே மகிழ்வா யலையோ.
4. கொடியாய், உறவோர்கலையோ.

489. ஒன்றைப் பகராய் குழலுக் குடைவாய்
வன்றைப் புறுநீள் வயிரத் தினையே
கொன்றைக் கொடியாய் கொணர்கின் றிலையே
என்றைக் குறவா கவிருந் தனையே.

கொன்றை கொடியாய் - கொன்றை மரமாகிய கொடியோனே! குழலுக்கு உடைவாய் - நீ சீதையின் கூந்தலுக்குத் தோற்ருய்; அதுபற்றி (அவளிடத்து மட்டு மன்றி என்னிடத்தும்) வல் தைப்பு உறு நீள் வயிரத்தினை - வலிய நன்கு பதியப்பெற்ற நீண்ட பகைமையுடையாய்! (ஆகவே தான்) ஒன்றை பகராய் - யாதொன்றும் விடை கூறுகின்ருயில்லை : கொணர்கின்றிலை - (அவளை என்பால்) கொண்டுவந்தும் தருகின்ருயில்லை; என்றைக்கு உறவு ஆக இருந்தனை - நீ எப்பொழுது தான் உறவாக இருந்தாய்? ஒருநாளுமில்லை. ஏ. அசை.

குழலுக்குக் கொன்றைக்காய் கருநிறம் பற்றியும் நீட்சிபற்றியும் உவமை, 'பொற் கடுக்கையை முடுக்கி' (அரிச், பு. விவாக; 11). இஃது கார்காலத்து மலர்வது, சீதையின் கூந்தலை நினைவூட்டியதால் அதனைக் கொடியாய் எனவிளித்தான்; கொன்றை மானிட மகளிர் சூடும் மலரன்ருகலின், அவர்களுடைய 'குழலோடு என்றைக் குறவாக விருந்தனை' என்று கூறினன்; கொன்றை ஒன்றும் பதில் கூருமலிருந்ததனுல் அதனை வன்மையும், வயிரமும் உடையதாகக் கூறினன்; நீள் வயிரம் - பல நாளாகவுள்ள பகைமை. இயல்பாகவே வயிரம் பாய்ந்த மரத்திற்கு உறவின்மை காரணமாக வயிரம் (பகைமை) உண்டானதாகக் கற்பித்தான். ஒன்றைப் பகராய் என்பதற்கு 'ஒரு வார்த்தை பேசு' என்று கூறியதாகவும் பொருள்கொள்ளலாம். ஒப்பு: (33). 'குழலுக் குடையாய்' என்ற பாடத்திற்குக் காயினுல் கூந்தல் போன்ருய்' என்பது பழையவுரை.

பி - ம். 1. குடையாய், மிடைவாய், குரியாய், மிடையாய், பகர்வாய்.
2. புதை நீழலயிர்த்தனையோ ; வயிரத்தனையோ.
3. மின்றலையோ. 4. விருந்தனையோ.

இஃது ஓர் பிரதியில் இல்லை. (58)

வேறு

490. குராவரும் பனைய கூர்வா
ளெயிற்றுவெங் குருளை நாகம்
விராவுவெங் கடுவிற் கொல்லு
மெல்லிணர் முல்லை வெய்தின்
உராவருந் துயர மூட்டி
யோய்வற மலைவ தொன்றே
இராவண கோப நிற்க
விந்திர கோப மென்னே.

'குரா அரும்பு அனைய - குராமரத்தின் அரும்புபோன்ற, கூர்வாள் எயிறு - கூரிய ஒளி பொருந்திய பற்களையுடைய, வெம் நாகம் குருளை - கொடிய நாகப் பாம்பின் குட்டியிடத்து, விராவு - (இயல்பாகப்) பொருந்திய, வெம்கடுவின் - கொடிய நஞ்சுபோல, கொல்லும் - என்னை வருத்துகின்ற, முல்லை மெல் இணர் - முல்லைக் கொடியின் மெல்லிய அரும்புகள், வெய்தின் உராவு அருந்துயரம் மூட்டி - வெம்மையுடன் வந்து பொருந்தும் பொறுத்தற்கரிய துன்பத்தை மூளச்செய்து, ஓய்வு அற மலைவது ஒன்றே-இடைவிடாமல் என்னை எதிர்த்துப் போர்செய்யும் இஃது ஒன்று மட்டும்தானே? இராவணன் கோபம் நிற்க - இராவணனுடைய சினம் ஒருபுறம் நிற்கையில், இந்திர கோபம் என்னே - இந்திர கோபம் ஒன்று (என்னைத் துன்புறுத்தத் தொடங்கியது) எதுபற்றியோ?

குருளை - குட்டி; 'நாயேபன்றி புலிமுயல் நான்கும், ஆயுங் காலைக்குருளை யென்ப' (தொல்: மரபி. 8) என்ற சூத்திரத்து, ஆயும் காலை என்றதனால் நாகக் குருளையென்றார். துயரம் ஊட்டியென்றும் பிரிக்கலாம்: மிகவும் மெல்லிய முல்லை, குருளை நாகம் போன்று கொல்லுமோவெனின், தக்கவிடம் சார்ந்து வன்மை பெற்றதாலென்க. 'ஊதப்பறக்கும் உமிபோலும் சூதமெனக் காதப் பயின்றதென்ன கண்காட்சி - சீதை கொண்கன், கைப் புல்லும் பண்டை யொரு காகாசுரனை வெல்லும், மெய்த்திறலும் நற்சார்பின் மேற்று' (சாவித்திரி வெண்பா) என்றது காண்க. வெய்தின் - விரைவின் எனினுமாம்.

இந்திர கோபம் என்பது இந்திரனுடைய கோபம் என்றும், தம்பலப் பூச்சி என்றும் பொருள்படும். இப் பூச்சி மழைக்காலத்தில் தான் மிகுதியும் தோன்றும்; ஆகவே 'மேகவாகனன்' என்று கூறப்பெறும் இந்திரன் ஏவலிற் பொழிகின்ற மழைக்காலத்ததாகலின் இப்பெயர்பெற்றது. முல்லையும் தம்பலப்பூச்சியும் என்ற இரண்டும், சீதையின் பற்களையும் அதரத்தையும் நினைப்பூட்டலின், அவைகள் தன்னை வருத்துவதாகக்

கூறினன். மாரனுடைய ஐந்துமலர் வாளிகளில் 'முல்லை கிடைகாட்டும்'. (இரத்தினச் சுருக்கம்). உராவரும் துயரம் (அயோத்தி; மந்தரை, 47);

பி - ம். 1. வாயெயிற்று, வாலெயிற்று, வேலெயிற்று; வன்குருளை.

2. உராவுயெர்; முல்லையென்று, முல்லையென்னும், யென்றும்; முகையால் முல்லை.

3. யோய்வுற; வுலைப்பதொன்றே, வுகைப்பதென்றால், தொன்றால்.

4. நீர்க்க; மன்னோ, மன்றே, மென்றே; விந்திர கோப மன்றே'

491. ஓடைவா ணுதலி னாளை
யொளிக்கலா முபாய முன்னி
நாடிமா ரீச னாரோ
ராடக நவ்வி யானார்
வாடையாய்க் கூற்றி னாரு
முருவினை மாற்றி வந்தார்
கேடுசூழ் வார்க்கு வேண்டு
முருக்கொளக் கிடைத்த வன்றே.

'(முன்னர்), மாரீசனார்-மாரீசன் என்பவன், (என்னைத் துன்புறுத்த), ஓடை வாள் நுதலினாளை ஒளிக்கலாம் உபாயம் உன்னிநாடி - பட்ட மணிந்த ஒள்ளிய நெற்றியையுடைய சீதையைக் (கவர்ந்து சென்று) மறைத்து வைக்கும் தந்திரத்தை எண்ணித் தெரிந்து, ஓர் - ஒப்பற்ற, ஆடகம் நவ்வி ஆனார் - பொன் மானாக உருமாறினான்; (அதுபோன்று), கூற்றினாரும்- யமனும், (என்னை வருத்த), வாடையாய் உருவினை மாற்றி வந்தார் - வாடைக் காற்றாக(த் தனது) உருவத்தை மாற்றிக் கொண்டு வந்தான்; கேடுசூழ்வார்க்கு - தீங்கு புரிய நினைப்பவர்க்கு, வேண்டும் உரு கொள கிடைத்த அன்றே - தாம் விரும்பிய உருவங்களைப் பெறும் படி கிட்டியது (வாய்ப்பு ஏற்பட்டது) அன்றோ ?

ஓடை-பிராட்டியின் நெற்றிப்பட்டம். பிரிந்து நின்ற தன்னை வருத்துதல் பற்றிக் கார்காலத்தை யமன் என்றான். மாரீசனார் கூற்றினார் என்ற பன்மைகள் சினமும் இகழ்ச்சியும் பற்றிய குறிப்புக்கள்; கூற்று - உடல்வேறு உயிர்வேறாகக் கூறுபடுத்துபவன் என்னும் காரணக்குறி. ஆடகம் - மாற்றுயர்ந்த பொன்; 'ஆடகத்தசும்பு' (ஆரணிய. 414); 'ஆடகமாடம் கடந்தறியாத வென்னாரணங்கே' (இறையனார்). சிறப்பாக ஒன்றைக்கூறி அதினின்று பொதுப் பொருள் பெறவைத்தமையின் இது

வேற்றுப் பொருள் வைப்பணி; வாடை - கூற்று; 'கூதிருருவிற் கூற்றம்' (குறுந். 197). 'கூதிர்வாடை வெங்கூற்றினின் நோக்கினுன்' (ஆரணிய. 1044).

பி - ம். 1. மெண்ணி. 2. ஈசனுரே; ஈசன்றுனேர்; நாடக நவ்வி.
3. வாலடையாற் கூற்றிளுரு.
4. இடந்தவன்றே, இடைத்ததன்றே, இடைத்தலென்ளு. (60)

492. அருவினை யரக்க ரென்ன
வந்தர மதனில் யாவும்
வெருவர முழங்கு கின்ற
மேகமே மின்னு கின்ருய்
தருவலென் றிரங்கி னுயோ
தாமரை துறந்த தையல்
உருவினைக் காட்டிக் காட்டி
யொளிக்கின்ரு யொளிக்கின் ருயால்.

'அருவினை அரக்கர் என்ன - (பொறுத்தற்கு) அருமையான தீச் செயல்களையுடைய அரக்கர் போல, அந்தரம் அதனில் - ஆகாயத்தில், யாவும் வெருவர முழங்குகின்ற - எல்லாம் அஞ்சும்படி குமுறுகின்ற, மேகமே - மேகமே! மின்னுகின்ருய் - (சீதாதேவியின் உருவத்தைப் போல்) ஒளிவிடுகின்ருய்; 'தருவல் என்று இரங்கினுயோ - அவளை அளிப்பன் யான்' என்று என்பால் இரக்கங் காட்டினுயோ? தாமரை துறந்ததையல்-(தனது இருப்பிடமான, செந்தாமரையை நீத்துப் பூமியில் அவதரித்த பிராட்டியினுடைய, உருவினை காட்டி காட்டி-திருமேனியை அடிக்கடி காண்பித்து, ஒளிக்கின்ருய் - மறைக்கின்ருய், ஒளிக்கின்ருய்- மறைக்கின்ருய், ஆல் - அசை.

பெரும்பாலும் மகளிர் இடைக்கு அடிக்கடி தோன்றி மறையும் மின்னலை உவமை கூறுவர் கவிஞர்; இங்கே மின்னலைப் பிராட்டிக்கே உவமை யாக்கினர். இடைக்குமின்; ஆரணிய. 288. அந்தரம்-வானம்; 49; பால. கடிமணப் 83; திருவாச. 473. பிராட்டியைத் திருமகளாகவே பலவிடங்களில் கூறுவர் ஆசிரியர்; பால. கோலங். 32, 35; மிதிலைக். 1. கடிமண. 81; உலாவியல். 43; அயோத்தி. நகர்நீங்கு; 95; 223; 234; சித்திரகூட. 5; சுந்தர. 395; உயுத்த. மாயாசனக. 53. இனி ஒளிக்கின்ருயாதலால் தருவல் என்றிரங்கினுயோ எனினுமாம்; இங்கு ஆல், ஆதலால் என்பதன் விகாரம். ஒளிக்கின்ருய் ஒளிக்கின் ருய் - அடுக்குக்களில் அவலச் சுவை தொனித்தல் காண்க.

பி - ம். 1. அரக்கரேபோல், யரக்க னென்ன. 2. மின்னினன்றோட்.
3. தருவனென்று; மறந்த, யிருந்த.
4. ஒளிக்கின்றாயே, யொளிக்கின்று யொக்கின்றாய், யொளிக்கின்று
ரொக்கின்றாயால். (61)

493. உண்ணிறைந் துயிர்க்கும் வெம்மை
யுயிர்சுட வுலையு முள்ளம்
புண்ணுற வாளி தூர்த்தல்
பழுதினிப் போதி மார
எண்ணுறு கல்வி யுள்ளத்
திளையவ னின்னே யுன்னைக்
கண்ணுறு மாயிற் பின்னை
யாரவன் சீற்றங் காப்பார்.

'மார - மன்மதனே ! உள் நிறைந்து - உள்ளிடம் எல்லாம் நிரம்பி, உயிர்க்கும்-(அங்கிடமின்றி) வெளிப்படும், வெம்மை - (பிரிவானிகழ்ந்த) வெப்பம், உயிர்சுட -(எனது) உயிரை எரிப்ப, இனி-இனிமேல், உலையும் உள்ளம் - வருந்தும் மனம், புண் உற வாளி தூர்த்தல் - புண்படுமாறு அம்பெய்து நிறைத்தல், பழுது - வீண்வேலை ; (ஆதலால்), போதி - அகன்றுசெல்வாயாக ; (மேலும்), எண் உறு கல்வி உள்ளத்து இளைய வன் - நன்கு மதிக்கப்படுகின்ற கல்வி நிறைந்த மனத்தினனாகிய என் தம்பி (இலக்குவன்), இன்னே - இப்பொழுதே, உன்னை கண்உறும் ஆயின் - உன்னை நோக்குவானாகில், பின்னை - பின்பு, அவன் சீற்றம் காப்பார் யார் - அவனுக்கு எழும் சினத்தைத் தடுப்பவர் யார்? (ஒருவரு மில்லை).

புலனைந்தும் வென்ற தவச்செல்வன் இலக்குவன் ஆகலின், அவன் கண்டு சினத்தற்குமுன்னே அம்புகள் எய்வதை நிறுத்திவிட்டுச்செல் லும்படி மாரனை இராமபிரான் எச்சரிக்கை செய்தபடி. இங்கு எண்ணுறு கல்வி யென்பது, புலனைந்தும் வெல்லும் கல்வியையே சிறப்பாகக் குறித்துநின்றது. (ஒப்பு); ' அலையும் மனத்தை யகத்தடக்கும் அவனே ஞானி அதிசூரன் ' (நிட்டானுபூதி); ' குணமென்னும் குன்றேறி நின் றார் வெகுளி கணமேயுங் காத்தலரிது ' (குறள். 29). இளையவன் கல்வி யுள்ளம்; அயோத்தி. நகர்நீ. 129 ; ஆரணிய; 784, 786; உயுத்த. பிராட்டிகளங்காண். 18. இலக்குவன் சீற்றம்; அயோத்தி, நகர்நீ. 115, 116. கிளைகண்டு. 26-40. 'வானென்பதென் வையக மென்பதென் - கோனென்பதென் எம்பிகொதித்திடுமேல் ' (உயுத்த. அதிகாயன். 79).

காத்தல் - தடுத்தல்; 'செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பான்' (குறள். 301) என்ற இடத்துப்போல. பழுது-பயனின்மை; தொல்-சொல். 324. எண் உறு கல்வி, அறுபத்து நான்கு என்று எண்ணப்படும் கலைகளுமாம். 'அறிவில் ஆதிசேடனே' என்ற வழக்கும் காண்க. இலக்குவனது ஐம்புலவெற்றியையும் வீரத்தையும் இராமபிரான் புகழ்ந்தது காண்க.

பி - ம். 1. உரைக்கும் வெம்மை, சிரங்கும் வெம்மை; தடலையுள்ளம்.
2. புண்ணினில் தூர்த்தால், வாளிதூர்த்தல்; புகழல்ல போறி மாரா, போத மாரா.
3. எண்ணறு கலைதோயுள்ளத்; இமையவனின்ன முன்னே.
4. கன்றுறு மாவிற்; பின்னர் காண்பார். (62)

494. வில்லும்வெங் கணையும் வீரா
வெஞ்சமத் தஞ்சி னூர்மேல்
புல்லுந வல்ல வாற்றல்
போற்றலர்க் குரித்து போலாம்
அல்லுநன் பகலு நீங்கா
யனங்கநீ யருளிற் றீர்ந்தாய்
செல்லுமென் றெளிவந் தோர்மேற்
செலுத்தலுஞ் சீர்மைத் தாமோ.

'வீரா - வீரனே! வெம் சமத்து - கொடிய போரில், அஞ்சினர் மேல்-பயந்தவர்கள் மீது, வில்லும் வெம்கணையும் - வில்லும் கடுமையான அம்பும், புல்லுந அல்ல - பொருந்தக் கடவனவல்ல; (ஆனால்), ஆற்றல் போற்றலர்க்கு உரித்து போலாம் - உண்மையான வீரப்பான்மையை நன்கு மதியாதவர்க்கே பொருந்துவதாகும் போலும்; (இன்னும்), அநங்க- மன்மதனே! நீ - நீ, அருளின் தீர்ந்தாய் - கருணைத்திறத்தினின்றும் விலகினவனாய், அல்லும் நல் பகலும் நீங்காய் - இரவும் பகலும் என்னைவிட்டு நீங்கமாட்டாய்; செல்லும் என்று எளிவந்தோர் மேல் செலுத்தலும் - (நமது வன்மை) இவ்விடத்துப் பலிக்கும் என்றுஎண்ணி வலியற்றவர்கள் மீது ஏவி வருத்துதலும், சீர்மைத்து ஆமோ - சிறப் புடையதாகுமோ? (ஆகாது).'

வீரா என்பது இளிவரவு பற்றி வந்தது. தொல். புறத். 10. நச். உரைப்பகுதி இங்கே ஒப்பு நோக்கத்தகும். 'அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக் கழிதறுகண்மை' என்பது தழிஞ்சி என்னும் புறப்

பொருட்டுறை. போலாம் - ஒப்பில் போலி. ஆற்றல் போற்றலர் - வலிமையை மதியாதவர். ஆற்றல், இங்கு வீர விலக்கணமும் ஆம்; 'இந்நிலத் தாற்றலுடையோர் ஆற்றல் போற்ருது' (புறநா. 73). நன்பகல் என்றது இரவு நேரம் போலப் பகல் துன்பம் செய்யாமைபற்றி; 'காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான், மாலைக்குச் செய்தபகை' (குறள். 1225). 'செல்லுமென் றெளிவந்தோர் மேற் செலுத்தல்' (ஒப்பு) : குறள். 250. செல்லுதல் - பலித்தல்; 'செல்லும் சொல்வல்லான்' (அயோத்தி. நகர்நீ. 139); 'உன் வல்லபம் இங்குச் செல்லாது' என்ற வழக்கும் காண்க.

பி - ம். 1. வில்லிடைக் கணைகள்வீரர், யாளும்; வெஞ்சினைத்தஞ்சினுர்.

2. புல்லுவயல்ல ; புல்லுறத் தொடுத்தல் பின்னும். போற்றலர்க் குரியபோலாம், போற்றுதல் குறித்த, போற்றலர்க் குரித்த; குறித்துப் போர்வேட், 3. நீங்கா வனைகநீ.

4. றனியவந்தார்மேற், றளியவந்தாரை; வந்தோமை; செகுத்தலும். (63)

இராமனை இலக்குவன் தேற்றத் தொடங்குதல்

495. என்னவித் தகைய பன்னி
யீடழிந் திரங்கு கின்ற
தன்னையொப் பானை நோக்கித்
தகையழிந் தயர்ந்த தம்பி
நின்னையெத் தகையை யாக
நினைந்தனை நெடியோ யென்னுச்
சென்னியிற் சுமந்த கையன்
றேற்றுவான் செப்ப லுற்ருன்.

என்ன இத்தகைய பன்னி - என்று இத்தன்மையவான சொற்களைக் கூறி, ஈடு அழிந்து இரங்குகின்ற - வலிமை யழியப்பெற்று மனம் வருந்துகின்ற, தன்னை ஒப்பானை நோக்கி - தனக்குத்தானே ஒப்பான இராமபிரானைப் பார்த்து, தகை அழிந்து அயர்ந்த - திடமொழிந்து தளர்ந்த, தம்பி - தம்பியான இலக்குவன், சென்னியில் சுமந்த கையன் - தன் தலைமீதுயர்த்திய கரங்களையுடையவனுய், தேற்றுவான் - (தன் அண்ணனைத்) தேற்றும் பொருட்டு (அப்பெருந்தகையைப் பார்த்து), 'நெடியோய் - பெரியவனே! நின்னை எத்தகையை ஆக நினைந்தனை - உன்னை எத்தன்மையை யுடையவனுகக் கருதிவிட்டாய்?' என்னு - என்று கூறி, செப்பல் உற்ருன் - (பின்னும் சில வார்த்தைகளைச்)

சொல்லித் தேற்றத் தொடங்கினுன். அவற்றைப் பின்வரும் ஐந்து செய்யுட்களிற் காண்க.

ஈடு - வலிமை ; பால. கடிம்மணம். 2. ஆரணிய. 707 ; தன்னே - ஒப்பார்ன்; 'தன்றுணே யொருவரும் தன்னில் வேறிலான்.' 260; 'தனக்குவமையில்லாதான்' (குறள். கடவுள்); 'தன்னெப்பாரில் லாதானே' (தேவா. 12, 2.); இதனைப்பொது நீங்குவமை என்பர். தகை- வலிமை. நின்னே யெத்தகையையாக நினேந்தனே என்றது இராமபிரா னின் பரம்பொருள் தன்மையை நினைவூட்டியபடி. நெடியோய் - மாவலி யின் பொருட்டு நீண்டவனே என்றும் பொருள்படும். தேற்றுவான் - வினையெச்சம்.

பி - ம். 1. *யிடருழன், யிடரழிங்;,யிரங்குகின்ற, யிரங்கித்தாழும்.*
2. *யொப்பவனே; தயருந்தம்பி; தயர்த்த.*
3. *யெத்தகையளுக, யெத்தன்மைத்தாக.*
4. *சென்னிமேற்.* (64)

வேறு

496. காலநீளிது காருமாரியும் வந்ததென்ற கவற்சியோ
நீலமேனி யரக்கர்வீரம் நினைந்தழுங்சிய நீர்மையோ
வாலிசேனே மடந்தைவைகிட நாடவாரலி லாமையோ
சாலநூலுணர் கேள்விவீர தளர்ந்ததென்னே தவத்தினேய்.

'சால-மிகுதியாக, நூல் உணர்-நூல் அறிவையும், கேள்வி-கேள்வி ஞானமான செவிச் செல்வமுமுடைய, வீர-வீரனே! தவத்தினேய் - தவ வொழுக்கத்தை மேற்கொண்டவனே ! கார்காலமும் நீளிது - கார்ப் பருவமும் நீண்ட காலவளவினது ; மாரியும் வந்தது - மழையும் பெய்யத் தொடங்கிற்று; ஏன்ற - என்றதனுலாகிய, கவற்சியோ - கவலே தானே? நீலம்மேனி; அரக்கர்வீரம் நினேந்து அழுங்கிய நீர்மையோ-கறுத்த உடலே யுடைய இராக்கதரது வீரத்தை நினேந்து மனவலி குறையப் பெற்ற தன் மையோ ? மடந்தை வைகும் இடம் நாட - பிராட்டி தங்கும் இடத்தைத் தேடிக் கண்டு பிடித்தற்கு, வாலி சேனேவாரல் இலாமையோ - வாலி யினுல் சேர்த்து வைக்கப்பட்ட சேனேவரவில்லே யென்பது தானே? தளர்ந்தது என்னே - நீ (மனம்) தளர்ந்ததற்குக் காரணம் யாது ?

நிறைந்த தவச்செல்வனும் கல்வி கேள்விகள் மிக்கவனுமான இராம பிரான், அங்ஙனம் தளர்தல் முறையன்றென்று தேற்றுவான், தளர்ச் சிக்குக் காரணம் எதுவாகவிருக்குமென்று கேட்கின்ருன். மேற்கொண்

டதான சீதையைத் தேடுங்காரியம் மாரியாற்றடைப்படக் கூடுமாகலின் மாரிவந்ததென்ற கவற்சியோ என்ருன். இனிக் கார் காலமும், என உருபு பிரித்துக்கூட்டாது, காரும் காலம் நீளிது - கார்ப்பருவம் நீண்ட காலமுடையது என்றும் கூறலாம். பிரிந்தார்க்கு யாமத்தெல்லையோர் ஆண்டெனவும், ஒருநாள் எழுநாள் போலவும் செல்லுமாகலின் கால நீட்சியைக் குறித்தார். காலம் நீளிது - சீதையைப்பிரிந்து நெடுங்காலம் ஆயிற்று எனினுமாம். காரும்மாரியும் வந்தது, பன்மை யொருமை மயக்கம். வீர என்று அவனை விளித்தது, தளர்தல் முறையன்று என்று வற்புறுத்தற் பொருட்டாகும். சுக்கிரீவன் சேனையென்று கூருது வாலி சேனை என்றது, நிரம்பிய வொருவன் ஆன அவன் தனது ஆற்றலாற் றெருகுத்தமை பற்றியென்க. இந்தச் சேனை எழுபது வெள்ளம் என்று இந்நூலிற் பல இடங்களிலும் குறிக்கப்பெற்றுள்ளது.

பி - ம். 1. காலமிங்கிது, காரின் மாரியும், மாரிபோலில; தென்னவுன்று கவற்சியோ.
2. வெம்மை; நேர்மையோ, நோன்மையோ.
3. மடந்தை புக்கிடம் ; மற்று; நாடலிலாமையோ.
4. நல்லுணர்; நல்லுரை; தளர்ந்ததென்கொல்; சலத்திஞேய். (65)

497. மறைதுளங்கினு மதிதுளங்கினும் வானுமாழ்கடல் வையமும்
நிறைதுளங்கினு நிலைதுளங்குறு நிலைமைநின்வயி னிற்குமோ
பிறைதுளங்குவ வனையபேரெயி றுடையபேதையர் பெருமைநின்
இறைதுளங்குறு புருவவெஞ்சிலை யிடைதுளங்குற விசையுமோ.

'மறை துளங்கினும் - வேதங்கள் பிறழ்ந்தாலும், மதி துளங்கினும் - சந்திரன் நிலைமாறினுலும், வானும் ஆழ்கடல் வையமும் நிறை துளங்கினும் - ஆகாயமும் ஆழமான கடலாற் சூழப்பட்ட பூமியும் தாம் தாம் நிற்கும் தன்மையில் மாறுபடினும், நிலை துளங்குறும் நிலைமை - இயற்கைப் பண்பு கலங்கும் தன்மை, நின்வயின் நிற்குமோ - உன்னிடத்தில் நிலைபெறுமோ ? பிறை துளங்குவ அனைய - பிறைகள் விளங்குவன போன்ற, பேர் எயிறு உடைய - பெரிய பற்களையுடைய, பேதையர் - அறிவற்ற இராக்கதர்களுடைய, பெருமை-வலிமைப் பெருமையானது, நின் - உன்னுடைய, இறை துளங்குறு புருவம்வெஞ்சிலை - தலைமை பெற்று விளங்கும் புருவங்களென்கிற, கடுமையான விற்கள், இடை துளங்குற - நடுப்புறம் அசைந்த வளவில் இசையுமோ - நிலை நிற்குமோ? (நில்லா) என்றவாறு.

இயற்கையில் நிகழாதன நிகழினும் கலங்காத மனப்பான்மையன் என்று இராமனுக்கு நினைவுறுத்தியவாறு; (ஒப்பு) : ' வேலை கரையிழந் தால் வேத நெறிபிறழ்ந்தால் ஞாலமுழுது நடுவிழந்தால் ' (நள வெண்பா. 222); 'வானந்துளங்கிலென், மண் கம்பமாகிலென்' (தேவா:1199 8). தனித்து ஓர் கன்னியை எதிர்ப்பட்டு, அவள் மீது கொண்ட காதலால் ஓர் தலைவன் தளர்ந்தபோது பாங்கன் அவனைக் கழறுவதாகக்கூறும் கோவைச் செய்யுட்களில் இது போன்ற கருத்துக்களைப் பரக்கக் காணலாம், (திருக்கோ : 27); (புறநா. 2) ஒப்பு நோக்குக. மறை துளங் குதல், செய்ய வேண்டுவனவற்றை விலக்குதலும் தவிர வேண்டுவன வற்றை விதித்தலும் மாறுதல்; சந்திரன் துளங்குதல், திசைமாறியுதித்தல், தண்மையன்றி வெம்மையை விளைத்தல்; ஆகாயம் நிறை துளங்குத லாவது, ஏனைய பூதங்கட்கு இடம் கொடுத்தலும், ஒலியைத் தன் குணமாகவுடைமையும் இல்லாமற் கெடுதல்; வையம் துளங்குதல், வன்மையும், பொருட்கிடமாதலும், மணத்தை இயல்பாக வுடைமையும் தவிர்தல். வானத்தையும் வையத்தையும் கூறியது ஏனைய மூன்றிற்கும் உபலக்கணம். ஆழ்கடலும் வையமும் என்று பிரித்தும் கடல்துளங் கினும் என்றும் கொள்ளலாம். கடல் நிறை துளங்குதலாவது கரை யிழத்தல், வற்றல் முதலிய பண்புகளை மேற்கொள்ளல். வையம் - வைத்தற்கு அதாவது எல்லாப் பொருளும் தங்குதற்கிடமாவது. இராம னுடைய வல்லப மறியாது அவர்க்கே தீங்கிழைக்க முன்வந்தது பற்றி. அரக்கரைப் பேதையர் என்றான். இறை - சிறிதும், என்னலுமாம். இனி இறை என்பதனை அண்மை விளியாக அண்ணனை அழைத்ததாகக் கொள்ளலுமாம்.

பி - ம். 2. *நீர்மை நின்வயி; நினைக்குமோ, நின்றுயிர் நிற்குமோ.*

3. *பிறைதுளங்குறு மனைய பொன்னுதற் ; பெருமையின்.*

4. *புருவ மென்சிலை, வுன்சிலை ; யிறை துளங்கிட, துளங்குத வியலுமோ. வியலுமே.* (66)

498. அனுமனென்பவ னளவறிந்தன மறிஞவங்கத னுதியோர்
ஏனையரென்பதொ ரிறுதிகண்டில மெழுபதென்றெனு
மியல்பினர்
வினையின்வெந்துயர் விரவுதிங்களும் விரைவுசென்றன
வெளிதினின்
தனுவெனுந்திரு நுதலிவந்தனள் சரதம்வன்றுயர் தவிர்தியே.

'அறிஞ - அறிஞனே! அனுமன் என்பவன் அளவு அறிந்தனம் - அநுமன் என்பவனுடைய (அறிவு, வீரம், சித்திகள் கைவரப் பெற்ற தன்மை) முதலியவற்றின் அளவைத் தெரிந்துகொண்டோம்; அங்கதன் ஆதியோர் - அங்கதன் முதலான, எழுபது என்று எனும் இயல்பினர் - எழுபது வெள்ளம் என்று கணக்கிட்டுக் கூறப்படும் தன்மையுடையவர்களான வானர வீரர்கள், எனையர் - எத்தனைபேர், என்பது ஒர் இறுதி - என்பதை முடிவாக, கண்டிலம் - தெரிந்தோமில்லை; வினையின் - தீவினையொப்ப, வெம் துயர் விரவு - கொடிய துன்பம் தரும், திங்களும் - சரற்காலமும், விரைவு சென்றன - வேகமாகக்கழிந்தது; (இனி - இனி,) நின் - உன்னுடைய, தனு எனும் திரு நுதலி - வில்லென்று சொல்லத்தக்க அழகிய புருவங்களையுடைய பிராட்டி, எளிதில் வந்தனள் - சுலபமாக வந்து சேர்வாள்; சரதம் - (இது) உறுதி; (ஆதலின்), வல் துயர் தவிர்தி - கொடிய துன்பம் நீங்கப் பெறுவாயாக.

உரையாட்டினாலும், அவன் தரித்த விசுவரூபம் கொண்டும் அநுமனை ஒருவாறு அளந்தறிந்தனர் ஆகலின், அளவறிந்தனம் என்றான். இலக்குவன், பிராட்டி திரும்பிவருவாள் என்பதில் உறுதி கொண்டவனாகலின் திருநுதலி வந்தனள் என்று கூறினான்; இது தெளிவு பற்றிவந்த காலவழுவமைதி. இலக்குவனின் அறிவாற்றலை அவன் மாயமானைப் பற்றி இராமனிடம் கூறியது கொண்டும், இராமன் மானை நாடிச்சென்ற விடத்து இறந்தனனோ என்று கவலையுற்ற பிராட்டியிடம் கூறியனகொண்டும் நன்குணரலாகும்; இவைகொண்டே அவனைத் 'தெளிவுடைத்தம்பி' (ஆரணிய. 786.) என்று கூறுவர்; 'எண்ணுறு கல்வியுள்ளத் திளையவன்' 493. என்றதும் காண்க. எழுபது என்பது ஆகுபெயராய் எழுபது வெள்ளம் வாநரச் சேனையைக் குறித்தது. தனு என்பதை உடல் எனக்கொண்டு உனது உயிருக்கு இடமாக விளங்கும் பிராட்டி எனினுமாம்.

பி - ம். 1. *அறிவறிந்தனை, அவனறிந்தமை; அமைதியோர், அமைதியோ, யறிதியிங்கிய என்றியே.*

2. *எனைவ ரென்பவர், மெழுபதென்றெழு; தென்றெனும் பரவை யோர், முயலையோர், முயலையார்;*

3. *அனிக வெம்படை விரவு திங்களினவதி சென்றன, வினவி வந்தமை, வினையின் வந்தெதிர்; சென்றது விமலவுன்; வென்றநின்.*

4. *வெந்துயர்; தவிரய்யா, தவிர்தியால், தவிர்தியாய், தவிருவாய்.*

499 மறையறிந்தவர் வரவுகண்டுமை வலியும்வஞ்சகர்
வழியொடும்
குறையவென்றிடர் களேவெனென்றனை குறைமுடிந்தது
விதியினுல்
இறைவவங்கவ ரிறுதிகண்டினி திசைபுனைந்திமை யவர்கடாம்
உறையு மும்பரு முதவிநின்றரு ளுணர்வழிந்திட லுறுதியோ.

'இறைவ - தலைவனே ! மறை அறிந்தவர் - (தமதுஞான திருட்டியால்) உன் அவதார ரகசியத்தைத் உணர்ந்தவர்களான (தண்டக வனத்து) முனிவர்கள், வரவுகண்டு-(உன்பால்) வந்து அபயம் புக்கதைப் பார்த்து, (அவர்கட்கு), 'உமைவலியும் வஞ்சகர் வழியொடும் - உங்களை வாதிக்கும் வஞ்சனை யுடையவர்களான அரக்கர்களின் சந்ததிகளோடும், குறைய வென்று இடர்களைவென் என்றனை - குன்றியொழியும்படி வெற்றிகொண்டு (உங்களுடைய) துன்பத்தைப் போக்குவேன்' என்று சூளுறவு பகர்ந்தனை; (அதற்கேற்ப), விதியினுல் குறை முடிந்தது - நல் ஊழின் வயத்தால் அந்தக்காரியம் நிறைவேறிவிட்டது; (ஆதலால்), இனி, அங்கு அவர் இறுதிகண்டு - அவர்கள் இருப்பிடமாகிய இலங்கையிலேயே அந்த அரக்கர்களுடைய அழிவைச்செய்து, இனிது இசை புனைந்து - இனிதாகப் புகழை மேற்கொண்டு, இமையவர்களுக்கும் - தேவர்கட்கும், தாம் உறையும் உம்பரும் உதவி நின்றருள் - அவர்கள் வசிக்கும் விண்ணுலகத்தை (மீட்டும்) தந்தருள்க: (அவ்வாறு புரியாமல்) உணர்வு அழிந்திடல் உறுதியோ - மதிமயங்கி நிற்பது நீ மேற்கொண்ட அந்தச் சூளுறவிற்குப் பொருந்துமோ ?

மறை அறிந்தவர் - பல வேதங்களையும் ஐயம் திரிபு அறியாமை நீங்க அறிந்து தெளிந்த முனிவர்கள். தண்டக முனிவர்க்கு இராமன் அபயமளித்ததை, ஆரணிய காண்டம். (134, 138, 139) ஆம் செய்யுட்களிற் காண்க. முனிவர்கள் ஞானதிருட்டியானுணர்ந்தமை ஷை காண்டத்து (150, 151)ச் சுதீட்சணர் கூற்றுக அமைந்துள்ள செய்யுட்கள் கண்டு தெளிக. இனி 'விதியினுல் குறை முடிந்தது' என்பதற்கு அரக்கரது தீவினையினுல் அவர்கள் உன்னிடம் இழைத்த பொல்லாங்கும், நீ அவரை ஒழிப்பதற்கு ஓர் காரணமாக விளைந்தது எனினுமாம்; அரக்கர் பாவமும், இன்னல் செயிராவணன் இழைத்த தீமையும், அரக்கர்க்கே முடிவு செய்தன என்பன இங்கே கருதத்தகுவன. (அயோத். மந்தரை. 78) சீதையைக் கவர்ந்ததாகிய குறையே இராவணன் அழிதற்குச் காரணமாயிற்ருகலின், 'குறைமுடிந்தது விதியினுல்' என்ருன் என்க. இனி, தேவர்களுடைய மனக்குறையும் தீர்ந்தது

எனினுமாம். இறைவ - என்ற சொல் அபூர்வமாக இலக்குவன் வாக்கில் எழுந்தது குறிக்கத்தக்கது. மற்றெங்கும் இறைவ என்று விளித்ததாகக் கூறப்பட்ட தில்லை; இராமபிரானது அவதாரம் துட்டநிக்கிரக சிட்டபரிபாலனத்துக்காகலின் அண்ணன் வந்த காரியத்தை அவனுக்கு நினைப்பூட்டும் வகையில் இந்தச்சொல் எழுந்தது என்க. பிராட்டி, நாராயணனே (சுந்தர. 494.) என்று இராமனை விளித்ததை இங்கு ஒப்பு நோக்குக. இராமன் 'சூளுறவும், முனிவர் குறையின்தீர்வும் தேவர் குறைதீர நிற்பதும் சுட்டப்பெற்றன' என்க. உயுத்த. இராவணன் வதை 241, காண்க. இறுதிகண்டு என்பதற்கு முடிவை நோக்கி என்றும் பொருள் கொள்ளலாம். கண்டு - செய்து; 470.

பி - ம். 1. டுயர்வு கண்டுமுன் வரமும்; வரவு கண்டமை.
2. களைவமென்றவர், களையுமென்றவர், களைய மென்றனை; குறை முடிந்தது வலியினால், றதனினின்றவர்.
3. இறைய வந்திலர்; திசை புனைந்தனை யவர்களால், புனைந்தியை யவர்கடாம்.
4. முதலநின்றன, முதலவந்தது, வொழிந்திட, உறையு மும்பரும் வெளியினின்றனர்; ஒழிதியே, லொழிதியால். (68)

500. காதுகொற்ற நினக்கலாது பிறர்க்கெவ்வாறு கலக்குமோ
வேதனைக்கிட மாதல்வீரதை யன்றுபேதைமை யாமரோ
போதுபிற்பட லுண்டிதோர்பொரு ளன்றியின்று
புணர்த்தியேல்
யாதுனக்கிய லாததெந்தை வருந்தலென்ன வியம்பினான்.

'எந்தை - என் தந்தை போன்றவனே! காது கொற்றம் - (பகைவரை) அழித்தலால் கிடைக்கும் வெற்றி, நினக்கு அலாது - உனக்கேயன்றி, பிறர்க்கு - (அயலார்க்கு) அந்த அரக்கர்க்கு, எவ்வாறு கலக்குமோ-எந்த வகையிலும் பொருந்துமோ? வேதனைக்கு இடம் ஆதல்-வருத்தத்திற்கு இடமாக ஆவது (வேதனைப்படுவது), வீரதை அன்று - வீரப்பான்மையாகாது; பேதைமை ஆம் அரோ - (அது) அறியாமையின் பாற்படும் அன்றோ? போது பின்படல் இது ஓர் பொருள் உண்டு - காலத்தைப் பின்பற்றல் என்ற ஓர் செயல் (உலக வழக்கில்) உள்ளது; அன்றி - அஃதல்லாமல், இன்று புணர்த்தியேல் - இப்போதே நீ முயன்றாயெனினும், உனக்கு இயலாதது யாது? உனக்கு (ஆற்ற) முடியாதது யாதிருக்கின்றது ?. (ஆகவே), வருந்தல் - மனவருத்தம் உறாதே', என்ன இயம்பினான் - என்று இராமபிரானை நோக்கி இளையவன் சொன்னான்.

காதுதல்-கொல்லுதல், 'காதுங்கண்ணுதல்' (உயுத்த ; இரணிய. 1); காதுவேலன்னகண்ணுர்'; (திருவிளை ; வளையல் ; 9). வீரதை - வீரம்: உயுத்த ; மிகுட ; 40 ; கும்ப; 222 ; படைத்தலைவ 84. போதுபின் படல் - காலத்தையொட்டி யொழுகல்; காலமறிதல் இடம் அறிதல் முதலியன அரசர்க்கு இன்றியமையாதவைகளே ஆயினும் உனது பேராற்றலுக்கு அவைகள் வேண்டா. 'இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது' (481) என்ற குறட்பாவும் அதன் உரையும் இங்கே காணத்தகும். 'உனக்கு வெற்றி நிச்சயம் ; ஞாலம் கருதினும் கைகூடும் காலம் கருதியிடத்தாற் செயின்' என்ற அறிவுரை சாமானிய அரசர்கட்குக் கூறப்பட்டதன்றி உன்போன்ற துணையொருவரையும் வேண்டா வெற்றி வீரர்க்கன்று; அதனுல் மனம் தளராதே' என்று தேற்றினுன் இலக்குவன்.

பொருள் அன்று நின்று புணர்த்தியேல் - உனக்கு இது ஓர் பொருட்டன்று இப்பொழுதே முனைந்து நின்று (உன் வீரச் செயல்களைப்) பொருத்திப் போர் புரிவாயாகில் என்ற பாடமும்சிறக்கும் (69).

பி - ம். 1. நினைக்கலாது, வுனக்கலாது, முனக்கலாது ; நினைக்கலாமை ; பிறர்க்கிவ்வாறு, பிறர்க்குவந்து கடுக்குமோ.
2. வேதனைக் கிடமானவீர மதன்று தீர்வது வன்றரோ; பேதைமை மேன்மையோ.
3. பொருளன்று நின்று, வின்றியின்று துணிந்திடில், புணர்ச்சி மேல் ; வன்றி வேறு நினைப்பதென்.
4. விளம்பினுன். (69)

இராமபிரான் ஆறுதலும் பின்மாரிதொடங்குதலும்

501. சொற்றதம்பி யுரைக்குணர்ந்துயிர் சோர்வொடுங்கிய தொல்லையோன்
இற்றவின்ன லியக்கமெய்திட வைகல்பற்பல வேகமேல்
உற்றுநின்ற வினைக்கொடும்பிணி யொன்றின்மேலுட னென்றுராய்
மற்றும்வெம்பிணி பற்றினுலென வந்தெதிர்ந்தது மாரியே.

உயிர் சோர்வு ஒடுங்கிய தொல்லையோன் - (கார்ப்பருவத்தில்) உயிர்த்தளர்ச்சியினுல் (உடலும் உளமும் ஒருங்கே) ஒடுங்கப் பெற்ற பழம் பொருளான இராமபிரான், தம்பி சொற்ற உரைக்கு உணர்ந்து - தம்பி தேறும்படி கூறிய சொற்களால் தெளிவு வரப்பெற்று, இற்ற

இன்னல்-நீங்கப்பெற்ற துன்பத்தினனாய், இயக்கம் எய்திட - (கிடக்கை நீங்கி) நடமாட்டம் கொள்ளும்படியாக, (இவ்வாறு) பற்பல வைகல் ஏக - அநேக நாட்கள் கழிய, மேல் - பின்பு, உற்று நின்ற வினை கொடும் பிணி - வந்தடைந்த தீவினைபோலக் கடுமையான ஒரு நோயின் மேல், மற்றும் வெம்பிணி ஒன்று உடன் உராய்ப் பற்றினுல் என - பிறிதொரு கொடிய நோய் உடன் வந்து பிடித்தது போன்று, மாரி எதிர்ந்து வந்தது - (பின்) மாரிக்காலம் முன் தோன்றிற்று.

உரைக்கு - உரையினுல்; உருபு மயக்கம். சூக்குமவுருவிலிருந்த கன்மவினை, உயிர்கள் தனு கரணங்கள் பெற்ற வளவில் அவற்றை வந்து அடையுமாகலின், உற்று என்றார்; பிடிப்பதற்கென வந்து பொருந்தி யென்க. 'பல்லாவுளுய்த்து விடினும்' (நாலடி, 101) என்ற செய்யுட்கண், 'பழவினையும் கிழவனை வந்தடையும்' என்றது காண்க. வைகல் - நாள்; 'பெரியவர்கட் செல்லாது வைகியவைகலும்' (நாலடி: 169); 'வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்' நாலடி. 39. கார்காலம் விளைத்த வருத்தத்தின் மேல் பின் மழையும் தொடங்கியது; ஒரு பிணிப் பீடை முன்னரே யிருக்கப் பிறிதொரு நோய் வந்து பற்றியது போலும் என்பது கருத்து. உராய் - உராய்ந்து. 'சோர்ந்தொடுங்கிய' என்ற பாடமும் நன்கு பொருந்தும்.

பி - ம். 1. சோர்ந்தொடுங்கிய; தொல்லையான்.
2. மற்றவின்னலியக்க மீதிடவைகலிற்றன, வைகமேல், வைகல் சிற்சில வேகமேல், பற்பல, பல்பட, வைகல் பாதியுமேகமேல்.
3. கடும்பிணி, மேலடனுற்றுராய், மேவிட நின்றுராய், மேதுட னின்றுராய், பிணியொன்று பற்றிய வுடலின் மேல்.
4. வந்தெழுந்தது மாரியே.

இங்கே 'கார்காலப்படலம் முற்றும்' என ஓர் பிரதியிற் காணப் படுகிறது. (70)

வேறு

பின்மாரி நிகழ்ச்சிகள்

502. நிறைந்தன நெடுங்குள னெருங்கின தரங்கம்
குறைந்தன கருங்குயில் குளிர்ந்தவுயர் குன்றம்
மறைந்தன தடந்திசை வருந்தினர் பிரிந்தார்
உறைந்தன மகன்றிலுட னன்றிலுயி ரொன்றி.

நெடுங்குளன் நிறைந்தன - பெரிய குளங்கள் நீர் நிரம்பப் பெற்றன; (அக்குளங்களில்) தரங்கம் - அலைகள், நெருங்கின - (ஒன்றன்

மேலொன்று) தொடர்ந்து எழுந்தன ; கருங்குயில் – கரிய நிறமுள்ள குயில்கள், குறைந்தன - (ஒலி) குறையப்பெற்றன ; உயர் குன்றம் - உயர்ந்த மலைகள், குளிர்ந்த-குளிர்ந்த தன்மையுற்றன, தடதிசை-பெரிய திக்குகள், மறைந்தன (மேகங்களால்) மறைக்கப்பெற்றன ; பிரிந்தார்- துணைவரைப் பிரிந்தவர்கள், வருந்தினர்- மனம் உளைந்தனர் ; மகன்றில் பறவைகள் - மகன்றில் பட்சிகள், அன்றிலுடன் - பெண் அன்றில்களுடனே. உயிர் ஒன்றி மறைந்தன - ஆண் பெண்ணிரண்டும் (உடல்கள் இரண்டெனினும்) உயிர் ஒன்றுபட்டுத் தழுவி வாழ்ந்தன.

இச்செய்யுள் பெருமழைக்காலத்தையும் அதன் நிகழ்ச்சிகளையும் கூறிற்று. குயில்கள் குறைந்தன ; 477 ; மாரிக்காலக் கடுமையால் அவை அளவிற்குறைந்தன என்றும் கொள்ளலாம். ஒலி குறைந்தன என்பதற்குக் ' கூய வாய்க்குரல் குறைந்த பொற் குறைந்தன குயில்கள்' (479) என்பதை ஒப்பு நோக்குக. அன்றிலுயிரொன்றி என்ற விடத்து இணையெதுகை நயம் காண்க. மகன்றில் மருத நிலப் பறவை யென்பர் ; '' நீருறை மகன்றிற் புணர்ச்சிபோல '' (57). என்பது குறுந்தொகை, 'மகன்றில் இது நீர்வாழ் பறவைகளுள் ஒன்று. இப்பறவைகள் ஆணும் பெண்ணும் பிரிவின்றி இணைந்து வாழும் தன்மையுடையன' (குறுந்: 57). என்பது ஐயரவர்கள் விளக்கக் குறிப்பு ; ' துணை பிரிந்தனைய னிணைபிரி மகன்றிலில் ' (பெருங். 1, 53, 96). தடதிசை ; 'தடவும் கயவும் நளியும் பெருமை (தொல். சொல்.)

பி - ம். 1. நெடுந்திசை நெருங்கின. 2. குறைந்தவுயர் குன்றம்.
3. உறைந்தனர்த மன்பருடன்; வருந்தினர்; பிரிந்தாங்(கு).
4. உயிர் பொன்றி, யெய்தி ;

இங்கு, சரற்காலப்படலம் தொடக்கம் என்று ஒருபிரதியிற் காணப் படுகிறது. (71)

503. பாசிழை மடந்தையர் பழிப்பிலக லல்குல்
தூசுதொட ரூசனனி வெம்மைதொடர் வுற்றே
வீசியது வாடையெரி வெந்தவிரி புண்வீழ்
ஆசிலயில் வாளியென வாசைபுரி வார்மேல்.

ஆசை புரிவார்மேல் - தத்தம் கணவன்மாரைப் பிரிந்து காதல் மிக்கவரான, பழிப்பில் அகல் அல்குல் - குறை கூறற்கில்லாத (அங்க இலக்கணப்படி யமைந்த) அகன்ற அல்குலினையும், பாசிழை - பசிய

பொன்னாலாகிய அணிகளையும் உடைய, மடந்தையர்மேல் - மகளிர்மீது, தூசு தொடர் ஊசல் நனி தொடர்வுற்று - அவர்களின் ஆடையினை யும், அவர்கள் ஆடுகின்ற சங்கிலிகளால் இணைக்கப் பெற்ற ஊச லினையும் நன்கு சார்ந்து, வெந்த விரிபுண் வீழ் - எரியினால் வெந்த பெரிய புண்ணின்மீது தைக்கின்ற, ஆசு இல் அயில் வாளி என - குற்றமற்ற கூரிய அம்பு போன்று, வாடை வெம்மை வீசியது - வாடைக் காற்று (மனக் கொதிப்பு) உண்டாகுமாறு செய்தது.

வாடையால் தலைவரைப் பிரிந்த மகளிர் வருந்துவது இயல்பு. (ஒப்பு) 'தழல் வீசி யுலாவரு வாடை தழீஇ, அழல்வீ ரெனதாவி யறிந்தி லிரோ' (சுந்தர, 493); மற்றும் கலி. 31; குறுந். 332; குறுந். 103. என்பனகொண்டு உணர்க. இனி, வாடைக் காற்றானது பசிய அணி களை யுடைய மாதர்களின் பழித்தற்கு இடனில்லாத அகன்ற இடை யிற் பொருந்த உடுத்த ஆடையையும் அவர்கள் அமர்ந்து ஆடுகின்ற ஊஞ்சலையும் சார்ந்து காதல்புரியும் ஆடவர்களின்மேல் அவர்களின் விரகத்தை மிகுக்கும்படி, அயில் வாளி என வீசியது என்றும் கொள் ளலாம்.

குறிஞ்சி நிலப் புறங்களில் தினைப்புனம் காக்கும் மகளிர் ஊசலில் ஆடுவதும், அங்கு ஆடவர்கள் அவர்களின்மீது காதல் கொண்டு, அவர்கள்பால் அணுகுவதும் மகளிரும் உடன்பட்டு மகிழ்தலும் உண் டென்பதை, (கலி. 37). கொண்டு அறியலாம்.

பசுமை இழை - பாசிழை, மடந்தை என்பது பெண் எனப் பொதுப்பட நின்றது, 'வெந்த புண்ணில் வேல் எறிந்தாற்போன்று' என்பது பழமொழி; 'அயில்வேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும் புழை யிற் கனல் நுழைந்தாலென' (பால: கையடை; 11) என்று கூறிய, ஆசிரியர் இங்கே அதனை மாற்றிக் கனலால் விரிந்த புண்ணில் வேலெறிந்தாற் போல என்றார். வடக்கிலிருந்து வீசுதலின் வாடை எனப்பட்டது. ஆசு - குற்றம்; 'ஆசில் பரதார மிவை யஞ்சிறை யடைப் பேம்' (உயுத்த. இராவணன் மந்திர. 52).

பி - ம். 1. யரம்பையர்;

2. தூசசுடரூசனனி; ஊசலினின், ஊசலெனூர், தொடர்வுற்ற.

3. வெந்த வெரிபுண், புண்ழே்.

4. வாசையயர் வார்மேல்; ஆசில்மல ராசையென.

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை. (72)

**504.** வேலைநிறை வுற்றன வெயிற்கதிர் வெதுப்பும்
சீலமழி வுற்றபுன லுற்றுருவு செப்பின்
காலமறி வுற்றுணர்தல் கன்னலள வல்லால்
மாலைபக லுற்றதென வோர்வரிது மாதோ.

வேலை நிறைவு உற்றன - கடல்கள் நீர் நிரம்பப் பெற்றன; வெயில் கதிர் - சூரியனுடைய கிரணங்கள், வெதுப்பும் சீலம் அழி வுற்ற - வாட்டும் இயல்பு கெட்டன; புனல் உற்று உருவு செப்பின் கன்னல் - (அடித் தட்டின்கண் உள்ள சிறு புழை வழியாக) நீர் புக்கு நிறையும் செப்பினுற் செய்த நாழிகை வட்டிலின், அளவு - அளவினைக் கொண்டு, காலம் அறிவுற்று உணர்தல் அல்லால் - காலை மாலை நேரங்களை அறிய முயன்று தெரிந்து கொள்வதன்றி, மாலை பகல் உற்றது என ஓர்வு - மாலைப் போதும் பகற் போதும் நிகழ்ந்தன என்று அறிதல், அரிது - அருமையாயிற்று. மாது, ஓ அசைகள்.

இங்குக் கூதிர்க்கால நிகழ்ச்சிகள் கூறப்பெற்றன. மழையினுல் வேலை நிறைவுற்றன என்றது கடலைத் தடிவதும், அதற்கு நல்குவதும் எழிலியாகலின் என்க. 'நெடுங்கடலும் தன் நீர்மை குன்றுந் தடிந் தெழிலி தானல்கா தாகிவிடின்' (குறள். 17). என்றவிடத்துப் பரிமேலழகர் உரை இங்குக் காணத்தகும். நாழிகை கூறுவோர் கணக்க ரென்றும் கடிகையாரென்றும் கூறப்பெறுவர். கன்னல் - நாழிகை வட்டில். 'பன்னிரண்டரைப் பலம் எடையுள்ள தாமிரத்தைக் கொண்டு மகத தேசத்தில் ஒருபடி யளவாகச் செய்யப்பட்டதும், இருபது குன்றிமணி எடையுள்ள தாமிரத்தைக் கொண்டு பொன்னினுல் நாலங்குல மளவாகச் செய்த சலாகை கொள்ளும் அளவாக அடியில் துளையிடப்பட்டதுமான ஒரு பாத்திரத்தைத் தண்ணீரில் இட, அப்பாத்திரம் எவ்வளவு நேரத்தில் தண்ணீரால் நிறையுமோ அவ்வளவு காலம் ஓர் நாழிகை என்று அறியப்படும் என்பது விஷ்ணுபுராணம். 'குறுநீர்க் கன்ன லினைத்தென்றிசைப்ப' (முல்லைப். 58); 'குறுநீர்க் கன்ன லெண்ணுந ரல்லது' (அகம். 43. 6—7); மணி. 7, 64-65; சிலப். 5:49 அடியார் மேற்கோள். அரும்புகளின் மலர்ச்சியாலும் பிறவகையாலும் பண்டைக் காலத்திற் பொழு தறிவதுண்டு. நெடுநல். 40-41. ந. உரை காண்க. பொழுதினை அறிவித்தல் பற்றியே மலரின் பருவத்து அரும்பு போதெனப் பட்டதென்பர். நாள் என்பதற்கு மலர் எனத் தக்கயாகப்பரணி யுரைகாரர் கூறியிருத்தலும் இக்கருத்தைத் தழுவிப் போலும். (ஒப்பு) 'பொழு துணர்வரிய வப்பொருவில் மாநகர்' (பால. நகரப்; 50). 'எல்லியும் பகலும் தோன்ரு' (நைடத· நாட்டு. 27).

பி - ம். 1. *நிறமுற்றன ; வெதம்புஞ் ; விசும்பு வெயில் வெம்பும்.*
2. *மழிவுற்ற, மறிவுற்ற, மறவுற்ற ; புரையுற்றுருவு.*
3. *காலமிற.* (73)

505. நெற்கிழிய நெற்பொதி நிரம்பின நிரம்பாச்
சொற்கிழிய நற்கிளிக டோகையவர் தூய்மின்
பற்கிழி மணிப்படர் திரைப்பரதர் முன்றில்
பொற்கிழி விரித்தன சினைப்பொதுளு புன்னை.

தோகையவர் - (சாயலால்) மயிலை யொத்தவரான மகளிர்களுடைய, நிரம்பா சொற்கு - நிரம்பா மென் சொற்களாகிய குதலைச் சொற்களுக்கு, இழிய - தோற்றதனால், நல் கிளிகள் - அழகிய கிளிகள், நெல் கிழிய நெல் பொதி நிரம்பின - நெற்கள் கிழியுமாறு நெற்பொதிகளில் மறைந்து நிறைந்தன : தூய் மின் பற்கு இழி - (தோகையவரின்) தூய்மையான ஒளி பொருந்திய பற்களுக்குத் தோற்ற, மணி - முத்துக்கள், படர் திரை - பரவுகின்ற (கடலின்) அலைகள் வீசும், பரதர் முன்றில் - நெய்தல் நிலத்து மக்களுடைய மனை வாயில்களில், சினை பொதுளு புன்னை - கிளைகளில் மலர் நிறையப்பெற்ற புன்னை மரங்கள், பொன் கிழி விரித்தன - பொன் முடிந்த சீலை முடிப்பை யவிழ்த்ததை ஒத்து விளங்கின.

இச் செய்யுளில் மாரிக்காலத்து மருதம், நெய்தல் நிலங்களின் வருணனை கூறப்பெற்றது. மழைக்காலத்தில் கிளிகள் மறைந்தொழுகலும், புன்னைகள் மலர்தலும் இயல்பு ; இவ்வகை நிகழ்ச்சிகளை ஆசிரியர் தற்குறிப்பேற்றமாக அமைத்தனர். நிரம்பா சொல் - உச்சரிப்பு முற்றுப்பெறாத சொல்; எனவே, மழலைச் சொல்: 'மெய் பெறு வெழுத் துயிர்க்கும் மழலை' (சீவக. 181); இங்கே 'எழுத்து வடிவுபெற்றுத் தோற்றும் குதலை வார்த்தை ; மழலை எக்காலத்திற்கும் கூறுப' என்ற உரை காணத் தக்கது. இதனை 'நாவொடு பயிலா நகைபடு தீஞ்சொல்' (அகம். 16) என்றும் கூறுப. முதலடியில் உள்ள 'நிரம்பின' என்ற சொல்லை மூன்றாமடிக்கண் உள்ள படர் திரைக்கும் கூட்டி, முத்துக்கள் கல்லினுள் புகுந்து மறைந்தன் எனலும் ஆம். பொதுளுதல் - நிறைதல், 'இருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி' (சிலப் : 26: 108); திருமுருகு 10; 'தோகையவர்' என்பதை இடைநிலை விளக்காகக் கொண்டு பொருள் கூறப்பட்டது. மயிலின் சாயலும், தோகையும் முறையே மகளிரின் சாயலுக்கும் கூந்தற்கும் உவமைகள். சாயல் -

அழகின் மென்மை என்பர். இனி, நல் கிளிகள் நிரம்பாச் சொல் கிழிய- அழகிய கிளிகள், பொருளற்ற மழலைச்சொற்கள் சிறிது வெளிப்பட, நெல் பொதி நிரம்பின; தூயமின்பற்கிழி மணி - (மகளிருடைய) தூய் மையான ஒளி வாய்ந்த பற்கள் போல ஒளிர்கின்ற முத்துக்களைக் கொழிக் கின்ற பரதவர் முன்றிலில் புன்னை பொற்கிழி விரித்தன எனினுமாம். பொற்கிழி விரித்தன என்பதற்கு, பொன்னுடையை விரித்தாற் போன்றன எனினும் அமையும்.

பி - ம். 1. நற்பொதி; நிரப்பின.

2. சொற்கினிய, நற்கினிய; சொற்கழிய; தோகையயர் தூய்மென்.

3. பாலை, படரும்.

4. பொருவில் புன்னை. (74)

506. நிறங்கருகு கங்குல்பக னின்றநிலை நீங்கா
அறங்கருது சிந்தைமுனி யந்தணரி னாலிப்
பிறங்கரு நெடுந்துளி படப்பெயர்வில் குன்றின்
உறங்கலில் விலங்கலில நின்றவுயர் வேழம்.

நிறம் கருகு கங்குல் - நிறத்தால் கறுத்துத் தோன்றுகின்ற இரவு நேரத்திலும், பகல் - பகல் வேளையிலும், நின்ற நிலை நீங்கா - தாம் நின்ற (தவக்) கோலத்தினின்றும் மாறாமல், அறம் கருது சிந்தை - தரும நெறியையே நினைக்கின்ற மனத்தை யுடையவர்களாய், முனி அந்தணரின் - அகப்பற்று புறப்பற்றுக்களை (அல்லது காமமாதி ஆறு பகைகளையும்) வெறுத்து நின்ற முனிவர்கள் போலவும், பிறங்கு அரு நெடு ஆலி துளிபட - விளங்குகின்ற அருமையான பெரிய மழை நீர்த்துளிகள் [தம்மேற்] படுதலால், பெயர்வு இல் - அசைத லில்லாத, குன்றின் - மலைகள் போலவும், உயர் வேழம் - உயர்ந்த யானைகள், உறங்கல் இல் - தூங்குத லில்லாமல், விலங்கல் இல நின்ற - இடம்விட்டுப் பெயராதனவாக நின்றன.

யானைகள் தவமுனிவர்கள் போன்றும் மலைகள் போன்றும் நின்றன என்பது கருத்து. உறங்காமலும், அசையாமலும் நின்றன என்றது முறைநிரல்நிறை. நீங்கா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அறம் என்பதை, தரும வடிவமான இறைவனை யென்றும் கொள்ள லாம். 'அன்பி லதனை யறம்' (குறள். 77) என்ற இடத்து அறம் அறக் கடவுள் என்று பரிமேலழகர் உரைத்தது காண்க. மலைக்கு அசலம் என்ற வடமொழிப் பெயரின் பொருளையும் காண்க. விலங்கல் - வில

கலும் ஆம். அறங் கருது சிந்தை அந்தணர், முனி சிந்தை அந்தணர் எனப் பிரித்துக்கூட்டுக. சிந்தை, இடைநிலை விளக்கு. அறங்கருது சிந்தை அந்தணர் எனப் பெயர்க்காரணங் கூறினர். 'அந்தண ரென்போ ரறவோர் மற்றெவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொ ழுகலான்' (குறள் : 30) என்ற இடத்து, 'அந்தணர் என்று சொல்லப் படுவோர் துறவறத்தினின்றவர்; அழகிய தட்பத்தினை யுடையவர்; அஃது அவ் வுருளுடையார்மே லன்றிச் செல்லாதென்பது கருத்து' எனப் பரிமேலழகர் கூறுதல் காண்க. ஆலி - மழைத்துளி (அகம் : 304.)

பி - ம். 1. நின்றதென: நீவா, நேரா, நீர்வாய், திரா, பேரா.
2. வைப்பிற்; சிந்தனை யருந்தவரினுவி, அந்தணனினுவி; வைக.
3. பிறங்கிய; படப்பெறுவ; முன்றில், குன்றத்து.
4. விலங்கலயனின்ற, பிறங்கலில நின்ற, உறங்கிய விலங்கல் தனிநின்ற. (75)

507. சந்தினடை யிற்படலை வேதிகை தடந்தோ
றந்தியி டகிற்புகை நுழைந்தகுளி ரன்னம்
மந்திதுயி லுற்றமுழை வன்கடு வனங்கத்
திந்தியம வித்ததனி யோகரி னிருந்த.

குளிர் அன்னம் - (பெருமழையிற்) குளிரால் வருந்திய அன்னப் பறவைகள், சந்தின் அடையின் படலை - சந்தன மரத்தின் இலைகளால் வேயப்பட்ட இலைக்குடில்களில் (உள்ள), வேதிகை - (ஓமம் அல்லது யாக) மேடைகளில், தடம் தோறு - ஓமகுண்டந்தோறும், அந்தி இடு - காலை மாலைச் சந்திகளில் (முனிவர்கள் ஓமம் வளர்ப்பதற்காக) வைத்து எரிக்கின்ற, அகில் - அகிற் கட்டைகளின், புகை - புகையில், நுழைந்த - புகுந்து குளிர் காய்ந்தன ; மந்தி - பெண் குரங்குகள், முழை - குகைகளில், வல்கடுவன் அங்கத்து துயிலுற்ற - வலிய ஆண் குரங்குகளின் மடியில் உறங்கின ; (அந்த ஆண் குரங்குகள் மந்திகளின் துயில் கெடாமல்) இந்தியம் அவித்த தனி யோகரின் இருந்த - புலங்களை அடக்கிய ஒப்பற்ற யோகிகளைப் போல இருந்தன.

படலை - இலைக்குடில். வேதிகை - மேடை ; இது வேதி எனவும் படும் ; 'தருமணற்றருப்பையார்ந்த சமிதையும் மூன்றினலும், விரிமல ரணிந்த கோலவேதிகை' (சீவக : 2463). தடம் - ஓமகுண்டம்; இது தடவு என்றும் வழங்கும், 'நீயே வடபால் முனிவன் தடவினுட்டோன்றி' (புறநா. 201). இச்சொல் தடம் எனவும், தட; தடா எனவும் வழங்கும்;

'தடத் தெரியை' (தக்க. 475). அந்தி - இரவு பகலுடனும் பகல் இரவுடனும் கூடும் காலங்கள் ஆகலின், காலைச்சந்தி, மாலைச்சந்தி, என்ற இரண்டையும் குறிக்கும். சந்தியா என்ற வடசொல், அந்தி எனத் தமிழில் வந்தது. 'அந்தி வந்தடைந்த தாயைக் கண்ட வான்கன்றி னன்னுன்' (அயோத்தி: கைகேசி. 104); அயோத்தி. கிளைகண்டு. 140; புறநா. 2, 22 என்பனவும் காண்க. மந்தி - பெண்குரங்கு. 'மடமா மந்தி' (நற். 233); ஐங்குறு. 374; குறுந். 335 திருமுருகு. 42. மந்தியை இக்காலத்தார் ஆண் குரங்கின் பெயராக வழங்குவர். அங்கம் - அட்டாங்க யோகத்துப் பிரத்தியாகாரம் என்ப; பொறி புலன் களை யடக்கி மனத்தை யொருவழி நிறுத்தல் இதன் இலக்கணம் என்பர். அவித்தல் - அடக்குதல்; இந்தியம் அவித்தல்; குறள். 25. யோகி யர்க்கு முசு; நற். 22. குரங்குகள் மாரிக் காலத்துத் துன்புறுதல்; நெடுநல். 2-9; பெருங்கதை. 3; 24; 162-3. கைந்நிலை, 36; குறுந் தொகை. 249; 2-3. முதலியவற்றிற் காண்க. சேட்டை மிக்க குரங்குகளும் யோகி போல் அசைவற்றிருந்தன என்று கூறி மழைக் குளிர்ச்சியின் கடுமையைக் கூறினர்.

பி - ம். 1. *சந்த நடையிற், நிலையிற் சந்நினிடையார், சந்நியிடையிற். வேய்ந்நிலை யிடந்தோறு, தடத்திற்,*
2. *குளிரஞ்சி, குளிருள்ளம்.*
3. *முழையிற்.*
4. *யோகியின்; மவித்த வியல் புற்றனவிருந்த.* (76)

508. ஆசில்சுனை வாலருவி யாயிழைய ரைம்பால்
வாசமண நாறலில வானமணி வன்கால்
ஊசல்வறி தானவித ணெண்மணிகள் விண்மேல்
வீசலில வானினெடு மாரிதுளி விச.

வானின் - மேகங்களிலிருந்து, நெடுதுளி மாரிவீச - பெருந் துளிகளாகிய மழைமிக்குப் பெய்தலால், ஆசு இல் சுனை - குற்றமற்ற மலைநீர்ச்சுனைகளும், வால் அருவி - தூய்மையான அருவிகளும், ஆய் இழையர் ஐம்பால் வாசம் மணம் நாறல் இல ஆன - அழகிய அணி களணிந்த மகளிருடைய கூந்தலின் நறுமணம் (தம்மிடம்) கமழப் பெறுதன வாயின; மணிவல் கால் ஊசல் - நவமணிகளால் வலிய கால்கள் நட்டு அவற்றில் இணைக்கப்பட்ட ஊஞ்சல்கள் யாவும், வறிது ஆன - (அவற்றில் அமர்ந்து) ஆடுபவர் இல்லாதனவாயின; இதண் -

பரண்கள், ஒள் மணிகள் விண்மேல் வீசல் இல - ஒளி வாய்ந்த இரத்தினங்கள் வானில் எறியப்படாதன வாயின.

மழை மிகுதியானும் குளிர்ச்சியினாலும் மகளிர் நீராடாமையின் அச்சுனைகள் மாதருடைய கூந்தலின் நறுமணம் வீசுதலில வாயின என்றார். வாசமணம் ; ஒரு பொருட்பன்மொழி. ஆசு - குற்றம் ; சுனைக்குக் குற்றம், பாசி படிதல், நீராடுவோர்க்கு நோய் விளைத்தல் முதலியன, வால் - தூய்மை ; 'வாலறிவன்' (குறள். 2). குளிர்ச்சி மிகுதியான் மகளிர் ஊசலாடாமையின், ஊஞ்சல்களும் வறிதான என்றார். குறிஞ்சி நிலமாகலின், மகளிர் கவண் எறிந்து புள்ளினங்களை ஓட்டுவதுண்டு; அந்நிகழ்ச்சியும் இன்மையின் 'ஒள் மணிகள் வீசலில என்றார். வடவர் தந்தவான் கேழ்வட்டம் என்ற அடி முதல் கூதிர் நின்றன்றாற் பொழுதே (நெடுநல், 51-72) என்ற வரிகளை ஒப்புக் காண்க. இதண் - பரண்; 'புலியஞ்சிதணமேறி' (குறிஞ்சிப் : 41), 'வேட்டர் மடவாரிதண மதுவேறி' (தேவா : 1026, 2). ஐம்பால் - கூந்தல். 481 ஆம் பாடல் கீழ்க் குறிப்புப் பார்க்க. மணிகள் வீசல் ; ஒப்பு. 'குழை யெறிந்து கோழி யெறியும் வாழ்க்கையர்' (நன். 407); 'கோழியெறிந்த கொடுங்காற் கனங்குழை' (பட்டினப். 23).

பி - ம். 1. யாலருவி.
2. வாசவகை, வானமுறவீசும்; வள்வால்.
3. ஊசல் வறிதாயவிதண்; நோன்மணிகள்.
4. வானநெடு ; மாரிமிகவீச. (77)

509. கருந்தகைய தண்சினைய கைதைமடல் காதல்
தருந்தகைய போதுகிளை யிற்புடை தயங்கப்
பெருந்தகைய பொற்சிறையொ டுக்கியிடை பேரா
திருந்தகுரு கின்பெடைபி ரிந்தவர்க ளென்ன.

கரு தகைய - கரிய நிறமுள்ள, தண் சினைய - குளிச்சியான கிளைகளையுடைய, கைதை - தாழைச் செடிகளின், மடல் - மலர், காதல் தரு தகைய - ஆசையை விளைவிக்கும் தன்மையவான, போது - மலரும் பருவத்தரும்பு, கிளையில் புடை தயங்க - (தேற்றற் கமைந்த) சுற்றமாகிய நாரைகள் போலப் பக்கங்களிற் சூழ்ந்து விளங்க, குருகின் பெடை-பெட்டை நாரை, பெரு தகைய பொன் சிறை ஒடுக்கி - பெருமையும் அழகும் வாய்ந்த (தன்) அழகிய சிறகுகளை அடக்கிக்கொண்டு, இடை பேராது - தான் இருந்த இடத்தைவிட்டு நீங்காது, பிரிந்தவர்கள்

என்ன - தம் (தலைவரைப்) பிரிந்த மகளிரைப்போல, இருந்த - தங்கி யிருந்தன.

தாழைமலர் குருகு போன்றது. இனி மடலும் போதும் ஆண் குருகையும் பெண் குருகையும் ஒத்திருந்தன என்றும், அந்தக் கூட் டத்தைக் கண்ணுற்றுப் பெண்குருகு தனது துணை பிறிதொரு பெட்டைக் குருகினிடம் அமர்ந்திருந்ததாக எண்ணி ஊடிற்று என்று பொருள் கொள்ளலுமாம். தலைவரைப் பிரிந்த தலைவியர் தனிப்பட்டுக் கார்காலத்தில் வருந்துவதும் அவர்களை அவர்களுடைய உறவினர் அருகிருந்து தேற்றுவதும் பண்டைத் தமிழ் நூல்களிற் கண்ட செய் திகள். (முல்லைப் : 13 - 20) பார்க்க. தகை - அழகு. சீவக. 490, 1379. கைதை - தாழை; 'கோடல் கைதை 'கொங்குமுதிர் நறுவழை.' (குறுஞ்சி ; 83); மற்றும் (குறுந்: 304); அகம். 170, 210. பெரியதிரு. 9, 3, 2. காண்க. கிளையில் - ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளில் வந்தது. குருகு - பறவைப் பொதுவுமாம். குருகு தாழை மலர்போலும் என்பது: 'அருகு கைதை மலரக் கெண்டை குருகென் றஞ்சும்' (பெரிய திருமொழி. 5, 2, 9.) தயங்க-விளங்க எனினு மாம். குறுந். 273. 'போது கிளையில் என்பதற்குத் தாழைப்பூக் கூட்டத் தில் என்று குறிப்பர், டாக்டர் ஐயரவர்கள்.

பி - ம். 1. *யகன்சிளைய, காலத்; தண்டகைய.*
2. *தருந்தகையதான பலதாழை மிடைகாளில்.*
3. *பொருந்தகைய, யொடுக்கியுடல்.*
4. *திருந்து குருகின் பெடை.* (78)

510. பதங்கமுழ வொத்தவிசை பஞ்ஞிமிறு பன்ன
விதங்களி னடித்திடு விகற்பவழி மேவும்
மதங்கியரை யொத்தமயில் வைகுமர மூலத்
தொதுங்கின வுழைக்குல மழைக்குல முழக்க.

பதங்கம் - விட்டில்கள் (நீர்ப்பறவைகள்), முழவு ஒத்த - (தமது ஒலி யினால்) மத்தளம் தட்டினாற் போன்றிருக்க, பல்ஞிமிறு - பல வண்டுகள், இசை பன்ன - இசைப் பாட்டுக்களைப்பாட, மயில் - மயில்கள், விதங் களின் நடித்திடு - பல வகைத் தாளங்களுடன் நடிக்கின்ற, விகற்பம் வழி - பலதிறப்பட்ட கூத்து வகைகளில், மேவும் - நன்கு பொருந்தித் தேர்ந்த, மதங்கியரை - கூத்தாடும் மகளிரை, ஒத்த - பொன்றன ; மழை குலம் உழக்க - மேகங்களின் கூட்டங்கள் (இடி முழக்கினால்) மனம்

கலங்கச்செய்ய, உழை குலம் - மான் கூட்டங்கள், வைகும் மரம் மூலத்து -(அவ்வாறுன கூத்து) அமைந்துள்ள மரங்களின் அடியிலே, ஒதுங்கின - (அந்த மயில்களின் கூத்தைக் காணச்) சென்றனபோலச் சேர்ந்தன.

பதங்கம் - பறவையும் ஆம்; அவற்றின் சிறகொலி கூறப்பெற்றது என்க. தற் குறிப்பேற்ற வணி, மதங்கியர்-நாட்டிய விதி முறை சதிமிதிப்பவர்; மதங்கியர் (பால. நகரப். 52). 'ஆடமைகுயின்ற வவிர்துளை மருங்கிற், கோடை யவ்வளி குழலிசையாகப், பாடின்னருவி பனிநீரின்னிசைத், தோடமை முழவின் துதை குரலாகக் கணக்கலையிருக்கும் கடுங்குரற் றூம்பொடு, மலைப்பூஞ்சாரல் வண்டி யழாகா வின்பல்லி மிழிசை கேட்டுக் கலிசிறந்து, மந்தி நல்லவை மருள்வன நோக்கக் கழைவள ரடுக்கத்தியலியாடுமயில் (அகம். 82) என்ற வரிகளும் இங்கு ஒப்பு நோக்கப்பெறும். பதங்கத்தின் ஒலி முழவாகவும், வண்டுகளின் ஒலி இசைப் பாட்டாகவும் கொண்டு மயில்கள் மதங்கியரைப்போல் ஆடின; மான்கள் அந்த ஆட்டத்தைப் பார்த்து நின்றன. 'தண்டலை மயில்களாட' (பால. நாட்டு. 4.) என்ற செய்யுளும் காண்க. மரம் மூலம் - அடிமரம் 'உழைக்குல மழைக்குலம்' என்ற இடத்து இணையெதுகை நயம் காண்க. 'விகற்பம் - சாமர்த்தியம்' என்பது பழையவுரை.

பி. - ம். 1. பதங்கொண் முழிலொத்த, முழவொத்த.
2. னடந்திடு; கனிமேவும், னடந்துயர்; விகற்ப.
3. வாசமலர், யாசமர, மயிலோங்கு மரமூலத்.
4. யொதுங்கிய; மூலக்க, முழங்க.

இஃது ஓர் பிரதியில் இல்லை (79)

511. விளக்கொளி யகிற்புகை விழுங்கமளி மென்கொம்
பிளைக்குமிடை மங்கையரு மைந்தர்களு மேறத்
தளத்தகு மலர்த்தவிசி கந்துநகு சந்தின்
தொளைத்துயிலு வந்துதுயில் வுற்றகுளிர் தும்பி.

மெல்கொம்பு - மெல்லிய பூங்கொம்பும், இளைக்கும் (உவமையாகாது) தளரும்படியான, இடை - இடையினையுடைய மங்கையரும் - மாதர்களும், மைந்தர்களும் - ஆடவரும், அகில் புகை - (அறையில் எரிக்கப்படுகின்ற) அகிற் கட்டைகளின் புகை, விளக்கு ஒளி விழுங்கு அமளிஏற - விளக்குகளின் ஒளி மங்கும்படி கவிந்து கொள்ளப்பெற்ற

மெல்லணையில் ஏற, குளிர்தும்பி - குளிர்ந்த வண்டுகள், தள தகு மலர் தவிசு இகந்து - தாம் விலக்க வேண்டிவந்த மலர்ப் படுக்கையை விட்டு நீங்கி, நகு சந்தின் தொளை துயில் உவந்து - விளங்குகின்ற சந்தன மரத்தின் பொந்துகளில் தங்குதலை விரும்பி, துயில்வுற்ற - உறங்கின.

ஆடவர் மகளிர் கூட்டத்தில் இயல்பான நாணம் மகளிர்க் குறு மாகலின் விளக்கொளியை அவர்கள் விழையார், அதுபற்றி அந்த விளக்கொளியை அகிற் புகை விழுங்கியது என்றுருமாம். ஒப்பு. சீவக, 91. தள என்பது தள்ள என்ற சொல்லின் தொகுத்தல்; தும்பி வண்டு களுள் ஒரு வகை 'நண்டுந் தும்பியும் நான்கறிவினவே' (தொல். மரபி 31.) தளம் - பூவிதழ். 'சந்தின் - சந்தனத் துலாக்கட்டையில்' என்பது பழையவுரை. இச் செய்யுளில் முதலிரண்டடிகளின் நிகழ்ச்சி யையும் பின் இரண்டடிகளின் நிகழ்ச்சியையும் காரண காரியமாகக் கொள்ளாமல் தனித்தனியாகவும் கொள்ளலாம்; அவ்வாறு கொள்ளும் போது, 'மலர் - தாமரை' ஆம். துயில்வுறல் - தங்குதல் (சீவக. 1504 (80).

பி - ம். 1. *விளங்கமளி.*

2. *பிளக்க விழுமங்கையரு ; மெல்லணையின் ; மேய.*

3. *தனைத்தகை மலர்த்தவிசு, தளைத்தவின் மணித்தவிசு, தளக்கவின் மலர்த்தவிசு; தருசந்தின், தவிர்சந்தின், சுகிர் சந்திரன்.*

4. *துளைத்திட்டரறத் துயில் யதிந்தகுளிர்; துளைத்தருவின்வந்து துயி லுற்ற.*

இஃது ஓர் பிரதியில் இல்லை. (80)

512. தாமரை மலர்த்தவிசி கந்துதகை யன்னம்
மாமர னிரைத்தொகு பொதும்பருழை வைகத்
தேமர னடுக்கித ணிடைச்செறி குரம்பைத்
தூமரு வெயிற்றிய ரொடன்பர் துயில்வுற்றார்.

தகை அன்னம் - அழகிய அன்னப் பறவைகள், தாமரை மலர் தவிசு இகந்து - தாமரை மலராகிய தமது ஆதனத்தினின்றும் நீங்கி, மாமரன் நிரை தொகு பொதும்பர் உழைவைக - பெரிய மரங்கள் வரிசை யாகத்திரண்ட சோலைகளினிடையே தங்க, தேம் மரன் அடுக்கு இதண் இடைசெறி குரம்பை - நறுமணம் செறிந்த மரக்கட்டைகளை (ஒன்றின் மேல் ஒன்றாய்) அடுக்கிச் செய்த, பரணிடத் தமைந்த சிறுகுடிலில், தூ மருவு எயிற்றியரொடு - தூய்மை வாய்ந்த பற்களையுடைய வேட்டுவ

மகளிரொடு, அன்பர் - (அவர்களின்) காதலர்கள், துயில்வுற்றார் - உறங்கினார்கள்.

தாமரை மலர்களில் வீற்றிருக்கும் அன்னங்கள் மாரியினால் அம் மலர்கள் பொலிவழிய அவற்றை நீத்துச் சோலைகளிற் சென்று தங்கின; புனக்காவல் புரிய வேண்டிய அவசியம் இன்மையின் வேட்டுவமகளிர் தத்தம் கணவருடன் கவலையின்றிப் பரண்குடிசைகளில் உறங்கினர். (ஒப்பு) 'நீரிடை யுறங்கும் சங்கம் நிழலிடை யுறங்குமேதி' (பால. நாட்டு. 6). இகத்தல் - நீங்குதல்; 'நெறியிகந்தியானோர் தீமையிழைத் தலான் 410. மரன், பொதும்பர் - ஈற்றுப் பொலிகள். இதண் - பரண்; 508. உரை. குரம்பை - புரை என்பது பழையவுரை. தூ மருவு எயிற்றியர்-இங்கே தூய்மை, வாலெயிறூறிய நீர், கேள்வரன்றிப் பிறர் நுகரவிடாமை. தூ மருவு எயிற்றியர் என்பதற்கு ஊன் மணம் கமழும் பற்களையுடையவர் எனினுமாம். எயிற்றியர், வேட்டுவ மகளிர், பற்களையுடையவர் என இரு பொருள்பட நின்றது. குரம்பை, யானைக் கூட்டம் என்பர் சிலர்.

பி - ம். 1. தவி செழ்ந்து, தவிசுகந்து
2. பொதும் பின்முழை, உழை, பொதும்பரிடை.
3. தி மரனடுக்கி, (81)

513. வள்ளிபுடை சுற்றியுயர் சிற்றிலை மரந்தோ
றெள்ளரும றிக்குருளொ டண்டர்க ளிருந்தார்
கள்ளரி னொளித்துழ னெடுங்கழு தொடுங்கி
முள்ளெயிறு தின்றுபசி மூழ்கிட விருந்த.

வள்ளி புடைசுற்றி - வள்ளிக் கொடிகள் அருகிற் சூழப்பெற்று, உயர் - உயர்ந்த, சிறு இலை மரம் தோறு - சிறிய இலைகளுடன் கூடிய மரங்கள் தோறும், (அவற்றின் கீழ்), எள்ள அரு மறி குருளோடு - இகழாமற் புரக்கத்தகுந்த ஆட்டுக் குட்டிகளைக் காத்துக்கொண்டு, அண்டர்கள் - இடையர்கள், இருந்தார் - அமர்ந்திருந்தார்கள்; கள்ளரின் ஒளித்து உழல் - திருடர்கள் போன்று மறைந்து அலைவனவான, நெடு கழுது - பெரிய பேய்களும், ஒடுங்கி - தளர்ந்து, முள் எயிறுதின்று - முட்கள் போலத் தங்களுடைய கூரிய பற்களை மென்று தின்றுகொண்டு, பசி மூழ்கிட இருந்த - பசியில் மூழ்கும்படியாகத் தங்கின.

எள்ள அரு என்பது அகர வீறுதொகுத்து எள்ளரு என ஆயது. (சுந்தர ; 394, 551). இனி எள் என்பதை முதனிலைத் தொழிற் பெயராகக் கொண்டு எள்ளரும் என்றே கோடலுமாம். மறி - ஆடு, 'மறித்துரு உத்தொகுத்த பறிப்புறவிடையன்' (அகம் ; 94, 5); மற்றும் குறுங். 213;263. காண்க. குருள்-குருளை; ஆட்டுக்குட்டி 'நாயே பன்றி முயல் நான்கும் ஆயுங்காலைக் குருளை யென்ப' (தொல். மரபு. 8). மற்றும் 'நாடினர் கொளினே' என்ற மிகையான் குரங்கின் குட்டியையும் குருளையென்றார். அது போன்றே இம்மறிக் குருளையும் கொள்க. அண்டர் - ஆயர். 'அண்டரே தேவர் ஆயர்' என்பது பிங்கல நிகண்டு : கள்ளரின் - ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருளில் வந்தது. கழுது - பேய். (சுந்தர. 662) ஆரணிய ; 448, 455. தக்கயாகப் ; 55, 59, 405) அமைதிக் கெடுத்துக் காட்டாகலின் ஆட்டுக் குட்டிகளைவிடாது போற்றவேண்டும் என்பார், எள்ளருமறி என்றார். பசிமூழ்கிட என்றதற்கு மழை மிகுதியால் பசிகூட வெளிப்படாதுள்ளடங்கி நிற்க எனிலுமாம்.

பி - ம். 1. *செற்றி, செற்ற ; மரத்தோ.*

2. *மறிக்குறிகொள் ; குறள்கொடு, குறளொடு.*

3. *ஞெளித்துறை ; தொடுங்க, தொடுக்கும்.*

4. *எயிறிலிற்றுக, நின்றுக ; முகந்த விருளெங்கும் ; விருள் முற்றும்; மூழ்கியீ்விருந்த,*

இஃது ஓர் பிரதியில் இல்லை (82)

514. சரம்பயி னெடுந்துளி நிமிர்ந்தபுயல் சார
உரம்பெயர் வில்வன்கரி கரந்துற வொடுங்கா
வரம்பக னெடும்பிரசம் வைகல்பல வைகும்
முரம்பினி னிரம்பல முழைஞ்சிடை நுழைந்த.

நிமிர்ந்த புயல் - (வானில்) உயர்ந்து விளங்குகின்ற மேகங்களி லிருந்து, சரம் பயில் நெடு துளி - அம்புகளைப்போன்று வீழ்கின்ற பெரிய மழைத் தாரைகள், சார - தம்மீது தாக்க, உரம் பெயர்வு இல் வல்கரி - (என்றும்) மனவலி நீங்குதலில்லாத உடல் வலி மிக்க யானை கள் கூட, ஒடுங்கா - ஒடுங்கி, வரம்பு அகல் நெடு பிரசம் பலவைகல் வைகும் - எல்லையில்லாத பெரிய தேன் கூடுகள் பல நாட்களாக அமையப்பெற்ற, முரம்பினில் - மேட்டு நிலங்களில், நிரம்பல - (தாம்) திரளாக நிறைந்து தங்கமாட்டாதனவாய், கரந்து உற - (மழைத் தாரை தம்மீது தாக்காதபடி) ஒளிந்து தங்கக்கருதி, முழைஞ்சு இடை நுழைந்த- (அந்தப் பாறைக்) குகைகளில் நுழைந்தன,

சரம்பயில் நெடுந்துளி 'தண்டுளி பளிக்குக் கோல் போற்றுரை யாய்ச் சொரிந்து' (சீவக ; 508); (கோல் - அம்பு); சரமாரியாகப் பெய்தது என்ற வழக்கும் காண்க. நிமிர்தல் - பரத்தலுமாம். உரம்பெயர் வில்வன்கரி என்பது கொண்டு, அக்கரிகளும் ஒடுங்கும்படி வீசிய மழைத்தாரைகளின் வலிமை யுணரலாம். கரி – யானை, கரத்தை யுடையது என்று பொருள்படும். பிரசம் - தேன். இங்குத் தேன் கூடுகளைக் குறித்து நின்றது. வைகல் பலவைகும் என்ற விடத்துப்பிராசம் காண்க. இனி கரிகரந்து ஒடுங்கி ஒளிக்க, எல்லை யில்லாத தேன், பாறைகளில் நிரம்ப இடமின்றிக் குகைகளிலும் நுழைந்தன வெனினுமாம். நறும் பிரசம் என்றபாடமும் நன்கு பொருந்தும்.

பி - ம். 1. படுந்தொறுதகர்ந்த, நிரந்தபுயல். நிரந்துபுயல், நிரந்துபயில், நிரந்து புனல், நிமிர்ந்து புயல்.
2. சரம்பயினல்வன்கரி, உரம்பயிலும் குரம்லபயினில்; குலைந்தற வொடுங்கா, உலைந்தற, உலைந்திட, யுடைந்திட.
3. நறும் பிரசம்,
4. முரம்பின னிரம்பில; முழுழஞ்செனிடைகூடி.

இஃது ஓர் பிரதியில் இல்லை (83)

இராமபிரான் விரகத்தால் கூறத்தொடங்குதல்.

515. இத்தகைய மாரியிடை துன்னியிரு ளெய்த
மைத்தகு விழிக்குறு நகைச்சனகன் மான்மேல்
உய்த்தவுணர் விற்றின நெருப்பிடை யுயிர்ப்பான்
வித்தக னிலக்குவனை முன்னினன் விளம்பும்.

இத்தகைய மாரியிடை - இத்தன்மை வாய்ந்த மாரிக்காலத்திலே, இருள் துன்னி எய்த - இருள் அடர்ந்துவந்தடைய, வித்தகன் - இராமபிரான். மைதகு விழி - மை யெழுதப்பெற்ற அழகிய கண்களையும், குறுநகை - புன் சிரிப்பினையும் உடையவளான, சனகன் மான்மேல் - சனகன் பெற்ற மான்போன்ற நோக்கினையுடைய பிராட்டியினிடத்து, உய்த்த - செலுத்திய. உணர்வில் - காதல் உணர்ச்சியால், தினன் - நாடோறும். நெருப்பிடை உயிர்ப்பான் - நெருப்புப் போன்று இடையிடையே பெருமூச்சு விடுபவனாய், இலக்குவனை முன்னினன் விளம்பும் - இலக்குவனைப் பார்த்துச் (சில சொற்களைச்) சொல்லலானான்.

கீழே பதின்மூன்று பாடல்களிற் பின் மாரியின் நிகழ்ச்சிகளைக் கூறிய ஆசிரியர் இனி விரகத்தால் இராமபிரான் வருந்தியதைக் கூறத்

தொடங்குகின்றார். அவற்றை மேல் வரும் பதினொரு கவிகளிற் காண லாம். இந்நூலிற் போலவே, முதனூலிலும், பம்பை நதிக்கரையில் வசந்தருதுவிலும், அடுத்து நிகழ்ந்த மழைக்காலமும் சரத்காலமாகிய காலங்களிலும், இராமபிரான் பிராட்டியைப் பிரிந்துநின்று ஏங்கியதை யும் அவ்வப்பொழுது இளையபெருமான் அவனைத் தேற்றியதையும் காண்கிறோம். மின்னல் துடிப்புப் பிரிந்து துடிக்கும் சீதைபோன் றது என்பதும், பட்டுப்பூச்சிகள் மலிந்து கிடப்பதும், மேகங்கள் மழை பொழிவதும், நதிகள் பெருகுவதும், தவளைகள் குரலிடுவதும் முதனூலிலும் கம்பர் காதையிலும் ஒருங்கே காணலாம். துன்னு தல் - நெருங்குதல். 'துன்னரு நெடுவரை' (குறுந். 365); 'துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே' (குறுந்.98). மருண்ட நோக்கம்பற்றி மான் உவமை. தினம் - தினன், ஈற்றுப் போலி. இடை, உவமவாசகம், நெருப்பிடை உயிர்ப்பான் என்பதற்குக் காமத்தீ கொழுந்து விட்டெரிய அதனிடையிருந்து ஊதுலைக் குருகின் உயிர்ப்பவன் எனினு மாம். பொருள்களைச் சுட்டுத் தீ நீறுக்குவது போன்று, உடலைச் சுட்டு எரித்தலின் காமத்தை நெருப்பாக உருவகித்தார். 'காமத்தாற்கனலும் வெந்தீ' (ஆரணிய. 657), வித்தகன் - அதிசய புருடனான இராம பிரான்; சாமர்த்திய சாலியுமாம். 'பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய். 1, 3, 1); 'வித்தகனே இராமாவோ' (பெரியாழ். 3. 10. 6). வித்தகனிலக்குவன் எனக் கூட்டிப் பொருள் கொள்வதுமாம்; 515. பார்க்க. இனி 'மைத்தகு மணிக்குழல் மலர்ச் சனகன் மான்' என்ற பாடத்திற்கு மை போன்றதும் தக்க நீல மணியை நிகர்த்ததுமான கூந்தலில் மலரணிந்த சனகியென்றலும் ஒன்றும்.

பி - ம். 1. *அத்தகைய ; யிருடுன்னி.*
2. *மத்தகமணி, மணிக்குழல், மைத்த குழனித்நில நகை மகன்மேல்.*
3. *உணர்வத்தினன் ; னெருப்பினி.*
4. *வித்தக விலக்குவன்முன்; இன்னன.* (84)

வேறு

516. மழைக்கரு மின்னெயிற் றரக்கன் வஞ்சனை
இழைப்பெருங் கொங்கையு மெதிர்வுற் றின்னலின்
உழைத்தன ளுலைந்துயி ருலக்கு மேலினிப்
பிழைப்பரி தெனக்குமி தென்ன பெற்றியோ,

கருமழை மின் எயிறு அரக்கன் - கரிய மேகம் போன்ற, வனும், மின்னல் போன்ற பற்களையுடையவனுமான இராவணன், வஞ்சனை-வஞ்சனையால், இழை பெரு கொங்கையும்-அணிகள் அணிந்த பருத்த ஙகில்களையுடைய சீதாப் பிராட்டியும், இன்னலின் எதிர்வுற்று - துன்பத்திற்கு இலக்காகி, உழைத்தனள் - வருந்தியவளாய், உலைந்து - வாடி, உயிர் உலக்குமேல் - உயிர் நீங்கப் பெறுவாளானல், எனக்கும் - எனக்கும், ஒன்றினும் பிழைப்பு அரிது - ஒரு வகையிலும் பிழைத்தல் அருமையாகும் ; இது என்ன பெற்றியோ - இது என்ன தன்மையோ?

மேகம் போன்ற கருநிறத்தினனும், மின்னல் போன்ற பற்களையுடையவனுமான இராவணன் கையிற் சிக்கிச் சீதை வருந்துவதுபோல, தானும் கருநிறத்தையும் மின்னலாகிய பற்களையுமுடைய காள மேகத்தால் உலைவதாகத் தொனிக்கும்படி கூறிய நயம் பாராட்டற் பாலது. மின்னல் ஒளியினுல் மட்டுமன்று பிறழ்ச்சியானும் உவமை. 'மின்றிகழ் பிறழ்பற் கூற்றம்' (குசேலோ.வைகுந்த.6).கருமழை அரக்கன், மின்னெயிற் றரக்கன் எனத் தனித்தனிப் பிரித்துக் கூட்டுக. மழைக்கரு என்பது கருமழையென மாற்றியுரைக்கப்பட்டது. கருமழை நீரைச்சூற்கொண்ட மேகமுமாம். துன்பமே இன்னதென்றறியாளாதலின் சீதை உயிர் உலக்கும் என்ருன். (ஒப்பு.) 'பிறர் அழக்கண்டும் அறிந்திலாதாள்' (உயுத்த. நாகபாச 268). 'பிரிவெனும் தழல்சுடப் பெடையிறக்குமே' (நைடத. அன்னத்தைக் கண்ணுற்ற 72). இன்னல் - துன்பம்; இனிமை யல்லாதது எனப் பொருள்படும்.

பி - ம். 1. வஞ்சகம்.
2. இழைத்தலிற் சனியு மெதிர வுற்றிலன் ; யெய்தியின்னறன்; யெய்தியின்னலும்.
3. உலக்கு மொன்றினும்.
4. பெற்றியோய். (85)

517. தூநிறச் சுடுசரந் தூணி தூங்கிட
வானுறப் பிறங்கிய வயிரத் தோளொடும்
யானுறக் கடவதே யிதுவு மின்றலே
வேனிறத் துற்றதொத் துழியும் வீகிலேன்.

' தூ நிறம் சுடுசரம் - தூய்மையும், நல்ல நிறமும் பொருந்திப் பகைவரை எரிக்கக் கூடிய அம்புகள், தூணி தூங்கிட - (எனது) அம்பருத் தூணியில் தொழிலின்றிக் கிடக்க வான் உற பிறங்கிய வயிரம்

தோளொடும் - ஆகாயத்தைத் தீண்டும்படி (உயர்ந்து) விளங்கும் வலிய புயங்களுடன், யான் இதுவும் உற கடவது ஏ - யான் இத்தகைய துன் பத்தையும் துய்ப்பதா ? இ நிலை - எனக்குற்ற இந்த (இரங்கத்தக்க) நிலைமை, வேல் நிறத்து உற்றது ஒத்த உழியும்-அயில் மார்பிற்பட்டது போன்றிருப்பவும், வீகிலென் - இறவாமலிருக்கின்றேனே !

சுடுசரம் - 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73). 'உடல் வலியும் அம்புகள் முதலிய துணை வலிகளும் என்பா லிருந்தும் எனக்குத் தீங்கிழைத்தவனுக்கு எதிர்செய்ய மாட்டாமல் இருக்கின்றேனே. இந்த நிலைமையில் இருப்பதைவிட இறத்தல் சிறந்ததன்றோ?' என இராமபிரான் கூறுகின்றான். அம்புக்குத் தூய்மை 'ஆவும் ஆனியற் பார்ப்பனமக்களும்' (புறநா. 9.) என்ற புறத்தில், கொல்லப்படாதவர் இன்னார் என விதந்து கூறப்பட்டவர் மீது அதனை ஏவாதிருத்தல். சுடுசரம்-வினைத்தொகை. தூங்குதல்-தொங்குதல், சோம் பித் தொழிலாற்றாதிருத்தல் என்று இரட்டுற மொழிதலாக அமைந் துள்ளது. இங்கு, ஆரணிய. 989-ம், உயுத்த. பிரமாத்திர. 197-ம் காண்க. இதுவும், என்பதை மழைத்தாரை என்று கொண்டு அது வேல்போற் பாய எனினுமாம். நிறம் என்பதற்கு உயிர் நிலை யென்று பொருள் கொள்வர் நச்சினார்க்கினியர் ; 'மார்பு உயிர் நிற்கும் இடமாக லின்' (சீவக. 993), ஒத்துழி என்பது ஒத்த உழி, தொகுத்தல்.

பி - ம். 1. *தாங்கிட, சரத்தூணி தாங்குற, தாங்கிட, தூக்கிட, தூக்குற.*
2. *பிடுங்கிய ; வயிரக் கோளொடும்.*
3. *யிறவு பின்னிலை ; முன்னிலை; மன்னிலை ; யிந்த வின்னலின்.*
4. *றுற்றதொத் துயிரும்.* (86)

518. தெரிகணை மலர்களாற் றிறந்த நெஞ்சொடும்
அரியவன் றுயரொடும் யானும் வைகுவேன்
எரியுமின் மினிமணி விளக்கி னின்றுணைக்
குரீஇயினம் பெடையொடுந் துயில்வ கூட்டினுள்.

'குரீஇ இனம் - ஆண்குருவிக் கூட்டங்கள், எரியும்-ஒளிவிடுகின்ற, மின்மினி - மின்மினிப்பூச்சியாகிய, மணிவிளக்கின் - அழகிய விளக்கின் ஒளியிலே, இன்துணை பெடையொடும் - இனிய வாழ்க்கைத் துணையான பெண் குருவிகளுடனும், கூட்டினுள் - தங்கள் கூடுகளி னுள்ளே, துயில்வ (இன்பமாய்) உறங்குகின்றன ; யானும் - நானோ, தெரிகணை மலர்களால் - (மாரனால்) பொறுக்கி எடுத்து எய்யப்பட்ட

மலர்களாகிய அம்புகளால், திறந்த - பிளக்கப்பட்ட, நெஞ்சொடும் - நெஞ்சுடனும், அரிய வல் துயரொடும் - பொறுத்தற் கருமையான துயரத்துடனும், வைகுவேன் - (இல்லாளைப் பிரிந்து வனத்தில்) தங்கி யிருக்கின்றேன்.

இழிந்த பிறப்பினதான குருவியும் கூட்டில் மின்மினி ஒளியில், தன்துணையுடன் இனிது உறங்கத் தான் மட்டும் வனத்தில், துயரமாகிய இருளில், மனைவியைப் பிரிந்து தங்கியிருப்பதை நினைந்து வருந்துகின்ருன் இராமபிரான். பல மலர்களிருந்தும் இராமனுடைய உயிர் குலையும் படி செய்யும் மலர்களை ஏவினுன் மாரன் என்பான், தெரிகணை என்ருன். 'முல்லை கிடைகாட்டும் மாதே முழு நீலம் கொல்லும் மதனம்பின் குணம்' (இரத்தினச் சுருக்கம்) என்றது காண்க. மின் மினி ஓர் சிறுபூச்சி; மின்மினியைக் குருவிகள் தம் கூட்டில் விளக்காக வைத்தல் உண்டு; இதன் உடலிலேயே ஒருவகை ஒளி அமைந்துள்ளமை காணலாம். சுந்தர. 111; உயுத்த. விபீட : 138. விரகத்தால் வருந்துபவர் ஆண் பெண் பறவைகளும் விலங்குகளும் கூடி யின்புறக் கண்டால், மனம் தளர்வதியல்பு; ' மயிலும் பெடையுமுடன் திரிய, மானும் பிணையு மருவியுறப், பயிலும் பிடியும் கடகரியும் வருவ திரிவ பார்க்கின்ருன், குயிலும் கரும்பும் செழுந்தேனும் குழலும் யாழும் கொழும்பாகும், அமிலு மமுதும் சுவை தீர்த்த மொழியைப் பிரிந்தா லழியானே' (ஆரணிய. 1058). என்ற கவிக் கூற்றைக் காண்க. குருவி, குரீஇ என்று அள பெடுத்தது; சொல்லிசை யளபெடை.

பி - ம். 1. யலரொடும், மலரொடும்
2. எரியவெந்துயர், எரியவன்றுயரொடும்
3. எரியு மின்மினி விளக்கின், இரியு மின்மினி
4. குரியினம் பெடையொடும்; துயிலக் கூட்டினுள்

இஃது ஓர் பிரதியில் இல்லை (87)

519. வானக மின்னினு மழைமு ழங்கினும்
யானக மெலிகுவே னெயிற்ற ராவெனக்
கானகம் புகுந்தியான் முடித்த காரியம்
மேனகுங் கீழ்நகு மினியென் வேண்டுமால்.

'வான் அகம் மின்னினும் - ஆகாயம் மின்னினுலும், மழை முழங்கினும் - மேகம் இடி முழக்கம் செய்தாலும் (அவற்றைக் கண்டும்

கேட்டும்), எயிறு அரா என - நச்சுப்பற்களை யுடைய நாகம்போல, யான் அகம் மெலிகுவேன்-நான் மனம் வருந்துவேன் : யான் கான் அகம் புகுந்து முடித்த காரியம்-நான் காட்டில்வந்து நிறைவேற்றிய காரியத்தைக் குறித்து, மேல்நகும் கீழ்நகும்-மேலுலகத்தவர் (ஏளனம் செய்து) சிரிப்பர். கீழுலகத்தவர் சிரிப்பர் ; இனி என் வேண்டும் - இன்னும் என்னைக் கேவலப்படுத்த வேறு என்ன வேண்டும் ? ஆல் - அசை.

மின்னலைக் கண்டும் இடியோசை கேட்டும் நாகம் நடுங்குவது முன் பலபாடங்களிற் குறிக்கப்பட்டது. யான் வனம் போந்த தென்னுடைப் புண்ணியத்தால் ' (ஆரணிய; 135) என்று முன்பு கூறிய இராமபிரான், இங்குக் கானகம் புகுந்தியான் முடித்த காரியம் மேல்நகும் கீழ்நகும்' என்றது குறிக்கத்தக்கது. மேல் கீழ் என்றதனுனே நடுவணதாகிய இவ் வுலகமும் உபலக்கணத்தாற் பெறப்பட்டது. மேல் கீழ், மேலோர் கீழோ ரெனினுமாம். நகுதல் - சிரித்தல். ' நகுதற் பொருட்டன்று நட்டல்' (குறள் ; 784) ; ' வானகும் மண்ணுமெல்லாம் நகும் ' (உயுத்த ; கும்ப கருண. 11).

பி - ம். 1. முழக்கினும், வழங்கினும்.
2. யானகம் விம்முவன், விம்முறு.
3. புகுந்தநான். 4. வேண்டுமோ.

இதன்பின் ' ஈண்டு ' என்ற பாடல் ஓர் பிரதியில் காணப்படுகிறது (88)

**520.** மறந்திருந் துய்கலென் மாரி யீதெனின்
இறந்துவிண் சேர்வது சரத மிப்பழி
பிறந்துபின் றீர்வலோ பின்ன ரன்னது
துறந்துசென் றுறுவலோ துயரின் வைகுவேன்.

'துயரின்வைகுவேன் - துன்பத்துள் பொருந்தியுள்ள நான், மறந்து இருந்து உய்கலென் - பிராட்டியை நினையாதிருந்து உயிர்தரிக்க மாட்டேன் ; மாரி ஈது எனின் - மழைக்காலம் இவ்வாறு என்னை வருத்துமானல், இறந்து விண்சேர்வது சரதம் - (நான்) மரணமடைந்து விண் புகுவது நிச்சயம்; இ பழி - (சீதையை அரக்கன் கவர்ந்து செல்ல அவளை யிழந்ததாகிய) இந்தப்பழிச்சொல், பிறந்துபின் தீர்வலோ - பிறிதொரு பிறவியெடுத்து (அப்பிறப்பில் அவனுடன் போராடி வென்று) தீர்த்துக் கொள்ளக் கடவேனே? பின்னர் - (அல்லது பிறிதொரு பிறப்பில்) சென்று துறந்து-(இல்லறத்தினின்றும்) போய்த்துறவினை மேற்கொண்டு, அன்னது உறுவலோ - அப்பழிதீரும் வகையை அடையப்பெறுவேனே ?

பிராட்டி இராமபிரானுக்கு உயிரன்னள் ஆகலின், அவளை மறந்திருந்துய்கலேன் என்ருன். சரதம் - உறுதி; 'சரதமிப் புவியெலாம் தம்பி காக்குமேல்' (அயோத்தி. மந்தரை); மற்றும் (அயோத்தி. 432, 1102, 1171, 1208) காண்க. ஒகாரங்கள்-வினைப்பொருளன. 'எப்பொழுதிப் பெரும் பழியி னெய்தினேன், அப்பொழுதே யுயிர்துறக்குமாற்றலேன்' (சுந்தர. 503): என்ற பிராட்டி சொற்கள் இங்கே ஒப்பு நோக்கத்தகும்.

பி - ம். 1. *மறந்துறந் துய்கிலேன்*; 2. *சாலுமிப்பழி.*
3. *தீர்வெனோ, தீர்வமோ, திர்வனே.*
4. *சென்று றுவெனோ.* (89)

**521. ஈண்டுநின் றரக்கர்த மிருக்கை யாமினிக்**
**காண்டலிற் பற்பல காலங் காண்டுமால்**
**வேண்டுவ தன்றிது வீர நோய்தெற**
**மாண்டனெ னென்றது மாட்சிப் பாலதாம்.**

'வீர - வீரனே! யாம் - நாம், ஈண்டு நின்று - இவ்விடத்திலிருந்து, இனி - இனிமேல், அரக்கர் தம் இருக்கை காண்டலில் - இராக்கதர்களின் இருப்பிடத்தைத் தேடிக் காண்பதென்றால், பற்பல காலம் காண்டும் - அநேக நாட்கள் செல்லக்காண்போம், ஆல் - ஆதலால், இது வேண்டுவது அன்று - (பிராட்டியைத் தேடும்) இந்த முயற்சி விரும்பத்தக்கதில்லை ; நோய்தெற மாண்டனென் என்றது - (பிராட்டியைப் பிரிந்ததனால் உற்ற) காதல் நோய் வருத்த மரித்தேன் என்பதே, மாட்சிப் பாலது ஆம் - பெருமை யுடைத்தாகும்.

பிராட்டியின் இருப்பிடம் காணவே நெடுங்காலம் ஆகுமாதலால், அம்முயற்சியை விட்டுவிட்டு இறப்பதே மேல் என்று, இராமபிரான் தன் வருத்தத்தால் சோர்ந்து கூறினுன் என்க. வீர - அண்மைவிளி. தன்னுடன் வாழ்ந்த சீதை பிரிந்து சில திங்களேயான நிலையிலும் பிரிவு பொருமல் இறக்கத் துணிகின்ற இராமபிரான், மணம் புரிந்த நாளினிலிருந்தே பிரிந்து நின்ற தன் தம்பியின் நைட்டிக பிரமசரியத்தை எண்ணி 'வீர' என விளித்தான் எனலும் ஆம். (ஒப்பு): 'புலனைந்தும் வென்ருன்றன் வீரமே வீரம்' (ஔவை.) நோய் தெறமாளல் ; உயுத்த மாயா சனக. 13. ஆரணிய. 624.

பி - ம். 2. *காண்டுமென் ருற்பல காலம்; வேண்டுமால்.*
3. *வேண்டுவ தன்றது, வேண்டு மதன்றது, மிதன்றது ; வீர நோய்தாய், நோயிதேல், வீரநோய்தர.*
4. *னென்பது.* (90)

522. செப்புருக் கனையவிம் மாரிச் சீகரம்
வெப்புருப் புரஞ்சுட வெந்து வீவதோ
அப்புருக் கொண்டவா ணெடுங்க ணுயிழை
துப்புருக் குமுதவா யமுதந் துய்த்தயான்.

' அப்பு உரு கொண்ட - அம்பின் (கூரிய) வடிவத்தை ஏற்ற, வாள் நெடுங்கண் - ஒளியுள்ள நீண்ட விழிகளையுடைய, ஆய் இழை, தெரிந் தெடுத்துப் புனைந்த அணிகளையுடைய சீதையின், துப்பு உருகுமுதம் வாய் அமுதம்-பவழம்போன்ற (சிவந்த) நிறமுடையதும் செவ்வல்லி மலர் போன்றதுமான வாயமுதத்தை, துய்த்த - பருகி இன்புற்ற, யான் - நான், இ மாரி சீகரம் - இந்த மழைத் துளிகள், செம்பு உருக்கு அனைய- செம்பைத் (தீயிலிட்டு) உருகச் செய்து அதனை ஊற்றினாற் போன்ற வாய், வெப்பு உருப்பு - வெம்மையான சூட்டுடன், உரம் சுட - (என்) மார்பை எரிக்க, வெந்து வீவதோ-மனம் கொதித்து இறத்தல் தக்கதோ?

மாரித்துளி செம்பையுருக்கினாற் போன்ற தென்றான் ; ' வடவைக் கனலைப் பிழிந்து கொண்டு மற்றுமொருகால் வடித்தெடுத்து, வாடைத் துருத்தி வைத்தூதி மறுகப்பாய்ச்சிக் குழம்பு செய்து, புடவிக் கயவர் தமைப்பாடிப் பரிசுபெருமற்றிரும்பிவரு, புலவர் மனம் போற் சுடு நெருப்பைப் புழுகென்றிறைத்தாற் பொறுப்பாளோ ' என்ற அந்தகக் கவிவீரராகவர் பாட்டு இங்கே ஒப்பு நோக்கத்தகும் (தனிப்பா). சீகரம் - நீர்த்துளி ; ' சீகர மகரவேலை ' (ஆரணிய. 567); மற்றும் தக்கயாக. 30, 284, 331, அப்பு-அம்பு; வலித்தல் விகாரம், கண்களின் கூர்மையும் நீட்சியும் கூறவே, அவற்றின் அகற்சியும், கருமையும். ஒளி யும், வெண்மையும், உபலக்கணத்தாற் பெறப்பட்டன. தலைவன் கூறுவதாக உள்ள ' ஈசற்கி யான்வைத்த வன்பி னகன்றவன் வாங்கிய வென், பாசத்திற்காரென் றவன் தில்லையின்னொளி போன்றவன் தோள், பூசத்திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம், பேசத் திருவார்த் தையிற் பெருநீளம் பெருங்கண்களே. (திருக்கோ ; 109)' என்ற பாடல் இங்கே ஒப்பு நோக்கத்தகும்; அப்பு என்றபோதே கூர்மைபெறப்பட்டமை யின், வாள் என்பதற்கு ஒளியெனப் பொருள் கூறப்பட்டது. ஆயிழை அன்மொழித்தொகை. துப்பு வாயின் நிறத்துக்கும் குமுதம்வடிவிற்குமாம். துப்பு இயற்கையான அதரத்தின் நிறமும், குமுதம் தம்பலத்தாற் சிவந்த நிறமும் எனினும் ஏற்கும். 'சிவந்த வாய்ச்சீதையும்' (அயோத்தி: மந்தரை: 55). என்றது காண்க. அப்புருக்கொண்ட வாணெடுங் கண் என்று இயற்கை யெழிலையும், ஆயிழையென்று செயற்கை யழகையும் குறித்

தான். 'வெப்புறப்புரஞ்சுட' என்ற பாடத்திற்கு வெம்மை மிகும் (என்) உடம்பை எரிக்க என்க. புரம் - உடல்.

பி - ம். 1. சிதரம்.
2. வீவனோ, வீழ்வதோ, வீவதே, மீள்வதோ, வீய்வதோ.
3. வாளொடுங்கவோ வன்னுள்; ஒப்புருக் கொண்டுமார் பொடுங்க வாய்வலே,
4. தப்புருத்தமிர்தவாய், தப்புருத்தலையவா யமுதர், தய்க்க யான்.

இஃது ஓர் பிரதியில் இல்லை. (91)

523. நெய்யடை தீயெதிர் நிறுவி நிற்கிவள்
கையடை யென்றவச் சனகன் கட்டுரை
பொய்யடை யாக்கிய பொறியி லேனொடு
மெய்யடை யாதினி விளித னன்றரோ

'நெய் அடை தீ எதிர் நிறுவி - (ஓமம் வளர்ப்பதற்காக) நெய் ஊற்றி வளர்க்கப்பெற்ற அக்கினியின் முன்னிலையில், (சீதையைக் கொணர்ந்து) நிறுத்தி, 'நிற்கு இவள் கையடை என்ற - உனக்கு இவள் அடைக்கலப் பொருள்' என்று கூறிய, அ சனகன் கட்டுரை - அந்த மிதிலை மன்னனது உறுதிச் சொல்லை, பொய் அடை ஆக்கிய - பொய்யுடன் கூடிய சொற்களாகச் செய்துவிட்ட, பொறி இலேனொடு - நல்லூழ் இல்லாதவனான என்னிடத்தில், மெய் அடையாது - உண்மை குடியிராது. (ஆகவே) இனி, விளிதல்நன்று - இனி இறத்தலே சிறந்தது. அரோ - ஈற்றசை.

திருமணப் படலத்தில் சனகன் தாரை வார்த்துப் பிராட்டியை இராமபிரானிடம், 'நின்கையடை' என்று கொடுத்ததை இராமபிரான் நினைந்து வருந்தியது. 'மாமகள் தன்னொடும் மன்னுதி' என்றது திருமணக் காலத்தில் சனகன் கூறியது; இதையே இங்கு இராமபிரான் கையடை என்றனன் என்க. 'தையறளிர்க்கை தடக்கை பிடித்தான்' (பால: கடிமணப். 90), என்றதும். 'பொற்றொடிகைக் கொடு நன்மனை புக்கான்' என்றதும் (கடிமணப். 93). கையடையின் காட்சிப் பிரமாணங்களே ஆம். கையடை - கையில் ஒப்படைப்பது, 'கையடையாகு மென்றவ் விராமற்குக் காட்டுங்காலை, 379, கட்டுரை. உறுதிச்சொல், 'கவி குலத்தரசு மன்னன் கட்டுரை மனத்துட் கொண்டான்' 347. பொய் அடை-பொய்யான அடைமொழி எனினுமாம். அடைக்கலப் பொருளைக்

காவாது கைவிட்டமையின் பொறியிலேன் என்று கூறினான்; அடைக் கலப் பொருளைப் பாதுகாவாது விடுதல் பெரும்பாதகம் என்பது 'தாளினிலடைந்தவர் தம்மைத் தற்கொரு, கோளுற வஞ்சினன் கொடுத்த பேதையும்' (அயோத்தி; பள்ளியடை; 101) என்ற இடத் துக் காண்க. இச்செய்யுளையும் இதற்கு முன்னுள்ள சில செய்யுட் களையும், சுந்தர காண்டம் 499-வது செய்யுட் டொடங்கி 'ஆதலா லிறத்தலே அறத்தினாறு' (509). என்று முடியும் செய்யுட்கள்வரை யுள்ள பகுதி யொடும் ஒப்பு நோக்கத்தகும்.

பி - ம். 1. *செய்யிடை; நிற்கவன்.*
3. *பொய்யுரை.*
4. *விளிதன் மேன்மையே ; விளித னன்றரோ, விதனனன்றரோ.*

இ∴து ஓர் பிரதியில் இல்லை. (92)

524. தேற்றுவாய் நீயுளை யாகத் தேறிநின்
ருற்றுவே ஞனுள ஞக வாய்வளை
தோற்றுவா ளல்லளித் துன்ப மாரினி
மாற்றுவார் துயர்க்கொரு வரம்புண் டாகுமோ

(இலக்குவனை மேலும் நோக்கி, இராமபிரான்), 'தேற்றுவாய் நீ உளை யாக - தேற்றுபவனாக நீ இருக்க, தேறி நின்று ஆற்றுவேன் நான் உளன் ஆக - மனம் தேறி நின்று, (துன்பத்தினின்று) ஆறுதலடைபவனாக நான் இருக்க, (இவ்வளவினாலே), ஆய்வளை தோற்றுவாள் அல்லள்-பிராட்டி இங்குவந்து காணப்படமாட்டாள்; இ துன்பம் இனி ஆர் மாற்றுவார் - இங்ஙனம் பிரிவால் நிகழ்ந்த இத் துயரத்தை இனிப்போக்குபவர் யார்? (எவருமில்லை); (ஆதலின்); துயர்க்கு ஓர் வரம்பு உண்டாகுமோ - (யான் அடைந்துள்ள) துன்பத்திற்கு ஓர் எல்லை உளதாகுமோ?

இலக்குவன் தேற்றுபவன்; இராமபிரான் வருந்தும் போதெல்லாம் இலக்குவன் தேறுதல் கூறித் தணிவிப்பதைப் பலவிடங்களிலும் இந் நூலில் காணலாம். வரம்பு = முடிவும் அம்.

பி - ம். 1. *தெற்றிநின்.*
2. *யானுளயாக.*
3. *துன்ப மாரியை, துன்ப மாரியே.*
4. *இதற்கொரு.* (93)

525. விட்டபோர் வாளிகள் விரிஞ்சன் விண்ணையும்
சுட்டபோ திமையவர் முதல தொல்லையோர்
பட்டபோ துலகமு முயிரும் பற்றறக்
கட்டபோ தல்லது மயிலைக் காண்டுமோ.

'போர் - போரில், விட்ட வாளிகள் - யான் இனி விடும் அம்புகள், விரிஞ்சன் விண்ணையும் - பிரமதேவனுடைய சத்திய லோகத்தையும், சுட்டபோது - எரித்த போதும், இமையவர் முதல தொல்லையோர் பட்டபோது - தேவர்கள் முதலிய பழமையானவர்கள் மரித்தபோதும், உலகமும் உயிரும் பற்று அற சுட்டபோது - உலகங்களையும் உயிர் களையும் சுவடு இல்லாதபடி அழித்தபோதும், அல்லது - அல்லாமல், மயிலை காண்குமோ - மயில்போன்ற சாயலையுடைய பிராட்டியை நாம் பார்க்கக் கூடுமோ ?

பிராட்டி யிருக்கும் இடம் குறிப்பாகத் தெரியாமையின், நமது வாளிகள் உலகெங்கும் ஏவ வேண்டிவரும். அவ்வாறு செய்தாலன் றிப் பிராட்டியைக் காண முடியாது என்று கூறினான் இராமபிரான். தேவர் முதலியோரைக் கேட்டுப் பிராட்டி யிருக்கும் இடம் தெரிவோ மென்றால், அநுமன் முன் கூற்றின்படி, 'வானவரே முதலோரை வினவுவ னேல் வல்லரக்கன் தானொருவ னுளனாக வுரைசெய்யும் தருக்கிலர்' (சுந்தர. 326) அவர்கள். கட்டல் - அழித்தல்; 'நிற்கட்டனென்,' 331 உரை. 'மயிலைக் காண்டுமோ' என்றதால், இங்கு இராமபிரான் கூறியது வெகுளியாலன்று என்க.

பி - ம். 1. வடிக்கணை, பழிக்கணை; விரிந்த விண்ணையும்,
2. முதலர் ;
3. யாரும்.
4. காணுமோ. (94)

526. தருமமென் றொருபொரு டள்ள வஞ்சியான்
தெருமரு கிற்பது செறுநர் தேவரோ
டொருமையின் வந்தன ரேனு முய்கலார்
உருமென வொலிபடு முரவி லோயென்றான்.

'உரும் என - இடி யென்னும்படி, ஒலி படும் - நாணொலி உண் டாக்கும், உரம் விலோய் - வலிய வில்லைத் தாங்கியவனே ! யான் தெருமருகிற்பது - நான் (உலகமும் உயிரும் பற்றறச் சுடாமல்) இவ்

வாறு சுழல்வது, தருமம் என்ற ஒருபொருள் தள்ள அஞ்சி - தருமம் என்ற ஒரு சிறந்த பொருளைக் கைவிடுவதற்குப் பயந்தேயாகும்; (அன்றி), செறுநர் - பகைவர்கள், தேவரோடு - தேவர்களுடன், ஒருமையின் வந்தனர் ஏனும் - ஒன்றுகூடி எதிர்த்து வந்தார் என்றாலும், உய்கலார் - பிழைக்கமாட்டார்கள்; (இது உறுதி)' என்றான் - என்று இலக்குமணனைப் பார்த்துக் கூறினான்.

அரக்கரிடம் கொண்ட பகைமையால், அவருடன் கூட்டி எவ் வகையான குற்றமும் புரியாத உலகத்தவரை அழித்தல் அறமாகாது என்று கருணாமூர்த்தியான இராமபிரான் கருதினன் என்க. 'புறத்து நாமொரு பொருளினிப் புகல்கின்ற தெவனோ, வறத்தின் மூர்த்திவந் தவதரித்தா னென்பதல்லால்' (அயோத்தி: மந்திர: 37); 'தாயாவார் யாவரே தருமத்தின் தனி மூர்த்தி!' (ஆரணிய: 53) 'தருமமே தவிர்க் குமோ தன்னைத் தானரோ' 258; என்பன காண்க. தள்ள-கைவிட; 'தள்ளரிய பெருநீதி' (பால. குலமுறை. 21). தெருமரல் - குழம்புதல்; 'தெருமரல் உள்ளமொடு' (அகம்: 289); 'தெரிதீங் கிளவி தெருமர லுயவே' (குறுந்: 250). செறுநர் - பகைவர்; 'செறுநரைக் காணிற் சுமக்க' (குறள்: 488). இங்குக் கூறியதன்றி, இராமபிரான் தருமத்தைக் காக்கும் வகையில், தேவர் தானவர் முதல் யாவரையும் அழிப்பேன் என்றது; ஆரணிய. 101. 136. 139, 354, 1008, 1009. தருமத்தை அஞ்சுதல். (ஒப்பு): 'அரவுயர்த்தோன் கொடுமை யினும் முரசுயர்த்தோய் நினதருளுக் கஞ்சினேனே' (வில்லி. பா. கிருஷ் ணன் றூது. 13).

பி - ம். 1. *தன்னை யஞ்சியான்,*

2. *தெருமருகின்றது, தெருமரல்கின்றது; தேர்வரோ.*

3. *அருமையின் வாய்ந்தனர், வீய்ந்தனரென்னும், வந்தனரெனினும்; அருமையி னடங்கின ரென்ன வெண்ணுவார்.*

4. *உரவினோய்; வில்லுளோர்; உய்விலோ மென்றான், உரவிலோ யென்னே.* (95)

இலக்குவன் மறுமொழி

527. இளவலு முரைசெய்வா னெண்ணு நாளினி
உளவல கூதிரு மிறுதி யுற்றதால்
களவுசெய் தவனுறை காணுங் காலமீ
தளவிறந் தயர்வதெ னையை யாழியாய்.

இளவலும் உரை செய்வான்-(இராமபிரான் கூறியவற்றைக்கேட்ட) இலக்குவனும் பின்வருமாறு மொழியலானுன் : 'ஆணை அழியாய் - ஆணைச் சக்கரத்தை யுடையவனே ! எண்ணும் நாள் இனி உள அல - (முன்னர்) சுக்கிரீவனுக்குக் குறிப்பிட்ட நாள்கள் கழிந்தன ; கூதிரும் இறுதி உற்றது - சரற்காலமும் முடிவடைந்தது ; களவு செய்தவன் உறைகாணும் காலம் ஈது - பிராட்டியைத் திருடிச் சென்ற அரக்கனுடைய இருப்பிடத்தைக் கண்ணுறும் காலமும் இதோ அண்மையில் உள்ளது ; (ஆகவே) அளவு இறந்து அயர்வது என் - எல்லை மீறி மனம் தளர்வது ஏன் ? ஆல் - ஈற்றசை.

இளவல் - அல் பெயர் விகுதி. ஆணையாழியாய் என்றது. நீ உன் ஆணையைச் செலுத்திச் சுக்கிரீவன் மூலமாகப் பிராட்டியைத் தேடுவதற்கான முயற்சி செய்யவேண்டிய காலம் வந்தது என்று தமையனை இலக்குவன் ஊக்கியவாறு. சுக்கிரீவன் நன்றி மறந்தயர்ந் திருப்பின் அவனை ஒறுக்கும் ஆற்றலும், அவனும் தேட்டத்தில் ஈடு படுவானுயின், அவனை ஆவன புரியுமாறு ஏவும் உரிமையும் உள்ளவன் ஆகலின் அவ்வாறு கூறினன் என்க. இடங்கட் கேற்பச் சொற்களை அமைப்பது ஆசிரியரின் தனிச்சிறப்பு. கீழ், இலக்குவன் இராமபிரானை 'இறைவ' என விளித்ததும். (ஆரணிய. 501). சுந்தரகாண்டத்து, (494) பிராட்டி இராமபிரானை 'நாராயணனே' என அழைத்ததும் 'இளங்குமரா' (ஆரணிய.777). என இலக்குவனை நோக்கி இராமபிரான் சொன்னதும், வசிட்ட முனிவனை நோக்கி இராமபிரான் 'தேன்றரு மலருளான் சிறுவ' (அயோத்தி, கிளைகண்டு.126) எனச் சொல்லியதும்; 'ஆர்ப்புறு வரிசிலை யிளைய வைய' (அயோத்தி. கிளைகண்டு. 50); என இராமபிரான் தம்பியை நோக்கிக் கூறியதும் இங்கே ஒப்புநோக்கத் தருவன. இனி உள அல, மேலே இல்லை என்றதாய்க் கழிந்தது என்று கொள்ளப்பெற்றது ; இனிமேல் இல்லை என்றதால், என்றும் கொள்ள லாம் ; இப்பின் பொருளில், எண்ணும் நாள் - என்றதற்கு மேலே ஆவனவற்றைக் கருதும் காலம் என்பது பொருள். எண்ணும் நாள்- மனம், காலம் நீட்டித்தலைப் பொருமையின் ஒன்று இரண்டு என எண் ணும் நாட்களுமாம். இனி 'உறை' என்பதற்கு வாழ்நாள் என்ற பொருள் உண்மையின், அரக்கனது வாழ்நாள் இறுதியைக் காணும்

நாள் என்றும் பொருள் கூறலாம். 'வேந்தன் உறை கடுகி யொல்லைக் கெடும்.' (குறள். 504) என்ற குறளும், அதற்குப்' பரிமேலழகர் உரையும் இங்கே காணத்தகுவன. கூதிர் - சரற்காலம்.

பி - ம். 1. நாளினும், நாளினி, நாளினுள்.
2. உளபகற்கூதிரு, உளவில, உளபல.
3. செய்தவனுழை, தவருறை, தயரிடம் ; காலம் வந்து.
4. அளவியலாகியதானை, தாவ தெனுனை, அளவியதெனப்பிறு மறைதன் மேயினுன், (96)

528. திரைசெயத் திண்கட லமிழ்தஞ் செங்கணுன்
உரைசெயத் தரினுமத் தொழிலு வந்திலன்
வரைமுதற் கலப்பைகண் மாடு நாட்டித்தன்
குரைமலர்த் தடக்கையாற் கடைந்து கொண்டனன்.

'திரை செய் அ திண் கடல் - அலைகளை யுண்டாக்குகின்ற அந்த வலிய பாற்கடல், அமிழ்தம் - தன் உள்ளிருந்த அமுதத்தை, செம் கணுன் - சிவந்த விழிகளையுடைய திருமால், உரை செய - (கொடு) என்று கட்டளையிட்ட வளவிலே, தரினும் - உதவக் கடவதானுலும், அ தொழில் - அங்ஙனம் தனது ஆணை விசேடத்தாற் பெறுவதை, உவந்திலன் - அப்பெருமான் வேண்டாதவனுய், வரை முதல் கலப்பை கள் - (மந்தர) ,மலை முதலிய பல உபகரணப் பொருள்களை, மாடு நாட்டி - பக்கத்தில் நிறுத்தி, தன் குரை மலர் தட கையால் கடைந்து - தனது பெருமை பொருந்திய ; (தோள்வளை) முதலிய அணிகள் ஒலிக் கப் பெற்ற செங்கமலம் போன்ற பெரிய கைகளால் (அக்கடலைக்) கடைந்தே, கொண்டனன் - (அதனிடமிருந்து அமுதத்தைப்) பெற்றுக் கொண்டான்.

இது முதல் 4 செய்யுட்களால் இலக்குவன், முயற்சியின் பெரு மையை அண்ணனுக்கு வற்புறுத்தினுன் என்க. வேண்டும் என்றுல் அமுதத்தைக் கொணர்ந் துதவுமாறு பாலாழியை ஏவலாம். ஆயினும் அங்ஙனம் செய்யாமல், மந்தரமலை முதலிய கருவிகளைக் கொண்டு கடைந்தே அமுதம் பெற்றனன் திருமால். அதுபோன்றே கூட்டொரு வரையும் வேண்டாதவனும், தன்றுணை யொருவரும் தன்னில் வேறிலா னும், ஆகிய நீ நினைந்தால் உலகை ஓர் நொடியில் அழித்துப் பிராட்டி யைத் தேடவல்லாய். அவ்வாறு புரியாமல் வானரங்களின் உதவி கொண்டே பிராட்டியை நாடும் வினையை மேற்கொள்க என்றுன்

இலக்குவன். திருமால் பாற்கடல் கடைந்தது 'வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணுக்கி கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே' (சிலப், ஆய்ச்சியர். 32) மற்றும் பால. குலமுறை. 12. ஆரணிய. 102; பாகவதம். கந்தம், 8. அத். 3 15, 16ம் காண்க. 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' (நிகண்டு) 'பூவிற்குத் தாமரையே' (திருவள்ளுவமாலை. 38); 'பூவினிற் கருங்கலம் பொங்கு தாமரை' (தேவா. 1182, 2); என்றுராகலின் மலர் இங்கே தாமரையைக் குறித்து நின்றது. இச்செய்யுள் பிறிதுமொழிதலணி; திரை செய்-அலைகளைச்செய்கின்ற. 'திரைசெய் நீர்விழும் சிலையினை' (விநாயக:) 'திரைசெய' என்பதற்கு அலைகள் எழும்படியாகக் கடையப் பெற்ற, எனலும் ஆம். அ - பண்டறிசுட்டு. 'தேவரும் அரக்கரும் மிகவும் வருந்திப் பல காலம் கடைந்ததாகலின் திண்கடல் என்றுர். எத்துணை ஆற்ற லுடையவராயினும், கருவியும் காலமும் இன்றியமை யாதன என்பது இங்கே குறிக்கப்பட்டது. ''கடைந்து கொள்ளவேண்டிய அளவு தன்னிடம் பொருள்களைக் கரந்து வைத்தமை கருதித் திருமால் வெகுண்டனன் என்பதைச் 'செங்கணுன்' என்றசொல் விளக்கிநின்றது. வரைமுதற் கலப்பைகள், மந்தரகிரி, வாசுகி, மேரு, திருமால்முதலியன. கலப்பை - பலவகைப் பொருள்கள்: 'ஆயதற் குரியன கலப்பை யாவையும்' (பால: திருவவ. 84). மாடு-பக்கம். 'மாடு பற்றியிடங்கர் வலித்திட' 340. ''ஒலிகடல் உலகம் தன்னில் ஊர்தரு குரங்கின் மாடே'' 309. குரை மலர் - வண்டுகள் ஒலிக்கின்ற மலருமாம். குரைக்கை, மலர்க்கை, தடக்கை எனக் கூட்டுக. குரைத்தல் - கடகம் வாகுவலயம் முதலிய அணிகள் ஒலிக்கப்பெறுதல். கடைதற் றெழிலை மேற்கொள்ளத் தகுவதன்றென்பார் மலர்க்கை என்றுர்.

பி-ம். 1. *திரையெறிபாற்கடல முதஞ்*

2. *தரினும், தொழியத்தக்கன, தரினு மெத்தொழிலுமுற்றபின், உரை செயிற்றனித்தய னுய்த்துளானலன்; னுவந்தவன்.*

3. *மத்து நாட்டித்தான், நாட்டிப்பின், மற்றுநாடித்தன்,*

4. *தடக்கையிற் குடைந்து.*

529. மனத்தினி னுலகெலாம் வகுத்து வாய்ப்பெயும்
நினைப்பின னயினு நேமி யோடுவே
றெனைப்பல படைக்கல மேந்தி யாரையும்
வினைப்பெருஞ் சூழ்ச்சியிற் பொருது வெல்லுமால்.

'(மற்றும் அத்திருமால்), மனத்தினின் உலகு எலாம் வகுத்து வாய் பெயும் - திருவுள்ளத்தில் நினைத்த அளவிலேயே உலகம் யாவையும் உளவாக்கிப் பின் வாயிற் பெய்து உண்ணத்தக்க, நினைப்பினன் ஆயினும் - எண்ணம் கொள்பவனாயினும், (அங்ஙனம் செய்யாமல்), நேமியோடு - ஆழிப்படையுடன், வேறு எனை பல நெடும் படைக் கலம் ஏந்தி - மிகப்பலவான போர்க் கருவிகளைக் கையேற்று, (அவற்றைக் கொண்டு), யாரையும் - கொடியவர் எல்லோரையும், வினை பெரும் சூழ்ச்சியின் - போர்த் தொழிலுக்கு உரிய பெரிய தந்திரங்களால், பொருது - எதிர்த்து, வெல்லும் - வெற்றிகொள்கின்றான், ஆல் - ஈற்றசை.

சங்கற்ப மாத்திரத்தாலே தனது ஆழிப்படையை ஏவி அனைவரையும் அழிக்க வல்லவன் ஆயினும், திருமால் அவ்வாறு செய்தல் ஒழிந்து படைக்கலம் ஏந்தி, அந்த அந்த சமயங்களுக்கேற்ற போர்க்கு வேண்டிய ஆள்பலம் கருவிப்பலம் முதலியன கொண்டே அரக்கரைப் பொருதது போல், என்றான் இலக்குவன்; 'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்' என்ற பாடல் இங்கே நினைவு கூரத்தகும். 'உலகெலாம் வகுத்து வாய்ப்பெய்தல்'; 'உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும், கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும், மணம் கூடியும் கண்ட ஆற்றால் தனதே உலகு என நின்றான்' (திருவாய் ; 4, 5 : 10). வினைப்பெரும் சூழ்ச்சி - 'கருவியும் காலமும் செய்கையும் செய்யு மருவினையு மாண்ட தமைச்சு' (குறள். 631) காண்க.

பி - ம். 1. மனத்தினில்; வாய்ப்புறும், வாய்ப்பறும்,
2. நேமியோ னெடும், நேமித்தேவுதான், நேமியோடு வென்று. நேமிநேமியோ, 3. எனைப்பகல்.
4. சூட்சியின் ; பொருதும் வெல்லுமால்; (98)

530. கண்ணுடை நுதலினன் கணிச்சி வானவன்
விண்ணிடைப் புரஞ்சுட வெகுண்ட மேலைநாள்
எண்ணிய சூழ்ச்சியு மீட்டிக் கொண்டவும்
அண்ணலே யொருவரா லறையற் பாலவோ.

' அண்ணலே - பெரியோய் ! கண் உடை நுதலினன் - நெற்றியிலே (தீக்) கண்ணையுடைய, கணிச்சி வானவன் - மழுப்படையைத் தாங்கிய சிவபிரான், விண் இடை புரம் சுட - ஆகாய வீதியில் இயங்கிய முப்புரங் களை யெரித்தற் பொருட்டு, வெகுண்ட - சினம் கொண்ட, மேலை நாள்- முன்னாளிலே, எண்ணிய சூழ்ச்சியும் - கருதிய தந்திரங்களும், ஈட்டி கொண்டவும் - (உதவிக்காகச்) சேர்த்துக் கொண்டனவும், ஒருவரால் அறையற் பாலவோ - ஒருத்தரால் எடுத்துச் சொல்லத்தக்கனவோ ? ஒருத்தரால் எடுத்துக் கூறமுடியார்தபடி மிகப்பல என்றான்.

நெற்றிக் கண்ணும் எரியீட்டியாகிய மழுவுமே அமையும் திரிபு ராதிகளை அழித்தற்கு எனினும், பல தேவர்களுடைய உதவிகொண்டே அவற்றை யழிக்கத் துணிந்தனன் சிவபெருமான் என்பது இங்கே குறிக் கப்பட்டது. மேலை நாள்-முன்னாள் ; ' மேலை நாள் உயிரொடும் பிறந்து ' (ஆரணிய: 227).

பி - ம். 1. கண்ணுறு நுதலிடை, நுதலவன், நுதனெடுங், நுதலெனும்,
2. விண்ணுடை,
3. மீண்டிக்கொண்டவும், கொன்றவும், கொண்டதும்.
4. யறியற் பாலதோ. (99)

531. ஆகுநர் யாரையுந் துணைவ ராக்கிப்பின்
ஏகுறு நாளிடை யெய்தி யெண்ணுவ
சேகுறப் பன்முறை தெருட்டிச் செய்தபின்
வாகையென் றொருபொருள் வழுவற் பாலதோ.

' ஆகுநர் யாரையும் - உதவியாக உள்ளவர்கள் அனைவரையும், துணைவர் ஆக்கி - துணை புரிபவர்களாகச் செய்துகொண்டு, எண்ணுவ- சிந்திக்க வேண்டிய காரியங்களை, சேகுஉற - திண்மை பொருந்த, பல

முறை தெருட்டி - பல முறை தெளிந்து, பின் - பின்பு, ஏகுறு நாளிடை- (வினைமேற்) செல்லும் நாளில், எய்தி - (வினையாற்று மிடத்தை) அடைந்து, செய்தபின்-(காரியத்தைச்) செய்த பிறகு, (அக்காரியத்தில்), வாகை என்ற ஒரு பொருள் - வெற்றியென்ற ஓர் பொருள், வழுவல் பாலவோ - தவறும் பான்மையதோ ; அன்று.

வெற்றிக்குபாயம் இங்கே கூறப்பட்டது. ஆகுநர்; ' தக்கார் இனத் தனாய்த் தானொழுக வல்லானைச் செற்றார் செயக்கிடந்ததில் ' (குறள் ; 446). என்றாராகலின் தகுதியுள்ளவரையே துணைக் கோடல் வேண்டும். 'பிரித்தலும் பேணிக்கொளலும் பிரிந்தார்ப் பொருத்தலும் வல்ல தமைச்சு ' (குறள். 633). என்றதும் காண்க. ஆகுநர் யாரையும் துணைவராக்கி என்றதனால் பிரதிகூலமானவரை நீக்குதல் கடன் என்றவாறும் ; அவதார நிகழ்ச்சிப்படி வானரங்கள் இராமபிரானுக்கு உதவ வேண்டியிருக்க, வாலிமுரண்பட்டு எதிரியான இராவணனுடன் ஒப்பந்தம் செய்து கொண்டநிலையில், இராமபிரான் அவன் நட்பினை நாடாமை அரசியற் சூழ்ச்சியின் பாற்படுவதறிக. சேகு - திண்மை; 'சேகுற வினையிற் செய்த தீமை '; (சுந்தர; 943). எய்தியெண்ணுவ (ஒப்பு) ' எண்ணித் துணிக கருமம்' (குறள் : 467). 'தெரிந்த வினத் தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க் கரும் பொருள்யாதொன்றுமில்' (குறள். 462). 'இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந் ததனை யவன் கண்விடல்' (குறள் ; 517). 'அருவினை யென்பவுளவோ கருவியாற் காலமறிந்து செயின் ' (குறள் ; 483). என்ற குறட்பாக்கள் இங்கே கருதத்தக்கன. சேகு-மரவயிரம், இங்கே திண்மைக்கு இலக்கணை. சேகற என்ற பாடத்திற்குக் குற்றம் நீங்க எனப்பொருள் உரைக்க. வாகை மாலை - 'வெற்றியின் அடையாள மாலை, போர் நிகழ்ச்சிகளுக்குப் பல்வேறு மாலைகள் அணிவது தொல்காப்பியர் காலத்திலிருந்து வந்த தண்டமிழ் வழக்கு; வடமொழி வாணரும் இந்தவழக்கம் தண்டமிழ் நாட்டார் மேற்கொண்ட தென்று எழுதுவர். இந்தவழக்கத்தை ' வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தை யாம் ' (பு. வெ. மா.) எனத்தொடங்கும் செய்யுள் கொண்டறிக.

பி - ம். 1. யாவையும் ; ஆகலினடுத்துள திணைவரோடும் பின்.
2. ஏகின், ஏகிய ; ஏகுமா வெண்ணி யெய்தவ, யேகியெண்ணுவ, யெய்த வெண்ணுவ, ஏகுநாளிடை யெனவேகி.
3. சேகுறச் செருத்தொழி லெதிர்த்துச் செய்தபின்; தெளிந்து, தெரிந்து ;
4. பாலவோ. (100)

532. அறத்துறை திறம்பின ராக்க ராற்றலான்
மறத்துறை நமக்கென வலிக்கும் வன்மையோர்
திறத்துறை நன்னெறி திறம்ப லுண்டெனின்
புறத்தினி யார்திறம் புகழும் வாகையும்.

'அறம் துறை திறம்பினர் அரக்கர் - தரும நெறியினின்றும் மாறு பட்டவராகிய அரக்கர்கள், ஆற்றலான் - (உடல், வரம், சேனை) இவற் றின் வலிமை கொண்டு, மறம் துறை - பாவநெறியே, நமக்கு என வலிக்கும்-நம்மனோர்க்குச் சிறந்தது என்று கருதுகின்ற, வன்மையோர் - நெஞ்சுரம் உள்ளவர்கள், திறம் துறைநல் நெறிதிறம்பல் உண்டு எனின்- மேன்மையான தன்மை வாய்ந்த நன்னெறித் துறையினின்று வழுவு வாராயின், புறத்து இனி - அப்பால், புகழும் வாகையும் - சீர்த்தியும் வெற்றியும், யார்திறம் - எவரிடம் சேரும்? அறநெறி பிழையாத உன்னையே சேரும்.

' வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால்' (சுந்தர. 405). வலித்தல், உறுதியாகக் கருதுதல்; 'வந்தனன் மருத்துவன் எனத்தனி வலிப்பான் ' (ஆரணிய. 161); ' போர்வில்லை வலித்தானை மங்கை திரு மணத்தானென் றியாம் வலித்தேம்' (பால. கார்முக. 20), ' திறத்து உறு நல்நெறி ' என்ற பாடத்திற்கு - அறம் விழைபவர் திறத்திலேயே விளங்கும் நல்ல நெறியென்க. புகழும் வாகையும் என எதுகை நோக்கி யிருப்பினும், வாகையும் புகழும் என மாற்றுக.

பி - ம். 1. *திறம்பினோர் அரக்கராற்றலர், ராதலால், ராதலின், ராற்றலாம்.*
2. *வண்மையோர், வண்மையேன், வாய்மையோ.*
3. *திறத்துறு, திறத்துள, திறத்துநம்; மறநெறி திறம்பலின்றெனிற்.*
4. *புறத்தினில்; யாரதாம், யார்க்கினி, புகழும் வாழ்க்கையும்.* (101)

533. பைந்தொடிக் கிடர்களை பருவம் பையவே
வந்தடுத் துளதினி வருத்த நீங்குவாய்
அந்தணர்க் காமற மரக்கர்க் காகுமோ
சுந்தரத் தனுவலாய் சொல்லு நீயென்றான்.

பைந்தொடிக்கு இடர்களை பருவம் - பசுமையான (பொன்னாற் செய்த) வளையல்களை யணிந்த பிராட்டியின் துன்பத்தை நீக்குதற்குரிய காலம், பையவே வந்து அடுத்து உளது - மெல்ல வந்து பொருந்தி யிருக்கின்றது; இனி வருத்தம் நீங்குவாய் - இனி, துயரத்தை விட்

டொழிப்பாயாக; அறம் அந்தணர்க்கு ஆம் - நன்னெறி செந்தண்மை பூண்டொழுகுவோர்க்கே யாகும், அரக்கர்க்கு ஆகுமோ-(வெவ்வினையை மேற்கொள்ளும்) இராக்கதற்குப் பொருந்துமோ? சுந்தரம் தனு வலாய் - அழகிய விற்போரில் வல்லவனே! நீ சொல்லு - நீ சொல்வாயாக' என்ருன் - என்று (இலக்குவன்) சொன்னுன்.

இடர்களைதல் - துயரத்தைப் போக்குதல்; 'இடர்களையா ரேனு மெனக்கிரங்கா ரேனும்' (அற்புத அந்தா.2). பருவம் வந்துளது என்ருது அடுத்துளது என்றதன் குறிப்புக்கேற்ப இதனை அடுத்த செய்யுளில் மழைக்காலம் முடிந்தது என்றமை காண்க. அறநெறியைப் பின்பற்று வதும், அதனுலெய்தும் பயனை அடைவதும், 'அந்தணர்க்காகும், அரக்கர்க்காகுமோ' என்ருன். மற்றும் 'அந்தணர்க்காகு நாம் அரக் கர்க்காகுமோ' என்ற பாடம் கொண்டுமுனிவர் கட்குதவி புரிய வேண்டி வந்த நாம், அரக்கர்கையில் சிக்கிக்கொள்வதா என்றும் கூறலுமாம். 'அரக்கரை யாசறக்கொன்று நல்லறம் புரக்க வந்தன மெனும் பெருமை பூண்ட நாம்'. (உயுத்த. வீபீடண. 69) என்பதும் (ஆரணிய: 136, 138) என்ற கவிகளும் இங்கே ஒப்பு நோக்கத்தக்கன.

பி - ம். 1. *பையவாய், மாண்டுபோய்,*

2. *வந்துளதாமினி வந்தெதிர்ந்து; வழியினீங்குவாய். வருத்த மாற்றுயாய்; வந்தடுத்துளதென, வழுவினீங்குவாய்,*

3. *அறத்திற்காகு அமரர்க்காகுமோ,*

4. *சிலை வலாய்; சொல்தியீதென்ருன்;* (102)

பருவகால முடிவு

534. உறுதியஃ தேயென வுணர்ந்த வூழியான்
இறுதியுண் டேகொலிம் மாரிக் கென்பதோர்
தெறுதுய ருழந்தனன் றேயத் தேய்வுசென்
றறுதியை யடைந்ததப் பருவ மாண்டுபோய்.

(இவ்வாறு இலக்குவன் கூறிய தேறுதல் உரைகளைக் கேட்டு), அஃது உறுதியே என - அவன் கூறியன யாவும் உறுதி பயப்பனவே' என, உணர்ந்த ஊழியான் - மனத்துட்கொண்ட ஊழிக்காலத்தையும் வெல்ல வல்ல இராமபிரான், இ மாரிக்கு இறுதி உண்டு கொல் என்பது - இந்த மழைக்காலத்திற்கு ஓர் முடிவு உளதோ என்று கருது வதனுல் ஆகிய, ஓர் தெறு துயர் - ஒப்பற்ற கொடிய துன்பத்தால்; உழந்தனன் - வருந்தியவனுய், தேய - மெலிய, அ பருவம் - அந்தக் கார்காலமானது. ஆண்டு போய் - தன் ஆட்சியைச் செலுத்திவிட்டு

நீங்கி, தேய்வு சென்று அறுதியை அடைந்தது - நாடோறும் மெலிவுற்று முடிவடைந்தது.

ஊழிக்காலத்தும் அழியாது உள்ள கடவுளும்; காலத்தையும் நியமிக்கவல்ல திருமாலின் அவதாரமுமான இராமபிரான், மேற்கூறிய வாறு வருந்தியது தான் எடுத்த மனித வுருவிற்கேற்ற நடிப்பென்பது 'ஊழியான்' என்ற சொல்லாற் பெறப்படும். உழந்தனன் பாற்கொண்ட நேயத்தானும், ஒப்புரவினாலும் பருவம் தேய்வு சென்று அறுதியை யடைந்தது என்ற நயம் காண்க. ஆண்டுப்போயென்றுகொண்டு-அப்பாற்சென்று எனினுமாம். பருவம் ஆண்டு - கார்ப்பருவத்துக்கு வரையறுத்த ஆண்டுகள் என்றுமாம்.

பி - ம். 1. உறுதியீதேயென, உறுதியற்றேயென; ஆழியான்.
2. உண்டோகொல், உண்டோ சொல்.
4. அடைந்ததப் பருவ மாரியே. (103)

535. மள்கலில் பெருங்கொடை மருவி மண்ணுளோர்
உள்கிய பொருளெலா முதவி யற்றபோ
தெள்கலி லிரவலர்க் கீவ தின்மையால்
வெள்கிய மாந்தரின் வெளுத்த மேகமே.

மள்கல் இல் - குறைதலில்லாத, பெரு கொடை - பெரிய ஈகைத் தன்மை, மருவி - பிறப்பிலேயே அமையப் பெற்று, மண் உளோர் உள்கிய பொருள் எலாம் உதவி - உலகில் உள்ளவர்கள் கொள்ளக் கருதிய பொருள் அனைத்தும் வழங்கி, அற்றபோது - (தம்மிடம்) பொருள் இல்லாத காலத்து, எள்கல் இல் இரவலர்க்கு - இகழப்படாத இரப்போர்க்கு, ஈவது இன்மையால் - வழங்கும் பொருள் இன்மையால், வெள்கிய-நாணமுற்ற, மாந்தரின் - மக்கள் இயல்பு மாறுவதுபோன்று, மேகம் வெளுத்த (கருக்கொண்ட நீரை யெல்லாம் பெய்து) மேகங்கள் வெண்ணிற முற்றன.

உவமையணி. பெருங்கொடை - வள்ளன்மை; இதனைத் தண்டா மலீவது என்பர் ஒளவையார்; 'ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்.' (பால. அரசியல் 5); 'இரவாமலீந்த இறைவர்' (பு. வெ. மா: பாடாண். 6). என்பன காண்க. நட்பும் தயையும் கொடையும் பிறவிக் குணங்கள் ஆகலின், 'மருவி' என்றார். கண்ணபிரானிடம் வரம் வேண்டிய கன்னன். 'இல்லை யென்றுரைப் போர்க்கில்லை யென்றுரையா விதயம்' (வி. பா.

17ஆம் போர் 242) அளித்தருளுமாறு வேண்டினனுக்குக் கண்ண பிரான் அவனுக்குச் செல்வமு மீகையும் அருளாது, ஈகையும் செல்வமு மெய்துமாறு கூறியதும், கண்டு கொள்க. திருவள்ளுவர் அருளிய, 'ஈகை' என்ற அதிகாரமும் அதற்குப் பரிமேலழகர் செய்துள்ள உரையும் விநாயகபுராணம் (அரசியற்கை 37-41). செய்யுட்களும் இங்கே காணத் தக்கன. பிறர்க்கு வழங்கும் வாய்ப்பில்லாதவர் வெள்குவதொடு சாதலை யும் விரும்புவர் என்ப; குறள். 230; கலி 61, 11; 43, 26-27. வெள்குவதும் உள்ளெழுந்த அச்சத்தால் என்க. 'இரப்பார்க் கொன் றீயாமை யச்சம்' (நாலடி. 145) என்றது காண்க. மேகம் வெளுத்ததும் தான் கருக்கொண்டிருந்த நீரனைத்தும் உலகிற்கு வழங்கியே; அது போன்றே இம் மாந்தரும் தம் உடைமை யனைத்தும் வழங்கியே வறியரா யினர் என்பது பெறப்படும். மற்றும் வெளுத்த மேகமும் மீட்டும் கடல் நீர் பருகி வழங்கக் கூடுமாதலின், மீட்டும் ஆக்கம் எய்தின் இம்மாந்தரும் வழங்குவர் என்ற குறிப்பும் கண்டுதெளிக. மண்ணுளோர் எனப் பொதுப்படக் கூறினரேனும்; 'பாத்திர மறிந்து பிச்சையிடு' என்றதற் கிணங்கத் தகுதியுள்ளோர்க்கே வழங்குவது சாலச் சிறப்புடைத் தென்க. 'உதவி வரைத்தன்றுதவி யுதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து' (குறள். 105.) 'உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே' (பால. வேள்வி. 35). என்றது காண்க.

பி - ம். 1. உள்கலில், உற்றபோது.

3. ஈயவின்மை, யிசைவதின்மை. (104)

536. தீவினை நல்வினை யென்னத் தேறியப்
பேய்வினைப் பொருடனை யறிந்து பெற்றதோர்
ஆய்வினை மெய்யுணர் வணுக வாசுறு
மாயையின் மாய்ந்தது மாரிப் பேரிருள்.

தீவினை நல்வினை என்ன தேறி - பாவத்தொழில் என்றும் புண்ணியச் செயலென்றும் ஆராய்ந்து தெளிந்து, அப் பேய்வினை பொருள்தனை அறிந்து - அந்தப் பேயின் செயல்களைத் தூண்டும் செல்வத்தின் இயல்பை (உள்ளபடி) உணர்ந்து, பெற்றது - அடையப் பெற்ற, ஓர் - ஒப்பற்ற, ஆய்வினை மெய் உணர்வு - ஆராய்தல் தொழிலையுடைய தத்துவ வுணர்ச்சி, (அச் செல்வத்தில் உள்ள பற்றை விடுத்து), அணுக - சேர, (அவ்வளவிலே), ஆசு உறு - குற்றம் பொருந் திய, மாயையின் - அவித்தை நீங்குவதுபோல, (சரற்காலம்) தோன்றிய

அளவிலே, மாரி பேர் இருள் - மழைக் காலத்துக் கருமேகங்கள் கவித லால் எழுந்து நிறைந்த இருட்டு, மாய்ந்தது - மறைந்தொழிந்தது.

பணம் பத்தும் செய்யும் ஆதலின் அதனைப் பேய் என்றார். 'செல்வம் வந்துற்ற காலைத் தெய்வத்தைச் சிறிதும் பேணார், சொல்வதை யறிந்து சொல்லார் சுற்றமும் துணையும் நோக்கார்' (வி.பா. கிருட்டினன், 143); என்றது காண்க. பட்டதிரு' (குறள். 408) என்ற இடத்தில், திரு 'நல்லாரைச் செருக்க, வறுமை நல்லாரைக் கெடாது நிற்றலான், வறுமையினும் திரு இன்னாது என்றார், என்று உரைகாரர் கூறுவது காண்க. 'செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்' (திருவாசகம், அகவல்) என்றார் மணிவாசகர். 'இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி; மாசறு காட்சியவர்க்கு' என்பது திருக்குறள் (352). நல்லோரிடத்துக் கட்டுத் தெளிந்தே மெய்யுணர் வெய்துமாகலின், அதற்கான முயற்சியை 'ஆய்வினை' என்றார். மெய்யுணர்தல் - 'பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையானுணர்தல்; இதனை வடநூலார் தத்துவஞானம் என்பர்' என்பது பரிமேலழகர் உரை. தன்னையும் தனக் காதாரத் தலைவனையும் தான் உள்ளபடி கண்டு அவித்தையைப் போக்குவது. 'மற்றும் தானல் லுடலையான் என்றும், தன்னோ டுரிமை யல்லாமை யீன முறு பல் பொருளனைத்தும் என்ன தென்றும்', கருதாமையுமாம் 'யான் என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்' (குறள். 346). என்பதும் காண்க. மருள், மயக்கம், அவித்தை, மாயை என்பன ஒருபொருட் சொற்கள். இச் செய்யுள் குறிப்புருவகம்.

பி - ம். 1. தேற்றிய, தேறிவெம்;
2. பேர்வினை, பரந்தனை யறிந்த பெற்றியோர், யறிந்துபோய்வினைப்
3. ஆய்வுறுமெய்வினை, வாசறும், மாசறும், மாசறு, (105)

537. மூளமர் முற்றுற முரச விந்தபோல்
கோளமை கணமுகில் குமுற லோவின
நீளடு கணையெனத் துளியு நீங்கின
வாளுறை யுற்றென மறைந்த மின்னெலாம்.

மூள் அமர் முற்று உற - (ஒருவர் ஒருவர்மீதுகொண்ட) சினத்தால் மூட்டப்பட்டு எழுந்த போர் முடிந்த அளவில், முரசு அவிந்த போல் - போர்ப் பறைகள் ஒலி யடங்கினாற் போன்று, கோள் அமை - வலிமை பொருந்திய, கணம் முகில் - திரண்ட மேகங்கள், குமுறல் ஓவின -

இடி முழக்கம் ஒழிந்தன; நீள் அடு கணை என - நீண்ட கொல்ல வல்ல அம்புகள் (எய்யப்படாமல் ஒழிவது) போல, துளியும் நீங்கின - மழைத் துளிகளும் (வீழ்தல்) ஒழிந்தன; வாள் உறை உற்று என - (போர் முடிந்த அளவில்) வாட்படைகள் உறையில் போடப்பட்டு மறைந்தாற்போன்று, மின் எலாம் மறைந்த - மின்னல்கள் எல்லாம் மறைந்தன.

உவமையணி: மூளமர் முற்றுற என்பதை மூன்று வாக்கியங் கட்கும் இணைத்துப் பொருள் உரைக்க. இதனை முதனிலை விளக் கென்பர். கோள் அமை - கோள் என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயராக்கிக் கடல் நீரைக் கொள்ளுதல் அமைந்த எனினுமாம். போர் முடியவே முரசு ஒலி அடங்கும், அம்பு மழையும் ஓயும், வாட் படைகள் உறையி லிடப்பெறும். அவையொப்ப, இடி யோசையும், மழைத் தாரைகளும் மின்னல்களும் ஓய்ந்தன. மழைத் தாரைக்கு அம்பு: (ஒப்பு): 'மன்மதன் மலர்க்கணை வழங்கி னுனெனப் பொன்னெடுங் குன்றின்மேற் பொழிந்த தாரைகள். 448. 'காரிடும் வில்லிடைச் சரமென விசையின் வீழ்ந்தன' (447); 'மீனெடுங் கொடியவன் பகழி வீழ்துளி (449). 'அசைவுறு சிறுதுளி யப்பு மாரியின்' (455). இடியும் மழை வீழ்ச்சியும் மின் விளக்கமும் இல்லாவாயின என்க.

பி - ம். 1. தொலைவுற, தொலையமா, மூதலற
2. கோளமர், கோளடை; கொண்முகில், கனமுகில் குளிறலோவின, குழறலோவின.
3. வேலிடுகணை யெனத்துளியும்.
4. வலைந்த மின்னெலாம் வெந்தின, (106)

538. தடுத்ததா ணெடுந்தடங் கிரிக டாழ்வரை
அடுத்தநீ ரொழிந்தன வருவி தூங்கின
எடுத்தநூ லுத்தரி யத்தொ டெய்திநின்
றுடுத்தவா ளிறத்துகி லொழிந்த போன்றவே.

தடுத்த - (குறுக்கிட்டுத்) தடுப்பன போன்ற, தாள்-அடியையுடைய, நெடு தட கிரிகள் - உயர்ந்து அகன்ற மலைகள், தாழ்வரை அடுத்த நீர் ஒழிந்தன - அடிவாரத்தைச் சூழ்ந்து நின்ற நீர் வெள்ளம் நீங்கப் பெற்றன; அருவி தூங்கின - அருவிகள் மாத்திரம் விரைய வீழ்ந்தன; (இந்நிலையில் அவைகள்) எடுத்த நூல் உத்தரியத்தொடு எய்தி நின்று - தரித்த பருத்தி நூலாலாகிய வெள்ளிய மேலாடையோடு பொருந்தி

நின்று, உடுத்த வால் நிறம் துகில் ஒழிந்த - (தம்மைச்) சுற்றி நின்ற வெண்மை நிறம் கொண்ட ஆடை நீங்கப்பெற்றவற்றை, போன்ற - காணப் பெற்றன போன்ற, ஏ - ஆசை.

தற்குறிப்பேற்ற வணி, தாழ்வரைகளைச் சூழ்ந்த நீர் வெள்ளம் அரையாடையாகவும், மாலையில் ஒழுகுகின்ற அருவிகள் உத்தரியங்க ளாகவும் குறிக்கப்பெற்றன. மழை நின்ற அளவிலே அடி வெள்ளம் இன்றாக, அருவிகள் மட்டும் தணிந்து ஒழுகின. ஆகவே கிரிகள் அரையாடையின்றி உத்தரியம் மட்டும் அணியப் பெற்றனவாகக் கூறப் பட்டன; இங்கே அரையாடை நீர்வெள்ளம்; உத்தரீயம் - அருவி; உபமேயத்திற் கூறிய முறையை மாற்றி உபமானத்திற் கூறியது, எதிர் நிரனிறைப் பொருள்கோள்: தூங்குதல் - விரைய வீழ்தல் 'தூங்குநீ ரிமிழ்திரை' (நெய்தற்கலி. 4, 8); அருவி - வெண்மை. 'வாலியோ ன்னன வயங்கு வெள்ளருவி' (நற். 32); உத்தரியம் - மேலாடை. 'ஒளிதிக ழுத்தரீயம்' (பால: கடிமண; 60); இஃது உத்தராசங்கம் 'எனவும் படும். (பால. எழுச்சி: 17); வானிறத் துகில் - வான் போன்ற நீலத் துகிலெனினுமாம்;

பி - ம். 1. *தடித்தாள், தனிக்கிரி; தம்மிடம்,*
2. *நீராழ்ந்தென; அரிந்தன; அருவி தூங்குவ.* (107)

539. மேகமா மலைகளின் புறத்து வீதலான்
மாகமா றியாவையும் வாரி யற்றன
ஆகையாற் றகவிழந் தழிவி னன்பொருள்
போகவா றொழுகலான் செல்வம் போன்றவே.

மாகம் யாறு யாவையும் - மலையின் மேலிடத்தில் பெருகிய நதிகள் எல்லாம், மேகம் மா மலைகளின் புறத்து வீதலால் - கருமேகங் கள் மலைகளின் மேற்புறத்தினின்று கழிந்ததால், வாரி அற்றன - நீர்ப்பெருக் கொழிந்தன; ஆகையால்-ஆகையால், தகவு இழந்து-தகுதி பெற்று, அழிவு இல் நல் பொருள் போக - (பயன் உதவியன்றிக்) கழியாத நல்ல புண்ணியம் என்ற பொருள் நீங்க, ஆறு ஒழுகலான் - நன்னெறியில் நடவாதவனுடைய, செல்வம் - தனம் (குறைவதை), போன்ற - ஒத்தன.

மாகம் - மேலிடம்; மாக மாடத் தலையவர் வைகினர் - (பால. மிதிலைக்; 83): 'நதியின் பிழையன்று நறும்புன லின்மை' (அயோத். நகர்நீங்: 133); என்றபடி மாரி வீழ்ச்சி மலைப்புறத் திறந்ததால்.

ஆறுகளும் நீரற்றன. இது நல்ல புண்ணியங்கள் தீர்ந்துவிட, நல்நெறிக்கண் செல்லாதவன் செல்வம் குறைதற்கும் தீர்தற்கும் உவமை யாக்கப்பட்டது. புண்ணியம் இன்ருகவே பாவ நெறியைப் பின்பற்று வர் மக்கள் என்றும், பின்பற்றவே செல்வம் குறைந்து தேயும் என்றும் குறித்தவாரும். (ஒப்பு): குறள். 754, 755. 'புண்ணிய மென்றெரு பொருளென் னுழை நின்றும் போயதால்' (சுந்தர : 323); 'புண்ணியம் பயக்கின்றுழியுரிய தெப்பொருளே' (ஆரணிய. 1170); 'முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலான்' (சிலப். 45) என்ற விடத்து நுங்கட்கு முற்பட்டநல்வினை முடிந்த தாகலான் என்க; 'ஏனை வினையுலப்ப என்ருர் பிறரும்' என்ற உரை காண்க; 'ஆகூழாற் ருேன்றும் அசை வின்மை கைப்பொருள் போகூழாற் ருேன்று மடி' (குறள் ; 371); 'கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ்செல்வம் போக்கு மதுவிளிந் தற்று' (குறள் : 332). 'தகவுழந்து' என்ற பாடத்துக்கு இறைவன் அருளாலே முயற்சி செய்து என்க.

பி - ம். 1. மால் வரைகளின், வரைகளைப் ; மேயலான் ; வீசலான்.
2. மாகமாறெவைகளும், றெவையு மால் ; வாரி வார்ந்தன ; வாரி யார்ந்தன.
3. தகவுழிந்தழி ; தளவினன்பொருள், வண்பொருள்.
4. போகயாறெழிந்தவன், றெழிந்தயர். போலவே. (108)

540. கடந்திறந் தெழுகளி றனைய கார்முகில்
இடந்துறந் தேகலிற் பொலிந்த திந்துவும்
நடந்திற னவில்வுறு நங்கை மார்முகம்
படந்திறந் துருவலிற் பொலியும் பான்மைபோல்.

கடம் திறந்து எழுகளிறு அனைய - மதம் மடை மீறி எழுகின்ற ஆண் யானைகளை ஒத்திருந்த, கார்முகில் - கரிய மேகங்கள், இடம் துறந்து ஏகலின் - (தாம் நிலவிய) வான வீதியை நீங்கிச் சென்றதனுல், இந்துவும் - (அந்த மேகத்தால்) மறைப்புண்டிருந்த மதியும், படம்திறந்து உருவலின் - (மறைக்கும் பொருட்டு) இடப்பட்ட திரைச் சீலையை உரு வித்திறந்த வளவில், திறம்நடன் நவில்வுறு நங்கைமார் முகம் பொலி யும் பான்மை போல் - நாட்டியத்தைத் திறம்படச் செய்கின்ற நடன மாதர்களின் முகம் விளங்கும் தன்மைபோல், பொலிந்தது-விளங்கிற்று.

திரை உருவின வளவிலே நாட்டிய அரங்கில் நடனமாதின் முகம் காணப்படுவது போல, கருமேக மாகிய திரைவிலகின அளவில், மதி

காணப்பட்டது. திறன் நடம் - பலதிறப்பட்ட நாட்டிய வகைகள் எனினுமாம். நவிலுதல் - 'வண்பரி நவின்ற' (கலித். 125, 5). கடம் என்பதைக் களிற்றின் கதுப்பு அல்லது கன்னம் என்று கொண்டு, கன்னத்தைத் திறந்து வெளிப்படும் மதநீர் எனினுமாம் படம் - திரை. படமாடக் கோயில்' (திருமந். 1857); 'படஞ் செய்பந்தர்க்கல் மிசையதுவே' (புறம். 260); 'படமாட மவைபுக்கார்' (பால. வரைக் : 17 : 24). திறந்துருவலின் என்பதை விகுதி பிரித்துக் கூட்டி உருவித் திறத்தலின் என இயைக்க.

பி-ம். *1. கடாந் தெழு மதகளிறு, கடந்துறந்து, 2. திறந்தெழுதலின் 3. நடந்தன நவில்வுறு, நடந்தனே, நடந்திறனடிப்பினின், நவில்வுறு நங்கை, 4. படந் துறந்து, தொருவலின் ; பான்மையால்.* (109)

541. பாசிழை மடந்தையர் பகட்டு வெம்முலை
பூசிய சந்தனம் புழுகு குங்குமம்
மூசின முயங்குசே றுலர மொண்டுற
வீசிய நறும்பொடி விண்டு வாடையே.

பாசிழை மடந்தையர் - பசிய (பொனனுற்செய்து) அணிகள் அணிந்த மாதர்களின், பகடு வெம் முலை - யானையின் மத்தகத்தை யொத்த விரும்பத்தக்க தனங்களில், பூசிய (குழைத்து) அப்பிய, சந்த னம் - சந்தனக் குழம்பும், புழுகு - கத்தூரிக் கலவையும், குங்குமம் - குங்குமப்பூவின் கலவையும், மூசின - விரவியதனுல் ஆன, முயங்கு சேறு - தத்தம் கணவன் மாருடன் கலத்தற் பொருட்டு மேற்கொண்ட தொய்யிற் சேறு, உலர - வாடும்படி, விண்டு வாடை - மலைக்காற்று னது, நறும்பொடி - நறுமணமுள்ள மகரந்தத்தூள்களை, மொண்டு உற வீசிய - நிறைய முகந்துகொண்டு மிகுதியாக வீசிற்று. ஏ - அசை.

பகட்டு வெம்முலை - பெரிய வெம்மை வாய்ந்த முலையுமாம், பகடு - களிறு, இங்கே அதன் மருப்பைக் குறித்து நின்றது. பகட்டு - என்பதற்கு அழகின்பெருமை காட்டித் தளுக்குதல் எனினுமாம். மகளிர் கலவி முயக்கத்திற்காக மேற்கூறிய நறுமணக் குழம்புகள் பூசுதல் வழக்கம், மூசுதல் - மொய்த்தல், இங்கு நன்கு பூசுதல். முகந்து என்ற சொல்மொண்டு என மருவியது. (பெரியபு: திருநாட்டு. 8). விண்டு - மலை ; மதுரைக். 202. விண்டு காற்றுதலின், வாடைவிண்டு - வாடைக்

காற்று எனக் கோடலுமாம்; வாடை வடக்கிருந்து வீசுவது என்று காரணக்குறி. முயங்கு சேறு - குழை சேறு அல்லது கலவையுமாம்; பலவற்றைக் கலத்தலால் உண்டாவது.

பி - ம். 2. பூசிய மஞ்சளை, சாந்தினை, புலர்த்து, புலரக்குங்குமம்.
3. முழுகு சேறெழிய, முழங்குதேன்; றெழிய மொண்டற.
4. நறுமலர்; வெம்பியீட்டலால்;

இஃது ஓர் பிரதியில் இல்லை. (110)

542. மன்னவன் றலைமகன் வருத்த மாற்றுவான்
நன்னெடும் பருவம்வந் தணுகிற் றாகலால்
பொன்னினை நாடிய போது மென்பபோல்
அன்னமுந் திசைதிசை யகன்ற விண்ணின்வாய்.

மன்னவன் தலைமகன் வருத்தம் மாற்றுவான் - தயரதப்பேரரசனுடைய மூத்த மகனான இராமபிரானுடைய துயரத்தைப் போக்குதற்கு, நல் நெடு பருவம் வந்து, அணுகிற்று ஆகலால் - சிறந்த நீண்ட பருவ காலம் வந்து அடைந்தது ஆதலின், 'பொன்னினை நாடிய போதும் - பிராட்டியைத் தேடச் செல்வோம் (யாம்)', என்பபோல் - என்று சொல்லிக்கொண்டு புறப்பட்டன போல, அன்னமும் - அன்னப் பறவைகளும், விண்ணின்வாய் - வானத்தில், திசைதிசை அகன்ற - திக்குகள் தோறும் (பறந்து) சென்றன.

பெருமழைக் காலத்தில் குளிர் மிகுதியால் ஒடுங்கிக் கிடந்த அன்னங்கள், அம்மழை நின்ற அளவிலே வானத்தில் மகிழ்ந்து பறந்தன என்பதை வானரவீரர்கள் போன்றே சீதையைத் தேடும் முயற்சியிலீடுபட்டுப் பறந்தன வெனக் கூறினர். மக்களுடைய இன்பதுன்பங்களில் மக்கள் மட்டுமல்ல பகுத்தறிவற்ற பொருள்களும் ஈடுபடுவதாகச் செய்யுள் செய்தல் கவிமரபு; இராமபிரான் வனம் புகுவது கண்டு கிள்ளையும், பூவையும், பூசையும், ஆவும் அதன் கன்றும் அழுதன என்றதை அயோத்தியா காண்டம் நகர் நீங்கு படலம் 98, 100இல் காண்க. அதுபற்றி அன்னங்களும் அத்தேட்டத்தில் பங்குகொண்டனவாகக் கூறினர். வருத்தம் ஆற்றுவான் எனினுமாம். பொன் - இங்கே திருமகள் அவதாரமாகிய பிராட்டி. முன்னர் 474 பாடலில் மயில்கள் நாடியதையும் 477 பாடலில், குயில்கள் கூவிக் குரல் குறைந்ததையும் கூறினார். இங்கே அன்னம் நாடுவதைக் குறிக்கின்றார். மாரிக்காலத்தில் நீர் கலங்கி விடும் ஆதலால் அன்னங்கள் மானச வாவியிற் போய்த் தங்கியிருந்து பின் தாம் விரும்பும் இடங்களிற் செல்லும். தற்குறிப்பேற்றவணி,

பி. - ம். 1. மன்னவர் தலைமகன் ; அந்நெறிப், பருவமும், நன்னெறிப்.
2. பருவம் நணுகிற்று ; ஆதலால்.
3. நாடியே, நாடிடப்; போதும் மென்னப் போய்.
4. விண்ணவாய், விண்ணெலாம்.

இங்கு 'சரற்காலப்படலம் முற்றும்' என்று ஓர் பிரதியிற் குறிக்கப் பெற்றுள்ளது. ஓர்பிரதியில் இதுவும் அடுத்தபாடலும் பின்முன்னாகக் காணப்படுவன. (111)

543. தஞ்சிறை யொடுங்கின தழுவு மின்னலின்
நெஞ்சுறு மம்மரும் நினைப்பு நீடின
மஞ்சுறு நெடுமழை பிரித லான்மயில்
எஞ்சின மிதிலைநாட் டன்ன மென்னவே

மயில் - மயில்கள், மஞ்சு உறு நெடு மழை பிரிதலான் - மேகத்தினின்று வெளிப் போந்த மிகுதியான மழை அகலப் பெற்றதனால், தம் சிறை ஒடுங்கின - தம் தோகைகள் ஒடுங்கப் பெற்றன; தழுவும் இன்னலின் - பொருந்திய துன்பத்தால், நெஞ்சு உறு மம்மரும் - உள்ளத்திற் பொருந்திய மயக்கமும், நினைப்பும் - எண்ணங்களும், நீடின - வளர்ந்தன ; (இவ்வண்ணம்) மிதிலை நாட்டு அன்னம் என்ன - மிதிலை நாட்டில் அவதரித்த பிராட்டி போல, எஞ்சின - மகிழ்ச்சி குறையப் பெற்றன. ஏ - அசை.

கார்ப்பருவம் நீங்கிக் கூதிர்ப்பருவம் வரவே பிராட்டி மனம் தளர்ந்ததை இங்கே மயில்கள் ஒடுங்கியதற்கு உவமை கூறினர். 'மயில்கள் மேகங்களில்லாத ஆகாசத்தைப் பார்த்து, வனங்களில் தோகையாகிற அலங்காரங்களை விட்டு விட்டுப் பேடுகளிடம் சேராமல், அழகு நீங்கி மகிழ்ச்சியற்றுச் சிந்தனை மிக்கிருந்தன' என்பது முதனூலிற் கண்டது ; கிட்கிந்தா : 30, 34 ; மம்மர் - மயக்க வுணர்வு, 'மம்மர் அறுக்கும் மருந்து' (நாலடி: 132) ; 'மழுகிய திருமுக மம்மரோ டிறைஞ்சி' (பெருங் : உஞ்சைக் : 133). அன்னம் நடைபற்றி வந்த உவமை. 'அன்னமும் துயர்க் கடலடி வைத்தாளரோ'; (அயோத்தி: திருவடி ; 87) ; 309 ;

பி - ம். 1. ஒடுக்கின ; இன்னல.
2. நெஞ்சுறு பயனில ; நெஞ்சுறு மம்மலை ; நினைப்பு நீண்டன.
3. மஞ்சுறு நெடுமலை ; பிரிந்த மாமயில், விரிந்து மாமயில்,
4. அஞ்சின ; அன்னவே. அன்னவால்.

இஃது ஓர் பிரதியில் இல்லை. இதுமுதல் 10 பாடல்கள் ஓர் பிரதியில் இல்லை. (112)

**544.** வஞ்சனைத் தீவினை மறந்த மாதவர்
நெஞ்செனத் தெளிந்தநீர் நிரந்து தோன்றுவ
பஞ்செனச் சிவக்குமென் பாதப் பேதையர்
அஞ்சனக் கண்ணெனப் பிறழ்ந்த வாடன்மீன்.

வஞ்சனை தீவினை மறந்த மாதவர் நெஞ்சு என - வஞ்சனைக்கிடமான கொடிய செயல்களை நினையாத பெருந் தவமுனிவருடைய உள்ளம் என, நிரந்து தோன்றுவ தெளிந்த நீர் - (கலக்கமின்றிப்) பரந்து காணப்படுவன தெளிந்த நீர்; (அந்நீரில்), ஆடல் மீன் - துள்ளி விளையாடும் மீன்கள், பஞ்சு என சிவக்கும் மெல் பாதம் பேதையர் - செம்பஞ்சு என்ற அளவிலே சிவந்து காட்டும் மெல்லிய அடிகளையுடைய மகளிரின், அஞ்சனம் கண் என பிறழ்ந்த - மை தீட்டப்பெற்ற கண்கள் என்று சொல்லும்படி (முன்னும் பின்னும்) பிறழ்ந்தன.

மக்களாய்ப் பிறந்தார்க்கு மாயையின் வன்மையால் இயல்பாக உண்டாவது காமக் குரோதம் முதலியன; அவைகளைக் கல்வி கேள்விகளாலும் சற்சங்கத்தாலும் பிற நல்ல முறைகளாலும் ஒழித்தனர் என்பார், தீவினையற்ற வென்னுது மறந்த வென்றார். வஞ்சனை முதலியவற்றைச் சிறிதும் அறியாத முனிவர்களின் மனம், கல்வி கேள்விகளால் தெளிந்திருத்தலை, மழை நீக்கத்தின் பின்னர் நீர்நிலைகளில் தண்ணீர் கலக்க மற்றுத் தெளிந்ததற்கு உவமித்தார். இஃது ஓர் அரிய உவமை; 'தங்கள் நாயகரிற் றெய்வம் தவம் பிறிதிலையென் றெண்ணும் மங்கைமார் உள்ளம்போலத் தூயது; (பால; வேள்வி; 16) என்ற வரிகளை இங்கு ஒப்பு நோக்குக. பஞ்செனச் சிவக்கும் - செம்பஞ்சு என்ற கேட்ட மாத்திரத்திலேயே அது பூசப்பட்டதாக நினைந்து வருந்துவர் என்று மகளிரின் மென்மையைக் குறித்தார். பஞ்சின் அடிவைத்தல் என்று கேட்ட அளவிலேயே எனினுமாம். 'பஞ்செனச் சிவக்கு மென்காற் றேவி' (உயுத்த. விபீடண; 126); மீன் போன்று கண் பிறழ்ந்தன என்னுது கண்போன்றுமீன் பிறழ்ந்தன என்றமையின் எதிர்நிலை யுவமையணி.

பி. - ம். 3. வஞ்சனை தீவினை.
2. நெஞ்சுறும் மல நினைப்பு நீடின, நீரம் நீர் தொறும். நிறைந்து தோன்றுவ, தோற்றுவ
4. பிறழ்ந்த வாளமீன்,

545. ஊடிய மடந்தையர் வதன மொத்தன
தாடொறு மலர்ந்தன முதிர்ந்த தாமரை
கூடினர் துவரிதழ்க் கோலங் கொண்டன
சேடுறு நறுமுகை விரிந்த செங்கிடை.

தாள் தொறும் மலர்ந்தன - நாளந்தோறும் விரிந்தனவாய், முதிர்ந்த - முதிர்ச்சி பெற்ற, தாமரை - செந்தாமரை மலர்கள், ஊடிய மடந்தையர் வதனம் ஒத்தன - (தலைவரோடு) பிணங்கிய மகளிருடைய முகத்தைப் போன்று ஒருபுறம் சாய்ந்து ஒளி குறைந்தன; சேடு உறு நறுமுகை விரிந்த - உயர்ச்சி பெற்று விளங்கும் நறுமணமுள்ள அரும்புகள் விரியப்பெற்ற, செம் கிடை - செங்கிடை என்னும் நெட்டிச் செடிகள், கூடினர் துவர் இதழ் கோலம் கொண்டன - (தலைவ ரோடு) சேர்ந்து மகிழ்ச்சியுறும் மகளிரின் சிவந்த அதரம்போல விளங்கின.

கணவரிடம் ஊடல் கொண்ட மகளிருடைய முகங்கள் சிறிது சாய்ந்திருத்தல் போன்று, மலர்ந்து இரண்டொரு நாட்கள் ஆன தாமரைகள் காணப்பட்டன. ஊடலில் மகளிர் முகம் கோட்டி நிற்பதும் ஆடவர்க் கின்பம் விளைப்பதொன்று; 'ஊடுதல் காமத்துக் கின்பம் அதற் கின்பம் கூடி முயங்கப் பெறின்' (குறள். 1330) என்றுராகலின்; 'ஊடி னுர் முகத்துறுநறை யொருமுக முண்ணக், கூடினுர் முகக் களி நறை யொருமுகம் குடிப்ப' (சுந்தர: 1091) என்ற வரிகள் இங்கே ஒப்பு நோக்கத் தக்கன. செங்கிடை—நெட்டி; இது செந்நிறமாயினும், இயற்கைச் செந்நிறமும் தம்பலம் உட்கொண்டதால் உண்டான செம்மை சேர்ந்த இதழுக்கு உவமையாகாது. ஆகவேகலவியிற் கூடியதனுல் செயற்கைச் செந்நிறம் நீங்கப் பெற்ற மகளிருடைய இதழ்கள் போன்றன செங்கிடை என்றுர். கலவியில் மகளிர் கனிவாய் விளர்த்தல் இயல்பு. இதனைக் 'கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்புக் கண்ணு ரளிபின், வருங்கண் வரைமலர் சூட்ட வற்ருே மற்றவ் வான் சுனையே' (திருக்கோ. 70) என்ற திருக்கோவையாரில் வரும் தோழி கூற்றுன் உணர்க. துவரிதழ்-பவளம் போன்ற இதழுமாம். முன்னிரண் டடிகளில் இயற்கை மலர்ச்சியும், பின்னடிகளில், 'கோலம் கொண்ட' வென்று ஓர் காரியத்தின் பொருட்டு (இங்கே) மகளிருடைய இதழ்

களைப் பொருவவேண்டி வேடம் புனைதலையும் குறித்தவாறும். இயற்கை நிறத்தால் மகளிருடைய இதழ்கட் குவமையாக வியலாத செங்கிடை, கலவியால் செயற்கை நிறம் மாறிநின்ற இதழ்களையேனும் ஒத்து விளங்க நினைந்தன என்று கொள்க.

பி - ம். 1. வாடியமங்கையர்.
2. தாடொக மலர்ந்த, தாடொறுமுகிர்ந்த.
3. கூடின துவரிதழ்.
4. சேடுற நறுமுகை. (114)

546. கல்வியிற் றிகழ்கணக் காயர் கம்பலை
பல்விதச் சிருஅரெனப் பகர்வ வல்லரி
செல்லிடத் தல்லதொன் றுரைத்தல் செய்கலா
நல்லறி வாளரி னவிந்த நாவெலாம்.

கல்வியில் திகழ் – கல்விப் பயிற்சியால் விளங்கும், கணக்காயர் - பள்ளி ஆசிரியரின் கீழ், கம்பலை - பேரிரைச்சலோடு கல்வி கற்கின்ற, பல்விதச் சிருர் என - பல பண்புகளும் தோற்றமும் வாய்ந்த இளைஞர் கள் போல, பகர்வ - மாரிக்காலத்தில் கத்திக்கொண்டிருந்த, வல் அரி யாவும் - (குரலிடுவதில்) வல்ல தவளைகள் எல்லாம், செல் இடத்து அல்லது ஒன்று உரைத்தல் செய்கலா நல் அறிவாளரின் - (தமது சொற்கள்) பலிக்குமிடத் தல்லது பிற இடங்களில் ஒரு வார்த்தையும் சொல்லுதல் செய்யாத சிறந்த அறிஞர்களைப் போல, நா அவிந்த - (அந்தச் சரற்காலத்திலே மிகுதியும் இரைச்சலிடாமல்) வாயடங்கின.

பலபடியாகப் பேரிரைச்சல் இடுதற்கு ஆரம்பப் பள்ளிகளில் ஆசிரியன் பாடம் சொல்ல உடன் சொல்லும் சிருர்களையும், நாவ டக்கத் துடனிருத்தற்குக் கல்வி நிரம்பிய அறிஞரையும் உவமை கூறினர். கணக்கு ஆயர் - எண்ணும் எழுத்தும் ஆகிய நெடுங் கணக்கை ஆய்பவர், 'கற்றதூ உமின்றிக் கணக்காயர் பாடத்தால்' (நாலடி : 314). 'கணக்காயனர் மகனர் நக்கீரர்'. கம்பலை - பேரொலி. (பால. அகலிகை ; 12 ; அகம் : 296 ; (மணி; 3, 126 ; சிலப் : 6, 165) ; பல்விதச் சிருர் - வயது உருவம், சாதி, பண்பு இவற்ருன் வேறுபட்டு விளங்கும் இளைஞர்கள். அரி - தவளை. செல்லிடம்-பலிக்கு மிடம் ; செல்வாக்குப் பயிலக் கூறிய இடம். 'செல்லிடத்துக் காப்பான்' (குறள் : 301); 'செல்லும் சொல் வல்லான்' (அயோத் : நகர்நீ ; 140)

இச் செய்யுட் கருத்து வான்மீகத்தும் துளசிதாஸ் இராமாயணத்திலும் காணப்படும்.

பி - ம். 1. *கரைத்தாய* 2. *பரந்தபல்லரி, பகரவல்லரி, பகரும்வல்லரி.*

3. *றுரைத்தல் செய்தில.*

4. *நல்லுணர் வாளரின், நல்லுணர் வாளரால்; விதித்தாவெலாம்.*

**547.** செறிபுனற் பூந்துகி றிரைக்கை யாற்றிரைத்
துறுதகக் கான்மடுத் தோடி யோதநீர்
எறுழ்வலிக் கணவனை யெய்தி யாறெலாம்
முறுவலிக் கின்றன போன்ற முத்தெலாம்.

முத்து எலாம் - முத்துக்கள் எல்லாம். செறிபுனல் பூ துகில் யாறு எலாம் - அடர்ந்த நீராகிய அழகிய ஆடைகளைக் கொண்ட நதிகள் யாவும், திரை கையால் திரைத்து - அலைகளாகிய கரங்களால் சுருக்கிக் கொண்டு. உறுதக - பொருந்த, கால் மடுத்து - கால்களால் அணைத்து, ஓடி - பாய்ந்து, ஓதம் நீர் எறுழ்வலி கணவனை எய்தி - கடலாகிய மிக்க வலியுடைய மணவாளனை யடைந்து, (மகிழ்ச்சி மிகுதியால்) முறுவலிக்கின்றனபோன்ற - புன்னகை கொள்வனவற்றை ஒத்தன.

கடலுக்கு நதிபதி என்றும் சமுத்திர காமினி என்றும் பெயருண்டு. யாற்றின் அலையைக் கரங்களாகக் கூறுவதுண்டு. 'பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும் பொன்னரங்கம்' (திவ்ய பெருமாள் 1, 1). நதிகளாகிய மனைவிமார், தங்களுடைய நீராகிய பூந் துகில் விளங்கத் தமது அலைகளாகிய கரங்கொண்டு கணவன்மாரைத் தழுவிப் புன்னகை புரிவன போன்றன, முத்துக்கள் ஒளிர்வன என்பது கருத்து; ஓதநீர் - கடல்; 'ஓத நீர முதமும்' (சீவக. 1485); எறுழ்வலி - ஒரு பொருட் பன்மொழி. நதியை வடமொழி வாணர் பெண்ணுகக் கூறுவர். அங்குப் பால் வகுப்புப் பொருள்பற்றி யன்றிச் சொற்பற்றி யெழுவதாகலின். நதியை இங்கு ஆசிரியர் பொருள் பற்றிப் பெண்ணுக உருவகித்தார்.

பி - ம். 1. *செறிவுடை, செறியுடை.*

2. *உறுகணை, உறுத்தக, உறுதணை.*

4. *போன்ற முத்தினுல்.*

இஃது ஓர் பிரதியில் இல்லை. (116)

**548. சொன்னிறை கேள்வியிற் றொடர்ந்த மாந்தரின்**
**இன்னிறப் பசலையுற் றிருந்த மாதரின்**
**தன்னிறம் பயப்பய நீங்கித் தள்ளரும்**
**பொன்னிறம் பொருந்தின பூகத் தாறெலாம்.**

பூகம் தாறு எலாம் - பாக்குமரத்தின் குலைகள் அனைத்தும், சொல் நிறை - புகழ் பொதிந்த, கேள்வியின் - நூல் கேள்வியின் நிமித்தம், தொடர்ந்த - (நல்லாசிரியரை வேண்டி) அயல்நாட்டுக்குச் சென்ற. மாந்தரின் - தலைவரின், (பிரிவால்), இன் நிறம் பசலை உற்றிருந்த மாதரின் - இனிய பசலைநிறத்தை மேவிய மகளிர்போல, தம் நிறம் பயப்பய நீங்கி - தமது இயல்பான நிறம் மெல்ல மெல்ல நீங்கப் பெற்று, தள்ள அரும் பொன்நிறம் பொருந்தின - இகழ முடியாத பொன்னிறத்தைப் பெற்றன.

பாக்குமரத்தின் குலைகள் இளமையாக இருக்கும்போது பசிய நிறத்துடன் காணப்படும். முதிர முதிர அந்நிறம் நீங்கிப் பழுக்கும் காய் பொன்னிறமடையும்; இங்கே பசுமை நிறத்திற்குக் கணவரைப் பிரிந்த மகளிரின் மேனியில் காணப்படும் பசலையைக்குறித்தார்; பசலை என்பது கணவரைப் பிரிந்த மகளிர் உடலில் காணப்படும் ஓர் நிற வேறுபாடு 'முயக்கற்றம் பார்க்கும் பசப்பு' (குறள், 186), 'பொன் தெளித்தெழுதியன்ன பூம்புறப் பசலைமூழ்கி' (சீவக. 371). இன்னும் இதன் விவரத்தைத் திருக்குறள் காமத்துப்பால் 'பசப்புறுபருவரல்' என்ற அதிகாரத்திற் காண்க. சொன்னிறை கேள்வி - சொற்கள் நிறைந்த நூற் கேள்விகளைத் தொடர்ந்து கேட்ட மாந்தரின் என்றும் கொள்ளலாம். நல்ல கேள்வியால் அஞ்ஞானம் நீங்கப்பெற்றுப் பொன் போன்ற ஞானம் வரப்பெற்றவர் போன்று என்க. இன்னிறப்பசலை யென்றதுகொண்டு, அந்தப் பசலையும் வெறுக்கத்தகாததாய் இனிமை பயக்கும் என்றவாறு. இப்பொருளில் தன்னிறம் என்பதற்குத் தன்னிடம் அநாதியாய்ப் பொருந்தி நின்ற அவித்தை என்று பொருள்; அது நீங்கிப் பொன்னிறம் பெறுதலாவது, பிரம்ம ஞானம் அடைதல், எனக் கொள்க. பயப்பய; இது பைப்பய என்றும் வழங்கும். தள்ளரும் - இகழ்தற்கு அல்லது புறக்கணித்தற்கரிய; 'தள்ளரிய பெருநீதித் தனியாறு' (பால. குலமுறை:23). பூகத்தாறெலாம் தன்னிறம் பன்மையொருமை மயக்கம்.

பி - ம். 1. தொன்னிறை, சொன்னெறி; றறந்த மாந்தரால், மைந்தரால்.
2. இன்னுறச்.
3. பைபய; நீங்கித்தன்னிறு, தன்னரும்
4. பொலிந்தன, பொருந்திய

இஃது ஓர் பிரதியில் இல்லை. (117)

முதலைகள் வெயிலில் உறங்குதல்

549. பயின்றுடல் குளிர்ப்பவும் பழன நீத்தவண்
இயன்றில விளவெயி லெழுது மெய்யன
வயின்றொறும் வயின்றொரு மடித்த வாயன
துயின்றன விடங்கர்மாத் தடங்க டோறுமே.

இடங்கர் மா - முதலைகளாகிய பிராணிகள், பயின்று (தாம் பன்னாளாக நீரில்) பொருந்தி, உடல் குளிர்ப்பவும் - உடம்பு குளிர்ச்சி யடைந்ததனால், அவண் இயன்றில - (தமக்குரிய) அந்த (ஆழநீர்க் கிடங்குகளில்) உலவாமல், பழனம் நீத்து - குளங்களை விடுத்து, இளவெயில் எழுதும் மெய்யன - இளஞ்சூரிய ஒளி (உடம்பின் மீது) எழுதினாற் போன்ற உடம்பை யுடையன வாமாறு, தடங்கள் தோறும் - தடாகங்களின் கரைகளில் எல்லாம், வயின் தொறும் வயின் தொறும் - இடந்தோறும் இடம் தோறும், மடித்த வாயன துயின்றன - வாயை மூடிக் கொண்டு உறங்கின.

குளிர் மிக்க நிலையில் முதலைகள் தடாகக் கரைகளில் வெயில் காய்தல் இயல்பு. இடங்கர் - முதலை. 'கொடுந்தாள் முதலையு மிடங்கரும் கராமும்' (குறிஞ்சி. 257) என்ற இடத்து நச்சினார்க்கினியர் இவை மூன்றும் சாதி விசேடம் என்றது காண்க. 'உரவுக் களிறு', 'கரக்கு மிடங்கர்' (மலைபடு: 211) ; சிலப்பதிகாரம் பதிகம் அடியார்க்கு நல்லார் உரை இங்குக் காணத்தகும். இறையனா ரகப்பொருள் உரையில் 'நெய்தற்கு மா, சுறவும் முதலையும்' என்றார். இடங்கர் மா என்று நூல்களில் வழங்கக் காண்கின்றோம். (பால: நகர : 17, 18); (உயுத்த. விபீடண ; 113) ; என்றன காண்க. மூன்றுமடிமுற்று மோனை.

பி - ம். 1. *பானளித்தவண், பாணி நீத்தவண்;*

2. *இயன்றன ; எய்ந்த; எழுந்து, அழுந்து ; மெய்யின.*

3. *மடிந்தவாயின.*

4. *தடங்களெய்றியே ; துன்னியே, துறைகளேறியே.*

இஃது ஓர் பிரதியில் இல்லை, (118)

550. கொஞ்சுறுங் கிளிநெடுங் குதலை கூடின
அஞ்சிறை யறுபத வளக வோளிய
எஞ்சலில் குழையன விடைநு டங்குவ
வஞ்சிகள் பொலிந்தன மகளிர் மானவே.

வஞ்சிகள் - வஞ்சிக் கொடிகள், கொஞ்சுறும் கிளி நெடு குதலை கூடின - கொஞ்சுதல் பொருந்திய கிளிகளின் நீண்ட மழலைமொழிகள் (தம்மிடத்தே) பொருந்தப்பெற்றனவும், அம்சிறை அறுபதம் அளகம் ஒளிய-(தம்மிடம் மொய்க்கின்ற) அழகிய சிறகுகளையுடைய வண்டுகளாகிய கூந்தலின் வரிசையையுடையனவும், எஞ்சல் இல்குழையன - குறைவற்ற தளிர்களையுடையனவும், (ஒளியிலும் மதிப்பிலும் குறைவிலாத குழை என்னும் காதணியையுடையனவும்) இடைநுடங்குவ - ஒல்கி அசைவனவும் (இடை ஒல்கி ஓசியப் பெற்றனவு மாகி), மகளிர் மான - மாதர்களைப்போல், பொலிந்தன - விளங்கின. ஏ - அசை.

வஞ்சிக்கொடிகள் மகளிர்போன்றன என்றார். வஞ்சிக்கொடிகளிலும் கொஞ்சுறு குதலைக்கிளிகள் இருந்தன; வஞ்சிபோன்ற மாதரிடமும் குதலைச் சொற்கள் உண்டு. அறுபதம் மொய்ப்பன வஞ்சிக்கொடி, அளகம் என்ற இரண்டிற்கும் கொள்க. குழைகள் வஞ்சிக்கு ஏற்றும்போது தழைகள்; மகளிர்க்கு ஏற்றும்போது காதணிகள். அறுபதம் - வண்டு; ஆறுகால்களையுடையது: என, பண்புத்தொகை அன்மொழி. உவமையணி.

பி - ம். 1. நறுங்குதலை; கூட்டின
2. அறுபதத்தளக வோதியர்,
3. குழையின, குழையென 4. மகளிர் மாலைபோல், மாலையே.

இஃது ஓர் பிரதியில் இல்லை. (119)

551. மழைபடப் பொதுளிய மருதத் தாமரை
தழைபடப் பேரிலைப் புரையிற் றங்குவ
விழைபடப் பெடையொடு மெள்ள நள்ளிகள்
புழையடைத் தொடுங்கின பொச்சை மாக்கள்போல்.

மழை பட பொதுளிய - மழை பெய்ததனால் தழைத்த, மருதம் தாமரை - மருத நிலத்திலுள்ள தாமரைக் கொடிகள், தழைபட - தழைகள் மிகப் பொருந்த, பேர் இலை புரையில் தங்குவ - (அவற்றின்) பெரிய இலையின் உள்ளே உறைவனவான, நள்ளிகள் - ஆண் நண்டுகள், விழைபட பெடையொடும் - விருப்பம் மிக பெண் நண்டுகளுடனே,

பொச்சை மாக்கள் போல் - குற்றம் புரிந்தவர்களைப் போல, புழை மெள்ள அடைத்து ஒடுங்கின - தமது வளையின் வாயிலைச் சேற்றால் மெல்ல அடைத்துக்கொண்டு, அதனுள்ளே பதுங்கின.

ஆண் பெண் நண்டுகள் தாம் தங்கியிருக்கும் புழையை அடைத்துக் கொண்டு உள்ளே பதுங்கியதற்குக் குற்றம் புரிந்த மாக்கள் பிறர் காண்பதற் கஞ்சிப் பதுங்கியதை உவமித்தார். வச்சை மாக்கள் என்ற பாடத்திற்கு உலோபிகள் என்று பொருள் கொள்க. பொதுளிய - தழைத்த; 'இருள்படப் பொதுளிய' (திருமுருகு. 10). வச்சை மாக்கள் என்ற பாடம் கொண்டால் மோனை யின்றாகலின் பொச்சை மாக்கள் என்ற பாடமே தழுவப்பட்டது. புரையிற் றங்குவ என்ற இடத்தில் புரை சிலேடையாகப் புழை என்றும், குற்றம் என்றும் பொருள் படுதல் காண்க. புரையில் தங்குவன - இலையின் உள்ளே பொருந்துவன. பொச்சை - குற்றம். 'பொச்சையர் கடனனி பொருமல் கொள்வதே' (கந்தபு. தருமகோ. 19);

பி - ம். 1. *பொழிர்தழி ; மலர்ந்த தாமரை*
2. *புரையுட்டங்குவ, டங்கிய, டாங்குவ.*
3. *இழைபடு, உழையுறு, இழைவுடை, விழைவுடை மெல்ல, வெள்ள நள்ளிகள் ;*
4. *புழையிடத், வழையிடத் தொடுங்கின வஞ்சமாக்கள், வச்சை மாக்கள்.* (120)

" மழைபடப் பொதுளிய மலர்ந்த தாமரை
புழைபடப் பேரிலைப் புரையி லன்னங்கள்
விழைவுடைப் பெடையொடும் மேவ நள்ளிகள்
புழையிடத் தொடுங்கின பொச்சை மாக்கள்போல் "

என்று இச்செய்யுள் ஓர் பிரதியிற் காணப்படுகின்றது.

552. அளித்தன முத்தினந் தோற்ப வானனம்
வெளித்தெதிர் விழிக்கவும் வெள்கி மேன்மையால்
ஒளித்தன வாமென வொடுங்கு கண்ணன
குளித்தன மண்ணிடைக் கூன னந்தெலாம்.

கூனல் நந்து எலாம் - முதுகு வளைந்த நத்தைகள் யாவும், அளித்தன முத்து இனம் தோற்ப - தாம் ஈன்ற முத்துக்கள் (மாதர்களின் பற்களுக்கு ஒப்பாகாமல்) தோற்றுவிட்டமையால், ஆனனம் - அம் மகளிருடைய முகத்தின், எதிர் - நேராக, வெளித்து - வெளிப்பட்டு, விழிக்

கவும் வெள்கி - காணவும் நாணி, மேன்மையால் ஒளித்தன ஆம் என - தமது மேன்மையான பெருந்தன்மையால் ஒளித்தன வென்று சொல்லுமாறு, ஒடுங்கு கண்ணன - ஒடுங்கிய கண்களை யுடையன வாய், மண்ணிடை குளித்தன - சேற்றில் மூழ்கின.

நத்தைகள் இயல்பாக மண்ணில் மூழ்கியதற்குத் தாம் ஈன்ற முத்துக்கள் மகளிருடைய பற்களுக்குத் தோற்றதனுல், அவர்கள் முன்பு நிற்க நாணி மறைந்தனவெனக் கூறியது ஏதுத் தற்குறிப்பேற்ற வணி. முத்துப் பிறக்கு மிடங்களில் நத்து ஒன்று. 'நத்தின் வயிற்றில் முத்துப் பிறக்கும்' என்ற உலகியற் பழமொழியும் காண்க, 'நண்டு சிப்பி வேய் கதலி' என்ற செய்யுளையும் காண்க. நத்து - நந்து என மெலிந்தது. நத்து - சங்கு. 'அஞ்சிவணத்தின் முத்து' (சுந்தர: 174); குளித்தல் - மூழ்குதல். 'நீருட் குளித்து முயலாகும்' (நாலடி, 90).

பி. - ம். 1. *முத்தினர் தோற்க, தோற்ற; மானனுர், மாகநாம். மானநாம், தொக்க வானளம்.*

2. *விழிக்கெதிர், வெளுத்தெதிர்; விழிக்கலம், விலக்கலம்.*

3. *ஒளித்தவராமென; ஒங்கு நீளிடை.*

4. *வானிறக் கூளனந்தெலாம், குளித்தன பண்ணையங் கூனனந்து.*

(121)

கார்காலப் படலம் முற்றும்.

---

# 10. கிட்கிந்தைப் படலம்

---

இது, கிட்கிந்தை நகரில் நடந்த செய்திகளைக் கூறும் பாகம் என விரியும். மாரிக்காலம் கடந்ததும் தான் வாக்களித்தபடி சுக்கிரீவன் சேனை திரட்டி வந்திலனாக, இராமபிரான் சினந்து, இலக்குவனைக் கிட்கிந்தை சென்று, நிகழ்ச்சிகளை அறிந்து வருமாறு கட்டளையிட, அவ்விளைய வீரன் சென்றது முதல் சுக்கிரீவன் இராமபிரானிடம் வந்து சமாதானம் கூறியது ஈறாக நிகழ்ந்த செய்திகள் இப்படலத்தில் விரித்து உரைக்கப்பெறுகின்றன.

இராமபிரான் சினந்து இலக்குவனைக் கிட்கிந்தைக்கனுப்புதல்

553. அன்ன கால மகலு மளவினில்
முன்னவீர னிளவலை முன்பினோய்
சொன்ன வெல்லையி னூங்கினும் தூங்கினன்
மன்னன் வந்தில னென்செய்த வாறரோ.

அன்ன காலம் - அத்தகைய பருவ காலம், அகலும் அளவினில் - நீங்கின அளவில், முன் அவ் வீரன் - யாவராலும் (சிறப்பாகக்) கருதப்படுகின்ற அந்த வீரனாகிய இராமபிரான், இளவலை - (தம்பியான) இலக்குவனை நோக்கி, ' முன்பினோய் - வலிமை மிக்கவனே! சொன்ன எல்லையின் ஊங்கினும் - (முன்னர் நான்) அறுதியிட்டுரைத்த நான்கு மாதத் தவணை கடந்த பின்னும், மன்னன் - அந்த சுக்கிரீவ மன்னன், (கவனம் இல்லாது) தூங்கினன் - தாமதித்தவனாய், வந்திலன்- (இங்குச் சொன்ன சொற்படி) வரவில்லை ; செய்த ஆறு என் - (அவன் வாக்கை நிறைவேற்றுதல்) செய்த விதம் எவ்வாறுள்ளது ? அரோ - ஈற்றசை,

இது முதல் எட்டுக் கவிகள் இராமபிரான் சுக்கிரீவனிடம் வெகுண்டு இலக்குவனிடம் கூறியவை ; முன்னுதல் - கருதுதல். ' முன்னிய திசையே ' (மலைபடு-94); ' முன்னிய வினை ' (திருமுரு. 66 28-41). முன்பினோய்-இலக்குவன் வன்மையை அயோத்தி, கிளைகண்டு; 28-41. உயுத்த. இந்திரசித்து. 4. என்ற இடங்களில் நோக்குக. தூங்குதல் காலம் நீட்டித்தல் ; குறள். 383, 672. இராமபிரான் சொல்லைப் போற்றாமை, அவன் கூறியபடி நடவாமை, செய்ந்நன்றி மறந்தமை என்ற குற்றங்கள் சுக்கிரீவனிடம் இருந்தமைபற்றி, 'என் செய்தவாறு ' என்றான். ஊங்கு - மேலும் என்னும் பொருளது.

பி - ம். 1. இன்னகால ; மகன்றன அகல, வின்புறும், வன்புறும் ;
2. முன்னே வீர, மொய்ம்பிரேய் ; நோக்கிமுன்.
3. சொன்ன வேலையி ; தூங்குற்று.
4. என் செய்யு மாறரோ. (1)

554. பெறல ருந்திருப் பெற்றுத விப்பெரும்
திறனி னைந்திலன் சீர்மையிற் றீர்ந்தனன்
அறம றந்தன னன்பு கிடக்கநம்
மறன றிந்திலன் வாழ்வின் மயங்கினான்.

'(அச்சுக்கிரீவன்) பெறல் அரு திரு பெற்று - (எளிதில்) பெறுதற் கருமையான அரசாட்சிச் செல்வத்தை (நம் உதவியால்) அடைந்து, உதவி பெரும் திறல் நினைந்திலன் - உதவியின் பெருந் தகுதியை எண்ணவில்லை ; (ஆகவே), சீர்மையின் தீர்ந்தனன் - சிறந்த ஒழுக்கத்தி னின்று பிறழ்ந்தான் ; அறம் மறந்தனன் - செய்ந்நன்றி போற்றலும், சொன்ன சொல்லைக் காத்தலும் ஆகிய தருமங்களை மறந்தவனான அவன், அன்பு கிடக்க (அவனுக்குச் செய்த) அன்பை மறந்தது ஒருபுறம் இருக்கட்டும், நம் மறன் அறிந்திலன் - நமது வீரத்தைத் தெரிந்துகொள்ளவில்லை; வாழ்வின் மயங்கினான் - (அரசியல் வாழ்வில்) மயங்கிக் கிடக்கின்றான்.

முன் பாட்டில், தூங்கினன் மன்னன் என்றார் ; இதில் அவன் தூங் கிய விதத்தைக் கூறுகின்றார். வாலி மனைவியைத்தான் அடையப்பெற்ற தும், 'கிட்கிந்தை அரசியலைப்பெற்றதும் என்ற இரண்டையும், 'பெற லருந்திருப் பெற்றபின்' என்பது குறிக்கும். 'உதவப்பெறுந்திறன்' என்ற பாடத்திற்கு, உதவி செய்யப்பெற்றதான நன்மையை நினைந்தி லன் எனக. உதவிப்பெருந்திறன் ; 'செய்யாமற் செய்தவுதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது' என்றபடி. பெற்றது. மறம் - மறன் - ஈற்றுப்போலி.

பி - ம். 1. பெற்றுறுதி, பெற்றுதவப்.
2. திறலநிந்திலன் ; தீர்ந்தவன் 3. அறனிறந்தனன் ; அறனறிந் திலன் அன்புகிடைக்க.
4. மறனினைந்திலன் ; (2)

555. நன்றி கொன்றரு நட்பினை நாரறுத்
தொன்று மெய்ம்மை சிதைத்துரை பொய்த்துளான்
கொன்று நீக்குதல் குற்றத்து நீங்குமால்
சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்

'நன்றி கொன்று - (தனக்கு ஒருவன் செய்த) உதவியைக் கெடுத்து (அதாவது அதனை மறந்து), அரு நட்பினை நார் அறுத்து - அருமையாகப் பெற்ற நட்பின் பிணிப்பை அழித்து, ஒன்றும் மெய்ம்மை சிதைத்து - (யாவர்க்கும் ஒப்பப்) பொருந்தும் உண்மையையும் பழுதாக்கி, உரை பொய்த்துளான் - வாக்குப் பிறழ்ந்தவனை, கொன்று நீக்குதல் - கொலை செய்து அகற்றுதல், குற்றத்து நீங்கும் - குற்றமுள்ள செயல்களிற் சேராது; ஆல் - ஆதலால், சென்று அவன் சிந்தையை தேர்குவாய் - (அவனது எண்ணம் இன்னதென்று), நீ சென்று தெரிந்து வருக. மற்று, அசை.

நன்றி மறத்தல் பெரும் பாவம் ஆதலின் அதனைக் கொன்று என்று கூறினர். 'உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள். 110). நட்பின் நாரினை அறுத்து என்க. நார் - பாசம் (கயிறு) : 'நட்பு நாரற்றன' (நாலடி, 12). நார் நட்பினை அறுத்து என மொழி மாற்றி அன்புபற்றி நிகழும் நட்பினை ஒழித்து எனினுமாம்'; நலத்தின்கண் நாரின்மை' (குறள். 958); மெய்ம்மை சிதைத்து, கீழ் 'உன்னடியருக் கடியன் யான்' 177; 'மயர்வற நாடியென் வலியுங் காட்டியுன் உயர் புகழ்த் தேவியை யுதவற் பாலனுல்' (204); 'தேண்டியவ் வரக்கனைத் திருகித் தேவியைக் காண்டியா னிவ்வழிக் கொணருங் கைப்பணி' (206); 'மன்னுடைச் சிறுகுறை முடித்த லீண்டொரீஇப் பின்னுடைத் தாயினு மாக பேதுறும், மின்னிடைச் சனகியை மீட்டு மீடுமால்' (210) என்று சுக்கிரீவன் கூறிய வார்த்தைகள் உண்மையானவை தாமா, இன்றேல் பகட்டுச் சொற்களா, அவனைத் தண்டிப்பதற்குமுன் உண்மை தெரிந்து வருவாயாக என்று இலக்குவனை நோக்கி இராமபிரான் கூறினன். அவன் சொற்கள் பொய்யாமெனில், உண்மை சிதையும்; சிதையவே அன்பு கெடும், அன்பு காரணமாக எழுந்த நட்பு அழியும், நட்பின் காரணமாகச் செய்யப்பட்ட உதவியையும் மறக்க நேரும். ஆகவே இத்துணைக் குற்றங்களைப் புரிந்தவனைக் கொன்றொழித்தலே முறையென்று மொழிந்தான் இராமபிரான். நீக்குதல் - இவ்வுலகினின்றும் வெளியேற்றுதல்; குற்றத்து நீங்குதல்: குற்றமில்லாப் புனிதச் செயலே ஆகும் என்க. நட்பினை நாரறுத்து - அந்தரங்கமான சிநேகத்தைக் கெடுத்து என்பது பழையவுரை.

பா - ம். 1. நன்றி செய்தவர், நன்றிகொன்று நம் நட்பொடு, நட்பினின் வேரறுத்து.

2. தொன்று மேன்மை; பொய்த்தளார்க், பொய்த்தளோர்க்.

3. குற்றத்திற்றங்குமோ, குற்றமற்றில்லையால். (3)

இதன்பின் ஊரும் என்ற பாடல் சில பிரதிகளில் காணப்படுகிறது.

556. வெம்பு கண்டகர் விண்புக வேரறுத்
திம்பர் நல்லறஞ் செய்ய வெடுத்தவில்
கொம்பு முண்டருங் கூற்றமு முண்டெங்கள்
அம்பு முண்டென்று சொல்லுநம் மாணையே

'வெம்பு கண்டகர் விண்புக வேர் அறுத்து - வெம்மை மிகுந்த துட்டர்கள் (போரில் மடிந்து) வீர சுவர்க்கம் அடைய (அவர்களை) அடியோடு ஒழித்து, இம்பர் நல் அறம் செய்ய - இவ்வுலகத்தில் நல்ல தருமத்தை நிறுவும் பொருட்டு, எடுத்த - (நாம்) கைக்கொண்ட, வில் கொம்பும் - வில்லின் தண்டும், உண்டு - உள்ளது; அருங் கூற்றமும் உண்டு - (எவராலும் தடுத்தற்கு) அருமையான யமனும் உள்ளான்; எங்கள் அம்பும் உண்டு - உங்களை யெல்லாம் கொல்ல வல்ல அம்புகளும் உள்ளன (எம்மிடத்து)'; என்று - என்று, நம் ஆணை சொல்லு - நமது சபதம் அல்லது பிரதிக்ஞை என்பதை கட்டளையாகச் (சுக்கிரீவனிடம்) சொல்வாயாக. ஏ - அசை.

வெம்பு கண்டகர் என்றது முன்னரே கொன்றொழித்த விராதன் முதலிய அரக்கர்களையும், வாலியையும் என்க. இங்கே அவதாரத்தின் நோக்கம் குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம். 'பரித் ராணாய சாதூநாம் விநாசயச துஷ்கிருதாம், தர்ம சம்ஸ்தாப நார்த்தாய சம்பவாமி யுகே யுகே' என்ற கீதா வாக்கியம் இங்கே குறிக்கொள்ளத் தக்கது. 'துணி பொருள் துணிவிற் றூக்கி அறநெறி நிறுத்தவந்த திறை' (360) என்ற வாலி கூற்றும், 'மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர் நிசரத கணைகளால் நீறு செய்துமே' (பால. திருவவதார: 22) என்ற திருமாலின் கூற்றும், 'அரக்கரை யாசறக் கொன்று நல்லறம், புரக்க வந்தனமெனப் பெருமை பூண்ட நாம், இரக்கமிலிவரையே துணைக் கொண் டேகலால்' (உயுத்த: விபீடண. 69) என்ற சுக்கிரீவன் கூற்றும் இங்கே காணத்தகும்; சுந்தர. 1118ல் அநுமன் கூறியதும் காண்க. கண்டகர் - வடசொல்; முட்போலும் கொடியர் என்று பொருள்படும். விண்புக; போர்க்களத்தில் விழுப்புண்பட்டிறந்தோர் புகும் விண்ணுலகம் வீர

சுவர்க்கம் எனப்படும். வேரறுத்தல், அடியோடு களைதல்; ஆரறத்தினொ டன்றிநின் ருரவர் வேரறுப்பன்' (ஆரணிய: 139) என்பது இராமன் கூற்று. 'வாலி மாண்டு எந்த வழியாற் போனானோ அந்த வழி எங்கும் போய்விட வில்லை. சொன்ன சொல்லில் நிலைநில்லும், வாலியின் வழியைத் தொடர்ந்துபோக வேண்டாம். ஸத்யத்தைத் தவறியிருக்கின்ற உம்மைப் பந்துக்க ளோடுங் கூடக் கொல்லப் போகிறேன்' என்று இராமபிரான் இலக்குவனிடம் கூறியதாக முதனூல் கூறும். 'உங்க ளம்பும் என்ற பாடத்திற்கு, 'வாலியைக் கொன்ற கணையும்' என்க.

பி-ம். 4. உங்களம்பும்

இஃது ஓர் பிரதியில் இல்லை. (4)

557. நஞ்ச மன்ன வரைநலிந் தாலது
வஞ்ச மன்று மனுவழக் காதலான்
அஞ்சி லம்பதி லொன்றறி யாதவன்
நெஞ்சி னின்று நிலாவ நிறுத்துவாய்

'நஞ்சம் அன்னவரை நலிந்தால் - விடம் போன்ற தீயவர்களை ஒறுத்தால், அது - அச் செயல், மனு வழக்கு ஆதலால் - மனு நூலில் கூறப்பட்ட நீதியாகலின், வஞ்சம் அன்று - வஞ்சனைச் செயலாகாது; (இதனை) அஞ்சில் அம்பதில் ஒன்று அறியாதவன் - ஐந்து 'வயதிலும், ஐம்பது வயதிலும் செய்யத் தக்கது இன்னது என்று அறியாதவனான அச் சுக்கிரீவனுடைய, நெஞ்சில் நின்று நிலாவ - மனத்தில் நிலை பெற்று விளங்க, நிறுத்துவாய் - செய்வாயாக.

நஞ்சம் மன்னவரை எனினுமாம். பயிர்களின் வளர்ச்சியைத் தடை செய்யும் களைகளை அழித்தல் தவறாகாது. அதுபோன்றே கொடியவரைக் கொன்றொழிப்பதும்; 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங் கூழ்களை கட்டதனொடு நேர்' (குறள். 550); இதனைச் சுக்கிரீவன் மனம் கொள்ளச் செய்து அவனுடைய முனைப்பை ஒழிப்பாயாக. இந்த நீதி, மனுநூலில் இராஜ தருமம் கூறுமிடத்திற் கூறப்பட்டுள்ளது. இனி, மனு வழக்கு, சூரியன் மரபின் குல முதல்வனான மனுவென்னும் அரசன் முத லாக வழங்கி வரும் நீதி என்றுமாம். 'ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யாரறியாதார்' (பால. குலமுறை: 1) என்று மனு, குலமுதல்வனாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. இளமையில் ஒன்றும் அறியாதது போலவே முதுமையினும் ஒன்றும் அறிந்திலன். 'அஞ்சி லறியாதா ரைம்பதிலும் தாமறியா, ரென்சொ லெனக்கோ எதிராசா - நெஞ்ச, முளதா

லொழிந்தவற்றை யேயுகக்க வின்றும், அநுதாப மற்றிருக்கையால்' என்பது ஸ்ரீ மணவாள மாமுனிகள் வாக்கு. ஐந்து - அஞ்சு; போலி. இனி மூன்றுமடிக்குப் பலர் பலவாறு பொருள் கொள்வர். 'அம் சிலம்பதில் ஒன்று, அழகிய மலைப்பக்கத்தில் உள்ள ஓர் குரங்கரசன். அறியாதவன் - ஒன்றும் அறியாதவன் என்பன போன்றன காண்க.

பி - ம். 1. நஞ்சின் மன்னவரை, நஞ்செனன்னவரை.
2. வஞ்சமல்ல, வஞ்சமென்னுர்.
3. அஞ்சிலன், அஞ்சியல்ல தொன்முரறிவாரவர்
4. நெஞ்சினின்ற நினைவை; நெஞ்சினின்றதலாவி.

இதன்பின் 'இன்னநாடுது' என்பது ஓர் பிரதியில் உள்ளது. (5)

558. ஊரு மாளு மரசுநுஞ் சுற்றமும்
நீரு மாளுதீ ரேயெனில் நேர்ந்தநாள்
வாரும் வார லிரேயெனின் வாநரப்
பேரு மாளு மெனும்பொருள் பேசுவாய்

'நீரும் நும் சுற்றமும் - நீங்களும் உங்கள் (அரசியற் சுற்றமும்), ஆளும் - ஆட்சி புரியும், ஊரும் - கிட்கிந்தா நகரும், அரசும் - அரசாட்சியும், ஆளுதிரேஎனில் - (தொடர்ந்து) ஆட்சிபுரிய விரும்புவீராகில், நேர்ந்த நாள் - (நீங்கள் சீதையைத் தேடி என் குறை முடித்தற்காக) ஏற்றுக்கொண்ட இந்தச் சரற்கால முடிவில், வாரும் - (எம்பக்கல்) வாருங்கள்; வாரலிரே எனின் - வாராம லிருப்பீரேல், வாநரம் பேரும் மாளும் - வாநரம் என்ற பேர் நாமமு மில்லாதபடி, எல்லாக் குரங்குகளும் அழிந்துபடும், எனும் - என்கின்ற, பொருள் - கருத்தை, பேசுவாய் - (சுக்கிரீவன் முதலானோரிடம்) நீ சொல்லுவாயாக.

இனி நும் ஊரையும் நும் குடிகளையும், நும் அரசினையும், நீரும் நும் சுற்றமும் ஆள விரும்புவீராகில் எனினுமாம். சுற்றம் - அரசியற் சுற்றமும் பிற உறவினருமாம். நேர்தல் - இணங்குதல். பேரும் மாளும் - 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெடக் கெடும் நோய்' (குறள். 360) என்ற குறளினையும், 'பெயருங் கூடக் கெடும் இக் குற்றங்கள் மூன்றும் காட்டுத் தீமுன்னர்ப் பஞ்சுத் துய்ப்போலு மாகலின்' என்ற அதன் உரையும் காண்க; 'நரரொடு குரங்கை நாமறக் கொன்றுதின் றல்லதோ ரெண்ணம் கூடுமோ' (உயுத்த, இராவணன் மந்திர. 41); 'தேவென்பதோர் பேரில்லை' (தக்க. 559)

பி - ம். 1. அரசமுன்

2. வாமுநிரென்பது, மாறுநிரென்பது, நேர்நிரேல், நேர்ந்தநீர், நேர்ந்திரு; னெங்கள்பால்

3. வாரவிராமெனில், வாரீர்களாமெனில்

4. மெனுமுரை பேசுவாய். (6)

559. இன்னு நாடுது மிங்கிவர்க் கும்வலி
துன்னி ஞரை யெனத்துணிந் தாரெனின்
உன்னை யொப்ப வுலகொரு மூன்றினும்
நின்ன லாற்பிற ரின்மை நிகழ்த்துவாய்

'இங்கு - இவ்விடத்தில், இன்னும் இவர்க்கும் வலி துன்னிஞரை நாடுதும் - மற்றும் இவ்விராம இலக்குமணரைக் காட்டிலும் வன்மை வாய்ந்தவரைத் தேடிப் பெறுவோம், என - என்று, துணிந்தார் எனின் (அச் சுக்கிரீவன் அங்கதன் முதலானோர்) உறுதி செய்தாராயின், உலகு ஒரு மூன்றினும் - மூன்று உலகங்களிலும், உன்னை ஒப்ப - நினக்கு நிகராக, நின் அலால் பிறர் இன்மை நிகழ்த்துவாய் - உன்னை யன்றிப் பிறர் எவரும் இல்லாமையை (அவர்களிடம்) சொல்வாயாக.

இதன் முன்னர் உள்ள மூன்று கவிகளால் வீராவேசம் கொண்டு தன் ஆற்றலைப் பற்றிப் பேசிய இராமபிரான், உலகியலைக் கருதி இலக்குவன் வீரத்தையும் இங்கே புகழ்கின்ருன். வீரரை வியவாதார் யார்? இளையவன் வீரத்தை இராமபிரானும் பிறரும் கூறிய இடங்கள் இக் காவியத்திற் பலவாகும். அயோத். கிளைகண்டு. 42; உயுத்த. கும்ப. 16; 227; முதற்போர். 203; அதிகாயன். 78, 201; இந்திர சித்து. 4; துணிந்தார் எனின் என்றது துணியமாட்டார் என்னும் பொருட்டு, நின்னலாற் பிறரின்மை எனவே, உவமை நீங்கிய தோன்றல் அவன் என்பது பெறப்படும். (ஒப்பு) வி. பா. திரௌபதிமாலை. 39; விரைமீட்சி. 92.

பி - ம். 1. இன்னவாசக; மங்கவ ரெய்தரு.

2. தன்ன லார்க ளெனத்துணிந்தாரெனில்; துணிந்தானெனில்.

3. உன்னை வெல்ல. 4. பிறரில்லாய்; இல்லை. (7)

560. நீதி யாதி நிகழ்த்தினை நின்றது
வேதி யாத பொழுது வெகுண்டிடல்
சாதி யாதவர் சொற்றரத் தக்கனை
போதி யாதியென் ருன்புகழ்ப் பூணினன்

புகழ் பூணினன் - கீர்த்தியையே தனது அணியாகக் கொண்ட இராமபிரான், நின்று - நிதானித்து (இலக்குவனை நோக்கி), 'நீதி ஆதி நிகழ்த்தினை - நீதி முதலாகக் கூறவேண்டுவனவற்றைக் கூறி, அது - அந்நீதி மொழிகள், வேதியாத பொழுது - அவர் உள்ளத்தில் அவர்கள் கொண்ட கெட்ட எண்ணங்களை மாற்ருதபொழுது. நீ - நீ, வெகுண் டிடல் சாதியாது - சினம் கொள்ளுதலைச் செய்யாது, அவர் சொல் தர தக்கனை - அவர்கள் கூறும் மொழிகளை (என்பால் ஏற்றுவந்து) சொல் வாயாக; போதி ஆதி - செல்வாயாக', என்ருன் - என்று கூறி விடை யீந்தான்.

இலக்குவனுடைய முன் கோபமும், சீற்றமும், கைகேசி சூழ்வினை புரிந்தபோதும், சித்திர கூடத்துப் பரதன் வந்தபோதும் இராமபிரான் நேரிற் கண்டுணர்ந்தவனுகலின், அவனை நிதானிக்குமாறு வேண்டு கின்ருன். பேதித்தல் என்ற வடமொழி வேதித்தல் என வந்தது; பொன் ணுக்கு வதைப் பரிசன வேதி யென்றல் காண்க. வெகுண்டிடல் தொழிற் பெயர், இனி 'வெகுண்டு அவண் சாதியாது' என்ற பாடத்துக்குச் சினந்து அந்த இடத்திலேயே கொன்றுவிடாது என்று கூறுக. சொற் றரத்தக்கனை என்ற தொடர்க்கண் அமைந்துள்ள சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் காண்க. இராமபிரானுக்கு 'மித பாஷி' என்ற பெயருண்மையும் இங்கே குறிக்கொள்ளத்தகும். போதி ஆதி - ஆதி பகுதிப் பொருள் விகுதி. அதற்கு உள்ளவாறு பொருள் கூறின் நீ செல்பவனுக ஆவாயாக (செல்வாயாக) என்று கூறல் வேண்டும். சினம் பொங்கி எழுந்தும், நிதானத்துடன், விரைவில் ஒன்றும் புரிந்து விடாதபடி அறவுரை கூறலின், இராமபிரான் புகழ்ப்பூணினன் எனப் பட்டான். 'நவையறு குணங்கள் என்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி (உயுத்த. மாயாசனக. 22); 'ஒறுத்தார்க் கொரு நாளையின்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்' (குறள் 156). (ஒப்பு) வி. பா. சூது. 230. இனி 'ஆதிநீதி எனக் கொண்டு கூட்டிச் செய்ந்நன்றி மறவாமையாகிய முதன்மையான ஒழுக்கம் எனலும் ஒன்றும். செய்ந்நன்றி கொல்லுதல் ஓர் பாவச் செய்கை; அதற்குக் கழுவாயின்று 613; புறநா. 34. குறள், 110. சாதித்தல் - செய்தல் 'அடியேன் பண்டென் சாதித்ததே' (சடகோபரந்தாதி). இலக்குவனைச்

சுக்கிரீவனிடம் செல்லுமாறு இராமபிரான் ஏவியபோது இளையவீரன் அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கொன்று மீள்வதாகக்கூற, அப்பொழுது அதன் தகுதியின்மையை விளக்கி, இதமான சொற்களே கூறி அவன் கருத்தை அறியுமாறு சொல்லியதாக முதனூல் கூறும்.

பி-ம். 1. நீதியாக, நீதிவாய்மை; நிகழ்த்துதி; நிகழ்த்திது, நிற்கவர்.
2. பேதியார்களெனிற் பெருங் கோப நீண்டு; வெகுண்டனை; வெகுண்டிடேல், வெகுண்டவண்.
3. சொற்றரத்தக்கன. 4. போதிபோதி. (8)

## ஆணை யேற்று இலக்குவன் செல்லுதல்

**561.** ஆணை சூடி யடிதொழு தாண்டிறை
பாணி யாது படர்வோன் பழிபடாத்
தூணி தூக்கித் தொடுசிலை தொட்டருஞ்
சேணி னீங்கினன் சிந்தையி னீங்கலான்.

ஆணைசூடி - (அண்ணன் கட்டளையைச்) சிரமேற் கொண்டு, அடிதொழுது - இராமபிரானது திருவடிகளை வணங்கி, ஆண்டு இறை பாணியாது - அவ்விடத்தில் ஒரு சிறிதும் காலம் தாழ்க்காமல், படர் வோன் - செல்பவனான இளைய பெருமாள், பழிபடா தூணி தூக்கி - குற்றமற்ற அம்பறுத்தூணியைத் தோளில் ஏற்றி, தொடு சிலை தொட்டு- அம்புகளைத் தொடுக்கின்ற வில்லைக் கையில் எடுத்துக் கொண்டு, சிந்தையின் நீங்கலான் - இராமபிரானை (மனத்தைவிட்டு) நீக்காதவனாய் (அவனையே தியானித்த வண்ணமாய்), அரும் சேணில் நீங்கினன் - பின் தொடர்தற்கரிய நீண்ட வழியிற் சென்றான்.

இனி, ஆண்டு - அவ்விடத்து, இறை அடி தொழுது-இறைவனான இராமபிரானது அடியிணைகளை வணங்கி, ஆணைசூடி - அவன் இட்ட கட்டளையைச் சிரமேற்கொண்டு, பாணியாது எனினுமாம். பாணித்தல்- தாமதித்தல். 'பாணித்து நின்று பயனாவதென்னை' (ஆரணிய ; 961) மற்றும் உயுத்த ; முதற்போர் ; 172 ; கலித் 102, 13, உரை; சீவக ; 1929; பெருங் : உஞ்சைக். 38, 184. படர்தல் - செல்லுதல்; 'அன்னோற் படர்தியாயின்' (புற. நா ; 48); 'பிறர்பாடு புகழ் பாடிப் படர் பறியேனே' (புற. நா ; 383). என்றும் வெற்றியே யன்றிப் பிறி தொன்றைக் காணாத வாளிகளைக் கொண்டதாகலின் பழிபடாத் தூணி என்றார். தொடுசிலை தொட்டு என்ற தொடரில் பிராச நயம் காண்க.

சேண்-சேய்மை, 'சேணிற் பொலி செம்பொன் மாளிகை' திருக்கோ.23. சிந்தையுணீங்கலான் என்பதற்கு, இராமபிரான் சிந்தையினின்றும் நீங்காதவன் எனினுமாம்; இலக்குவனின் உடல்தான் இராமனைவிட்டு அகன்றதன்றி இராமனுடைய மனம் அவனைத் தொடர்ந்து சென்றது என்க. 'முனி சிந்தை தொடரக் கடிதுபோனான்' (ஆரணிய; 176) என்றது காண்க. ஈற்றடி முரண்தொடை; சிந்தையினீங்கலான் - தன் சிந்தையைவிட்டு நீங்காதவனான இராமபிரானுடைய ஆணைசூடி என விற்பூட்டாய் அமைத்துச் சேணினீங்கினன் என முடித்தலும்பொருந்தும். பாழ்படாத்தூணி என்றபாடமும் சிறக்கும்.

பி - ம். 2. படர்வோன் பகைகெட, படர்வெரிக், வெரிகிடைப்; பல்லயத், பாழ்படாத்.
3. தூணிபூட்டி, வரிசிலே, கொடுஞ்சிலே. 4. சிந்தை யுணீங்கலான்.

இலக்குவன் தனி வழி வகுத்துக் கொண்டு செல்லுதல்

562. மாறு நின்ற மரனு மலைகளும்
நீறு சென்று நெடுநெறி நீங்கிட
வேறு சென்றனன் மெய்ம்மையி னோங்கிய
ஆறு சென்றவ னாணையி னேகுவான்

மெய்ம்மையின் ஓங்கிய ஆறு சென்றவன் - சத்தியத்திலேயே கிளைத்த அறநெறியில் ஒழுகுபவனான இராமபிரானுடைய, ஆணையின் ஏகுவான் - கட்டளைப்படிச் செல்பவனான இலக்குவன், மாறு நின்ற- (வழியில்) குறுக்கிட்டு நின்ற, மரனும் மலைகளும்-மரங்களும் மலைகளும், நீறு சென்று நீங்கிட-(தான் செல்லும் விசையால்) பொடியாகி விலகிட, வேறு நெடு நெறி சென்றனன் - மற்றொரு (புதிய) நீண்டவழியிற் சென்றான்.

மாறு சென்ற மரமும் - என்ற பாடத்திற்கு இலக்குவன் விரைந்து செல்லுங்கால், அவன் செல்கின்ற திசைக்கு எதிராகச் செல்வது போன்று காணப்பட்ட மரங்கள் என்க. மாறாக நின்ற மரனும் மலைகளுமே நீறாகின என்றதனால், நன்றி மறந்தவர்களும் நீறுவர் என்ற பொருளும் தொனிப்பது காண்க. அரசியல் சூட்சிகள் நன்குணர்ந்தவன் ஆகலின் பகைவர்கள் தன் வரவை எதிர்நோக்கி, அடிப்பட்ட வழியில் ஏதேனும் தீங்கு விளைக்கக் கூடியவற்றை வைத்திருக்கக் கூடும் என்று கருதிப் புதியதோர் வழியை வகுத்துக்கொண்டு சென்றான் என்றார். அடிப்பட்ட வழி யன்றாகலின் புதிய நெறியை, 'நெடு நெறி' என்றார்.

மெய்ம்மையின் ஆறுசென்றவன்; 'ஒப்பு' அயோத்தி. மந்தரை: 46; நகர்நீங்கு: 129; பால. குலமுறை. 23, எதிர்கோட். 28; உய்த்த. இலங்கை காண், 13. இனி மெய்ம்மையின் ஓங்கிய ஆறு சென்று, அவன். அந்த இராமபிரானுடைய ஆணையின் எனப் பிரித்தும் கூறலாம், முன் சேணி னீங்கினன் சிந்தையி னீங்கலான் என்றது போல, ஈண்டும் மெய்ம்மையின் ஓங்கிய ஆறு சென்ற வவன் ஆணையின் ஏகுவான், நெடு நெறி நீங்கி வேறு சென்றனன் என முடித்தல் நலம். 'ஆணையின் ஏகுவான் - இராமபிரானது ஆணையே ஓருருக் கொண் டாற் போன்று செல்வான் என்றுமாம். மெய்ம்மையின் ஓங்கிய ஆறு- சத்தியத்தினால் உயர்ந்து மேம்பட்ட வழி எனலும் அமையும்.

பி - ம் 2. ஓங்கிட.

3. மெய்ம்மையினீங்கியே; மேன்மைய னாயினும், மேன்மையினேங் கிடும், மேன்மையினாறு மோர், மென்மையினாறு.

4. ஆறுசென்றனன், ஆறுசென்றிலன். (10)

இலக்குவன் ஊன்ற மலைகள் அழுந்துதல்

563. விண்ணு றத்தொடர் மேருவின் சீர்வரை
மண்ணு றப்புக்க முந்தின மாதிரம்
கண்ணு றத்தெரி வுற்றது கட்செவி
உண்ணி றக்கழற் சேவடி யூன்றலால்

கட்செவி - ஆதிசேடன் அவதாரமாகிய இலக்குவன், ஒள் நிறம் கழல் சேவடி ஊன்றலால் - ஒளிரும் நிறம் வாய்ந்த வீரகண்டை அணியப்பெற்ற செய்ய பாதங்களை ஊன்றி யழுத்தியதால், விண் உற தொடர் மேருவின் சீர் வரை - ஆகாயத்தை யளாவும்படி உயர்ந்த எல்லையனவாக மலை (எத்துணை உயரமோ அத்துணை ஆழத்தில்), கண் உற தெரிவுற்றது - கண்களுக்கு விளக்கமாகத் தெரிந்த, மாதிரம் - எட்டுத் திசைகளும். மண் உற புக்கு அழுந்தின - பாதலத்திலே பொருந்தப் புகுந்து அழுந்தி (மறைந்தன).

கட்செவி - கண்ணையே செவியாக வுடையது எனப் பாம்பிற்குக் காரணக்குறி; உயுத்த. படைத்தலை; 42; தக்கயாக, 661; குமரகுரு. மதுரைக். 12; இந்தச் சொல் சங்கமருவிய நூல்களிலோ சிந்தாமணி, பெருங்கதைகளிலோ காணப்படவில்லை. வடமொழியைப் பின்பற்றி இச்சொல் எழுந்திருத்தல் வேண்டும். இங்கே ஆதிசேடன் அவதாரமான இலக்குவனைக் குறித்து நின்றது. (பால. திருவவ: 23); அயோத்தி.

நகர் நீங்கு; 116; உயுத்த. பிரமாத்திர. 209, இராமபிரான் இலக்குவனை, 'அயிலாதாய்' (உயுத்த. பிரமாத்திர. 209); என்று விளித்தது குறிக்கத்தக்கது. நல்ல பாம்பு காற்றையுட்கொள்வதுபற்றி, 'வாதாசனி' என்ற பெயர் உளதாதலானும், இலக்குவன் சேடன் அமிசமாதலானும் அங்ஙனம் கூறினன் எனலுமாம். இனி, இலக்குவன் என்ற எழுவாயை வருவித்துக்கொண்டு அவன் திருவடியால் அழுத்த, மலைகள் பாதலத் தழுந்திக் கட்செவியாகிய ஆதிசேடன் கண்களுக்குப் புலனாயிற்று என்பாரும் உளர். இச் செய்யுள் உயர்வு நவிற்சியணி.

பி - ம். 1. *மேருவைப் போல்மலை* 2. *கண்ணுறத் திரிவுற்றது* (11)

இலக்குவனது வேகம்.

564. வெம்பு கானிடைப் போகின்ற வேகத்தால்
உம்பர் தோயு மராமரத் தூடுசெல்
அம்பு போன்றன னன்றடல் வாலிதன்
தம்பி மேற்செலு மானவன் றம்பியே.

அன்று - அப்பொழுது, அடல் வாலி தன் தம்பி மேல் செலும் மானவன் தம்பி - வலிய வாலியின் தம்பியான சுக்கிரீவனைக் கருதிச் செல்கின்ற (மனுவின் வழிவந்த) இராமபிரானுடைய இளவலான இலக்குவன், போகின்ற - செல்கின்ற, வேகத்தால் - விரைவின் இயல்பால், வெம்பு கானிடை - வெப்பம் மிகுந்துநின்ற காட்டில், உம்பர் தோயும் மராமரத்து ஊடு செல் - மேலுலகத்தைச் சென்று தீண்டிய மராமரத்தைத் துளைத்துச் சென்ற, அம்பு போன்றனன் - (இராமபிரானுடைய) அம்புபோன்றான்.

உவமையணி. சரற்கால முடிவில் கானம் வெம்புதற்கில்லை. எனவே போகின்ற வேகத்தால் வெம்புகான் எனவும் அம்பு போன்றனன் எனவும் தனித்தனிப்பிரித்துப் பொருள்காண்க. உம்பர் தோயுமராமரம்; இதன் பெருமையை மராமரப்படலத்து 160 வது செய்யுளிலும் அதனையடுத்துள்ள செய்யுட்களிலும் காண்க. உம்பர் - மேலுலகு; ஆரணிய 799. அம்பிற் செல்லுதல் (ஒப்பு); 567; 'வீரன் வெஞ்சிலை கோத்த வம்பென விசையிற் போனான்' (உயுத்த; அங்கதன். 13). ஓடுகின்றது மொத்துளனாயினன் என்று அடுத்த கவியில் காணப்படும் உம்மையால், இச்செய்யுளில், 'அம்பு போன்றனன்' என்ற பாடமே பொருந்தும், 'தன்றுணைத் தமயன்றனி வாளியிற் சென்று' 567.

பி - ம். 1. *உம்பரோடளவும் மரத்தூடுசெல்* 3. *அம்பிற் சென்றனன்*
4. *தம்பிமேற் செலும்; மன்னவன்* (12)

565. மாடு வென்றியொர் மாதிர யானையைச்
சேடு துன்று செடிலொரு திக்கின்மா
நாடு கின்றது நண்ணிய கால்பிடித்
தோடு கின்றது மொத்துள னுயினன்.

சேடு துன்று ஒரு திக்கின்மா-பெருமை செறிந்த ஓர் திசையானை, மாடு - அருகில் உள்ள, ஓர் வென்றி மாதிரம் யானையை - ஒப்பற்ற வெற்றியுடன் கூடிய பிறிதோர் திசை யானையை, நாடுகின்றது - தேடு வதால், நண்ணிய செடில் கால் பிடித்து - (அதனிடம்) இயல் பாகப் பொருந்திய மதத்தின் வாடையைப் பின்பற்றி, ஓடுகின்றதும் ஒத்து உளன் ஆயினுன் - (அஃதுள்ள இடத்தைக் குறித்து) விரைந்து செல்வ தையும் நிகர்த்து நின்ருன்.

மாடும் வென்றியும் என்றுகொண்டு அரசியற் செல்வமும் வாலியை முறியடித்துக் கொன்றதால் உண்டான வெற்றியும் கொண்டு மதர்த்த மாதிர யானைபோன்றிருந்த சுக்கிரீவனை, அவனுடைய இயல்பு பலம் முதலியவற்றை ஆராய்ந்து கொண்டு மற்ருெருதிக்கு யானை போன்றவனுன இலக்குவன் சென்ருன் என்க. மாடு - பக்கம். 338, 309, மாடு - செல்வமுமாம். குறள். 400 ; மிகப்பழங் காலத்தில் கால் நடைகளே செல்வமாக இருந்ததால் மாடு செல்வம் என்று வழங்கியது. சேடு - பெருமை ; சீவக. 59 ; 1913 ; செடி - துர்நாற்றம்; இங்கே செடில் என வந்தது. தேவா. பக். 159. 11 ; திருவாசக. 424 : இச்சொல் நாற்றம் கேடு என்ற பொருள்களில் தெலுங்கு மொழியில் வழங்குகின்றது. கால் பிடித்தல் - செல்லும் போதே உள்ள சூழ்நிலையை ஆராய்தல் ; சுவடு பற்றிச் செல்லலுமாம்.

பி - ம். 1. *மாடுநின்றதோர் ; யானைமுன் யானையின்.*
2. *சேடுநின்ற திறத்தொடு,*
3. *ஒத்துள தாயினுன்* (13)

இலக்குவன் கிட்கிந்தைமலையையடைதல்

566. உருக்கொ ளொண்கிரி யொன்றினின் ருென்றினைப்
பொருக்க வெய்தினன் பொன்னெளிர் மேனியான்
அருக்கன் மாவுத யத்தினின் றத்தமாம்
பருப்ப தத்தினை யெய்திய பண்பினுல்.

அருக்கன் - சூரியன், மா உதயத்தின்நின்று - பெரிய உதயகிரியி லிருந்து, அத்தம் ஆம் பருப்பதத்தினை எய்திய பண்பினுல் - அத்தமன

கிரியை அடைந்த தன்மை போன்று, பொன் ஒளிர் மேனியான் -பொன் போன்று விளங்குகின்ற திருமேனியை உடையவனான இலக்குவன், உருகொள் ஒள்கிரி ஒன்றின் நின்று-பேருருக்கொண்ட ஒளி பொருந்திய ஒரு மலையிலிருந்து (மாலிய வானிலிருந்து), ஒன்றினை - பிறிதொரு மலையை (கிட்கிந்தை மலையை), பொருக்க எய்தினன் - விரைவினில் அடைந்தான்.

உவமையணி. பொருக்க - விரைவுக்குறிப்பு. சுந்தர. 391, 614; பொன்னொளிர் மேனியான் - இலக்குவன் சுவண வண்ணன்; ஆரணிய: 38. சூரியன் உதயகிரியிலும், அத்தமனகிரியிலும் முறையே தோன்றி மறைவதாகப் புராணம்கூறும். அஸ்தமனம் என்ற வடமொழி அத்தமனம் எனவந்தது. ஒளியினானும் நிறத்தினாலும் சூரியன் போன்றவன் என்க. பருப்பதம் - மலை; ' செம்பொற்பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள் இருவரையும் ' (பால ; குலமுறை : 22). இங்கே ' மாகம் கிழக்கெழு வழக்கு நீங்கி வடக்கெழுந் திலங்கை செல்லும் பருதிவான வனு மொத்தான் ' (சுந்தர ; 30) என்பதை ஒப்பு நோக்குக.

பி - ம். 1. உருக்கொள் வெண்கிரி; நாடியோர் பொற்கிரி.
2. பொருக்கி னெய்திய ; தன்மையும் போன்றுளான் ; பொன் னொளி மேன்மையான்.
4. பண்பினான் ; பண்புபோல். (14)

567. தன்று ணைத்தமை யன்றனி வாளியிற்
சென்று சேணுயர் கிட்கிந்தை சேர்ந்தவன்
குன்றி னின்றொரு குன்றினிற் குப்புறும்
பொன்று ளங்குளைச் சீயமும் போன்றனன்.

தன் துணை தமையன் தனி வாளியின் சென்று - தனக்கு (உற்ற) துணைவனும் அண்ணனுமான இராமபிரானுடைய ஒப்பற்ற அம்புபோல விரைந்து போய், சேண் உயர் கிட்கிந்தை சேர்ந்தவன் - ஆகாயத்தை அளாவி உயர்ந்த கிட்கிந்தை மலையை அடைந்த இலக்குவன், குன்றின் நின்று ஒரு குன்றினில் குப்புறும் - ஒரு மலையிலிருந்து மற்றொரு மலைமீது பாய்கின்ற, பொன் துளங்கு உளை சீயமும் போன்றனன்-பொன் னிறமா யொளிரும் பிடரி மயிரையுடைய ஆண் சிங்கத்தையும், ஒத்துவிளங்கினான்.

உவமையணி. வீரம், பெருமித நடை, கம்பீரமான தோற்றம் என்ற இவைகள்பற்றி, சிங்கம் இலக்குவனுக்கு உவமை,

முன்பின் எவராலும் தடுக்க முடியாததும், எதிரியை வீழ்த்திப்பின் இராமபிரானுடைய ஆவத்தில் வந்து புகுவதுமாகலின் தனிவாளி யெனப்பட்டது. 'துய்ய நீர்க்கடலுட் டோய்ந்து தூய்மலரமரர் தூவ, ஐயன் வெங்விடாத கொற்றத் தாவம் வந்தடைந்த தன்றே' 381; 'பாற்கடலிற்றூய் நீராடித், தேர்க்குன்ற விராவணன்றன் செழுங் குருதிப் பெரும்பரவைத் திரைமேற்சென்று, கார்க்குன்ற மனை யான்றன் கடுங்கணைப்புட் டிலினடுவட் கரந்ததம்மா' (உயுத்த: இரா வணன் வதை; 199) என்ற இடங்களில் இராமபிரானுடைய வாளி யின் பெருமை யறிக. சேண் - ஆகாயம்; சேய்மையுமாம். 'சேணிற் பொலி செம்பொன் மாளிகை' (திருக்கோ; 23); 'சேணும் நிகழ்மதில்' (திருக்கோ: 341). குப்புறுதல் - தாவுதல்; 'குறுமுனி குடித்த வேலை குப்புறுங் கொள்கைத்தாதல்' (சுந்தர; 15); 'நேமிவட்டத்தினெடு குப்புற்று - (குமரகுரு; மீனுட்சிபிள்ளைத்: 34); இலக்குவன் விரைவுக்கு இராமன் அம்பு; 564 உரை காண்க. சீயம் - சிங்கம்: 'புகலறு முழையுட்டுஞ்சும் பொங்குளைச் சீயம்' (சுந்தர: 5); 'சீயமும் ஏறும் பாய்பரிப்புரவியும்' (பெருங்; உஞ்சைக்: 42, 85); 'சீயமும் ஏறுந் திருவும் பொய்கையும்' (பெருங்; மகத: 9, 40). இடையூறுகளைக் கவனித்துச் சென்றுனுகலின், முன் பின்னேக்கி நடக்கும் சிங்கம் உவமிக்கப்பட்டது.

பி - ம். 1. சென்றுயர் கிட்கிந்தை.
3. குன்றினைக் குப்புறும்.
4. போன்றுளான். (15)

இலக்குவன்வரவு கண்டு வானரங்கள் அஞ்சி அங்கதனுக்குரைத்தல்.

568. கண்ட வானரங் காலனைக் கண்டென
மண்டி யோடின வாலி மகற்கையா
கொண்ட சீற்றத் திளையோன் குறுகினுன்
சண்ட வேகத்தி னுனென்று சாற்றலும்.

கண்ட - (இங்ஙனம் சினந்து இலக்குவன் வரப்) பார்த்த, வானரம்- குரங்குகள், காலனை கண்டென - யமனைக் கண்ணுற்றுற் போல (மிகவும் பயந்து), மண்டி ஓடின - தொகுதியாக மேற்சென்று ஓடின வாய், வாலிமகற்கு - வாலியின் மகனுன அங்கதனை நோக்கி, 'ஐயா - அழகனே! இளையோன் - இலக்குவன், கொண்ட சீற்றத்து, (மிகுதியும் ஏறட்டுக்) கொண்ட சினத்தினுல், சண்ட வேகத்தினுன் - கடுமையான வேகத்துடன், குறுகினுன் - வந்துவிட்டான்', என்று சாற்றலும் - என்று

முறையிட்ட அளவில், இச் செய்யுள், 'அன்ன தோன்றலும் எய்தினுன்' என்ற அடுத்த கவியுடன் தொடரும்.

கண்டாலென என்பது கண்டென எனத் தொகுத்தது. மண்டுதல் - மிக்குச் செல்லுதல்; 'பொய்கைக் குட்ட மண்டி' (பெருங். உஞ்சைக் ; 40, 34); 'மற்றவர் மண்டிய வாளமர் ஞாட்பினுள்' (சீவக. 2210). சண்டம் - கடுமை ; 'சண்ட மன்னன்' (சீவக. 430); 'சண்ட வேந்தற் கெதிர் மொழிகொடீஇ' (பெருங். இலாவாண 9, 92); 'சண்ட வெரியினுள் நின்று குளிர்வது' (தக்கயாகப். 63). வானரர்களை அச்சுறுத்தவே மேற்கொள்ளப்பட்டதாகலின், கொண்ட சீற்றம் என்ருர். பின்னர் அது தணிந்து நின்றதும் காண்க.

பி - ம். 1. *வானரங் ; கண்டபோல்.*
3. *சீற்றத்தினயல்.*
4. *வேகத்துடனென்று சாற்றினுர்.* (16)

அங்கதன் இலக்குவன்குறிப்பறிந்து சுக்கிரீவனிடம் செல்லுதல்

**569.** **அன்ன தோன்றலு மாண்டொழி லான்வர**
**வின்ன தென்றறி வான்மருங் கெய்திலான்**
**மன்னன் மைந்தன் மனக்கருத் துட்கொளாப்**
**பொன்னின் வார்கழற் ருதையிற் போயினுன்.**

அன்ன தோன்றலும் - அந்த வாலிமகனுன அங்கதனும், ஆண் தொழிலான் வரவு-ஆண்மை மிக்க செயலில் வல்லவனுன இலக்குவன் வந்தது, இன்னது என்று அறிவான் - இன்ன காரணத்தால் என்று அறிதற்காக, மருங்கு எய்திலான் - (அவன்) அருகில் செல்லாத வனுய், மன்னன் மைந்தன் மனம் கருத்து - தயரதன் புதல்வனுடைய உள்ளக் கருத்தை, உட்கொளா - (அவனது முகக் குறிப்பால்) அறிந்து, பொன்னின் வார் கழல் தாதை - பொன்னுலாகிய நீண்ட வீரகண் டையை யணிந்த (தனது) தந்தையான சுக்கிரீவனுடைய, இல் போயி னுன் - அரண்மனைக்குச் சென்ருன்.

அன்ன தோன்றல் என்று இச்செய்யுள் தொடங்குவதால், இதன் முன்னர் அங்கதனைப் பற்றிக் கூறிய ஓர் செய்யுள் இருந்திருத்தல் வேண்டும். அங்கதன் இங்கித முணர்ந்தவன் ஆதலின் இலக்குவனு டைய முகக்குறிப்பால் அவன் உட்கருத்தை உணர்ந்தான். 'சிந்தையு ணெடுஞ் சீற்றம் திருமுகந்தந்தளிப்ப' 578 காண்க. தோன்றல் - பெருமையாளனுமாம். இங்கே வாலிமகன் என்று பொருள்கூறப் பட்டது. வரவு - வந்த கருத்து. அறிவான் - வானீற்றுவினையெச்சம்.

இன்னதென்றறியான் என்ற பாடமும் நன்கு பொருந்தும். பொன்னின் வார்கழல் - பொன்னினால் வார்த்துச் செய்யப்பட்ட கழல் எனினுமாம். கொளா - கொண்டு; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சிறிய தாதையென்று கூறாது தாதை என்றது, அங்கதன் இராமபிரான் அறிவுரைப்படி, சுக்கிரீவனைச் சொந்தத் தந்தையாகவே நினைந் தமை கருதியென்க. முதனூலிலும், 'பிதுஸ்ஸமீப மாகத்ய' (கிஷ் கிந்தா. 31, 35); அங்கதன் தன் தந்தையான சுக்கிரீவனிடம் வந்தான் என்று கூறப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. கீழ் 'சீல நீயுடையை யாதலிவன் சிறுதாதையென்னு மூல மேதந்த நுந்தை யாமென முறையினிற்றி' 426 என்றது காண்க. இலக்குவன் அங்க தனை நோக்கி, 'குழந்தாய், சத்துருக்களை அழிக்கவல்ல இராமபிரான் தம்பி இதோ உம் மருகில் வந்திருக்கிறார். யுக்தமானதைச் செய்யும் என்பதாய் என்னுடைய வரவைச் சுக்கிரீவற்குச் சொல்' என்றுகூற, அங்கதன் தன் தந்தையிடம் சென்று தெரிவித்ததாகவும், பிறகு இரண்டுமந்திரிகள் சுக்கிரீவனுக்கு அறிவுரை கூறியதாகவும், அநுமான் சென்று சுக்கிரீவனை இலக்குவனிடம் போகுமாறு வேண்டியதாகவும் வான்மீகம் கூறும்.

பி - ம். 1. ஆண்டெழிலான்.
2. வென்னதென்றறிவான் மருங் கெய்தினன்;
3. மன்னர் மன்னன்; வருங்கருத் தட்கொளப், வருங்கருத்தட் கொடப். (17)

அப்பொழுதைய சுக்கிரீவன் நிலை

570. நளனி யற்றிய நாயகக் கோயிலுள்
தளம லர்த்தகைப் பள்ளியிற் றாழ்குழல்
இளமு லைச்சிய ரேந்தடி தைவர
விளைது யிற்கு விருந்து விரும்புவான்.

நளன் இயற்றிய நாயகம் கோயிலுள் - நளன் என்னும் வானர வீரனால் கட்டப்பட்ட தலைமைச் சிறப்பு வாய்ந்த அரண்மனையினுள்ளே, தளம் மலர்தகை பள்ளியில் - இதழ்கள் நிறைந்த மலர்கள் பரப்பிய அழகிய படுக்கையில், தாழ்குழல் இள முலைச்சியர் - தொங்குகின்ற கூந்தலையும், இளமை பொருந்திய தனங்களையுமுடைய மகளிர், ஏந்து அடி - சிறந்த (தன்) பாதங்களை, தைவர - தடவிப் பிடிக்க, விளை - நிகழ்கின்ற, துயிற்கு - நித்திரைக்கு, விருந்து - (தான்) விருந்தாளி யாவதை, விரும்புவான் - இச்சிப்பவனும்,

இதுமுதல் ஏழுகவிகள் குள்கமாய் அப்பொழுது அங்குச் சுக்கிரீவன் இருந்த நிலைமையைக் கூறும், ஆட்சிகைவர அந்தப்புரத்து மகளிருடன் சுக்கிரீவன் போகம் துய்த்ததை வருணிக்கின்றார்- ஆசிரியர்: நளன் விசுவகன் மா என்ற தெய்வத் தச்சன் அமிசமாகப் பிறந்த ஓர் குரக்கு வீரன். பின்னர்க் கடல் கடத்தற்கு அணை கட்டினவனும் அவனே. நாயகம் - தலைமை; ஆரணிய - 753 உயுத்த - திருமுடி, 11, 16). தளம் - மேல்மாடி; பால. கடிமண. 25. ஏந்து அடி - தமது மடியிலே வைத்துத்தாங்கிய அடி யெனினுமாம். தைவரல் - தடவுதல்; 'விசும்பு தைவருவளியும்' (புறநா. 2): கண் வளர்தற்குத் தைவரல் முதலியன இன்றியமையாவாதலின் அவற்றைத் துயிற்கு விருந்தென்றார்.

பி - ம் 1. *உளமலர்த்தக.*

2. *பள்ளியுற்றார்குழல்.*

3. *இளநகைச்சியர்.*

4. *வினைவினிற்றுயில்; மேவியகொண்டுளான்; விளம்புவான்.* (18)

571. தெள்ளி யோர்கி லான்பெருஞ் செல்வமாம்
கள்ளி னலதி கங்களித் தான்கதிர்ப்
புள்ளி மாநெடும் பொன்வரை புக்கதோர்
வெள்ளி மால்வரை யென்ன விளங்குவான்.

தெள்ளி ஓர்கிலான்-தெளிய ஆராயாதவனும், பெரு செல்வம்ஆம் கள்ளினல் - அளவற்ற செல்வம் என்ற கள்ளைப் பருகியதால், அதிகம் களித்தான் - மிகவும் களித்தவனும், கதிர் புள்ளி - ஒளிக் கற்றைகளை யுடைய, மா நெடு - மிகவுயர்ந்த, பொன் வரை - இமய மலையில், புக்கது - புகுந்து வதிவதான, ஓர் வெள்ளி மால் வரை என்ன விளங்கு வான் - ஒப்பற்ற பெரிய வெள்ளி மலை போன்று ஒளிர்பவனும்,

பெருஞ் செல்வம் பெற்றவர்கள் தாம் பெற்ற செல்வத்திற்குக் காரணமாயிருந்தவரைப்பற்றிச் சிந்தியாமை உலகியல்; அதனை இங்கே சுட்டினர். தெள்ளி ஓர்கிலான் - தனது இன்பவாழ்க்கைக்குக் காரண மானவர் இன்னர் என்று தெளிந்து உணராதவன். பொன் வரைபுக்க வெள்ளி வரை இல்பொருள் உவமை. மால்வரை - ஒரு பொருட் பன்மொழியுமாம்; பால. ஆற்று. 4.

பி - ம். 1. *தெள்ளியோராதவன், தெள்ளியோருகவா.*

3. *புள்ளிமானெடும்.*

4. *விளங்கினான்.* (19)

572. சிந்து வாரந் திருநறை தேக்ககில்
சந்த மாமயிற் சாயலர் தாழ்குழல்
கந்த மாமலர்க் காடுக டாவிய
மந்த மாருதம் வந்துற வைகுவான்.

சிந்துவாரம் - சிந்துவாரமரம், திருநறை - நறுமணக் கொடி, தேக்கு - தேக்கமரம், அகில் - அகில்மரம், சந்தம் மாமயில் சாயலர் - அழகிய கரிய மயிலின் சாயலையுடைய மகளிரின், தாழ்குழல் கந்தம் மாமலர் காடுகள் - தாழ்ந்து தொங்குகின்ற கூந்தலாகிய நறுமணம் செறிந்த பெரிய மலர்வனங்கள் (ஆகிய இவைகளின் மேல்), தாவிய - வீசித்தீண்டிய, மந்த மாருதம் வந்து உற வைகுவான்- தென்றல் காற்று (தன்மேல்) பட, (இனிதாக)த் துயில்பவனும்.

பல நறுமண மரங்களிலும் பொருள்களிலும் தோய்ந்த தென்றல் தன்மீது வீசத்துயில்பவன் என்க. சிந்துவாரம் ; நொச்சிமரம்; 'வஞ்சி பித்திகம் சிந்து வாரம்' (குறிஞ்சிப். 89). நறை - ஒரு நறுமணக்கொடி; 'நறை நார்த்தொடுத்த வேங்கையங் கண்ணி' (புறநா. 168). சீவக சிந்தாமணியில் 131 'நறையு நானமு நாறு நறும்புகை என்ற இடத்து 'நறை - நறைக்கொடி என்றார் நச்சினார்க்கினியர். இனி, உத்தமசாதி மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டு என்ற கூற்றிற் கேற்ப, சாயலர் தாழ்குழலூடேயும், என்று கூறினர். 'மதுகரம் வாய்மடுக்கும் குழற்காடேந்துமிள வஞ்சிக்கொடி' (குமர; குரு. மீனாட்சி. பிள்ளை) என்றதும் காண்க. சாயலர்-அச்சுக்கிரீவன் அருகிருந்த வானர மகளிரும் ஆம். மந்த மாருதம் - இளந்தென்றல்; இதனைச் சிறுகாற் செல்வன் (சிலப். 4. 18) என்பர் இளங்கோ வடிகள். மகளிர் சூழ இருந்தமை அடுத்த செய்யுளால் விளங்குவது காண்க.

பி - ம். 1. தேக்கினள், தேக்கலால், தேக்கிய.
2. தந்தமாமயில் 'சாயலினார் குழல்.' சாயலந்தார் குழல்.
3. கடாவிடு, கடாவியே.
4. வந்துறை வைகுவான்.

இஃது ஓர் பிரதியில் இடமாறியுள்ளது. (20)

573 தித்தி யாநின்ற செங்கனி வாய்ச்சியர்
முத்த வாணகை முள்ளெயி றூறுதேன்
பித்து மாலும் பிறவும் பெருக்கலான்
மத்த வாரண மென்ன மயங்கினுன்.

தித்தியாநின்ற - இனிக்கின்ற, செம்கனி வாய்ச்சியர் - சிவந்த கொவ்வைக்கனிபோன்ற அதரத்தை உடைய பெண்களின், முத்தம் வாள் நகை முள்எயிறு - முத்துப்போன்ற ஒளிமிக்க புன்முறுவலைச் செய்கின்ற கூரிய பற்களினின்று, ஊறு - சுரக்கின்ற, தேன் - தேன் போன்றினிய சுவைநீர், பித்தும் மாலும் பிறவும் - பைத்தியத்தையும், மயக்கத்தையும், மற்றும், காமம், மோகம், மதம், மறதி முதலிய வற்றையும், பெருக்கலான் - அதிகரித்தலால், மத்தவாரணம் என்ன - மதம் பிடித்த களிற்றைப்போல, மயங்கினுன் - மதிமயங்கினவனும்,

'பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி வாலெயிறூறிய நீர்' (குறள். 1121) என்ருர் திருவள்ளுவர். 'பவளவாய் பருகும் வேலான்' (சீவக. 191). வாய்ச்சியர் எயிறூறிய தேன்; இதனை அதரபானம் என்பர். தித்தியாநின்ற தேன் என இயைக்க. இவன் அரசியற் செல்வத்தால் மிகக் களித்ததைக் கீழ் 18ஆம் கவியிற் காண்க. இங்கே இன்பத்துறையிலெளியனுய் மதிமயங்கியது குறிக்கப்பெற்றது.

பி - ம். 1. *செங்கிடை.*
2. *வாண்முகை ;*
3. *மாலும் மதமும் பயக்கலான், மால்செய் நறவும் ;*
4. *வயங்குவான், மயங்குவான்.* (21)

574. மகுட குண்டல மேமுதன் மண்டனத்
துகுநெ டுஞ்சுடர்க் கற்றை யுலாவலர்ல்
பகல வன்சுடர் பாய்பனி மால்வரை
த்கம லர்ந்து பொலிந்து தயங்குவான்.

மகுட குண்டலமே முதல் - கிரீடம், குண்டல முதலிய, மண்டனத்து-(அணிசெய்யும்) ஆபரணங்களிலிருந்து, உகும்-வெளிவருகின்ற. நெடுசுடர் கற்றை - நீண்ட ஒளிகளின் தொகுதி, உலாவலால் (தனது உடலில்) படிந்து செல்வதால், பகலவன் சுடர் பாய் மால் பனிவரைதக - சூரியனுடைய ஒளி பரவப்பெற்ற பெரிய குளிர்ந்த உதயகிரி

யொப்ப, மலர்ந்து பொலிந்து தயங்குவான் - விரிந்து விளங்கித் திகழ் பவனுமாய், 'கிடந்தனன்' என்ற அடுத்த செய்யுளுடன் முடியும்.

உவமையணி. மண்டனம் - அலங்காரம்; இங்கே அணிகலனைக் குறித்து நின்றது. தக - உவம வுருபு. மலர்தல், பொலிதல், தயங்குதல்; ஒரு பொருட் பன்மொழிகள்; இவை முகமலர்ச்சியையும், உடற் பொலிவையும், மேனியின் முடி முதல் அடியீருகவுள்ள முழுத் தோற்றத்தையும் முறையே குறித்தனவாகவும் கொள்ளலாம். பனிமால் வரை - இமய மலையுமாம். தயங்குதல் - விளங்குதல்.

பி - ம். 1. *மகர குண்டல மேய்முக ; குண்டலமேய், மண்டலத்.*
2. *உகிர் நெடுஞ்.*
3. *சுடர்பன் ; மணி மால்வரை.*
4. *தக மலர்ந்தது போலத் தயங்கவே, தக மலிந்து, தகை மலர்ந்து.* (22)

அங்கதன் சுக்கிரீவனை எழுப்புதல்

575. கிடந்த னன்கிடந் தானைக் கிடைத்திரு
தடங்கை கூப்பினன் றாரைமின் னுட்டந்த
மடங்கல் வீரனன் மாற்றம் விளம்புவான்
தொடங்கி னனவ னைத்துயி னீக்குவான்.

கிடந்தனன் - (சுக்கிரீவன்) படுத்திருந்தான் ; கிடந்தானை - படுத்திருந்த அவனை, தாரை மின்னுள் தந்த மடங்கல் வீரன் - தாரை யென்ற மின்போன் றொளிரும் மேனியாள் பெற்ற ஆண் சிங்கம் ஒத்த வீரனான அங்கதன், கிடைத்து - அருகே அணுகி, இரு தட கை கூப்பினன் - தனது இரண்டு பெரிய கரங்களையும் குவித்து (அஞ்சலி செய்து), அவனை துயில் நீக்குவான் - அச்சுக்கிரீவனை நித்திரையினின்றும் எழுப்புவானாய், நல் மாற்றம் விளம்புவான் தொடங்கினன் - நன்மை விளைக்கத்தக்க சொற்களைக் கூற ஆரம்பித்தான். இதனை அடுத்த செய்யுளிற் காண்க.

கிடத்தல் - படுத்துக்கொண்டிருத்தல் ; 'நின்றானிருந்தான் கிடந்தான்' (நாலடி. 29.) கிடைத்தல் - கிட்டுதல் ; 'விடைத் தனியே றன்னானோர் விடலையோர் வேற்கணாள் முன்கிடைத்து' (திருவிளை. தருமி. 42). தாரை மின்னாள் எனவே, அன்னாளுடைய பேரழகு விளங்கும் ; 'ஆயிடைத்தாரை யென்றமிழ்திற் றோன்றிய வேயிடைத் தோளினாள்' (248); 'மலைக்குலமயில்' (249); 'மயிலியற் குயில்மொழி'(253)

'விரைக்குழல்' 262; 'பார்குலா முழுவெண்டிங்கள் பகல்வந்த படிவம் போலும், ஏர் குலாமுகத்தினுளே' (602) முதலிய சொற்றொடர்களைக் காண்க. மடங்கல் - பிடரிமயிர் மடங்கப் பெற்றிருப்பது என்று சிங்கத்துக்குக் காரணக்குறி. 'அவனைத் துயில் நீக்குவான் - இரண்டு செயப்படு பொருள் வந்த வினை.

பி - ம். 2. முன்னாட் டந்த.

3. மடங்க லன்னவன் மாற்றம், லன்னதன். வீரன்முன்

4. தொடங்குவான்; துயர் நீக்கினான், நீக்கவே. (23)

576. எந்தை கேளவ் விராமற் கிளையவன்
சிந்தை யுண்ணெடுஞ் சீற்றந் திருமுகம்
தந்த ளிப்பத் தடுப்பரும் வேகத்தான்
வந்த னன்னுன் மனக்கருத் தியாதென்றான்.

'எந்தை - எனது தந்தையே! கேள் - (யான் உரைப்பதைக்) கேட்டருள் வீராக; அ இராமற்கு இளையவன் - அந்த இராமபிரானுடைய தம்பியான இலக்குவன், சிந்தையுள் நெடு சீற்றம் திருமுகம் தந்து அளிப்ப - உள்ளத்தினுள்ளே நிகழ்ந்த மிகுந்த கோபத்தைத் (தனது) முகம் தெரிவித்தருள, தடுப்பு அரு வேகத்தான் வந்தனன் - (எவரும்) விலக்க முடியாத வேகத்தை யுடையவனாய் (இவ்விடம்) வந்துள்ளான்; உன் மனம் கருத்து யாது - (இதுபற்றி) உனது மனத்தில் உள்ள நினைவு என்ன?' என்று (சுக்கிரீவனைப் பார்த்து) அங்கதன் வினவினான்.

என் தந்தை - என்பது எந்தை என மருவியது. அ என்பது பண்டறி சுட்டு. இராமற்கு இளையவன் என்றது, இயல்பாகவே சாந்தனான இராமனுடைய தம்பி என்றும். 'சிந்தையுண்ணெடுஞ் சீற்றந் திருமுகந் தந்தளிப்ப என்றது அவன் முகத்திற் கொண்ட சீற்றமும், சுக்கிரீவன் குற்றத்தை யேற்றுக்கொண்டு பணிந்திடின், அருளாக மாறும் என்று குறித்தற்கெனவும் கொள்ளலாம். திருமுகந் தந்தளிப்ப என்ற தொடர் அமைந்துள்ளதை நோக்குக. அகத்தினழகு முகத்திற் தெரியும் (பழமொழி); 'உள்ளத்தினுள்ளதையுரையின் முந்துற மெள்ளத்தன் முகங்களே விளம்பு மாகலான்' (உயுத்த. விபீடண, 91); 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டுமுகம்' (குறள், 706); 'முகத்தின் முதுக்குறைந்ததுண்டோ வுவப்பினுங் காயினும் தான் முந்துறும்'

(குறள் 707.) என்ற குறளும் அதன் உரையும் காண்க. வேகத்தான் - வேகத்தோடு என்றுமாம். நெடுஞ் சீற்றம், தாற்காலிகமாக ஏறட்டுக் கொண்ட சினம்; கைகேயியின்மீதோ பரதன்மீதோ கொண்ட சீற்றம் போன்றன்று; வானர வீரர்களை அச்சுறுத்த எழுந்தது. 'வேதியாத பொழுது வெகுண்டிடல் சாதியாதவர் சொற்றரத்தக்கனே, போதியாதி' (560) என்று இளைய பெருமானை இராமபிரான் எச்சரித்துள்ளமையும் காண்க. இலக்குவன் முகத்தினின்றே அவன் மனத்திருந்த சீற்றத்தை அங்கதன் உணர்ந்தது, முன்னரே (569)ல் 'மன்னன் மைந்தன் மனக் கருத்துட்கொளா' என்று குறிக்கப்பட்டது.

பி - ம். 2. *செங்கையின் சீற்றத் திருமுகன்.*

3. *தந்தளிக்கத், தடுக்கரும்; வேகத்தின்; வேகத்தன்.* (24)

அச்சொல்லைச் சுக்கிரீவன் உணராமை

577. இனைய மாற்ற மிசைத்தன னென்பதோர்
நினைவி லானெடுஞ் செல்வ நெருக்கவும்
நனைந றுந்துளி நஞ்சு மயக்கவும்
தனையு ணர்ந்திலன் மெல்லணைத் தங்கினான்.

சுக்கிரீவனோ, நெடு செல்வம் நெருக்கவும் - பெருஞ் செல்வச் செருக்கு உள்ளத்து மிகவும் இடங்கொண்டு அடர்த்ததனாலும், நறு நனை துளி நஞ்சு மயக்கவும் - மணமுள்ள கள்ளின் துளித்தொகுதிகளாகிய விடம் அறிவிழக்கச் செய்ததாலும், தனை உணர்ந்திலன் - தன்னைத்தான் அறியாதவனாய், இனைய மாற்றம் இசைத்தனன் என்பதோர் நினைவி லான் - இத்தகைய வார்த்தைகளை அங்கதன் சொன்னான் என்பதான ஒரு எண்ணமில்லாதவனாய், மெல் அணையில் தங்கினான் - மிருதுவான படுக்கையில் படுத்திருந்தான்.

இனைய - வருந்தும்படியாக வெனினுமாம். நெடுமை - பெருமை மேற்று. கள்ளை நஞ்சு என்றார்; 'எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண் பவர்' (குறள். 926) என்றது காண்க. நஞ்சு என்னாது துளி நஞ்சு என்றார் சிறிய வளவுள்ள கள்ளிற்கும் அறிவிழக்கச் செய்யும் ஆற்றல் உண்டு எனக் காட்டற்கு, 'கள்ளுண்பார் நஞ்சுண்டாரின் வேறாத லுடையரேனும், எக்காலத்து மறிவின்மையால் வேறெனப்படார், அவர் தாமேயாவர்' என்பது பரிமேலழகர் உரை. செல்வச் செருக்கும் கள்ளாகிய நஞ்சும் ஒருபுற மிருக்க, அணையும், விழையத்தக்க ஏழடுக் கமளியாதலின் தன்னினைவற்றிருந்தான் என்க. 'சுக்கிரீவன் நித்திரை மயக்கத்துடன் கூடியிருந்தமையால் விழித்துக்கொள்ளவில்லை;

மேலும் குடியினுல் மயக்கமுற்றவனும் மன்மதனுல் மோஹித்தவனுமாகி-இருந்தான்', என்பது வான்மீகம்.

பி - ம். 2. நினைவிலன், நெருக்கலான்.
3. நஞ்சினை நக்கலால், மயக்கலான்.
4. தனையறிந்திலன். (25)

அங்கதன் அநுமானிடம் செல்லுதல்.

578. ஆத லாலவ் வரசிளங் கோளரி
யாது முன்னி யியற்றுவ தின்மையால்
கோதில் சிந்தை யநுமனைக் கூவுவான்
போதன் மேயினன் போதக மேயனுன்.

ஆதலால் - அரசியல் செல்வத்தாலும் மதுமயக்கத்தாலும் தன்னை மறந்து சுக்கிரீவன் இருந்தானுக, போதகமே அனுன் - யானைக்குட்டி போன்றவனும், அ இள அரசு கோளரி-இளவரசனும் வலிய ஆண்சிங்கம் போன்றவனுமான அங்கதன், முன்னி - ஆராய்ந்து, இயற்றுவது - (தான்) செய்யத்தக்கது, யாதும் இன்மையால்-ஒன்றும் இல்லாமையால், கோது இல் சிந்தை அநுமனை-குற்றமற்ற உள்ளத்தையுடைய அநுமனை, கூவுவான் போதல் மேயினுன் - அழைப்பதற்காகச் சென்றுன்.

போதகம் - யானைக்கன்று, (பால. கார்முக:11); (ஆரணிய. 224); (சீவக. 89). கோளரி-பிறவுயிர்களைக்கொள்ள வல்ல சிங்கம்; (ஆரணிய: 1073, 1077, 1083). யாதும் உன்னி என்று பிரித்தலுமாம். மனத்திண்மையாலும் , முன்னும் பின்னும் நோக்கும் தன்மையாலும், சிங்கத்தையும், நடை, பெருமிதம் முதலியவற்றுல் போதகத்தையும் ஒத்து விளங்கினன் அங்கதன் என்க. இள என்பதை இடைநிலை விளக்காக அரசு, கோளரி என்ற இரண்டினுடன் கூட்டுக. 'கோதில் சிந்தையன் அநுமன் - 'நீதியினின்றீர் வாய்மையமைந்தீர் நினைவாலும் மாதர்நலம் பேணுது வளர்ந்தீர்' 990; 'புண்ணியமொன்றேயென்று நிலைக்கும் பொருள் கொண்டீர்' 991 என்று சாம்பவன் புகழ்தல் காண்க.

'வென்றிவீரன் வியப்பொரு மேல்வினை, ஒன்று வானவன்றன்னை யுசாவினுன், சென்று மாருதி தன்னிடஞ் சேர்ந்தவன், நின்ற தன்மைகள் யாவு நிகழ்த்தலும்' என, ஓர் அதிகப் பாடல் இங்கு உள்ளது.

பி - ம். 1. ஆதலோடு மரசிளங்.
2. முன்னின் றியற்றுவ, மாண்டொன் றியற்றுவ, மொன்று முன்னின் றியற்றுவ தின்றெனு.
3. யனுமற்குக் கூறவே, கூவயே, கூடியே, கூடுவான், கூட்டியே.
4. போதலை மேயினுன், மேயினன். (26)

அங்கதன் அநுமானுடன் தாரையிடம் செல்லுதல்

579. மந்தி ரத்தனி மாருதி தன்னெடும்
வெந்தி றற்படை வீரர் விராய்வர
அந்த ரத்தின்வந் தன்னைதன் கோயிலை
இந்தி ரற்கு மகன்மக னெய்தினன்

இந்திரற்கு மகன் மகன் - இந்திரகுமாரனான வாலியின் புதல்வனாய அங்கதன், மந்திரம் தனிமாருதி தன்னெடும் - மந்திராலோசனையில் வல்ல ஒப்பற்ற வாயுகுமாரனான அநுமனுடன், வெம் திறல் படைவீரர் விராய் வர - கடுமையான வலிமையுடைய சேனை வீரர்கள் (தன்னைப்) பின்தொடர, அந்தரத்தின் வந்து-சுக்கிரீவனுடைய அரண்மனையினின்று வெளிவந்து, அன்னை தன் கோயிலை எய்தினன் - தனது தாயான தாரையின் மாளிகையை அடைந்தான்.

மந்திரத்தனி மாருதி - சுக்கிரீவனுடைய அரசியற் சுற்றத்தில் ஒருவனாய், அவனுடைய மந்திராலோசனைக் குழுவில் ஒப்பற்று விளங்கும் வாயுவின் மகனான அநுமன்; 'எங்கள் மன்னவன் றனக்கு நாயேன் மந்திரத்துள்ளேன்' (சுந்தர. 519) என்றும், 'நல்லவுமொன்றே தீயவுநாடி நவைதீரச் சொல்லவும் வல்லீர்' (986) என்றும் கூறியன காண்க. இந்திரற்கு மகன் மகன் - அங்கதன்; இவ்வாறு மூன்றுதலை முறைகளைக் குறித்துக் கூறுவது கம்பர் வழக்கம். இவ்வாறு கூறுவது அவனுடைய பரம்பரைச் சிறப்பினைப் புலப்படுத்தற்கென்க. 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி' (ஆரணிய, 258) என்றும், 'வையந்தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன் (சுந்தர. 483) என்றும் கூறப் படுதல் காண்க. இதற்கு முன்புள்ள கவியில் அநுமனைக் கூவுவான் போதல் மேயினன்' என்று கூறி இச் செய்யுட்கண் அன்னை தன் கோயிலை அங்கதன் எய்தினன் என்று கூறப்பட்டுள்ளது. இடையே ஒன்றிரண்டு பாடல்கள் இருந்திருத்தல் வேண்டும். 'வென்றி வீரன்' என்ற பாடல் ஒன்று அதிகப் பாடலாக மேலே காட்டப்பட் டுள்ளது. மாருதியின் அறிவுரையின் பேரில் அங்கதன் தாரையிடம் சென்றிருக்கக் கூடும் என்று ஊகிக்கக்கிடக்கின்றது. அந்தரம் - வெளிப்புறம். அந்தரத்தின் வந்து என்பதற்கு ஆகாயத்தின் வழியாகத் தாவி வந்து எனினுமாம். அந்தரம் - துன்பம் என்பது பழையவுரை.

பி - ம். 2. விராயவன்.
3. வந்தா; னன்னை கோயிலை.

இஃது ஓர் பிரதியில் இல்லை. (27)

### தாரை அவர்களைப் பழித்தல்

**580.** எய்தி மேற்செயத் தக்கதென் னென்றலும்
செய்திர் செய்தற் கருநெடுந் தீயன
நொய்தி லன்னவை நீக்கவு நோக்கலிர்
உய்திர் போலு முதவிகொன் றீரெனு.

எய்தி - (அநுமனுடன் அங்கதன் தன் அன்னையை) அடைந்து (நிகழ்ந்தனவற்றைக் கூறி), 'மேல் - இனிமேல், செய்யத் தக்கது என் - நாம் புரியத்தக்க காரியம் என்ன?' என்றலும்-என்று கேட்ட அளவில், (அவள் அவ் வீரர்களைப் பார்த்து), 'செய்தற்கு அரு - புரியத் தகாத, நெடும் தீயன - பெரிய கொடிய செயல்களை, நொய்தில் செய்திர் - எளிதில் செய்துள்ளீர்; அன்னவை - அச் செயல்களாலாகும் கேடுகளை, நொய்தில் நீக்கவும் - விரைவில் போக்கிக் கொள்ளவும், நோக்கலிர் - நோக்காதவரானீர் ; உதவி கொன்றீர் - செய்ந்நன்றி மறந்தவர்களாகிய நீங்கள், உய்திர் போலும் - தப்பிப் பிழைத்திடுவீர்கள் போலும்'; எனு - என்று சொல்லி, விளம்புகின்றாள் என அடுத்த கவியோடு தொடரும்.

அருநெடுந்தீயன என்றது முன்பின் நோக்காமல் குரங்குகள் செய்த செயல்களை. தானும் உணராது தாரை சொல்லும் கேளாது போர்க் கெழுந்து, இராமன் வாளியால் வாலி மாண்டதை இங்கே குறிக்கொள்க. நொய்தில் என்பது இடைநிலை விளக்காகத் தீயன செய்தி என்ற தொடரோடும், நோக்கலிர் என்பதனோடும் சென்றியையும். நொய்தில் என்பது எளிதாக அல்லது விரைவில் என்று பொருள்படும். பிழை செய்வது இயல்பு; ஆனால் அதனை மாற்றுதற்கு உடனே உபாயம் தேடவேண்டும்; அதனையும் செய்யாமை பற்றி 'நோக்கலிர்' என்றாள். செய்ந்நன்றி கொன்ற மகற்குய்தி யின்றாகலின், 'உய்திர் போலும்' என்றாள். பின்னரும் (613)ல் 'உதவி கொன்றார்க் கென்றேனும் ஒழிக்கலாம் உபாய முண்டோ' என்றதும் காண்க. 'ஒருவன் செய்த வுதவியிற் கருத்திலோன்............மீள்கிலா நரகின் வீழ்வார்' (உயுத்த. விபீடணன். 117). என்பது இராமபிரான் கூற்று. 'செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென் றறம்பா டிற்றே யாயிழை கணவ' (புறநா. 34). என்றதும் காண்க.

பி - ம். 1. *எய்தியென் செயத்தக்கதிங்.*
2. *நெடுந் தீவினை, செய்த லென்னவுஞ் செப்பினடிவினை.*
3. *நொய்தி னன்னவை, நொய்தி னந்நிலை; நோக்குதிர்.*
4. *கொன்றீ ரென்றனள்.* (28)

581. மீட்டு மொன்று விளம்புகின் ருள்படை
கூட்டு மென்றுமைக் கொற்றவன் கூறிய
நாட்டி றம்பினுந் நாட்டிறம் பும்மெனக்
கேட்டி லீரினிக் காண்டிர் கிடைத்திரால்

மீட்டும் ஒன்று விளம்புகின்ருள் - மேலும் தாரை ஓர் வார்த்தை கூற லானுள்; 'உமை படை கூட்டும் என்று கொற்றவன் கூறிய நாள் திறம்பின் - உங்களை நோக்கிச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு வாருங்க ளென்று வெற்றியுடன் கூடியவனான இராமபிரான் குறித்த தவணை தப்பினால், உம் நாள் திறம்பும் - உங்கள் வாழ்நாள் தவறிவிடும், என - என்று, (நான் விடாமல் அறிவுறுத்தியும்) கேட்டிலீர் - அந்த வார்த் தைக்குச் செவிகொடுத்துக் கேட்டிலீர்; (அதன்படி நடக்கத் தவறினீர் கள்); இனி காண்டிர் - இனி அதன் விளைவைக் காணப் போகின்றீர் கள்; கிடைத்திர் - குற்றத்திற் (பொருந்திச்) சிக்கிக் கொண்டீர்கள் ஆல் - அசை.

படை கூட்டும் என்று கொற்றவன் கூறியது, (415) கொற்றவன்-வெற்றி வீரன், 'நீரும் நீர்தரு நெருப்பும் வன் காற்றும் கீழ் நிமிர்ந்த பாரும் சார்வலி படைத்தவன்' ஆன வாலியைக் கொன்றது பற்றி இங்ஙனம் கூறினாள். ,'நாட்டிறம்பினும் நாட்டிறம்பும்' என்று இராமபிரான் கூறியதாக மூலத்தில் இல்லை. ஆகவே தாரை கூற்றாகவே பொருள் செய்யப்பட்டது. இனி, கொற்றவன் என்பது சுக்கிரீவன் எனக் கொண்டு,

பி - ம். 2. கூறின.
4. காண்டிர் லைத்திரால்; கிடந்ததால். (29)

582. வாலி யாருயிர் காலனும் வாங்கவிற்
கோலி வாலிய செல்வங் கொடுத்தவர்
போலு மாலும்பு றத்திருப் பாரிது
சாலு மாலுங்க டன்மையி னோர்க்கெலாம்.

' வாலி ஆருயிர் - வாலியின் அருமையான உயிரை; காலனும் வாங்க - யமனும் கொள்ளும்படி, வில் கோலி - வில்லை வளைத்து (அம் பெய்து), வாலிய செல்வம் கொடுத்தவர் போலும் - ஒள்ளிய அரசியற் செல்வத்தை (உங்கட்கு)த் தந்தருளிய இராமபிரானை, உம் புறத்து இருப்பார் - உங்களால் புறக்கணிக்கப் படுபவர்? இது (உதவி யருளியவரை) அலட்சியம் செய்வது, உங்கள் போலும் தன்மையி

ஞோர்க்கு எலாம் சாலும் - உங்களைப் போன்ற செய்ந்நன்றி மறந்தவர்க்குத்தான் பொருந்தும். ஆல் இரண்டும் அசை.

'வென்றியான் வால் செலாதவாயலதிராவணன் கோல்செலாது' என்று வாலிக்கு மடங்கி யொழுகிய இராவணன், திக்குவிசய காலத்தில் தோல்வியுறச் செய்த அந்தக் காலனும், காலமாறுபட்டால் வாலியினுயிரைக் கவர்ந்தான் என்றார். உம்மை இழிவு சிறப்பு. இராமபிரானுடைய வில்லிற்கே உயிர் பறிக்கும் ஆற்றல் உண்டெனினும் கவர்வது காலன் தொழிலாகலிற் 'காலனும் வாங்க' என்றார். இராமன் அம்பின் துணையின்றித் தென்றிசைச் கோன் அவன் உயிரைக் கவர்தற்கில்லை யென்ற பொருளும் தொனித்தல் காண்க. கோலி - வளைத்து; 'கோலிய வரிசிலை வலியும் கொற்றமும்' (உயுத்த: விபீடண 92). போலும் - ஒப்பில் போலி. புறத்திருப்பர் - உம்மால் அலட்சியம் செய்யப் பெறுபவர். இத்தகைய வீரர்கள் தாம் உம் கடைப்புறத்து வந்து நிற்பார்களோ எனினுமாம்.

பி - ம். 1. *வாங்லிவிற்.*
3. *போலு மானும்; மானின்.*
4. *சாலுமானுங்கள், சாலுமோ பெருந்தன்மையி னோர்க்கு; தகைமையி னோர்க்கு, கடமையி னோர்க்கு.* (30)

**583.** **தேவி நீங்கவத் தேவரிற் சீரியன்**
**ஆவி நீங்கினன் போலயர் வானது**
**பாவி யாது பருகுதிர் போலுநும்**
**காவி நாண்மலர்க் கண்ணியர் காதனீர்.**

'தேவி நீங்க - (தன் மனைவியான) சீதை அகல (அத்துயரத்தினால்), தேவரில் சீரியன் - அந்தத் தேவர்களிற் சிறந்தவனான அந்த இராமபிரான், ஆவி நீங்கினன்போல் அயர்வான் - உயிர் பிரியப் பெற்றவன் போன்று தளர்வான்; அது பாவியாது - அதனை மனங் கொள்ளாமல், நும் நாள் காவிமலர் கண்ணியர் - உங்களுடைய அன்றலர்ந்த நீல மலர் போலும் விழிகளையுடைய மனைவிமாரின், காதல் நீர் - ஆசையாற் பெறப்படும் அவர்தம் வாலெயிறு ஊறிய நீரை, பருகுதிர் போலும் - பருகிக் களிக்கின்றீர் போலும்.

தேவரிற் சீரியன்; 'ஓயாத மலரயனே முதலாக உளராகி, மாயாத வானவர்க்கும் மற்றெழிந்த மன்னுயிர்க்கும், நீயாதி முதற்றாதை' (ஆரணிய: 53). ஆவி நீங்கினன் போல் அயர்வான்; 'பூண்ட மெய்யுயிரேபோகப் பொய்யுயிரோடு நின்றான் ஆண்டகை' (சுந்தர: 525),

'இன்னுயிரின்றியேகுமியந்திரப் படிவம் ஒப்பான்' (சுந்தர. 567). 'கண்ணியர் காதல்நீர் பருகுதிர் போலும்' எனப்பொதுப்படக் கூறின போதும் அநுமன் அதற்குவிலக்காயினமை அறிக; 'நினைவானும் மாதர் நலம் பேணாது வளர்ந்தீர்' என்று சாம்பன் அநுமனைப் புகழ்ந்தது காண்க; 990. காவிமலர் எனக் கூறியமையாது, நாண்மலர் என்றது ஒளியுடன் விளங்கும் அவர்களின் சிறப்புக்கருதியென்க. வள மலர்க்கோதை தன்னை வாய்விடான் குழையப்புல்லி' (சீவக. 841) என்ற இடத்து. 'ஈண்டு அதரபானம்' என நச்சினார்க்கினியர் வரைதல் காண்க.

பி - ம். 1. *மூத்தேவரிற் சீரியன், சீரியான், சீரியோன்.*
2. *ஆவி நீத்தவன், நீத்தனன், தீர்ந்தனன்.*
3. *பாவி றங்களிற் பார்த்திலிர், பருகுதிர் போறுமால், போறுதம்.*
4. *காவி யோங்கலர்க் கண்ணியர் காதலால்.* (31)

584. திறம்பி னீர்மெய் சிதைத்தீ ருதவியை
நிறம்பொ லீஇருங்க டீவினை நேர்ந்ததால்
மறஞ்செய் வானுறின் மாளுதிர் மற்றினி
புறஞ்செய் தாவதெ னென்கின்ற போதின்வாய்.

'மெய்திறம்பினீர் - உண்மையினின்றும் பிறழ்ந்தீர்; உதவியை சிதைத்தீர் - செய்ந்நன்றி கொன்றீர்; நிறம் பொலீஇர் - குணக்கேட்டால் அழகிழந்தவ ரானீர்; உங்கள் தீவினை நேர்ந்தது - நீங்கள் (புரிந்துள்ள பாவகாரியங்கள் அவற்றின் பயனை அளிக்க) முன் வந்துவிட்டன மறம் செய்வான் உறின் மாளுதிர் - உங்களுடைய வீரத்தை மதித்துப் போர் புரிதலைப் பொருந்தினுல், இறந்துபடுவீர்கள்; இனி புறம் செய்து ஆவது என் - இனிப் புறக்கணித்தால் ஆவது என்ன இருக்கின்றது?' என்கின்ற போதின் வாய் - என்று தாரை அங்கதனுதியோரை நோக்கிக்) கூறுகின்ற சமயத்தில், ஆல்-அசை.

'குரக்கினம் தடவரை தந்தடுக்கின' எனஅடுத்த செய்யுளுடன் தொடர்ந்து முடியும்.

நிறம் பொலீர் என்றுவிளித்ததுமாம். புறம் செய்து - இனி உம்மைக் காத்துக் கொண்டாவதென்; காத்துக் கொள்ள முடியாது என்றவாறு. பொய்யரானீர், உதவிகொன்றீர், பண்பிழந்தீர், நீங்கள் புரிந்த தீவினை பயன்தர வந்தது; போர்புரிய எண்ணுவிரேல் இறந்துபடுவீர்; இனிநீங்கள் செய்வதை ஆலோசியுங்கள் என்று கூறினள் என்க. திறம்புதல் - மாறுபடுதல்; 'அறந்திறம்பு மென்றையன யோத்தியிற் பிறந்த

பின்பும் பிரிவிலளாயினள்' (அயோத்தி. நகர்நீ. 223) 'பொலீஇர்-குலம் பொல்லேன் குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்' (தேவா. 230,9.) என்றது காண்க.

இச்செய்யுளின் கருத்தையே கொண்டு இலக்குவன் பின், 625 இல் கூறுவது காண்க.

பி - ம். 1. செதைத்திர் செய்ந்நன்றியின், திறம்பி நீர்மை.
2. நங்கள்; நேர்தலால்.
3. மறஞ்செய் வானிங்கு வந்தனன் மற்றினி
4. போழ்தத்தின்,

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும்ஓர் அதிகப்பாடல் காணப்படுகிறது

'நீளு மால்வரை யின்னெறி தான்கடந்
தூழி காலத் தொருமுத லாகிய
ஆழி நாதனுக் கன்புடைத் தம்பியாம்
மீளி தான்வரும் வேகத்துக் கஞ்சியே. (32)

குரங்குகள் தலைநகர்வாயில்களை அடைத்தல்.

585. கோளு றுத்தற் கரிய குரக்கினம்
நீளெ ழுத்தொ டருந்நெடு வாயிலைத்
தாளு றுத்தித் தடவரை தந்தன
மூளு றுத்தி யடுக்கின மொய்ம்பினல்.

கோள் உறுத்தற்கு அரிய குரக்கு இனம்-எளிதிற் கொல்ல முடியாத குரங்குத் தொகுதிகள், நீள் எழு தொடரும் நெடுவாயிலை - நீண்ட இரும்புக் கம்பங்கள் இடுதற்குரிய உயர்ந்த நகரத்து வாயிற் கதவை, தாள் உறுத்தி-(உட்புறம்) தாழ்க்கோலிட்டு, மொய்ம்பினல்-(உடல்) வன்மையால், தடவரை தந்தன மூளுறுத்தி அடுக்கின-பெரிய கற்பாறைகளை எடுத்து வந்து (ஒன்றன் மேல் ஒன்றுக அக்கதவை யொட்டி) அடுக்கின.

இது கவிக்கூற்று. வாயிற்கதவைத் தாளிட்டு, உழலைக்கட்டையைச் செருகி, மேலும் பாறைகளை ஒன்றின்மேல் ஒன்றுக அடுக்கின என்க. குரங்கு இனம், மென்றெடராகலின் வலித்தது. தாள் உறுத்துதல்-தாழக் கோலையிறுக்குதல். மொய்ம்பு - வலி, எழு ; 'எழுவினு முயர்ந்த தோளாய்' (அயோத்தி : குக. 33); 'இருப்பெழுவமைந்த கன்மதில் (சீவக : 81). எழு, கதவின் குறுக்கே காவலாகப் போடப்படுவது ;

'திண்ணெழுப் போக்கிச் காப்புள்ளுறுத்த கடிமதில் வாயில்' (பெருங்: உஞ்சைக், 43, 163-4); இதனை உழலை மரம் என்றும் கூறுவர். கோள் உறுத்தற்கு அரு நெடு வாயில் - தீங்கிழைத்தற்கு அருமையான வாயில் என இணைத்தலுமாம்.

பி - ம். 1. சூரிய குரங்கினம். 2. நீளுறத்தொடரும்.
3. நடவரை யாநிய.
4. அடுக்கிய, அடக்கின; முன்பிறுல். (33)

குரங்குகள் போர்க்குச் சித்தமாதல்

586. சிக்கு றக்கடை சேமித்த செய்கைய
தொக்கு றுத்த மரத்த துவன்றின
புக்கு றுக்கிப் புடைத்து மெனப்புறம்
மிக்கி றுத்தன வீரனு மேயினுன்.

கடை சிக்குற சேமித்த செய்கைய - (இவ்வண்ணம்) கோட்டை வாயிலை உறுதியாகப் பாதுகாத்துக்கொண்ட செயலினவான குரங்குகள், புக்கு உறுக்கி புடைத்தும் என - (ஒரு வேளை இக் கடைவாயிற் கதவினை யும் மீறி இலக்குவன் உள்ளே புகுந்தால்), அவன் எதிரே சென்று அவனை அதட்டி, அடிப்போம் என்று நினைந்து, தொக்குறுத்த மரத்த - (முறித்துத்) தொகுத்துக்கொண்ட மரங்களையுடையனவாய், துவன்றின- நெருங்கி, புறம் மிக்கு இறுத்தன - கோட்டை மதிற்புறத்தில் பெருந் திரளாய்ச்சென்று தங்கின; வீரனும் மேயினுன் - இலக்குவனும் வந் தடைந்தான்.

சிக்குற - இறுக. 'செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்' (ஆரணிய; 873). சிக்க - அகப்பட (நச். உரை); இஃது ஓர் திசைச் சொல்; குடநாட்டில் வழங்குகின்றது. கடை - கோட்டை வாயில் (சீவக. 16). 'கணவனையிழந்தாளென் கடையகத் தாளே' (சிலப். 20, 28). 'பிறன் கடைச் சென்றாரிற் பேதையாரில்' என்றதும் (குறள் 142) காண்க.

பி - ம். 1. திக்குறக்கடை; செய்கையால், செய்கையர், செய்கையை.
3. தொக்குறுக்க, அவன்றின வன்றியும், தொக்கிறுத்த மரத் தொகைச் சூழலால்.
3. புக்கிறுக்கிற், புக்குறுத்திப் புடைபெய ராவகை, புக்குறுத்துப் புடைத்து.
4. மிக்கடைத்தனர்: வெற்பு மிறுத்தன, வெற்பு நிறுத்தன, மேவினுன்.

இதன்பின் ஓர் அதிகப் பாடல். ஒரு சுவடியில் காண்கிறது.

மேவி னுன்கடை சேமித்த மென்மைகண்
டோவி லாமனத் துன்னின னெங்கள்பால்
பாவி யார்கடம் பற்றிது வோவெனுத்
தேவ ரானுஞ் சினத்தொடு நோக்கியே. (34)

இலக்குவன் சினம்

**587.** **காக்க வோகருத் தென்று கதத்தினுல்**
**பூக்கு மூரற் புரவலர் புங்கவன்**
**தாக்க ணங்குறை தாமரைத் தாளினுல்**
**நூக்கி னுனக் கதவினை நொய்தினின்.**

குரங்குகள் கூட்டம் கூடிக் கோட்டை வாயிலை யடைத்தமை நோக்கி, கதத்தினுல் மூரல் பூக்கும் - சினத்தால் எழுந்த முறுவல் மலரப்பெற்ற, புரவலர் புங்கவன் - மன்னரில் மேம்பட்டவனுன இலக்குவன், 'காக்கவோ கருத்து என்று - நம்மிடத்தினின்று தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவோ இவர்கள் கருதியது'? என்று எண்ணி, தாக்கணங்கு உறை தாமரை தாளினுல் - வெற்றித்திருமகள் வீற்றிருக்கும் செங்கமலம் போன்ற (தனது) திருவடியினுல், அ கதவினை நொய்தினின் நூக்கினுன் - அந்த வாயிற் கதவினை முயற்சியின்றித் தள்ளினுன்.

தாக்கணங்கு; இதன் குறிப்பை 470-ல் காண்க. கதம் - மிக்க சினம்; ஆரணிய. 300, 494; 'கதந்தலையழியக் கந்தொடார்த்து (பெருங். உஞ்சைக்:44, 62). பூக்கு மூரல்-வீரத்தெழுந்த வெகுளி நகை. (ஒப்பு) அயோத்தி, நகர் நீ. 117. நூக்குதல் - உதைத்துத் தள்ளுதல்; 'நூக்கலாகாத காதல்' (ஆரணிய. 643); 'மகளிர் நூக்கப்பரிந்தகாசு' (சீவக. 922); 'குத்திநூக்க வேலிலிரோ' (தக்கயாகப். 225.)

பி - ம். 2. *பூக்க மூரலுடைத் தனிப் புங்கவன்.*
3. *நொய்தினுல்.* (35)

இலக்குவன் திருவடிபடக் கதவுஉடைதல்

**588.** **காவன் மாமதி லுங்கத வுங்கடி**
**மேவும் வாயி லடுக்கிய வெற்பொடும்**
**தேவு சேவடி தீண்டலுந் தீண்டரும்**
**பாவ மாமெனப் பற்றழிந் திற்றவால்.**

தேவு சேவடி தீண்டலும் - தெய்வத்தன்மை வாய்ந்த சிவந்த திருவடிகள் பட்டவளவில், காவல் மாமதிலும் - நகர்க் காவலாக அமைந்த அந்தப் பெரிய மதிலும், கதவும் - அதன் கதவும், கடிமேவும் வாயில் அடுக்கிய வெற்பொடும் - காவல் அமைந்த அந்த வாயிற்கதவை ஒட்டி அடுக்காக அமைத்த மலைகளோடும், தீண்டு அரும் பாவம் ஆம் என - அணுகற்கும் கூடாத தீவினைகள் போல, பற்று அழிந்து இற்ற - பிடிப்பின்றி முழுவதும் அழிந்தொழிந்தன. ஆல் - அசை.

தேவு-தெய்வம்; 'தேவு பொன்றலை சிந்துக நீயென' (சுந்தர.'627); 'தேவாதிதேவன்' (சீவக. 1); 'தேவுமாதவற்றெழுது' (பால. கையடை: 24); 'தேவிற் றிருமாலெனச் சிறந்ததென்பவே, பாவிற்கு வள்ளுவர் வெண்பா' (திருவள்ளுவ. 36). தீண்டுதல் - தொடுதல்; 'தீண்டாத கற்புடைய செழுந்திருவைத் துகிலுரிய' (வி.பா. கிருட்டினன் 24.): தேவுசேவடி; பந்தித்து நின்றபழவினை தீர்ப்பன பாம்புசுற்றி யந்திப் பிறையணிந்தாடுமையாறன் அடித்தலமே' (தேவா.: திருவையாறு): என்றது கொண்டு திருவடிப் பெருமை உணர்க. 'கைவண்ணமங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக் கண்டேன்' (பால. அகலிகை: 82): என்பன விசுவாமித்திர முனிவன் இராமபிரான் பெருமையைக் கூறிய அடிகள்; 'இருவினையும் துப்புறநீத்தனைய சுடர்த் திருவடியாற் றுடைத்தாய்நீ' (ஆரணிய. 61): என்பது விராதன் கூற்று. பாவமாகிய வினைகளுக்கு மலைகள் உவமிக்கப்பட்டன. (ஒப்பு.) 'குழி நிரம்பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்பழிமுதல் பறிப்பார் போல' (பெரியபுரா. இளையான்குடி 21).

பி - ம். 2. வாயி னடுக்கிய.
3. தேவர்சேவடித்; திண்டிறற்.
4. பாறிப் பறந்ததால், பற்றழிந் திற்றதால். (36)

589. நொய்தி னேன்கத வும்முது வாயிலும்
செய்த கன்மதி லுந்திசை யோசனை
ஐயி ரண்டி னளவடி யற்றுக
வெய்தி னின்ற குரங்கு வெருக்கொள.

நோன் கதவும் - வன்மைபொருந்திய அந்தக் கதவும், முது வாயிலும் - பழமையான அந்த நகர வாயிலும், கல்செய்த மதிலும் - கற்களடுக்கிக் கட்டப்பட்ட மதிலும், நொய்தில் - எளிதில், அடி அற்று - அடிப்படை அழிந்து, திசை - திக்குக்களில், ஐ இரண்டு யோசனையின்

அளவு - பத்து யோசனை நீளம் வரையில், உக - சிதற, குரங்கும் - (போர்க்கு ஆயத்தமாக நின்ற) வானரங்களும், வெரு கொளா - அச்சம் கொண்டு, வெய்தின் நின்ற - மனம் கொதித்து நின்றன.

நோன்மை -வலிமை; ' நொய்தினிவ் வுலகெலா நுழையு நோன்மை யான்' (ஆரணிய. 229); மற்றும் ஆரணிய. 1116; புறநா. 14. முன்னரே காப்பாக அமைந்த கல் மதிலும், பின்னர் வானரங்கள் பாறைகளை அடுக்கிச்செய்தனவும் 'செய்தகன் மதில்' என்பதில் அடங்கும். அடியற்ற - முழுவதும் குலைந்து; 'அடியற்ற மரம்போல்' என்றது காண்க. யோசனை மூன்று மைல் என்றும், ஏழரை மைல் என்றும், பத்து மைல் என்றும் கூறுவர். 'யோசனையிரண்டு சென்ருல்' 'கீண்டானில மோசனை கீழ்புடையே, (ஆரணிய.878); இஃது ஓசனை யெனவும் வழங்கும். கொளா - கொண்டு; செய்யா என்னும் வாய்பாடு. நொய்தின், வெய்தின் என்ற முரண்களின் நயம் காண்க.

பி - ம். 1. *நொடிவாயிலும், முனிவாயிலும், நதிவாயிலும், நுழைவாயிலும், நுழை வாசலும்.*
2. *திண் மதிலும், தசயோசனை.*
3. *யிற்றுக, யிற்றதால்.*
4. *வெய்து நின்ற, வெய்து நீண்ட ; வெருக்கொள,* (37)

குரங்குகள் வெருக்கொண்டோடுதல்.

**590.** பரிய மாமதி லும்படர் வாயிலும்
சரிய வீழ்ந்து தகர்ந்த முடித்தலை
நெரிய நெஞ்சு பிளக்க நெடுந்திசை
இரிய லுற்றன விற்றில வின்னுயிர்.

பரிய மாமதிலும் - பருத்துயர்ந்த மதிலும், படர் வாயிலும் - அகன்ற அந்நகர வாயிலும், சரிய வீழ்ந்து - சாயும்படி வீழ்ந்து, தகர்ந்த- சிதறின; முடிதலை நெரிய - அம் மதில்களின் தலைப்பக்கம் நொறுங்கவே, (அம் மதிலகத்து நின்ற குரங்குகள்), நெஞ்சுபிளப்ப - மனம் உடையப் பெற்று, இன்உயிர் இற்றில - இனிய உயிர் அழியப்பெருமல், நெடு திசை இரியல் உற்றன - நீண்ட திக்குகளில் தனித்தனிப் பிரிந்து செல்லலுற்றுத் தப்பின.

முடித்தலை - இங்கே மதில்களின் சிகரம். நெரிய; ' நெரிந்து பார் மகள் நெளிவுற ' (ஆரணிய. 447.); மற்றும் (588, 600) காண்க;

உயிர்ப்பைத் தவிர வேறு உடலில் ஒன்றுமில்லாம லாயினர் என்பது தோன்ற, 'இன்னுயிர் இற்றில இரியலுற்றன' என்றார். இரிதல் - நிலைகெட்டோடுதல்; ஆரணிய; 473, 886 பொருள் உவமை.

பி - ம். 1. *பரியயா மதிலும், மதிளும்; வாசலும், வாயிலிற்.*
2. *சரிய வீழ்ந்து; தடிந்தின், தடத்தின், தடித்த விடித்ததும், தடிப்பி னடித்தலே.*
3. *பிளந்த, பிளக்க.*
4. *இரிய லுற்றன; வானரம் யாவுமே; விற்றன வின்னுயிர்;* (38)

591. பகர வேயு மரிது பரிந்தெழு
புகரில் வாநர மஞ்சிய பூசலான்
சிகர மால்வரை சென்று திரிந்துழி
மகர வேலையை யொத்தது மாநகர்.

பரிந்து - மிகவும் வருந்தி, எழு - இருப்பிடம் விட்டு ஓடிய, புகர் இல் வாநரம் - குற்றமற்ற குரங்குகள், அஞ்சிய பூசலான் - பயந்து இட்ட பேரொலியினால், மாநகர் - சிறந்த அந்தக் கிட்கிந்தை நகரம், சிகரம் மால்வரை சென்று திரிந்துழி - சிகரங்களையுடைய பெரிய (மத்தாகிய) மந்தரகிரி புக்குச் சுழன்றபோது, மகரம் வேலையை ஒத்தது- (பேரிரைச்சலிட்ட) சுறாக்களையுடைய ஆழியைப் போன்றது; (இது) பகரவேயும் அரிது - எடுத்துச் சொல்லுதற்கும் அருமையாக ஆயிற்று.

புகர் - குற்றம் - 'புகரற விளங்கும் பொற்பில்' (உயுத்த இலங்கை காண்: 37). சிகரமால்வரை - மந்தரமலை; இது பாற்கடல் கடைதற்கு மத்தாக அமைந்த தென்பர்; உவமையணி. மகரம்-சுறாமீன். முன்பு இத் தகைய துயர் எய்தியதில்லை யென்பார் பகரவேயுமரிது என்றார்.

பி - ம். 1. *பகர வேது மரிது, பரித்தெழும், பரந்தெழு.*
2. *புகரில் வானவர் தானவர் பொங்கியே;*
4. *ஒத்ததவ் வானமே.* (39)

592. வான ரங்கள் வெருவி மலை யொரீஇக்
கானெ ருங்கு படரவக் கார்வரை
மீனெ ருங்கிய வானக மீனெலாம்
போன பின்பொலி வற்றது போன்றதே.

வாநரங்கள் - குரங்குகள், வெருவி - அஞ்சி, மலை ஓரீஇ - அந்தக் கிட்கிந்தை மலையை நீங்கி, ஒருங்கு கான் படர - ஒன்றுகூடி அருகில் உள்ள காடுகளிற் சென்றதனால், அ கார் வரை - அந்த மேகங்கள் தவழப்பெற்ற மலையானது, மீன் நெருங்கிய வானகம் - நட்சத்திரங்கள் அடர்ந்து நெருங்கிய ஆகாயம், மீன் எலாம் போனபின் பொலிவு அற்றது போன்றது - அந்த நட்சத்திரங்கள் யாவும் நீங்கினபின்பு விளக்க மற்றிருந்ததை நிகர்த்தது.

அச்சத்தால் வாநரங்கள் நீங்கப்பெற்ற அந்தக் கிட்கிந்தைமலை, நட்சத்திரங்கள் நீங்கப்பெற்ற வானத்தைப்போல அழகற்றிருந்தது. இங்கே வெண்ணிறக் குரங்குகட்கு நட்சத்திரங்கள் உவமை; 'வீங்கு நீர், தாவுதண்மதி தன்னொடுந்தாரகை, யோவு வானமும் போன்றது' (பால' புனல்; 31) என்பதை இங்கு ஒப்புக் காண்க. கார்வரை - கரிய மலையுமாம்; 'கார் வரை நிறுவித் தன்னைக்கனலெழக் கலக்கக் கண்டும், ஆர்கலி அமரருய்ய வமிழ்து பண்டளித்த தன்றே' (உயுத்த விபீடண. 128.)

பி - ம். 1. மலைந்தொரீஇ.
2. கானின் மேற் கடிதோட வக்கார்வரை; கானமெங்கும் படர்வவக்.
3. நெருங்கின, மீனெருங்கிய வானக மீதெலாம். பொலிவுற்றது. போன்மரோ; (40)

இலக்குவன் புகுந்ததும் அங்கதன் முதலினோர் கவற்சியும்.

593. அன்ன காலையி னண்டகை யாழியான்
பொன்னி னன்னகர் வீதியிற் புக்கனன்
சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றவர்
என்ன செய்குவ தெய்தின னென்றனர்.

அன்ன காலையின் - அந்தப்பொழுதில், ஆண்தகை ஆழியான் - ஆண்தன்மை மிக்க இராமபிரானுடைய ஆஞ்ஞாசக்கரமே போன்ற வனான இலக்குவன், பொன்னின் நல்நகர் வீதியில் புக்கனன் - அழகிய சிறந்த அந்தப்பட்டணத்து வீதியிற் புகுந்து சென்றான்; (அது கண்டு), சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றவர் - (முன்னரே எச்சரிக்கையான வார்த்தைகளைத் தம்மிடம்) கூறிய தாரையைச் சூழ்ந்து நின்றவர்களான அங்கதன் முதலானவர்கள், (பயந்து அத் தாரையை நோக்கி), 'எய்தினன் - வந்துவிட்டானே! என்ன செய்குவது- நாம் இனிப்புரிவது யாது?' என்றனர் - என்று (இரங்கிக்) கூறினார்கள்,

முன்னர் (564) பாடலில், 'ஆணையினேகுவான்' என்றதற் கேற்ப இங்கே ஆண்டகை 'ஆழியான்' என்றமை காண்க. இனி, ஆழி யான்-இராமபிரானுடைய சக்கரப்படை போன்றவனுமாம். 'கண்டு காணுன் படைவலி நீயும் அத், தண்டு கொண்டவர் சக்கரம் வந்ததே' என்பது கலிங்கத்துப்பரணி. ஆண்டகை; ஆரணிய: 153; சுந்தர: 557, 562, 1253. பல குரங்குகள் மலையை நீங்கிக் கானிற் புக, நகரத்தில் தாரையைச் சுற்றி நின்ற வானர வீரர்கள் செய்வதறியாது திகைத்தனர். இன்னுன் எனக்குறியாமல் 'எய்தினன்' என்று கூறியது இலக் குவன் பெயரை உச்சரித்தற்கும் அஞ்சி என்க.

பி - ம். 1. ஆண்டகை யாளியும்; வீரனப்.

2. சூழ்ந்தங்கு நின்றனர், சுற்றினர் நின்றனர்.

3. என்ன செய்வதே தெய்தின னென்றனர், தெய்தின வீக் கென்றூர்.

இதன்பின் ஓர் அதிகப் பாடல் சில சுவடிகள் காணப்படுகின்றன.

அன்ன காலை யருந்ததிக் கற்பினுள்
மன்ன ரேறு வருங்கருத் தோர்ந்தவன்
துன்னு கோபந் துடைக்குறுஞ் சூழ்ச்சியொன்
றுன்னி யாங்கவ ருக்குரை யாடினுள்.'

மற்றும் ஓர் அதிகப்பாடல் பின்வருமாறு :

'அனைய னுள்ளமு மாய்வழி யாதலால்
மனையின் வாயில் வழியினை மாற்றினுல்
நினையும் வீரனங் நீணெறி நோக்கலன்
வினைய மீதென் றநுமன் விளம்பினுன்.

[இலக்குவன் நகருட் புகுதலும் அங்கதன் முதலியோர் தாரையை நோக்கி 'என் செய்வது' என்ற வளவில், இன்ன காரியம் உடன் செய்யத் தக்கது என்று நன்கறிந்தவள் தாரையாதலின், அநுமன் கூறியனவாகிய இப்பாடல் மிகையாகும். அரசியற்றுறையில், வாலிக்கும் அறிவுரை கூறக்கூடிய ஆற்றல் சான்றவள்அவள் என்பது, அவன் முதல்முதல் சுக்கிரீவனெடு பொர வெழுந்தபோது அன்னுன் கூறிய சொற்களாற் பெறப்படும். மேலும் இப்பாடலை நீக்கியதால் கதைத் தொடர்பு கெடாமையும் உய்த்துணர்க.] (41)

மகளிருடன் தாரைசெல்லுதல்

594. நீரெ லாமய லீங்குமி னேர்ந்தியான்
வீர னுள்ளம் வினவுவ லென்றலும்
பேர நின்றனர் யாவரும் பேர்கலாத்
தாரை சென்றன டார்குழ லாரொடும்.

(வாநரவீரர்களை நோக்கித் தாரை), 'நீர் எலாம் அயல் நீங்குமின்; நீங்களெல்லோரும் அப்பால் அகலுங்கள்; யான் நேர்ந்து - நான் இலக்குவனைச் சந்தித்து, வீரன் உள்ளம் வினவுவல் - வீரனான அவனுடைய எண்ணம் இன்னது என்பதைக் கேட்டறிவேன்'; என்றலும்- என்று மொழிந்த அளவில், யாவரும் பேர நின்றனர் - அந்த வாநர வீரர்கள் எல்லோரும் ஒதுங்கி நின்றனர்; (உடனே), தாரை - தாரையானவள், பேர்கலா - பின்னிடாமல், தார்குழலாரொடும்-மலர் அணிந்த கூந்தலையுடைய தோழிமாருடன், சென்றனள் - போயினாள்.

'பெண்ணாகிய என்னை முகமெடுத்தும் பாரான், அவனது வெகுளியையும் காட்டான்' என்று துணிந்தாளாகலின், 'வீரன்' என்றாள்; 'பிறர் மனை நோக்காத பேராண்மை' (குறள்: 148); 'கோட்டியுள் மாதர் குவிமுலை நோக்குவோன் ஒட்டைமறவன் உரமிலி' என்றமை நோக்குக. இனித்தார் குழலார் என்று தோழிமார்களைக் கூறித் தாரை என்று வாளாது கூறியது, மலரணியத்தகாத அவளது தாபத நிலையை நோக்கி என்க. பின்னரும், 'மங்கல வணியை நீக்கி மணியணி துறந்து வாசக், கொங்கலர் கோதை மாற்றிக் குங்குமச் சாந்தம் கொட்டா' (603) எனஅவளது விதவைக் கோலத்தை ஆசிரியர் வருணித்தல் இங்கே காணத்தகும். இங்கு, சுமித்திரை இலக்குவன் வனம் புகற்கு விடை யருளியபோது 'போகாதவுயிர்த் தாயர் பூங்குழற்சீதை யென்றே யேகாய்' (அயோத்தி: நகர் 151) என்று மொழிந்த வரிகள் நினைவு கூரத்தகும். தயரதன்மனைவியர் இனி பூ முடிக்க நேராது என்றும், பூ முடிப்பவள் பிராட்டி ஒருத்தியே யென்னும் குறிப்புத் தோன்றப் பூங்குழற் சீதை என்றாள் என்க'

பி - ம். 1. வேர்ந்தயான், நோக்கியான், னேயியான்;

2. வினவுவ லென்றதும்

3. நின்றவர் யாவரும். பேர்கிலாத்;

4. தாழ் குழலாரொடும்.

இதன்பின் ஓர் அதிகப்பாடல்.

'அன்னை போனபின் னங்கதக் காளையைத்
தன்னை நேரில் சமீரணன் காதலன்
இன்ன நீசென் றிருந்துயி னீக்கென
மன்னன் வைகிடத் தேகலன் மாசிலான்.' (42)

தாரை வழிமறித்து உரையாடல்

595. உரைசெய் வானர வீர ருவந்துறை
அரைசர் வீதி கடந்தகன் கோயிலைப்
புரசை யானையன் னுன்புக லோடுமவ்
விரைசெய் வார்குழற் றூரை விலக்கினுள்.

புரசை யானை அன்னான் - கழுத்திடு கயிற்றையுடைய யானையை ஒத்த இலக்குவன், உரைசெய் வானரவீரர் உவந்து உறை அரைசர் வீதி கடந்து - புகழப்படுகின்ற வானரவீரர்கள் களித்து வாழுமிடமான இராச வீதியைத்தாண்டி, அகல் கோயிலை புகலோடும் - (சுக்கிரீவனுடைய), பரந்த அரண்மனையைநோக்கிப் புகுந்தானாக, அ விரை செய் வார் குழல் தாரை - இயற்கை நறுமணம் கொண்ட நீண்ட கூந்தலையுடைய அந்தத்தாரை, விலக்கினாள் (இலக்குவனைக்) குறுக்கிட்டுத் தடுத்தாள்.

புரசை - யானையின் கழுத்திடு கயிறு; 'ஆய்மணிப்புரசையானை' சுந்தர: 64 ; இன்னும் பால; நகர; 7; பெருங்கதை 3. 20; 64. செயற்கை மணம் செய்யும் மலர் தவிர்ந்த நிலையிலும், அவள் கூந்தலின் இயற்கை மணம் கமழ்ந்தது என்பார், 'விரைசெய்வார் குழற்றூரை' என்றார்; விரைசெய்-மணம் கமழ்கின்ற; 'விரைசெய்க மலப் பெரும்போது' (பால; மிதிலைக்; 75). விலக்குதல் - குறுக்கிட்டு மறித்தல்.

பி - ம். 2. கோயிலிற் ; கடந்தன னுயிடை.
3. புகுமவ்வழி.
4. தண்குழற்; விலக்குவாள், விலக்கினுள். (43)

596. விலங்கி மெல்லியல் வெண்ணகை வெள்வளை
இலங்கு நுண்ணிடை யேந்திள மென்முலைக்
குலங்கொ டோகை மகளிர் குழாத்தினுல்
வலங்கொள் வீரன் வரும்வழி மாற்றினுள்.

விலங்கி - குறுக்கிட்டு, மெல் இயல் மிருதுவான தன்மைவாய்ந்த தாரை, வெள்நகை - வெள்ளிய பற்களையும், வெள்வளை-வெண்ணிற

மான வளைகளையும், இலங்கும் நுண்இடை - (மின்னல் போலும்) ஒளிர்கின்ற (கட்புலனுகாத) நுட்பமான இடையினையும், ஏந்து இள மெல் முலை - உயர்ந்து விளங்கும் இளமையான மெல்லிய தனங்களையும், குலம் கொள் தோகை - சிறந்த மயில் போலும் சாயலையும் கொண்ட, மகளிர் குழாத்தினுல் - வாநர மாதர்களின் குழுவைக்கொண்டு, வலம் கொள்வீரன் - வலப்புறமாக வந்த வீரன், வரும் வழி மாற்றினுள் - வந்து கொண்டிருந்த வழியைக் குறுக்கே நின்று தடுத்தாள்.

மெல்லியல் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. இனி மெல்லியல் என்ற சொல்லையும் மகளிர்க்கே யேற்றித் தாரையைத் தோன்று எழுவாயாகக் கொள்வர் ஒருசாரார். சங்கினுற் செய்தவளை மகளிர் அணிவராதலின் வெள்வளையென்றுர். இல்லை யுண்டென்கின்ற இடையென்பா ராதலின், இலங்கு என்பதற்கு விளங்கும் எனக்கூருது நூல்போலும் ஒளிரும் என்றுரைக்கப்பட்டது. குலம்கொள் தோகை. 'மலைக்குல மயில்' 249. என்றது காண்க. வலங்கொள்வீரன் - வெற்றி கொண்ட வீரனுமாம். "விலங்கு என்ற பாடம் கொண்டு, விலங்கு மகளிர் - வாநர மகளிர் எனினும் ஒன்றும். முதலடி முற்றுமோனை.

இனி, இச் செய்யுட்கு, 'மாற்றினுன்' என்ற பாடங்கொண்டு, குழாம் வருவதைக் கண்டு, விளங்கித் தான் வலமாக வந்து கொண்டிருந்த வீரன், தான் வந்தவழியை மாற்றிக் கொண்டு இடமாகச் சென்றுன் என்று கொண்டால், அதுகண்டு இடப்புறமாக அவனைச் சென்று குறுக்கிட்டவர்கள் வலப்புறமாகச் சென்று காண விழைந்தார்கள் என்றும் கொள்ளலாம். (44)

பி - ம். 1. *விலங்கு, விலங்க, விலங்கல்; வெண்மதி, வெண்ணகை.*
2. *ஏந்து மிளமுலை, எந்திளம் பூண்முலை; எந்திள வெம்முலை.*
3. *குலர் தொடர்ந்த மகளிர்; குழாத்தொடும்.*
4. *வலங்கொள் வீதி நெடுவழி மாற்றினுன், வீரன் வருவழி மாற்றினுள்.* (44)

597. வில்லும் வாளு மணியொடு மின்னிட
மெல்ல ரிக்குரன் மேகலை யார்த்திடப்
பல்வ கைப்புரு வக்கொடி பம்பிட
வல்லி யாயம் வலத்தினில் வந்ததே.

வில்லும் - வில்போன்ற வளைந்த ஒளிகளும், வாளும் - வாள் போன்ற நீண்ட ஒளிகளும், அணியொடு மின்னிட - (பூண்டுள்ள

ஆபரணங்களோடும் மின்னல்போன்று ஒளிவீச, மெல் அரிகுரல் - மெல்லிய (சிறிய) பரல்களையுடைய பாதச் சிலம்புகளின் ஒலியும், மேகலை (குரல்) - மேகலை யென்னும் இடையணியின் ஒலியும், ஆர்த்திட - (போர்ப்பறையாகப்) பேரொலி செய்ய, பல்வகை புருவம் கொடி - பலவகைப்பட்ட புருவங்களாகிய போர்க்கொடிகள், பம்பிட - நிரம்பி நிற்கவும், வல்லி ஆயம் - மகளிர் தொகுதியான சேனை, வலத்தினில் வந்தது - வலிமையுடன் வந்து (இலக்குவனைச்) சூழ்ந்து கொண்டது.

இதுவும் அடுத்த செய்யுளும் தாரை இலக்குவனை வணக்குதற்குச் சென்றதைத் திறம்படக் கூறியவை. வில், வாள் - போர்க்கு வில்லும் வாளும் இன்றியமையாதனவாகலின் அவ்விரண்டையும் குறித்தார். குரக்குச் சேனை, பாறையும் மரங்களும் கொண்டு பொருவதன்றி, வில் வாள் கொண்டுபொருவதின்மை உணர்க. அரி-சிலம்பினுட்பரல். சிலம்புதல் அல்லது ஒலித்தல் காரணமாகச் சிலம்பு என்பது காரணக்குறி; 'சீறடிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப' (சீவக. 2019) என்றது காண்க; அரி, மேகலை என்ற இவற்றின் ஒலியை போர்ப்பறை யொலியாக அமைத்தார். 'ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா' (நள: 34) என்றது காண்க. 'செருக்குரற் சிறுபறை சிலம்பு கிண்கிணி, யரிப்பறை மேகலையாகி யார்த்தவே' (சீவக. 2688) என்றமை காண்க. இச் செய்யுள் உருவகம், சிலேடையை 'உறுப்பாகக்' கொண்டுவந்தது. மேல் அரி என்பது பண்புத் தொகை யன்மொழியாய்ச் சிலம்பினைக் குறித்து நின்றது.

பி - ம். 1. *மணிதொறும், மதியொடு.*
2. *யார்த்தெழ, யார்த்தென.*
4. *வலத்தொடும் வந்ததே ; வல்லியாய வருதினி வந்ததே.* (45)

598. ஆர்க்குநூ புரங்கள் பேரி
யல்குனற் றடந்தே ரோத்த
போர்க்கண்வெம் புருவம் வில்லா
மெல்லியர் வளைந்த போது
பேர்க்கருஞ் சீற்றம் பேர
முகம்பெயர்ந் தொதுங்கிற் றல்லால்
பார்க்கவு மஞ்சி னனைப்
பருவரை யனைய தோளான்.

ஆர்க்கும் நூபுரங்கள் - ஒலிக்கும் காற்சிலம்புகள், பேரி - பேரிகை களாகவும், ஒத்த அல்குல் நல் தடதேர் - இரு புடையும் ஒத்த அல்குல் சிறந்த பெரிய தேராகவும், வெம் புருவம் போர்கண் வில்லா - விரும் பத்தக்க புருவங்கள், போரிடத்து வில்லாகவும் (கொண்டு), மெல்லியர் வளைந்த போது - மகளிராகிய சேனை தன்னைச் சுற்றிநின்றபோது, அ பருவரை அனைய தோளான் - பருத்த மலைபோலும் உயர்ந்த புயங்களை யுடைய அவ்விலக்குவன், பேர்க்க அரு சீற்றம் பேர-எவராலும் போக்க இயலாத (தன்) சினம் நீங்கப்பெற்று, முகம் பெயர்ந்து ஒதுங்கிற்று அல்லால் - தன் முகத்தை மாற்றித் திரும்பிய தல்லாமல், பார்க்கவும் அஞ்சினன் - அம் மகளிரைக் கண் எடுத்து நோக்கவும் பயந்தான்.

நூபுரம் - சிலம்பு ; சுந்தர: 108, 409. அல்குற்குத் தேர்த்தட்டைப் பல விடங்களில் உவமையாக அமைப்பர் ஆசிரியர்; 'தேர்தந்தவல்குற் சீதை' (ஆரணிய 31); 'பாராழிப்பிடரிற்ரேன்றும் பாந்தளும் பனிவென் ரேங்கும், ஒராழித் தேரும் கண்ட உனக்கு நானுரைப்ப தென்னே' 756. பார்க்கவும் அஞ்சினன் என்ற உம்மையால் அவர்களுடன் பேசு வதைப்பற்றிய எண்ணமே யில்லாதவன் என்க. பருவரை யனைய தோளான் என்று இலக்குவனுடைய உடல் தோற்றம் வலிமைகளைக் கூறிய ஆசிரியர், அவர்களைப் பார்க்கவும் அஞ்சினன் என்றது அவன் 'பிறர் மனை நோக்காத பேராண்மை' சான்றவன் என்பதை விளக்கி நின்றது; 'திறனறிந் தேதிலா ரிற்கண் குருடனுய்' (நாலடி: 158); என்றமை போல. சுக்கிரீவன், பிராட்டியார் தன்னை இராவணன் விண் வழி யெடுத்துச் சென்றபோது களைந்து எறிந்த அணிகளைக் காட்ட, இலக்குவன் பிராட்டியாரின் கேயூரமும் குண்டலமும் தான் கண்ட தில்லை யென்றும், அண்ணன் மனைவி அன்னையொப்பாள் ஆகலின், அவளை நாடோறும் பணிந்து வருவ துண்டென்றும், அங்ஙனம் பணி யுங்கால், அண்ணி யாரது காற்சிலம்பைக் கண்டுள்ளானுதலின், அந்த அணியைமட்டும் தான் அறிந்திருந்ததாகவும் கூறிய, 'நாகம் ஜானுமி கேயூரே, நாகம் ஜாநாமி குண்டலே' என்ற வான்மீக ஸ்லோகம் இங்கே காணத்தக்கது. இந்தக் கருத்தினைக் கம்பர் தமது காவியத்தில் அங்குக் குறித்திலரேனும், உத்தரகாண்டத்தில் இந்தக் கருத்து ஒருவா றமைந்திருத்தல் கண்டு மகிழ்தற்குரியதாகும். அச்செய்யுள் பின் வருமாறு.

'கன்றியசிந் தையினுயுன் கணவனுனைக் கைப்பிடித்த
அன்றுமுத லின்றளவு முன்னுடைய வடிபணிந்தே
நின்ற பொழுதினுந் தூயோய் நின்மேனி கண்டறியேன்
இன்றுதா னுனைக்காண வல்லேனே வெனவுரைத்தான்.'

(உத்தர. சீதை வனம்புகு, 80)

மற்றும் தலைவியை உடன்கொண்டு சென்ற தலைவனை நோக்கி ஓர் செவிலித்தாய், தம்பதிகள் இருவரை வழியிற் கண்டிரோவெனக் கேட்கத் தலைவன், தான் ஓர் ஆடவனைக் கண்டதாக மட்டும் கூறிப் பின்னர் மனைவியை நோக்கித் 'தூண்டா விளக்கனையாய் என்னையோ அன்னை சொல்லியதே' (திருக்கோவை. 244) என்று வினவியதும் இங்கே குறிக் கொள்ளத்தக்கது.

பி - ம். 1. *ஞாபுரமாம் பேரி; ஞாபுரம் பல்பேரி, யல்குலக் தடந்தேர்.*

2. *வேற்கண் விற்புருவம், மடந்தையர், மிடைந்தபோது; வாட் கண் விற்புருவம் போர்ப்ப.*

3. *போர்க்கருஞ் சிற்றம் போக்கிப்பின்னர்.*

4. *பணையினும்; பெரிய தோளான்; பரிய, முயர்ந்த தோளான்,*

599. தாமரை வதனஞ் சாய்த்துத்
தனுநெடுந் தரையி லூன்றி
மாமியர் குழுவின் வந்தா
னாமென மைந்தன் நிற்பப்
பூமியி லணங்க னார்தம்
பொதுவிடைப் புகுந்து பொற்றோள்
தூமன நெடுங்கட் டாரை
நடுங்குவா ளினைய சொன்னாள்.

மைந்தன் - இலக்குவன், தாமரை வதனம் சாய்த்து - தாமரைமலர் போன்ற (தனது) முகத்தைச் சாய்த்துக் கொண்டு, (தலைகுனிந்து), நெடு தனு தரையில் ஊன்றி - பெரிய வில்லைப் பூமியிலே ஊன்றி, மாமியர் குழுவின் வந்தான் ஆம் என - மாமிமார் கூட்டத்தின் நடுவே அகப்பட்டவன் போல, நிற்ப - கூசி நின்றானாக, பொன் தோள் தூமனம் நெடுங் கண் தாரை - அழகிய புயங்களையும் அழுக்கற்ற மனத்தையும் நீண்ட கண்களையும் உடைய தாரையானவள், பூமியில் அணங்கு அனார் தம் பொதுவிடை புகுந்து - உலகின் கண்வந்த தேவ மகளிர் போன்றவர்களான அந்த வானர மகளிரின் கூட்டத்தினிடையே புக்கு, நடுங்குவாள் இனைய சொன்னாள் = நடுக்கத்துடன் பின்வரும் வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினாள். அவற்றை அடுத்த இரண்டு செய்யுட்களிற் காண்க.

இச்செய்யுட்கண் மருட்கையைச் சார்ந்த அச்சம் என்ற மெய்ப் பாட்டினைக் காணலாம். அந்த மெய்ப்பாட்டிற்கேற்ற உடல் நிகழ்ச்சி களாக வதனம் சாய்த்ததலையும், வில்லைத் தரைக்கண் ஊன்றியதையும் கூறினர். மைந்தன், இது மதலை எனவும் வழங்கும் ; 'சிதலைதினப்பட்ட ஆலமரத்தை மதலையாய் மற்றதன் வீழுன்றி யாங்கு' (நாலடி: 197), தந்தைக்குக் குதலைமை தோன்றின் அவனுக்குப் பக்கபலமாக இருந்து தாங்குதலின் மகனுக்குக் காரணக்குறி. மதலை என்ற சொற்குத் தந்தைக் குச் சார்தற்கு ஓர் தூண் போன்றவன் என்பது பொருள்; 'மதலையாஞ் சார்பிலார்க்கில்லை நிலை; (குறள்.449). என்றதும் காண்க. வேற்றுடவன் ஆகலின் நடுக்கமுற்றுக் கூறினள் என்க. நடுங்குவாள் ; முற்றெச்சம்.

பி - ம். 2. மாமியர் மருங்கின் வந்தான்.
3. பொலிவிடைப் புகுந்த ; குழுவொடும் புகுந்த.
4. தூய்மன நெடுங்கட் டாரை; தூமலர் நெடுங்கட்டாரை; நடுங்கின ளினைய சொன்னுள், சொல்வாள். (47)

600. அந்தமில் கால நோற்ற
வாற்றலுண் டாயி னன்றி
இந்திரன் முதலி னோர்க்கு
மெய்தலா மியல்பிற் றன்றே
மைந்தநின் பாதங் கொண்டெம்
மனைவரப் பெற்று வாழ்ந்தேம்
உய்ந்தனம் வினையுந் தீர்ந்தே
முறுதிவே றிதன்மே லுண்டோ.

'மைந்த - வீரனே ! (நீ திருவடிநோவ நடந்து வருவதென்பது), அந்தம் இல் காலம் நோற்ற ஆற்றல் - எல்லையற்ற காலம் நோன்பு புரிந் ததன் வன்மையால், உண்டாயின் அன்றி - உண்டானலல்லாமல், இந் திரன் முதலினோர்க்கும் - இந்திரன் முதலானவர்களுக்கும், எய்தலாம் இயல்பிற்று அன்றே -பெறக்கூடிய தன்மையதன்றே? (அவ்வாருகவும்), நின் பாதம் கொண்டு - உனது திருவடிகளால், எம்மனை வர பெற்று - எங்களுடைய இல்லத்துக்கு நீ எழுந்தருளப் பெற்றதனுல், வாழ்ந்தேம் - நல்வாழ்வு பெற்ரேம்; வினையும் தீர்ந்தேம் உய்ந்தனம் - (ஆகாமியம் பிராரத்தம், சஞ்சிதமாகிய) வினைகள் அனைத்தும் நீங்கப்பெற்றுப் பிழைத் தோம்; இதன்மேல் உறுதி - இதனினும் மேலான (நாங்கள்) பெறும் நற்பயன், வேறு உண்டோ - வேறு இருக்கின்றதோ ? (இல்லை யென்ற வாறு)

'அளவற்ற தவத்தானன்றி இந்திரன் முதலானோரும் உன் வரவை எதிர்பார்த்தற்கில்லை; அத்தகைய பெருமை வாய்ந்த நீ எம் மலைக்கு வலிய வந்தது எங்கள் தவப் பயனேயாம். இதனால் எங்கள் வினைகட்கு நாங்கள் விடைகொடுத்தோம்; எங்கட்கு இனி மறுமையினும் நற்கதியே தான்' என்றாள் தாரை. 'அரசிளங்குமரனான நீ யானை சேனை பரிவாரங் களுடன் சிவிகை யேறிச் செல்பவன், தன்னந்தனியனாய் என்னைப் போன்ற ஏழை மனைக்கு எழுந்தருளியது எங்கள் புண்ணியமே' என்றபடியுமாம். நோற்றல் - தவம்புரிதல்; 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்படும்' என்பது திருக்குறள் (265). மைந்தன் - 599, உரை காண்க. இனி, 'மைந்த' என்பதற்கு 'இளையபெருமாளே' எனக் கொண்டாரும் உளர். பாதம் கொண்டு என்பதில் - கொண்டு மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. வாழ்ந்தோம், உய்ந்தனம், வினையும் தீர்ந்தோம் என்பதற்கு, முறையே இம்மை வாழ்வையும், இடரினின் றுய்தலும், வினைதீர்ந்து அம்மைக் கதிக்குரிய ராதலும் கொள்க.

பி - ம். 1. *வரும்பெரும் தவத்தா னன்றி, ஆற்றலுண் டாயிலன்றி.*

2. *முதலினோரால்; இயல்பிற்றென்றோ, றன்றோ, மியற்கைத் தாமோ, தகைமையன்றே, யியல்பிற்றாமோ, மியற்கைத்தாமே.*

4. *இதனி னுண்டோ, இதனிலுண்டோ.* (48)

601. வெய்தினீ வருத னோக்கி
வெருவுநுஞ் சேனை வீர
செய்திதா னுணர்கி லாது
திருவுளந் தெரித்தி யென்னு
ஐயநீ யருளின் வேந்த
னடியிணை பிரிக லாதாய்
எய்திய தென்னை யென்றா
ளிசையினு மினிய சொல்லாள்

இசையினும் இனிய சொல்லாள் - இசையைக் காட்டிலும் இன்பம் செய்யத்தக்க மொழிகளையுடைய தாரை, (இலக்குவனை நோக்கி), 'வீர - வீரனே! நீ வெய்தின் வருதல் நோக்கி - நீ கடுமையாக வருவதைப் பார்த்து, செய்திதான் உணர்கிலாது - நீ இவ்வாறு வருதலின் ஏதுவை அறியாது, 'நும்சேனை - (நுமக்கு உதவி புரியக் கடமைப்பட்டுள்ள) வானர சேனை, வெருவும் - அஞ்சும்; (அச்சேனையின் பயம் நீங்கும்

வண்ணம்), திருஉளம் தெரித்தி - உனது அழகிய மனக்கருத்தை அறி வித்தருள்வாயாக'; என்ன - என்று கூறி; (மேலும்), 'ஐய - அழகனே, அருளின் வேந்தன் அடி இணை பிரிகலாதாய் நீ - அருளு டன் கூடிய மன்னனான இராமபிரானுடைய திருவடிகளை எந்நாளும் பிரியாது இருப்பவன் நீ, எய்தியது என்னை - (அப்பெருமானைப் பிரிந்து) இங்கே வந்தது எதுபற்றி?' என்றாள் - என்று கேட்டாள்.

'மற்றினி யுரைப்பதென்னே வானிடை மண்ணிலுன்னைச் செற்றவர் என்னைச் செற்றார் தீயரேயெனினு நின்னோ, டுற்றவர் எனக்கு முற்றார் உன்கிளையெனதென் காதற்; சுற்றமுன் சுற்ற நீயென்னின்னுயிர்த்துணை வன்' (104); என்று முன்னர் இராமபிரான் சுக்கிரீவனிடம் கூறி யதை நினைத்து, தாரை 'நுஞ்சேனை' என்றாள். 'குகனொடுமைவரா னோம் முன்புபின் குன்று சூழ்வான் மகனொடு மறுவராணோம்' (உயுத்த. 146). என்று பின்னர்க் கூறுவதும் இங்கே நினைவு கூரத்தகும். மற்றும் இராம இலக்குவரருளாலேயே தானே வாலிசேனை முழுவதும் சுக்கிரீவன் வசமாயிற்று, அது கருதிக் கூறினாள் எனினுமாம். அஃதன்றி, அவன் சினம் தணியுமாறு, 'எல்லாம் உங்களதுதானே' என்று உபசாரமாகக் கூறியது மாதல் கூடும். வரதனு மிளவலும் என இராம இலக்குவர் இணைபிரியாது வாழ்ந்த வராகலின், 'அடியிணை பிரிகலாதாய்' என்றாள். இராமன் பின்பு பிறந்தானும் உளனென்னப் பிரியாதான் தனைப்பயந்த பெரியாள்' (அயோத்தி. குகப்.). என்ற பரதன் கூற்றுப்படி என்றும் இணைபிரியாதவன் என்க. இராமபிரான் தான் வனம் புகுவ தாகச் சொல்லி, இலக்குவனை, 'நீ என் பொருட்டுதவுவா யென்று' (அயோத்தி நகர் நீ. 155). கூறியபோது இளையபெருமாள் 'நீருள வெனினுள மீனு நீலமும்' (அயோத்தி நகர் நீ. 157); என்று பகர்ந்தது இங்கே நினைவு கூரத்தகும். மற்றும், 'சென்றாற் குடையா மிருந்தாற் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள் கடலுள்- என்றும், புணையா மணிவிளக்காம் பூம்பட்டாம் என்றும் அணையாம் திருமாற்கரவு' என்றாராகலின், திருமாலின் அவதாரமான இராமபிரான் பள்ளி யணைக்கு அவனை விட்டுத் தனியிருப்பேது? ஆகவே 'அடியிணை பிரிகலாதாய்' என்றாள் எனினுமாம்.

பி - ம். 1. வெய்தினின், வெய்தரீ; வெருவரும், வெருவுறும்.

2. துணர்விலாதன்; தெரித்தி யென்ன, தெரித்தி யென்றாள்.

3. ஆழி வேந்தன், அமலமூர்த்தி; யடியிணைப். பிரிகலாதீர்

4. எய்திய தென்னோ, தென்கொல். (49)

இலக்குவன் நிலையும் கூற்றும்

602. ஆர்கொலோ வுரைசெய் தாரென்
றருள்வரச் சீற்ற மஃகாப்
பார்குலா முழுவெண் டிங்கள்
பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலா முகத்தி னாளை
யிறைமுக மெடுத்து நோக்கித்
தார்குலா மலங்கன் மார்பன்
தாயரை நினைந்து நைந்தான்.

அலங்கல்தார் குலாம் மார்பன்- அசைகின்ற மலர்மாலை விளங்கும் மார்பினையுடைய இலக்குவன் (அச் சொற்களைக் கேட்ட வளவில்), அருள்வர - கருணைதோன்ற, சீற்றம் அஃகா - சினம் குறைந்து, உரை செய்தார் ஆர்கொலோ என்று - இங்ஙனம் மொழிந்தவர் யாராக இருத்தல் கூடும் என்று அறிய நினைந்தவனாய், குலாம் முழு வெண் திங்கள்-வளைந்த பூர்ணமான வெள்ளை மதியம், பகல் பார் வந்த படிவம் போலும் - பகற் பொழுதிலே பூமியில் வந்த தோற்றம் போன்று (ஒளிகுன்றிய), ஏர் குலாம் முகத்தினாளை - அழகு ஒளிரும் முகத்தை யுடையவளான தாரையை, முகம் இறை எடுத்து நோக்கி - தன் முகத்தைச் சற்றே நிமிர்ந்து பார்த்து (அந்நிலையில்), தாயரை நினைந்து நைந்தான் - தன் தாய்மார்களான சுமித்திரை முதலானோரை மனத்தால் நினைவு கூர்ந்து வருந்தினான்.

குரலினிமை கேட்டுப் போந்தவள் பெண்பாலென்று கருதிச்சினம் தணியப்பெற்றுப் பகலில் வந்த சந்திரன் போன்று ஒளிகுன்றிய முகத்தளாகிய தாரையைக் கண்டவுடன், தன் தாய்மாருடைய கைம்மைக் கோலமும் அவ்வாறுதானே இருக்கும் என்று எண்ணி வருந்தினான் இலக்குவன். அஃகா - அஃகி - குறைந்து. சூரியன் முன் மதிநில்லா தாகலின் ஒளிமழுங்கியதற்கு அதனை உவமை கூறினார். திங்கள் படிவம் பகல் வந்த போலும் என மொழிமாற்றி உரை கோடலுமாம். எடுத்து - உயர்த்து. 'எடுத்துமொழிதல்' (சீவக.518). என்ற வழக்குக் காண்க. இறை - சிறிது 'இறைபேர்கலாள்' (ஆரணிய 302); 'விழித் திறையும் வெள்கா' (ஆரணிய 611.). மதி தரைக்கண் பகலில் வந்தது என்றது இல்பொருள் உவமை. தார் வேறு அலங்கல் வேறு என்று கூறுவாரும் உண்டு. அங்ஙனம் எனின் தார் சிகழிகை என்ற சிரமாலை யாகவும், அலங்கல் உரமாலையாகவும் கொள்க. தரிக்கப்படுவது தார்; அசைவது அலங்கல். 'அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை அரவு. (சுந்தர. 1). குலவுதல் - வளைதல்.

பி - ம். 1. மேக, மேவிப், அலகைப், மாற.
2. பகனுறும்; வடிவம்; போன்று.
4. தார்குலா மாலே மார்பன்; மையான். (50)

603. மங்கல வணியை நீக்கி
மணியணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக்
குங்குமஞ் சாந்தங் கொட்டா
பொங்குவெம் முலேகள் பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல்
நயனங்கள் பனிப்ப நின்ருன்

மங்கலம் அணியை நீக்கி - (கழுத்திற் பூணும்) சுமங்கலிகள் அணியும் அணிகளே ஒழித்து, மணி அணி துறந்து - நவமணிகளாற் செய்யப்பட்ட ஏனைய கலன்களே அணியாமல் நீக்கி, வாசம் கொங்கு அலர் கோதை மாற்றி - நறுமணம் உள்ளதும் தேன் பெருகுவதுமான மலர் மாலேயை அகற்றி, குங்குமம் சாந்தம் கொட்டா - குங்குமக் குழம்பையும் சந்தனச் சேற்றையும் அணியப்பெருத, பொங்குவெம் முலேகள் பூகம் கழுத்தொடு மறைய - பருத்த வெய்யதனங்கள் பாக்குமரம் போன்ற கழுத்துடன் மறையும்படி, போர்த்த – (மேலாடையால்) நன்கு மூடியுள்ள, நங்கையை - தாரையை, கண்ட-நோக்கிய, வள்ளல் - கருணேமிகுந்த இலக்குவன், நயனங்கள் பனிப்ப நின்ருன் - (அவளுடைய அவல நிலேயை நினேந்தும் தன்தாய்மாரினுடைய கைம் பெண் நிலேயை உளங்கொண்டும்), தன் விழிகளில் நீர்த்துளிகள் தோன்ற நின்ருன்,

நீண்ட முகம்பற்றிக் குரங்கெனக் கூறினரன்றி, மக்களில் ஓர் வகுப்பினராகவே அவர்களேக் கருதல் முறை. இன்றேல் மங்கல வணியும், கைம்மைக் கோலமும் அவைகட்கேது? மங்கலவணி என்பது மகளிர் திருமணக் காலத்தில் அணியும் மாங்கல்யம். வான் மிகர் காலத்து இந்த மாங்கல்யம் தரிக்கும் வழக்கு இல்லே. கம்பரும் பிராட்டி திருமணக் கோலத்தில், பல மணநிகழ்ச்சிகளேக் கூறிவந் தவர், 'மங்கையர் கழுத்துக்கெல்லாம் தான் அணியானபோது தனக் கணியாது மாதோ' (பால. கோலங்-7). என்று மாங்கலியதாரணம் அல்லது திருப்பூட்டுதலேக் கூருது கூறிச் சென்ருர். மற்றும், 'அன்று நீ யிழித்து நீத்த', (சுந்தர, 523). என்பது கொண்டும். 'உன்கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பு நாண்' (அயோத்தி. நகர் நீ. 49). என்று

தயரதன் கைகேயியை நோக்கிக் கூறியது கொண்டும். 'அரக்கியர் மூக்கொடும் அற்ற நாணினராயின போதன்றி' (சுந்தர. 622). என்பன கொண்டும், யுத்தகாண்டத்தில் பல இடங்களில் அரக்கிமார் தாலிகள் அறுபட்டு வீழ்ந்தனவாகக் கூறுதல் கொண்டும், தாலி புனையும் வழக்கம் கம்பர் காலத்தும் அதற்கு முன்பும் தமிழ் நாட்டில் உண்மை தெளிக. 'ஈகையரிய இழையணி மகளிர்' (புறநா. 127). என்பது இங்குக் காணத்தகும். மங்கல அணியைத் திரு மங்கலியம் என்றும் பொருள் கொள்வர் ஆயினும் 'ஐயநுங்களருங் குலக்கற்பினப் பொய்யில் மங்கையர்க்கேயந்த புணர்ச்சிபோல், செய்தி லன்னெனைமைத் தேமலர் மேலவன்' என்றும், 333, 'மணமுமில்லை மறை நெறிவந்தன குணமு மில்லை, குலமுதற் கொத்தன' 334. என்றும் கூறியன கொண்டு அங்ங னம் கோடற்கில்லை யென்க. கைம்பெண்கள் குங்குமம், சந்தனம் முதலிய நறுமணப் பொருள்கள் அணிவதின்றாகலின், 'வாசக் கொங் கலர் கோதை மாற்றிக் குங்குமம் சாந்தம் கொட்டா' என்றார்; கொட்டா என்பதற்குக் கொட்டி அல்லது தவிர்ந்து என்று பொருள் கொள்ளலு மாம். அப்பொழுது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகும். வயது முதிரா இளம் பருவ மாதாகலின், கணவனை யிழந்த நிலையில் நிகழ்ந்த தனக் கொதிப்பைக் கூறுவார். பொங்கு வெம் முலைகள், என்றார்; பூகம்-இளங்கமுகு; மகளிர் கழுத்துக் குவமை.767 (சீவக.169) காண்க. சிந்தாமணிக்கு முற்பட்ட நூல்களில் இந்தக் கமுகு மகளிர் கழுத்துக்கு வமையாகக் கூறப்படவில்லை. பூகம், கமுகு என்ற சொற்கள் பத்துப்பாட்டு முதலிய தொகை நூல்களிலுமில்லை யென்பது குறிப்பிடத் தக்கது. எனவே இது வடமொழி நூல்களைப் பின்பற்றி வந்த உவமம் என்னலாம். தென்றமிழ் நாட்டினராகிய கம்பர் அங்குள்ள கைம்பெண் களின் விதவைக் கோலத்தை நன்கு அறிந்தவர் ஆதலின், 'வெம்முலை கள் பூகக் கழுத்தொடு மறையப் போர்த்த' என்றார். இந்த உடையை இன்னும் பொன்னிக் கரைப்பகுதி யூர்களிற் காணலாம். நங்கை - தையல் நல்லாள். நயனம் வடமொழி.

பி - ம். 1. *மங்கல மரபு நீங்கி, அணிகள் நீங்கி, நீத்து, வணியும் நீங்கி.*

3. *மறையப் பூத்த.*

4. *பனிக்க லைந்தான் ; கண்டபின்னர் நயனங்கள்.* (51)

604. இனையரா மென்னை யீன்ற
விருவரு மென்ன வெந்த
நினைவின னயர்ப்புச் சென்ற
நெஞ்சின னெடிது நின்றான்
வினவினுட் கெதிரோர் மாற்றம்
விளம்பவும் வேண்டு மென்றப்
புனைகுழ லாட்கு வந்த
காரியம் புகல்வ தானன்.

'என்னை ஈன்ற இருவரும்-என்னைப் பெற்ற அன்னையர் இருவரும், இனையர் ஆம் - இத்தன்மையரான கைம்பெண் கோலம் பூண்டுதானே இருப்பர்' என்ன வெந்த நினைவினன்-என்று (தன் உள்ளத்தில்) கொதித்தெழுந்த எண்ணத்துடன் கூடியவனாய், அயர்ப்பு சென்ற நெஞ்சினன் - வாட்டம் மிக்க உள்ளத்தனாய், நெடிது நின்றான் - நீண்ட நேரம் (திகைத்து) நின்றவனான அவ்விளைய பெருமான், வினவினாட்கு - தன்னை நோக்கிக் கேட்டவளுக்கு, எதிர் ஓர் மாற்றம் விளம்பவும் வேண்டும் என்று - மறு மொழியாக ஒரு வார்த்தை சொல்லவும் வேண்டும் என்று, அ புனை குழலாட்கு - அந்த அழகிய கூந்தலை யுடையவளான அத்தாரையைப் பார்த்து, வந்த காரியம் புகல்வது ஆனான் - (தான்) வந்த காரியம் இன்னதென்று சொல்லத் தொடங்கினான்.

இராமபிரானை வனம் புகச் செய்தாள் என்ற வன்மம் பற்றிக் கைகேயியை விடுத்து ஏனைய இருதாய்மார்களாகிய கோசலையையும் சுமித்திரையையும் கூறினான். அயர்ப்பு செல்லுதல் - சோகம் மிகுதல்; அயர்ப்பு-மறதியுமாம். சோகத்தால் தன்னை மறந்த நிலை குறிக்கப்பட்டது; இதனைக் கையாறு என்பர். புனைகுழல் இங்கே மலர் முதலியவற்றாற் புனையப்பட்ட குழலன்று; அழகிய குழல் என்ற பொருள்பட நின்றது என்க; 'விரைக்குழல்' 262. காண்க. விளம்பவும் வேண்டும் என்ற உம்மையால் இலக்குவன் மகளிரிடம்வைத்த நன்மதிப்பும், அவர்களுடன் பேசுவதற்கு மேற் கொண்ட கூச்சமும் தெளிவாம். புனைகுழல் என்றதால் கைம்பெண்கள் செய்தற்குரிய குழல் களைவின்மை விளங்கும்.

பி - ம். 1. என்ன வந்த; மூவரு மென்ன நின்ற.

2. நெஞ்சினன், நினைவினன் மரபு சென்ற, நினைவினால், னயர்வு, னயர்த்துச் சென்ற.

3. விளைவினுர்க் கெதிரோர் ; விளம்பலும் வேண்டு மென்னப் மென்னுப், வேனுமென்றப், விளம்புதல் வேண்டு மென்னுப்.

4. புனைகுழ றனக்கு ; புகல லுற்ருன்.

இஃது ஓர் பிரதியில் இல்லை. (52)

605. சேனையும் யானுந் தேடித்
தேவியைத் தருவெ னென்று
மானவற் குரைத்த மாற்ற
மறந்தன னருக்கன் மைந்தன்
ஆனவ னமைதி வல்லை
யறியென வருளின் வந்தேன்
மேனிலை யனையான் செய்கை
விளைந்தவா விளம்பு கென்ருன்.

'அருக்கன் மைந்தன் - சூரியன் மகனுன சுக்கிரீவன், சேனையும் யானும் தேவியை தேடி தருவென் என்று - 'எனது (வானரப்) படைகளும் யானுமாகச் சேர்ந்து பிராட்டியாரைத் தேடிக் கொடுப்பேன்' என்று, மானவற்கு உரைத்த மாற்றம் - மனுகுலத்தில் தோன்றிய வனுன இராமபிரானிடம் சொன்ன வார்த்தையை, மறந்தனன்-மறந்து விட்டான்; ஆனவன் அமைதி வல்லை அறி என - 'அத்தன் மையனுன அந்த வானர வீரனுடைய எண்ணத்தை விரைந்து சென்று நீ அறிவாயாக' என்று, (அப்பெருமான் என்னை நோக்கிச்) சொல்ல, அருளின் - அந்தக் கட்டளையை மேற்கொண்டு, வந்தேன் - இவ்விடம் வந்தேன்; மேல் நிலை அனையான் செய்கை விளைந்தவா விளம்புக - மேம்பட்ட அரசுச் செல்வத்தைப் பெற்றுள்ள அத்தகையனுன சுக்கிரீவனுடைய செயல்முறை நிகழ்ந்துள்ள விதத்தைச் சொல்வாயாக', என்ருன் - என்று (தாரையை நோக்கி) இலக்குவன் சொன்னுன்.

தன்வாக்கை நிறைவேற்றச் சுக்கிரீவன் செய்தது என்ன என்பதை அறியவந்ததாக இலக்குவன் கூறினன்; 'என்னுடைச் சிறுகுறை முடித்தலீண்டொரிஇப், பின்னுடைத் தாயினுமாக பேதுறும், மின்னிடைச் சனகியை மீட்டு மீடுமால்' என்பது சுக்கிரீவன், 'மானவற்குரைத்த மாற்றம் (210). யானும் சேனையும் தருவென்; சிறப்பினுல் தன்மை யொருமை வினையைப் பெற்று நின்ற வழுவமைதி; 'ஒருமையிற் பன்மையும் பன்மையினெருமையும், ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே',

என்பது விதி (நன்). அமைதி - நிலைமை. அனையான் என்றது சுக்கிரீவனை. விளைந்தவாறு என்பது ஈறுகெட்டு நின்றது.

பி - ம், 1. தேவியைத் தருவ மென்று, தருவன், தானையுந் தானும்.
3. ஆனவன் அவதி யெல்லை அமைதி எல்லை யல்லை; வதிசென வருள வந்தோன்;
4. விளம்பு மென்றான்.

இந்தச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை. (53)

606—610 தாரைகூறும் சமாதானம்

606. சீறுவா யல்லை யைய
சிறியவர் தீமை செய்தால்
ஆறுவாய் நீய லான்மற்
றாருள ரயர்ந்தா னல்லன்
வேறுவே றுலக மெங்குந்
தூதரை விடுத்த வெல்லை
ஊறுமா நோக்கித் தாழ்த்தா
னுதவிமா றுதவி யுண்டோ.

'ஐய - ஐயனே! சிறியவர் தீமை செய்தால்-(அறிவு ஒழுக்கங்களிற் குறைந்த) சிறுவர்கள் தீங்கு இழைத்தால், சீறுவாய் அல்லை - சினங் கொள்ளற் பாலையல்லை; ஆறுவாய் - (அக்குணங்கள் மிக்கவனான நீ) பொறுத்துத் தணியக்கடவாய்; (இவ்வாறு செய்தற்கு), நீ அலால் மற்று ஆர் உளர் - நீ அல்லாமல் தகுதியுடையார் பிறர் எவர் இருக் கின்றனர்; இஃது நிற்க, அயர்ந்தான் அல்லன் - சுக்கிரீவர் தன் உறுதி மொழியையோ, நீங்கள் புரிந்த நன்றியையோ மறந்தாரில்லை, உலகம் எங்கும் வேறு வேறு தூதரை விடுத்து - உலகத்தில் பல இடங் களிலும் தனித்தனியாக வானரத் தூதர்களை ஏவி, அ எல்லை ஊறுமா நோக்கி - அந்தந்த இடங்களில் இருந்து அச்சேனைகள் வந்தடைதலை எதிர்பார்த்துக் கொண்டு, தாழ்த்தான் - (அதனால்) தாமதித்தார்; உதவி மாறு உதவி உண்டோ-நீங்கள் அவனுக்குச் செய்துள்ள உபகாரத்திற்குப் பிரதியுதவி யென்று செய்ய ஒன்றிருக்கின்றதா?

சுக்கிரீவன் தூதர்களை ஏவி வாநரப்படைகளைத் திரட்டச்செய்தது இதற்குமுன் இந்நூலிற் கூறப்பெறவில்லை. 'உதவி மாறுதவியுண்டோ' (618) ஆம் செய்யுள் பார்க்க. 'தீயன சிறியோர் செய்தால் பொறுப்பது

பெரியோர் மேற்றே' (உயுத்த. வருணனை 73) : 'பொறுப்ப ரன்றே பெரியோர் சிறியோர்தம் புரையினையே' சிறியவர் தீமை செய்தால் என்பதை ஆறுவாய் என்றதனோடும் கூட்டிப் பொருள் கொள்ளலுமாம். ஊறு - உறுதல் என்றதன் முதனிலை நீண்டது; ஊறும் ஆ-ஊறும் ஆறு, ஈறு குறைந்தது.

பி - ம். 1. *பிழையே செய்தால்.*

2. *அயர்த்தா னல்லன்.*

3. *விடுத்தச் சேனை, உதவுமாறுதவி.* (54)

607. ஆயிர கோடி தூத
ரரிக்கண மழைப்ப வாணை
போயினர் புகுது நாளும்
புகுந்தது புகல்புக் கோர்க்குத்
தாயினு மினிய நீரே
தணிதிராற் றரும மஃதால்
தீயன செய்யா ராயின்
யாவரே செறுந ராவார்.

'ஆயிரகோடி தூதர் - எண்ணிறந்த வானரத் தூதர்கள், அரிகணம் அழைப்ப - வானரர் கூட்டங்களை அழைத்துவரும் பொருட்டு, ஆணை போயினர் - (சுக்கிரீவருடைய) கட்டளைப்படி உலகின் பலபாகங்களிலும்) சென்றுள்ளனர்; புகுதும் நாளும் புகுந்தது - (அவ்வீரர்கள்) இவ்விடம் மீளும் நாளும் வந்துவிட்டது; (அல்லாமலும்), புகல் புக்கோர்க்கு - சரணம் அடைந்தவர்க்கு, தாயினும் இனிய நீரே - பெற்ற அன்னையைக் காட்டிலும் இனிமையான நீங்களே, - தணிதிர் - சினம் ஆறக்கடவீர்; அஃது தருமம் - அவ்வாறு தணிதலே தருமமாகும்; தீயன செய்யார் ஆயின் - கெட்ட செயல்களைப் புரியாமலிருப்பாரேயானால், செறுநர் ஆவார் யாவரே - சினத்தற்கோ தண்டித்தற்கோ உரியவர் எவர்? ஆல் இரண்டும் அசை.

சுக்கிரீவர் தன் கடமை மறக்கவில்லை; பொறுத்தல் என்பது பிழைகள் இயற்றப்பட்ட போதுதானே. அப்படித் தவறிழைத்ததாகத் திருவுளம் பற்றினாலும், அவரை மன்னிப்பதே தகுதி என்றனள் என்க. 'பொறுமை' என்னும் அதிகாரத்துத் திருவள்ளுவர் கூறிய பத்துக் குறட்பாக்களும் இங்குக் காண்க. 'ஒருவர் பொறை யிருவர் நட்பு' என்பது முதுரை. 'நல்லாரெனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை, யல்லாரெனினும் அடக்கிக்கொளல் வேண்டும், நெல்லுக்குமியுண்டு நீர்க்கு

நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்குமுண்டு (நாலடி. 231); 'அற்றூர் நவை யென்றலுக் காகுநர் யார்கொல்' 270 என்ற தொடர்கள் அறியத்தக்கன. அன்பில் தாயினும் இனியர் இலராகலான், 'தாயினு மினிய' என்றாள். கூதிர்ப் பருவம் வந்ததும் அநுமான் அறிவுரைப்படி சுக்கிரீவன் சேனேகளைத் திரட்ட ஏற்பாடுகள் செய்துவிட்டுப் பின்னர் இன்பம் துய்க்கச் சென்றான் என்று வான்மீகம் கூறும். அதனைத் தாரை கூற்றாக விரித்துக் கூறினர் ஆசிரியர். நீ என்னுது நீர் என்றது இராமபிரானையும் உளப்படுத்தி என்க. 'உலகத்தார் பொல்லாப்புச் செய்யாதிருந்தால் ஒருவரும் சிறியராக மாட்டார்' என்பது பழையவுரை.

பி - ம். 1. *அழைக்க, அழைத்தற் கம்மா.*

3. *தாயினு நல்ல, தாயினும் நல்லீர்; கோபந் தணித்திராற்; தவமும் மஃதால், தரும மற்றே.*

4. *தீவினை செய்யாராகில் யாவரே சிறியராவர், தீயன செய்வராகில் யாவரோ சிறிய ரர்காா்.* (55)

608. அடைந்தவர்க் கபய நீவி
ரருளிய வளவில் செல்வம்
தொடர்ந்துநும் பணியிற் றீர்ந்தா
லதுவுநுந் தொழிலே யன்றே
மடந்தைதன் பொருட்டால் வந்த
வாளமர்க் களத்து மாண்டு
கிடந்தில ரென்னிற் பின்னு
நிற்குமோ கேண்மை யம்மா.

'நீவிர் - நீங்கள், அடைந்தவர்க்கு - (உங்களிடம்) புகல் அடைந்தவர்க்கு, அபயம் அருளிய - அஞ்சல் என்று அபயப்பிரதானம் செய்தருளிய, அளவு இல் செல்வம் - எல்லையற்ற செல்வம், தொடர்ந்து - கூடியதனால் களிப்புமிக்கு, நும்பணியின் தீர்ந்தால்-உங்களுக்கு ஆற்றும் சேவையினின்று தவிர்ந்தால், அதுவும் - அச்செயலும், நும் தொழிலே அன்றே - உங்கள் செயலாகவே கருதத்தக்கதன்றே? (நிற்க); மடந்தை தன் பொருட்டால் வந்த - சீதாதேவியின் பொருட்டு நிகழ்கின்ற, வாள் அமர் களத்து - வாள்கொண்டு செய்யப்படும் போர்க்களத்து, மாண்டு கிடந்திலர் என்னின் - (நண்பர்களாகப் போர்புரிந்து) இறந்து கிடவாராயின், பின்னும் - அதன் பின்னரும், கேண்மை நிற்குமோ - நட்பு நிலைபெறுமோ? (பெருது). ஆல், அம்மா ஈற்றசைகள்.

சுக்கிரீவர் எல்லாவற்றையும் மறந்து மதோன்மத்தராய் இருக்கும் படி செய்தது நீங்கள் அவருக்களித்த அளவற்ற செல்வந்தானே. எனவே அவர் இவ்வாறு தம் பொறுப்பை நெகிழவிடற்கு நீங்கள்தானே காரணம் என்று நயம்படக் கூறினள். பின்னரும், சுக்கிரீவர் செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டவளாய், அவருக்கு அரசையும், மனைவி யையும் அளித்ததற்காக, அவர் அரக்கரோடு நிகழவிருக்கும்போரில் உயிரையும் கொடுத்துப் பிராட்டியை மீட்டுத்தருவதே கடமை; அக் கடமை தவறுவராயின் கேண்மை நிலைபெறுமா என்றாள். பணியில் தீர்தல் - கட்டளையை மீறுதல்.

பி - ம். 1. *அபயம் நீங்கள்.*

2. *பழியிற் றீர்ந்தாற்; சொல்லினும் பெருமை யன்றே, ரகுவின்* *றொழிலே, நம்பெருமை யன்றே.*

4. *பின்னை நிற்குமோ.* (56)

609. செம்மைசே ருள்ளத் தீர்கள்
செய்தபே ருதவி தீரா
வெம்மைசேர் பகையு மாற்றி
யரசுவீற் றிருக்க விட்டீர்
உம்மையே யிகழ்வ ரென்னி
னெளிமையா யொழிவ தொன்றே
இம்மையே வறுமை யெய்தி,
யிருமையு மிழப்ப ரன்றே

' செம்மை சேர் உள்ளத்தீர்கள் - நடுவு நிலைமையுடன் கூடிய சிறந்த இதயத்தை உடையவர்களான நீங்கள், செய்த பேர் உதவி தீரா- (சுக்கிரீவனுக்குப்) புரிந்துள்ள பெரிய உபகாரம் எளிதில் மறக்க முடி யாதபடி, வெம்மை சேர் பகையும் மாற்றி - கடுமையான எதிரியையும் அழித்து, அரசு வீற்றிருக்க விட்டீர் - அரசு கட்டிலேறி மிக்க பெரு மையுடன் அமருமாறு செய்தீர்கள்; (அவ்வாறு உம்மிடம் பெரிய உதவி யைப் பெற்றவர்), உம்மையே இகழ்வர் என்னின் - உங்களையே புறக் கணிப்பாரானால், (அந்த இகழ்ச்சி) எளிமையாய் ஒழிவது ஒன்றே - எளி தாகக் கழிந்துவிடுமா? (பேரனர்த்தம் விளையுமே); இம்மையே வறுமை எய்தி-(அந்தத்தகாத செயல்காரணமாக) இப்பிறப்பிலேயே வறுமையை அடைந்து, இருமையும் இழப்பர் அன்றே - இம்மை மறுமைப்பயன்கள் இரண்டையும், இழந்து விடுவாரன்றோ ?

ஆகவே, சுக்கிரீவர் நன்றி மறந்தவரல்லர் என்ருள். பகை - பகைவனுக்குப் பண்பாகு பெயர். வீற்றிருக்க - எவர்க்கு மில்லாத சிறப்புடன் அமர; வீறு - பிறரெவர்க்கும் இல்லாத தனிச்சிறப்பு. உம்மையே - ஏகாரம், உயர்வு சிறப்பு. தீரா, ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்.

பி - ம். 1. உளத்திர் நீவிர், பேருதவி தீர.

2. பகையை மாற்றி; வீற்றிருத்தி விட்டிர், திருத்தி விட்ட.

3. உம்மையே யிகழ்வ தென்னி லெண்மையா; எளிமையினிழிவ தொன்றோ, யிகழ்வதொன்றோ, யோய்வ தொன்றோ.

4. யெழுமையு மிழப்ப ரன்றே, இம்மையோ மறுமையோ மற்றெழுமையு. (57)

610. ஆண்டுபோர் வாலி யாற்றன்
மாற்றிய தம்பொன் ருயின்
வேண்டுமோ துணையு நும்பால்
வில்லினு மிக்க துண்டோ
தேண்டுவார்த் தேடு கின்றீர்
தேவியை யதனைச் செவ்வே
பூண்டுநின் றுய்த்தற் பாலார்
நுங்கழல் புகுந்து ளோரும்.

'ஆண்டு - (வாலி சுக்கிரீவருடைய போர் நேர்ந்த) அப்பொழுது, போர் வாலி ஆற்றல் மாற்றியது - போரிற் சிறந்த வாலியின் வலிமையை அழித்தது, அம்பு ஒன்று - உங்கள் வாளி ஒன்றே, ஆயின் - என்ருல், துணையும் வேண்டுமோ - (பகைவரை ஒழித்தற்குத்) துணைவர்களும் நுமக்குத் தேவையோ? நும்பால் வில்லினும் மிக்கது உண்டோ- உங்களிடமுள்ள வில்லைக்காட்டிலும் சிறந்ததொரு உதவியுள்ளதா? (மற்றும் நீங்கள்), தேவியைத் தேண்டுவார் தேடுகின்றீர்- பிராட்டியைத் தேடிக்காணக் கூடியவர்களை நாடுகின்றீர்கள்; (இவ்வளவுதான்); நும் கழல் புகுந்துளோரும் - உங்கள் திருவடியில் புகல் அடைந்த சுக்கிரீவர் முதலானோரும், அதனை - அந்தப் பணிவிடையை, செவ்வே பூண்டு நின்று - நல்ல முறையில் ஏற்றுத் (தம்) கடமையைப் புரிந்து, உய்தல் பாலார் - ஈடேறற் குரியவர் ஆவர்.

வேண்டுமோ துணையும்; 'கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவ' 310; 'தன்றுணை யொருவரும் தன்னில் வேறிலான்' 260. 'துணை வேண்டாச் செருவென்றி' (புறநா. 16) என்றமை காண்க. 'பகை வெல்ல நுமக்குத் துணை வேண்டுவதின்று; ஆயினும் பிராட்டியாரைத் தேடவுமக்கு ஆட்கள் வேண்டும்' என்றது. 'தேண்டுவார்த் தேடுகின்றீர்' என்பதனாற் பெறப்படும். 'தேண்டுவார்த் தேடுகின்றீர்-பிராட்டியைத் தேடிவந்து சொல்லும் பேரைத் தேடுகின்றீர்' என்பது பழையவுரை. தேண்டுதல் - தேடுதல். 'தேண்டினேன் கண்டேன் வாழி' (சுந்தர. 525). ஆண்டுப் போர் என வலிமிகாதது, ஓசை நயம் பற்றி. 'எளிய உதவியையே நீங்கள் சுக்கிரீவர்பால் விரும்புகிறீர்கள்; அதனையும் அவர் இகழ்வாரோ' என்று கூறி இலக்குவனைச் சாந்தப் படுத்த முயன்றாள் என்க.

பி - ம். 1. ஆண்ட, மாண்டபோர்; வம்பொன் றல்லால், வம்போன்றுளல்.
2. துணைவர்.
3. தேடுகின்றார்; தேவியைத்; தன்னைத் தெளியும் வண்ணம்.
4. பூண்டுநின் றுய்த்தல் போலாம், நின்றயர்த்தல் போலாம்; நங்கழலடி புகுந்தவோர்க்கும், பூண்டன புரிதற்கான்றேம் நங்கழல் புகுந்தவோமை; புகுந்த வோர்கள்.

இலக்குவன் சினம் தணியக்கண்டு அநுமன் அருகே வருதல்

611. என்றவ ளுரைத்த மாற்றம்
யாவையு மினிது கேட்டு
நன்றுணர் கேள்வி யாள
னருள்வர நாணுட் கொண்டான்
நின்றன னிற்ற லோடு
நீத்தனன் முனிவென் றுன்னு
வன்றுணை வயிரத் திண்டோண்
மாருதி மருங்கு வந்தான்.

என்று அவள் உரைத்த மாற்றம் யாவையும் இனிது கேட்டு - என்று அத்தாரை கூறிய செய்திகள் எல்லாம் மனமுவந்து கேட்டு, நன்று உணர் கேள்வியாளன் - செம்மையாகக் கேட்டுணர்ந்த நூற் கேள்விகளையுடைய இலக்குவன், அருள் வர - கருணை தோன்ற, நாண்

உள் கொண்டு நின்ருன் - வெட்கத்தை உள்ளத்திற் கொண்டவனுய் நின்ருன் ; நின்றலோடும் - (அங்ஙனம்) நின்றபோது, முனிவு நீத்தனன் என்று உன்ஞ- (இவன்) சினம் தவிர்த்தான் என்று நினைத்து, வல்துணை வயிரம் திண்தோள் மாருதி - பெரிய துணையான வன்மை செறிந்த உறுதியான புயங்களையுடைய அநுமன், மருங்கு வந்தான்-இலக்குவன் அருகே வந்தான்.

மாற்றம் - சொல்; சுந்தர. 328, 444, 464, 516 ; பெரும் பாலும் மாருகக் கூறும் மறுமொழியாதலின் மாற்றம் எனப்பட்டது போலும். சினக்கத்தகாத இடத்துச் சினந்தோமே என நினைந்து வெள் கினுன் சுத்த வீரமும் தூயகேள்வியுமுடைய இலக்குவன் என்க. நாணுட் கொண்டான் : 'செல்லிடத்துக் காப்பான் சினங் காப்பான்;' (குறள். 301) ஆகலின் இவ்வாறு நாண் எழுந்ததென்க.

பி - ம். 2. *கேள்வியா ரென்று; கேள்வியா னென்று, நாணுக் கொண் டான், நாணுக் கொண்டே.*

3. *நீங்ினென் முனிவென் றுன்னி, நீக்கினென்; றுன்னி, றெண்ணி.*

4. *மருங்கின் வந்தான்.* (59)

இலக்குவன் வினு

612. வந்தடி வணங்கி நின்ற
மாருதி வதன நோக்கி
அந்தமில் கேள்வி நீயு
மயர்த்தனை யாகு மன்றே
முந்தின செய்கை யென்ருன்
முனிவினு முளைக்கு மன்பான்
எந்தைகேட் டருளு கென்ஞ
வியம்பின னியம்ப வல்லான்.

முனிவினும் முளைக்கும் அன்பான் - சினம் எழுந்த காலத்தும் தோன்றும் அன்புடைய இலக்குவன், வந்து அடி வணங்கி நின்ற மாருதி வதனம் நோக்கி - அணுகி வந்து தன் திருவடிகளில் பணிந்து நின்ற (வாயு புதல்வனுன) அநுமனைப் பார்த்து, 'அந்தம் இல் கேள்வி நீயும் - எல்லையற்ற கேள்விச் செல்வத்தைப் பெற்றுள்ள நீயும் கூட, முந்தின செய்கை அயர்த்தனை அன்றே - முன்னர் நிகழ்ந்த நிகழ்ச் சியை மறந்து விட்டாயன்ரே ?' என்ருன் - என்று கூறினன் ; (அது கேட்டு), இயம்ப வல்லான் - சொல்வதில் வல்லவன் ஆன அநுமான்,

'எந்தை கேட்டு அருளுக என்று - எமது தந்தை போல்பவனே! அடியேன் சொல்வதைக் கேட்டருள்க' என்று சொல்லி, இயம்பினன்- மேலும் கூறுவான். இதனை அடுத்த ஆறுகவிகளிற் காண்க.

அநுமனுடைய அந்தமில் கேள்வி; 'இல்லாத வுலகத்தெங்கும் மிங்கிவன் இசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னும் காட்சி' (61); 'சுருதியின் றெருகுதியாவும் முற்றறிதருமிம் மாணி' (62); 'பண்டை நூல் கதிரோன் சொல்லப் படித்தவன்' (74); 'காதல் நான் முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன் சென்றோதி னான்' (உயுத்த. வீடண. 105); 'நூலை நயந்து நுண்ணி துணர்ந்தீர்' (934); 'பகலோன் முன்தேர் முனடங்தே யாரிய நூலும் தெரிவுற்றீர்' (989); 'மறையெல்லாம் ஓதியுணர்ந்தீர்' (990) என்பன கண்டுணர்க. முந்தின செய்தி - மாரிக்காலம் கழிந்தவுடன் சேனையுடன் வரவேண்டும் என்றது. யாவற்றினும் முற்பட்டதான செயலான, பிராட்டியைத் தேடு வது எனினும் ஆம். 'முனிவினும் முளைக்கும் அன்பு' (ஒப்பு): 'தெளித்த போதொத்த தன்றிச் சினவுண்மை தெரிந்ததில்லை' உயுத்த. கும்ப. 16. 'முனிவினு முளைக்குமன்பான் - கோபத்தோடு இருந்தாலும் கிருபை செய்பவனாகிய இளைய பெருமாள்' என்பது பழையவுரை. இயம்ப வல்லான்; 'சொல்லின்செல்வன்' (61) என முன்னர்க் கூறியது காண்க.

பி. - ம். 2. கேண்மை நீயு மயர்த்தனை.
3. முந்திய செய்கை, முந்திய தன்மை; முளைக்கு மென்றம், முளைக்கு மென்பான், முளைக்கு மென்றான்.
4. கேட்டரு ளென்ன, யருள்க வென்றான்; வியம்பினான்; இயம் பல் வல்லான். (60)

அநுமன் கூறிய மறுமொழி

613. சிதைவகல் காதற் றாயைத்
தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவியந் தணரை யாவைப்
பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா
மாற்றலா மாற்றன் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனு
மொழிக்கலா முபாய முண்டோ.

(அநுமன் இலக்குவனை நோக்கி), 'சிதைவு அகல் காதல் தாயை - அழிதல் இல்லாத அன்பையுடைய அன்னையையும், தந்தையை-தந்தை

யையும், குருவை - ஆசானையும், தெய்வம் பதவி அந்தணரை -தெய்வத் தானத்தில் வைத்துப் போற்ற வேண்டிய அந்தணர்களையும், ஆவை - பசுக்களையும், பாலரை-குழந்தைகளையும், பாவைமாரை - பெண்களையும், வதை புரிகுநர்க்கும் - கொலை புரிந்தவர்களுக்கும், மாற்றலாம் ஆற்றல் உண்டாம் - (அந்தப் பாவங்களைப்) போக்கும் வழிகள் உள்ளனவாம்; மாயா உதவி கொன்றார்க்கு -மறத்தற்கில்லாத நன்றியை மறந்தார்க்கு, ஒழிக்கல் ஆம் உபாயம் ஒன்றேனும் உண்டோ -நீக்கும் வழி சிறிதேனும் இருக்கின்றதோ ? (இல்லை).

'ஆவும் ஆனியற் பார்ப்புன மாக்களும்' (புறநா. 9) என்ற செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். தொல்காப்பியம் புறத்திணையியல் 2-ஆம் சூத்திரத்து, 'ஆதந்தோம்பல்' என்ற சொற்றொடர்க்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையையும் காண்க. 'ஆன் முலையறுத்த வறனிலோர்க்கும் பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்' (புறநா. 35) என்ற செய்யுளும், காஞ்சிப். சருவதீர்த்த 4; கல்லாடம். 4; விநாயகபுராணம் - அரசியற்கை 25; அயோத்தி: பள்ளிபடை. 104, 105. உயுத்த. வீடண. 117; என்பனவும் காண்க. 'செய்ந் நன்றி கொல்லன்மின் தீ நட்பிகழ்மின்' என்றது சிலப்பதிகாரம், இறுதி வாழ்த்துக் கட்டுரை. மாய்தல் - மறத்தல்; (புறநா. 139.) சிதைவகல் என்ற தொடரைத் தந்தை குரு அந்தணர் முதலானோர்க்கும் ஒட்டுக. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' எனக் கூறப்படுதலின் தாயை முன் வைத்தார். தெய்வப் பதவி யந்தணர்; 'கரிய மாலினும் கண்ணுத லானினும், உரிய தாமரை மேலுறை வானினும், பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்' (அயோத்தி: மந்தரை சூழ்ச்சி.7).

பி - ம். 1. *சிதைவிலாக்.; தாதையை, குரவர் தெய்வப்.*

3. *வதை புரியவர்க்கும், புரிகுநர்க்கு முண்டே, முண்டோர் மாற்றலா முபாயம், முண்டோர் மாற்றலா மாற்றம், மாற்றரு மருந்து.*

4. *கொன்றார்க் கெங்கேனும், உய்யலாம், கொன்றாற் மொழிக்கலாமோ, கொன்றவர்க் கென்றும்.* (61)

614. ஐயநும் மோடு மெங்க
 ளரிக்குலத் தரச னேடும்
மெய்யுறு கேண்மை யாக
 மேலைநாள் விளைவ தாய
செய்கையென் செய்கை யன்றே
 வன்னது சிதையு மாயின்
உய்வகை யெவர்க்கு முண்டோ
 வுணர்வுமா சுண்ட தன்றே.

'ஐய - அழகனே! நும் மோடும் - உங்களுக்கும், அரிகுலத்து எங்கள் அரசனேடும்-குரங்கரசனுன எங்கள் சுக்கிரீவனுக்கும், மெய் உறு உண்மையாக அமைந்த, கேண்மை-நட்பு, ஆக-உண்டாகுமாறு, மேலை நாள் விளைவது ஆய - முன்னுளில் தோன்றியதான, செய்கை - செயல், என் செய்கை அன்றே - எனது காரியம் அன்றே?; அன்னது சிதையும் ஆயின் - அந்த நட்புரிமை கெடுமானுல், உய்வகை எவர்க்கும் உண்டோ - (அந்தப் பாவச்செய்கையினின்று) கடைத்தேறும்வகை (நட்புக்கொண்ட வானரேந்திரனுக் கன்றி, நட்புண்டாக்கி வைத்த அடியேனுக்கு முட்பட) எவர்க்கேனும் உண்டோ? (மற்றும் அங்ஙன மாகில்), உணர்வு மாசு உண்டது அன்றே - (எங்கள்) அறிவு பழுதுண்டதாகும் அன்றே?

மேலைநாள் - முன்னுள்; 'மேலைநாள் உயிரொடும் பிறந்து' (ஆரணிய. 227). மாசுண்ணுதல்-குற்றமெய்தல்; 'மாசுண்டமணியனுள்' (சுந்தர.397), 'நீதியினின்றீர் வாய்மையுணர்ந்தீர்' (990) என அநுமன் புகழப்படுதலின், வாய்மைக்குமாருக ஒன்றும் புரியாதவன் என்று அவ்வாறு தன்னைக் கூறிக்கொண்டான் என்க.

பி - ம். 1. *அரிக்குலத் தரசன் றனே.*

2. *மெய்யுறு கேண்மை யாக்கி, யாகி, யான; விளையதான, விளைவிற் றுஞம்.*

3. *செய்வதென் செய்கையே; செய்கையே செய்கையாகும்; சிதைக்குமாயின், சிதையுமாயில், சிதைக்குமாகில்.*

4. *உய்வகை யெனக்கு, யெற்கு முண்டோ, தன்றே.* (62)

615. தேவருந் தவமுஞ் செய்யு
நல்லறத் திறமு மற்றும்
யாவையு நீரே யென்ப
தென்வயிற் கிடந்த தெந்தாய்
ஆவது நிற்க சேரு
மர ணுண்டோ வருளுண் டன்றேல்
மூவகை யுலகங் காக்கு
மொய்ம்பினீர் முனிவுண் டானல்.

'எந்தாய் - என் தந்தையொப்பவனே! செய்யும் தவமும் - நாங்கள் புரிந்த நல்ல அறச்செயல்களின் வகைகளும், தேவரும் - தேவர்களும், மற்றும் யாவையும் - மற்றும் எத்தன்மை யனவும், நீரே - அடியேங்கட்கு நீங்களே, என்பது-என்ற எண்ணம், என் வயின் கிடந்தது-என்னிடத்தில் குடிகொண்டுள்ளது; ஆவது நிற்க - அஃது ஒருபுற மிருக்க; மூவகை உலகும் காக்கும் மொய்ம்பினீர்-(மேல் கீழ் நடு என்னும்) மூன்று புவனங்களையும் புரக்கும் வன்மையுள்ளவர்களே! அருள் உண்டு - உங்கள் கருணைதான் எங்கட்குக்கதி, அன்றேல் அஃதில்லையாகி, முனிவு உண்டானல் - (உங்கட்கு) எங்கள் மீது சினம் எழுமானல், சேரும் அரண் உண்டே - நாங்கள் அடையப்பெறும் பாதுகாவலான இடம் உளதோ? (இல்லை).

'வன்மை வாய்ந்த உங்கட்குச் சினம் எழுந்தால், எங்களுக்கு அரண் ஏது? என்றான்; 'எங்குப் போயுய்கேனுனிணையடியே யடையலல்லால். எங்கும் போய்க் கரைகாணு தெறிகடல் வாய்மீண்டேயும், வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே' (திவ்ய. பெருமாள். 5, 5,) என்றது காண்க. மொய்ம்பு - வலிமை; புயமுமாம்.

பி - ம். 1. தேவருந் தவமும் மற்றுஞ் செய்யுநல் லறத்திறனும்.

2. யாவையும், எம்வயின், கிடந்த தன்றே.

3. யருளுண் டன்றி; டன்றே, நிற்கச் சேரு; மற்றுண்டோ, யுண்டாகி; வருளுண்டானல்.

616. மறந்திலன் கவியின் வேந்தன்
வயப்படை வருவிப் பாரை
திறந்திற மேவி யன்னூர்
சேர்வது பார்த்துத் தாழ்த்தான்
அறந்துணை நுமக்குத் தான்றன்
வாய்மையை யழிக்கு மாயின்
பிறந்தில னன்றே யொன்றே
நரகமும் பிழைப்ப தன்றால்.

'கவியின் வேந்தன் - வாநர மன்னனாகிய சுக்கிரீவன், மறந்திலன்- உங்கள் ஆணையை மறக்கவில்லை ; வய படை வருவிப்பாரை - வெற்றி பெறத்தக்க சேனைகளை அழைத்துவரும் தூதர்களை, திறம் திறம் ஏவி - கூறு கூறாகப் பலவிடங்கட்கும் அனுப்பி, அன்னார் சேர்வது பார்த்துத் தாழ்த்தான் - அந்த வாநரங்கள் வந்து சேர்வதை எதிர் நோக்கிச் சிறிது தாமதித்தான் ; (இதுவன்றி), அறந் துணை நுமக்கு - தருமத்தின் துணை யான உங்களிடத்து, தான்- தான், தன் வாய்மையை அழிக்கும் ஆயின்- தன்னுடைய சத்தியத்தையே அழிப்பான் ஆனால், (அந்த வாநர மன்னன் பிறந்தும்) பிறந்திலன் அன்றே - பிறவாதவனாகவே கருதப்படுவானல் லனோ? ஒன்றோ - இ..்து ஒன்று தானோ? நரகமும் பிழைப்பது அன்று- (அவனுக்கு மறுமையில்) நரகமும் தவறாது. ஆல் - அசை.

'வயப்படை வருவிப்பாரைத் திறந்திறம் ஏவி, அன்னார் சேர்வது பார்த்துத் தாழ்த்தான், இதனை, 'வேறு வேறுலகமெங்கும் தூதரை விடுத்த வெல்லை ஊறுமா நோக்கித் தாழ்த்தான்' (608) என்ற தாரை கூற்றோடு ஒப்புநோக்குக. அநுமன் சுக்கிரீவனிடம் அவன் கடப்பாட்டை நினைவூட்டச் சுக்கிரீவன் சேனைகளைத் தயாரிக்குமாறு நளன் என்ற வாநர வீரற்குத் தொடக்கத்திலேயே கட்டளையிட்டதாக முதனூலும் கூறும். இவ்வாறு முன் நிகழ்ச்சிகளைப் பின் கூற்றுக்களால் தெரிவிப்பது ஆசிரி யர் வழக்கம் என்பதும் காண்க. 'தரும சீலராகிய நும்மிடத்துத்தந்த வாக்கைத் தவறுவனானால் அந்தச் சுக்கிரீவனுக்கு நரகம்தான் கதி' என்றான் என்க; சொன்ன சொல் தவறாது பிறர்க்கு ஒப்புரவு செய்தலே பிறந்தார் பெரும்பயன் என்றமையால்.

பி - ம். 1. வருவிப்போரை, வருவித்தோரை.
2. செய்கையிற் சிறியனானன் ; செம்மையிற் சிறியனானர் ; சேர்வது பார்த்தே தாழ்த்தான்.
3. நமக்குற்றான்ற, தந்த; வாய்மை யின்றழியுமாயிற், வாய்மை யுமழியுமாயின், யின்றழிக்குமாயின்.
4. பின்னை; பிழைப்பதின்றால், பிழைப்பதாகும். (64)

617. உதவாம லொருவன் செய்த
வுதவிக்குக் கைம்மா ருக
மதவானை யனைய மைந்த
மற்று மொன்றுலகி லுண்டோ
சிதையாத செருவி லன்னுன்
முன்சென்று செருநர் மார்பின்
உதையானே லுதையுண் டாவி
யுலையானே லுறவென் மன்னே.

'மதம் ஆனை அனைய மைந்த - மதம் பிடித்த யானையை யொத்த வீரனே! உதவாமல் ஒருவன் செய்த உதவிக்கு கைம்மாறு ஆக - (தான் ஒருவனுக்கு) ஒருதவியும் புரியாதிருக்கையில் (தனக்கு) அவன் செய்த நன்றிக்குப் பிரதியாக, மற்றும் ஒன்று உலகில் உண்டோ-வேறு நினைக்க அல்லது செய்யக்கூடியது ஒன்று உலகில் உள்ளதா? சிதையாத செருவில் - கெடுதலில்லாத போரில், அன்னுன் முன் சென்று - (அவனுக்கு உதவியாகத்) தான் முற்பட்டு, செருநர் மார்பில் - (அவனுடைய) பகைவர் மார்பில், உதையானேல்-அம்பைச் செலுத்தானுயினும், உதையுண்டு - (அப்பகைவரால்) எய்யப்பட்டு, ஆவி உலையானேல் - உயிர் அழியானுயினும், உறவு என் - அவன் உறவினுல் ஆவது என்ன? மன், ஓ; அசைகள்.

உதவாமல் ஒருவன் செய்த உதவி 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது' என்பது குறள் (101). உதைத்தல்-அம்பைச் செலுத்துதல்; 'இச்சிலை யுதைத்த கோற்கிலக்கம்' (பால. கார்முக. 9);

பி - ம். 1. *கைம் மாறின்மை.*
2. *மதயானை, மாறுமுண்டாகவற்றே, மற்றுமுண்டாகவற்றே.*
3. *சிதையாத செருவினுன் முன், செருவினுர்முன், செருவிலன்றேன்; செருநர்மார்பத்து;*
4. *உதைப்புண்டாவி யுலையானேல்; றுலகின் மன்றே.* (65)

618. ஈண்டினி நீற்ற லென்ப
தினியதோ ரியல்பிற் றன்ருல்
வேண்டல ரறிவ ரேனுங்
கேண்மைதீர் வினையிற் ருமால்
ஆண்டகை யாளி மொய்ம்பி
னையநீ ரளித்த செல்வம்
காண்டியா லுன்முன் வந்த
கவிக்குலக் கோனெ டென்ருன்.

'ஆண்தகை ஆளி மொய்ம்பின் ஐய - ஆண் தன்மை பொருந்திய யாளிபோன்ற வன்மையுடன் கூடிய ஐயனே! நீ-நீ, ஈண்டு இனி நிற்றல் என்பது - இங்கு, இனி, (பகைமை கொண்டவன் போல) நிற்பது என்பது, இயல்பிற்று அன்று - இனிமையானதோர் தன்மையுடைய தாகாது; வேண்டலர் அறிவரேல்-(இச் செய்தியைப்) பகைவர் அறிவா ராஞல், நும் கேண்மை தீர் வினையிற்று ஆம் - (அது அடியேங்கட்கு) உங்களுடைய நட்பு கெடுவதற்கு உரிய செயலாக முடியும்; நீர் அளித்த செல்வம் - நீங்கள் தந்தருளிய செல்வத்தையும், உன் முன் வந்த கவிகுலம் கோனெடு - உனக்குத் தமையனுகப் பாராட்டிய முறையில் பொருந்திய வாநரக் கூட்டத்தின் தலைவனான சுக்கிரீவனையும், (வந்து) பார்ப்பாயாக' என்ருன் - என்று சொன்னுன் (அநுமன்). ஓர் - அசை.

யாளியைச் சிங்கம் என்றே கூறுவர் ஒருசாரார்; ஆனுல் யாளி யென்று ஆலயச் சித்திரங்களில் காணப்பெறும் விலங்கிற்கும் சிங்கத் திற்கும் வேற்றுமை யுண்மை காணலாம். யாளி ஒரு காலத்தில் இருந் தது இப்போது இல்லை என்பதே உண்மை; எண்கால் வருடை, அசுணமா என்ற இவை போன்று அறவே இறந்தன என்க. 'வாநரங் கள் போருக்கு ஆயத்தம் செய்தன வெல்லாம் உம்மோடு பொருதற் கன்று; உம்மைக்கண்டு அஞ்சித் தம்மைக் காத்துக்கொள்ளவே யாகும். எனவே நீவிர் பகைபற்றி அங்ஙனம் செய்ததாகக் கொள்ளுதல் முறை யன்று. கொண்டால் மாற்ருர் உங்கள் சீற்றத்தைப் பெருக்கி நம்மிடை யுள்ள நட்பினைக்குலைக்க ஏதுவாகும்; ஆகவே நீவிர் தாமதியாமல் அரண்மனைக்குள் செல்வதே மேல்' என்று குறித்தனன் என்பதும் ஆம். அறிஞனை அநுமான் உன்முன்வந்த கவிக்குலக்கோன்' என்றது இராம பிரானல் தம்பியாகக் கருதப்பட்டமை பற்றிக் கூறியது; 601 உரை காண்க. தாரை சுக்கிரீவனிடம் வருமாறு இலக்குவனை நோக்கிக் கூறும் போது ' த்வத்ப்ராதரம் வாநரவம்சநாதம் ' என்று முதனூலும் கூறும்.

பி - ம். 1. ஈண்டுநீ,

2. வேண்டில வறிவரேனும் கேண்மையின் வினையிற்ருமே;

3. முன்பின்.

4. முன்பின்வந்த. (66)

அநுமன் வார்த்தையால் இலக்குவன் சினம் தணிதல்

619. மாருதி மாற்றங் கேட்ட
மலைபுரை வயிரத் தோளான்
தீர்வினை சென்று நின்ற
சீற்றத்தான் சிந்தை செய்தான்
ஆரிய னருளிற் றீர்ந்தா
னல்லன்வந் தடுத்த செல்வம்
பேர்வரி தாகச் செய்த
சிறுமையா னென்னும் பெற்றி.

மாருதி மாற்றம் கேட்ட - அநுமனுடைய சொற்களைச் செவிக்கண் ஏற்ற, மலை புரை வயிரம் தோளான் - மலையை நிகர்த்த வலிய புயங்களை யுடைய இலக்குவன், தீர்வினை சென்று நின்ற சீற்றத்தான் - நீங்குதல் தொழிலிற் பொருந்தி நின்ற சினத்தையுடையவனாய் (சினம் தணிந்த வனாய்), ஆரியன் அருளில் தீர்ந்தான் அல்லன் - (சுக்கிரீவன்) இராமபிரானுடைய கட்டளையினின்று பிறழ்ந்தான் அல்லன்; வந்து அடுத்த செல்வம் பேர்வு அரிது ஆக செய்த சிறுமையான் - (ஆனால்), தன்னை வந்து பொருந்திய அரசுச் செல்வம், தன்னைவிட்டு அப்பால் அகல முடியாதபடி செய்ததனால் நிகழ்ந்த இழிகுணனாக ஆயினான், என்னும் பெற்றி - என்னும் தன்மையை, சிந்தை செய்தான் - உளத்திற் கருதினான்.

சுக்கிரீவன் இராமபிரான் ஆணையை மீறவில்லை; செல்வக் களிப் பினால் சிறிது அயர்ந்தான் என்று அநுமன் வார்த்தையால் தேறி இலக் குவன் சினம் தணிந்தான். தாரை கூறியதும் இதுவேயாம் என்பது காண்க. (608).

பி - ம். 2. *சீர்வினை சென்றுநின்ற; தீர்வினைச் சென்று மின்று, தீவினை சென்று நின்று; திருதற்கடங்காச் சீற்றந் தணிந்தபின்; செய்யான்.*

3. *தீர்ந்தா ரல்லர்.*

4. *பேர் வுஜையாகச் செய்த, பேருவதாகச் செய்த.* (67)

### இலக்குவன் வார்த்தை

620. அனையது கருதிப் பின்ன
 ரரிக்குலத் தவனை நோக்கி
நினையொரு மாற்ற மின்னே
 நிகழ்த்துவ துளது நின்பால்
இனையன வுரைத்தற் கேற்ற
 வெண்ணுதி யிவைநீ யென்னு
வனைகழல் வயிரத் திண்டோண்
 மன்னிளங் குமரன் சொல்வான்.

அனையது கருதி - (இங்ஙனம் அநுமன் கூறிய) அதனைப் பற்றி எண்ணி, பின்னர் - பிறகு, வனைகழல் வயிரம் திண்தோள் மன் இளம் குமரன் - வேலைப் பாடமைந்த வீரகண்டை அணிந்த கால்களையும் மிகவும் வலிய தோள்களையுமுடைய அரசிளங்குமரன் ஆன இலக்குவன், அரிகுலத்தவனை நோக்கி - வானர சாதியனுன அநுமானைப் பார்த்து, 'இன்னே நினை ஒரு மாற்றம் நிகழ்த்துவது உளது - இப்பொழுதே நினக்கு ஒரு செய்தி சொல்ல வேண்டியதுண்டு; இனையன நின்பால் உரைத்தற்கு ஏற்ற-இவ்வார்த்தைகள் உன்னிடம் கூறுதற்குத் தக்கவை; (ஆதலால்) நீ இவை எண்ணுதி - நீ இச்சொற்களை ஆலோசிப்பாயாக' என்னு - என்று, சொல்வான்-கூறத்தொடங்கினுன். அவற்றை அடுத்த ஐந்து கவிகளிற் காண்க.

அனையது என்றது, சுக்கிரீவன் இராமபிரான் ஆணையைமீறி அபசாரப் படானுயினும் அவன் செல்வச் செருக்கால் சிறுமை எய்தியது. நினையொரு மாற்றம் ; நினைக்கின்ற ஒரு மாற்றம் எனினுமாம்.

பி - ம். 1. அனையவை; அநுமனைக் குறித்து நோக்கி.
2. நினையொரு மாற்றமின்னம், நினைவருமாற்றம், மாற்றமன்னே.
3. எனையன புணர்தற்கேற்ற; புணர்தற் கேற்ற, யெண்ணுமீ யிதனை யென்ன, எண்ணிய நீதியென்னு, எனையனவுணர்தற் கேற்ற.
4. சொன்னுன். (68)

621. தேவியைக் குறித்துச் செற்ற
சீற்றமு மானத் தீயும்
ஆவியைக் குறித்து நின்ற
வையனை யதனைக் கண்டேன்
கோவியற் றருமம் நீங்கக்
கொடுமையோ டுறவு கூடிப்
பாவியர்க் கேற்ற செய்யக்
கருதுவல் பழியும் பாரேன்.

'தேவியை குறித்து செற்ற சீற்றமும் -பிராட்டியை (அரக்கர்கோன் எடுத்துச் சென்றதைக்) குறித்துப் பகையால் நெருங்கிய சினமும், மானம் தீயும்-மானமாகிய நெருப்பும், ஐயனை ஆவியை குறித்து நின்ற - இராமபிரானுடைய உயிரைப் பற்றி வருத்திநின்றன ; அதனைக் கண்டேன் - அந்த வருத்தத்தை நேரில் பார்த்தயான், கோஇயல் தருமம் நீங்க - அரசர்க்குரிய தருமம் ஒழிய, கொடுமையோடு உறவுகூடி - கொடிய இயல்புடன் பழகி, (உம்பால்) பாவியர்க்கு ஏற்ற செய்ய கருது வல் - பாவிகளே செய்யத்தக்க காரியங்களைச் செய்ய எண்ணியிருப் பேன் ; பழியும் பாரேன் - அதனால் எய்தும் பழியையும் சிறிதும் நோக்க மாட்டேன்.

இராமபிரான் தேவியைப் பிரிந்ததனால் மேற்கொண்ட வருத்தமும், அபிமானமும் நேரிற்கண்டு சினங் கொண்டான். 'பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த் துள்வேர்ப்ப' தே (குறள் 487) தகுதி; அவ்வா றிருந்தும் வெகுண்டு அதனால் நிகழும் பழியையும் நோக்காது அரசியற் றருமத்தொடு மாறுபட்டு வெகுண்டதாக இலக்குவன் கூறுகின்றான். பழி, அரச நெறியைக் கடைப்பிடியாமையான் நேரும் குற்றம். 'கோவி யற்றருமம்' என்ற தொடர் முன்னரும் (307) வந்தது.

பி - ம். 1. தேவியைக் குறித்துப் பொங்கு, செய்த, சென்ற.
2. யதனிற் கண்டே, யதனைக்கண்ட.
3. டுறவு கூட்டி, டுறவும் கூட்டி.
4. செய்யத்தானிற்பவன், செய்கை கருதுவன், கருதினன்; பழி பாராமல். (68)

622. ஆயினு மென்னை யானே
யாற்றிநின் றாவி யுய்ந்து
நாயகன் றனையுந் தேற்ற
நாள்பல கழிந்த வன்றேல்
தீயுமிவ் வுலக மூன்றுந்
தேவரும் வீவ ரொன்றோ
வீயுநல் லறமும் போகா
விதியையார் விலக்கற் பாலார்.

'ஆயினும்-ஆனாலும், என்னை யானே ஆற்றிநின்று-என் சினத்தை யானே தணித்துக்கொண்டு, ஆவி உய்ந்து - உயிர் பிழைத்து, நாயகன் தனையும் தேற்ற - இராமபிரானையும் தேற்றுவதற்கு, நாள் பல கழிந்த - பல நாள்கள் சென்றன ; அன்றேல் - அல்லாவிட்டால் (எங்கள் சினம் தணியாதிருக்குமானால்), இ உலகம் மூன்றும் தீயும் - இந்த மூன்றுலகங் களும் வெந்து அழியும் ; தேவரும் வீவர் - தேவர்களும் இறந்து படுவர்; ஒன்றோ - இது மாத்திரமோ : நல் அறமும் வீயும் - சிறந்த தருமங்களும் அழியும்; போகாவிதியை விலக்கல் பாலார் யார் - விடாது அகலாமல் நிற்றற் குரிய ஊழ்வினையைப் போக்குதற் குரியார் எவர் ?

'உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கு சினம் காத்துக் கொள்ளும் குணமே குணம்' (நன்னெறி 8). 'செல்லிடத்துக் காப்பான் சினங்காப் பான்' (குறள் 301). 'மறத்தல் வெகுளியை யார்மாட்டும்' (குறள். 303). 'தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க' (குறள். 305). 'சின மென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும் ஏமப் புணையைச் சுடும்' (குறள். 306). என்ற பொன்மொழிகள் இங்கே நோக்கத்தகும். 'விதியையார் விலக்கற்பாலார்'; விதியின் வன்மை இக்காவியத்தில் பல இடங்களிலும் குறிக்கப்பெறுவது காணலாம். அயோத்தி. கைகேசி சூழ்வினை. 133; நகர்நீ. 163; ஆரணிய 639, 1094; உயுத்த, கும்ப. 95 ;

பி - ம். 1. *ஆயினு மின்னும் யானே; ஆவியுற்று, யுய்த்து.*
2. *தேற்றிநாள் பல கழிந்த தன்றேல், கழித்தேனன்றேல், கழித் தேன் றேறி, கழிந்தே னின்றேன், கழித்தானன்றே.*
3. *தேயு மிவ் வுலகம்; வீவரன்றே, விளிவரன்றே, விளியுமன்றே, மன்னே, வீவான்றோ, விளியரொன்றோ, வீழ்வ ரொன்றோ, வீழ்வர் அன்றோ,*
4. *அறமும் மேருமீ, லறமுமன்றேன், போகாவிரியது, விரியவர்; வெகுளியார் விலக்கற்பாலார், - விரியது விலக்கற்பாலோ, விலக்கற் பாற்றோ.* (69)

623. உன்னைக்கண் டுங்கோன் றன்னை
யுற்றிடத் துதவும் பெற்றிக்
கென்னைக்கண் டனன்போற் கண்டிங்
கித்துணை நெடிது வைகித்
தன்னைக்கொண் டிருந்தே தாழ்த்தா
னன்றெனிற் றனுவொன் றாலே
மின்னைக்கண் டனையா டன்னை
நாடுதல் விலக்கற் பாற்றோ.

'(இராமபிரான்), உன்னை கண்டு - (முதலில்) உன்னைப் பார்த்து, உற்ற இடத்து உதவும் பெற்றிக்கு-இடையூறு நேர்ந்த காலத்து உபகாரம் இயற்றும் இயல்பில், உம்கோன் தன்னை - உங்கள் மன்னனான சுக்கிரீவனை, என்னை கண்டனன்போல் கண்டு - என்னை மதித்தாற்போன்றே மதித்து (என்னை யொப்பவே தம்பியாகக் கருதி), இ துணை நெடிது வைகி - இத்துணை நீண்ட காலம் போக்கி, தன்னைக்கொண்டு இருந்தே தாழ்த்தான் - தன் உயிரைத் தாங்கியே பொறுத்திருந்தான்; அன்று எனின் - அல்லாவிட்டால், தனு ஒன்றாலே - (தனது) வில் ஒன்றினாலேயே, மின்னைக் கண்டு அனையாள் தன்னை நாடுதல் - மின்னலைக் கண்டாற்போன்ற மேனியையுடையவளான பிராட்டியைத் தேடுதல், விலக்கல்பாற்றோ - (பிறரால்) தடுக்கும் தன்மையதோ?

'உன்னை முதலிற் கண்டு; உன் மூலமாகவுன் தலைவனான சுக்கிரீவனையும் கண்டு, அவன் ஆபத்தில் துணை புரிவான் என்று நினைந்து, தம்பியாகிய என்னை மதித்தது போலவே அவனையும் மதித்துத் தன்னுயிரைத் தாங்கியிருந்தான். அன்றி; தன் வலியின்மையானன்று; தனது வில்லைக்கொண்டே பகைவனைத் தொலைத்துப் பிராட்டியை மீட்கும் திறல்வாய்ந்தவன் இராமபிரான்' என்றான் இலக்குவன். 'கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவ' (310); 'தன்றுணை யொருவரும் தன்னில் வேறிலான்' 260 என்பன காண்க. காணுதல்-மதித்தல். 'தானெனக் கண்டும்' (கல்லா. 51, 7). ஒளியினாலும், தோன்றி மறையும் தன்மையாலும், மின்னல் போல்வாள் பிராட்டியாகலின் 'மின்னைக் கண்டனையாள்' என்றான்.

பி - ம். 1. *உங்கோன் றன்னோடு.*
2. *கண்டிங்காளிட்ட, உன்னைக்கண்டன்னதோர்; எத்தனை; நின்னைக் கண்டனன் போனின்றன் கண்ணிடை நெடிதுவைகி.*
3. *தன்னைக் கண்டிருந்தே; தன்னைக் கண்டின்றே; டின்னே தாழ்ந்தான்.*
4. *மின்னைக் கண்டன்னாள் தன்னை,*

624. ஒன்றுமோ வான மன்றி
யுலகமும் பதினு லுள்ள
வென்றிமாக் கடலு மேழேழ்
மலையுள்ள வென்ன வேயாய்
நின்றதோ ரண்டத் துள்ளே
யெனினது நெடிய தொன்றே
அன்றுநீர் சொன்ன மாற்றந்
தாழ்வித்தல் கரும மன்றால்.

'வானம் ஒன்றுமோ-ஆகாயம்மாத்திரமோ? அன்றி-அதுவல்லாமல், பதினால் உள்ள உலகமும் - பதினான்கென்று கூறும்படி யமைந்த உலகங்களும், வென்றிமா கடல் ஏழும் - வெற்றியையுடைய பெரிய ஏழு கடல்களும், மலை ஏழும் - குலபர்வதங்கள் ஏழும், உள்ள - இருக்கின்றன, என்ன வேயாய் நின்றது - என்றுசொல்லும்படி நிற்பதான, ஓர் அண்டத்து உள்ளே - ஒருலக உருண்டைக்குள்ளே (உலகில் ஏதோ ஓர் இடத்தில்), எனின் - (பிராட்டி இருக்கின்றாள்) என்றால், அது - அவ்விடத்தைத் தேடி மீட்டுக்கொண்டுவருதல், நெடியது ஒன்றோ - பெரிய செயலாகுமோ? (ஆயினும்), அன்று நீர் சொன்ன மாற்றம் தாழ்வித்தல் - அச்சமயம் நீங்கள் மொழிந்த சொல்லை நிறைவேற்றாது காலதாமதம் செய்தல், கருமம் அன்று - (நீங்கள்) (செய்யத்தக்க) காரியமாகாது. ஆல் - அசை

ஊழிக் காலத்தில் உலகத்தை யழிக்கும் தன்மையதாகலின் 'வென்றிமாக்கடல்' என்றார். அன்றுநீர் சொன்ன மாற்றம் - 204, 206, 210 செய்யுட்கள் காண்க.

பி - ம். 1. ஒன்றுமே வானமின்றி, வரணமின்றி, வானமாதியுலக மோர்பதி னாலோடும்.
2. மலையுமேழேழ் யேலையுமென்ன, மென்ண வேயாய்; வென்றி மாகட லோரேழும் விலங்க லேழென வேயாகி.
3. நின்ற பேரண்டத் துள்ளே யெனிலது நெடியதன்றே.
4. தருமமன்றால்,

625. தாழ்வித்தீ ரல்லீர் பன்னா
டருக்கிய வரக்கர் தம்மை
வாழ்வித்தீ ரிமையோர்க் கின்னல்
வருவித்தீர் மரபிற் றீராக்
கேள்வித்தீ யாளர் துன்பங்
கிளர்வித்தீர் பாவந் தன்னை
மூள்வித்தீர் முனியா தானை
முனிவித்தீர் முடிதி ரென்றான்.

'தாழ்வித்தீர் அல்லீர் - நீங்கள் காலதாமதம் செய்தவர் மட்டும் அல்லீர்; (அவ்வாறு செய்ததால்) பல்நாள் தருக்கிய அரக்கர் தம்மை வாழ்வித்தீர் - பல காலமாகச் செருக்கித்திரிந்த இராக்கதர்களை வாழச் செய்தீர்கள்; இமையோர்க்கு இன்னல் வருவித்தீர் - தேவர்கட்குத் துன்பம் தேடித்தந்தீர்கள்; மரபின் தீரா கேள்வி தீ ஆளர் துன்பம் கிளர்வித்தீர் - வரன் முறையினின்றும் வழுவாத நூற் கேள்வியையும், வேள்வித்தீயையும் உடைய முனிவர்கட்குத் துயரத்தை மேன்மேலும் வளரச் செய்தீர்கள் : பாவம்தன்னை மூள்வித்தீர் - பாவத்தை வளரச் செய்தீர்கள்; (இவ்வளவேயோ), முனியாதானை முனிவித்தீர்-எளிதில் சினவாதவனான இராமபிரானையும் வெகுளும்படி செய்தீர்கள்; முடிதிர் - அழிந்தொழியுங்கள்', என்றான் - என்று இலக்குவன் மொழிந்தான்.

'தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர், தென்றல் தூற்ற வேர்ப்பித்தீர்' (உயுத்த. மாயாசனக. 11) என்ற செய்யுட் சந்தத்தை இத்துடன் ஒப்பு நோக்குக. அரக்கர்களை வீழ்விப்பதற்குமாறாக வாழ்வித்தீர் என்றதனால் இராமவாதார இரகசியம் வெளிப்படுதல் காண்க. 'முனியாதானை முனிவித்தீர் - என்பதைச் 'சினவுண்மை தெரிந்ததில்லை' (உயுத்த. கும்ப. 17) என்ற இடத்துங்காண்க. 'குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தலரிது' (குறள். 19) என்றபடி 'முடிதிர்' என்றான்; நாலடியார் 161, 164-ஆம் செய்யுட்கள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். முனியாதானை முனிவித்தது, செய்ந்நன்றி கொன்ற கொடுமைபற்றி; அஃதோர் கழிவில்லாத மா பாதகமாதலின் என்க.

பி - ம். 1. *ரல்லீரெம்மை, தருக்கினர் தம்மை நீவிர்.* 2. *மரபிற்றீரக்.*
4. *முடிவின் என்றான், முடிந்தீர், முடிவிர்; முடிவித்திரென்றான் முன்பன்.*

அநுமன் இலக்குவனைச் சுக்கிரீவனிடம் வருமாறு அழைத்தல்

626. தோன்றலஃ துரைத்த லோடு
மாருதி தொழுது தொல்லை
ஆன்றநூ லறிஞ போய
பொருண்மனத் தடைப்பா யல்லை
ஏன்றது முடியே மென்னி
னிறத்துமித் திறத்துக் கெல்லாம்
சான்றினி யானே போந்துன்
றன்முனைச் சார்தி யென்றான்

தோன்றல்-காட்சிக்கினிய இலக்குவன், அஃது உரைத்தலோடும்-அச்சொற்களைச் சொன்னவுடனே, மாருதி - அனுமான், தொழுது - (இலக்குவனை) வணங்கி, 'தொல்லை ஆன்ற நூல் அறிஞ - பழமையான உயர்ந்த நூல்களை அறிந்தவனே! போய பொருள் மனத்து அடைப்பாய் அல்லை - கடந்த செய்திகளை உள்ளம் கொள்ளா திருப்பாயாக; ஏன்றது முடியேம் என்னின் - (நாங்கள்) ஏற்றுக் கொண்ட பணியைச் செய்யாது விடுத்தோமாயின், இறத்தும்-உயிர் விடக்கடவோம்; இ திறத்துக்கு எல்லாம் இனி யானே சான்று - இந்தவகைச் செய்திகட்கெல்லாம் நானே சாட்சியாவேன்; போந்து - உள்ளே வந்து, உன் தன்முனை சார்தி - உனக்கு அண்ணன் முறையில் நிற்கும் சுக்கிரீவனிடம் சென்று சேர்வாயாக,' என்றான் - என்று சொன்னான்.

தோன்றல் - பெருமையாளன்; ஆண்பாற் சிறப்புப் பெயர். 'தொல்லை யான்ற நூல் அறிஞ' என்றது இலக்குவனை; 'இயைந்த நீதி வளையா வருநன்னெறி நின்னறிவாகு மன்றே' (அயோத்தி. நகர்நீ. 129); 'தெளிவுடைத்தம்பி' (ஆரணிய. 786); 'வாய்தந்தன கூறுதியோ மறைதந்த நாவால்.' (அயோத். நகர்நீங்கு. 136) என்பன காண்க. இறத்தும்; 'மடந்தை தன் பொருட்டால் வந்த வாளமர்க் களத்து மாண்டு, கிடந்திலரென்னிற் பின்னுநிற்குமோ கேண்மை' (610); 'உதவிக்குக் கைம்மாறாக, ........................ செறுநர்மார்பில் உதையானே லுதையுண்டாவி யுலையானேல் உலகின் மன்னே' (617), என்பன இங்கே நினையத்தகும். 'தருமம், சத்தியம், முதலியவற்றினின்றும் சிறிதும் வழுவாதவன் ஆகலின் அநுமான் தன்னையேசான்றாகக் கூறினான். 'நீதியினின்றீர் வாய்மையமைந்தீர்' (990) முதலாகச் சாம்பன் அநுமானைப் புகழ்ந்து கூறியன காண்க 'தருமம் போல்வான்' (உயுத்த. மருத்துமலை. 49). 'மெய்ம்மைதொடர்ந்தோய்' (சுந்தர. 684) 'சுருதியே யன்ன மாருதி' (சுந்தர. 790) என்பனவும் காணத்தகும். சான்றினி

யறனே' என்ற பாடத்திற்கு, 'நாங்கள் அறந்திறம்பினேம் என்று நீங்கள் எங்களைக் கொல்ல வேண்டாம். அறமே எங்களைக் கொன்று விடும்' என்க. 'மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின் அறஞ்சூழும் மற்றவன் கேடு' (குறள், 204). ஆன்ற - சான்ற என்பதன் மரூஉ. 'உன் தம்முனைச் சார்தி என்றான், 620 பார்க்க; 'பரதனீயினையன பகர்தியோ' (683); என்றதும் காண்க. உன்தன்முனை -, இராமனை எனினுமாம்.

பி - ம். 2. பொன்போ லருள் மனத்து.
3. முடியோ மென்னின்; இயற்றுமித் திறத்துக்கெல்லாம்.
4. சான்றெனவறவோய், சான்றினியறமாம், சான்று மற்றறமே, யறனே, தலைமயனைச். (73)

இலக்குவன் உடன்பட்டுச் செல்லுதல்

627. முன்னுநீ சொல்லிற் றன்றே
முயன்றது முயற்சி தானும்
இன்னுநீ யிசைத்த செய்வா
னியைந்தன மென்று கூறி
அன்னதோ ரமைதி யான்ற
னருள்சிறி தறிவா னேக்கிப்
பொன்னின்வார் சிலையி னுனு
மாருதி யோடும் போனன்.

பொன்னின் வார் சிலையினனும் - பொன்னினுல் வார்த்துச் செய்யப் பட்ட வில்லைத் தாங்கிய இலக்குவனும் (அநுமனை நோக்கி), 'முன்னும்-முன்பும், முயன்றது முயற்சிதானும்-நாங்கள் மேற்கொண்ட முயற்சியும், நீ சொல்லிற்று அன்றே - நீ கூறியதே யன்றே? இன்னும்- இனிமேலும், நீ இசைத்த செய்வான் இயைந்தனம் - நீ சொல்லியதையே செய்தற்கு ஒருப்பட்டேம்' என்று கூறி - என்று சொல்லி, அன்னது ஓர் அமைதியான் தன் அருள் சிறிது அறிவான் நோக்கி - (மேலே கூறப்பட்ட) நிலையை யுடையவனான சுக்கிரீவனுடைய மனநிலையையும் சிறிது தெரிந்துகொள்ள எண்ணி, மாருதியோடும் போனான் - அநும னுடனே சென்றான்.

'முன்னும் முயன்றது நீ சொல்லிற்றன்றே' என்றது 220, 221 செய்யுட்களின் அநுமன் கூறியன. தான் கூறிய சொற்கிணங்கப் பிராட்டியைத் தேட முயலாமல் அந்தப்புரமே கதியாக விருந்ததுபற்றிச்

சுக்கிரீவனை 'அன்னதோர் அமைதியான்' என்றார், அமைதி - தாமதம். அருள் - அந்தச் சுக்கிரீவன் எங்களிடத்து அன்பு செய்யும் விதம். பொன்னின் வார்சிலை - பொற்கட்டுகளையுடைய அல்லது அழகானதும் நீண்டதுமான வில்எனினுமாம்.

பி - ம். 1. முயன்றது முற்றுங்காலை; முயற்றிருனும், முயற்றிதானும், முறைமைதானும், முற்றுந்தோறும், முற்றுங்காறும்.
2. சொன்ன செய்வா னிசைந்தனம்; மென்பகூற.
3. தறியநோக்கி, தலையநோக்கி.
4. மறுமனும் புறம்போய் நின்றார். (74)

## தாரை மகளிர் குழாத்தோடு மீளுதல்

628. அயில்விழிக் குமுதச் செவ்வாய்ச்
சிலைநுத லன்னப் போக்கின்
மயிலியற் கொடித்தே ரல்குன்
மணிநகைத் திணிவேய் மென்றோட்
குயின்மொழிக் கலசக் கொங்கை
மின்னிடைக் குமிழேர் மூக்கின்
புயலியற் கூந்தன் மாதர்
குழாத்தொடுந் தாரை போனாள்.

தாரை - தாரை, அயில் விழி - வேல் போன்ற கண்களையும், குமுதம் செவ்வாய் - ஆம்பல் மலரை நிகர்த்த சிவந்த வாயினையும், சிலைநுதல் - வில்லொத்த புருவத்தையும், அன்னம் போக்கின் - அன்னத்தின் நடை போன்ற நடையினையும், மயில் இயல் - மயிலொத்த சாயலினையும், கொடி தேர் அல்குல் - கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட தேர்த்தட்டுப் போன்ற மெல்லிய தோள்களையும், மணி நகை - முத்துப்போன்ற பற்களையும், திணிவேய் மெல் தோள் - வலிய மூங்கில் போன்ற மெல்லிய தோள்களையும், குயில் மொழி - குயிலை யொத்த குரலினையும், கலசம் கொங்கை - பொற்கலசம் ஒத்த தனங்களையும், மின் இடை - மின்னல்போன்ற இடையினையும், குமிழ் ஏர் மூக்கின் - குமிழமலர் போன்ற எடுப்பான மூக்கினையும், புயல் இயல் கூந்தல் - கருமேகத்தை ஒத்த கூந்தலையுமுடைய, மாதர் குழாத் தொடும்-மகளிர் கூட்டத்துடனே, போனாள் - திரும்பிச் சென்றாள்.

விழிக்கு அயில் கூர்மையிலும், ஆடவரை வருத்தும் திறத்திலும், குமுதம் வாய்க்குச் செந்நிறத்திலும், சிலை, நெற்றிக்கு வளைவிலும்,

அன்னம் நடைக்கு அசைந்து செல்வதிலும், மயில் சாயலிலும், தேர், அல்குற்குப் பரப்பிலும், வேய், தோள்கட்கு உருட்சி, பசுமை களிலும், குயில், மொழிக்கு இனிமையிலும், கலசம், கொங்கைக்கு வடிவத்திலும், மின்னல், இடைக்குத் தோன்றி மறைவதிலும், குமிழ மலர், நாசிக்கு வடிவிலும், புயல், கூந்தற்குக் கருமை நீளங்களிலும் உவமைகளாகக்கொள்க, மகளிர் உறுப்பனைத்தும் ஏற்ற உவமைகளுடன் சுருக்கிக்கூறிய திறம் நோக்குக. தாரையுடன் சென்ற மகளிர்க்கே இவ் வனப்புக்கள் அனைத்தும் கூறித் தாரைக்கு ஒன்றும் அடைமொழி கூறாமை, அன்னவளின் கைம்மைக் கோலத்தினையும் கற்பு நிலையையும் உணர்த்தவென்க, விழிக்கு வேல்; 'ஆரணிய 627'. குமுதச்செவ்வாய் 'குமரகுரு' மதுரைக். 102. சிலை நுதல், ஆரணிய. 627; அன்னநடை ஆரணிய. 224.

மயிலியல்-253. பட்டினப் 149; நற். 301; அகம். 63. கொடித் தேரல்குல் 756; நைடத. அன்னத்தைத் தூது 22. கொடி - ஒழுங்கு மாம்; 'கொடிமூக்கு' என்ற இடத்து உரைகாரர் ஒழுங்கான மூக்கு என்றது காண்க. சீவக. 165. மணிநகை; ஆரணிய. 627. திரு வாச. திருவெம்பாவை. வேய்மென்றோள். ஆரணிய 620 ; தேவா, கோளறு. 1 ; சீவக. 652 ; 1581 2923 குயில் மொழி 253 ; அரிச். 4. அயோத். சித்திரகூட 12. கலசக் கொங்கை. நைடத.757. ஆரணிய. 62: குமிழேர் மூக்கு; சிலப். அந்திமாலை. 69. இந்திரவிழா. 205 ; வேனிற் 75 ; சீவக. 165. நைடத. அன்னத்தைத்தூது. 14. புயலியற் கூந்தல் - அகம் 225. விழியை முற் கூறினர், கண்ணிற் சிறந்த உறுப்பின்றாகலின். மற்றும் மக்களுள்ளாரைக் கேசாதி பாதமாக வருணித்தலும் தேவர்களைப் பாதாதிகேசமாக வருணித்தலும் மரபு. இங்கு வானர மாதர்களைப் பாதாதி கேசமாக வருணித்தார், காப்பிய வரலாற்றின்படி அவர்களைத் தேவர்களென்பராகலின்; 'வானுளோரனை வரும் வானரங்களா (பால. திருவவதார. 19). 'செப்பியென் குரங்காய் வந்தார் தனித்தனித் தேவர் என்றான்' (உயுத்த. இலங்கைகாண் 11) என்றமை காண்க.

பி - ம். 1. *அன்னத் தேகல்,*

2. *பிணைவேய், யிளவேய் மென்றோள்.*

3. குமிழ்ப் பூமூக்கும் 4. *மாதர் தம்மொடும்.*

இஃது ஓர் பிரதியில் இல்லை. (75)

அங்கதன் இலக்குவன் வரவைச் சுக்கிரீவனுடன் சொல்லச் செல்லுதல்

629. வல்லமந் திரிய ரோடு
வாலிகா தலனு மைந்தன்
அல்லியங் கமல மன்ன
அடிபணிந் தச்சந் தீர்ந்தான்
வில்லியு மவனை நோக்கி
விரைவினென் வரவு வீர
சொல்லுதி நுந்தைக் கென்று
னன்றெனத் தொழுது போனான்.

வாலி காதலனும் - வாலியின் மகனான அங்கதனும், வல்ல மந்திரியரோடு - நீதிகளிலும் அரசியல் நூல்களிலும் தேர்ச்சிபெற்ற அமைச்சர்களுடன் (வந்த), மைந்தன் அல்லி அம்கமலம் அன்ன அடிபணிந்து- வீரனான இலக்குவனுடைய அகவிதழ்கள் கொண்ட அழகிய தாமரை போன்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அச்சம்தீர்ந்தான் - (என்ன நேரிடுமோ என்று எண்ணிய) பயம் நீங்கப்பெற்றான்; வில்லியும் - வில்லாளனான இலக்குவனும், அவனை நோக்கி - அந்த அங்கதனைப் பார்த்து, ' வீர - வீரனே ! என் வரவு - எனது வருகையை, நுந்தைக்கு- உனது தந்தையாகிய சுக்கிரீவனுக்கு, விரைவின் சொல்லுதி-விரைந்து சென்று கூறுவாயாக ' என்றான் - என்று மொழிந்தான்; (அது கேட்டு) அங்கதன், நன்று என - 'நல்லது' என்று சொல்லி, தொழுது போனான்- அவ் விளைய பெருமானை வணங்கிப் போயினான்.

வல்ல மந்திரியர்; (அயோத்தி. 9, 11, 12) காண்க. அங்கதன் சுக்கிரீவனைத் தந்தை போற் கருதின வனாகலின் நுந்தைக்கு என்றான். (426), காண்க.

பி - ம். 1. *மையன் ; வந்தான்.*

2. *தான்பணிந்த; எல்லியிலமலன்றம்பி யடிபணிந் திறைஞ்சி நின்றான்*

3. *வீரா.*

4. *சொல்லுதி யுந்தைக்.* (76)

இலக்குவன் சினத்தை அங்கதன் தந்தைக்குத் தெரிவித்தல்

630. போனபின் ருதை கோயில்
புக்கவன் பொலன்கொள் பாதம்
தானுறப் பற்றி முற்றுந்
தைவந்து தடக்கை வீரன்
மானவற் கிளையோன் வந்துன்
வாயிலின் புறத்தான் சீற்றம்
மீனுயர் வேலை மேலும்
பெரிதிது விளைந்த தென்ருன்.

தடகை வீரன் - பெரிய கைகளையுடைய வீரஞன அங்கதன், போனபின் - சென்ற பிறகு, தாதை கோயில் புக்கு - சிற்றப்பஞகிய சுக்கிரீவனுடைய அரண்மனைக்குட் சென்று, அவன் பொலம் கொள் பாதம் - அச் சுக்கிரீவனுடைய பொன்போன்ற பாதங்களை, தான் உற பற்றி முற்றும் தை வந்து - தான் நன்ருகப் பிடித்துக் கொண்டு, முழுவதும் தடவி (துயிலெழுப்பி), 'மானவற்கு இளையோன் வந்து உன் வாயிலின் புறத்தான்-இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குவன் வந்து உன் அரண்மனை வாயிலின் வெளியில் நிற்கின்ருன்; சீற்றம் - (அவன் இப்பொழுது கொண்டுள்ள) சினம், மீன் உயர் வேலை மேலும் பெரிது - மீன்கள் சிறந்து விளங்கும் கடலினும் பெரிது; இது விளைந்தது - இது நிகழ்ந்த செய்தி', என்ருன் - என்று மொழிந்தான்.

பொலம் - பொன் ; அழகுமாம். தை வருதல் - தடவுதல், (கால் பிடித்தல்); சிறுபாண். 44 ; சீவக. 48. தட - பெரிய; 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல். 320). மானவன்-பெருமையோன். அயோத்தி. நகர்நீ. 4 ; ஆரணிய. 1187, சுந்தர. 692. மீனுயர் என்பது இங்கே பொருளுக்கேற்ற அடையென்று கொள்க.

பி - ம். 1. *போனவன் ருதை ; புகுந்தவன்.*
3. *இளையான் வந்தன் வாசலின் ; புறத்தோன்*
4. *பெரிதது, பெரிதென; விளம்புகின்ருள்.*

சீற்றத்தின் காரணத்தைச் சுக்கிரீவன் வினவுதல்

631. அறிவுற்ற மகளிர் வெள்ள
மலமரு மமலை நோக்கிப்
பிறிவுற்ற மயக்கத் தான்முந்
துற்றதோர் பெற்றி யோரான்
செறிபொற்று ரலங்கல் வீர
செய்திலங் குற்ற நம்மைக்
கறுவுற்ற பொருளுக் கென்னே
காரணங் கண்ட தென்றான்.

அறிவு உற்ற மகளிர் வெள்ளம் - (அங்கதன் அங்கு வந்துள்ளமை யை) அறிந்த பெண்டிர் கூட்டம், அலமரும் அமலை நோக்கி - கலங்கி ஆரவாரம் இடுதலைக் கண்டு, பிறிவு உற்ற மயக்கத்தான் - தன் மயக் கத்தினின்று விடுதலையடைந்த சுக்கிரீவன், முந்து - முன்பு, உற்றது ஓர் பெற்றி - (அங்கதன் வந்து எழுப்பினது போன்ற) நிகழ்ச்சிகளின் தன்மையை, ஓரான் - உணராதவனாய், (அவ்வங்கதன் கூறியதற்கு விடையாக அவனை நோக்கி), 'செறி பொன் தார் அலங்கல் வீர - நிறைந்த பொன் மாலை அணிந்த வீரனே! குற்றம் செய்திலெம் - யாம் (எதுவும்) குற்றம் செய்யவில்லையே! நம்மை கறுவு உற்ற பொரு ளுக்கு - நம் மீது (இளையபெருமாள்) சினம் கொண்டதற்கு, காரணம் கண்டது என்னே - காரணமாகக் காணப்பட்டது யாது?' என்றான் - என்று வினவினான்.

முந்து பிரிவுற்ற மயக்கத்தான் அறிவுற்று, என்று பாடம் கொண்டு பொருள் கூறுவாரும் உளர். அலமரல் - வருந்துதலும் ஆம். 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' (தொல் - சொல். 311). அமலை - ஆரவாரம்; ஆரணிய: 313, 420; (புறநா. 177); (குறுந். 277). கறுவுதல்-சினத்தல். 'கறுவுசம ரங்குசம்சேர் கையும்' (குமரகுரு: கந்தர் கலி. 52) 'கறுவு காதலால்' (அயோத்தி. கிளைகண்டு: 27).

பி - ம். 1. அறிவுற்று; அறிவுற்றான் அலம்வருமமலை, மனைவருமகல நோக்கி, அவனைநோக்கி.

2. பிறிவுற்றான், மயக்கத்தான்; முன் பிறிவுற்ற மயக்கந் தீர்ந்தான்; பிறிவுற்ற மயக்கத்தான்.

4. கென்ன காரணம்

அங்கதன் கூற்று

632. இயைந்தநா ளெல்லை நீசென்
றெய்தலை செல்வ மெய்தி
வியந்தனை யுதவி கொன்றாய்
மெய்யிலை யென்ன வீங்கி
உயர்ந்தது சீற்ற மற்ற
துற்றது செய்ய முற்றும்
நயந்தெரி யநுமன் வேண்ட
நல்கின னம்மை யின்னும்.

(அப்போது அங்கதன் சுக்கிரீவனை நோக்கி), 'இயைந்த நாள் எல்லை- (சேனையைத் திரட்டிக்கொண்டு வருவதாக முன்னர்) ஏற்றுக்கொண்ட நாள் தவணையில், நீ-நீ, (அப்படைகளுடன்) சென்று எய்தலை - (இராம பிரானிடம்) போய்ச் சேர்ந்தாயில்லை; செல்வம் எய்தி வியந்தனை - பெருஞ் செல்வத்தையடைந்து செருக்குற்றாய்; உதவி கொன்றாய் - (அவர்கள் புரிந்த) நன்றியை மறந்தாய்; மெய் இலை - பொய்யனாக ஆனாய், என்ன - என்று, சீற்றம் வீங்கி உயர்ந்தது - (இலக்குவனுக்குக் கோபம் மிகுதியும் வளர்ந்தது; (அப்பொழுது) நயம் முற்றும் தெரி அநு மன் - நீதிமுறைகள் அனைத்தும் நன்கு அறிந்த அநுமன், அது உற்றது செய்ய - அச் சினத்தைப் போக்குதற்கு வேண்டிய முறையைச் செய்த தனாலும், வேண்ட - (சினம் நீங்கியபின்) அந்த இலக்குவனை விழைந்து போற்றியதனாலும், நம்மை இன்னும் நல்கினன் - (அந்த இலக்குவன்) நம்மை இன்னும் உயிரோடுலாவுமாறு அருள்புரிந்தான். மற்று-அசை.

வியந்தனை - பெருமிதம் கொண்டனை. 'நம் மறனறிந்திலன் வாழ் வின் மயங்கினான்' (554), 'மெய்ம்மை சிதைத்துரை பொய்த்துளான்' (555). என்பன இராமபிரான் கூற்று. முற்றும் நயம்தெரி அநுமன் - 'நீதியினின்றீர் வாய்மையமைந்தீர்' (990) என்றது காண்க. 'முன் னர்த் தாரையைக்கொண்டு இலக்குவன் சினத்தைத் தணித்துப் பின்னர் இனிய சொற்களால் வேண்டியதுபற்றி, 'முற்றும் நயம்தெரி அநுமன்' என்றார்.

பி - ம். 1. இயைந்த நாள் என்றை
2. கொன்றாய் மேவிலை, மேயலை, யென மனத்தன்னிவீங்கி.
3. சீற்றமாற்ற முற்றது செய்ய; செய்கையுற்று, செய்கைதானும்.
4. நயந்தரிந்தன்னை வேண்ட; நம்மை யென்றும், நம்மையின்று.

(79)

633. வருகின்ற வேக நோக்கி
வாநர வீரர் வானைப்
பொருகின்ற நகர வாயிற்
பொற்கத வடைத்துக் கற்குன்
றருகொன்று மில்லா வண்ணம்
வாங்கின ரடுக்கி மற்றும்
தெரிகின்ற சினத்தீ பொங்கச்
செருச்செய்வான் செருக்கி நின்றார்.

வானர வீரர் - குரங்கு வீரர்கள், வருகின்ற வேகம் நோக்கி - (இலக்குவன்) வரும் விரைவைக் கண்டு, வானை பொருகின்ற நகரம் வாயில் பொன் கதவு அடைத்து - விண்ணைச் சென்று தொடுகின்ற நகரத்தின் வாயிற்கணுள்ள, பொன்னாலாகிய கதவினை மூடிக்கொண்டு, அருகு ஒன்றும் இல்லாவண்ணம் - பக்கத்தில் ஒரு சிறு குன்றுகூட இல்லாதபடி, கல் குன்று வாங்கினர் அடுக்கி - கல் மலைகளையெல்லாம் எடுத்துவந்து (அவ் வாயிலில்) ஒன்றன்மேல் ஒன்றாக வைத்தடுக்கி, மற்றும் - மேலும், தெரிகின்ற சினம் தீ பொங்க - வெளிப்படுகின்ற கோபத்தீயானது கொதித்தெழ, செருசெய்வான் - (இலக்குவனோடு) போர் புரியும்பொருட்டு, செருக்கி நின்றார் - செருக்குக்கொண்டு நின்றார்கள்.

'வானர வீரர்கள் நகரவாயிலின் பொற்கதவுகளைத் தாளிட்டு, அவற்றினருகில் பல சிறுகுன்றுகளை அடுக்கிப் போர்புரிய ஆயத்தமாயினர் என்பது முன்னர் (34) செய்யுளில் 'புக்குறுக்கிப் புடைத்துமெனப் புறம் மிக்கிறுத்தன' என்றமை கொண்டு காண்க. 'அநுமன் வேண்ட நல்கினன் நம்மை' என்று பின் நிகழ்ச்சியானதொன்றை முன்கூறிப் பின் வரலாற்று முறையாக இச் செய்யுள்முதல் அங்கதன் கூறத்தொடங்கியது, அச்சமுற்ற சுக்கிரீவனைச் சாந்தப்படுத்திப் பின் நடந்தவற்றை முறையாகக் கூறவென்க.

பி - ம். 1. வருகின்ற சீற்றம் நோக்கி, வருகின்ற வீரர் வீரன்.
2. நகர் வாய்தன்னிற், நகர வாய்தற், நகரின்வாசற்.
3. ரடுக்க மற்றென், மற்றோர், மற்று; ரடுக்கிமுற்றும், ரடுக்கிப் பின்னும்.
4. திரிகின்ற செந்தீ; வமைந்து நின்றார். (80)

634. ஆண்டகை யதனை நோக்கி
யம்மலர்க் கமலத் தாளில்
தீண்டினன் றீண்டா முன்னந்
தெற்கொடு வடக்குச் செல்ல
நீண்டகன் மதிலுங் கொற்ற
வாயிலு நிரைத்த குன்றுங்
கீண்டன தகர்ந்து பின்னைப்
பொடியொடுங் கெழீஇய வன்றே

'ஆண் தகை - ஆண்மைக் குணமிக்க இலக்குவன், அதனை நோக்கி - வானரர்களின் அந்தச் செயலைப் பார்த்து - அம் கமலம் மலர் தாளில் தீண்டினன் - அழகிய செந்தாமரை மலர்போன்ற தனது திருவடியினால் (வானரர்கள் அடைத்த வாயில் கதவை) உதைத்தான்; தீண்டா முன்னம் - (அத்திருவடி) படுவதற்கு முன்பே, தெற்கொடு வடக்கு செல்ல நீண்ட கல்மதிலும் - தென்வடலாகப் பரவி நீண்ட கல் மதில்களும், கொற்றம் வாயிலும் - வெற்றி பொருந்திய வாயிலும், நிரைத்த குன்றும் - வரிசையாக அடுக்கிய குன்றுகளும், தகர்ந்து கீண்டன - உடைந்து சிதறினவாய், பின்னை - பின்பு, பொடியொடும் கெழீஇய - பொடியுடன் கலந்தொன்றுயின. அன்றே - ஈற்றசை.

மதில் முதலியன அழிந்தன என்றவற்றை முன்னர் 589-592. செய்யுட்களில் காண்க. கீண்டன - கிழிந்தன, 'கீண்டானிலம் யோசனை கீழ்புடையே' (ஆரணிய.878). 'பொடியொடும் கெழீஇயது-துகளோடும் ஒன்றுய்ப் போயிற்று' என்பது பழையவுரை.

பி - ம். 1. *கமலத்தாளால், தம்புயத் தலர்ப்பூந்தாளால்*

2. *வடக்குச்செல்வ, வடக்குத்தெய்வ, வடக்குந்தேய, வடக்குத் தேய*

3. *வாயிலினிரைத்த, நிறைத்த.*

4. *கரந்து, தகர்ந்த பின்னை ; கெழீஇயதன்றே.* (81)

635. அந்நிலை கண்ட திண்டோ
 ளரிக்குலத் தனிக மம்மா
எந்நிலை யுற்ற தென்கேன்
 யாண்டுப்புக் கொளித்த தென்கேன்
அந்நிலை கண்ட வன்னை
 ஆயிழை யாயத் தோடு
மின்னிலை வில்லி னுனை
 வழியெதிர் விலக்கி நின்ருள்.

'அ நிலைகண்ட திண்தோள் அரிகுலத்து அனிகம் - அவ்வாறு (இலக்குவனுல் நேர்ந்த) நிலைமையைக் கண்ணுற்ற வலிய புயங்களை யுடைய வானர சாதிச்சேனை, எ நிலை உற்றது என்கேன் - எந்த நிலை மையை அடைந்ததென்று கூறுவேன்? யாண்டு புக்கு ஒளித்தது என் கேன் - எவ்விடத்திற் புகுந்து பதுங்கியது என்று சொல்வேன். அநிலை கண்ட அன்னை - (குரங்குச் சேனையின்) அத்தகைய நிலைமையை நேரிற்கண்ட (எனது) தாயாகிய தாரை, ஆய் இழை ஆயத்தோடு - அழகிய அணிகளை அணிந்த மகளிர் கூட்டத்துடன், மின் இலை வில்லினை - மின்னல் (ஒளி) தங்கியுள்ள வில்லைத்தாங்கிய இலக்கு வனை, எதிர் வழி விலக்கி நின்ருள் - எதிர்ந்தவளாய் வழிமறித்து நின் ருள். அம்மா - வியப்பிடைச் சொல்.

(44, 45) பாடல்களில், 'தாரை விலக்கினுள்', 'வீரன் வருவழி மாற்றினுள்' என்றும் கூறியது காண்க. அனிகம் - சேனை; அனீகம் என்ற வடசொல்லின் திரிபு (ஆரணிய. 392, 548); ஆயிழை - அன் மொழித்தொகை. திண்டோள் அரிக்குலமும் நிலை குலைந்ததெனவே அசகாய சூரனுன இலக்குவன் வன்மையும் போர்த்திறமும் திருவடிப் பெருமையும் பெறப்படும். மின் நிலை வில், என்றதில் என்றும் நிலைத்த லில்லாத மின்னல் வில்லினிடம் நிலைத்து நின்றது என்ற நயம் காண்க. மின் இலைவேல் என்ற பாடத்திற்கு ஒளிவாய்ந்த இலை வடிவான வேல் என்க.

பி - ம். 1. *அரிகுலத்.*
2. *எந்நிலை நின்ற தென்கேன், கண்டதென்கேன்; யாண்டுப் புக்கி ருந்த தென்கேன்; மீண்டுப் புக்கிருந்த.*
3. *இந்நிலை எந்திழை.*
4. *வேலினுனை.*

636. மங்கையர் மேனி நோக்கான்
மைந்தனு மனத்து வந்த
பொங்கிய சீற்ற மாற்றிப்
புகல்கிலன் பொருமி நின்ருன்
நங்கையு மினிது கூறி
நாயக நடந்த தென்னே
எங்கள்பா லென்னக் கேட்டா
ளிலவலும் வரவு சொன்ஞன்.

மைந்தனும் - இலக்குவனும், மங்கையர் மேனி நோக்கான் - (இங்ஙனம் குறுக்கிட்ட தாரை முதலிய) பெண்களின் உருவத்தை நிமிர்ந்து பாராதவனுய், மனத்து வந்த பொங்கிய - தன் உள்ளத்து எழுந்து ததும்பி நின்ற, சீற்றம் மாற்றி புகல்கிலன் - சினத்தை மாற்றி உரைக்கமாட்டாதவனுய், பொருமி நின்ருன் - விம்மி நின்ருன் ; நங்கையும்-மகளிரிற் சிறந்தவளான தாரையும், இனிது கூறி - (இலக்குவன் சினம் தணியுமாறு) இனிய சொற்களைச் சொல்லி, (அவனைப்பார்த்து), 'நாயக - தலைவனே ! எங்கள் பால் நடந்தது என்னே - 'நீ (இராமபிரானை விட்டுப் பிரிந்து) எங்களிடம் வந்தது எதுபற்றி ?' என்ன கேட்டாள் - என்று வினவினுள்; இளவலும் - இளைய பெருமாளும், வரவு சொன்ஞன் - வந்த காரணத்தைப் புகலலாஞன்,

மங்கையர் மேனி நோக்கான், 599, 600, பார்க்க; 'பிறர் மனை நோக்காத பேராண்மை சான்ருேர்க் கறனென்ருே ஆன்ற ஒழுக்கு' (குறள்.148). இலக்குவன் பொருமியது, தாரைபோன்று தாபத நிலையை யடைந்துள்ள தன் தாயரை நினைந்து என்க; 602, 603-ஆம் செய்யுட்களைக் காண்க. அவனது இந்த எண்ணத்தைத் தாரை அங்கதன் முதலானேர் அறிந்தாரல்லர். பொருமுதல்; ஆரணிய. 593,

பி - ம். 1. மனத்தின்வந்த.
2. சீற்றமாறி, சீற்றம்பற்றி ; புகுந்திலன், புக்கிலன்.
3. நங்கையங் கினிய கூறி; நடந்ததென்னை,
4. என்னச் சொன்னுள்; அண்ணலு மிதயம் சொன்ஞன், வரவைச் சொன்ஞன், (83)

637. அதுபெரி தறிந்த வன்னை
யன்னவன் சீற்ற மாற்றி
விதிமுறை மறந்தா னல்லன்
வெஞ்சினச் சேனை வெள்ளம்
கதுமெனக் கொணருந் தூது
கல்லதர் செல்ல வேவி
எதிர்முறை யிருந்தா னென்று
ளிதுவிங்குப் புகுந்த தென்றான்

'அது - (இலக்குவன் வந்த) அந்தக் காரணத்தை, பெரிது அறிந்த அன்னை - செம்மையாக உணர்ந்து கொண்ட எனது தாயாகிய தாரை, அன்னவன் சீற்றம் ஆற்றி - அந்த இலக்குவனுடைய சினத்தைத் தணித்து, (இலக்குவனைப் பார்த்து), 'விதி முறை மறந்தான் அல்லன் - சுக்கிரீவர் இராமபிரானது கட்டளையின் கூறுபாட்டை மறந்தவர் அல்லர்;' வெம்சினம் சேனை வெள்ளம் - கடுமையான கோபத்துடன் கூடிய குரங்குச் சேனையின் பெருந்தொகுதியை, கதுமென கொணரும் - விரைவிற்கொண்டு வருதற்குரிய, தூது-தூதுவர்களை, கல் அதர் செல்ல ஏவி - மலை வழியில் போகும்படி கட்டளை பிறப்பித்து, எதிர் முறை இருந்தான் - அந்தக் குரங்குச் சேனையை எதிர் கொள்கின்ற முறையில் இருந்தார்' என்றாள் - என்று கூறினாள்; இது இங்கு புகுந்தது - இது இப்பொழுது இங்கே நடைபெற்ற செயலாகும்,' என்றான் - என்று சுக்கிரீவனைப் பார்த்து அங்கதன் சொல்லி முடித்தான்.

காலம் தாழ்த்ததற்குக் காரணமாகக் கல் அதர் என்னப்பட்டது. அதர் - வழி, குறள். 594; பெருங். நரவாண. 7: 70; கலித். நெய்தல். 33; காண்க. ஏவி எதிர் முறையிருந்தான், 606, 616ஆம் செய்யுள் பார்க்க. இங்கு, சுக்கிரீவன் தானே வருவிக்கத் தூதர்களை அனுப்பிய செய்தி, வான்மீகத்தால் நன்கு விளங்கும். அங்கு அநுமன் சுக்கிரீவனுக்குக் கார்கால முடிவைக் கூறி எச்சரிக்க. அவன் அநுமனையே எல்லாத் திசைகளுக்கும் தூதனுப்பக் கட்டளையிட்டனன் என்றும், அதன்பின்பே அயர்ந்துவிட்டான் என்றும் கூறப்பெற்றிருக்கிறது.

பி - ம். 1. *மன்னவன் சீற்றமாற்றி.* 2. *விதிமுறை யறிந்தான், யறைந்தான்.*
3. *கொணரத் தூது; கதுமெனத் தலைந்து தூது; கடி தெங்குஞ் செல்ல வேவி.*
4. *விதுவிங்கு விளைந்த, புகுந்த தெந்தாய்.* (84)

சுக்கிரீவன் அங்கதனை வினுதல்.

638. சொற்றலு மருக்கன் றேன்றல்
சொல்லுவான் மண்ணின் விண்ணின்
நிற்குரி யார்கள் யாவ
ரனையவர் சினத்தி னேர்ந்தால்
விற்குரி யாரித் தன்மை
வெகுளியின் விரைவி னெய்த
எற்குரை யாது நீரீ
தியற்றிய தென்கொ லென்ருன்.

சொற்றலும் - (அங்ஙனம் அங்கதன்) சொன்னவுடன், அருக்கன் தோன்றல் - சூரியன் புதல்வனுன சுக்கிரீவன், சொல்லுவான் - பின் வருமாறு சொல்லத் தொடங்கினுன்; 'அனையவர் சினத்தின் நேர்ந் தால் - அவ்விராம இலக்குமணர்கள் கோபம் கொண்டு எதிர்த்துவந் தால், மண்ணின் விண்ணின் நிற்க உரியார்கள் யாவர் - இந்த உலகத் திலோ, விண்ணுலகத்திலோ அவர்களை எதிர்த்து நிற்கக் கூடியவர்கள் யார்? விற்கு உரியார் இ தன்மை வெகுளியின் விரைவின் எய்த - வில் வீரராகிய அந்த இலக்குவன், இங்ஙனம் கோபத்துடன் விரைந்து வாரா நிற்கவும், எற்கு உரையாது - (அதனை) எனக்குக் கூருமல், நீர் ஈது இயற்றியது என்கொல் - நீங்கள் இவ்வாறு செய்தது என்ன காரணம் பற்றி ?' என்ருன் - என்று (அங்கதனை) வினவினுன்.

நிற்க உரியார் என்பது, அகரவீறு குறைந்தது. நீரீதியற்றியது: அந்தப் பெரிய வீரர்களை எதிர்க்க வெண்ணி வாயிலை அடைத்தது, கற்களை அடுக்கியது, தாரையைக்கொண்டு சினம் தணிவித்தது முதலியன.

பி - ம். 1. சொல்லலும் அருக்கன் தோன்றல், சொற்குரித்தான தெல்லாம், விண்ணின் மண்ணின்.

2. நிற்குரியாவர் வீரர்; சினத்தா னேர்ந்தால், சீற்றம் நேர்ந்தால், சினத்தை.

3. வெகுளியோ டடைந்த தென்னின்; வெகுளியின் விரைவி னெய்தின். 4. நீரதியற்றியது, நீவிரியற்றியது.

### அங்கதன் மறுமொழி

**639.** உணர்த்தினேன் முன்னர் நீயஃ
துணர்ந்திலை யுணர்விற் றீர்ந்தாய்
புணர்ப்பதொன் றின்மை நோக்கி
மாருதிக் குரைப்பான் போனேன்
இணர்த்தொகை யீன்ற பொற்று
ரெறுழ்வலித் தடந்தோ ளெந்தாய்
கணத்திடை யவனை நீயுங்
காணுதல் கரும மென்றான்.

(அதற்கு அங்கதன்), 'இணர்தொகை ஈன்ற பொன்தார் எறுழ்வலி தடதோள் எந்தாய் - பூங்கொத்தின் தொகுதியால் பெறப்பட்ட (உண்டாக்கப்பட்ட) அழகிய மாலை வேய்ந்த மிக்க வலியமைந்த பெரிய புயங்களையுடைய என் தந்தையே! முன்னர் உணர்த்தினேன் - நான் இலக்குவன் வருகையை உனக்கு முன்னமே தெரிவித்தேன்; (ஆனால் அப்பொழுது), நீ உணர்வில் தீர்ந்தாய் - அறிவு மயங்கியிருந்தாய்; (அதனால்), அஃது உணர்ந்திலை - (நான் சொன்ன) அதனைத் தெரிந்து கொண்டாயில்லை; (ஆகவே), புணர்ப்பது ஒன்று இன்மை நோக்கி - நான் புரியக் கூடிய பிறிதொருபாயமில்லாமை யுணர்ந்து, மாருதிக்கு உரைப்பான் போனேன் - (இச்செய்தியை) அநுமனுக்கு உரைக்கப் போனேன்; கணத்திடை - ஒரு நொடிப் பொழுதிற்குள், அவனை - அந்த இலக்குவனை, நீயும் - நீயும், காணுதல் - சென்று பார்த்தல், கருமம் (நீ ஆற்ற வேண்டிய) செயலாகும்.' என்றான் - என்று (சுக்கிரீவனிடம் அங்கதன் புகன்றான்).

முன்னர் - உன் முன்பு எனினுமாம். எறுழ்வலி - ஒரு பொருட் பன்மொழியுமாம். உரைப்பான்-உரைப்பதற்கு; பானீற்று வினையெச்சம். 'காணுதல் கருமம்' என்றமையால் இலக்குவன் நெருங்கி வந்துகொண்டிருத்தலைக் குறித்ததாகும். 'உணர்விற் றீர்ந்தாய் – அறிவு கெட்டாய்; புணர்ப்ப தொன்றின்மை - வேறு செய்வ தொன்றில்லாதபடியினாலே' என்பன பழையவுரை. 576, 577ஆம் செய்யுட்கள் காண்க.

பி-ம். 1. முன்ன நீயது, முன்னமஃதே, முன்னை நீயது.
2. குரைக்கப்போனேன்.
3. இணர்த்தொகையியன்ற;
4. காணுதற் காருமென்றான்

சுக்கிரீவன் இரங்கல்.

640. உறவுண்ட சிந்தையானு
முரைசெய்வா னொருவர்க் கின்னம்
பெறலுண்டே யவரா லீண்டியான்
பெற்ற பேருதவிச் செல்வம்
இறவுண்டாள் பொருட்டாற் றீரா
திருந்தபே ரிடரை யெல்லாம்
நறவுண்டு மறந்தேன் காண
நாணுவென் மைந்த வென்றான்.

உறவு உண்ட சிந்தை யானும் - இராமபிரானிடம் நட்புக்கொண்ட உள்ளத்தனாகிய சுக்கிரீவனும், உரை செய்வான் - (அங்கதனை நோக்கிச்) சொல்வான்; 'மைந்த - மகனே! அவரால் ஈண்டு யான் பெற்ற பேர் உதவி செல்வம் - அவ்விராமபிரானால் இப்பொழுது (இங்கே) யான் அடைந்துள்ள பெரிய உபகாரமாகிய செல்வம், ஒருவற்கு இன்னம் பெறல் உண்டே - மற்றொருவரால் இனிப்பெறக்கூடுமா? இறவு உண் டாள் பொருட்டால் - விட்டுப் பிரிந்த பிராட்டி காரணமாக, தீராது இருந்த பேர் இடரை எல்லாம் - நீங்காதிருந்த அப்பிரானுடைய பெருந் துன்பத்தை யெல்லாம், நறவு உண்டு மறந்தேன் - மதுப்பருகியதால் நான் மறந்து போனேன்; (ஆதலின்) காண-இலக்குவனைப் பார்ப்பதற்கு, நாணுவன் - வெட்கம் அடைகின்றேன்' என்றான் - என்று சொன்னான் சுக்கிரீவன்.

உறவுண்ட சிந்தையான் 'ஆவியொன்றாக நட்டான்' (சுந்தர.1128). 'ஒன்றியவுயிரே யாய ஒருயிர்த் துணைவ' உயுத்த. மகுடபங்க. 21) என்பன காண்க. இறவுண்டாள் - வஞ்சனையால் அரக்கனாற் கடத்தப் பட்ட பிராட்டி எனினுமாம். இறத்தல் - கடத்தல். தன் செயலுக்கு நாணினான். 'ஈன்றாள் முகத்தினு மின்னாதால் என்மற்றுச் சான்றோர் முகத்துக்களி' (குறள். 923). என்பது இங்கே கருதத்தகும்.

பி - ம். 1. உறழ்வுண்ட, உணர்த்துவான் யார்க்கு மென்போல்,
2. பெறவுண்டோ வவர்பால் யான்முன், பெறலுண்டோ வவரா லீண்டு, யான் முன்பெற்ற;
3. சிறவுண்டாள் பொருட்டாற் றீராது, இறலுண்டே லென்னிற் றீர்வா னிருந்த.
4. நம்ப வென்றான்.

641. ஏயின நறவல் லான்மற்
றேழைமைப் பால தென்னோ
தாயவள் மனைவி யென்னுந்
தெளிவின்றேற் றரும மென்னும்
தீவினை யைந்தி னொன்று
மன்றியுந் திருக்கு நீங்கா
மாயையின் மயங்கு கின்றும்
மயக்கின்மேன் மயக்கும் வைத்தாம்.

'ஏயின நறவு அல்லால் -(இப்பொழுது) என்னிடம் பொருந்தியுள்ள இந்தக் குடிமயக்கம் அல்லாமல், மற்று ஏழைமைப்பாலது - வேறு அறியாமையின் பாற்படும் செயல், என்னோ - யாது உளது? (இங்ஙனம் கள் பருகுவதால்), தாயவள் மனைவி யென்னும் தெளிவு இன்றேல் - தாயென்றும், மனைவி என்றும் (வேறுபாடு காணும்) அறிவு இல்லையானால், தருமம் என் ஆம் -(கள் பருகுவனிடம்) ஏனைய அறங்களிருந்தும் என்ன பயன்? (இவ்வண்ணம் கள்ளுண்டு களித்தல்), தீவினை ஐந்தின் ஒன்றும்- ஐந்து பெரும் பாதகங்களுள் ஒன்றாகும்; அன்றியும் - அல்லாமலும், திருக்கு நீங்கா மாயையில் மயங்குகின்றும் - வஞ்சனை நீங்கப்பெறாத மாயையின் வசமாகி மயங்குகின்ற நாம், (அந்த மயக்கத்தை யொழிக்காத நிலையில்), மயக்கின் மேல் மயக்கும் வைத்தாம் - ஒரு மயக்கத்தின் (மதுபானமாகிய) மற்றொரு மயக்கத்தை ஊட்டியவர்களானோம். (இது மிக்க ஈனமானது என்றபடி).

இவ்விடத்துத் திருட்குறட்கணுள்ள 'கள்ளுண்ணாமை' என்ற அதிகாரத்தில் உள்ள பத்துக் குறட்பாக்களும் அவற்றின் உரைகளும் ஒப்பு நோக்கத்தக்கன. கட்குடியைத் தவிர்த்தல் வேண்டும் என்பதை மணி. 16, 64; 22, 173; 24, 77, 78; இன்னா. 10, திரிகடுகு, 39. என்பன கொண்டு காண்க. மற்றும் அதனால் உறும் 'கேட்டை' அறிவை யழிக்கும் அழியா மானந்தனையழிக்கும், செறியு மறிஞர் மதியாத செருக்கை விளக்கு மீன்றுளு, முறியும் வெறுப்பு மிகவிளக்கு முனிவு விளைக்கும் பகையஞ்சாக், குறிகள் விளைக்கும் நகை விளைக்கும் கொள்ளேல் கள்ளுண்டலை மைந்தா' விநாயகபு. அரசியற்கை 141ல் காண்க. மாயை; இதனை உலகிற்கு முதற்காரணம் என்றும், இஃது அநாதி என்றும் கூறுவர். மாயையின் இலக்கணத்தைச் சிவஞான சித்தியார் 2-ஆம் சூத்திரம் 53வது செய்யுட்கொண்டுணர்க. இம்மாயாசக்தி இல்லாததை யுள்ளதாகவும், ஒன்றைப் பிறிதொன்றாகவும் காட்டி விபரீத

உணர்வை விளைவிக்கும் ஆதலின், திருக்கு நீங்கா மாயை என்றார். வாலி யிறந்த பிறகு அவன் மனைவி தாரையைச் சுக்கிரீவன் அணைந் தான் என்பர் வான்மீக முனிவர். அதனைமாற்றி அவளைச் சிறந்த கற்புடையவளாகக் கம்பர் விவரித்துள்ளார்; அக்கருத்தை வற்புறுத்து வார் போன்று 'தாயிவள் மனைவி என்னும் தெளிவின்றேற் றரும மென்னும்' எனச் சுக்கிரீவன் கூற்றாகவே ஆசிரியர் விளக்கியிருத்தலின் நயம் ஓரத்தக்கது. தமையன் மனைவி தாயெனக் கருதத்தக்கவளன்றோ. முன்னரே மாயையிற் சிக்கி உண்மை யறியாது மயங்கிநிற்ப, மேலும் கட்குடியால் மயக்குற்றதற்குச் சுக்கிரீவன் இரங்குகிறான். ஏயின - ஏய் என்ற பகுதியடியாகப் பிறந்த பெயரெச்சம்.

பி - ம். 1. *ஏய்வினை யிதுவலான்; ஏழைமைப் பாலதுயாதோ, பாலதன்றோ, ஏயிடி னிதுவலால் மற்,*

2. *தாயியன்,*

3. *தீவினை வேறுமொன்றி தன்றியுந் தெரிக்கலாமோ, தீவினையைந் திஞவ தன்றியும், ஐந்திலொன்றீது; திருக்கு நீக்கா;*

4. *மயக்குகின்றார், மயக்கின்மேல் மயக்கம்வைப்பார்.* (88)

இப்பாடல், 'ஏய்வினை யிதுவலால்மற் றேழைமைப் பாலதியாதோ, தாயவண் மனைவி யென்றுந் தெளிவின்றேற் றரும மென்னுந், தீவினை யைந்தினுவ தன்றியும் திருக்கு நீங்கா, மாயையின் மயங்குகின்றார் மயக்கின் மேல் மயக்கம் வைப்பார்' என்று ஓர் பிரதியில் உள்ளது.

642. தெளிந்துதீ வினையைத் தீர்ந்தோர்
பிறவியைத் தீர்வ ரென்று
விளிந்திலா வுணர்வி னோரும்
வேதமும் விளம்ப வேயும்
நெளிந்துறை புழுவை நீக்கி
நறவுண்டு நிறைகின் றேனால்
அளிந்தகத் தெரியுந் தீயை
நெய்யினு லவிக்கின் றுமால்

'தெளிந்து தீவினையை தீர்ந்தோர் - மனம் தெளிந்து தீய தொழில் களை விட்டவர், பிறவியை தீர்வர் - பிறவிப்பிணியை விட்டவராவர், என்று - என்று, விளிந்திலர் உணர்வினோரும் - கெடாத ஞானத்தை யுடைய தத்துவ ஞானிகளும், வேதமும் - நான்மறைகளும், விளம்ப வேயும் - சொல்லியிருக்கவும் (உணர்வற்று), நெளிந்து உறை புழுவை நீக்கி - நெளிந்துகொண்டு அதில் தங்கியுள்ள புழுக்களை அகற்றிவிட்டு,

நறவு உண்டு - கள்ளைப்பருகி, நிறைகின்றேன் - மனம் நிறைந்த (களிப்புடன்) உள்ளேன் (யான்); (இச்செயலால்), அளிந்தகம் - மேடையில், எரியும் தீயை - எரிகின்ற நெருப்பை, நெய்யினால் அவிக்கின்றோம் - நெய்யைக்கொண்டே அணைக்கத் தொடங்குகின்றோம். ஆல் இரண்டும் ஈற்றசைகள்.

எரியுந் தீயை நெய்யினால் அவித்தல் - (ஒப்பு) 'நெய்யாலெரிநுதுப் பேமென்றற்றாற் கௌவையாற், காமம் நுதுப்பேமெனல்,' (குறள், 1148); ஒப்பு : 'களித்தானைக் காரணம் காட்டுதல், கீழ்நீர்க், குளித்தானைத் தீத் துரீஇ யற்று ' (குறள். 929) : 'காய் கனற்றலை நெய்சொரிந்தெனக் கதங்கனற்ற' (அயோத்தி. மந்தரை. 63). நெருப்பை அவிக்க மணலைப் பெய்தல் அமையுமன்றி நெய்யை ஊற்றுதல் அதனை மேலும் எரியச் செய்யும் என்றபடி. அளிந்தகம் ; வடமொழி; கோபுரவாயிலில் உள்ள மேடை; கம். சாரியை. ' அளிந்தகம் - படியை உடைய அகம் ; வாசற்படி ' என்பன பழையவுரை.

பி - ம். 1. தீவினையைச் செற்றார் ; செற்றோர்; தீர்வரன்றே, தீர்வரென்னே.
2. விளிந்தில ருணர்வினோரும்; விளம்பக்கொண்டும், விளம்பக் கொண்டே
3. தெளிந்த றுபுழுவை ; நிற்கின்றேனால், நிறையந்றேனால், நிற்கின்றோம் நாம், நிறைகின்றானும்.
4. தேயுந்தீயை ; னெதுக் கின்றமால், நெய்யினு லவிக்கின்றாரின்.

643. தன்னைத்தா னுணரத் தீருந்
தகையறு பிறவி யென்ப
தென்னத்தான் மறையு மற்றைத்
துறைகளு மிசைத்த வெல்லாம்
முன்னைத்தான் றன்னை யோரா
முழுப்பிணி யழுக்கின் மேலே
பின்னைத்தான் பெறுவ தம்மா
நறவுண்டு திகைக்கும் பித்தே.

'தான் தன்னை உணர - (ஒருவன்) தன் உண்மைச் சொருபத்தைத் தெளிந்த அளவில், தகை அறு பிறவி என்பது தீரும்-(தனது) பெருமையற்ற பிறவி என்ற பிணி நீங்கும், என்னத்தான் - என்றே, மறையும் - வேதங்களும், மற்றை துறைகளும் - பிற வேதாங்கம், சாத்திரம் முதலியனவும், (ஆகிய) எல்லாம் - அனைத்தும், இசைத்த - சொல்லியுள்ளன ; முன்னை தான் தன்னை ஓரா முழு பிணி அழுக்கின் மேலே - முதலில்

தான் தன்னுடைய உண்மைச் சொருபத்தை உணராததால் நிகழ்கின்ற நிறைவுள்ள நோய் மலிந்த அழுக்குடம்பைப் பெற்றிருத்தலோடு, பின்னே - மேலும், நறவு உண்டு திகைக்கும் பித்து பெறுவது - கள்ளுண்டு மனம் மயங்குகின்ற போதையைப் பெறுதலும் (தகுதி யாகுமோ ?) ஏ - அசை; அம்மா - வியப்பிடைச்சொல்.

தன்னைத் தான் உணர்தல் - மெய்யறிவு பெறல். 'தன்னைத்தான் உணரத் தீரும் தகையறு பிறவி'; 'உன்னை நீ யறிவாயாகில் உனக் கொரு கேடுமில்லை'; 'தன்னையுந் தனக்காதாரத் தலைவனுந் தான்கண்டா னேல், பின்னையத் தலைவன்றானுப் பிறவியிற் றீர்வன்'; 'இன்னது தேகம், தேகியிது வெனவுணர்ந்தோன் யாவன், அன்னவன் தன்னைத்தானே யறிபவன் ஆகும்' என்ற கைவல்ய வாக்கியங்களை ஓர்க. இவ்வா றுணர்வதைத்தான் நான்கு வேதங்களும் மகாவாக்கியங்களால் அறிவிக் கும். 'யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த வுலகம் புகும்' (குறள். 356.): என்றதையும், 'தானல்லுடலை யானென்றும் தன்னோ டுரிமை யல்லாமை ஈன முறுபல் பொருளனைத்தும் என்னதென் றும் உறநினைந்து, மான வயர்பற் றினுக்கேது மயக்கமதனை மாய்ப்ப வனே, வான வரும்செல் லருமுலகம் புகுவான் என்னும் மறை நூல்கள்' (குசேலோ. 3: 110) என்றமையுங் காண்க. இங்கே சுக்கிரீவன் 'தன்னைத்தான் உள்ளபடி யுணராதது முதற்குற்றம்; அதன் மேலும் மதுபானத்தை மேற்கொண்டது இரண்டாவது குற்றம்', என்றான் என்க.

பி - ம். 1. *தன்னைத்தா னுணர்வருயிற், றுணர்வருமில், தன்னைத்தானுண ருந் தன்மை தமக்குறின் தவமதாகும்; றகையறும் பிறவிதீரும்*

2. *இசைந்தவெல்லாம், இசைப்பதெல்லாம், தூயமறைகளும் பிறவு மென்றால்; இசைத்த தெல்லாம்.*

3. *யோரான் முழுப்பிணி.*

4. *வுண்டு வுழலும் பெற்றி.* (90)

இதன் பின் சில அச்சுப்பிரதிகளில் பின்னுள்ள ஓர் அதிகப்பாடல் காணப்படுகின்றது. சிறந்த சுவடிகளில் இச்செய்யுள் இல்லை.

அளித்தவ ரஞ்சு நெஞ்சி னடைத்தவ ரறிவு மூழ்கிக்
குளித்தவ ரின்ப துன்பங் குறைத்தவ ரன்றி வேரி
யொளித்தவ ருண்டு மீண்டிவ் வுலகெலா முணர வோடிக்
களித்தவ ரெய்தி நின்ற கதியொன்று கண்டதுண்டோ.

644. செற்றதும் பகைஞர் நட்டார்
செய்தபே ருதவி தானும்
கற்றதுங் கண்கூ டாகக்
கண்டதுங் கலைவ லாளர்
சொற்றது மானம் வந்து
தொடர்ந்ததும் படர்ந்து துன்பம்
உற்றது முணர்வ ராயி
னுறுதிவே றிதனி னுண்டோ.

'பகைஞர் செற்றதும் - பகைவர் தமக்குப் புரிந்த தீங்கையும், நட்டார் செய்த பேர் உதவிதானும் - நண்பர்கள் செய்த பெரிய நன்றியையும், கற்றதும் - (தாம்) கற்ற கல்வியையும், கண் கூடாக கண்டதும் - (தாம்) நேரிற் பார்த்ததையும், கலைவலாளர் சொற்றதும்-சாத்திரங்களில் வல்லவர் கூறியதையும், மானம் வந்து தொடர்ந்ததும் - (தமக்குள்) பெருமை வந்து அடைந்ததையும், துன்பம் படர்ந்து உற்றதும் - இடர்கள் வந்து பொருந்தியதையும், உணர்வர் ஆயின் -(ஒருவர்) தெரிந்து கொள்வாராகில், இதனின் வேறு உறுதி உண்டோ - இவ்வாறு உணர்தலைக் காட்டிலும் நன்மை விளைப்பது பிறிதுண்டோ?

கண்கூடாகக் கண்டது உணர்தல் என்பது. 'எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு' (குறள். 355) என்றபடி மெய்க்காட்சியைக் குறிக்கும். 'கண் கூடாகக் கண்டதும்; ஞானக் கண்ணினுற் கண்டதும்' என்பது பழையவுரை. ஒப்புமைக் கூட்ட வணியாக அமைந்த உறுதிபயக்கும் நன்மைகள் பலவற்றையும் மதுபானம் சிதைத்துவிடும் என்பது இச்செய்யுளின் கருத்தாகும். பகைஞர் செற்றது முதலியவற்றை உணர்வதே உறுதியைப் பயக்கும் என்பது இங்குக் கூறப்பட்ட உண்மை யாகும்.

பி-ம். 1. செற்றவர், செற்றுறும் பகையும்.
2. கண்கள்கூர, கண்கள்கூறக், கண்ணுலெய்த.
3. பாவம் வந்து, மானம் வந்த ; தொடர்வதும், தொலைந்ததும்.
4. உணராராகில்; இறுதி மற்றிதனினுண்டோ; உற்றது முணர்விற் காண்போர்க் குறுதி மற்றதன்மேலுண்டோ; இற்றது முணர்வாரிலிறுதி, (91)

645. வஞ்சமுங் களவும் பொய்யு
மயக்கமு மரபில் கொட்பும்
தஞ்சமென் றுரை நீக்குந்
தன்மையுங் களிப்புந் தாக்கும்
கஞ்சமெல் லணங்குந் தீருங்
கள்ளினு லருந்தி னுரை
நஞ்சமுங் கொல்வ தல்லா
னரகினை நல்கா தன்றே.

'கள்ளினுல் - கட்குடியால், வஞ்சமும் களவும் பொய்யும் மயக்கமும் - வஞ்சனையும், திருட்டும், பொய் பேசுதலும், அறியாமையும், மரபில் கொட்பும் - பழமையாக வந்த முறைக்கு மாறுபட்ட சுழற்சியும், தஞ்சம் என்றுரை நீக்கும் தன்மையும் - அடைக்கலமாக அடைந்தவரைப் போற்றுது விடுகின்ற தீய பண்பும், களிப்பும் - செருக்கும், தாக்கும் - வருத்தும், கஞ்சம்மெல் அணங்கும் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் மென்மை வாய்ந்த திருமகளும், தீரும்-கட்குடித்த வனை விட்டு அகன்றுவிடும்; நஞ்சமும் - விடமும், அருந்தினுரைக் கொல்வது அல்லால் - உட்கொள்பவரைக் கொல்லுமேயன்றி, நரகினை நல்காது - நரகத்தைக்கொடாது. அன்றே - ஈற்றசை.

கள்ளுண்டலின் கொடுமைகளை இங்கு வரிசைப்படுத்திக் கூறினுர். நஞ்சு, உண்டவரின் உடலைமட்டும் அழிக்கும்; ஆனுல் கள்ளானது உணர்வினையழித்து உயிரையும் நரகிற் செலுத்தும் ஆதலின் விடத்தை விடக் கள் கொடியது என்றுன். இது வேற்றுமையணி. 'துஞ்சினுர் செத் தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண்பவர்' (குறள். 926) என்ற இடத்து, 'உறங்கினுர் செத்தாரின் வேருதலுடையரேனும் அக்காலத்தறிவின்மையால் வேறெனப்படார்; அவ்வாறே கள் உண்பவர் நஞ்சுண்டாரின் வேருதலுடையரேனும் அறிவின்மையான் வேறெனப்படார்; அவர் தாமேயாவர்' என்ற பரிமேலழகர் உரை காண்க. இச் செய்யுளில், கம்ப நாடர் நஞ்சிலும் கொடியது கள் என்று வேறு படுத்திய சிறப்பைக் காணலாம். குடிவெறியால் கைப்பொருள் அனைத்தும் இழந்து வறியர் ஆவராதலின், கஞ்சமெல்லணங்கும் தீரும் என்றுர். 'இருமனப் பெண்டிரும் கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு' (குறள். 920) என்றது காண்க.

பி - ம். 1. வரம்பில் கொட்பும்; மரபிற் கோட்பும்.
2. களியுந்தாக்கும்; நீக்குந்; கள்ளினுல் வருந்தினுரை.

3. நஞ்சமுங் கறுவுர் ; கள்ளினால் மயங்குமந்த, கண்ணினு லியலுர் துன்பம்.

4. கொல்வதன்றி; நரகமுந் தப்பாதன்றே, நல்வினை நல்காதன்றே, நரகமுந்தவிராதன்றே.

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை. (92)

646. கேட்டன னறவாற் கேடு
வருமெனக் கிளத்து மச்சொல்
காட்டிய தநும னீதிக்
கல்வியாற் கடந்த தல்லால்
மீட்டினி யுரைப்ப தென்னே
விரைவின்வந் தடைந்த வீரன்
மூட்டிய வெகுளி யானும்
முடிவதற் கைய முண்டோ.

'நறவால் கேடுவரும் என கேட்டனன் - கள் உண்பதால் தீங்கு விளையுமென்று (அறிஞர் கூறக்) கேட்டிருக்கின்றேன்; கிளத்தும் அ சொல் காட்டியது - (அங்ஙனம்) கூறப்படும் அந்த வார்த்தை நேர் முகமாக(த் தன் வலிமையை)க் காட்டிவிட்டது; மீட்டு இனி உரைப்பது என்னே - திரும்பவும் இனி மேல் சொல்லவேண்டுவது என்ன இருக் கின்றது? கடந்தது அநுமன் நீதி கல்வியால் - விளையநின்ற விபத்தி னின்று நீங்கியது நாம் அநுமன் நீதிநூல் அறிவால்; அல்லால்-அஃதன்றி, விரைவின் வந்து அடைந்த வீரன் மூட்டிய வெகுளியால் - வேகமாக (ஆத்திரத்துடன்) வந்து சேர்ந்த வீரனாகிய இலக்குவனது (என் செயலால்) மூட்டப்பட்ட சினத்தினால், நாம் - நாம், முடிவதற்கு - இறுதி எய்துவதற்கு, ஐயம் உண்டோ - சந்தேகம் உண்டோ?

அங்கதன் அநுமனிடம் உரைத்ததாகச் சுக்கிரீவனிடம் கூறியது, 639. அநுமன் இலக்குவன் வெகுளியைத் தணித்தது, 619. அங்கதன் கூற்றால், அநுமன் இலக்குவன் சீற்றம் தணிந்தமையைச் சுக்கிரீவன் ஊகித்தறிந்தனன் ஆம். காட்டியது - நேர்முகமாக அநுபவத்திற்காட்டி யது. (ஒப்பு): 'உண்டென வுரையிற் கேட்பா ருயிருறு பாவ மெல்லாம், கண்டினித் தெளிக வென்று காட்டுவாள் போல வாகி' (சீவக. 303). அநுமன் நீதிக்கல்வி, 'நீதியினின்றீர் வாய்மை யுணர்ந்தீர்'; 'ஓதி யுணர்ந்தீர்' 990; 'நன்னூல் கற்றுணர் மாருதி' (உயுத்த. ஒற்றுக் கேள்வி. 6); 'மெய்ம்மை தொடர்ந்தோய்' (சுந்தர. 684); 'சுருதியே யன்ன மாருதி' (சுந்தர. 790); 'நூற்பெருங் கட லுணங்கிய கேள்வி

யான் (சுந்தர. 301) 'கலையனைத்தும் கதிரோன் முன்சென் றோதினான்; (உயுத்த. விபீடண. 105) : ' நுணங்கிய கேள்வியான்; உயுத்த. விபீடண. 87) : ' இல்லாத வுலகத் தெங்கு மிங்கிவ னிசைகள் கூரக் கல்லாத கலையும் வேதக் கடலுமே யென்னும் காட்சி ' (61) 'சுருதியின் தொகுதி யாவும் முற்றறி தருமிம் மாணி ' (62). என்பன காண்க. அநுமனது கல்வியையும் நீதியையும் புகழ்ந்து அவனால் தான் தப்பியதை உணர்ந்து சுக்கிரீவன் கூறியது இச் செய்யுள்.

பி - ம். 1. விச்சொல்.
2. கல்வியாற் கடத்தல்யல்லாய்.
4. வெகுளியால் யான், யாம், வெகுளியானால்; முடியதற்கை யமின்றால்.

இதன்பின் ' என்று கொண்டியம்பி ' என்ற பாடல் ஓர் பிரதியில் உள்ளது. இதுவும் இதனை யடுத்த செய்யுளும் முன் பின்னாகச் சில பிரதி களில் மாறியுள்ளன. (93)

647. ஐயநா னஞ்சி னேனிந்
நறவினி னரிய கேடு
கையினா லன்றி யேயுங்
கருதுதல் கரும மன்றால்
வெய்யதா மதுவை யின்னும்
விரும்பினே னென்னின் வீரன்
செய்யதா மரைக ளன்ன
சேவடி சிதைத்தே னென்றான்.

'ஐய - அழகனே! இ நறவினின் அரிய கேடு - இந்த மது பானத்தால் விளையும் மாற்றற்கருமையான தீங்கிற்கு, நான் அஞ்சினேன் - நான் பயந்தேன்; கையினால் அன்றியே கருதுதலும் கருமம் அன்று - (கள்ளினைக்) கையினால் தீண்டுவது நிற்க; மனத்தால் நினைத்தலும் செய்யக் கூடிய காரியம் ஆகாது; வெய்யது ஆம் மதுவை - கொடிய தான இந்தச் சுராவை, இன்னும் விரும்பினேன் என்னின் - (அதனால் நிகழும் தீங்குகளை அநுபவித்ததன்) பின்னரும் விரும்பினேனானால், வீரன் செய்ய தாமரைகள் அன்ன சே அடி - வீரனாகிய இராமபிரானது செந் தாமரை மலர்கள் போன்ற சிவந்த திருவடிகளுக்கு, சிதைத்தேன்-பிழை செய்தவன் ஆவேன் ' என்றான் - என்று சொன்னான் சுக்கிரீவன்.

இது சுக்கிரீவன் கூறிய வஞ்சினம். இராமபிரான் திருவடிமீது ஆணையிட்டு, மதுவை விரும்புவதில்லை என்று கூறினான் சுக்கிரீவன்.

உள்ளக்களித்தலும், காண மகிழ்தலும் காமத்துக்குண்டு. கள்ளுக்கின்று யினும், மதுவை இடைவிடாது நினைத்தலும், இடையறக் காண்டலும், பின்னர் அதனைப் பருகுவதற்குத் தூண்டு கோல்கள் ஆகுமாதலின் 'கருதுதல் கரும மன்றுல்' என்றுன். வெய்யதாம் மதுவென்பதற்கு - கடும் புளிப்பையுடைய மது வெனினுமாம்; 'தேட்கடுப்பன்ன நாட்படு தேறல்' (புறநா. 392); 'பாம்பு வெகுண்டன்ன தேறல்' (சிறுபாண்.237) வெய்யதா மது - மேன்மேலும் விருப்பத்தை விளைக்கும் மதுவெனினும் ஆம். வெம்மை, வேண்டல்; (தொல். சொல். 334). செய்ய தாமரைக ளன்ன, அடி யென்றுலே செம்மை அறியப்படும். மேலும் சேவடி யென்றது அதன் அளவிறந்த செம்மை நோக்கி என்க.

பி - ம். 1. நறவினை, நறவினுன, ஐயநா னஞ்சினேனென் றறிவினி லறிய நோக்கி.

2. கழறுதல், கருதவும் கழறவும்; கையினும் நீண்ட லாகா கருத்தி னுங் கருதலாகா.

3. மின்னம்.

4. மரைக ளென்னும்; சிதைத்தலன்றே, சிதைத்ததன்றே, சிதைத்த தென்றுன்.

இதிலிருந்து 662 வரையில் ஓர் ஏட்டில் இல்லை. இதன்பின் 'கேட்டன' என்ற பாடல் ஓர் பிரதியில் உள்ளது. (94)

648. என்றுகொண் டியம்பி யண்ணற்
கெதிர்கொளற் கியைந்த வெல்லாம்
நன்றுகொண் டின்று நீயே
நணுகென வவனை யேவித்
தன்றுணைத் தேவி மார்கள்
தமரொடுந் தழுவத் தானும்
நின்றனன் நெடிய வாயிற்
கடைத்தலை நிவந்த நீரான்.

என்று - என்று, நிவந்த நீரான் - உயர்ந்து விளங்கும் தன்மையினை யுடைய சுக்கிரீவன், இயம்பி கொண்டு - சொல்லிக் கொண்டு, அண்ணற்கு எதிர்கொளற்கு இயைந்த எல்லாம் நன்று கொண்டு - இலக்கு வனை எதிர்கொள்வதற்குரிய எல்லாவற்றையும் சிறப்பாக எடுத்துக் கொண்டு, 'இன்னும் நீயே நணுகு - இன்னமும் நீயே (அவனிடம்) செல் வாயாக', என-என்று, அவனை ஏவி-அவ்வங்கதனுக்குச் கட்டளையிட்டு, தன் துணை தேவிமார்கள் தமரொடும் தழுவ-தனது வாழ்க்கைத் துணைவி

யரான மனைவியர் உறவினருடன் தன்னைச் சூழ்ந்து நிற்க, தானும் - தானும், நெடியவாயில் கடைத்தலை - உயர்ந்தகன்ற (அரண்மனையின்) தலைவாயிலில், நின்றனன் - காத்திருந்தான்.

அண்ணற்கெதிர் கொளற்கியைந்தவை - அரசச்சின்னங்களாகிய கொடி, குடை, சாமரம் முதலியன. முன்னரே ஒருமுறை இலக்குவனைக் கண்டவனாகலின், 'இன்னும் நீயே நணுகு' என்றான் ; 570-ம் செய்யுள் பார்க்க. 'அரசற்குப் பட்டமகிஷிகள் நீங்கலாக வேறு மனைவியரும் உண்டாகலின், 'துணைத் தேவிமார்' என்று கூறப்பட்டது.

இலக்குவனை வீதியில் சென்று அழைத்துவர அங்கதனை அனுப்பித் தான் பரிவாரங்களுடன் சுக்கிரீவன் நின்றது, அரசர்கள் பிறரை வரவேற்கும் முறை எனக்கொள்க. ஆசிரியர் காலத்துச் சோழ ராஜ்யத்தின் முறையாகவும் கொள்ளலாம்.

பி - ம். 1. *அன்ளுற்கெதிர் கொளற்; மிசைந்த.*

2. *நன்று கொன்டிறைய னீயே, டினயனீயே, டின்று நீயே, நன்று கொண்டன விலாத நணுகெனச் சேலைய யேவி, நயையின்றேமி, னன்று கொண்டுய்க்கநீயே. நணுகென மயலைக் கூவி.*

3. *தேவிமாருந்; தழுவித்தானும்.*

4. *நெடிது, நெடிய கோயிற் கடைத்தலை கிமிர்ந்த சேரான், னிமிர்ந்த வாயிற் ; நிவந்த நீரன், வீரன்.* (95)

இலக்குவனை வரவேற்ற கிட்கிந்தையின் நிலை

**649.** உரைத்தசெஞ் சாந்தும் பூவும்
சுண்ணமும் புகையு மூழின்
நிரைத்தபொற் குடமுந் தீப
சாலமு நிகரில் முத்தும்
குரைத்தெழு விதானத் தோடு
தொங்கலும் கொடியுஞ் சங்கும்
இரைத்திமிழ் முரசும் முற்று
மியங்கின வீதி யெல்லாம்.

(அப்போது), உரைத்த செம் சாந்தும் - அரைக்கப்பெற்ற சிவந்த சந்தனக் குழம்பும், பூவும் - மலர்களும், சுண்ணமும் - நறுமணப் பொடிகளும், புகையும் - நறும் புகையும், ஊழின் நிரைத்த பொன் குடமும் - முறையாக வைக்கப்பட்ட பொற்குடங்களும், தீபசாலமும் - விளக்கு

களின் தொகுதியும், நிகர் இல் முத்தும் - உவமை காணப்பெறுத நல்ல முத்து மாலைகளும், குரைத்து எழு விதானத்தோடு - ஒலித்து விளங்குகின்ற மேற்கட்டிகளுடன், தொங்கலும் - பீலிக் குஞ்சங்களும், கொடியும் - துவசங்களும், சங்கும் - சங்கநாதமும், இரைத்து இமிழ் முரசும் - பலமாக ஒலிக்கின்ற முரசுக் கருவிகளும், முற்றும் - (ஆகிய) இவைகள் யாவும், வீதி எல்லாம் - (கிட்கிந்தா நகரத்துத்) தெருக்களில் எல்லாம், இயங்கின - (சென்று) நிறைந்தன.

இலக்குவனை வரவேற்றற்கான மங்கலப் பொருள்கள் முறையே இதில் கூறப்பட்டுள்ளன. புகை - அகில், சந்தனம், சாம்பிராணி முதலியவற்றின் புகை. பூர்ண கும்பங்களும் வைக்க வேண்டிய முறையில் வைக்கப்பட்டனவென்பார், 'ஊழின்' என்ருர். சாலம், ஜாலம் என்ற வட சொல் திரிபு. அட்டமங்கலங்களாவன, கண்ணுடி, பூர்ண கும்பம், இடபம், வெண்கவரி, தோட்டி, திருமகள் உருவம், ஸ்வஸ்திகம், தீபம் என்பன. இங்கே கூறப்பட்டன பொன்குடம், தீபம், தொங்கல், கொடி, சங்கு, முரசு என்பனவாம். விதானம் - மேற்கட்டி ; 'விரிந்து வான் பூத்தென விதானித்து' (சீவக. 2409); (பெருங். உஞ்சைக் 33, 193; 34; 21, 34. 222; 37; 14); அரசச் சின்னங்களாகிய குடை, கொடி பீலிக்குடை, முரசு, முதலியவற்றைத் தயரதன் மிதிலைக்குச் செல்லுமிடத்தும் (பால. எழுச்சி. 11-14) காணலாம். சுண்ணம் - சூர்ணம். குரைத்தல், இரைத்தல், இமிழ்தல், இம்மூன்றும் ஒரு பொருளன.

பி - ம். 1. *அரைத்த ; ஆடி.*
2. *நிரைந்த ; நிறைந்த, நிகழ்ந்த தீபமாலையும் நிரைத்த முத்தும்,*
4. *மிலங்கின.*

இந்தப்பாடலும் அடுத்த பாடலும் பின்முன்ஞக ஓர் சுவடியில் உள்ளன. (96)

650. தூயதிண் பளிங்கிற் செய்த
சுவர்களிற் றலத்திற் சுற்றில்
நாயக மணியிற் செய்த
நனிநெடுந் தூணி னுப்பண்
சாயையுக் குறலாற் கண்டோ
ரயர்வுறு தகைவி லோடும்
ஆயிர மைந்தர் வந்தா
ருளரெனப் போலிந்த தவ்வூர்.

அ ஊர் - அந்தக் கிட்கிந்தா புரியானது, தூய திண் பளிங்கின் செய்த சுவர்களின் தலத்தில் - தூய்மையான உறுதியுள்ள படிகத் திறற் செய்யப்பட்ட சுவர்களினிடங்களிலும், சுற்றில் - சுற்றுப்புறங் களிலும், நாயகம் மணியின் செய்த நனி நெடும் தூணின் நாப் பண் - தலைமை சான்ற நவ ரத்தினங்கள் இழைத்துச் செய்யப்பட்ட மிகவும் உயர்ந்த தூண்களின் இடையிலும், சாயை புக்கு உறலால் (இலக்குவனுடைய உடலின்) நிழல் சென்று தங்குதலால், கண்டோர் அயர்வுஉறு தகைவிலோடும் - பார்த்தவர்கள் சோர்வுறக்கூடிய கட்ட மைந்த வில்லுடனே, ஆயிரம் மைந்தர் வந்தார் உளர் என - ஆயிரம் வீரர்கள் வந்துள்ளார்கள் என்று கருதும்படி, பொலிந்தது-விளங்கிற்று.

நாயகம் - தலைமை; 'மூவுலகினுக்குமொரு நாயகம் முடித்தேன்' (ஆரணிய. 753); 'நாயகக்கோயில்' (உயுத்த திருமுடி. 11). தகைவில்-வலியவில். மைந்தர் வந்தார் உளரென விளங்கிற்று என்பது ஒப்பு: கண்ணனிடம் சென்ற காலத்துக் கண்ணன் அரண்மனைக் கண்ணாடிச் சுவர்களில் தன்னுடைய உடல் தெரிய, அதனை நிழலென்றுணராது தன்னைப்போன்று அநேகர் ஏழைமக்கள் போந்ததாகக் கண்டு தேறினர். குசேலர் என்பர். தற்குறிப்பேற்றவணி. ஒருருவம் மணிகளிலும் பளிங்கு களிலும் பலவாகப் பிரதிபிம்பித்தல்: ஒப்பு; சுந்தர. 197. இச் செய்யு ளால், இலக்குவன் வீதிச் செலவு சுட்டியது காண்க.

பி - ம். 1. தலத்திற் சுற்றும்.
2. நாயகமணியிற் றோன்றும் சேர்ந்த; நன்னெடுந் தூணி.
3. கண்டோர் நசையுற, தலைமுவுறு, தகைவுறக், யாவருந்.
4. வந்தாங் குளரென; பொலிந்ததம்மா. (97)

இலக்குவன் சுக்கிரீவனைப்பற்றி வினுதலும் அங்கதன் விடையும்.

651. அங்கதன் பெயர்த்தும் வந்தாண்
டடிதொழு தானை யையன்
எங்கிருந் தானுங் கோமா
னென்றலு மெதிர்கோ ளெண்ணி
மங்குறேய் கோயிற் கொற்றக்
கடைத்தலை மருங்கு நின்றான்
சிங்கவே றனைய வீர
செய்தவச் செல்வ னென்றான்.

பெயர்த்தும் ஆண்டுவந்து அடி தொழுதான் அங்கதனை - மீட்டும் அங்கு வந்து இலக்குவனுடைய ஈரடிகளையும் வணங்கி நின்ற

வணங்கிய அங்கதனை, ஐயன் - இலக்குவன், 'உம் கோமான் எங்கு இருந்தான் - உங்கள் தலைவனான சுக்கிரீவன் எங்கே உள்ளான்', என்றலும் - என்று வினவிய அளவில், அங்கதன் (மறுமொழியாக), 'சிங்கம் ஏறு அனையவீர - ஆண் சிங்கம் ஒத்த வீரனே,' செய்தவம் செல்வன் - (முன் பிறப்பில்) புரிந்த தவமாகிய தனத்தையுடைய சுக்கிரீவன், எதிர் கோள் எண்ணி - (உன்னை) எதிர்கொள்ளக் கருதி, மங்குல் தோய் கோயில் கொற்றம் கடைத்தலை மருங்கு நின்றான் - மேகம் வந்து படிகின்ற வெற்றியமைந்த தலைவாயில் புறத்து நிற்கின்றான்' என்றான் - என்று சொன்னான்.

தொழுதானை என்பதில் உள்ள ஐ என்பதைப் பிரித்து அங்கதனுடன் கூட்டுக. இலக்குவன் வினவும் அங்கதனுடைய விடையும் சுருக்கமாகக் கூறப்பட்டிருப்பது நோக்கத்தக்கது 'சிங்கவேறனையான்' (உயுத்த. விபீடண. 125) : இங்கு இலக்குவனின் இராஜஸம் சுட்டப் பெற்றது.

பி - ம். 1. *பெயர்ந்து வந்தான்; வந்தாங்கடி யிணைதொழுதான்.*

3. *கொற்ற, மாடக் கோயிற்; கடைத்தலைவாயில்.*

4. *வீரன்; செல்வ வென்றான்.*

இச்செய்யுள்,

அங்கதன் பெயர்த்தும் வந்தாங் கடிதொழு தானை யையா
எங்கிருந் தனனெங் கோமா னென்றலு மெந்தை கேண்மோ
மங்குறோய் மாடக் கொற்றக் கடைத்தலை மருங்கு நின்றான்
சிங்கவே றனைய சீற்றத் திறலுடைச் செம்ம லென்றான்

என்று ஓர் பிரதியிற் காணப்படுகிறது. (98)

சுக்கிரீவன் இலக்குவனை எதிர்கொள்ளுதல்

652. சுண்ணமுந் தூசும் வீசிச்
சூடகத் தொடிக்கை மாதர்
கண்ணகன் கவரிக் கற்றைக்
காலுறக் கலைவெண் டிங்கள்
விண்ணுற வளர்ந்த தென்ன
வெண்குடை விளங்க வீர
வண்ணவிற் கரத்தான் முன்னர்க்
கவிக்குலத் தரசன் வந்தான்.

சூடகம் தொடிகை மாதர் - சூடகம் தொடி என்ற அணிகளைத் தரித்த கரங்களையுடைய வானரப் பெண்கள், சுண்ணமும் தூசும் வீசி - நறுமணத் தூள்களையும் ஆடைகளையும் வீசிக்கொண்டு, கண் அகல் கவரிகற்றை கால் உற - இடமகன்ற (விசாலமான) வெண்சாமரத் தொகுதியைக்கொண்டு காற்றையுண்டாக்கவும், கலை வெள்திங்கள் விண் உற வளர்ந்தது என்ன - பதினாறு கலைகளும் நிறைந்த வெண் ணிறமான சந்திரன் வானத்தில் பொருந்தி விளங்குவது போலும், வெள் குடை விளங்க - வெண்கொற்றக் குடை ஒளி செய்யவும், வீரம் வண்ணம் வில் கரத்தான் முன்னர் - ஆண்மை செறிந்த அழகிய வில்லைப் பிடித்த கையையுடைய இலக்குவன் எதிரில், கவிகுலத்து அரசன் - வானர சாதியின் தலைவனான சுக்கிரீவன், வந்தான் - வந்தான்.

சுண்ணமும் தூசும் வீசுதல் மகிழ்ச்சியைத் தெரிவிப்பன; அரச மரியாதையும் ஆம். சூடகம். தொடி, கைவளையின் வகைகள்; 'சூடகமே தோள்வளையே' (திருப்பாவை. 27). சூடகம் - முன்கை வளை; 'சூடக மகளிர்' (சீவக. 2052): 'சூடகத் தடக்கை' (சுந்தர. 424); 'சூடக வால்வளை சூட்டிட - நீட்டும் ஏடவிழ்மாலை' (பால. கார்முகப் 33); 'பாடகத்தரவமுஞ் சூடகத் தோசையும்' (பெருங். வத்தவ. 12: 210); தொடி - தோள்வளை; இஃது இருபாலாரும் அணிவது. 'தொடி துணிந்தன'; (ஆரணிய. 439): தொடி - வளைகட்குக் காவலாக இடுவதும் ஆம். கொற்றக் குடை முழுமதியம் போலும் என்று வருணிப் பது கவிமரபு; 'திங்கட் குடையுடைச் சேரனும்' (ஔவை பாடல்): 'முச்சக நிழற்றும் முழுமதி முக்குடை' (நன். சொல். 1): 'உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை' (புறநா. 3): 'பான்மதிபோல, திங்க ணெடுங் குடையின் கீழானே' (பத்துப்: மதுரைக். இறுதி வெண்பா. 1).

பி - ம். 2. *காலுறக் கதிர் வெண்டிங்கள்.*

3. *விண்ணுற மலர்ந்த தன்ன.*

4. *கரத்தான் முன்னே.*

இந்தப்பாடல் ஓர் பிரதியில் காணப் பெறவில்லை. (99)

653. அருக்கிய முதல வாய
வருச்சனைக் கமைந்த யாவும்
முருக்கிதழ் மகளி ரேந்த
முரசின முகிலி னார்ப்ப
இருக்கின முனிவ ரோத
விசைதிசை யளப்ப யாணர்த்
திருக்கிளர் செல்வ நோக்கித்
தேவரு மருளச் சென்றான்.

முருக்கு இதழ் மகளிர் - கலியாண முருக்க மலரை யொத்த அதரங்களையுடைய பெண்கள், அருக்கியம் முதல் ஆய - அருக்கியம் முதலாகவுள்ள அருச்சனைக்கு அமைந்த யாவும் ஏந்த - (இலக்குவனை) வரவேற்று வழிபடற்குரிய பொருள்கள் அனைத்தும் கையில் ஏந்தி வரவும், முரசு இனம் முகிலின் ஆர்ப்ப - பேரிகை முதலிய தோற் கருவிகளின் தொகுதி மேகம்போன்று ஒலிக்கவும், முனிவர் இருக்கு இனம் ஓத - இருடிகள் இருக்கு வேதம் முதலியவற்றைப் பாராயணம் செய்து கொண்டு வரவும், இசைதிசை அளப்ப - சங்கீதங்களின் ஒலி எல்லாத் திக்குக்களிலும் பரவவும், யாணர் திரு கிளர் செல்வம் நோக்கி தேவரும் மருள - புதிதான சிறப்பு மிகுந்த (தனது) செல்வச்சிறப்பினைச் கண்டு, தேவர்களும் திகைப்புறும்படி, சென்றான் - (சுக்கிரீவன் இலக்கு வனை எதிரேற்குமாறு) போயினான்.

அரசர் பிற அரச குலத்தினரான தக்க பெரியோர்களை வரவேற்கும் முறை இங்குக் காட்டப்பெற்றது. அருக்கியம் - கைகழுவ நீர் உதவு தல்; சோடச உபசாரங்களில் ஒன்று. முருக்கிதழ்-பலாச மலர் போன்ற அதரம்; பலாசம் - கலியாண முருக்கு (இதனை முண் முருங்கை என்றும் கூறுவர்). 'சிதர் நனை முருக்கின்' (சிறுபாண். 254): 'முருக்கிதழ் குலிக முட்டி வைத்தன முறுவற் செவ்வாய்' (சீவக. 1454). இருக்கினம் - இருக்கு முதலிய் மறைகள். யாணர் - புதுமை.

பி - ம். 1. அருக்கியம் முதலதான.
2. இசை திசை யார்ப்ப.
3. முனிவரேத்த.
4. செல்வ நோக்கத்.

654. வெம்முலை மகளிர் வெள்ள
மீனென விளங்க விண்ணில்
சும்மைவான் மதியங் குன்றிற்
றோன்றிய தெனவுந் தோன்றிச்
செம்மலை யெதிர்கோ ளெண்ணித்
திருவொடு மலர்ந்த செல்வன்
அம்மலை யுதயஞ் செய்யுந்
தாதையு மனையனானான்.

செம்மலை எதிர் கோள் எண்ணி - தலைமைசான்ற இலக்குவனை எதிர் கொள்ளக் கருதி, திருவொடு மலர்ந்த செல்வன் - அரசச் செல்வத்துடன் விளங்கும் சுக்கிரீவன், வெம்முலை மகளிர் வெள்ளம் - விரும்பப்படுகின்ற தனங்களையுடைய மாதர்களின் பெருந்திரள், விண்ணில் மீன் என விளங்க - ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்களைப் போல் விளங்க, (அவர்களின் இடையில்), குன்றில் தோன்றிய - உதய கிரியில் உதித்து ஒளிசெய்யும், சும்மை வான் மதியம் எனவும் - தனக் குரியதான ஒலியுடன் ஆகாயத்தில் காணப்படுகின்ற வெண்ணிறமான சந்திரன் போன்றும், தோன்றி-காணப்பட்டு, அ மலை உதயம் செய்யும்- அந்த உதயகிரியில் உதித்து ஒளிவீசும், தாதையும் அனையன் ஆனான் - தந்தையாகிய சூரியனையும் ஒத்து விளங்கினான்.

சுக்கிரீவனுக்கு அவன் மகிழ்ச்சியின் சிறப்பை விளக்க சந்திரனும் அவன் சௌந்தரியத்தைச் சுட்ட உதயகிரியில் தோன்றிய சூரியனும் உவமைகள், (ஒப்பு) 'ஞாயிற்றன்ன வெந்திற லாண்மையும் திங்க ளன்ன தண் பெருஞ் சாயலும் (புறநா. 55: 13-14) 'முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும், பன்மீனாப்பண் திங்கள் போலவும்' (மதுரைக் 768-769.) : சும்மை - பேரொலி 'சுவையொளி யூறோசை நாற்றம்' என்ற ஐந்தில் சும்மை அல்லது ஒலி வானின் குண மாகலின் சும்மை வான் என்றார் (சிவ சித்தி. 2. 64). இனி, சும்மை, சுமையின் விகாரம் எனக்கொண்டு கலைகளாகிய சுமையைக் கொண்ட மதியம் எனினும் ஒன்றும். மீனென விளங்க விண்ணில் என்பது விண்ணில் மீனென விளங்க என்று மொழிமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. வெள்ளம் என்றதற்கேற்ப மீன் என்றார். கோள், கொள் என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். தாதையு மனையனானான் - மகனைப் பற்றிக் கூறும்கால் தந்தையையும் இணைத்தே கூறுவர் கம்பநாடர்; உருவத்தில் பெரும்பான்மையும் தந்தையரை ஒத்துக் குண பாவங்களிலும் சிறு

பான்மை ஒத்துத் தனையர் விளங்குவ தறியலர் 'வனப்பெலாம் நுந்தையை ஒப்பினும்' (கலித். 86); 'முடிவுகாலத் தழிவுறக் கடுகும் வேகத் தாதையு மனைய ஞான்' (சுந்தர. 29); செங்கரம் பரப்பிய தன் பெருந் தாதை, உதயக் குன்றினின்றொரு குன்றிற் பாய்ந்தவன் ஒத்தான் (உயுத்த. மகுடபங்க.4); என்றன காண்க.

பி-ம். 1. விளங்கி 2. பரந்த செல்வன், போந்த செல்வன்.
4. உதயஞ் செய்த; உதிக்கத் தாதை வந்தது மனையனான் (101)

இலக்குவன் தன் சினத்தைத் தணித்துக்கொள்ளுதல்

655. தோற்றிய வரிக்குலத் தரசைத் தோன்றலும்
ஏற்றெதிர் நோக்கின னெழுந்த தவ்வழி
சீற்றமங் கதுதனைத் தெளிந்த சிந்தையால்
ஆற்றினன் கருமத்தி னமைதி யுன்னுவான்.

தோன்றலும் - பெருமை பொருந்திய இலக்குவனும், தோற்றிய அரி குலத்து அரசை - (வந்து எதிரே) காணப்பட்ட வானர குலத்து அரசனான சுக்கிரீவனை, எதிர் ஏற்று நோக்கினன் - வரவேற்றுப் பார்த் தான்; அவழி சீற்றம் எழுந்தது - அச்சமயத்தில் சினம் மூண்டது; கருமத்தின் அமைதி உன்னுவான் - தான் மேற்கொண்ட காரியத்தின் தன்மையைக் கருதுபவனான அந்த இலக்குவன், அங்கு - அந்த இடத்தில், அதுதனை - அந்தச் சினத்தை, தெளிந்த சிந்தையால் - தெளி வான தனது மனத்தினால், ஆற்றினன் - தணித்துக் கொண்டான்.

தாரை, அநுமன் அங்கதன் முதலியோரால் இலக்குவனின் வெகுளி பெரும்பாலும் தணிந்தது என்பதும், அது முற்றிலும் நீங்கவில்லை யென் பதும், சுக்கிரீவனைக் கண்டதும், 'அவன் கருமத்தின் அமைதி உன் னியும், இராமபிரான் முன் கூறியதை ஒட்டியும், தன் தெளிந்த சிந்தை யால் அவ் வெகுளியை ஆற்றினன்' என்பதும் அறிகிறோம். ஈங்குக் கோபத்தைச் சாந்தம் மாற்றிய தன்மை குறிக்கப் பெற்றது. இங்கு 'இணரெரி தோய்வன்ன இன்னா செயினும் புணரின் வெகுளாமை நன்று' (308): என்ற குறளையும், 'ஆறுவது சினம்' என்ற ஔவையார் வாக்கையும் கருதுக; மற்றும் திருக்குறள் வெகுளாமை அதிகாரத்தின் முதல் மூன்று செய்யுட்களும் இங்குக் குறிக் கொள்ளற் பாலன; (ஒப்பு): 'காயும் கதமின்மை நன்று'; 'நோத்தின்னா மற்றவர் செய்தக்கால் தாம்அவரைப் பேர்த்தின்னா செய்யாமை நன்று'; உப

காரம் செய்ததனை யோராதே தங்கண் அபகாரம் ஆற்றச் செயினும் - உபகாரம், தாம்செய்வ தல்லால் தவற்றினால் தீங்கூக்கல், வான்றோய் குடிப்பிறந்தார்க்கில்' (நாலடி. சினமின்மை. 1, 7, 9.).

பி - ம். 1. *தோற்றின.*

2. *வெதிர்ந்ததவ்வழி.*

3. *காதலால்.*

4. *அமைதி யெண் ணுவான், யெண்ணியே.* (102)

இருவரும் அரண்மனைக்குட் செல்லுதல்

656. எழுவினு மலையினு மெழுந்த தோள்களால்
தழுவின ரிருவருந் தழுவித் தையலார்
குழுவொடும் வீரர்தங் குழாத்தி னோடும்புக்
கொழிவிலாப் பொற்குழாத் துறையு ளெய்தினர்.

'இருவரும் (இலக்குவன், சுக்கிரீவன்) என்ற இருவரும், எழுவினும் மலையினும் எழுந்த தோள்களால் - இருப்புத்தூண், மலை என்ற இவற்றினும் மேலாக உயர்ந்து பருத்தோங்கிய (தம்) புயங்களினால், தழுவினர்- ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டார்கள்; தழுவி - (அவ்வாறு) தழுவிக்கொண்டு தையலார் குழுவொடும் - வானர மாதர் கூட்டத்துடனும், வீரர்தம் குழாத்தினோடும் - வீரருடைய தொகுதியுடனும், ஒழிவு இலா பொற்குழாத்து உறையுள்புக்கு எய்தினர் - எடுக்க எடுக்கக் குறையாத பொன்திரள் நிறைந்த அரண்மனைக்குட் சென்று சேர்ந்தார்கள்,

தோளுக்கு எழுவும், மலையும் உவமைகள்: 'எழுவினு முயர்ந்த தோளாய்' (அயோத்தி. குகப். 33): 'எழுவினுமெழிலிலங்கிராமன் தோள்களை' (சுந்தர. 595) : பொற்குழாத் துறையுள் - நிதியறை.

பி - ம். 1. *விராயதங் குழாத், வயவர்தங்.*

4. *ஒழிவிலாக் கோபுரத்து, ஒளிசெய் பொற்கோபுரத்; உம்ப ரெய் தினர்.*

இதன்பின் 'கல்லலை' என்ற பாடல் ஒர் ஏட்டுப் பிரதியில் காணப் படுகிறது. (103)

அரியணையில் அமர இலக்குவன் மறுத்தல்

657. அரியணை யமைந்தது காட்டி யையவீண்
டிருவெனக் கவிக்குலத் தரச னேவலும்
திருமக டலைமகன் புல்லிற் சேரவெற்
குரியதோ வீஃதென வுரைத்துப் பின்னரும்

கவிகுலத்து அரசன் - வாநரசாதியின் மன்னனாகிய சுக்கிரீவன், அமைந்தது அரி அணை காட்டி - நன்கு அமைக்கப்பட்டதொரு சிங்காதனத்தை (இலக்குவனுக்குக்) காண்பித்து, 'ஐய, தலைவனே!, ஈண்டு இரு - இதில் அமர்வாயாக', என ஏவலும் - என்று வேண்டவும், (இலக்குவன்) திருமகள் தலைமகன் புல்லில் சேர - இலக்குமி நாதனான இராமபிரான் புல்தரையிலே அமர்ந்திருக்க, இஃது எற்கு உரியதோ - இந்தச் சிங்காதனத்து வீற்றிருத்தல் எனக்குப் பொருந்துமோ, என - என்று, உரைத்து - சொல்லி, பின்னரும் - மேலும்; அடுத்த கவியில் 'என்றான்' என்பதனோடு முடியும்.

ஈது என்றது அரியணையை. இலக்குமி கணவனான இராமபிரான் புல்லணையில் இருக்கத் தான்மட்டும் அரியணையிலிருப்பதா ? என்றான் இலக்குவன். இராமபிரான் புல்லில் வைகுதல்: 'மாலை வாய்ப் பாரின் பாயல் வைகுநர்' (அயோத்தி. கங்கை.48); 'கல்லிடைப்படுத்த புல்லின், வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளிகண்டான்' (அயோத்தி. குகப். 39); 'இராமன், தொலையாத கானம் கடந்தவந் நாட்டடந் தோறும்புல்லாய்ச் சிலையாய்க் கிடந்திலமே' (திருவரங்கக்.16) 'எல்லணை மணிமுடி துறந்த வெமமுனூர் புல்லணை வைகயான் பொன்செய் பூத் தொடர், மெல்லணை வைகலும் வேண்டுமோ (658).

பி - ம். 1. யமைத்தது, யமைந்தன, யமைத்தன.
3. புல்லிற் சேர்வுற.
4. மனத்தினுன்னுவான் ; உரியவோ விதுவென ; மனத்தி னுன்னியே.

(104)

658. கல்லணை மனத்தினை யுடைக்கை கேசியால்
எல்லணை மணிமுடி துறந்த வெம்முனூர்
புல்லணை வைகயான் பொன்செய் பூத்தொடர்
மெல்லணை வைகலும் வேண்டு மோவென்றான்.

கல் அணை மனத்தினை உடை கைகேசியால் - கல்லைப் போன்ற (கடிய) உள்ளத்தினையுடைய கைகேசி பெற்ற வரத்தின் விளைவாக, எல்

அணை மணி முடி துறந்த-ஒளி தங்கிய இரத்தின மகுடத்தைத் தரித்தலை விடுத்து வந்த, எம்முனுர் - எங்கள் தமையனுன இராமபிரான், புல் அணை வைக - புல்லாலாகிய படுக்கையிலே தங்க, யான் - நான், பொன் செய் பூ தொடர் மெல் அணை வைகலும் - பொன்னுற் செய்யப்பெற்றதும் மலர்களால் புனையப் பெற்றதுமான மெல்லிய ஆதனத்தின் அமர்தலும், வேண்டுமோ - விரும்பத்தகுவதாகுமோ?' என்ருன் - என்று மொழிந்தான்.

கைகேசியால் எல் அணை மணி முடிதுறந்த எம்முனுர், என்றது, இலக்குவன் கைகேசி செய்த கொடுமையை மறவாமையைக் குறிக்கின்றது. கைகேசியின் இயற்கையாகத் தூய உள்ளம் இடையில் கூனி சூழ்ச்சியால் திரிந்தது எனக் குறிக்கக் கல்லியல் என்னுது கல் அணை யென்ருன். எல் அணை மணி முடி - பரம்பரையாகச் சூரிய வமிசத்து மன்னர்கள் சூடிவந்த மணிமுடி யெனினுமாம். புல் அணை வைக - 'அரிய புல்லில் துயின்ற' (அயோத். கங்கைகாண். 39).

பி - ம். 1. *கல்லன மனத்திலாவிகாக்கின்றேன், கல்லன மனத்தினுளிகற் கைகேசியால்.*
2. *மெல்லணை மென்முடி, எல்லுடை மணிமுடி யிழந்த வெம் முனேன்.*
3. *புல்லணை தங்கயான்.*
4. *வைகவும் வைகுதல் விழுமிதோ வென்ருன்.* (105)

சுக்கிரீவன் துயர்தலும் இலக்குவன் தரையிலமர்தலும்

659. என்றவ னுரைத்தலு மிரவி காதலன்
நின்றனன் விம்மினன் மலர்க்கண் ணீருகக்
குன்றென வுயர்ந்தவக் கோயிற் குட்டிம
வன்றலத் திருந்தனன் மனுவின் கோமகன்.

என்று அவன் உரைத்தலும் - என்று அவ்விலக்குவன் சொல்லிய அளவில், இரவி காதலன் - சூரியனுடைய புதல்வனுன சுக்கிரீவன், மலர் கண் நீர் உக விம்மினன் நின்றனன் - தாமரை மலர் போன்ற தன் கண்களில் (சோகத்தாலாய) நீர் பெருக உள்ளம் பொருமி நின்ருன்; (அப்போது), மனுவின் கோமகன் - மனுவின் வழித்தோன்றிய அரசிளங்குமரனுன இலக்குவன், குன்று என உயர்ந்த அ கோயில் - மலைபோல ஓங்கிய அந்த அரண்மனையினுடைய, குட்டிமம் வல் தலத்து இருந்தனன்-கல்பரப்பிச் செய்யப்பட்ட மேடையில் இருந்தான்.

சுக்கிரீவன் கண்ணீர் உகுத்தது இலக்குவனுடைய பரிதாபச் சொற்களைக் கேட்டும் தான் அந்நிலையில் நில்லாதது கருதியும் என்க. 'அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்' (குறள். 71) : என்றது காண்க; குட்டிமம், வடசொல்; கற் பாவிய வலிய இடம் எனப் பொருள்படும். 'மணிகொள் குட்டிம மட்டித்து' (சுந்தர : 714); 'மணிசெய் குட்டிமம்' (பால. நகரப் 39) : மனு - தயரதன் என்பது பழையவுரை.

பி - ம். 1. என்றிலை யுரைத்தலும்.
2. விருகண்ணிருக.
3. குன்றெனப் பொலிந்தவக் கோயினின்றனன்; கூடிய சொற்ற வில்லொடும்.
4. மன்றலந் தாரினன்; வாய்மைநோக்கியே. (106)

பலரும் வருந்தியது

660. மைந்தரு முதியரு மகளிர் வெள்ளமும்
அந்தமி னோக்கின ரழுத கண்ணினர்
இந்திய மவித்தவ ரெனவி ருந்தனர்
நொந்தனர் தளர்ந்தனர் நுவல்வ தோர்கிலர்.

(அப்போது ஆங்குள்ள வானரக் கூட்டத்தில்) மைந்தரும் - ஆடவரில் வயதுவந்தவரும், முதியரும் - பேரறிஞர்களும், மகளிர் வெள்ளமும் - மாதர்களின் பெருங் கூட்டமும், அந்தம் இல் நோக்கினர் - அழகழிந்த பார்வையையுடையவர்களாயும், அழுத கண்ணினர் - அழுகின்ற கண்களையுடையவர்களாயும், நுவல்வது ஓர்கிலர் - யாதொன்றும் சொல்லவறியாதவர்களாகி; நொந்தனர் தளர்ந்தனர் - மனம் வருந்திச் சோர்வுற்று, இந்தியம் அவித்தவர் என இருந் தனர் - ஐந்து புலன்களையும் அடக்கிய முனிவரொப்ப அவர்கள் அசைவற இருந்தார்கள்.

முனிவர்கள் இந்திரியங்களை அடக்கியது அவர்கள் இறை வனை ஒருமுகமாகத் தியானித்தலால் நிகழ்வது; இந்த வானரங்கள் ஐம் பொறிகளடங்கியிருந்தது, சோக மிகுதியால் என்க. சோகம், இலக் குவன் இராகவனது நிலையை கூறியதைக் கேட்டதனாலும் அவன் தரையில் அமர்ந்திருந்ததைக் கண்டதாலும் என்க. அழுதலால் நோக்கம் அழகிழந்து காணப்பட்டது. துயரம் மிகுதியால் செய லற்றிருப்பதைக் கையாறு என வழங்குவர். நொந்தனர் என்

பது முற்றெச்சம். இந்தியம் - இந்திரியம் என்ற வடசொல்லின் மரூஉ: 507.

பி - ம். 2. அந்தமி லின்னலின் ; அந்தர நோக்ினர்.
3. றென்ன நின்றனர். றென்ன விருந்தனர் ; இந்திய மவிந்தன றென்ன. (107)

இலக்குவன் நீராடி உண்ணமறுத்தல்

661. மஞ்சன விதிமுறை மரபி னுடியே
எஞ்சலி லின்னமு தருந்தின் யாமெலாம்
உஞ்சன மினியென வரசு ரைத்தலும்
அஞ்சன வண்ணனுக் கனுசன் கூறுவான்.

அரசு - சுக்கிரீவ மன்னன் (இலக்குவனைப் பார்த்து), '(நீ) விதி முறை மரபின் மஞ்சனம் ஆடியே - நூல்களிற் கூறிய முறைப் படியே நீராடி, எஞ்சல் இல் இன் அமுது அருந்தின் - குறை வற்ற (சுவை யமைந்த) இனிய உணவையுட்கொண்டால், யாம் எலாம் இனி உய்ஞ்சனம் - நாங்கள் எல்லாம் நல்வாழ்வு பெற்றவர் களாகுவோம்' ; என உரைத்தலும் - என்று சொல்லிய அளவில், அஞ்சன வண்ணனுக்கு அநுசன் - மைபோன்ற நிறத்தவனுன இராம பிரான் தம்பியாகிய இலக்குவன், கூறுவான் - சொல்வானுனன். இதனை அடுத்த நான்கு கவிகளிற் காண்க.

உணவிற்கு முன் நீராடல் வேண்டப்படுதலின் மஞ்சனம் கூறினுன்: ஆசாரக்கோவை முதலிய நீதி நூல்களில் விதித்தபடி நீராடுதல் முறை யென்பார் விதிமுறைமரபின் ஆடியே, என்ருர். முறை - பொது : மரபு- இடத்திற்கேற்பது என்க. அறுசுவை யுண்டி வேண்டப்படுதலின் 'எஞ்சல் இல் இன் அமுது' என்ருன். 'செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான் நல் விருந்து வானத் தவர்க்கு' (குறள். 86) என்பர் ஆகலின் 'உய்ஞ்சனம்' என்ருன். அனுசன் ; அநுஜன்; கூடப்பிறந் தவன் என்று பொருள்படும் வடசொல்; இலக்குவனுக்கு இராமாநுஜன் என்ற பெயருண்மை காண்க. அஞ்சன வண்ணன் இராமபிரான் : 'அஞ்சன வண்ணனென் னுருயிர் நாயகன்' (அயோத்தி. குகப். 14). 'உய்ஞ்சனம்' உய்ந்தனம் ; போலி ; எதிர்காலம் இறந்தகாலமாக வந்த கால வழுவமைதி ;

பி - ம். 1. மரபினுடினே, மரபின் னாடியே, மரபினுட்டிணே.
2. லின்னமிர் தருந்தின்.
3. வரசுணர்த்தலும்; இஞ்சிசீ யிருமென வியம்பி னேர்தமக்.
4. னெவல் சொல்றுயான், கூறுமால். (108)

662. வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள
இருத்துமென் ருலெமக் கினிய தியாவதோ
அருத்தியுண் டாயினு மவலந் தான்றழீஇக்
கருத்துவே றுற்றபி னமிழ்துங் கைக்குமால்.

வருத்தமும் பழியுமே வயிறுமீக்கொள - துயரமும், பழிச்சொல்லுமே வயிற்றில் நிரம்பியிருக்கவும், (நாங்கள்) இருத்தும் என்ருல்- பிழைத்திருக்கின்ரேம் என்ருல், எமக்கு இனியது-எங்களுக்கு இனிமை தரக் கூடியது, யாவது - எதுதான்? அருத்தி உண்டாயினும் - உண்பதில் மிகவும் ஆசையிருப்பினும், அவலம் தழீஇ - துன்ப முற்று, கருத்து வேறுஉற்றபின் - மனம் மாறுபட்ட காலத்து, அமிழ்தும் கைக்கும் - தேவாமுதமும் கசக்குமன்ரே? தான்; ஆல் - அசைகள். ஓகாரம் - எதிர்மறை.

உயிர் வாழ்வதற்கு வயிற்றுணவு வேண்டும்; வருத்தமும் பழியுமே அந்த உணவாக வமைந்தன. ஆயினும் வாழ்ந்து வருகின்ரேம் எனினுமாம்; வருத்தமும் பழியுமே நிறைந்துள்ள போது மனம் உணவினில் நாட்டம் கொள்ளாது என்றவாறு; இங்கே வருத்தமும் பழியும், முறையே பிராட்டியைப் பிரிந்ததாலும், அவளைப்பிறர் கொண்டுசென்றும் மீட்டிலோம் என்றதனுலும் ஏற்பட்டவை. 'இருத்து மென்ருல் - வருத்தந்தானே எங்களைச் சோற்றிற் கவலை வையாமல் இருத்திற்றென்றவாறு' என்பது பழையவுரை.

பி - ம். 1. எமக்கினிய தாகுமோ, நினியதாவதோ நினியதீவதோ.
3. அவலத்தாலழி, அவலந்தர்தழீஇ. (109)

663. முட்டிய பழியெனு முருங்கு தீயவித்
தாட்டினை கங்கைநீ ரரசன் றேவியைக்
காட்டினை யெனினெமைக் கடலி னுரமு
தூட்டினை யாற்பிறி துயவு மில்லையால்

அரசன் தேவியை காட்டினை எனின் - இராமபிரானுடைய தேவியாகிய சிதாப்பிராட்டியைத் தேடிக்கொணர்ந்து காட்டுவாயாகில், எமை - எம்மை, முட்டிய பழி எனும் முருங்கு தீ அவித்து

கங்கை நீர் ஆட்டினை - மூண்டுள்ள பழியாகிய முறுகி வளர்கின்ற நெருப்பைத் தணித்து, கங்கையின் நீரினால் நீராட்டினவனுவாய்; (மேலும்) கடலின் ஆர் அமுது ஊட்டினை - பாற்கடலில் தோன்றிய அருமையான அமுதத்தைக் கொண்டு எங்களை உண்பித்தவனுமாவாய்; பிறிது உயவும் இல்லை - (எமக்குப்) பின்னர்த் துயரமும் இல்லையாகும். ஆல் இரண்டும் அசைகள்.

'மஞ்சனம் செய்து அமுதருந்துக' என்ற சுக்கிரீவனுக்கு இலக்குவன் தான் விரும்பும் மஞ்சனத்தையும் அமுதையும் சுட்டியது இச் செய்யுள் என்க. இதனால், அவன் சுக்கிரீவன் கடமையையும், தான் வந்த காரணத்தையும் குறித்தானும்.

பி - ம். 3. காட்டினை யேலெமைக், யெனி லெமைக்; கடலின்னமிழ்து, கடலினின்னமுது, ளமிர்து.

4. ஊட்டினை யதன்பிற குயிரு முள்ளதால், தூட்டிய தொக்கும் பின்னுயிரு முன்னதால், யதற்பிறிது. (110)

664. பச்சிலை கிழங்குகாய் பரம னுங்கிய
மிச்சிலே நுகர்வது வேறு தானொன்று
நச்சிலே னச்சினே னாயி னாயுண்ட
எச்சிலே யதுவிதற் கைய மில்லையால்.

'பசு இலை - பசிய இலைகளும் (கீரை முதலியனவும்), கிழங்கு - கிழங்குகளும், காய் - காய்களும் (ஆகிய இவற்றில்), பரமன் நுங்கிய மிச்சிலேதான் - சிறந்தவனான இராமபிரான் அமுது செய்து எஞ்சியவற்றையே (பெருமாள் தளிகைப் பிரசாதத்தையேதான்), நுகர்வது- நான் உண்பது; (அன்றி) வேறு ஒன்றும் நச்சிலேன்-வேறு எப்பொருளையும் விரும்பமாட்டேன்; நச்சினேன் ஆயின் - விரும்புவேனாகில், அது நாய் உண்ட எச்சிலே - அது நாய் தின்றுபோகட்ட எச்சிலேயாகும்; இதற்கு ஐயம் இல்லை - இதில் சந்தேகமில்லை. ஆல் அசை.

இந்திரசித்தைக்கொல்ல வேண்டி இலக்குவன் பதினான்கு ஆண்டுகள் உறங்காமலிருந்தானாகலின், 'அவனைத்' துஞ்சலில் நயனத்தையன்' (உயுத்த. வீடணன். 144) என்பர். அத்துணை ஆண்டுகளும் உணவின்றியிருந்தான் என்றும் கூறுவர். பயிலுங்காலம் பத்தொடு நாலும் படர்கானத் தயில்கின் றேனுக் காவன நல்கி யயிலாதாய்'

(உயுத்த. பிரமாத். 209) என்பது இராமபிரான் கூற்று; ஆவன நல்கி யயிலாதாய் எனப்பொருள் கொள்ளுதல் பொருந்தும் என்று கூறலாம். அஃதன்றி, இலக்குவன் ஆதிசேடன் அமிசம் ஆகலின் காற்றையே உட்கொண்டிருந்திருத்தலும் கூடும். நல்ல பாம்பிற்கு 'வாதாசனி' என்ற பெயருண்மையும் காண்க. இச் செய்யுளில் பரமன் நுங்கிய மிச்சிலே நுகர்வது என்று கூறப்பட்டுள்ளது. மிச்சில்-மிஞ்சியிருப்பது. 'ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்' (சீவக. 2261); விளைத்திரும்பு மேய்ந்தொழிந்த மிச்சில்வரை மார்பன்' (சீவக 1790). 'பரமனுங்கிய மிச்சில் - பெருமாள் தளிகைப் பிரசாதம்' பழையவுரை. இலக்குவன் இங்குக் கூறியதற்கு ஒப்பு. 'போனகம் செய்த சேடம் நகுவ ரேல் புனிதரன்றே' என்பது; திருமாலை 41.

பி - ம். 2. நுகர்வதுவன்றி வேறொன்று; வேறு யாதொன்றும், நாதொன் றும்.
3. நச்சிலனயலது; னயலினி;
4. எச்சிலை நுகர்வதே, எச்சிலே நுகர்வதற் கையமில்லையால் யதுவதற்சிரங்குவீரலீர், யிதுவதற்கு. (111)

665. அன்றியு மொன்றுள தைய யானினிச்
சென்றனென் கொணர்ந்தடை திருத்தி னுலது
நுன்றுணைக் கோமக னுகர்வ தாகலான்
இன்றிறை தாழ்த்தலு மினிதன் றுமென்றான்.

'ஐய - தலைவனே! அன்றியும் - அல்லாமலும், ஒன்று உளது - (நான் கூற வேண்டியது) இன்னும் ஒன்று இருக்கின்றது; யான் இனி சென்றனென்-யான் இனித் திரும்பிச்சென்று, கொணர்ந்து-அடகு கனி முதலிய வற்றைத் தேடிககொண்டு வந்து, அடை திருத்தினல் - இலை போகட்டால், அது நுன் துணை கோமகன் நுகர்வது - அதனையே உனது நண்பனும் இராசபுத்திரனுமான இராமபிரான் உண்பதாகும்; ஆகலான்- ஆதலால், இன்று இறை தாழ்த்தலும் இனிது அன்று ஆம்-இப்பொழுது நான் (இங்கு) ஒருகண மேனும் தாமதித்தல் நன்றன்று', என்றான்-என்று இலக்குவன் சொல்லி முடித்தான்.

அடை - இலை; அடகு எனவும் படும்: 'அருந்து மெல்லட காரிட வருந்தும்' (சுந்தர 344): அடை, மற்ற கிழங்கு முதலிய வற்றிற்கும் உபலக்கணம். திருத்துதல் என்பது இங்கே நல்ல முறையில் பக்குவம் செய்தல் என்று பொருள்படும். நுன் - திசைச்

சொல். இராமபிரானால் தம்பி முறையாகப் போற்றப்பட்டது பற்றி 'நுன்துணைக் கோமகன்' என்றான். 'குன்று சூழ்வான் மகனொடும் அறுவரானோம்' (உயுத்த. வீடணன் 146) என்றது காண்க. 'காண்டியா லுன்முன்வந்த கவிக்குலக் கோனொ டென்றான்' (620), என்ற அநுமன் கூற்றும் இங்கே காணத்தகும். அடைதிருத்தல் - பரிகலம் (இலை) அமைத்தலும் ஆம். தவநியமத்தில் இருக்கும் இருடிகள் முதலினோர் சமைத்து உணவு அருந்துபவர் அல்லர்.

பி - ம். 1. நானினிச்.
2. சென்றபின் கொணர்ந்திடை, சென்றுபின்; கொணர்ந்திடத் திருத்தி.
3. தாதலால், தாதலின்.
4. மினிதன்று லென்றான். (112)

சுக்கிரீவன் வருந்துதல்

666. வானர வேந்தனு மினிதின் வைகுதல்
மானவர் தலைமக னிடரின் வைகவே
ஆனது குரக்கினத் தெமர்கட் காமென
மேனிலை யழிந்தகம் விம்மி னானரோ.

(இவ்வாறு இலக்குவன் கூறக் கேட்டு) வானரவேந்தனும்-குரங்கரசனான சுக்கிரீவனும், (இலக்குவனைப் பார்த்து), 'மானவர் தலைமகன் இடரின் வைக - மனு வழியிற் சிறந்தவனான இராமபிரான் துயரத்தின் ஆழ்ந்திருக்கையில், இனிதின் வைகுதல் ஆனது - இன்பமாகக் காலம் போக்குவதென்பது, குரங்கு இனத்து எமர்கட்கு ஆம் - வானரச் சாதியில் தோன்றிய எம்போன்றவர்களுக்கே பொருந்தும், எனா - என்று கூறி, மேல் நிலை அழிந்து அகம் விம்மினான் - தன் உயர் நிலைகெட்டு மனம் வருந்தினான். ஏ, அரோ - ஈற்றசை.

மானவர் தலைமகன் - சான்றோர் தலைவன் எனினுமாம் இராமபிரானுக்கு மானவன்; 672. குரங்கு இனம் - குரக்கினம். விம்முதல்: இராமபிரானுடைய வருத்தத்தை நினைந்ததால் எழுந்த மெய்ப்பாடு. மானவடலைமகன் என்ற பாடத்திற்கு மான் போன்ற பிராட்டியின் தலைவன் எனக் கொள்க. அகம் என்று பின் வருவதால், மேல் என்பது புறவுடல் எனினும் ஆம்; உடல் எழில் குலைதலும் மனம் நோதலும் என்க. 'வேந்தன்' என்ற சொல், தொல்காப்பியர் காலத்து மருத

நிலத்துக் கடவுளாகிய இந்திரனையே குறித்து நின்றது; பின்னர் அரசர்க்குப் பெயராக அமைந்தது; 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' (தொல். அகத் ; 5) : என்றது காண்க.

பி - ம். 1. இனிது வைகுதல், வேந்தனு மாற்றம் கேட்டபோது.
2. மானவடலைமகன்; இடரின்லையகர், வைகவே, ஆளாம் தலைமக ளிடரி னுகவே.
3. ஆளது குரக்கினத்தயர்கட், குரக்கினத் தொழுக்க மாமென, ஆளது நினைக்கிலா திருந்தனேனென; நினைக்கிலா தெமர்களா மெனு;
4. விம்ம விம்முவான், விம்மி விம்முவான். (113)

சுக்கிரீவன் அநுமனிடம் கூறியது

667. எழுந்தனன் பொருக்கென விரவி கான்முளை
விழுந்தகண் ணீரினன் வெறுத்த வாழ்வினன்
அழிந்தயர் சிந்தைய னநுமற் காண்டொன்று
மொழிந்தனன் வரனுழைப் போதன் முன்னுவான்.

இரவி கால் முளை - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், பொருக்கென எழுந்தனன் - விரைந்து எழுந்து, விழுந்த கண் நீரினன் - பெருகி வீழ்ந்த கண்ணீரையுடையவனும், வெறுத்த வாழ்வினன் - செல்வ வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டவனும், அழிந்து அயர் சிந்தையன் - வருந்தித்தளரும் மனமுடையவனும் ஆகி, வரன் உழை போதல் முன்னுவான் - சான்றோனாகிய இராமபிரானிடம் செல்ல எண்ணியவனாய், ஆண்டு - அப்பொழுது, அநுமற்கு - அநுமானிடம், ஒன்று மொழிந்தனன் - ஒருவார்த்தை சொன்னான். அஃது அடுத்த கவியிற் கூறப்படும்.

கான் முளை : ஒரு வமிசத்தில் தோன்றியவன் ; கால் - வமிசம். கைவிட்டுக் காலும் விட்டான்' (உயுத்த. கும்ப. 169) விழுந்த கண்ணீர், வெறுத்த வாழ்வு என்று எச்சங்களை முன்னிறுத்தியதால் சுக்கிரீவன் விழிகளில் பிறன் துயரம் கண்டு பொருமையான் தானாகப் பெருகிய கண்ணீரும், உண்மையாகவே வாழ்வில் ஏற்பட்ட வருத்தமும் தெளியலாம்; உள்ளமும் நிலைகுலைந்து உடலும் தளர்ந்தனன் ஆதலின் 'அழிந்து அயர் சிந்தையன்' என்றது என்க. வரன் - சிரேஷ்டன்; இங்கு இராமபிரானைக் குறித்தது.

பி - ம். 1, இரவி காதலன்.
3. சிந்தையான்; அநுமற் காண்டலின், காண்டையின்.
4. மொழிந்தன னவனுழை, வரன்முறை,
போதன் மேயினன். (114)

சுக்கிரீவன் இராமபிரானிடம் செல்லுதல்

668. போயின தூதரிற் புகுதுஞ் சேனையை
நீயுடன் கொணருதி நெறிவ லோயென
ஏயின னநுமனை யிருத்தி யீண்டென
நாயக னிருந்துழிக் கடிது நண்ணினான்.

(சுக்கிரீவன் அநுமனை நோக்கி), ' நெறிவலோய் - போர் முறையில் வல்லவனே ! போயின தூதரின் புகுதும் சேனையை - (முன் கட்டளை யிட்டபடி) சென்றிருக்கின்ற தூதர்களோடு இனி வரும் வானர சேனையை, நீ உடன் கொணருதி - நீ உன்னுடன் அழைத்து வருக '; என - எனவும், ' ஈண்டு இருத்தி ' (அது காறும் நீ) இவ்விடத்திலேயே இருப்பாயாக ' என - எனவும், அநுமனை ஏயினன் - அநுமானுக்கு ஆணை தந்தவனாய், நாயகன் இருந்த உழி கடிது நண்ணினான் - தலை வனான இராமபிரான் தங்கியிருந்த இடத்திற்கு விரைந்து போக லானான்.

தூதரிற் - தூதர்களால். நெறிவலோய் - நீதியில் சிறந்தவன் அநுமனெனினும் இங்கே நெறியென்றது போர் முறையை எனக் கொள்க. ' ஈண்டு இருத்தியென அநுமனை ஏயினன் ' என மொழி மாற்றிப் பொருள்கொள்க. இருந்த உழி என்பது இருந்துழி எனத் தொகுத்தது. நண்ணினான்; அடையத் தொடங்கினான் என்ற பொருளில் வந்தது.

பி - ம். 1. புகுந்த சேனையை.
2. செறிவலாயென.
3. யீண்டென.
4. நண்ணுவான். (115)

669. அங்கத னுடன்செல வரிகண் முன்செல
மங்கைய ருள்ளமும் வழியும் பின்செலச்
சங்கையி லிலக்குவற் றழுவித் தம்முனில்
செங்கதி ரோன்மகன் கடிது சென்றனன்.

செங்கதிரோன் மகன் - சிவந்த ஒளிக் கற்றைகளையுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவன், சங்கை இல் இலக்குவன் தழுவி - எந்தப் பொருளிலும் ஐயம்திரிபு இல்லாத (தூய உள்ளமுடைய) இலக்குவனைத் தழுவிக்கொண்டு, அங்கதன் உடன்செல - அங்கதன் தன்னைப்

பின்பற்றிவரவும், அரிகள் முன்செல - வாநரர்கள் முன்னே செல்லவும், மங்கையர் உள்ளம் பின் செலவும் - (நேசமிக்க) வாநரமகளிரது மனம் பின் தொடர்ந்து வரவும், வழி பின் செலவும் - கடந்த வழிகள் பின் தங்கவும், தம்முன் இல் - தமையனுகிய இராமபிரான் இருந்த இடத்திற்கு, கடிது சென்றனன் - விரைந்து சென்ருன்.

சுக்கிரீவனுடைய நேச மங்கையர் ஆகலின் அவர்கள் மனம் அவன் பின் தொடர்ந்து சென்றது என்ருர். பின் செல என்பது இரட்டுற மொழிதலாய்ப் பின்தங்க என்றும், பின்தொடரவென்றும் பொருள்பட நின்றது. பின்செலற்கு (ஒப்பு) : 'சீரை சுற்றித் திருமகள் பின் செல' (அயோத். நகர்நீ. 234). உள்ளம் பின்செல: 'சிந்தையுள் நிறையுமென் நலனும் பின்செல' (பால. மிதிலைக். 39): 'பாகனைய சொல்லி யொடு தம்பி பரிவிற் பின், போக முனி சிந்தைதொட ரக்கடிது போஞன்' (ஆரணிய. 176): 'நாணனு மன்பு முன்பு நளிர் வரையேற' (பெரியபு. கண்ணப்ப: 103): 'எழுகின்ற காதலொடும்' (அயோத்தி. குகப். 28.). சங்கையில் இலக்குவன் என்றது, எப்பொருளையும் சிக்கறத் தெளிந்தவனும், சேடன் அவதாரமுமாகலின்; 'தெளிவுடைத் தம்பி' (ஆரணிய. 786). என்றதும் காண்க. 'வழி பின்செல' 'சடைச் செந்நெல் பொன் விளைக்கும் தன்ஞடு பின்ஞ' (நளவெண். 67) : அரசனுக்கு முன்பு வீரர்கள் செல்வது மரபாகலின், 'அரிகள் முன்செல' என்ருர். தம்முன் - இராமபிராஞற் தம்பியாகக் கருதப்பட்டவனுகலின் தம்முன் என்ருர்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. *அங்கதனுடன்வர; அரிகள் பின்செல, அனிகம் முன்செல.*
2. *மன்னன் பின்செல, வழியின் பின்செல.*
3. *தழுவத் தம்முனிற், தழுவித்தாமரை.*
4. *கடிதிற் சென்றனன், செங்கண்மா லிருந்துழிச் சேதிஞரோ.*

(116)

670. ஒன்பதி ஞயிர கோடி யூகந்தன்
முன்செலப் பின்செல ஞாங்கர் மொய்ப்புற
மன்பெருங் கிளைஞரு மருங்கு சுற்றுற
மின்பொரு பூணிஞன் செல்லும் வேலையில்

ஒன்பதின் ஆயிர கோடி யூகம் - ஒன்பதிஞயிர கோடிக் குரங்குச் சேனை, தன் முன் செல பின்செல, ஞாங்கர் மொய்ப்புற-தனக்கு முன்னும் பின்னும் இருமருங்கும் அடர்ந்துவர, மன்பெரு கிளைஞரும் மருங்கு சுற்றுற - மிகவும் உயர்ந்த உறவினர்களாகிய வாநரர்கள் அருகில்

சூழ்ந்து வரவும், மின்பொரு பூணினன் - மின்னலை ஒத்து ஒளி விடுகின்ற அணிகளை அணிந்த சுக்கிரீவன், செல்லும் வேலையில் - (இராம பிரானிருக்குமிடம் நோக்கிப்) போகும் சமயத்தில்; 'கொடிவன மிடைந்தன ' என அடுத்த செய்யுளுடன் தொடரும்.

இங்குக் குறித்த ஒன்பதினயிர் கோடி யூகங்கள் என்பன, பின் தானைகாண் படலத்தில் கூறப்படும் வானரப்படைகளை நீக்கி எனக் கொள்ளற் பாலதாம். யூகம் : குரங்குப்படை; ' ஆவோடல்லது யகரம் முதலாது ' தொல். எழுத்து 66. நச். உரை இங்குக் காண்க. பின்செல ஞாங்கர் மொய்ப்புற என்ற சொற் போக்கினல் சுக்கிரீவனுடன் சென்ற பெரும் பரிவாரத்தின் இயல்பு புலனகும். ஞாங்கர் - பக்கம் ; இப்போது வழக்கு வீழ்ந்தது. ஞாங்கர், மேல் என்றும் பொருள்படும். 'ஞாங்கர்க்குடி நிறைவல்சி' (பெரும்பாண். 196): ஞாங்கர் வேந்துவிடு தொழிலொடு' (புறநா. 319).

பி - ம். 1. *கோடி யெண்ணுடன், யூகந்தாள்.*

2. *மருங்கு மொய்ப்புற, மருங்கின், வந்து சூழ்வுற, சூழுற; நின் படை யுற்றதன் னெடிய சேனைதன், சேனையே, நெடிய சேனைக்கு, நெடியதானைக்கு.*

3. *வன்பெருங் கிளையொடும் வளைத்துச் சுற்றுற; கிளைக்குல;*

4. *மின்பெரும் பூணினன், மின்பயில்; செல்லு மெல்லையில், விரைவிற் போயினன். செல்லல் மேயினன்; செல்லு மேல்வயில், வேலைவாய்.*

இதன் பின் 'பொன்னினின் ' என்ற பாடல் ஓர் பிரதியில் காணப் பெறுகிறது. (117)

671. கொடிவன மிடைந்தன குமுறு பேரியின்
இடிவன மிடைந்தன பணில மேங்கின
தடிவன மிடைந்தன தயங்கு பூணெளி
பொடிவன மெழுந்தன வானம் போர்க்கவே.

கொடி வனம் மிடைந்தன - கொடிகளின் தொகுதிகள் அடர்ந்து நிறைந்தன ; குமுறும் பேரியின் இடி வனம் மிடைந்தன - பருத்தொலிக்கின்ற பேரி யென்ற தோற் கருவியின் இடி போன்ற ஒலித்தொகுதிகள் நிறைந்தன ; பணிலம் ஏங்கின - சங்குகள் ஒலித்தன ; தயங்கு பூண் ஒலி தடிவனம் மிடைந்தன - ஒளி விடுகின்ற அணிகளின் ஒளியாகிய மின்னற் றெகுதிகள் நிறைந்தன; வானம் போர்க்க-விண்ணை மூடும்படியாக, பொடிவனம் எழுந்தன - (பூமியினின்று) தூள்கள் கிளம்பின.

வனம் - தொகுதி என்ற பொருளில் நான்கு அடிகளிலும் வந்தது: ஒப்பு : ஆரணிய ; 527. மிடைதல் - நெருங்குதல்; 'மாசறுமணி முடி மிடைந்த மாலையன்' (சீவக. 953) ; 'நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து' (புறநா. 76). மிடைந்தன என்ற சொல் ஒரு பொருளிற் பல முறை வந்தது. (ஒப்பு): பால. எழுச்சி 30; எதிர்கோள்: 10. பணிலம் - சங்கு. கடற்படு பணிலமும் கன்னிப் பூகமும்' (சுந்தர. 539): 'பணிலம் கலியவிந் தடங்க' மதுரைக். 621; 'இருதலைப் பணில மார்ப்ப மதுரைக் : 380. தடி - தடித் என்ற வடசொல்லின் விகாரம் ; (சுந்தர. 24; 372) ; இது தடித்தெனவும் வழங்கும். தடிவனம் - மின்னி னம் போல் எனலும் ஆம். பொடி வானம் எழுதல் - பால. எழுச்சி. 52 'கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள் ககனம் சுலாவி' (பாரதம் 16 ஆம் போர் : 73.).

பி - ம். 1. கொடியின; குமிறு.
2. முரசும் சங்கமும்,
3. மிடைந்தெனத், மிடைந்தார்மணி; பூண்கழல், பூஞெறும்.
4. மெழுதுகள் விசும்பு, பொடியெழுந்ததுதுகள், யெழுந்தனபடி' மெழுத்துகள் வானம் போர்த்ததே, மெழுந்தன புவனம் போர்க்கவே, கொடிவனமெனத்துகள் வானம்.

இதன் பின் 'வீரனுக்கிளைய' என்ற பாடல் ஓர் பிரதியில்.

இச் செய்யுளும் அடுத்த பாடலும் பின் முன்னாகச் சில பிரதிகளில் எழுதப்பட்டுள்ளன. (118)

672. பொன்னினின் முத்தினிற் புனைமென் றூசினின்
மின்னின மணியினிற் பளிங்கின் வெள்ளியின்
பின்னின விசும்பினும் பெரிய பெட்புறத்
துன்னின சிவிகைவெண் கவிகை சுற்றின.

பொன்னினின் - பொன்னினாலும், முத்தினில் - முத்துக்களைக் கொண்டும், புனைமெல் தூசினின் - அழகிய மெல்லிய ஆடைகளாலும், மின்னின மணியினில் - ஒளிவிடுகின்ற இரத்தினங்களாலும், பளிங்கின் - படிகக் கற்களினாலும், வெள்ளியின் - வெள்ளியினாலும், பின்னின - (வேலைப்பாடமையச்) செய்யப்பட்டனவாகிய, சிவிகை - பல்லக்குகள், துன்னின - நெருங்கி வந்தன ; வெள் கவிகை - வெண் கொற்றக் குடைகள், விசும்பினும் பெரிய - ஆகாயத்திலும் மிக விரிந் தனவாய், பெட்பு உற சுற்றின - (யாரும்) விரும்பும்படி சுழன்று வந்தன.

புனே - அலங்கரிக்கதக்க எனினுமாம். பின்னுதல் - வேலைப்பாடமையச் செய்தல்; (ஒப்பு) : 'துப்பினின் மணியிற் பொன்னிற் சுடர் மர கதத்தின் முத்தின், ஒப்பற வமைத்த வையம்' (பால. எழுச்சி: 70). குடைகள் விரிந்து பரந்த ஆகாயத்தையே மறைத்தலால், 'விசும்பினும் பெரிய' என்றார். விசும்பு - ஆகாயம்; 'விசும்பு தைவரு வளியும்' புறநா. 2. 'நிலம் தீவளி விசும்பு' (தொல். பொரு. நீர் 644); விரிவு அல்லது அகற்சிக்கே விசும்பு உவமையாக்கப் பெறும்; 'நிலனேந்திய விசும்பும்' புறநா. 2.) என்ற இடத்து விசும்பிற் கேற்ப, சூழ்ச்சியதகலமும் என்றது காண்க.

பி - ம். *3. பின்னினும் விசும்பினும் புணர்மென் தூசினின், பின்னிற மணியினிற் பெரிய பெட்புறுத்.*

*4. சிவிகைகள் தொடர்ந்து சுற்றவே, கவிகை சுற்றவே, கவரி சுற்றின, வெண்கவரி சுற்றுற, கவிகை சுற்றுற.* (119)

இதன்பின் 'கொடிவனம்' என்ற செய்யுள் ஓர் பிரதியில் உள்ளது.

673. வீரனுக் கிளையவன் விளங்கு சேவடி
பாரினிற் சேறலும் பரிதி மைந்தனும்
தாரினிற் பொலன்கழ றழங்கத் தாரணித்
தேரினிற் சென்றனன் சிவிகை பின்செல.

வீரனுக்கு இளையவன் - இராமபிரானுடைய தம்பி யாகிய இலக்குவனது, விளங்கு சே அடி - ஒளிர்கின்ற சிவந்த பாதங்கள், பாரினில் சேறலும் - பூமியில் நடந்து செல்ல, பரிதி மைந்தனும் - சூரியன் புதல்வனான சுக்கிரீவனும், தாரினில் பொலம் தழல் தழங்க - கிண்கிணி மாலைகள் போன்று காலில் கட்டிய வீரகண்டை ஒலிக்க (த்தான் காலினால் நடந்து), சிவிகை பின் செல - (தான் ஊர்ந்து செல்லற்குரிய) பல்லக்கு தனக்குப் பின்னேவர, தாரணி தேரில் சென்றனன் - பூமியாகிய தேரின் மேற் சென்றான் (அதாவது, தானும் தரையில் நடந்தனன் என்க.

இளைய பெருமாள் நடந்து சென்றதால், சுக்கிரீவனும் நடந்தே சென்றான்; இஃது அவன் இலக்குவன் மீது வைத்திருந்த அளவிறந்த மரியாதையின் விளைவாகும் செல்+தல் சேறல் என இயையும்; இலக்குவனும் சுக்கிரீவனும் ஒரு பொற் சிவிகையிலேறிச் சென்றதாக முதனூல் கூறும். நடந்து சென்றாலும் அரசன் தேரிலோ சிவிகையிலோ செல்ல வேண்டிய மரபையுட்கொண்டு, 'தாரணித் தேரினிற் சென்றனன்'

என நயம்படக் கூறினர். இவ்வாறு சென்றமையைக் கூறவே அரசர்க்கு இயல்பாகப் பொருந்தியுள்ளவை இன்னவென விளங்கும்; முதனுள் முடி புனைதற் கேற்பாடுகள் நிகழத் தன் மகன் ரகு நந்தனனே, முடியணி கோலத்தோடு எதிர் பார்த்திருந்த கோசலையின் முன்பு, 'குழைக்கின்ற கவரி யின்றிக் கொற்றவெண் குடையு மின்றி இழைக்கின்ற அறமுன் செல்ல' இராமபிரான் வந்தான் என்றதும், 'வெவ்வா யோரி முழவாக, விளிந்தா ரீமம் விளக்காக,. வொவ்வாச் சுடுகாட் டுயரரங்கி னிழல் போல் நுடங்கிப் பேயாட, இவ்வாருகிப் பிறப்பதோ விதுவோ மன்னர்க் கியல் வேந்தே' .(சீவக. 309), என்றதும் காண்க. சிவிகையும் பிற் படும்படி பூமியில் நடந்து சென்றனன் என்பது தொனி.

பி - ம். 1. விரும்பும் சேயடி.
2. பாரினிற் சேறலிற்.
3. தாரணி பொலங்கழற் றயங்க, பொலிகழற்றயங்க. (120)

674. எய்தினன் மானவ னிருந்த மால்வரை
நொய்தினிற் சேனைபின் பொழிய நோன்கழல்
ஐயவிற் குமரனுந் தானு மங்கதன்
கைதொடர்ந் தயல்செலக் காதன்முன்செல.

நோன் கழல் ஐய வில் குமரனும் - வலிய வீரகண்டையும், அழகிய வில்லும் உடைய இளைய பெருமாளும், தானும் - சுக்கிரீவனும், சேனை பின்பு ஒழிய - (உடன் வந்த) வானரப் படைகள் பின்னே தங்கவும், அங்கதன் கை தொடர்ந்து அயல்செல - அங்கதன் அருகே தொடர்ந்து ஒருபுறம் வரவும். காதல் முன்செல - இராமபிரானைக் காண வேண்டும் என்ற) ஆர்வம் முன்னே செல்லவும், மானவன் இருந்த மால்வரை - இராமபிரான் தங்கியிருந்த பெரிய மலையை, நொய்தினில் எய்தினன் - விரைவிற் சென்றடைந்தான்.

மானவன் ; 666. மால்வரை பிரச்சிரவணம். நோன்கழல் ; ஆகு பெயர்; நோன்ருள், புறநா.75. கழலுக்கு நோன்மை-பிறக்கிடாத தன்மை என்க. காதல் முன்செல என்றது ; இராமபிரானைக் காணு முன்னரே காணவேண்டும் என்ற ஆசை முன்செல என்றபடி ; கண்ணப்ப நாய ஞர் திருக்காளத்திமலை மீதேறும் போது சேக்கிழார், 'நாணனு மன்பும் முன்பு நளிர் வரை யேற' (பெரியபு. கண்ணப்ப: 103) என்றது காண்க. அரசுத் திருவனைத்தையும் வெறுத்த இராமபிரானிடம் செல்லும்போது யானை சேனை பரிவாரங்களுடன் ஆடம்பரமாகச் செல்வது தகுதியன் றென நினைந்த சுக்கிரீவன் சேனைபின் பொழியச் சென்ருன் என்ருர்.

(ஒப்பு) அயோத்தி. குகப். 28. இங்குச் சுக்கிரீவனைப் பரதனுடன் ஒப்பிட்டுக் காட்டிய அருமையை அடுத்த செய்யுளிற் காண்க.

பி - ம். 1. எய்தினனிராகவனிருந்த.
2. தொய்தினிற் சேனைபின் னிறுத்தி.
3. ஐயவிற் குமரனு மங்க தன்னுடன்.
4. கைதுறந் தயல்செல, தயல்வரச். (121)

சுக்கிரீவனது இராமபக்தி

675. கண்ணிய கணிப்பருஞ் செல்வக் காதல்விட்
டண்ணலை யடிதொழ வணையு மன்பினால்
நண்ணிய கவிக்குலத் தரச னுமவேல்
புண்ணியற் றொழவரும் பரதன் போன்றனன்.

கண்ணிய கணிப்பு அரும் செல்வம் காதல் விட்டு - பலரும் கருதக் கூடிய அளக்கமுடியாத செல்வத்தில் ஆசையை நீத்து, அண்ணலை அடி தொழ அணையும் - இராமபிரானுடைய திருவடிகளை வணங்குதற்குப் பொருந்திய, அன்பினால்-பத்தியோடு, நண்ணிய - அடைந்த, கவிகுலத்து அரசன் - வானரசாதித்தலைவனான சுக்கிரீவன், நாமவேல் புண்ணியன் தொழவரும் பரதன் போன்றனன் - பிறர் அஞ்சத்தக்க வேலைத் தாங்கிய புண்ணிய வடிவான இராமபிரானைத் திருவடிகளில் வீழ்ந்து பணிய வருகின்ற பரதாழ்வானை நிகர்த்து விளங்கினான்.

கண்ணுதல் - கருதுதல்; 'கண்ணியநாள் கழிந்துளவால்' (சுந்தர. 222); 'கண்ணியபின் போக்குமோ வெஃகு' (பு.வெ.மா.). இரண்டாமடி முற்றுமோனை: நாம்-அச்சம் தொல். உரி. 365. 'நாமவேற் காளை நளனென்பான்' (நளவெண்.13); 'பகை நா மறக் கொன்றவாறும்' (சீவக. பதிகம். 25) 'நாமநல்லொலி' (சீவக. 1715). நாமம்-புகழுமாம் (தஞ்சைவாணன். 7). 'தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத், தீவினையென்ன நீத்துத் திருவடிபுனைந்த செல்வன்'ஆன பரதாழ்வானைத் தன் அரசச் சின்னங்களை விடுத்துச் சிவிகையிலும் ஏறாமல், இராமபிரான் இணையடிகளை வணங்க வந்த சுக்கிரீவனுக்குவமித்தார். 'விரதம்பூண் டுயிரி னேடுந் தன்னுடை மீட்சி நோக்கும் பரதன்போன் றிருந்தான் தம்பி வருகின்ற பரிசு பார்த்தான்' (உயுத்த. இந்திரசித்து. 64) என்றதும் 'பரதனீயினையன பகர்தியோ' (133) வென்றதும் காண்க,

பி - ம். 1. செல்வங் காதல்விட்டவல், குனிப்பருஞ்.

2. யடிதொழு மனவிலன்பினுல்.

3. தரசுதான்றெழும், தரசுகாந்தொழும், தரசு ளாடொறும்.

4. புண்ணியற் றெழுகழற்.

இஃது ஓர் பிரதியில் இல்லை. மற்றோர் பிரதியில் இடம் மாறியுள்ளது. (122)

சுக்கிரீவன் இராமபிரானைவணங்குதல்

676. பிறிவருந் தம்பியும் பிரியப் பேருல
கிறுதியிற் றனென விருந்த வேந்தலை
அறைமணித் தாரினோ டாரம் பார்தொடச்
செறிமலர்ச் சேவடி முடியிற் றீண்டினன்.

பிறிவு அரு தம்பியும் பிரிய - பிரிதலன்றி எப்போதும் உடனிருக்கும் தம்பியாகிய இலக்குவனும் பிரிந்து சென்றதனுல், பேர் உலகு இறுதியில் தான் என இருந்த - பெரிய உலகங்கள் யாவும் அழிந்துபடும் யுகவிறுதியில் (தனித்துநிற்கும்) திருமாலாகிய தன்னைப் போன்று தனிப்பட்டிருந்த, ஏந்தலை - சிறந்தவனுன இராமபிரானை, (சுக்கிரீவன்) அறைமணிதாரினோடு ஆரம் பார் தொட - (தனது மார்பிற் பூண்ட) ஒலிக்கின்ற, அரதன மாலைகளும் முத்துமாலைகளும் (அங்கம்படியப் பணிவதால்) பூமியிற்படும்படி, செறிமலர் சே அடி முடியின் தீண்டினன் - அடர்ந்த செந்தாமரை மலர் போன்ற சிவந்த திருவடிகளைத் தனது சிரத்தினுல் தொட்டான்; (சிரத்திற் படும்படி வணங்கினுன்).

பிறிவரும் - எதுகை நோக்கி வல்லின றகரம் அமைக்கப்பட்டது. இராமபிரானும் இளவலும் இணைபிரியாமை; 'வரதனுமிளவலுமென மருவினரே' (பால. திருவவ, 130); 'யாவர்க்கும் தொழுகுலமாமிராமன் பின்பு பிறந்தானு முளனென்னப் பிரியாதான் தனைப்பயந்த' (அயோத். கங்கை காண். 68) என்பன காண்க: 'மேவினம் பிரிதலாற்றேம் விரகீ விதியி னெம்மை, ஏவின செய்து நிற்றும் இளையவன் போல வென்று, தேவர்தம் படைகள் செப்ப' (பால வேள்வி, 3) என்பதும் காண்க. இராமபிரான் தனித்திருந்த நிலைக்கு இங்குக் காட்டிய உவமைக்கு ஒப்பு: 'ஒக்கநின் றுலகளித் தியோகி னெய்திய, சக்கரத் தவனெனத் தமிய னாயினுன்' (அயோத். 1, 2.) மகாப்

பிரளயத்தின் இறுதியில் திருமால் தனியே தன்னைப் பார்த்திருத்தலாகிய உண்மை இங்குக் கூறப் பெற்றது.

பி - ம். 2. வேந்தனை.
3. சிறுமணி, அறைமலர்த்தாரி, எறிமணி.
4. முறையிற்றீண்டினன், தீண்டவே.

இராமபிரான் சுக்கிரீவனைச் சேமம் விசாரித்தல்

677. தீண்டிய குரிசிலைச் சிலையி ராகவன்
நீண்டபொற் றடக்கையா னெடிது புல்லினன்
மூண்டெழு வெகுளிபோ யொளிப்ப முன்புபோல்
ஈண்டிய கருணைதந் திருக்கை யேவியே.

தீண்டிய குரிசிலை - தன் முடியினால் தன் திருவடியைத் தொட்ட (அடியிற் பணிந்த) பெருமையாளனாகிய சுக்கிரீவனை, சிலை இராகவன் - கோதண்டம் என்னும் வில்லைப் பிடிக்கும் கரத்தனான இராம பிரான், நீண்ட பொன் தட கையால் - முழந்தாளளவும் நீண்ட அழகிய பெரிய கைகளால், நெடிது புல்லினன் - ஆரத் தழுவினவனாய், மூண்டு எழு வெகுளி போய் ஒளிப்ப - (தவணை தவறினமைபற்றிப்) பொங்கி வளர்ந்த சினம் ஆறி மறைய, முன்பு போல் ஈண்டிய கருணை தந்து - தொடக்கத்தில் நட்புக்கொண்ட காலத்து இருந்தது போன்று மிக்க அன்பினையீந்து, இருக்கை ஏவி - (அச்சுக்கிரீவனை) அமருமாறு நியமித்து; அயலினிதிருத்தி என அடுத்த கவியோடு இயையும். ஏ அசை.

'குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி' யாதலின், சினம் கருணையாக மாறியது. சுக்கிரீவனைக் காணும் வரையில் அவன் பாற்கொண்டிருந்த சினம் இராமபிரானிடம் குடிகொண்டிருந்தது என்பது இங்குக் குறிக்கப்பட்டது என்க. நெடிது நேரம் ஆரத்தழுவினன் என்பார், நெடிது புல்லினன் என்றார். நெடிது, காலம் குறித்து நின்றது. மற்றும் நெடிது புல்லுதல் காடாலிங்கனமும். உயிருறத் தழுவுதலும் ஆம். வெகுளிபோ யொழிய என்னாது, ஒளிப்ப என்றது கருதத்தக்கது; முழுச்சினமும் தீர்தல் சுக்கிரீவனுடைய கூற்று முழுதும் செவிமடுத்த பின்னர் ஆகலின். சுக்கிரீவனோடு நட்புக் கொண்டு அவனுக்கு முடி சூட்டுமாறு செய்து உறவு கொண்ட காலம் என்பார் முன்பு போல் என்றார். மேற்கொள்ள வேண்டியதின்றித் தானே இயற்கையாகப் பொருந்திய தென்பார், 'ஈண்டிய கருணை' என்றார்; 'நட்பும் தயையும் கொடையும் பிறவிக்குணம்' (தனிப்பா) என்றது. காண்க; (ஒப்பு):

'ஈண்டிய தவத்தின் பாலார்' (பெரியபு. அப்பூதி. 1); ஒருசுவை மற்றொன்றை மாற்றியதற்கு இச் செய்யுள் மேற்கோள். இங்குக் கோபத்தைக் கருணை மாற்றியது.

பி - ம். 1. திண்டலு மார்பிடைத் திருவு ரோவுற; திண்டியவன்பனை, மார்பனை, மன்னனைத், மார்பிடைத்.

2. தடக்கையி னெடிது புல்லியே, புல்லினன்; யீண்டிய கருணையால்.

3. கருணைதர் தயவிருத்தினன், வந்திருக்கை யெய்தவே. திருக்கையெயவே. (124)

678. அயலினி திருத்திநின் னரசு மாணையும்
இயல்பினி னியைந்தவே யினிதின் வைகுமே
புயல்பொரு தடக்கைநீ புரக்கும் பல்லுயிர்
வெயிலில தேகுடை யெனவி னுயினன்.

(இராமபிரான்), அயல் இனிது இருத்தி - (சுக்கிரீவனை) அருகில் இனிதாக வீற்றிருக்கச் செய்து, (அவனை நோக்கி), 'நின் அரசும் ஆணையும் - உன் ஆட்சியும் ஆணையும், இயல்பினின் இயைந்தவே - ஒருவகை இடருமின்றி நூல்கள் சொல்லிய இயல்பால் இயற்கையாக அமைந்துள்ளனவா ? புயல் பொரு தட கை நீ புரக்கும் பல் உயிர் - மேகம்போன்ற (கைம்மாறு கருதாது கொடுக்கவல்ல) நீண்ட கைகளையுடைய உன்னாற் காக்கப்படுகின்ற பல வுயிர்களும், இனிதின் வைகுமே - இன்பமாக வாழ்ந்து வருகின்றனவா? குடை - உனது கொற்றக்குடை, வெயில் இலதே - வெம்மையை விளைக்காமல் உள்ளதா', என வினுயினன் - என்று கேட்டான்.

'உறங்கு மாயினும் மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்' (சீவக. 248) என்றும், 'வேந்தன் உறங்கும் போதும் தன்னருளாணை யுலகெங்கும் அறங்குன்றுவாக்காப்பது' (திருவிளை; பழியஞ்சின. 18) என்றும் கூறப்படுதலாலும், அரசும் ஆணையும் இயல்பினி னியைந்தவே' என்றான். 'இயல்புளிக்கோலோச்சு மன்னவனாட்ட பெயலும் விளையுளும் தொக்கு' (குறள். 545) என்றாராகலின், அரசியல் நூல்களிற் சொல்லப்பட்ட முறைப்படி என்று கொள்க. அரசன் ஆணை எங்கும் பரவி நிற்பினும், ஆணையாளர் வழுவக்கூடுமாதலினாலும், 'மாநிலங்காவலனாவான் மன்னுயிர் காக்கும் காலைத் தானதனுக்கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால் ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால் ஆனபயம் ஐந்தும் தீர்த்து அறங்காப்பான்'

ஆகலானும், 'இனிதின் வைகுமே' என்ருன். 'ஈந்தே கடந்தா னிரப்போர் கடல்' என்று தயரதனைப் புகழ்ந்த கம்பர், இங்கும் சுக்கிரீவனைப் புயல்பொரு தடக்கையன் என்ருர். அவன் கீழ்க்குடிகள் அவனது தண்ணிய குடையின் கீழ் இனிது வாழ்கின்றனரா என்பான், 'பல்லுயிர் வெயிலலதே' என்ருன். 'நின் விண்பொரு வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்ரோ வன்றே வருந்திய, குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ' (புறநா. 35): என்றது இங்கே கருதத்தகும். 'அலங்காரமென வுலகுக் கழுதளிக்கும் தனிக்குடையாய்' (ஆரணிய. 198): என்று சடாயு தயரதனுக்கிரங்கியதும் காண்க. 'மன்னனுயிர்த்தே மலர் தலை யுலகம்' (புறநா. 186) என்பதை மாற்றி, 'உயிரெலாம் உறைவதோர் உடம்புமாயினுன்' (பால. அரசியல் 10) என்று கம்பர் தயரதனைப் புகழ்ந்ததும் இங்கே கருதத்தகும். வெயில் - தாபத்திற்கு இலக்கணை.

பி - ம். 1. அயலினிதிருத்தின னரசுமாணையும், அரசு மாண்மையும்.

2. இசைந்தயே, இயைபினிலியைந்தயோ, இயல்பின விசைக்கவே, இயல்பென யினிது வைகுமே; யினிது வைகவே, இயல்பினி லிருந்தவோ.

3. தடக்கையாய் புரக்கும்.

4. வெயிலிலவோ, வெயிலில வோகுடை, வெயிலில வெண்குடை.

சுக்கிரீவன் விடை

679. பொருளுடை யவ்வுரை கேட்ட போழ்துவான்
உருளுடைத் தேரினன் புதல்வ னூழியாய்
இருளுடை யுலகினுக் கிரவி யன்னநின்
அருளுடை யேற்கவை யரிய வோவென்ருன்.

பொருள் உடை அ உரை கேட்டபோழ்து - அரிய பொருள் பொருந்திய (இராமபிரானுடைய) வார்த்தையைக் கேட்ட வளவில்; வான் உருள் உடை தேரினன் புதல்வன் - விண்ணில் செல்கின்ற ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரினை உடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவன், (இராமபிரானைப் பார்த்து), 'ஊழியாய் - ஊழிக்காலத்தும் அழியாது நிலைப்பவனே! இருள் உடை உலகினுக்கு இரவி அன்ன-(ஊழி யிறுதியில் கவிந்து கொள்ளுகின்ற) இருளையுடைய புவனத்திற்குக் கதிரவன் போன்ற, நின் அருளுடையேற்கு - உனது அருளையடையப் பெற்ற எனக்கு, அவை அரியவோ - அச்செயல் அருமையோ ?' என்ருன் - என்று மொழிந்தான்.

அரசியற் குரிய யாவு மாற்றுழி யாற்றி' (422) என்று சுக்கிரீவ னிடம் நேர் முகமாகவும், 'ஆன்றவற் குரியதாய வரசினை நிறுவி' (428) என்றும், 'அன்னவ னரசுக்கேற்ற தாற்றுதி' (425): என்று அநுமானை நோக்கியும், இராமபிரான் கூறியன இங்கே குறிக்கொள்ளத்தக்கன: உருள் - ஒற்றைச்சக்கரம்; 'ஓராழித் தேருங்கண்ட' (756) 'வானத் துருளுறு தேரிஞனும்' (உயுத்த. விபீடண. 127); 'தேரிற்றிரி செங்கதிர்' (ஆரணிய. 82) என்பன காண்க. இருளுடையுலகம்,-'இருளுடை யுலகந் தாங்கு மின்னலுக் கியைந்து நின்ருன்' (அயோத்தி. கைகேசி 109); 'இருளுடை வைகலேம் இரவி யெய்திஞய்' (ஆரணிய. 133). 'நின் அருளுடை யேற்கவை யரியவோ' என்றதிலிருந்து சுக்கிரீவன் இராம பிரானிடம் கொண்ட பத்தியும் நயம்படவுரைக்கும் ஆற்றலும் தெளி வாம். அரியவோ என்பதில் ஓகாரம் எதிர்மறை; அரியதன்று என்ற பொருளைத் தந்தது.

பி - ம். 1. பொருளுறு மவ்வுரை, மிவ்வுரை; கேட்ட, கேட்டுப், போழ் தினில், போழ்தத்து; போதினில், போதிலோர்.
2. தேரிஞேன், உருளுறுந் தேரவன் சிறுவ ஞேதயான்; வழியின்.
4. யரியவேரவெறு. (126)

சுக்கிரீவன் தன்பிழையை எடுத்துக் கூறுதல்

680. பின்னரும் விளம்புவான் பேதை யேனுன
தின்னரு ளுதவிய செல்வ மெய்தினேன்
மன்னவ நின்பணி மறுத்து வைகியென்
புன்னிலைக் குரக்கியல் புதுக்கி னேனென்ருன்.

பின்னரும் விளம்புவான் - (சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), மறுபடியும் சொல்லுவான்; 'மன்னவ - அரசே! பேதையேன் - அறிவிலி யாகிய யான், உனது இன் அருள் உதவிய செல்வம் எய்தினேன் - உனது நல்ல அருளினுல் கிடைக்கப்பெற்ற செல்வத்தை அடைந்தேன்; (அங்ஙனம் பெற்றிருந்தும்), நின் பணி மறுத்து வைகி-உனது ஆணையை மீறி ஒழுகி, என் புல் நிலை குரங்கு இயல் புதுக்கினேன் - எனது அற்ப மான நிலைமையினை யுடைய குரங்குப் பண்பினைப் புதிதாகக் காட்டிவிட் டேன்,' என்ருன் - என்று கூறிஞன்.

செய்ந்நன்றி மறந்ததாகக் கருதப்படும் தன்னுடைய அறியாமை யால் எழுந்த செயலுக்குச் சுக்கிரீவன் இரங்குகின்ருன். புல் நிலை குரங்கு

(ஒப்பு) : 'புன்றொழிற் குரங்கொடு புணரும் நட்பெனோ, (260)
சுந்தர. 755 ; 864 ; 891 ; 932 ; 933 ; 934 ; 985.

பி - ம். 1. பெருமையோய்நினை.
2. மெய்நியே, மெய்நியான், மேவியே.
3. மன்னரின் பணியையும் மறந்து; வைகியே, வைகினேன், வைகியென்.
4. புன்னியல்; குரங்கியல்; புதுக்கி னேனென. (127)

681. பெருந்திசை யனைத்தையும் பிசைந்து நேடியான்
தருந்தகை யமைந்துமத் தன்மை செய்திலேன்
திருந்திழை திறத்தினுற் றெளிந்த சிந்தைநீ
வருந்தினை யிருப்பயான் வாழ்வின் வைகினேன்.

(பின்னும் சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), 'பெருந்திசை அனைத்தையும் யான் பிசைந்து நேடி-பெரியதிக்குகள் யாவையும் யான் துருவித் தேடி, தரும் - (பிராட்டியைக்) கொணர்ந்து தரவல்ல, தகை - திறமை, அமைந்தும் - (என்பால்) இருந்தும், அ தன்மை செய்திலேன்-அங்ஙனம் புரியாதவனாய், திருந்து இழை திறத்தினால் - வேலைப்பாடமைந்த அணிகளை அணிந்தவளான பிராட்டியின் பொருட்டு, தெளிந்த சிந்தை நீ வருந்தினை இருப்ப - இயல்பாகவே கலக்க மற்றுத் தெளிந்த உள்ள முடைய நீ வருந்தி நிற்ப, (அதனைச் சிறிதும் எண்ணாமல்), யான் - நான். வாழ்வில் வைகினேன் - இன்பவாழ்க்கையில் நாளைப் போக்கினேன்.

கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்பன பெருந்திசைகள்; தென் கிழக்கு தென்மேற்கு வடகிழக்கு வடமேற்கு என்பன கோணத் திசைகள் என்பர்; ஆராய்ந்து துருவித்தேடித்தரும் வன்மை யென்பான் பிசைந்து தேடி யென்றான். திருந்திழை - பிராட்டி; அன்மொழித் தொகை. குரக்கியல் புதுக்கினேன் என்றான் முன்பாட்டில்; அதே கருத்தை இங்கு விரித்துக் கூறுகின்றான். மூன்றாமடி முற்றுமோனை. 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்ட மாட்டேன், நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்கமாட்டேன், கேட்டிலேனின்று கண்டுங் கிளிமொழி மாதரானை, மீட்டிலேன் றலைகள் பத்தும் கொணர்ந்திலேன் வெறுங்கை வந்தேன்' (உயுத்த. மகுடபங்க. 40), 'என்பகை தீர்த்தென்னாவி யரசொடு மெமக்குத்தந்த, வுன்பகை யுனக்குத்தந்தே னுயிர்சுமந் துழலாநின்றேன்' (உயுத்த. மகுடபங்க. 41); 'அம்புக்கு முன்னஞ் சென்று னரும் பகை முடிப்ப லென்று, வெம்புற்ற மனமும் யானுந் தீதின்றி மீள வந்தேன்' (உயுத்த. மகுடபங்க. 42); 'வால்வலி காட்டிப் போந்த வளாகர் புக்கு

மற்றென் கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக் கவதி யுண்டோ (உயுத்த. மகுடபங்க. 43) என்ற சுக்கிரீவன் பிற கூற்றுக்களும், 'பார்கு லாஞ் செல்வ நின்னை யங்ஙனம் பார்த்த கண்ணை, யீர்கிலாக் கள்வ னேன் யான்' (அயோத்தி. கங்கைப் 44) என்ற குகன் கூற்றும் இங்கே ஒப்பு நோக்கத்தகுவன.

பி - ம். 1. *தேடிநின், நேடினேன், தேடினென், தேடியாள், தேடினன்.*
2. *யமையுமத், யமைத்தமத்; தன்மை செய்திலேன், தகைமை பெற்றிலேன், அருந்தணைத் தேவியை யறிய விற்றிலேன்.*
3. *திறத்தினிற் றெரிந்த சிந்தைநீ.*
4. *யிருக்கயான், யிருக்கநான்.* (128)

682. இனையன யானுடை யியல்பு மெண்ணமும்
நினைவுமென் றுலினி நின்றி யான்செயும்
வினையுநல் லாண்மையு விளம்ப வேண்டுமோ
வனைகழல் வரிசிலை வள்ளி யோயென்றான்.

'வனைகழல் வரிசிலை வள்ளியோய் - நல்ல வேலைப்பாடமைந்த வீரகண்டையும் கட்டமைந்த வில்லையுமுடைய வள்ளலே! யான் உடை- என்னிடமுள்ள, இயல்பும் - தன்மையும், எண்ணமும் - கருத்தும், நினைவும் - (என்) மனத் தெண்ணங்களும், இனையன என்றால் - இத் தன்மையனவானால், இனியான் நின்று செயும் - இனிமேல் நான் துணையாக நின்று புரியவிருக்கின்ற, வினையும் - தொழிலையும், நல் ஆண்மையும் - சிறந்த வீரத்தையும், விளம்ப வேண்டுமோ - சொல்லத் தேவையோ?' என்றான் - என்று (இராமபிரானை நோக்கிச் சுக்கிரீவன்) சொன்னான்.

இனையன என்றது, மேலே 679 முதல் 682 முடிய உள்ள பாட்டுக்களில், சுக்கிரீவன் விநயமாகக் கூறிய வார்த்தைகளைக் குறித்து நின்றது. இராமபிரான் எண்ணப்படித் தான் ஒன்றும் அதுகாறும் ஆற்றாமைக்கு வருந்திச் சுக்கிரீவன் நாணத்துடன் கூறுகின்றான். ஒரு தவியும் தான் செய்யாதிருந்த போதும், தனது பகையைப் போக்கி, மனைவியைத் தன்னிடம் சேர்த்து, அரச போகத்தையும் அளித்த கருணை நோக்கிச் சுக்கிரீவன் இராமபிரானை, 'வள்ளியோய்' என்றான். அஃது 'செய்யாமற் செய்தவுதவியாகும்'; இத்தொடர்க்கு, 'தனக்கு முன்னொருதவி செய்யாதிருக்க ஒருவன் பிறருக்குச் செய்த உதவிக்கு' எனப் பரிமேலழகர் உரை கூறுதல் காண்க. மதுவுண்டு களிக்கும் குரங் குச் சுபாவமும், போகத்திலேயே ஆழ்ந்துகிடக்கும் எண்ணமும், பிரதி

யுதவி செய்தற்கு விரையாத நினைவும் என்பான், இயல்பும் எண்ண மும் நினைவும் என்றான். 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' (குறள். 65) என்றபடி, எண்ணங்களின் உயர்வைப் பொறுத்தவைதாமே மேல் நிகழ்த்தப்பெறும் ஆண்மைச் செயல்கள்; அவ்வாறிருக்க, மடிமையும், களிப்பும், செய்நன்றி போற்றாமையும் என்ற இம்மூன்றும் தன்னிடம் குடிகொண்டிருந்தமையின் இவ்வாறு கூறப்பட்டது. தன் தவற்றினை யுணர்ந்தமை கொண்டே சுக்கிரீவனுடைய தூய உள்ளம் நன்கு புலப் படும். வனைகழல் - வினைத்தொகை.

பி - ம். 1. வென்றுவட.
2. நினையவு; நினையு, மரிதபின்; னெறிநின் றார்க்கெலாம்; நின்று நான்செயும்.
4. வார்சிலை. (129)

இராமபிரான் வார்த்தை

683. திருவுறை மார்பனுந் தீர்ந்த தேயும்வந்
தொருவருங் காலமுன் னுரிமை யோருரை
தருவினைத் தாகையிற் றாழ்விற் றாகுமோ
பரதனீ யினையன பகர்தியோ வென்றான்.

திருவுறை மார்பனும் - திருமகள் வாசம் பண்ணும் திருமார்பை யுடையவனான இராமபிரானும், 'ஒருவு அரு காலம் - எளிதில் கழியாத கார்காலம், வந்து தீர்ந்ததேயும்-வந்து சென்றதாகவும், உன் உரிமை ஓர் உரை - உன்னுடைய கடமையை யுணர்ந்து பேசுகின்ற சொற்கள், தரு வினைத்து ஆகையின் - (பிராட்டியைத் தேடித்) தருகின்ற தொழிலைத் தன்னிடம் கொண்டுள்ளமையால், தாழ்விற்று ஆகுமோ - இழிவான தன்மையைச் சார்ந்ததாகுமோ? பரதன் நீ - பரதன் போன்று (என்பால் அன்புடைய நீ), இனையன பகர்தியோ - இத்தன்மையான வார்த்தை களைச் சொல்லத்தகுமா?' என்றான் - என்று சுக்கிரீவனை நோக்கிக்) கூறினான்.

முன் பாட்டில் வினை வேறு சொல் வேறுபட்டதாக மனம் நொந்து கூறிய சுக்கிரீவனைத் தேற்றுவானாகி இராமபிரான், கடமையுணர்ந்து பேசுகின்ற அவனது சொற்களே மேல் அவன் நிகழ்த்த விருக்கும் உபகாரச் செயலாகிய பிராட்டியைத் தேடிவருவதைக் குறித்து நின்றன வாகலின், அவை மிகவும் பாராட்டற் குரியன என்று பகர்ந்து, சுக்கிரீவ னைப் பரதன் போன்ற அன்புடைய சகோதரனாக அரவணைத்துப் பேசுகின் றான். இங்கே இராமபிரானுடைய பரந்த கருணையும் பிறர் குற்றங்

களைப் பொறுத்தாற்றும் பண்பும் நன்கு காணலாம், காலந்தாழ்த்த போதிலும் கடமையுணர்ச்சி நீங்கிற்றின்ருகலான் அவன் ஆற்றவேண் டியசெயலை ஆற்றக்கூடும் என்று நினைந்து, இராமபிரான் அவனைத் தேற் றினன் என்க. உன் உரிமையார் உரை தருவினைத்து ஆகலின்- இது நீ செய்து முடிக்கும் செயலில்லை; உன் ஏவலாளர் உரைகொண்டு நீ செய்யக் கூடியது ஆதலால். சுக்கிரீவனுடைய இராமபக்தி முன்னர், 'நாமவேல் புண்ணியற் றெழுகழற் பரதன் போன்றனன்' (675) என்ற தொடர் கொண்டும் காண்க. இனி, 'முன் உரிமை யோருரை தரு வினைத் தாகையின் தாழ்வித் தாகுமோ' எனப்பாடங் கொண்டு, முன்னர் நூல்களின் உரிமை யுடைய பெரியோர்களின் உரைப்படி ஒருவர் செயல் அதன் பயனைத் தந்தே தீரும் ஊழ்வினையின் வயப்பட்டது என்று இருத் தலின், 'இந்தக் காலம் தாழ்த்தமை உன் செயலன்று, விதியின் பயன் அதுபற்றி வருந்த வேண்டாம்' என்று சுக்கிரீவனைத் தேற்றியதாகவும் கூறுவர். 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்' (குறள். 380); 'விதியின் பயனீ யிதற்கென்னை வெகுண்ட தென்ருன்' என்ற தொடர்கள் இங்கே குறிக்கொள்ளத் தக்கன. 'வரிசிலை வள்ளியோய்' என்று போர்வீரத்தையும் கொடை வீரத்தை யும் ஒருங்கே கூறிப் புகழ்ந்தார்.

பி - ம். 1. திருமனுஞ் செப்புவான்; றெளிந்த தேனுமொன், றெளிந்த தேருமுன், தீர்ந்ததோ வியன், வியண், யர்த, வுயர்து.
2. உரிய போரது, உரிமைப் போரது, னிருமை யோருரை; உரியவிக் காலமற் றன்றி மூன்னுரை.
3. தரும்வினைத்; றமுவிற் ருதியோய், றமுவிற் ருகுமோ, தமுவிச் சாருமோ.
4. பகர்தற் பாலையோ. (130)

இராமபிரான் அநுமனைப்பற்றிவினவியதும் சுக்கிரீவனதுவிடையும்

684. ஆரியன் பின்னரு மமைந்து நன்குணர்
மாருதி யெவ்வழி மருவி னுனெனச்
சூரியன் கான்முளை தோன்று மாலவன்
நீரிரும் பரவையி னெடிய சேனையான்.

ஆரியன் - இராமபிரான், பின்னரும் அமைந்து - மீட்டும் (சில மொழிகள் கூறத்) தொடங்கி, (சுக்கிரீவனைப் பார்த்து), 'நன்கு உணர் மாருதி எவ்வழி மருவினன் என - (முக்காலமும்) நன்கு அறியவல்ல

காற்றின் மகனுன அநுமான் எங்கிருக்கின்ருன் ?' என்று கேட்க, (அதற்கு விடையாக) சூரியன் கான்முளை - சூரியன் புதல்வனுன சுக்கி ரீவன், 'அவன் - அந்த அநுமான், நீர் இரும் பரவையின் நெடிய சேனையான் - நீர் நிறைந்த பெரிய கடல் போன்ற பரந்த சேனையை யுடையவனுய், தோன்றும் - வந்து சேருவான்'.

'வேத மொத்தனன் மாருதி' உயுத்த. ஒற்றுக். 221. நன்குணர் மாருதி : 'நன்றுணர் வுரையுந் தூயன் நவையிலன்' (சுந்தர. 514.); 'அறிவனை நோக்கினுன் அறிவின் மேலுளான் (உயுத்த. விபீடணன் 86). பரவை பரந்திருத்தலின் கடலுக்குச் காரணக்குறி. ஆல் - ஈற்றசை.

பி - ம். 1. ஆரிய னிம்மொழி; யயற்கறைந்தபின், மமையான்குணர்.

3. மால்வரை.

4. சேர்வரு பரவையி, சேர்பெறு சேனை கொண்டணையு நேர்மையே.

685. கோடியோ ராயிரங் குறித்த தூதுவர்
ஓடி நெடும்படை கொணர லுற்றதால்
நாடரக் குறித்தது மின்று நாளையவ்
வாடலந் தானையோ டவனு மெய்துமால்

'ஓர் ஆயிரம் கோடி குறித்த தூதுவர் - ஓராயிரங் கோடியாகக் கணக்கிடப்பட்ட தூதர்கள், நெடுபடை கொணரல் ஓடினர் - பெரிய வானர சேனையைத் திரட்டிக்கொண்டு வரும் பொருட்டுச் செய்தி சொல்லி) விரைந்து சென்றனர்; (இது வரையில் வானரப் படைகள் வராததனுல், அவைகளைத் தொகுத்துக் கொண்டு வருவதற்காக அநு மான் காத்திருக்கின்ருன்), தர குறித்தது நாளும் உற்றது - (அவ்வாறு) கொணர்தற்குக் குறிக்கப்பட்ட அவதி நாளும் வந்து விட்டது. ஆல் - ஆதலால், இன்று நாளை - இன்றைக்கு அல்லது நாளைக்கு, அ ஆடல் அம் தானையோடு அவனும் எய்தும் - அந்த வலிமை வாய்ந்த குரங்குப் படையொடு அவ்வநுமனும் இங்கே வருவான்'. (என்ருன் என்க). ஆல் - ஈற்றசை.

முன்செய்யுட்கண் பரவைபோன்ற சேனை என்ருர்; அதன் விரிந்த தன்மை ஆயிரங்கோடி தூதுவர் என்றதனுல் அறியலாம். அடல்-வலி, ஆடல் என நீண்டது. 'இன்று நாளை' 'இன்று நாளையிடை காணலாம்'. (உயுத்த. நாகபாச. 74).

பி - ம். 1. கோடிநா ருயிரம்; கோடி யுண்டுடன், குறித்த தூதர்கள்; குறித்தத் தூதவர்; கோடி யென்னுடன் நேடின நெடும்படை.
2. லுற்றதால், லுற்றனர், வொல்லியினுற்றனர், யுணர்ந்த நாணின்ற, யுற்றதன்.
3. இன்றும் நாளையும், 4. டனும னெய்துமால். (132)

இஃது ஓர் பிரதியில் இல்லை. இவ்விடத்து ஓர் அதிகப் பாடல் சில சுவடிகளில் காணப்படுகிறது

ஒன்பதி னுயிர கோடி யுற்றது
நின்பெருஞ் சேனையந் நெடிய சேனைக்கு
நன்குறு மவதிநா ளுளே நண்ணிய
பின்செயத் தக்கது பேசற் பாற்றென்ருன்.

இராமபிரான் சுக்கிரீவனைச்சேனையுடன் வருமாறு அனுப்புதல்

686. விரும்பிய விராமனும் வீர நிற்கதோர்
அரும்பொரு ளாகுமோ வமைதி நன்றெனப்
பெரும்பக லிறந்தது பெயர்தி நின்படை
பொருந்துழி வாவெனத் தொழுது போயினுன்.

விரும்பிய இராமனும் - (சுக்கிரீவனிடம்) விருப்பங் கொண்ட இராமபிரானும், (அவனை நோக்கி), 'வீர - வீரனே ! நிற்கு அது ஓர் அரும்பொருள் ஆகுமோ - உனக்குச் சேனையைத் தொகுத்து எடுத்த காரியத்தை முடித்தலாகிய) அச்செயல் அருமையான தொன்ருமா? அமைதி நன்று - உனது (மனவடக்கம்) சிறந்ததாக உள்ளது', எனு - என்று சொல்லி, (அதன்பின்னர்), 'பெரும் பகல் இறந்தது - நீண்டபகற் பொழுதோ முடிவடைந்தது ; (ஆகவே) பெயர்தி - புறப்பட்டுச் சென்று, நின்படை பொருந்துழி வா-உனது சேனை ஒன்று கூடிவந்த போது (அவற் றுடன்) வருவாயாக' என - என்று, இராமபிரான் விடையளிக்க, தொழுது - அப்பிரானை வணங்கி, போயினுன் - (சுக்கிரீவன்) சென்ருன்.

பி - ம். 1. விருமபியன் விராமனும. வீரனும்.
2. நன்றெனப்.
4. யிருந்துழி ; யெனவவன், (133)

இராமபிரான் அங்கதனையும் விடைகொடுத்தனுப்புதல்

687. அங்கதற் கினியன வருளி யையபோய்த்
தங்குதி யுந்தையோ டென்று தாமரைச்
செங்கணன் றம்பியுந் தானுஞ் சிந்தையின்
மங்கையு மவ்வழி யன்று வைகினன்.

தாமரை செங்கணன் - செந்தாமரை மலர்போன்ற சிவந்த விழிகளையுடைய இராமபிரான், அங்கதற்கு இனியன அருளி - அங்கதனுக்கு இனிமை செய்யும் சொற்களைச் சொல்லி, 'ஐய போய் உந்தையோடு தங்குதி - ஐயா! (நீ) போய் உனது தந்தையாகிய சுக்கிரீவனோடு இருப்பாயாக', என்று - என்று விடை தந்தனுப்பி, தம்பியும் - தம்பியாகிய இலக்குவனும், சிந்தையின் மங்கையும் - (எப்பொழுதும்) தன் உள்ளத்தே வீற்றிருக்கும் சீதாப்பிராட்டியும், தானும் - தானுமாக, அன்று - அவ்விரவில், அவ்வழி - அவ்விடத்தில், வைகினன் - தங்கியிருந்தான்.

தங்குதி யுந்தையோடு - 424, 569, 630, 639, இவற்றைப் பார்க்க. என்றும் இராமபிரானுடைய இதயம் விட்டகலாமையின் சிந்தையின் மங்கை என்றான் ; (ஒப்பு) : 'தனியுந் தானுமத் தையலுமாயினான்' (பால. மிதிலைக். 139); 'தம்பியும் சிந்தையின் மங்கையும் தானும் வைகினன்' தலைமைபற்றி வந்த இடவழுவமைதி. 'தானும் தேரும் பாகனு முண்டென் நலம் வெளவி' என்றவிடத்துப்போல.

பி - ம். 1. இனியவை; யையசீ; வெய்தினிர்.
2. சிந்தையின்.
4. யன்று வையினர்; மங்கைதன் திறத்தினில் மயக்கி வைகினன்.

இங்கு 'கிட்கிந்தைப் படலம் முற்றும்' என்று பல பிரதிகளில் எழுதப்பட்டுளது. இப்படலத்தின் இறுதிப் பாடலாகப் பின் வரும் அதிகப்பாடல் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

சேயுயர் கீர்த்தியான் கதிரின் செம்மல்பாற்
போயது மவ்வயிற் புகுந்த யாவையும்
ஓய்வுரு துணர்த்தென வுணர்த்தி னனரோ
வாய்மையா வுணர்வுறு வலிய மொய்ம்பினன். (134)

688. அன்றவ ணிறுத்தன னலரி கீட்டிசைப்
பொன்றிணி நெடுவரை பொலிவு ருதமுன்
வன்றிறற் றூதுவர் கூவ வாநரக்
குன்றுறழ் நெடும்படை யடைந்த கூறுவாம்.

அன்று அவண் இறுத்தனன் - அற்றை இரவு முழுவதும் இராம பிரான் அவ்விடத்திலேயே (மாலியவான் மலையில்) தங்கியிருந்தான்; அலரி கீழ்திசை பொன் திணி நெடுவரை - சூரியன் கிழக்குத் திக்கில் உள்ள பொன் மயமான பெரிய உதயகிரியில், பொலிவு உருத முன் - விளங்கித் தோன்று முன்பு, வல் திறல் தூதுவர் கூவ - மிக்க வன்மை வாய்ந்த தூதுவர் வந்து அழைக்க, குன்று உறழ் வானரம் நெடு படை அடைந்தது - மலை நிகர்த்த நீடிய குரக்குச் சேனை வந்து கூடிய விதத்தை, கூறுவாம் - இனிச் சொல்லுவோம்.

இது கவிக்கூற்று. அலரி - சூரியன். பரந்த கிரணங்களை யுடையது என்பது காரணக்குறி; பால. மிதிலைக்காட்சி. 110; குமரகுரு. மீனாட்சி பிள்ளைத். 13. கிழக்கு + திசை-கீட்டிசை; நன். 185. தூதுவர் கூவ என்றது, அநுமனால் விடுக்கப்பட்ட தூதரைக் குறித் தது. 'போயின தூதரிற் புகுந்த சேனையை', 668; 'கோடியொ ராயிரம் குறித்த தூதுவர், ஓடினர் நெடும்படை கொணர'; 685. 'வேறுவேறு உலக மெங்கும் தூதரை விடுத்த' 606; 'ஆயிர கோடி தூதர் அரிக்கண மழைப்ப வானை போயினர்' 607 என்பன காண்க. அன்றி வந்து கூடிய சேனை அணிவகுக்கப்பட்டு நிற்க, சுக்கிரீவன் கட்டளையால் சென்ற தூதுவர் எனலுமாம்.

பி - ம். 1. *அன்றவ ணிறுத்தபின், னிறுத்தின; அன்றுவே றுறைந்தனர், அன்றவன் வானரச் சேனை யாவையும், கீழ்த்திசை.*
2. *பொன்றிணி, வென்றிகொ டலைவரும், புறத்துப் போந்தபின்.*
3. *கொணர வானரச்.*
4. *குன்றுக ளொருவழிக் கூடினலென.*

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை. (135)

இச் செய்யுள் கிட்கிந்தைப் படலத்தின் இறுதிச் செய்யுளாகச் சில பிரதிகளில் காணப்படுகிறது. இதன்பின் சில பிரதிகளில் பின்வரும் அதிகப் பாடல்கள் காணப்படுகின்றன.

அன்றவண் வானரச் சேனை யாவையும்
வென்றிகொ டலைவரும் எண்கின் வீரரும்
குன்றுக ளொருவழிக் கூடி னாலென
வன்றிற லிராமனை வழுத்தி வந்தவே.

இன்ன தாகிய திறத்தவ ரிருக்கமுன் போகச்
சொன்ன ஆயிர கோடியிற் றூதர்தந் திறத்தால்
பன்ன வாறிரு வெள்ளமாம் கவிப்படை பயிலப்
பொன்னின் வார்கழ லிடபனக் கிட்கிந்தை புகுந்தான்.

தாம ரைப்பெருந் தவிசுறை சதுமுகக் கடவுள்
ஓம வங்கியில் உதித்தன உலப்பில கோடி
ஆமெ னப்புகல் வானரத் தானையங் கணித்தர
மாவ யப்புயத் தெறுழ்வலி மயிந்தன்வந் தடைந்தான்.

கங்கை சூடிதன் கருணைபெற் றுடைய முன்வாலி
பொங்கு மாணையின் எண்டிசைப் பொருப்பினும் பொலியத்
தங்கி வாழ்கவித் தானையங் காறைந்து கோடி
வங்க வேலையிற் பரந்திட வசந்தன்வந் தடைந்தான்.

## இப்படலத்தை யொட்டி வான்மீகம் கூறுவது.

சரற்காலம் வந்தவுடன், அநுமான் சுக்கிரீவனை அணுகி, எந்தப் புண்ணிய புருஷனுடைய உதவியால் அரசும் புகழும் கிடைத்தனவோ, அந்தப் பெருமானுக்கு வாக்களித்தபடி பிரதி யுதவி புரிய வேண்டும் என்றும், ஏற்கனவே காலம் தாழ்க்கப்பட்ட தென்றும், இராமபிரான் ஒருவரை அனுப்பி நினைவூட்டுவதன் முன்னரே, பிராட்டியைத் தேடும் விஷயத்தில் முனைதல் நலம் என்றும் கூறினான். சுக்கிரீவனும் இணங்கி, நீலன் என்ற வானர வீரனைச் சேனைகளைத் திரட்டிவரும்படி ஏவினான். இந்நிலையில் சீதாபிராட்டியைப் பிரிந்து வருந்திய இராம பிரான், சுக்கிரீவனுடைய் அலட்சியத்தையும், செய்ந்நன்றி கொன்ற தையும் நினைந்து வெகுண்டு இலக்குவனைக் கிட்கிந்தைக்கு அனுப்பு கிறான். இலக்குவனும் சுக்கிரீவன் முதலானவர்களைக் கொன்று வருவதாகக் கூற, இராமபிரான் அச் செயலின் தகுதி யின்மையை விளக்கி, இதமான வார்த்தைகளையே வானரேந்திரனிடம் பேசுமாறு பணிக்கின்றான். இலக்குவன் வீராவேசம் கொண்டு புகவே நகர் அல்லோல கல்லோலப் படுகிறது. வானர வீரர்கள் தங்களைப் பாது காத்துக்கொள்ள வேண்டிய முயற்சிகளில் ஈடுபடுகின்றனர். சிலர் சுக்கிரீவனிடம் சென்று இலக்குவன் வரவு கூறினர். ஆனால் தாரை யுடன் சுக்கிரீவன் கூடி யின்புற்ற நிலையில், அவர்கள் முறையீடு அவன் செவியில் விழவில்லை. இடை நடுவில் இலக்குவன் தன் வருகையைச் சுக்கிரீவனிடம் கூறுமாறு அங்கதனிடம் கூற,

அங்கதன் தந்தையிடம் தெரிவித்தான். தந்தையோ மதுமயக்கத்தால் அதனைச் செவியேற்கவில்லை. உடனே இரண்டு அமைச்சர்கள் சுக்கிரீவனிடம் சென்று, அவனை இலக்குவனிடம் சென்று பணிந்து வேண்டுவன புரியுமாறு வேண்டுகின்றனர். அப்பொழுது அநுமான் இராம இலக்குமணர்களுடைய ஆண்மையை எடுத்துச் சொல்லிச் சுக்கிரீவனை ஆவன செய்யுமாறு வேண்டுகின்றான். சுக்கிரீவன் சிறிது தெளிந்து தாரையை இலக்குவனிடம் அனுப்ப அவள் இளைய வீரனை அணுகுகின்றாள். இந்திரிய நிக்கிரகம் செய்தவனான இலக்குவன் அவளைப் பார்க்கவும் கூசி நிற்கின்றான். தாரை இலக்குவனுடைய சினத்தை மாற்றிச் சில சொற்கள் பகர, பின்னர் இருவரும் சுக்கிரீவ னிடம் செல்கின்றனர். இலக்குவன், செய்ந்நன்றி மறத்தலான் நிகழும் தீங்கினைச் சுக்கிரீவற் கெடுத்துக் காட்டுகின்றான். பின்னர் 'வாலி மாண்டு எந்த வழியாற் போனானோ அந்த வழி எங்கும் போய் விடவில்லை' என்று வானர மன்னனை அச்சுறுத்திப் பேசுகின்றான். தாரை சுக்கிரீவனுக்காகப் பரிந்து பேசிப் பின் இலக்குவனுடைய சீற்றத்தைத் தணிக்கின்றாள். சுக்கிரீவன் வானர வீரர்களை நான்கு திசைகளிலும் அனுப்புமாறு அநுமனிடம் கூற, வீரர்கள் புறப்படு கின்றனர். இந்நிலையில் சுக்கிரீவனும் இலக்குவனும் ஓர் பொற் சிவிகையேறி இராமபிரான் இருக்குமிடம் ஏகுகின்றனர். சுக்கிரீவன் வணங்க அவனுக்கு இருக்கையளித்து, இராமபிரான் அறிவுரைகளைக் கூறுகின்றனன். சுக்கிரீவனும் ஏராளமான வானர வீரர்களின் வரவை யறிவிக்க, இராமபிரான் மகிழ்ந்து நிற்கின்றனன்,

கிட்கிந்தைப் படலம் முற்றும்.

———

## 11. தானைகாண் படலம்

சுக்கிரீவன் திரட்டிய வாநரப் படையை இராம இலக்குவர் கண்ட செய்தியைக் கூறும் பாகம் என விரியும். இது வாநரத்தானை காண் படலம் என்றும் கூறப்படுகிறது.

சதவலி

689. ஆனை யாயிர மாயிரத் தெறுழ்வலி யமைந்த
வான ராதிப ராயிர ருடன்வர வகுத்த
கூனன் மாக்குரங் கையிரண் டாயிர கோடித்
தானை யோடுமச் சதவலி யென்பவன் சார்ந்தான்.

அ சத வலி என்பவன் - அந்தச் சதவலி யென்னும் வாநர வீரன், ஆயிரம் ஆயிரத்து ஆனை - பத்துலட்சம் யானைகளின், எறுழ்வலி அமைந்த - மிக்க வன்மையுடன் கூடிய, வாநர அதிபர் ஆயிரர் - குரங்குப் படைத்தலைவர் ஆயிரவர், உடன் வர - தன்னைப் பின்தொடர, வகுத்த - அணி வகுக்கப்பட்ட, கூனல் - முதுகுக் கூனலையுடைய, மா - பெரிய, ஐயிரண்டு ஆயிர கோடி குரங்கு தானையோடு - பதினாயிர கோடி வாநரச் சேனையுடன், வந்தான் - சுக்கிரீவனிடம் வந்தான்.

எறுழ் வலி - ஒருபொருட் பன்மொழியுமாம். எறுழ் வலிப் பொருவிறேள் (உயுத்த. மந்திரப். 87); வாநர + அதிபர் - வடமொழி, தீர்க்க சந்தி. வான்மீகத்தில் இப்பெயர் சதபலி என்று காணப்படுகிறது. சதவலி, ''இவன் சதவலியாய தக்கோன்'' (உயுத்த. இராவணன் றானை. 31). கூனன்மாக் குரங்கு; உயுத்த. மந்திரப். 63.

பா - ம். 1. ஆனை யாயிரங் கோடியி லெறுழ்வலிக் கமைந்த; அமைத்த.
2. வான ராதிய ருடன்கொண்டு தானவர்.
3. கூன மாக் குரங். (1)

சுசேடணன்

690. ஊன்றி மேருவை யெடுக்குறு மிடுக்கினுக் குரிய
தேன் றெரிந்துண்டு தெளிவுறு வானரச் சேனை
ஆன்ற பத்துநா றுயிர கோடியோ டமையத்
தோன்றி னான்வந்து சுசேடண னெனும்பெயர்த் தோன்றல்.

சுசேடணன் எனும் பெயர் தோன்றல் - சுசேடணன் என்னும் பெயர் பூண்ட பெரிய வீரன், மேருவை ஊன்றி எடுக்குறும் மிடுக்கி

லுக்கு உரிய - மேரு மலையையும் பறித்து எடுக்கும் வலிமை யுடையதும், தேன் தெரிந்து உண்டு தெளிவு உறு - மதுவை அள வறிந்து பருகியும் மயக்கமின்றித் தெளிவு பெற்றனவுமான, ஆன்ற வாநர சேனை, பத்து நூறுயிர கோடி யோடு - உயர்ந்த பத்துலக்ஷம் கோடி குரக்குச் சேனையுடனே, அமைய - பொருந்த, வந்து தோன்றினான் - வந்து சேர்ந்தான்.

மிடுக்கு - வலிமை. 'நீணிலா வலைக்கு நீங்கு மிடுக்கிலள்' (ஆரணிய. 294); 'மிடுக்கிலாதானை வீமனே யென்று' (தேவா. 647, 2). சுடேணனை வாலியின் மனைவியாகிய தாரைக்குத் தந்தை யென்றும் வருணதேவனுடைய குமாரன் என்றும் கூறுவர்; சுசேடணன்; 'எதிரே தோன்றுகின்றவன் சுசேடணன்' (உயுத்த. இராவணன்றானை. 32). 'தேன் தெரிந்து' நல்ல தேனை ஆராய்ந்து என்றுமாம். தோன்றல் - நல்ல தோற்றமுடையவன் என்று காரணக்குறி; ஆண் பாற் சிறப்புப் பெயர். சதவலி, சுசேடணன் என்ற பெயர்கள் முதனூலிலும் காணப்படுகின்றன.

பி - ம். 1. *எடுக்கினு மிடுக்கின; மிடுக்கினுக்; குரியன.*

2. *தேன் தெரிந்தனர், தெரிந்துண்டு; தேன் திரிந்துண்டு; தெரிவுறும்; தெளியுறும்.*

3. *கோடி கொண்.*

4. *னென்னுமத் தோன்றல்.* (2)

உருமையின் தந்தைவரவு

691. ஈறில் வேலையை யிமைப்புறு மெல்லையிற் கலக்கிச்
சேறு காண்குறுந் திறல்கெழு வாநரச் சேனை
ஆறெ ணுயிர கோடிய துடன்வர வமுதின்
மாறி லாமொழி யுருமையைப் பயந்தவன் வந்தான்.

ஈறு இல் வேலையை - முடிவு காணுதற்கரிய கடலையும், இமைப் புறும் எல்லையில் - கண்ணிமைப் போழ்திற்குள், கலக்கிச் சேறு காண் குறும் - உழக்கிச் சேருக்கவல்ல, மாறு இலா அமுதின் மொழி - இணையற்ற அமுதம் போன்ற (இனிய) சொற்களையுடைய, உருமையை பயந்தவன் - (சுக்கிரீவனுடைய மனைவியான) உருமையைப் பெற்றவன், திறல்கெழுவாநர சேனை ஆறு எணுயிர கோடி அது - வலிமை செறிந்த நாற்பத் தெண்ணுயிரம் கோடி, குரங்குப்படை உடன்வர தன்னைத் தொடர்ந்துவர, வந்தான் - வந்து சேர்ந்தான்.

உருமையைப் பெற்ற தந்தை தாரன் எனப்படுவான். இவன் தேவ குருவாகிய வியாழனின் புதல்வன் என்பர். இமைப்புறும் எல்லை ஒரு மாத்திரை அளவு. 'கண்ணிமை கைந்நொடி யவ்வே மாத்திரை' (தொல். எழுத்து): கலக்கிச் சேறு காண்குதும் எனவே, ஆழமான எல்லை காண்பரிய கடலின் அடிவரைக் கலக்குபவன் என்பதாயிற்று. கோடியது என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி. மாறிலா - நிகரற்ற; 'மாறிலா வள்ளி வாழ்க' (கந்த. வாழ்த்து); 'மாறன்மையின் மறம் வாடுமென் றிளையாரையு மெறியான்' (சீவக. 2261). மொழிக்கு அமுதம்; 'அஞ்சொற்க ளமுதி லள்ளிக் கொண்டவள்' (ஆரணிய. 623); 'மொழிந்த சொல் அமுத மன்னுள்' (உயுத்த. வீடணன். 150); (ஒப்பு): 'குயிலுங் கரும்பும் செழுந்தேனும், குழலும், யாழும், கொழும்பாகும், அயிலும் அமுதும் சுவைநீத்த மொழி' (ஆரணிய. 1058). உருமை என்பவனைக் குறிக்குமிடங்களில் அமுதையுடன் கூட்டிக் குறிப்பது நோக்கத் தக்கது.

பி - ம். 1. *மனவினிற்* 2. *காண்குறு.*
3. *கோடிய ருடன்வர; கோடிதா னுடன் வர; கோடியங் குடன்வர; அமுதம்.*
4. *மாறலா; மாறிலாவலி; பயந்தய்ற் புதத்தோன்.* (3)

கேசரி

692. ஐம்ப தாயநூ றுயிர கோடியெண் ணமைந்த
மொய்ம்பு மால்வரை புரைநெடு வாநர மொய்ப்ப
இம்பர் ஞாலத்தும் வானத்து மெழுதிய சீர்த்தி
நம்ப னைத்தந்த கேசரி கடலென நடந்தான்.

இம்பர் ஞாலத்தும் - இந்த உலகத்திலும், வானத்தும் - விண்ணுலகத்திலும், எழுதிய சீர்த்தி - பொறித்த புகழ்வடிவான, நம்பனை தந்த - சிறந்தவனாகிய அநுமனைப் பெற்ற, கேசரி - கேசரி என்னும் குரங்குப் படைவீரன், ஐம்பது ஆய நூறுயிரகோடி எண் அமைந்த - ஐம்பது லக்ஷங்கோடி என்று கணக்கிடப்பெற்ற, மால் வரை புரை மொய்ம்பு நெடு வானரம் - கயிலை மலையை நிகர்த்த புயங்களையுடைய பெரிய குரங்குச் சேனை, மொய்ப்ப - (தன்னைச்) சூழ்ந்து வர, கடல் என நடந்தான் -. சமுத்திரம் போன்ற (கம்பீரமான) தோற்றத்துடன் வந்தான்.

மால் வரையைச் சிலர் மேருமலை என்பர்; வானரங்கள் வெண்ணிறமாகலின் கைலை மலை என்றே சொல்லுதல் நேர். சீர்த்தி நம்பன் -

புகழ் உருவான அநுமன்; ஒப்பு 'அயோத்தி வேந்தன் புகழெனக் குலவு தோளான்' (சுந்தர. ஊர் தேடு. 100); 'இராகவன் புகழெனும் அநுமன்' (சுந்தர. 144). நம்பன் - நமக்கு இன்னான் என்று பொருள்பட்டுச் சிறந்தவன் என்பதை உணர்த்தும். நம்பன் - விரும்பத்தக்கவன் எனினு மாம்; நம்பு - விருப்பம், 'நம்பு மேவும் நசையாகும்மே'. (தொல். உரி.32).

நம்பன் சிவபெருமான் எனக்கொண்டு அப்பெருமான் அமிசமாகப் பிறந்தவனும் ஆம், 'புராரி மற்றி யானே வாத சேயெனப் புகன்றான்' (பால. திருவவதாரப். 28). 'காலனை யொக்குந் தூதன் காலுங்கண் ணுதலுமென்றார்' (உயுத்த. இலங்கை காண். 10). நம்பன் - சிவன். (சூடா.) 'நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்'; (பால. ஆற்றுப். 2); இச்சொல் நம்பி எனவும் வழங்கும். கேசரி அநுமனின் தந்தை, 'சிவன்கா ணயன்கா ணெனுந் தூதனைப் பெற்ற செல்வன் அவன் காணெடுங் கேசரி. (உயுத்த. இராவணன். தானை 30).

பி - ம். 1. ஐம்பதாறு; ஐம்பதாகு.
2. மால்வரை நேருந வாநர; நேர்நெடு.
3. மெழுதிய கீர்த்தி.
4. யென்பவன் வந்தான்.

இஃது ஓர் பிரதியில் இல்லை (4)

கவாட்சன்

693. முனியு மாமெனி னருக்கனை முரணற முருக்கும்
தனிமை தாங்கிய வுலகையுஞ் சலம்வரிற் குமைக்கும்
குனியு மாக்குரங் கீரிரண் டாயிர கோடி
அனிக முன்வர வான்பெயர்க் கண்ணன்வந் தடைந்தான்.

(தனித்தனி ஓர் குரங்கும்), முனியும் ஆம் எனின் - சினத்தை மேற்கொள்ளுமாயின், அருக்கனை முரண் அற முருக்கும் - சூரியனையும் வலி கெடும்படி அழிக்கும்; சலம்வரின் - அடங்காத பெருங் கோபம் வந்தால், தனிமை - தனிமையாகவே, தாங்கிய உலகையும் குமைக்கும் - நம்மைத் தாங்கிக் கொண்டுள்ள பூமியையும் சிதைக்கும்; (இத்தகைய) குனியும் மா குரங்கு - முதுகு வளைந்த பெரிய குரங்குகள், ஈர் இரண்டு ஆயிர கோடி - நாலாயிரம் கோடி கொண்ட, அனிகம் முன்வர - சேனை தனக்கு முன்னே செல்ல, ஆன் பெயர் கண்ணன் - கவாட்சன் என்பவன், வந்து அடைந்தான் - வந்து சேர்ந்தான்.

முரண் - மாறுபாடு. முருக்குதல் - அழித்தல்; ‘ முருக்கித் தேர் தடக்கை தன்ஞல் ’ (சீவக. 807); ‘ விறன்வேல் மன்னர் மன்னெயில் முருக்கி ’ (சிறுபாண். 247). சலம்-மாறுபாடு என்பர் நச்சினார்க்கினியர். மதுரைக் காஞ்சி: 117; ‘வதனத்தான் சலத்தை நோக்கி’ (ஆரணிய.794); ‘ சலஞ் செயின் உலக மூன்று மிலக்குவன் முடிப்பன்ருனே ’ (உயுத்த. இந்திரசித்து. 4); சலம் - தணியாக் கோபம். ‘ சலம்புரிதண்டு ’ (பரிபாடல். 15, 58); ஆரணிய. 361. குனியுமாக் குரங்கு - ‘கூனல் மாக் குரங்கு ’ 690. அனீகம் - வடசொல்; அது “ அனிகம் ” என வந்தது. ஆன் பெயர்க் கண்ணன் - கவாட்சன் என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கம்; கவாட்சன் - கோலாங் கூலம் என்னும் கொண்டை முசுற் றுக்குத் தலைவன் ; லாங்கூலம் - வால் ; ஆன் - கோ ; கண் - அக்ஷி, கோ+அக்ஷி என்பது வடமொழிச் சந்திப்படி கவாட்சி என்று ஆகும். ‘ இவன் காண் கவயாட்சன் ’ (உயுத்த இராவணன்ருனே, 30): ஆன் பெயர்க் கண்ணன் இடபாக்ஷன் என்பர் சிலர்; அது முதனூற் கருத்துக் குப் பொருந்தாது. இங்ஙனம் இவ்வாசிரியர் வடசொற்களைத் தமிழ்ப் படுத்துவதைப் பல விடங்களிலும் காணலாம். ‘ தூமிராக்ஷனைப் புகை நிறக் கண்ணன் என்றும், மகா பார்சுவனைப் பெரும்பக்கன் என்றும், எக்ஞ சத்ரு என்பவனை வேள்வியின் பகைஞன் என்றும் கூறுவர். குக்குட சர்ப்பத்தைப் பறவை மாநாகம் என்பர் சிந்தாமணி ஆசிரியர். வான்மீகத்திலும் கவாட்சனையடுத்தே தூமிரன் கூறப்படுகின்ருன்.

பி - ம். 1. *றுரகன்றன் ; முரணையும், முடிவுற முனையும், முனிவுற முனியும்,*

2, *அரணையும், வலம்வரு சலத்த, அலம் வரும் சமத்த; சலம் வரக் குமைக்கும்.*

3. *இனியமாக், இனைய, ணேண்டிய வாயிரகோடி, கரயிர மீண்டிய கோடி.* (5)

இஃது ஓர் பிரதியில் இல்லை.

தூமிரன்

694. மண்கொள் வாளெயிற் றேனத்தின் வலியென வயிரத்
திண்கொண் மால்வரை மயிர்ப்புறத் தனவெனத் திரண்ட
கண்கொ ளாயிர கோடியி னிரட்டியிற் கணித்த
எண்கி னீட்டங்கொண் டெறுழ்வலித் தூமிர னிறுத்தான்.

எறுழ் வலி தூமிரன் - மிக்க வலிமை வாய்ந்த தூமிரன் என்பவன், மண்கொள்வாள் எயிறு ஏனத்தின் வலியன - பூமியைக் குத்தியெடுத்த ஒளியமைந்த பற்களையுடைய (திருமாலின் அவதாரமான) வராகம் போன்ற வன்மை பெற்றவனாகி, வயிரம் திண் கொள் மால் வரை மயிர் புறத்தன என திரண்ட - உறுதியமைந்த வலிமை கொண்ட பெரிய மலையும் ஒரு மயிர்க்காலிலே யடங்கக்கூடும் என்னும்படி உருண்டு பருத்தனவும், கண் கொள் ஆயிரம் கோடியின் இரட்டியில் கணித்த - இடம் மிகுதியாகக் கொண்ட இரண்டாயிர கோடியாகக் கணிக்கப் பட்டனவுமான, எண்கின் ஈட்டம் கொண்டு - கரடிகளின் தொகுதியை உடன்கொண்டு, இறுத்தான் - வந்து சேர்ந்தான்.

தூமிரன் - சாம்பவனுக்கு உடன் பிறந்தவனான ஓர் கரடித்தலைவன். கரடிக்குத் திருமால் வராக வுருவத்தை உவமித்தது வடிவும், வன்மையும் கருதி என்க. ஏனம் - ஆதிவராகம். 'ஓரேனம் தனைத் தேட' (பா. அருச்சுனன்); 'பாரணைத்த வெம்பன்றி' (உயுத்த. படைக் காட்சி. 10); 'ஏனக் கொம்பு மிளவாமையும் பூண்டு' (தேவா. 186, 4) 1148 ; 9 ; தேவா. 777, 9. 'மண் கொள் வாளெயிற் றேனம்'; வரலாறு. பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலுட் சென்ற இரணியாக்கனைத் திருமால் வராக அவதாரம்கொண்டு சென்று கொன்று, நிலமகளைக் கோட்டாற் குத்தி யெடுத்தது. எண்கு - கரடி; அகநா. 257; (மணி. 16, 68);

பி - ம். 1. *வலியினவுயர்ந்த, வலியெனவுயர்ந்த, வலிமைபெற் றுடைய.*
2. *மால்வரை ; மயிர்ப் புறத்தின, யெயிற் புறத்தன.*
3. *கோடியின் கணிதத்திற் கணித்த.*
4. *யெறுழ்வலி யிடும்பன் ; குமுதன்.*

இதன் பின் ஓர் அதிகப்பாடல்.

தாம ரைப்பெருந் தவிசுடைச் சதுமுகக் கடவுள்
ஓம வங்கியி னுதித்தன வுலப்பில கோடி
ஆமெ னப்புகல் வானரத் தானையங் கணித்தாய்
மாவ யப்புயத் தெறுழ்வலி மயிந்தன்வந் தடைந்தான் (6)

பனசன்

695. தனிவ ருந்தடங் கிரியெனப் பெரியவன் சலத்தால்
நினையு நெஞ்சிற வுருமென வுருக்குறு நிலையன்
பனச னென்பவன் பன்னிரண் டாயிர கோடிப்
புனித வெஞ்சின வாநரப் படைகொடு புகுந்தான்.

தனி வரும் தடகிரி என பெரியவன் - தனித்து வருகின்ற பெரிய மலைபோன்ற பேருருவினனும், சலத்தால் - தணியாத சினத்தால், நினையும் நெஞ்சு இற - கருதுபவர்களின் மனம் உடையும்படி, உரும் என உருக்குறு நிலையன் - இடி போன்று நெகிழச் செய்யும் தன்மையனுமான, பனசன் என்பவன் - பனசன் என்ற வாநர தளபதி, பன்னிரண்டு ஆயிரகோடி - பன்னிரண்டாயிரகோடி என்று சொல்லக்கூடிய, புனிதம் வெம் சினம் வாநரம் படைகொடு - தூய்மையான ஆனால் கடுமை யொடுங் கூடிய குரக்குச் சேனையுடன், புகுந்தான் - வந்தான்.

தனி வரு தடங்கிரி - இல்பொருளுவமை. சலம்; 693, உரை காண்க. சினத்துக்கு வெம்மையுடன் புனிதமும் கூறினார்; 'வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியான், ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான், மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான், ஆறன்மையின் முதியாரையு மெறியானயில் உழவன்' (சீவக, 2261); 'ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்' (புறநா. 9) என்ற வரிகள் இங்கே காணத்தகுவன. தழிஞ்சி என்னும் புறப்பொருட்டுறையும் இதன்கண் அடங்கும். இங்கு தொல். புற. 10. நச். உரை காண்க. புனிதமும் வெம்மையும் விரவுமோ எனின், 'மைந்தர்க்கு மைந்து மகளிர்க்குச் சாயலன்' போல எனக் கொள்க. பனசன், 'மூன்று கண்ணிலனாயினும் மூன்றெயிலெரித்தோன், போன்று நின்றவன்' (உயுத்த. இராவணன்றானை. 32),

'புனித வெஞ்சிலை' யென்ற பாடங்கொண்டால், குரங்குகள் விற்கொண்டு போர் புரிந்ததாக வரும்.

பி-ம். 1. நினையு நஞ்சென வுருமென நடுக்குறு நிலையன்; நெஞ்சுற; நிலையி னெஞ்சென;

4. புனித வெஞ்சிலைப் படையுடன்; புனையுந் திண்டிறல்; (7)

நீலன்

696. இடியு மாழ்கடன் முழக்கமும் வெருக்கொள விசைக்கும்
முடிவில் பேர்முழக் குடையன விசையன முரண
கொடிய கூற்றையு மொப்பன பதிற்றைந்து கோடி
நெடிய வாநரப் படைகொண்டு புகுந்தன னீலன்.

நீலன் - நீலன் என்பவன், இடியும் ஆழ் கடல் முழக்கமும் வெரு கொள - இடியும் ஆழ்ந்த கடலின் ஆரவாரமும் அஞ்சியடங்கும்படி, இசைக்கும் - கர்ஜிக்கிற, முடிவு இல் பேர் முழக்கு - எல்லையற்ற பேரொலியை, உடையன - பெற்றனவும், விசையன - வேகத்தினை யுடையனவும், முரண - மாறுபாடு மிக்கனவும், கொடிய கூற்றையும் ஒப்பன - கொடுமை வாய்ந்த யமனையும் (தனித்தனி) நிகர்ப்பனவுமான, பதிற்றைந்து கோடி நெடிய வாநரம் படைகொண்டு - ஐம்பதுகோடி குரக்குச் சேனையை யுடன்கொண்டு, புகுந்தனன் - பிரவேசித்தான்.

கொடுமையிலும் உயிர் கவர்வதிலும் கூற்று உவமை. நீலன் அக்கினியின் குமாரன் என்ப ; 'நீலனின்றவனெருப்பின் மகன்' (உயுத்த. இராவணன்ருனே. 26); மற்றும் இந்நீலன் பெயர் உயுத்த. முதற் போர். 74, 78, 87லும் வருதல் காண்க. பத்து + ஐந்து - பதிற்றைந்து; இற்றுச் சாரியை.

பி - ம். 1. மாக்கடல்; மால்கடல்.
2. பேருறுக் குடையன ; பேருல விறுக்குறும் ; போர் முழக் குடையன ; குடையவன் ; கொதிப்பன ; குதிப்பன ; முரண ; விடையன ; விசையின் மா முரணி முரண், வலியமைந்த.
3. கூற்றையுங் கொதிப்பன ; குதிப்பன ; கெடுப்பன ; பதினைஞ்சு கோடி.
4. படையொடும் ; நெடிய வானரத்தானே; கொண்டடைந்த னனீலன். (8)

கவயன்

697. இளைத்து வேறொரு மாநிலம் வேண்டுமென் றிரங்க
முளைத்த முப்பதி னுயிர கோடியின் முற்றும்
விளைத்த வெஞ்சினத் தரியினம் வெருவுற விழிக்கும்
அளக்க ரோடுமக் கவயனென் பவனும்வந் தடைந்தான்.

அ கவயன் என்பவனும் - புகழ்பெற்ற கவயன் என்னும் நாம முடைய வீரனும், வேறு ஒரு மாநிலம் வேண்டும் என்று - (தாம் தங்கி

யிருப்பதற்கு இந்தப் பூமி போதா தாகலின்) பிறிதொரு அகன்றபூமி வேண்டும் என்று, இளைத்து இரங்க முளைத்த - வருந்தி மனம் இரங்கும் படி தோன்றினவும், முப்பதின் ஆயிரம் கோடி முற்றும் விளைத்த - முப் பதினாயிரம் கோடி என்ற தொகை கொண்டு உலகெங்கும் பரந்தனவு மான, வெம்சினத்து அரி இனம் - கடுமையான வெகுளியுடன் கூடிய சிங்கக் கூட்டங்களும், வெருவு உற விழிக்கும் - அஞ்சுமாறு நோக்கும் தன்மை பெற்ற, அளக்கரோடும் - குரக்குச் சேனைக் கடலோடும், வந்து அடைந்தான் - வந்து சேர்ந்தான்.

பி - ம். 1. இணைக்கும்; இளைக்கும் யேரொரு; இளைத்த மேருவும் வேண்டுமோ வென்ன; வேண்டுமென் றிரங்க.

2. முளைக்கு முப்பதி; முளைத்து முப்பதி; முடுகி.

3. வெருவா விழிக்கும்; விளிந்த; விளித்த; விளிக்கும், வெகுளும்.

4. யேல் வசந்த னென்பவனும்; கரனென்னும் பெயரன்; சயனெனும், அளக்க ரோடுமவ் வரனெனும் பெயரன். (9)

தரீமுகன்

698. மாக ரத்தன வரத்தன மலையன நிலைய
வேக ரத்தவெங் கண்ணுமிழ் வெயிலன மலையின்
ஆக ரத்தினும் பெரியன வாறைந்து கோடி
சாக ரத்தொடுந் தரீமுக னென்பவன் சார்ந்தான்.

தரீமுகன் என்பவன் - தரீமுகன் என்பவன், மா கரத்தன - பருத்த கைகளையுடையனவும், வரத்தன - சிறந்த வரங்களைப் பெற்றனவும், மலையன - வன்மையாலும் உயரத்தாலும் மலையென்று சொல்லத்தக்க நிலையினையுடையனவும், வேகரத்த - உக்கிரமுடையனவும், வெம்கண் உமிழ் வெயிலன - கொதிக்கும் கண்களிலிருந்து தெறிக்கின்ற தீப் பொறிகளையுடையனவும், மலையின் ஆகரத்தினும் பெரியன - மலையின் உருவத்தைக் காட்டிலும் உயர்ந்து பருத்த வடிவம் உடையனவும் ஆன, ஆறு ஐந்து கோடி சாகரத்தொடும் - முப்பது கோடி குரக்குச் சேனைக் கடலுடன், சார்ந்தான் - வந்தடைந்தான்.

வேகரம்-கடுமை. (சங். அக.). ஆகாரம், என்ற வடசொல் ஆகரம் என வந்தது: வடிவு. சாகரம் - கடல்; வடசொல்; சகர புத்திரர் தோண்டி யதனாற் பெயர் பெற்ற தத்திதாந்தப் பெயர்; 'சகரர் தொட்டலாற் சாகர மெனப்பெயர் தழைப்ப' (பால. அகலிகை 43) காண்க. தரீமுகன் - குகைபோன்ற முகத்துடன் கூடினவன். முகம் - வடமொழியில் வாய்க்

குப் பெயர். தரீ-குகை: வடசொல். 'ஏகோ வாஸப் பட்டணேவா தரீவா' (பர்த்ருஹரி சதகம்). சேனைக்குச் சாகரம் பரப்பும் பெருமையும் கொந்தளிப்பும் பற்றி வந்த உவமை.

பி - ம். 1. வுரத்தன, வலியயா, விலைய, வாறுறு விலைய.
2. வெவ் கனலுமிழ்; வெங்கதி ருமிழ்மணி; வெயிலின; மணியின் வலையின்; 3. ஆக ரத்தன வாயெ.
4. தநிமுகன்; சதமுகன்; சனிமுகன்; தனிமுகன்; சதுமுகன். (10)

சாம்பன்

699. ஆயி ரத்தறு நூறுகோ டியிற்கடை யமைந்த
பாயி ரப்பெரும் படைகொண்டு பரவையிற் றிரையின்
தாயு ருத்துட னேவரத் தடநெடு வரையை
ஏயு ருப்புயச் சாம்பனென் பவனும்வந் திறுத்தான்.

தட நெடு வரை ஏய் - பெரிய உயர்ந்த மலையை நிகர்த்த, உரு - வடிவத்துடன் கூடிய, புயம் - தோளிணைகளையுடைய, சாம்பன் என்பவனும் - சாம்பவனும், பரவையின் திரையின் - கடலின் அலைகளைப் போல, தாய் உருத்து - பாய்ந்து வெகுண்டு, உடனேவர - பின்தொடர, ஆயிரத்து அறுநூறு கோடியின் - ஆயிரத் தறு நூறு கோடியென்று கணக்கிடப்பட்ட, கடை அமைந்த பாயிரம் பெரும்படை - இடங்களில் நிரம்பிய பெருமையையுடைய பெரிய படையை, கொண்டு தன்னுடன் கொண்டு, வந்து இறுத்தான் - வந்து அடைந்தான்.

கடை அமைந்த கோடி என்ற எண்ணுடன் கூடிய ஆயிரத்தறு நூறு எனலும் ஒன்றும். பாயிரம் - விருது; 'பாயிரங் கூறிப் படை தொக்கால்' பழமொழி. பரவை - சமுத்திரம்; பரந்திருப்பதால் பெயர் பெற்ற காரணக்குறி. தாவி என்பது தாய் எனத் தொகுத்தது. ஏய் - ஒத்த. சாம்பன்; ஜாம்பவான் - பிரமன் கொட்டாவியிலிருந்து கரடி வடிவாகத் தோன்றியவன். இவன் திருமாலின் திருவிக்கிரம வவதாரத்தின் போது உலகம் முழுவதும் நிரம்பிய அப்பெருமானைப் பதினெட்டு முறை வலம் செய்தவனாக நூல்கள் கூறும். இவன் காலம் பல கடந்தவன்; மற்றும், பின் நிகழும் முதற் போரில் கும்பானுவை எதிர்த்தவன் - 'கண்டு நின்ற கரடியின் காவலன்...கொண்டு சீறி' (உயுத்த. முதற்போர். 63): காண்க.

பி - ம். 1. ஆயிரத்தொரு; நூற்றறு கோடியின், நூற்றிரு கோடி; நூற்றறு கோடியிற்.

2. பரவையுர் திரையும் ; பரவையிற்திரியும் ; ஞாலமிடைப்பரந்த.

3. தடவரை நீடு ; பாய், நெடும்.

4. ஆய் திரட்டிய ; மாயவற்புரை சாம்பன் ; சரபன் ; வசந்த னென் பவனும்.

இதன்பின் கோடி கோடி யெனும் பாடல் ஓர் பிரதியில் உள்ளது. (11)

துன்முகன்

700. வகுத்த தாமரை மலரய னிசிசரர் வாணுள்
உகுத்தி நீயெனப் பொருவரும் பெருவலி யுடையான்
பகுத்த பத்துநூ ருயிரப் பத்தியி னிரண்டு
தொகுத்த கோடிவெம் படைகொண்டு துன்முகன்
[தொடர்ந்தான்.

பொருவு அரும் பெருவலி உடையான் - நிகரில்லாத பெரிய வலிமை பெற்றவனாகிய, துன்முகன் - துன்முகன் என்னும் வானர வீரன், வகுத்த தாமரை மலர் அயன் - உலகினைப் படைப்பவனும், திருமாலின் உந்தித் தாமரை மேல் வீற்றிருப்பவனுமான பிரமதேவன், 'நிசிசரர் வாழ்நாள் நீ உகுத்தி என - அரக்கர்களின் உயிரையே நீ அழிப்பாயாக' என்று கட்டளையிட, பகுத்த பத்து நூறாயிரம் பத்தியின்- அணிவகுக்கப்பட்ட பத்து லக்ஷம் வரிசைகளாக, தொகுத்த இரண்டு கோடி வெம்படைகொண்டு - திரட்டிய இரண்டு கோடி வெம்மை வாய்ந்த குரங்குச் சேனையையுடன் கொண்டு, தொடர்ந்தான் - பின்பற்றினான்.

துன்முகன் - அச்சம் விளைக்கும் அல்லது அழகற்ற முகத்தினன் எனப் பொருள்படும். நிசிசரர் - இரவில் சஞ்சரிப்பவர்; 'செவ்வழி மந்திரத் திசைய ராகையால், வெவ்வழி யிருடர மதித்து மீச்செல் வார்'; (சுந்தர. 142). அஜன் - அயன் : திருமாலிடம் தோன்றியவன் எனப் பொருள்படும். நிசிசரருடைய வாழ்நாளை இன்றாகச் செய்தல், இவ்வானர வீரர்க்கு மிகவும் எளிதாகலின், 'உகுத்தி' என்று கூறினான்.

பி - ம். 1. நிசாசரர் ; நிசியுற.

2. புதைத்த நீயெனப் ; உகுத்தநீவினை ; உகுத்தநீயெனப் ; உகுத்த நீவினை ; பொருவதோர் ; படுவதோர் ;

3. பத்தினிலிரட்டி, பத்தினிரட்டி, பகுத்தபத்தி நூருயிரம்.

4. படை கொடு.

சில பிரதிகளில், இதுவும் அடுத்த செய்யுளும் பின் முன்னுக மாறியுள்ளன. (12)

துமிந்தன்

701. கோடிகோடிநூ ருயிர வெண்ணெனக் குவிந்த
நீடு வெஞ்சினத் தரியின மிருபுடை நெருங்க
மூடு மும்பரு மிம்பரும் பூழியின் மூழ்கத்
தோடி வர்ந்ததார்க் கிரிபுரை துமிந்தனுந் தொடர்ந்தான்.

தோடு இவர்ந்த தார் கிரிபுரை துமிந்தனும் - இதழ்கள் அமைந்த மலர்மாலையணிந்த மலையை ஒத்த துமிந்தன் என்பவனும், கோடி கோடி நூருயிரம் எண் என குவிந்த - பல கோடி லக்ஷக்கணக்காக நிறைந்த, நீடு வெம்சினத்து அரி இனம் - மிகவும் கடுமையான கோபம் மிகுந்த குரங்குக் கூட்டங்கள், இருபுடை நெருங்க - (தனது) இரு புறங்களிலும் அணித்தாகி நிற்க, மூடும் இம்பரும் உம்பரும் பூழியில் மூழ்க - பூமிமேற் கவிந்த ஆகாயமும் இவ்வுலகமும் (அச்சேனைகள் செல்லும் போது எழும்) புழுதியில் மறைய, தொடர்ந்தான் - பின்வந்தான்.

மூடு மும்பரும் - 'நிலனேந்திய விசும்பும்' (புறநா. 2) காண்க. இம்பர் - இவ்வுலகம் (கம்பரா. காப்பு); திருவிளை. தருமிக்கு. 33. பூழி- புழுதி; சிறுபாண். 134; அயோத்தி. கைகேசி: 107. பூழியின் மூழ்க. 'கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள் ககனம் சுலாவி' (வில்லி. பா. 16-ஆம் போர் 73); உயுத்த. படைக்காட்சி-2-ம் காண்க. மயிந்தன், துமிந்தன் என்ற இருவரும் அசுவினிதேவர்களின் அமிசம் என்ப. உயுத்த. இராவணன் தானை. 29. இவர்கள் இருவரும் வீடணன் இராமபிரானிடம் சரணம் புக வந்தபோது, அவனை முதல் முதலாக எதிர் கொண்டவர். உயுத்த. வீடணன். 42: மயிந்தன் துமிந்தன் சுந்தர. 604 என்றதும் காண்க.

பி - ம். 1. கணக்கினிற் குறித்த.

2. இருபுடை நெருக்கி, நெருக்கின், நெருக்க, நேர.

3. பூழியால், மூழியின்; முழக்க, மூழ்க.

4. கோடலர்ந்ததார், டவிழ்ந்ததார்; கரிபுரை; துவிதனும்,

இஃது ஓர் பிரதியில் இல்லை. (13)

மைந்தன் கஜகோமுகன்

702. இயைந்த பத்துநூ ருயிரப் பத்தெனுங் கோடி
உயர்ந்த வெஞ்சின வாநரப் படையொடு மொருங்கே
சயந்த னக்கொரு வடிவெனத் திறல்கொடு தழைத்த
மயிந்தன் மற்கச கோமுகன் றன்னொடும் வந்தான்.

சயம் தனக்கு ஒரு வடிவு என - வெற்றியே ஓர் உருக்கொண்ட தென்று கூறும்படி, திறல்கொடு தழைத்த - போர் வன்மை பூண் டுயர்ந்த, மயிந்தன் - மயிந்தன் என்பவன், மல் கச கோமுகன் தன் னொடும் - (கருவிகளின்றி) உடல்கொண்டு செய்யும் மற்போரில் சிறந்த கஜகோமுகன் என்ற வீரனோடும், இயைந்த பத்து நூருயிரம் பத்து எனும் கோடி-பொருந்திய நூறு லக்ஷம் கோடி என்ற எண்ணுள்ள, உயர்ந்த வெம்சினம் வாநரம் படையொடும் - மிகவும் கடுமையான வெகுளி வாய்ந்த குரங்குச் சேனையொடும், ஒருங்கே வந்தான் - ஒன்றுகூடி வந்தான்.

மயிந்தன் - 'வானோர்த மருத்துவன் மைந்தன்'; (உயுத்த. இராவ ணன்ருனை. 29). மற்கசன் கோமுகன் என இருவராகக் கோடலு மாம். இவ்விரு வாநரத் தலைவர்களின் பெயர் வான்மீகத்திலும் காண லாம்.

பி - ம். 1. *பத்தினினிரட்டி, பத்தெனுமிரட்டி.*
3. *சார்வென, தகுதியர் சமைந்த, தகுதியாற், தகுதிறற் கமைந்த.*
4. *மயிந்தன் மாமத வாரண மாமென.* (14)

குமுதன்

703. கறங்கு போல்வன காற்றினுங் கூற்றினுங் கடிய
பிறங்கு தெண்டிரைக் கடல்புடை பெயர்ந்தெனப் பெயர்வ
மறங்கொள் வாநர மொன்பது கோடியெண் வகுத்த
திறங்கொள் வெஞ்சினப் படைகொடு குமுதனுஞ் சேர்ந்தான்.

குமுதனும் - குமுதன் என்பவனும், கறங்கு போல்வன - காற்றாடி போன்று விரைந்து செல்வனவும், காற்றினும் கூற்றினும் கடிய - காற்றைக் காட்டிலும் வேகம் உடையனவும், யமனைக் காட்டிலும் கொடியனவும், பிறங்கு தெள்திரை - விளங்குகின்ற தெளிவான அலை களையுடைய, கடல் புடைபெயர்ந்து என பெயர்வ - சமுத்திரம் இடம் விட்டு எழுந்தாற்போன்று மாறிச் செல்வனவும், ஒன்பதுகோடி எண் வகுத்த-ஒன்பது கோடி என்று கணிக்கப்பட்டனவுமான, திறம்கொள் வெம் சினம் - மனவலியும் உடல் வன்மையும் கடுமையான கோபமும்

கொண்ட, மறங்கொள் வானரம் கொடு - (பிறவற்றினுடைய) வீரத்தை அடிப்படுத்துகின்ற, குரங்குப்படைகளைக் கொண்டு, சேர்ந்தான் - வந்து கூடினான்.

கறங்கு - காற்றாடி; ஆரணிய. 50; 494; சுந்தர. 803: உயுத்த. கும்ப. 336. சுழல்வதுபற்றிக் காற்றாடி கறங்கெனப்பட்டது. காற்றினும் கடிய கூற்றினும் கடிய, என வேகத்தையும், கொடுமையையும் குறித்தவாறு. குமுதன், ஒரு சிறந்த வானர வீரன். இவனே பின்னர்ச் சேதுவைப் பல குலவரைகளைக்கொண்டு அணைகோலினவன்; உயுத்த. சேதுபந்தனம்.

பி - ம். 1. *கொடிய.* 2. *கொடிய.* 3. *கோடியின் வகுத்த.* (15)

அநுமன்

704. கையஞ் சாசர முடையவக் கடவுளைக் கண்டு
மெய்யஞ் சாதவன் மாதிரஞ் சிறிதென விரிந்த
வையஞ் சாய்தரத் திரிதரு வானரச் சேனை
ஐயஞ் சாயிர கோடிகொண் டநுமன்வந் தடைந்தான்.

அம்கை சாசரம் உடைய - அழகிய ஆயிரம் கிரணங்களாகிய கரங்களைக் கொண்ட, அக்கடவுளை கண்டும் - அந்தச் சூரியனை நோக்கியும், மெய் அஞ்சாதவன் - உடலிற் சிறிதும் நடுக்கம் கொள்ளாதவனான, அநுமன் - அநுமான், மாதிரம் சிறிது என விரிந்த - திக்கெல்லை முழுவதுமே அளவிற் சிறிது என்னுமாறு பரந்துள்ளதும், வையம் சாய்தர திரிதரு - நிலவுலகம் ஒரு புறமாகச் சாயும்படி உலவுவதுமான, ஐ அஞ்சு ஆயிரம் கோடி வானர சேனை கொண்டு - இருபத்தையாயிரம் கோடி எண்ணுள்ள குரங்குப்படை தொடர, வந்து அடைந்தான் - வந்து கூடினான்.

அநுமன் சூரியனுக்கு அஞ்சாமை - 987; உயுத்த. இராவணன் மூனை. 25, 38, முதற் போர் 245. உயுத்த. அநுமப். 12. சகஸ்ரம் என்ற வடசொல் சாசரம் எனத்திரிந்தது; ஆயிரம் என்னும் பொருளது. அக்கடவுள் - சூரியன்; பண்டைக்காலம் தொட்டே தமிழ்நாட்டிலும் பிறநாடுகளிலும் வழிபடப்பெற்றவன். ஆகவே, கடவுள் என்றார். பெருஞ்சேனை நிரந்து நிற்பின் வையமும் இடம்பற்றாது என்று அதன் மிகுதியைக் குறித்தார்; (ஒப்பு.): 697: 'வான் சிறிதாப் போர்த்துவிடும்' (நாலடி. 38). சாய்தர, திரிதரு - என்பனவற்றில் தர: தரு, துணைவினை

கள். அநுமன்-கன்னத்தில் ஓர் விசேடமுடையவன் ; உயுத்த. அநுமன்; 34. காண்க. அநு - கதுப்பு.

பி - ம். 1. கையஞ்சாயுத ; காண, கருதா.

2. மெய்யஞ் சாதென ; மந்திரச் சிறகென.

3. சாய்வர ; திரிவன.

4. அறமனு மடைந்தான். (16)

நளன்

705. நொய்திற் கூடிய சேனைநூ றுயிர கோடி
எய்தத் தேவரு மென்கொலோ முடிவென்ப தெண்ண
மையற் சிந்தையா லந்தகன் மறுக்குற்று மயங்கத்
தெய்வத் தச்சன்மெய்த் திருநெடுங் காதலன் சேர்ந்தான்.

தெய்வம் தச்சன் மெய்திரு நெடு காதலன் - தேவ சிற்பியாகிய விசுகன்மாவின் பிரதியுருவே எனத்தக்க அழகிய உயர்ந்த குமாரனாகிய நளன் என்பவன், தேவரும் முடிவு என் கொலோ என்பது எண்ண - தேவர்களும் இப்படையின் எல்லை யாதோ என்று கருதும்படியாக, அந்தகன் மையல் சிந்தையால் மறுக்குற்று மயங்க - (யமனும்) இதனைக் கண்ணுற்றதனாலாகிய மயக்கம்கொண்ட மனத்துடன் கலங்கித் திகைக்கவும், நொய்தின் கூடிய நூறுயிர கோடி சேனை எய்த-திரண்ட லட்சக் கோடிக் கணக்கான குரங்குப்படை (தன்னுடன்) வர, சேர்ந்தான் - வந்தடைந்தான்.

'என் கொலோ முடிவு' என்பதற்கு இதன் விளைவு என்னாகுமோ எனினுமாம். 'தெய்வத் தச்சன்மெய்த் திருநெடுங் காதலன்': 'தந்தையான விசுவகன்மாவின் மெய்போன்ற அழகிய புதல்வனான நளன். 'மெய்கொள அருளி - தன்னினாகிய தகுதிக் கண்ணும்' (தொல். 145); 'தந்தையரொப்பர் மக்கள்' (தொல். 146); 'வனப்பெலா நுந்தையை யொப்பினும்' (கலித். 86). 'அஞ்சச்சும் பாவனையும் அப்பன்போல்' என்றும், அங்கப் பிரத்தியங்கம் என்றும் வழங்குவனவும் காண்க, இந்நளன் யாதொன்றை'நீரிற் போட்டாலும் மிதக்கும்படி வரம்பெற்றவன் ; உயுத்த இராவணன்றானை. 27. காண்க. திருநெடு என்றதனால், உடல் வனப்பும் உயரமும் குறிக்கப்பட்டன. நெடுமை பெருமையுமாம்.

பி - ம். 2. முடிவென்ப தென்ன, முடியுமென் றெண்ண.

3. மறுகுற்று, மறுகுற, மறுக்குற, மயக்குற. (17)

கும்பசங்கர்

706. கும்ப னுங்குலச் சங்கனு முதலினர் குரங்கின்
தம்பெ ரும்படைத் தலைவர்க டரவந்த தானை
இம்பர் நின்றவர்க் கெண்ணரி திராகவ னுவத்
தம்பெ னுந்துணைக் குரியமற் றுரைப்பரி தளவே.

கும்பனும் - கும்பனென்பவனும், குலம் சங்கனும் - சிறந்த சங்கன் என்பவனும், முதலினர் - முதலானவர்களாகிய, தம் பெரும் குரங்கின் படை தலைவர்கள் - தமது பெரிய வானர சேனைத்தலைவர்கள், தரவந்த - தம்முடன் கொணர வந்தடைந்த, தானை - குரக்குச்சேனை, இம்பர் நின்ற வர்க்கு எண்ணரிது - இவ்வுலகில் உள்ளவரால் கணக்கிட முடியாதது; இராகவன் ஆவத்து அம்பு என்னும் துணைக்கு உரிய - இராமபிரா னுடைய அம்பறுத் தூணியில் உள்ள அம்புகளின் அளவாம் என்று பகரத்தக்க அளவினது; (அன்றி), அளவு மற்று உரைப்பரிது - அந்தப் படையின் அளவைப்பற்றி வேறு எவ்வகையிலும் சொல்லுவது அருமை.

இராமன் ஆவத்து அம்பு - 'முறுவ லெய்திய முகத்தினன் முளரியங் கண்ணன், அளவிலாத தோர் வடிக்கணை தொடுத்து' (உயுத்த. முதற்போர், 241); 'உற்பத்தி யயனே யொக்கும், ஓடும்பொ தரியே யொக்கும், கற்பத்தின் அரனே யொக்கும் பகைவரைக் கலந்தகாலை' (உயுத்த. கும்ப. 27); (ஒப்பு): திருவிளையாடல் சுந்தரப் பேரம் பெய்த படலம். ஆவம் - தூணீரம் 381; சுந்தர. 532.

பி - ம். 1. *குலச்சாம்பனும், சரபனும் குமுதனும், வன்னியும்*
2. *தலைவர்க ளாய்வந்த தானை*
3. *ஆகத் தம்பெனும், இராம னுமத் தம்பெனும்*
4. *தலைக்குரிய ;* (18)

இதன் பின் ஓர் அதிகப்பாடல்: 'இன்ன ராதியர் படைத்தலை வீரர்க ளெங்கும், சொன்ன வானரச் சேனையிற் றொகைத்தொகை துவன்றித், துன்னி னார்களங் கெழுபது வெள்ளத்தின் தொகையாம், மன்னுஞ் சேனைவந் திறுத்திடக் கிட்கிந்தை வரையின்.

வானரச் சேனைகளின் சிறப்பும் வலியும்

707. தோயி லாழியோ ரேழுநீர் சுவறிவெண் டுகளாம்
சாயி னண்டமு மேருவு மொருங்குடன் சரியும்
ஏயின் மண்டல மெள்ளிட விடமின்றி யிரியும்
காயின் வெங்கனற் கடவுளு மிரவியுங் கரியும்.

(இங்ஙனம் வந்து திரண்ட வாநரப் படைகள்), தோயில் - படிந்து மூழ்கினால், ஆழி ஓர் ஏழும் - ஏழு கடல்களும், நீர் சுவறி வெள் துகள் ஆம் - நீர் வற்றி வெண்ணிறப் புழுதியாக மாறிவிடும்; சாயின் - ஒரு பக்கமாகச் சாய்ந்தால், அண்டமும் - பூமண்டலமும், மேருவும் - மேரு மலையும், ஒருங்கு உடன் சரியும் - ஒருசேர உடனே அப்பக்க மாகச் சாய்ந்துவிடும்; ஏயின் - எழுந்து உலாவினால், மண் தலம் - இந்தப் பூமி, எள் இட இடம் இன்றி இரியும் - ஓர் எள் இடுதற்கும் இடம் இல்லாமல் போகும்; காயின் - சினம் கொள்ளுமாயின், வெம் கனல் கடவுளும் - கொடிய அக்கினிதேவனும், இரவியும் - சூரியனும், கரியும் - வெந்து கருகும்.

தோயில் ஆழி யோரேழும் நீர் சுவறி: (ஒப்பு); 'வெள்ள மேழு பத்துளதால் வீரன் சேனை யிவ்வேலைப், பள்ளம் ஒருகை நீரள்ளிக் குடிக்கச் சாலும் பான்மையதோ' (சுந்தர. 603). இப் படலம் இரண்டாம் செய்யுள் முதல் இருபத்திரண்டாம் செய்யுள் ஈறாகக் கூறப்பட்ட வாநர வீரர்களில், மயிந்தன், துமிந்தன், குமுதன், நீலன், இடபன், பனசன், சாம்பன், கவயாக்கன், நளன், சங்கன், தூமிரன், சதவலி என்ற இவர்கள் பிராட்டியிடம் அநுமன் உரையாடும்போது குறிக்கப்பெறுவர். (சுந்தர. 604 - 605); மற்றும் சதவலி, சுசேட ணன், தாரன், கேசரி, கவாட்சன், தூமிரன், பனசன், நீலன், கவயன், தரீமுகன், மயிந்தன், துவிதன், கஜன், சாம்பவன், துன்முகன், அநுமன், நளன், சரபன், குமுதன் என்ற வீரர்களின் பெயர்களை முதனூலிலும் காணலாம். 'சாயினண்டமும் மேருவும் ஒருங்குடன் சரியும்' (ஒப்பு): உயுத்த. இரணிய. 13, 119, 129. உயுத்த. மூல பல. 12. ஏயின் மண்டலம்' எள்ளிட விடமின்றி யிரியும்; (ஒப்பு): உயுத்த. மூலபல. 4; சுந்தர. 329; உயுத்த. இராவணன் வதை. 239.

பி - ம். 2. தோயினூழி; சுவற 2. சாயும்.
3. எண்ணிட விடமின்றி. 4. கதமெனக் கரியும். (19)

708\. எண்ணி னுன்முக ரெழுபதி னுயிரர்க் கியலா
உண்ணி னண்டங்க ளோர்பிடி யுண்ணவு முதவா
கண்ணி னேக்குறிற் கண்ணுத லானுக்குங் கதுவா
மண்ணின் மேல்வந்த வாநரத் தானையின் வரம்பே.

மண்ணின் மேல்வந்த வாநர தானையின் வரம்பு - பூமியில் திரண்டு வந்த வாநரப் படையின் பேரெல்லையானது, எண்ணின் - எண்ணத்

தொடங்கினால், நான்முகர் எழுபதினாயிரர்க்கு இயலா - எழுபதினாயிரம் பிரமர்களுக்கும் முடியாது ; உண்ணின் - இச் சேனைகள் உண்ணத் தொடங்கினால், அண்டங்கள் ஓர் பிடி உண்ணவும் உதவா - எல்லா அண்டங்களும் தனித்தனி ஒவ்வொரு பிடியளவாக உட்கொள்ளப் பற்றாது ; கண்ணின் நோக்குறின் கண்ணுதலானுக்கும் கதுவா - விழிகொண்டு பார்த்தால் நெற்றியில் நெருப்புக் கண்ணையுடைய சிவபிரானாலும் காண வியலாது. ஏ : அசை.

பல பிரமர் : 'நூறு கோடி பிரமர்கள் நுங்கினர்' (தேவா. 218, 3). உண்ணின் அண்டங்கள் ஓர் பிடி யுண்ணவும் உதவா ; (ஒப்பு) : 709 ; சுந்தர. 603.

பி - ம். 1. எழுபது கோடியர்க்கு ; இசையும்.
2. பிடியள்ளவும். 3. கண்ணுத லானையும் கடக்கும்,
4. மண்ணின் மேலவாம், மண்ணின் மேல்வர ; மேல்வந்த, வாய் வந்த. (20)

709. ஒடிக்கு மேல்வட மேருவை வேரொடு மொடிக்கும்
இடிக்கு மேனெடு வானக முகட்டையு மிடிக்கும்
பிடிக்கு மேற்பெருங் காற்றையுங் கூற்றையும் பிடிக்கும்
குடிக்கு மேற்கட லேழையும் குடங்கையிற் குடிக்கும்.

(அந்தக் குரங்குப் படைகள்), ஒடிக்குமேல் வட மேருவை வேரொடும் ஒடிக்கும் - முறிக்கக் கருதினால் வடக்கண்ணுள்ள மேரு மலையையும் வேருடன் முறித்துவிடும்; இடிக்குமேல் நெடு வானக முகட்டிடையும் இடிக்கும் - இடிக்க எண்ணினால் பெரிய ஆகாயத்தின் மேல் முகட்டையும் தகர்த்துவிடும் ; பிடிக்குமேல் பெரு காற்றையும் கூற்றையும் பிடிக்கும் - கைப்பற்ற மனம் கொண்டால் பெரிய காற்றையும் யமனையும் பிடித்துவிடும் ; குடிக்குமேல் கடல் ஏழையும் குடங்கையின் குடிக்கும் - பருக நினைந்தால் ஏழு கடல்களையும் (அகத்தியர் போன்று) உள்ளங்கையால் முகந்து குடித்துவிடும்.

ஒடிக்குமேல் வட மேருவை வேரோடு மொடிக்கும் ; (ஒப்பு): 690. உயுத்த. படைக் காட்சி. 12, 36. குடிக்குமேற் கட லேழையும் குடிக்கும்; (ஒப்பு) : உயுத்த, படைக் காட்சி. 19 ; சுந்தர. 602 பிடிக்கு மேற் கூற்றையும் பிடிக்கும் ; (ஒப்பு): உயுத்த. இலங்கை கேள்விப். 22 ; 41, 58.

பி - ம். 1. வேரொடு முடிக்கும்.
2. மேனுயர் வான்முக டெட்டையும்; அண்டவான் முகட்டையும்.
4. ஏழையும் வறன்பட. (21)

சேனையின் புரட்சி

710- ஆறு பத்தெழு கோடியர் வானரர்க் கதிபர்
கூறு திக்கினுக் கப்புறங் குப்புறற் குரியார்
மாறில் கொற்றவ னினைத்தன முடிக்குறும் வலியர்
ஊறு மிப்பெருஞ் சேனைகொண் டெளிதின்வந் துற்றார்.

கூறு திக்கினுக்கு அப்புறம் குப்புறற்கு உரியார் – நான்காகக் கூறப்பெறும் திசைகளுக்கு அப்பாலும் தாண்டிக் குதிக்கத்தக்க வன்மை வாய்ந்தவர்களும், மாறு இல் கொற்றவன் நினைத்தன முடிக் குறும் வலியர் - இணையற்ற தங்கள் மன்னவனான சுக்கிரீவன் எண்ணிய காரியங்களை உடனே செய்து முடிக்கும் மனத்திண்மை யுடையவர்களுமாகிய, ஆறுபத்து எழு கோடியர் வானரர்க்கு அதிபர் - அறுபத்தேழு கோடிக் கணக்குள்ள குரங்குப் படைத் தலைவர், ஊறும் இ பெரு சேனை கொண்டு - மேன்மேற் பெருகுகின்ற இந்தப் பெரிய சேனையைத் தொகுத்துக்கொண்டு, எளிதின் வந்து உற்றார் - ஒரு வருத்தமுமின்றி வந்து சேர்ந்தார்கள்.

குப்புறல் - குதித்தல்; 'குறுமுனி குடித்த வேலை குப்புறு கொள்கைத் தாதல் வெறுவிது' (சுந்தர. 15): மற்றும், பெருங்கதை. மகத. 20; 111; 24 : 147; சீவக. 980, 2202; பால. வரைக் காட்சி. 35, காண்க. சேனை வீரர்களின் அளவிறந்த ஆற்றலும் தலைவர் மாட்டு அவர்கட்குள்ள பணிவும் ஒருங்கே கூறப்பட்டன. மாறு - ஒப்பு. 'மாறிலா வள்ளி' (கந்த. வாழ்த்து); 'மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையும் எறியான்' (சீவக. 2261). ஊறுசேனை- 'ஊறுபடை' (உயுத்த. மந்திர. 56).

*பி - ம்.* 1. *கோடியாம்.* 2. *கூறுதிக் குறுத்தப்; கூறு டைக்கடற் கப்புறம்.* 3. *மாறில் மன்னவன் நினைத்தந ; நினைத்தன, நினைக்குறும் மனத் தார்.* 4. *ஈறில் மெய்ப் பெருஞ், வேறு மிப்பெருஞ் ; எளிதினி னுற்றார்.* (22)

சேனாதிபதிகள் சுக்கிரீவனை வணங்கல்

711. ஏழு மாகடற் பரப்பினும் பரப்பென விசைப்பச்
சூழும் வானரப் படையொடவ் வீரருந் துவன்றி
ஆழி மாபரித் தேரவன் காதல னடிகள்
வாழி வாழியென் றுரைத்தனர் தூவினர் வணங்கி.

அ வீரரும் அந்த வாநர வீரர்களும், ஏழு மாகடல் பரப்பினும்-ஏழு பெரிய கடல்களின் பரப்பெல்லையைக் காட்டிலும், பரப்பு என இசைப்ப-விரிந்துள்ளது என்று (கண்டவர்) கூறுமாறு, சூழும் வாநரம் படையொடு - சுற்றி நின்றுள்ள குரங்குச் சேனையுடனே, துவன்றி - நெருங்கி வந்து, ஆழி மா பரி தேரவன் காதலன் - ஒற்றைச் சக்கரத்தையும் பெரிய குதிரைகளையு முடைய தேரைச் செலுத்துபவன் ஆன சூரியனின் புதல்வன் சுக்கிரீவனுடைய, அடிகள் வாழிவாழி என்று உரைத்து-திருவடிகள் வாழ்க வாழ்க என வாழ்த்தி, வணங்கி - வழிபட்டு, அலர் தூவினர் - மலர்களை வாரி இறைத்தார்கள்.

ஏழு கடல் - உவர்க்கடல் முதலியன; கந்தபு. அண்டகோசப். 21; திருவிளையாடற் புராணம். எழுகட லழைத்த படலம்; பின்பு எழுகடலுக்கு மாருக மதுரையில் எழுகடலெனக் காட்டிய இந்திர சாலமு முண்டு' என்பது தக்கயாகப் பரணி. 225 உரை.

பி - ம். 1. இரட்டியென் றியாவரு மிசைக்க, விசைக்கும், மிசைத்த.
2. படையொடத் தலைவருந் தோன்றி. டவ்வீரரே துவன்றி.
3. ஆழித் தேரவன் னரும்பெருங் காதலன், ஆழி யொன்றிடையிரதத்தன் காதல னடிகள்.
4. யென் றுரைத்தனன் தூவினர் வணங்க. (23)

சேனையைக் காணுமாறு சுக்கிரீவன் இராமபிரானை வேண்டுதல்

712. அனைய தாகிய சேனைவந் திறுத்தலு மருக்கன்
தனைய னெய்தினிற் றயரதன் புதல்வனைச் சார்ந்தான்
நினையு முன்னம்வந் தடைந்தது நின்பெருஞ் சேனை
வினையின் கூற்றுவ கண்டரு ணீயென விளம்பும்.

அனையது ஆகிய - அப்படிப்பட்டதான, சேனை வந்து இறுத்தலும் - குரங்குப்படை வந்து தங்கிய அளவில், அருக்கன் தனையன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், தயரதன் புதல்வனை நொய்தினில் சார்ந்தான் - தயரதப் பேரரசனின் குமாரனான இராமபிரானை விரைவாகச் சென்றடைந்து, 'வினையின் கூற்றுவ - தீவினைகளுக்கு யமன் போன்றவனே! நினையும் முன்னம் - எண்ணுவதற்கு முன்பே (வெகு விரைவில்), நின் பெருசேனை - உனது பெரிய படையானது, வந்து அடைந்தது - வந்து சேர்ந்தது; கண்டருள் நீ - நீ அதனை நோக்கியருளுக' என விளம்பும் - என்று கூறலானான்.

அவதார ரகசியத்தின்படி இரவி கூறு சுக்கிரீவன், வானவர்களே வாநரர்கள் (பரல. திருவவ. 20, 21, 27) எனக் கூறப்படுதலின்

தாம் போந்த காரியம் ஆற்றத்தொடங்குவான் (மாலின் அவதாரமாகிய) தயரதன் புதல்வனை அருக்கன் தனையன் சார்ந்தான் எனப்பட்டது. 'என்னுயி ரனையாய்நீ யிளவல்' (அயோத்தி. கங்கைப். 68) என இராமபிரான் தம்பியாக வேற்றமையின், 'தன் பெருஞ் சேனை யென் ரோ, பெருஞ் சேனை யென்ரோ வாளா கூருது, 'நின் பெருஞ் சேனை' என்று சுக்கிரீவன் கூறிய விநயம் குறிப்பிடற் பாலது; 'ஒன்பதினுயிரம் கோடி யுற்றது நின் பெருஞ் சேனை' என்றதும் காண்க. 'வினையின் கூற்றுவ' என்று இராமபிரானை விளித்தது, பல்லுயிர் களையும் வாதிக்கும் ஆகாமிய சஞ்சித பிராரத்த வினைகளைத் தீர்த்துப் பிறப்பற்றனவாகச் செய்யும் அப்பிரானுடைய அருட்டிறம் கருதி என்க; 'இம்மையே மறுமை நோய்க்கு மருந்தினை' 300; 'தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, இம்மையே ராமவென் றிரண்டெழுத் தினல்' (பால. பாயிரம்.) என்பனவும், மற்றும் ஆரணிய. 1161, 1179-ம் காண்க.

பி - ம். 1. இனையதாகிய 2. தனையனை, சிறுவனை 3. முன்புவந்து.
4. கண்டரு ளுதியென; கண்டரு ளென்றடி வீழ்ந்தாள். (24)

713. ஐய னும்முவந் தகமென முகமலர்ந் தருளித்
தைய லாள்வரக் கண்டன னுமெனத் தளிர்ப்பான்
எய்தி னனங்கோர் நெடுவரைச் சிகரத்தி னிருக்கை
வெய்ய வன்மகன் பெயர்த்துமத் தானையின் மீண்டான்.

ஐயனும் - அழகனான இராமபிரானும், உவந்து - மகிழ்ந்து, அகம் என முக மலர்ந்து அருளி - (தனது) உள்ளம் போலவே முகமும் மலரப் பெற்று, தையலாள் வர கண்டனனும் என தளிர்ப்பான் - சீதா தேவியே நேரில் வரக் கண்டவன்போன்று மனக்கிளர்ச்சி கொண்டவனாய், (வானர சேனையைக் காணும்பொருட்டு), அங்கு ஓர் நெடுவரை சிகரத்தின் இருக்கை எய்தினன் - அங்கேயுள்ள, ஓர் உயர்ந்த மலை யுச்சித் தலத்தை அடைந்தான்; வெய்யவன் மகன் - வெம்மை வாய்ந்த சூரிய புத்திரனான சுக்கிரீவன், பெயர்த்தும் அ தானையின் மீண்டான் - திரும்பவும் அந்தச் சேனையிடம் சென்று சேர்ந்தான்.

தைய லாள்வரக் கண்டன னுமெனத் தளிர்ப்பான்; (ஒப்பு): 'ஐயனுக் கங்கி முன்னர் அங்கையாற் பற்றும் நங்கை, கையென லாயிற் றன்றே, கைபுக்க மணியின் காட்சி' (சுந்தர. 1291). இச் செய்யுள் நினைப்பணி.

பி - ம். 1. முகந்தாமென; ஐய னுங்கதை கேட்டது மனமகிழ்ந் தருளி.
4. சேனையின் மீண்டான். (25)

சேனையின் செலவால் எழுந்த தூளியின் வருணனை

714. எட்டுத் திக்கையு மிருநிலப் பரப்பையு மிமையோர்
வட்ட விண்ணையு மறிகட லனைத்தையு மறையத்
தொட்டு மேலெழுந் தோங்கிய தூளியிற் பூழி
அட்டிச் செம்மிய நிறைகுட மொத்ததிவ் வண்டம்.

எட்டு திக்கையும் - திசைகள் எட்டினையும், இருநில பரப்பையும் - பெரிய பூமியின் விரிந்த இடமுழுவதையும், இமையோர் வட்டம் விண்ணையும் - தேவர்கள் வாசம் செய்கின்ற வட்ட வடிவமான மேலுலகத்தையும், மறிகடல் அனைத்தையும் - அலைகள் கரைக்கண் வந்து வந்து மடங்குகின்ற ஏழு கடலையும், மறைய - மறையும்படி (படைகள் செய்வதால்), தொட்டு மேல் எழுந்து ஓங்கிய - (நிலவுலகம்) தொடங்கி மேலெழுந்து பரந்த, தூளியின் - புழுதியினால், இ அண்டம் - இந்த உலக உருண்டையானது, பூழி அட்டி செம்மிய நிறை குடம் ஒத்தது - புழுதியைப் புகுத்தித் தூர்த்த பூரண கும்பத்தை ஒத்திருந்தது.

தொடர்புயர்வு நவிற்சியணி. (ஒப்பு): 'குசையுறு பரியும் தேரும் வீரரும் குழுமியெங்கும், விசையொடு கடுகப்பொங்கி வீங்கிய தூளி விம்மப், பசையுறு துளியின் ருரைப் பசுந்தொளை யடைந்த மேகந், திசை தொறு நின்ற யானை மதத்துளை செம்மிற்றன்றே; (பால. எழுச்சி. 52). மற்றும் பால. எதிர்கோள். 10); வில்லி பா. 16 ஆம் போர். 73 காண்க.

பி - ம். 2. விண்ணோர்.
2. *அனைத்தையு மறைப்ப, மறைத்த, மறித்த, மறைத்தே, மறியத்.*
3. *ஓட்ட ; தூளியாம், தூளியின்.* 4. *இட்டுச்செம்மிய.* (26)

சேனை வருணனை

715. அத்தி யொப்பெனி னன்னவை யுணர்ந்தவ ருளரால்
வித்த கர்க்கினி யுரைக்கலா முவமைவே றியாதோ
பத்தி ரட்டிநன் பகலிர வொருவலர் பார்ப்பார்
எத்தி றத்தினு நடுவுகண் டிலர்முடி வெவனோ.

அத்தி ஒப்பு எனின் - (இச்சேனைத் தொகுதிக்கு) கடல் நிகராகும் என்று கூறினால், அன்னவை உணர்ந்தவர் உளர் - அக்கடல்களின் அளவைக் கண்டறிந்தவர்கள் இருக்கின்றார்கள் ; (இச் சேனையின் பரப்பைக் கண்டவர்கள் இல்லை); இனி வித்தகர்க்கு உரைக்கலாம் உவமை வேறு யாதோ ? - இவ்வாறெனின் அறிவுடையோரால் இதற்கு எடுத்துக் கூறும் உபமானம் வேறு யாது உள்ளது? (எதுவுமில்லை); பத்து

இரட்டி நல்பகல் இரவு ஒருவலர் பார்ப்பார்-இருபது நாட்கள், பகலிலும் இரவிலும் விடாமல் நோக்குபவராகிய இராம இலக்குமணர், எ திறத்தினும் - எந்த வகையிலும், நடுவுகண்டிலர் - இப்படையின் நடுவையும் காணுதவராயினர்; முடிவு எவனே - அங்ஙனம் எனின், இதன் முடி வெல்லையைக் காண்பது எவ்வாறே? ஆல்-அசை.

அத்தி - கடல். அப்தி என்ற வடசொல்லின் திரிபு; தக்கயாகப். 636; திருவேங்கட. அந். 33. பத்திரட்டி நன்பகல் பார்ப்பார், என்றது இருபது நாட்களைக் குறித்ததன்று; நீண்டநேரம் என்றவாறு: 'ஒருநாள் எழுநாள் போற்செல்லும்' (குறள், 1269): என்ற இடத்து எழுநாள் பல நாள் என்ருற்போல.

பி - ம். 1. *அன்ன தளந்தய ருளரால், அன்னவை, அன்னஸத யகழ்ந்தவர்' அன்னது மளந்தவர்.*
2. *வித்த கர்க்குமீ தளந்திடு மளவுவே றியாதோ, வித்த கர்க்குமே லறைந்திடும், மீதளந்திடும்.*
3. *நோன்பகல்; ஒருவிலர்; வெருவலர், ஒழிவறப் பார்த்தார்.*
4. *எத்திறத்தும; நடுவு காண்கிலர்; முடிவென்னே; முடிவுகண் டிலர்இமை யோரும்.*

இச் செய்யுள் ' அத்தி யொப்பெனி லன்னதை யளந்தறி வோதும்
வித்த கர்க்குமீ தறைந்திடு மளவுவே றியாதோ
பத்தி ரட்டிநோன் பகலிர வொருவலன் பார்த்தான்
எத்தி றத்தினும் நடுவுகண் டிலன்முடி வென்னே
என்றும் காணப்படுகிறது. (27)

இராமபிரான் இலக்குவனிடம் கூறத் தொடங்குதல்

716. விண்ணிற் றீம்புன லுலகத்தி ஞகரின் வெற்றி
எண்ணிற் ருனல தொப்பில னென்கின்ற விராமன்
கண்ணிற் சிந்தையிற் கல்வியின் ஞானத்திற் கருதி
அண்ணற் றம்பியை நோக்கின னுரைசெய்வ தானுன்.

வெற்றி எண்ணில் - சயம் பெறும் வன்மை குறித்து ஆராயின், தான் அலது - தானே தனக்குவமையாத லல்லாமல், விண்ணில் - மேலுலகத்திலும், தீம்புனல் உலகத்தில் - இனிமையான கடல் சூழ்ந்த உலகத்திலும், நாகரின் - நாகர்கள் வசிக்கும் பாதாள உலகத்திலும், ஒப்பு இலன் என்கின்ற - உவமை யில்லாதவன் எனச் சொல்லப்படு கின்ற, இராமன் - இராமபிரான், கண்ணின்-தன் கண்களாலும், சிந்தை

யின்-மனத்தினுலும், கல்வியின்-நூலறிவினுலும், ஞானத்தின்-இயற்கை உணர்வாலும், கருதி - அந்தச் சேனைப் பரப்பினை நன்கு ஆராய்ந்து, அண்ணல் தம்பியை நோக்கினன்-பெருமை வாய்ந்த இளைய பெருமானைப் பார்த்து, உரை செய்வது ஆனுன் - சொல்லத் தொடங்கினுன்.

ஒப்பிலன்; 'தன்துணை யொருவரும் தன்னில் வேறிலான்' 260; 'ஒப்பிறையும் பெறலரிய ஒருவா' (ஆரணிய. 61); 'உவமை நீங்கிய தோன்றல்' (ஆரணிய. 148). தீம்புனல் - இனியபுனல்; 'வேங்கடம் குமரி தீம்புனற் பௌவம். (சிலப். வேனிற் காதை. 1: உரைமேற் கோள்); உலகைச் சூழ்ந்து நிற்பது உவர்க்கடலே யெனினும், மக்கட்கின்றி யமையாத உணவிற்குச் சுவை யளிக்கும் உப்பினை விளைத்தலின் தீம் புனல் என்ருர். உப்பு, இனிமை எனப் பொருள்படுதலும் காண்க. 'கூடலிற் ருேன்றிய உப்பு' (குறள். 1328): 'ஊடலின்றேற் காமம் உப்பின்ரும்'. தானையைக் கண்களாற் கண்டு அளவிடக் கூடாமையின் மனத்தால் அளக்க முயன்று, பின்னர்த் தான் கற்ற நூலறிவினுலாகிய அபர ஞானத்தைக் கொண்டு வரையறை செய்ய எண்ணினுன்; அம் முறையும் பயனின்ருகத் தனது பரஞானத்தால் ஆராயக் கருதினுன், இவ்வளவுக்கும் அடங்காது விரிந்து பரந்து கிடந்தது அச்சேனை என்க.

பி - ம். 1. *விண்ணிற் றென்கட லுலகத்தில், தெண்கடல்.*
4. *நோக்கியொன்று, நோக்கி நின்று; உரைசெய்வா ஞனுன்.* (28)

717. அடல்கொண் டோங்கிய சேனைக்கு நாமுநம் மறிவான்
உடல்கண் டோமினி முடிவுள காணுமா றுளதோ
மடல்கொண் டோங்கிய வலங்கலாய் மண்ணிடை மாக்கள்
கடல்கண் டோமென்பர் யாவரே முடிவுறக் கண்டார்.

'மடல் கொண்டு ஓங்கிய அலங்கலாய் - இதழ்களைத் தம்மிடம் கொண்டு சிறந்த மாலையை அணிந்தவனே! நாமும் - நாமிருவரும், நம் அறிவால் - நமது அறிவுகொண்டு, அடல் கொண்டு ஓங்கிய சேனைக்கு - வலிமை படைத் துயர்ந்துள்ள இவ் வானரப் படையின், உடல் கண்டோம் - நடுவிடத்தை ஒருவாறு பார்த்தோம்; (அஃதன்றி), இனி உள முடிவு காணும் ஆறு உளதோ - இனி இதற்கு உள்ள முடி வெல்லையைக் காணும் வகை ஏதேனும் உண்டோ? மண் இடை - இப் பூவுலகில், மாக்கள்-மானிடர், கடல் கண்டோம் என்பர் - ஆழியைப் பார்த்தோம் என்று கூறுவர்; (அல்லாமல்), முடிவு உற கண்டார் யாவரே - அக் கடலின் இறுதி யெல்லையை நன்ருகத் தெளிந்தறிந்தார் யார்தாம்?

சேனைக்கு - உருபு மயக்கம். மடல்கொண் டோங்கிய அலங்க லாய்-வன்மை இயற்கையிலே வாய்க்கப் பெற்று உயர்ந்த வாகை மாலை சூடியவனே எனினுமாம். இலக்குவன் வன்மை; அயோத்தி. கிளைகண்டு. 42; உயுத்த. அதிகாயன். 78, 79; இந்திரசித்து. 4. மாக்கள் - இங்கு மக்களைப் பொதுவுறக் குறித்தது; 'மாவுமாக்களும்' (தொல். மரபு. 32) என்ற இடத்துக் கூறியது போலன்று.

பி - ம். 1. அடல்கண் டோங்கிய; நான்முகன், நாமுனம், அறியான். 2. இடைக்கண் டோமினி; தெளிவுறக் காணுமா றுளதோ, முடிவுறக் காணுமாறு; உடல்கொண் டோமினி முடிவுறக் காண்பது மொழியின். 3. வலங்கலான்; மண்ணடை மாக்கள் 4. முழுதுறக் கண்டார். முடிவுறக் கண்டார், காண்பார் (29)

718. ஈசன் மேனியை யீரைந்து திசைகளை யீண்டிவ்
வாசில் சேனையை யைம்பெரும் பூதத்தை யறிவைப்
பேசும் பேச்சினைச் சமயங்கள் பிணக்குறும் பிணக்கை
வாச மாலையா யாவரே முடிவெண்ண வல்லார்.

'வாசம் மாலையாய் - மணம் செறிந்த மாலை அணிந்தவனே ? ஈசன் மேனியை - எல்லா ஐசுவரியங்களையும் உடைய இறைவனுடைய திரு மேனியையும், ஈரைந்து திசைகளை - பத்துத் திக்குகளையும், ஐம்பெரும் பூதத்தை - ஐந்து பெரும் பூதங்களையும், அறிவை - (உலகத்தாருடைய) நுண்ணிய ஞானத்தையும், பேசும் பேச்சினை - உரையாடுகின்ற வார்த்தைகளையும், சமயங்கள் பிணக்குறும் பிணக்கை - மதங்கள் தமக்குள் மாறுபடுகின்ற மாறுபாட்டையும், ஈண்டு இ ஆசு இல் சேனையை - இங்கே திரண்டு வந்துள்ள இந்தக் குற்றம் தீர்ந்த வானரப் படையையும், யாவரே முடிவு எண்ண வல்லார் - எவர் தாம் எண்ணி முடிவு காட்ட வல்லவர்.?

ஈசற்கென்று ஒரு மேனி கிடையாது; 'ஒரு நாமம் ஒருவரும் ஒன்று மிலாதார்' (திருவாசக. திருத்தெள்ளேணம்); ஈசன் உருவத் திருமேனி கொள்வது அவன் சங்கற்பத்தின்படியே யாகும்; ஆகலின் அவைகளும் அளக்கலாகா. ஐம்பெரும் பூதங்கள் ஒன்றோ டொன் றொவ்வாமல் யாண்டும் பரந்து கிடத்தலின் அவற்றையும் வரம்பு கட்டற்கில்லை. (ஆரணிய. 48): 'அறிதோ றறியாமை கண் டற்றால்' (குறள். 1120) என்றபடி, புதிது புதிதாகப் பொருள்களை அறியும் அறிவுக்கும் ஓர் எல்லை யில்லை. ஒன்றை ஒருவர் பேசினால் அது மற்றும் பிறர் பேச இடம் தருமாகலின் அதற்கும் ஓர் இறுதி

யில்லை. சமய கோடிகளின் பிணக்கிற்கும் எல்லையில்லை. 'ஒன்றே பொருளென்னின் வேறென்ப, வேறென்னின் அன்றென்ப வாறு சமயத்தார்' (திருவள்ளுவ மாலை. 9); 'மதிவிகற்பாற் பிணங்கும் சமயம் பல பலவாக்கி'; 'தெய்வமும் மனந்த பேதம்'; 'திகழ்கின்ற சமயமு மனந்தம்' (தாயுமான. 2); 'சமய கோடிக ளெலாம் தம் தெய்வ மெந் தெய்வ மென்றெங்கும் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது' (தாயுமான. 1); 'மூலமே யில்லா முதல்வனே நீ முயலும் கோலமே யார்க்குந் தெரிவரிய கொள்கையாய்' (ஆரணிய. 1173); நூலறிவு கொண்டு நுழைவிலாதார் திரிக, நீலமணி மிடற்ருன் நீர்மையே' என்பன காண்க. வானர சேனையின் அளக்கலாகா நிலை இங்குத் தக்க உதாரணங்களுடன் கூறப்பெற்றது.

பி - ம். 1. ஈண்டி. 2. பூதத்தினநிலை.
4. முடிவெண்ண வவியார். (30)

719. இன்ன சேனையை முடிவுற விருந்திவ ணோக்கிப்
பின்னைக் காரியம் புரிதுமே ளுள்பல பெயரும்
உன்னிச் செய்கைமே லொருப்பட லுறுவதே யுறுதி
என்ன வீரனைக் கைதொழு திளையவ னியம்பும்.

'இன்ன சேனையை - இத்தகைய படையை, இவண் இருந்து முடிவுற நோக்கி - இங்கே யிருந்து முழு முற்றும் நன்ருகப் பார்த்து, பின்னை - அதன் பின்னர், காரியம் புரிதுமேல் - (நமது) காரியத்தைச் செய்யத் தொடங்குவோமாயின், (இதைப் பார்த்து முடிவதற்குள்) நாள் பல பெயரும் - பலநாள்கள் கழிந்துவிடும்; உன்னி - (ஆகவே) இனிச் செய்யவேண்டியவற்றை நன்கு ஆராய்ந்து, செய்கை மேல் ஒருப்படல் உறுவதே - புரிய வேண்டிய தொழிற்கண் மனம் ஒன்றுபடப் பெறுவதே, உறுதி - நற்பயன் விளைப்பதாகும்', என்ன - என்று (இராமபிரான் புகல) இளையவன் - இலக்குவன், வீரனை கை தொழுது - இராமபிரானை வணங்கி, இயம்பும் - கூறலானுன்.

உன்னிச் செய்கை - 'எண்ணித்துணிக கருமம்' (குறள். 467); ஒருப்படல் - மனம் பொருந்துதல். 'புகழை விரும்பினேர் சொல்லோடே யொருப்பட்டு' (தொல். மெய்ப்பாடு. 19 இளம்); மற்றும், சீவக. 180, 587, 1222 உரை. வீரன். 'வீரனஃது துரைத்த லோடும்' ஆரணிய. 262); இராமபிரானை வீரனென்றே தனித்துக் கூறிய இடங்கள் இந் நூலிற் பல. 375; சுந்தர. 1273; உயுத்த. முதற்போர். 146. உயுத்த கும்ப. 138; உயுத்த. மூலபல. 58. இச் செய்யுளை இலக்குவன் கூற்ருக்கலுமாம்.

பி - ம். 1. இந்நற் சேனையை; யிருந்தவ னோக்க.
2. பின்னற் காரியம், பின்னை யேயது; பார்த்து மேல், பிடித்து மேல்; உன்று மேல்பல நாள்கழிந் தோடுமற் றதின்யாம்.
3. முன்னைச் செய்கைமேல்; ஒருப்பட முன்னுவது.
4. இனையன விளம்பும். (31)

இலக்குவன் கூற்று

720. யாவ தெவ்வுல கத்தினி னீங்கிவர்க் கியற்றல்
ஆவ தாகுவ தரியதொன் றுளதென லாமே
தேவ தேவியைத் தேடுவ தென்பது சிறிதால்
பாவந் தோற்றது தருமமே வென்றதிப் படையால்

'தேவ - தேவனே! ஈங்கு இவர்க்கு - ஈங்குள்ள வாநர வீரர்க்கு, எ உலகத்தினின் - எந்த உலகத்தில், இயற்றல் யாவது - செய்து முடிக்க வேண்டிய வினைகள் எவையோ, ஆகுவது - ஆகவேண்டிய அவ்வினை, ஆவது - எளிதில் கை கூடுவதாகும்; அரியது ஒன்று உளது எனல் ஆமே - (இவர்கட்குச்) செய்தற்கரிய காரியம் உண்டென்று சொல்லுதற்கு இடன் உண்டோ? தேவியை தேடுவது என்பது சிறிது - சீதா தேவியைத் தேடிக் கண்டு பிடிப்பதென்பது (இவர்களுடைய பேராற்றலுக்கு) மிகவும் எளிதான காரியமாகும்; இ படையால் - இந்தச் சேனையினால், பாவம் தோற்றது - பாவம் தோல்வியுற்றது; தருமமே வென்றது - தருமமே வெற்றிபெற்றது.

நல்லறத்தின் வழி நிற்கும் நமக்கு இச்சேனை கிடைத்தது, பாவம் ஒழிதற்கும் தருமம் தலையெடுத்தற்கும் ஓர் அறிகுறி என்றான் இலக்குவன். தேவ தேவியை; 'தெய்வ மங்கையர்க்கெல்லாம் திலகத்தை' பால. கோலங்காண். 16.

பி - ம். 2. அரியதென் றுள தெனலாமே, லாமோ.
3. தேடுவ மென்பது, தேடுவர் என்பது.
4. பாவம் வீழ்ந்தது தருமமே யுயர்ந்தது படையால். (32)

721. தரங்க நீரெழு தாமரை நான்முகன் றந்த
வரங்கொள் பேருல கத்தினின் மற்றைமன் னுயிர்கள்
உரங்கொண் மால்வரை யுயிர்படைத் தெழுந்தன வொக்கும்
குரங்கின் மாப்படைக் குறையிடப் படைத்தனன் கொல்லாம்

(மேலும் அவன்), 'தரங்கம் நீரெழு தாமரை நான்முகன் - அலைகள் வீசும் நீரில் முளைக்கும் தன்மைவாய்ந்த தாமரை மலரில் உதித்த பிரம தேவன், தந்த - படைத்த, வரம்கொள் பேர் உலகத்தினில் - மேன்மை பெற்ற பெரிய பூமியில் உள்ள, மற்றை மன் உயிர்கள் - பிற சீவராசி

களை, உயிர் படைத்து எழுந்தன - உயிர் பெற்று வந்தனவாகிய, உரம் கொள் - வலிமை செறிந்த, மால்வரை ஒக்கும் - பெரிய மலைகளைப் போன்ற, குரங்கின் மாபடைக்கு-இந்தப் பெரிய வானர சேனைக்கு, உறை இட-உறையிட்டுக் கணக்கிடுவதற்காக, படைத்தனன் கொல் ஆம் - சிருட்டித்தனன் போலும்;

தரங்க நீரெழுதாமரை - இயற்கை அடைமொழித் தொடர். உறை - பெரிய எண்ணைக் குறிப்பிட அடையாளமாக வைக்கும் சிறு பொருள்; 'அலருளோ னுதியாக வொழிந்தவே றுயிர்க ளெல்லாம் அரக்கருக் குறையும் போதா' (சுந்தர. 129); 'உறையிடவும் போதார்' (சுந்தர. 605); பதிற். 71. சீவக. 270. குறிப்புரை (திரு வேங்கடத். 34): இவற்றையும் காண்க. கொல் ஐயப்பொருளில்வந்தது.

பி - ம். 2. வரன்கொள் 4. கொல்லோ. (33)

722. ஈண்டு தாழ்க்கின்ற தென்னினி யெண்டிசை மருங்கும்
தேண்டு வார்களை வல்லையிற் செலுத்துவ தல்லால்
நீண்ட நூல்வலா யென்றன னிளையவ னெடியோன்
பூண்ட தேரவன் காதலற் கொருமொழி புகலும்.

'நீண்ட நூல்வலாய் - பெருமை வாய்ந்த நூல்களில் வல்லவனே! எண்திசை மருங்கும் - எட்டுத்திக்குகளின் இடங்களிலும், தேண்டுவார் களை - சீதாதேவியைத் தேடுதற்குரியார்களை, வல்லையின் செலுத்துவது அல்லால் - விரைந்து அனுப்புவதன்றி, இனி ஈண்டு தாழ்க்கின்றது என்- இனியும் இங்கிருந்து காலதாமதம் செய்தல் எதுபற்றி?,' என்றனன் இளையவன் - என்று இலக்குவன் சொன்னான்; (உடனே) நெடியோன்- பெருமை மிக்க இராமபிரான், பூண்டதேரவன் காதலற்கு - ஏழு பரிகள் பூட்டப்பெற்ற தேரினனான சூரியன் புதல்வன் சுக்கிரீவனுக்கு, ஒரு மொழி புகலும் - ஒரு வார்த்தை சொல்லலானான். (இதனை அடுத்த படலத்திற் காண்க)

ஈண்டு - காலம் இடம் என்ற இரண்டையும் குறித்து நின்றது. தேண்டுவார் - தேடுவார். சுந்தர. 525, 1262. நீண்ட நூல்வலாய் என்று இலக்குவன் தன் தமையனை விளித்ததும், பின்னர் நெடியோன்' என இராமபிரானைக் கூறியதும் அவதார ரகஸ்யத்தின் குறிப்புணர்த்த என்பதை உய்த்துணர்க. நீண்ட - திருவிக்கிரம அவதாரத்தில் பேருரு வெடுத்த எனினுமாம்.

பி - ம். 1. ஈண்டு தேய்கின்ற.
2. செலுத்திட வல்லாய்; செலுத்துத லியல்பால். (34)

தானைகாண்படலம் முற்றும்.

## 12. நாடவிட்ட படலம்.

இது, இராமபிரான் கட்டளைக்கிணங்கச் சுக்கிரீவன் சீதாப்பிராட்டியைத் தேடும்படி, வானரப் படைத்தலைவர்களை நாற்றிசைகளிலும் விடுத்த செய்தியை யுணர்த்தலைக் கூறும் படலம் என விரியும். இப் படலம் நாடலைப் படலம் என்று ஓர் சுவடியிற் காணப்படுகிறது.

இராமபிரான் சுக்கிரீவனிடம் வியந்து கூறியது.

723. வகையு மானமு மாறெதிர்ந் தாற்றுறு
பகையு மின்றி நிரந்து பரந்தெழு
தகைவில் சேனைக் கமைதி சமைந்ததோர்
தொகையு முண்டுகொ லோவெனச் சொல்லினான்.

(இராமபிரான் சுக்கிரீவனிடம்), 'வகையும் - அணிவகுப்பும், மானமும் - உடற்பற்றும், மாறு எதிர்ந்து ஆற்றுறு பகையும் - தமக்குள் எதிர்த்துப் போர்புரியும் விரோதத் தன்மையும், இன்றி - இல்லாமல், நிரந்து - வரிசையாக (ஒழுங்குபட்டு), பரந்து - பரவி, எழு - எழுந்துள்ள, தகைவு இல் சேனைக்கு - பிறரால் தடுத்தற்கரிய இந்தக் குரங்குச் சேனைக்கு, அமைதி சமைந்தது ஓர் தொகையும் - அளவமைந்த ஓர் எண்ணும், உண்டு கொல்லோ - உள்ளதா?' என சொல்லினான் - என்று வினவினான்.

வகை - இவ்விடத்துப் படை வகுப்பு முறை. வகையின்மை என்றதால் - அணிகளாக வகுக்கப்படுதலின்றித் தொகுதியாக வந்தன என்க. மானம் - உடற்பற்று; சுத்தவீரர்கள் தமது தலைவர்பால் அயின்ற செஞ்சோற்றுக் கடனைக் கழித்தலையே விழைவர்; அதாவது தன்மானம் பாராட்டுவர்; (ஒப்பு): 'சிறந்த வீரர்கள் உடற்பற்றை நீக்கி, உயிரும் மானமும் உடனில்லாமைக்கண் பின்னும் போவதாய உயிரை நீத்து எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை யெய்துவர்' (குறள். 97-9, பரி. உரை); 'நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப் போர்க்கோலம் செய்துவிட்டாற் குயிர்கொடா தங்குப் போகேன்' (உயுத்த. கும்ப. 156); தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத்தானவற், கொற்கத் துதவினா னாகுமாற் பிற்பிற், பலர் புகழ் செல்வம் தருமால் பலர்தொழ, வானக வாழ்க்கையு மீயுமாலன்னதோர், மேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ, தானேயும் போகு முயிர்க்கு' (தகடூர் யாத்திரை. படைச் செருக்கு 9); 'செருமுனைச் சென்று செஞ்சோற்றுக் கடன்கழிப் பதுவே

எனக்கினிப் புகழும் கருமமும் தருமமும்' என்றான் (வில்லி. பா. கிருட்டினன் தூது 255).

பி - ம். 1. மாறெதிர்ந் தாறுறு.
2. மின்றியெதிர்ந்து, கிறைந்து, திரந்து, திமிர்ந்து.
3. தகையில், சேனைக்கவதி, சமைத்ததோர்.
4. கொலாமெனச். (1)

சுக்கிரீவன் கூற்று

724. ஏற்ற வெள்ள மெழுபதி னிற்றவென்
றாற்ற லாள ரறிவின மைத்ததோர்
மாற்ற முண்டது வல்லது மற்றுமோர்
ஈற்று முண்டென் றிசைத்திடற் கொண்ணுமோ.

(அதுகேட்ட சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி), (இந்தக் குரங்குப் படையின் தொகை), 'ஏற்ற வெள்ளம் எழுபதின் இற்ற - தகுதிபெற்ற எழுபது வெள்ளம் என்னும் அளவினால் அமைந்துள்ளன! என்று, ஆற்றலாளர் அறிவின் அமைந்தது ஓர் மாற்றம் உண்டு - (கணக்கிடுவதில்) வல்லவருடைய அறிவினால் ஆய்ந்து கண்டதாகிய ஒரு சொல் உண்டு; அது அல்லது - அந்த வார்த்தையன்றி, (இதற்கு) - இச் சேனைக்கு, மற்றும் ஓர் ஈற்றும் உண்டு என்று இசைத்திடற்கு ஒண்ணுமோ - பிறிதான ஓர் முடிவெல்லை உண்டு என்று சொல்ல இயலுமோ'? (இயலாது.)

இந்த எழுபது வெள்ளம் என்ற கணக்கு பலவிடங்களிலும் குறிக்கப்பெற்றுள்ளது. சுந்தர. 520. 603; உயுத்த. கும்ப. 203; நாகபாசப் 98. போரில் பட்ட வானர வீரர்கள் அனைவருமே விண்ணடைந்து மீண்டும் புவிக்கண் போந்ததாகப் பிரமாத்திரப் படலம் 183-185-ஆம் செய்யுட்கள் கூறும்; அங்கே, 'நங்கள் காரிய மியற்றுவா னுலகிடை நடந்தீர், உங்க ளாருயி ரும்முயி ருடல் பிறிதுற் றீர், செங்க ணுயகற் காகவெங் களத்திடைத் தீர்ந்தீர்.'; 'மண்ணிற் செல்லுதி ரிக்கணத் தேயென வந்தார்' 'நீர்படக் கடவீரலீர்' என்பன காண்க. உயுத்த. பிரமாத்திர. 183, 184, 185 காண்க. சேனையின் தொகை இற்றெனக் கணித்தற் கில்லை; பெரியோர் அறிந்து கூறியதையே ஏற்றுக்கோடல் தகும் என்றான்; இவ்வண்ணமே 'இராம இராவணப் பெரும்போரில் இறந்துபட்டவரின் தொகையை நன்னான் மறையோன் நாற்பது வெள்ளமென்னச் சொன்னான், எனப்பட்டதும் காண்க.

பி - ம். 1. எழுபதி னேற்றமென், எழுபதி னுறைந்ததோர்; எழுபதென் றெண்ணத்தின், எழுபதென் றறைமறை, எழுபது நிற்கவென் எழுபதி னிற்றரு 2. ஆற்றலின் ; னறிவின் ; னுறைந்ததோர்.

3. மற்றொரு, மற்றுமே; மற்றுமென்.

4. தென்னமுன் செல்வமோ, மின்றிதற் கென்று, தோற்ற முண் டிதற் கென்னை முன் சொல்லுமே. (2)

இராமபிரான்மேல் இயற்ற வேண்டியவற்றை இயற்றத் தூண்டுதல்

725. என்று ரைத்த வெரிகதிர் மைந்தனை
வென்றி விற்கை யிராமன் விருப்பினுன்
நின்றி னிப்பல பேசியென் னேநெறி
சென்றி ழைப்பன சிந்தனை செய்கென்ருன்

என்று உரைத்த - என்று இவ்வாறு கூறிய, எரிகதிர் மைந்தனை - வெம்பும் கிரணங்களையுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவனை, வென்றி வில்கை இராகவன் - வெற்றியையே விளக்கும் கோதண்டம் என்னும் வில்லைத்தாங்கிய இராமபிரான், விருப்பினுன் - அன்புடன் நோக்கி, 'இனி நின்று பல பேசி என்னே - இனிமேல் தாமதித்துப் பலபட உரையாடு வதால் நிகழும் பயன்யாது ? நெறிசென்று இழைப்பன - முறையாகச் செயலாற்றும் வழியை மேற்கொண்டு இயற்ற வேண்டுவனவற்றைக் குறித்து, சிந்தனை செய்க - எண்ணுவாயாக', என்ருன் - என்று சொன் ஞன்.

எரிகதிர்; வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. வென்றி விற்கை இராமன் - என்றும் வெற்றியே யன்றித் தோல்வியை யறியாத கோதண்டத்தை ஏந்தியவன் ; இராமனைப்பற்றிக் குறிக்கும் போதெல்லாம் அவனுடன் வில்லையும் இணைத்துக் கூறுவதை இந் நூலிற் பல விடங்களிலும் காணலாம். பாயிரம். சுந்தர. 1273. உயுத்த. ஒற்றுக்கேள்வி. 13 ; இலங்கை கேள்வி. 45 ; மருத்துமலை 107 ; வேலேற்ற 14 ; முதலியன காண்க.

பி - ம். 2. உரைக்கு மைந்தற்கு.

2. வென்றி வேற்கை ; விரும்பினல், விரும்பினுன், விளம்பினுன் விளம்புவான். 3. இன்றினி ; எனுநெறி

4. செய்யென்ருன், செய்மின்ருன். (3)

சுக்கிரீவன் பிராட்டியைத் தேடுமாறு அநுமன் முதலியோரைத் தென்றிசைக்கண் அனுப்புதல்

726. அவனு மண்ண லநுமனை யையநீ
புவன மூன்றுநின் றாதையிற் புக்குழல்
தவன வேகத் தொருதனித் தன்மையால்
கவன மாக்குரங் கின்செயல் காட்டுவாய்

அவனும் - அந்தச் சுக்கிரீவனும், அண்ணல் அநுமனை, பெருமையிற் சிறந்த அநுமனை(ப்பார்த்து) 'ஐய-ஐயனே! நீ-நீ, புவனம் மூன்றும் - மூன்றுலகத்திலும், நின் தாதையின் - உன் தந்தையாகிய வாயுவைப் போன்று, புக்கு உழல் - புகுந்து சஞ்சரிக்கின்ற, தவனம் வேகத்து - (உன்னுடைய) மிக்க வேகத்துடன் கூடிய, ஒரு தனி தன்மையால் - மிகவும் ஒப்பற்ற தன்மையுடன் கூடிய உனது, கவனம் மா குரங்கின் செயல் காட்டுவாய் - விரைந்து செல்லக்கூடிய பெரிய குரங்கின் (ஆற்றலுடன் கூடிய) செய்கையைக் காண்பிப்பாயாக.

இது முதல் ஐந்து செய்யுட்கள் ஒரு தொடர். இவை சுக்கிரீவன் அநுமனுக்குக் கூறியவை. தாதையில் - வாயுபகவான் மூவுலகங்களும் தடையின்றிச் சுற்றுதலின் சதாகதி எனப் பெயர் பெற்றான். தவன வேகம் - ஒரு பொருட் பன்மொழி; தவனன் - தபனன், சூரியன் என்று கொண்டு அவன் வேகம் போன்று எனினுமாம்.

பி - ம். 1. நோக்கினே. 2. உன் தாதையிற்; புக்குறும்.
3. ஓர்கலே, ஓர்கிலே; தாழ்ந்தனே. 4. காண்டியோ. (4)

727. ஏகி யேந்திழை தன்னை யிருந்துழி
நாக நாடுக நானில னாடுக
போக பூமியும் நாடுக புக்குநின்
வேக மீண்டு வெளிப்பட வேண்டுமால்

'நீ - நீ, ஏகி - (இங்கிருந்து) சென்று, ஏந்து இழை இருந்த உழி தன்னை - அணிந்த அணிகளையுடையவளாகிய சீதாப்பிராட்டியிருக்கும் இடத்தை, நாகம் நாடுக - நாகர்கள் உறையும் பாதலத்தில் சென்று புக்குத் தேடுவாயாக; நானிலன் நாடுக-பூமியிலும் தேடுக; போக பூமியும் நாடுக - போக பூமியான சுவர்க்கலோகத்திலும் புகுந்து தேடுக; நின் வேகம் ஈண்டு வெளிப்படவேண்டும் - உன்னுடைய வேகம் இப்போதே இந்த இடத்திலேயே வெளியாக வேண்டும். ஆல் - அசை.

மூன்று உலகங்களிலும் சென்று சீதாப்பிராட்டியாரைத் தேடுமாறு சுக்கிரீவன் அநுமனுக்குக் கூறினன் என்க. ஏந்திழை - அன்மொழித் தொகை. இருந்த உழி என்பது செய்யுள் நோக்கித் தொகுத்தது. போக பூமி - உயிர்கள் புண்ணிய மிகுதியாற் சென்று போகங்களைத் துய்க்கும் சுவர்க்கம். நாகம் சுவர்க்கம் என்றும் போக பூமி பாதலம் என்றும் கொள்வர். இங்கு பல உலகங்களை நாடுமாறு பொதுவாகக் கூறி' இனிவரும் செய்யுட்களில், அநுமன் தென்திசை படர்ந்து ஆற்ற வேண்டுவதை விளக்குகின்றான்.

பி - ம். 1. *யேந்திழை யிருந்தழிஇ; யாடன் திறத்தினில்.*

2. *நாகநாடுகள்.*

3. *மாக வானக, பொருந்திட, பொருந்துக; வல்லினின்.*

4. *வேண்டுமே, வேண்டுமோ.* (5)

728. தென்றி சைக்க ணிராவணன் சேணகர்
என்றி சைக்கின்ற தென்னறி வின்னணம்
வன்றி சைக்கினி மாருதி நீயலால்
வென்றி சைக்குரி யார்பிறர் வேண்டுமோ.

'இராவணன் சேண் நகர் - இராவணனுடைய உயர்ந்து அகன்று நீண்ட இலங்காபுரி, தென் திசைக் கண் - தெற்குத்திக்கில் (உள்ளது) என்று - என்று, என் அறிவு இன்னணம் இசைக்கின்றது - எனது நினைவு இவ்வாறு உணர்த்துகின்றது; மாருதி - அநுமானே! இனி - இப்போது, வல் திசைக்கு - வலிய அந்தத் திக்கில் சென்று, வென்று - ஆங்குள்ள அரக்கரை வெற்றிகொண்டு, இசைக்கு - புகழ் பெறுதற்கு, உரியார் - தகுதி யுள்ளவர், நீ அலால் பிறர் வேண்டுமோ - நீ ஒருவனே யன்றி வேறு ஒருவரும் வேண்டப்படுவதோ?

'வெவ்வழி யிராவணன் கொணர மேலைநாள் செவ்வழி நோக்கினன்' (194) எனச் சுக்கிரீவன் கூறியுள்ளமை காண்க. சுக்கிரீவன் நினைவில் தோன்றிய' இதே செய்தி சடாயு இராவணன் போர் கொண்டும்; ஆரணிய. 967; 970: 971, 982, 1004, 1008; கிட்கிந்தா. 954, 973; சுந்தர. 622, 578. என்ற செய்யுட்களாலும் உறுதி பெறுவது காணலாம். இன்ன வண்ணம் என்பது இன்னணம் எனத் தொகுத்தது. வன் திசை - தென்னிலங்கையில் வாழும் அரக்கருடைய வன்மை தென் திசையின் மேல் ஏற்றப்பட்டது; உபசார வழக்கு. எல்லா உயிர்களையும் கவரும் மறலிதிசை யானதாலும்,

வீரம் செறிந்த இராவணன் அங்கு ஆட்சி புரிவதாலும், தென்றிசை வன்றிசை எனப்பட்டதுமாம்.

பி - ம். 1. இராவணன் சேனைகள்.
2. பொன்னறி விள்ளலம்; தாதலி னெய்து மவ்.
3. மாகறி; நீவலாய். 4. பிறர்; மேலையோய். (6)

729. தாரை மைந்தனுஞ் சாம்பனுந் தாமுதல்
வீரர் யாவரு மேம்படு மேன்மையார்
சேர்க நின்னொடுந் திண்டிறற் சேனைகள்
பேர்க வெள்ள மிரண்டொடும் பெற்றியால்.

'தாரை மைந்தனும் - தாரையின் புதல்வனாகிய அங்கதனும், சாம்பனும் - ஜாம்பவானும், முதல் - முதலாகிய, மேம்படு மேன்மையார் வீரர் யாவரும் - மிகவும் சிறப்பு வாய்ந்த தகுதியான வீரர் எல்லோரும், நின்னொடும் சேர்க - உன்னுடன் (உறுதுணையாக) வருவார்களாக; வெள்ளம் இரண்டொடும்-இரண்டு வெள்ளம் என்னும் தொகையுடனே, திண் திறல் சேனைகள் - மிக்கவலிமை வாய்ந்த படைகள், பெற்றியால்-போர் வீரர்க்கமைந்த பெருமையோடு, பேர்க - உங்கட்கு உதவியாகப் புறப்படட்டும் (எனக்கூறி). தாம் - அசை.

சாம்பன் இவன் பிரம புத்திரன்; கரடிகட்கு அரசன். மிகவும் பழமையைக் குறிக்கும்போது, ஜாம்பவான் போன்று எனக் குறிப்பது வழக்கு. 'மாலியைக் கண்டேன் பண்டை மாலியவானைக் கண்டேன். கால நேமியையுங் கண்டே னிரணியன் றனையும் கண்டேன், ஆல மாவிடமும் கண்டேன்' (உயுத்த. மூலபல. 52); என்ற கூற்றினைக் காண்க. அநுமனுடன் ஜாம்பவானையும் அங்கதனையு மன்றி, சுகோத்திரன், சராரி, சரகுல்மன், கஜன், கவாக்ஷன், கவயன், சுசேணன், ருஷபன், மைந்தன் முதலியோரையும் அனுப்பினன் என்று முதனூல் கூறும்.

பி - ம். 1. சாம்பனு நீலனும்.
2. வீரராய, யாரினும்; மேன்மையால், மேன்மையோர்.
3. சேரநின் னொடும்: திண்டிறற் சேனையும்.
4. மிரண்டொகு பெற்றியால்; சாரும் வீரரை-நோக்கினன் -சாற்று வான்.

இதன்பின் ஓர் அதிகப்பாடல்.

சாரும் வீரர் சதவலி தம்மொடும்
கூரும் வீரர்கள் யாவரும் கூடியே
நீரு நும்பெருஞ் சேனையு நின்றிடாப்
பேரும் பேதையைத் தேடுறும் பெற்றியால். (7)

730. வள்ள லேவியை வஞ்சித்து வெளவிய
கள்ள வாளரக் கன்செலக் கண்டது
தெள்ளி யோயன்று தென்றிசை யென்பதோர்
உள்ள மும்மெனக் குண்டென வுன்னுவாய்.

'தெள்ளியோய் - தெளிவான அறிவுடையவனே! வள்ளல் தேவியை வஞ்சித்து வெளவிய - சிறந்த கொடையாளனான, இராம பிரானின் மனைவியான சீதாப்பிராட்டியை வஞ்சனையால் கவர்ந்து சென்ற, கள்ளம் வாள் அரக்கன் - கள்ளத்தன்மை வாய்ந்த கொடிய அரக்கனாகிய இராவணன், அன்று செல கண்டது - அந்நாளில் போகக் கண்டதான (அந்தத் திக்கு), தென் திசை - தெற்குத் திசை யாகும், என்பது - என்பதாகிய, ஓர் உள்ளமும் - ஓர் நினைவும், எனக்கு உண்டு - என்பால் நிகழ்ந்ததுண்டு.' என உன்னுவாய் - என்று நீ கருதுவாயாக.

வள்ளல் - இராமபிரான்; ஆரணிய. 149, 266, 309; உயுத்த. அங்கதன் தூது: 1; அணிவகுப்பு. 26; இராவணன் சோகப். 256. வஞ்சித்த; 'வஞ்சித்த நாய்களின்' (சுந்தர. 620). கண்டது - பிராட்டி தன் கலன்களை ஓர் முடிப்பில் பொதிந்து எறிந்ததைக் கண்டது. தெள்ளியோய்: கற்றுணரு மாருதி (உயுத்த. ஒற்று. 6).

பி - ம். 3. தெள்ளி யோயது; யென்பதன்.
4. உன்னுமால். (8)

பிராட்டியைத் தேடவேண்டிய இடங்களைக் குறிப்பித்தல்

731. ஈண்டு நின்றெழுந் தீரைந்து நூறெழில்
தூண்டு சோதிக் கொடுமுடி தோன்றுமால்
நீண்ட நேமிகொ லாமென நேர்தொழ
வேண்டும் விந்தம லையினை மேவுவீர்.

(அவர்களை நோக்கிச் சுக்கிரீவன்), 'நீங்கள் - நீங்கள், ஈண்டு நின்று எழுந்து - இங்கிருந்து கிளம்பி, எழில் தூண்டு சோதி - அழகு மிக்கு ஒளி விடுகின்ற, ஈர் ஐந்து நூறு கொடு முடி தோன்றுமால் - ஆயிரம் சிகரங்கள் காணப் பெறுவதால், நீண்ட நேமி கொலாம் என - பெரு வடிவு கொண்ட திருமால்தானோ? என்று, நேர் தொழ வேண்டும் - எதிர் சென்று வணங்கற்குரிய, விந்த மலையினை - விந்திய மலையை, மேவு வீர் - முதற்கண் சென்று அடைவீராக.

ஆயிரம் முடிகளை யுடைய திருமாலை ஆயிரம் முடிகளையுடைய விந்தியமலைக் குவமையாக்கினர். திருமாலுக்கு ஆயிரம் முடி, 'சகஸ்ர ஸீர்ஷா புருஷ:' என்பது புருடசூக்தம்; தோள்க ளாயிரத்தாய், முடிக ளாயிரத்தாய், கண்ணி முடிச்சிகர மாயிரம் என்பன காண்க. நேமி என்பது சுதரிசனம் என்னும் ஆழிப்படையுமாம். அதற்கும் ஆயிரம் ஆரங்கள் உளவாகலின் உவமை நன்கு பொருந்தும். விந்த்யம் என்ற வடசொல் விந்தம் எனத் திரிந்தது இஃது சூரியன் செலவைத் தடுத்ததாகவும் அகத்திய முனிவர் அதனை அடக்கியதாகவும் வரலாறுகள் உண்டாகலின், ஈர் ஐந்து நூறு கொடுமுடி என அதனைச் சிறப்பித்தார். ஆரணிய. 156; நன்னெறி. 37; தக்கயாகப் பரணி. 40. அநுமன் முதலியோர் செல்ல வேண்டிய வழியைக் குறித்து முதனூலுக்கும் இந்நூலுக்கும் வேற்றுமை காணப்படும். விந்தியமலை மதங்காசிரமத்துக்கு வடக்கே யுள்ளது. அவ்வாறாகவும் தெற்கு நோக்கி விந்திய மலைக்குச் செல்லுமாறு கூறப்பட்டது. இவ்வாறே பிற இடங்களையும் பற்றிச் சங்கைகள் ஆங்காங்கு எழுகின்றன. இவை ஆராய்தற் குரியன.

பி-ம். 1. ஈண்டு கின்றிறந்து; நூற்றெழில்.
2. தோன்றலான், தோன்றலால்.
3. நீண்டமேனி கொள்; மாலென நேர்தொழ, கொலாமென்னெதிர் தொழா, கொலாமென நேர்ந்தெழ.
4. விந்தத் திருமலை; மேவுதிர். (9)

732. தேடி யம்மலை தீர்ந்தபின் றேவரும்
ஆடு கின்ற தறுபத மைந்தினைப்
பாடு கின்றது பன்மணி யாலிருள்
ஓடு கின்ற நருமதை யுன்னுவீர்.

'அ மலை தேடி தீர்ந்தபின் - அந்த விந்திய மலையில் பிராட்டியைத் தேடி முடிந்த பின்னர், தேவரும் ஆடுகின்றது - தேவர்களும் வந்து நீராடப் பெறுவதும், அறுபதம் ஐந்தினை பாடுகின்றது - (வெள்ளத்தால் அடித்துக் கொண்டு வரப்பெற்ற மலர்களில் உள்ள தேனைப் பருகி அந்தக் களிப்பால்) வண்டுகள் பஞ்சமம் என்ற சுரத்தைப் பாடப் பெறுவதுமான, பல் மணியால் இருள் ஓடுகின்ற - பலவகை இரத்தினங்களின் ஒளியால் இருட்டுக் கழிதற்குக் காரணமான, நருமதை - நருமதை என்னும் நதத்தை, உன்னுவீர் - கருதுவீராக,

தேவர்களின் நீராட்டத்தால் தூய்மையும், வண்டுகள் இசை பாடுதலால் இனிமையும், மணி ஒளியால் இருள் நீங்குகின்றமையின் செல்வ வளனும் பெற்றது அந் நததீரம் என்க. அறுபதம் - வண்டு. ஐந்தினைப் பாடுகின்றது - இது சட்ஜமம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற சுரங்களில் மிக இனியதான பஞ்சமத்தைக் குறிக்கும். அறுபதம் - அறுகால் எனவும் வழங்கும். பதம் - பாதம்; 'பூ நக்கி ஆறுகால்' என்ற இடத்து ஆறுகால் சிலேடையில் அமைந்துள்ளமை காண்க. அறுபதம் ஐந்தினைப் பாடுகின்றது என்ற இடத்து முரண் அணி காணலாம். மணிகள் இருளினைப் போக்குமோ எனின், 'இருள் பருகு மருமணி' (சீவக. 169); என்ற இடத்து நச்சினார்க்கினியருரைகண்டு இதன் உண்மை யுணர்க. மற்றும், 'விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலம் பொங்க, மரகதம் ஒளிகொள் நீல மணிவிளக் கிமைக்கும் சோதி' (பெரியபு. கண்ணப்ப. 13); 'மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும், எந்தையார் திருக்காளத்தி மலையினி னிரவொன் றில்லை' (பெரியபு. கண்ணப்ப. 131): என்பன காண்க. நருமதை - இஃது ஏழ் புண்ணிய நதிகளில் ஒன்றென்ப. இந்நதி கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிச் செல்லுவதால் நதம் எனப்படும். இதைப்போன்ற பிறிதொரு நதம் தபதி என்ப.

பி - ம். 1. தேடியவ்வரை, யவ்வழி; தேர்ந்தபின்.

2. மாடுநின்ற் தம்பத, மைந்தனே, வந்தினை, ஐந்தினை.

3. பற்பல; மாலிருள், பாயிருள், பாவிருள், வாவியுள்.

4. நாடுகின்ற; நாடுவீர், யுந்துவீர், யெய்துவீர். (10)

733. வாம மேகலை வானர மங்கையர்
காம வூசற் களியிசைக் கள்ளினால்
தூம மேனி யசுணந் துயில்வுறும்
ஏம கூட மெனுமலை யெய்துவீர்.

(அங்கிருந்து), வாமம் மேகலை வான் அர மங்கையர் - அழகிய மேகலை யணிந்த தேவ மாதர்கள், காமம் ஊசல் களி இசை கள்ளினால் - விருப்பத்தை விளைக்கும் ஊசலாடுகையில் மகிழ்ச்சியாற் பாடுகின்ற இசையாகிய மதுவினால், தூமம் மேனி அசுணம் துயில்வு உறும் - புகை போன்ற கரிய நிறத்தையுடைய அசுணமாக்கள் உறங்குதற்கு இடமான, ஏம கூடம் எனும் மலை - ஏமகூடம் என்னும் மலையை, எய்துவீர் - சென்று சேருங்கள்.

வாமம் மேகலை - அயோத். மந்தரை. 21. அசுணமா - இசையறியும் ஓர் விலங்கு; கம்ப. பாயிரம். 8, அயோத், சித்திரகூட. 24; (சீவக. 1402); (பெருங். 1, 47; 241); (சூளா. நாட்டுச். 28); (மேரு மந்தர. வைசயந்த. 44); இசை பாடியே இம் மாவினை அகப்படுத்துவர் என்ப: 'கான வேட்டுவர் இசைபாடி மிருகங்களை அழைத்துக் கொன்றாற் போல்வதெனக் கொள்க' என்பது தக்க. பக். 201 உரை. 'அசுணம் கொல்பவர் கைபோல் என்றும், இன்பமும் துன்பமும் உடைத்தே' (நற். 304); அசுண மாவினை இசை யறிவதோர் புள் என்றும் சிலர் கூறுவர். ஏமகூடம் எட்டுக் குலக்கிரிகளில் ஒன்று. தூம மேனியர் - அகிற்புகை கமழும் மேனியர் என்பது பழைய உரை.

பி - ம். 1. வானவர் மங்கையர்.
2. காமபூசை, காமபூசம்; களிகிறை. களியுறை; தள்ளினர்.
3. தூப மேனியர், கன்னி; மயல்வுறும்.
4. மலைதனை. (11)

734. நொய்தி னம்மலை நீங்கி நுமரொடும்
பொய்கை யின்கரை பிற்படப் போதிரால்
செய்ய பெண்ணைக் கரைப்பெண்ணை யிற்சில
வைக லேடிக் கடிது வழிக்கொள்வீர்.

'அம்மலை - அந்த ஏம கூட மலையினின்றும், நொய்தின் நீங்கி - விரைவாக அகன்று, நுமரொடும் - உங்கள் வானர வீரர்களுடனே, பொய்கையின் கரைபின்பட போதிர் - (ஆங்குள்ள) தடாகத்தின் கரை பின்னாகும்படி (அதை விடுத்து) அப்பாற் சென்று, செய்ய பெண்ணை - சிவப்பு நிறம்வாய்ந்த சீதாப்பிராட்டியை, பெண்ணை கரையில்-பெண்ணை நதிக்கரையில், சிலவைகல் தேடி - சில நாட்கள் தேடிப்பார்த்து, கடிது வழி கொள்வீர் - விரைந்து மேற் செல்லுங்கள். ஆல் - அசை.

செய்ய பெண் - செய்யவள் என்று வழங்கும். 'செய்யவள் இருந்தாள் என்று' (பால. மிதிலைக். 11).

பி - ம். 1. நாடி; நம் நகர்வெனும் செய்யபெண்ணைக் கரிய.
2. போகியே, போக்கிரால்.
3. கரிய பெண்ணைச் சில.
4. வைகல் செல்பகல் தேடிப்பின், கைதையாறு; கடிது, நெடிது.

735. தாங்கு மாரகிற் றண்ணறுஞ் சந்தனம்
வீங்கு வேலி விதர்ப்பமு மெல்லென
நீங்கி நாடு நெடியன பிற்படத்
தேங்கு வார்புனற் றண்டகஞ் சேர்திரால்.

'தாங்கும் - நறுமணத்தைக் கொண்ட, ஆர் - ஆத்தியும், அகில் - அகில் மரங்களும், தண் நறும் சந்தனம் - குளிர்ந்த நறிய மணமுள்ள சந்தன மரங்களும் (ஆகியவற்றை), வீங்குவேலி-பருத்துப்பரந்த (காவல்) வேலியாகக் கொண்ட, விதர்ப்பமும் - விதர்ப்ப நாட்டையும், மெல்லென நீங்கி - அமைதியாகத் தாண்டி, நெடியன நாடு பின்பட - பல காதங் கள் நீண்ட பல நாடுகளும் உமக்குப் பின்புறத்தன ஆகுமாறு, தேங்கு வார்புனல் தண்டகம் சேர்திர் - மிக்க நீர் செறிந்த தண்டக வனத்தைச் சென்றடைவீராக. ஆல் - அசை,

மூங்கில் முதலிய முள் வேலிகளன்றி அகிலும் சந்தன மரங்களுமே வேலியாக அமைந்த விதர்ப்பம் என்று அந்நாட்டின் வளப்பம் குறிக்கப் பெற்றது. ஒப்பு. 'நெல்லின் வேலி நீடிய கரும்பின்' (புறம். 16); 'கரும்பலாக் காடொன்றில்லாக் கழனி' (சீவக. 2902). தற்காலம் பீஹார் எனும் பிரதேசமே பண்டை விதர்ப்பம் என்ப, கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய போகப் பொருள்கள் நிறைந்த இடம் விதர்ப்ப மாகலின் அதனை 'மெல்லென நீங்கி' எனப்பட்டது. 'நெடியன நாடு பிற்பட' (ஒப்பு): 'சடைச் செந்நெல் பொன்விளைக்கும் தன்னாடு பின்னா' (நள. 67). தேங்குதல் - நிறைதல்; தங்கி நிற்றலும் ஆம். 'தேங்கு கங் கைத் திருமுடிச் செங்கணான் (சுந்தர. 350). வார்புனல் - ஓடுகின்ற புனலுமாம்; 'வார் மணிப் புனலான்' (அயோத். குகப். 39): தண்டகம். இக்குவாகு மக்களுள் ஒருவனான தண்டன் என்பவன் சுக்கிராசாரி யாரின் மகள் அரஜை என்பவளை வலிந்து புணர்ந்து கற்பழித்ததனால் அவரால் சபிக்கப்பட்டு இறக்க, அவன் நாடு மண் மாரி பெய்தழிந் தது தண்டகவனமாகியது என்பது வரலாறு.

பி - ம். 1. *தாங்குவாரகிற் தாங்குவாரகில், மாதனை; றந்தன மூந்தக. தனியளர் சந்தனம்.*
2. *வீங்கு வேள்வி ; வெய்நினில்.*
3. *நீங்கி நாடுதிர் ; நின்றது பிற்பட.*
4. *தேங்கு நற்புனல்.* (13)

736. பண்ட கத்தியன் வைகிய தாப்பகர்
தண்ட கத்தது தாபதர் தம்மையுட்
கண்ட கத்துயர் தீர்வது காண்டிரால்
முண்ட கத்துறை யென்றொரு மொய்ம்பொழில்.

'(அதன் பின்னர்) முண்டகத்துறை, என்ற ஒரு மொய்ம்பொழில் - முண்டகத் துறையென்று (புகழ்ந்து) சொல்லப்படுகின்ற மரங்கள் செறிந்த ஒரு சோலையானது, பண்டு அகத்தியன் வைகியது ஆ பகர் - பழங்காலத்து அகத்திய முனிவர் வாசம் செய்ததாகக் கூறப்படுகின்ற, தண்டகத்தது - தண்டகாரணியத்தில் உள்ளது; தாபதர் தம்மை உள் கண்டு - தவம்புரியும் முனிவர்கள் தமது ஆன்ம வடிவத்தைத் தம் மனத்துக் கண்டு, அகம் துயர் தீர்வது - தங்கள் மனத் துன்பம் நீக்குவ தற்குக் காரணமாயிருப்பது; (அதனை), காண்டிர் - சென்று காண்பீராக. ஆல் - ஈற்றசை.

அகத்தியர் முத்தமிழ் இலக்கணம் வகுத்த முனிவர்; இவரது வர லாறும் பெருமையும் இந்நூலில் நன்கு சிறப்பிக்கப் பெற்றுள்ளன; ஆரணிய காண்டம் 152 முதல் 160 செய்யுட்களைக் காண்க. இந்த முண்டகத் துறையின் சிறப்பு, வடமொழியில் பாணகவி இயற்றிய காதம்பரி என்ற நூலில் காணப்படும். தாபதர் - தவம்புரிபவர்; 'இருவர் மானிடர் தாபதர்' (ஆரணிய. 365). மொய்த்தல் - அடர்தல்; அகத் தியன் பண்டுவைகியது என்று கூட்டியுரைத்தலுமாம், இனித்தாபதர் தம்மை யுட்கண்டு என்பதற்குத் தவம்புரியும் முனிவர்கள் தன்னிடத்துக் காணப்படுவதால், காண்பவர் தங்கள் துன்பம் நீங்கக் காரணமாயிருப் பது என்றும் பொருள் கொள்வர். தமது ஆன்ம வடிவைத் தம்மனத்துக் காண்பது சாலச்சிறந்த யோகநெறி; இதனை ஆன்ம சாட்சாத்காரம் என்பர். முண்டகம் - முள்ளைத் தன்னகத்துக் கொண்ட பலவற்றிற்கும் வழங்குமேனும் சிறப்பாகத் தாமரையைக் குறிக்கும் காரண இடுகுறிப் பெயர். முக்கண்ணன், அந்தணர், முள்ளி என்பனபோல. முண்டகம் நீர்முள்ளியுமாம். இந்தக்கவி விற்பூட்டு என்பது பழையவுரைக் குறிப்பு. முண்டகத்துறை தண்டகத்தைச் சார்ந்தது. பண்டகத்தியன் வைகியது என்றது கேட்டறிதற்பாலது. அகத்தியர் தண்டக வனத்தும், பொதிய மலையிலும் மற்றும் தென்னாட்டிற் பல இடங்களிலும் இருந்ததாக வரலாறுகள் உண்டு. 'தம்மையுட் கண்டது - தன்னையும் தலைவனையும் உணர்ந்தது' என்பது பழையவுரை.

பி - ம். 1. *வைகுனும், நியாம்பகர், நியான்பதர், பாங்கரத்.*
2. *தண்டகத்துயர் தாபதர், தறுதாபதர், தறைதாபதர், தீர்வது காண்டிரால்.*
4. *யுண்டொரு, யென்பதோர், மொய்பொழில்.* (14)

737. ஞால நல்லறத் தோருன்னு நற்பொருள்
போல நின்று பொலிவது பூம்பொழில்
சீல மங்கையர் வாயெனத் தீங்கனி
கால மின்றிக் கனிவது காண்டிரால்.

'பூம் பொழில் - மலர்கள் நிறைந்த (முண்டகத்துறை என்னும்) அப்பூஞ் சோலையானது, ஞாலம் - பூவுலகத்துள்ள, நல்லறத்தோர் உன்னும் நற்பொருள்போல - சிறந்த தரும சிந்தையுள்ளவர்கள் கருதுகின்ற நல்ல பொருள்போன்று, நின்று பொலிவது - நிலைபெற்று ஒளிர்வது; சீலம் மங்கையர் வாய் என-நல்ல பண்பொழுக்கமுள்ள மாதர்களினுடைய வாயிதழ் போன்று, தீம்கனி - இனிய பழங்கள், காலம் இன்றி கனிவது - (இன்ன காலம் பழுத்தற்குரிய காலம்) என்று காலவரையறையின்றி எக்காலத்தும் பழுக்கப்பெறுவது ; காண்டிர் - அதனை அங்குக் காண்பீராக. ஆல் - அசை.

முண்டகத் துறைக் கண்ணுள்ள மரங்களெல்லாம் சிறந்த பயன் மரங்கள் என்பதும், எக்காலத்தும் மாறாது இனிய கனிதருவன வென்பதும் இங்கே குறிக்கப்பட்டன. ஞாலம் - இடவாகு பெயராக ஞாலத்தில் உள்ளோரைக் குறிக்கும். நல்ல அறச்சிந்தையுள்ளவர்களின் செல்வம் உலகத்துள்ளார்க்கும் பயன்படும் ; 'ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம் பேரறி வாளன் திரு ; 'பயன்மரமுள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம் நயனுடை யான்கட்படின்' (குறள். 215, 216). கனிபோன்ற வாயென்னது மகளிர் - வாய்போன்ற கனியென்றது எதிர் நிலையணி. காலமன்றிக்கனிவது புறநா, 116; மலைபடு. 134 ; பெருங். இலாவாண. 20. 61-63.

பி - ம். 1. ஞால நன்குறு, நன்குற, நன்குறும், நல்கிறும்; ஞால நல்லறத் தோர்பொரு ளுண்ணுமா, நல்லறத் தோருன்னு நற்பொருள், தொல் பொருள்.
2. பொலிவன, பொழிவன ; போய்ப்பொதி, பொய்யிலா, பொய் தவிர் ; பொய்யொழி ;
3. காலமன்றிக் கனிவன ; (15)

738. நயன நன்கிமை யார்துயி லார்நனி
அயன மில்லை யருக்கனுக் கவ்வழி
சயன மாதர் கலவித் தலைத்தரும்
பயனு மின்பமு நீரும் பயக்குமால்.

'(அத் துறையில் உள்ளவர்கள்) நயனம் நன்கு இமையார் - கண் நன்றாக இமைக்க மாட்டார்கள்; நனி துயிலார் - மிகவும் உறங்கமாட்

டார்கள் : அருக்கனுக்கு - சூரியனுக்கு, அவ்வழி - அவ்விடத்தில், அயனம் இல்லை - (புகுதற்குரிய) வழிகிடையாது ; (அவ்விடம்) சயனம் மாதர் கலவிதலைத்தரும் பயனும் - படுக்கையில் மகளிரது சேர்க்கையில் உண்டாகின்ற சுகத்தையும், இன்பமும் - மகிழ்ச்சியையும், நீரும் - நீர்ச் செழிப்பையும், பயக்கும் - விளைக்கும். ஆல் - அசை.

நயனம் - வடசொல். மரங்கள் அடர்ந்து, செறிந்துள்ளன ஆகலின், 'அருக்கற்கும் அவ்வழி அயனம் இல்லை' என்றார். அயனம் செலவு. (ஒப்பு): 'மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்து' (திருமுருகு. 42). மற்றும், அகம். 368 ; புறநா. 21 ; பெரும்பாண். 374 ; பெருங். 1 : 33 : 27 ; திருக்கோ. 116 : பட்டினப். 182 - 185 ; சீகாளத்திப். கண்ணப்பர்.65. இவைகாண்க. அர்க்கன் என்ற வடசொல் அருக்கன் எனத் திரிந்தது. தலை ஏழனுருபு. இச் செய்யுளால், அங்கிருப்பவர் சுவர்க்க நாட்டவர் போன்று விளங்கி அங்குப் போகம் பல துய்க்கும் வளமுடையது என்பது அவ்விடம் பெறப்பட்டது. 'அயனமில்லை அருக்கனுக்கு என்பதற்குத் தெற்கு வடக்கு ஆதித்தனுக்குப் போகப் படாது' என்பது பழையவுரை.

பி - ம். 1. நன்னிலைம யாதெனி, தயிலாகனி, நல்லம ளித்துயில்.
2. அருக்கனு மவ்வழி.
3. தங்கல வித்தலை, தலைவரும்.
4. பலனு மின்பமும். (16)

739. ஆண்டி றந்துபின் னந்தரத் திந்துவைத்
தீண்டு கின்றது செங்கதிர்ச் செல்வனும்
ஈண்டு றைந்தல தேகல மென்பது
பாண்டு வின்மலை யென்னும் பருப்பதம்.

'ஆண்டு இறந்து -அம் முண்டகப் பொழிலை நீங்கி, பின் - பின்னர், அந்தரத்து இந்துவை தீண்டுகின்றது - விண்ணில் மதியைத் தொடுவதும், செம் கதிர் செல்வனும் - சிவந்த கிரணங்களைச் செல்வமாகவுடைய சூரியனும், 'ஈண்டு உறைந்து அலது ஏகலம் என்பது - இம் மலையில் தங்கி யல்லாமல் அப்பாற் செல்லமாட்டோம்' என்பது-என்று எண்ணுதற்கு இடமானதுமாகிய, பாண்டுவின் மலை என்னும் பருப்பதம் - பாண்டுமலை என்று சொல்லப்பெறும் மலை (உளது) ; அதனைச் சென்றடையுங்கள்.

இறத்தல் - கடத்தல்; ஆரணிய. 612; 'வன்புல மிறந்த பின்றை' (பெரும்பாண், 206). அந்தரம் - ஆகாயம், ஆரணிய. 495.

542, 1187 ; சீவக. 836 ; அகம். 68 ; 'அந்தரப் பல்லியம் கறங்க' (முருக. 119). பாண்டு மலேயின் உயர்வை இவ்வாறு குறித்தது தொடர்புயர்வு நவிற்சியணி. பருப்பதம் - பர்வதம் என்ற வடசொற் றிரிபு. (ஒப்பு) : பால. குலமுறை. 22. மதியமுங்கதிரவன் தானும், தலேகண் டோடுதற் கருந்தவம் புரிதரும் சாரல்; 161. 'திக்கும் வான மும் செறிதவத் தருநிழற் சீதம், புக்கு நீங்கலிற் றளர்வில விரவி தேர்ப் புரவி' 162; 'நீடு நாள்களும் கோள்களும் மென்னமே னிவந்து, மாடு தோற்றுவ மலரெனப் பொலிகின்ற வளத்த, ஓடு மாச்சுடர் வெண்மதிக் குட்கறுப் புயர்ந்த, கோடு தேய்த்தலின், களங்கமுற் ருமெனுங் குறிய'. 163 ; 'ஒற்றை யாழியங் தேரவ னுயர்மதில் கடக்கப், பெற்றிலாமையிற் பிறங்குபொற் கதவங்க டிறக்கும், அற்றம் நோக்குவன்' (நைடத. நகரப். 3) என்பன காண்க.

பி - ம். 1. ஆண்டிருந்துமின்.

3. ஈண்டுறைந்தநில், லேகலன் ; ஈண்டுறைந்நில தேகல வென்பது மெண்ணரும், வெனப்படு மெண்ணிலா.

4. பாண்டு வென்னும் பருப்பதம், பாண்டு வெம்மலே. (17)

வேறு

740. முத்தீர்த்துப் பொன்றிரட்டி மணியுருட்டி
முதுநீத்த முன்றி லாயர்
மத்தீர்த்து மரனீர்த்து மலேயீர்த்து
மானீர்த்து வருவ தியார்க்கும்
புத்தீர்த்திட் டலேயாமற் புலவர்நா
டுதவுவது புனித மான
அத்தீர்த்த மகன்கோதா விரியென்ப
ரம்மலேயி னருகிற் றம்மா.

'முது நீத்தம் - பழமையான வெள்ளமானது, முத்து ஈர்த்து - நல்ல முத்துக்களே யிழுத்துக்கொண்டும், பொன் திரட்டி - பொற் றுகள்களேச் சேர்த்து எடுத்துக்கொண்டும், மணி உருட்டி - இரத்தினக் கற்களே படித்துக்கொண்டும், ஆயர் முன்றில் மத்து ஈர்த்தும் - இடையர்க ளுடைய முற்றங்களில் உள்ள (தயிர் கடையும்) மத்துக்களேக் கவர்ந்து இழுத்துக்கொண்டும், மரன் ஈர்த்து - மரங்களே இழுத்துக்கொண்டும், மலே ஈர்த்து - பாறைக் கற்களேப் புரட்டிக்கொண்டும், மான் ஈர்த்து - விலங்குகளே இழுத்துக் கொண்டும், வருவது - பெருகிவரும் இயல் புடையது ; யார்க்கும் - அதிற் படிந்தவர்கள் தம் பிதிர்க்கள் எல்லோர்க்

கும், புத்து ஈர்த்திட்டு - 'புத்' என்னும் நரகத்தாலிழுக்கப்பட்டு, அலையாமல் - திரியாத வண்ணம், புலவர் நாடு உதவுவது - தேவர் உலகத்தைத் தரவல்லது; புனிதம் ஆன அத் தீர்த்தம் - தூய்மை மிக்க அந்தப் புண்ணியப் புனலின் பெயர், அகல் கோதாவரி என்பர் - அகலமான கோதாவரி நதி யென்று சொல்வர். (அந் நதியானது) அ மலையின் அருகிற்று - அந்த (மேலே கூறிய) பாண்டு மலையின் பக்கத்தில் உள்ளது. அம்மா - வியப்பிடைச்சொல்.

ஏழு புண்ணிய நதிகளில் ஒன்றான கோதாவரியின் பல சிறப்புக்களையும் கூறுவது இச் செய்யுள். ஆரணிய காண்டம், 220லும் இந் நதியை ஆன்றோர் கவிக்கு ஒப்பிட்டுக் கூறியதும் இங்கே காணத் தகும். பழமையும் பெருமையும் வாய்ந்த தாகலின் 'முது நீத்தம்' என்றான். முன்றில் இல்முன் என்பதன் இலக்கணப் போலி. ஐந்திணை நெறி யளாவுதலின் பலநிலக் கருப்பொருள்களும் அடித்துக் கொண்டு வந்தன என்பான், ஆயர் மத்தீர்த்து மரனீர்த்து மலையீர்த்து மானீர்த்து என்றான். முல்லைக் கருப்பொருளாகிய மத்தும், மருதக் கருப்பொருளாகிய மரவகைகளும், குறிஞ்சிக் கருப்பொருளாகிய பாறைகளும், நிலப் பொதுவான மரனும் கூறினார். செல்லும் நெறி கடற்கரை யன்றாகலின் நெய்தலைக் கூறவில்லை. 'புத்' என்பது மகப் பேறற்றோர் சென்றடையும் ஓர் நரகம் என்பர். 'தென்புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் பொன்போற் புதல்வர் பெறுதீரும்' (புறநா 9) 'புத்தான கொடுவினையோ டருந்துயரம் போயொளிப்ப; (பால. திருவவ. 35). 'புத்தே ளுலகம் புதல்வரும் தாரார்' (மணி. 22, 137) என்பன காண்க. 'வேள்வி நாளும் செய்தாலும் ஞாலத்தவர் நற்கதி சென்று சேரார், மகவின் முகமன்னு பார்வை யெய்தா தொழியின்'; 'மென் பாலகரைப் பயவாதவர் மெய்ம்மையாகத், தென்பா லவர்தம் பசித்தீநனி தீர்க்கமாட்டார்'. (வில்லிபா. சம்பவ. 60, 61); 'புத்திர சத்தம் போல' புத் - நரகம், த்ரம் - நீங்குதல் நரகத்தில் நின்றும் பிதாவை நீக்குவான் புத்திரன் என்று பொருள்'. (தக்கயாக. 257, உரை). புலவர் - தேவர். மேலான புலம் அதாவது வானுலகத்தவர் எனப் பொருள்படும். வருவதியார்க்கும்; குற்றியலிகரம்.

பி - ம். (18)

741. அவ்வாறு கடந்தப்பா லறத்தாறே
யெனத்தெளிந்த வருளி ஞறும்
வெவ்வாறு மெனக்குளிர்ந்து வெயிலியங்கா
வகையிலங்கும் விரிபூஞ் சோலே
எவ்வாறு முறத்துவன்றி யிருளோட
மணியிமைப்ப திமையோர் வேண்டத்
தெவ்வாறு முகத்தொருவன் தனிக்கிடந்த
சுவணத்தைச் சேர்திர் மாதோ.

'அ ஆறு கடந்து-அந்தக் கோதவரி யாற்றைத் தாண்டி, அப்பால்-பிறகு. அறத்து ஆறே என-தரும நெறியேபோன்றும்; தெளிந்த அருளின் நாறும் வெம் ஆறு எனவும்- தெளிவான அருளில் தோன்றுகின்ற விரும்பத்தக்க நன்னெறி போன்றும், குளிர்ந்து-தண்மை பெற்று, வெயில் இயங்கா வகை இலங்கும் - சூரியனுடைய ஒளிக்கற்றைகள் தன்னுள் புகாதபடி விளங்குகின்ற, விரிபூசோலே - மலர்ந்த அரும்புகள் நிறைந்த பூங்கா, எ ஆறும் உற துவன்றி - எந்த வழியிலும் (தன் இரு கரைகளிலும்) மிக்கு நெருங்கி, இருள் ஓட மணி இமைப்பது - (அச்சோலேயில் அடர்ந்த மரங்களால் உண்டான) இருள் அறவே அகலுமாறு இரத்தினங்கள் ஒளி விடுவதற்கு இடமானதும், இமையோர்வேண்ட தெவ் ஆறுமுகத்து ஒருவன் - தேவர்கள் விரும்பப் பகைவரை அழிக்கவல்ல ஆறுமுகங்களேயுடைய ஒப்பற்ற முருகப்பெருமான், தனிகிடந்த சுவணத்தை - தனியாக இருக்கப்பெற்ற சுவணநதியை, சேர்திர் - சென்று அடையுங்கள். மாது. ஓ, ஈற்றசைகள்,

அறத்தாறு - தருமநெறி. குறள். 37. வெம்மை - வேண்டல் (தொல். சொல். உரி. 34). வெயிலியங்காச்சோலே. 738 உரை காண்க. இருளோட 'மணி இமைத்தல் 732 ஆம் செய்யுளில் கீழ்க்குறிப்புக் காண்க. இமையோர் வேண்டத் தெவ்வாறு முகத்தொருவன் - முருகன் வரலாற்றைத் திரு முருகாற்றுப் படையிலும், கந்த புராணத்தும், பரிபாடலிலும் கண்டு தெளிக, சுவணம் என்றது இப்பொழுது சோன் என வழங்கும் ஆறு என்ப. சிறந்த இயற்கை நிகழ்ச்சிகளே உவமையாக்குதல் உயர்ந்த கவிகளின் வழக்கு. சோலேயின் தண்மைக்கு அற நெறியையும், அருள் நெறியையும் உவமை யாக்கினர்; (ஒப்பு) 'தங்கணுயகரிற்றெய்வம் தவம்பிறி திலவென் றெண்ணும், மங்கைமார் உள்ளம் போலத் தூயது' (பால. வேள்வி. 16); மகளிர் கற்புப் போலக் கோட்டகம்' (சீவக; 41); 'காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல மாசறு விசும்பின்' (சீவக. 851); 'கலேவலார் நெஞ்சிற் காமமே போன்றும்,

கடவுளர் வெகுளியே போன்றும்', (சீவக. 2107) என்ப போன்றன் காண்க. 'தெவ்வாறு முகத்தொருவன் துணேகிடந்த' என்று கொண்டு விநாயகன் என்றும் சொல்வர்.

பி - ம். 1. யதுதெளிந்த, யதுதெரிந்த.
2. வெவ்வேறுமென, யிலங்காவகை, வகையியங்கும்.
3. எவ்வா றெனத்துவன்றி, தோன்றி, யிருள்மாற, யிருளாற யிருளானும்;
4. முகத்தோன்றல், துணேகிடந்த சுவணத்தை; சரவணத்தை. (19)

742. சுவண(நதி) கடந்தப்பாற் சூரியகாந்
தகமென்னத் தோன்றி மாதர்
கவணுமிழ்கல் வெயிலியங்குங் கனவரையுஞ்
சந்திரகாந் தகமுங் காண்பீர்
அவணவைநீத் தேகியபின் னகனுடு
பலகடந்தா லனந்த னென்பான்
உவணபதிக் கொளித்துறையுங் கொங்கணமுங்
குலிந்தமுஞ்சென் றுறுதிர் மாதோ.

'சுவண நதி கடந்து - சுவணம் என்னும் ஆற்றைத் தாண்டி, அப்பால் - அதன் பிறகு, சூரிய காந்தகம் என்ன தோன்றி - சூரிய காந்தகம் என்று கூறுமாறு புகழ்பெற்று விளங்கி; (அம்மலேயிலுள்ள) மாதர் கவண் உமிழ்கல் வெயில் இயங்கும் கனம் வரையும் - பெண் களால் வீசப்பட்ட கவண். கயிற்றிலிருந்து வெளிப்படும் கற்கள் வெயிலே வெளிவிடுதற்கு இடமான மலேயையும், சந்திரகாந்தகமும் - சந்திர காந்தமலேயையும், காண்பீர் - கண்டு தேடுங்கள். அவண் அவை நீத்து ஏகியபின் - ஆங்குள்ள அம்மலேகளே விடுத்துச் சென்ற பிறகு, அகல் நாடு பல கடந்தால் - அகன்ற நாடுகள் பலவற்றைத் தாண்டிச் சென்றல், அநந்தன் என்பான் - ஆதிசேடன், உவணபதிக்கு ஒளித்து உறையும் - பறவைகட்கு அரசனுகிய கருடனுக்கு அஞ்சி மறைந்து தங்குகின்ற, கொங்கணமும் - கொங்கண தேசத்தையும், குலிந்தமும் - குலிந்த தேசத்தையும், சென்று உறுதிர் - போய் அடை வீர்கள். மாது ஓ. அசை.

சுவணகம் - அல்லது சுவணம், கோதாவரியை அடுத்த ஓர் நீர்த்துறை என்ப, சூரிய காந்தகம் - சூரியன் கதிர்பட எரிந்து காட்டும் ஓர் கல் என்ப. இது போன்றே சந்திரன் ஒளியால் நீராக உருகும் கல் சந்திரகாந்தக்கல் என வழங்கும். குறிஞ்சி நில மாதர்கள்

புனங்களில் கதிர்களைத்தின்ன வருவனவற்றைக் கவண்கல் கொண் டெறிவர்; அவை கற்களன்று நவமணிகளே என்று கூறுவர் கவிஞர். ஆகவே அம்மணிகளும் மேற்கூறிய சூரிய காந்தம்போன்று ஒளி காலுவனவாயின. மகளிர் விலையுயர்ந்த மணிகளையே கவண்கல் லாகக் கொண்டதிலிருந்து அந்நாட்டு நிதிவளத்தை நன்கு அறியலாம். 'குழையெறிந்து கோழி எறியும் வாழ்க்கையர்' என்றது காண்க. உவணபதி - திருமால் ஊர்ந்து செல்லும் கருடாழ்வான். அநந்தன் என்ற வடசொல். என்றும் அழிவில்லாதவன் எனப் பொருள்படும். சூரிய காந்தம்: சந்திரகாந்தம் இவைகள் மலைகள் என்பது பழைய உரை. அநந்தன் கருடனுக்கு ஒளிந்து கொங்கணத்திலிருந்த இத்தலம் ஸுப்ரமண்யம் என இப்பொழுது வழங்குகின்றது. கோயிற் புறத்தில் இன்றும் நல்ல பாம்புகள் தாராளமாக ஊர்வதும், பக்தர்கள் அச்சமின்றி நடமாடுவதும் காணலாம். உவணம்: இது ஸுபர்ணன் என்ற வட சொற்றிரிபு. அழகிய சிறகுகளையுடையவன் எனப்பொருள்படும்.

பி - ம். 1. சுவணநதி கடந்தப்பாற், சுவணமது, சுவணத்தி னிருந்தப்பால்; சூரியகாந் தம்மெனவே தோன்றி. (20)

743. அரனதிக னுலகளந்த வரியதிக
னென்றுரைக்கு மறிவி லோர்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோற்
புகலரிய பண்பிற் றுமால்
சுரநதியி னயலதுவான் றோய்குடுமிச்
சுடர்த்தொகைய தொழுதோர்க் கெல்லாம்
வரனதிகந் தருந்தகைய வருந்ததியா
நெடுமலையை வணங்கி யப்பால்.

அரன் அதிகன் - சிவபிரானே சிறந்தகடவுள், உலகு அளந்த அரி அதிகன் - உலகங்களைத் (தனது திருவடிகளால்) அளவிட்ட திருமாலே சிறந்த கடவுள் என்று உரைக்கும் - என்று நினைந்தவாறு ஓர் கொள்கையின்றிக் கூறவல்ல. அறிவு - தத்துவ உணர்ச்சி. இலோர்க்கு - இல்லாத கயவர்கட்கு, பரகதி சென்று அடைவு அரிய பரிசேபோல் - மேலான கதியைச் சென்று கிட்டுவதற்கு அருமையான தன்மையுடைத்தாதல் போன்று, புகல் அரிய பண்பிற்று ஆம் - புகுதற் கரிய தன்மை பெற்ற, சுரநதியின் அயலது - ஆகாயகங்கையின் அண் மையில் உள்ளதும், வான் தோய் குடுமி சுடர் தொகையது - விண்ணை அளாவிய (தனது) சிகரங்களிலே (கதிர் மதியாகிய) இரண்டு சுடர் களும் பொருந்துதலையுடையதும், தொழுதோர்க்கு எல்லாம் - தன்னை

வணங்கினவர் எல்லார்க்கும், அதிகம் வரன்தரும் தகைய - சிறந்த வரங்களை அளிக்கும் பெருமையுடையதுமான, அருந்ததி ஆம் நெடு மலையை - அருந்ததியென்னும் பெரியமலையை வணங்கி - (நீங்கள் அடைந்து) தொழுது, அப்பால் - அதன் பின்னர், என்று அடுத்த கவியில் ' அதன்புறம் சாரவேகிர்' என்பதனோடு முடியும். ஆல் - அசை.

இச்செய்யுள் ஆசிரியர்க்குக் கடவுட் கொள்கைக் கண்ணுள்ள பொது நோக்கத்தைக் குறிக்கும். அரன் அதிகன் என்று தனித்துக்கூறி உலகு அளந்த அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலார்க்கு என்று முரண்படக் கூறுவாரும் உளர். அஃது ஆசிரியர் கருதியது ஆகாது. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்றும். வானிலிருந்து விழும் மழைத்தாரைகள் அனைத்தும் கடலையே சென்று சேர்வது போன்று ஜீவான்மாக்கள் எவ்வெத்தெய்வங்கட்கு வணக்கம் செலுத்தினும் அவ் வணக்கம் கேசவனையே சாரும் என்றும், ' யாதொரு தெய்வங்கண்டீர் அத்தெய்வமாகி யங்கு மாதொருபாகனார் தாம் வருவர் ' என்றும், கூறப்படுவன காண்க. 'ஏகோ தேவ! கேசவாவோ சிவோவா!' என்பதும் காணலாம். வைணவத்தில் முதலாழ்வார்கள் எனச் சிறப்பிக்கப்படும் பெரியோர்களின் பாசுரங்களில் சிவபிரானையுந் திருமாலையும் ஒன்று படுத்திக் கூறியிருப்பதைக் காண்க. ' அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி ' (முதல் திருவந்தாதி. 5) ' தாழ்சடையும் நீள் முடியும் ஒண் மழுவும் சக்கரமும் ' (மூன்றும் திருவந்தாதி 63): இவர்கள் காலத்தவராகக் கருதப்பெறும் காரைக்காலம்மையாரும் இவ்வாறே வேறுபடுத்தாமற் கூறியுள்ளார். எனவே ஆசிரியரும் இவர்களைப் பின்பற்றி இருவருள் எவர் பெரியவர் என்று விவாதித்தல் வேண்டாம் என்று இச்செய்யுட்கண் வற்புறுத்தினாராவர் என்க. இவ் வடிகளைக் கொண்டே திருமாலுக்கு ப்பரத்வம் ஆசிரியர் கூறியதாகச் சிலர் கூறுவர், புகலரிய பண்பினது, சுரநதியின் அயலது, வான்தோய் குடுமிச் சுடர்த்தொகையது, வரனதிகம் தரும் தகையது அந்த அருந்ததி மலை யென்க. பரகதி - மோட்சம், அரன்: ஹர என்ற வட சொல்லின் திரிபு. எல்லாவற்றையும் அழிக்கும் சங்காரக்கடவுள். அரி - ஹரி - அடியார்களின் பாவத்தைப் போக்குபவன். சுரநதி - ஆகாயகங்கை, இது பூவுலகில் போந்த வரலாற்றைப் பால காண்டத்திற் காண்க. வசிட்ட முனிவனின் அரிய பத்தினியாகிய அருந்ததியின் பெயர் கொண்ட மலையாகலின் அருந்ததிமாநெடுமலை யெனச் சிறப்பித்தான் சுக்கிரீவன் என்க.

இச் செய்யுள் இல்லை யென்பது ஐயரவர்கள் குறிப்பில் காண்கிறது. இது இடைச் செருகல் என்பாரும் உளர்.

பி - ம். 1. *ஊறவளர்ந்த வரியதிக னென்றுவரா ; என்றழைக்கும் ; பாகதி சென் றறிவரிய.*

2. *பொருவேபோல், பரிசேயாய் பண்பிற்றம்மா.*

3. *சுடர்த்தொகையை, சுடர்துதைந்த ; தொழுதார்க்குச் சாநதிமீ தெழவான்றோய் தருங்குடிமி.*

4. *வரமதிகம் ; பலவுதவும் அருந்ததிசேர் நெடுவரையை ; அருந் ததிசேர், தருந்ததியாம்.* (21)

744. அஞ்சுவரும் வெஞ்சுரனு மாறுமகன்
பெருஞ்சுனையு மகிலோங் காரம்
மஞ்சிவரு நெடுங்கிரியும் வளநாடும்
பிற்படப்போய் வழிமேற் சென்ருல்
நஞ்சுவரு மிடற்றரவுக் கமிழ்துநனி
கொடுத்தாயைக் கலுழ னீக்கும்
எஞ்சின்மர கதப்பொருப்பை யிறைஞ்சியதன்
புறஞ்சார வேகிர் மாதோ.

'அஞ்சுவரும் வெம் சுரனும் - (யாவும் யாவரும் அஞ்சுதலைச் செய்கின்ற) பாலைவனமும் ; ஆறும் - நதிகளும், அகல் பெரு சுனையும் - அகன்ற பெரிய சுனைகளும், அகில் ஓங்கு ஆரம் மஞ்சு இவரும் நெடுங் கிரியும் - அகில் மரங்களும், உயர்ந்து வளர்ந்த சந்தன மரங்களும் மேக மண்டலம் வரை வளரப்பெற்ற உயர்ந்த மலைகளும், வளம் நாடும் - செழிப்புமிக்க தேயங்களும், பின்படபோய் - (உமது) பின்புறத்தன வாகச் சென்று, வழிமேல் சென்ருல் - அப்பாற்பட்ட வழி நடந்து செல்வீர்களானல், கலுழன் - கருடனுனவன், நஞ்சுவரும் மிடறு அரவுக்கு - விடமமைந்த வாயினையுடைய நாகங்களுக்கு, அமிழ்து நனி கொடுத்து - அமிழ்து மிகுதியும் அளித்து, ஆயை நீக்கும் - (தனது) அன்னையாகிய விநதையை (அடிமைத் தொழிலினின்று) மீட்டற்கிடமான, எஞ்சில் மரகத பொருப்பை - எந்தவிதமான குறைவுமில்லாத மரகத மலையை, இறைஞ்சி - வணங்கி, அதன்புறம் சார ஏகிர் - அம்மலையின் பக்கத்து வழியைப்பற்றி அப்பாற் செல்லுங்கள்.

அஞ்சுவரும் வெஞ்சுரன் - பாலைவனத்தின் கடுமையை ஆசிரியர், பாலகாண்டம் தாடகை வதைப்படலத்துக் கூறியுள்ள வற்றிற் காண்க. எரிசுடர்க் கடவுளும் கருதின்வே முள்ளமுங் காணின்வேம் நயனமும்

(பால. தாடகை. 5) என்பது அது. மலைகள் மேகமண்டலத்தினையும் கடந்த உயரத்தன வென்பார் 'மஞ்சு இவரும் நெடுங்கிரி' என்றார். ஆரம் - சந்தனமரம். அகம். 13, 100; 'பால' அகலிகை 1. அரைத்த ஆரமு மாரமு மணிந்தென் வரைத் தடம்புயம்' (வில்லி. பர. நிரைமீட்சி. 29); இங்கே குறிக்கப்பட்ட அரவு - காசியப முனிவரின் மனைவியான கத்துரு என்பவளிடம் தோன்றிய வாசுகி முதலிய நாகங்கள்; கலுழன் - கருடன். காசியபமுனி வருக்கு விநதையிடம் தோன்றியவன். கருடன் அரவுக்கு அமிழ்தளித்தது; காசியப முனிவரின் மனைவிமாரான விந தைக்கும் கத்துருவுக்கும் வானிற் சென்ற உச்சைச் ரவம் என்னும் குதிரை வாலின் நிறத்தைப் பற்றி எழுந்த விவாதத்தில், விநதை தோற்றுக் கத்துருவுக்கு அடிமையாக, விநதை பயந்த கலுழன் விண்ணு லகம் சென்று அமுதம் கொணர்ந்து அரவங்கட்கு அமிழ்து ஈந்து, பின்னர் அரவங்கள் அமுதம் வைக்கப்பட்டிருந்த தருப்பைகளை நக்கின அளவில் நாக்கள் பிளக்கப்பெற்றன என்பது வரலாறு. இதன் விரிவை மகாபாரதம் ஆதிபர்வத்துக் காண்க.

பி - ம். 1. அஞ்சவரும்; ஆறுமகன், மாறுமகன்.
2. மஞ்சவரும், நெடுமலையும்; வழியே சென்றால், கொடுத்துதவு.
4. மர கசப்பொருப்பும்; மெய்நிமாதோ. எகிமாதோ, எகின் மாதோ. (22)

745. வடசொற்குந் தென்சொற்கும் வரம்பாகி
நான்மறையு மற்றை நூலும்
இடைசொற்ற பொருட்கெல்லா மெல்லையதாய்
நல்லறத்துக் கீறாய் வேறு
புடைசுற்றுந் துணையின்றிப் புகழ்பொதிந்த
மெய்யேபோற் பூத்து நின்ற
உடைசுற்றுந் தண்சார லோங்கியவேங்
கடத்திற்சென் றுறுதிர் மாதோ.

'வடசொற்கும் தென்சொற்கும் வரம்பாகி - வடமொழிக்கும் தென் மொழியாகிய தமிழுக்கும் எல்லையாகியும், நால்மறையும் மற்றை நூலும் - நான்கு வேதங்களும் பிறசாத்திரங்களும், இடை சொற்ற பொருட்கெல்லாம் - தம்மிடம் குறித்துள்ள எல்லாப் பொருள்கட்கும், எல்லையதாய் - முடிவான பொருளைத் தன்பாற் கொண்டுள்ள தாகியும்,

நல் அறத்துக்கு ஈருய் - தலைசிறந்த தருமங்கட்கெல்லாம் எல்லை வரம்பாகியும், புடைசுற்றும் துணைவேறு இன்றி-பக்கத்திற் பொருந்திய உபமானப் பொருள் வேறென்றின்றி, புகழ் பொதிந்த மெய்யேபோல் பூத்து நின்ற - இசை நிறைந்த உடலைப் போன்று பொலிவுற்று விளங்கும், உடை சுற்றும் தண்சாரல் - உடுக்கும் ஆடைபோன்று சூழ்ந்த குளிர்ந்த தாழ்வரைகளை யுடைய, ஓங்கிய - உயர்ந்துள்ள, வேங்கடத்தில் - திரு வேங்கடமலையில், சென்று உறுதிர் - போய்ச் சேர்மின்கள்.

முன்னாள் தமிழெல்லை வடவேங்கடம் எனக் குறிக்கப்பட்டுள்ளது. 'வடவேங்கடம் தென்குமரி' (தொல். பாயிரம்) 'வேங்கடம் குமரி தீம் புனற் பௌவமென் றிந்நான் கெல்லை தமிழ்மொழி வழக்கே' (சிலப். அரங்கேற்று 37. உரை) என்பன காண்க. வேங்கடத்தில் இருமொழி களும் பயின்றமை பற்றி வரம்பாகி என்ருர். சங்ககால முதற் கொண்டே இத்திருவேங்கடமலை திருமாலின் இருப்பாகக் கூறப்பெற் றுள்ளது. 'நான்மறையும் மற்றைநூலும் இடைசொற்ற பொருட்கெல் லாம் எல்லையது' என்றது ; வேதங்களிலும் இதிகாச புராணங்களிலும் சிறப்பித்துக் கூறப்படும் திருமாலைத் தன்னகங் கொண்டுள்ளமையான் என்க. இம்மலைக்கு உயர்விலும் புகழிலும் ஈடாகக் கூடிய வேறுமலை யின்று என்பார் 'புடைசுற்றுந் துணையின்றி' என்ருர். மற்றும் இம் மைக்குப் புகழுடம்பை உவமை கூறியது பூதவுடம்பு அழிய என்றும், அழியாது நிலவு மியல்பு பற்றி என்க, இனிபுகழ் பொதிந்த மெய்யே போல் என்பதற்குப் புகழ் நிரம்பிய சத்தியம்போல் என்று கூறுவர் ஒரு சாரார். வேங்கடம் என்பதை வேம் கடம் எனப் பிரித்துப் பாவத்தை எரிப்பது என்றும், அழியா நிதிய மளிப்பது என்றும் பொருள் கூறுவர். இம்மலை திருமாலின் வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டினுள் முதலது. சிட்சை வியாகரணம் சந்தசு முதலிய வேதங்களும் இராமா யணம் முதலிய இதிகாசங்களும் பதினெண்புராணங்களும், முதலடியில் மற்றை என்ற சொல்லாற் குறிப்பிடப்பட்டன என உணர்க. பூத்தல் - பொலிதல்.

பி - ம். 1. *தென்றமிழ்க்கும் வரம்பிற்ருய் ;*
2. *மற்றை நூலின்.*
4. *அடிசுற்றும், அடல்சுற்று ; நெடுஞ்சாரல், தடஞ்சாரல்; சூழ்ந்த திரு வேங்கடம்சென் றுறுதிர்.* (23)

746. இருவினையு மிடைவிடா வெவ்வினையு
மியற்ருதே யிமையோ ரெய்தும்
திருவினையு மிடுபதந்தேர் சிறுமையையு
முறையொப்பத் தெளிந்து நோக்கிக்
கருவினைய திப்பிறவிக் கென்றுணர்ந்தங்
கதுகளையுங் கடையின் ஞானத்
தருவினையின் பெரும்பகைஞ ராண்டுளரீண்
டிருந்துமடி வணங்கற் பாலார்.

'இரு வினையும்-(நல்வினை தீவினைகளாகிய) இரண்டு வினைகளையும், இடை விடா எவ்வினையும் - இடை விடாமல் தொடர்புகொண்டுள்ள எந்தக் கருமங்களையும், இயற்ருதே - புரியாமல், இமையோர் எய்தும் திருவினையும் - தேவர்கள் அடையத்தக்க நிறைந்த செல்வ வாழ்க்கை யையும், இடுபதம் தேர் சிறுமையையும்-பிறர் (பிச்சையாகத்) தருகின்ற சோற்றை நாடியுள்ள துன்பம் செறிந்த இழிந்த வாழ்க்கையையும், முறை ஒப்ப தெளிந்து நோக்கி - சமமாகத் தெளிந்து பார்த்து, இ பிறவிக்கு கருவினை அது என்று உணர்ந்து - 'இந்தப் பிறப்பு உறுதற்கு மூலகாரணம் அந்த இருவினைகளேயாகும்' என்று தெளிந்து, அது - அந்த வினையின் தொடர்பை, அங்கு - அவ்விடத்திலேயே, களையும் - நீக்கற்குரிய, கடை இல் ஞானத்து - எல்லையற்ற தத்துவ அறிவினை யுடைய, அருவினையின் பெருபகைஞர் - (ஒழித்தற்கு) அருமையான இரு வினைகட்குப் பெரிய சத்துருக்களாகிய, (ஞானம், வயது, ஒழுக்கத்தாற் சிறந்த மகாத்மாக்கள்), ஆண்டு உளர் - அம் மலையில் இருக்கின்றனர்: (அவர்கள்) ஈண்டு இருந்தும் அடி வணங்கல் பாலார் - அன்னுர் (நேரில் செல்லாமல்) இங்கிருந்தவாறேயும் திசை நோக்கி, அடி வணங்கற் குரியவராவர்.

இருவினை - நல்வினை தீவினை. வினை - மன மொழி மெய்களான் உயிர்கள் இயற்றும் புண்ணிய பாவங்கள். இவை ஆகாமியம், சஞ்சிதம்; பிராரத்தம் என மூவகைப்படும்; 'வினையின் வந்தது வினைக்கு விளை வாயது' என்றபடி, இவ் வினைகளே பிறப்பிற்குக் காரணம் என்ப. 'வினைப்போகமே உறு தேகங்கண்டாய் (பட்டினத்.); பல்வகைப் பட்ட யோக ஞான நெறிகளால் இருவினை யொப்பும், மலபரிபாகமும், நிகழ, உயிர்கள் பிறப்புத் தொல்லை நீங்கி முத்திகள் எய்து மென்ப. நல்வினையும் பிறப்புக் காரணமாகலின் அதனைப் புரிதலைத் தவிர்த்தலும் கூறினுர். இங்கே குறிக்கப் பெற்றவர்கள் 'ஓடும் செம்பொனு ஒப்பவே நோக்கும்' சீவன்முத்தர். இவர்களின் இலக்கணத்தைக்

ஙகவல்யம். 128; என்று தொடங்கும் பாடலினும் அதனை யடுத்து வரும் செய்யுட்களினும் காண்க. மேல் 748-ஆம் செய்யுட்கண் 'மால்வரை யதனைக் குறுகுதிரேல், உம் நெடிய கொடுமை நீங்கி வீடுறுதிர் ஆதலினால் விலகுதிர்' என்று கூறியுள்ளமையின், ஈண் டிருந்தபடி வணங்கற் பாலார்' என்றான்.

பி-ம். 2. முறையொக்கக்.
3. கருவினையின் பலபிறவிக் கட்டுணர்ந்து, கட்டுணர்ந்தால், குணர்ந்தில். (24)

747. சூதகற்றுந் திருமறையோர் துறையாடு
நிறையாறுஞ் சுருதித் தொன்னூல்
மாதவத்தோ ருறைவிடனு மழையுறங்கு
மணித்தடனு வான மாதர்
கீதமொத்த கின்னரங்க ளின்னரம்பு
வருடுதொறுங் கிளக்கு மோதை
போதகத்தின் மழக்கன்றும் புலிப்பறழு
முறங்கிடனு பொருந்திற் றம்மா.

'சூது அகற்றும் - வஞ்சனையை ஒழித்து நிற்கும், திருமறையோர் - அழகிய - அந்தணர்கள்; ஆடு - நீராடுகின்ற, துறை நிறை ஆறும் - படித் துறைகள் நிறைந்துள்ள நதிகளையும், சுருதி தொல் நூல் - வேதங்களையும் பழமையான சாத்திரங்களையும் நன்குணர்ந்த, மாதவத் தோர் - பெருந்தவ முனிவர்கள், உறைவு இடனும் - வாசம் செய்கின்ற ஆசிரமங்களையும், மழை உறங்கும் மணி தடனும்-மேகங்கள் படிகின்ற இரத்தினங்களைத் தன்னகத்துக் கொண்ட இடங்களையும், .வானம் மாதர் - தேவ கன்னியரின், கீதம் ஒத்த - இசைப் பாட்டுக்கு நேரான, கின்னரங்கள் - கின்னரம் என்னும் நரம்பிசைக் கருவிகளுடைய, இன் நரம்பு - இனிய நரம்புகளை, வருடு தொறும் - தடவும் பொழுதெல்லாம், கிளக்கும் - எழுகின்ற, ஓதை - ஓசையினால், போதகத்தின் மழ கன் றும் - யானைகளின் இளங் குட்டிகளும், புலி பறழும் - புலிக்குட்டிகளும், உறங்கு -(தம்முட் பகைமை யொழிந்து) சேர்ந்து துயில்கின்ற, இடனும்- இடங்களையும், பொருந்திற்று - தன் இடம் கொண்டுள்ளது (அத் திருவேங்கடமலை) ; அம்மா - வியப்பிடைச் சொல்.

திருமறையோர் என்றும், மாதவத்தோர் என்றும், பிரித்துக் கூறினமையின், முன்னர் கூறப்பட்ட மறையோர், 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' (குறள். 49) ; என்று சிறப்பிக்கப்பட்ட மனை

வாழ்க்கையர் என்க. மேக மண்டலம் வரையில் உயர்ந்துள்ளன அம் மலைகள் ஆகலின், 'மழை யுறங்கு மணித்தடன்' என்றார். உயர மான மலைப் புறங்களில் என்றும் மழை மிகுதியாகப் பெய்யும் என்பர். மணித்தடன் - அழகிய இடங்களுமாம். கின்னரம் - ஒருவகை யாழ். கின்னரத்தைப் பெருகு என்பர் அடியார்க்கு நல்லார் சிலப். 14,167; பசுவும் சிசுவும் படப்பணிதானும் இசை வசப்படும் இயல்பின ஆகலின், போதகமும் புலிக்குட்டியும் தமது பிறப்புப் பகைமை நீங்கி ஒன்றாக உறங்கின என்றார்; எனவே பகைமையையும் மாற்றவல்ல இசையின் பெருமை கூறினாராயிற்று. (ஒப்பு): பெரியபு. ஆனாய. 34. போதகம் - பத்தாண்டு யானைக்கன்று. பால. கார்முக. 11; ஆரணிய. 224; 'நாயே பன்றி புலி முயல் நான்கும் ஆயுங்காலைக் குருளை என்ப.' 'குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்' (தொல். மரபி. 8, 10). என்பன கொண்டு புலிப்பறழ் கொள்க.

பி - ம். 1. தோதயத்தித் தூய்மறையோர், திருமுறையோர்.
2. உறையிடமும்; மழையூரும்.
3. இதமுற்ற; இளரும்.
4. மழக்களிறும், மதக்கன்றும்; உறக்கிடனும். (25)

748. கோடுறுமால் வரையதனைக் குறுகுதிரே
லுந்நெடிய கொடுமை நீங்கி
வீடுறுதி ராதலான் விலங்குதிரப்
புறத்துநீர் மேவு தொண்டை
நாடுறுதி ருற்றதனை நாடியதற்
பின்னையவை நளிநீர்ப் பொன்னிச்
சேடுறுதண் புனற்றெய்வத் திருநதியி
னிருகரையுந் தெரிதிர் மாதோ.

'கோடு உறு மால் வரை அதனை - சிகரங்கள் பொருந்திய பெரிய அந்த மலையை, குறுகுதிரேல் - கிட்டுவீரானால், (அத் தலத்தின் மகிமை யால்) உம் நெடிய கொடுமை நீங்கி வீடு உறுதிர் - உங்களுடைய மிகையான கொடிய பாவங்கள் அனைத்தும் நீங்க உடனே முத்தி அடைவீர்கள்; ஆதலான் - ஆதலால், விலங்குதிர் - (அங்குப் புகாது) விலகிச் சென்றவர்களாய், அப்புறத்து - அப்பாலுள்ள, நீர் மேவு தொண்டைநாடு - நீர்வளம் செறிந்த தொண்டை நாட்டினை, உறுதிர் - சென்று அடையுங்கள்; உற்று - அங்ஙனம் அடைந்து, அதனை நாடி - அந்நாட்டைத் துருவித் தேடி, அதன் பின்னை - அதன் பிறகு, நளி

நீர் பொன்னி சேடு உறு - பெருமை வாய்ந்த நீர் நிறைந்த பொன்னி என்னும் பெயர் அமைந்த் உயர்வான தோற்றமுள்ள, தண்புனல் தெய்வம் திரு நதியின் - குளிர்ந்த நீர் நிறைந்த தெய்வத்தன்மை வாய்ந்த காவேரி யாற்றினது, இரு கரை அவையும் - இரு கரைகளி லும், தெரிதிர் - பிராட்டியை ஆராய்ந்து தேடுங்கள். மாது ஓ - ஈற்றசை கள்.

கோடு - சிகரம். 'பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே' (புறநா. 2, 39, 399); (நற். 356); (சீவக. 2417); 'தில்லை தரிசிக்க முத்தி' என்ருற்போல அம் மலையைக் கூறினர். விலங்குதிர் எனக் கூறியது; இராமபிரான் காரியம் நிறைவேரு முன்பு உடல் நீக்கம் பொருந்தாது என்பது கருதி என்க. தொண்டை நாடு - இப் பொழுது காஞ்சியும் அதனைச் சூழ்ந்துள்ள சில இடங்களும் என்ப. ஓர் சோழகுலத் தோன்றலுக்கு அடையாளமாக இட்ட தொண்டை அல்லது கொவ்வைக் கொடி பற்றி எழுந்தது இப்பெயர் என்பர். இந் நாட்டில் சான்ரோர் பலர் 'தொண்டை நன்னாடு சான்ரோ ருடைத்து' (ஔவை). நளி - பெருமை, 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல். உரி. 22); 'மலைத்தலைய கடற் காவிரி, புனல் பரந்து பொன் கொழிக்கும்' (பட்டினப். 6 - 7); என்பதிலிருந்து பொன்னி என்பது காவிரிக்குக் காரணக்குறி யென்னலாம். 'புலையாம் பிறவி பிறந்தென் செய்தோம் பொன்னி பொன் கொழிக்கும்' (திருவரங்கக் கலம்: 16); காண்க. ஏழு புண்ணிய நதிகளில் காவிரியும் ஒன் ருகலின் அதனைத் தெய்வத் திருநதி என்ருர். சேடு - சிறப்பு; தன்பால் ஒருமுறை மூழ்கிநர்க்கும் பிறப்பொழிக்கும் சிறப்பென்க. தொண்டை நாடு எனப் பெயர் வந்தது கரிகாலன் காலத்திற்குப் பிறகே ஆதலின் சுக்கிரீவன் தொண்டைநாடு சென்று தேடுக எனச் சொன்ஞன் என்பது பொருந்தாக் கூற்று. இந்த வேங்கட மலையைப் பற்றிய சிறப்புக்கள் அமைந்த பாடல்களும் நம் ஆசிரியர் வாக்கோ என்பது ஐயத்தின் பாலதாகும். இவை பின் சேர்க்கப் பெற்றவை எனக் கருதவும் இடம் தருகிறது. மற்றும் வாநர வீரர்கள் சென்றது மேற்குத் தொடர்ச்சி மலையை அடுத்த நெறியே எனக் கொள்ளக் கிடக்கின்றது.

பி - ம். 1. மாவரை, கோளுநீக்கி.

2. நேடித்தொண்டை நாடுறுவீர்; நளிநீர்ப்பெண்ணை; நளிநீர்த்த நறும்பொன்னி நாடு நண்ணி.

4. தெரிவிர்மாதோ. (26)

749. துறக்கமுற்ருர் மனமென்னத் துறைகெழுநீர்ச்
சோணுடு கடந்தாற் ரெல்லே
மறக்கமுற்ரு ரதனயலே மறைந்துறைவ
ரவ்வழிநீர் வல்லே யேகி
உறக்கமுற்ருர் என்னுற்ரு ரெனுமுணர்வி
ளெடுமொதுங்கி மணியா ரோங்கற்
பிறக்கமுற்ற மலேநாடு நாடியகன்
றமிழ்நாட்டிற் பெயர்திர் மாதோ.

துறக்கம் உற்ருர் மனம் என்ன - சுவர்க்கம் புக்காருடைய உள்ளம் போன்று தெளிவான, துறை கெழு நீர் சோணுடு கடந்தால் - இடம் விளங்குகின்ற நீரையுடைய (பொன்னியாற்றைத் தன்பால் கொண்ட) சோழநாட்டைத் தாண்டிச் சென்ருல், அதன் அயலே - அந்நாட்டின் அண்மையில், தொல்லே மறக்கம் உற்ருர் மறைந்து உறைவர் - பழ வினேத் துன்பங்கள் மறத்தலேப் பொருந்தியவர்கள் (வினே வாதனே தீர்ந்த முனிவர்கள்) மறைவாக வாசம் புரிவர்; நீர் - நீங்கள், அ வழி வல்லே ஏகி - அந்த நெறியில் விரைந்து சென்று, உறக்கம் உற்ருர் என் ' உற்ருர் - தூங்குபவர் யாதுபயன் அடைவர், எனும் உணர்விளெடும் ஒதுங்கி - என்ற அறிவிஞேடும் சற்று விலகிச் சென்று, மணி ஆர் ஓங்கல் பிறக்கம் உற்ற - இரத்தினங்கள் நிறைந்த மலேப் புறங்கள் விளங்கி நிற்கும், மலேநாடு நாடி - மலே நாட்டில் பிராட்டியைத் தேடி, பிறகு அகல் தமிழ்நாட்டில் பெயர்திர் - பரந்த செந்தமிழ் நாடாகிய பாண்டிய நாட்டிற் சென்று சேருங்கள். மாது, ஓ ஈற்றசைகள்.

துறக்க முற்ருர் மனம் - இங்கே நீர்த் தெளிவிற்குவமை. (ஒப்பு) 'காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல மாசறு விசும்பின்' (சீவக. 851): துறக்கம் உபசார வழக்கு. பெரும்பாலும் துறவோர் களால் அடையப் பெறுவது; இனி, சுவர்க்கம் எய்தப்பெற்ருர் மனக் கலக்கம் இன்றி இன்பம் நிறைந்து விளங்குவது போன்று, காவிரி நதியும் கலக்கம் நீங்கித் தெளிந்த நீர் நிறைந்த துறைகளே யுடையது எனினுமாம். பிராட்டியைத் தேடும் காரியத்தில், சோம்புதலின்றி முனேப்பா யிருக்கவேண்டும் என்று கூறுவான். 'உறக்க முற்ருர் என்உற்ருர் எனும் உணர்விளெடும்' என்ருன். சோணுடு - சோழ நாடு என்பதன் மரூஉ. பாண்டிநாட்டைச் செந்தமிழ் நாடெனப் பண்டைய தமிழ் நூல்கள் கூறும். 729; (பெரிய. திருஞானசம்பந்தர் 608, 652, 750); (வில்லிபா. இராசசூய. 59).

பி - ம். 1. சோஹுடு தொடர்ந்தால். 2. அவ்வழியே யல்லல் போக.
3. உறக்கமுஞ்ஞர் கனவுற்ஞர்; உறக்கமுற்று நின்புற்ஞர்.
4. பிறப்பகற்றும் மலே நாடும்; தமிழ் நாடும் பெயர்திர் (27)

750. தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன்
றமிழ்ச்சங்கஞ் சேர்கிற் பீரேல்
என்றுமவ னுறைவிடமா மாதலினு
னம்மலேயை யிடத்திட் டேகிப்
பொன்றிணிந்த புனல்பெருகும் பொருநையெனுந்
திருநதிபின் பொழிய நாகக்
கன்றுவளர் தடஞ்சாரன் மயேந்திரமா
நெடுவரையுங் கடலுங் காண்டிர்.

தென் தமிழ் நாடு - தென்றிசைக் கண் தமிழ் நாடான பாண்டிய நாட்டில் உள்ள, அகல் பொதியில் - இடமகன்ற பொதிய மலேயில் உள்ள, திரு முனிவன் - சிறந்த அகத்திய முனிவனது, தமிழ் சங்கம் - தமிழ் சங்கத்தை; சேர்கிற் பீரேல்-அடைவீர்களாயின், (அம்மலேயானது), என்றும் அவன் உறைவு இடம் ஆம் - எப்போதும் அம் முனிபுங்கவன் வசித்தற்குரிய இடமாகும்; ஆதலினுல் - ஆதலின், அம்மலேயை இடத்து இட்டு ஏகி - அந்த மலேயை இடமிருக்கவிட்டு வலங்கொண்டு சென்று, பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும் திருநதி பின்பு ஒழிய- பொற்றுகள் நிரம்பிய நீர்ப் பெருக்குள்ள தாமிர பர்ணி என்னும் அழகிய ஆறும் பிற்படச் சென்று, நாகம் கன்று வளர் தடசாரல் மயேந்திரம் ஆம்'நெடு வரையும் - யாஃனக் கன்றுகள் மிகவும் தழைக்கப் பெற்ற பெரிய தாழ் வரைகளேயுடைய மயேந்திரம் என்னும் பெரிய மலேயை யும், (அதன் அண்மையில்) கடலும் - தென் மகா சமுத்திரத்தையும், காண்டிர் - காண்பீர்கள்.

தென் தமிழ் நாடு - இத்தொடர், சிறப்பாகப் பாண்டி நாட்டையே குறிக்கும் என்பர். தென்தமிழ் - அழகிய தமிழுமாம்; பாண்டி நாட்டில் முற்காலத்து விளங்கிய சங்கம் இங்குக் குறிக்கப் பெற்றுள்ளது. இதஃனக் கடைச்சங்கம் என்பர் 'நன்பாட்டுப் புலவஞய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளிஞேன் காண்' என்பது தேவா. இராம பிரான் அகத்தியரைக் கண்டதாகக் கம்பர் கூறுவர். வான்மீகரும் இராமபிரான் அகத்தியரைக் கண்டதாகவும் அவரிடம் வில்ஒன்று பெற்ற தாகவும் கூறுவர், அகத்தியர் வீற்றிருந்தது தலேச்சங்கம் என்று இறை

யனாகப் பொருள்கூறும். 'அகத்தியனார் தென் திசைக் கண் போது கின்றவர் கங்கை யாருழைச் சென்று காவிரியாரை வாங்கிக்கொண்டு காடு கெடுத்து நாடாக்கிப் பொதியிலின்கண் இருந்தனர் என்று நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரத்துட் கூறுவர். அவர் விந்திய மலையை அடக்கியதும், குண்டிகையிற் பொருவில் காவிரி கொணர்ந்ததும்' ஆசிரியராற் குறிக்கப் பெற்றுள்ளன. 'யுக்தம் கவாடம் பாண்ட்யானாம்' என்ற வான்மீக ராமாயண ச்லோகத்தில் கூறப்படுவது கவாடபுரம் என்றும், அங்கே தான் இடைச் சங்கம் நடைபெற்றதாகவும் வரலாறுண்டு. 'என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டவன்' அகத்தியன் ஆகலின் அவனுடைய இருப்பிடத்தை வணங்கிச் செல்லுமாறு சுக்கிரீவன் பணித்தனன் என்க. கம்பருடைய ஆழ்ந்த நாட்டுப் பற்றும் தாய் மொழிப்பற்றும் இக் காவியத்திற் பல இடங்களிலும் காணலாம். இராமபிரானே அகத்தியரை வணங்கியதாக ஆசிரியர் கூறுதல் காண்க. மற்றும் கோதாவரியை பற்றிக் கூறுங்கால் பொன்னியைப் பொருவுங் கங்கை. (பால. அகலிகை 32) என்றும், மிதிலை ஆவணங்களைக் கூறும் போது, பரப்பிய பொன்னியன்ன ஆவணம் பலவும் கண்டார் (பால. மிதிலைக்.11.) என்றும் தெய்வப் பொன்னி யெனலாய புனலாறுமுள (ஆரணிய, 175) என்றும் புகழ்வர். பொருநை என்று இங்கே குறிக்கப் பெறுவது தாமிரபர்ணி யாகும். பொன்திணிந்த என்ற இடத்துப் பொன் என்பதை உலோகப் பொது வென்று கொண்டு தாமிரம் செறிந்த என்றும் கொள்ளலாம். தாம்பிரபர்ணி உலோகம் கலந்த புனல் என்றவழக்குண்மையும் காண்க. பொதியமலை - மலய பர்வதம். நாகக் கன்று - யானைக் குட்டிகள்; நாகம் - மலையில் வசிப்பது என்று யானைக்குக் காரணக்குறி; நகம்-மலை. மிகவும் சிறப்பும் புண்ணியமும் செறிந்த அம்மலை யகத்துச் சென்றால் அதனை விடுத்து வெளியேற மனம் எழாதாதலாலும்; இராமபிரான் காரியம் தடைப்படுமாதலாலும், அதனை வலஞ் செய்து செல்லுங்கள் என்றான்' மற்றும் அப்புண்ணியத் தலத்தை மிதித்தல் அடாது ஆகலானும், அவ்வாறு வலஞ் செய்து செய்க என்று பணித்தானுமாம். காரைக் காலம்மையார்தன் தலையால் வலங்கொண்ட திருவாலங்காடு என்னும் ஊர்க்குள் கால்வைக்க அஞ்சி, சுந்தர மூர்த்தி நாயனார் ஊர் அயல் நின்று பாடிய வரலாறு இங்கே காணத்தகும் (பெரியபு. ஏயர் கோன். 282). இச் செய்யுளால் அகத்தியர் தென்னாட்டில் பல இடங்களில் மாறி மாறி வசித்து வந்தனர் என்பது கொள்ளத்தக்கது.

பி - ம். 1. தென்றமிழ்நாட் டதன்; நாடதின் பொரியத், திகழ், சேருவிரேல், தெரிமெற்பீரேல், சேர்மெற்றீரேல்.
2. என்றுமய றுறையுமிட மாதலால் வலத்திட் டேகெ.
3. புனலாயப் பொருனை.
4. மாமலையும்; நெடுங்கடலும்; காண்டிர், காண்பிர். (28)

751. ஆண்டுகடந் தப்புறத்து மெப்புறத்து
மொருதிங்க ளவதி யாகத்
தேண்டியிவண் வந்தடைதிர் விடைகோடிர்
கடிதென்னச் செப்பும் வேலை
நீண்டவனு மாருதியை நிறையருளா
லுறநோக்கி நீதி வல்லோய்
காண்டியெனிற் குறிகேட்டி யெனவேறு
கொண்டிருந்து கழற லுற்ருன்.

'ஆண்டு கடந்து - அவ்விடத்தைத் தாண்டிச் சென்று' அ புறத்தும் எ புறத்தும் - அதன் அப்பாலும் எந்த விடங்களிலும், ஒரு திங்கள் அவதி ஆக தேண்டி - ஒரு மாத காலம் தவணையாகக் கொண்டு (பிராட்டியைத்) தேடி, இவண் வந்து அடைதிர் - இங்கு வந்து சேருங்கள்; கடிது விடை கோடிர் - தாமதமின்றி விரைந்து விடைபெற்றுச் செல்லுங்கள்' - என்ன செப்பும் வேலை - என்று (சுக்கிரீவன்) வாநரர் கட்குக்) கட்டளை யிட்டபோது, நீண்டவனும் - திருவிக்கிரம அவதாரத் தில்) திருமாலாக விசுவரூபம் கொண்டவனுன இராமபிரானும், மாருதியை - அநுமனை, நிறை அருளால் உற நோக்கி - முழுக் கருணையோடும் நன்ருகப் பார்த்து, 'நீதி வல்லோய் - நீதி நூல்களில் வல்லவனே! காண்டி எனின் - (சீதாதேவியைக்) காண்பாயானுல், (இவள்தான் சீதை என்று தெளிதற்காக), குறி கேட்டி - அவளுடைய அங்க அடையாளங்களை (யான் கூறக்) கேட்பாய்', என - என்று, வேறு கொண்டு இருந்து - (அவனைத்) தனியே அழைத்துச் சென்று ஓரிடத்திலிருந்து, கழறல் உற்ருன் - அங்க இலக்கணங்களைச் சொல்லத் தொடங்கினுன்.

731 இலிருந்து 751 வரை சுக்கிரீவன் கூற்று, அவதி-கால வரையறை; கெடு என்றும் கூறுவர்: 256, 785, 1011; சுந்தர. 121. தேண்டி - தேடி; சுந்தர. 526; தேடி என்பது விரிந்தது 720. கொள்+திர் என்பது கோடிர் என வந்தது. 'நீதி வல்லோன்' அநுமன்; 'வேத மொத்தனன் மாருதி' உயுத்த. ஒற்று 221; 990.

சுந்தர. 235, 394. வேறு கொண்டு - தனித்தழைத்து வைத்து; 'வேறு கொண்டிருந்து சொன்னான்' (சீவக-200) முன்னர் 'ஒரு மதி முற்றுறுத முன் முற்றுதிர்' எனச் சுக்கிரீவன் கீழ்க் கூறியதையே, 'ஒரு திங்கள் அவதியாகத் தேண்டியிவண் வந்தடைதிர் விடை கோடிர் கடிது' என்று மறித்தும் கூறினன் என்க. ஏனைய வீரர் பலரிருக்கவும் இராமபிரான் அநுமனைத் தனித்தழைத்தது. சுக்கிரீவன் அவன்பால் வைத்த பெரு நம்பிக்கை யாலும், தனக்கும் சுக்கிரீவற்கும் நட்புச்செய்து வைத்தவன் அவன் என்று கருதியும் என்க.

பி - ம். 1. அப்புறத்தும் இப்புறத்தும், திங்களமைதியாக.

2. கடிதினென்று; விடைகொளீர்; மேல்லை, எல்லை.

4. எனக்; கழறுகின்றான். (29)

## பிராட்டியின் பாதாதிகேச வருணனை

வேறு

கால்விரல் - பாதம்

752. பாற்கடற் பிறந்த செய்ய
பவளத்தைப் பஞ்சி யூட்டி
மேற்பட மதியஞ் சூட்டி
விரகுற நிறைத்த நொய்ய
காற்றகை விரல்க ளைய
கமலமும் பிறவுங் கண்டால்
ஏற்பில வென்ப தன்றி
யிணையடிக் குவமை யென்னே.

(இராமபிரான் அநுமனைப் பார்த்து), 'ஐய - ஐயனே! நொய்ய கால் தகை விரல்கள் - (சீதா தேவியின்) மெல்லிய கால்களில் உள்ள அழகிய விரல்கள், பால் கடல் பிறந்த செய்ய பவளத்தை - பாற்கடலில் உண்டான சிவந்த பவளத் துண்டுகளை, பஞ்சி ஊட்டி - செம்பஞ்சுக் குழம்பிற்றோய்த்து, மேல்பட மதியம் சூட்டி - அவற்றின் மேற்புறத்தே சந்திரர்களைப் பொருந்தச் செய்து, விரகுஉற நிறைத்த - திறம்பட ஒழுங்காக அமைக்கப்பட்டவை: (இங்ஙனம் அழகிய விரல்களையுடைமையால்), கமலமும் பிறவும் - (உலகத்தில் உயர்வாகப் பாதங்கட்கு உவமை கூறப்படும்) தாமரை மலரும் பிற பொருள்களும் என்ற

இவற்றை, கண்டால் - பார்க்க நேர்ந்தால் (அவை), ஏற்பில - (இச்சீதா தேவியின் திருவடிகட்கு) உவமையாக மாட்டா, என்பது அன்றி என்று சொல்லலாமேயல்லாமல், இணை அடிக்கு உவமை என்னே - அவள் இரண்டு பாதங்கட்கு, ஏற்ற உவமைப் பொருள் யாதோ? ஒன்றும் இன்று என்றபடி.

செந்நிறம் இயற்கையாக அமையப்பெற்ற பிராட்டியின் கால் விரல்கட்கு, செயற்கை நிறம் ஊட்டிச் சந்திரர்களை யமைத்த தெய்வத் தன்மை கொண்ட பவழத்துண்டுகள் ஒருவகையில் ஒப்பாகும் என்க. தற்குறிப்பேற்ற வணி. இனி ஐய என்பதை விளியாக்காது, அழகிய எனக் கோடலும் ஒன்றும். விரல்கள் பத்தாகலின் அவையொக்கும் மதியங்களும் பத்து என்க. மற்றும் அனிச்ச மலர் மாந்தளிர் முத லியனவற்றைப் 'பிறவும்' என்றதில் அடக்கினன். பிராட்டி திருமகள் அவதார மாகலின், பாதாதி கேசமாக இங்கே வருணிக்கப்பட்டது. பின்னர்ச் சுந்தரகாண்டத்திலும், பிராட்டி மகிழுமாறு இராமபிரான் அங்க இலக்கணத்தைச் சிறிய திருவடி அடி முதல் முடியீருகவே கூறி யதும் இங்கே காணத்தகும்; (சுந்தர. 527). சிந்தாமணியில் விசயமா தேவி மானிடமகளாதலின் கேசாதிபாதமாகவே வருணிக்கப் பட்டாள். இராமபிரான் திருவடிக்குத் தாமரையும் கடற்பவளமும் உவமை யாக மாட்டா என்று கூறப்பட்டது (சுந்தர. 528) எனினும், பிராட்டி திருமகளே யாதலின் அவள் தோன்றிய பாற்கடற் பவளம் இங்கே உவமையாக ஏற்கப்பட்டது என்க. இனி, இராமபிரான் கால்விரல் நகங் களுக்குச் சந்திரன் உவமையாக மாட்டான்; ஏனெனில், 'சிறியவும் பெரியவுமாகித் திங்களோ மறுவில் பத்துள ஆகலின் (சுந்தர. 530) என்பதும் இங்கே காணத்தகும். பாற்கடற் பிறந்த பவளத்தைப் பஞ்சி யூட்டி மேற்பட மதியஞ் சூட்டி நிறைத்த விரல்கள் என்று கூறிப் பின்னர் அந்தப் பவளமும், பத்துத்திங்களும் எவ்வாற்றானும் இராம பிரான் திருவடி விரல்கட்கு வமையாகா என்று கூறியது கொண்டு பிராட்டி திருவடியின் விரல்களைக் காட்டிலும் முத்தி தரும் பிரான், திருவடி விரல்கள் சிறந்தவை என்ற குறிப்பும் இங்கே உய்த்துணர லாம். பவளத்தின் விரல்கள் என்பது பிராட்டியின் கால் விரல் களைப் பற்றிச் சூர்ப்பணகை கூறியதும் (ஆரணிய, 623) காண்க.

பி - ம். 1. தெய்வப்.
2. மதிய மட்டி நிரைத்த செய்ய, விரற்குற; விரற்குறி, மெய்ய, விளங்குற நிரைத்த, நிரைத்தபோலும்,
3. பிறவு மெல்லாம்,
4. ஏற்பிலம், ஏற்றில வென்ப தல்லால், வென்ப வன்றி, உவமை யுண்டோ. (30)

### புறவடி

753: நீமெயா யுணர்தி யைய
நிரைவளை மகளிர்க் கெல்லாம்
வாய்மையா லுவமை யாக
மதியறி புலவர் வைத்த
ஆமையா மென்ற போது
மல்லன சொல்லி னுலும்
யாமயாழ் மழலை யாடன்
புறவடிக் கிழுக்க மன்னே.

'ஐய - ஐயனே! நிரைவளை மகளிர்க்கு எல்லாம் - வரிசையாக அணியப்பெற்ற வளைகளையுடைய பெண்களின் புறவடிகளுக் கெல்லாம், உவமை ஆக - உபமானமாகும்படி, மதி அறி புலவர் வாய்மையால் வைத்த - தமது புத்தியினுல் எல்லாவற்றையும் உணர வல்ல புலமை யாளர்கள் உறுதியாக அமைத்த, ஆமையாம் என்ற போதும் - ஆமையென்று பகர்ந்தாலும், அல்லன சொல்லினுலும் - மற்றும் அஃதல்லாத புத்தகம் முதலியவற்றைக் கூறினுலும், யாமம் யாழ் மழலை யாள் தன் - நள்ளிரவில் ஓசை மிக்குடைய வீணை போன்ற மழலைச் சொற் களையுடைய சீதாதேவியின், புறம் அடிக்கு - புறவடிக்கு, இழுக்கம் - குறைவே யாகும்; (இத்தன்மையை) நீமெயாய் உணர்தி - நீ உண்மை யாக அறிவாயாக. மன், ஓ ஈற்றசைகள்.

பொதுவாய் மகளிரின் புறவடிகட்கு அறிஞர் கூறும் உவமைகள் யாமை, சுவடி முதலியன; இவைகளும் தெய்வ மங்கையான பிராட்டி யின் புறவடிக்குவமை போதா என்பது இச்செய்யுளின் கருத்து. எதிர் நிலையணி. மழலை - 'மெய் பெருவெழுத்துயிர்க்கும் மழலைவாய்' (சீவக. 181) என்ற இடத்து நச்சினுர்க்கினியர், 'மழலை எக்காலத்தும் கூறுப' என்றது இங்கே காணத்தகும். (ஒப்பு). புறவடிக்கு யாமை: 'யாமை இளம் பார்ப்பின் கூன் புறம் போல்' (சீவக. 177): 'ஊன்பெறப் பிறங்கி யொழுகு நீராமைக், கூன்புறம் பழித்த கோலப்புறவடி' (பெருங். 2, 15, 57-58);

பி - ம். 1. *நீமெயானுணர்தி, நீர்மையா லுணர்தி.*

2. *மதிநெறி.* 3. *தூய்மையாம்; அல்லவை.*

4. *யாமையேர், யாமையாம், மெழுக்க மன்றே.*

கணைக்கால்

754. வினைவரா லரிய கோதை
பேதைமென் கணைக்கான் மெய்ய
நினைவரா லரிய வின்ன
நேர்படப் புலவர் போற்றும்
சினைவரால் பகழி யாவம்
நெற்சினை யென்னுஞ் சிற்பம்
எனைவராற் பகரு மீட்ட
யானுரைத் தின்ப மென்னோ.

மெய்ய - உண்மை யுடையவனே ! வினைவரால் அரிய கோதை பேதை - ஓவியம் தீட்டுவோரால் தீட்டற் கருமையான கூந்தலையுடைய பேதைமைக் குணமுள்ளவளான சீதா தேவியின், மெல் கணைக்கால் - மெல்லிய கணைக்கால்கள், நினைவரால் அரிய இன்ன - ஊகித்து உணர்பவராலும் (உவமை கூறுதற்கு) அருமையான இத் தன்மையுடையன (ஆதலின்), புலவர் நேர்பட போற்றும் - அறிஞர் (கணைக்காலுக்கு) ஒப்பாகப் பொருத்திக் கூறுகின்ற, சினைவரால் - கருக்கொண்டவரால் மீனும், பகழி ஆவம் - அம்பருத் தூணியும், சினை நெல் - சூற் கொண்ட நெற்பயிரும், என்னும் - என்கின்ற, சிற்பம் - புனைமொழி, எனைவரால் பகரும் - எல்லோராலும் சொல்லக் கூடிய, ஈட்ட - (பொருந்தும்) தன்மையுடையன ; (அவற்றையே) யான் உரைத்து இன்பம் என்னோ - மீட்டும்யான் எடுத்துக் கூறுவதால் எய்தும் இன்பம் யாதோ ?

வினைவர் - ஓவியம் தீட்டுவோர்; இவரைக் கை வல்லார் என்பர் திருத்தக்க தேவர். (சீவக, 166). கோதை பேதை - மாலை யணிந்த பிராட்டி யெனினுமாம். வினைவர், நினைவர் என்பன வினையாலணையும் பெயர்கள். வினைவராலரிய கோதை - தொழில் செய்யும் வண்ண மகளிராலும் முடிப்பதற் கருமையான குழல் என்பது பழையவுரை. கணைக் காலுக்கு ; 'சேடாவ நாழிகையிற் புடை திரண்டு தேனெய் பெய், வாடாத காம்பேபோல் கணைக்காலின் வனப்பினவே' (சிந்தா. 176): 'பூங்கழை குழைக்கும் வேனில்வேள் பகழி பொதிந்தபொன் னூவம் வென் கொடுப்ப - தேங்கமழ் வாவி நீரிடைக் குளித்துச் சினைவரால் மறைந்திட' (நைடதம். அன்னத்தைத் தூது. 24.) ; 'கஞ்சமிசையிற் கணைக்கால் வராலினத்தான்' (திருக்காளத்தி. உலா. 379); 'தாவிலா ஆவந்தானும்...திகழ் கணைக்காலும் தூக்கிற்' (கந்தபு. மாயைப், 58). செப்பம் - வார்த்தை.

பி-ம். 1. வினைவரா லனைய தோகை, வனைவரால், மென்கணைக் காறுக் கொப்பு; கணைக்கால் வெய்ய.
2. லரிய நன்னீர், லரிய மற்று.
3. சுனைவரால்; பகழிக்கூடு, தோற்றவென், றுரைக்கிற் றாயோர், றுரைக்கத் தக்கில்; யென்னுஞ் செப்பம், சீர்மை.
4. மென்னே; மன்னோ. (32)

தொடைகள்

755. அரம்பையென் றளக மாதர்
குறங்கினுக் கமைந்த வொப்பின்
வரம்பையுங் கடந்த போது
மற்றுரை வகுக்க லாமோ
நரம்பையு மமிழ்த நாறு
நறவையு நளிர்நீர்ப் பண்ணைக்
கரும்பையுங் கடந்த சொல்லாள்
கவாற்கிது கருது கண்டாய்.

'அளகம் மாதர் குறங்கினுக்கு - முன் உச்சிமயிர் உடைய பெண் களின் தொடைகளுக்கு, அரம்பை என்று அமைந்த - வாழைகள் என்று அமையப் பெற்ற, ஒப்பின் வரம்பையும்-உவமையின் எல்லையை யும், கடந்தபோது - (பிராட்டியில் தொடைகள்) வென்று மேம்பட்டன என்று மொழியும்போது, மற்று உரை வகுக்கலாமோ - (அவற்றிற்கு) வேறு உவமைகளை எடுத்துக் கூறுதல் இயலுமோ? (இயலாது); நரம் பையும்-நரம்புகளைப் பெற்ற வீணையையும், அமிழ்தம் நாறும் நறவையும்- அமிழ்தத்தின் இனிமை யொளிர்கின்ற தேனையும், நளிர் நீர் பண்ணை கரும்பையும் - குளிர்ந்த நீர்வளம் மிக்க மருத நில வயல்களில் விளைந்த கரும்பின் சாற்றையும், கடந்த - (இனிப்பால்) வெற்றிகொண்ட, சொல் லாள் - சொற்களை யுடையவளான சீதா தேவியின், கவாற்கு - தொடை யைப் பற்றி மட்டில், இது - (யான் கூறிய) இந்தத் தன்மையை, கருது- நீ தேர்வாயாக. கண்டாய் - முன்னிலை அசை.

கண்டாய்-முன்னிலை யசை, இராமபிரான் சீதையின் மேனி வருணனையை அநுமனிடம் கூறியதாக இராம சரித மானஸம் கூறவில்லை. மோதிரம் தந்து என் வலிமையையும் அவள் பால் மனவுறுதியுடைமை யையும் கூறி அவளுக்கு ஆறுதலளித்து மீளுதி என்று கூறியதாக மட்டும் உள்ளது. வாழையை மகளிர் தொடைக்கு உவமையாக்குவர் கவிஞர். உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங்காலை (தொல். உவம, 3) என்ற

தற் கேற்ப உவமானம் சிறந்ததெனக் கொள்வோம். அதையும் வென்றன பிராட்டி தொடைகள் எனின், அவற்றிற்கு வேறு உவமை தேடற்கில்லை யென்றான். 'கோழிலை யரம்பை யீனுங் குறுமணித் தண்டை.... ...நிகரெனில் தகுவதன்றால் (கந்தபு. மாயைப். 56). அளகம் - மகளிர் கூந்தல்; 'மஞ்சொக்கு மளகவோதி' (ஆரணிய. 623.). நரம்பு சினையாகு பெயராய் அதனையுடைய யாழைக்குறித்து நின்றது. அமிழ்தம் நாறும் நறவு, பாலொடு தேன் கலந்தாற்போன்று என்க. நாறுதல் - தோன்றுதல் 'அருமணி மரகதத் தங்கணுறிய' (சீவக. 183). நறவு - மதுவுமாம். நீர்வளம் மிக்க நன்செய்களில் விளைந்தன வென்பான் நளிர் நீர்ப்பண்ணைக் கரும்பென்றான். (ஒப்பு): ஆரணிய. 1058. 'பண்களாற் கிளவி செய்து (உயுத்த. மாயா சனக 5) 'குறிநரம் பெறிவுற் றெழுவு தண்டமிழ் யாழினு மினிய சொற்கிளியே' (அயோத்தி. சித்திரகூடப். 28), 'கன்னி நடக்கும் நடை கற்றாள் கரும்பு கசக்கு மொழிபெற்றாள்' (பிரபு. லீலை.); மற்றும் ஆரணிய: 908; பெருங். 1, 53, 8. காண்க. இச் செய்யுளிலும் எதிர் நிலையணி காணலாம். கரும்பு ஆகுபெயராக அதன் சாற்றைக் குறித்து நின்றது. கவான்; தொடை; 'வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும் கவான் மகற் கண்டு தாய் மறந்தாங்கு (நாலடி. 211); 'சூழுறு கவானே போலும்.' (கந்தபு. மாயைப் 56).

பி - ம். 1. *அரம்பையென் றழகு மாதர், அரம்பைபோன்று; குறங்கினுக் கமைத்த.*
2. *கயர்ந்த போது; மற்றினை வகுக்க.*
3. *நன்னீர்ப் பண்ணை.*
4. *கடிந்த சொல்லாள், கவானிதுகருது, கவானுக்கும் கருதின் மேலோய்;* (33)

அல்குல்

756. வாராழிக் கலசக் கொங்கை
வஞ்சிபோன் மருங்கு லாடன்
தாராழிக் கலைசா ரல்கு
றடங்கடற் குவமை தக்கோய்
பாராழிப் பிடரிற் றாங்கும்
பாந்தளும் பனிவென் றேங்கும்
ஓராழித் தேருங் கண்ட
வுனக்குநா னுரைப்ப தென்னே.

'தக்கோய்-சிறந்தவனே! வார்-கச்சணிந்த, ஆழி கலசம் கொங்கை- நேமிப்புள் என்ற சக்கரவாகப் பறவையையும், பொற்கலசத்தையும் போன்ற தனங்களையும், வஞ்சிபோல் மருங்குலாள் தன் - வஞ்சிக்கொடி

போன்ற இடையினையுமுடைய சீதாதேவியின், தார் - கிண்கிணி மாலை யணிந்த, ஆழி-வட்டவடிவான, கலைசார் அல்குல் தடகடற்கு - மேகலை யணியப் பெற்றொளிரும் அல்குலாகிய பெரிய கடலுக்கு, உவமை - உவமிக்கக் கூடிய பொருளை, ஆழிபார் பிடரில் தாங்கும் பாந்தளும் - கடல் சூழ்ந்த இப்பூமியைத் தன் தலை மீது தரிக்கின்ற ஆதிசேடனது படத்தையும், பனிவென்று ஓங்கும் ஓர் ஆழிதேரும் - பனியை அடக்கி மேலே உயர்ந்து விளங்குகின்ற ஒற்றை உருளையையுடைய (சூரியனது) தேர்த்தட்டையும், கண்ட - பார்த்துள்ள, உனக்கு - உனக்கு, நான் உரைப்பது - நான் புதிதாகக் கூற வேண்டுவது, என்னே - யாதுளது (எதுவுமில்லை.)

இம்மாதிரியான உறுப்பிலக்கண வருணனை மிகையென்று கூறு மவர், சாமுத்திரிக இலக்கணத்தை கூற வேண்டுவது சிறந்த கவிஞரின் பொறுப்பென்பதைக் கருத்துட் கொள்க. சக்கர வாகமும் பொற்கலச மும் கொங்கைகட்கு வடிவு பற்றியெழுந்த உவமைகள், கலை - மேகலை; (ஒப்பு); 'நுண்டுகில் நுழைந்த அல்குல் பவளமொத் தினியது' (சிந்தா. 1184); இதற்கு அல்குலில் துகிலுக்குள்ளே நுழைந்து கிடந்த பவளமே என்று உரை வரையப்படுதல் காண்க. மற்றும் பெருங். 1, 446; சிலப். 1, 4, 29-30; உரை காண்க. ஆதிசேடன் தனது ஆயிரம் படங்களைக் கொண்ட சென்னியால் பூவுலகைத் தாங்குகிறான் என்ற கொள்கையால், பாராழி பிடரிற்றாங்கும் பாந்தள் என்று கூறப்பட்டது, 'சகச்ர பணாபணி மண்டல மண்டிதே' என்ற சுருதி வாக்கியமும் காண்க. கடல் போன்ற அல்குல் என்று கூறினார்; இது பரப்பினைப் பற்றி எழுந்ததன்று; 'அவாப்போ லகன்றதன் அல்குல்மேற் சான் றோர், உசாப் போல வுண்டே மருங்குல்' (யாப்.காரிகை. ஒழிபு.) என்றது காண்க, பார் ஆழி என்பது ஆழிபார் என்று மொழி மாற்றியுரைக்கப் பட்டது. அநுமனை இங்கே இராமபிரான் தக்கோய் என விளித்த தன் காரணம் உய்த்துணரத்தக்கது; 990 காண்க. ஓராழித்தேர் - சூரி யன் ஊரும் இரதம்; கதிரவனது பனியை அகற்றும் தன்மையை அவன் தேர் மீதேற்றிக் கூறியது உபசார வழக்கு. ஆழி என்ற சொல் நான் கடிகளிலும் வந்தது சொற் பொருட் பின் வருநிலையணி. ஆழி - வட்ட வடிவு; அந்த வடிவமைந்த சகோரத்தைக் குறித்தது. ஓராழித்தேரும் கண்டவன் 74; 989, உயுத்த. ஒற்றுக் 245; அதிகாயன். 178; உத்தர. அநுமப். 46 என்பன கண்டு தெளிக.

பி - ம். 1. *வஞ்சியாம்.*
2. *சாராழி, கலைசா லல்குல், கலைசே ரல்குல்; உவமை யொப்ப.*
3. *பிடரிற் றங்கும்.*
4. *தேரு மொவ்வா; உரைப்ப தூண்டோ, உரைப்ப தென்னே.* (34)

இடை

757. சட்டகந் தன்னை நோக்கி
யாரையுஞ் சமைக்கத் தக்காள்
இட்டிடை யிருக்குந் தன்மை
யியம்பக்கேட் டுணர்தி யென்னின்
கட்டுரைத் துவமை காட்டக்
கட்பொறி கதுவா கையில்
தொட்டவெற் குணர லாமற்
றுண்டெனுஞ் சொல்லு மில்லை.

'சட்டகம் தன்னை நோக்கி - (தனது) உருவழகைக் கண்டு, யாரையும் சமைக்க தக்காள் - எத்துணை எழில் வாய்ந்த மகளிரையும் பிரம தேவன் (மேல்வரிச் சட்டமாகக் கொண்டு) படைக்கக் கூடிய பேரழகை யுடைய சீதா தேவியின், இட்டு இடை இருக்கும் தன்மை - சிறிய இடை அமைந்துள்ள விதத்தை, இயம்ப கேட்டு உணர்தி என்னின் - (நான்) உவமை சொல்லக்கேட்டு நீ அறிய வேண்டும் என்ருல் (அஃது இயலாத காரியம்); (ஏனெனின்), கட்டு உரைத்து உவமை காட்ட கண் பொறி கதுவா - உறுதியாக எடுத்துக் கூறிய உவமானப் பொருளைக் காட்ட என்ருல் (அந்த இடையைக்) கண்ணுகிய இந்திரியங் காண முடியாது; (அந்த இடை கண்ணுக்குப் புலனுவதின்று); கையில் தொட்ட எற்கு உணரல் ஆம் - கரங்களால் தீண்டித் துய்த்த என்னுல் மாத்திரம் (உண்டு என்று) அறிதல் கூடும் ; மற்று உண்டு என்னும் சொல்லும் இல்லை - வேறு வகையில் உண்டு என்று சொல்வதற்கு எவ்வித ஏதுவுமில்லை.

'கருதமற் றினிவே றில்லை கமலத்துக் கடவுள் தானும் ஒரு திறத் துணர நோக்கி யுருவினுக் குலக மூன்றில், இருதிறத் தார்க்கும் செய்த வரம்பிவ ரிருவரென்ருள்' (ஆரணிய. 279;); 'தெரிவை மார்க்கொரு கட்டளையெனச் செய்த திருவே' (அயோத். சித்திரகூட. 34) என்று வருவன போல 'சட்டகம் தன்னை நோக்கி யாரையும் சமைக்கத்தக் காள்' என்ருள். இங்ஙனம் கட்டளையாக வழங்குவதைப் படிச்சந்தம் என்பர்; 'படிச்சந்தமாக்கும் பரிசுளவோ' (திருக்கோ. 78) என்றது காண்க. படிச்சந்தம் - பிரதிச் சந்தம் என்ற வடமொழிச் சிதைவு. இட்டிடை - சிறிய இடை; 'இட்டிடை நோவ எடுத்தடி கொப்பளிப்ப (தளிப்பா.); இட்டிடை; கழி - சிறிய இடைகழி; மற்றும் (சீவக. 1107, 1145, 1305, 2004, 2040, 2058) காண்க. கட்டுரைத்து உவமை காட்டக் கட் பொறிகதுவா என்றது, 'பல்லியல் நெறியிற் பார்க்கும் பரம்

பொருளென்ன யார்க்கும் இல்லையுண் டென்ன நின்ற இடை' (பால. கோலங்காண். 12); கண்கொளா நுடங்கிடையை 'உண்டெனத் தமர் மதிப்பர் நோக்கினுர் பிறரெல்லாம் உண்டில்லை யெனஐயம் கொளலன்றி யுணர்வரிதே' (சீவக. 172); 'புடைகொண்டெழு கொங் கையு மல்குலும் புல்கி நிற்கும், இடை கண்டில மல்லதெல் லாவுரு வுந் தெரிந்தாம்' (ஆரணிய. 697) என்பன காண்க. முன்னர்க் கோலங் காண் படலத்தில் 'இல்லை யுண்டென்ன நின்ற இடை யென்று கூறப் பட்டது. அங்ஙனம் எனினும் பிராட்டியைத் தொட்டணைந்த தனக்கு அவட்கு இடை யுண்டென்பது தெரியும் என்று கூறினன் இராமபிரான். பரம் பொருளை உண்டென்பர் ஆத்திகர், இன்றென்பர் நாத்திகர்; ஆயினும் இல்லை யென்று வாதிப்பவரும், யோகஞான முறைகளால் அவனை உணர்ந்தவழி அது உண்டு எனத்தெளிவர் அன்றே? மேலே கூறிய, 'கண் கொளா நுடங்கிடையை உண்டெனத்தமர் மதிப்பர்(172) என்ற சிந்தாமணி ஆசிரியர் கருத்தைக் கம்பர் இங்கே தெளிவாக்கியிருப் பது மகிழ்ந்து காண்டற்குரியது. சிந்தாமணி ஆசிரியர், 'உண்டெனத் தமர் மதிப்பர்' என்றுர். தமர் எனில் நற்றுய் தவ்வை செவிலி மார்களைக் குறிக்கும்; குழந்தை பிறந்ததிலிருந்து அதனைப் போற்றி வளர்த்த ஐவகைத் தாயர் பிராட்டியின் உறுப்புக்களை அறியாதவர் ஆவரோ? ஆகார், 'கொண்டானிற் கேளிர் பிறரில்லை யாகலின். ஆசிரியர், 'தமர்' என்பதைக் கணவனுன இராமபிரான் எனவே கொண்டு' தொட்ட எற்குணரலாம் என்று கூறினர். தொட்ட என்பது தீண்டிய என்னும் பொருளோடு, கல்வி கேள்விகளால் இறைவனை அவன் அருளால் அறிந்து அவனுடன் ஒன்றிய அறிஞரைக் குறிக்கும். கம்ப ருடைய உயர்ந்த கற்பனைகளில் இந்த இடம் ஒன்றென்பர் பேரறிஞர்; 'உயர்ந்த தன் மேற்றே உள்ளும் காலை' (தொல். உவம. 3) என்றதற் கேற்ப, இடைக்குப்பரம்பொருளின் நிலை உவமையாக்கப்பட்டது. சட்டகம் - வடிவு; இனிச் சட்டகம் என்பதற்கு மேல் வரிச் சட்டம் எனினுமாம்.

பி - ம். 1. இருந்த தன்மை.
3. கட்பொறி கதிவாக் கையில், கதிவக்கையில்.
4. உணரலாகா, உணரயாகா, உணர்தலாகா.

வயிறு

758. ஆலிலை படிவந் தீட்டு
மையநுண் பலகை நொய்ய
பால்நிறத் தட்டம் வட்டக்
கண்ணடி பலவு மின்ன
போலுமென் றுரைத்த போதும்
புனைந்துரை பொதுமை பார்க்கின்
ஏலுமென் றிசைக்கி னேலா
விதுவயிற் றியற்கை யின்னும்.

'பொதுமை பார்க்கின் - பொது நோக்காக நோக்கினால், (பூவுலகிலுள்ள மகளிரின் வயிறுகள்), ஆல் இலை - ஆலிலையையும், படிவம் தீட்டும் ஐய நுண் பலகை - வடிவம் எழுதற்குரிய மிகவும் மெல்லிய சித்திரப் பலகையையும், நொய்ய பால் நிறம் தட்டம் - மிகவும் மென்மையாயும் பால்போல் வெள்ளை நிறமாயும் உள்ள (வெள்ளித்) தட்டையும், வட்டம் கண்ணடி-வட்ட வடிவமான கண்ணாடியையும், இன்ன பலவும்- இவை போல்வன பலவற்றையும், போலும் - ஒத்திருக்கும், என்று உரைத்த போதும் - என்று கூறப்பட்டாலும், புனைந்துரை - (இவையெல்லாம்) கட்டு மொழிகளாகும்; (இவை, இச் சீதா தேவியின் வயிற்றுக்கு) ஏலும் என்று இசைக்கின் - பொருந்தும் என்று கூறினால், ஏலா- அவை (சிறிதும்) பொருந்தாவாம்: இது-(இவ்வாறு ஒருவமையும் ஏலாத) இத்தன்மை, வயிற்று இயற்கை - அவள் திருவயிற்றின் இயற்கையாம்; இன்னும் - மேலும்,

இதுவும் அடுத்த செய்யுளும் தொடர்ந்து பொருள்படும். பிராட்டியின் திருவயிறு உவமையற்றது என்பது கூறப்பெற்றது. இஃது. எதிர்நிலை அணி.

பி - ம். 1. படிகத்தீட்டும்; பலகையோ டணிகொள்;
2. பகரீ தெல்லாம்.
3. உரைத்த யாவும், யாதும்; பொருந்தப் பார்ப்பின், பொதுமை பார்ப்பின்.
4. ஏனுமென் றுரைக்க வேலா, றுரைக்க வொண்ணு, இசைக்க வேலா; இயற்கை யென்னும், பின்னும், யின்னும். (36)

### உந்தி

759. சிங்கலில் சிறுகூ தாளி
நந்தியின் றிரட்பூச் சேர்ந்த
பொங்குபொற் றெளையென் றாலும்
புல்லிய வுவமைத் தாமால்
அங்கவ ளுந்தி யொக்குஞ்
சுழியெனக் கணித்த துண்டால்
கங்கையை நோக்கிச் சேறி
கடலினு நெடிது கற்றோய்.

கடலினும் நெடிது கற்றோய் - கடலைப் பார்க்கிலும் விரிவாகக் கற்றுணர்ந்தவனே! (பிராட்டியின் உந்திச் சுழிக்கு), சிங்கல் இல் சிறு கூதாளி-சுருங்குதல் இல்லாத சிறிய கூதாளிச் செடியும், நந்தியின் - நந் தியாவட்டையும் (என்ற இவற்றின்), திரள் பூ - வட்டவடிவமான மலர் களிலே, சேர்ந்த-அமைந்துள்ள, பொங்கு பொன் தொளை-பெரிய அழகிய துளைகள், என்றாலும் - (உவமையாகும்) என்று கூறினாலும், புல்லிய உவமைத்து ஆம் - (அவை) அற்பமான (பொருந்தாத) உவமைகளாகும்; சுழி - (கங்கையின்) நீர்ச் சுழியானது, அவள் - அப்பிராட்டியின், உந்தி ஒக்கும் - உந்தியை ஒத்து விளங்கும், என-என்று, அங்கு-அவ்விடத்து, கணித்தது உண்டு - (நான், கங்கையாற்றைக் கண்ட போது), கருதியது உண்டு; கங்கையை நோக்கி சேறி - (ஆகையால்) கங்கையை (மனத்திற் பதித்துக்கொண்டு அவள் உந்தியை இன்னபடி யென்று எண்ணிச்) செல்வாயாக. ஆல், இரண்டும், ஈற்றசைகள்.

கங்கையின் நீர்ச்சுழியே பிராட்டியின் உந்திக்கு ஏற்ற உவமை யாகும் என்பது கருத்து. ஒப்பு: சீவக. 172 ; பெருங்: 2. 7: 24 ; 2. 15: 68 ; பொருந. 37. அயோத்: சித்திரகூட: 21 ; சுந்தர 534. இச் செய்யுளும் எதிர்நிலையணியாகும். சிங்கல் - குறைதல் ; தொழிற்பெயர்; 'சிங்கலில் மறை ' (பால. கடிமணப்; 48) ; 'சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்து ' (சிலப். பதிகம். 47) : அநுமனுடைய பரந்த கல்வியறிவையும், அவனுடைய நுண்மாண் நுழைபுலத்தையும் பாராட்டிக் 'கடலினும் நெடிது கற்றோய்' என்றனன் ; கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னும் காட்சி ' (61) : என முன்னர் அவனைப் புகழ்ந்ததும் காண்க. இன்னும். உயுத்த. ஒற்றுக்கேள்வி : 6; முதற்போர். 133; என்ற இடங்க ளையும் காண்க. நோக்கி - அகக் கண்ணால் பார்த்து.

பி - ம். 1. செங்கலில் சிறுகட் டாழி, சிறுகட்டாளி; வலம்புரிப் பூவும், செருந்தியின் பூவும்.

2. புல்லிய புதுமைத் தாமால், புல்லிய புதுமைத் தாமால், புல்லிய பொதுமைத் தல்லால்.

3. சுழிதனைக் கழித்த தன்டால்; கணிக்கிலையால்.

4. நெடிய் கற்றாய், நெடிதவ் கற்றாய். (37)

மயிரொழுங்கு

760. மயிரொழுக் கெனவொன் றுண்டால்
வல்லிசேர் வயிற்றின் மற்றென்
உயிரொழுக் கதற்கு வேண்டு
முவமையொன் றுரைக்க வேண்டின்
செயிரில்சிற் றிடையா யுற்ற
சிறுகொடி நுடக்கந் தீரக்
குயிலுறுத் தமைய வைத்த
கொள்கொம்பென் றுணர்ந்து கோடி.

வல்லி சேர் வயிற்றின் - கொடி போன்ற பிராட்டியின் திரு வயிற்றில், மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டு - மயிர் ஒழுங்கு என்ற ஒன்று உளது; (அது) என் உயிர் ஒழுக்கு - எனது உயிரின் ஒழுக்கே யாகும்; அதற்கு வேண்டும் உவமை ஒன்று உரைக்க வேண்டின் - அதற்கு யாவரும் ஒப்புக் கொள்ளத்தக்க ஓர் உவமை சொல்ல வேண்டு மானல், (அஃது இயலாது)? (ஆயினும்), செயிர் இல் சிறு இடையாய் உற்ற - குற்றம் தீர்ந்த சிறந்த இடை யென்று அமைந்த, சிறு கொடி - சிறிய கொடியினது, நுடக்கம் தீர -தளர்ச்சி ஒழியப் (படருமாறு), குயில் உறுத்து அமைய வைத்த - நன்கு பதியும்படி நிறுத்தி வைத்த, கொள் கொம்பு என்று - கொழுகொம்பாகும் என்று, கோடி - உணர்ந்து கொள்வாயாக. ஆல், அசை.

'பிராட்டியின் திருவயிற்று மயிரொழுக்குக்கு உவமையில்லை; இடை என்ற கொடி தளராமல் வளர வைத்த கொள் கொம்பு என்று கொள்க' என்ருன் இராமபிரான் என்க. ஒப்பு: பொருந. 7; நைடதம். அன்னத்தைத் தூது: 19; கந்தபு. மாயைப். 52ம் காண்க. 'வல்லி சேர் வயிற்றின்' என்பதற்கு, 'வயிற்றின் மடிப்பை ஒட்டி வளர்ந்த' என்றும் பொருள் கூறலாம் (761). 'மயிரொழுக்கு, என் உயிர் ஒழுக்கு' என்றது அவநுதியணி. மற்று; வினைமாற்று; 'மற்றறிவாம் நல்வினை' (நாலடி. 19). உயிர் ஒழுக்கு பிராணதாரை.

பி - ம். 1. வேறுண்டால், யொன்றுண்டு ; வயிற்றின் மேற்றென்.

2. உவமை யென் றுரைக்க, உவமையின் றுரைக்கில் வாரா, றுரைத் தல் வேண்டா, றுரைக்கில் வீரா.

3. சிற்றிடையாளுற்ற, யென்றுற்ற, யொன்றுற்ற ; நடக்கம் தீர்க்க.

4. குயில்வுறுத் தமையவைத்த, இயல்புறு தன்மை யேய்ந்த, யமையவேய்ந்த ; கொழுகொம்பென் றுணர்தி மாதோ. (38)

வயிற்றுமடிப்பு

761. அல்லியூன் றிடுமென் றஞ்சி
யரவிந்தந் துறந்தாட் கம்பொன்
வல்லிமூன் றுளவாற் கோல
வயிற்றின்மற் றவையு மார
வில்லிமூன் றுலகின் வாழு
மாதருந் தோற்ற மெய்ம்மை
சொல்லியூன் றியவாம் வெற்றி
வரையெனத் தோன்று மன்றே.

அல்லி ஊன்றிடும் என்று அஞ்சி - அகவிதழ்கள் பதிந்து தைக்கும் என்று பயந்து, அரவிந்தம் - தாமரையை, துறந்தாட்கு - விட்டு நீங்கி வந்த திருமகளாகிய சீதாதேவிக்கு, கோலம் வயிற்றில் - அழகிய வயிற்றினிடத்தில், அம் பொன் மூன்று வல்லி உள - அழகிய பொன்னிறமான கொடி வடிவமைந்த மூன்று மடிப்புக்கள் உள்ளன ; அவையும் - அம்மூன்று மடிப்புக்களும், மாரன் வில்லி - மன்மதனாகிய வில்வீரன், மூன்று உலகினும் வாழும் மாதர் - மூன்றுலங்களிலும் வசிக்கும் மகளிரெல்லாம்; தோற்ற - (இப் பிராட்டியின் அழகுக்குத்) தோற்றுப் போன, மெய்ம்மை - உண்மைச் செய்தியை, சொல்லி - பறையறைந்து, ஊன்றிய வெற்றி வரை ஆம் என - நிலை நிறுத்திய வெற்றிக்கடையாளமாகத் தீட்டிய இரேகை போல, தோன்றும் - விளங்கும். மற்று, அன்று, ஏ, அசைகள்.

பிராட்டி திருமகளே என்றது : பால. கோலங். 32 ; 35 ; மிதிலைக் 1 ; அயோத். சித்திரகூட : 5, ஆரணிய : 280, இராமபிரான் சீதாதேவியைத் திருமகளாகவே கூறுவது பொருத்தம் அன்றென்பர் சிலர். தாமரையைத் துறந்ததற்கு அல்லியூன்றலைக் காரணமாகக் கற்பித்தது, ஏதுத் தற்குறிப் பேற்றவணி. பிராட்டியின் வயிற்று மடிப்புக்களை வெற்றி

அறிகுறிக் கோடுகளாகக் கூறியது, தன்மைத் தற்குறிப்பேற்றம். உத்தம சாதி மகளிர்க்குரிய இம் மூன்று வரைகளை வடநூலார் திரிவலி. என்பர்; (நைடத. அன்னத்தைத் தூது 20). வலி என்பதே வல்லி என்றாயிற்று என்னலாம். பிராட்டியின் வெற்றிக்கு அறிகுறியாக மன்மதன் நாட்டி வைத்த வெற்றி வரைகளாகும் என்று, அவள் வயிற்றின் வல்லிகள் கூறப்பெற்றன என்க. அவையும்; உம்மை இசைநிறை.

பி - ம். 1. *அல்லியூர்ந் திடுமென்; அரவிந்த் துறந்தாட் கம்மா, துறந்தார்க் கம்பொன்.*

2. *வல்லிமூன் றுளவாம் கோல வயிற்றுமற் றவையு மான ;*

3. *உலகில் மாதர் யாவரும், மாந்தரும் தோற்ற மெய்ம்மை.*

4. *யூன்றியபோல் ; வெற்றி வரம்பென ; தோற்று மன்றோ ; தோற்று மன்றே.* (39)

தனங்கள்

762. செப்பென்பென் கலச மென்பென்
செவ்விள நீருந் தேர்வென்
துப்பொன்று திரள்சூ தென்பென்
சொல்லுவென் றும்பிக் கொம்பைத்
தப்பின்றிப் பகலின் வந்த
சக்கர வாக மென்பென்
ஒப்பொன்று முலைக்குக் காணேன்
பலநினைந் துழல்வெ னின்னும்.

முலைக்கு ஒப்பு ஒன்றும் காணேன் - (பிராட்டியின்) தனங்களுக்கு ஒப்பாக உரைக்க ஒன்றையும் அறியாத யான், செப்பு என்பென் - (அரதனச்) சிமிழ் என்று (உவமை) கூறுவேன் ; கலசம் என்பென் - (பொற்) கும்பம் என்று கூறுவேன்; செவ் இளநீரும் தேர்வென் - (தெங்கின்) செவ்விளநீர் என்று ஆராய்வேன் ; துப்பு ஒன்று திரள் சூது என்பென் - பவழத்தினால் கடைந்து தொழில் செய்யப் பெற்ற உருட்சி யான சொக்கட்டான் காயென்று (உவமை) கூறுவேன்; தும்பி கொம்பை சொல்லுவென் - யானையின் தந்த இணைகளைச் சொல்லு வேன் ; தப்பு இன்றி பகலில் வந்த சக்கரவாகம் என் பென் - தவறாது பகற்போதில் வந்த சக்கரவாகம் என்று மொழிவேன் ; இன்னும் பல நினைந்து - மேலும் பல உவமைகளை நினைத்து, உழல்வென் - (அவை ஒப் பாகாமை கண்டு) வருந்துவேன்.

தனங்களுக்கு இங்குக் கூறப்பெற்ற உவமைகள்; சீவக. 171; பெருங். 1. 55-46; கூர்ம. இராவண. 56; நைடத. அன்னத்லைத் தூது. 18. கந்தபு. மாயைப். 51; இவ்வுவமைகளெல்லாம் ஒப்பாகா என்று காரணங்காட்டிக் கூறினமை காணத்தகும். இராமபிரான், 'ஒப் பொன்றும் காணேன்' என்றமையால் அவற்றிற்கு அவையே இணை என்று கூறியவாறும்; இவ்வாறு கூறுவதைப் பொது நீங்குவமை யென் பர். தும்பிக்கொம்பு - யானையின் இளமருப்பு. பகலில் வந்த சக்கர வாகம்; சுந்தர. 687, உரை காண்க.

பி - ம். 1. செப்பென்ப கலசமென்ப; செவ்விள நீர்பந் தென்ப.
2. தப்பொன்று வல்கு தென்பன்; தும்பிக்கொம் பென்பன் தூயோரய்.
3. தப்பின்றிப் பகரி னந்த; சக்கர வாள மென்பன்.
4. ஒப்பொன்று மிசையக் காணேன்; முலையிற் காணேன்; வள முலைக் குலையனின்னும், தலைவ னம்மா. (40)

தோள்கள்

763. கரும்புகண் டாலும் கான்சேர்
காம்புகண் டாலு மாலி
அரும்புகண் டாரை சோர
வழுங்குவே னறிவ துண்டோ
சுரும்புகண் டாலுங் கோதை
தோளிணைக் குவமை சொல்ல
இரும்புகண் டனைய நெஞ்ச
மெனக்கிலை யிசைப்ப தென்னே.

கரும்பு கண்டாலும் - கரும்பைக் கண்டபொழுதும், கான்சேர் - மலைக் காடுகளில் உள்ள, காம்பு கண்டாலும் - மூங்கிலைக் கண்ட பொழுதும், கண் அரும்பு ஆலி தாரை சோர அழுங்குவேன் - கண் களிலிருந்து எழுகிற மழைத் துளி போன்ற நீர் தாரையாகப் பெருக மனம் புழுங்குவேன்; (இங்ஙனம் வருந்துவதன்றி), அறிவது உண்டோ - (அவள் தோள்களுக்கு இணையாகப் பிறவற்றை நான்) அறிவதுண்டோ? (இல்லை); சுரும்பு கண்டு ஆலும் கோதை தோள் இணைக்கு - வண்டுகள் கண்டு மொய்த்து ஒலிப்பதற்கு இடமான பிராட்டியின் இரு தோள் களுக்கு, உவமை சொல்ல-(ஒத்த) உவமையை உணர்ந்து கூற, எனக்கு இரும்பு கண்டனைய நெஞ்சம் இலை - எனக்கு இரும்பு போன்ற மனம்

இல்லை; இசைப்பது என்னே - யான் உவமை கூறுவது எங்ஙனம்? ஓகாரம் வினா.

கரும்பையும் இள மூங்கிலையும் மகளிர் தோள்களுக்கு உவமை கூறுவர் புலவர் பெருமக்கள்; ஆனால் அவை இணையாகா; வேறு உவமையும் இல்லை என்று இராமபிரான் கூறினன் என்க. கரும்பு: தோளுக்கு; 'கரும்பார் தோண்முத்தங் கழன்று' (சீவக. 231); 'கணவற்கு மெய்ம்முழுதும் இனிதாயிருத்தலின் கரும்பு' என்பர் நச்சினார்க்கினியர் (சீவக. 2453 உரை). மூங்கில் தோளுக்கு: குறள். 1113; சீவக. 2923; பெருங்கதை. 5. 1: 241: 2.12: 120: 1.57; 66-67 முதலியன. திரட்சி, உருட்சி, வளைவு. வடிவு, வழுவழுப்பு, மினுமினுப்பு முதலியவற்றால் கரும்பும் மூங்கிலும் மகளிர் தோட்கு உவமைகள். ஒப்புடைப் பொருள்களைக் கண்டு, பிரிந்தவர் வருந்துவது இயல்பாதலின், 'கண் தாரை சோர அழுங்குவேன்' என்று இராமபிரான் வருந்தினன் என்க. இரும்பு கண்டனைய நெஞ்சம் என்றான். மென்மை நிறைந்த பிராட்டி தோள்களுக்கு வலிய கரும்பு மூங்கில்களை உவமையாக்க மனம் தனக்கு இல்லாமையால் என்க.

பி - ம். 1. மாலைக் காம்பு கண்டாலும்: மல்லி.
2. சோரு மதுவன்றி, சோர்வ தன்றித் தோளினுக்கு; எறிய தண்டேற்;
3. குவமை சொல்லி.
4. இரும்புகொண் டனைய; மெனக் கில்லை; யிசைப்ப தென்னே (41)

முன்கை

764. முன்கையே யொப்ப தொன்றும்
உண்டுமூன் றுலகத் துள்ளும்
என்கையே யிழுக்க மன்றே
யியம்பினுங் காந்த ளென்றல்
வன்கையாழ் மணிக்கை யென்றன்
மற்றொன்றை யுணர்த்த லன்றி
நன்கையா டடக்கை யாமோ
நலத்தின்மே னலமுண் டாமோ.

'மூன்று உலகத்துள்ளும் - மூன்று உலகங்களிலும், முன்கை ஒப்பது ஒன்றும் உண்டு என்கையே-(சீதாதேவியின்) முன்னங்கையைப் போன்றதாகிய ஒரு பொருள் உண்டு என்று புகல்வதே, இழுக்கம்

அன்றே - குறைவன்றோ ? இயம்பினும் - உவமை கூறினும், மணிகை - அவளது அழகிய முன்னங் கைகளை, காந்தள் என்றல் - காந்தள் மலர் என்று கூறுதல். வன்கை - வலிய கூற்றும்; யாழ் என்றல் - யாழ் என்று கூறுதல், மற்று ஒன்றை உணர்த்தல் - பிறிதொன்றை அறிவுறுத்து வதாம் : அன்றி - அவ்வாறல்லாமல், நன்கையாள் தடக்கை ஆமோ - (அக் காந்தளும் யாழும்) பிராட்டியின் அழகிய அகன்ற முன்னங் கைகளுக்கு உவமை ஆமோ ? (ஆகா); நலத்தின்மேல் நலம் உண் டாமோ - அழகுக்கு விஞ்சிய பிறிதோர் அழகு உண்டோ ?

முன் செய்யுளிற்போல இங்கும் உவமைகள் பொருளுக்கு விலக் கப்பட்டமை காண்க. மணிக்கை - முன்னங்கை; மணிக்கட்டு என் பதும் அதுவே. நலத்தின் மேல் நல முண்டோ என்றது, முற்றிய அழகுடைய பிறிதொன்று இன்மையால் பிராட்டியின் கைந்நலத்துக்கு உவமையாகக் கூறக்கூடிய நலனுடைப் பொருள் பிறிதொன்றும் இல்லை என்ற துணிபு பற்றி என்க. இங்கு, சிறப்புப் பொருளைப் பொதுப்பொருள் விளக்கி நிற்றலால் இது வேற்றுப் பொருள் வைப் பணியின்பாற் படும். முன்கைக்குக் காந்தள்; அகநா. 108; பெருங். இலாவாண. 12 : 23. பரி : 19; சூளா. நாடு : 11. ஓகாரம் இரண்டும் வினா. ஏ - அசை.

பி - ம். 1. உண்டுகொல் லுலகத்; முண்டிம்மு வுலகத்.
2. என்கைபே ரிழுக்க மன்றே; காந்த ளென்றே; மியம்பினுங் காந்தள் போது.
3. மங்கையாள் மணிக்கை; மங்கையர் மணிக்கை யென்றல்; மன்கையாழ்; மணிக்கை யொவ்வா; மற்றென்றை யுணர்த்த லாமோ;
4. நன்கையாள் தளிர்க்கை வாய்ந்த, நன்கைய தடக்கம், நன்கையா டடக்கைக் காமோ; (42)

கைகள்

765. ஏலக்கோ டன்ற பிண்டி
யிளந்தளிர் கிடக்க யாணர்க்
கோலக்கற் பகத்தின் காமர்
குழைநறுங் கமல மென்பூ
நூலொக்கு மருங்கு லாட
னூபுர மலம்பு கோலக்
காலுக்குத் தொலையு மென்றாற்
கைக்கொப்பு வைக்க லாமோ,

'பிண்டி ஏல கோடு ஈன்ற இளம் தளிர் கிடக்க-அசோக மரத்தின் நறுமணம் கொண்ட கிளைகள் தோற்றுவித்த இளம் தளிர்கள் ஒரு புறம் இருக்க ; யாணர் கோலம் கற்பகத்தின். காமர் குழை - புதிய அழகை யுடைய கற்பக மரத்தின் விரும்பத்தக்க தளிர்களும், கமலம் நறும் மென் பூ - தாமரைக் கொடியிடத்துத் தோன்றுகின்ற மெல்லிய மலர்களும், நூல் ஒக்கும் மருங்குலாள் தன் - நூலைப் போல நுட்பமான இடையையுடைய சீதாதேவியின், நூபுரம் அலம்பும் கோலம் காலுக்கும் - சிலம்புகள் ஒலிக்கப் பெற்ற அழகிய கால்களுக்கே; தொலையும் என்றால் - தோற்றொழியுமானால். கைக்கு ஒப்பு வைக்கல் ஆமோ - அவற்றைக் கைகளுக்கு உவமை கூறுதல் பொருந்துமோ? ஓ - வினா.

பிண்டியின் தளிர், கற்பகத்தின் குழை, கமலப்பூ இவை பிராட்டியின் காலுக்கே ஒவ்வாமலிருக்க, அவற்றைக் கைக்கு ஒப்பாகக் கூறுவது ஏலாது என்றனன் என்க. கிடக்க, இகழ்ச்சி நோக்கிக் கூறியது. ஒப்பு; 'தளங்கிளர் கற்பக முகிழுந் தண்டுறை, இளங்கொடிப் பவழமுங் கிடக்க' (சுந்தர. 529). ஓ - வினா.

பி - ம். 1. ஏலக்கொண் டீன்ற.
2. காலைக்கற் பகத்தின் ; காமர் கழிபடுங், குழைபடும்.
3. நூபுர மொலிக்குங் கோலக், புலம்பு கோலக், புலம்பக் கோலக்
4. காலுக்குந் தோற்கு மென்றாற், தோற்ற தென்றாற் ; கொப்பின் வைக்க லாமோ; கையொப்பின் வைக்க லாமோ; வகுக்க லாமோ; கைக்கிணை கழற லாமோ. (43)

கைந்நகம்

766. வெள்ளிய முறுவற் செவ்வாய்
விளங்கிழை யிளம்பொற் கொம்பின்
வள்ளுகிர்க் குவமை நம்மான்
மயர்வற வகுக்க லாமோ
எள்ளுதிர் நீரே மூக்கை
யென்றுகொண் டிவறி யென்றும்
கிள்ளைகண் முருக்கின் பூவைக்
சிழிக்குமே லுரைக்க லாமோ.

வெள்ளிய முறுவல் - வெண்மையான பற்களையும், செவ்வாய் - சிவந்த வாயையும், விளங்கு இழை - ஒளி விடுகின்ற ஆபரணங்களையு

முடைய, இள பொன் கொம்பின் - இளமையான அழகிய பூங்கொம்பு போன்ற சானகியின், வள் உகிர்க்கு - கூர்மையான நகங்களுக்கு, உவமை - உவமையாகக் கூடிய பொருள்களை, நம்மால் - எம்போன்ற வர்களால், மயர்வு அற வகுக்கலாமோ - மயக்கமின்றி எடுத்துக் கூற இயலுமோ? (இயலாது) ; கிள்ளைகள் - கிளிகள், (பலாச மலர்களை நோக்கி), நீரே மூக்கை எள்ளுதிர் என்று கொண்டு - 'நீங்களே எமது அலகை (பிராட்டியின் கைந்நகங்களுக்கு ஒவ்வாமை குறித்து) இகழ்கின் றீர்கள்' என்று மனத்துட் கொண்டு, இவறி-சினந்து, முருக்கின் பூவை- அப்பலாச மலர்களைக் (தம்மை இகழும் மகளிர் வாயென்றே மயங்கி), என்றும் - எப்பொழுதும், கிழிக்குமேல் - கிழிக்குமானால், உரைக்க லாமோ - (கிளியின் மூக்கைப் பிராட்டியின் நகத்துக்கு உவமையாகக்) கூறலாமோ? ஓகாரங்கள் ; வினா.

மகளிர் வாய்க்கு முருக்க மலரையும் நகத்துக்குக் கிளியின் அல கையும் உவமை கூறுவர் கவிஞர். இம்மலர்களைக் கிளிகள் கோதுவது இயல்பு. இவற்றைக் கொண்டு இராமபிரான் வாயிலாகக் கம்பநாடர் ஒரு சிறிய நாடகம் சித்திரிக்கின்றார் பிராட்டியின் கைநகத்துக்குக் கிளிமூக்கு ஒப்பாகாது என்பதைக் கூறுவது அவர் கருத்து. பலாச மலர்கள் கிளியின் மூக்கை இகழ, அது சினந்து அம்மலரைக் கோதிற்று என்பது அவர் காட்டும் காட்சி. வாதம் செய்ய இயலாதவரே சினமடைபவர் ஆதலால் கிளியின் தோல்வி புலப்படுத்தப் பட்டது. ஒப்பு. சுந்தர. 530. இச் செய்யுட் கண் மயக்கவணியை அங்கமாகக் கொண்டு வந்த ஏதுத் தற்குறிப்பேற்றவணியும் எதிர்நிலையணியும் அமைந்திருப்பன காண்க. வெள்ளிய முறுவல் செவ்வாய் என்பதில் முரண்தொடை அமைந்துள்ளமை காணலாம். இவறுதல்-பொறுமையாற் சினங்கொள்ளுதல், முருக்கு - பலாசு; பால எழுச்சி. 57; சீவக. 1454; தக்க. 39.

பி - ம். 1. *இளம்பொற் காம்பின் ; விளங்கிழை யிருகைக் கொம்பின்.*

2. *நம்மால் மயலற ; மடலற.*

3. *எள்ளலிற் கிளியின் மூக்கை யிணையென வியம்பி மற்றக், எள்ளுதிர் நீள மூக்கை, எள்ளுதிர் நீரென் மூக்கை ; இவறிப் பின்னும், இவறி யின்னும்.*

4. *கிழிக்குமீ தொழிக்க லாமோ கிழிக்குமேற் சழிக்க லாமோ, கிழிக்கும தொழிக்க லாமோ, கிழிக்கும சழிக்க லாமோ.* (44)

கழுத்து

**767.** அங்கையு மடியுங் கண்டா
லரவிந்த நினையு மாபோல்
செங்கதிர் சிதறி நீலஞ்
செருக்கிய தெய்வ வாட்கண்
மங்கைதன் கழுத்தை நோக்கி
வளரிளங் கமுகும் வாரிச்
சங்கமு நினைதி யாயி
னவையென்று துணிதி தக்கோய்.

'தக்கோய் - தகுதி வாய்ந்தவனே! அம் கையும் அடியும் கண்டால்- (பிராட்டியின்) அழகிய கைகளையும் பாதங்களையும் பார்த்தால், அரவிந்தம் நினையுமா போல் - செந்தாமரை மலரைக் கருதுவது போன்று, செம்கதிர் சிதறி - சிவந்த ஒளிக் கிரணங்களைப் பரப்பி, நீலம் செருக்கிய - நீல நிறம் நிறைந்த, தெய்வம் வாள் கண் மங்கை தன் - தெய்வத் தன்மை வாய்ந்த வாள் போன்ற விழிகளையுடைய பிராட்டியின், கழுத்தை நோக்கி - கழுத்தைப் பார்த்து, வளர் இள கமுகும் - ஓங்கும் தன்மையுள்ள பாக்கு மரத்தையும், வாரி சங்கமும் - கடலில் பிறக்கும் சங்கையும், நினைதி ஆயின் - (அவள் கழுத்துக்கு இணையாகும் என்று) எண்ணுவாயானல், நவை என்று துணிதி - (அவ்வெண்ணம்) பழுதாம் என்று உறுதி செய்து கொள்வாயாக.

செந்தாமரை, கைகட்கும் கால்கட்கும் உவமைகள்; கமுகும் சங்கும் கழுத்துக்கு உவமை. ஆனுல், இவை பிராட்டியின் உறுப்புக்களுக்கு ஏற்ற உவமைகள் ஆகா என்பது குறிக்கப் பெற்றது. ஒன்றைக் காணின் அதனை ஒத்த பிறிதொன்றை நினைத்தல்; 'அல்லியங் கமலங் கண்டாள் அண்ணறன் வடிவு கண்டாள்'. செருக்கிய தெய்வ வாட் கண்; 'செருக்கிய நெடுங்கண். தெய்வக்கண் : ஒளிபொருந்திய கண் என்றும் ஆம்; தெய்வம் - ஒளி. (சீவக. 2657), நினைதியாயின் அவையென்றும் கூட்டுவர். தக்கோய், என்று இராமபிரான் அநுமனை விளித்தது, அவன் தன் கோடாமை குறித்து என்க.

பி - ம். 1. *லரவிந்த நினைதி யம்பொற்; நினைத்தி யம்பொற்.*
2. *செங்கனி சிதறி, செங்களஞ் சிதற, செங்கனி யதர நீலஞ்.*
3. *கழுத்தை நோக்கின், நோக்கில்.*
4. *சங்கமு நினைய லாகில், நினைதி யாகில், நினைவ ராகில்; துணிதி, தணிதி; நினைதி யன்றே, யிவையென்றே, அவை யென்றே.*

(45)

வாய்

768. பவளமுங் கிடையுங் கொவ்வைப்
பழனும்பைங் குமுதப் போதும்
துவள்வில விலவம் கோப
முருக்கென்றித் தொடக்கஞ் சாலத்
தவளமென் றுரைக்கும் வண்ணஞ்
சிவந்துதேன் றதும்பு மாகின்
குவளையுண் கண்ணி வண்ண
வாயது குறியு மஃதே.

குவளை உண் கண்ணி - நீல மலர் போன்ற மைதீட்டப் பெற்ற கண்களையுடைய பிராட்டியின், வண்ணம் வாய் அது - அழகிய வாயானது, பவளமும் - பவளமும், கிடையும் - (சிவந்த) நெட்டியும், கொவ்வை பழனும் - கோவைக் கனியும், பைங்குமுத போதும் - புதிய செவ்வல்லி மலரும், துவள்வு இல இலவம் - துவண்டு போகாத இலவமரத்தின் மலரும், கோபம் - இந்திர கோபம் என்னும் பூச்சியும், முருக்கு - பலாசமலரும், என்ற இ தொடக்கம் - என்று கூறும் இவை முதலான (உவமப்) பொருள்கள், சால தவளம் என்று உரைக்கும் வண்ணம் - (தனக்கு முன்னே) மிகவும் வெண்ணிறமானவை என்று சொல்லுமாறு, சிவந்து - செந்நிறம் பெற்று, தேன் ததும்பும் - தேன் நிரம்பப் பெற்று ஒளிரும்; ஆகின் - ஆனால், குறியும் அஃது - அதன் உவமையாக்கத் தக்க பொருளும் அதுவே யாகும். ஏ : ஈற்றசை.

பிராட்டியின் வாய்க்கு அதுவே உவமை என்றபடி. துவள்வில இலவம் என்றதால், பிராட்டியின் வாய் துவட்சியுடைய தென்க. இங்குக் கூறிய உவமைகளுக்கு ஒப்பு: அயோத். சித்ரகூட. 25; சுந்தர. 529; 541. குறள். 1121; ஆரணிய. 623; உயுத்த. மாயாசனக. 5; பெருங். 1, 33 : 118; அகம். 142; மணிமே. 20 : 51; சீவக. 191; திருக்கோ. 92.

பி - ம். 1. கோவை; பழமும்; குமுதப் பூவும்.
2. துவளில வக்கம்; முருக்கெனத் தொடக்கும்.
3. திவளு; தளிக்கு மாயில்.
4. மாயது குறியு மஃதே.

**769.** சிவந்ததோ ரமுத மில்லைத்
தேனில்லை யுளவென் றாலும்
கவர்ந்தபோ தன்றி யுள்ள
நினைப்பவோர் களிப்பு நல்கா
பவர்ந்தவா ணுதலி னுடன்
பவளவாய்க் குவமை பாவித்
துவந்தபோ துவந்த வண்ண
முரைத்தபோ துரைத்த தாமோ.

'சிவந்தது ஓர் அமுதமில்லை - (பிராட்டியின் இதழ்கள்போல்) சிவந்த வண்ணமான அமிர்தம் ஒன்று இல்லை; தேன் இல்லை - தேனும் இல்லை; உள என்றாலும் - ஒருகால் உள்ளன ஆனாலும், (அவை) கவர்ந்த போது அன்றி - அவை அள்ளி உட்கொண்ட போதல்லாமல், உள்ளம் நினைப்ப ஓர் களிப்பு நல்கா-மனத்தால் கருதிய அளவில் ஒப்பற்ற மகிழ்ச்சியை அளிக்கமாட்டா; (ஆதலின்), பவர்ந்த வாள் நுதலினுள்தன் - நன்கமைந்த ஒளி வாய்ந்த நெற்றியை யுடைய பிராட்டியின், பவளம் வாய்க்கு - பவளம் போன்று சிவந்த வாய்க்கு, உவமை பாவித்து - உவமைப் பொருளைக் கருதி, உவந்தபோது உவந்தவண்ணம் உரைத்த போது-தமக்கு மகிழ்வுண்டான காலத்தில் மனத்துக்கு உவந்த விதமாக எடுத்துச் சொன்னால், உரைத்தது - அவ்வாறு சொன்னது, ஆமோ - பொருத்தமானதாக ஆகுமோ? (ஆகாது என்றபடி.) ஓகாரம் : வினா.

இச் செய்யுளும் எதிர்நிலையணியே. அமுதம் - வெண்ணிறமானது: நினைப்பவோர் களிப்பு நல்கா; ஒப்பு. 'உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் கள்ளுக்கில் காமத்துக் குண்டு' (குறள். 1281). உவந்தபோது உவந்தவண்ணம் உரைத்தல் - தோன்றியபடி உண்மையை ஆராயாமல் வாய்க்கு வந்தவண்ணம் உரைத்தல்; 'சொல்லொக்கும் பொருளொவ் வாதாற் சொல்லலா முவமை யுண்டோ' (ஆரணிய. 627) என்றபடி பொருத்தமற உரைத்தல்.

பி - ம். 1. ரமிழ்த மில்லை யுளதென் றாலும்; கரும்பென் றாலும்.
2. நல்காய். 3. பயந்தவார் குழலி னுடன்; பாலித்து.
4. உவந்தபோ துவந்த தன்றி; துரைத்தபோ துரைக்கு மாதோ, தொக்கு மாதோ, தொக்கு மன்றே. (47)

பற்கள்

770. முல்லையு முருந்து முத்து
முறுவலென் றுரைத்த போது
சொல்லையு மமுதும் பாலுந்
தேனுமென் றுரைக்கத் தோன்றும்
அல்லதொன் றுவ தில்லை
யமுதிற்கு முவமை யுண்டோ
வல்லையே லறிந்து கோடி
மாறிலா வாறு சான்றோய்.

மாறு இலா ஆறு - ஒப்பில்லாத பலவழிகளில், சான்றோய் - சால்பு மிகுந்தவனே! முறுவல் - பிராட்டியின் பற்கள், முல்லையும்-முல்லை அரும்புகளையும், முருந்தும் - மயிலிறகின் அடியையும், முத்தும் - முத்துக்களையும், (ஒப்பனவாம்), என்று உரைத்தபோது - என்று சொன்னால், சொல்லையும் - அவள் சொற்களைக் குறித்தும், அமுதும் - தேவரமுதையும், பாலும் - பாலையும், தேனும் - தேனையும் (போலும்), என்று உரைக்க தோன்றும் - என்று கூற மனத்தில் எண்ணமுண்டாம்; அல்லது - (இவ்வாறு உவமை கூறச் சிலவற்றைக் கூறவேண்டும் என்ற முறை) அல்லாமல், ஆவது ஒன்று இல்லை - (நேர்மையாகக் கூறி விட்டோம்) என்று கைகூடுவது ஒன்றும் இல்லை; அமுதிற்கும் உவமை உண்டோ - தேவாமிர்தத்துக்கு உவமையாகக் கூறும் (சிறப்புப் பொருள் பிறிதொன்று) உண்டோ? வல்லையேல் - உனக்கு வல்லமை இருந்தால், அறிந்து கோடி - (மைதிலியின் பற்களின் தன்மையை ஊகித்து) உணர்ந்து கொள்வாயாக. ஓ: வினா.

பிராட்டியின் பற்களுக்கு இவ்வுலகத்தும் தேவருலகத்தும் ஒப்பு இல்லை என்றபடி. 'உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங்காலை' (தொல், உவம. 3.) என்றபடி உவமைப் பொருள் உயர்ந்ததாய் அமையவேண்டியிருத்தலால், பிராட்டியின் பற்களுக்கு உவமை கூறத்தக்க பெருமை வாய்ந்த பொருள் ஒன்றுமில்லை என்றனர். முறுவல்-புன்னகை எனலும் ஒன்றும். 'அமிழ்துக்கும் உவமையுண்டோ?' என்று கூறியதால் 'பிராட்டியின் பற்களுக்கும் உவமையில்லை' என்றபடி.

பி - ம். 1. முல்லையே முருந்த முத்தம்; முறுவலென் றுரைத்த தொன்றும் றுரைக்கும் போதம்;
2. றுரைக்குர் தோறும், லுரைக்கும் போதும், லுரைத்த போதின், றுரைக்கும் போது, றுரைத்த தொன்றும்.
3. யமர்தியத், யமிழ்திற்கு, யமுதினுக்கு; குவமை யுண்டே.
4. வல்லையால்.

மூக்கு

771. ஓதியு மெள்ளுந் தொள்ளைக்
குமிழுமூக் கொக்கு மென்றால்
சோதிசெய் பொன்னு மின்னு
மணியும்போற் றுளங்கித் தோன்றா
ஏதுவு மில்லை வல்லா
ரெழுதுவார்க் கெழுத வொண்ணா
நீதியை நோக்கி நீயே
நினைதியா னெடிது காண்பாய்.

நெடிது காண்பாய்! - தீர்க்க தரிசியே! ஓதியும் - பச்சோந்தியையும், எள்ளும் - எள்ளின் மலரையும், தொள்ளை குமிழும் - துளையுள்ள குமிழ மலரையும், மூக்கு - (பிராட்டியின்) மூக்கானது, ஒக்கும் என்றால் - ஒத்திருக்கும் என்று சொன்னால், (அப் பொருள்கள்), சோதி செய் - ஒளி வீசுகின்ற, பொன்னும் - பொன்னும், மின்னும் மணியும் போல் - ஒளி செய்கின்ற இரத்தினங்களையும் போன்று, துளங்கி தோன்றா - விளங்கிக் காணப்படா; ஏதுவும் இல்லை - (அங்ஙனம் ஒளிவீச அவற்றின்பால்) காரணமும் இல்லை; (இன்னும்), எழுதுவார் வல்லார்க்கு எழுத ஒண்ணா - ஓவியம் தீட்டுதலில் திறமை பெற்றவர்க்கும் தீட்ட முடியாத, நீதியை நோக்கி - (மூக்கின் இத்தன்மையை) நெறிப்பட ஆராய்ந்து, நீயே நினைதி - (அதன் அழகை) நீயே உணர்ந்து கொள்வாயாக. ஆல் : ஈற்றசை.

பொன்னுக்கும் மணிக்கும் ஒளியே உண்டு; ஓதி முதலியவற்றிற்கு வடிவுண்டு, ஒளியில்லை. ஆகவே ஒளியும் வடிவழகும் பெற்ற பிராட்டி மூக்குக்கு உவமையில்லை என்றபடி. 'எழுதுவார்க்கு எழுத வொண்ணா' 'மதனற்கு மெழுத வொண்ணாச் சீதை'; (பால. மிதிலைக். 4.) மின்னும் மணியும் என்றதற்கு மின்னலும் மணியும் என்றும் பொருள் கொள்ளலாம். ஒப்பு : சுந்தர. 543; நைடத. அன்னத்தைத் தூது 14.

பி - ம். 1. குமிழு மூக்கென்றால், குமுத மூக்கு; ஓதியுங் குமிழு மென்றா மொண்ணுதல் மூக்கொப் பென்றால்; குவமை யென்றால்; மூக் கொக்கு மேற்ற.
2. சோதி செம்பொன்னு; றுளங்கித் தோன்றும், றுலங்கித் தோன்றா; றுலங்கிற் றென்றே; பொன்னிற் செய்த வணி யொடுந் துளங்கி;
4. நீதியே; நீயுன் னினைவினுள் நெடிது காண்டி; னெடிது கண்டாய், னெடிது கற்றாய், (49)

காதுகள்

772. வள்ளைகத் தரிகை வாம
மயிர்வினைக் கருவி யென்னப்
பிள்ளைக ளுரைத்த வொப்பைப்
பெரியவ ருரைக்சிற் பித்தாம்
வெள்ளிவெண் டோடு செய்த
விழுத்தவம் விளைந்த தென்றே
உள்ளுதி யுலகுக் கெல்லா
முவமைக்கு முவமை யுண்டோ.

(மகளிர் செவிகளுக்கு) வள்ளை - வள்ளைக்கொடியின் இலையும், கத்தரிகை - கத்தரிக்கோலாகிய, வாமம் மயிர் வினை கருவி - அரிய மயிர் களையும் கருவியும், என்ன-என்று, பிள்ளைகள் உரைத்த ஒப்பை-அறிவிற் சிறியர் சொல்லும் உவமைகளை, பெரியவர் - அறிவு முதிர்ந்த சான்றோர், உரைக்கின்-(வைதேகியின் செவிகளுக்கு உவமைகளாகச்) சொன்னால், பித்து ஆம் - அது பித்தங்கொண்டவர் கூற்றாகும் ; (சிறிதும் பொருந்தாது) ; வெள்ளி வெண் தோடு - (அவள் அணிந்துள்ள) மிகவும் வெண்ணிறமான செவிக்கலன், செய்த-(முற்பிறப்பில் அத் தோடு) இயற்றிய, விழுதவம் விளைத்தது என்றே - சிறந்த தவமே சீதையின் செவிகளாக வந்தது என்றே, உள்ளுதி - நினைவாயாக ; உலகுக்கு எல்லாம் உவமைக்கும் - உலகிலுள்ள பொருட்களுக்கெல்லாம் உவமையாகப் பகர்தற்குரிய ஒன்றற்கும், உவமை உண்டோ-பிறிதோர் உவமை உண்டோ ? (இல்லை.) ஓ - வினா.

இச் செய்யுள் வேற்றுப்பொருள் வைப்பணி. செவிக்கு, வள்ளை ; 26 ; சீவக. 168 : நைடதம். அன்னத்தைத் தூது. 15 : கத்தரிகை ; சீவக. 168. பிள்ளைகள் உரைத்தது ; ஒப்பு : ' இந்திரன் இருக்கை யென்பார் இலங்கையை எடுத்துக் காட்டார், அந்தரம் தெரிதல் தேற்றாரருங்கவிப் புலவ ரம்மா ' (உயுத்த. இலங்கை காண். 31). கத்தரிகை வேறு, மயிர்வினை கருவி வேறு என்று கொண்டு பொருள் கூறுவாரும் உளர்.

பி - ம். 1. கத்திரிகை ; வஞ்சி காதினுக்குவமை.
2. ளுரைக்குமொப்பை ; ளுரைக்க வொல்லை ; ளுரைக்கினொல்லை ; ளுரைக்கும்பேர்த்த ; ளுரைப்பதல்லாற் ; ளுரைக்கி லொல்லை;
3. வெள்ளை வெண்தோடு ; விளைந்த வென்றே, மேன்மையன்றே ; விளைந்தவன்றே ; விளைத்த தன்றே ; விளைத்தவன்றே.
4. உலகி னெல்லாம்; உலகி னென்றும், யுலகிற் காணு; குழையைச் சொல்லின். (50)

கண்கள்

773. பெரியவாய்ப் பரவை யொவ்வா
பிறிதொன்று நினைந்து பேச
உரியவா யொருவ ருள்ளத்
தொடுங்குவ வல்ல வுண்மை
தெரியவா யிரக்கா னேக்கிற்
றேவர்க்குந் தேவ னென்னக்
கரியவாய் வெளிய வாகும்
வாட்டடங் கண்க ளம்மா.

'தேவர்க்கும் தேவன் என்ன கரிய ஆய் - தேவர்கட்கெல்லாம் தேவனாகிய திருமாலைப் போன்று கருமையாகியும், வெளிய ஆகும் - வெண்மையுமாகவுள்ள, வாள் தட கண்கள் - வாள் போன்ற பெரிய கண்கள், உண்மை தெரிய - (அவற்றின்) சுயரூபம் தெரியுமாறு, ஆயிரம் கால் நோக்கின் - ஆயிரம் தடவை பார்த்தாலும், பெரிய ஆய் பரவை ஒவ்வா-மிகவும் விசாலமானதாய்க் கடலையும் உவமையாக ஏற்காதாம்; (கடலினும் பெரியவாம்); பிறிது ஒன்று நினைந்து பேச உரிய ஆய் - மற்றொரு உபமானப் பொருளை ஆராய்ந்து கூறுதற்குத் தக்கனவாகி, ஒருவர் உள்ளத்து-ஒருவரது மனத்திற்குள், ஒடுங்குவ அல்ல-அடங்கும் இயல்புடையன அல்ல. அம்மா - வியப்பிடைச் சொல்.

சீதையின் கண்களின் தன்மையை நினைந்து அளவிட்டு உவமை கூறற்கியலாதெனப்பட்டது. 'கடலினும் பெரிய கண்கள்' (ஆரணிய 623). பாட்டுடைத் தலைவன் நிறத்தையே இங்கு உவமையாக்கினர். 'அவர்தம் நீல நிறத்தை யெல்லோரு நினைக்க வதுவாய் நிரம்பியதோ (பால. மிதிலை. 67). 'கரியனாய் வெளியனாகிச் செய்யனாய்க் காட்டுங் காண்டற், கரியனாய் வெளியனாய்த்தன் னகத்துறை யழகனேபோல்' (சுந்தர. 197). அமிழ்தினின் விளர்த்து ணஞ்சினிற் கருகி யையரிசிதறி மைதோய்ந்து (நைடத. அன்னத்தைத் தூது. 13), கருமை வெண்மை முதலியன கண்களின் நிறங்கள் (ஒப்பு.) 'ஈசற்கி யான்வைத்த வன்பி னகன்றவன் வாங்கியவென், பாசத்திற் காரென் றவன்தில்லை யின்னொளி போன்றவன்ரேள், பேசத் திருவார்த்தை யிற்பெரு நீளம் பெருங்கண்களே' (திருக்கோ. 109). இங்கே கம்பர் மதம் என்ற பழைய வுரைக் குறிப்புக் காணப்படுகின்றது.

பி - ம். 1. *நினைந்துபேசி; நினைந்துகூற; நினைந்துபேசற்.*
2. *ஒருவ ராகத் தொடுங்குவ தன்றி; அரியவாய்; ருள்ளத் தடங்குவ வல்ல.*

3. தேவரிற் றெய்வம் ; தெரிவருந் தெய்வ மென்ன ; தெரிவில தெய்வ மென்ன ; தெரிவுருத் தெய்வ மென்ன ; தேவர்க்கும் தெய்வ மென்ன ;

4. கண்கள் மாதோ ; வளரிரு கண்க ளம்மா ; மவ்விரு கண் களம்மா ; அயன்தடங் கண்க ளம்மா. (51)

புருவங்கள்

774. கேளொக்கி னன்றி யொன்று
கிளத்தினுற் கீழ்மைத் தாமே
கோளொக்கு மென்னி னல்லாற்
குறியொப்பக் கூறிற் றன்ருல்
வாளொக்கும் வடிக்க ணுடன்
புருவத்துக் குவமை வைக்கின்
தாளொக்க வளைந்து நிற்ப
விரண்டில்லை யனங்க சாபம்.

'வாள் ஒக்கும் வடிகணுள் தன் புருவத்துக்கு - வாள்போன்ற கூர்மையான விழிகளையுடைய பிராட்டியின் புருவங்கட்கு, உவமை வைக்கின் - உவமை பொருத்துவோமானுல், கேள் ஒக்கின் அன்றி - உறவாக வமைந்த அவை தாங்களே ஒன்றுக்கொன்று உவமை யாகு மல்லாமல், ஒன்று - அயலொரு பொருளை, கிளத்தினுல் - உவமையாகப் பகர்ந்தால் ; கீழ்மைத்து ஆம் - இழிவான உவமையே யாகும் ; (மற்றும்) கோள் ஒக்கும் என்னின் அல்லால் - சாதாரணமான மகளிரது புருவத்துக்கு உவமிக்கப்படும் பொருளை எடுத்துத்தன் மனக் கொள்கைக்கு ஏற்பவுள்ளது என்று புருவங்கட்கு உபமானம் கூறிஞற் கூறலா மன்றி, குறி ஒப்ப கூறிற்று அன்ருல் - உவமைக் குறி பொருந்தப் பகர்ந்ததாக ஆகாது, தாள் ஒக்க வளைந்து நிற்ப - இரண்டு நுனியும் ஒருசேர வளைந்து நிற்பனவான ; இரண்டு அனங்க சாபம் - மதனுடைய இரண்டு விற்கள், இல்லை - உலகில் இல்லை. (ஆதலால்) அதையும் உவமை கூறற்கியலாது.

சீதையின் புருவங்கட்கு உவமையில்லை, புருவங்கள் இரண்டுள வாகலின் அவை ஒன்றை ஒன்று நிகர்க்கும். பிறவுவமைகள் கூறின் அவை யேற்ற வுவமையாகா ; இழிந்த உவமைகளேயாகும். மாரன் வில்லைக் கூறுவோமாகில் அவனுக்கு இரண்டு விற்களின்மையின் இவ்விணைப் புருவங்கட் கொவ்வா என்றபடி. (ஒப்பு) தக்க. 23; ' வண்சிலையை வனப்பழித்து (சீவக, 166). 'சேயிழை முகத்

தொளிர் புருவம், வெண்கதிர்க் குடையி லிரதியுமதனும் வைத்தகை வில்லிணை பொருவும், என்று வில்லிரண்டில்லையே யென்ற குறையை நீக்கினர் நைடத ஆசிரியர் (அன்னத்தைத் தூது 12.) வாள் ஒக்கும் கண். 'வாளிரண்டு மாறு வைத்த போன் மழைக் கண் (சீவக. 1995) வடி - மாவடுவின் பிளவுமாம். தாள் - வில்லின் தண்டு. சாபம் - வில். 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு); அநங்கன் - வடசொல்.

பி - ம். 1. கிழ்மைத் தாயே; கிழ்மைத் தாமாற்; ளைத்நிறு வினிமைத் தாமோ.
2. மென்னி னில்லாக்; குறியொக்கக் கூற லாமால், கூற லாமோ.
3. வடுக்க ளுடன்; புருவத்துக் குவமை கூறிற்;
4. வளர்ந்து நிற்ப; வளைந்தே; திரண்டிலை (52)

நெற்றி

775. நன்னாளு நளின நாணு
முகத்தினள் நுதலை நாடிப்
பன்னாளும் பன்னி யாற்று
மதியெனும் பண்ப தாகி
முன்னாளின் முளைவெண் டிங்கண்
முழுநாளுங் குறையே யாகி
எந்நாளும் வளரா தென்னி
னிறையொக்கு மியல்பிற் றுமே.

'முன்நாளில் முளைவெள் திங்கள் - வளர்பிறையில் தொடக்கத்தில் தோன்றுகின்ற வெண்ணிறமான மதி, நல்நாள் - நல்ல பகற்போதில், நளினமும் நாணும் - (மலர்ந்துள்ள) தாமரையும், (தான் நிகராகாது) வெட்கமடைதற்குக் காரணமான, முகத்தினள் - முகத்தையுடைய சீதையின், நுதலை - நெற்றியின் வனப்பை, நாடி - ஆராய்ந்து, பல் நாளும் பன்னி - பல நாட்களும் அதனையே கருதி, ஆற்று - பொறுமல், மதிஎனும் பண்பது ஆகி - மதி என்று சொல்லற்குரிய தன்மையுடையதாய், முழு நாளும் குறையே ஆகி - (பதினாறு கலைகளும் நிறைந்து ஒளிரவேண்டிய பூரணையிலும் கலைக் குறைவாகவுள்ளதாகவே தோன்றி, எ நாளும் வளராது என்னின் - எந்த நாளிலும் வளராதிருக்குமாயின், இறை ஒக்கும் இயல்பிற்று ஆம் - (சீதையின் நெற்றிக்கு) ஒரு சிறிது உவமையாகும் பெற்றியுடையதாகும். ஏ - வினா.

மதி சீதையின் நெற்றிக்குவமையாக வேண்டும்; ஆனால், பூரணையிலும் முழுக்கலைகள் கொண்டு முற்றாது குறைந்தே காணப்படுமாயின்

ஒருவாறு அஃது இயலும். இவ்வாறு நிகழ்வதற்கும் மதி தன் பெயருக் கிணங்கப் பன்னாள், தான் அவள் நுதற்குவமையாதல் வேண்டும் எனச் சிந்தித்தேயாகவேண்டும் என்று கற்பித்துக் கூறப்பட்டது. (ஒப்பு) திரும ணத்திற்குக் கடியென்று பெயருண்டு, அதனை நாலடியாரில் 'கடியென் றார் கற்றறிந்தார்' என்றதுபோல. முழுநாள் - பூரணை. இங்குக் கூறியது நுதல் வருணனையே யென்க. முகத்தின் வருணனை பின்னர்க் கூறப் படும். (ஒப்பு.) சுந்தர. 545. கந்தபு.: அசுர: மாயைப். 40. இறை- சிறிது.

பி - ம். 1. நன்னாளில், நளின நாடும்; நளியடி, நன்னாள நளினத் தாடன் முகத்திற்குக் குவமை நாடின்; நாணி.

2. பன்னாளும் பார்க்க யார்க்கும் மதியெனும் பண்பின்றாகி, படிகாணும் படியிற் றாமோ; பண்பிற் றாகி

3. முறைகளுங் குறைய வாக; முன்னாளை முழுவெண் டிங்கள்.

4. வாரா தென்னி; மியல்பிற் றம்மா; மியல்பிற் றாமால்; மியல்பிற் றாமோ; மியல்பிற் றன்றே. (53)

முன்நெற்றிமயிர்

776. வனைபவ ரில்லை யன்றே
வனத்துணும் வந்த பின்னை
அனையன வெனினுந் தாந்த
மழகுக்கோ ரழிவுண் டாகா
வினைசெயக் குழன்ற வல்ல
விதிசெய விளைந்த நீலம்
புனைமணி யளக மென்றும்
புதுமையா முவமை பூணா.

'நாம் வனத்துள் வந்த பின்னை - நாங்கள் காட்டிற்கு வந்த பிறகு, வனைபவர் இல்லை அனறே - (சீதாப்பிராட்டியின் முன்நெற்றி மயிர்களை வாரி) ஒப்பனை செய்பவர் இல்லையன்றோ; தாம் அனையன எனினும் - தாம் அத்தன்மையனவானாலும், (அங்ஙனம் வாரி யெழிற்படுத்தப்படா விடினும்) தம் அழகுக்கு ஓர் அழிவு உண்டாகா - தமது வனப்புக்கு ஒரு குறைவு ஏற்படாது; வினைசெய குழன்ற அல்ல - வாரித் தொழில் செய்வதனால் சுரிந்தன அல்லவாய், விதிசெய விளைந்த - பிரமதேவன் படைத்ததனால் இயல்பாகவே சுரிந்தனவான, நீலம் மணிபுனை அளகம் - நீலக்கல் போன்ற நெற்றியின் மிசையுள்ள அந்தத் தலைமயிர்கள், என்

றும் புதுமை ஆம் - எப்பொழுதும் புதுமையாகவே தோன்றுகின்றன; உவமை பூணு - எந்த உவமைப்பொருள்களையும் ஏற்கமாட்டா.

அளகம் - முன்னெற்றி மயிர். வாரி வகிர்ந்து செய்யப்படாத நிலையிலும் அளகம் தன் இயற்கை அழகுடன் விளங்கிற்று என்பது. 'அணிபறித் தழகு செய்யும் அணங்கு' (உயுத்த. அங்கதன் தூது : 18) வனைபவரில்லையன்றே : ஆரணிய. 5 காண்க. இயற்கைப் பேரெழில் வாய்ந்த பொருள்கள் என்றும் புதிதாகவே காணப்படுமாதலின் 'என்றும் புதுமையாம்' என்றான். அளகம்; மஞ்சொக்கு மளகவோதி' (ஆரணிய. 623): ஐம்பால் என்று பெயருண்டாகலின் கூந்தல் பன்மை யாற் கூறப்பட்டது. யாம் என்பது உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. (ஒப்பு.) 'நீண்டு குழன்று நெய்த்திருண்டு (சுந்தர. 546.)

பி - ம். 1. வந்த பின்னர், 2. பின்றை, தந்த மழகுக்கோ ரழகுண்டாக, தந்த வழகுக்கோ ரவதியுண்டோ.

3. விதிசெய விளைந்த சீதப், நீலப், விளைந்த சேரப்,

4. யளகமின்னும், யளக மொன்றும், யளகமென்னும், புன்மையா முவமை. (54)

முகம்

777. கொண்டலின் குழவி யாம்பல்
குனிசிலை வள்ளை கொற்றக்
கெண்டையொண் டரள மென்றிக்
கேண்மையிற் கிடந்த திங்கண்
ம்ண்டில வதன மென்று
வைத்தனன் விதியோ னியப்
புண்டரீ கத்தை யுற்ற
பொழுதது பொருந்தித் தேர்வாய்.

கொண்டலின் குழவி - இளம்பிறையும், ஆம்பல் - செவ்வல்லி மலரும், குனிசிலை - வளைந்த விற்களும், வள்ளை,- வள்ளைக் கொடியும், கொற்றம் கெண்டை - வெற்றிமிக்க கெண்டை மீன்களும், ஒள் தரளம்- ஒளிவாய்ந்த முத்துக்களும், என்று இக் கேண்மைய - என்று சொல்லப் பட்ட இதற்கு உவமையாகும்படி தொடர்பு உள்ள பொருள்கள், கிடந்த - அமையப்பெற்ற, திங்கள் மண்டிலம் - மதிமண்டலத்தை, விதி யோன்- பிரமதேவனே, வதனம் என்று வைத்தனன் - பிராட்டியின் முக மென்று அமைத்து வைத்தான்; நீ - நீ, அ புண்டரீகத்தை - (பிராட்டி

யின்) அந்தத் தாமரை வதனத்தை, உற்றபொழுது - நெருங்கிக் காணும் பொழுது. அது பொருந்தித் தேர்வாய் - (யான் உரைத்த) அவ்வியல்பினை நன்று ஆராய்ந்தறிவாய்.

சீதையின் முகமென்று பெயரிட்டு, கொண்டலின் குழவி முதலிய வற்றை யுடையதொரு மதிமண்டலத்தைப் பிரமன் படைத்தான் என்று கூறியது ஒழிப்பணியின்பாற்படும். கொண்டற் குழவி, செவ்வாம்பல் மலர், வளைந்த விற்கள், வள்ளைத் தண்டு, கெண்டை மீன்கள், முத்துக் கள் என்ற இவைகள் முறையே, பிறை, வாய், புருவங்கள், காதுகள், கண்கள், பற்கள் என்ற இவைகட் குவமைகள். கண்ணுக்கினிய தோற் றத்திலும் வண்ணத்திலும், கண்ணுறுவோர்க்கு மகிழ்வை விளைத்தலினும் சீதை முகத்திற்குத் தாமரை உவமை என்க. இனி, இக்கேண்மைய என் றது கொண்டு மூக்கிற்குவமை கூறப்படும் குமிழ், அதரத்திற்குக் கூறப்ப டும் கொவ்வை முதலியனவும் கொள்க. சில பிரதிகளில் வனைபவரில்லை யென்ற செய்யுளும் இச்செய்யுளும் முன்பின்னாக மாறியுள்ளன. கொண்டலின் குழவியை மேகத்தின் கொழுந்து எனக்கொண்டு அதனை அளகத்திற்கு உவமையாக்குவர் சிலர். எனினும், பின்னர் பாதாதிகேச முறைப்படி கூந்தலின் வருணனை அடுத்த செய்யுட்கண் வருதலாலும், இச்செய்யுள் முகத்தை வருணிப்பதாதலாலும் அவ்வாறு கோடற்கில்லை.

பி - ம். 1. *கொண்டல் மென்பிறை, கோதண்டம் குமிழோ டாம்பல்.*
2. *கொண்டையோ ரிரண்டு மொன்றிக், கொண்டைபோலி ரண்டு, கெண்டையென் றினைய வாய கேண்மையிற் கெண்டை யென் றூறு மொன்றிற்*
3. *மண்டல வதனம் வைத்தனன் விதியே, வையத்தின் மதியோய் நீயப்,*
4. *யொத்த பொழுது பொருந்தி யோர்வாய், போழ்ந்தது பொருந்திற் றேமோ ; ஓர்வாய், காண்பாய்.* (55)

கூந்தல்

778. காரினைக் கழித்துக் கட்டிக்
 கள்ளினோ டாவி யூட்டிப்
பேரிருட் பிழம்பு தோய்த்து
 நெறிவுறீஇப் பிறங்கு கற்றைச்
சோர்குழற் றொகுதி யென்று
 சும்மைசெய் தனைய தம்மா
நேர்மையைப் பருமை செய்த
 நிறைநறுங் கூந்த லீத்தம்.

'நேர்மையை பருமை செய்த - நுண்மையைக் கொண்டு பருமை யாகச் செய்ததான, நிறை நறு கூந்தல் நீத்தம் - நிறைந்த மணங் கமழ்கின்ற (சீதையின்) கூந்தல் தொகுதி, காரினை - நீருண்ட கரிய மேகத்தை, கழித்து கட்டி - வெட்டிக் கட்டி, கள்ளினேடு ஆவி ஊட்டி - தேனையும் (அகில் முதலியவற்றின் நன் மணமுள்ள) புகையை யும் ஏற்றி, பேர் இருள் பிழம்பு தோய்த்து - அடர்ந்த இருட்பிழம்பிலே தோய்த்து, நெறிவு உறீஇ - (படிப்படியாக) நெறித்தலைச் செய்து, பிறங்கு - ஒளிர்கின்ற, கற்றை - கற்றையாகிய, சோர்குழல் தொகுதி என்று - கீழே தாழ்ந்து தொங்கும் குழல் தொகுதி என்று பேரிட்டு, சும்மை செய்து அனையது - சும்மையாகப் பொருந்தியது போன்றது.

தன்மைத் தற்குறிப்பேற்றவணி. (ஒப்பு) (சுந்தர.546); 'அல்லையாண் டமைந்த மேனி யழகன்' (அயோத். குகப். 42). சோர் குழல் - தாழ்ந்து தொங்கும் கூந்தல், அம்மா - வியப்பிடைச்சொல். மெல்லிய மயிர்களைத் திரட்டிப் பருமையாகப் பனிச்சை, கொண்டை முதலியனவாகச் செய்வதாகலின், 'நேர்மையைப் பருமை செய்த என்றான். நீத்தம் பெரும்பாலும் வெள்ளத் தொகுதியைக் குறிக்கும் சொல். இங்கே கூந்தற் றொகுதியைக் குறித்தது: 'நீனிற முகிலோ' (நைடத. அன்னத் தைத் தூது. 11). சும்மை - சுமை என்ற சொல்லின் விரித்தல். சும்மை - அழகு என்பது பழையவுரை. உறீஇ - உறுவித்து; பிறவினை யெச்சப்பொருளில் வந்தது.

பி - ம். 1. *கழித்தத் தள்ளி; டாவி காட்டி, டனாவிக் காட்டி, கூட்டி,*
2. *பிழம்பு தோய்ந்த, சேர்ந்த; நெறிவுறு,*
3. *சோர்குழற் றுழனி, றெகுதிச் சூழல், தொகுதி யென்று, வன்றான்*
4. *பருவம் செய்த செய்தி, நேர்மையிற் படருமாதி; நிறைகெடுங்.*

(56)

சொற்கள்

779. குழல்படைத் தியாழைச் செய்து
குயிலொடு கிளியுங் கூட்டி
மழலையும் பிறவுந் தந்து
வடித்தகைம் மலரின் மேலான்
இழைபொரு மிடையி னட
னின்சொற்க ளியையச் செய்தான்
பிழையில துவமை காட்டப்
பெற்றிலன் பெறுங்கொ லின்னும்.

'குழல் படைத்து - வேய்ங்குழலை யுண்டாக்கியும், யாழை செய்து - வீணையை வகுத்தும், குயிலோடு கிளியும் கூட்டி - குயிலையும் கிளியை யும் படைத்தும், மழலையும் பிறவும் தந்து - எழுத்து நிரம்பாத மழலை மொழியையும் மற்றும் இனிய சொற்களுக்கு உவமையாக்கும் பொருள் களையும் இயற்றியும், வடித்த-பழகித் தேர்ந்த, கை - கரங்களையுடைய, மலரின் மேலான் - தாமரை மலரின் மீது உறைகின்ற பிரமதேவன், (பின்னர்), இழை பொரும் இடையினுள்தன் - நூலிழையுடன் மாறுபடு கின்ற இடையையுடைய சானகியின், இன்சொற்கள் இயைய செய் தான் - இன்சொற்களைச் செம்மையாகப் பொருந்துமாறு அமைத்தான் ; பிழை இலது உவமை காட்ட பெற்றிலன் - (அச் சொற்களுக்குக்) குற்றமற்ற உவமைப் பொருள் எதனையும் எடுத்துக் காட்டும் வண்ணம் உண்டு பண்ணவில்லை ; இன்னும் பெறும் கொல் - இனியேனும் படைப்பானோ ? (அறிந்திலம்).

குழல்படைத்து : (ஒப்பு): 'குயிலும் கரும்பும் செழுந்தேனும் குழலும் யாழும் கொழும்பாகும் அயிலு மமுதுஞ் சுவைநீத்த மொழியை' (ஆரணிய. 1058); 'பளிதமும் பாலும் ஒழுகிய தேனுமா ரமுதும், குயிலினில் குரலும் கிளியினில் மொழியும் குழலும் யாழும் குழைத்திழைத்து, மயிலியற் சாயல் வாணுதல் தனக்கு மலரயன் வகுத்த தென் மொழியாள் (அரிச். பு.) ; குழல், யாழ், குயில், கிளி இவைகள் முதலாகு பெயர்களாகக் குழல் இனிமையையும் குரலினிமையையும் குறித்து நின்றன. இழைபொரு என்பதற்கு நூலிழையை ஒத்து விளங்கும் எனக்கோடலுமாம். பிறவும் என்றதனால், 'நாட்டும் கதலி நடுக்கரும்பு மாவருக்கை, காட்டும் குயில் கிள்ளை கற்கண்டு - வேட் டருந்தும், சீனி சருக்கரைசெந் தேனமுதம் பால்குழல் யாழ், ஆனபதி னுன்குமொழிக் காம்' (இரத்தினச் சுருக்கம்) : 'இயம்புமொழி கிள்ளை, யிரங்கிசையாழ் வீணை, வயங்கு கருங்குயில்வண் பூவை - தயங்கினிய பாகு கரும்பமுதம் பால்தேன் மதுப்பழமென், ருகும்' என்று கூறிய வற்றிலும் இங்குக் குறித்தன ஒழிந்த ஏனையவற்றைக் காண்க.

பி - ம். 1. குழலைவைத்து ; கிளியொடு குயிலுங் கூட்டி
2. மழலைய பிறவும் ; வடித்தகை; வடித்ததை, வடித்தமை, வடித் தனன் ; மலரின் மேலோன்
3. இழைநிகழ் முலையி னுடன் சொற்களின் னிசையச் செய்தான்; விழையச் செய்தான்
4. பிழையிலன்; பெறுவ தென்றோ, பெறுகோ பின்னும். (57)

**780.** வானின்ற வுலக மூன்றும்
வரம்பின்றி வளர்ந்த வேனும்
நாநின்ற சுவைமற் றொன்றோ
வமுதன்றி நல்ல தில்லை
மீனின்ற கண்ணி னுடன்
மென்மொழிக் குவமை வேண்டின்
தேனொன்றோ வமிழ்த மொன்றோ
வவைசெவிக் கின்பஞ் செய்யா.

'வான் நின்ற உலகம் மூன்றும் - சுவர்க்கம் முதலாக நிலைபெற்ற மூன்று உலகங்களும், வரம்பு இன்றி வளர்ந்த ஏனும் - எல்லையின்றிப் பரவி யுள்ளன வெனினும், (அவ்வுலகங்களுள்), மீன் நின்ற கண்ணி னுள்தன் மெல், மொழிக்கு - மீனின் தன்மை நிலைபெற்று நின்ற விழிகளை யுடையவளான பிராட்டியின் மெல்லிய சொற்களுக்கு, உவமை வேண்டின் - உவமைப் பொருளை யெடுத்துச் சொல்ல விரும் பினால், தேன் ஒன்றோ - தேன் ஒன்றும், அமிழ்தம் ஒன்றோ - பால் ஒன்றும் (உள்ளன); (ஆயினும்), அவை செவிக்கு இன்பம் செய்யா - அவ்விரு பொருள்களும் (நாவிற்கு இனிமை தருமன்றி) காதுகட்கு இன்பம் செய்யாவாம்; மற்றொன்று அமுதோ - மற்றொன்றாகிய தேவாமிருதமும், நா நின்ற சுவை அன்றி - (முன் சொன்னவை போல) நாவிற்கு உரிய சுவையதாகுமே யன்றி, நல்லது இல்லை - வேறு நலம் உடைத்தன்று. (செவிக்கு இன்பம் விளையா.)

தேனினும் பாலினும் இனிதாகக் கூறப்படும். அமுதமும் நாவிற் குச் சுவை விளைக்குமே யன்றி. செவிக்கு இனிமை தராது. ஆகவே அவை இவள் தன் சொல்லிற்குப் புல்லிய உவமைகளே யாகும் என்று கூறப்பட்டது. (ஒப்பு,) கரும்பு கசக்கும் மொழி பெற்றாள் (ீராபுலிங்க).

பி - ம். 1. வரம்பின்றி மலிந்த வேனும்.
2. சுவைக்கட் கெல்லா; சுவைமற் றொன்றே; மமுதின்றி; வமுதன்றி யல்ல தில்லை.
4. தேனென்றோ வமிழ்த மென்றோ; வமிர்தமன்றோ; மின்பம் யாதோ; மாமோ,

(58)

நடை

781. பூவரு மழலை யன்னம்
புனைமடப் பிடியென் றின்ன
தேவரு மருளத் தக்க
செலவின வெனினுந் தேறேன்
பாவருங் கிழமைத் தொன்மைப்
பருணிதர் பகரும் பத்தி
நாவரும் கிளவிச் செவ்வி
நடைவரு நடைய ணல்லோய்.

'நல்லோய் - (நற்பண்புகளாற்) சிறந்தவனே! பூ வரும் - தாமரை மலரிற் பழகுந் தன்மையுள்ள, மழலை - மழலைச் சொற்களையுடைய, அன்னம் - அன்னப் பறவையும், புனை மடம் பிடி - அழகிய இளைய பெண் யானையும், என்ற இன்ன - என்ற இவைகள், தேவரும் மருள தக்க செலவின - தேவர்களும் கண்டு திகைக்கக் கூடிய (சிறந்த) நடையை யுடையன, எனினும் - என்றாலும், தேறேன் - (அவைகளைப் சீதையின் நடைக்கு உவமை கூற) மனத் தெளிவு கொள்ளேன்; பா வரும் கிழமை தொன்மை பருணிதர் - செய்யுள், முயற்சியின்றி இயற்றும் உரிமையையுடைய பழமையான அறிவுசான்ற புலவர்கள், பகரும்-கூறும், பத்தி - வரிசையாக, நா வரும் கிளவி செவ்வி நடை - நாவில் இனிதாக எழுகின்ற சொற்களையுடைய காப்பியங்களின் அழகிய நடையை, வரும் - நிகர்த்த, நடையள் - நடையை யுடையவள்.

பூவரும் : பூவெனப் படுவது பொறிவாழ் பூவே. (நிகண்டு); பூவினிற் கருங்கலம் பொங்கு தாமரை (தேவா. 1182, 2); என்ப. ஆதலின் பூ என்பது தாமரையைக் குறித்து நின்றது. சீதாப் பிராட்டியின் நடைக்குச் சிறந்த காப்பியத்தின் அழகிய நடையை உவமையாக்கினான். எவ்வித மான முட்டுப்பாடு மின்றி அழகுறக் கவிஞனுடைய காப்பியம் செல்லு மாகலின், அதனை உவமை கூறினான். (ஒப்பு): 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' (ஆரணிய. 220); 'மற்றும் கவிகளை அடிக்கடி உவமை யாக்குவர் ஆசிரியர்; 'சிலவரைக் கரம்.........புலவர் சொற் றுறை புரிந்தவும் போன்றன புங்கம்' (உயுத்த. கும்ப. 225); நூலினும் நடையுண்டு, மகளிர்க்கும் நடையுண்டு, ஆதலின் நூலின் நடை சீதையின் நடைக்கு உவமை கூறப்பட்டது. சிறந்த கவிஞன் பிறப்பி லேயே கவிதா சக்தியுடன் பிறக்கின்றான்; என்பது கருதிப் 'பாவரும் கிழமைத் தொன்மைப் பருணிதர்' என்றான். பருணிதர்: உயுத்த படைத்

தலைவர். 10. (சங்கப் புலவரையும் அவர்கள்) போன்றவரையுமே' தொன்மை என்ற சொல்லாற் குறித்தான்.

பி-ம். 1. பிணை ; புனைமயில் ; புனைமடப் பிடியோ டின்னும் ; மடப் பெடையோடு ; பிடியோர் டின்ன ; பிடியோ டன்னம்

2. முருகத் தக்க செலவின வெனவுந் தேறேன் ; தக்க செலவினன் எனவுந் தேறேன் ; தக்க நடைக்கிணை செப்ப லாகா ;

3. கேண்மைத் தொன்மை; தெரித்த பத்தி; தொடுத்த; கொடுத்த;

4. நடையா னல்லாய், நடையாள் வல்லோய். (59)

நிறம்

782. எந்நிற முரைக்கேன் மாவி
னிளந்தளிர் முதிரு மற்றைப்
பொன்னிறங் கருகு மென்ருன்
மணிநிற முவமை போதா
மின்னிற நாணி யெங்கும்
வெளிப்படா தொளிக்கும் வேண்டின்
தன்னிறந் தானே யொக்கு
மலர்நிறஞ் சமழ்க்கு மன்றே.

'(சீதை மேனியின் நிறத்திற்கு உவமை வகுக்க வேண்டுமாயின்), மாவின் இளம் தளிர் முதிரும் - மாமரத்தின் இளந்தளிரின் வண்ணம் முதிர்ந்து காட்டும் ; பொன் நிறம் கருகும் - பொன்னின் நிறமும் (இவள் நிறத்தற்கு முன்பு) கரிந்து காட்டும்; என்ருல்-என்று சொன்ஞல், மணி நிறம் உவமை போதா-இரத்தினங்களின் நிறமும் உவமை யாதற்கு ஏற்ற ஒளி யுடையதாகாது; மின்நிறம் நாணி எங்கும் வெளிப்படாது ஒளிக்கும்-மின்னலின் நிறமோ (பிராட்டியின் நிறத்தைக் கண்டு) நாணி எவ்விடத்தும் தலைக்காட்டாமல் மறைந்துவிடும்; மலர் நிறம் சமழ்க்கும் - தாமரை மலரின் நிறமும் வருந்திப் பின்னடையும் ; (இவ்வாறெனில்), எ நிறம் உரைக்கேன் - வேறு எந்த நிறத்தை உவமையாகச் சொல்வேன் (யான்); வேண்டின்-(உவமை கூறியேயாக வேண்டும் எனின்), தன் நிறம் தானே ஒக்கும் - (நிறம்) தனக்குத் தானே ஒப்பாகும் (என்பேன்).

'மாந்தளிரே மாமேனி' (சீவக. 652): மின்னல் தோன்றி மறைவதை, சீதையின் மேனி நிறத்தைக்கண்டு வெட்கி மறைவதாகத் திறம் படக்கூறினன். இங்கு மலர்தாமரையையே குறித்து நின்றது. சமழ்த்தல்-

வருந்துதல். 'தைய் லாய்சம ழாதுரை யென்றதே' (சீவக. 1000). அன்றே -ஈற்றசை. இச்செய்யுள் ஏதுத்தற்குறிப் பேற்றவணி.

பி - ம், 1. *இளநிற முநிரும்; இளந்தளிர் நிறமு மற்றை; முநிரும் யானர்*

2. *கருக்கு மென்றூல் ; கறுக்கு மற்றை.*

3. *நாணிப் பொங்கி, நோக்கி நாணி ; நாணி யேங்க ; நாணி யேங்கி ; வெளிப்படா வொளிக்கும்.*

4. *சமட்கு மன்றே.* (60)

783. மங்கைய ரிவளை யொப்பார்
மற்றில ரென்னும் வண்ணம்
சங்கையி லுள்ளந் தானே
சான்றெனக் கொண்டு சான்றேய்
அங்கவ ணிலைமை யெல்லா
மளந்தறிந் தருகு சார்ந்து
திங்கள்வாண் முகத்தி னுட்குச்
செப்பெனப் பின்னுஞ் செப்பும்.

'சான்றோய் - நற்பண்புகளையுடையவனே! இவளை ஒப்பார் மற்று மங்கையர் இலர் என்னும் வண்ணம் - சீதைக்கு நிகரான பிற பெண்கள் எவரும் இலர் என்னும்படி, சங்கை இல் உள்ளம் தானே . ஐயமற்ற உனது மனத்தையே, சான்று என கொண்டு - அத்தாட்சியாகக் கொண்டு, அங்கு - அச்சீதையிருக்கும் இடத்தில், அவள் நிலைமை எல்லாம் அளந்து அறிந்து - அவளது தன்மை முழுவதையும் தெளிவாக ஆராய்ந்து தெரிந்து, (துணிவு ஏற்படுமானல்). அருகு சார்ந்து - அண்மையிற் சென்று, திங்கள் வாள் முகத்தினுட்கு செப்பு - முழுமதி போன்ற ஒளி நிறைந்த முகத்தையுடைய அச்சீதைக்கு (யான் கூறும் அடையாள மொழிகளைச்) சொல்வாயாக!' என - என்று, பின்னும் செப்பும் - மீண்டும் கூறுவான். (இராமபிரான்).

நீதியினின்றீர் வாய்மை யமைந்தீர்' 990 என்று சாம்பனுல் புகழப்பட்டவனுய்த் தவருக ஒன்றையும் கருதக் கூடியவனல்லனுகலின் அநுமனிடம் இராமபிரான், 'சங்கையில் உள்ளம் தானே சான்றெனக் கொண்டு' எனருன். இங்குஇராமபிரான் கூறியதற் கிணங்கவே' எள்ளரு முருவுள விலக்கணங்களும், வள்ளறன் னுரையொடு மாறு கொண்டில' (சுந்தர, 394)-என்று மாருதி நினைந்து, 'அரவணைத் துயிலி னீங்கிய தேவனேயவன் இவள் கமலச செல்வியே' (சுந்தர, 395). எனப்பின்

துணிந்தது- காண்க, மேற் கூறியன கொண்டு அவள் உருவிலக்கணங் களால் உவமை நீங்கியவள் என்பதைக் காட்சிப் பிரமாணத்தால் மட்டு மன்றி ஐயம் நிகழ்ந்தவிடத்து உன்மனம் யாது துணிகின்றதோ அதனையே உறுதி யெனக்கொண்டு கண்டு தெளிக என்றான். இங்கு 'சதாம்ஹி சந்தேஹ பதேஷு வஸ்துஷு ப்ரமாண: அந்தக் கரணப்ரவ்ருத்தைய' (சாகுந்தலம்.) என்ற சுலோகமும், 'ஏகு நல்வழி யல்வழி யென்மன மாகுமே'. (பால. மிதிலைக். 147). என்ற செய்யுளும் குறிக்கொள்ளத் தக்கன. சிலர் பிராட்டியின் பாதாதிகேசவுறுப்புக்களை அநுமனிடம் விரிவாகக் கூறியது பொருத்தமன்றென்பர். ஆயினும் சிறந்த கவியா கலின் ஆசிரியர் மிகவும் சிறப்பு வாய்ந்த மகளிருடைய இலக்கணங்கள் இவ்வாறிருக்கும் என்பதை, இராகவன் கூற்றாகக் கூறினன், 'நினைவா னும் மாதர் நலம் பேணாது வளர்ந்தவனாகலானும் 990, 'பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போனேன்' (சுந்தர. 1279.): என்று அவனே பின்னர்க் கூறுவதாலும், 'ஆறு மைம்பொறி நின்னையு மாணெனக் கூறும்' எனப் பிராட்டியே அவனது நைட்டிக பிரம சரியத் தைப் புகழ்வதாலும், களங்க மற்ற அவ்வநுமன்பால் இராமபிரான் கூறியது பொருந்தும் என்க.

பி - ம். 1. *மற்றுள ரில்லை யென்னு; மற்றுள ரில்லா ரேனும்; மற்றுள ரல்ல ரேனும், மற்றுளா ரில்லா ரேனும்; ரில்லர் என்னும்.*

3. *அங்கணி;*

4. *முகத்தி லூர்க்குச் செப்பென்று.* (61)

இராமபிரான் அநுமனிடம் கூறிய அடையாளங்கள்

**784.** முன்னைநாண் முனியொடும் முதியநீர் மிதிலைவாய்ச்
சென்னிநீண் மாலையான் வேள்விகா ணியசெல
அன்னமா டுந்துறைக் கருகுநின் றுடனைக்
கன்னிமா டத்திடைக் கண்டதும் கழறுவாய்.

'முன்னைநாள் - முன்னாளில், முனியொடும் - விசுவாமித்திர முனி வருடன், முதிய நீர் மிதிலை வாய் - நீர் வளமுள்ள பழமையான மிதிலா நகரத்தில், சென்னி நீள் மாலையான் வேள்வி காணிய - தலையில் நீண்ட மாலை புனைந்தவனான ஜனக மன்னனது யாகத்தைக் காண்பதற்காக, நான் செல - நான் சென்றபோது, அன்னம் ஆடு துறைக்கு அருகு - அன்னப் பறவைகள் (தத்தம் பெடைகளுடனே) விளையாடும் நீர்த்து றைக்கு அணிமையில், கன்னி மாடத்திடை - கன்யா மாடத்தின் மீது,

நின்றாள்தனை - நின்று கொண்டிருந்த சீதா தேவியை, கண்டதும் - நோக்கியதையும், கழறுவாய் - நீ அவளிடம் கூறுவாயாக.

பிராட்டியைக் கண்டது, 'கன்னிம் மாடத் தும்பரின் மாடே களி பேடோ, டன்னம் மாடு முன்றுறை கண்டாங் கயனின்றான்' (பால. மிதிலைக். 23); 'அண்ணலு நோக்கினா னவளும் நோக்கினாள்' (பால. மிதிலைக். 35). முதனூலின்படி இராமபிரானும் சீதா தேவியும் ஒருவரை யொருவர் மணமேடையிற்றான் கண்ணுறுகின்றனர். ஆசிரியர் சிறிது மாற்றிக் கந்தருவம் அல்லது களவு முறையைப் பின் பற்றித் திருமணச் சடங்குகட்கு முன்னரே இருவரும் காதல் கொண்டதாகக் கூறிச்செல்வர். அநுமன் பிராட்டிக்குக் கூறிய அடையாளங்களாகப் பெரியாழ்வார் திரு மொழியிற் காணப்படுவன: திவ்ய. பெரியாழ். 310, 1-10-ல் காண்க. இவ்வடையாளங்களை அநுமான் பிராட்டியிடம் கூறுமிடத்துச் சில புதிய செய்திகள் காணப்படுகின்றன. சுந்தர. 549-552; ஆயினும் அரண் மனை வாயில் தாண்டுவதன் முன்பு, யாண்டையது கான் எனப் பிராட்டி வினவியது இரு நூல்களிலும் காணப்படும்.

பி - ம். 1. முன்னையான், முதிர நீர்.

2. சென்னி காண் மாலையான், சேர் மோலியான், வேள்விகா ணிய செல்வான்.

3. ஆடும் பொழிற்கு, அன்னமா டுறையுளுக்கு; நின்றாளையக். (62)

785. வரைசெய்தாள் வில்லிறுத் தவனமா முனியொடும்
விரசினா னல்லனேல் விடுவல்யா னுயிரெனாக்
கரைசெயா வேலையிற் பெரியகா தலடெரிந்
துரைசெய்தா ளஃதெலா முணரநீ யுரைசெய்வாய்.

'கரை செயா வேலையின் - கரை செய்யப் பெறாத கடல்போன்ற, பெரிய காதலள் - மிக்க காதலையுடைய பிராட்டி, 'வரைசெய்வில் தாள் இறுத்தவன் - மலையைப்போன்ற (சிவபிரானுடைய) வில் தண்டை ஒடித்தவன், அ மா முனியொடும் - அந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த கௌசிக முனிவனுடனே, விரசினான் அல்லனேல் - வந்தவனாக இல்லாமற் போனால், யான் உயிரை விடுவல்' எனா - நான் என் உயிரை விட்டு விடுவேன் என்று தெரிந்து உரை செய்தாள் - (கடமை யுணர்ந்த வளாய்) ஆராய்ந்து கூறினாள்; அஃது எலாம் - அந்த விவரங்கள் அனைத்

தும், உணர நீ உரை செய்வாய் - அவள் நன்கு தெரிந்து கொள்ளுமாறு நீ செப்புவாயாக.

இங்குக் குறிக்கப்பட்ட செய்தி பின் காட்டப் பெறும் செய்யுளிற் காணலாம்; 'இல்லையே நுசுப்பென்ப ருண்டுண்டென்னவும், மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள். சொல்லிய குறியினத் தோன்றலே யவன் அல்லனே லிறப்பனென் றகத்து ளுள்ளினுள்; (பாலீ. கார்முக. 63) : 'வரை செய்தாள் வில் இறுத்தவன்'; (ஒப்பு) 'குன்றுறழ் வரிசிலை' (பால. கார்முக. 2); ' தட நிமிர் வடவரை தானு நாணுற, இடமிலை யுலகென வந்தது ' (பால· கார்முக. 4); ' கைதவந் தனுவெனல் கனகக்குன்றென் பார் ' (பால. கார்முக. 6); 'திண்ணெடு மேருவைத் திரட்டிற்றே வென் பார், (பால. கார்முக. 7). இனி 'கரை செயா வேலையிற் பெரிய கற்பினள்' என்ற பாடத்திற்கு, எல்லை காணமுடியாத கற்பினுள் பிராட்டி எனக்கொண்டு, முன்னர்க் கன்னி மாடத்துக் கண்டு இராம பிரானிடம் காதல் கொண்டு, அவனையே கணவனுக வரித்தனள் ஆகலின், 'முனியொடும் விரசினு னல்லனேல் விடுவல்யா னுயிரென்று' கூறினள் எனினுமாம்; ஒருவனை வரித்துப் பிறனொருவனை மணக்கநேரின் அது கற்பினுக்கு இழுக்கென்று அங்ஙனம் பகர்ந்தனள் என்க. வாய் வார்த்தையாக மணம் பேசி மணம் நிகழாத நிலையிலும், திலகவதி யார் அவள் கணவனுக வரித்தவன் மரிக்க, 'அம்பொனெடு நூல்தாங்கா தனைத்துயிர்க்கும் அருள் தாங்கி' (பெரியபு. திருநாவுக். 34) என்றது இங்குக் குறிக்கொள்ளத் தகும். தம்பதிகட்குள் நிகழ்ந்த அகச் செய்திகள், அவற்றை நாம் கூறுவதென் என்று நினையாது, சீதையுள் ளத்து நன்கு பதியுமாறு உரை செய்க வென்பான், 'உணர நீ உரை செய்வாய்' என்ருன். 'சூழிமால் யானையின்' (785) என்ற செய்யுட் குப்பின் இச்செய்யுள் சில பிரதிகளில் காணப்படுகின்றது. ஆயினும் வரலாற்றை யொட்டி நோக்கின் இப்பொழுது அமைத்த முறையே பொருந்தும் என்பதறியப்படும்.

பா - ம்.
1. வில்லிறுத்தவனை, விறுத்தவரை
2. விரைசினுன், விரவினுன்; விடுவனென் னுயிரெனு, விடுவன்யா னுயிரெனு, விடுவனு னுயிரெனு.
3. கரை செய்யான்; பெரிய கற்பினள்.
4. நீ தெரிந் துரைசெய்வாய். (63)

786. சூழிமால் யானையின் றுணைமருப் பிணையெனக்
கேழிலா வனமுலைக் கிரிசுமந் திடைவதோர்
வாழிவான் மின்னிளங் கொடியின்வந் தாளையன்
றூழியா னரசவைக் கண்டதும் மறைகுவாய்.

'சூழிமால் யானையின் துணைமருப்பு இணைஎன - முகபடாமணிந்த மதம்பிடித்த ஆண் யானையினது, ஒன்றோடொன்று ஒத்து விளங்கும் இரண்டு தந்தங்கள் என்று கூறும்படி, கேழ்இலா (அவற்றிக்கு) - ஒப்பாகாத, வனம் - அழகிய, முலைகிரி - கொங்கைகளாகிய மலைகளை, சுமந்து - தாங்கி, இடைவது - பின்னிடைவதான, ஓர் வான் மீன் இள கொடியின் - ஒப்பற்ற ஆகாயத்தில் உள்ள மின்னலினது இளங்கொடி போல, வந்தாளை - வந்தவளாகிய சீதையை, அன்று - அக்காலத்தில், ஆழியான் அரசவை கண்டதும் - ஆணைச்சக்கரமுடைய ஜனக மன்னனது பேரவைக்கண் பார்த்ததையும், அறைகுவாய் - சொல்லுவாயாக. வாழி - அசை.

சூழி-யானையின் முகத்திடும் அணி. பால மிதிலைக். 155; எழுச்சி. 20:சுந்தர.375. துணை, இணை என்ற இரண்டு பதங்களும் இரண்டெனப் பொருள்படும் ஆகலின், துணை என்பதற்கு ஒன்றோடொன்றொப்பு எனப் பொருள் கொள்ளப்பெற்றது. கேழ் - உவமை. முன்னர் 'ஒப்பொன்று முலகிற் காணேன், தேடின னுழல்வனின்னும்' 762 என்று இராமபிரானே கூறியுள்ளமை காண்க. தனத்துக்கு மலை; 'வனமுலைப் பொறை சுமந்திறந்ததோ' (அரிச். பு.);

ஜனகப் பேரரசனுடைய சபாமண்டபத்தில் எல்லா அணிகலன்களையும் அணிந்து பிராட்டி வந்தபோது இராமபிரான் தான் கண்டதை இங்கு அடையாளமாகக் கூறினன். 'பொன்னின்ஞெளி பூவின்வெறி சாந்துபொதி சீத, மின்னினிழ லன்னவடன் மேனியொளி மான, அன்னமு மரம்பையரு மாரமிழ்து நாண, மன்னவை யிருந்தமணி மண்டப மடைந்தாள்'; 'அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான், கன்னியமிழ் தத்தையெதிர் கண்டகடல் வண்ணன், உன்னுயிர் நிலைப்பதொ ரருத்தியொடு ழைத்தாண், டின்னமிழ் தெனக்களிகொ ளிந்திரனை யொத்தான்' (பால. கோலங். 28,30): என்பன காண்க. 'தனமலையைத் தாங்கும் மின்னிளங் கொடி'—இல்பொருள் உவமை.

பி - ம்: 2. கேழுலாம், கோவிலா; வனமுலைக் இடைசுமந்து; துடைதோர்
3. வாழியர், வாழியாம்; கொடியின்வந் தெதிர்நிரை.
4. ஆழிபோ லரசவை; அருளுவாய். (64)

**787.** முன்புநா னறிகிலா முளிநெடுங் கானிலே
என்பினே போதுவான் நினைதியோ வேழைநீ
இன்பமா யாருயிர்க் கினியையா யினையினித்
துன்பமாய் முடிதியோ வென்றதுஞ் சொல்லுவாய்.

'ஏழை - அறியாதவளே! நீ - நீ, முன்பு நான் அறிகிலா முளிநெடு கானிலே - இதுவரையில் நான் சேர்ந்தறியாத, தீய்ந்துபோன நீண்ட காட்டிலே, என் பினே போதுவான் - என்னைப் பின்பற்றி வருமாறு, நினைதியோ - கருதுகின்றாயோ? இன்பம் ஆய் - (இதுகாறும் நீ எனக்கு) மகிழ்ச்சியை உண்டுபண்ணியவளாக இருந்து, ஆர் உயிர்க்கு இனியை ஆயினை - எனது அருமையான உயிர்க்கு இனியளாக இருந்தாய்; இனி - இனிமேல், துன்பம் ஆய் முடிதியோ - துன்பம் உண்டாக்குபவளாக ஆகித்தீர்வையோ? என்றதும் - என்று யான் சீதையிடம் கூறியதையும், சொல்லுவாய்' - நீ அவளிடம் உரைப்பாயாக.

இங்கு வனம் செல்வதற்குடன்பட்டுச் சீதாதேவியிடம், 'கருவி மாமழைக் கற்றடங்கண்டு நான். வருவனீண்டு வருந்தலை' (அயோத்தி. நகர்நீ. 221:) 'கல்லரக்கும் கடுமைய வல்ல நின் சில்லரக்குண்ட சேவடிப்போது' (அயோத்தி. நகர்நீ. 225): என்ற இராமபிரான் கூறியனவும், 'நின் பிரிவினுஞ் சுடுமோ பெருங்காடு' (அயோத்தி. நகர்நீ. 226), 'எற்றுறந்தபின் இன்பங்கொலாம்' (அயோத்தி. நகர்நீ. 232); என்ற பிராட்டி கூற்றுக்களும்' உடுத்ததுகி லோடுமுயி ருக்கவுட லோடு, மெடுத்தமுனி வோடு மயல் நின்றது மிசைப்பாய்' (சுந்தர. 549) என்று ஸ்ராமபிரான் கூற்றாக அநுமன் கூறியதும் இங்கே குறிக்கொள்ளத் தக்கவை. இவ்விடத்து வான்மீக முனிவர் 'ஸ்ரீயம் புருஷ விக்ரகம்' என்று இராமபிரானை நோக்கிப் பிராட்டி கூறியதாக வரைதல் காண்க. கணவனுடைய இன்பதுன்பங்களிற் செம்பாதி மனைவிக்கும் உரியன என்பது (கலித். பாலை. 5).

பி - ம். 1. முளி பெருங் கானிலே. மொய் நெடுங் கானிடை.
2. போதுவாய் நினைதியோ, போதவும் நினைதியோ, நினைத்தியோ; பேதை நீ.
3. இன்பமா குயிர்தனக்கு; இன்பமா யென்னுயிர்க் கினிமையாய்.

**788.** ஆனபே ரரசிழந் தடவிசேர் வாயுனக்
கியானலா தனவெலா மினியவோ வினியெனா
மீனுலா நெடுமலர்க் கண்ணினீர் விழவிழுந்
தூனிலா வுயிரின்வெந் தயர்வது முரைசெய்வாய்.

ஆனபேர் அரசு இழந்து அடவி சேர்வாய் - உனக்குச் சொந்த மான பெரிய அரசினை விடுத்து வனம் செல்பவனே ! இனி - இனிமேல், யான் அலாதன எலாம்-என்னையொழிந்த பொருள்கள் யாவும், உனக்கு இனியவோ - உனக்கு இன்பம் விளைப்பனவோ' என - என்று, (என்னை நோக்கிக்) கொடுமைகூறி,(சீதாதேவி) மீன்உலாம் நெடுமலர் கண்ணின் நீர்விழ - கயல்மீன் போன்று பிறழ்வனவும், பெரிய தாமரை மலரை யொப்பனவுமான விழிகளில் நீர்பொழிய, விழுந்து - கீழே வீழ்ந்து, ஊன்நிலா உயிரின் - உடலில் நிலைக்கமாட்டாது தவிக்கின்ற உயிர் போன்று, வெந்து அயர்வதும் - மிகவும் மனம் புழுங்கித் தளர்ந்து சோர்ந்ததையும், உரைசெய்வாய் - பகர்வாயாக.

'யானலா தனவெலா மினியவோ' - 'கோகிலம், செற்றதன்ன குதலையள் கூறுவாள், உற்று நின்ற துயரமி தொன்றுமே, எற்றுறந்த பின் னின்பங்கொலாம்' (அயோத்.நகர்நீ.231): 'நின் பிரிவினுஞ் சுடுமோ பெருங்காடு' (அயோத்தி. நகர்நீ. 226): : ஊன்நிலா உயிர்' (ஒப்பு·) 'ஆவியோ நிலையிற் கலங்கிய தாக்கை யகத்ததோ புறத்ததோ அறியேன்'. அயர்வது...காலவழுவமைதி.

பி - ம். 3. கண்ணீர் 4. உயிரின்வந்து. (66)

789. மல்லன்மா நகர்துறந் தேகுநாண் மதிதொடும்
கல்லின்மா மதின்மணிக் கடைகடந் திடுதன்முன்
எல்லைதீர் வரியவெங் கானம்யா தோவெனச்
சொல்லினு ளஃதெலா முணரநீ சொல்லுவாய்.

'மல்லல் மாநகர் துறந்து ஏகும் நாள் - நீர்வளம் நிலவளமிகுந்த அயோத்தி நகரத்தை விடுத்து(காடு நோக்கி)ச் சென்ற காலத்தில், மதி தொடும் - சந்திரனைச் சென்று தீண்டுகின்ற, கல்லின் மாமதில் மணி கடை கடந்திடுதன்முன்- கற்களினாலாகிய பெரிய மதிலினது அழகிய வாயிலைத் தாண்டுவதற்கு முன்பே, எல்லை தீர்வு அரிய வெம்கானம் - எல்லையில்லாத கொடிய கானம், யாதோ-எதுவோ, என-என்று, சொல் லினுள் - வினவினுள்; அஃது எலாம் நீ உணர சொல்லுவாய் - அவை யனைத்தையும் அவள் மனம் கொள்ளுமாறு உரைப்பாயாக.'

பிராட்டி இவ்வாறு இராமபிரானைக் கேட்டதாக அயோத்தியா காண்டத்தில் இல்லை. ஆயினும், 'நீண்ட முடி வேந்தனரு ளேந்தி நிறை செல்வம், பூண்டதனை நீங்கிநெறி போதலுறு நாளின், ஆண்ட நக ராரை யொடு வாயிலக லாமுன், யாண்டையது கானென விசைத்தது மிசைப்

பாய்' (சுந்தர. 550): என்று பின்னர்க் காணப்படுகிறது. இக்கூற்றி லிருந்து பிராட்டியின் பேதைமையும், உலக அனுபவக்குறைவும், மென்மையான இயல்பும் அறியப்படும். (ஒப்பு): 'ஒன்பதின் சாணடப் பினும் ஒருகாத மென்றஞ்சும் மென்பஞ்சிச் சீறடி' (சீவக. 179): ஆடக மாடம் கடந்தறியாத வெம் மாரணங்கே.' (இறையனார்.)

பி-ம். 2. மருவுடை; மதிலணி; கடைகடந் திடுதலும்,
3. எல்லைதிர்வாய
4. அதுவெலா முணர நீ. (67)

இராமபிரான் கணையாழி யேற்று அநுமன் செல்லுதல்

790. இனையவா றுரைசெயா வினிதினே குதியென
வனையுமா மணிநன்மோ திரமளித் தறிஞநின்
வினையெலா முடிகென விடைகொடுத் துதவலும்
புனையும்வார் கழலின னருளொடும் போயினன்.

(இராமபிரான்), இனைய ஆறு உரை செயா - அநுமனிடம் இவ் விதமாக அடையாளங்களைச் சொல்லி, இனிதின் ஏகுதி என - 'இனிது செல்வாய்' என்று அருளிச்செய்து, மா மணி வனையும் நல் மோதிரம் அளித்து - சிறந்த அரதனங்கள் பதித்துச் செய்யப்பட்ட சிறந்த கணையாழியை (அநுமனிடம்) தந்து, (பின்னும் அவனை நோக்கி, 'அறிஞ - அறிவு மிக்கோய்! நின் வினை எலாம் முடிக என - நீ மேற் கொண்ட காரியம் எல்லாம் இனிது நிறைவேறுக' என்று சொல்லி விடைகொடுத்து உதவலும்-விடை தந்து அனுப்பிய அளவில், (அநுமன்) புனையும் வார் கழலினன் - கட்டப்பட்ட நீண்ட வீரகண்டையை உடையவன் ஆன இராமபிரானுடைய, அருளொடும் போயினன்-கருணையை முன்னிட்டுக் கொண்டு சென்றான்.

இராமபிரான் கணையாழி தந்து அநுமனை வழியனுப்பியது மட்டும் அத்யாத்மத்தில் உள்ளது. பிராட்டிக்கு உயிர்ப் பிச்சையும் அகமகிழ் வும் தருவதுபற்றி 'நல் மோதிரம்' என்று கூறப்பட்டது. (ஒப்பு): 'ஆழி காட்டியென் னுருயிர் காட்டினாய்' (சுந்தர. 1076); 'மோதிரங் காட் டக் கண்டாள், இறுதியி னுயர்தந் தீயு மருந்தொத்தது' (சுந்தர. 1285): வேண்டும்போது அணியும் கழலன்றி, அநுமனுக்கு வெற்றிக்கழல் நிரந் தரமாக உள்ளது ஆகலின் 'புனையும் வார் கழலினன்' எனப்பட்டது. இது வீரனுக்குரிய சிறப்புக் கறிகுறி. அருள் பெற்று விடை கொள்ளு தல், (ஒப்பு) 'இற்றைநும் மருளு மெங்கோ னேவலு மிரண்டு பாலும் கற்றைவார் சிறைகளாக (997).

பி - ம். 1. உரை செய்தே ; வினியனே குறியென.
2. அனகன்மா மணிநன், அனையன் மாமணி.
3. மளித்தருளி நின் ; விடை கொடுத் திடுதலும்.
4. கழல்பணிந் தருளொடும். (68)

அங்கதன் முதலியோர் தென்றிசை நோக்கிப் புறப்படுதல்

791. அங்கதக் குரிசிலோ டடுசினத் துழவராம்
வெங்கதத் தலைவரும் விரிகடற் படையொடும்
பொங்குவிற் றலைவரைத் தொழுதுமுன் போயினர்
செங்கதிர்ச் செல்வனைப் பணிவுறுஞ் சென்னியார்.

அங்கதன் குரிசிலோடு - அங்கத குமாரனுடனே, அடு சினத்து உழவர் ஆம் - (பகைவரைக்) கொல்லுகின்ற கோபத்தையுடைய வீரரான, வெம் கதம் தலைவரும் - கடுமையான வீராவேசம் கொண்ட ஜாம்பவான் முதலிய தளபதிகளும், செம் கதிர் செல்வனை பணிவுறும் சென்னியார் - சிவந்த கிரணங்களையுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவனை வணங்கும் தலையினராய், பொங்கு வில் தலைவரை தொழுது - சிறந்த வில் வீரர்களான இராம இலக்குமணர்களைத் தலை வணங்கி, விரி கடல் படையொடும் - பரந்த கடல்போன்ற வானரச் சேனையோடும், முன் போயினர் - தென் திசை நோக்கி முற்பட்டுச் சென்றார்கள்.

அடுசினத்துழவர் இலக்கணை; இது வில்லேருழவர், வாளேருழவர். சொல்லேருழவர் என்றாற்போல. அடுசினம் - வினைத்தொகை.

பி - ம். 1. அடுசினத் தழலுவார்.
2. மிகுசினப்படை, மிகுகடற்படை.
4. பணிகுறும். (69)

792. குடதி சைக்கண் ணிடபன் குபேரன்வாழ்
வடதி சைக்கட் சதவலி வாசவன்
இடதி சைக்கண் வினதன் விறற்றரு
படையொ டுற்றுப் படர்கெனப் பன்னினன்.

'குட திசைக்கண் - மேற்குத் திசையினிடத்து, இடபன் - ருஷபன் என்ற வீரனும், குபேரன் வாழ் வடதிசைக்கண் - (நிதிக் கிழவனான) குபேரன் வாழும் வடதிசை யிடத்து, சதவலி - சதவலியும், வாசவன் இடம் திசைக்கண் - இந்திரனுக்குரிய இடமான கீழ்த்திசை யிடத்து,

விந்தன் - விந்தனும், விறல் தரு படையொடு உற்று படர்க - வெற்றியையே உண்டு பண்ணுகின்ற (இரண்டு வெள்ளம்) சேனையுடன் பொருந்திச் செல்லக் கடவர்'. என பன்னினன் - என்று கூறினன் (சுக்கிரீவன்).

முதனூலாகிய வான்மீகத்தில் விநதனையும் அவன் ஆணைக்குட்பட்ட வானர வீரர்களையும், பிராட்டியைத் தேடும்படி கீழ்த்திசைக்கு அனுப்பிவிட்டுப் பின்னர், நீலன் அநுமன் சாம்பன் முதலானவர்களைத் தென் திசைக்கு அனுப்பினதாகவும், அவர்களை அடுத்து மேற்கிலும் வடக்கிலும் சில வீரர்களை உய்த்ததாகவும் கூறப்பட்டுள்ளன - பிராட்டியை இராவணன் கவர்ந்து சென்றதும், அவன்தன் நகர் இலங்கை என்பதும், சடாயு, சம்பாதி என்ற இவர்களால் அறியப்பட்ட செய்திகளாகலின், ஏனைய திக்குகளில் வானர வீரரை விடுத்ததை விரித்துக் கூருது, தென்றிசைக்கண் உய்த்ததையே கம்பர் குறித்தது அறிதல் தகும். வாசவன் இடதிசை என்றதனால் இந்திரனுக்குரிய கீழ்த்திசை யெனப்பட்டது. வசுவழி வந்தவன் வாசவன்; தத்திதாந்தப்பெயர்.

பி - ம். 1. குடதிசைக்கட் சுடேணன். 4. படருநெறிபெருச். (70)

இதன்பின் சில சுவடிகளில் பின்வரும் அதிகப்பாடல்கள் காண்கின்றன.

(1) குடதி சைப்படு பூமி குபேரன்வாழ்
வடதி சைப்படு மாநில மாறுமேற்
றிடுதி சைப்பரப் பெங்கணு மேர்மதி
தொடர வுற்றுத் துருவியிங் குற்றிரால்.

(2) குடதி சைக்க ணிடபன் குணதிசைக்
கடலின் மிக்க பனசன் சதவலி
வடதி சைக்கணன் றேவினன் மானமாப்
படையின் வெள்ளத் துடன்செலப் பான்மையால்.

(3) என்று கூறியங் கேவினன் யாவரும்
நின்று வாழ்த்தி விடைகொடு நீங்கினர்
அன்று மாருதி யாமுதல் வீரர்க்குத்
துன்று செங்கதி ரோன்மகன் சொல்லுவான்.

சுக்கிரீவன் ஆணையிடல்

793. வெற்றி வாநர வெள்ள மிரண்டொடுஞ்
சுற்றி யோடித் துருவி யொருமதி
முற்று ருதமுன் முற்றுதி ரிவ்விடைக்
கொற்ற வாகையி னீரெனக் கூறினன்.

(சுக்கிரீவன் அனைவரையும் நோக்கி) 'கொற்றம் வாகையினீர் - வெற்றிகொண்டு வாகை மாலை சூடற் குரியவர்களே! (நீங்கள்) வெற்றி வாநரம் வெள்ளம் இரண்டுடன் - வெல்லும் ஆற்றலுள்ள இரண்டு வெள்ளம் வாநரப் படையொடும், சுற்றி ஓடி துருவி - (பல தலங்களிலும்) அலைந்து (பிராட்டியைத்) தேடி, ஒரு மதி முற்றுருத முன்- ஒரு மாதம் முடிவதற்குள், இ இடை முற்றுதிர் - இங்குத்திரும்பி வந்து சேருங்கள் எனக் கூறினான்.

வாகையினீர் - வெற்றி மாலை புனைந்தவர்களாய் எனினுமாம். வாகை மரத்தின் பெயர் அதன் மலர்க்கு ஆகிவந்தது. முற்றுருத முன் முற்றுதிர் - தொடைமுரண்.

பி - ம். 3. மீளுதிர் முந்தியே (71)

நாடவிட்ட படலம் முற்றும்.

# 13. பிலம் புக்கு நீங்கு படலம்

இது சுக்கிரீவனது கட்டளைப்படி தென்றிசை நோக்கிச் சென்ற வானர வீரர்கள் ஓர் பிலத்திலே புகுந்து பின்னர் ஓர் தவ மகளின் உதவியால் அதனின்றும் நீங்கியதைக் கூறும் படலம் என்ன விரியும். இது சில பிரதிகளில் 'பிலம் புகு படலம்' என்றும் காணப்படுகிறது.

வானர வீரர்களின் செலவு

794. போயினர் போயபின் புறநெடுந் திசைகடோ
றேயின னிரவிகா தலனுமே யினபொருட்
டாயின ரவருமங் கன்னநா ளவதியிற்
றாயின ருலகினைத் தகைநெடுந் தானையார்,

போயினர் - (அங்கதன் முதலிய வானர வீரர்கள் சுக்கிரீவனுடைய ஆணையை மேற்கொண்டு) சென்றார்கள், போய பின் - (அவர்கள் அவ்வாறு) சென்ற பின்னர், இரவி காதலனும் - சூரியன் மகனான சுக்கிரீவனும். புறம் நெடு திசைகள் தோறு ஏயினன் - (தென்றிசைக்குப்) புறம்பான பெரிய பிற திசைகளில் எல்லாம் (பல வீரர்களை) விடை கொடுத்து அனுப்பினான், ஏயின பொருட்டு ஆயினர் - தமது மன்னன் கட்டளையால் பிராட்டியைத் தேடுவதை மேற்கொண்டவரும், உலகினை தகை நெடு தானையார் - உலகத்தையே (தமது வன்மையால்) எதிர்த்துத் தடுக்கவல்ல பெருஞ் சேனையினருமான, அவரும் - அந்த வானர வீரர்களும், அன்ன நாள் அவதியில் (தமது அரசன் குறிப்பிட்ட) அந்த ஒரு மாதத் தவணைக்குள் (தேடி வருவதாக), தாயினர் - விரைந்து சென்றார்கள்.

மேற்கு வடக்கு கிழக்கு என்ற திசைகளில் இடபன், சதவலி வினதன் என்ற வீரர்களை அனுப்பியது. நாட விட்ட படலம் 10 வது செய்யுளில் குறிக்கப்பட்டது. சுக்கிரீவன் கொடுத்த ஒருமாதத் தவணை அப்படலம் பதினோராவது செய்யுளில் காணலாம். 'ஓடித் துருவி மதி முற்றுறுத முன் முற்றுதிர் இவ்விடை. 'அற்றது நாள்வரை யவதி' 75, 921. 'கண்ணிய நாள் கழிந்துளவால்' (சுந்தர. 323).

பி - ம். 1. போன ; திசைக டோன், திசைகடல்
2. எயின ரிரவி
3. ஆயின ரவரை, ஆயினர் பலரையங் கவரும், பலரையுங், ஆயின ராயின் 4. ருலகினில். ருலகினர், ரெங்கணும். (1)

கவிக்கூற்று

795. குன்றிசைத் தனவெனக் குவவுதோள் வலியினர்
மின்றிசைத் திடுமிடைக் கொடியைநா டினர்விராய்
வன்றிசைப் படருமா றொழியவண் டமிழுடைத்
தென்றிசைச் சென்றுளார் திறனெடுத் துரைசெய்வாம்

குன்று இசைத்தன என குவவு தோள் வலியினர் - மலைகளே பொருந்துமாறு வைக்கப்பட்டன வென்னும்படி யமைந்த திரண்ட புய வன்மை வாய்ந்த வீரர்கள், மின் திசைத்திடும் இடை கொடி நாடினர் வீராய் - மின்னலும் பேதுறும்படியான இடையை யுடைய பூங்கொடி போன்ற பிராட்டியைத் தேட அமைந்தவராய், வல் திசை படரும் ஆறு ஒழிய - பிற திசைகளிலே சென்றவண்ணம் தவிர்த்து (அதனைக் கூறுமல்) வண் தமிழ் உடை தென் திசை சென்றுளார் - வளம் வாய்ந்த தமிழ் மொழி வழங்கும் தெற்குத் திக்கிற் சென்றவரான வாநர வீரர்களின், திறன் எடுத்து உரை செய்வாம் - தன்மையை எடுத்துச் சொல்லுவோம்.

இது கவிக்கூற்று. தேவி தென்றிசைக்கண் ஏகினுள் என ஒருவாறு தெளியப்பட்டதால், பிற திசைக்கண் சென்ருேர் செய்தியை ஒழித்துத் தெற்கே சென்றவர் வரலாற்றையே கூறினர் என்க, என்றுமுள தென்தமி ழாதலானும், வடமொழியை நேர்வது அம்மொழியே ஆதலானும், மண்ணிடை இலக்கண வரம்பிலா மொழிபோலன்றி, இலக்கண வளம் உடைமையானும், திராவிடம் பிற மொழிகளான தெலுங்கு, கன்னடம். மலையாளம் என்ற மொழிகட்கு தாயெனக் கருதப்படுவதானும், சொல்வளம் பொருள்வளம் இனிமை முதலியன உண்மையானும், சமய குரவர்களும் ஆழ்வார்களும் இறைவனைத் துதித்தது அம்மொழியிலானும் 'வண்டமிழ்' என்ருர். பிராட்டியைக் காண்டற்கில்லை யாதலின தென்திசை யொழிந்த மூன்றையும் வன்றிசையென்றும், 'இனிமையும் நீர்மையும் தமிழென லாகும்' (நிகண்டு.) என்றபடி இனிய தமிழ் வழங்கும் திசையாதலின் தென்திசை யென்றும் கூறினுர் என்க. தென்திசை இனிய திசை என்றும் பொருள் தரும். ஆசிரியர் நாட்டுப்பற்றும் தமிழ்ப்பற்றும் இங்குக் காணலாம்.

பி - ம். 1. குலவு கேர்ன் 2. திசைத்திடும், திசைந்திடு ;
3. அன்றிசைப் படரு ; படருவார் திற்க.
4. சென்றதோர் திறன் ; சேறுவார் திறனெடுத். (2)

### வானரர் விந்தியமலை சேர்தல்

**796.** சிந்துரா கத்தொடுந் திரண்மணிச் சுடர்செறிந்
தந்திவா னத்தினின் றவிர்தலா னரவினோ
டிந்தியா றெய்தலா னிறைவன்மா மௌலிபோல்
விந்தைநா கத்தின்மா டெய்தினர் வெய்தினல்

சிந்து ராகத் தொடும் - சிந்துர மென்னும் செந்தூள்களுடன், திரள் மணி சுடர் - உருண்ட மாணிக்கங்களின் ஒளி, செறிந்து - பொருந்தி, அந்தி வானத்தின் நின்று அவிர்தலான் - மாலைக் காலத்து வானத்தில் காணப்படும ,செவ்வானம் போனறு விளங்குதலானும், அரவினோடு - பாம்புகளும், இந்து யாறு எய்தலான் - சந்திரனும் ஆகாய கங்கையும் பொருந்துதலானும், இறைவன் மா மௌலிபோல் - சிவபிரா னுடைய பெரிய சடை முடிபோன்ற. விந்தை நாகத்தின் - விந்திய மலையின், மாடு - பக்கத்தை, வெய்தினல் எய்தினர் - விரைந்து சென்று அடைந்தார்கள். (அந்த வானர வீரர்).

சிவபெருமானுக்கும் விந்திய மலைக்கும் ஒப்பு; செம்மொழிச் சிலேடை, சொற்கள் வேறு பிரிக்கப் படாமல் பலபொருள் படுவது இதன் இலக்கணம் என்ப. இதற்கு எதிர்ப்பதம் பிரிமொழிச் சிலேடை. செந்நிறமான சடைமுடி யுடையோனுதல், முனிவர்களால் ஏவப்பட்டுத் தன்னைக் கொல்ல வந்த நாகங்களை வலிதவிர்த்தது, அணியாகக் கொண்டது. தக்கன் சாபத்தாற் கலை குறைந்த சந்திரனைச் சடைக்கண் தரித்தது, பகீரதனுடைய மன்ருட்டிற் கிரங்கிக் கங்கையைச் சடைக் கண் தரித்தது என்ற இவை சிவபெருமான் செய்கைகள். சிந்துரப் பொடியாலும் மாணிக்கக் கற்களாலும், சிவந்திருத்தல். நாகங்களும் அருவிகளும் நிறைந்திருத்தல், மலையுச்சியில் சந்திரன் ஒளிர்தல் என்ற இவைகள் விந்திய மலையிற் காண்பவை. எனவே சிலேடை. (ஒப்பு) 'பாணி பிறை கொன்றை பணிசூடி மானேந்தி, வேணி யரனைப் பொருவும் வேங்கடம்' (திருவேங்கடமாலை 5) இந்து யாறு - இந்தியாறு குற்றியலிகரம்.

பி - ம். 2. *தவிர்தலா லரவுடன் அளவலா லரவினோடு.*

3. *டிந்தியா யுற்றதா லிறைவன், இறையனோ டொத்திடும், டிந்தியா னோடலா லிறைவனோ டொத்திடும், டிந்துமா னோடலா.*

4. *விந்நாா கத்தின்.* (3)

இதுமுதல் மூன்று கவிகள் சீதாதேவியை மலையில் தேடுதல்

797. அந்நெடுங் குன்றமோ டவிர்மணிச் சிகரமும்
பொன்னெடுங் கொடுமுடிப் புரைகளும் புடைகளும்
நன்னெடுந் தாழ்வரை நாடினர் நவையிலார்
பன்னெடுங் காலமா மென்னவோர் பகலிடை.

நவை இலார் - களங்கமற்ற அவ் வீரர்கள், அ நெடு குன்றமோடு- உயர்ந்த அந்த விந்திய மலையினிடத்தில், அவிர் மணி சிகரமும் - ஒளிர்கின்ற இரத்தினங்களையுடைய சிகரங்களையும், பொன் நெடு கொடு முடி புரைகளும் - அழகிய நீண்ட அந்தச் சிகரங்களில் உள்ள குகைகளையும், புடைகளும் - பக்கங்களையும், நல் நெடு தாழ்வரை - அழகிய நீண்ட அதன் அடிவாரங்களையும், ஓர் பகலிடை - ஒரு பகற் பொழுதிற்குள்ளாக, பல் நெடு காலம் ஆம் என்ன - மிகவும் பல நாட்கள் தேடிக் காண்பது போன்று, நாடினர் - பிராட்டியைத் தேடினர்கள்.

வானரர்கள் அளப்பில ராதலானும், ஊக்கமிக்கவர் ஆதலினாலும், பல நாட்கள் ஆற்றவேண்டிய பணிகளைச் சில பொழுதில் செய்து முடித்தனர் என்பது கருத்து. குன்றமோடு - வேற்றுமை மயக்கம். மூன்று ஏழன் பொருட்கண் வந்தது.

பி - ம். 2. குன்றின்மேல், குன்றுசென்று, குன்றினோடு, குன்றிரண்டு.
2. புரைகளும் புக்குற, புக்குமுன்.
3. தானவர் நாடினர் ; தேடினர், திறலினர்.
4. பகலினே. (4)

798. மல்லன்மா ஞாலமோர் மறுவுரு வகையினச்
சில்லலோ தியையிருந் துறைவிடந் தேடுவார்
புல்லினு ருலகினைப் பொதுவிலா வகையினால்
எல்லைமா கடல்களே யாகுமா றெய்தினர்.

மா கடல்களே எல்லை ஆகும் ஆறு எய்தினர் - (பூமியைச் சுற்றி லும்) பெரிய எல்லையாக வுள்ள கடல்களே தமக்கு ஒப்பாகும் என்னும் படி சென்ற அந்த வீரர்கள், மல்லல் மா ஞாலம் - வளமை மிக்க பெரிய பூமிதேவி, ஓர் மறு உரு வகையின் - ஒரு குற்றமும் உருதப்படி அவதரித்த, அ சில் அல் ஓதி - அழகிய பொற்றகட்டணி யணிந்த இருண்ட கூந்தலையுடைய பிராட்டி, இருந்த உறைவிடம்ஐ - தங்கியிருந்த இடத்தை, தேடுவார் - தேடுவார்களாய், உலகினை -

உலக முழுவதையும், பொது இலா வகையினுல் - தம்மை யன்றி வேறெவர்க்கும் எவ்விதத் தொடர்பு மில்லாதபடி, எய்தினுர் - சென் றடைந்தார்கள்.

'மல்லன் மா ஞாலம்' 'மல்லன் மா ஞாலத்து வாழ்வீ ரீங்கெனு' (சிலப். வாழ்த்து.) பிராட்டி பிறனகத்திருந்து பழுதுபடின் ஞாலத்துக்கே பேரிழுக்காதலின், அவ்விழுக்கு நேராத வண்ணம் ஓரிடமும் விடாது நேடினர் என்க. சில் அல் ஓதி - சிலவாகிய இருண்ட கூந்தல் எனினு மாம். துன்றலோதி. சில்; மகளிர் சிரசில் அணியும் தகட்டணி. உலகு- பரந்த பூமியின் ஓர் பகுதி. 'சேயோன் மேய மைவரை யுலகமும்' (தொல். அகத். 5); என்ற வழக்குண்மை காண்க. கடல்கள் இங்கே பெருந் திரளான வாநரப் படைகட்குவமை. ஓதியை என்றதிலிருந்த 'ஐ' பிரித்துக் கூட்டப்பட்டது.

பி - ம். 1. *மாறுரு, ஞாலமும் மறுகுறும் வகையினில்.*
2. *செல்ல லோதியை இருந்துறை, செல்லலோதியன்;*
3. *குலகிடை, குலகினில், குலகமற் றெங்கணும் போதலால்.*
4. *நேடினுர்.* (5)

799. விண்டுபோ யிழிவர்மே னிமிர்வர்விண் படர்வர்வேர்
உண்டமா மரனினம் மலையின்வா யுறையுநீர்
மண்டுபா ரதனின்வா ழுயிர்களம் மதியினுர்
கண்டிலா தனவயன் கண்டிலா தனவொலாம்.

அ. மதியினுர் - நல்லறிவுடைய அவர்கள், விண்டு-வேறு வேருகப் பிரிந்து. போய் இழிவர் - (சிலர்) இறங்கிச் செல்வர்; மேல் நிமிர்வர் - (சிலர்) மேலேறிச் செல்வர்; விண்படர்வர் (சிலர்) ஆகாயத்தில் தாவிச் செல்வர்; வேர் உண்ட மா மரனின் - வேர்களால் நீரையுட் கொள்ளும் மரங்களினிடத்தும், அ மலையின் வாய்-அந்த மலையினிடத்தும். உறையும் நீர் மண்டு - தங்கிய நீர் நிரம்பப்பெற்ற, பார் அதனின் - பல தலங் களிடத்தும், வாழ் - வசிக்கின்ற உயிர்கள் - கண்டிலாதன - (அந்த வாநர வீரர்களால்) தேடித் காணப்படாதன இருக்குமாஞல் (அவை) - அயன் கண்டிலாதன ஆம் - படைப்புக் கடவுளான அந்தப் பிரமனுல் படைக்கப்படாதனவே யாம்.

பிரமன் அறியாத பொருள்கள் இல்லை. அது போன்று இந்த வாநர வீரர்கள் காணுத உயிர்களோ பொருள்களோ வில்லை. (ஒப்பு) 'இல்லாத வுலகத்தெங்குமிவன் இசைகள் கூரக் கல்லாத கலையும்'

 விண்டு - மலையுமாம், போயிழிவர் - இழிந்து போவர் என மாற்றுக.

வேரினாலேயே வார்க்கும் நீரையுட் கோடலின் 'வேர் உண்ட மாமரன் என்றார். (ஒப்பு) 'தாளுண்ட நீரைத் தலையாலே தான்றருத லால்' (மூதுரை 1.) பாதபம் என்ற வடசொல்லும் இதே பொருளதாதல் காண்க. வேர் உண்ட - வேர் நன்கு பதிந்த மரங்கள் எனினுமாம். மலையின் வாழுயிர்கள் என இணைக்க, இனி, விண்டு போய் இழிவ - நிலத்தைத் துளைத்துக்கொண்டு பூமிக்குட் செல்லும் (பாம்பு முதலிய) ஊர்வனவும், மேல் நிமிர்வ - பூவுலகில் வாழும் விலங்கினங்களும், விண்படர்வ - ஆகாயத்திற் பறப்பனவான புட்களுமாய், அம்மலையின் கீழும் மேலும் புடையிலும் உறையும் உயிர்களில் இவர்கள் கண்ணிற் படாதன ஒன்றுமே யில்லை யென்றுமாம். மதியினர் - சுக்கிரீவன் அளித்த ஒரு மாதத்தவணையை மேற்கொண்டவர் எனினும் ஒன்றும். கண்டிலாதன - படைக்கப்படாதன. 'காவல் காட்டுதல் துடைத்தல்' (உயுத்த இரணிய. 9.)

பி - ம். 1. விண்டுபோய், விண்டுசேர், விண்டுபார், மண்டுபார், நிமிர்வவிண் பட வெருண்டு; விண்டு போயிழிவ, மேனிமிர்வ, விண்டு தோய் சிகரம் மேனிமிர விண்டுசேர் பொழில்கள்மேல் நிமிர விண்.

2. உண்டமா மணியினம் மலையின் வாயுதவுநீர், அண்ட மா மணியின், மணிகொளம் மானினம் உறைபொருள். ஞறையுமின்

3. மதியினோர்.

4. கண்டிலா தனவெலாம் கண்டுபின் னேகினர். (6)

வேறு

இதுமுதல் மூன்று கவிகள் வானரர் நருமதையாற்றின் புறத்து நாடுதல்

800. ஏகினர் யோசனை யேழோ டேழுபார்
சேகரத் தென்றிசைக் கடிது செல்கின்றார்
மேகமா லையினோடும் விரவி மேதியின்
நாகுசேர் நருமதை யாறு நண்ணினர்.

பார் சேகரம் தென்திசை கடிது செல்கின்றார் - பூமிக்குத் தலையணி போன்று விளங்கும் தென்திசையிலே விரைந்து செல்கின்ற வானரர்கள், ஏழொடு ஏழு யோசனை ஏகினர் - பதினான்கு யோசனை யளவு சென்று, மேதியின நாகு - எருமைகளின் இளம் கன்றுகள், மேகம் மாலையினோடும் விரவி சேர் - கரிய மேகங்களின் வரிசைகளோடு கலந்து பொருந்தியுள்ள, நருமதை ஆறு - நருமதை யென்னும் நதிக்கரையை, நண்ணினர் - அடைந்தார்கள்.

மேகமும் நீர் பருக அவாவியதாக நருமதையின் கடல் போன்ற நீர்ப் பெருக்கைக் கூறினர். நருமதையும் தபதி நதியும் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி ஓடுவதால், நதம் என்ற பெயர் பெறுவன. மாலை-வரிசை. மேதி - எருமை ' நின்ற மேதியாற் பொலிந்த ' (சீவக. 69) நாகு - எருமைக் கன்று ; இச்சொல் பெண்மையும் உணர்த்தும் ' மூடும் நாகும் கடமையும் ' (தொல். மரபி. 3) ' எருமையும் மரையும் பெற்ற மும் நாகே ' (தொல். மரபி. 62); ' எருமை நல்லான் கருநாகு பெறூ உம்' (பெரும்பாண்.165): மற்றும் அகம்.64; புறம், 266 காண்க. சேகற என்ற பாடத்திற்குக் குற்றம் நீங்க எனக் கொள்க.

பி - ம். 1. ஓசனை யேழொ டேழவை.
2. சேகுற, சேகுசேர், கடிநின் செல்கின்றுர், கண்டு.
3. மேகமார் மலையொடும், மா மலையொடும்; விரவித் தேனிழி, விரவு மேதியின் 4. நாகு தோய்

ஓர் பிரதியில் ' பில நீங்குபடலம் தொடக்கம் ' என்று இங்கே குறிக்கப்பட்டுள்ளது. (7)

801. அன்னமா டிடங்களு மமரர் நாடியர்
துன்னியா டிடங்களுந் துறக்க மேயவர்
முன்னியா டிடங்களுஞ் சுரும்பு மூசுதேன்
பன்னியா டிடங்களும் பரந்து சுற்றினர்.

(அவர்கள்) அன்னம் ஆடு இடங்களும் - அன்னப் பறவைகள் விளையாடும் இடங்களையும், அமரர் நாடியர் துன்னி ஆடு இடங்களும் - தேவ மாதர்களான அரம்பை முதலானவர்கள் பொருந்தி நீராடும் இடங்களையும், துறக்கம் மேயவர் முன்னி ஆடு இடங்களும் - சுவர்க்க லோகத்தில் உள்ள வானவர்கள் கருதி வந்து சஞ்சரிக்கும் இடங்களையும், சுரும்பு - சுரும்பு என்ற ஜாதி வண்டுகளும், மூசு தேன் - நறுமண மலர்களிற் சென்று மொய்க்கின்ற தேன் என்னும் வண்டுகளும் பன்னி ஆடு இடங்களும் ரீங்கார மிட்டுத் திரிகின்ற இடங்களையும், பரந்து சுற்றினர் - பரவித் தேடித் திரிந்தார்கள்.

நருமதை யாற்றின் பரப்பும், சிறப்பும், கரைகளின் கவரும் தன்மை யும் தேவர்களையும் அங்கு வந்து துய்க்கச் செய்யும் என்க. முன்னி - நதியின் சிறப்பைக்கருதி எனினுமாம் ; முன்னுதல் - கருதுதல். முன்னு மாமறை முனிவரும் தேவரும் ' (வி. பா. பாயிரம்). அமரர் நாடியர் ஆடிடம் (ஒப்பு) 'அருவிநுகரும் வானரமகளிர்' (மலைபடு. 294) - தண்

டாழருவிய மகளிராடுபவே' (கலித். 40, 23) சுரும்புக்கும் தேனுக்கும் உள்ள வேறுபாடுகள் முன்னர் 469-ல் விளக்கப்பட்டன.

பி - ம். 1. டிடங்களு மரிய நாகர்வக்.
2. துறக்க மெய்தினு, இன்னமா விடங்களும், உன்னியா டிடங் களும், மும்பர் நாட்டவர்.
3. முன்னிநா டிடங்களும், முன்னமா டிடங்களுங்.
4. துன்னியா டிடங்களும். (8)

802. பெறலருந் தெரிவையை நாடும் பெற்றியார்
அறனறுங் கூந்தலு மளக வண்டுசூழ்
நிறைநறுந் தாமரை முகமு நித்தில
முறுவலுங் காண்பரான் முழுதுங் காண்கிலரிர்.

பெறல் அரும் தெரிவையை நாடும் பெற்றியார்-பெறுதற் கருமை யான பிராட்டியைத் தேடும் தன்மையுடையவர்களாய், (அந்த வீரர்கள்), அறல் நறு கூந்தலும் - கருமணலாகிய நன்மணம் வாய்ந்த குழலினையும், அளகம் வண்டு சூழ் நிறை நறு தாமரை முகமும் - கூந்தல் போன்று கருநிறம் வாய்ந்த வண்டுகள் சூழ்ந்து நிறைந்துள்ள தாமரைமலராகிய (அவள்) முகத்தையும், நித்திலம் முறுவலும் - (அந்நதிகளின் கரை களில் அலைகளாற் கொழிக்கப்படுன்ற) நல்லமுத்துக்களாகிய (அவ ளது) பற்களையும், காண்பர் - காண்பார்கள் ; முழுதும் காண்கிலார் - (ஆனால் பிராட்டியின்) உருமுழுதும் ஒருமிக்கக் கண்டிலர். ஆல்: அசை.

சென்ற வாநரவீரர்கள் பிராட்டியின் கூந்தல் போன்ற கருமண லையும், அளகம் போன்று கறுத்த வண்டு சூழ்ந்த தாமரையையும் காணப்பெற்றார்களேயன்றி, தாம் தேடிவந்த அப்பெண்ணரசியின் கூந்தலையோ முகத்தையோ கண்டார்கள் இல்லை. 'பெறலருந்திரு' (அயோத், மந்தரை. 70;) முத்துக்கள் பிராட்டியின் முறுவலுக்குவமை. உவமையை அங்கமாகக் கொண்ட உருவகம். காண்பர் காண்கிலார் - தொடைமுரண்.

பி - ம். 1. திருவினை
2. அளவில் வண்டுசூழ், அளியும், வண்டுஞ்சூழ், அறுபதங்கள்சூழ்
3. நிறைநறுங்.
4. முறுவலுங் கண்டுளார் முற்றுங் காண்கிலார், காணிலார். (9)

நருமதையைக் கடத்தல்

803. செருமத யாக்கையர் திருக்கில் சிந்தையர்
தருமத யாவிவை தழுவு தன்மையர்
பொருமத யானையும் பிடியும் புக்குழல்
நருமதை யாமெனு நதியை நீங்கினர்.

செரு மதம் யாக்கையர் - போர் புரிவதில் எக்களிப்புக் கொண்ட உடலோடு கூடியவர்களும், திருக்கு இல் சிந்தையர் - மாறுபாடற்ற மனம் உடையவர்களும், தருமம் தயா இவை தழுவும் தன்மையர்-தருமமும் கருணையும் இயற்கையாயமைந்த இயல்புடையவர்களுமான (அந்த வீரர்கள்), பொருமதம் யானையும்-போர் புரிகின்ற மதம் கொண்ட ஆண் யானைகளும், பிடியும் - பெண் யானைகளும், புக்கு உழல் - புகுந்து விளையாடுகின்ற, நருமதை ஆம் எனும் நதியை - நருமதைப் பேர்கொண்ட ஆற்றை, நீங்கினர் - கடந்து சென்றனர்கள்.

யாக்கை உதிரம் முதலிய எழுவகைத் தாதுக்களாற் கட்டப்பட்டது என்று உடலுக்குக் காரணக்குறி. திருக்கு - மாறுபாடு - 'பொல்லாத மர்க்கட மனமே' (தாயு. 808): என்றபடி சேட்டை மிக்கது குரங்கெனினும் அதற்கு மாறாக மாறுபடாத தன்மை இங்குக் குறிக்கப்பட்டது ஆம் - அசை.

பி - ம். 1. செருக்கில் சிந்தையர், சிந்தையில்
2. தயாவிசை, தயாவினைத்; தன்மையார்: தருமமென்றொரு பொருள் தழுவுந். 3. பெருமத.
4. நருமதை யாறெனும், நருமதை யாப்பெயர், நருமதை யாகிய, நதியு நீங்கினர். (10)

இதுமுதல் ஐந்து கவிகள் ஏமகூடமலை வருணனை.

804. தாமகூ டம்திரை தீர்த்த சங்கமும்
நாமகூ டப்பெருந் திசையை நல்கிய
வாமகூ டச்சுடர் மணிவ யங்குறும்
ஏமகூ டத்தடங் கிரியை எய்தினர்

தாமகூடம் திரை தீர்த்த சங்கமும் - ஒளி யமைந்த சிகரங்களிலிருந்து தோன்றுகின்ற அலைகளையுடைய தீர்த்தங்களின் தொகுதியும், வாமம் கூடம் சுடர் மணியும் - அழகிய தொகுதியாகிய ஒளியையுடைய இரத்தினங்களும், வயங்குறும் - தனனிடம் விளங்கப்பெற்ற, நாமம் கூடு அ பெருதிசையை நல்கிய - புகழுடன் கூடிய அந்தப் பெரிய

திசையைப் பாதுகாவல் செய்கின்ற, ஏம கூடம் தடகிரியை - ஏமகூடம் என்னும் பெரியதோர் மலையை, எய்தினர் - சென்றடைந்தார்கள்.

தாமம் - ஒளி சங்கம் - நதிகளின் கூடலுமாம். ஏமகூடம் - எட்டு குலகிரிகளில் ஒன்று ; மேருவின் தெற்கு இமயத்துக் கப்பால் 9000 யோசனையில் உள்ளது (அபிதான.) தடங்கிரி - பெரிய மலை. 'தடவுங் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல். 320) : இச்செய்யுட்கள் ஒவ்வொரு அடியிலும் முதலெழுத்துமட்டும் வேறுபட்டிருக்க இரண்டு முதலிய சில எழுத்துக்கள் ஒன்றிப் பொருள் வேறுபட்டு வந்தது - திரிபு என்னும் சொல்லணி. மணி' என்ற இடத்து, உம்மை தொக்கது. முதலடியிற் 'கூடம்' சிகரத்தையும் மூன்றாமடியில் தொகுதியையும் குறித்தது.

பி - ம். 1. தாம கூடத்திறை, கூடத்தினை, தாமகூ டத்தடக் ; சங்கமர், சங்கமா.
2. நாமகூ டப்பெரு,நதியை; திசலை நண்ணிய, திலசயு காடியவ், திசையி னல்கிய.
3. சுடர்ப்பணி, பெருபணி மதிம யங்குறும், விவங்குறும், வாமகூ டஞ்சுடர், கூடத்தருங், கூடப்பெருங்.
4. குன்றை யெய்தினர். (11)

805. மாடுறு கிரிகளு மரனு மற்றவும்
சூடுறு பொன்னெனப் பொலிந்து தோன்றுறப்
பாடுறு சுடரொளி பரப்பு கின்றது
வீடுறு முலகினும் விளங்கு மெய்யது.

(அந்த ஏமகூட மலையானது) மாடு உறு கிரிகளும் - பக்கத்தில் உள்ள மலைகளும், மரனும் - மரங்களும், மற்றவும் - பிற பொருள்களும், சூடுறு பொன் என - சுடப்பெற்ற பொன் போல, பொலிந்து தோன்றுற - விளங்கித் தோன்றும்படி, பாடு உறு சுடர் ஒளி பரப்புகின்றது - பெருமை பொருந்திய மிக்க ஒளியைப் பரவச்செய்கின்றது; வீடு உறும் உலகினும் விளங்கு மெய்யது - சுவர்க்கலோகத்தைக் காட்டிலும் மிகுதியாக விளங்கும் காட்சியையுடையது.

பொன் போன்ற நிறமுள்ள அந்த ஏமகூடத்தின் ஒளியால் அதன் அண்மையிலுள்ள பொருள்கள் எல்லாம் பொன்னிறமாகக் காணப் பட்டன. (ஒப்பு) 'பனிமாலி மயப் பொருப்பகம் சேர்ந்தபொல் லாக் கருங் காக்கையும், பொன்னிறமாயிருக்கும்' (யாப், காரிகை.3) 'பொன் னுருள் உரைத்துரைத் தோடி, யிருண்ட கல்லையும் தன்னிறமாக்கிய

விரதம்' (பால, வரைக்.8): இதுபிறிதின் குணம் பெறலணி. பொருள்கள் எல்லாம் பொன் மயமாக ஒளிர்வதால் பொன்னுலகம் போன்றது என்பது குறிப்பு. பாடு - பெருமை. பாடுறு - தன்னிடம் அமைந்த எனினுமாம். (ஒப்பு) ' பாடுறு பசியை நோக்கி'.

பி - ம், 1. *மாறு மற்றவம்.*
2. *தோன்றிட, தோன்றுமப்.*
4. *வீடெனு முலகுபோல், வீடுறுமுலகு, விளங்குகின்றது.* (12)

இங்கு ஓர் அதிகப்பாடல்

இந்நெடுங் கிரிகொலோ வெதுகொ லோவென
அந்நெடு மேருவோ டயிர்க்க லாவது
தொன்னெடு நிலமெனு மங்கை சூடின
பொன்னெடு முடியெனப் பொலியும் பொற்பது:

806. பறவையும் பல்வகை விலங்கும் பாடமைந்
துறைவன கனகநுண் பூழி யொட்டலான்
நிறைநெடு மேருவைச் சேர்ந்த நீரவாய்ப்
பொறைநெடும் பொன்னொளி பொழியும் பொற்பது.

பாடு அமைந்துறைவன - தன்னிடம் சேர்ந்து வாழும் பறவையும் - பக்ஷிகளும், பல் வகை விலங்கும்-பல திறப்பட்ட மிருகங்களும், கனகம் நுண் பூழி ஒட்டலால் (அம்மலைகளிலுள்ள) சிறிய பொற்றுகள்கள் தம்மிடம் பொருந்துவதால், நிறைநெடு மேருவை சேர்ந்த நீர ஆய் - நிறைந்து ஓங்கியுள்ள பெரிய மேரு மலையைச் சேர்ந்தனவே என்னு மாறு, பொறை நெடுபொன் ஒ்ளி பொழியும் பொற்பது - பாரமாகிய மிக்க பொன்னின் ஒளியைப் பெய்கின்ற பொலிவுடன் கூடியது.

முன்செய்யுளிற் கண்ட குறிப்பே இங்கும் காணப்பெறும். ஆங்குள்ள பொருள் அனைத்தும் ஏம கூடத்தின பொற்றுகள் படிந்து பொன் மயமாயின என்றவாறு. கனகம் - பொன். பூழி-துகள். பொறை-பாரம். இங்கு மிகுதியைக் குறித்தது.

பி - ம். 1. *டலவகை;*
2. *உறைவது; தூளி போர்த்தலால், ஒற்றலான், யொற்றலால்.*
3. *மேருவைச் செற்ற. நிர்ந்த நீரதாய், மேருவும் காணு நீர்மையில்.*
4. *முழுதும் போர்ப்பது, மிளிரும் பொற்பது, பொற்பவே.* (13)

807. பரவிய கனகநுண் பராகம் பாடுற
எரிசுடர்ச் செம்மணி யீட்டத் தோடிழி
அருவியு நதிகளு மலங்கு தீயிடை
உருகுபொன் பாய்வபோன் றொழுகு கின்றது.

பரவிய கனகம் நுண்பராகம் - விரிந்து பரந்துள்ள பொன்னினது நுட்பமான தூள்கள், பாடுற - தம்மிடத்துப் பொருந்த, எரிசுடர் செம்மணி - விளங்குகின்ற ஒளியையுடைய சிவந்த பதுமராகங்களின், ஈட்டத்தோடு இழி - தொகுதியொடு கீழ் இறங்குகின்ற, அருவியும் நதிகளும் - அருவிகளும் ஆறுகளும், அலங்கு தீ இடை - எரிகின்ற நெருப்பில், உருகு - உருகிய, பொன் பாய்வ போன்று - பொன் பாய்ந் தோடுவது போல, ஒழுகுகின்றது-பெருகப் பெறுகின்றது (அம்மலை).

கனக பராகம் - பொற்றுகள். இவைகள் படியப்பெற்றுப் பெருகி வரும் ஆறுகள் புடமிடப்பட்டு உருகியோடும் பொன் போன்று காணப் பட்டது. பராகம் - 'செம்பராகம் படச் செறிந்த கூந்தலாள்' (ஆரணிய. 228) உவமையணி. செம்மணி - மாணிக்கம். அலங்குதீ - அசைந்து எரிகின்ற தீயுமாம். மலை ஒழுகுகின்றது என்றது இடத்து நிகழ்பொரு ளின் தொழிலை இடத்தின் மேலேற்றிக் கூறியது, உபசார வழக் கென்பர்.

பி - ம். 1. *பரவிய பராக நுண்கனகம், மருவிய, பருவிய.*
2. *விரிசுடர்; ஈட்டத தோடுவீழ், யீட்டத் தோடுமிழ், தோடிய.*
3. *அருவியக் கிரளகளும்.*
4. *பாய்தல் போன, றொழுகு பொற்பது.* (14)

808. விஞ்சையர் பாடலும் விசும்பின் வெள்வளைப்
பஞ்சின்மெல் லடியின ராடற் பாணியும்
குஞ்சர முழக்கமுங் குமுறு பேரியின்
மஞ்சின முரற்றலும் மயங்கு மாண்பது.

விஞ்சையர் பாடலும் - (அங்கு வந்துள்ள) வித்தியாதரர்களின் பாட்டொலியும், விசும்பின் வெள்வளை பஞ்சின்மெல் அடியினர் - விண்ணுலகிலிருந்து வந்தவரான வெண்ணிறமான வளையல்களை யணிந்த பஞ்சு போன்ற மெல்லிய அடிகளையுடைய தேவமாதர்களின், ஆடல் பாணியும் - ஆடலுக்கிசைந்த தாளங்களின் ஒலியும், குஞ்சரம் முழக்கமும் - யானைகளின் பிளிற்றோசைகளும், குமுறு பேரியின் மஞ்சு

இனம் முரற்றலும் - முழங்குகின்ற முரசுபோன்ற (அங்கு வந்து தங்கும்) மேகத்தொகுதிகளின் இடியோசையும், மயங்கும் - கலந்துள்ள, மாண்பது - பெருமையையுடையது. (அந்தமலை)

அம்மலையில் பல்வகை ஒலிகளும் நிறைந்துகாணப்பட்டன என்பது கருத்து. உருவிற் பெரிதாதலின் குஞ்சர முழக்கத்தைக் குறித்தார். (ஒப்பு) மலைபடுகடாம் என்ற சொல். இது ஏனைய விலங்கு பறவைகளின் இரைச்சலுக்கும் உபலக்கணம்: வெள்வளை - சங்குவளை. 'ஆடல் பாணி' - பரத நாட்டியத்துக் கேற்ற தாளம் - பாணி: கையினை லொத்தறுதத்துத் தாளம் போடுவது' ச "கூடு பாணியி னிசையொடும் முழவொடும்' (சுந்தர. 1090) மஞ்சு - மேகம்.

பி - ம். 1. *ராடலும் ; மேவிவாழ்.*
2. *அடியவர் பாடல், பாடும் பாடலும்.*
4. *மஞ்சின முழக்கமும், மரறறலும் மயங்கி மாய்வன.* (15)

வானரர் அம்மலையை இராவணன் இருக்கும் இடம் என்று சினத்தல்

809. அனையது நோக்கின ரமர ரஞ்சுறும்
வினைவல னிராவண னிருக்கும் வெற்பெனும்
நினைவின ருவந்துயர்ந் தோங்கு நெஞ்சினர்
சினமிகக் கனற்பொறி சிந்து செங்கணார்.

(வானரர்) - அனையது நோக்கினர் - அவ்வேமகூட மலையைக்கண்டு, அமரர் அஞ்சுறும் - தேவர்களும் நடுங்கும்படியான, வினைவலன-தீவினைகள் இயற்றவல்லவனான, இராவணன் இருக்கும் வெற்பு எனும் - இராவணன் அரசிருக்கும் திரிகோணமலை என்று கருதுகின்ற, நினைவினர் - எண்ண முடையவரும், உவந்து உயர்ந்து ஓங்கு நெஞ்சினர் - (அதுபற்றி) மகிழ்ந்து பொங்கி வளர்கின்ற உள்ள முடையவர்களும், சினம் மிக கனல் பொறி சிந்து செங்கணார் - கோபம் அதிகப்படுதலின் தீப் பொறிகளைக் கக்கும் சிவப்பேறிய விழிகளை யுடையவர்களுமானார்கள்.

ஏமகூடத்தின் உயர்வகலங்களையும் வளத்தையும் கண்டு அதுவே இராவணனிருக்கையாக இருத்தல் கூடும் என்றயிர்த்து விரைவில் பிராட்டியை மீட்டல் கூடும் என்ற மகிழவும், அனறுடகிடர் விளைதத அரக்கனமீது சினமும் கொண்டனராதலின, உவந்த நெஞ்சமும் சிவந்த கண்களும் கொண்டனர் வானர வீரர்கள். ஏமகூடத்தையே திரிகூடம் எனு மயங்கினர் எனக. ஏககாலத்தில் இருவகை நெகிழ்ச்சிகள் நிகழ்வதுண்டு, (ஒபபு) 'துன்பமு முவகையுஞ் சுமந்த வுள்ளத் தாள்,' (சுந்தர.

583). 'தம்பியை யுன்னுந் தோறும் தாரைநீர் ததும்புங் கண்ணன், வம்பியல் சிலையை நோக்கி வாய் மடித் துருத்து நக்கான்' (சுந்தர. 985); உயர்ந்து ஓங்கும் - ஒரு பொருட் பன்மொழி; உயர்வின் மிகுதி யைக் காட்டி நின்றது.

பி - ம். 1. *அமிர்த மாமயில், ராமி தாமயில், அமுத வாய்மயில், அமுதின் மாமயில்.*
2. *வினைபயில், வினையம்வல், வினயமில், விராவண னிருந்த;*
3. *உவர்தவந்து, நினைவினின் வந்துயர்ந் தோங்கு செஞ்சினர், ருவப்பினி னிவந்த.*
4. *சிந்தைக் கண்ணினர்.* (16)

வாநரர் அம்மலையின் மீது ஏறுதல்

810. இம்மலை காணுது மேழை மானையச்
செம்மலை நீக்குதுஞ் சிந்தை தீதென
விம்மலுற் றுவகையின் விளங்கு முள்ளத்தர்
அம்மலை யேறினா ரச்ச நீங்கினர்.

இம்மலை - 'இந்த மலையிலே, ஏழை மானை - பேதைமைப் பண்பு வாய்ந்த அந்த மான்போன்ற மருண்ட நோக்கினையுடைய பிராட்டியை, காணுதும் - பார்ப்போம்; (அதனால்) அ செம்மலை - அந்த இராமபிரா னது, சிந்தை தீது - உள்ளத்துயரை, நீக்குதும் - போக்கிவிடுவோம்', என - என்று நினைந்து, (வாநரர்கள்) விம்மல் உற்று - பூரித்து, உவகை யின் விளங்கும் - மகிழ்ச்சியினால் விளங்குகின்ற, உள்ளத்தர் - மனத்தை யுடையவர்களாய், அச்சம் நீங்கினர் - பயம்தீரப்பெற்றவர்களாய் அ மலை ஏறினர் - அம்மலை யுச்சியில் ஏறினார்கள்.

அம்மலையே இராவணனிருக்கையெனத் தேறிப் பிராட்டியை காண்பது நிச்சயம் என உட்கொண்டவராய், அத்தேவியைக்கண்டு அச்செய்தியை இராமபிரானிடம் சென்றறிவித்து அவனுடைய மனத் துயரத்தை நீக்கலாம் என்று எண்ணினர். வீரர் செம்மல் -இராமபிரான். இனி இரண்டாம் அடிக்கு இராவணனைக் கொன்று, அவன் மனத் தீமையைப் போக்கச் செய்வோம் எனவும் கூறலாம். கள்ளிருக்கும் மலர்க் கூந்தற் சானகிமேற் கரந்த காதல், உள்ளிருக்கும் எனக்கருதி யுடற் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி (உயுத்த. இராவணன் வதை, 239.) காண்க. பிராட்டியைப் புறச்சிறையிடுதற்கு முன்னே அன்னாள் மீது தகாக்காதல் கொண்டு அகச்சிறையில் இருத்தினனாகலானும், அந்தக்

காதல் அவன்பால் உள்ளளவும் அவன் நற்கதி பெறவிடமின்ருகலாலும். இராமன் விடுத்த வாளி உடற் புகுந்து தடவியது என்பது காண்க. 'நஞ்சனை யானகம் புகுந்த நங்கையான்' (சுந்தர. 505). 'இதயமாஞ் சிறையில் வைத்தான்' என்றதும் காண்க.

பி - ம். 1. அம்மலைக் கணுகுத.

2. செம்மலைத் திர்க்குதும், செம்மலுந் நீக்குறும்; சிந்தைத் தியன, சிந்தைத் திவினை, செம்மலை நீக்குறுங், சிந்தை நோயெனு, விம்மலு முயகையும், வீங்கும் உள்ளத்தார். (17)

811. இரிந்தன கரிகளும் யாளி யீட்டமும்
விரிந்தகோ ளரிகளும் வெருவி நீங்கின
திரிந்தன ரெங்கணுந் திருவைக் காண்கிலர்
பிரிந்தனர் சிந்தனை பிறிதொன் ருமென.

(அவ்வாறு ஏறிய வாநரர்களைக் கண்டு). கரிகளும் - யானைகளும், யாளி ஈட்டமும் - யாளிகளின் குழுவும், இரிந்தன - (பயந்து) அகன்று ஓடின; விரிந்த கோள் அரிகளும் - (அம்மலையின் மீது) பரந்திருந்த கொல்லு மியல்பு வாய்ந்த சிங்கங்களும், வெருவி நீங்கின - அஞ்சி அகன்றன; (அவ்வாநரர்கள்) எங்கணும் திரிந்தனர் - மலையடங்கலும் தேடிப் பார்த்தவர்களாகி, திருவை காண்கிலர் - பிராட்டியைக் காணுதவராய், பிறிது ஒன்றும் என - இராவணன் இருக்குமிடம் இது வன்று வேறு என்ற, சிந்தனை - எண்ண முடையவராய், பிரிந்தனர் - அவ்விடம் விட்டு அகன்ருர்கள்.

கோளரி - சிங்கம். சுந்தர. 83, 378. வாநரர்கள் கொடிய விலங்குகளும் அஞ்சும் படியான காட்சியர் என்க. கோள் அரி - பிறவற்றின் உயிரைக் கொள்வது; கோள் வலியுமாம். இராவணனிருக்கை யன்று எனத் தெளிந்தார்.

பி -ம். 1. இரிந்தன கிரிகளும். 2. வெருவி நீங்கின.

4. பிறிதெனப் பெயரும் பெற்றியார், பரிந்தின் ருமென, பயமின் ருமென, பரிவு கூரவே (18)

அங்குச் சீதையைக் காணுமை.

812. ஐம்பதிற் றிரட்டிகா வதத்தி னுலகன்
றும்பரைத் தொடுவதொத் துயர்வி னோங்கிய
செம்பொனற் கிரியையோர் பகலிற் றேடினர்
கொம்பினைக் கண்டிலர் குப்புற் றேகினர்.

(அந்த வானரர்கள்) ஐம்பதிற்று இரட்டி காவதத்தினுல் அகன்று - நூறுகாத மளவு அகலமுடையதாய், உம்பரை தொடுவது ஒத்து - விண்ணுலகினைத் தீண்டுவது போன்று, உயர்வின் ஓங்கிய - மிகவும் வளர்ந்துள்ள, செம்பொன் நல்கிரியை-சிவந்த பொன் மயமான அழகிய அந்த ஏமகூட மலையில், ஓர் பகலில் தேடினர் - ஒரு பகல் முழுவதும் தேடியும், கொம்பினை கண்டிலர் - பூங்கொம்பு போன்ற பிராட்டியைக் காணப் பெருதவர்களாய், குப்புற்று ஏகினர் - (அம்மலையினின்று) கீழிறங்கிச் சென்றுர்கள்.

ஏமகூடத்தையே புகழ்ந்து அதனைச் செம் பொனற் கிரியென்றுர். தேடிய விரைவு தோன்ற ஒரு பகலிற்றேடினர் என்றுர். கீழ் பன்னெடுங்கால மாமென்ன வோர் பகலிடை நாடினர் என்றது காண்க. 797. காவதம் - காதம். கொம்பு உவமவாகு பெயராகப் பூங்கொம்பு போன்ற பிராட்டியைக் குறிக்கும். குப்புறுதல் - கீழிறங்குதல் 981; சுந்தர. 15.

பி - ம். 2. ஐம்பதி னிரட்டி, காவதத்தி னுயகன்
3. பைம் பொன்னின் கிரியை, பைம்பொனிற் கிரியை,
4. கண் டிலார் குப்புற் றேக்கினர். (19)

813. வெள்ளமோ ரிரண்டென விரிந்த சேனையைத்
தெள்ளுநீ ருலகெலாந் திரிந்து தேடிநீர்
எள்ளரு மகேந்திரத் தெம்மிற் கூடுமென்
றுள்வினு ருயர்நெடு மோங்க னீங்கினர்.

(அங்கதன் முதலிய வானரத் தானைத் தலைவர்கள்) வெள்ளம் ஓர் இரண்டு என - இரண்டு வெள்ளம் என்று சொல்லுமாறு, விரிந்த சேனையை - பரந்துள்ள தமது குரக்குசசேனையைப் (பார்த்து), நீர் - நீங்கள், தெள்ளும் நீர் உலகு எலாம் திரிந்து தேடி - தெளிவான நீர் சூழ்ந்த உலகனைத்தினும் சஞ்சரித்துத் தேடிப்பார்த்து, (பிறகு) எள் அரு மகேந்திரத்து - (தென்கடற்கரைக் கண் உள்ள) இகழ்தற்கரிய மகேந்திர மலையினிடத்தில், எம்மில் கூடும் - எம்மிடத்து வந்து சேருங்

கள்; என்று உள்ளினர் - என்று நினைத்துக் கட்டளையிட்டவராகி, உயர்நெடும் ஓங்கல் நீங்கினர் - உயர்ந்து வளர்ந்த அந்த ஏம கூடத்தை விட்டு அகன்றார்கள்.

எல்லோரும் ஒருங்கே சென்று தேடப்புகின் குறித்த அவதிக்குள் காரியம் முடிவெய்தாதெனக் கண்டு தனித்தனித் தொகுதியாகப் பிரிந்து தேடுதல் நலம் என்று பிரித்து விடுத்து, அங்கதனும், அவனுடன் சிலவரும் தனித்துச் சென்றனர் என்பது குறிக்கப்பட்டது. யாவரும் மகேந்திர மலையில் வந்து கூடவேண்டும் என்றும் கூறப்பட்டது. உள்ளுதல் - நினைத்தல். ஓங்கல் - மலைக்குக் காரணக்குறி.

பி - ம். 1. ரிரண்டுடன்

2. திரிந்து தேடினர்; தெரிந்து தேடி. திரிந்துதேடும்.

3. மயேந்திரத்

4. உள்ளினு ருரைத்துமால் வரையை, உள்ளினு ராணையி னுழையி னீங்கினர் னீக்கினர், ரவருமங் குவந்து போயினர். (20)

அநுமன் முதலியோர் ஒரு பாலைவனத்தை அடைதல்

814. மாருதி முதலிய வயிரத் தோள்வயப்
போர்வலி வீரரே குழுமிப் போகின்றார்
நீரெனும் பெயருமந் நெறியி னீங்கிடச்
சூரியன் வெருவுமோர் சுரத்தைத் துன்னினர்.

மாருதி முதலிய வயிரம் தோள் வயம் போர் வலிவீரரே - வாயுவின் புதல்வனான அநுமன் முதலாகிய உறுதியான தோள்களையுடைய வெற்றி விளக்கும் போரில் வன்மையுடன் விளங்கும் வீரர்கள் மட்டும், குழுமி போகின்றார் - திரண்டு செல்பவராய், அ நெறியின் - அந்த வழியிலே, நீர் எனும் பெயரும் நீங்கிட - நீர் என்ற பெயர்கூட இல்லை யாதலின், சூரியன் வெருவும் - வெம்மை வாய்ந்த கிரணங்களையுடைய சூரியனும் கண்டு அஞ்சத் தகுந்த, ஓர் சுரத்தை - ஒரு பாலை வனத்தை, துன்னினர் - சென்று அடைந்தார்கள்.

நீர் வற்றச் செய்து உலகினையே வெம்மை செய்யும் பாலைத் தெய்வமாகிய கதிரவனும் அஞ்சியதாக அந்த வானர்வீரர் சென்ற பாலையின் கடுமையைக் கூறினர். துன்னுதல் - நெருங்குதல். நீர் ஒரு சிறிதும் இல்லை யென்றதை 'நீர் எனும் பெயரும் நீங்கிட' என்றார். இவர்கள் சென்ற அந்த வனம் முன்னர் மிகவும் வளம் வாய்ந்த இடமாக இருந்த தென்றும் கண்டு என்ற ஓர் முனிவன், தன் மகன் அங்கு இறந்தது

பற்றி வெகுண்டு சாபமிட, அது கொடும் பாலையாக மாறிற்று என்றும் முதனூல் கூறும் (ஒப்பு) 'வேனிலே யல்லதோர், இருதுவே றின்மை யால் எரிசுடர்க் கடவுளும், கருதின்வே முள்ளமுங் காணின்வே னயனமும்'; விடியுமேல் வெயிலும்வேம்; சூரியன் தேரு மோடாது (பால தாடகை; 5: 6: 9); தக்க. 57. 'வானீங்குவைப் பின் வழங்காத்தேர் நீர்க்கவாம்' (கலித். பாலை. 6). 'பகல் முனி வெஞ்சுரம்' (கலித். பாலை. மற்றும் வீரரே - ஏகாரம் பிரிநிலை.

பி - ம். 2. போர்கெழு போர்வய.
3. பெயருமொன் றின்றி நீணெடும், நெறியும் நீங்கலால், நெறியின் நீங்கலாச்.
4. சூரிய னஞ்சமோர் சுரத்திற் றுன்னினார், சுரத்தை நண்ணினார்.

பாலைவனத்தின் வருணனை

815. புள்ளடை யாவிலங் கரிய புல்லொடும்
கள்ளடை மரனில கல்லுந் தீந்துகும்
உள்ளிடை யாவுநுண் பொடியொ டோடலின்
வெள்ளிடை யல்லதொன் றில்லை வெஞ்சுரம்.

அவெம்சுரம் - அந்தக் கொடுமையான பாலை வனத்தில், புள் அடையா - பறவைகள் சென்று தங்கமாட்டா; விலங்கு அரிய-மிருகங் களும் காண்பதற்கரியன; புல்லொடும் கள் அடை மரன் இல - புற்களும் தேன்பொதிந்த மலர் மரங்களும் இல்லை; கல்லும் தீந்து உகும் - கற் களும் எரிந்து சாம்பராகிவிடும், உள் இடையாவும் - தன்னிடம் பொருந் திய எல்லாப் பொருள்களும், நுண் பொடியொடு ஓடலின் - சிறுதுகள் களாக உருமாறிப் பறத்தலினால், வெள் இடை அல்லது - வெற்றிட மல்லது, ஒன்று இல்லை - பிறிதொன்றும் அங்குக் காணப்படாது.

பிராணிகளோ, தாவரங்களோ அப்பாலை வனத்திற் காண்டற் கில்லை. கற்களும் தீந்துபோய் அங்நிலத்துறும் பிறநிலப் பொருள்கள் எல்லாம் பொடியாயின. (ஒப்பு) 'காகமும் கரிகளும் கரிந்து சாம்பின' (பால.தாடகை.12) உள்ளிடையாவும்-அதனிடம் வந்தடைந்த எல்லாம். வெள்ளிடை - வெற்றிடம்: சுந்தர. 206, 301. சீவக.437; 1908.

பி - ம். 1. விலக்கரிது; விலங்கெவையும் போகலா; பூவொடும்,
2. கள்ளுடை, கள்ளுடைமர; தீய்ந்தகன். கல்லூந் தீய்ந்தக.
3. பொடியொ டோடிய, பொடியொ டொட்டலின்; ஒள்ளடை யானறன் பொடியி ஞேங்கிய.
4. வெள்ளடை, தொன் றரிதவ் வெஞ்சுரம், றரிது. (22)

816. நன்புல னடுக்குற வுணர்வு நைந்தறப்
புன்புற யாக்கைகள் புழுங்கிப் பொங்குவார்
தென்புலத் தவனெரி நரகிற் சிந்திய
என்பில்பல் லுயிரென வெம்மை யெய்தினர்.

(அங்கடைந்த வீரர்கள்) நல் புலன் நடுக்குற - தமது இந்திரியங்களும் நடுங்குமாறும், உணர்வு நைந்தற-அறிவு தேய்ந்தொழிய, பெரும் புனபுற யாக்கைகள் புழுங்கி பொங்குவார் - பொலிவிழந்த புறத்தையுடைய சரீரங்கள் வியர்த்து மனம் கொதிப்பவர்களாய், தென்புலத் தவன் எரி நரகில்-(தென் திசைக்கண் உள்ளதாகக் கூறப்படும்) எமனது எரிவாய் நரகத்தில், சிந்திய - வீழ்ந்து வருந்துகின்ற, என்பு இல்பல் உயிர் என (எலும்பே யில்லாத உடலையுடைய) புழு முதலான பல உயிர்த் தொகுதிகளைப்போல, வெம்மை எய்தினர் - மனக் கொதிப்பையும் உடற் கொதிப்பையும் அடைந்தார்கள்.

வரநரர்கள் வெயிலில் புழுப்போன்று துடித்தனர். தென் புலத் தவன், எமன். என்பில்பல் உயிர் - புழுக்கள். 'என் பிலதனை வெயில் போலக்காயுமே' (குறள். 77). புலன்கள். சுவை ஒளி ஊறு ஓசை. நாற்றம்; இங்கு இலக்கணையால் இந்திரியங்களைக் குறித்து நின்றன. எரி நரகம், கும்பி பாகம் போல்வன 'எரிவாய் நரகு' (நாலடி. 58).

பி-ம். 1. *உணாவு நாமற, நாவு நீரற*
2. *புனபுல வாக்கைகள், புன்புற வியாக்கைகள், புன்புனல் யாக்கைகள் புழுங்கிப் போகுவார், புழுங்கி யேங்குவார்.*
3. *தென்புலந் தங்கெரி, தென்புலத் தங்கெரி, தினிலெரி, தென்புலத் தவரென, புலத் தினினெரி.*
4. *என்பிலா வுயிரென, எனபிலாப் பல்லுயிர், எனத் துடிக்கும் விம்மலார், துடிக்கு மின்னலார்.* (23)

817. நீட்டிய நாவினர் நிலத்திற் றீண்டுதோ
றூட்டிய வெம்மையா லுலையுங் காலினர்
காட்டினுங் காய்ந்துதங் காயந் தீதலால்
சூட்டகன் மேலெழு பொரியிற் றுள்ளினர்.

(அந்த வாநரர்கள்) நீட்டிய நாவினர் - (நீர் நசையால்) வெளியே நீட்டப்பெற்ற நாக்கையுடையவர்களும், நிலத்தில் தீண்டு தோறு ஊட்டிய - பூமியில் அடியிடும் தோறும் கீழிருந்து தாக்கிய, வெம்மையால் - வெப்பத்தால், உலையும் காலினர் - கொப்புளம் கண்ட பாதங்களையுடை

யவர்களுமாகி, காட்டினும் காய்ந்து - அப்பாலை வனத்தைப் பார்க்கிலும் மிகுதியாகச் சூடேறி, தம் காயம் தீதலால், தங்கள் உடம்பு வெந்ததால், சூட்ட கல்மேல் எழு பொரியின் - சூடு கொண்ட அகலிலிருந்து, மேலெழும் நெற்பொரி போன்று, துள்ளினர் - துடித்தார்கள்.

நீர் வேட்கையால் நாவும் வெளித் தோன்றின. கால்கள் கொப்புளித்தன, அந்த வானரவீரர்களின் உடல் அந்தப் பாலையின் வெம்மையால் அப்பாலையைக் காட்டிலும் வெம்மை மேவிற்று; அனற் கல்லிற் பொரித்தெழும் பொரியைப் போலத் துள்ளினர் என்க. உவமையணி. சூட்ட: சூடு என்ற பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சமாகக் கொண்டு சுட்ட கல் எனினுமாம். 23. 24-ம் பாடல்களில் அப்பொழுதிருந்த வீரர் நிலைமை கூறப்பட்டது.

பி - ம். 1. நிலத்திற் றீண்டியே, நிலத்தைச் சீண்டுதோறு, நிலத்தைத் தூண்டுதோறு, நிலத்திற் ரூவுதோறு.
2. ஒட்டிட மொன்றிலா. மொன்றலா வுலையுங் காலினர். ஊட்டிய வெம்மையார்; உலையுங் கால, உலையுங் காலினர்.
3. காய்ந்ததங் காயம், கால்கள், காய்நதவக் கால்கள் காய்தலால், காயந்தவக் காயம், காயங் தீய்ந்தறக் காய்தலால், கன்றலால் ; காட்டெரி காயத்தங் காயங் காய்தலால்.
4. சூட்டகன் மீதெழு, சூட்டுலை ; துள்ளுவார். (24)

வானரர் பில வழியிற் சேர்தல்

818. ஒதுங்கலா நிழலினைக் காண்கி லாதுயிர்
பிதுங்கலா முடலினர் முடிவில் பீழையார்
பதங்கடீப் பருகிடப் பதைக்கின் றூர்பல
விதங்களா னெடும்பில வழியின் மேவினர்.

(வீரர்) ஒதுங்கல் ஆம் நிழலினை காண்கிலாது - (வெயிலுக்கு) ஒதுங்கக்கூடிய நிழலைக் காணமாட்டாது. உயிர் பிதுங்கல் ஆம் உடலினர் - உயிர் வெளியேறக்கூடிய உடலையுடையவர்களும், முடிவு இல் பீழையார் - எல்லையற்ற துயரத்தை அடைந்தவர்களும், பதங்கள் தீ பருகிட பதைக்கின்றூர் - கால்களில். (அப்பாலைவனத்தின்) சூடு தாக்குதலால் துடிதுடிக்கின்றவர்களுமாய், பல விதங்களால் - (அந்த வெம்மையினின்று பிழைத் தேறுவதற்குப்) பல வகையினாலும் கருதி முடிவாக, நெடுபிலம் வழியில் மேவினர் - நீண்ட பிலத்துவாரத்தின் வழியை அடைந்தார்கள்.

அப்பாலையினின்று தப்பிவெளியேறக் கூடுமோ என்று கவன்ற போது ஓர் பிலத்தைக் கண்ணுற்று அதனுட் புக்கார். பிதுங்கல் - வெளிப்படல். பீழை - துன்பம்; பீடா என்ற வடசொல்லின் திரிபு (ஆரணிய, 203, 1095.) சுந்தர. 69, 292. சீவக. 580. பதங்கள் - கால்கள். பலவிதங்களாற் பதைக்கின்றார் எனினுமாம்.

பி - ம். 1. ஒதுங்கலா முறையுறை, முழையுறை கிழலுறை, கிழலிறை முறையிறை.

2. பிதுங்கிடும், பிதுங்கியோ யுடலினர் பீடையர்.

3. உருகிட; பதைத்துத் தம்மனம்.

4. விதங்களான் வெந்தனர் விண்ணி னேங்கினர், விதங்கொளா நேடு வெயில், நெடும்பில வாயின் மேயினர், நெடுவெளி யானின், மதங்கள் போய் நெடும்பில வாயினண்ணினர். (25)

819. மீச்செல வரிதினி விளியி னல்லது
தீச்செல வொழியவும் தடுக்குந் திண்பில
வாய்ச்செல னன்றென மனத்தி னெண்ணினர்
போய்ச்சில வறிதுமென் றதனிற் போயினர்.

இனி - இனிமேல், விளியின் அல்லது - இறந்துபடின் அல்லாமல், மீ செலவு அரிது - இதனைக் கடந்து அப்பாற் செல்லுதல் இயலாத காரியம்; (ஆதலின்) திண் பிலம் வாய் செலல் - வலிய பிலத்தின் வழியாகச் செல்லுதல், தீ செலவு ஒழியவும் தடுக்கும் - வெம்புகின்ற பாலைப் பூமியிற் செல்லுதலையாவது தடுக்கும் (ஆகவே), நன்று - (இப்பிலத்துட் செல்லுதலே) நல்லது', என - என்று, மனத்தின் எண்ணினர் - உள்ளத்திற்கருதியவர்களாய், போய் சில அறிதும் என்று - (இதனுட்) சென்று ஆங்குள்ள சில இடங்களில் ஆராய்வோம் என்று சொல்லி, அதனில் போயினர் - அப்பிலத்தினுள்ளே புகுந்து சென்றார்கள்.

எல்லோரும் பிலத்துட் புகுவது என்று துணிந்து உட்புக்கனர். சிலர் ஒரு சமயம் பிராட்டி அப்பிலத்துள் ஒளித்துவைக்கப்பட்டிருத்தலும் கூடும் என எண்ணினர். மீச்செலவு - அப்பாலை வனத்தின் மீது கடந்து செல்லுதல் எனினும் ஒன்றும். ஒழிய என்னும் செயவெனச் சம்தொழிற் பெயராக தடுத்தல் வினைக்குச் செயப்படுபொருளாய் நின்றது 'அறம் செய விரும்பு' என்ற இடத்துச் செய என்பது செய்தலை என்ற பொருளில் வந்தது காண்க, எளிதிற் கடத்தற்கரிய பிலம் என்பார் திண்பிலம் என்றார்.

பி - ம். 1. வரிதனாம், வரியது வரியவெஞ் சரத்தின் வெம்மையான்; விளிவி னல்லது
2. தீச்செலா தொழியவும், தீச்செல வுரியவும், தீச்செல வின்றியே கிடந்த சீரினுல்.
3. வாய்ச்சிது ஈமக்கென மனத்தி னெண்ணியே.
4. அரிதிற் புக்கனர், வதனிற் புக்கனர், போய்ப்பில மரிது மென் றரிதிற் புக்கனர். (26)

ஓர் இருட் குகையை அடைதல்

820. அக்கணத் தப்பிலத் தகணி யெய்தினுர்
திக்கினெ டுலகுறச் செறிந்த தேங்கிருள்
எக்கிய கதிரவற் கஞ்சி யேமுறப்
புக்கதே யனையதோர் புரைபுக் கெய்தினுர்.

(வீரர்கள்), அக்கணத்து - அப்பொழுது, அ பிலத்து அகணி யெய்தினுர் - அந்தப் பிலத்தினது உள்ளிடத்தைச சேரப்பெற்றவராய், திக்கினெடு உலகுஉற செறிந்த தேங்கு இருள் - நான்கு திசைகளிலும் இவ்வுலகத்தும் நெருங்கி நிறைந்த இருள், எக்கிய கதிரவற்கு அஞ்சி-வானத்தில் ஏறிய சூரியனிடம் அச்சம் கொண்டு, ஏமுற புக்கதே அனையது - (தான்) வாழ்வினை யடையுமாறு புக்கது போன்று காணப்படுவதாகிய, புரை - ஒரு குகையில், புக்கு எய்தினுர் - புகுந்து சென்றனர்.

பிலத்துட் புகுகையில் ஓர் இருள் செறிந்த குகைக்குள் நுழைந்தனர் வீரர். கதிரவனுக்குப் பயந்து இருள் பிலத்து ஒளித்தது என்றது தற் குறிப்பேற்றவணி (ஒப்பு) 'தூங்கிருள் வெய்யோற் கொதுங்கிப், புக்கிருந்தா லன்ன பொழில்' (நளவெண்பா.24.) அகணி - உள்ளிடம் 'கடுக்காய்க்கு அகணி நஞ்சு சுக்கிற்குப் புறணி நஞ்சு' என்ற பழமொழி கொண்டு அகணியும் புறணியும் தம்முள் எதிர்ப்பதங்கள் ஆதல் பெறப்படும். 'அகணியாகிய வாய்ப் பொருட் கேள்வி' (பெருங். 3 : 26, 29) எக்குதல் - 'எடுத்தவே யெக்கி' பரிபா. 16: 45): மற்றும், பெருங். 1: 42; 188, 'ஏமம் உற எனபது ஏமுற என்ருயது' தொகுத்தல்.

பி - ம். 1. இப்பிலத், பிலத்ததனின். பிலமதனி வெய்தினுர்,
2. உலகினிற் செறிந்த தூங்கிருள்.
3. தொக்கதோர் கதிர்வரத் தஞ்சிச் சூழ்ச்சியால், எக்கிய கதிர வற்கஞ்சி யாவையும். (27)

வீரர்களின் திகைப்பு

821. எழுகிலர் காலெடுத் தேகு மெண்ணிலர்
வழியுள தாமெனு முணர்வு மாறினர்
இழுகிய நெய்யெனு மிருட் பிழம்பினுள்
முழுகிய மெய்யரா யுயிர்ப்பு முட்டினர்.

(அவர்கள்) எழுகிலர்-எழுந்திராமலும், கால் எடுத்து ஏகும் எண் இலர்-அடி வைத்துச் செல்லும் கருத்தில்லாமலும், வழிஉளதுஆம் எனும் உணர்வு மாறினர் - அப்பாற் செல்லுதற்குரிய வழி உள்ளது என்னும் அறிவு மாறப்பெற்றவர்களாய், இழுகிய நெய் எனும் இருள்பிழம்பினுள்-விழுதாக உறைந்த நெய்யொத்த இருளின் தொகுதியில், முழுகிய - படிந்துபோன, மெய்யராய் - உடம்பினையுடையவர்களாய் (ஒருவரிருந்த இடம் பிறிதொருவர் அறிய வியலாமல்) உயிர்ப்பு முட்டினர். (மனத் துயராலும் பயத்தாலும்) பெருமூச் செறிந்தனர்.

இருட் பிழம்பின் மிகுதியாற் செயலற்று ஒருவர் முகம் ஒருவர் காணமுடியாத நிலையில் நின்றனர் உயிர்ப்பு முட்டுதல் - மூச்சு முட்டு தல் என்ற வழக்குக் காண்க.

பி - ம். 1. ஏக எண்ணிலர்

2. வழியெது வோவெனு மயங்கி நின்றுளார்; நினைவு மாற்றினர்,

3. இழுகிய மையென விருளும் பாழியின், இழுகிய நெய்யென, ஒழுகும தெனவுழந் திருளி னுள்ளத்தில்,

4. முழுகிய மெய்யென ; முழுகிய் மெய்யினர்; முழுகிய தேயென வுரப்பி, முழுகிய மெய்யென வுயிர்ப்பு, முழுகினம் யாமென, முழுகின தேயென, முழுகின மேயென வுயிர்ப்பு வீங்கினர்.

சில பிரதிகளில் இரண்டு மூன்றுமடிகள் இடம் மாறியுள்ளன. (28)

வீரர்கள் அநுமனை வேண்டுதல்

822. நின்றனர் செய்வதோர் நிலைமை யோர்கலர்
பொன்றின ராமெனப் பொருமு புந்தியர்
வன்றிறன் மாருதி வல்லை யோவெமை
இன்றிது காக்கவென் றிரந்து கூறினர்.

(அநுமனல்லாத ஏனைய வானரவீரர்கள்) செய்வது ஓர் நிலைமை ஓர் கலர் நின்றனர் - இன்னது புரிவது என்று உணர மாட்டாதவராய் நின்றவர்களும், பொன்றினர் ஆம் என - இறக்கும் நிலையை

அடைந்தனர் என்று சொல்லும்படி, பொருமுபுந்தியர் - வருந்தும் மன முடையவர்களுமாகி; (அநுமனைப் பார்த்து) 'வல்திறல் மாருதி - மிக்க வலிமையையுடைய அநுமானே! இன்று - இப்போது, எமை இதுகாக்க வல்லையோ - எங்களை இத்துன்பத்தினின்றும் காப்பதற்கு வல்லமையுடை யையோ', என்று - என்று முறையிட்டு, இரந்து கூறினர் - வேண்டி முறையிட்டார்கள்.

இருட் குகையில் வருந்திய நிலையில் வீரர்கள் தம்மைத் துயரத்தி னின்றும் காக்குமாறு இரந்தார்கள். ஓர்கலர் - அல் எதிர் மறையிடை நிலை. அர் - பலர் பால் விகுதி; இங்கு முற்றெச்சம்.

பி - ம். 1. நிலைமை நோக்கலர், நோக்கிலர், யோர்கிலார்; யோர்கிலா, நேர்கிலா.
2. பொன்றின ராமெனப், பொருமும் புந்தியார், பொன்றிவ மினியெனப் பொருமுஞ் சிந்தையார்.
3. வல்லை நீயெமை, வல்லை யேஎலமை.
4. இன்றிநிற் காக்க, காக்குமென், வென் றெழுந்து கூறினர். (29)

அவர்கள் அநுமனைப் பின்தொடர்தல்

823. உய்வுறுத் துவென்மன முலையி ருழின்வால்
மெய்யுறப் பற்றுதிர் விடுகி லீரென
ஐயனக் கணத்தினி லகலு நீணெறி
கையினிற் றடவிவெங் காலி னேகினன்.

(மாருதி மற்றவர்களைப் பார்த்து), 'உய்வு உறுத்துவென் - நீங்கள் பிழைத்தலைச் செய்வேன்; மனம் உலையிர் - நீங்கள் உளம் வருந்த வேண்டா; ஊழின் - முறையாக (ஒருவர் பின் ஒருவராக நின்று) வால்- (எனது) வாலை, மெய் உற பற்றுதிர்-உறுதியாகப் பிடித்துக் கொள்ளுங் கள்; விடுகிலீர் - அதனைக் கைவிடாதீர்', என - என்று கட்டளையிட்டு, அ கணத்தினில் - (அவர்கள் தனது வாலைப் பற்றிக்கொண்ட) அப் பொழுதே, ஐயன் - சிறந்தவனாகிய அந்த அநுமான், (அகலும் நீள் நெறி - (தான்) செல்ல வேண்டிய அந்தக் குகையின் வழியில, கையி னில் தடவி - கையினால் தடவிக்கொண்டு, வெம்காலின் ஏகினன் - விரைந்து செல்லும் காலினால் நடந்து முனனே சென்றான்.

அநுமன் வாலினை யொருவர் பின் ஒருவராகப் பற்றிக்கொண்டு சென்றனர். ஊழ் - முறை, கையினிற்றடவிக் காலினேகினன் என்ற இடத்து முரண்தொடை காண்க. காலின் என்பதற்குக் காற்றுப் போன்று விரைந்து எனினுமாம். 'கருங்கடல் கடந்தனன் காலினு

லென்ருன்' (சுந்தர. 595). என்ற இடத்துக் கால் என்பது பாதம் என்றும் காற்று என்றும் இரு பொருள் படுதல் காண்க. இருள் ஆதலின் தடவிச சென்றனன் என்க.

பி-ம். 1. உலைய லீர்களென், உலையு மூழினேன், மூழினென், உய்யுறுத் துவன்மன முலையல்.

2. மெய்யுறப் பற்றுமின், விடுகி லீரெனும், விடுகிலீ ரென்ன, விடுக லீரெனு.

3. கணத்தினுல், கையுறத் தடவி; கணத்தினி னகலும்.

4. தடவினன், வெங்களவி னூக்கினுன், களவி னேக்கினுன். (30)

824. பன்னிரண் டியோசனை படர்ந்த மெய்யினன்
மின்னிரண் டனையகுண் டலங்கள் வில்லிடத்
துன்னிரு டொலைந்திடத் துருவி யேகினுன்
பொன்னெடுங் கிரியெனப் பொலிந்த மேனியான்.

நெடு பொன்கிரி என பொலிந்த மேனியான் - உயர்ந்த மேருமலை போல விளங்கும் சரீரத்தையுடைய அநுமன், பன்னிரண்டு யோசனை படர்ந்த மெய்யினன் - பன்னிரண்டு யோசனை தூரம் வளர்ந்த உடலையுடையவனுய், மின் இரண்டு அனைய குண்டலங்கள் வில் இட - தனது செவிகளில் தரித்துள்ள இரண்டு மின்னற் கொடி போன்ற குண்டலங்கள் இருவகை ஒளியை வீசுதலால், துன் இருள் தொலைந்திட - அடர்ந்த இருள் அகன்று ஒழிய, துருவி ஏகினுன் - ஆராய்ந்து தேடிக் கொண்டு போயினுன்.

அநுமன் விசுவருபம்கொண்டு அவனுடைய செவியின் குண்டலங்கள் ஒளி வீசியதனுல் இருள் இரியக் குகையினூடே சென்றனன். நினைத்த உருவம் கொள்ளும் ஆற்றல் உடையவன அநுமன் 'வேண்டிய போதே வேண்டுரு வெய்தும் வினைவல்லீர் 993. பிறியாவறத்தி னநுமான் வளர்ச்சி பெருமேருவிற் பெரியனும், சிறிதா யொடுக்கு மெனு மேனியற்ப வணு வானதிற் சிறியனும், உறுகாரணத்தி னளவா முருக் கொ ளுயர்வீர னுற்றவலி (கம்பரா. உத்தர, அநுமப். 7) 'இங்கு இறைவனைக்குறிக்கும்' அணோரணீயாம் மகதோ மகீயாம்; என்ற வாக்கியம் ஒப்பு நோக்கத்தகும்; அணுவின மேருவின் ஆழியானெனச் செலும் அறிவோன், (சுந்தர, 229). என்றதும் காண்க. எதிர்ப்பட்டவர்களையும் கொடிய விலங்குகளையும் அச்சுறச் செய்வதன் பொருட்டு அநுமன் இப் பெருக் கொணடனன் என்க. மற்றும் அவன் உடன் வந்த வானர வீரர் கள் அனைவரும் அவன் வாலைப்பற்றிச் செல்வதற்கு அப்பேருரு வேண்

டப் படுதலும் உய்த்துணர்க. அநுமன் நிறமும் பொன்னிறம், வடிவும் பெரிது என்பதைக் 'காஞ்சநாத்ரீ கமனீய விக்ரகம்' என்பது கொண்டும் உணர்க, காஞ்சனாத்ரி - மேருமலை; இது பற்றியேதான், 'பொன் னெடுங் கிரியெனப் பொலிந்த மேனியான்' எனறார் என்க. 'பொன்னு ருக் கொண்ட மேரு புயத்திற்கு முவமை போதாத், தன்னுருக் கொண்டு நின்றான்' 73 என்ற செய்யுளும் 74ம் காண்க.

பி - ம். 1. ஓசனை படர்ந்த மேனியான், மேனியன், பரந்த மெய்யினன், படிந்த. 2. வில்விட.

3. தரிதத் தேசினான், தன்னிருட் டறைதனைக் கடந்து, தன்னி னான்.

4. கிரிகள்போற் பொலிந்த, கிரிமிகர்,

வீரர் நகரமொன்றைக் காணுதல்

825. கண்டனர் கடிநகர் ககனத் தொண்கதிர்
மண்டல மறைந்துறைந் தனைய மாண்பது
விண்டல நாணுற விளங்கு கின்றது
புண்டரி கத்தவள் வதனம் போன்றது.

(அந்தக் குரக்குவீரர்) கடிநகர் கண்டனர் - அந்தப் பிலத்தினுட் புறத்தே சிறந்த நகரமொன்றைப் பார்த்தனர்; (அது) ககனத்து-விண்ணி டத்துள்ள, ஒளி கதிர் மண்டலம் - ஒள்ளிய கிரணங்களையுடைய சூரிய மண்டலமானது, மறைந்து உறைந்தனைய மாண்பது - அவ்விடத்து வந்து உருக்கரந்து தங்கினாற் போன்ற பெருமை வாய்ந்தது; விண் தலம் நாண் உற விளங்குகின்றது - வானத்தில் உள்ள சுவர்க்கலோக மும் வெள்கும்படி (அதனினும் ஒளி பெற்று) விளங்குவது; புண்டரிகத் தவள் வதனம் போன்றது - செந்தாமரை மலரில் வாழ்பவளான திரு மகளின் முகத்தை ஒத்து விளங்குவது.

கடி என்னும் பல பொருள் ஒரு சொல் - இங்கே சிறந்த என்ற பொருளில் வந்தது. கமலத் தொண் கதிர் மண்டலம் என்ற பாடத்துக்கு) தாமரையை மலர்த்தும் சூரிய மண்டலம் என்க. உறைந்தது அனைய என்பது உறைந்தனைய என நின்றது.

பி - ம். 1. கமலத் தொண்கதிர், கருணையோன், கானத் தொண்கதிர்.

2. மறைந்துறைந் தமர்ந்த மாண்பது, நிறைந்துறைந் தனைய.

4. புண்டரி கத்தினள், வதனம் போல்வது. (32)

இதுமுதல் ஐந்து கவிகள் அங்நகரின் வருணனை

826. கற்பகக் காவது கமலக் காடது
பொற்பெருங் கோபுரப் புரிசை புக்கது
அற்புத மமரரு மெய்த லாவது
சிற்பமு மயன்மனம் வருந்திச் செய்தது.

(அந்த நகர்) கற்பகம் காவது - கற்பகச் சோலையையே தன்னகம் கொண்டது ; கமலம் காடது - (தாமரை மலர்களையுடைய) நீர் நிலையை உடையது : பொன் பெரு கோபுரம் புரிசை புக்கது - பொன்னிறமான உயர்ந்த கோபுரங்களையுடைய மதில்கள் அமையப் பெற்றது ; அமரரும் அற்புதம் எய்தல் ஆவது-தேவர்களும் (பார்த்து) வியப்படையக்கூடியது; சிற்பமும் அயன் மனம் வருந்தி செய்தது - சிற்ப வேலைகளும் மயன் என்னும் அசுரத் தச்சன் தனது மனத்தை மிகவும் வருத்தி உண்டாக்கியது.

எல்லாவற்றையும் எளிதில் நினைத்த மாத்திரத்துச் செய்யக் கூடிய மயன் என்னும் அசுரத் தச்சனும் பன்னுள் மனத்தாற் சிந்தித்துச் செய்யப்பெற்றது என று, அங்நகரத்தின் அருமையும் பெருமையும் கூறினர். புரிசை - மதில் 'ஒப்பு' (தெய்வத் தச்சனைப் புகழ்துமோ) (சுந்தர. 113.) - புக்கது வற்புதம் எனக் குற்றியலுகரம் கெடாது. உடம்படு மெய்பெற்று வந்தது.

பி - ம். 1. *கற்பகக்கானது, கானத்து, காட்டது.*
2 *கோபுரம் புரிசை, புரிசை பொற்பது ; நீடிய புக்குள.*
3. *அற்புத வமரரும், அற்புதத் தமரரும், அறிதல் தேற்றது, அமரரு மெய்த லாவது, அறிக லாதது.*
4. *சிற்பியா மயன்மனம், சிற்ப நூல், சிற்பியின் மயன்மனம், மயன்மகன ; வருந்தச்செய்தது.* (33)

827. இந்திர நகரமு மிணையி லாதது
மந்திர மணியினிற் பொன்னின் மன்னியே
அந்தரத் தவிர்சுட ரங்கின் ருயினும்
உந்தரு மிருடுரந் தொளிர நிற்பது.

(மற்றும் அந்தமாநகர்) - இந்திரன் நகரமும் இணை இலாதது - இந்திரன் தலைநகராகிய அமராவதியும் தனக்கு இணையாகப் பெருதது ; அந்தரத்து அவிர் சுடர் - விண்ணில் உதிக்கிற பரிதி மதி என்ற இரண்டு சுடர்களும், அங்கு இன்று ஆயினும் - அவ்விடத்தில் இல்லை

யாலும், மந்திரம் மணியினில் பொன்னின் மன்னியே - (அங்கரத்து) மாளிகைகளில் பதிக்கப்பற்ற மாணிக்கங்களினாலும் பொன்னாலும், உந்த அரும் அருள் துரந்து ஒளிர நிற்பது - போக்குதற்கு அரிய காரிருளையும் அகற்றி விளங்கி நிற்பது.

கதிர் ஒளியும் மதி ஒளியும் அப்பிலத் தகத்து இல்லையெனினும் அங்கு மாளிகையின் கண் உள்ள நவமணிகள் இருளை அகற்றிநிற்கும் என்பதாம். மந்திரம் - வடசொல். அரண்மனை எனப் பொருள்படும். உந்த அரு உன்பது உந்தரு எனத் தொக்கது. 'உந்தரும் வினையதாகி' (ஆரணிய. 417). இனி உந்து அரு எனக் கொண்டு உந்து முதனிலைத் தொழிற் பெயராகவும் கொள்ளலாம். அந்தரம் - ஆகாயம் 'அந்தரத் தமரர்' 49. 'மந்திர மணியில் - அகங்களில் பிரகாசிக்கும் மணியினாலும்; மந்திரம் - மனை' என்பது பழையவுரை.

பி - ம். 1. நிகரி லாதது, நிகரி லாதன, எதிரி லாதது, எதிரி லாதன, இந்திர வுலகினும் நிகரி ல்ாதன, நகரெழில் கெடுக்கு மாண்பின.
2. மந்திர மணியின, மந்திர மணிகளிற், பொன்னின் மண்ணிப, மற்றினில்.
3. இருசுடர், நிமிர் சுடர், எழுஞ்சுடர், அமைவின் ருயினும், அவையின் ருயினும்; அவையிற் ருயினும், ஆங்கின் ருயினும்.
4. ஒளிரு கின்றது, ஒளிர நின்றது. (34)

828. புவிபுகழ் சென்னிபே ரபயன் றோள்புகழ்
கவிகட மனையெனக் கனக ராசியும்
சவியுடைத் தூசுமென் சாந்து மாலையும்
அவிரிழைக் குப்பையு மளவி லாதது.

(மேலும் அங்கர்) புவிபுகழ் சென்னி பேர் அபயன் - உலகத் துயர்ந்தோராற் புகழப் பெற்ற குலோத்துங்க சோழனென்றும் அபயன் என்றும் பேர் பெற்ற அரசனது; தோள் புகழ் கவிகள் தம்மனை என - புயவலியைப் புகழ்ந்து பாடிய கவிகளுடைய வீடுகள்போல, கனகம் ராசியும் - பொன் குவியலும், சவி உடை தூசும் - ஒளி மிக்க பொன்னாடைகளும், மெல் சாந்தும் - மென்மையான கலவைச் சந்தனமும், மாலையும் - நறுமண மலர் மாலைகளும், அவிர் இழை குப்பையும் - ஒளி விட்டு விளங்குகின்ற அணிகலன்களின் குவைகளும், அளவு இலாதது- அளக்கவொண்ணாதபடி நிறையப்பெற்றது.

தமக்குப் பேராதர வளித்து நின்ற குலோத்துங்க சோழனது பெருமையை ஆசிரியர் இங்குக் குறிக்கின்றார். இது உபகார ஸ்மிருதி எனப்

படும். இதுபோன்றே தம்மை 'ஆன்பாலு நெய்யு மரம்பைமுதல் முக்கனி யும்' ஊட்டி வளர்த்த சடையப்ப வள்ளலை ஆசிரியர் இந்நூலிற் பன்னி ரண்டிடங்களிற் பாராட்டியுள்ளனர். ஸ்ரீமான் நாதமுனிகள் காலத்துச் சிறந்த தெய்வீக புருஷனைப் பற்றிப் பேசும் காப்பியத்தில் ஓர் நரனை நூற்றிருபது இடங்களில் குறித்தல் கூடுமோ என்ற கேள்வி யெழுந்த தாக, அப்பொழுது ஆசிரியர், உபகார ஸ்மிருதி என்ற வகையில் அவ் வாறு செய்தல் முறையென்று விடையிறுப்ப, அப்பொழுது தடை நிகழ்த் தியவர், ஆயிரம் பாடல்களுக்கு ஒரு பாட்டாக அமைத்தாலமை யாதோ என்ன. ஆசிரியர் அதுவும் அமையும் என்றும், தான் நூற்றில் ஒருவராக அவரை மதித்திருந்ததாகவும், இப்பொழுது ஆயிரத்தில் ஒருவராக அவர் மதிக்கப்பட்டமை தனக்கு மகிழ்ச்சி யளிப்பதாகவும் கூறினர் என்ப. இது பற்றிச் செவியாறலாக வந்துள்ள ஓர் செய்தி பின் வருமாறு : ஓர் சமயம் ஆசிரியர் கம்பர் இல்லத்து ஓர் மணநிகழ்ச்சி நிகழ்ந்தது. அப்பொழுது பெருங்கூட்டமிருந்ததால் அங்கு விஜயம்செய்த சடையப்ப வள்ளல் அமர இடமில்லாமல் நின்றூர். அங்கு வந்திருந்தவர் க்ள் முதலியார்க்கிருக்கை யளித்தல் வேண்டுமென விண்ணப்பிக்க ஆசி ரியர் 'அவர்களை அவர்கட்குரிய இடத்தில் அமர்த்துவேன்' என்று கூறித் தமது காவியத்தின் வைத்துப் புகழ்ந்தனர் என்ப. இவ்வாறே வில்லிபுத்தூரர் தம்மை யாதரித்த வரபதியாட் கொண்டானையும், புகழேந் திப் புலவர், சந்திரன் சுவர்க்கியையும், கூத்தர் தம்மை ஆதரித்த மூன்று சோழ மன்னர்களையும் புகழ்ந்திருத்தல் காண்க. கனகராசி பொற்குவியல் 'சவி - ஒளி ; 'சவியுறத் தெளிந்து' (ஆரணிய. 220). தூசு - ஆடை. தன்னை வேண்டி வந்தோர்க்குப் பொன்னும் மணியும் வாரி வழங்கு வோன் என்று மன்னனைச் சிறப்பித்தார். (ஒப்பு) 'பாகையாட் கொண் டான் செங்கைப் பரிசுபெற் றவர்நெஞ் சென்ன, ஓகையாற் செருக்கி மீண்டார் உதிட்டிரன் சேனையுள்ளார்' (வி. பா. 16 ஆம், போர். 90). இழை - ஆபரணம் - இழைத்துச் செய்யப்படுவது என்று காரணக் குறியாக வந்த பெயர். இச்சென்னி என்ற பெயர் சோழ மன்னர்களில் சிலருக்கு வழங்கிய வங்கிசப் பெயர். சங்ககாலம் தொட்டு வழங்குவது (புறநா. 203, 266) : ஆகவே இந்தச் சோழமன்னனை இது குறிக்கும் என்று நிச்சயிக்க முடியாமல் கம்பநாடர் காலத்தைப் பலர் பலவிதமாகக் கூறுவர். விக்கிரம சோழன் காலம் என்றும் இரண்டாவது குலோத் துங்கன் காலம் என்றும் மூன்ருவது குலோத்துங்கன் ஆட்சிக்காலம் என்றும் கூறுவர். மற்றும் சென்னி நாட்டெரியல் வீரன் தியாக மாவி னோதன் என்ற தொடரும் விவாதத்துக் குட்பட்டதே. தியாக விநோதன் என்ற பெயர் இரண்டு மூன்று சோழ மன்னர்கட்கும் வழங்கியிருந்தது,

பி - ம். 1. சென்னிபே ரமலன், சென்னியா மரசன், சென்னியா நித்தன், சென்னியோ ரமலன், சென்னியோர் புகழும் பொற்புடை, சென்னியோ னமலன், சென்னியோன் தொல்புகழ், சென் னியோ ரமலன் தொல்புகழ், சென்னியோன் பொருவில் புகழ்.

2. கவிகட மனமென.

3. கவியுடைத் துகிலும், தவிசுடைத் தூசும், சாந்தும் சுண்ணமும்.

4. அவிர்மணிக் குப்பையும், அவிர் குழை. (35)

829. பயில்குரற் கிண்கிணிப் பதத்த பாவையர்
இயல்புடை மைந்தரென் றியக்கி லாமையால்
துயிலவும் நோக்கவும் துணைய தன்றியே
உயிரிலா வோவிய மெனினும் மொப்பது.

(மற்றும் அப்பெருநகர்) - பயில் குரல் கிண்கிணி பதத்த பாவை யர் - ஒலிக்கின்ற ஓசையையுடைய சதங்கை யணிந்த கால்களோடு கூடிய மகளிரும், இயல்புடைமைந்தர் - நற்பண்புகள் வாய்ந்த ஆட வரும், என்று -(என்ற இவர்களுடைய) இயக்கு-நடமாட்டம், இலாமை யால் - இல்லாமையினாலே, துயிலவும் நோக்கவும் துணையது அன்றியே- உறங்கவும் காணவும் வன்மையுடைய தாகாமலும், உயிர் இலா - உயி ரின்றியும் இருக்கின்ற, ஓவியம் எனினும்-சித்திரமே என்று பகர்வதற்கு, ஒப்பது - ஏற்புடையதாயுள்ளது.

ஓவியத் துறை கைபோய ஒருவனால் வரையப்பட்ட சித்திரம் எவ் வகையான குறைவுமின்றியிருப்பினும் உயிரின்மையாகிய ஒரு குறை வுடையதென்ப. அது போன்று இந்நகரம் எந்தவிதமான குறைபாடும் இனறியிருப்பினும், தன் காட்சிகளைக்கண்டு துய்க்கும் ஆடவர் பெண்டிர் களைப் பெற்றிலாமையாகிய ஒரு குறையை யுடையது. இயக்கு - நட மாட்டம் : தொழிற் பெயர். துணை - வன்மை. 'தேரும் துணையை யுடையவர்' (நாலடி. 127).

பி - ம். 1. பரந்த பாவையர், பாதப் பாவையர், பாடற் பாவையர், கிண்கிணிப் பாட்டுப் பாவையர்.

2. அயினுடை மைந்த ரென்றவர், இயல்புடை மைந்த ரென்றிவர், மைந்த ரென்றவர்.

3. துயில்வுறு காட்டமுங் கடிப்ப தொன்றிலா, துயில்வுறு நோக்க முங் துணைப்ப தன்றியும், துயிலிணை நோக்கவுங் துணைய தன்றியும்.

4. உயிரினல், மெனினும் ஒப்பது, மென்ன ஒப்பது. (36)

**830** அமிழ்துற முயினியை யடுத்த வுண்டியும்
தமிழ்நிகர் நறவமுந் தனித்தண் டேறலும்
இமிழ்கனிப் பிறக்கமும் பிறவு மின்னன
கமழ்வுறத் தோன்றிய கணக்கில் கொட்பது.

(பின்னும் அத்திரு நகர்) - அமிழ்து உறழ் அயினியை அடுத்த உண்டியும் - தேவாமுதத்தை நிகர்த்த சோறு முதலான உணவுப் பொருள்களும், தமிழ் நிகர் நறவமும் - தமிழ்மொழி போன்ற இனிய தேனும், தனி தண்தேறலும் - அம்மொழியே போன்ற குளிர்ந்த மதுவும், இமிழ் கனி பிறக்கமும் - இனிய பழங்களின் திரட்சியும், இன்னன பிறவும் - இவை போன்ற பிற உணவுப் பொருள்களும், கமழ்வு உற தோன்றிய-நறுமணம் வீசுமாறு நிறைந்துள்ள, கணக்கு இல் கொட்பது- எல்லை அற்ற பெருமை வாய்ந்தது.

அயினி - சோறு; புறநா. 77, 8; மலைபடு. 467. நைடத: சுயம்வர 105. தமிழ் நிகர் நறவமும் என்ற தொடர்ச்சி கொண்டு ஆசிரியரின் மொழிப்பற்றினை உணரலாம் (ஒப்பு) தமிழின் சிறப்பினை என்றுமுள தென்றமிழி யியம்பிசை கொண்டான் (ஆரணிய 164) 'தழற்புரை சுடர்க் கடவுள் தந்ததமிழ் தந்தான் (ஆரணிய. 158)' தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன ' (பால. தாடகை 38); 'எழுவு தண்டமிழ் யாழினு மினிய சொற் கிளியே (அயோத். சித்திரகூடப்.28). 'தமிழ்த்தலைவனை நிகர்த்துத் தயங்குதேனை ' (அயோத். ஆற்று. 44); ' தண்டமிழ்ப் பசுந்தென்றல் (சுந்தர. 305) சீவக. 2026, 2063. பதிற். 63, 9., அமிழ்தினை முனிந்து சார லருவிதாழ் மலைய மீன்ற, தமிழினுமினிய தீஞ்சொற்றைய லாய்' நைடத. சுயம்வர.140) மொழிப்பற்றுப் போன்றே நாட்டுப்பற்றும் இவ்வாசிரியர்க்குண்டென்பது ' பரப்பிய பொன்னியன்ன ஆவணம் ' (பால. மிதிலைக். 11)', காவிரி நாடன்ன கழனிநாடொரீஇ' (அயோத். கங்கைகாண். 1). ' பொன்னியைப் பொருவுங் கங்கை' (பால. அகலிகை. 32) என்பன கொண்டு காண்க. பிறக்கம் - திரட்சி (சுந்தர. 664. கொட்பு - பெருமை 'அமிழ்துலை' என்ற பாடத்திற்கு 'அமுதமும் தோற்று அழியும்படியான ' எனக்கொள்க.

பி - ம். 1. *அமிழ்தலை, அமிழ்தலை யாயின, தலை யாயின.*
2. *தெளிதண், தெளித்தண், தயங்கு தேனுடை, தருதண் டேறல்கள்.*
3. *இமிழ்மணிப் பிறக்கமும் பிறவு மின்னன, உமிழ்கனித் தொகுதியும் பிறவு மோங்கியே.*
4. *கமழ்வுறுத் தோங்கியே, தேங்கியே, கமழ்வுறத் தவன்றிய, தன்னிய.*

*2, 3 அடிகள், ' தமிழ்நிகர் நறவமுந் தயங்குந தேனுடை உமிழ்கனிப் புறவமுந் றெளிரு மின்னென' என்று சில பிரதிகளில் காணப்படுகின்றன,*

வேறு

831. கன்னிநெடு மாநகர மன்னதெதிர் கண்டார்
இந்நகர மாமிகலி ராவணன தூரென்
றுன்னியுரை யாடினரு வந்தனர் வியந்தார்
பொன்னினெடு வாயிலத னூடினிது புக்கார்

(மாருதி முதலிய வானர வீரர்கள்), அன்னது கன்னி நெடுமா நகரம் - அத்தன்மை வாய்ந்த என்றும் அழிவில்லாத மிகவும் பெருமை சான்ற பெரிய நகரத்தை, எதிர் கண்டார் - கண்ணெதிரே கண்டவர்களாய், இநகர் இகல் இராவணனது ஊர் ஆம் என்று உன்னி - இந்தப் பட்டணம் பகைமையையுடைய இராவணனது நகரம் ஆகும் என மனத்தில் நினைந்து, உரை ஆடினர் - (தமக்குள்) பேசிக்கொண்டு, உவந்தனர் வியந்தார் - மகிழ்வும் ஆச்சரியமும் ஒருங்கே அடைந்தவர்களாய், பொன்னின் நெடுவாயில் அதன் ஊடு இனிது புக்கார் - பொன்மயமான நீண்டு அகன்ற அப்பட்டணத்தின் வாயிலில் இனிதாகப் புகுந்து சென்றார்கள்.

கன்னி - அழிவின்மை. 'கன்னி யருந்ததி' (பால. கடிமணப், 95).

பி - ம். 2. *இந்நகர மீதி லிராவண,*

3. *வுவந்துளம் வியந்தார்.*

4. *பொன்னின் மதில் வாயில, வாசலத னூடினிது, கனிபுக்கார்.*

வீரர்கள் அங்குத் தேடுதல்

832. புக்கநக ரத்தினிது நாடினர் புகுந்தார்
மக்கள்கடை தேவர்தலை வானுலகின் வையத்
தொக்கவுறை வோருருவ மோவியம லான்மற்
றெக்குறியி னுள்ளவுமெ திர்ந்திலர் திரிந்தார்.

(அந்த வீரர்கள்) புக்க நகரத்து (தாங்கள் நுழைந்து சென்ற அந்தப் பட்டணத்தில், இனிது நாடினர் புகுந்தார் - மகிழ்வுடன் தேடத் தொடங்கி, தேவர் தலை மக்கள் கடை - தேவர்கள் முதலாக மக்கள் ஈருக. வான் உலகின் வையத்து ஒக்க உறைவோர் உருவம் - வானுலகத்தும், பூவுலகத்தும், ஒரு சேரப் பொருந்தி வாழ்கின்றவர்களின் உருவங்கள், ஓவியம் அலால் - சித்திர வடிவங்களாக அங்கு உள்ளன அல்லாமல், மற்று குறியின் உள்ளவும் - மற்றும் வேறு உண்மையுான வடிவமுடைய எந்தப் பொருள்களையும் எதிர்ந்திலர் - சந்திக்

கப் பெருதவர்களாய், திரிந்தார் - அப்பெருநகர் முழுவதும் அலைந் தார்கள்.

மக்கள் தேவர்களைக் குறித்ததனுல் உபலக்கணத்தால் நரகர் முதலா ஞேரையும் கொள்க. மக்கள் கடைதேவர் தலை என்று கூறியதற்கேற்ப வையத்து வானுலகு என வையாது மாற்றியமைத்தது எதிர் நிரனிறைப் பொருள் கோள்.

பி - ம். 1. *நகரத்துநனி காடினர், நகரத்தினிடை, காடுதல் புரிந்தார், காடி னர் புரிந்தார்.*

2. *வானுலகின் வாழ்வர், வாழ்வார், வாழ்வோர்; வைத்த.*

3. *உருவ வோவிய மெலாமுற்று.*

4. *மயர்ந்தனர் தெரிந்தார், மயர்ந்திலர்; தெளிந்தார்.* (39)

அந்நகரின் தன்மை

833. வாவியுள பொய்கையுள வாசமலர் நாறும்
காவுமுள காவிவிழி யார்மொழிக ளென்னக்
கூவுமிள மென்குயில்கள் பூவைகிளி கோலத்
தூவிமட வன்னமுள தோகைசுவ டில்லை.

(அந்த அழகிய புரியில்) வாவிஉள - நடைவாவிகள் உள்ளன; பொய்கை உள - மானிடர் ஆக்காத குளங்கள் உள்ளன; வாச மலர் நாறும் காவும் உள - நறுமணம் கமழும் மலர்கள் காணப்படுகின்ற பூஞ்சோலைகளும் உள்ளன; காவி விழியார் மொழிகள் என்ன கூவும் - கருங்குவளை மலர்போன்ற கண்களையுடைய மாதர்களின் இனிய சொற்கள் போலக் கூவுகின்ற, இளமெல் குயில்களும் - இளமையும் மென்மையும் வாய்ந்த குயில்களும், பூவை - நாகணவாய்ப் புட்களும், கிளி - கிளிகளும், கோலம் தூவி மடம் அன்னம் - அழகிய சிறகுகளை யுடைய இளமையான அன்னப் பறவைகளும், உள-உள்ளன; ஆனுல் தோகை சுவடு இல்லை ஆயினும் மயில் போன்ற பிராட்டியைப் பற்றிய எந்தக் குறிப்பும் அந் நகரில் இல்லை.

இனி, தூவிமடவன்னமுள தோகையர்களில்லை என்ற பாடத் துக்குப் பெண்டிர்க்கின்பம் விளைக்கும் பல சாதனங்களும் அங்கிருந் தன; ஆனுல் அவற்றைக் கண்டு துய்க்கும் மகளிர்கள் அங்கில்லை என்க.

பொய்கை சீவக. 337 காவி-நீல மலர். தூவி-மயிலிறகு; சுந்தர. 340. அனிச்சமும் அன்னத்தின் தூவியும் (குறள். 1120). தோகை, உவமவாகு பெயராய், மயில் போன்ற சாயல் கொண்ட பிராட்டியைக் குறித்து நின்றது.

பி - ம். 1. வாசமணம்.

2. காவுமுள யாறுமுள காவிவிழி யாரில், யாவுமுள காவிவிழி யாரில்,

3. கூவுமின.

4. வன்னமிவை யுள்ளசவ டில்லை. தோகையர்க ளில்லை; (40)

வானரர்களின் திகைப்பு

834. ஆயநக ரத்தினியல் புள்ளுற வறிந்தார்
மாயைகொலெ னக்கருதி மற்றுநினை வுற்றார்
தீயபில னுட்பிறவி சென்றவிது வொன்றோ
தூயது துறக்கமென நெஞ்சுதுணி வுற்றார்.

(வீரர்கள்), - ஆய நகரத்தின் இயல்பு உள் உற அறிந்தார் - அந்தப்பட்டணத்தினுடைய தன்மையை உள்ளபடி உட்புறத்தே சென்று தெரிந்து கொண்டவர்களாய், மாயை கொல் என கருதி - மாயைத் தோற்றமோ என்று முதலில் நினைந்து, (பின்பு) 'தீய பிலனுள் பிறவி சென்ற (என) - (நமக்குக்) கொடிய பாதலத்துட் பிறவி வந்தது என்று' மற்று நினைவுற்றார் - பிறிதொரு எண்ணம் உடையராய்க் (பின்னும்) 'இது ஒன்றோ - இஃது ஓர் எண்ணமோ தூயது துறக்கம்- இது பரிசுத்தம் வாய்ந்த சுவர்க்க லோகமே;' என - என்று, நெஞ்சு துணிவுற்றார் - உள்ளத்தில் உறுதி கொண்டார்கள்.

பொன்மயமான தருக்களும் ஓவியங்களும் பிறவும் நிறைந்தும், அவற்றைக் கண்டு துய்க்கும் ஆடவர் பெண்டிர் காணாமையின் மாயையோவென மயங்கிப் பின்னர், பாதலமாயிருத்தல் கூடுமோ என்று கருதி முடிவாக அது பொன்னுலகே யென்று துணிந்தனர். பெரும்பான்மையும் துறவிகளாலேயே அடையப் பெறுவதாகலின் துறக்கம் என்பது உபசாரவழக்கு.

பி - ம். 1. வறிந்தோர்.

2. நினைகின்றார்.

3. தீயவில் வுடற்பிறவி. தீயமு னுடற் பிறவி, சென்ற கடை யெய்தும், சென்றநிது, சென்றதென நின்றார், சென்றவது வன்றோ, சேயபில னுட்பிறவி சென்றவிது, சென்றவிஃ தொன்றோ.

4. தூயன துறக்கம். (41)

835. இறந்தில மிதற்குரிய தெண்ணியில மேதும்
மறந்தில மயிர்ப்பினொ டிமைப்புள மயக்கம்
பிறந்தவர் செயற்குரிய செய்தல்பிழை யின்றால்
திறந்தெரிவ தென்னென விசைத்தனர் திகைத்தார்.

'(நாம் விண்ணுலகை அடைந்து விட்டோம் எனின்), இறந்திலம்-நாம் சாகவில்லையே; இதற்கு உரியது எண்ணி இலம்-இந்த விண்ணுலகை அடைதற்கு உரிய வழிகளையும் கருதினோமில்லையே; ஏதும் மறந்திலம்-முன் நிகழ்ந்த எச் செய்தியையும் மறக்கவுமில்லையே; அயிர்ப்பினொடு இமைப்பு உள - ஐயமொடு இமை கொட்டுதலும் நம்பால் உள்ளன; இன்று மயக்கம் பிறந்தவர் செயற்கு உரிய செய்தல் பிழை - இப்போது மயக்கம் தோன்றப் பெற்றவர்கள் செய்தற்குரியனவற்றைச் செய்தல் தவறும், எனின் திறம் தெரிவது என் - என்றால் நமக்கு நேர்ந்துள்ள நிலையைக் குறித்து எண்ணித் தெளிவது எங்ஙனம்?' 'என - என்று, இசைத்தனர் - (வானர வீரர்கள்) தமக்குள் உரையாடிக் கொண்டவர்களாய், திகைத்தார் - மனம் மயங்கி நின்றார்கள். ஆல் - அசை.

சுவர்க்கம் என மாறிக் கருதினரேனும், அங்கு வானவர்க்குரிய செயல்கள் இன்றி வானரர்க்குரிய செயல்களே காணப்படுதலின் மயங்கினர் என்க. இசைத்தனர்; முற்றெச்சம்,

பி - ம். 1. *தெண்ணியில மெய்தி.*
2. *மறந்தில மறப்பினொ டிமைப்பிலர் துறக்கம், மயக்கம்.*
3. *பிழையென்றார், பிழையன்றோ, பெற்றியிலை யென்னே, பீடுமில தென்றே, பிறந்திலம் வியப்பினொ டிமைப்பில துறக்கம்.*
4. *திறந்திலமி தென்னென விசைத்தனர் திகைத்தார்.* (42)

சாம்பவன் கலக்கம்

836. சாம்பனவ னொன்றுரைசெய் வானெழு சலத்தால்
காம்பனைய தோளியை யொளித்தபடு கள்வன்
நாம்புக வமைத்தபொறி நன்றுமுடி வின்றால்
ஏம்பலினி மேலைவிதி யான்முடியு மென்றான்.

(அப்பொழுது வீரர்களைப் பார்த்து) சாம்பன் அவன் - ஜாம்பவான் என்ற கரடிகட்கரசன், ஒன்று உரை செய்வான் - ஒன்று சொல்லத் தொடங்கினான்; 'எழு சலத்தால் - (தன்னிடம் இயல்பாகத்) தோன்றியுள்ள வஞ்சனையினால், காம்பு அனைய தோளியை ஒளித்த - இளமூங்கிலை யொத்த தோள்களையுடைய பிராட்டியை எடுத்துச் சென்று

மறைத்து வைத்த, படு கள்வன் - பெருந் திருடஞன இராவணன், நாம் புக அமைத்த - (பிராட்டியைத் தேடி வருகின்ற) நாம் எல்லோரும் சிக்கித் தவிக்கும்படி செய்துவைத்த, பொறி - யந்திரம், நன்று - நன்ரு யிருக்கிறது! முடிவு இன்று - (இதற்கு) ஒரு முடிவில்லே; ஏம்பல் - நமது மகிழ்ச்சியும் இனி, மேலே, 'விதியால் முடியும்-இனி முன் பிறப்பிற் செய்த தீவினேயால் நீங்கிவிடும்', என்ருன் - என்று மனம் நொந்து பகர்ந்தான். ஆல் - அசை.

இராவணன் வஞ்சனேயா னியற்றிய ஓர் படுகுழியில் வீழ்ந்து சிக்கினேம்; இனி உய்வில்லே, வாழ்நாள் இறுதி விதிதர எய்தியது என்ருன் சாம்பன். சலம் - வஞ்சனே. 'சலத்தாற் சலஞ்செய்தே மார்த்தல்' (குறள். 660). காம்பு - மூங்கில். படு கள்வன் - மிகவும் திறலும் கொடுமையும் வாய்ந்த திருடன். பொறி - இங்கே அகப் படுத்தும் சூழ்ச்சி. பொறி நன்று பிற குறிப்பு. எழு சலத்தால் உரை செய்வான் எனக் கூட்டிப் பொருள் கொள்ளலுமாம்.

பி - ம். 1. *தவத்தால்.*

2. *யெடுத்தபடு கள்யன், கள்ளன்.*

3. *நாம்புகுத வைத்தபிலம், வைத்தபடி யாகுமிதி ஞேடும், வைத்த பொறி யின்றுமுடி வன்ருல்.*

4. *எம்பவில.* (43)

அநுமன் சாம்பவனேத் தேற்றுதல்

837. இன்றுபில னீதிடையி னேறரி தெனிற்பார்
தின்றுசக ரர்க்கதிக மாகிநனி சேறும்
அன்றதெனின் வஞ்சனே யரக்கரை யடங்கக்
கொன்றெழுது மஞ்சலென மாருதி கொதித்தான்.

(இவ்வாறு கூறிய அந்த சாம்பனே நோக்கி) மாருதி - அநுமன், 'இன்று - இப்பொழுது, இடையின் - நடுவில் உள்ள, பிலன் ஈது - இந்தப் பிலத்தினின்று. ஏறு அரிது எனின் - ஏறி அப்பாற் செல்லுதல் முடியா தென்ருல், சகரர்க்கு நனி அதிகம் ஆகி பார் தின்று சேறும் - சகர புத்திரரைப் பார்க்கிலும் மிக்க வல்லமை யுடையவர் களாகி நிலத்தை அகழ்ந்து கொண்டு (நாம் மேற்புறமாக ஏறி) அப் பால் இனிதாகச் செல்வோம்; அது அன்று எனின் - அவ்வாறு இல்லே யெனில், வஞ்சனே அரக்கரை அடங்க கொன்று எழுதும் - நம்மை வஞ்சித்த இராக்கதர்களே எல்லாம் கொன்று மேலெழுந்து

செல்வோம், அஞ்சல் - சற்றும் பயப்பட வேண்டாம்' என - என்று, கொதித்தான் - மனம் வெந்து கூறினன்.

பார் அகழ்ந்து என்னுது பார் தின்று என்ருன் 'விதப்புக் கிளவி வேண்டியது விளக்கும்' என்றபடி இடத்திற்கேற்ப, பொருள் கொள்ளப் பட்டது. பார் நனி தின்று எனக் கூட்டினுமாம். சகரர் அகழ்ந்த வரலாறு பாலகாண்டத்திற் காணப்படும். சகரர் தோண்டலாற் சாகரம் என்று கடலுக்குப் பெயர் வந்தது என்க. தத்திநாந்தப் பதம். மனக் கொதிப்பு மிக்க இடத்துச் சொற்கள் சிலவேவெளிவரும், எனவே கொதித்துக் கூறினன் என்னுது கொதித்தான்என்ருர்.

பி - ம். 1. *யீதினிடை யேறலரி தென்பார்; இன்றுபில வாயில்வழி.*
2. *சக ராதியர்க ளாகிநனி செய்தும்.*
3. *அஞ்சின வரக்கரை யடங்க, அன்றுதனி வஞ்சனே யரக்கருயிர் மாளக்.*
4. *கொன்றெழுவ னஞ்சலென.* (44)

வீரர்கள் சுயம்பிரபையைக் காணுதல்

838. மற்றவரு மற்றது மனக்கொள வலித்தார்
உற்றனர் புரத்திடையவ் வொண்சுடரி னுள்ளோர்
நற்றவ மனைத்துமுரு நண்ணியொளி பெற்ற
கற்றைவிரி பொற்சடையி னளைபெதிர் கண்டார்.

மற்றவரும் - (அங்கதன் முதலிய) ஏனைய வாநர வீரர்களும், அது மனம் கொள - (அநுமன் கூறிய) அச்சொல் (தமது) உள்ளத்தில் இடங் கொள்ளவே, வலித்தார் - அங்ஙனமே செய்ய உறுதிகொண்ட வர்களாய், புரத்து இடை உற்றனர் - அப் பட்டணத்திடையே சென்று, அ ஒண் சுடரினுள் - மிக்க ஒளியையுடைய (அந்நகரின்) நடுவில், நல் தவம் அனைத்தும் ஓர் உரு நண்ணி - சிறந்த தவம் அடங்கலும் ஓர் பெண் உருவம் உற்ருற்போன்று, ஒளி பெற்ற - ஒளி மிகுந்த, கற்றை விரி பொன் சடையினளை - தொகுதியாகப் பரந்த அழகிய சடையை உடைய சுயம்பிரபையை, எதிர் கண்டார் - நேரிற் பார்த்தார்கள். மற்று - அசை. கற்றை - தொகுதி.

பி - ம். 1. *மற்றையரு, மற்றது செயற்குரிய தென்ருர், இவையந்தார்.*
2. *இற்றது செயற்குரிய தென்றுட னெழுந்தார், இற்றிது; புரத்தி னிடை யொண்சுடரின் உள்ளோர், உள்ளார்.*
3. *பெற்ருேர், பெற்றே.*

2, 3, அடிகள் சில பிரதிகளில் மாறிக் காணப்படுகின்றன. (45)

இது முதல் நான்கு கவிகள் சுயம்பிரபையின் இயல்பைக் கூறுவன

839. மருங்கலச வற்கலை வரிந்துவரி வாளம்
பொருங்கலச மொக்குமுலை மாசுபுடை பூசிப்
பெருங்கலை மதித்திரு முகத்தள்பிறழ் செங்கேழ்
கருங்கயல் களிற்றிகழ்கண் மூக்குநுதி காண.

பெரு கலை மதி திரு முகத்தள் - பெருமை கொண்ட பதினாறு கலைகளும் நிறைந்த முழுமதியை யொத்த அழகிய முகத்தையுடைய வளான சுயம்பிரபை, மருங்கு அலச வற்கலை வரிந்து - இடை வருந்துமாறு மரவுரியைப் புனைந்தும், வரிவாளம் பொரும் கலசம் ஒக்கும் முலை புடை மாசு பூசி - இரேகைகளையுடைய சக்கரவாகப் பறவையைப் போன்றனவும், பொற் கலசங்களை நிகர்ப்பனவுமான கொங்கைகளின் மேல் அழுக்குப் படியப் பெற்றும், பிறழ் செம் கேழ் கரு கயல்களின் திகழ்-புரள்கின்றனவாய்ச் செந்நிறத்தை யுடையனவும், கருமையான கெண்டை மீன்களைப்போல விளங்குவனவுமான (தனது) விழிகள் இரண்டும், மூக்கின் நுனியை நோக்கிக் கொண்டிருக்கவும்,

குளகச் செய்யுள்; இதன்கண் உள்ள வரிந்து, பூசி, காண என்ற வினையெச்சங்கள் 50-ஆம் கவியிலுள்ள இருந்தனள் என்ற வினைமுடிபு கொள்ளும்.

மருங்கு - இடை. 'மருங்கிலா நங்கையும் வசையி லையனும்' (பால. மிதிலைக். 38); இது மருங்குல் எனவும் வழங்கும். அலச. 'திருவுடம்பலச நோற்கின்றான்; (ஆரணிய 237): வற்கலா என்ற வடசொல் வற்கலையென வந்தது. மரவுரி என்பது பொருள், வற்கலையி னுடையானை, (அயோத். 29). மற்றும் அயோத். வனம்புகு. 38. வரிதல் - இறுக வுடுத்தல். மூக்கின் நுதி காண - இது யோக முறையில் கண்களிரண்டும் மூக்கின் நுனியைப் பார்க்குமாறு வீற்றிருத்தல். மூக்கின நுதி என்பது நாச்யாக்ரம் என்ற வடசொல்லின் நேர் மொழிபெயர்ப்பு. வாளம் - சக்கரவாளம் என்னும் புள்; உருண்டை வடிவினால் தனங்கட் குவமை-21.

பி - ம். 1. மருக்கலைய, வரிந்தமணி மானப், மணிமாலமைப்.
2. புடைபூசப்.
3. மதித்தகு, முகத்தபிறழ்.
4. கருங்கயல்க ளிற் பிறழ்கண், கருங்கயல் களிப்பறவு மூக்கினுநி கண்ணள், கருங்கயல் களிப்பற விளங்கிமிர் கண்ணள், மிளிர்ந்த திமிர். (46)

840. தேரனைய வல்குல்செறி திண்கதலி செப்பும்
ஊருவினொ டொடுங்குற வொடுக்கியுற வொல்கும்
நேரிடை சலிப்பற நிறுத்திநிமிர் கொங்கைப்
பாரமு ளொடுக்குற வுயிர்ப்பிடை பரிப்ப.

தேர் அனைய அல்குல் - தேர்த்தட்டை யொத்த அல்குலை, செறி திண் கதலி செப்பும் ஊருவினொடு - ஒன்றோடொன்று நெருங்கிய வாழை மரத்தைப் போன்ற தொடைகளோடு, ஒடுங்குற ஒடுக்கி - ஒன்றாகப் பொருந்துமாறு அடக்கி வைத்தும், உயிர்ப்பு இடைபரிப்ப - மூச்சைக் கட்டுவதனாலே, உற ஒல்கும் நேர் இடைசலிப்பு அற நிறுத்தி, மிகவும் அசைகின்ற நுட்பமான இடையைச் சிறிதும் அசையாத வண்ணம் நிறுத்தி, நிமிர் கொங்கை பாரம் உள் ஒடுக்குற - சாயாது நிமிர்ந்த தன பாரங்கள் உள்ளே அடங்கி நிற்பவும்,

இதுவும் குளகம்; முன் பாட்டினைப் போன்றே வினைமுடிபு கொள்ளும்.

தேர்த்தட்டு மகளிர் அல்குற்கு உவமையாக ஆசிரியரால் பலஇடங்களிற் கூறப்பெற்றுள்ளது. கதலி - வாழை. ஊரு - தொடை. கதலியும் ஊருவும் வட சொற்கள். இங்குக் கூறப்படுவது யோக முறையில் வளி நிலை என்பர். ஏனைய முறைகள் இயமம், நியமம், ஆசனம்; பிரத்தியாகாரம். தாரணை, தியானம், சமாதி. இரேசகம், பூரகம், கும்பகம் - என்பதில் இங்குக் குறிக்கப்பெற்றது கும்பகம் - என்க. 'உயிர்ப்பிடை பரிப்ப' என்றது இக்கும்பகம். சலிப்பு - அசைவு.

பி - ம். 2. *யொடுக்கி, ஊருவினி லொப்புற, யறவொல்கி.*

3. *சலிப்புற, தளப்பற, நெருக்கி நிமிர்.*

4. *பாரமுள் கடுக்குற, பாரமு ளொடுக்கிய, ஒடுக்கிய வுயிர்ப்பிடை பதைப்ப, பரப்ப.*

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை. (47)

841. தாமரை மலர்க்குவமை சால்புறு தளிர்க்கைப்
பூமருவு பொற்செறி குறங்கொடு பொருந்தக்
காமமுத லுற்றபகை காறளர வாசை
நாமமடி யப்புலனு நல்லறிவு புல்க.

தாமரை மலர்க்கு உவமை - தாமரை மலர்க்கு உவமையாகின்ற, சால்பு உறு - சிறப்பு வாய்ந்த, தளிர்கை - தளிர் ஒத்த (தனது மிருது

வான) கரங்கள், பூ மருவு பொன் செறி குறங்கொடு பொருந்த - அழகு வாய்ந்த பொன்னிறமாக ஒன்றுடனென்று நெருங்கிய தொடைகளினிடத்திற் பொருந்தவும், காமம் முதல் உற்ற பகை கால்தளர - காமம் முதலாகப் பொருந்திய பகைகள் அழிந்தொழி யவும், ஆசை நாமம் மடிய - ஆசை என்னும் பெயரே அழியப் பெறவும், புலனும் நல் அறிவு புல்க - ஐம் பொறிகளும் (தவறான வழியிற் செல்லாது) நல்லுணர்வைப் பெறவும் - (இருந்தனள்).

சுயம் பிரபை தன் இரு கரங்களையும் தொடையின் மீதிருத்தி. காமம், குரோதம், உலோபம், மோகம். மதம், மாற்சரியம் என்ற உட் பகைகளை யொடுக்கி, அவா முதலிய பற்றுக்களை அகற்றி யோகத்திற் மனத்தைச் செலுத்தி யிருந்தனள். உடற்குள்ளேயேயிருந்து உயிர் நல்வழியிற் புகாது தடை செய்தலால் மேலே கூறிய ஆறும் உற்றபகை யெனப்பட்டன, 'காமமுத லுற்றபகை கால்தளர வாசை நாமறிய' என்றதனால் 'பொய் கொலைகளவே காமம் பொருணசை யிவ்வகை யைந்து மடக்கியதியமம்' என்று சொல்லப்பட்ட இயமமும் 'புலனு நல்லறிவு புல்க ' என்றதனால்' 'பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமல், ஒரு வழிப்படுப்பது தொகை நிலைப்புறனே' என்று சொல்லப் பெற்றுள்ள பிரத்தியாகாரமும் கூறப்பட்டவாறுணர்க. 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின் நாமங் கெடக்கெடும் நோய்' (குறள். 360)) (ஒப்பு) வாயு நிற்ப மனநின்று மனந்தா னிற்பப் பொறிநின்று. பாய பொறிக னிற்ப விடர் படுபுன் புலன்கள் நின்றனவால், ஆயபுலன்க னின்ற மையா லகிலங் தோன்று துள்ளத்தே, தூய பரமா னந்த பரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்.' (பிரபு. விமலை. 26):

பி - ம். 1. *சால்வுறு தவிர்க்கை.*
2. *குறங்கிடை பொருந்தக்.*
3. *காறனர வேதன், காறனர வோதி,*
4. *நாமமழி யப்புலனி னல்லறிவு,* (48)

842. நெறிந்துநிமிர் கற்றைநிறை யோதிநெடு நீலம்
செறிந்தசடை யுற்றது தலத்தினெறி செல்லப்
பறிந்துவினை பற்றற மனப்பெரிய பாசம்
பிறிந்துபெய ரக்கருணை கண்வழி பிறங்க.

நெறிந்து -நெறிப்புக்கொண்டு, நிமிர் - நிமிர்ந்து, கற்றை-தொகுதி யாக. நிறை - நிறைந்த, நெடு நீலம் ஓதி - நீண்ட கரிய (தனது) கூந்தலானது. செறிந்த சடை உற்றது - அடர்ந்த சடையாகத் திரண்

டமைந்ததாகி, தலத்தின் நெறி செல்ல - பூமியினிடையே புரளவும், வினை பறிந்து பற்று அற - நல்வினை தீவினைகள் (தன்னை விடுத்து) அடியோடு நீங்கவும், மனம் பெரிய பாசம் பிறிந்து பெயர - (தன்) மனத்தில் உண்டாகக் கூடிய பெரிய பாசப்பற்று அகன்று ஒழியவும், கருணை கண்வழி பிறங்க - அருளானது விழிகளில் தோற்றி விளங்கவும்;

செயவெனெச்சங்கள் அடுத்த செய்யுள் முதற் கண் வரும் இருந்தனள் என்பதைக் கொண்டு முடியும். ஞான யோகத்தின் முன் கன்ம வினைகள் தீ முன்னர்ப் பஞ்சு போலாம் என்பதுபற்றி, 'வினை பறிந்து பற்றற' எனப்பட்டது; 'ஞானாக்னி தக்த கர்மாணம்' (கீதை 4. 19). ஓதி - பெண் மயிர்; 'மஞ்சொக்கு மளகவோதி; (ஆரணிய 623). பாசம் - கயிறு; இங்கே உவமை யாகுபெயராய் மனத்தைப் பிணிக்கும் பாசமாயிற்று. பதி பசு பாசம் என்பன சித்தாந்தத்தில் முப்பொருளாக அமைந்துள்ளமை காண்க. பூமியிற் கிடந்து புரள்வதெனச் சடைக் கற்றையின் நீளத்தைக் குறித்தார், பிறிந்து - அடியோடும் பெயர்க்கப் பட்டு; பிரிந்து என்ற சொல் எதுகை நோக்கிப் பிறிந்தென்றாயது. அருளைக் கண்ணோட்டம் என்பராதலின், கருணை கண் வழி பிறங்க, என்றார்.

பி - ம். 1. சிறையோதி, கற்றைநிறை சோதி, கற்றைகிமி ரோதி, கற்றைபடு.
2. செறிந்த சடை, சடையுற்றன, செறிந்தசடை யுற்றன, தடையுற்றன; தவத்தினெறி.
3. மனம் பெரிய பாவம்.
4. பிறிந்துபறி யக்கருணை. (49)

வீரர்கள் பிராட்டியோவென ஐயுறல்

843. இருந்தன ளிருந்தவளை யெய்தின ரிறைஞ்சா
அருந்ததி யெனத்தகைய சீதையவ ளாகப்
பரிந்தனர் பதைத்தனர் பணித்தகுறி பண்பில்
தெரிந்துணர்தி மற்றிவள்கொ றேவியென லோடும்.

இருந்தனள் - இருந்தாள்; இருந்தவளை - அவ்வாறு வீற்றிருந்த சுயம் பிரபையை, (பிற வானரவீரர்கள்), எய்தினர்-அணுகி, இறைஞ்சா-வணங்கி, அருந்ததி என தகைய சீதை அவள் ஆக பரிந்தனர் - அருந்ததி யென்று மொழியத் தக்க கற்பு வாய்ந்த பிராட்டியாகவே மனங் கொண்டு, (அவள் பால்) அன்பு பூண்டவர்களாய், பதைத்தனர் - பரபரப்புடன் (அநுமானைப் பார்த்து), 'இவள். தேவி கொல் - இவள் சீதாப்பிராட்டிதானோ? பணித்த குறி பண்பில் தெரிந்து உணர்தி-(இராம

பிரான்) கூறியுள்ள அங்க அடையாளங்களைக் கொண்டு முறை யாக ஆராய்ந்து தெரிந்து கூறுவாயாக', எனலோடும் - என்று கூறிய அளவில் ; மாருதி உரைத்தான் என அடுத்த கவியினொடும் தொடர்ந்து முடியும். மற்று, அசை.

முன்னரே நகரையும், மாளிகையையும், குகையையும் கண்டு இரா வணன் பிராட்டியை ஒளித்த இடம் அவைகள் தாமோ என ஐயுற்ற வீரர்கள், இங்கும் சுயம்பிரபையின் அழகினைக் கண்டு அவளைப் பிராட்டி யென மயங்கினர். இறைஞ்சா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். யோகநெறியால் மெலிந்து நின்ற அவளது மேனியைக் கண்ணுற்று, அவளை இருடி பத்தினியான அருந்ததி யொத்த சீதை யென ஐயுற்றனர். 'பணித்த குறிபண்பில் தெரிந்துணர்தி' என வீரர் கள் மாருதியிடம் கூறியதிலிருந்து, இந்தவீரர்களும் இராமபிரான் அநும னிடம் பிராட்டியின் அங்க அடையாளங்களாகக் கூறியதை உணர்ந்தார் என அறியலாகும். இது முன்னர் 751-ம் செய்யுட் கண், 'காண்டி யெனிற் குறி கேட்டியென வேறு கொண்டிருந்து கழறலுற்றான்' என்ற வரிகளோடு முரண்படும். ஆயினும் இராமபிரான் கூறியதாக அநுமான் இந்த வீரர்கள்பாற் கூறியிருத்தல் கூடும் என உணர்க. அருந்ததி - வசிட்ட முனிவரின் மனைவி; கற்புக் கெடுத்துக் காட்டாக அமர்பவள்; பால. மிதிலை, 93 ; அயோத் வனம்புகு. 7 : சித்திரகூடப். 18. ஆரணிய. 284; பெருங். இலாவாண. 3, 34 சீவக. 327.

பி - ம். 2. அருந்துதி, சீதையிவ ளாகி, யிவளாக, யிவளென்றே.
3. பரிந்தனர் புகழ்ந்தனர், பழிச்சினர், பணிந்தனர்கள் பண்பிற், பணித்தகுறி பற்றினர்கள், பயின்றகுறி மாருதியை நோக்கி,
4. மற்றிவண், சீலமுறு தேவியிவளென்றார். (50)

அநுமன் மறுமொழி

844. எக்குறியொ டெக்குண மெடுத்திவ ணிசைக்கேன்
இக்குறி யுடைக்கொடி யிராமன்மனை யாளோ
அக்குவட முத்தமணி யாரமதன் நேர்நின்
றெக்குமெனி னெக்குமென மாருதி யுரைத்தான்.

மாருதி - அநுமன். (அவ் வீரர்களை நோக்கி), 'எ குறியொடு எ குணம் இவண் எடுத்து இசைக்கேன் - (பிராட்டிக்குரிய உறுப்பிலக் கணங்களிலும் குணவிசேடங்களிலும்) எந்த அடையாளத்தை அல்லது எந்தக் குணத்தை இவள் பால் இருப்பதாக எடுத்துச் சொல்வேன் ? (பிராட்டியின் குணங்குறிகள் ஒன்றும் இவளிடம் இல்லை); இ குறி

உடை கொடி இராமன் மனையாளோ - இத்தன்மையுடைய கொடி போன்ற இப்பெண் இராமபிரான் மனைவியாவாளோ? (ஆகமாட்டாள்;) அக்குவடம் முத்தம் மணி ஆரம் அதன் நேர் நின்று ஒக்கும் எனின்-என்புமாலையானது (நவமணிகளில் ஒன்றாகிய) முத்தினால் ஆகிய மாலையோடு நேராக நின்று உவமை யாகுமாயின், ஒக்கும் (இவளும் அசசீதாப்பிராட்டியை) நிகர்ப்பள்,' என-என்று, உரைத்தான்-கூறினான்.

வீரர்கள் வினாவிற்கு அநுமன் கூறிய மறுமொழி இங்குக் குறிக்கபபட்டது. அக்குமாலையும் முத்தமாலையும் ஒன்றையொன்றொக்குமெனின், இந்த மாதும் பிராட்டிக்கு ஒப்பாவாள் என்று கூறு முகத்தால் இருவரும் ஒப்பாகார் என்றான் - இங்ஙனம் கூறுவதைப் பொய்த்தற்குறிபபணி என்பர். 'நெல்லொக்கும் புல்லென்றாலும் நேருரைத்தாகவற்றே' (ஆரணிய 627): என்றது காண்க. அக்கு வடம், சங்கு மணியானியன்ற ஆரமுமாம். முத்தை மணியென்றது, அதுவும் நவ மணிகளுள் ஒன்றாகலின்.

பி - ம். 1. எடுத்திய னுரைக்கேன்.
2. அக்குறி, இக்குண முடைக்கொடி.
3. அக்குமணி, அக்கின்மணி; னேர்நின்று, யாரதன் னேர்வங், அக்குவட முத்துவட மோடு. (51)

சுயம்பிரபையின் வினா

845. அன்னபொழு தின்கணவ ணங்குமறி வுற்றாள்
முன்னனைய ரல்லநெறி முந்தினர்க ளென்னத்
துன்னரிய பொன்னகரி யின்னுறைவி ரல்லீர்
என்னவர வியாவருரை செய்ம்மென விசைத்தாள்.

அன்ன பொழுதின்கண் - அச் சமயத்தில், அ - அணங்கும் - அந்தச் சுயம்பிரபையும், அறிவுற்றாள் - (யோக நிலையினின்றும் நீங்கித்) தன்னினைவு வரப்பெற்று, (அவர்களை நோக்கி), முன் - தன் முன்பு, அனையர்-அவர்கள், அல்ல நெறி முந்தினர்கள் என்ன - தகாத வழியில் வந்தனர் என்று சினந்து, 'துன்ன அரிய பொன் நகரியின் உறைவிர் அல்லீர் - (நீங்கள்) எவரும் அணுக முடியாத பொன் மயமான-இந்தப் பட்டணத்தில் வாழ்தற்குரிய ரல்லீர், வரவு என்ன - (நீங்கள்) இங்கு வரக் காரணம் யாது? யாவர் - (நீங்கள்) யாவர்? உரை செய்ம்மென - சொல்லுங்கள்' என்று, இசைத்தாள் - கேட்டாள்.

தவ மகளாகிய தன் முன்பு ஓர் கூட்டமாகப் பல ஆடவர்கள் எய்தினராதலின் சீற்றம் கொண்டாள் சுயம்பிரபை. ஆனால் முதலில்

அப்பெண் அவர்கள் வரவினைக் கண்டு வியப்பும் மகிழ்வும் கொண்ட தாகக் குறிக்கப்பெற்றுளது. இளமையும் எழிலும் மிக்கவளாக இச் சுயம்பிரபை யிங்குக் கூறப்பெற்றுள்ளமைக்கு மாருக அவளை முதியோ ளாகவும் அமைதியே உருக்கொண்டவளாகவும் முதனூல் கூறும். இனி, தன் நகரத்தில் தேவர்கள் ஒருவேளை வரக்கூடுமன்றி பிறர் அங்கு வருவதற்கில்லையே, அவ்வாறிருக்க இவர்கள் வந்ததென் என்ருளுமாம். அவ்வணங்கு என்பது அவணங்கு எனத் தொகுத்தது. அறிவுற்ருள் - தன் உணர்வு வரப்பெற்ருள்.

பி - ம். 1. *கனவ்வணங்கு, அன்னபொழு தங்குறு மணங்குமறி வுற்றென்.*
2. *முன்னையர்கள் சேறன்முறை யன்றென, முன்னையர்கள் சொன்ன முறை முந்தினர்கள், முன்னவர்கள் சேறல்முறை யன்றென.*
3. *இந்நகரி னிவ்விடமு னெய்தினர்க எல்லீர், உன்னரிய பொன் னுலக முற்றுடைய ரல்லீர்.*
4. *செய்கென விசைத்தாள்.*

முன்னையர்க ளல்லர்நெறி முந்தினர்க ளென்ன
இந்நகர மிவ்விடமு னெய்தினர்க ளல்லீர்

என்று 2, 3 அடிகளும்

2ம் அடி முதல்

'முன்னனையர் சென்றமுறை யென்னென முனிந்தாள்
என்னரிய பொன்னகரி னித்துறைய ரல்லீர்
என்னவர வியாவருரை செய்திரினி யென்ருள்.

என்றும் சில பிரதிகளில் காணப்படுகின்றன. (52)

அநுமன் மறுமொழி

846. வேதனை யரக்கரொரு மாயைவிளை வித்தார்
சீதையை யொளித்தனர் மறைத்தபுரை தேர்வுற்
றேதமி லறத்துறை நிறுத்திய விராமன்
தூதருல கிற்றிரிது மென்னுமுரை சொன்னுன்.

'வேதனை அரக்கர் - உலகத்தார்க்குத் துன்பமே தரும் இராக்கதர் கள், ஒரு மாயை விளைவித்தார் - ஒரு வஞ்சனைச் செய்கையைப் புரிந்தவர்களாய், சீதையை ஒளித்தனர் - சீதாப்பிராட்டியை எடுத்துச் சென்று மறைத்திட்டார்கள்; ஏதம் இல் அறம் துறை நிறுத்திய இராமன் தூதர் - குற்றம் நீங்கிய தரும நெறியை நிலைபெறச் செய்த

இராமபிரானது தூதுவர்களாகிய நாங்கள், மறைத்த புரை தேர்வுற்று உலகில் திரிதும் - (அவ்வரக்கர்கள் அப்பிராட்டியை) ஒளித்து வைத்துள்ள இரகசியமான இடங்களை நாடத் தொடங்கி உலகில் அலைந்து திரிகின்றோம்', என்னும் - என்கின்ற, உரை - சொல்லை, சொன்னான் - (அநுமன்) கூறினான்.

புரை - இங்கு மறைவான உறைவிடம். 'அறந்தலை நிறுத்தவந்த இறை' 360; 'அறந் திறம்புமென் றைய னயோத்தியிற் பிறந்தபின்பும்' (அயோத். நகர்நீ. 223); 'ஆர றத்தினொ டன்றிநின் றார்அவர் வேர றுப்பன்' (ஆரணிய. 139) : மேலொரு பொருளு மில்லா மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக், கால் தரை தோய நின்று கட்புலக் குற்றதம்மா (376); 'மூவர்க்குந் தலைவராய மூர்த்தியா ரறத்தை முற்றும் காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடங் காட்டி' (உயுத்த. கும்ப. 149); என்பவற்றிற்கிணங்க, 'ஏதமி லறத்துறை நிறுத்திய' எனப்பட்டது. பலர்க்கும் பிரதிநிதியாக விருந்து அநுமன் சுயம்பிரபையினிடம் விடை கூறியதாக முதனூல் கூறும். தூதர் - இடவழுவமைதி.

பி - ம். 1. *மாயையை வினைத்தார், மாயைவினை வித்தே.*
2. *மறைத்தபுழை, றொளித்தபுழை.* (53)

சுயம்பிரபையின் மகிழ்ச்சி

**847.** என்றலு மிருந்தவ ளெழுந்தன ளிரங்கிக்
குன்றனைய தாயதொரு பேருவகை கொண்டாள்
நன்றுவர வாகநட னம்புரிவ லென்னா
நின்றன ணெடுங்கணிணை நீர்கலுழு நீராள்.

என்றலும் - என்று அநுமன் கூறியவுடன், இருந்தவள் - வீற்றிருந்தவளாகிய அந்தச் சுயம்பிரபை, எழுந்தனள் - எழுந்து நின்று, இரங்கி - (அந்த இராம தூதரிடம்) அன்பு கொண்டு, குன்று அனையது ஆயது ஒரு பேர் உவகை கொண்டாள் - மலையை ஒத்த ஒரு பெரு மகிழ்ச்சியை யுற்றவளாகி, (வானரரைப் பார்த்து), 'வரவு நன்று ஆக - உங்கள் வரவு நல்வரவு ஆகட்டும், நடனம் புரிவல் - ஆனந்தக் கூத்தாடுவேன்', என்னா - என்று சொல்லி, நெடு கண் இணை நீர் கலுழும் நீராள் - (தனது) நீண்ட இரு விழிகளினின்றும் ஆனந்தக் கண்ணீர் வாரியாகப் பெருகவிடும், நீராள் - தன்மையளாய், நின்றனள்-நின்றாள்.

வந்த வீரர்கள் பிராட்டியைத் தேட வந்த இராம தூதர்கள் என்று கேட்டவுடன், தனக்குச் சாபக் கழிவு நேருங் காலம் எய்தியது என்று

நினைந்து மகிழ்ந்து உவகைக் கண்ணீர் விடுத்தனள் சுயம்பிரபை. 856-ம் பாடலில், 'வன்றிறலின் வாநர மிராம னருள் வந்தால், அன்றுமுடி வாகுமிடர்' என்று அவள் பின்னர்க் கூறுதல் காண்க, மகிழச்சி மிகுதிக்குக் குன்றினை உவமித்தார். பெரும்பாலும் உருவத் திற்கே கூறப்படும் இந்த உவமை இங்கு மட்டற்ற மகிழ்ச்சியான உணர்சசிக் காயிற்று. மகிழ்ச்சி மிகுதியான் ஆடல் 'ஆலமுண்டவனின் றருநடம் புரிகுவான்' 79 பால. கார்முக 57 என்ற இடங்களில் காண்க. குன்ற மனைய என்றதற்கேற்ப, பேருவகை எனப்பட்டது. இங்கு 'நன்றுவரவாக' என்று கூறப்பட்டது; இடங்கட் கேற்ப இதனை வேறு வகையாகவும் அமைப்பர் ஆசிரியர்; 'தீதில்வர வாகதிரு நின்வரவு (ஆரணிய. 257); என்றது காண்க. சுயம்பிரபை நின்றது அநுமான் முதலிய வீரர்களைப் பெருமைப்படுத்த வென்க. இருந்தவள்- பெரிய தவத்தள் எனினுமாம். 831 முதல் 866 வரையுள்ள செய்யுட்களின் சந்தத்தை ஆரணிய. 250 - 257 பால. கோலங்காண் 24-43. என்ற இவற்றுடன் ஒப்பு நோக்குக.

பி - ம். 2. தாயவொரு, தாவதொரு. 3. புரிவ னென்னு.
4. நீர்கலுழி கொள்ள, நீர்வர நினைந்தாள், நீர்கலுழ நின்றுள். (54)

சுயம்பிரபை இராமனைப் பற்றி வினவுதலும், அநுமன் விடையளித்தலும்

848. எவ்வுழை யிருந்தன னிராமனென யாணர்ச்
செவ்வுழை நெடுங்கணவள் செப்பிடுத லோடும்
அவ்வுழை நிகழ்ந்ததனை யாதியினெ டந்தம்
வெவ்விழைவில் சிந்தைநெடு மாருதி விரித்தான்.

'இராமன் - இராமபிரான், எ உழை இருந்தனன் - எவ்விடத்தில் இருக்கின்றுன்?' என - என்று, யாணர் செவ் உழை நெடு கண் அவள் - புதிய அழகிய மான்போன்ற நீண்ட விழிகளையுடைய அந்தச் சுயம்பிரபை, செப்பிடுதலோடும் - (அநுமனை நோக்கி) வினுவிய வுடனே, வெ விழைவு இல் சிந்தை நெடு மாருதி - கொடிய அவா என்பது சிறிதும் இல்லாத மனத்தையுடைய பெருமை வாய்ந்த அநுமன், அ உழை நிகழ்ந்ததனை - அங்கு (இராமபிரான் பால்) நிகழ்ந்த செய்திகளை, ஆதியினெடு அந்தம் விரித்தான் - முதலிலிருந்து முடிவுவரை விரித்துச் சொன்னுன்.

விழைவு - அவா. எல்லா வுயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாஅப் பிறப்பீனும் வித்து ஆகலின், அதனை வெவ் விழைவு என்றூர்.

பி-ம். 1. எவ்வழி.
3. அவ்வழி நிகழ்ந்ததனை.
4. வெவ்வினைகள் சிந்த, வெவ்வினையில். (55)

சுயம்பிரபை வீரர்களை உபசரித்தல்

849. கேட்டவளு மென்னுடைய கேடிறவ மின்னே
காட்டியது வீடென விரும்பிநனி கானீர்
ஆட்டியமிழ் தன்னசுவை யின்னடிசி லன்போ
டூட்டிமன னுள்குளிர வின்னுரை யுரைத்தாள்.

கேட்டு-(அநுமன் கூறிய வரலாறு முழுதும்) செவியேற்று, அவளும்-அந்தச் சுயம்பிரபையும், 'என்னுடைய கேடு இல்தவம் இன்னே வீடு காட்டியது - யான் புரிந்த கெடுதலில்லாத தவம் இப்பொழுது தான் சாபத்தீர்வை யுண்டாக்கியது' என - என்று சொல்லி, விரும்பி - அவ் வீரரிடம் அன்பு கொண்டு, (அவர்களை) கான நீர் நனி ஆட்டி - நறு மணம் செறிந்த நீரினால் நன்றாக நீராடச்செய்து, அமிழ்து அன்ன சுவை இன் அடிசில் - தேவாமுதம் ஒத்த சுவையையுடைய இனிய உணவை, அன்போடு ஊட்டி - அன்புடன் உண்ணச்செய்து, மனன் உள் குளிர-அவர்களுடைய உள்ளம் குளிரும்படி, இன் உரை உரைத்தாள் - இனிய சொற்களைச் சொன்னாள்.

கேடில் தவம் - தீமை சிறிதும் விரவாத தவம்; 'கேடில் விழுச் செல்வம்' போல; 'நற் பெருந்தவத்தள்,' (சுந்தர. 1273): என்றதும் காண்க. 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப் படும்' (குறள். 265.). நனி - உரிச் சொல். அன்புடன் உண்ணச் செய்து என்பார், ஊட்டி என்றார். அமிழ்து போன்றினிய அறுசுவை யுண்டியென்பார் இன்னடிசில் என்றார். 'முகனமர்ந்து நல்விருந் தோம்புவான்' (குறள். 84.); என்றும், 'முகம்திரிந்து நோக்கக் குழையும் விருந்து' (குறள். 90.) என்றும் கூறப்பட்டன வாகலின், 'இன்னடிசில் அன்போடு ஊட்டி உள்குளிர வின்னுரை யுரைத்தாள்' என்றாள். 'அறுசுவை யுண்டி யமர்ந்தில்லாள் ஊட்ட' என்றது காண்க. (நாலடி. 11.). மனன் உள்குளிர என்பதைச் சுயம் பிரபைக்கும் ஏற்றி அவள் செய்தது போலி யுபசாரமன்று மனப்பூர்வமாகப் புரியப்பட்டது என்று கொள்க. கான் நீர் - காட்டாற்றின் நீருமாம். கால் நீராட்டி என்று கொண்டு, கால் கழுவ நீரளித்து எனினுமாம். அறுசுவை யுண்டியும் அன்புடன் ஊட்டினாள் என்றது அன்பும் ஏழாம் சுவையாகலின், 'உரியவன் பினையும் கூட்டி ஒருபிடி யவல் தின்றானே' (குசேலோ, 283); என்றது போல.

பி - ம். 1. யானுடைய கேடிறவ மன்றே.
2. விரும்பி ஙனிதூரீர், விளம்பிவரு தூய்ரீர், விரும்பிக்விர்.
3. ஈட்டியமு தன்னசுவை.
4. மின்னுரை யுரைக்கும்; குளிரும் வாசக முரைத்தான் முட்குளிரும். (56)

சுயம்பிரபை தன் வரலாறு கூறல்

850. மாருதியு மற்றவண் மலர்ச்சரண் வணங்கா
யாரிநக ருக்கிறைவர் யாதுநி னியற்பேர்
பார்புகழ் தவத்தினை பணித்தருளு கென்றான்
சோர்குழலு மற்றவனொ டுற்றபடி சொன்னாள்.

மாருதியும் - அநுமனும், அவள் மலர் சரண் வணங்கா - அந்தச் சுயம்பிரபையினது தாமரை மலர்போன்ற அடியிணைகளைத் தொழுது (அவளை நோக்கி), 'யார் இ நகருக்கு இறைவர் - எவர் தாம் இந்தப் பட்டணத்துக்குத் தலைவர்? நின் இயல் பேர்யாது - உனது இயற்கை யான பெயர் என்ன? பார்புகழ் தவத்தினை பணித்து அருளுக - புவியிலுள்ளோர் புகழ்தற்குப் பாத்திரமான தவமாதே! (நீ) (இவற்றைப்) பகர்வாயாக!' என்றான் - என்று கேட்டான்; சோர் குழலும் - கீழே வீழ்ந்து தொங்கும் சடையினையுடைய அந்தச் சுயம்பிரபையும், அவனோடு - அந்த அநுமானிடம், உற்றபடி சொன்னாள் - நடந்தவை நடந்தபடியே மொழிவதாயினாள். அதனை அடுத்த எட்டுக் கவிகளிற் காண்க.

சோர் குழல் - வினைத்தொகை, 842 காண்க. மற்று - அசைகள்.

பி - ம். 2. யாவதி னியற்கை.
3. கென்றாச்.
4. மற்றையவை, மற்றவையு, சொற்றாள், முற்றபடி சொல்லிய துணிந்தாள்.

இதன்பின் ஓர் அதிகப் பாடல்.

உச்சிர முடைக்குரிசில் வாளமரின் மேனாள்
மெச்சவுண ரியாவரும் விளிந்தனர்க ளாக
அச்சமுறு தானவர்கள் கம்மியனு மஞ்சி
வைச்சபில மூடிதன் மறைந்தய லிருந்தான். (57)

**851.** நூன்முக நுனித்தநெறி நூறுவர நொய்தா
மேன்முக நிமிர்த்துவெயில் காலொடு விழுங்கா
மான்முக நலத்தவன் மயன்செய்த தவத்தால்
நான்முக னளித்துளதிம் மாநகர நல்லோய்.

(சுயம்பிரபை கூறத்தொடங்கி). 'நல்லோய் - நற்பண் புடையவனே'! மான் முகம் நலத்தவன் மயன் - மானினது முகம் போன்ற முகத்தை யுடைய நல்ல பண்பினனுன மயன் என்னும் அசுரத் தச்சன், நூல் முகம் நுனித்த நெறி நூறு வர - யோக நூலில் நுட்பமாகக் குறித் துள்ள கணக்கற்ற வழிகள் தன்னிடம் அமையுமாறு, நொய்து ஆ - எளிதாக, முகம் மேல் நிமிர்த்து - (தனது) முகத்தை மேலே உயர்த்தி, வெயில் காலொடு விழுங்கா - வெயிலையும் காற்றையும் உட்கொண்டு, செய்த - கடுமையாகச் செய்த, தவத்தால் - தவத்தின் பயனுக, இ மா நகரம் - இந்தப் பெரிய நகரமானது, நான் முகன் அளித் துளது - நான்கு முகங்களையுடைய பிரம தேவனுல் (அம்மயனுக்கு) அளிக்கப்பட்டது.

மேல் முக நிமிர்த்தல்-யோக முறை ; சூரியன் கிரணத்தையும், காற் றையும் உட்கொள்ளுதல் யோகிகளின் இயல்பு ; இவை இங்கே குறிக்கப் பட்டன. 'மாருத சருகு தின்று சருகு பட்டீர், வாயு நுகர்ந்தீர் வாயு மௌனமானீர்' (அழகர் கலம்.): என்றது காண்க. நுனித்தல் - நுட்பமாகக் கூறுதல் ; பால. வேள்வி. 21 ; கடிமண. 72. மேல் முகம் என்பதை முக மேல் என மாற்றுக. கால் - காற்று.

பி - ம். 1. *நுனித்தமுறை, நூறுவன நொய்தாய், நூறுமழை நொய்தாய், நூறுவர மெய்தா, நுனித்தநிறு மிக்குளது நோக்கின், நுனித்த குறி நூறுவர னெய்தாம்.*

2. *மேன்முக நிலத்துவெ யிலின்முறையில் விளங்கும், காலொடும் விழுங்கா.*

3. *மான்முக முகத்தவன், மயன்செய்த வரத்தால்.* (58)

**852.** அன்னதிது தானவ னரம்பையரு ளாங்கோர்
நன்னுதலி னுண்முலை நயந்தனன நல்லாள்
என்னுயிர னுளவளை யானவ னிரப்பப்
பொன்னுலகி னின்றிது பிலத்திடை புணர்த்தேன்.

'இது அன்னது - இந்நகரம் அவ்வாறு அமைக்கப்பட்டது ; தான வன் - அந்த மயன் என்ற அசுரன், அரம்பையருள் - தேவ மகளிருள்,

ஆங்கு ஓர் நல் நுதலினுள் முலே நயந்தனன்-அங்கே (தெய்வலோகத்தில்) ஒப்பற்ற அழகிய நெற்றியையுடைய ஒருத்தியினது போகத்தை விரும் பினுன்; அ நல்லாள் என் உயிர் அனுள் - அந்த நல்ல அழகி என் உயிர்போன்ற தோழியாவள்; அவன் இரப்ப - அவ்வசுரன் என்னே மன்ருடிக் கேட்டதனுல், யான் - நான், அவளே - அந்தத் தெய்வப் பெண்ணே, பொன் உலகின் நின்று - பொன் மயமான தேவலோகத் திலிருந்து. இது பிலத்திடை புணர்த்தேன் - இந்த ருட்ச பிலத்திற் கொண்டு வந்து சேர்த்தேன்.

தானவன் - காச்யபமுனிவரின் மனைவியருள் தனு என்பவனின் வழிவந்தவன்; இங்கே, மயன். அங் நல்லாள் என்பது தொகுத்தது. அசுரத் தச்சனுன மயன் தான் புரிந்த தவப்பயனுகப் பிரமனிடமிருந்து அசுரகுருவான சுக்கிராசாரியரது பொருள் முழுவதையும் பெற்றுப் பொன் மயமான வனத்தை நிருமித்தனன் என்றும், பின்னர் அது அந்த மயனுற் காதலிக்கப்பட்ட தேவமாதற் குரியதாயிற்று என்றும் முதனூல் பகரும். நன்னுதலினுள் ஹேமை என்க. ஹேமம் - பொன். இச் செய்யுள் முதலாக மேல் 63-வது செய்யுள் வரையில் அந்தாதித் தொடையின் அமைந்துள்ளமை குறிக்கத்தக்கது; முன்னின்ற செய்யு ளின் இறுதியிலுள்ள எழுத்தேனும் அசையேனும் சீரேனும் அடி யேனும் அடுத்துவருஞ் செய்யுட்கு முதலாக வருவது அந்தாதித் தொடையாம்.

பி-ம். 1. *அன்னமய னுளவன், அன்னகிளர்தானவர ரம்பையரு ளாங்கோர், அன்னமய னென்பவ னரம்பையரி லாங்கோர்.*

2. *நயந்தனன வள்ளல், புணர்ந்தனன வள்ளல்.*

3. *யானிவண் விடுப்ப, யானிவனிரப்ப.*

4. *நின்றெளிர் பிலத், நின்றயல் பிலத். பிலத்திடை, புணர்ந்தான்.*

இப்பாடல்,

'அன்னகிளர் தானவ னரம்பையரு ளாங்கோர்
நன்னுதலி னுண்முலே புணர்ந்தனன வள்ளல்
என்னுயி ரனுளவளே யானிவண் விடுப்பப்
பொன்னுலகி னின்றியல் பிலத்திடை புணர்ந்தாள்.'

என்று சில சுவடிகளிற் காணப்படுகிறது. (59)

853. புணர்ந்தவளு மன்னவனு மன்றில்விழை போகத்
துணர்ந்திலர் நெடும்பகலிம் மாநக ருறைந்தார்
கணங்குழையி னுளொடுயர் காதலொரு வாதுற்
றிணங்கிவரு பாசமுடை யேனுட னிருந்தேன்.

'அவளும் அன்னவனும் - அந்த மாதும் அந்த மயனும், புணர்ந்து - கூடி, அன்றில் விழை போகத்து - அன்றிற் பறவையும் விரும்பும்படியான சிற்றின்பத்தில், உணர்ந்திலர் - (பிறிதொன்றையும்) அறியாதவர்களாய், நெடு பகல் இ மா நகர் உறைந்தார் - பலகாலம் இந்தச் சிறந்த நகரில் தங்கினர்; கணம் குழையினுளொடு - திரண்ட காதணி பூண்ட அப் பெண்ணுடன், உயர் காதல் ஒருவாது - சிறந்த ஆசை நீங்காது, உற்று இணங்கிவரு - நெருங்கிப் பழகி வருகின்ற, பாசம் உடையேன் - அன்புடையவளாகிய யான், உடன் இருந்தேன் - அவ்வழகியுடன் இங்கேயே யிருந்தேன்.

மன்றில் விழைபோக மென்றும் சிலர் பிரித்துப் பொருள் கொள்வர். பகல்; நாளுக்கு இலக்கணை. ஒருவாது - இணைபிரியாது. காதல் இருவர் கருத்தொருமித் தாதரவு பட்ட இன்பம் ஆதலின், 'உயர் காதல்' எனப்பட்டது.

பி - ம். 1. புணர்ந்தவரும், முன்றில் விழைபோகத், மொன்றி விழை போகத், மாநக ருகந்தார்.
3. கணங்குழையி னேடும், கனங்குழையினுளொடு.
4. இலங்கிவரு மாசையுடை யேனுட னிருந்தேன், இணங்கிவரு பாசடையி னேடுட னிருந்தேன், முடை யாளொடு மிருந்தேன்.

(60)

854. இருந்துபல நாள்கழியு மெல்லையினி னல்லோய்
திருந்திழையை நாடிவரு தேவரிறை சீறிப்
பெருந்திறலி னனையுயி ருண்டுபிழை யென்றம்
முருந்துநிகர் மூரனகை யாளையு முனிந்தான்.

நல்லோய் - நல்ல பண்புடையோனே! இருந்து பல நாள் கழியும் எல்லையினின் - (இவ்வாறு அவ்விருவரும்) கூடியிருந்து பல நாட்கள் செல்லாநிற்க, திருந்து இழையை நாடி வரு - நல்ல வேலைப் பாடமைந்த அணிகளை யணிந்த அந்தத் தேவமாதைத் தேடி வருகின்ற, தேவர் இறை - தேவர் கோனுகிய இந்திரன், சீறி -

வெகுண்டு, பெரு திறலினனை உயிர் உண்டு - மிக்க வன்மை வாய்ந்த அம் மயனைக் கொன்று, அ முருந்து நிகர் மூரல் நகையாளையும் - அந்த மயிலிறகின் அடியை ஒத்த பற்களையும் குறு நகையையும் உடைய அத் தெய்வப் பெண்ணையும், பிழை என்று முனிந்தான் - ('நீ செய்தது) தவறான தொழில்' என்று சினம்கொண்டு சொன்னான்.

ஹேமையைக் காதலுற்றுக் கூடியதற்கு இந்திரன் வெகுண்டு மயனைக் கொன்று, ஹேமை மீதும் சீற்றங் கொண்டனன் என்க. திருந் திழை - வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழி. 'உண்டற்குரிய தல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலு மாமே' (தொல். பொரு ளியல். 213): என்பதாகலின் உயிருண்டு என்றார்; 'தோணல முண்டு துறக்கப்பட்டோர்' (கலித். 23); 'தானும் தேரும் பாகனும்வந்தென்னல மூண்டான்' (தொல், சொல், 51). முருந்து - மயிலிறகினடி; இங்கு பற்களுக்கு, உவமை; 'முருந்தேர் முறுவல்' (அகம். 193).

பி - ம். 1. மெல்லியினி னென்னே, யினிநல்லோய், வல்லே.

2. தேவனிறை சீறிப். நாடியயர் நாடிவருந்.

3. பொருந்திற விறுனை, உயிர்கொண்டு பிழை யென்ன, உயிருண்டு பிழை யென்ன,

4. முருந்தனைய மூரனகை, முருந்துநிக ரோதுநகை யாளை. (61)

சில சுவடிகளில் பின்வரும் அதிகப் பாடல்கள் காண்கின்றன.

'மாதவ ளுயிர்த்தமக வோரிருவர் வாசம்
போதுறை நறைக்குழ லொருத்திபுகழ் மேலோய்
ஏதமவண் மைந்தர்தவ மெய்தியயல் போனார்
சீதள முலைச்சிறுமி தாதையொடு சென்றாள்.

'மத்தநெடு மாகளிறு கைக்குலிச வன்றாள்
சித்தமொடு மான்முகன் வணங்கி யயல்சென்றான்
வித்தகனு மாயிர விலோசனனு மேன்மேல்
முத்நகை யாளைநனி நோக்கினன் முனிந்தான்.'

855. முனிந்தவளை யுற்றசெயல் முற்றுமொழி கென்னக்
கனிந்ததுவர் வாயவளு மென்னையிவள் கண்ணால்
வனைந்துமுடி வுற்றதென மன்னனுமி தெல்லாம்
நினைந்திவ ணிருத்திநகர் காவனின தென்றான்.

முனிந்து - (இந்திரன்) அவ்வாறு சினந்து, அவளை - அந்தத் தேவமாதை, உற்ற செயல் முற்றும் மொழிக - 'நிகழ்ந்த செய்திகள் அனைத்தையும் பகர்வாயாக' என்ன - என்று ஏவ, கனிந்த துவர் வாயவளும் - நன்றாக முதிர்ந்த பவளம் போன்ற வாயினையுடைய அந்த வானுலக நங்கையாகிய ஏமையும், என்னை - என்னைப்பிடித்துக்கொண்டு கண்ணால் - கண்சாடையால், '(இந்தப் பழிக்கத்தக்க செயல்) இவள் வனைந்து - இந்த எனது தோழியினால் தொடுக்கப்பட்டு, முடிவுற்றது - முடிந்தது' என - என்று அறிவிக்க, மன்னனும் - இந்திரனும், இது எல்லாம் நினைந்து - இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து (என்னைப் பார்த்து), 'இவண் இருத்தி - இந்நகரிலேயே தனியாகத் தங்குவாயாக: நகர் காவல் நினது - நகரத்தைப் பாதுகாக்கும் வேலை உன்னுடையதாகும்' என்றான் - என்று மொழிந்தான்.

துவர் - பவளம். வனைதல் - தொடுத்துச் செய்தல்; 'வனைந்தனைய திருமேனி, (பால: கார்முக. 25). வாய்திறந்து குற்றஞ்சாட்ட நா எழாமையின் கண்சாடையால் உரைத்தாள் ஹேமை.

பி - ம், 1. உற்றசெயல், முற்றுமுரை யென்ன, முற்றுமொழி யுற்றமுறை யென்ன, யுற்றுமொழி யுற்றமுறை, யுற்ற பரிசென்ன, யுற்ற தினியென்ன.
2. கண்ணாய்;
3. வனைந்த முடி; வண்ணனுமி தெல்லாம்.
4. நெடிதென்றான். (62)

856. என்றலும் வணங்கியிரு ளேகுநெறி யெந்நாள்
ஒன்றுரை யெனக்குமுடி வென்றுரைசெ யாமுன்
வன்றிறலி ராமனருள் வானரர்கள் வந்தால்
அன்றுமுடி வாகுமிட ரென்றவ னகன்றான்.

'என்றலும் - என்று (மேற்கூறியவாறு) இந்திரன் எனக்குக் கட்டளையிட்டவுடனே, வணங்கி - (நான்) அவனைத் தொழுது, 'இருள் ஏகும் நெறி எ நாள் - எனது இத்துன்பம் நீங்குதற்கு உரிய வழி எக்காலத்துண்டாகும்? எனக்கு முடிவு ஒன்று உரை - எனக்கு அறுதியிட்டு

ஒன்று சொல்வாயாக' என்று உரை செயாமுன் - என்று வினவுவதற்கு முன்னமே, அவன் - அத்தேவேந்திரன் ' வல்திறல் இராமன் அருள் வானரர்கள் வந்தால் - பெரும் வலிமை வாய்ந்த இராமபிரானால் அனுப்பி யருளப்பெற்ற குரங்குகள் இங்கு வந்தால், இடர்முடிவு ஆகும்- அப்போதே உனது துன்பம் ஒழியும்' என்று - என்று சொல்லி, அகன்றான்-தன் நகர்க்குச் சென்றான்.

எப்பொழுது இச்சாபம் நீங்கும் என்று சுயம்பிரபை வினவ, இராமனருள் தாங்கி வானரங்கள் அந்நகர்க்கண் வரும்போது நீங்கும் என்றான் தேவர்கோன். இருள், இலக்கணையால் துன்பத்தைச் சுட்டியது; (ஒப்பு) 'இருள் சேரிருவினையும் நீங்கா' (குறள். 5)

பி - ம். 1. என்றலும், என்றனை யிருத்தி, இருளாக நெறியென்ன, இருளாக நெறியெக்காள், யன்றோ, யிருத்தி யிரு ளேகநெறி யென்ன.

2. வென்றுரை.

3. வன்திறல் வாகரர், வன்திலவ்வாகரம், வன்திறல்கொள்.

4. முடிவாகு மிடர்நிற்கென வகன்றான். (63)

857. உண்ணவுள பூசவுள சூடவுள வொன்றோ
வண்ணமணி யாடையுள மற்றுமுள பெற்றேன்
அண்ணலவை விட்டுமை யடைந்திடுதல் வேண்டி
எண்ணரிய பல்பக லிருந்தவ மிழைத்தேன்.

அண்ணல் - பெரியோனே! (எனக்கு இங்கே) உண்ண உள - உண்பதற்குரிய பொருள்கள் உள்ளன; பூச உள - பூசுதற்குரிய கலவைச் சாந்து முதலிய பொருள்கள் உள்ளன; சூட உள - தலையில் அணிதற்கு உரிய மலர்மாலைகள் உள்ளன; ஒன்றோ - இவை மட்டோ? வண்ணம் மணி ஆடை உள - நல்ல நிறங்கள் வாய்ந்த அழகிய உடைகளும் உள்ளன; மற்றும் உள - (இவைகளேயன்றி) இன்னும் அணிகள் முதலியனவும் உள்ளன; பெற்றேன் - இவையனைத்தும் அடைந்துள்ளேன்; (எனினும்), அவைவிட்டு - அவற்றைத் துய்க்காமல் எல்லாப்பற்றுக்களையும் அகற்றி, உமை அடைந்திடுதல் வேண்டி - (எனது சாபக்கழிவிற்காக) உம்மைக் காணவிரும்பி, எண்அரிய பல் பகல் இருதவம் இழைத்தேன் - கருதற்கரிய அருமையான பெருந்தவம் நெடுங்காலமாகச் செய்தேன்.

அண்ணல் - அண்மைவிளி. ஓகாரம்; பிரிநிலை,

பி - ம். 2. *மற்றுமுள கேண்மோ ; பெற்றெவ்.*
3. *அண்ணலவை முற்றுமற விட்டதனை வெல்வான். விட்டு வினை வெல்வேன் ; அண்ணலவை முற்றுமற வைம்புலனை வெல்வான்.*
4. *பல்பக லருந்தவ முழன்றேன், முடித்தேன்.* (64)

858. ஐயிருப தோசனை யமைந்தபில மையா
மெய்யுளது மேலுலக மேறுநெறி காணேன்
உய்யுநெறி யுண்டுதவு வீரெனி னுபாயம்
செய்யும்வகை சிந்தையி னினைத்திர்சிறி தென்றாள்.

'ஐயா - பெரியோனே! அமைந்த பிலம் ஐ இருபது யோசனை மெய் உளது - பொருந்திய இந்தக்குகைத் துவாரமானது நூறு யோசனை விரிந்த வடிவுள்ளது; மேல் உலகம் ஏறு நெறி காணேன் - விண்ணு லகத்திற்கு ஏறிச் செல்லும் வழி எனக்குத் தென்பட்டிலது; உதவுவீர் எனின்-(நீங்கள் எனக்கு) உதவிபுரிவீர்களானால், உய்யும் நெறி உண்டு- யான் பிழைத்தேறும் வழியேற்படும்; உபாயம் செய்யும் வகை - அதற் கேற்ற தந்திரம் செய்யும் வகையை, சிந்தையின் சிறிது நினைத்திர் - உங்கள் உள்ளத்தில் சிறிது கருதுவீர்களாக', னெறாள் - என்று சொன்னாள் (சுயம்பிரபை).

இந்திரன் சாபத்தால் தேவருலக நெறி நான் அறியக் கூடவில்லை. அது எனக்குப் புலப்படுமாறு காட்டியருளல் வேண்டும் என்றாள். முதற்கண் ஐயா என்று அநுமனை அழைத்தவள், பின்னர் இராம தூதர்களால் அவளிடர் நீங்கும் என்றிருத்தலின் அவர்களையும் உளப் படுத்தி, 'உதவுவீர் நினைத்திர்' என்றாள் என்க.

பி - ம். 1. *தோசனை யறைந்தபிலம், யமைந்தபில மம்மா.*
2. *மேறுநெறி காணு, நெறிகூறு, மேலையில மேறுநெறி யிருளாய்.*
3. *உய்யநெறி, பொன்றுதவி.*
4. *செய்யுநெறி, செய்யும் வினை.* (65)

அநுமன் சுயம்பிரபைக்கு மேலுலக நெறியைக் காட்டுவதாக வாக்களித்தல்

859. அன்னது குறித்தரிவை கூறவநு மானும்
மன்னுபுலன் வென்றுவரு மாதவண் மலர்த்தாள்
சென்னியின் வணங்கிநனி வானவர்கள் சேரும்
பொன்னுலக மீகுவெ னினக்கெனல் புகன்றான்.

அன்னது குறித்து - தேவருலக நெறி பற்றி, அரிவை கூற - அந்தச் சுயம்பிரபை சொல்ல, அநுமானும் - மாருதியும், மன்னுபுலம் வென்று வருமாதவள் மலர் தாள் - பொருந்திய ஐம்புலன்களையும் வெற்றிகொண்ட, அந்தப் பெண்ணினுடைய தாமரை மலர் போன்ற பாதங்களை, சென்னியின் வணங்கி-(தனது) தலையால் வணங்கி, (அவளை நோக்கி) 'நினக்கு - உனக்கு, வானவர்கள் நனிசேரும் - தேவர்கள் மிகுதியாகக்கூடி நிற்கும், பொன் உலகம் ஈகுவன் - தேவலருகத்தை அளிப்பேன்' எனல் புகன்றான் - என்பதை மொழிந்தான்.

சுயம்பிரபை - இவள் மேருஸாவர்ணியின் மகள். மாதவத்தின், பெருமை மிக்க தவமுதியாள் எனினுமாம். புலனைந்தும் வென்றவன் ஆகலின், அநுமன் அவளை வணங்கினன் என்க, வணங்குவது தகுதி பற்றி யென்பதற்கு (ஒப்பு): 'நின்னைத்தலையினால் வணங்கத்தகும் தன்மையோய்' (உயுத்த. மீட்சி. 28).

பி - ம். 1. *அன்னது சுயம்பிரபை.*
2. *வென்றுவளர் மாமயில்.*
4. *ஈகுவ னுனக்கென.* (66)

பிலத்தைவிட்டு வெளியேறும் முயற்சி

860. முழைத்தலை யிருட்கடலின் மூழ்கிமுடி வேமைப்
பிழைத்துயி ருயிர்க்கவருள் செய்த பெரியோனே
இழைத்திசெய லாயவினை யென்றன ரிரந்தார்
வழுத்தரிய மாருதியு மன்னது வலித்தான்.

(மற்றைய வானர வீரர்கள் அநுமனை நோக்கி), 'முழைதலை - இந்தப் பிலத்துவாரத்தில், இருள் கடலில் மூழ்கி - கடல்போன்றஇந்த இருளில் மூழ்கி, முடிவேமை - இறக்கவேண்டிய எங்களை, உயிர் பிழைத்து உயிர்க்க - இறவாமல் தப்பி வாழும்படி, அருள் செய்த - கருணை புரிந்த, பெரியோனே - பெருமைக் குணமுடையோனே! செயல் ஆய வினை - இனிச் செய்யத்தக்க தொழிலை, இழைத்தி - செய்வாயாக' என்றனர் இரந்தார் - என்று பணிந்து வேண்டினார்கள்; (உடனே), வழுத்து அரிய மாருதியும் - புகழ்ந்து முடியாத (நற்பண்புகள் வாய்ந்த) அநுமனும், அன்னது வலித்தான் - அவ்வாறே புரிதற்கு மனத்துள் நினைந்தான்.

பிலத்தை விட்டு வெளியேற்றுமாறு சுயம்பிரபை அநுமனை வேண்டியதுடன் அந்த வானர வீரர்கள், தங்கட்கு ஆதரவும் உணவுமளித்த

மையின் நற்கதிக்கும் வழிகோலுமாறு அநுமனை வேண்டினர் என்பது, 'இழைத்திசெயலாயவினை' என்ற தொடரால் விளங்கும்,

பி - ம். 1. முடிவோமை, விடுவோமை, முடிவெம்மை, முடிவாகப்.

2. பிழைத்தன முயிர்க்கும்வகை பேதையொடு மெம்மை.

3. இழைத்த செய லானதென, செயலானவினை, இழைப்பில் செய லாயவினை ; யென்னென விருந்திர், யென்றென விருந்திர், இழைப்பில் கரை யேற்றுகென வீரரு மிருந்தார், இழைப்பில் செயலாம் வினைய மென்னென விருந்தார். (67)

அநுமன் பேருரு எடுத்தல்

861. நடுங்கன்மி னெனுஞ்சொலை நவின்றுநகை நாற
மடங்கலி னெழுந்துமழை யேறரிய வானத்
தொடுங்கலில் பெருந்தலை புறத்துலகொ டொன்ற
நெடுங்கைகள் சுமந்துநெடு வானுற நிமிர்ந்தான்.

(அநுமன் பிறரை நோக்கி), நடுங்கன்மின் எனும் சொலை நவின்று - அஞ்சாதீர்கள் என்ற அபயமொழியைக்கூறி, நகை நாற - புன்முறுவல் தோன்ற, மடங்கலின் எழுந்து - ஆண்சிங்கம் போன்று கிளம்பி, மழை ஏறு அரிய வானத்து உலகொடு - மேகங்களும் ஏறிச் செல்ல முடியாத வானுலகத்தோடு, ஒடுங்கல் இல் பெரு தலை - குறுகல் இல்லாத பெரிய தலையானது, புறத்து உலகொடு ஒன்ற - வெளியுலகத் துடன் பொருந்த, நெடு கைகள் சுமந்து - (தனது) நீண்ட கரங்களை உயர்த்திக்கொண்டு, நெடுவான் உற நிமிர்ந்தான். (தனது) பெரிய வடிவம் விரிந்த ஆகாயம் முழுதும் நிறையும்படி மேலோங்கினன்.

இங்கு அநுமனின் நகை பெருமிதத்தால் எழுந்தது. ஆண் சிங்கம்போன்று பேருருக்கொண்டு எழுந்ததினின்று இவன் அரிய காரியங்களையும் எளிதாக இயற்றவல்லவன் என்ற அவன் பெருமை கூறப்பெற்றது. செயற்கரிய செய்வார் பெரியர் (குறள்-26). மடங்கல் - பிடரிமயிர் மடங்கப் பெற்றிருப்பது என்று சிங்கத்துக்குக் காரணக்குறி.

பி - ம். 1. விளங்கும்நகை கொண்டே.

2. மழையேறிரிய ; எழுந்தவட மேருவி னிமிர்ந்தே.

3. பெருநீதல னிருந்தவ ருவப்ப, னுயர்ந்தவ ருகப்ப, பிலந்தலை திறந்துலகொ டொன்ற.

4. நெடுங்கைகள் பெயர்த்த, அயர்த்தவர் நீக்கிடுவ னென்றன்,

862. எடுத்துயர் சுடர்ப்புய மிரண்டுமெயி றென்ன
மருத்துமக னப்படி யிடந்துற வளர்ந்தான்
கருத்துநிமிர் கண்ணினெதிர் கண்டவர் கலங்க
உருத்துல கெடுத்தகரு மாவினையு மொத்தான்.

மருத்து மகன் - வாயுவின் குமாரனான அநுமன், எடுத்து உயர் சுடர் புயம் இரண்டும் - பிடரியின் இருபுறமும் உயர்ந்த ஒளியை யுடைய (தனது) கரங்கள் இரண்டும், எயிறு என்ன - இரண்டு வளைந்த தந்தங்கள் போன்று விளங்க, நிமிர் கண்ணின் எதிர் - உயர்ந்த கண்ணெதிரே, கண்டவர் - நேரிற் பார்த்தவர், கருத்து கலங்க - நெஞ்சம் கலங்கும்படி, அ படி இடந்து உற வளர்ந்தான் - அந்தப் பிலத்தின்மேல் முகட்டைப் பிளந்துகொண்டு உயர்ந்தவனாய், உலகு - உருத்து எடுத்த - பூமியை (அந்நாளில்) சினம் கொண்டு (கோர தந்தங்களாற்) பாதலத்திலிருந்து தூக்கிவந்த, கரு மாவினையும் - பெரிய வடிவம் உடைய (திருமால் அவதாரங்களுள் ஒன்றான) வரா கத்தையும், ஒத்தான் - ஒத்து விளங்கினன்.

பிலத்தினுள்ளிருந்து நிலத்தைப் பிளந் துயர்ந்த அநுமன், பாதலத்துள் அழுந்திக் கிடந்த பூமியைத் தனது கோர தந்தத்தினால் குத்தி யெடுத்துக்கொண்டுயர்ந்த வராகாவதாரத்தை யொத்து விளங் கினன் என்க. கலங்க உலகெடுத்த எனக் கூட்டி யுரைத்தலுமாம். நிமிர்கண் - உறுப்பிற் சிறந்ததாகிய கண் எனினுமாம். மா என்பது விலங்கின் பொதுப்பெயர்; இங்கே வராகத்தைக் குறித்து நின்றது. உருத்தல் - சினங் கொள்ளுதல்; ஆரணிய. 312. கலித். 103.

பி - ம். 1. எருத்தறு திடர்ப்புய மிரண்டு, வரைப்புய.
2. மருத்தின்மக னப்படி.
3. கருத்தினிமிர், கருத்தினிமி ரக்கநிகள் கண்டவர் கலங்க, நடுங்க, கருத்திடை பொறுத்தளது கண்டவர்க ளஞ்ச.
4. திரு மாவினையு மொத்தான். (69)

863. மாவடி வுடைக்கமல நான்முகன் வகுக்கும்
தூவடி வுடைச்சுடர்கொள் விண்டலை தொலைக்கும்
மூவடி குறித்துமுறை யீரடி முடித்தான்
பூவடி வுடைப் பொருவில் சேவடி புரைந்தான்.

மா வடிவு உடை கமலம் நான்முகன் - சிறந்த வடிவமுடைய (திருமாலின்) நாபிக் கமலத்தில் உதித்த பிரமன், வகுக்கும் - படைத்

துள்ள, தூ வடிவுடை சுடர் கொள் விண் - பரிசுத்தமான தோற்ற முடைய (சூரியன் முதலிய) சுடர்களைத் தன்னிடம் கொண்ட ஆகாயத் தினது, தலை - உச்சி முகட்டை, தொளைக்கும் - துளைத்து ஊடுருவிச் சென்றதாகிய, மூ அடி குறித்து முறை ஈர் அடி முடித்தான் - (வாமன னாகி மகாபலி சக்கரவர்த்தியினிடம்) மூன்றடி மண் இரந்து பெற்று, உடனே முறையாக (வானம் பூமி என்ற இரண்டையும்) தன் இரண் டடிகளால் அளந்து நின்ற (திரிவிக்கிரமனான) திருமாலின், பூ வடிவுடை பொருவு இல் சே அடி - அழகிய வடிவையுடைய நிகரில்லாத திரு வடியை, புரைந்தான் - நிகர்த்து விளங்கினான்.

முன் பாட்டில் திருமாலின் வராகாவதாரத்தை அநுமனுக்கு உவமை கூறிய ஆசிரியர், இப்பாட்டில் அவரது திருவிக்கிரமாவ தாரத்தை ஒப்பாகக் கூறினார். மாவலியினிடம் மூவடி மண் வேண்டி, ஈரடிகளால் மண்ணும் விண்ணும் அளந்த வரலாறு இங்கே குறிக்கப் பெற்றமை காண்க. புரைதல் - ஒத்தல்; போல புரைய ஒப்ப உறழ என்பன உவம வுருபுகள். அநுமனுக்குத் திருவடி என்ற பெயருண் மையின் இங்கு வேறுவகையாகத் திருமாலின் சேவடி போன்றவன் என்று நயம்பட உரைத்தனர். அடியளந்தது சிலப். 17 : 35 ; பால. வேள்வி. 37 ; சுந்தர. 736.

பி - ம். 2. சுடர்கள் விண்டலை தனைக்க, தனைக்கும்.
3. மூவடி குறைத்து முறை, குறித்த.
4. புனைந்தான். (70)

அநுமன் பிலநகரத்தை மேல்கடலி லெறிந்து ஆர்த்தல்

864. ஏழிருப தோசனை யிடந்துபடி யின்மேல்
ஊழுற வெழுந்ததனை யும்பரு மொடுங்கப்
பாழிபொரு வன்பிலனு ணின்றுபடர் மேல்பால்
ஆழியி னெறிந்தனும னாழியென வார்த்தான்.

அநுமன் - அநுமன், ஏழ் இருபது யோசனை இடந்து - நூற்றுநாற்பது யோசனை தூரம் பிளந்துகொண்டு, பாழி பொரு வல் பிலனுள் நின்று - குகையை ஒத்த வலிய பிலத்திலிருந்து, படியின்மேல் ஊழ் உற எழுந்து- பூமி மட்டத்திற்கு முறையே எழுந்துவந்து, (பின்பு), அதனை - அந்தப் பில நகரத்தை, உம்பரும் ஒடுங்க - தேவர்களும் அஞ்சி நடுக்கமெய்த, படர் மேல் பால் ஆழியின் எறிந்து - பரந்த மேற்றிசைக் கடலில் வீசி எறிந்து, ஆழி என ஆர்த்தான் - கடல் போலப் பேராரவாரம் செய்தான்.

அநுமன் பேருருக்கொண்டு பிலத்தைப் பிளந்து அதனுள்ளிருந்த நகரத்தை மேலைக்கடலில் எறிந்து ஆர்ப்பரித்தான். ஊழுற எழுந்து - முறையாக வருத்தமின்றிக் கிளம்பி.

பி - ம். 1. யிடந்தபடிமேற், விண்மேல்.
2. வுயர்ந்ததனை யும்பகு முவப்பப், முகப்ப, முகக்க, மொருங்கப்.
3. வாழிநெடு, வன்பிலனி னின்று, வடமேல்பால், பாழிநெடு வன்பிலன். 4. மேருவென. (71)

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

சுயம்பிரபை வெளியேறுதல்

865. என்றுமுள மேல்கட லியக்கில்பில தீவா
நின்றுநிலை பெற்றுளது நீணுதலி யோடும்
குன்றுபுரை தோளவ ரெழுந்துநெறி கொண்டார்
பொன்றிணி விசும்பினிடை நன்னுதலி போனள்,

(அந்தப் பில நகரமானது), என்றும் உள - எப்பொழுதும் உள்ள தான, மேல் கடல் - மேற்றிசைக் கடலில், இயக்கு இல் பில தீவு ஆ - அழிவற்ற பிலத்தீவென்று பெயருள்ளதாக, நின்று நிலைபெற்றுளது - இப்பொழுதும் உள்ளதாகி நிலைபெற்று விளங்குகின்றது; நீள் நுதலி யோடும் - நீண்ட நெற்றியுடைய சுயம்பிரபை யோடும், குன்று புரை தோளவர் - மலைகளை யொத்த புயங்களையுடைய வானர வீரர்கள், எழுந்து - (அந்தப் பிலத்தினின்று) வெளியேறி, நெறி கொண்டார் - வழிக்கொண்டார்கள், (அப்பொழுது) நல் நுதலி - அழகிய நெற்றியை யுடைய அந்தச் சுயம்பிரபை, பொன் திணி விசும்பினிடை போனள் - பொன் பதித்துச் செய்யப்பட்ட தேவலோகத்திற்குச் சென்றாள்.

இயங்கு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். நெறி கொள்ளுதல் - வழியைப் பின்பற்றுதல். விசும்பு - விண்ணுலகத்துக்கு இடவாகுபெயர்.

வானர வீரர்கள் பிராட்டியை நாடிச் செல்லுகையிற் இளைத்துக் களைத்து, நீர் வேட்கை மிக்கவராய், ருக்ஷபிலம் என்னும் பிலத்தினுள் புக்கு மிகவும் வருந்தி, உள்ளே சென்று, பொன் மயமான ஓர் வனத்தை யடைந்து, ஆங்கிருந்த சுயம்பிரபை என்னும் தவ முதியாளைக் கண்டு வினவி, அந்த வனம், மயன் என்பவனால் நிருமிக்கப் பட்டதென்றும், அவன் காதற்குப் பாத்திரமான ஹேமை யென்னும் வானவர்மகட் குரித் தாயிற்று என்றும் அறிந்த பின்பு, தங்களைப் பிலத்தினின்றும் வெளி

யேற்றுமாறு அந்தச் சுயம்பிரபையை வேண்ட, அவள், இவர்களின் விழிகளை மூடிக்கொள்ளுமாறு கூறித் தன் தவப்பெருமையால், பிலத்தின் வெளியே கொணர்ந்து சேர்த்தனள் என்று இவ்வரலாறு முதனூலிற் கூறப்பட்டுள்ளது.

வாநரர் பொய்கைக் கரையைச் சேர்தலும் சூரியன் மறைவும்

866. மாருதிவலித் தகைமை பேசிமற வோரும்
பாரிடை நடந்துபக லெல்லைபட ரப்போய்
நீருடைய பொய்கையினி னீள்கரை யடைந்தார்
தேருடை நெடுந்தகையு மேலைமலை சென்றான்.

மறவோரும்-வலிமை சான்ற வாநர வீரரும், மாருதி வலி தகைமை பேசி - அநுமனுடைய பலத்தின் இயல்பைப் புகழ்ந்து கூறிக்கொண்டு, பகல் எல்லை படர பாரிடை நடந்து போய் - அன்றைப் பகல் முழுதும் பூமியில் நடந்து சென்று, நீர் உடைய பொய்கையினின் - நீர் நிறைந்த ஒரு தடாகத்தினது, நீள் கரை அடைந்தார் - நெடிய கரையை அடைந்தார்கள்; (அப்பொழுது), தேருடை நெடு தகையும் - விண்ணிற் செல்லும் தேரையுடைய பெருந்தகையான சூரியனும், மேலை மலை சென்றான் - மேலைத் திசைக்கண் உள்ள அத்தமன கிரியை அடைந்தான். (அத்தமித்தான்).

பிலத்தில் இருட்செறிவில் தாங்கள் வருந்தியபோது தங்கட்கு வழி காட்டியதாலும். பின்பு பிலத்தைத் தகர்த்துச் சுயம்பிரபைக்கும் தங்களுக்கும் வெளியேறும் வழியைக் காண்பித்ததாலும், வாநர வீரர் அநுமனுடைய வலிமையைக் கொண்டாடினர் என்க.

பி - ம். 2. *பலவெல்லை ; மறையப்போய், கழியப்போய்.*

3. *பொய்கையெனும் பூமியிடை நின்றார், பொய்கையினி னீர்க்கரை, பொய்கையினி னீள்கரை, நீள்கரை நயந்தார், நீள்வரையினின்றார்.*

4. *நெடுங்கதிரு மேலைமலை.* (72)

பிலம் புக்கு நீங்கு படலம் முற்றும்.

---

# 14. ஆறு செல் படலம்

இது, பிலத்தினின்று வெளிவந்த அநுமன் முதலிய வாநர வீரர் கள், சுக்கிரீவன் குறிப்பிட்ட வழியே பிராட்டியைத் தேடிச் ;சென் றதைக் கூறும் படலம் என விரியும். இது சில பிரதிகளில் ஆற்றுப் படலம், வழிநடைப் படலம், கோதாவிரிப் படலம் என்ற வேறு பெயர்க ளுடன் காணப்பெறுகின்றது.

குறிப்பு:—அநுமன் முதலிய வாநர வீரர்கள் பிராட்டியைத் தேடிச் சென்றதாக ஆறுபடுத்திய வகையில் முதல் நூலிலிருந்து இப்படலம் சில மாறுபாடுகளை மேற்கொண்டுள்ளமை காணலாம். அவை வழி நூல் என்ற முறையில் அமைந்தவை எனக் கொள்ளற்பாலனவாம்.

வாநர வீரர் வழியில் ஒரு பொய்கையைக் கண்டு அங்குத்தங்கி
இளைப்பாறி உறங்குகையில், ஓர் அசுரன் வந்தது

867. கண்டார் பொய்கைக் கண்ணக னன்னீர் கையார
உண்டார் தேனு மொண்கனி காயு மொருசூழல்
கொண்டா ரன்ரு வின்றுயில் கொண்ட குறியுன்னித்
தண்டா வென்றித் தானவன் வந்தான் றகவில்லான்.

கண்டார் - (அப் பொய்கையைக்) கண்ட வாநர வீரர், கண் அகல் - இடமகன்று விளங்கிய, பொய்கை - அப் பொய்கையின், நல் நீர்-நல்ல நீரை, கை ஆர உண்டார்-கையால் நிரம்ப எடுத்துப் பருகினர்; தேனும் ஒண் கனி காயும் - தேனையும் நல்ல பழங்களையும் காய்களையும், உண்டார் - அவர்கள் அருந்தினராகி, ஒரு சூழல் - அப் பொய்கையின் ஒரு புறத்தே, இன் துயில் கொண்டார் - இனிய நித்திரை கொண்டனர் ; கொண்ட குறி உன்னி - அவ்வாறு அவர்கள் துயில் கொண்ட அடை யாளம் கருதி, தண்டா வென்றி - தடைபடாத வெற்றியை யுடைய, தகவு இல்லான் - நற்குண மற்ற, தானவன் - ஓர் அசுரன், வந்தான் - அவ்விடம் வந்தான். அன்று, ஓ அசைகள்.

பொய்கைக்கண் அகல் நன்னீர் கை யார உண்டார் எனவும் கூறுவர். கொண்டா ரன்னோர் எனும் பாடங்கிடைப்பின் சிறக்கும். தானவர் அரக்கரின் வேறான அசுரர். இங்கு வந்தவன், துமிரன் என்பான்; (876).

பி - ம். 1. *வீர்க்கரை யுற்(று), வீர்க்கரை தா முற்(று) ; கரை காணுற்(று), கரைகாமுற்(று).*
2. *தேனு மீர்ங்கனி காயு.*

3. *யின்றுயில் குன்றத் திடையக்கோர்; யின்றுயில் குன்றிற் குறி யெய்தித்; கொண்டார் குறி யெய்தித்; கொண்ட குறிப் புன்னித்; இன்றுயி லின்றிக் குறை யெய்த.*
4. *தண்டார் வென்றித்; தளர் வில்லான்.*

இங்கு பிலம் நீங்கு படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் காணப் படுகின்றது. (1)

அவ்வசுரன் இயல்பு

**868.** **மலையே போல்வான் மால்கட லொப்பான் மறமுற்றிக்**
**கொலையே செய்வான் கூற்றை நிகர்ப்பான் கொடுமைக்கோர்**
**நிலையே போல்வா னீர்மை யிலாதா னிமிர்திங்கள்**
**கலையே போலுங் கால வெயிற்றுன் கனல்கண்ணன்.**

(அவ்வவுணன்) மலையே போல்வான் - (தோற்றத்தில்) ஒரு மலையைப் போன்றவன்; மால் கடல் ஒப்பான் - உருவின் நிறத்தாலும் விரிவாலும் கடல் போன்றவன்; மறம் முற்றி - கொடுமையில் முதிர்ச்சியடைந்து, கொலையே செய்வான் - யாவரையும் கொன்றே விடுபவன்; கூற்றை நிகர்ப்பான் - யமனை ஒப்பவன்; கொடுமைக்கு ஓர் நிலையே போல்வான் - கொடுமை என்பதற்கு ஓர் இருப்பிடமாவான்; நீர்மை இலாதான் - நற்குணம் இல்லாதவன்; நிமிர் - (வானில்) எழுந்து விளங்கும், திங்கள் கலையே போலும் - சந்திரனின் பிறையே போல் விளங்கும், கால எயிற்றுன் - நச்சுப்பற்கள் என்னும் வக்ர தந்தங்களை யுடையவன்; கனல் கண்ணன் - நெருப்புப்போன்று சுடர்விட்டெரியும் கண்களையுடையவன்.

அவ்வசுரன் உருவத்தின் வலிமை, உயர்வு முதலியவற்றிற்கு மலையும், நிறம், பெருமை, விரிவு முதலியவற்றிற்குக் கடலும் உவமைகள். கால எயிற்றுன் - காளம் என்ற சொல், காலம் என ஆயிற்று; மங்களம் என்பது மங்கலம் என்றுதல் போல; இதனை ளலயோரபேதঃ என்பர் வடநூலார், இனி, காலனது கோரப் பற்கள் போன்ற பற்களையுடையவன் என்றுரும் உளர்.

பி - ம் 1. *மலையே யொப்பான் மாக்கடல் போல்வான்; மால் கடல்போல்வான்; மற முற்றக்.*
2. *கொலையே சூழ்வான், கொலையே போல்வான், கொலையே கொள்வான், கூற்றையு மொப்பான்; கூற்றம் நிகர்ப்பான்; கொடுமைக்கு.*
3. *நிலையே யொப்பான்; நெடுந்திங்கள்.*
4. *கலையே யொப்பான்.* (2)

வேறு

869. கருவி மாமழை கைக டாவிமீ
துருவ மேனிசென் றுலவி யொற்றலால்
பொருவின் மாரிமே லொழுகு பொற்பினல்
அருவி பாய்தருங் குன்ற மேயனுன்.

(அவ்வவுணன்), கருவி மாமழை - (உலகம் நடைபெறுதற்கு) முதற் காரணமான பெரிய மேகங்கள், கைகள் தாவி - அவன் கைகளிற்ருவி, மீது மேனி உருவி சென்று - ஊடுருவி அவன் உடலில் சென்று, உலவி - உலாவி, ஒற்றலால் - படிதலினுலும், பொருவு இல்மாரி - ஒப்பில்லாத மழை, மேல் ஒழுகு பொற்பினல் - அவன்மேல் பெருகி ஓடி வழிந்த பொலிவினுலும், அருவி பாய்தரும் குன்றமே அனுன் - நீரருவிகள் பாய்ந்தோடி வரும் ஒரு மலையையே ஒத்தவனுனன்.

மலைக்கும் அவ்வவுணனுக்கும் ஒப்பாக அமைந்தமையால், சிலேடை அணியின்பாற்படும். கருவிமாமழை : குறுந். 42 : 2, 94 : 8 ; மணி. 17 : 92 ; நைடதம் நாட்டு 1 ; கருவி மழை என்பதற்கு, தொகுதி யான பெரிய மேகம் எனவும் பொருள் கொள்ளலாம் ; (பெரும்பாண். 24. ந. உரை)

பி - ம். 1. மழை கடலி னேடவாய்.
2. ஒருவ வானின்மேல், உருவ மீதுசென். உருவி மேனிசென் ; உருமு மேனிசென்.
3. பொருவின் மேனிமேல் ; பொருவில் வாரிமேல் ; பொருவி லாறுபாய் இன்ற போதுமல்.
4. அருவி பாயுமக், அருவி தோய்தரும். (3)

870. வான வர்க்குமற் றவர்வ லிக்குநேர்
தான வர்க்குமே வரிய தன்மையான்
ஆன வக்கல னவனெ டாடவே
றேன வர்க்குமொன் றெண்ண வொண்ணுமோ.

வானவர்க்கும் - தேவர்களுக்கும், அவர் வலிக்கு நேர் தானவர்க்கும் - அத் தேவர் வலிமைக்கு ஒப்பான அசுரர்களுக்கும், மேவு அரிய தன்மையான் ஆன - கடப்பதற்கு அரிய வலிய தன்மையையுடைய னுன, அ கலன் அவனெடு ஆட - அக்கொடியோனேடு எதிர்த்துப் போரிட, வேறு ஏனவர்க்கும் - மற்றுமுள்ள பிறர் யாவர்க்கும், ஒன்று

எண்ண ஒண்ணுமோ - சிறிதும் நினைவு கொள்ள முடியுமோ? (நினைக்கவும் முடியாது என்றபடி.) மற்று - அசை.

தானவர்க்குமே அரிய தன்மையான் என ஏகாரத்தைத் தேற்றப் பொருளிற் கொண்டாரும் உளர். ஏனவர் - பிறர்: இது ஏனையர் எனவும் வழங்கும்;

பி - ம். 1. *வரன வர்க்குமற் றுனர்வ லிக்குனே.*
2. *மெய்தரிய; மேயரிய.*
3. *ஆனவர்க் கலன்; ஆனபுட் கலன்; ஆன புட்கரன் மகனொ டாடவே; ஆன வர்க்குமற் றயனொ டாடவே;*
4. *ஏனை யோர்க்கும்.* (4)

அவ்வசுரன் உறங்கிய வாநரவீரரை அணுகி அங்கதனைத் தாக்கியது

871. பிறங்கு பங்கியான் பெயரும் பெட்பினில்
கறங்கு போன்றுளான் பிசையுங் கையினன்
அறங்கொள் சிந்தையார் நெறிசெ லயர்வினல்
உறங்கு வாரைவந் தொல்லை யெய்தினன்.

(மேலும்), பிறங்கு பங்கியான் - விளங்கும் தலைமயிரையுடையவனும், பெயரும் பெட்பினில் - (தான் நடந்து) செல்லுந் தன்மையில், கறங்கு போன்றுளான் - காற்றாடியை ஒத்துள்ளவனும், பிசையும் கையினன் - (கோபத்தால்)பிசையும் கைகளையுடையவனுமான அவ்வவுணன், அறம் கொள் சிந்தையார் - தருமசிந்தனையுள்ளவர்களும், நெறிசெல் அயர்வினல் - வழிநடந்து வந்த இளைப்பினல், உறங்குவாரை - நித்திரை செய்கின்றவர்களுமான அவ்வாநர வீரர்களை, ஒல்லை வந்து எய்தினன் - விரைவில் வந்தடைந்தான்.

பங்கி-ஆண்பால் தலைமயிர், கறங்கு- காற்றாடி; பம்பரமும் ஆம். கைபிசைதல்: தான் மேற்கொள்ள இருக்கும் மறத்தொழிலுக்கு அறிகுறி என்க: அதாவது கொலைத்தொழிலுக்குக் கைகள் ஊறுவதைக் குறிக்கும் மெய்ப்பாடு. அறத்தின் மூர்த்தியாகிய ஸ்ரீராம கைங்கர்யத்தில் ஈடுபட்டவராதலால், அவ்வாநர வீரர்கள அறங்கொள் சிந்தையார் எனப்பட்டனர்.

பி - ம். 1. *பேரும் பெட்பினிற்; பேரும் பெட்பினல்; பெயரும் வேகத்தால்; பெயருஞ் சாரியில்.*
2. *பிசையுங் கையினன்.*
3. *நிறங்கொள் சிந்தையான் நீள் தடம்கிரி; நெறிசெல் லோய் வினல்.*
4. *உறங்கு வார்தமைக் கண்டன் குன்றுவான்.* (5)

872. பொய்கை யென்னதென் றுணர்ந்தும் புல்லியோர்
எய்தி னர்கள்யா ரிதுவெ னவென
ஐய னங்கத னலங்கன் மார்பினில்
கையின் மோதினன் கால னேயனன்.

காலனே அனன்-யமனையே ஒத்தவனான அவ்வசுரன், 'பொய்கை என்னது என்று உணர்ந்தும் - இந்தப் பொய்கை எனக்கு உரியது என்று அறிந்தும், புல்லியோர் - அற்பர்கள், யார் எய்தினர்கள் - யாவரே இங்கு வந்தடைந்தவர்? இது என என - இது என்ன! இது என்ன?' என்று சொல்லிக்கொண்டு, ஐயன் அங்கதன் - தலைவனான அங்கதனுடைய, அலங்கல் மார்பினில் - மாலை அணிந்த மார்பிலே, கையின் மோதினன் - தன் கையினால் அறைந்து தாக்கினன்.

காலனே அனன்: முன், 886-இல் கூற்றை நிகர்ப்பான் என்றமையும் நோக்குக. ஐயன் அங்கதன்: இஃது அரசகுமாரன் அல்லது இளவரசன் என்ற அருமையும் பெருமையும் நோக்கிக் கூறியது. அலங்கல் - மாலை; அசைந்தாடும் இயல்புபற்றி மாலைக்கு ஆயது. காலன் - பிராணிகளின் ஆயுட்காலத்தைக் கணக்கிட்டுக் கவர்பவன்.

பி - ம். 1. றுணர்ந்தும் போரினோர்.
2. எய்தி னர்களால்; இதுவெ னேவென; இது வென மென; வினிது போரென; எய்தினர்கவி தினிது போலென; எய்தினர்கள்மற் றியர்கள் யாரென; ஈதென வென.
3. மார்பிடை.
4. கையி னெற்றினன் கால னஞ்சவே. (6)

அங்கதனால் அசுரன் இறந்தது

873. மற்ற மைந்தனு முறக்க மாறினன்
இற்றி வன்கொலா மிலங்கை வேந்தென
எற்றி னானைநே ரெற்றி னானவன்
முற்றி னிகற் காதி மூர்த்தியான்.

அ மைந்தனும் - அந்த வலியோனான அங்கதனும், மற்று - அதன் மேல், உறக்கம் மாறினன் - நித்திரை நீங்கினவனாகி. இற்று இவன் இலங்கை வேந்து கொல் ஆம் என - இன்று இவனே இலங்கைக் கரசனான இராவணன் போலும் என்று எண்ணி, எற்றினானை-தன்னைத் தாக்கி அடித்த அவ்வவுணனை, நேர் எற்றினன்-எதிர்த்து அறைந்தான்; (அவ்வாறு அங்கதனால் அறையப்பெற்ற) இகற்கு ஆதிமூர்த்தியான்

அவன் - பராக்கிரமத்துக்குரிய கடவுள் போன்ற அவன், முற்றினன் - உயிர் முடிவுற்று இறந்தான்.

மற்று : அசையாகக் கொண்டாரும் உளர்.

பி - ம், 1. மற்றி மைந்தனும், மற்றை மைந்தனும், மற்றம் மைந்தனும் ; முறக்கம் நீத்தெழுக்.

2. வேந்தனென். 3. ரெற்றின னிகல்.

4. முற்று மாரமர்க் காதி மூர்த்தியான் ; முற்று மாறிகற் காதி மூர்த்தியான.

முற்றுமா ரமர்க் காதி மூர்த்தியான் என்ற பாடங்கொண்ட ஒரு பிரதியில் இதன் கீழ் அடியிற் காணும் மூன்று அதிகப் பாடல்கள் உள்ளன.

1. இருவ ருங்கத மெய்தி யங்கையில்
செரும லைந்திடும் பொழுது திண்டிறல்
நிருதன் வெஞ்சினங் கதுவ நின்றதோர்
பரும ராமரம் பறித்து வீசினன்.

2. வீசு மாமரஞ் சிந்த வென்றிசேர்
ஆசி லங்கத னங்கை யால்மலைந்
தோசை கொண்டுறக் குத்தி னனுடல்
கூசு ருதவன் குன்றென் றேந்தினன்.

3. குன்று கையிடைக் கொண்டெ ழுந்தமுன்
நின்ற வங்கதன் நெடும ராமரம்
ஒன்று வாங்கிமற் றவனெ டிந்திடச்
சென்று தாக்கினன் றேவர் வாழ்த்தவே. (7)

மற்ற வானரர்கள் துயிலுணர்ந்து எழுந்தது

874. இடியுண் டாங்கணோ ரோங்க லிற்றதொத்
தடியுண் டான்றளர்ந் தலறி வீழ்தலும்
தொடியின் றேள்விசைத் தெழுந்து சுற்றினர்
பிடியுண் டாரெனத் துயிலும் பெற்றியார்.

ஆங்கண் - அப்பொழுது, ஓர் ஓங்கல் - ஒரு மலை, இடி உண்டு இற்றது ஒத்து - இடியினால் தாக்கப்பெற்றுத் தகர்ந்து வீழ்ந்ததுபோல அடி உண்டான் - அங்கதனால் அடியுண்ட அவ்வவுணன், தளர்ந்து - சோர்வுற்று, அலறி வீழ்தலும் - வாய்விட்டுக் கதறிக்கொண்டு கீழே

விழுந்த பொழுதில், பிடி உண்டார் எனத் துயிலும் பெற்றியார் - பேயினால் பிடிபட்டவர் போலத் தூக்கத்தின் ஆழ்ந்த நிலையில் இருந்த (மற்ற) வானர வீரர்கள், தொடியின் தோள் விசைத்து - வளையணிந்த தம் தோள்களை வேகமாய் வீசிக்கொண்டு, எழுந்து - எழுந்து வந்து, சுற்றினர் - அங்கு வந்து சூழ்ந்துகொண்டனர்.

ஆங்கண் அவ்விடத்து என்னலும் ஆம், பிடியுண்டார் : உண்டார் ; இஃது இலக்கணையின் பாற்படும். தொடியின் தோள் - வளையணிந்த தோள்கள், வீரர்கள் தம் தோள்களில் வளையணிதல் மரபு. தோள்வளையை அங்கதம் என்பர். விசைத்தல் - வீசுதல் ; 'மால் வரை, விழுந்தன விசைத்த காற்றினே' (241) என வாலியைக் குறித்துக் கூறியது காண்க. முன் அவ் வவுணனைக் 'குன்ற மேயனான்' (868) என உவமித்ததற் கேற்ப, இங்கு அவன் அங்கதக் குரிசிலால் அடியுண்டு விழுந்ததை இடியுண்டு விழுந்த மலையெனப்பட்டது.

பி - ம். 1. ஓடியுண் டாங்கனோ ரோங்கல் வீழ்வதொத்(து) ; ரோங்கல் வீழ்ந்தென. 2. அடியுண் டான்றலத் தலறி.
3. தடியுண் டார்விசைத். 4. பிடியுண் டாலெனத். (8)

அநுமன் அவனைப்பற்றி அங்கதனை வினவியது

875. யார் கொலாமிவ னிழைத்த தென்னெனாத்
தாரை சேயினைத் தனிவி னாயினான்
மாரு தேயன்மற் றவனும் வாய்மைசால்
ஆரி யாதெரிந் தறிகி லேனென்றான்.

'இவன் யார் கொல் ஆம் - இவன் யார்? இழைத்தது என் - இவன் செய்தது யாது?' எனா - என்று, மாருதேயன் - அநுமன், தாரை சேயினை - தாரையின் புதல்வனான அங்கதனை, தனி வினாயினான் - குறிப்பிட்டுக் கேட்டான் ; அவனும் - அவ் வங்கதனும், (அநுமனை நோக்கி), 'வாய்மை சால் - சத்தியம் நிறைந்த, ஆரியா - பெருமைக் குரியோனே! தெரிந்து அறிகிலேன் - யான் இவனைப்பற்றி ஒன்றும் தெரிந்து அறிந்தவன் அல்லேன் ;' என்றான் - என்று மறுமொழி கூறினான். மற்று : அசை.

கொல் : ஐயப் பொருளையும், சால் : மிகுதிப் பொருளையும் உணர்த்திய உரிச்சொற்கள். இவன் என்பது, இடைநிலை விளக்காய் நின்று யார் கொலாம் என்றதையும், இழைத்ததென் என்பதையும் தழுவியது, மாருதேயன் : மருத்தின் புதல்வன் தத்திதாந்தப் பெயர், ஆரியா

என்றது வாய்மை, கல்வி முதலியவற்ருலும் ஒழுக்கத்தாலும் சிறந்தவன் ஆதலால்.

பி - ம். 3. ணிகழ்ந்த தென்னெனுத்.
2. தனி விளுவிளுன். 3. மற்றவனும் வன்மைசால்.
4. தறிந்திலே னென்ருன். (9)

சாம்பவன் அவ்வசுரன் வரலாறு கூறியது

876. யானி வன்றனைத் தெரிய வெண்ணினேன்
தூநி வந்தவேற் றுமிர னென்னும்பே
ரானிவ் வாழ்புனற் பொய்கை யாளுமோர்
தான வன்னெனச் சாம்பன் சாற்றினுன்.

(அது கேட்டு), சாம்பன் - சாம்பவன் என்னும் கரடிகளுக்குத் தலைவன், 'யான் இவன் தனைத் தெரிய எண்ணினேன் - நான் இவனை இன்னுனென்று தெரிந்துகொள்ளும்படி நினைத்துப் பார்த்தேன்; தூ நிவந்த வேல் - பகைவர்களுடைய மாமிசங்கள் நிறைந்த வேற்படையைத் தாங்கியுள்ள, துமிரன் என்னும் பேரான் - துமிரன் என்னும் பெயரை யுடையவன் இவன்; இ ஆழ் புனல் பொய்கை ஆளும் - இந்த ஆழ்ந்த நீரையுடைய பொய்கையைத் தனக்கு உரிமையாகக் கொண்டு காத்து வரும், ஓர் தானவன் - ஓர் அசுரன் ஆவன்;' என - என்று, சாற்றினுன் - கூறினுன்.

தெரிய எண்ணுதல் - நன்கு யோசித்துப் பார்த்தலும் ஆம். தூ நிவந்த வேல் : இஃது இவனுடைய வேலின் வெற்றிச் சிறப்பைக் கூறியபடி. தூ-மாமிசம்; ஆரணிய. 397; 'தூவகலில் குந்தமறமைந்தர்' (அயோத். தைலமாட்டுப்: 12). என்றமை காண்க. அங்கதன் இத்துமிரன் என்னுந் தானவனைக் கொன்ற செய்தி வானர வீரர் பிலம்புகுமுன் நிகழ்ந்ததாக வான்மீகம் கூறும். சாம்பன் பல ஊழிக்காலம் கண்ட பெரியோன் ஆனதாலும், திருமால் திரிவிக்கிரமனுகி உலகளந்தபோது முன் பறை அறைந்து சென்று (980) உலகு எங்கும் உள்ள விஷயங்களை நன்கு அறிந்தவ னுதலாலும், இவ் வவுணன் இன்னுன் என்பதை நினைவு படுத்திக்கொண்டு கூறினுன் என்க.

பி - ம். 2. வேற் றுன்முரன் னெனும்; தோட் டுன்முரன் னெனும்.
3. ரானில் வன்புனல், போனவன் பெரும், பூம் புனற் பொய்கை, ரானிப் பொய்கையங் கரையின் வாழுமத்.
4. சாம்பன் சொல்லினுன். (10)

சூரியோதயமாக வானரவீரர் பிராட்டியை மேலும் தேடிச் சென்றது

877. வேறு மெய்துவா ருளர்கொ லாமெனுத்
தேறி யின்றுயிற் செலவு தீர்ந்துளார்
வீறு செஞ்சுடர்க் கடவுள் வேலைவாய்
நாற நாண்மலர்ப் பெண்ணை நாடுவார்.

வேறும் - இவ்வசுரனை யன்றி மற்றும் சிலரும், எய்து வார் உளர் கொலாம் எனு - இங்கு வரக்கூடியவர் இருப்பார்களோ என்று சங்கை கொண்டவர்களாய், இன் துயில் தேறி - இனிய தூக்கத்தினின்று விழித்தெழுந்து, செலவு தீர்ந்து உளார் - மேல் செல்வதை நிறுத்தி யிருந்த அவ் வானர வீரர்கள், வீறு செம் சுடர் கடவுள்-தனிச் சிறப்பை யுடைய சூரியபகவான், வேலை வாய் நாற - கீழ்கடலினிடத்து தோன்ற. நாண் மலர் பெண்ணை - அன்று மலர்ந்ததுபோன்ற புதுமையுடன் விளங்கும் தாமரை மலர்மீது வீற்றிருக்கும் திருமகள் அவதாரமான சீதாப்பிராட்டியை, நாடுவார் - (மேலும்) தேடிச் செல்வாராயினர்.

வேறும்: உம்மை, எஞ்சியது தழுவியது. தேறுதல் - தெளிதல் அல்லது கடத்தலும் ஆம். வீறு: பிறர்க்கு இல்லாத தனிப் பொலிவு; 'சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி' (முருகு. 283). நாறுதல் - தோன்றுதல்; 'கற்பத் தருவின் கதிர் நாணிழற் கற்றை நாற'; (ஆரணிய. 713); 'நிலத்தியல் நல் வித்து நாருமை யின்னு' (இன்னு நாற்பது.20). வேலை - கடல்; வேலா என்னும் வடசொல்லின் திரிபு.

பி - ம். 1. கோறு வாருளர் கூல மேயென; ருளர்கொன் மேலெனுத்; ருளர்கொல் மேலெனத்;
2. றுயில் செய்தல் தீர்ந்துளார்; றுயில் செய்தல் நீக்கினுர்.
3. கடவுள் கீழ்கடல், கடவுள் மேவிட; வீறு சேரிருள் விளிதல் கண்டொரு.
4. நாறு தாமரைப் பொய்கை ' நண்ணினுர்; பெண்ணை நண்ணினுர். (11)

வானரவீரர் பெண்ணைநதியை அடைந்து அங்குப் பிராட்டியைத் தேடியது

878. புண்ணை வெம்முலைப் புளின மேய்தடத்
துண்ண வாம்பலின் னமிழ்த முறுவாய்
வன்ன வெண்ணகைத் தரள வாண்முகப்
பெண்ணை நண்ணினுர் பெண்ணை நாடுவார்.

பெண்ணை நாடுவார் - சீதாப்பிராட்டியாகிய பெண்ணைத் தேடிச் சென்ற அவ்வாநர வீரர்கள், புள்நை - சக்கரவாகப் புட்கள் (ஒப்பா காமையால் அவை) வருந்துவதற்குக் காரணமான, வெம்முலை -விருப் பத்தைத் தரும் தனங்களாகிய, புளினம் ஏய் - மணற்குன்றுகள் பொருந்திய, தடத்து - இடங்களையும், உண்ண-பருகு மிடத்து, அமிழ்தம் ஊறும்-அமிர்தம் சுரக்கும், ஆம்பலின் வாய்-செவ்வல்லிகள் ஆகிய வாய் களையும், வண்ண வெள் நகை தரளம்-அழகிய வெண்மையான முத்துக்க ளான பற்களையும், வாள் முகம்-ஒளிபொருந்திய (தாமரை மலர்களாகிய) முகங்களையுமுடைய, பெண்ணை - ஒரு (பெண்ணன பெண்ணை) நதியை நண்ணினர் - போய் அடைந்தனர்.

சக்கரவாகப் புள்ளும். புளினமும் மகளிர் தனத்திற்கும், தரளம் பற்களுக்கும் உவமைகள்; (உவமான சங்கிரகம்). ஆம்பலுக்கு அமுத மாவது அதிலுள்ளேதேன். இச் செய்யுள் சிலேடை யணியைத் தன்னுட் கொண்ட உருவக அணியாகும். தரளம் புளினம் வட சொற்கள். பெண்ணை நாடுவோர் பெண்ணை நண்ணினர், இதில் பெண்ணை என்ற சொல் இரட்டுற மொழிதலாக ஒரு பெண்ணுக்கும் பெண்ணை யென்னும் நதிக்கும் அமைத்த நயம் ஓர்தற்குரியது.

பி - ம். 1. *மெய்த்தடத்த, மொய்தடத்த; வெம்முலை புளின.*

2. *உண்ண வுண்ணவீ யமிழ்தம், உண்ண வுண்ணவின் னமிழ்தம், உண்ண வுண்ணவிண் ணமிழ்தம்; னமிழ்தமூறல் வாய்.*

3. *வண்ண வொண்ணகைத்; தரள வாண்முகைப்.*

4. *பெண்ணை நாடுவார் பெண்ணை நண்ணினர்; பெண்ணை நண்ணு வார்.* (12)

**879.** துறையுந் தோகைநின் றுடு சூழலும்
குறையுஞ் சோலையுங் குளிர்ந்த சாரனீர்ச்
சிறையுந் தெள்ளுபூந் தடமுந் தெண்பளிக்
கறையுந் தேடினா ரறிவின் கோடியார்.

அறிவின் கோடியார் - அறிவின் எல்லை அல்லது வரம்பை அடைந்தவர்களான அவ் வாநர வீரர், துறையும் - அந்நதியில் இறங்கி நீராடுதல் முதலியன செய்யும் துறைகளிலும், தோகை நின்று ஆடு சூழலும் - மயில்கள் களிப்புடன் நின்று தம் தோகைகளை விரித்து ஆடு கின்ற இடங்களிலும், குறையும் - அவ்வாற்றின் இடையே இருந்த

திட்டுகளிலும், சோலையும் - அவ்வாற்றையடுத்த சோலைகளிலும், குளிர்ந்த சாரல் நீர் சிறையும் - (அங்கிருந்து) குளிர்ந்த சீதக்காற்று வீசும் தேக்கம் பெற்ற நீர்நிலைகளாகிய ஏரி தடாகங்களிடத்திலும், தெள்ளு பூம் தடமும் - தெளிவான அழகுடன் விளங்கிய பூஞ்சோலை களிடத்திலும், தெள் பளிக்கறையும்-தெளிவான (ஒளியுடன் விளங்கிய) பளிங்குப்பாறைகளிலும், தேடினர் - பிராட்டியைத் தேடிப் பார்த்தனர்.

கோடி - கரையும் ஆம். தோகை - சினையாகு பெயராய் மயிலைக் குறித்தது. குறை - ஆற்றிடைத்திட்டு; பால. பூக்கொய் - 2 ; தெள்ளு பூந்தடமும் - தெளிவான. தாமரை முதலிய பூக்கள் நிறைந்த தடாகங் களும் என்னலும் ஒன்றும்.

பி - ம். 2. *குறையில் சோலையும் ; குளிர்தண் சாரனீர்ச்.*

3. *தெள்ளுநீர்த் தடமுந் ; திண்பளிக்.*

4. *ரறிவின் கேள்வியார், அறிவின் நீடினர் ; நீடியார், காட்சியார் ; அறிவின் தேடினர்.* (13)

வாநரவீரர் பெண்ணை நதிக்கரையிற் றங்கியதும், அந்நதியின் சிறப்பும்

880. அணிகொ ழித்துவந் தெவரு மாடினர்
பிணிகொ ழித்தவெம் பிறவி வேரின்வன்
துணிகொ ழித்தருஞ் சுழிக டோறுநன்
மணிகொ ழித்திடுந் துறையின் வைகினர்.

அணி கொழித்து வந்து - அழகைத் தெள்ளி எடுத்துக் கொண்டு வந்து, ஆடினர் எவரும் - தன்னுட் படிந்து நீராடினோர் யாவருடைய வும், பிணி கொழித்த - நோய்கள் திரண்டுள்ளதான, வெம் பிறவி வேரின் - கொடிய பிறவியினது வேர்களின், வன் துணி கொழித்து - வலிய துண்டங்களைத் திரட்டிக் கொண்டும், அரும் சுழிகள் தோறும் - அடைதற்கரிய தன் நீர்ச் சுழிகளிலெல்லாம், நல் மணி கொழித்திடுந் - சிறந்த இரத்தினங்களைக் கொழித்து வீசி வருவதுமான அந்நதியின், துறையின் வைகினர் - ஒரு துறையில் (அவ்வாநர வீரர்) தங்கியிருந் தனர்.

கொழித்தல் - தெள்ளித் திரட்டுதல், இச் செய்யுள் சொற்பின் வரு நிலை அணி. பிறவி வேரின் வன் துணி கொழித்து என்றதால் அப் பெண்ணை நதியில் ஆடுவாருடைய போக்குதற்கரிய கொடிய பிறவியை நீக்கி நற்கதி யளிக்கவல்ல தூய்மையை யுடையது

அந்நதிப் புனல் என்பதாம்; இந்நதி உத்தரபிநாகினி என்னும் வடபெண்ணை யாகும்.

பி - ம். 1. தேவரு மாடுவார்; யங் தாடுவோர்கடம்.

2. பிணி கொழித்தகிற் பிலவொ டாரயன்; பிணி கொழித்தயல் பேர வெற்பெனும்; நின் பிறவி வேரினின்;

3. துணை கொழித்தருஞ்.

4. மணி கொழித்ததென், மணி கொழிப்பதின், மணி கொழித்த நின், மணி கொழிக்குமா நதியு மாடினர். (14)

881. ஆடு பெண்ணைநீ ராறு மேறினர்
காடு நண்ணினர் மலைக டந்துளார்
வீடு நண்ணின ரென்ன வீசுநீர்
நாடு நண்ணினர் நாடு நண்ணினர்.

நாடு நண்ணினர் - பிராட்டியைத் தேடுதலை மேற்கொண்ட அவ் வானர வீரர், ஆடு நீர் பெண்ணை ஆறும் - யாவரும் வந்து நீராடும் (புனிதமான) நீரையுடைய அந்தப் பெண்ணை யாற்றையும், ஏறினர் - கடந்து கரை யேறியவர்களாய், காடு நண்ணினர் - பல காடுகளை அடைந்தவர்களும், மலை கடந்து உளார் - பல மலைகளையும் தாண்டிச் சென்றவர்களுமாகி, வீடு நண்ணினர் என்ன - முத்தி உலகை அடைந்தவர்களே போல, வீசு நீர் - பரவிய நீர்வளத்தாற் சிறந்த, நாடு நண்ணினர் - ஒரு நாட்டை அணுகினர்.

இரண்டாவதாக உள்ள, நாடு நண்ணினர் என்பதில் நாடு என்பது முதனிலைத் தொழிற்பெயர். முத்தி உலகம் ஒரு கவலைக்கு மிடமின்றிக் குறைவற்ற நல்லின்பங்களை என்றும் அளிக்கும் என்பது போல, அன்னோர் சென்ற அந்நாடு, 'நாடென்ப நாடா வளத்தது' (குறள். 739) என்றதற்கிணங்க எல்லா வளங்களும் நிறைந்திருந்தமையால் அதனை வீட்டுலகத்திற்கு உவமை ஆக்கினர் ஆசிரியர் எனக. வீசு நீர் - பரந்த நீர்; 'விள்ளஞானம் வீசுதாள்' (ஆரணிய. 63.) உரையை நோக்குக; இனி, வீசுதல், வரையாது எங்கும் பரவ அளித்தல் என்னலும் ஆம்; 'கொள்பத மொழிய வீசிய புலனும்' (புறநா. 23: 7). நாடு நண்ணினர் நாடு நண்ணினர் என்ற நான்காம் அடி, மடக்கணியில் அமைந்துள்ளமை காண்க. இந்நாடு விதர்ப்ப நாடென்க.

பி - ம். 2. கலை கடந்துளார்; மாடு நண்ணுமா மலைக ளேறினர்; மலைக ளேறியோர்.

4. நவையி னண்ணலார், நாடு நண்ணினர் நாட வண்ணினர், நாட வண்ணினர் நவையினண்ணலார்; மேன்மையோர். (15)

வாநரவீரர் விதர்ப்பநாட்டை அடைந்து தேடியது

882. தசந வப்பெயர்ச் சரள சண்பகத்
தசந வப்புலத் தகணி நாடொரீஇ
உசந வப்பெயர்க் கவியு தித்தபேர்
இசைவி தர்ப்பநா டெளிதி னெய்தினர்.

(அவ் வாநர வீரர்கள்), தச நவம் பெயர்- தச நவம் என்ற பெயரை யுடைய, சரள சண்பகத்து - இனிய சண்பக மரங்கள் அடர்ந்த, அசந அ புலத்து - உணவளிக்கும் அந்த விளை நிலங்களைக் கொண்ட அகணி நாடு ஒரீஇ - மருத வளநாட்டை நீங்கி, உசநஅ பெயர் - உசநஸ் என்னும் பிரசித்திபெற்ற பெயரையுடைய, கவி - கவி என்னும் சுக்கிரபகவான், உதித்த - பிறந்த இடமான, பேர் இசை விதர்ப்ப நாடு - பெரும் புகழ் வாய்ந்த விதர்ப்பம் என்னும் நாட்டை, எளிதின் எய்தினர் - சிரமமின்றிப போயடைந்தனர்.

தச நவம்: தசார்ணவம் என்ற வடசொல்லின் திரிபு என்பர். சரளம் - இனிமை; (ஆரணிய. 716); சண்பக மலர், நன் மணம் மிகுதியுடைமையால் சரள சண்பகம் எனப்பட்டது. அகணி உள்ளிடம்;8 இங்கு மருத நிலம்; (சூடா.) ஒரீஇ: ஒருவி என்ற சொல் திரிந்து அள பெடுத்தது; இது சொல்லிசை யளபெடை; உசந: - இது சுக்கிரனுக்கு உள்ள பெயர்களுள் ஒன்று; 'உசநா பார்க்கவ: கவி' என்பது நிகண்டு; கவீ நாம் உச நா கவி; என்று கீதையிற் பகவான் தம்மைக் கூறிக் கொண்டமையுங் காண்க; (பகவத்கீதை. விசுவரூப அத்தியாயம்). இதனால், அசுர குருவும் நவ கிரகங்களுள் ஒருவருமான சுக்கிராசாரி யார் விதர்ப்ப நாட்டிற் பிறந்தவர் என்பது விளங்கும்.

பி-ம். 1. *தசமெனும் பெயர்த்தரள சண்பகத், தாழை சண்பகத், சால சண்பகத், சாலே சண்பகத், பெற்ற சண்பகத்.*
2. *புலத் தகல்நன் னாடொரீஇ;* (16)

883. வைத ருப்பமண் டலனில் வந்துபுக்
கெய்த ருப்பமத் தனையு மெய்தினர்
பெய்த ருப்பைநூல் பிறழு மேனியார்
செய்த வத்துளார் வடிவிற் றேடினர்.

வைதருப்ப மண்டலனில் - விதர்ப்பம் என்னும் நாட்டில், வந்து புக்கு - அவ்வீரர்கள் வந்து புகுந்து, எய்து அருப்பம் அத்தனையும் எய்தி னர் - அங்குள்ள அரண்கள் ஒன்றும் விடாமல் எல்லாவற்றையும்

அடைந்தவர்களாய், பெய் தருப்பை நூல் பிறழு மேனியார்-பூண்டுள்ள தருப்பைப் புல்லாலமைந்த அரை ஞாணும் பூணூலும் விளங்கும் சரீரத்தை யுடையவரும், செய் தவத்து உளார் - சிறந்த தவநெறி யுள்ளவர்களுமான, வடிவில் - அந்தண மாணவர்களின் வடிவத்தில், தேடினுர் - பிராட்டியைத் தேடிப் பார்த்தனர்.

வைதர்ப்பம்: விதர்ப்பம் அருப்பம்-அரண்; (நாமதீப.). தருப்பை-தருப்பைப் புல்லால் திரித்த ஒரு கயிறு: இது முஞ்சி எனப்படும்; அந்தண பிரமசாரிகளுக்கு உரியது; அந்தணப் பிரமசாரிகள் முஞ்சி யும் பூணூலும் தரிப்பவர்; 'முப்புரி நூலினன் முஞ்சியன்' என்று (பால. வேள்விப் : 22) : மாணவ உருவில் வந்த வாமன மூர்த்தியை நம் ஆசிரியர் கவிச்சக்கரவர்த்தியாரும், இவ்வாறே வாமன மாணிக்கு, பிரமன் முப்புரி நூலாகிய பூணூலும், தந்தையாகிய காசிபர் முஞ்சிப் புல் அரை ஞாணும் அளித்ததாகப் (பாகவத. 8 - 7 : 26, 29;) புராணப் பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளமை காணலாம். வாநர வீரர் அந்தண மாணவ வடிவிற் சென்றது. அவர்களை யாவரும் ஐயுற்றுத் தடை செய்யார் எனறு க்ருதி. மண்டலம் என்ற சொல் மண்டலன் என வந்தது. ஈற்றுப் போலி.

பி - ம். 1. வைத ருப்பமண் டலத்துள், மண்டலத்து, மண்டலனுள், நாட தனில் ; நாடதனுள்.

2. மெத்தணயு. 3. மெய்தருப்பை.

4. வடிவதேயினுர், வடிவு தேடினுர், வடிவ .மெய்தினுர், வடிவ தெயதினுர், தேய நண்ணினுர். (17)

வாநரவீரர் தண்டக வனம் சென்றது

884. அன்ன தன்மையா லறிஞர் நாடியச்
செந்நெல் வேலிசூழ் திருநன் னுடொரீஇத்
தன்னை யெண்ணுமத் தகைபு குந்துளார்
துன்னு தண்டகங் கடிது துன்னினுர்.

அறிஞர் - அறிவாளர்களான அவ்வாநர வீரர், அன்ன தன்மை யால் - அவ்விதமாக, நாடி-பிராட்டியை அங்கு தேடிப்பார்த்து, (அங்குக் காணுமையால்), அ செம் நெல் வேலி சூழ் - அந்த சிவப்புச் சம்பா வென்னும் நெல் விளையும் வயல்கள் சூழ்ந்த, திரு நல் நாடு ஒரீஇ - லக்ஷ்மிகரமான அழகிய விதர்ப்ப நாட்டை விட்டு நீங்கி, தன்னை எண்-ணும் அ தகை புகுந்துளார்-ஆத்மஸ்ரூபத்தைக் கண்டு அப்பிரம ஞான

நிலையாகிய ஸமாதியிற் புகுந்துள்ள யோகிகள், துன்னு - நிறைந்து வாழும். தண்டகம் - தண்டகாரணியத்தை, கடிது துன்னினர் - விரைவிற் சென்றடைந்தனர்.

வேலி - வரம்புகளால் வகுக்கப்பெற்ற நிலம்; 20 மாக்கள் கொண்ட விளை நிலப் பரப்பும் ஆம். திரு நல் நாடு; கண்டோர் தங்கியிருந்து வாழ விரும்பும் அழகிய நாடு, மிக்க அழகுடைய நாடு எனவும் கொள்ளலாம். தன்னை எண்ணும் அத்தகை: 'அஹம்பிர்மஹ்மா' அஸ்மி என்ற ஆத்ம ஞானநிலை. தண்டகம்; இக்ஷுவாகு வம்சத்து தோன்றித் தன் துர் நடத்தையால் நாடு கடத்தப்பெற்ற தண்டகன் என்னும் அரச குமாரனால் தெற்கே அமைக்கப்பெற்று ஆளப் பெற்றதும், பின் சுக்கிராசாரியர் சாபத்தால் கொடிய வனமானதும், பல முனிவர்கள் தவ நியமத்தில் வாழ்ந்து வந்ததுமான ஒரு பிரதேசம். இவ் வனத்தில் இராமபிரான், பிராட்டியோடும் தம்பி லக்ஷ்மணனோடும் பல ஆண்டுகள் தங்கியிருந்தான். அப்பெருமான் தங்கியிருந்த காலத்தில் நிகழ்ந்த சரித நிகழ்ச்சிகளைக் கூறும் இராமாயணப் பகுதிக்கு ஆரணியகாண்டம் என்னும் பெயர் வழங்குவது காண்க, இங்குக் குறிக்கப் பெற்ற தண்டகம் எது, என்பது ஆராயத் தக்கது.

பி - ம். 1. *அன்ன தன்மையார்; அறிஞர் நாடியே; அன்னர் நாடிடமருங்கு நாடியே.*
2. *செந்நெல் வேலிசூழ் சிந்து நாடொரீஇத்; திருந்து நாடொரீஇத்.*
3. *தன்ம மென்னுமங் கவர்பு குந்துளார்; தகை புரிந்துளார்; மங் கயர்த வத்துளார்.* (18)

வாநரவீரர் முண்டகத் துறை அடைந்தது

885. உண்ட கத்துளா ருறையு மைம்பொறிக்
கண்ட கர்க்கருங் கால னாயினர்
தண்ட கத்தையுந் தடவி யேகினர்
முண்ட கத்துறை கடிது முற்றினர்.

உண்டு அகத்துள் ஆர் உறையும் - புலன்களைத் துய்த்துக்கொண்டு உடம்பினுள் நிறைந்து வசிக்கின்ற, ஐம்பொறி கண்டகர்க்கு - ஐந்து இந்திரிய உணர்ச்சிகளாகிய (முட்போன்ற) கொடியோர்க்கு, அரும் காலன் ஆயினர் - வலிமை மிக்க யமனாக ஆகி, அப்பொறிகளை அழித்தவர்களான முனிவர் முதலிய தவ யோகிகள் வாழும், தண்டகத்தையும் தடவி - அத் தண்டக வனத்தையும், நெடுகத் தேடிப் பார்த்து, ஏகினர் - (அங்கும் பிராட்டியைக் காணாமல்), அவ்

விடம் விட்டு நீங்கிய அவ் வானர வீரர்கள். முண்டகத்துறை - முண்டகத்துறை என்னும் இடத்தில், கடிது முற்றினர் - விரைவிற் போய்த் தங்குவாராயினர்.

கண்டகர்-முட்போன்ற கொடியோர்; (ஆரணிய.485; 734, 972, 1079). முண்டகத்துறை: தாமரை முதலிய பூக்கள் நிறைந்து விளங்கும் நீர்த் துறையையுடைய ஒரு சூழல்; இது இன்னதென்று புலப்படவில்லை. வான்மீகத்தில் இங்கு இத்தகைய செழும் பிரதேசம் ஒன்று குறிக்கப் பெறவில்லை.

பி - ம். 1. *உண்ட கத்துளா யுழறும், உண்ட கத்திரோ டுறையும்.*
2. *கண்ட கர்த்தெறுவ் ; காத லார்கடாம்.*
3. *தடவி யெய்தினர், தடவியப் புறம்.*
4. *துறை முடுகி னாடினர்.* (19)

முண்டகத்துறையின் சிறப்பு

886. அள்ள னீரெலா மமரர் மாதரார்
கொள்ளை மாமுலைக் கலவை கோதையிற்
கள்ளு நாறலிற் கமல வேலிவாழ்
புள்ளு மீனுணு புலவு தீர்தலால்.

அள்ளல் நீர் எலாம் - சேற்றோடு கலந்த நீர் எல்லாம், அமரர் மாதரார் - அங்கு வந்து நீராடும் தெய்வமகளிர் தம், மா முலை - பருத்த தனங்களில் பூசப்பெற்ற, கொள்ளை கலவை - மிகுதியான களப சந்தனங்களுள், கோதையில் கள்ளும் - மலர் மாலைகளில் இருந்த தேனும், நாறலில் - நறுமணம் கமழப் பெற்றமையால், கமல வேலி வாழ் - அம் முண்டகத்துறையில் வசித்து வந்த, புள்ளும் - நீர்வாழ் பறவைகளும், புலவு தீர்தலால் - புலால் நாற்றம் நீங்கிவிட, மீன் உணு - அங்குள்ள மீன்களைப் பிடித்து அருந்துவன அல்ல.

அள்ளல் - சேறு அள்ளற் பழனத் தரக்காம்பல் (முத்தொள்.). அம்முண்டகத் துறையில் வந்து நீராடும் தேவமகளிர் தம் தனங்களிற் பூசியிருந்த சந்தனக் கலவைகள், அணிந்திருந்த மாலைகளிலிருந்த தேன் முதலிய, நறுமணம் மிகுதியும் அதில் கலந்துள்ளமையால், அம் முண்டகத் துறையாகிய நீர்த்தடம் நறுமணங் கமழ்ந்தது ; அதில் வாழ்ந்து வந்த மீன்களும் தம் இயற்கையான புலவு நாற்றம் நீங்கப் பெற்றமையால் அம் மீன்களை அங்குள்ள நீர்வாழ் பறவைகள் பிடித்து அருந்துவன அல்ல என்பதாம்; (ஒப்பு.): 'புதுப் புனல்

குடையு மாதர் பூவொடு நாவி பூத்த, கதுப்புறு வெறியே நாறுங் கருங் கடற் றரங்க மென்றல்' (பால. நாட்டுப் ; 11).

1. தேனுஞ் சாந்தமு மான்மதச் செறிநறுஞ் சேறும்
வான நாண்மலர்க் கற்பக மலர்களும் வயமாத்
தான வாரியி னீரொடு மடுத்தலிற் றழீஇய
மீனுந் தானுமோர் வெறிமணங் கமழுமாம் வேலே.

(சுந்தர- 112)

3. குரும்பைமென் முலையா ராடக் கூந்தலி னறவந் தோய்ந்த
இரும்புன லாறு பாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க்
கருங்கடல் புலவு நீங்கி நறுமணங் கமழும் ..........

(நைடத. நாட்டுப் : 11.)

இதனால் புலால் உண்ணும் பிராணிகள் நறுமண முள்ளனவற்றை நாடா என்பது பெறப்படும். கொள்ளை - மிகுதி ; இச்சொல் கொங்கு நாட்டில் இப்பொருளிற் பெரிதும் பயிலபபெறும். கமல வேலி : முண்டகத் துறை என்பதாம் ; முண்டகம் - தாமரை. இதனால் முண்டகத்துறை என்பது ஒரு பிரதேசம் அன்று ; ஒரு தாமரைத் தடாகம் எனக் கொள்ளற்கே இடமாதல் காண்க.

பி - ம். 1. *அள்ளி நீரெலாம், அள்ளு நீரெலாம்.*
2. *கொள்ளு மாமுலை ; துள்ளு மாமுலைக் கலவை தோய்கையிற், கொள்ளை யாடலிற் கலவை சேர்குயக் ;*
3. *சமலவேலிசூழ்.*
4. *புலவு தீர்கலால்.*

(20)

887. குஞ்ச ரங்குடைந் தொழுகு கொட்பதால்
விஞ்சை மன்னர்பால் விரக மங்கைமார்
நஞ்சு வீணையி னடத்து பாடலான்
அஞ்சு வார்கணி ரருவி யாறரோ.

விஞ்சை மன்னர் பால் - வித்தியாதர வேந்தரிடத்து, விரக மங்கை மார் - தாம் கொண்ட பிரிவுத் துயரால் வருந்தும் அங்குள்ள வித்தியா தர மகளிர், நஞ்சு - அப் பிரிவுக் காற்றாது மனம் நொந்து இளகி, வீணையின் நடத்து பாடலால் - தம் வீணைகளைக் கொண்டு மிழற்றும் பாடல்களைக் கேட்டு, அஞ்சுவார் - அஞ்சிய அங்குள்ள மகளிர், கண் நீர் அருவி ஆறு - கண்ணீர் அருவிபோற் பெருகி ஓடும் ஆற்றில், குஞ்சரம் - யானைகள், குடைந்து ஒழுகும் கொட்பு அது -

அமிழ்ந்து முழுகி நீராடும் தன்மை யுடையது அம் முண்டகத்துறை. ஆல் : அரோ ஈற்றசை.

வித்தியாதர மகளிர் வீணையிற் பாடிய விரகதாபப் பாடலைக் கேட்ட அம் முண்டகத்துறையில் வாழும் மகளிர் தாமும் அத்தகைய பிரிவுத் துயருக்கு உள்ளாதல் கூடுமோ என்று அஞ்சுவார்கள். அஞ்சிய நிலையில், அன்னோர் சிந்திய கண்ணீர் அருவியாகப் பெருகி ஆறுக ஓடும். அவ்வாறு யானைகள் திளைத்து நீராடும் தன்மை யுடைய தாகும் என்பதாம். விரகதாபத்தில் உள்ளாரை வீணை முதலிய பாடலின் இன்னிசை விடம்போல வருத்தும்; "செவியிற் புகு நாம யாழ்த், தேளி ஞற்றிகைப் பெய்துகின் றார்சிலர்" (சுந்தர. 271); "அளந்த பாடல் வெவ் வரவுதஞ் செவிபுக வலம்வர உயிர்க்கின்றார்" (சுந்தர. 287) என்றமை இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.

பி - ம். 1. குஞ்சரங்களிற் குழுவுசோலைவாய், குஞ்ச ரங்குளித் தொழுகு கொட்பவாய், குஞ்ச ரங்களித் தோக்குகொல்லை யாய்; களித்தாடு; களித்தொழுகு.

2. விஞ்சைமன்னர் தாம், மேவு மங்கைமார்; விரக மங்கையார், விரத மங்கைமார்.

3. நஞ்ச வீணையின், நைஞ்சுவீணையின், னவின்று பாடலான், நறவு பாடலான், நடத்து பாடல் கேட், நவின்று பாடலால்.

4. அஞ்சு வார்பிரிந் தயரும் பேதையோர். (21)

888. கமுக வார்நெடுங் கனக வூசலில்
குமுத வாயினர் குயிலை யேசுவார்
சமுக வாளியுந் தனுவும் வாண்முகத்
தமுத பாடலார் மருவி யாடுவார்.

(அங்கு) குமுத வாயினர் - செவ்வல்லி மலர்போன்ற வாயை யுடையவர்களும், குயிலை ஏசுவார் - (தம் குரலால்) குயிலைப் பழிப் பவர்களும், சமுகம் வாளியும் - கூட்டமான அம்புகள் போன்ற கண் களையும், தனுவும் - விற்கள் போன்ற புருவங்களையுங் கொண்ட, வாள் முகத்து - ஒளி தங்கிய முகங்களையுடைய, அமுத பாடலார் - தேவாமிர்தம் போன்ற (இனிய) பாடல்களைப் பாடுகின்றவர்களான மகளிர், கமுக வார் நெடும் கனக ஊசலில் - பாக்கு மரங்களிற் பிணைத்துத் தொங்கவிட்ட உயர்ந்து நீண்ட பொன்னூஞ்சல்களில், மருவி ஆடுவார் - பொருந்தி யிருந்து ஆடி மகிழ்வார்கள்,

வாளி தனு என்பன உவமை ஆகுபெயர்களாய்க் கண்களேயும், புருவங்களேயுங் குறிப்பன. கமுகம், தனு அமுதம் இவை வடசொற் களின் திரிபுகள் ; குமுதம், கனகம் ; தற்சமமான வடசொற்கள்.

பி - ம். 1. *கமுக மேலிடும், கமுக மாநெடும், கமுகின் மாடுறும்,*
3. *வாழ்முகத்,*
4. *ரழகி ளூடுவார், ரருவிகாடுவார், மருகி யாடுவார்; அமுத பாடலே டருவி பாயுமால்.* (22)

வானரவீரர் முண்டகத்துறையை நீங்கி அப்பாற் சென்றது

889. இனைய வாயவொண் டுறையை யெய்தினர்
நினையும் வேலைவாய் நெடிது தேடுவார்
வனையும் வார்குழன் மாதைக் கண்டிலார்
புனையு நோயினர் கடிது போயினர்.

இனைய ஆய - இத்தன்மையதான, ஒள் துறையை எய்தினர் - இயற்கை யழகு அமைந்த அம் முண்டகத் துறையை அடைந்தவரும், நெடிது தேடுவார் - நெடுங்காலம் அல்லது தூரம் தேடி வந்தவரும், வனையும் வார் குழல் - அலங்கரிக்கப்பெற்ற நீண்ட கூந்தலையுடைய, மாதை - பிராட்டியை, கண்டிலார் - காணுதவர்களுமான அவ் வானர வீரர்கள், புனையும் நோயினர் - மேற்கொண்ட துயரையுடையவர் களாய், நினையும் வேலை வாய்-ஆலோசித்துக் கொண்டிருந்த சமயத்தில், கடிது போயினர் - விரைவில் (அவ்விடம் விட்டு அப்புறம் தேடச்) சென்றனர்.

வனை வார்குழல் அது ஐம்பால் எனப் பெறுவதும் நோக்குக. நோயி னர் போயினர் என்றது பிராஸம் என்னும் சொல்லணியில் அமைந் துள்ளது. புனையும் நோயினர் : இது வடமொழி நடை. வேலை - வேளை என்பதன் திரிபு.

பி - ம். 1. *இனையதாய் ; வண்டுறைவை ; வண் டுறைவி னெங்கணும்.*
2. *நினையு முன்னரே நெடித தேடினர் ; நெடித தேடுவார்.*
3. *வினைய வார் குழற் திருவை மேவலார்.*
4. *அனைய தாமிட மகலப் போயினர்.* (23)

**890.** நீண்ட மேனியா னெடிய தாளினின்
றீண்டு கங்கைவந் திழிவ தென்னலாய்ப்
பாண்டு வம்மலை படர்வி சும்பினைத்
தீண்டு கின்றதண் சிகர மெய்தினர்.

நீண்ட மேனியான் - திரிவிக்கிரமனாய் நெடிய வடிவெடுத்த திருமாலின், நெடிய தாளின் நின்று-பெரிய திருவடியினின்று, ஈண்டு-இவ்விடத்தில், கங்கை வந்து இழிவது என்னல் ஆய் - ஆகாயகங்கை வந்து வீழ்கின்றதோ என்று சொல்லும்படியாய், பாண்டு அம் மலை - பாண்டு என்னும் அழகிய மலையின், படர் விசும்பினை தீண்டுகின்ற - பரவிய ஆகாயத்தைப் போய்த் தொடுவதாய் உயர்ந்துள்ள, தண் சிகரம் எய்தினர் - குளிர்ந்த சிகரத்தை (அவ் வானர வீரர்) போய் அடைந்தனர்.

பாண்டுமலை வெண்ணிறமாதலின், அதன் தோற்றம் வானிலிருந்து இழிந்த வெண்ணிறத்த ஆகாய கங்கைப் புனலின் தோற்றத்திற்கு உவமிக்கப் பெற்றது. திரிவிக்கிரமனாய் நீண்ட திருமால் ஒரு காலைத் தூக்கி, அவ்வடியால் வானை அளந்தகாலை, பிரமதேவர் தம் கமண்டலுவில் வைத்திருந்த தீர்த்தத்தால் அத்திரிவிக்கிரமன் திருவடியை நீராட்டிப் பூசனை புரிந்தார் என்பதும், அப்புனலே கங்கா நதியாகப் பெருகிப் புவியில் வந்தது என்பதும் இங்குக் குறிக்கப்பட்டன. முன் பாலகாண்டம், அகலிகைப் படலத்தில் உள்ள கங்காவதார சரிதம் கூறியவிடத்து இச் செய்தி கூறப் பெறாதது இங்கு நோக்கத்தக்கது. ஈண்டு கங்கை : ஈண்டுக் கங்கை யெனற்பாலது எதுகை நயம் நோக்கி இயல்பாய் நின்றது. இச் செய்யுளின் முதலிரண்டு அடிகள் தற்குறிப்பேற்றவணியின் பாற்படும்.

பி - ம். 1. *நீண்ட நேமியான்; நெடிய தாளின் வந்(த), நெடிய தாளிடைப்.*

2. *பூண்ட கங்கைபோ லருவி பாய்தரும், ஈண்டு கங்கை தா னிழிவ தென்னலாம்.*

3. *பாண்டு மாமலை பற்றி வானிடைத்,*

4. *தீண்டு கின்றதென், தீண்டு கின்றதன் | தீண்டு கின்றதற்; சிகர மண்ணினர்.* (24)

891. இருள றுத்துமீ தெழுந்த தெண்ணிலா
மருளு றுத்துவண் சுடர்வ ழங்கலால்
அருளு றுத்திலா வடல ரக்கன்மேல்
உருளு றுத்ததிண் கயிலை யொத்ததால்.

(அப் பாண்டுமலை), இருள் அறுத்து - உலகிற் பரவிய இருட்டைத் தாக்கி ஒழித்து, மீது எழுந்த - வான்மீது எழுந்து தோன்றிய, தெள் நிலா - தெளிவான சந்திரன், மருள் உறுத்து - மயக்கம் அல்லது வியப்பை உண்டாக்கும், வண் சுடர் வழங்கல் ஆல் - செழிய நிலவின் ஒளியை வீசுதலால், அருள் உறுத்திலா - மனத்தில் அருள் (சிறிதும்) தோன்றிலாத, அடல் அரக்கன் மேல் - வலிய அரக்கனான இரா வணன் மீது, உருள் உறுத்த - அவன் கீழே விழுந்து உருளுமாறு அழுத்திய, திண் கயிலை - வலிய கயிலாய மலையை, ஒத்தது - ஒப்பாக விளங்கியது. ஆல் : ஈற்றசை.

பாண்டுமலை அதன் அவ் வெண்ணிறத்தால் அக் கயிலைமலையையும் நிகர்ப்பதாகும் என்பதாம். கயிலை பனியால் மூடுண்டதாகலின், வெண்ணிறமானமை பற்றி அதனை வெள்ளி வெற்பு எனவும் கூறுவதுண்டு. கயிலைக்கு ஏற்றங்கூறிய ஆசிரியர் வலிய அரக்கனும், இச் சரித சம்பந்தமான கொடியோனுமான இராவணனைத் தன்கீழ்க் கிடத்தி அழுத்திய மலை எனச் சிறப்பித்த நயம் நோக்கத்தக்கதாம். இக் கயிலைமலையின் கீழ்ப்பட்டு அழுந்தி இராவணன் வருந்தியதையும், பின் சிவபிரான் அவனை விடுவித்து அருள் புரிந்தமையையும் தாம் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் தோறும் திருஞானசம்பந்த மூர்த்திப் பெருமானும் திருநாவுக்கரசப் பெருந்தகையுங் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

பி - ம். 1. *இருளறுத்த, இருளுறுத்த ; தண்ணிலா, நன்னிலா.*
2. *மருளறுத்த, மருளறுத்தவான்.*
3. *லரக்கன்முன்.*
4. *சீன் கயிலை,*

வேறு

892. விண்ணுற நிவந்த சோதி
வெள்ளிய குன்ற மேவிக்
கண்ணுற நோக்க லுற்ருர்
களியுறக் கனிந்த காமர்ப்
பண்ணுறு கிளவிச் செவ்வாய்ப்
படையுறு நோக்கி னுளை
எண்ணுறு திறத்துங் காணு
ரிடருறு மனத்த ரெய்த்தார்.

விண் உற நிவந்த - வானத்தைப் போய்ப் பொருந்துமாறு மேலோங்கி நின்ற, சோதி - ஒளியையுடைய, வெள்ளிய குன்றம் மேவி- வெண்ணிறமான அப் பாண்டுமலையை அடைந்து, கண் உற நோக்கல் உற்ருர் - (அங்குப்) பிராட்டியைக் காணத் தொடங்கிய அவ்வாநர வீரர்கள், களி உற - மகிழ்ச்சி யடையும்படி, கனிந்த - முற்றிய, காமர் பண் உறு - விரும்பத்தக்க இசைப்பாடல் போன்ற, கிளவி செவ் வாய் - சொற்களைப் பேசும் சிவந்த வாயையும், படை உறு நோக்கி னுளை - வேல் வாள் என்னும் ஆயுதங்கள் போன்ற கண்களையுமுடைய பிராட்டியை, எண் உறு திறத்தும் - தாம் கருதிப் பார்த்த இடங்களி லெல்லாம், காணுர் - காணுதவர்களாய், இடர் உறு மனத்தர் - துய ருற்ற மனத்தினர்களாய், எய்த்தார் - தளர்வுற்றனர்.

கண்ணுற நோக்கல் - நன்ருகப் பார்த்தலும் ஆம்; படையுறு : உறு, உவம வாசகம்.

பி - ம். 1. *விண்ணுற நிமிர்ந்த; வெள்ளியங் குன்ற; குன்றை மேவி, குன்றை யெய்தி.*

2. *கனிந்த காமப், கலந்த காமப்.*

4. *எண்ணுறைத் திறத்தன், எண்ணுறுத் தியாண்டுங் ; திறங்யெப் புறத்தில் போனார்; ரிரங்குறு மனத்த ராஞர்; மனத்த ரொத்தார்.*

வாநரவீரர் கோதாவரி நதியை யடைந்தது

893. ஊதைபோல் விசையின் வெங்க
ணுழுவைபோல் வயவ ரோங்கல்
ஆதியை யகன்று செல்வா
ரரக்கனுல் வஞ்சிப் புண்ட
சீதைபோ கின்ருள் கூந்தல்
வழீஇவந்து புவனஞ் சேர்ந்த
கோதைபோற் கிடந்த கோதா
வரியினைக் குறுகிச் சென்ருர்.

ஊதை போல் விசையின் - காற்றைப்போல வேகத்தைக் கொண்ட, வெம் கண் - கொடுமை அல்லது அச்சந்தரும் கண்களை யுடைய, உழுவை போல் வயவர் - புலி போன்ற வீரர்களான அவ் வாநர வீரர், ஓங்கல் ஆதியை அகன்று - அப்பாண்டு மலையை முதலாகக் கொண்ட இடங்களை விட்டு நீங்கி, செல்வார் - செல்கிறவர் கள், அரக்கனுல் வஞ்சிப்பு உண்ட - இராக்கதனுகிய இராவணனுல் வஞ்சித்து அபகரிக்கப்பட்ட, சீதை போகின்ருள் - போகின்ற சீதாப் பிராட்டியின், கூந்தல் வழீஇ வந்து - கூந்தலினின்று நழுவி வந்து, புவனம் சேர்ந்த - பூமியை அடைந்த, கோதை போல் கிடந்த - ஒரு மலர்மாலை போல விளங்கியிருந்த, கோதாவரியினை - கோதாவரி என்னும் ஆற்றை, குறுகிச் சென்ருர் - அணுகிச் சென்றனர்.

ஊதை - சீதக் காற்றும் ஆம்; அது சீறி வீசும் ஆதலின் வேகத் திற்கு உவமை. வெங்கண் என்பதற்கே கொடுமை எனும் பொருள் உண்டு; 'வெங் கண் மா' (2) என்றமை காண்க. ஓங்கல் ஆதி: என்பதற்கு மலையின் அடிவாரம் எனப் பொருள் கொண்டாரும் உளர். வழீஇ; வழுவு என்ற சொல் திரிந்த அளபெடை; வழுவுதல் - நழுவி விழுதல்.

பி - ம். 1. விசையா வெங்கண்; வேங்கை யுழுவை.

2. ஆதிபோ லகன்று, ஆதல ராகிப் போஞா ரக்கணங் கெடுத்தப் போகச்; அரக்கனுல் வரிப்புன் டக்காள்.

3. சீதைபோங் காலை; கூந்தல் வழிவந்து; புவனஞ்சேர்ந்து; சீதை தன் கூந்தன்மீது வழுவியே புவனஞ்சேர்ந்த.

4. கோதா விரியினை.

கோதாவரிவர்ணனை

894. எழுகின்ற திரையிற் ருகி
யிழிகின்ற மணிநீர் யாறு
தொழுகின்ற சனகன் வேள்வி
தொடங்கிய சுருதிச் சொல்லால்
உழுகின்ற பொழுதி னீன்ற
வொருமகட் கிரங்கி ஞாலம்
அழுகின்ற கலுழி வாரி
யாமெனப் பொலிந்த தன்றே.

எழுகின்ற திரையிற்று ஆகி - மேல் எழும்பி விழுகின்ற அலைகளையுடையதாகி, இழிகின்ற - மலையிலிருந்து கீழ் இறங்கி விழுகின்ற, மணி நீர் யாறு - (முத்துப்போல் அல்லது நீலமணிபோல்) தெளிந்த நீரையுடைய அந்தக் கோதாவரி நதி, தொழுகின்ற - யாவராலும் தொழப்படுகின்ற, (பெருமை வாய்ந்த) சனகன் வேள்வி தொடங்கிய - சனகராஜன் யாகத்தைத் தொடங்கிச் செய்யும் பொருட்டு, சுருதி சொல்லால் உழுகின்ற பொழுதின் - வேத மந்திரங்களைச் சொல்லி ஏர் கொண்டு உழுத காலத்தில், ஈன்ற - அந்த ஏரின் படைச்சாலின் வழியே புவிமகள் பெற்றளித்த, ஒருமகட்கு - ஒப்பற்ற மகளான அச்சீதைக்கு, இரங்கி - இராவணனால் ஏற்பட்ட துன்பத்திற்கு வருந்தி, ஞாலம் - அவளை ஈன்ற தாயாகிய அப்புவி மாது, அழுகின்ற - அழுததால் உண்டான, கலுழிவாரி ஆம் என - கலங்கலான கண்ணீர்ப் பெருக்கே போல, பொலிந்தது - விளங்கியது. அன்று. ஏ, ஈற்றசைகள்.

யாறு பொலிந்தது என இயைத்துப் பொருள் முடிவு செய்க. மணிநீர் : 'மணிநீரும் மண்ணும்' (குறள் 742): மணிநீரிலஞ்சி. (மணி. 4: 7). சீதை - சீதா என்னும் வடசொல் படைச்சால் என்னும் பொருளது; படைச்சாலின் இடமாகப் பிறந்தமையால் பிராட்டிக்குச் சீதை என்பது காரணப் பெயராயிற்று. இச்செய்தி, ' உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரொளிபோல், பொழிகின்ற புவிமடந்தை யுருவெளிப்பட் டெனப்புணரி, எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந்தொதுங்கத், தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்' (பால. கார்முகப்: 17) என்ற சதானந்த முனிவர் வாக்கால் விளங்கும். சனகராஜன் அறிவிற் சிறந்த ராஜரிஷியாதலின் யோகியர்களும் முனிவர்கள் முதலிய பெரியோர்களும் வந்து தொழுதற்கேற்ற சிறப்புடையவன் என்பதாம்.

கலுழி-கலங்கல் நீர். கோதாவரி இராமலக்ஷ்மணர் பிராட்டி முதலினோர் வனம் வர நேர்ந்த துயருக்கு ஆற்ருது மூன் அழுததாக உள்ள நிலை ஆரணிய: 222.

பி-ம். 1. திரைபி ருமி, மணி நீராறு.
3. பொழுதிற் ரேன்று மொருமகட் குருமி.
4. கலுழி மாரி; அழுகின்ற வாறே போல மன்பினுல்; அழுகின்ற கண்ணீர் பாயு மலவை போற். (28)

895. ஆசில்பே ருலகிற் காண்போர்
அளவைநூ லெனலு மாகிக்
காசொடு கனகந் தூவிக்
கவினுறக் கிடந்த கான்யா
றேசில்போ ரரக்கன் மார்பி
னிடைபறித் தெருவை வேந்தன்
வீசிய வடக மீக்கோ
ளீதென விளங்கிற் றன்றே.

காசொடு கனகம் தூவி - இரத்தினங்களோடு பொன்னையும் தன் அலைகளால் வீசிக் கொண்டு, கவின் உற கிடந்த கான்யாறு - அழகு பொருந்தி ஓடிக் கொண்டு காட்டிடையே சென்ற அந்தக் கோதாவரி என்னும் நதி, ஆசு இல் பேர் உலகில் - குற்றமற்ற இந்தப் பெரிய புவியினிடத்து, காண்போர் - அதனைக் காண்பவர், அளவைநூல் எனலும் ஆகி - தருக்க சாஸ்திரம் போல விளங்கி, எருவை வேந்தன் - கழுகுகளுக்கு அரசனான சடாயு, ஏசு இல் போர் அரக்கன் மார்பின் இடை - பழிப்புக்கிடமில்லாத போரிற் சிறந்த இராக்கதனாகிய இராவணன் மார்பினின்றும், பறித்து வீசிய - பிடுங்கி அப்பால் வீசியெறிந்த, மீக்கோள் வடகம் ஈது என - மேலே அணியப் பெற்ற இரத்தினவாரமோ இது என்று சொல்லத்தக்கதாய், விளங்கிற்று- விளங்கியது. அன்று, ஏ: ஈற்றிசைகள்,

கோதாவரிக்குத் தருக்க நூலை உவமித்தது: தருக்க சாஸ்திரம், வாதப் பிரதிவாதங்களோடு பலவிதப் பொருள்களையும் ஆழ்ந்த கருத்துக்களையும் எடுத்துக் காட்டி விளக்கும் சிறப்பு நோக்கி என்க. இனி அளவை நூல் என்பதற்கு அளக்கும் நூல் என்றும், வடகம் என்பதற்கு மேலாடை என்றும் மீக்கோள் என்பதற்கு மேற்போர்வை அல்லது சால்வை என்றும் பொருள் கூறினரும் உளர்; இங்கு, சடாயு, இராவணனுடைய "முத்தார மார்பிற் கவசத்தையும் மூட்டறுத்தான்'

(ஆரணிய·917) என்ற தல்லால் அவன் மேற்போர்வை அங்குக்குறிக்கப் பெருமை நோக்கற் பாலதாம். வடகம் : வடம்; க, எழுத்துப் பேறு; அடுத்த செய்யுளில் சுவண்ம் என்பது சுவணகம் என வருவதுபோல.

பி-ம். 1. *றா லென்ன வாவிக்.*

2. *காசொடு கனகத் தூளிக்; கானில் யாறு.*

3. *ஏசுபே ரரக்கன்.*

4. *வீசிய கவசமீக்கோன்; விதுவென; வடகம் வீழ்ந்து கிடந்த போல் விளங்கிற் றம்மா.* (29)

வானரவீரர் சுவண நதித்துறையுடைந்தது

896. அந்நதி முழுது நாடி
யாய்வளை மயிலை யாண்டும்
சந்நிதி யுற்றி லாதார்
நெடிதுபின் றவிரச் சென்றார்
இன்னதீ திலாத தீதென்
றியாவையு மெண்ணுங் கோளார்
சொன்னதீ வினைக டீர்க்குஞ்
சுவணகத் துறையிற் புக்கார்.

இன்னது ஈது - இங்கு உள்ளது இது; இலாதது ஈது - இங்கில்லாதது இது என்று, யாவையும் - எல்லாவற்றையும், எண்ணும் கோளார் - ஆராய்ந்து பார்த்து அறியும் புத்தி வன்மையுடைய அவ் வானர வீரர்', அ நதி முழுதும் நாடி - அந்தக் கோதாவரி நதிப்புறம் முழுவதும் தேடிப்பார்த்து, ஆய்வளை மயிலை - சிறந்த வளையல்கள் அணிந்த மயில் போன்ற பிராட்டியை, யாண்டும் - எவ்விடத்திலும், சந்நிதியுற்றிலாதார் – எதிரில் காணப் பெறாத அவர்கள், நெடிது பின் தவிர சென்றார் - நெடியவழி பின்னே செல்ல, சொன்ன தீவினைகள் தீர்க்கும்-நூல்களிற் கூறிய பாவங்களை யெல்லாம் (தன்னிற்படிவோர்க்குப்) போக்கும், சுவணகம் துறையிற் புக்கார்-சுவணமென்னும் சோணை நதியின் இடத்திற் புகுந்தனர்.

சுவணகம் : சுவணம் என்பதில் க. என்பது எழுத்துப் பேறு. சுவணம் : இது சோணம் என்வும் வழங்கும்; சோணம் ஒருநதி : நாடவிட்டபடலத்தில் சுக்கிரீவன் குறிப்பிட்ட தான சோணநதி இதுவே ஆகும்; (472.); இந்தச் சோணநதி பால. அகலிகை; 1. இலும்

குறிப்பிடப் பெற்றமை காணலாம்; அது இந்நதியேயோ என்பது ஆராயத் தக்கதாம். சந்நிதி; ஸந்நிதி என்ற வடசொல்லின் திரிபு;

பி-ம். 1. *முழுவதுந் தேடி; யாண்டுச்* 2. *சந்நதி.*
3. *இன்னதி யாவ தீதென்; யாவையு மென்று சொன்னார்.*
4. *துறையுட் புக்கார்.* (30)

வானரவீரர் குலிந்த நாடுகள் கடந்து கொங்கணத்து அருந்ததிமலை யடைந்தது

897. சுரும்பொடு தேனும் வண்டு
மன்னமுந் துவன்றிப் புள்ளும்
கரும்பொடு செந்நெற் காடுங்
கமலவா விகளு மல்கிப்
பெரும்புனன் மருதஞ் சூழ்ந்த
கிடக்கைபின் கிடக்கச் சென்றார்
குரும்பைநீர் முரஞ்சுஞ் சோலைக்
குலிந்தமும் புறத்துக் கொண்டார்

சுரும்பொடு தேனும் வண்டும் - சுரும்பு, தேன் வண்டு என்னும் பலவகையான வண்டுகளும், அன்னமும் - அன்னப் பறவைகளும், புள்ளும்-மற்றப் பறவைகளும், துவன்றி-நெருங்கி, கரும்பொடு செநெல் காடும்-கரும்பும் செந்நெல் என்னும் சிவப்புச் சம்பாப் பயிர்கள் அடர்ந்த நன்செய் இடங்களும், கமல வாவிகளும்-தாமரைத் தடாகங்களும், மல்கி-நிறைந்ததாகி, பெரும்புனல் மருதம் சூழ்ந்த - பெரிய நீர் வளங்கொண்ட மருத நிலம் சூழப் பெற்ற, கிடக்கை பின் கிடக்க-இடங்கள் தம் பின்னே இருக்க, சென்றார் - வழிமேற் சென்ற அவ்வானர வீரர், குரும்பை நீர் - இளநீர்கள், முரஞ்சும் சோலை குலிந்தமும் - நிரம்பிய தென்னஞ்சோலைகளையுடைய குலிந்த நாட்டையும், புறத்து கொண்டார் - தேடி, அது பின்னாக மேற்சென்றார்கள்,

சுரும்பு, தேன், வண்டு இவை வண்டுகளின் சாதி பேதங்களைக் குறிக்கும் சொற்கள். இச்செய்யுளில், நிலம். நீர், பூ, புள், மரம் முதலியவற்றால் குலிந்த நாட்டின் மருதத்திணை வளங் கூறப்பெற்றது. குரும்பை - தெங்கு, பனை ஆகிய மரங்களின் இளங்காய். கிடக்கை - நிலப்பரப்பு (பி-ங்). முரஞ்சுதல் - நிரம்புதல். குலிந்தம்; குலிந்நாடு, கேரள நாட்டின் வடக்கே மேற்கடற் கரையை யடுத்ததும் பழைய ஐம்பத்தாறு தேயங்களுள் ஒன்றானதும் ஆம்; இது குளிந்தம் எனவும்

வழங்கும்; குலிந்தர் என ஒரு தேசத் தரசர் குறிப்பிடப்பட்டமை காண்க. (பால. உலாவியற் : 47.)

பி - ம். 1. *தவன்ற புன்னும்.*

2. *யாவிகளும் பல்லிப் ; பல்நீர்ப்.*

3. *சூழ்ந்த விடத்தைப்பின் லிடத்திப் போனர் ; லிடக்கப் போனர்.*

4. *நீருரஞ்சஞ்சோலை, நீரமுதச்சோலை, கமுகச்சோலை ; குலிங்கமும் ; புறத்துக் கண்டார்.* (31)

898. கொங்கண மேழு நீங்கிக்
குடகடற் றரளக் குப்பை
சங்கணி பான னெய்த
றண்புன றவிர வேகித்
திங்களின் கொழுந்து சுற்றுஞ்
சிமயநீள் கோட்டுத் தேவர்
அங்கைகள் கூப்ப நின்ற
வருந்ததிக் கருக ரானர்.

(அவ் வானரவீரர்), கொங்கணம் ஏழும் நீங்கி - கொங்கண நாட்டின் ஏழுபிரிவுகளையுங் கடந்து, குடகடல் - மேற்குக் கடலில் உண்டான, தரளக்குப்பை - முத்துக்குவியல்கள், சங்கு - சங்குகள், அணிபானல் - அழகிய கருங்குவளைமலர்கள், நெய்தல்-நெய்தற்பூக்கள், ஆகிய இவை நிறைந்த, தண்புனல் தவிர ஏகி - குளிர்ந்த நீர்ப்பகுதிகளை நீங்கிச்சென்று, திங்களின் கொழுந்து சுற்றும் - சந்திரனின் கொழுந்தாகிய நிலவு சூழ்ந்து விளங்கும், சிமய-சிகரங்களையுடைய, நீள் கோட்டு- உயர்ந்த கொடுமுடிகளைக் கொண்டதும், தேவர் அங்கைகள் கூப்பநின்ற- தேவர்கள் தம் அழகியகைகளைக் குவித்து வணங்கும்படி அவ்வானுலகுக்கு மேலாக ஓங்கி நின்ற, அருந்ததிக்கு - அருந்ததி என்னும் மலைக்கு, அருகர் ஆனர் - அருகில் போய்ச்சேர்ந்தனர்.

கொங்கணம் ஏழு: கொங்கணநாடு ஏழுபிரிவுகளைக் கொண்டது என்பது 'ஏழ்திறற் கொங்கணர்' (பால. உலாவியற்; 49) என்பதாலும் சோழ சிலாசாஸனங்களாலும் விளங்கக் காணலாம். இது பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த வடகன்னடம் என்னும் மாவட்டத்தது. இது கொண்கானம் எனவும் வழங்கும்; இது பண்டை ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று ; (இது தமிழ்ஒழிபதினேழு நிலங்களில் ஒன்றாக, நன். சூ. 272 உரை கூறுவதும் காண்க). திங்களின்

குறிப்பிடப் பெற்றமை காணலாம்; அது இந்நதியேயோ என்பது ஆராயத் தக்கதாம். சந்நிதி; ஸந்நிதி என்ற வடசொல்லின் திரிபு;

பி-ம். 1. முழுது தேடி; யாண்டுச் 2. சந்நதி.
3. இன்னதி யாவ தீதென்; யாவையு மென்று கொள்ளார்.
4. துறையுட் புக்கார். (30)

வாநரவீரர் குலிந்த நாடுகள் கடந்து கொங்கணத்து அருந்ததிமலை யடைந்தது

897. சுரும்பொடு தேனும் வண்டு
மன்னமுந் துவன்றிப் புள்ளும்
கரும்பொடு செந்நெற் காடுங்
கமலவா விகளு மல்கிப்
பெரும்புனன் மருதஞ் சூழ்ந்த
கிடக்கைபின் கிடக்கச் சென்றார்
குரும்பைநீர் முரஞ்சுஞ் சோலைக்
குலிந்தமும் புறத்துக் கொண்டார்

சுரும்பொடு தேனும் வண்டும் - சுரும்பு, தேன் வண்டு என்னும் பலவகையான வண்டுகளும், அன்னமும் - அன்னப் பறவைகளும், புள்ளும்-மற்றப் பறவைகளும், துவன்றி-நெருங்கி, கரும்பொடு செநெல் காடும்-கரும்பும் செந்நெல் என்னும் சிவப்புச் சம்பாப் பயிர்கள் அடர்ந்த நன்செய் இடங்களும், கமல வாவிகளும்-தாமரைத் தடாகங்களும், மல்கி-நிறைந்ததாகி, பெரும்புனல் மருதம் சூழ்ந்த - பெரிய நீர் வளங்கொண்ட மருத நிலம் சூழப் பெற்ற, கிடக்கை பின் கிடக்க-இடங்கள் தம் பின்னே இருக்க, சென்றார் - வழிமேற் சென்ற அவ்வாநர வீரர், குரும்பை நீர் - இளநீர்கள், முரஞ்சும் சோலை குலிந்தமும் - நிரம்பிய தென்னஞ்சோலைகளையுடைய குலிந்த நாட்டையும், புறத்து கொண்டார் - தேடி, அது பின்னாக மேற்சென்றார்கள்,

சுரும்பு, தேன், வண்டு இவை வண்டுகளின் சாதி பேதங்களைக் குறிக்கும் சொற்கள். இச்செய்யுளில், நிலம். நீர், பூ, புள், மரம் முதலியவற்றால் குலிந்த நாட்டின் மருதத்திணை வளங் கூறப்பெற்றது. குரும்பை - தெங்கு, பனை ஆகிய மரங்களின் இளங்காய். கிடக்கை - நிலப்பரப்பு (பி-ங்). முரஞ்சுதல் - நிரம்புதல். குலிந்தம்; குலிந்நாடு, கேரள நாட்டின் வடக்கே மேற்கடற் கரையை யடுத்ததும் பழைய ஐம்பத்தாறு தேயங்களுள் ஒன்றானதும் ஆம்; இது குளிந்தம் எனவும்

வழங்கும்; குலிந்தர் என ஒரு தேசத் தரசர் குறிப்பிடப்பட்டமை காண்க. (பால. உலாவியற் : 47.)

பி - ம். 1. தவன்ற புள்ளும்.

2. வாவிகளும் பல்லிப் ; பல்சீர்ப்.

3. சூழ்ந்த விடத்தைப்பின் விடந்திப் போனர் ; விடக்கப் போனர்.

4. சீருஞ்சஞ்சோலை, நீரமுதச்சோலை, கமுகச்சோலை ; குலிங்கமும் ; புறத்துக் கண்டார். (31)

898. கொங்கண மேழு நீங்கிக்
குடகடற் றரளக் குப்பை
சங்கணி பான னெய்த
றண்புன றவிர வேகித்
திங்களின் கொழுந்து சுற்றுஞ்
சிமயநீள் கோட்டுத் தேவர்
அங்கைகள் கூப்ப நின்ற
வருந்ததிக் கருக ரானர்.

(அவ் வாநரவீரர்), கொங்கணம் ஏழும் நீங்கி - கொங்கண நாட்டின் ஏழுபிரிவுகளையுங் கடந்து, குடகடல் - மேற்குக் கடலில் உண்டான, தரளக்குப்பை - முத்துக்குவியல்கள், சங்கு - சங்குகள், அணிபானல் - அழகிய கருங்குவளைமலர்கள், நெய்தல்-நெய்தற்பூக்கள், ஆகிய இவை நிறைந்த, தண்புனல் தவிர ஏகி - குளிர்ந்த நீர்ப்பகுதிகளை நீங்கிச்சென்று, திங்களின் கொழுந்து சுற்றும் - சந்திரனின் கொழுந்தாகிய நிலவு சூழ்ந்து விளங்கும், சிமய-சிகரங்களையுடைய, நீள் கோட்டு-உயர்ந்த கொடுமுடிகளைக் கொண்டதும், தேவர் அங்கைகள் கூப்பநின்ற-தேவர்கள் தம் அழகியகைகளைக் குவித்து வணங்கும்படி அவ்வானுலகுக்கு மேலாக ஓங்கி நின்ற, அருந்ததிக்கு - அருந்ததி என்னும் மலைக்கு, அருகர் ஆனர் - அருகில் போய்ச்சேர்ந்தனர்.

கொங்கணம் ஏழு: கொங்கணநாடு ஏழுபிரிவுகளைக் கொண்டது என்பது 'ஏழ்திறற் கொங்கணர்' (பால. உலாவியற்; 49) என்பதாலும் சோழ சிலாசாஸனங்களாலும் விளங்கக் காணலாம். இது பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த வடகன்னடம் என்னும் மாவட்டத்தது. இது கொண்கானம் எனவும் வழங்கும்; இது பண்டை ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று; (இது தமிழ்ஒழிபதினேழு நிலங்களில் ஒன்ருக, நன். சூ. 272 உரை கூறுவதும் காண்க). திங்களின்

கொழுந்து என்பதற்குச் சந்திரனது பிறையென்றும், பூர்ண சந்திரன் என்றும் உரைகூறினுரும் உளர். தேவர் அங்கைகள் கூப்ப; தேவருலகும் தாண்டி ஓங்கி நின்றமையால் அன்னோர் கைகூப்பித் தொழலாயினர் என்பதாம். இஃது உயர்வு நவிற்சியணியாகும். அருந்ததிமலை மேற்குத் தொடர்ச்சிமலையின் ஒரு பகுதி எனக் கொள்ளத்தக்கது. அருகர்: அருகு என்ற குற்றியலுகரம் அர் என்பதை ஏற்று அருகர் என ஆயிற்று; ஈற்றுப்போலி; சிறகு - சிறகர், சுரும்பு - சுரும்பர் என்பனபோல.

பி - ம். 1. *கொக்கண மெஃக நீங்கிக்; குரைகடற் றானக்.*
2. *சங்கணி யுயர்வு செய்தல், சங்கணி பரவு செய்தல், சங்கணி வாச செய்தல், வேலித் தண்புறந் தவிர தண்புன றடர்தை நீங்கித்.*
3. *சீர்மை நீன் கோட்டுத்; கோட்டுந் தேவர்.* (32)

வாநரவீரர் அருந்ததிமலை கடந்து வேங்கடமலை அடைந்தது

899. அருந்ததிக் கருகு சென்றாண்
டழகினுக் கழகு செய்தாள்
இருந்ததிக் குணர்ந்தி லாதா
ரேகினு ரிடையர் மாதர்
பெருந்ததிக் கருந்தேன் மாறு
மரகதப் பெருங்குன் றெய்தி
இருந்ததிற் றீர்ந்து சென்றார்
வேங்கடத் திறுத்த காலை.

(அவ்வாநரவீரர்), அருந்ததிக்கு அருகு சென்று - அருந்ததி மலைக்கு அண்மையிற் சேர்ந்து, ஆண்டு - அவ்விடத்தில், அழகினுக்கு அழகு செய்தாள் - அழகு என்பதற்கே ஒரு புது அழகைச் செய்தவளான (அதாவது ஒருவருக்கும் இல்லாத சிறந்த அழகமைந்தவளான) பிராட்டி, இருந்த திக்கு - இருந்த இடத்தை, உணர்ந்திலாதார் - அறிய முடியாதவர்களாய், ஏகினுர் - அவ்விடம் விட்டுச் சென்ற (அன்னோர்), இடையர் மாதர் பெரும் ததிக்கு - இடையர் மகளிர் தங்கள் மிகுதியான தயிருக்கு, அரும் தேன்மாறும் - அம்மலைவாணர் சேகரித்து வைத்திருக்கும் அருமையான (அதாவது சிறந்த) மலைத்தேனைப் பண்டமாற்றாகக் கொள்ளும், மரகத பெரும் குன்று எய்தி - மரகதமலை என்னும் பெரிய மலையை அடைந்து, இருந்து - அங்குத் தங்கியிருந்து, அதில் தீர்ந்து - அங்கும் பிராட்டியைத் தேடிக்காணுமல் அதை விட்டு நீங்கி, சென்றார் - மேற்சென்றவர்களாய், வேங்கடத்து இறுத்த காலை - வேங்கடமலை

யிடத்தே போய்த் தங்கியபோது; (அங்கு கண்ட சிறப்புக்கள் அடுத்துக் கூறப்பெறுவன காண்க).

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து வினை முடிபு கொள்ளும். அழகினுக்கு அழகு செய்தாள்; 'அழகெனுமதுவுமோ ரழகு பெற்றதே' (பால.மிதிலைக் 33.) எனப்பிராட்டிக்கு முன் ஏற்றங் கூறியமை காண்க. இனி, இறுத்த எல்லை வேங்கடத்துச் சென்றார் எனக்கொண்டு இயைத்து வினைமுடிபு கொண்டாரும் உளர்; இவ்வாறு கொண்டால் இறுத்த எல்லை - ஆன்றோர்கள் அருளிய தொல்காப்பியம் முதலிய நூல்களில் தீர்மானித்து முடிவுகட்டிய தமிழ் நாட்டின் வட எல்லையான வேங்கடமலை என்பதாம்; 'வடவேங்கடம் தென்குமரியாயிடை' எனவும், 'குணகடல் குமரி குடகம் வெங்கடம், எனுநான் கெல்லையி னிருந் தமிழ்க்கடல்' (நன் சிறப்புப்பாயிரம்) எனவும் தமிழ் நாட்டு எல்லை வகுக்கப் பெற்றமை காண்க. ததிக்கு அருந்தேன் மாறுதல் - முல்லைநில இடைப்பெண்கள் குறிஞ்சி நிலமாகிய வேங்கடமலைமீது ஏறிச் சென்று தம் தயிரைக் கொடுத்து அங்குள்ள மலைவாணரிடமிருந்த அருந்தேனைக் கொண்டு வருவர் என்பதாம்.

பி - ம். 1. கருகு சென்று; ரழகினுக்; கருகு சென்றுவ்.
2. திக்குணர்வி லாதார், திக் கறிவி லாதார்.
3. பிரகதப் பெருக்குன்.
4. இருந்தலைக் கடந்தப் பாலி னெய்து; வேங்கட வாணன் வெற்பில்; றிறுத்தவேலை. (33)

### வேங்கட வெற்பின் சிறப்பு

900. முனைவரு மறைவ லோரு
முந்தைநாட் சிந்தை மூண்ட
வினைவரு நெறியை மாற்று
மெய்யுணர் வோரும் விண்ணோர்
எனைவரு மமரர் மாதர்
யாவருஞ் சித்த ரென்போர்
அனைவரு மருவி நன்னீர்
நாளும்வந் தாடு கின்றார்.

(அந்த வேங்கட மலையில்), முனைவரும் - மகருஷிகளும், மறைவலோரும் - வேதங்களைத் தேர்ந்துணர்ந்த அந்தணர்களும், முந்தை நாள் - முற்பிறப்பில், சிந்தை மூண்ட - மனம் மேலிட்டுச் செய்த, வினைவரு

நெறியை- தீவினையின் பயனாய்த் தொடர்ந்து வரும் நரக வழியை, மாற்றும் - மாற்றி நல்வழியில் திருப்பவல்ல, மெய் உணர்வோரும் - உண்மைத் தத்துவ ஞானிகளும், விண்ணோர் எனைவரும் - தேவர்கள் எல்லோரும், அமரர் மாதர் யாவரும் - தெய்வமகளிர் யாவரும், சித்தர் என்போர் அனைவரும் - தேவரில் ஒருவகையினரான சித்தர்கள் எல்லோரும், அருவிநல்நீர் - அம்மலையிலுள்ள அருவியின் பரிசுத்தமான புண்ணிய தீர்த்தத்தில், நாளும் - ஒவ்வொருநாளும், வந்து ஆடுகின்றார் - வந்து நீராடுகின்றனர்.

முனைவர் - முன்வைத்துக் கருதப்படும் ஆன்றோர் என்னலும் ஆம். சித்தர்; பதினெண்கணத்துத் தேவர்களில் ஒருவகையர்; சித்த வித்தை முதலிய யோக நெறியிற் தேர்ந்தவரும் ஆம். மருவிவந்து எனப்பிரித்து- ஒன்று கூடித்திரண்டு வந்து எனப்பொருள் கொள்ளலும் அமையும். அருவி எனனும் இடத்து, வேங்கடமலையில் உள்ள, ஆகாயகங்கை, பாபநாச நீர்வீழ்ச்சி, குமரதாரை முதலிய அருவிகளைக் குறித்தபடி.

பி - ம். 1. சிர்றைத பூண்ட.
2. மெய்யுணர்ந் தோரும், மெய்யுணர் வினரும்.
3. யாவரு மெநிக னென்போர்; சித்த ரென்பார். (34)

வேறு

901. பெய்த வைம்பொறி யும்பெருங் காமமும்
வைத வெஞ்சொலும் மங்கையர் வாட்கணின்
எய்த வஞ்சக வாளியு மெண்ணறச்
செய்த வம்பல செய்குநர் தேவரால்.

(அம்மலையில்), தேவர்-தேவர்கள், பெய்த - உணர்ச்சிகளைப் பொழி வன போலச் சொரிந்த, ஐம்பொறியும்-பஞ்ச இந்திரியங்களையும், பெரும் காமமும் - ஐம்புலன்களின் மூலம் உண்டாகும் பெரிய காம உணர்ச்சி யையும், வைத வெம் சொலும் - பிறர் தம்மைத் திட்டிய கொடுஞ் சொற் களும், மங்கையர்-மகளிர்கள், வாள்கணின்-வாள்போன்ற ஒளியும் கூர் மையும் கொடுமையுங்கொண்ட கண்களால், எய்த-தூண்டிய, வஞ்சக வாளியும் - வஞ்சகத் தன்மை மிக்க பார்வையாகிய அம்புகளும் ஆகிய, எண் அற-அவை கருதிவந்த தொகை யாவும் அற்றுப்போக இவற்றை வென்று, செய்தவம் பல செய்குநர் - அங்குச் செய்யத்தக்கதான அரிய தவம்பல செய்கின்றார்கள்- ஆல்; ஈற்றசை,

இச்செய்யுள் கருத்து ஒற்றுமையில், 'ஆசலம்புரியைம்பொறி வாளி யும், காசலம்பு முலையவர் கண்ணெனும, பூசலம்பும் நெறியின் புறஞ்செ

லாக் கோசலம் புனே யாற்றணி கூறுவாம் ' (பால. ஆற்றுப். 1) என்ற பாடலே ஒத்துள்ளமை காண்க. வைத வெஞ்சொலும் அறுதல்; பிறர் வைததைப் பாராட்டாது அது பயனற்றுப்போகுமாறு அடங்கியிருத்தல். இனி, வைதவெஞ்சொல் - முனிவர் முதலிய ஆன்றோர் இட்ட சாபச் சொல்லும் ஆம்; அச்சாபமும் நீங்கத் அத்திருவேங்கட மலேயில் இருந்து தவமேற் கொண்டனர் தேவர் என்பதாம்.

பி - ம். 1. *பெய்த வெம்பொறி ; பெருங்காயமும், பெருங் காலமும்.*
2. *வெஞ்சொலின் ; வாட்கணல்.*
3. *எய்த வைம்பொறி, வென்றுற, வென்றுநற், மேற்றற, மெண்ணிற.*
4. *செய்குவர் சீரியோர் ;* (35)

902. வலங்கொ ணேமி மழைநிற வானவன்
அலங்கு தாளிணே தாங்கிய வம்மலே
விலங்கும் வீடுறு கின்றன மெய்ந்நெறிப்
புலன்கொள் வார்கட் கனேயது பொய்க்குமோ.

வலம் கொள் நேமி - வெற்றிகொள்ளும் சுதர்சனம் என்னும் சக்க ராயுதத்தைக் கையிற் கொண்ட, மழை நிறவானவன் - (நீருண்ட) மேகம் போன்ற கருநிறத்தையுடைய தேவனான அவ்வேங்கட வாணனது, அலங்கு தாள் இணே தாங்கிய-ஒளி விளங்கும் இரு திருவடி களேத் தாங்கி நின்ற, அ மலே-அத்திருவேங்கட மலேயில் வாழும், விலங் கும் - மிருகங்களும், வீடு உறுகின்றன - மோக்ஷ பதவியை அடை கின்றன ; (அவ்வாருனல்), மெய் நெறிபுலன் கொள்வார்கட்கு - தக்க உண்மை நெறியான தவநியமங்களில் தம் உணர்ச்சிகளே அடக்கி வழிபடும் தவசியர் யோகியர் முதலியவர்களுக்கு, அனேயது-அம் மோக்ஷ பதவி, பொய்க்குமோ - கிடைக்காமல் தவறிப்போமோ? (தவறிப் போகாது; நிச்சயம் கிடைக்கும் என்றபடி).

வலங்கொள் என்பதை மலேக்கு இயைத்து, வலம் வந்து வணங்கத் தக்க அம்மலே யென்றும், வலங்கொள் வானவ னென்று இயைத்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும்; மேலும், வலம்கொள் என்பதற்கு வலக் கையில் ஏற்கும் எனினும் ஆம். விலங்கும் - இழிவு சிறப்பு உம்மை; இனி எஞ்சியது தழுவிய எச்சவும்மையாகக் கொண்டு, இது மரம், கல் முதலிய அஃறிணைப் பொருள்களேயும் குறித்தபடியும் ஆம்.

இனி, அனேயபொய்க்குமோ என்பதை அம்மலேக்கு ஆக்கி, அம்மலே அம்மோக்ஷ பதவியை அளிக்காது தவறுமோ அல்லது ஏமாற்றுமோ'

என்று பொருள் கொள்ளவும் இடமாகும். திருவேங்கடமலை மோக்ஷ பதவியை அளிக்கவல்ல சிறப்புடையது என்பது, 'கோடுறுமால் வரையதனைக் குறுகுதிரே லுங்நெடிய கொடுமை நீங்கி, வீடுறுதி ராதலி னுல் விலங்குதிர்' (748) எனச் சுக்ரீவன் அவ்வாநர வீரர்களுக்குப் பணித்தமையால் முன் அறிய வைத்தது காண்க. ஆழ்வார் ஸ்ரீகுலசேகரப் பெருமான், வேங்கடத்துக் 'கோனேரிவாழுங் குருகாய்ப் பிறப்பேனே' என்பது முதலாகப் பல உயிர்வாழும் அஃறிணைப் பொருள்களைக் குறித்த தோடு அமையாமல், 'எம்பெருமான் பொன்மலையில் ஏதேனுமாவேனே' என்று முடிவு கட்டித் தம் நோக்கத்தைப் புலப்படுத்திய திறம் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாம்; (பெருமாள் திருமொழி 4: 10.).

மேலும், வேங்கடமலையில் திருவேங்கட முடையானுக்குப் புஷ்ப கைங்கரியஞ் செய்தும் மற்றும்பல திருத்தொண்டுகள் புரிந்தும் வந்த அநந்தாசாரியர் என்னும் ஒரு வைணவப் பெரியார் ஒருசமயம் அத்திரு மலையை விட்டு வேறு ஒரு திவ்ய தேசப் பெருமாளைச் சேவித்துவரச் சென்றவர், இடைவழி ஆகாரத்திற்காகக் கட்டமுது கொண்டு சென் றனர்; இடைவழியில் இளைப்பாறி அவ்வமுதை உண்ண எடுக்கும் போது அதில் பல எறும்புகள் சூழ்ந்து மொய்த்திருக்கக் கண்டு, அவர் 'ஆ, இவ்வெறும்புகள் எம்பெருமான் திருமலையில் நித்யவாஸம் செய் யும் பேறு பெற்றவை; இவற்றை அங்கிருந்து இங்குக் கொணர்ந்து பெரிய அபசாரத்திற்கு உள்ளானேனே!' என்று வருந்தி, மீண்டும் அக் கட்டமுதோடு அவ்வெறும்புகளை வேங்கடமலைக்கே கொண்டு சேர்ப் பிக்கச் செய்தார் என்றொரு வரலாறு வைஷ்ணவ சம்பிரதாய சரிதங் களிற் கூறப்பெறுவதும் இங்குக் கொள்ளத்தக்கதாகும். இச் செய்யுள் பொருட்பேறணி என்னும் சிறப்புக் கொண்டது.

பி - ம். 1. மழைவண்ணனின்.
2. தாங்கிய தம்மலை; திம்மலை.
3. வீடுறு கிற்பன; வென்றிடில்.
4. புலன்கொண் மெய்க்நெறி யோர்க்கது. (36)

903. ஆய குன்றினை யெய்தி யருந்தவம்
மேய செல்வரை மேவினர் மெய்ந்நெறி
நாய கன்றனை நாளும் வணங்கிய
தூய நற்றவர் பாதங்கள் சூடினர்.

(அவ்வாநரவீரர்கள்), ஆய குன்றினை - அத்தகைய தூய்மையும் சிறப்பும் அமைந்த திருவேங்கடமலையை, எய்தி - அடைந்து, அரும் தவம் மேய செல்வரை - அரிய தவத்திற் பொருந்திய அத்தபோதனர்

களை, மேவினர்-அடைந்து, மெய்நெறி நாயகன் தனை - மோக்ஷநிலைக்கு நாயகனான அத்திருவேங்கடத் திருமாலை, நாளும் வணங்கிய - தினமும் வணங்கி வழிபாடியற்றிய, தூய நல் தவர் - பரிசுத்தமான சிறந்த தவசியர்களான அப்பெரியார்களுடைய, பாதங்கள் சூடினர் - அடிகளைத்தம் தலைமேற் சூடி வணங்கினர்.

அத்திருவேங்கட மலையில் போயிருந்து நித்யவாஸம் செய்வதே முன் செய்த அருந்தவச் செல்வப் பயனுதலால் குன்றினை யெய்தி யருந்தவ மேய செல்வர் எனச் சிறப்பிக்கப் பெற்றன என்னலும் ஒன்றும்.

பி - ம். 3. நாயகன் பதம் நாளும்; வணங்குவோர்.

4. தூயர் தம்பதஞ் சூடிநின் றூடினர்; தூயர் கள்மலர்ப் பாதங்கள் சூடினர்; தூய நாண்மலர்ப்......தூய நன்மலர்ப்......

வாநரவீரர் தொண்டை நாடு அடைந்தது

**904.** சூடி யாண்டச் சுரிகுழற் றோகையைத்
தேடி வார்புனற் றெண்டிரைத் தொண்டைநன்
னாடு நண்ணுகின் றார்மறை நாவலர்
வேட மேயினர் வேண்டுரு மேவுவார்.

வேண்டு உரு மேவுவார் - விரும்பிய உருவத்தை எடுத்துக்கொள்ளும் திறமுடையவர்களான அவ்வாநரவீரர், சூடி - முற்கூறிய நற்றவர் பாதங்களைத் தம் சென்னியிற் சூடி, ஆண்டு - அத்திருமலையில், அ சுரிகுழல் தோகையை - அந்தச் சுருண்ட கூந்தலையுடைய மயில்போன்ற சீதாபிராட்டியை, தேடி - அங்குத் தேடிப்பார்த்து, (காணுமல்பின்), மறை நாவலர் வேடம் மேயினர் - வேதங்களை ஓதியுணர்ந்த அந்தணர்களின் வேடத்தைப் பூண்டவர்களாய், தெள்திரை - கொழித்து வீசுகின்ற அலைகளையுடைய, வார்புனல் - மிக்க நீரினையுடைய, தொண்டை நல்நாடு - சிறந்த தொண்டை நாட்டை, நண்ணுகின்றார் - அடைவாராயினர்.

மறை நாவலர் வேடம் பூண்டது: 883-இல் 'பெய்தருப்பை நூல் பிறழுமேனியராய்ச்' சென்றமை போல்; தெண்ணீர் வார்புனற் றொண்டை நன்னாடு; 'தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்றது காண்க. நன்னாடு, 'எவ்வழியாடவர் நல்லவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே'' (புறம். 187) என்றமையும் ஈண்டு நோக்கத்தக்கது.

பி - ம். 2. தெண்டிரைத் தண்டக, திண்டரு தொண்டகம் ; தொண்டக.
3. நாடு லென்றனர் நான்மறை யந்தணர்.
4. வேடமேவினர். (38)

தொண்டை நாட்டின் சிறப்பு

905. குன்று சூழ்ந்த கடத்தொடுங் கோவலர்
முன்றில் சூழ்ந்த படப்பையு மொய்புனல்
சென்று சூழ்ந்த கிடக்கையுந் தெண்டிரை
மன்று சூழ்ந்த பரப்பு மருங்கெலாம்.

(அத்தொண்டை நன்னாடு), குன்று சூழ்ந்த-மலைகள் சூழப் பெற்ற, கடத்தொடும் - குறுங்காடுகளாகிய பாலை நிலப்பகுதிகளோடு, கோவலர் முன்றில் சூழ்ந்த - ஆயர்கள் தம் வீட்டு முன் புறங்கள் சூழ்ந்துள்ள, படப்பையும் - தோட்டங்களும், மொய்புனல் சென்று சூழ்ந்த - மிக்கநீர் சுற்றிலும் பாய்ந்து விளங்கிய, கிடக்கையும் - இடங்களான மருத நிலங்களும், தெள் திரைமன்று சூழ்ந்த - தெளிவான அலைகளையுடைய மணல் வெளிகளாகிய இடங்கள் சூழப்பெற்ற, பரப்பும் - நெய்தல் நிலப்பரப்புக்களும், மருங்கு எலாம் - இடங்கள் எல்லாம் கொண்டு விளங்குவதாம்.

இச் செய்யுளால் தொண்டைநாடு ஐந்திணைகளாகிய நிலப்பகுதிகளை யுடையது என்று குறித்தார். கோவலர் - கோபாலர் என்ற வடசொல்லின் திரிபு ; பசுக்களை மேய்த்துக் காப்பவர் என்னும் பொருளது. முன்றில் : இலக்கணப்போலி.

பி - ம். 1. குன்று சூழ்ந்த நடத்தொடும்.
3. சூழ்ந்த விடங்களும், சூழ்ந்த தலங்களும் ; கிடக்கையுந் திங்களும், கிடக்கையுந் தேடினர் ; கிடங்கையுந்.
4. மன்றல் சூழ்ந்த, மன்றல் சூழ்ந்து. (39)

906. சூல டிப்பல வின்சுளை தூங்குதேன்
கோல டிப்ப வெரீஇக்குல மள்ளரேர்ச்
சால டித்தருஞ் சாலியின் வெண்முளை
தோல டிக்கிளை யன்னந் துவைப்பன.

குலம் மள்ளர் - கூட்டமான உழவர்கள், ஏர்கோல் அடிப்ப - ஏர் உழுங்கால் உழவெருதுகளைத் தார்க்கோல் கொண்டு அடிக்கையில், தோல் அடிகிளை அன்னம்-தோல் செறிந்த அடிகளையுடைய கூட்டமான அன்னப்புட்கள், வெரீஇ - அஞ்சி, சூல் அடிபலவின் சுளைதூங்குதேன் -

கருவை அடியிலேயுடைய பலாமரத்தினது (வேர்ப்பலாவின் பழங்களது) சுளையினின்று ஒழுகுகின்ற தேன், (பாய்ந்து),' சால் அடிதரும் - உழு படைச் சாலின் இடங்களிலே உண்டாக்கிய, சாலியின் வெண்முளை - நெற் பயிரின் வெண்ணிற முளைகளை துவைப்பன-கால்களால் மிதித்துத் துவைப்பன ஆம்.

உழவர் கோலடித்து எருதுகளை விரட்ட, அன்னங்கள் அஞ்சித் தேன்பாய்ந்து முளைத்த நெற்பயிர்களைத் துவைக்கும் என மருதவளம் கூறினர் என்க. சூல் என்பதற்குச் சூல்கொண்டது போலப் பருத்த எனினுமாம் 'சினைச் சுங்கின் வெண்டலை' என்றதன் (நள. 217) உரை நோக்குக. இச்செய்யுளும் பின்வரும் ஐந்து பாடல்களும் தொண்டை நாட்டின் மருதத்திணை வளங்கூறுவனவாம்.

பி - ம். 1. *பலவின்றலை தூங்கு, பலவின் கனி தூங்கு,*

2. *கோலடிப்ப விரீஇக் ; குழுமள்ளரேர்ச், குலமள்ளர்தம் ; குறு மள்ளர்கள்.*

4. *துவைக்குமால், துகைக்குமே.* (40)

907. செருகு றுங்கணிற் றேங்கு வளைக்குலம்
அருகு றங்கும் வயன்மருங் காய்ச்சியர்
இருகு றங்கு பிறங்கிய வாழையிற்
குருகு றங்குங் குயிலுந் துயிலுமால்.

வயன் மருங்கு -நீர் நிறைந்த வயலிடங்களில், செரு குறும் கணில்- மணிகள் இருபுறமும் சலிக்கின்ற கண்களைப்போன்ற, தேம் குவளைக் குலம் -தேனோடு கூடிய குவளைப் பூக்களின் தொகுதி, அருகு உறங்கும்- அருகே பகற்போதில் உறங்குவனபோலக் குவிந்திருக்கும், ஆய்ச்சியர் - அந் நாட்டு ஆயர் மகளிர்தம், இரு குறங்கு - இரு துடைகளைப் போல, பிறங்கிய - செழிப்பாய் விளங்கிய, வாழையில் - வாழை மரங்களினிடத்து, குருகு உறங்கும்- நாரை முதலிய நீர்வாழ் பறவைகள் துயிலும்; குயிலும் துயிலும்-அங்குக் குயில்களும் தூங்கிக் கொண்டிருக் கும். ஆல்: ஈற்றசை.

ஆய்ச்சியர் என்பது இங்குச் சிங்க நோக்காகக் கொள்ளப்பட்டது : இது நடுநிலைத் தீபகம் என்னும் அணியும் ஆம். செருகுதல் - சொருகு தல் எனவும் வழங்கும். பகற்பொழுதில் குவளை மலர்கள் குவிந்து குறுகி யிருக்கும் ஆதலால், அது மகளிர் குறுகிய கடை நோக்குக்கு உவமை யாயிற்று. வாழை - மகளிர் தொடைக்கு உவமை ; உவமான சங்கிர

கம்; மங்கையர் குறங்கென வகுத்த் வாழைகள்; (அயோத். மந்தரை சூழ்ச்சி:30); குயிலுந் துயிலும் என்ற தொடரில் பிராசம் என்னும் ஓசை நயம் அமைந்தமை நோக்குக.

பி-ம். 1. செரு குறுங்களித் தேங்கு வனைக்குலம்,

2. அணிநிக மாய்ச்சியர், வயலய லாய்ச்சியர்.

3. பிறங்கின வாழையின். (41)

908. தெருவி னார்ப்புறும் பல்லியந் தேர்மயில்
கருவி மாமழை யென்று களிப்புறு
பொருநர் தண்ணுமைக் கன்னமும் போகல
மருவி னார்க்கு மயக்கமுண் டாங்கொலோ.

தெருவின் ஆர்ப்பு உறும் - வீதிகளில் முழங்கப்பெறும், பல்லியம் - வாத்திய ஒலிகளை, தேர் - கேட்டுணர்ந்த, மயில் - மயில்கள், கருவி மா மழை என்று - அவ் வார்ப்பொலி மழைக்கு முதற்காரணமாகிய மேகத்தின் குமுறல் என்று, களிப்பு உரு - களிப்படைய மாட்டா; அன்னமும் - அங்குள்ள அன்னங்களும், பொருநர் தண்ணுமைக்கு - கூத்தாடுவோர் முழக்கும் மத்தள ஓசை கேட்டு, போகல - (அதற்கு அஞ்சி அவ்விடம் விட்டுப்) போகமாட்டா; (ஏனெனில்), மருவினார்க்கு- நாளும் கலந்து பழகினோர்க்கு, மயக்கம் உண்டாம் கொலோ - மன மயக்கம் உண்டாகுமோ? (உண்டாகாது என்றபடி).

மேகத்தின் ஓசையைக் கேட்கும் மயில் களிப்புறும், முழவொலி கேட்டு அன்னம் அஞ்சி அப்புறம் பறந்து போய்விடும்; ஆனால், எப்பொழுதும் அத் தொண்டை நாட்டு வீடுகளில் விழா வயர்தலால் பல்லிய ஓசைகளைக் கேட்டுப் பழகியுள்ள மயில்களை அவ் வார்ப்பொலி வியப்புறச் செய்வதில்லை; அங்குள்ள அன்னப் புட்களும் தண்ணுமை ஒலிகேட்டு அஞ்சி அகல்வன வல்ல. இதனால் பழக்கமே அவைகட்குத் துணிவை யளித்தது என்பதாம். 'பனங்காட்டுநரி சலசலப்புக்கு அஞ்சுமா? என்பது பழமொழி. கருவி மா மழை; (869) நோக்குக. பொருநர் - கூத்தாடுவோர்; இவர் போர்க்களம் பாடுவோரும் ஏர்க்களம் பாடுவோரும் என இருவகையினர் ஆவர்; பொருநர் போர்ப்படை வீரரும் ஆம். இங்கு வீதியைக் குறிப்பிட்டதால் இவர் கூத்தாடி மக்களை மகிழ்விப்போரே ஆவர். "பண்ணிமை யுடைத்த பலகட் பொருநர்" (சுந்தர. 257.) என்றமை காண்க.

பி - ம். 1. தெருவி னூர்த் தெழு.
2. கனிப்புரு; கவிக்குமால், மாமழைக் கொன்றுங் கவிப்புரு. மழைக்கப்புறம் போகில.
3. போகலா, போக்கிலார்,
4. மயக்கமுண் டாகுமோ. (42)

909. தேரை வென்றுயர் தெங்கிளம் பாளையை
நாரை யென்றிளங் கெண்டை நடுங்குவ
தாரை வன்றலைத் தண்ணிள வாம்பலைச்
சேரை யென்று புலம்புவ தேரையே.

தேரை வென்று உயர் - தன் உருவத்தால் தேரை வென்ற அழகுடன் விளங்கிய, தெங்கு இளம் பாளையை - தென்னைமரத்தின் இளமையான பாளையை, இளம் கெண்டை - கெண்டை மீன்குஞ்சுகள், நாரை என்று - அது தங்களைப் பற்றித் தின்னும் நாரைப் பறவை என்று, நடுங்குவ - அஞ்சி நடுங்கும்; தாரை - நீண்ட, வன் தலை - வலிய தலையையுடைய, தண் இள ஆம்பலை - குளிர்ச்சியும் இளமையுமான அல்லி அரும்புகளைக் கண்டு, தேரை - தவளைகள், சேரை என்று - அவை தம்மை விழுங்கவரும் சாரைப்பாம்பு என்று, புலம்புவ - அஞ்சி வாய்விட்டுக் கத்தும், ஏ : ஈற்றசை.

பல மட்டைகள் விரிந்து கவிந்து விளங்கும் தென்னைமரத்தின் தோற்றம், ஓர் அழகிய தேருக்கு உவமிக்கப் பெற்றது. விரியாத இளம் தென்னம்பாளைகள் நாரையின் உருப் போலவும், ஆம்பல் அரும்புகள் சாரைப்பாம்பின் நீண்ட தலைகள் போலவும் விளங்குவன கண்டு அவை உண்மை நாரை என்று கெண்டை மீன்களும், சாரைப்பாம்பின் தலை என்ன தவளைகளும் மயங்கி, முறையே அஞ்சி நடுங்குவனவும், புலம்புவனவும் ஆயின. இது மயக்கவணி. சேரை : இது சாரை என வழங்கும். தாரை வன் தலை - நீண்ட கோடுகள் பொருந்திய வலிய தலையும் ஆம். தேரை - தவளை. (பிங்,),

பி - ம். 1. தேரை வன்றலை, தெங்கின்வெண் பாளையை; சேரை வன்றிரைத் தெங்கிளம்; தேரை வான்றலை,
2. நாரை யென்று நடுங்குவ கெண்டைமீன், மின்னை நடுங்குவ.
3. ஆரைவன்றலை யாம்ப லரும்பினைச்; வான்றலை யாம்பல்.
4. சாரையென்று நடுங்குவ தேரைதாம், சேரை யென்னப்; சாரையென்று புலம்பும் தவளைகள், தேரைகள். (43)

910. நள்ளி வாங்கு கடையிள நவ்வியர்
வெள்ளி வால்வளை வீசிய வெண்மணி
புள்ளி நாரை சினைபொரி யாதவென்
றுள்ளி யாமை முதுகி னுடைப்பரால்.

நள்ளி வாங்கு - நண்டுகளைப் பிடிக்கின்ற, இள - இளமைப் பருவத்து, கடை நவ்வியர் - மான் போன்ற கீழ் குல மகளிர், வெள்ளி வால் வளை - வெண்ணிற ஒளியுடைய சங்குகள், வீசிய - ஈன்று விடுத்த, வெண் மணி - வெண்ணிற முத்துக்களை, புள்ளி நாரை - பல புள்ளிகளையுடைய நாரையின், பொரியாத சினை என்று - பொரிக்கப் பெருத முட்டைகள் என்று, உள்ளி - நினைத்து, ஆமை முதுகில் உடைப்பர் - (அம் முத்துக்களை) அருகேயுள்ள ஆமையின் முதுகில் உடைப்பார்கள். ஆல்: அசை.

உடைத்தது அவ்விள மகளிரின் விளையாட்டுச் செயல். நள்ளி வாங்கு - விரும்பி எடுத்த வெண் மணி என இயைத்தலும் ஆம். முத்துக்கள், நாரை முட்டை அவ்வளவு பெரிதாக இருப்பதால் அந் நாட்டின் நீர்நிலை வளங்களின் சிறப்புரைத்தார் என்க. ஆமையின் முதுகு வலிமையான ஓடு கொண்டதால் அதில் உடைத்தனர்; செந்நெ லரிவார் சினையாமை வன்முதுகிற், கூனிரும்பு தீட்டும் குலக்கோ சலநாடன்; (நள. 140) என்றமையும் ஒப்பு நோக்குக. ஆம்பலுக்குச் சேரைப்பாம்பு; 'சேரைப், பாம்பின தலையவாகிப் பரிந்தன குவிந்து சாய்ந்த' 'வாம்பலும்' (அயோத். தைலமாட்டு. 51)

பி - ம். 1. கள்ளின் கூந்தல் கடையிள, நள்ளின்வாங்கு; நடையிள நவ்வியர்.
2. வெள்ளை வால்வளை.
3. புள்ளுநா ரைச்சினை; பொரியாமை; அள்ளிநா ரைச்சினைப், சினைப்பொரி. (44)

911. சேட்டி ளங்கடு வன்சிறு புன்கையிற்
கோட்ட தேம்பல வின்கனிக் கூன்சுளை
தோட்ட மைந்தபொ தும்பரிற் றங்குதேன்
ஈட்ட மங்கதிற் றேய்த்தினி துண்ணுமால்.

சேடு இளம் கடுவன் - மிகவும் இளமைப் பருவத்து ஆண் குரங்கு, சிறு புன் கையில் - மிகவும் சிறியதான தன் கையினால், கோட்ட - கிளையிலே உள்ள, தேம் பலவின் கனி - இனிய பலாப் பழத்தின்,

கூன் சுளை - வளைந்த சுளைகளை, தோட்டு - தோண்டி யெடுத்து, அமைந்த - பொருந்தித் தங்கியிருந்த, பொதும்பரில் - சோலையில், தூங்கு தேன் - இடையறாது ஒழுகும் தேனின், ஈட்டம் அங்கு அதில் - பெருக்கில், தோய்த்துஇனிது உண்ணும் - தோய்த்துச் சுவைப்பட உண்டு மகிழும், ஆல் : ஈற்றசை.

சிறு ஆண் குரங்கு பலாமரத்தின் கிளையில் உள்ள கனியைக் குடைந்து அதிலிருந்து எடுத்த சுளைகளை அப் பொதும்பரில் ஒழுகும் தேனில் தோய்த்து உண்ணும் வளச் சிறப்புடையது அத் தொண்டை நாடு என்க.

சேட்டிளம், சிறுபுன் என்பன ஒருபொருட் பன்மொழிகளாய் அவற்றின் தன்மையை விசேடித்து நிற்பன. இனி பலவின் கனி கூன் எனக்கொண்டு பலாப்பழமாகிய மிடா அல்லது பானை எனவும் கொள்ளலாம் ; கூன் வளைந்து அமைந்த பெரிய பானை ; இது கூனை யெனவும் வழங்கும் ; (913) ; குருதிக் சாறெனப் பாய்வது குரைகடற் கூனை ; (சுந்தர. 790). ' உரை நோக்குக. இதன்பின் சில சுவடிகளி லும் அச்சுப் பிரதிகளிலும் அடியிற்காணும் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

செல்வ ரென்றும் வடகலை தென்றமிழ்ச்
சொல்வ ரம்பின ரென்றுஞ் சுமடரைக்
கொல்வ ரென்றுங் கொடுப்பன ரென்றுமவ்
வில்வ ரம்பினர்க் கேதெனு மீட்டதே.

மறறும ஒரு சுவடியில்,

ஆகை யாலங் கடைந்தவ ரியாவர்க்கும்
ஓகை யாலமு தூட்டின ருண்டுரம்
சோகம் மாறிப்பின் ரேகையை யவ்வழிச்
சேகு சேறுறத் தேடினர் காண்கிலார்.

என்ற பாடல்களும் காணப்பெறும்.

இனைய தண்டக நாட்டினு னெய்தினர்
அனைய நாட்டி னருந்தவர் யாவரும்
நனி விரும்பி நயந்தனர் நான்மறைப்
புனித ரென்றுகொண் டுள்ளுறும் புந்தியார்.

பி - ம். 1. சிறுபுன்மையிற்.
3. கோட்டிற் றேம்பல.
4. ஈட்ட மென்சிறை யீயின மீண்டமோல்; மீண்டயே, மீட்மோல், ஈட்டமென் சிறு மக்ரி யிரப்பன. (45)

### வாநரவீரர் தொண்டை நாடு நீங்கிப் பொன்னிநாடடைந்ததும் அந்நாட்டின் சிறப்பும்

912. அன்ன தொண்டைநன் னாடு கடந்தகன்
பொன்னி நாடு பொருவில தெய்தினர்
செந்நெ லுங்கரும் புங்கமு குஞ்செறிந்
தின்னல் செய்யு நெறியரி தேகுவார்.

(அவ்வாநரவீரர்) அன்ன - அத்தன்மைத்தான வளம் நிரம்பிய, தொண்டை நல்நாடு கடந்து - சிறந்த தொண்டைநாட்டைத் தாண்டிச் சென்று, அகல் பொருவு இலது பொன்னி நல்நாடு எய்தினர் - அகன்று ஒப்புக்கூற வேறொருநாடு இல்லாத சிறப்புடைய, பொன்னி என்னும் காவிரி பாயும் சோழநாட்டை அடைந்தவர்கள், செம்நெலும் கரும்பும் கமுகும் செறிந்து - சிவப்புச்சம்பா நெல்லும், கரும்பும், பாக்கு மரங் களும் அடர்ந்து, இன்னல் செய்யும் நெறி - வழியில் நெருக்கமான தடையாகத் துன்புறுத்தும் வழிகளில், அரிது ஏகுவார் - பிரையாசை யுடன் செல்வாராயினர்.

பொன்னி நன்னாடு பொருவிலது; தண்ணீருங் காவிரியே, தார் வேந்தன் சோழனே, மண்ணாவ தும்சோழ மண்டலமே' என்றும் (தனிப்பாடல்) ஆறே காலமறிந்துதவுங் காவிரிதானே (சேந்தன் திவாகரம்) எனவும், அந்தண் காவிரி வந்து கவர் பூட்டத், தோடுகொள் வேலின் தோற்றம்போல, ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும் நாடெனப்படுவது, நினதே (8-1) என்றும், மற்றும் பலவாகவும் தமிழ் நூல்கள் காவிரி நதியையும் சோழநாட்டையும் சிறப்பிப்பன காணலாம்.

பி - ம். 1. அன்னதண்டக, அன்னதொண்டக; கடந்தனர், கடந்தொரீஇ.
2. பொருவில ரெய்தினர்; பொருக்கென வெய்தினர்.
3. செந்நெலுங் கமுகுங் கரும்புஞ்.
4. இன்னல்செய்ய; உன்னு தற்கரி தாம்வள முற்றதே. (46)

913. கொடிறு தாங்கிய வாய்க்குழு நாரைவாழ்
தடறு தாங்கிய கூனிளந் தாழையின்
மிடறு தாங்கும் விருப்புடைத் தீங்கனி
இடறு வார்நறுந் தேனி னிழுக்குவார்.

கொடிறு தாங்கிய - கதுப்புப் பொருந்திய, வாய் - வாய்களுடைய, குழு - கூட்டமான, நாரைவாழ் - நாரை என்னும் நீர் வாழ்பறவைகள் வதிகின்ற, தடறு தாங்கிய - மட்டைகளைத் தாங்கி நிற்கின்ற, கூன் -

வளைவை யுடைய, இளம் தாழையின் - இளமையான தென்னையின், மிடறு - கழுத்துப் பக்கம், தாங்கும் - சுமந்து கொண்டிருக்கின்ற, விருப்புடை - உண்போர்க்கு விருப்பத்தைச் செய்கின்ற, தீம் கனி - இனிய சுவையான கனிகள் கீழே உதிர்ந்து கிடப்பன வற்றை, இடறுவார் - காலில் இடறிச் செல்வார்களும், நறும் தேனின் - அங்கு பாய்ந்து ஓடும் இனிய தேனில், இழுக்குவார் - வழுக்கி விழுவாரும் ஆயினர்.

இனி முதலடிக்குக் குருகு போன்ற வாய் எனினுமாம். இரு பிளவாகவும் எதையும் விடாது பற்றும் வன்மை பற்றியும் நாரை வாய்க்குக் குறடு உவமை என்க. தாழை - தென்னை; இச்செய்யுள் நாட்டின் வளத்தின் மிகுதியை விசேஷித்துக் கூறுவதால் இது வீறு கோளணி யின் பாற்படும்.

பி - ம். 1. குளநாரை, குறுநாரை. 2. தடறு தங்கிய.

3. மிடறு கான்ற, மிடறு தாங்கி, விழும்புடை தீங்கனி. (47)

914. குழுவு மீன்வளர் குட்ட மெனக்கொளா
எழுவு பாட லிமிழ்கருப் பேந்திரத்
தொழுகு சாற்றகன் கூனையி னூழ்முறை
முழுகி நீர்க்கருங் காக்கை முளைக்குமே.

கருநீர் காக்கை - கருநிறத்து நீர்க்காக்கைகள், குழுவு - கூடி நிறைந்து, மீன்வளர் - மீன்கள் வளர்ந்து வாழும், குட்டம் என கொளா- சிறுகுட்டை எனத் தம் மனத்திற் கொண்டு, எழுவு - எழும்பி, பாடல் இமிழ் - சுருதிகூட்டி எழுப்புகின்ற பாடல் போன்று ஒலிக்கும், கருப் பேந்திரத்து ஒழுகு - கரும்பாலையிலிருந்து ஒழுகிப் பாய்கின்ற, சாறு - கருப்பஞ்சாற்றைத் தாங்கிய, அகன் கூனையின் - வாயகன்ற மிடா என்னும் கலத்தில், ஊழ்முறை - ஒன்றன்பின் ஒன்ருய், முழுகி முளைக்கும் - முழுகி மேற்கிளம்பும். ஏ; ஈற்றசை.

நீர்க்கருங்காக்கை; இது கரண்டம் எனவும் பெயர் பெறும். (17); கருப்பஞ்சாறு நிறைந்த கூனையை மீன்கள் நிறைந்து வாழும் குட்டை யென மயங்கி நீர்க்காக்கைகள் அதில் வரிசையாய் வந்து முழுகி எழும் வளச சிறப்புடையது சோணுடு என்பதாம். கருப்பேந்திரம்; (அயோத். கங்கைப்; 6): மதுரைக்; 258; கரும்பு ஆலை ஆடும் பொழுது உண்டாகும் ஒலி. சீவக. 2614;

பி - ம். 1. குழுவுநீர் வளர்க்குங் குட்ட, குழுவின் மீன் வளர்.

3. சாறகுன் கூனையின்.

4. முளைக்குமால். (48)

915. பூநெ ருங்கிய புள்ளுறை சோலைகள்
தேனொ ருங்கு சொரிதலிற் றேர்வில
மீனெ ருங்குறும் வெள்ள மெனவெரீஇ
வான ரங்கண் மரங்களின் வைகுமால்.

பூநெருங்கிய - மலர்களில் நெருங்கி மொய்க்கின்ற, புள் உறை சோலைகள் - வண்டுகள் தங்கிய தான சோலைகள், தேன் ஒருங்கு சொரிதலில் - தேனை ஒருமிக்க மிகுதியாகப் பொழிவதனால், தேர்வில - அது இன்னதென்று தெரியாதவையாய், (அத்தேன்) மீன் நெருங் குறும் - மீன்கள் நிறைந்த, வெள்ளம் என - நீர் வெள்ளம் என்று, வெரீ இ - அச்சமுற்று, வாநரங்கள் - அச்சோலையில் வாழும் குரங்கு கள்; மரங்களின் வைகும் - (கீழ் இறங்காது) மரங்களின் மேலேயே தங்கியிருக்கும். ஆல்; ஈற்றசை.

புள் - வண்டு (பிங்.) வெரீஇ; வெருவி என்ற சொல் திரிந்தது; சொல்லிசை யளபெடை, இங்குக் குறிப்பிட்ட வாநரங்கள், பிராட்டி யைத் தேடிச் சென்ற வாநரர்களின் வேறாய் அங்குச் சோலையில் வாழும் வாநரங்கள் என்க.

பி - ம். 1. பூநெருங்குறு, நெருங்குறு.
2. னொருக்கு தருதலின், றேர்விலா ; தேர்ந்திலாய், தேர்ந்தசாய், தேர்ந்துராய்.
3. மீனெருங்குவ, மீனெருங்குவ, மீனெருங்கிய, வெள்ளம் வெரீ இப் பல ; வெள்ளத்துக் கஞ்சியே.
4. மலைகளின் வைகுமால். (49)

இதன்பின், சிலபிரதிகளில் அடியிற்காணும் ஓர் அதிகப் பாடல் காணப் பெறும்; அது பழைய சிறந்த ஏடுகளில் காணப் பெறவில்லை. இது இல்லை என ஸ்ரீஐயரவர்கள் குறிப்பிலும் உள்ளது.

தாறு நாறுவ தாழைக டாழையின்
சோறு நாறுவ தூங்குறு மாங்கனி
நாறு நாறுவ நாறு வளர்க்குறும்
சேறு நாறுவ செங்கழு நீரரோ,

வாநரவீரர் பொன்னிநாடு நீங்கிப் பாண்டிநாடு சென்றது

916. அனைய பொன்னி யகன்புன னாடொரீஇ
மனையின் மாட்சி குலாமலை மண்டலம்
வினையி னீங்கிய பண்பினர் மேயினார்
இனிய செந்தமிழ் நாடுசென் றெய்தினார்.

வினையின் நீங்கிய பண்பினர்-தீவினைகளினின்று நீங்கிய நற்குணம் வாய்ந்த அவ்வாநரவீரர்கள், அனைய - அத்தகைய வளங்கள் நிறைந்த, பொன்னி அகல் புனல் நாடு - காவிரிநதி பாயப் பெறும் அகன்ற நீர் நாடாகிய சோழ நாட்டை, ஒரீஇ - விட்டு நீங்கி, மனையின் மாட்சி குலாம் - இல்லறச் சிறப்புக்கள் மிகுந்து விளங்கும், மலைமண்டலம் - மலையாள தேசமாகிய சேரநாட்டை, மேயினார்-அடைந்தவர்கள், (அதையும் நீங்கி), இனிய செந்தமிழ் நாடு சென்று எய்தினார் - இனிய அழகிய தமிழ்நாடாகிய பாண்டி மண்டலத்தைப் போய்ச் சேர்ந்தார்கள்.

மனையின் மாட்சி குலாம் எனத் தனிப்படக் கூறியது, அங்கு இல்லங்கள் என்று தனிச்சிறப்புடன் விளங்கும் இடங்களைக் குறித்ததும் ஆம்; மனையின் மாட்சி (வாலி வதைப்; 115) செந்தமிழ் நாடு-பாண்டிநாடு.

பி - ம். 1. *யகன் சென்னி நாடொரீஇ, யகன்வள நாடொரீஇ.*
2. *குலாமலை விண்டலம்.*
3. *மெய்யினர் மேயினார்; மேவினார்; மெய்ம்மையர் மேயினார்; வீங்கினர் மேவிட மெய்திப்பின்.*
4. *இனைய தென்றமிழ்; நாட்டிடை யெய்தினார்.* (50)

பாண்டி நாட்டின் சிறப்பு

917. அத்தி ருத்தகு நாட்டினை யண்டர்நா
டொத்தி ருக்குமென் றாலுரை யொக்குமோ
எத்தி றத்தினு மேழுல கும்புகழ்
முத்து முத்தமி ழுந்தந்து முந்துமோ.

அ திரு தகு நாட்டினை - அந்த, செல்வத்தால் சிறப்புற்ற பாண்டி நாட்டை, அண்டர் நாடு ஒத்திருக்கும் - சுவர்க்க லோகமாகிய வான நாடு நிகர்க்கும், என்றால் - என்று கூறுவோமானால், உரை ஒக்குமோ - அவ்வாறு கூறும் வார்த்தை பொருந்துமோ, பொருந்தாது; எ திறத்தினும் - எந்தவிதமாய் நோக்கிப் பார்த்தாலும், ஏழ் உலகும் புகழ் - ஏழு

உலகத்தாராலும் புகழப்படுகின்ற, முத்தும்-முத்துக்களேயும், மு தமிழும்-(இயல் இசை நாடகம் என்னும்) மூவகைத் தமிழ்களேயும், தந்து - தந்து, முந்துமோ - அந்த அண்டர் நாடு மேம்படுமோ ?

எத்திறத்தினும்-வான நாட்டிலுள்ள எந்த விதமான சிறப்புக்களேக் கொண்டு பார்த்தாலும் என்னலும் ஏற்கும். முத்தும், தமிழ்போன்ற இனிய தெய்வத் தன்மையுடைய மொழியும், நிலவுலகின் வேறு எந்தப் பாகத்தினும் வானுலகத்தினும் இல்லை என்றபடி;

பி - ம். 1. *அத்திறத்தரு, அத்திருத்தகை.*
2. மென்றுலது வொக்குமோ, மென்றுலினி யொக்குமோ; மென்றுலிணை யொக்குமோ.
3. எவ்வுலகும்புகழ்.
4. *முற்றலால், முற்றுமால், முற்றுமோ, முற்றுமே, முந்துமால்.*

(51)

பாண்டிநாட்டிலும் பிராட்டியைக் காணுது வானரவீரர் வருந்தியது

918. என்ற தென்றமிழ் நாட்டினை யெங்கணும்
சென்று நாடித் திரிந்து திருந்தினர்
பொன்று வாரிற் பொருந்தினர் போயினர்
துன்ற லோதியைக் கண்டிலர் துன்பினர்.

திருந்தினர் - ஒழுக்கத்தாற் சிறந்து விளங்கிய அவ்வானரவீரர்கள், என்ற தென் தமிழ் நாட்டினை - அழகிய தமிழ்நாடு என்று மேற் சிறப்பிக்கப் பெற்ற பாண்டிநாட்டை, எங்கணும் திரிந்து சென்று நாடி-எல்லா விடங்களிலும் அலைந்து சென்று தேடி, துன்று அல் ஓதியை-அடர்ந்த இருள்போன்ற கரிய கூந்தலையுடைய பிராட்டியை, கண்டிலர் - காணுதவர்களாய், துன்பினர் - அதனுல் உண்டான துன்பமேலிட்டவர்களாகிப், பொன்றுவாரில்-இறக்கும் நிலையில் உள்ளவர்போல, பொருந்தினர் - மனம் செயல் முதலியன அடங்கப்பெற்றவர்களாகி, போயினர்-செல்வாராயினர்.

இனிக் கடலன்றி வேறுநாடு இல்லாமையால், ஊக்கந்தளர்ந்து இறக்கும் இறுதி நிலையில உள்ளார் போல ஆயினர் என்பதாம். அல் லோதி; உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ப் பிராட்டியைக் குறிப்பது; ஓதி பெண்பாலின் கூந்தல்; பிராட்டியைத் துன்றலோதி யென்பது; சுந்தர. 331.

பி - ம். 1. *திருத்தகு காட்டினை.*
2. *திரிந்து வருந்தினர், திரிந்து திருத்தினர், திரிந்து திறத்தினர், திரிந்தனர் செந்தையில்,*

(52)

வானரவீரர் மயேந்திரமலையை அடைந்தது

**919.** **வன்றி சைக்களி றன்னம யேந்திரக்**
**குன்றி சைத்தது வல்லையிற் கூடினர்**
**தென்றி சைக்கடற் சீகர மாருதம்**
**நின்றி சைக்கு நெடுநெறி நீங்கினர்.**

(அவ்வாறு ஓய்ந்த நிலையிற் சென்ற அவ்வானர வீரர்கள்), தென் திசை கடல் - தெற்குத் திசையில் உள்ள கடலின், சீகர மாருதம் - நீர்த் திவலைகளோடு கூடிய காற்று, நின்று இசைக்கும் நெடுநெறி நீங்கினர் - இடையறாது நின்று ஒலியுடன் வீசும் அப்பாண்டி நாட்டின் நெடிய வழிகளைக் கடந்தவர்களாகி, வன் திசை களிறு அன்ன - வலிய தென் திசையைத் தாங்கும் யானையை ஒத்து விளங்கியதும், இசைத்தது - முன் சுக்கிரீவமகாராஜன் குறிப்பிட்டுக் கூறியதுமான, மயேந்திரக் குன்று - மயேந்திரம் என்னும் மலையை, வல்லையில் கூடினர் - விரைவில் போய் அடைந்தனர்.

சீகரம் நீர்த்திவலை; ஆரணிய: 567; சுந்தர. 420, இசைத்தது - சுக்கிரீவன் மகேந்திர மலையிற்சென்று தேடுமாறு வானர வீரர்க்கு உரைத்தது, (750) அன்றி ஏம கூடத்திலிருந்து ஒரு பகுதி வானரவீரர்களைப்பிரித்து அனுப்பி மயேந்திர மலையருகே வந்து தம் முடன் வந்து கூடுமாறு கூறியதும் ஆம். (813). மயேந்திரமலை தென்றி சைக் களிறுக்கு உவமை, அதன் பெருமையாலும், தோற்றத்தாலும் தென்றிசையில் உள்ளமை யாலுமென்க.

பி - ம். 1. *வன்றிசைக் குன்றிதென்ன ; மகேந்திரக்.*
3. *நீர்தர மாருதம்.*
4. *நெடுநிலம் நீங்கினர்.* (53)

ஆறு செல் படலம் முற்றும்.

---

## 15. சம்பாதிப் படலம்

இது, சம்பாதியின் செய்தியை உணர்த்தும் படலம் என விரியும். மகேந்திர மலையை அடைந்த வானரவீரர் அங்குச் சடாயுவின் தமயனை சம்பாதியைக் கண்டதும் அவன் சடாயு இறந்தமை அறிந்து வருந்தியதும், பின் அவன் மூலம் பிராட்டி இலங்கையில் இருப்பதை அறிந்ததும், சம்பாதி இராம நாமமகிமையால் எரிந்துபோன தன் இறகுகள் முளைக்கப்பெற்றுச் சென்றதும், பின் அநுமன் சாம்பவனால் தூண்டப்பெற்றுக் கடல்கடந்து இலங்கை 'சென்று பிராட்டி அங்கு இருப்பதை அறிந்துவர உடன்பட்டதும் ஆகிய செய்திகளை இப்படலம் விளக்குவதாகும்.

வானரவீரர் தென்கடல் கண்டது

920. மழைத்தவிண் ணகமென முழங்கி வானுற
இழைத்தவெண் டிரைக்கர மெடுத்தி லங்கையாள்
உழைத்தடங் கண்ணியென் னுழையென் றோடிவந்
தழைப்பதே கடுக்குமவ் வாழி நோக்கினர்.

(அவ்வானரவீரர்), மழைத்த விண் அகம் என-மழையைத் தன்னிடம் கொண்ட மேகம் என, முழங்கி - ஒலிசெய்து கொண்டு, வான்உற - வானில் பொருந்துமாறு, இழைத்த - உண்டாக்கிய, வெண்திரைக் கரம் எடுத்து-வெண்மையான தன் திரைகளாகிய கைகளைத் தூக்கி மேலுயர்த்திக்கொண்டு, இலங்கையாள் - இலங்கை என்னும் மாது, உழை தட கண்ணி-மானின் கண்போன்ற பெரிய கண்களையுடைய பிராட்டி, 'என் உழை என்று-என்னிடத்தில் இருக்கிறாள் ' என்று சொல்லிக்கொண்டு, ஓடிவந்து - வேகமாய் எதிரே வந்து, அழைப்பதே கடுக்கும் - அழைப்பதையே ஒத்திருக்கும், அ் ஆழிநோக்கினர் - அக்கடலைக் கண்டனர்.

மழைத்த விண் ; விண் மேகம் ; (பிங்.). விண், இடவாகு பெயராய் மேகத்தைக் குறிப்பது ; " விண்ணின்று பொய்ப்பின் (குறள். 13). அலைகளை நீர்நிலைகளின் கரங்களாக உவமிப்பது கவிமரபு ; 'பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளி கொள்ளுங் கருமணியை' (பெருமாள் திருமொழி: 1.) என்றமை காண்க. மான் விழிகளை மகளிர் கண்களுக்கு உவமிப்பது அவை கருமையும் பெருமையும் மருண்ட தன்மையும் உடைமையால்; உழை யென்றசொல் இங்கு மான், இடம் எனும் இருபொருள் களில் வந்துள்ளது. இலங்கையாள்; புவியையும் புவியின் பகுதியான நாடு நதி முதலியவற்றையும் பெண் பாலாகக் கூறுவதும் கவிமதம் ஆகும்.

இச் செய்யுளில் அமைந்த கருத்துக்கு ஒப்பு: 'மையறு மலரினீங்கி யான்செய்மா தவத்தின் வந்து, செய்யவளிருந்தாளென்று செழுமணிக் கொடிகளென்னும், கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண், ஐயனை யொல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா' (பால. மிதிலைக். 1.) இச்செய்யுள் தற்குறிப் பேற்ற வணியும் உருவக அணியும் விரவப் பெற்ற சிறப்புடையதாகும்.

பி - ம். 1. *வானரை; வன் கடல், யார் கடல்.*
3. *கன்னியென் றுரைத்திட் டோடிவர்.*
4. *அழைப்பதே யடுக்குமவ், அழைப்பன கடுக்குமவ்; மாலாழி.* (1)

ஏம கூடத்தில் பிரிந்த வானரவீரர் வந்து கூடியது

921. விரிந்துநீ ரெண்டிசை மேவி நாடினிர்
பொருந்துதிர் மயேந்திரத் தென்று போக்கிய
அருந்துணைக் கவிகளா மலகில் சேனையும்
பெருந்திரைக் கடலெனப் பெயர்த்துங் கூடிற்றே.

'நீர் - நீவிர், விரிந்து - பரவி, எண் திசை மேவி - எட்டுத்திக்குக் களிலும் சென்று, நாடினிர் - பிராட்டியைத் தேடிப்பார்த்தவர்களாய், மயேந்திரத்து பொருந்துதிர் - மகேந்திர மலையிடத்தில் வந்து எங்க ளோடு கூடுங்கள்', என்று போக்கிய-என்று முன் அனுப்பிய, அருதுணை கவிகள் ஆம் அலகில் சேனையும்-அவர்களுக்கு அரிய துணையாக வந்த எண்ணிக்கையற்ற வானரசேனையும், பெருதிரை கடல் என - பெரிய அலைகளோடு கூடிய மற்றொரு பெரிய கடல் எதிர் வந்ததேபோல, பெயர்த்தும் கூடிற்று - அங்கதன் முதலிய வானரவீரர்களோடு அங்கு மீட்டும் வந்து சேர்ந்தது. ஏ ; ஈற்றசை.

அங்கதன் முதலினோர் முன் வானரவீரர்களில் ஒரு பகுதியைப் பிரித்து அனுப்பியது: 813, 919 செய்யுட்களிலும் உரைகளிலும் காண்க. அநுமன் முதலிய வானரத் தலைவருடன் சுக்கிரீவனால் அனுப்பப் பட்டவர் இரண்டு வெள்ளம் எண்கொண்ட பெரும் வானரப் படையினர். 793.

பி - ம். 1. *விரிந்தநீ ரெண்டிசை மேவி நாடினீர், மேவு மேன்மையார் மேவு மேனியார்; விரிந்தபாரெண்டிசை நாடி யென்றியீர்.*
2. *பொருந்தமி னென்றவர் போய குழல் வாய், கவிகளா மல்கு சேனையும்.*
3. *தன்னவரும் கவியெனு மளவில்.* (2)

இச்செய்யுள் ஒரு சுவடியில் முன்னுள்ள ஆறுசெல்படலத்து ஈற்றுச் செய்யுளாகவும், மற்றொரு சுவடியில் இப்படலத்து முதற்செய்யுளாகவும் உள்ளது. மேலும் 'விரிந்து நீ ரெண்டிசை' என்ற இச் செய்யுளுக்குப் பின் சில பிரதிகளில்,

யாவரு மவ்வயி னெளிதி னெய்தினர்
பூவரு புரிகுழல் பொருவில் கற்புடைத்
தேவியைக் காண்கிலார் செய்வ தோர்கிலார்
நாவுறக் குழறிட நவில்கின் றாரரோ

அன்னதோர் அளவையி னங்க நாடொரீ இத்
தென்மலை நாட்டினைத் தேடிச் சென்றுடன்
இன்னிசைத் தலைவரோ டிரண்டு வெள்ளமும்
மன்னுமா மகேந்திரத் தலத்து வந்ததால்

என்ற இரு பாட்டுக்கள் அதிகமாக வுள்ளன.

வாநரவீரர் வருந்திக் கூறியவை

922. அற்றது நாள்வரை யவதி காட்சியும்
உற்றில மிராகவ னுயிரும் பொன்றுமால்
கொற்றவ னாணையுங் குறித்து நின்றனம்
இற்றது நஞ்செய லினியென் றெண்ணினர்.

'நாள் வரை அவதி - நாட்கள் அளவிட்டுக் கூறியுள்ள எல்லையும், அற்றது - முடிவுற்றது; காட்சியும் உற்றிலம் - பிராட்டி தரிசனமும் பெற்றோமில்லை; இராகவன் உயிரும் பொன்றும் - பிராட்டியைக் காணவில்லை என்பதை அறிந்தால் இராமபிரானுடைய பிராணனும் அழியும்; (மேலும்) நம் கொற்றவன் ஆணையும் குறித்து நின்றனம் - சுக்கிரீவ மகாராஜன் கட்டளையையும் குறித்து நிற்கின்றோம்; இனி நம் செயல் இற்றது - இனி நாம் செய்யக் கூடிய காரியமும் இல்லை', என்று எண்ணினர்-என்று அவ்வீரர்கள் பலவாறு சிந்தித்தார்கள். ஆல்-அசை.

கொற்றவன் ஆணை குறித்தது; முப்பது நாட்கள் கடந்தால் தமக்கு என்ன தண்டனை கிடைக்குமோ என்றது, நம் செயல் இற்றது என்றது தெளிவினால் கூறிய காலவழுவமைதி.

பி - ம். 1. *அற்றது சொன்னா ளவதி; ஆட்சியு முற்றிடும்.*
2. *முற்றிடு மிராகவன், னுயிரு மோயுமால், னுயிரு மொன்றுமால், னுயிருக் கொண்டுமாம்.*
3. *குறித்த நின்றன; குறைய நின்றன; நின்றபின்.*
4. *இற்றன நஞ் செயல்; றெண்ணுவார், றெய்தினர்.* (8)

923. அருந்தவம் புரிதுமோ வன்ன தன்றெனின்
மருந்தரு நெடுங்கடு வுண்டு மாய்துமோ
திருந்திய தியாதது செய்து தீர்துமென்
றிருந்தனர் தம்முயிர்க் கிறுதி யெண்ணுவார்.

தம் உயிர்க்கு இறுதி எண்ணுவார் - தம் உயிர்க்கு ஓர் முடிவைக் கருதிய் அவ்வாநர வீரர், 'அரும் தவம் புரிதுமோ - (நாம் திரும்பிக் கிட்கிந்தைக்குப் போகாமல் இங்கேயே இருந்து) செய்தற்கரிய கடும் தவஞ் செய்வோமோ? அன்னது அன்று எனின் - அது இல்லை யென்றால், மருந்து அரும் - மாற்று மருந்து கொடுப்பதற்கு இல்லாத, நெடு - பெரிய, கடு உண்டு - விஷத்தை அருந்தி, மாய்துமோ - இறந்து அழிவோமோ, திருந்தியது யாது - இவ்விரண்டில் சிறந்தது யாது? அது செய்து தீர்தும் - அதைச் செய்து முடிப்போம்', என்று இருந்தனர் - என்று தீர்மானித் திருந்தனர்.

தம்முயிர்க் கிறுதி யெண்ணுவார் : ஸ்ரீராம கைங்கரியத்தில் ஈடு பட்டும் கைங்கரியத்தை நிறை வேற்றுது உயிர் வாழ்வதைவிட, உயிர் விடுவதே மேல் என்று கருதினுர் அவ்வாநர வீரர் என்பதாம்.

பி - ம். 2. *மருந்தினிற் றீர்விலாக் கடுவின்.*
3. *திருந்திய தொருவிதம்; திருந்திய தியாவது,*
4. *இறுதி யெண்ணினுர், இறுதி தேடுவார்.* (4)

அங்கதன் கூறியது

924. கரைபொரு கனைகடல் கனக மால்வரை
நிரைதுவன் றியவென நெடிதி ருந்தவர்க்
குரைசெயும் பொருளுள தெனவு ணர்த்தினுன்
அரசிளங் கோளரி யயருஞ் சிந்தையான்.

அரசு இளம் கோள் அரி - இளவரசனும் சிங்கம் போன்றவனு மான அங்கதன், அயரும் சிந்தையான் - வருந்திய மனத்தினனுய், கரை பொரு கனை கடல் - அலைகள் கரைமீது மோதும் ஒலிக்கும் கடலுக் கருகில் உள்ள, கனக மால் வரை நிரை துவன்றிய என - மேரு மலைகள் பலவும் வரிசையாய் நெருங்கி நின்றன என்று சொல்லும்படி, நெடிது இருந்தவர்க்கு - மிகுதியாக இருந்த வாநர வீரர்களுக்கு, 'உரை செயும் பொருள் உளது என - நான் கூறுதற்குரிய செய்தி ஒன்று உள்ளது' என்று, உணர்த்தினுன் - கூறுவானுனன். (கூறியது பின்வரும் பாடல்களால் விளங்கும்).

கனக மால்வரை நிரை யிருந்தது, இல்பொருள் உவமை. கனக மால் வரை உருவால் ஒப்புடைமை ; வானரர் வெண்ணிறத்தவ ராத லின், மேருவின் பொன் நிறம் இங்கு உவமை யாகாது ; வானர வீரர் களுக்குப் பாற்கடலை உவமித்ததும் காண்க. (யுத்த. வீடண னடைக்கலம் : 132). நிரை துவன்றிய என்பதைக் கனை கடலுக்கும், கனக மால் வரைக்கும் இயைத்து, கனைகடல் நிரை துவன்றிய போலும், கனக மால்வரை நிரை துவன்றிய போலும் எனப் பொருள் கொள்க. 'பெருந்திரைக் கடலென்ப் பெரிது கூடிற்றே' (921) என்றமையும் நோக்குக. கனைகடல், பரப்பிற்கும், மால் வரை உருவின் பெருமைக்கும் உவமைகள்.

பி - ம். 1. *கரை பொரு கருங்கடல், கரைபொரு கடலயல்,*
2. *நிரைதுவன் றுற்றென.*
3. *வுணர்த்தினன் ; பொருளுள வுணர்த்தி னனரோ.* (5)
4. *யருளுஞ் சிந்தையான்.*

925. நாடிநாங் கொணருது நளினத் தாளைவான்
மூடிய வுலகினை முற்று முட்டியென்
ருடவர் திலகனுக் கன்பி னுரெனப்
பாடவம் விளம்பினம் பழியின் மூழ்கினேம்.

'நாம் - நாமெல்லோரும், வான் மூடிய - ஆகாயம் மூடியதுபோலக் கவிந்துகொண்டுள்ள, உலகினை - உலகத்தை, முற்றும் முட்டி நாடி - முழுவதும் எதிரிட்டுச் சென்று தேடிப் பார்த்து, நளினத்தாளை - தாமரை மலரில் வாழும் திருமகளான பிராட்டியை, கொணருதும் என்று - மீட்டு வருவதற்குரிய செய்தியைக் கொண்டு வருகின்றேம்', என்று, ஆடவர் திலகனுக்கு - புருஷர்களிற் றிலகம் போன்ற இராம பிரானுக்கு, அன்பினுர் என - அன்புடையவர் போல, பாடவம் விளம் பினம் - (நம்) வல்லமையைக் கூறினேம்; பழியின் மூழ்கினேம் - ஆனால் இபபொழுதோ நாம் நிந்தனைக்கே உள்ளானேம்.

நளினத் தாள் : 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' (பால. கோலங்காண் ; 35); 'தாமரை தவிரப் போந்தாள்' (ஆரணிய. 620). கொணர்தும் என்று : (பிராட்டியைக்) கொண்டுவந்து சேர்க் கின்றேம் என்பது நேர் பொருளானாலும், இராமபிரானே, சுக்கிரீவனே அவ்வாறு கொண்டு வருமாறு கட்டளை யிடவில்லை யாதலால், பிராட்டி இருக்குமிடம் அறிந்த செய்தியைக் கொணர்தும் என்பதே பொருந் தும் பொருளாகக் கொள்ளப்பட்டது. ஆடவர் திலகன் ; புருஷோத்

தமன் என்னும் பொருளைக் கொண்டது. பாடவம் - பெருமை அல்லது வல்லமை ; (ஆரணிய. 292, 412).

பி - ம். 2. *மூற்று மோடி, மூற்றி முட்டி.*

3. *கன்பிளேமெனப், கன்பிளேரெனப்.*

4. *மூழ்கினும், மூழ்குவாம், மூழ்குவான்.* (6)

**926.** **செய்துமென் றமைந்தது செய்து தீர்ந்திலெம்**
**நொய்துசென் றுற்றது நுவல கிற்றிலெம்**
**எய்தும்வந் தென்பதோ ரிறையுங் கண்டிலெம்**
**உய்துமென் ருலிதோ ருரிமைத் தாகுமோ.**

'செய்தும் என்று அமைந்தது - நாம் செய்து விடுவோம் என்று ஏற்றுக்கொண்டதை, செய்து தீர்ந்திலெம் - செய்து முடித்தோம் அல்லோம்; நொய்து சென்று - நமக்குக் குறிப்பிட்ட கால எல்லைக்குள் விரைந்து சென்று, உற்றது - நிகழ்ந்ததை, நுவலகிற்றிலெம் - போய்ச் சொல்லும் திறமையும் அற்ளும் ஆனேம்; வந்து எய்தும் என்பது - காரியம் கைகூடும் என்பதை, ஓர் இறையும் கண்டிலெம் - ஒரு சிறிதும் அறிந்தோம் அல்லோம்; (ஆதலின்), உய்தும் என்ருல் - நாம் உயிர் கொண்டு வாழ்வோம் என்று சொன்னுல், இது - இப்படி நாம் உயிர் வாழும் செயல், ஓர் உரிமைத்து ஆகுமோ - நமக்கு உரிய செயல் ஆகுமோ? (ஆகாது என்றபடி).

'நாம் ஏற்றுக்கொண்ட காரியத்தை முடிக்கவில்லை; நமக்குக் குறிப்பிட்ட காலமும் கடந்து போயிற்று : இனி நாம் மேற்கொண்ட காரியமும் கைகூடும் என்பதற்கு ஒரு சிறிது இடமும் தெரியவில்லை ஆதலின் நாம் இனி உயிர் கொண்டு வாழ்வது தகுதியன்று' என்பதை அங்கதன் அறுதியிட்டுக் கூறினன் என்க. நுவலகிற்றிலெம்; தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று; கில்; ஆற்றலையுணர்த்தும் இறந்த கால இடைநிலை. இறை - மிகச் சிறிது; 'இறையுஞான மிலாத வென் புன்கவி'; (பால. சிறப்புப் பாயிரம் 10) என்றமைபோல.

பி - ம். 1. *செய்து மென்றமைந்தது ; தீர்ந்திலெம்.*

2. *றுற்றிது நுவல ; நுவலகிற்லெம் ; சென்றுற்றது நுவல.*

3. *எய்தும்வந் தின்பமோர், எய்திய செயற்குறு கரும மெண்ணிலோம்.* (7)

927. எந்தையு முனியுமெம் மிறையி ராமனும்
சிந்தனை வருந்துமச் செய்கை காண்குறேன்
நுந்துவெ னுயிரினை நுணங்கு கேள்வியீர்
புந்தியி னுற்றது புகல்விரா மென்றான்.

(நாம் மேற்கொண்ட காரியம் முடியாமலும், குறிப்பிட்ட நாள் கடந்தும் மீண்டு சென்றால்), எந்தையும் முனியும் - எம் தந்தையாகிய சுக்கிரீவ மன்னனும் நம்மீது கோபங்கொள்வான்; எம் இறை இராமனும்- எம் தலைவனாகிய இராமபிரானும், சிந்தனை வருந்தும் - மனம் வருந்து வான்; அ செய்கை காண்குறேன் - அந்நிகழ்ச்சிகளை நான் காணும் திற முடையவனாகேன்; (ஆதலால்), உயிரினை நுந்துவென்-யான் என் உயிரை வலுவிற் போக்கிக் கொள்வேன்; நுணங்கு கேள்வியீர் - நுட்பமான நூற்கேள்வியையுடைய நீவிர். (அது பற்றி), புந்தியின் உற்றது - உங்கள் அறிவிற் பட்டதை, புகல்விர் - சொல்வீராக', என்றான் - என்று அங்கதன் கூறினான்; ஆம்; அசை.

எந்தை; சிறிய தந்தையாகிய சுக்கிரீவனை; தந்தை இறந்தபிறகு தந்தை நிலையில் உள்ளான் ஆதலானும், அவனிடம் வாலி இறக்கும் போது இனி அங்கதன் உன்மைந்தன் என்று கூறி ஒப்படைத்த தாலும் என்க. நுந்துதல் - வலுவில் தள்ளிப் போக்குதல். இவ்விடத்தில், அங்கதன், சுக்கிரீவன், தன்னிடம் அபிமானம் அற்றவ னென்றும் வஞ்சகச் செயலுடையவனென்றும் அவனை வெறுத்துக் கூறியதாக வான்மீகம் கூறுவது காணலாம். ஆனால் சுக்கிரீவன் அங்க தன் இவ்விருவர் திறத்தும் சிறிதும் இந்நூலில் எவ்விடத்தும் கருத்து வேற்றுமை கொள்ள இடமின்றி ஆசிரியர் கம்பநாடர் உயரிய நிலை யில் வைத்தே அமைத்துள்ள சிறப்பு நோக்கத்தக்கதாகும்.

பி - ம். 2. சிந்தையின் வருந்துமச் ; காண்கிலேன்.
3. முந்திநான் முடிகுவென் முயன்ற கேள்வியீர்.
4. புந்தியிலுள்ளது, புந்தியினின்னது, புந்தியி னுள்ளது, புகனு நீரென்றான், புகதிரா மென்றான் ; (8)

சாம்பவன் மறுமொழி

928. விழுமிய துரைத்தனை விசயம் வீற்றிருந்
தெழுவொடு மலையொடு மிகலுந் தோளினாய்
அழுதுமோ விருந்துநம் மன்பு பாழ்படத்
தொழுதுமோ சென்றெனச் சாம்பன் சொல்லினான்.

(அது கேட்டு), சாம்பன் - சாம்பவான், (அவ்வங்கதனை நோக்கி), 'விசயம் வீற்றிருந்து - வெற்றித் திருமகள் சிறப்புடன் அமைந்திருந்து,

எழுவொடும் மலையொடும் இகலும்-(தம் உருவத்தாலும், வலிமையாலும்) தூணையும் மலையையும் பகைக்கும், தோளினய் - தோள்களையுடைய வனே ! விழுமியது உரைத்தனை - சிறப்புடைய வார்த்தை கூறினாய் ! (அன்று என்றபடி); இருந்து அழுதுமோ - நீ இறந்துபோகப் பின் யாங்கள் உயிரோடு இங்கு இருந்து அழுதுகொண்டிருப்போமோ ? (மாட்டோம் என்றபடி); நம் அன்பு பாழ்பட-எங்கள் அன்பு பாழ்படுமாறு, சென்று தொழுதுமோ - (உயிர்விடாமல்) அங்குச் சென்று இராம பிரானையும் சுக்கிரீவனையும் தொழுது வாழ்வோமோ?' என சொல்லினன்- என்று கூறினன்.

விழுமியது ரைத்தனை; இஃது எதிர்மறைப் பொருளில் தகாதது கூறினாய் என்பதாம் விசயம் வீற்றிருந்து......தோளினாய்; இது நீ நல்ல செய்திகொண்டு வெற்றியோடு இராமபிரான்பால் நீ போவாய் என்ற குறிப்பு விரிச்சியாகச் சாம்பன் வாயினின்றும் பிறந்தது எனலாம். விரிச்சி - நற்சொல்; இதனை உபசுருதி என்பர் வடமொழியில். அழு துமோ, தொழுதுமோ என்பவற்றில் உள்ள ஓகாரவினாக்கள் எதிர்மறைப் பொருளன.

பி - ம். 2. மிசையுந் தோளினாய். 3. அழுதமோ விழுந்தகம்.
4. சரபன் சொல்லினன். (9)

929. மீண்டினி யொன்றுநாம் விளம்ப மிக்கதென்
மாண்டுறு வதுநல மெனவ லித்தனெம்
ஆண்டகை யரசிளங் குமர வன்னது
வேண்டலி னின்னுயிர்க் குறுதி வேண்டுதும்.

(மேலும் சாம்பவன் அங்கதனை நோக்கி), 'ஆண்டகை அரசு இளம் குமர - ஆடவரிற் சிறந்த அரசிளங் குமரனான அங்கத ! மீண்டு - திரும்பிச் சென்று, இனி நாம் ஒன்று விளம்பமிக்கது என் - இனிமேல் நாங்கள்போய் சொல்லக் கூடிய சிறந்த செய்தி யாதே உள்ளது? (ஒன்று மில்லை என்றபடி); மாண்டு உறுவது நலம் என வலித்தனெம்-(ஆதலால்) யாங்கள் இறந்து போவதே நல்லது என உறுதி கொண்டுள்ளோம்; அன்னது வேண்டலின் - அவ்வாறு இறந்துபோதலை நாங்கள் விரும்பும் இடத்து, நின் உயிர்க்கு உறுதி வேண்டுதும் - நீ உயிர்வாழ்வதாகிய உறு தியை விரும்பி நிற்கின்றோம்.

அங்கதன் தான் இறக்க விரும்பியதைக் கேட்ட சாம்பவன், தாங்கள் இறக்க, அவன் உயிர் பொறுத்திருக்க வேண்டினன் என்க.

பி - ம். 3. குமர வன்னது.
4. வேண்டில னின்றுயிர்க் கிறுதி மேலையோய்; வேண்டிடி னின்றுயிர்க் குறுதி வேண்டுமே; வேண்மோல். (10)

அங்கதன் கூற்று

**930.** என்றவ னுரைத்தலு மிருந்த வாலிசேய்
குன்றுறழ்ந் தெனவளர் குவவுத் தோளினீர்
பொன்றிநீர் மடியயான் போவ னேலது
நன்றதோ வுலகமு நயக்கற் பாலதோ.

என்று அவன் உரைத்தலும் - அவ்வாறு சாம்பவன் கூறியதும், இருந்த வாலி சேய்-அதனைக் கேட்டிருந்த வாலி குமாரனான அங்கதன், (அவ்வாநரவீரர்களை நோக்கி), 'குன்று உறழ்ந்தது என வளர் - மலைகள் ஒப்பானவை என்று சொல்லும்படி வளர்ந்துள்ள, குவவு தோளினீர் - திரண்டு ஓங்கிய தோள்களையுடையவர்களே! நீர் பொன்றிமடிய - நீங்கள் அனைவரும் இங்கு இறந்து ஒழிய, யான் போவனேல் - யான் மட்டும் உயிருடன் தனியே திரும்பிப் போவேனானால், அது நன்றதோ - அது நல்லதாகுமோ? உலகமும் - உலகத்தில் வாழும் சான்றோரும், நயக் கல் பாலதோ - விரும்பக் கூடியதாகுமோ ? (ஆகாது என்றபடி).

உறழ்தல் - ஒத்தல்; நன் சூ. 367; உறழ்தல் - எதிராய் மாறுபடுதலும் ஆம். அது பகுதிப் பொருள் விகுதி.

பி - ம். 1. என்றவ னிசைத்தலும்.
2. குன்றுழந் தனவெனும், குன்றுயர்ந் தனவெனும், குன்றுயர்ந் தனவெனக்.
3. பொன்றினீர் மடிய, பொன்றுநீர் மடிய, பொன்றிநீ ரொழிய; போகும் புன்மைதான்.
4. நன்றரோ; வுலகுளோர் நகைக்க நாணுமால்; நயக்கற்பாலதே, நலக்கற் பாலதே. (11)

**931.** சான்றவர் பழியுரைக் கஞ்சித் தன்னுயிர்
போன்றவர் மடிதரப் போந்து ளானென
ஆன்றபே ருலகுளோ ரறைதன் முன்னம்யான்
வான்றொடர் குவெனென மறித்துங் கூறுவான்.

'சான்றவர் பழி உரைக்கு அஞ்சி - மேலோர் கூறும் பழிச் சொல்லுக்குப் பயந்து, தன் உயிர் போன்றவர் மடிதர-தன் உயிருக்கு நேரான அன்பர்கள் இறந்து போக, போந்துளான் என - இவன் மட்டும் இறவாது (தன் உயிர் பெரிதென்று) வந்து விட்டான் என, ஆன்ற - உயர்ந்த, பேர் உலகு உளோர் - உலகில் உள்ள பெரியோர், அறைதல் முன்னம் - கூறி என்னை நிந்திக்கும் முன்னரே, யான் - நான், வான் தொடர்குவென் - இறந்து மேலுலகம் செல்வேன்', என - என்று கூறி,

மறித்தும் கூறுவான் - மீண்டும் பின்வருமாறு அங்கதன் சொல்வானுனன்; கூறியவை அடுத்த இருபாடல்களால் விளங்கும்.

ஆன்ற என்பதை அகன்ற என்ற சொல்லின் திரிபாகக் கொண்டு பொருள் கொள்வாரும் உளர். மடிதரல்; தரல், துணைவினை. வான்றொடர்குவென்; இறந்தவர் வானுலகம் செல்வர் என்ற மரபு பற்றி வந்த வழக்கு ;

பி - ம். 1. பழித்துரைக், பழிக்குரைக்.
2. என்றவ ரழிதர, என்றவர் மடிதர, போன்றவர் பொன்றவும், பொன்றயாம் ; போந்த னேனென.
3. குலகுளா ரறைதன் முன்னமே,
4. மறுத்தங் கூறுவான். (12)

வேறு

அங்கதன் இரக்கம்

932. எல்லைநம் மிறுதி யாய்க்கு
மெந்தைக்கும் யாவ ரேனும்
சொல்லவுங் கூடுங் கேட்டாற்
றுஞ்சவு மடுக்குங் கண்ட
வில்லியு மிளைய கோவும்
வீவது திண்ண மச்சொல்
மல்லனீ ரயோத்தி புக்கால்
வாழ்வரோ பரதன் மற்றோர்.

'(நாம் அனைவரும் இங்கே இறந்தோமானுல்), நம் இறுதி எல்லை - நம் ஆயுள் முடிவான செய்தியை, யாவரேனும் - யாரேனும் ஒருவர், யாய்க்கும் - என் தாயாகிய தாரைக்கும், எந்தைக்கும் - என் தந்தையாகிய சுக்கிரீவ மன்னனுக்கும், சொல்லவும் கூடும் - போய்ச் சொல்லவும் இடம் ஏற்படும்; கேட்டால் துஞ்சவும் அடுக்கும் - அதனைக் கேட்டால் அவர்கள் மாண்டு போதலும் ஏற்படும்; கண்ட - அத்துயர நிகழ்ச்சியை நேரில் பார்த்த, வில்லியும் - வில் வீரனை இராமபிரானும், இளைய கோவும் - இளைய பெருமானுன இலக்குவனும், வீவது - இறந்து போவது, திண்ணம் - நிச்சயம் ; அ சொல் - அவ்வார்த்தை, மல்லல் நீர் அயோத்தி புக்கால் - வளம் பொருந்திய நீர் மிக்க அயோத்திமா நகரத்திற்கு எட்டினுல், வாழ்வரோ பரதன் மற்றோர் - பரதனும் அங்குள்ள மற்றையோரும், உயிர் வாழ்வாரோ ? மாட்டார் இறந்துபடுவார் என்றபடி.

யாய்-தாய்; இது ஆய் எனவும் வரும். எந்தை என்பது சுக்கிரீவனை; துஞ்சுதல் - இறத்தல் ; இது மங்கல வழக்கு. அயோத்தி - பகைவரால் வென்று அடைய முடியாத நகரம் என்னும் பொருளது. பரதன் : எல்லாப் பாரத்தையும் தாங்கும் பொறுமையும் வலிமையுமுடையவன் என்பதாம் ; கண்ட வில்லி : காலவழுவமைதி.

பி - ம், 1. எல்லையெம் பிறுதி, எல்லியி லிறுதி யுய்க்கும், எல்லியி லிறுதி யாய்க்கும்.
2. கூடுமன்றே; கூடுமென்றே, தொன்மை;
3. வீயவு மடுக்கு மிக்க, மிச்சொல்.
4. அயோத்தி வாழும்; வாழ்வ ரன்றால்; வாடுவர். (13)

933. பரதனும் பின்னு ளோனும்
பயந்தெடுத் தவரு மூரும்
சரதமே முடிவர் கெட்டேன்
சனகியென் றுலகஞ் சாற்றும்
விரதமா தவத்தின் மிக்க
விளக்கினு லுலகத் தியார்க்கும்
கரைதெரி விலாத துன்பம்
விளைந்தவா வெனக்க லுழ்ந்தான்.

'பரதனும் பின் உளோனும் - பரதனும் அவன் பின் தம்பியாகப் பிறந்த சத்துருக்கனும், பயந்து எடுத்தவரும் - இராமபிரான் முதலான அந்நால்வரையும் பெற்றெடுத்த கோசலை, சுமித்திரை, கைகேசி யென்னும் மூன்று தேவியரும், ஊரும் - அவ்வயோத்திமா நகர மக்களும். சரதமே முடிவர் - நிச்சயமாகவே இறந்தொழிவார் ; கெட்டேன் - என்ன கேட்டுக் குள்ளானேன்! சனகி என்று உலகம் சாற்றும் - சானகி என்று உலகத்து ஆன்றோர் பாராட்டிச் சொல்லும், விரத மா தவத்தின் மிக்க - மாட்சிமையுற்ற பெருந்தவத்தின் மேம்பட்ட, விளக்கினுல் - தீபம் போன்ற ஒளி நிறைந்த ஒரு மகளினுல், உலகத்து - இவ்வுலகத்தி லுள்ள, யார்க்கும் - எவர்க்கும், கரை தெரிவு இலாத - கரைகாண முடியாத, துன்பம் விளைந்த ஆ - பெருந்துயர் வந்து நேர்ந்ததே !' என - என்று சொல்லி, கலுழ்ந்தான் - அங்கதன் கலங்கி வருந்தினுன்.

கெட்டேன் ; இச்சொல் இரக்கக்குறிப்பை யுணர்த்துவது, 'சீலமார்க் குண்டு கெட்டேன்' ; (அயோத், கைகேசி சூழ்வினைப் 91) ; 'அருளிது வாயிற் கெட்டேன் பிழைப்பரோ வரக்கராயோர்' (யுத்த. வீடணனடைக் கலப் ; 127.). பிராட்டியை விரத மாதவத்தின் மிக்காள்

என்பது; 'தவஞ்செய்த தவமாந்தையல்' சுந்தர. 1275, பிராட்டிக்கு விளக்கு; பால. கோலங்காண்; 23; அயோத். கங்கைப்; 16; ஆரணிய 695, சுந்தர. 596. விளைந்தவா. ஆ என்றது இங்கு இரக்கத்தையும் வியப்பையும் உணர்த்திநின்றது. இச்செய்யுள் அவலச்சுவையினமைந் துள்ளது.

பி - ம். 1. *பாதனு மினைய கோவும்; பரிக்கெடுத் தவரும்; பாதனே முதலி னோர்கள் பயக்கெடுத் தவர்கள் பாரீர்.*
2. *சாதமேவீ வதாக; வீவர்தக்க; முடிவுங் கெட்டேன்; உலகு சாற்றும்.*
3. *தவத்தின் வந்த; விளக்கனுன் பொருட்டா லியார்க்கும்.*
4. *கரைதெரி வரிய துன்பக் கடல்புகல் கடமை யென்றுன்; விளைந்த தேயெனக்.* (14)

சாம்பவன் கூற்று

934. பொருப்புறழ் வயிரத் திண்டோட்
பொருசினத் தாளி போல்வான்
தரிப்பிலா துரைத்த மாற்றந்
தடுப்பருந் தகைமைத் தாய
நெருப்பையே விளைத்த போல
நெஞ்சமு மறுகக் கேட்டு
விருப்பினு லவனை நோக்கி
விளம்பின னெண்கின் வேந்தன்.

பொருப்பு உறழ் - மலையை ஒத்த, வயிரம் திண் தோள் - வயிரம் போன்று வலிய தோள்களையுடைய, பொரு சினத்து ஆளி போல்வான் - போர் புரியும் கோபத்தோடு கூடிய சிங்கம் போன்ற அவ் வங்கதன், தரிப்பு இலாது - (மனம்) தாங்காமல், உரைத்த மாற்றம் - கூறிய வார்த்தைகள், தடுப்பு அரும் தகைமைத்து ஆய - தடுக்க முடியாத தன்மை பொருந்திய, நெருப்பையே விளைத்த போல - தீயையே மூட்டியது போல, நெஞ்சமும் மறுக - தன் மனமும் சுழன்று வாடித் தத்தளிக்க, கேட்டு - சொல்லக் கேட்டு, எண்கின் வேந்தன் - கரடிகளுக் கரசனுன சாம்பவன், விருப்பினுல் அவனை நோக்கி - அன்புடன் அவ் வங்கதனைப் பார்த்து, விளம்பினன் - பின்வருமாறு கூறுவானுனன்.

உறழ் - உவமை யுருபு. ஆளி, இது யாளி எனவும் வரும். எண்கின் வேந்தன்: கரடிகளுக்கு அரசனுன சாம்பவான்.

பி - ம். 1. பொருளைத் தியாவி.
2. தரிப்பில தரைத்த ; தகைத்ததாய.
3. செருப்பையு முமிழ்வ போல, செருப்பையு முனிவபோல, செருப்பை வேய் விளைதத போல; செஞ்சமெஞ் சிடவே சேட்டு.
4. விருப்பினுல் வாலிசெய்க்கும் விளம்பினன். விளர்த்தது கடிதி னென்றான். (15)

## வேறு

**935.** நீயுநின் ருதையு நீங்க நின்குலத்
தாயம்வந் தவர்க்கொரு தனய ரில்லையால்
ஆயது கருதினெ மன்ன தன்றெனின்
நாயக ரிறுதியும் நவிலற் பாலதோ.

நீயும் நின் தாதையும் நீங்க-நீயும் உன் தந்தையாகிய சுக்கிரீவனும் தவிர, நின் குல தாயம் வந்தவர்க்கு - உங்கள் குல உரிமையில் அரசனாவதற்கு, ஒரு தனயர் இல்லையால் - வேறு புதல்வர் ஒருவர் இல்லாமையால், ஆயது கருதினெம் - நீ உயிர் நீங்காது சுக்கி ரீவனைப் போய்ச் சேர்க என்று ஆலோசித்துச் சொன்னோம் ; அன்னது அன்று எனில் - அவ்வாறு நீ செய்வது அல்லாவிடில், நாயகர் இறுதி யும் - நம் தலைவர்கள் அழிவையும், நவிலல் பாலதோ - (நாம்) பேசத் தக்கது ஆகுமோ ?' இது நாம் பேசக் கூடிய சொல் அன்று, என்பதாம்.

'நாவினும் முரையார் நவையஞ்சுவார்' (சீவக. 249) என்றதில், நினைப்பதும் செய்யார் என்று உரையாசிரியர் கூறியது இங்கும் கொள் ளத்தக்கது.

பி - ம். 1. நீக்கிநின், நீக்கிநின் ; நீயுநின் ருதையு மிறக்கில்.
2. தாயம்வந் தார்க்கொரு, தாயம்வந் தவரொடு, தாயமுற் றிடற் கொரு தனயர் வேறிலை ; தாயருந் தயருறும்; தனயரில்லையாம்.
3. ஆயது கிடக்கம் மிறைவராகிய.
4. நாயக ரிறப்பது ; நாயக னிறுதியும் ; (16)

**936.** ஏகிநீ யவ்வழி யெய்தி யிவ்வழித்
தோகையைக் கண்டிலா வகையுஞ் சொல்லியெம்
சாகையு முணர்த்துதீ தவிர்தி சோகம்போர்
வாகையா யென்றனன் வரம்பி லாற்றலான்.

வரம்பு இல் ஆற்றலான் - அளவற்ற வலிமை வாய்ந்த சாம்பவன் அங்கதனை நோக்கி, 'போர் வாகையாய் - போரில் வெற்றிபெறும்

திறலுடையோனே! நீ ஏகி அவழி எய்தி - நீ சென்று சுக்கிரீவனும் இராமலக்ஷ்மணர்களும் இருக்கும் இடம் அடைந்து, இ வழி - இவ்விட மெங்கும், தோகைய்ய கண்டிலா வகையும் சொல்லி - பிராட்டியை நாம் காணாத விதத்தையும் தெரிவித்து, எம் சாகையும் உணர்த்துதி - எங்கள் மரணச் செய்தியையும் அறிவிப்பாயாக; தவிர்தி சோகம் - வருந்துவதை விடுவாயாக'; என்றனன் - என்று கூறினான்.

பி - ம். 1. ஏகுதி யவ்வழி, ஏகியவ்வழி.

2. தோகையுங் கண்டிலா வகை. (17)

அநுமன் கூறியது

937. அவனவை யுரைத்தபின் னநுமன் சொல்லுவான்
புவனமூன் றினுமொரு புடையிற் புக்கிலெம்
கவனமாண் டவரெனக் கருத்தி லாரெனத்
தவனவே கத்துநீர் சலித்தி ரோவென்றான்.

அவன் அவை உரைத்தபின் - அச்சாம்பவன் அவ்வார்த்தைகளைக் கூறிய பிறகு, அநுமன் சொல்லுவான் - அநுமன் கூறுவானாகி, 'புவனம் மூன்றினும் - (நாம் பிராட்டியை) மூன்று உலகங்களிலும் தேடி, ஒரு புடையில் புக்கிலெம் - ஒரு புறத்திற்கூட முழுவதும் புகுந்து தேடிப்பார்த்தோம் அல்லோம்; (அவ்வாறிருக்க), ' தவன வேகத்துநீர் - சூரியன் போலும் வேகமுடையவர்களே! இப்பொழுதே கவனம் மாண்டவர் என - செல்லும் வலிமை அற்றவர்போலவும், கருத்து இலார் என - நாம் மேற்கொண்ட செயலை முடிக்கும் எண்ணமில்லாதவர் போலவும், சலித்திரோ - (நீவிர்) சோர்வு அல்லது வெறுப்படைந்து விட்டீரோ?' என்றான் - என்று சொன்னான்.

வலிமை யிருந்தும் இதில் கருத்து இல்லை எனில் உங்கள் வீரத் தன்மைக்கும் நேர்மைக்கும் குறைவாகும் என, இடித்துரைத்தனன் அநுமன் என்க. புவனம் - உலகம். கவனம், தபனன் என்றவை, கமனம், தபனன் என்ற வடசொற்களின் திரிபுகள். கமனம் - செல்கை; தபனன் - வெப்பத்தால் தவிக்கச் செய்பவனான சூரியன் எனனும் பொருளது.

பி - ம். 1. அவனுரை செய்தபின், அவனுரை கேட்டபின், அவனவை யுரைத்தனும்.

2. புக்கிலோம், புக்கிலேம்.

3. தருக்கி லாரெனத்.

4. கவன வேகத்தினீர், கழிய தென்கொலோ, கழிதிரோ. (18)

938. பின்னருங் கூறுவான் பிலத்தில் வானத்தில்
பொன்வரைக் குடுமியிற் புறத்தி னண்டத்தில்
நன்னுதற் றேவியைக் காண்டு நாமெனில்
சொன்னநா ளவதியை யிறைவன் சொல்லுமோ.

பின்னரும் கூறுவான்-மேலும் கூறுபவனான அநுமன், 'பிலத்தில் - பாதாள உலகத்தில், வானத்தில் - தேவர் உலகத்தில், பொன்வரை குடுமியில்-பொன்மலையாகிய மேருமலையின் சிகரத்தில், புறத்தின் அண்டத்தில் - இவ்வண்ட கோளகைக்கு அப்பால் உள்ள அண்டங்களில், நல்நுதல் தேவியை - அழகிய நெற்றியை யுடைய சீதா தேவியை, நாம் காண்டும் எனில் - நாம் தேடிக் காண்போம் ஆனால், இறைவன் - நம் அரசனான சுக்கிரீவன், சொன்ன நாள் அவதியை - நமக்குக் குறிப்பிட்டுச்சொன்ன நாட்களின் எல்லை கடந்ததை, சொல்லுமோ - ஒரு குற்றமாக எடுத்துக் கூறுவானோ? (மாட்டான் என்றபடி). ஓ - வினா.

சுக்கிரீவன் நாம் பிராட்டியைத் தேடிக்கண்டு வருதலையே நோக்கமாகக் கொண்டவன், நாள் எல்லையை நாம் கடந்து செல்வதை ஒரு குற்றமாகக் கருதமாட்டான்; ஆதலால் நாம் மேலும் பிராட்டியைத் தேடிச் செல்வதே தக்கது என்று மீண்டும் அவ்வானரர்க்கு எடுத்துரைத்தான் அநுமன். நாள் எல்லை ; முப்பது நாட்களாகிய ஒரு மாதகால அளவு ;

பி - ம். 2. *புறத்து வண்டத்துள்,*
3. *விருப்பிட மின்னும் நாடுமேல்.*
4. *யிறைவன் சொல்லுமே, டிறைவன் சோருமால்.* (19)

939. நாடுத லேநல மின்னு நாடியத்
தோடலர் குழலிதன் றுயரிற் சென்றமர்
வீடிய சடாயுவைப் போல வீடுதல்
பாடவ மல்லது பழியிற் றுமென்றான்.

நாடுதலே நலம் - மேலும் பிராட்டியிருக்குமிடத்தை நாடியறிவதே நாம் கொள்ளவேண்டிய நற்செயலாகும் : (ஆதலின்), இன்னும் நாடி - இன்னும் அவ்வாறு நாம் தேடி, அ தோடு அலர் குழலிதன்-அந்த இதழ்கள் மலர்ந்து விளங்கும் கூந்தலையுடைய பிராட்டியின், துயரில் சென்று- இராவணனால் அபகரித்துச் செல்லப்பட்ட, துயரநிலையில் (அவளைக் காக்க) எதிர்சென்று, அமர் வீடிய - அதனால் ஏற்பட்ட போரில் உயிர் விட்ட, சடாயுவை போல - சடாயுவைப்போல, வீடுதல் - (நாமும்

பிராட்டியை நாடும் அச்செயலில் ஈடுபட்டு) உயிர் நீங்குதல், பாடவம்-பெருமையாகும்; அல்லது - அது அல்லாது, (நீவிர்கருதியபடி வீணே உயிரிழத்தல்) பழியிற்று ஆம்-நிந்தனைக்கு இடமாகும்', என்றான்-என்று கூறினன் அநுமன்.

தோடலர் குழலி ; அன்மொழித்தொகை, பாடவம் - வல்லமையும், ஆம் ; ஆரணிய 292, 412 ; பழியிற்று ; பழியுடையது;

பி - ம். 1. நலமென்று நாடி.
2. தோடவிழ்குழலி ; குழலிதன் பொருட்டின் தோற்றமாய், துயரிற் றேற்றமர், துயரிற் றேன்றுமவ்.
3. நமக்கது ; பழியின்று மென்றான். (20)

சடாயு இறந்தமை,கேட்டுச் சம்பாதி வந்தது

940. என்றலுங் கேட்டன னெருவை வேந்தன்றன்
பின்றுணை யாகிய பிழைப்பில் வாய்மையான்
பொன்றின னென்றசொற் புலம்பு நெஞ்சினன்
குன்றென நடந்தவர்க் குறுகன் மேயினான்.

என்றலும் - என்று அநுமன் கூறலும், எருவை வேந்தன் - கழுகுகளுக்கு அரசனான சம்பாதி என்பவன், தன் பின் துணையாகிய பிழைப்பு இல் வாய்மையான் - தன் பின் பிறந்த சகோதரனும் தவறாத சத்திய நெறியை மேற்கொண்டவனுமான சடாயு, பொன்றினன் என்ற சொல்- இறந்தான் என்று அவ்வநுமன் கூறியசொல்லை, கேட்டனன் - கேட்டு, புலம்பு நெஞ்சினன் -சோகத்தால் புலம்பி அழும் மனத்தோடு, குன்று என நடந்து - ஒருமலை வருவதுபோல நடந்து, அவர் குறுகல் மேயினான் - அவ்வாநர வீரர்களை அணுகலானான்.

துணை - உடன் பிறந்தான் அல்லது சகோதரன் எனும் பொருளில் வருவது ; 'தெவ்வாறு முகத்தொருவன் துணைகிடந்த சுவணத்தை' (741); 'மன்முன்னேதழீ இக்கொண்ட மனக்கினிய துணைவனேல்' (அயோத். குகப்;27;) 'துணையின்றிச்சேறனன்றோ தோற்றுளகூற்றின் சூழல்' (யுத்த. கும்பருணன் வதைப்; 15: 9). குன்றென நடந்து : இறகுகள் எரிந்து அழியப்பெற்றவனாதலால் நடந்து சென்றான் சம்பாதி, மேலும் அவன் உருவின் பெருமை தோன்றக் குன்று நடந்துசென்றதாகக் கூறப்பெற்றது. இவ்வாறே சடாயுவை முன் இராமலக்ஷ்மணர் கண்டபோது அவனை, 'முந்தொரு கருமலை முகட்டு முன்றிலிற், சந்திர

ஞெளியொடு தழுவச்சாத்திய, அந்தமில் கனைகட லமரர் நாட்டிய, மந்தரகிரியென வயங்குவான்றனை' எனச் சிறப்பித்ததும் ஒப்புநோக்குக (ஆரணிய. 178); குன்றென நடந்து ; 'குன்றெழுந்து சென்றதெனக் குறுகிப் (அயோத். குகப்: 28) எனப் பரதாழ்வானைச் சிறப்பித்ததும் நோக்கற் பாலது. மேயினன் - மேற்கொண்டான் என்றலும் ஒன்றும். மேயினுன் ; இது மேவினுன் என்ற சொல்லின் திரிபு.

பி - ம். 1. னெருவைக் சேன்றன்.
3. நெஞ்சினைக்.
4. குறுகமேயினன். (21)

சம்பாதியின் தோற்றச் சிறப்பு.

941. முறையுடை யெம்பியார் முடிந்த வாவெனுப்
பறையிடு நெஞ்சினன் பதைக்கு மேனியன்
இறையுடைக் குலிசவே லெறிக லாமுனம்
சிறையுறு மலையெனச் செல்லுஞ் செய்கையான்.

'முறையுடை எம்பியார் - நீதி முறையைத் தனக்கு உரிமையா யுடைய என் தம்பி சடாயு, முடிந்த ஆ எனு - இறந்தவாறு என்னே' என்று, பறை இடு நெஞ்சினன் - பறையறைந்தாற் போன்று துடிக்கும் மனத்தினனும், பதைக்கும் மேனியன் - தவித்துத் துடிக்கும் உடலினனு மான சம்பாதி, இறை உடை-வேந்தனுன இந்திரன் தான்கொண்டுள்ள, குலிசவேல் - வச்சிராயுதம் என்னும் படையை, எறிகலா முனம் - வீசி யெறிந்து அழிக்காத முன் காலத்தில், சிறை உறு - சிறகுகளைப் பெற் றிருந்த, மலை என - ஒரு மலையே போல, செல்லும் செய்கையான் - செல்லும் செயலையுடையவனும்,

இச் செய்யுளும் இதனை யடுத்துள்ள 945 முடிய உள்ள செய்யுள் களும் ஒரு தொடராய்த் தொடர்ந்து (945) எய்தினன் என்னும் வினை கொண்டு முடியும். முறையுடை யெம்பியார் : எம்பி முறையுடையார் என மாற்றியும் பொருள் கொள்ளலாம். எம்பியார் எனப்பன்மை விகுதியிற் கூறியது அன்பின் உயர்வு தோன்ற ; பறையிடு நெஞ்சினன்; ஒப்பு : 371 ; பால. பாயிரம் : 8 ; நீதிநெறி : 95. இறை - வேந்தன் அல்லது இந்திரன் ; சிறையுடைமலை : முன் மலைகள் சிறகுகளைப் பெற் றிருந்தனவால் அவை பல இடங்களுக்கும் பறந்து சென்று உலகிற் பெருங்கேடு விளைக்கக்கண்ட இந்திரன், அவற்றின் சிறகுகளைத் தன் வச்சிரப்படையால் அறுத்து அவை கீழேவிழுந்து கிடக்கச் செய்தான் என்பது ; இதனுல் இந்திரனுக்குச் சயில கோபன் எனும் பெயரும்

வழங்குவதாயிற்று ; சயிலகோபன் ; பால. திருவவதாரப் : 106; சுந்தர. 1025 ; நள. 69, 72, 78. குலிசவேல் ; குலிசமாகியவேல்; வேல் என்பதை இங்கு ஆயுதப் பொதுவாகக் கொள்க. இஃது இந்திரனுடைய வச்சிராயுதம் ; ஆரணிய. 86. சிறையற்ற சம்பாதியைச் சிறையுறுமலை எனச் சிறப்பித்தது; பேருருவுடைய அவன் விரைவில் வந்தமை நோக்கி : இஃது இல்பொருளுவமையும் ஆம்.

பி - ம். 1. *யெம்பிபோய் ; முடிந்த வாறெனுப்.*

2. *பறைதல் கேட்டகம் பதைத்த பண்பினன் ; பறையுடை நெஞ்சினன் ; பதைத்த மேனியான்.*

3. *இறையுடைப் புரந்தரன் ; லெறிதலான்முனம், லெறிதலானெடுஞ், லெறிகிலாதன.*

4. *சிறகுடை மலையென, சிறையறுமலையென ; மலைநடக் தென்னச் சென்றுளான்.* (22)

942. மிடலுடை யெம்பியை வீட்டு வெஞ்சினப்
படையுள ராயினர் பாரில் யாரெனு
உடலினை யிழிந்துபோ யுவரி நீருகக்
கடலினைப் புரையுறு மருவிக் கண்ணினன்·

மிடலுடை எம்பியை - வலிமையுடைய என் தம்பியை, வீட்டும் அழிக்கக்கூடிய, வெம் சினம் படையுளர் ஆயினர் - கொடிய கோபத்தோடு தாக்கும் ஆயுதத்தையுடையவராயினர், பாரில் 'யார் எனு - இவ்வுலகில்யாரே யுள்ளார்' என்று ஐயுற்றவனாய், உடலினை இழிந்து போய் - உடலிலிருந்து கீழ் வீழ்ந்துபோய், உவரி நீர் உக - உப்புத் தன்மை பொருந்திய நீரைச் சிந்த, அ கடலினை புரை உறும் - அப் பெரிய கடலையே ஒக்கும், அருவி கண்ணினன் - அருவிபோன்ற கண்ணீரையுடையவனும்,

வீட்டுதல் - அழித்தல் ; 'வீட்டிவா ளவுணரை' (ஆரணிய. 182.); சடாயுவைத் தாக்கியழிக்கும் வலியுடையார் உலகில் ஒருவருமில்லையே என்ற துணிவினனாதலின், யாரெனு ஐயமுற்றான் சம்பாதி என்க. உடலினை யிழிந்து - உடலினின்றும் இழிந்து எனனும் பொருளில் ஐந்தாம் வேற்றுமை யுருபுமயங்கி இரண்டாம் வேற்றுமையின் ஐயுருபேற்றது. உகு + அக்கடல் = உகக்கடல்: முற்று மற்றொரோவழி (நன். 164); கண்ணீரில் உப்புத் தன்மை உள்ளமையாலும், அக்கண்ணீரின் பெருக்கின் மிகுதியைக் கருதியும், கடல் உவமையாயிற்று.

பி - ம். 1. வீட்டும் வெஞ்சமப் ; வெஞ்சரப்.
2. ராரெனப் பகர்வ தாயி ளுன்; பாரினில் ;
3. உடல்வழி யிழிந்த ; யுவரி நீருராய்.
4. கடலென நிறைவுறும் ; கடலினைப் பொருவுறு. (23)

943. உழுங்கதிர் மணியணி யுமிழு மின்னனுன்
மழுங்கிய நெடுங்கணின் வழங்கு மாரியான்
புழுங்குவா னழுங்கினுன் புடவி மீதினில்
முழங்கிவந் திழிவதோர் முகிலும் போல்கின்ருன்.

உழும் கதிர் மணி அணி உமிழும் மின் அனுன் - சாணைபிடித்த ஒளி வாய்ந்த இரத்தினங்களைப் பதித்துச்செய்த ஆபரணங்கள் வெளி விடுகின்றமின் போன்றவனும், மழுங்கிய- (வயது முதிர்ச்சியால்) மழுங் கிப்போன, நெடு கணின் - தன் நெடிய கண் களினின்று, வழங்கு மாரியான் - சொரிகின்ற நீராகிய மழையை யுடையவனும், புழுங்குவான் அழுங்கினுன் - துயரத்தால் மனம் வேகின்றவனுகி வருந்துகின்றவனும், புடவி மீதினில்-தரை மீது, முழங்கிவந்து - பேரொலியிட்டுக் கொண்டு வந்து, இழிவது - கீழிறங்கி வருவதான, ஓர் முகிலும் போல்கின்ருன்- ஒரு மேகத்தை ஒத்திருப்பவனும் ;

மணியணியுமிழும் மின்னனுன் - சடாயுவைப் போல் இச்சம்பாதி யும் ஓர் இரத்தின ஆரம் அணிந்திருந்தான் எனக் கொள்ளலாம். சடாயு இரத்தின ஆரம் அணிநதிருந்தவன் ; ஆரணிய. 183. கழுகு களுக்கு இப்போதும் கழுத்தைச் சுற்றி ஆரம்போன்ற ஒரு வெண்ணிற வரையுள்ளமை காணலாம். கணின் வழங்கு மாரி : மாரி மிகுதியைக் குறிப்பது. அழுங்குதல் - வருந்துதல் ; (பிங்): சோர்வுறுதலும் ஆம் ; (திவா.); 'அன்புறு நெஞ்ச மழுங்குவிக்கும் மாலே'; (சீவக.2051.) சம்பா திக்கு முகில்: அவன் வெண்ணிறத்தவனென அடுத்த 942 இல் குறிககபபெற்றமையால். முன 940 இல், மலேக்கு உவமை கூறப், பெற்றமையால் இஙகு முகிலும்போல்கின்ருன் எனறதில் உம்மை எண் ணும்மை ஆகும், இசசெய்யுள் தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. உழுங்கதி ரணிமணி ; மின்னினுன்.
2. நெடுங்கணீர்.
3. புழுங்குவா னழுங்குரல், புழுங்குவா னழுங்குவான்; னழுங்கினன்; புவனி மீதினில், அழுங்குரன் முழக்கிரு னவனி மீதின்வாய், அழுங்குரன் மிகுந்தெழுந் தரற்றி னுளவன்; புடவியாறென,(24)

944 வள்ளியு மரங்களு மலையு மண்ணுறத்
தெள்ளுநுண் பொடிபடக் கடிது செல்கின்றான்
தள்ளுவன் கால்பொரத் தரணி யிற்றவழ்
வெள்ளியம்பெருமலை பொருவு மேனியான்.

வள்ளியும் - கொடிகளும், மரங்களும் - (பல வகைப்பட்ட) மரங்களும், மண் உற - தரைமீது சிதைந்து வீழவும், மலையும் - மலைகளும், தெள்ளு நுண் பொடி பட - தெள்ளிய சிறு பொடியாகவும், கடிது செல்கின்றான் - வேகமாய்ச் செல்கின்றவனும், தள்ளு வன்கால் பொர - யாவற்றையும் தாக்கித் தள்ள வல்ல வலிய காற்று மோதுதலால், தரணியில் தவழ் - பூமியில் தவழ்ந்து வருவதான, வெள்ளி அம் பெருமலை - அழகிய கயிலையம் கிரி என்னும் பெரிய மலையை, பொருவு மேனியான் - ஒத்ததான உருவமுடையவனும் ;

வள்ளி : இது வல்லி எனவும் வரும். தரணியிற்றவழ் வெள்ளியம் பெருமலை : இது இல்பொருளுவமை. சம்பாதிக்கு வெள்ளியங்கிரி, உருவின் பெருமையாலும் நிறத்தாலும் என்க. சடாயுவையும் 'கந்தரக்கயிலையை நிகர்க்குங் காட்சியான்' (ஆரணிய. 896) எனக் கயிலை மலைக்கு ஒப்பிட்டமை நோக்குக.

பி - ம். 1. மலையு மண்ணிடைத்.
3. தள்ளவன் கால் பொர ; தரணி யிற்றனி, தரணி நீத்தவல், தரணி நீத்தவவ், தரணி பூத்ததவ், தரணி நீங்குறும், தரணி நீங்குவ, தரணி மேற்றவழ்.
4. வெள்ளியம் பெருங்கிரி, வெள்ளியம் பெருவரை விரைதல் போலவே. (25)

சம்பாதியைக் கண்டு வாநரவீரர் அஞ்சியோட அநுமன் அவன் எதிர்சென்றது

945. எய்தின னிருந்தவ ரிரியல் போயினர்
ஐயனம் மாருதி யழலுங் கண்ணினன்
கைதவ நிசிசர கள்ள வேடத்தை
உய்திகொ லினியென வுருத்து முன்னின்றான்.

எய்தினன் - அவ்வாறு சம்பாதி அவ்வாநர வீரர்கள் இருந்த இடத்தை வந்தடைந்தான் ; இருந்தவர் - அங்கிருந்த அவ்வாநரவீரர்கள், இரியல் போயினர் - அஞ்சி நிலைகெட்டு ஓடுவாராயினர்; ஐயன் அ மாருதி - பெருமைக்குரிய அந்த அநுமன், அழலும் கண்ணினன் - (கோபத்தால்) நெருப்புப்போல் எரியும் கண்களையுடையவனாய், (அந்தச்

சம்பாதியை நோக்கி), 'கைதவ - வஞ்சகனே! நிசிசர - அரக்கனே! கள்ள வேடத்தை - திருட்டு வேடம் பூண்டவனே ! இனி உய்தி கொல் என - இனி நீ பிழைப்பாய் போலும் ' என்று கூறி, உருத்துமுன் நின்ருன் - கோபித்து அவன்முன் நின்ருன்.

கைதவ, நிசிசர, கள்ளவேடத்தை இவை மூன்றும் தனித்தனியே விளிகளாக அடுக்கிக் கொள்ளலுமாம். வேடத்தை, முன்னிலை யொருமைக் குறிப்பு வினைமுற்று, நிசிசரர் : இரவில் சஞ்சரிப்பவர் என்னும் காரணத்தால் அரக்கர்க்கு வந்த பெயர். உய்திகொல் : பிழைக்கமாட்டாய் அழிந்து போவாய் என்னும் எதிர்மறைப் பொருளில் வந்தது.

பி - ம். 2. ஐயன் மாருதியவன், ஐயனன்மாருதி, ஐயன்மா மாருதி ; கண்ணினன்.

3. நிசாசர, கள்ள வேடத்த. 4. வினியென; முன்னினுன். (26)

அநுமன் சம்பாதியைப் பகைவனல்லன் என அறிந்தது

946. வெங்கதம் வீசிய மனத்தன் விம்மலன்
பொங்கிய சோரிநீர் பொழியுங் கண்ணினன்
சங்கையிற் சழக்கில னென்னுந் தன்மையை
இங்கித வகையினு லெய்த நோக்கினன்.

(அவ்வநுமன் சம்பாதியை மேலும் நோக்கி), வெம் கதம் வீசிய மனத்தன் - இவன் கொடிய கோபத்தைவிட்டு நீங்கிய மனத்தனுகவும், விம்மலன் - (துக்கத்தால்) பொருமுகின்றவனுகவும், பொங்கிய சோரி நீர் பொழியும் கண்ணினன் - மேற்கிளம்பி எழுகின்றன மழைபோன்ற நீரைச் சொரிகின்ற கண்களையுடையவனுகவும் இருக்கின்ருன் ; (ஆதலின்), சங்கை இல் சழக்கு இலன் - சந்தேகத்திற்கு இடமின்றித் தீங்கு இல்லாதவன், என்னும் தன்மையை - என்பதை, இங்கித வகையினுல் - பலவிதக்குறிப்புகளைக் கொண்டு, எய்த நோக்கினன்-நன்ருகக் கண்டு கொண்டான்.

இனி அவ்வநுமன் என்பவனுக்கே, வெங்கதம் வீசிய மனத்தன், விம்மலன். பொங்கிய சோரிநீர் பொழியுங் கண்ணினன் என்பனவற்றை இயைத்துப் பொருள்கொள்ளலும் ஏற்கும். எய்த நோக்குதல் - நன்ருக ஊன்றிப் பார்த்தறிதல் ; இங்கித வகை - குறிப்பினுல் உணருந்தன்மை.

பி - ம். 1. மீறிய மனத்தன்.

2. பொங்கிய சோகத்தன் பொழிகண் ணீரினன் ; கண்ணினன்.

3. னென்னும் நன்மையை.

4. இங்கித முறையினின் றெய்த, இங்கித வகையினில், இங்கிதத் தனமையின் ; (27)

சம்பாதி சடாயுவைக் கொன்றது யார் என வினவியது

947. நோக்கின னின்றன னுணங்கு கேள்வியான்
வாக்கினு லொருமொழி வழங்க லாதமுன்
தாக்கருஞ் சடாயுவைத் தருக்கி னுலுயிர்
நீக்கின ரியாரது நிரப்பு வீரென்முன்,

நுணங்கு கேள்வியான் - நுட்பமான கல்வி கேள்விகளையுடைய அநுமன், நோக்கினன் நின்றனன் - அச்சம்பாதியைப் பார்த்து நின்றவனாய், வாக்கினுல் ஒரு மொழி வழங்கலாத முன் - தன் வாயால் ஒரு வார்த்தை சொல்லாத முன், (சம்பாதி), 'தாக்கரும் சடாயுவை - யாரும் எதிர்த்துத் தாக்க முடியாத வலியுடைய சடாயுவை, தருக்கினுல் - தம் வலிமையால், உயிர் நீக்கினர் யார் - உயிரைப் போக்கியவர் யாவர்? அது நிரப்புவீர் என்முன் - அதனை எனக்கு விளக்கமாய் எடுத்துக் கூறுவீராக !' என்று கேட்டுக்கொண்டான்.

நிரப்புதல் - குறையின்றி முழுவதுங் கூறுதல்; அதாவது பூர்த்தி செய்தல். நிரப்புவீர் : அநுமன், ஒருவனை உயர்வு கருதிப் பன்மையிற் கூறியது என்றும், அங்கிருந்த மற்ற வானரவீரர்களை நோக்கிப் பொதுவாகக் கூறியது என்றும் கொள்ளற்பாலது.

பி - ம். 1. *நோக்கின னின்றவன்.*
2. *வழக்கு முதமுன், வழங்கலான் முனம்.*
3. *தருக்கி யாருயிர், தருக்கி னுருயிர், சமரி னுருயிர்.*
4. *ரிபாரிது, யாவரோ; நிகழ்த்துவீ ரென்முன், நிரப்புவீ ரென்முன், நிகழ்த்து நீ யென்முன்.* (28)

அநுமன் அவனை நீயார்என முதலில் வினவியது

948. உன்னைநீ யுள்ளவா றுரைப்பி னுற்றது
பின்னையா னிரப்புதல் பிழைப்பின் முகுமால்
என்னமா ருதியெதி ரெருவை வேந்தனும்
தன்னையாந் தன்மையைச் சாற்றன் மேயினுன்.

(அது கேட்டு) மாருதி-அநுமன், ' உன்னை நீ உள்ள ஆறு உரைப்பின் - உன்னைப்பற்றி நீ உள்ளபடி (உண்மையாகக்) கூறினுல், பின்னை யான் உற்றது நிரப்புதல் - பிறகு யான் நடந்த வரலாற்றை முழுதும் கூறுதல், பிழைப்பு இன்று ஆகும் என்ன - தவறு இன்மையாக அமை

யும் ' என்று கூற, எதிர் - அதற்கு எதிர் மொழியாக, எருவை வேந்தனும் - கழுகுகளுக்கு அரசனான சம்பாதியும், தன்னை ஆம் தன்மையை-தான் இன்னான் என்னும் நிலைமையை, சாற்றல் மேயினன் - சொல்லத் தொடங்கினன். ஆல் : அசை.

பிழைப்பு - தவறு ; ' பிழைத்தனை பாவிநீ பெண்மையா லென்றான் ' 257 ; இச்செய்யுளின் முதலடி முற்று மோனையாக அமைந்துள்ளது.

பி - ம். 2. பின்னர்யா னிகழ்த்ததும் ; பிழைப்பின் றாதலால்; பின்னர் யானிகழ்த்தவென் பிழையொன்றின்றியே ; பிழையன்றுமென.
4. அன்னவாந் தன்மையைத், தெரித்தன் மேயினன் ; தெரியச் சாற்றினன் ; தெரிப்ப தாயினன் ; தன்னையாங் கயரதி வகையிற் சாற்றினன். (29)

சம்பாதியின் மறு மொழி

949. மின்பிறந் தாலென விளங் கெயிற்றினாய்
அன்பிறந் தார்களி னதிக னாகியென்
பின்பிறந் தான்றுணைப் பிரிந்த பேதையேன்
முன்பிறந் தேனென முடியக் கூறினன்.

(அது கேட்ட சம்பாதி அநுமனை நோக்கி), ' மின் பிறந்தால் என - மின்னல் தோன்றியது போல, விளங்கு எயிற்றினாய் - விளங்குகின்ற பற்களையுடையோனே ! அன்பு இறந்தார்களின் - அன்பு அற்றவர் களின், அதிகன் ஆகி - மேம்பட்டவனாகி, என்பின் பிறந்தான் துணை பிரிந்த பேதையேன் - என் பின் பிறந்த சகோதரனைப் பிரிந்த எளியேனாகிய நான், முன் பிறந்தேன் என-அவனுக்கு முன் தமையனாகப் பிறந்தவனாவேன் ' என்று, முடிய கூறினன்-தன் வரலாறு முழுவதும் விளங்கக் கூறினன்.

அன்பு இறந்தார் - அன்பு என்பது அழியப் பெற்றவர் ; அதாவது அன்பற்றவர். துணை - சகோதரன்; 'அருந்தவ மென்றுணையாள' (அயோத். குகப் : 18.)

பி - ம். 1. விலங்கெயிற்றிரேய், விலங்கெயிற்றினன், விலங்கெயிற்றினாய்.
2. அன்பிறர் தார்க்கிடை யெய்தலாதவென்,
4. முற்றும் கூறினன், (30)

அநுமன் சடாயு இறந்த செய்தியுரைத்தது

950. கூறிய வாசகங் கேட்ட கோதிலான்
ஊறிய துன்பத்தி னுவரி யுட்புகா
ஏறின னுணர்த்தின னிகலி ராவணன்
வீறிய வாளிடை விளிந்த தாமென்முன்.

கூறிய வாசகம் கேட்ட-சம்பாதி சொன்ன பேச்சைக் கேட்ட, கோது இலான் - குற்றமற்றவனுன அநுமன், ஊறிய துன்பத்தின் உவரியுள் புகா - ஆழ்ந்து படிந்த துன்பமாகிய கடலுள் புகுந்து மூழ்கி, ஏறினன்- அதனின்று கரையேறினவன் ஆகி, 'இகல் இராவணன் - அச்சடாயு வோடு போர்புரிந்த இராவணன், வீறிய வாள் இடை - பெருமிதத்தோடு வீசிய வாளிடத்து விளிந்தது, ஆம் என்ருன் உணர்த்தினன் - அச் சடாயுவுக்கு அம் மரணம் நேர்ந்ததாகும்' என்று தெரிவித்தான்.

வீறிய வாள்: வெற்றிச் சிறப்பில் மேம்பட்டதும், சிவபிரான் அளித்ததுமான சந்திரஹாஸம் என்னும் வாள். புகா: உடன்பாட்டு வினையெச்சம்.

பி - ம். 1. *கேட்டுக் கோதிலான்;*

3. *னுணர்த்தினு; னேறியே யுரைத்தனன்; திறலி ராவணன்.*

4. *வீறிய வாளினுல் வீழ்வித்தா னென்ருன், வீறியல் வாளினில் விளிந்த தாமென்ருன்; வீறிய வாழுநாள் விளிந்தனா னென்ருன்.* (31)

சம்பாதியின் துயரமும் புலம்பலும்

951. அவ்வுரை கேட்டலு மசனி யேற்றினுல்
தவ்விய கிரியெனத் தரையின் வீழ்ந்தனன்
வெவ்வுயி ராவுயிர் பதைப்ப விம்மினுன்
இவ்வுரை யிவ்வுரை யெடுத்தி யம்பினுன்.

அ உரை கேட்டலும் - அநுமன் கூறிய அச் சொற்களைச் கேட்ட தும் (சம்பாதி), அசனி ஏற்றினுல் - பேரிடியால், தவ்விய - நிலைதவறிய, கிரி என - (ஒரு) மலை போல, தரையில் வீழ்ந்தனன்- தரைமீது விழுந்து, வெவ் உயிரா - வெப்பமான பெருமூச்சுவிட்டு, உயிர் பதைப்ப - உயிர் துடிக்க, விம்மினுன் - தேம்பி வருந்தினுனுகி, இ உரை இ உரை - பின் வரும் இந்த இந்த வார்த்தைகளை, எடுத்து இயம்பினுன் - எடுத்துரைத் துப் புலம்பினுன்.

தவ்வுதல் - தவறுதல்; 'தவ்வாதிரவும் பொலிதாம்மரை' (ஆரணிய 75.). வெவ்வுயிர்த்தல் சினம் அல்லது துயரமேலீட்டால் பெருமூச்சு விடுதல். இடியுண்டு மலை விழுதல்; அயோத். கைகேசி சூழ்வினைப்: 35; சுந்தர. 186. வெவ்வுயிர்த்தல் பதைத்தல், விம்முதல், சோகத் திற் றேன்றும் மெய்ப்பாடுகள். அசனி, கிரி, வடசொற்கள்: தரா என்ற வடசொல் தரையெனத் திரிந்தது.

பி - ம். 1. *அசனி வீழ்ந்திட.*
3. *வெவ்வுலை வுற்றுயிற் பதைப்ப.*
4. *இவ்வரை யெடுத்தழு நியம்பன் மேயினன்.* (82)

வேறு

952. இளையா நீள்சிற கன்று வெந்துகத்
தளையா னேனுயிர் போத றக்கதால்
வளையா நேமியன் வன்மை சால்வலிக்
கிளையா னேயிது வென்ன மாயமோ.

'இளையா நீள் சிறகு - எதற்கும் சளைத்துத் தடைப்படாத என் நீண்ட சிறகுகள், அன்று வெந்து உக - (நாம் இருவரும் சூரியனை நாடிமேற் சென்ற அக்காலத்து) வெயிலால் வெப்பமுற்று எரிந்து சிந்தி உதிர, தளையானேன் - பறந்து செல்ல முடியாது தளைப்படுத்தப்பட்ட என், உயிர் போதல் தக்கது-உயிர்போயிருத்தல் தக்கது ஆகும்; வளையா நேமி யன் - கோணுத ஆஞ்ஞா சக்கரத்தையுடைய தசரதசக்கரவர்த்தியின், வன்மை சால் வலிக்கு - வலிமை மிகுந்த பராக்கிரமத்திற்கு, இளை யானே - குறைவுபடாத திறலுடையோனே! இது என்ன மாயமோ - நீ இறந்த இது என்ன மாயமோ ! தெரியவில்லையே. ஆல்: அசை.

தளை - விலங்கு அல்லது தடை. வளையா நேமியன் என்பதற்குச் சூரியன் என்று பொருள் கூறினுரும் உளர். சூரியன் வெயிலால் வருந்திச்சடாயு துடிக்க, சம்பாதி அவனைத் தன் சிறகுகளால் மறைத்துக் காப்பாற்றிய செய்திக்கு இது முரணுவது காண்க. சம்பராசுர யுத்தத் தில் சடாயு தயரத சக்கரவர்த்தியோடு உடனின்று, அவனுக்குக் குறையாது போரிட்டு உதவினவன் ஆதலால், அதுவே இங்கு ஏற்பப் பொருளாகக் கொள்ளப்பட்டது; ஆரணிய. 199. தயரதன் வளையா நேமியன் என்பது. 'குன்றென வுயரிய குவவுத் தோளினுன், வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென, ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை, நின்று நின்றுயிர்தொறு நெடிது காக்குமே'; (பால. அரசிய: 11.) மேலும் சக்கரவர்த்தி என்னும் பொருளில் தயரதனை இந்நூலில், ஆழி யான், நேமியான் எனப் பரியாயப் பெயர்களால் கூறுவதும் காண்க.

இனி வளையா நேமியன் என்பதற்குத் திருமால் என்றும், சூரியன் என்றும் பொருள் கொண்டாரும் உளர்.

பி - ம். 1. களையா நீள்சிற, இளையா நீள்சிறை கேடுவந்திட.
2. தளையா வென்னுயிர்; தலையா னைவலி; றக்கதோ; தளையா தென்றனைத் தான் விட்டேகினன்.
3. வளையீர் நேமியின், வலையா னேயென வன்மைசால், வளையா நெறியென; வளையா நீதியின்;
4. கிளையாயே. ((33)

**953.** மலரோ னின்றுளன் மண்ணும் விண்ணுமுண்
டுலையா நீடற மின்னு முண்டரோ
நிலையார் கற்பமு நின்ற தின்றுநீ
இலையா னயிது வென்ன தன்மையோ.

'மலரோன் நின்றுளன் - தாமரை மலரோனான பிரமதேவன் இன்னும் அழியாது இருக்கின்றான்; மண்ணும் விண்ணும் உண்டு - பூமியும் வானமும் உள்ளன; உலையா நீடு அறம் இன்னும் உண்டு - அழியாத தருமம் என்பதும் இன்னும் நிலை பெற்றுள்ளது; நிலை ஆர் கற்பமும் நின்றது - நிலை பொருந்திய பிரம கற்பம் என்ற காலமும் இன்னும் முடிவடையாது உள்ளது; (ஆனால்), இன்று நீ இலை ஆனாய் - இன்றே நீ இல்லாது அழிந்தாய்; இது என்ன தன்மையோ - இது என்ன முறை? முறையன்று என்றபடி. அரோ: அசை.

பிரமனும். மண்ணும் விண்ணும், அறமும், கற்ப காலமும் அழியு மேல் நீயும் அழிவது நியாயமாகும்; அவை அழியா திருக்க நீ அழி வுற்றது நியாயமன்று என்பது சம்பாதி கருத்து. கற்பம் என்பது பிரம கற்பம். சடாயு பல கற்ப காலங்கண்டவன்; 'கற்பங்களெனைப் பல கண்டுளான் (ஆரணிய: 184.); ஆதலின் அவன் இப்பொழுது இறப்பது நியாயமில்லை என்பதாம். கற்பம் என்பதற்குக் கற்பகம் எனப் பொருள் கொண்டாரும் உளர். மண்ணும் என்பது முதல் கற்பமும் என்பது வரையுள்ள உம்மைகள் எண்ணும்மைகள். ஈற்று ஓகாரத்தை ஐயப் பொருளினதாகவும் கொள்ளலாம். மண்ணும் விண்ணும் என ஐம்பூதங்களில் இரண்டைக் குறித்தது; காற்று, தீ, நீர், என்பனவற்றிற்கும் உபலக்கணம்.

பி - ம். 1. மலரானோ வுளன்.
3. நிலையாவண்டமு மின்றும், நிலையார் காலமு நின்ற.
4. வென்ன மாயமோ; யிஃதென்ன மாயமோ. (34)

954. உடனே யண்ட மிரண்டு முந்துயிர்த்
திடநாம் வந்திரு வேமு மெய்தினேம்
விடநீ யேதனிச் சென்ற வீரமும்
கடனே வெங்கலு ழற்கு மேன்மையாய்.

'வெம் கலுழற்கும் மேன்மையாய் - வலிமையிற் சிறந்த கருட னுக்கும் மேம்பட்டவனே! முந்து - முன்னம், அண்டம் இரண்டும் உயிர்த்திட - இரண்டு முட்டைகள் உண்டாக, உடனே நாம் இரு வேமும் வந்து எய்தினேம் - ஒருவன் பின் ஒருவனாக நாம் இருவரும் உடன் பிறப்பாக வந்து பிறந்தோம்; விட - என்னை விட்டுப் பிரியுமாறு, நீயே தனிச்சென்ற வீரமும் - நீ மட்டுமே தனியாக இறந்துபோன வீரச் செயலும், கடனே - முறைதானோ? (முறை யற்றது என்றபடி).

வெங்கலுழன் : வெம்மை - பராக்கிரமம் : 'உலகம் மூன்றுமென் வெம்மையினுண்டது' (யுத்த. அதிகாயன் வதை; 4). கலுழற்கும்; உம்மை கலுழன் பக்ஷிராஜன் என்ற சிறப்பால் உயர்வு சிறப்பினது; கருடனுடைய பராக்கிரமத்தின் சிறப்புக்கள், வியாஸ மகாபாரதம் ஆதிபருவம் கருடோபாக்யானத்தில் மிக விரிவாக உள்ளமை காண லாம். அருணன்றன் புதல்வனாதலின், தன் குல முன்னோன் என்ற சிறப்பினாற் கூறியதும் ஆம்; அருணன்றன் புதல்வன் யான் என்று சடாயு கூறியது காண்க; ஆரணிய : 201. அருணனுக்கு அரம்பை யென்னும் தேவமாதினிடமாய் இருமுட்டைகளாய்ப் பிறந்தவர் சம்பாதி யும் சடாயுவும் என்பர். நீயே என்பதில் ஏகாரம் பிரிநிலைப் பொருளது. கடனே; என்பதில் ஓகாரவினா எதிர் மறைப் பொருளதும் ஆம்;

பா - பே. 1. உடனுமண்ட மிரண்டி னுடயிர்க்; மிரண்டு முய்ந்துயிர்த்.
2. மெய்தியாம். திருவே முனோமுனே, திருவேமு முற்றுளோம், திருவோ முனோமெனே, திருவேமு மெய்தியாம்; மெய்தினேம்,
3. உடனே போவதல்லா, தொழிந்திட.
4. கருளற்கு மேன்மையாய்; வெம்மையாய். (35)

955. ஒன்று மூன்றுல கத்து ளோரையும்
வென்று னென்னினும் வீர நிற்குநேர்
நின்று னேயவ் வரக்க னின்னையும்
கொன்று னேயிஃ தென்ன கொள்கையோ.

'வீர - வீரனே! (அவ்விராவணன்), ஒன்று - தனக்கு இணங்கிக் கீழ்ப்படியா, மூன்று உலகத்து உளோரையும் - சுவர்க்கம் பூமி பாதலம்

என்னும் மூவுலகங்களில் உள்ளார் அனைவரையும், அ அரக்கன் வென்றான் என்னினும். அவ் இராக்கதனை இராவணன் போரில் வென்றவன் ஆனாலும், நிற்கு நேர் நின்றானே - உனக்கு எதிராக வந்து நின்றானா? நின்னையும் கொன்றானே - உன்னையும் கொன்றானா? இது என்ன கொள்கையோ - இது என்ன விபரீத நிகழ்ச்சியோ தெரியவில்லையே!'

மூன்றுலகத்துளோரையும் ஒன்றாக வென்றானெனினும் என இயைத்து, ஒன்றாக - ஒரு சேர எனப்பொருள் கொள்ளலுமாம். நின்றானே கொன்றானே என்பனவற்றின் ஈற்று ஏகாரங்கள், வியப்பொடுவந்த வினாக்கள். கொள்கை - நிகழ்ச்சி அல்லது சம்பவம்; 'புகுந்த கொள்கை யுடனுறைந்தறிந்தானென்ன' (உயுத்த முதற் போர்ப்: 132); கொள்கை - கோட்பாடு அல்லது சூழ்ச்சியும் ஆம். இராவணனினும் சடாயு வலியன் என்பதும், அவன் சடாயுவை வென்று கொன்றான் என்பது நம்பத்தக்கதன்று என்பதும் சம்பாதி கொண்ட உறுதியாகலின், அவ்விராவணன் நேர் நின்றானே, கொன்றானே என்று அவன் வியப்பும் ஐயமும் தோன்ற வினவினான் என்க.

பி - ம். 1. ஒன்றாம் மூவுலகத்; மூன்றுலகத்துள் யாரையும், மூவுலகத்தி யாரையும்; யாவையும்.
2. வென்றானின்னினும், வீரம் நிற்குமோ; நிற்கெதிர்.
3. நின்றானேயவ்.
4. கொன்றானேவிதை; கொள்கையோ வென்றான். (36)

அநுமன் சம்பாதியைத் தேற்றியது

956. என்றென் றேங்கி யிரங்கி யின்னலால்
பொன்றுந் தன்மை புகுந்த போதவற்
கொன்றுஞ் சொற்கொ டுணர்ச்சி நல்கினான்
வன்றிண் டோள்வரை யன்ன மாருதி.

என்று என்று - என்று பல விதமாக: ஏங்கி, இரங்கி - ஏக்கமும் இரக்கமுமுற்று, இன்னலால் - துன்பத்தால், பொன்றும் தன்மை புகுந்தபோது - (சம்பாதி) சாகும் நிலையை அடைந்தபோது, வன் திண் வரை அன்ன தோள் மாருதி - மிகவும் வலிய மலையொத்த தோள்களையுடைய அநுமன், அவற்கு - அந்தச் சம்பாதிக்கு, ஒன்றும் சொல் கொடு - ஏற்ற சொற்களைக் கொண்டு, உணர்ச்சி நல்கினான் - தெளிவு அடையும்படி தேறுதலை அளித்துதவினான்,

என்றென்று ; அடுக்கு, துயரத்தில் வந்த எண்ணுப்பொருளது. ஏங்குதல் - அழுதலும் ஆம் ; (பிங்). வன் திண் ; ஒருபொருட் பன் மொழி. ஒன்றும் சொல் : அத்துயர நிலைபைத் தணிப்பதற்கு ஏற்ற சொற்கள். அநுமன் சொல்லின் செல்வன் ஆதலின், ஒன்றும் சொற் கொடு உணர்ச்சி நல்கினுன் என்ருர்.

பி - ம். 2. புரிந்த போதவற் ; பொழுதவற்கு.
3. சொற்கொண் டுணர்ச்சி ; குணர்த்தி நல்கினன்.
4. திண்மா மலையன்ன, தோண்மலை யன்ன.

இச் செய்யுள் ஒரு பிரதியில் இல்லை. (37)

அநுமன் சடாயுவுக்கும் இராவணனுக்கும் நிகழ்ந்த போரின் காரணங் கூறியது

957. தேற்றத் தேறி யிருந்த செங்கணுன்
கூற்ருெப் பான்கொலை வாள ரக்கனே
டேற்றுப் போர்செய்த தென்னி மித்தெனக்
காற்றின் சேயிது கட்டு ரைக்குமால்.

தேற்ற - அவ்வாறு அநுமன் ஆறுதல் மொழிகள் அருளித் தேறு மாறு செய்ய, செம் கணுன் - சிவந்த கண்களையுடைய அச்சம்பாதி (அநுமனை நோக்கி), 'கூற்று ஒப்பான் - யமன் போன்ற ஆற்றலுடைய சடாயு, கொலைவாள் அரக்கனேடு - கொலைபுரியும் வாளையுடைய இராக்கதனுகிய இராவணனேடு, ஏற்று - எதிர்நின்று, போர் செய்தது - போரிட்டது, என் நிமித்து என - எக்காரணத்தினுல்' என்று கேட்க, காற்றின் சேய் - வாயு குமாரனுன அநுமன், இது கட்டுரைக்கும் - பின் வரும் செய்தியை எடுத்துக் கூறினுன் : (உரைத்ததை அடுத்துவரும் செய்யுட்களிற் காண்க). ஆல் - ஈற்றசை.

செங்கணுன் ; கண்கள் சிவந்தமை துயரத்தால் கலங்கி என்க. கூற்ருெப்பான் கொலை வாளரக்கனேடு என்பதை ஒரு தொடராக இராவணனுக்கே இயைத்தலும் ஆம், நிமித்து, நிமித்தத்தைக் கொண்டது ; நிமித்து : நிமித்தம் என்ற வடசொல்லின தடியாகப் பிறந்த குறிப்பு வினை முற்று ; ' தன்மை முதனிமித்தினும் '; (நன் சூ. 46.).

பி - ம். 1. தேறித்தெரிந்த, தேறிதெளிந்த ; தேறிச் சிந்தை தெளிந்த செவ்வியான் ; தேற்றச் செவ்வி திருந்த ; தெரிந்த செங்கணுன் ; தேறியிருந்த சம்பாதியும் ; யிருந்த செவ்வியான்,

2. கூற்றைப்போல் கொலை யாளரக்கன், கூற்றம்போல் கொலை, கூற்றப்போர்க்கொலை.
3. போர்செய வந்த தென்னெனக்.
4. சேயது, சேயவை ; கட்டு ரைக்கின்முன். (38)

958. எங்கோ மானவ் விராம னில்லுளாள்
செங்கோ லான்மகள் சீதை செவ்வியாள்
வெங்கோல் வஞ்சன் விளைத்த மாயையால்
தங்கோ னைப்பிரி வுற்ற தன்மையாள்.

(அது கேட்ட அநுமன்), 'எம்கோமான அ இராமன் - எங்கள் தலைவராகிய அவ்விராமபிரானுடைய, இல உளாள் - மனைவியாக உள்ளவளும், செங் கோலான் மகள் - நீதி தவறாத ஆட்சியையுடைய சனக ராஜன் திருமகளுமான, செவ்வியாள்-சிறந்த இலக்கணங்களும் பண்பும் நிறைந்த, சீதை - சீதாப்பிராட்டியார், வெம் கோல் வஞ்சன் - கொடுங் கோலையுடைய வஞ்சகனான இராவணன், விளைத்த மாயையால் - நிகழ்த்திய சூதினால், தன்கோனை பிரிவுற்ற தன்மையாள் - தன் நாயகனான அவ்விராமபிரானைப் பிரிந்த நிலையையுடையவளானாள்.

இச் செய்யுளையும் அடுத்த செய்யுளையும் குளகமாகக் கொண்டு ஒரு தொடராக்கிப் பொருள்கொள்ளலும் ஆம். அவ்விராமன் ; அ, உலகறிசுட்டு. இல்உளாள் ; இல், மனைவி என்னும் பொருளில் இடவாகுபெயர்; பிறனில விழையாமை என்பதை நோக்குக. செங்கோலான் மகள் ; பிராட்டியின் பிறந்தகுடிச் சிறப்புக் கூறியபடியும் ஆம். செங் கோலான் எனச் சனகராசனையும் வெங்கோல் வஞ்சன் என இராவணனையும் குறிப்பிட்ட வேறுபாட்டின் நயம் காண்க.

பி - ம், 1. விராமன் றேவிதற. 2. செங்கோமான்.
3. வஞ்சகன் விரும்பு மாயையில்.
4. தன்மைவாய். (39)

959. கொண்டே குங்கொலை வாள ரக்கனைக்
கண்டா னும்பி யறங்க டக்கலான்
வண்டார் கோதையை வைத்து நீங்கெனத்
திண்டே ரானெதிர் சிந்தை சீறினன்.

• கொண்டு ஏகும் - அப்பிராட்டியைக் கவர்ந்து செல்லும், கொலை வாள் அரக்கனை-கொலைசெய்யும் வாளேந்திய இராக்கதனான அவ்விர

வணனே, அறம் கடக்கலான் - தரும நெறிதவருதவனுன, உம்பி - உன் தம்பியாகிய சடாயு, கண்டான்-கண்டு, வண்டு ஆர் கோதையை-வண்டுகள் நிறைந்து மொய்க்கும் மாலே யணிந்த அப்பிராட்டியை, வைத்து- விடுத்து, நீங்கு எனு-இவ்விடம் விட்டு நீங்குவாயாக என்று கூறி, திண் தேரான் எதிர் - வலிய தேர்மீது செல்லும் அவ்விராவணன் எதிர் சென்று, சிந்தை சீறினுன் - மனம் கொதித்து எதிர்த்தான்.

இனி, கொலே செய்தற்குரிய வாள்போன்ற கொடிய அரக்கன் என்னலும் ஒன்றும். சடாயு அறம் கடக்கலாதான் : 'அறநெறி நின்றுளோர்க்கெலா மாணியை' என்றும், 'சொல்லிய அறநெறி தொடர்ந்த தோழமை, நல்லிய லருங்கடன் கழித்த நம்பியை' : (ஆரணிய. 938, 939) எனவும் அறநெறிகாக்கத் தன்னுயிரையே அர்ப்பணஞ் செய்த இச்சடாயுவின் அருஞ்செயலேக் கருதிக் கூறியதும் இராவணன் மணிமகுடம் பத்தையும் பறித்து வந்த வீர சுக்கிரீவ மகாராஜன் தன் குறைபாடு தோன்றக் 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன் ; (யுத்த. மகுட பங்க. 40) என்றதும் இங்கு நோக்கற் பாலன.

பி - ம். 2. கடக்கிலா, கடந்திலா, கடந்தி லான் ; ஞம்பியக் கற்பின் மேவிய.
3. நீங்கெனத்.
4. திண்டேரானெடு, திண்டேரானெதிர்ந்து, (40)

960. சீறித் தீயவ னேறு தேரையும்
கீறித் தோள்கள் கிழித்த ழித்தபின்
தேறித் தேவர்க டேவன் தெய்வவாள்
வீறப் பொன்றினன் மெய்ம்மை யோனென்ருன்.

'மெய்ம்மையோன்-எபபொழுதும் உண்மை யுரைப்பவனுன சடாயு, சீறி - கோபித்து, தீயவன் ஏறு தேரையும் - கொடியோனுன அவ்விராவணன் ஏறிச்சென்ற தேரையும், கீறி - பிளந்து அழித்து, தோள்கள் கிழித்து - அவன் இருபது தோள்களேயும் பிளந்து, அழித்த பின் - அவனுக்குத் தோல்வியை உண்டாக்கிய பிறகு, தேறி-அவ்விராவணன் ஒருவாறுதுணிவு கொண்டு, தேவர்கள் தேவன் தெய்வ வாள் வீற-தேவர்களுக்கும் தேவரான சிவபெருமான் அவனுக்கு அளித்த தெய்வத் தன்மை வாய்ந்த சந்திரஹாஸம் என்னும் வாளே எடுத்து வீச, பொன்றினன் - தன்சிறைகள் அறுப்புண்டு இறந்தனன்' என்ருன் - என்று அநுமன் கூறினுன்.

சடாயு இராவணனோடு போர்புரியும் போது, இராவணன் சடாயு மூலம் அவன் உயிர் நிலை சிறகுகளில் உள்ள தென்று உண்மை அறிந் தான் என்றும் இராவணனே தன் உயிர்நிலைதன் காற்பெருவிரலிலே உள்ளதென்று பொய் கூறினான் என்றும் ஒரு செய்தி கூறப்பெறுவ துண்டு; இதனை வான்மீகமோ, அத்யாத்மிகம் முதலிய நூல்களோ கூறவில்லை யெனினும், இது ஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிய புள்ளிருக்கு வேளூர்த் தேவாரப்பதிகத்தில் 'மெய்சொல்லா விராவணனை மேலோடி ஈடழிததிப் பொய் சொல்லாதுயிர் போனான் புள்ளிருக்கு வேளூரே' (தேவா. 158 : 2.) எனறு அருளியவாற்ரால் உறுதி ப்படுவதால் அக்கருத்தைக் கொண்டு சடாயுவை மெய்ம்மையோ னென்று ஆசிரியர் சிறபபித்தார் என்னலும் ஆம்.

சடாயு இராவணன தோள்களையும், அவன் தேரையும் அழித்தது - ஆரணிய. 917, 919, 927. 928 முதலிய பாடல்களிற் காண்க. சிவபிரானைத் தேவர்கடேவன் எனச் சிறப்பித்தமை நோக்கத்தக்கது; இது அப்பெருமானுக்கு மஹாதேவன் என்ற பெயருண்மையையும் புலப்படுத்தியதாகும்.

பி - ம். 1. *தீயயனென்று தேரையும்.*
2. *தோள்களைக் கிழித்; கிழித்த பின்னவன்.*
3. *தேறித்தாழ் சடைத் தேவன், தேறிச் செஞ்சடைத் தேவன் வாள் கொடு; தேவன் வாளினால்; சடையீசன் றெய்வவாள்;*
4. *மேன்மையோ னென்றான், மெய்ம்மையோ யென்றான், மேன்மையா லென்றான்.*

இதன்பின் சில பிரதிகளில் அடியிற்காணும் பாடல் உள்ளது.

விளித்தா னன்னது கேட்டு மெய்மையோய்
தெளித்தா டத்தகு தீர்த்தன் மாட்டுயிர்
அளித்தா னேயது நன்று நன்றெனக்
களித்தான் வாரி கலுழ்நத கண்ணினான். (41)

சம்பாதி சடாயுவைப் பாராட்டியது

961. பைந்தார்த் தோள னிராமன் பத்தினி
செந்தாள் வஞ்சி திறத்தி றந்தவன்
மைந்தா ரெம்பி வரம்பில் சீர்த்தியோ
டுய்ந்தா னல்ல துலந்த துண்மையோ.

'பைம் தார் தோளன் - புதிய மலர் மாலையணிந்த தோள்களை யுடைய, இராமன் - இராமபிரானுடைய, பத்தினி - மனைவியும், செம்

தாள் வஞ்சி-சிவந்தபாதங்களையுடைய வஞ்சிக் கொடி போன்றவளு மான சீதாப்பிராட்டியின, திறத்து - பொருட்டாக, இறந்தவன் - இறந்த வனுன, மைந்து ஆர்-வலிமை நிறைந்த, எம்பி-என தம்பியாகிய சடாயு, வரம்பு இல சீர்ததியோடு - எல்லையற்ற புகழோடு, உய்ந்தான் அல்லது- நல்வாழவு பெற்ருன் என்று சொல்வது அல்லாமல், உலந்தது - இறந்து போனுன் என்பது, உண்மையேயோ - உண்மைப்பொருள் ஆகுமோ? (ஆகாது எனறபடி.)

பைந்தார்; பசுமை - புதுமை; (பிங்). பத்தினி: வடசொல், மைந்த என்ற பாடம் கொண்டு அதனை அநுமனை நோக்கிச் சம்பாதி கூறிய விளியாக்கினுரும் உளர். அநுமன் பால அவ்வளவு உரிமை பாராட்டும் நிலை சம்பாதிக்கு அப்பொழுது ஏற்பட இடம் இல்லாமை இங்கு நோக்கத் தக்கது. சீர்த்தி கீர்ததியினும் மேம்பட்டது. செந்தாள் வஞ்சி: பண்புத் தொகையைத தழுவி வந்த உவமை யாகுபெயர் அல்லது அடையடுத்த உவமை யாகுபெயர். இனி, சடாயு பிராட்டியைக் காக்கும் பணியில் உயிர் துறந்து என்றும் அழியாத புகழுடம்பு எய்தினுன் என்று குறிப் பிட்டதும் ஆம்; பின், 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' (சுந்தர. 566.) என்று அவன் புகழப்பெற்றதும் காண்க

பி - ம். 1. பைந்தா ரெகளி.
3. வரம்பில் கீர்த்தியோ (டு).
4. துலர்ந்த தில்லையால், துலர்நத துணமையே, துணர்ந்த துண்மையோய. (42)

962. அறமன் னுனுட னெம்பி யன்பினே
டுற...ன் னுவுயிர் ஒன்ற வோவினுன்
பெறவொண் ணுததோர் பெற்றி பெற்றவற்
கிறவென் னுமிதி லின்ப மியாவதே.

'எம்பி - என் தம்பியாகிய சடாயு, அறம் அன்னுனுடன் - தருமமே போன்றவனுன இராமபிரானேடு, அன்பினேடு உறவு உன்னு - அன்புடன உறவான ஓர் உணர்ச்சியை எண்ணி, உயிர் ஒன்ற ஓவி னுன - (அவள்திறத்து) தன் உயிரையும் விடுத்தான் (ஆதலின்), பெற ஒண்ணுததோர் - யாவரும் அடைய முடியாத ஒப்பற்ற, பெற்றி பேற்றை, பெற்றவற்கு - அடைந்த அச்சடாயுவுக்கு, இறவு என்னும் - இறந்தான் என்று சொல்வதில் என்ன பெருமையாகும்? இதில் இன்பம் யாவதே இவ்வாறு அவன் நன்மை புரிவதில் உயிர் விட்டதைவிட, அடையக் கூடிய இன்பம் வேறு யாதேயாகும்'? (வேறில்லை என்றபடி.)

அறமன்னன் - இராமபிரான்; அறத்தின மூர்த்தி என்றமை காண்க. உறவு; சடாயு இராமலக்ஷ்மணர்களைத் தன் மைந்தாகள் என பதும், இராம லக்ஷ்மணர் சடாயுவைத் தம் தந்தை எனபதும் இந்நூலிற் பல விடங்களிற் காணலாம். பெற்றி : 'யோகத்தின் பெற்றியாலே' (ஆரணிய. 1195); இனி, 'பெறவொண்ணாததோர் பெற்றி பெற்றவற் கிறவென்னும் என்பதைப் பொது உண்மையாகவும் கொள்ளலாம். யாவதே; ஏகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தவினா. இறவு - இறப்பு; 'பிறவினோ டிறவுமானான்' (தேவாரம்.); இது தொழிற் பெயர்.

பி - ம், 1. னெம்பியன்பினான்; யன்பினால், யன்பினோன்.
2. உறவன் னாருயிர்ப், உறவெனனாருயிாப்; உறமனனாருயிர் பொன்றவோவினான்.
3. பேறுபெற்றவற்(கு), பேறுபெற்றபோ(து); பெற்றவெறகு.
4. இறவென்னோ. (43)

இதன் பின், சில சுவடிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் அடியிற் காணும் ஓர் பாடல் உள்ளது; அது பழைய சிறந்த ஏடுகளில் காணப் பெருமையால் இடைச் செருகல் என்று இங்கு அதனைப் பாடவரிசை யில் கொள்ளவில்லை.

என்றென் றேங்கி யிரங்கி யினபுனற்
சென்றங் காடுதல் செய்து தீர்ந்தபின்
வன்றிண் டோள்வலி மாறி லாதவன்
துன்றுந் தாரவர்க் கின்ன சொல்லினான்.

சம்பாதி வானர வீரர்களைப் புகழ்தல்.

963. வாழ்வித் தீரெனை மைந்தர் வந்துநீர்
ஆழ்வித் தீரலிர் துன்ப வாழிவாய்
கேள்வித் தீவினை கீறி னீர்ருள்
போழ்வித் தீருரை பொய்யி னிங்கினீர்.

(பின், சம்பாதி அவர்களை நோக்கி), 'கேள்வி தீவினை கீறினீர் - ஆன்றோரிடம் கேட்டறிந்தசிறப்பினால் பாவங்களைக் கீறி அழித்தீர்களும், இருள் - அஞ்ஞானமாகிய இருட்டை, போழ்வித்தீர் - பிளந்து அழியு மாறு செய்தீர்களும், உரை பொய்யின் நீங்கினீர் - பொய் உரைகளி னின்றும் நீங்கினீர்களுமான, மைந்தர் - வீரர்கள், நீர் - நீவிர், வந்து- நானிருக்கும் இவ்விடம் வந்து, எனை - என்னை, துன்ப ஆழிவாய் - என் தம்பி இழந்தான் என்பதைக் கூறி அத் துயரக் கடலினிடத்து, ஆழ்

வித்தீர் அலிர் - ஆழ்ந்து மூழ்கச் செய்தீர் அல்லீர்; எனே வாழ்வித்தீர் - என்னே நல்வாழ்வில் வைத்தீரே ஆவீர்.

சம்பாதி கூறிய உபசார மொழிகள், பெரும்பாலும் அநுமனுக்கே சாருமெனினும், மற்றைய வானரவீரர்களும், அவ்விராம கைங்கரியத்தில் ஈடுபடுபவர்களாதலின்; அவர்களேயும் அன்பின் மிகுதியால் இணைத்துக் கூறப்பெற்றன என்க. கீறுதல் ஒரு பொருளை அடியோடு வேறு படுத்தாமல் ஒருவாறு பிளந்து அதிலுள்ள தீயனவற்றை நீக்குதல். போழ்தல் - ஒரு பொருளைப் பல கூறுகளாகப் பிளந்து அப்புறப் படுத்தல், இருள் போழ்வித்தீர்-இதுகாறும்இருந்த துயரமாகிய இருளைப் போழ்வித்தீர் என்றுமாம்; இது அடுத்த செய்யுளால் விளக்க முறுவது காண்க,

பி - ம். 2. துன்ப வாழியில்.
4. சூழ்வித் தீர்புகழ் சுமந்த தோளினீர், (44)

சம்பாதி வானர வீரர்களை இராம நாமத்தை உச்சரிக்குமாறு வேண்டியது.

964. எல்லீ ரும்மவ் விராம நாமமே
சொல்லீ ரென்சிறை தோன்றுஞ் சோர்விலா
நல்லீ ரப்பய னண்ணு நல்லசொல்
வல்லீர் வாய்மை வளர்க்கும் மாண்பினீர்.

(மேலும், சம்பாதி அவ்வானர வீரர்களை நோக்கி), 'நல்ல சொல் வல்லீர் - நல்ல சொற்களைப் பேசும் திறமை யுள்ளோர்களே ! வாய்மை வளர்க்கும் மாண்பினீர்-சத்தியத்தை வளர்த்துவரும் சிறப்புடையீர்களே' எல்லீரும் - நீவிர் அனைவரும், அ இராம நாமமே - அந்த ராம என்னும் திருப்பெயரையே, சொல்லீர் - வாயால் உச்சரிப்பீர்களாக ; (அவ்வாறு நீவிர் சொல்வதால்) என் சிறை தோன்றும் - என் சிறகுகள் மீட்டும் வளர்ந்து காணப்பெறும்; சோர்வு இலா நல் ஈர பயன் நண்ணும் - ஒரு தளர்வும் இல்லாத நல்ல (அவ்விராமபிரானுடைய) திருவருளாகிய பயன் வந்து அடையும்,

முன் செய்யுளும் இதுவும் செய்யுள் அடுத்த செய்யுளோடு இயைந்து குளகமாகி, அடுத்த செய்யுளில் உள்ள என்றான் என்னும் வினைகொண்டு முடியும். இருள் போழ்வித்தீர் - பிழைப்பித்தீர் என்பது பழையவுரை. நல் வீரப் பயன்; என்பதை நல்லீர் அ பயன் எனப்பதப்பிரிவு செய்து, நல்லீர்-நல்லவர்களாகிய வானர வீரர்களே. அ பயன் - அந்தச் சூரியபகவான் எனக்கு அருளிய நற்பயன் (அதாவது தன் இறகுகள் மீண்டும்

முளைக்கும் நற்பயன் எனக்கொள் வாரும் உளர். சூரிய பகவான் அருள் செய்தது ; 972, இனி, வாள்மீக ராமாயணத்திங் வாநர வீரர்கள் ராம நாமத்தைச் சொல்ல, அதனால், சம்பாதிக்கு இறகுகள் மீண்டும் முளைத்தன என்ற செய்தி கூறப் பெறவில்லை. இது நம் ஆசிரியர் கல்வியிற் பெரியார் தமக்குள்ள இராம பக்தி மேலீட்டினால், இங்கு ராம நாமப்பிரபாவத்தைப் புகுத்தி; நமக்கு அவ்விராமர் பெருமையை அறிவுறுத்தியது எனக் கொள்ளற்பாலதாம்.

பி - ம். 2. *சொல்லீர் சொல்லவெனக்கோர் சோர்விலா; சோர்விலை, சோர்வில ; சொல்வீர் சொல்லுமெனக்கோர் ; மெனக்கோர் துன்பிலை.*
3. *நல்லீ ரப்பய னன்ன ; பயனெற்கு நண்ணிட.*
4. *வல்லீர் வாய்மொழி வழங்கு மென்றனன்.* (45)

வாநரர் ராம நாமத்தை உச்சரித்ததும் சம்பாதிக்குச்
சிறகு முளைத்து வளர்ந்ததும்.

965. என்று னன்னது காண்டும் யாமெனா
நின்றார் நின்றுழி நீல மேனியான்
நன்று நாம நவின்று நல்கினார்
வன்றோ ளான்சிறை வானந் தாயவே.

என்றான்-என்று சம்பாதி கூறினான். (அது கேட்டு) யாம் அன்னது காண்டும் எனா - 'நாம் அவ்வதிசயத்தைப் பார்ப்போம்' என்று சொல்லி, நின்றார் - நின்ற வாநரவீரர், நின்றுழி - அவரவர் நின்ற விடத்தை விட்டுப் பெயராது நின்றபடியே, நீலமேனியான் - நீலநிறத் திரு மேனியை யுடைய, நன்று ஆம் நாமம் - நன்மையை அருளும் ராம என் னும் திருநாமத்தை, நவின்று நல்கினார் - உச்சரித்து அருளினார்கள் ; (அந்நிலையில்) வன்தோளான் சிறை - வலிய தோள்களை யுடைய சம் பாதியின் சிறகுகள், வானம் தாய - வானளாவித் தாவி வளர்ந்தன : ஏ - ஈற்றசை.

நீல மேனியான் நன்று நாமம் - திருமாலின் ஆயிர நாமங்களுள் சிறந்ததான ராம நாமம் என்றலும் ஒன்றும். 'ஸஹஸ்ர, நாம தத்துல்யம் ஸ்ரீராம நாம வராநனே' என்று சிவபிரான் ஸ்ரீபார்வதி தேவிக்குத் தாரக மந்திரமாக உபதேசித் தருளினார் என்னும் வழக்காறுமேற் கொண்டு கூறினார் நம் கவிச் சக்கரவர்த்தியார் எனக் கொள்ளலாம். [தாரக மந்திரம் - நற்கதியில் ஏற்றும் உயரிய மந்தரம்], வன் தோளான் -

சம்பாதிக்கு வலிய தோள்களாவன அவன் இரு சிறகுகளின் அடிப் புறங்களே என்க. தாயல் - தாவுதல் - 'கை உலகந் தாயவனை யல்லது தாள் தொழா' (முதற்றிரு வந்தாதி:14).

பி - ம். 1. என்றுனின்னது, என்னின்றது, என்றுங்கது, என்றுங் காங்கது.
2. நின்றுர் யாவரும்.
3. நவின்ற போதவன்.
4. வன்றேளின் சிறை; வன்றுள் திண்சிறை; வானந் தாவிற்றே; வானந்தாயவே; வானம் நண்ணயே, வானளந்ததே, வான் வளர்ந்ததே. (46)

966. சிறைபெற் றுன்றிகழ் கின்ற மேனியான்
முறைபெற் றுமுல கெங்கும் மூடினுன்
நிறைபெற் றுவி நெருப்பு யிர்க்கும்வாள்
உறைபெற் றுலென லாமு றுப்பினுன்.

சிறை பெற்றுன்-அவ்வாறு மீண்டும் சிறகுகள் வளரப் பெற்றுச் சம்பாதி, திகழ்கின்ற மேனியான்-விளங்கும் உடலையுடையவனுய், முறை பெற்று ஆம் - முறைப்படி சிருஷ்டியில் அமைந்த, உலகு எங்கும் மூடினுன் - எல்லா உலகமெங்கும் தன் சிறகால் மூடினவனுய், நிறை பெற்று - நிறைந்து வளரப்பெற்று, ஆவி நெருப்பு உயிர்க்கும் - புகையோடு கூடிய நெருப்பை வெளிவிடும், வாள் - ஒரு வாளானது, உறை பெற்றுல் எனல் ஆம் - ஓர் உறையைப் பெற்றது என்று சொல்லத் தக்கதாகும், உறுப்பினுன் - அங்கங்களை யுடையவனுனுன்.

முறை பெற்றும் உலகு - ஒன்றின்பின் ஒன்றுன வரிசையில் அமைந்த உலகங்கள், எனவும் ஆம். மூடுதல் - உள்ளடக்கிக் கவிந்து கொள்ளுதல். அங்கங்கள் வாள்களாக, அவ்வாள்களுக்கு உறைகள் அமைந்தன போல இறகுகள் அவற்றை உள்ளடக்கிக் கொண்டிருந்தன என்பது பொருளாகும். அங்கங்கள் வாளாவன: மூக்கு, நகங்கள் முதலியவற்றின் கூர்மையாலும், வலியாலும் என்க.

பி - ம். 1. சிறைபெற்றேன்; சுடர்கின்ற மேனியான்.
2. முறைபெற்று லுல கெங்கும், வுலகேழு முயங்கினுன்.
3. நிறைபொற்றுளா.
4. உறைபெற்று னெனலாம், லெனவாம். (47)

எல்லோரும் இராமபிரான் திருவருளை வியந்தது.

967. தெருண்டான் மெய்ப்பெயர் செப்ப லோடும்வந்
துருண்டா னுற்ற பயத்தை யுன்னினர்
மருண்டார் மானவர் கோனை வாழ்த்தினர்
வெருண்டார் சிந்தை வியந்து விம்முவார்.

தெருண்டான் மெய்ப் பெயர் செப்பலோடும் - ஞானியர்களால் பரம்பொருள் என்று தெளியப் பெற்றவனான ஸ்ரீராமபிரானுடைய அழியாத்திருப் பெயராகிய ராம நாமத்தை அவ்வாநரவீரர்கள் உச்சரித்த அளவிலே, வந்து உருண்டான் - முன் இறகின்மையால் உருண்டு வந்த சம்பாதி, உற்ற பயத்தை - அப்போது அடைந்த (சிறகுகள் பெற்ற) நன்மைப் பயனை, உன்னினர் - மனத்திற் கருதினோர்களாகி, மருண்டார் - வியப்பினால் திகைப்புற்று, வெருண்டார் - அச்சமேலிட்டவர்களாய், வியந்து சிந்தை விம்முவார் - ஆச்சரியத்தால் மனம் பூரித்து, மானவர் கோனை வாழ்த்தினர் - மனுகுலத்துத் தலைவனான இராமபிரானைத் துதித்துக் கொண்டாடினர்.

தெருண்டார் மெய்ப் பெயர் என்ற பாடம் கொண்டு, தெளிவுற்ற ஞானமாய் நிறைந்து விளங்கும் என்றும் அழியாப் பெயர் என்னலும் ஆம். அடைக்கலமடைந்த விபீஷண ஆழ்வானுக்கு, ஸ்ரீ ராமபிரான், 'ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயரு மெந்நாள், வாழுநா ளன்று காறும் வாளெயிற் றரக்கர்வைகும், தாழ்கட லிலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்' (யுத்த. வீடண. 142): என்று உறுதி கூறி யளித்தமையால் ராமநாமம் உலகுள்ளளவும் அழியாத, மெய்ப்பெயர் என்பது அறியற்பாற்றும்.

குறிப்பு :—இச்செய்யுளின் நடையையும் பொருளையும் நோக்குமிடத்து இஃது இடைச் செருகலாய் இருக்கலாம் என ஐயம் ஏற்படுகின்றது. ஆனால் ஆராய்ந்த பிரதிகளிலெல்லாம் இப்பாடல் இருப்பதால், இதனை விலக்கும் துணிவின்றிப் பாட வரிசையிற் சேர்த்துக் கொள்ளப் பெற்றது.

பி - ம். 1. *தெருண்டார் மெய்ப்பெயர் ; மெய்ப்பொருள்.*
2. *னூற்ற பலத்தை, யுற்ற திறத்தை யுன்னியே.*
3. *வானவர்கோனை ; மைதிலிகோனை.*
4. *வியந்து விம்மினர்.* (48)

வாநர வீரர் சம்பாதியின் முன்னை வரலாறு வினவ அவன் கூறியது.

968. அன்னு னைக்கடி தஞ்ச லித்துநீ
முன்ன ளுற்றது முற்று மோதெனச்
சொன்னர் சொற்றது சிந்தை தோய்வுறத்
தன்ன லுற்றது தான்வி ளம்புவான்.

(அவ்வாநரவீரர்), அன்னானை - (அவ்வாறு) சிறை பெற்ற அந்தச் சம்பாதியை, கடிது - விரைவில், அஞ்சலித்து - கைகூப்பி வணங்கி, 'நீ முன்நாள் உற்றது முற்றும் ஓது என சொன்னார்-நீ முற்காலம் நிகழ்ந்த உன் வாலாறு முழுவதும் கூறுவாயாக' என்று சொல்லினர்; தான் - அச்சம்பாதிதானும், சொற்றது சிந்தை தோய்வு உற-அவர்கள் கூறியது தன் மனத்துப்பதிய, தன்னால் உற்றது - தனக்கு நிகழ்ந்த செய்தியை, விளம்புவான் - (பின் வருமாறு) சொல்வானானான்.

அஞ்சலித்து; அவன் திருவருள் பெற்ற சிறப்பு நோக்கி, தன்னால், உருபுமயக்கம்.

பி - ம். 1. கடந் தஞ்சலித்து.
2. முற்றுமீகெனச்.
3. சொற்று முற்றுறச் ரன்னவர் சிந்தை, சொற்றவர் சிந்தை; சோர்வுற. 4. தான் விளம்பினன். (49)

வேறு

969. தாயெனத் தகைய நண்பீர்
சம்பாதி சடாயு வென்பேம்
சேயொளிச் சிறைய வேகக்
கழுகினுக் கரசு செய்வேம்,
பாய்திரைப் பரவை ஞாலம்
படரிருள் பருகும் பண்பின்
ஆய்கதிர்க் கடவுட் டேரு
ருணனுக் கமைந்த மைந்தர்.

(சம்பாதி அவ்வாநரர்களை நோக்கி), 'தாய் என தகைய நண்பீர் - தாய் என்று சொல்லத்தக்க (அன்புடைய) நண்பர்களே ! சம்பாதி சடாயு என்பேம் - நாங்கள் சம்பாதி சடாயு என்று சொல்லப் பெறுவோம்; சேய் ஒளி சிறைய - சிவந்த ஒளியையுடைய சிறகுகளைக் கொண்டவையும், வேக - வேகமாய்ப் பறந்து செல்வனவுமான, கழுகினுக்கு-கழுகுகளுக்கு, 'அரசு செய்வேம் - அரசர்களாயிருந்து ஆட்சி புரிவோம்; பாய்திரை பரவை ஞாலம் - பாய்ந்து வரும் அலைகளை

யுடைய கடலால் சூழப்பெற்ற உலகில், படர் இருள் - பரவிய இருட்டை, பருகும் பண்பின் - போக்கும் திறமை வாய்ந்த, ஆய் கதிர் கடவுள் - சிறந்த கிரணங்களையுடைய சூரிய தேவனுடைய, தேர் ஊர் - தேரைச் செலுத்தும் சாரதியாகிய, அருணனுக்கு அமைந்த மைந்தர் - அருணன் என்பவருக்குப் புதல்வர்களும் ஆவோம்.

நண்பீர்; ஈர் முன்னிலைப்பன்மை விகுதி, விளியேற்றது. சேயொளிச்சிறைய : இனி, வெகுதூரத்தும் ஒளிபரவும் சிறைகளை யுடைய எனவும் கொள்ளலாம். சம்பாதி சடாயு என்பார் இருவரும் அருணன் புதல்வர்கள் ; ஆரணிய. 184, 201.

பி - ம். 1. *தாயெனத்தழுவு நண்பீர் ; தழுவுநண்ப; நண்பா ; வென்போம்.*
2. *சேயொளிச் சேண், சேணேக்கின் ; சேண்சேர் நோக்கின், சேணிற்செல்லும்.*
3. *படரிருள் சீக்கும் பண்பின், படரிருள் பருகும் பான்மைக், படரிரு ளகற்றும் பான்மைக்.*
4. *ரருணன் சேயாகி யுள்ளோம்.* (50)

970. ஆயுய ரும்பர் நாடு
காண்டுமென் றறிவு தள்ள
மீயுயர் விசும்பி னூடு
மேக்குறச் செல்லும் வேலை
காய்கதிர்க் கடவுட் டேரைக்
கண்ணுற்றேங் கண்ணு ருமுன்
தீயையுந் தீய்க்குந் தெய்வச்
செங்கதிர்ச் செல்வன் சீறி.

'(நாங்கள்) அ உயர் உம்பர் நாடு-அந்த உயர்ந்த தேவர் நாட்டை, காண்டும் என்று - சென்று பார்ப்போம் என்று, எம் அறிவு தள்ள - எங்கள் அறிவு எம்மைத் தூண்டி உந்த, மீ உயர் விசும்பின் ஊடு - மேலே உயர்ந்து விளங்கும் ஆகாய வழியே, மேக்கு உற செல்லும் வேலை - நாங்கள் மேலே (மிகவும் உயர்ந்து) பறந்து சென்றபோது, காய் கதிர் கடவுள் தேரை கண்ணுற்றேம் - எரிக்கும் கிரணங்களை யுடைய கடவுளாகிய சூரியனுடைய இரதத்தைக் கண்களிற் கண்டோம்; கண்ணுருமுன்-அவ்வாறு யாங்கள் பார்ப்பதற்குள், தீயையும் தீய்க்கும் - நெருப்பையும் எரித்து அழிக்கவல்ல, தெய்வம் - கடவுளாகிய, செங் கதிர் செல்வன் - சிவந்த கிரணங்களை யுடைய அந்த இறைவன், சீறி - கோப மேற்கொண்டு,

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகம். அ உயர் என்பது: சுட்டு நீண்டு, ஆயுயர் என, யகரவுடன்படுமெய் தோன்றியது; மீயுயர் ஒருபொருட்பன் மொழி, தீயையும்! உம்மை, உயர்வு சிறப்பினது. தேர்- ஓராழித்தேர்.

பி - ம். 1. *மறிவு தன்னி.*

2. *மேயுயர்; செல்லு மெல்லை: செல்லு மேல்லை.*

3. *கண்ணுற்றுங் கண்ணுருமுன், கண்ணுற்றேங், கண்ணுற்றெவ்.*

4. *செல்லற் செங்கதிர்; செங்கதிர்த்தேவன், செங்கதிர்க் கடவுள்.*

(51)

971. முந்திய வெம்பி மேனி
முருங்கழன் முடுகும் வேலை
எந்தைநீ காத்தி யென்றான்
யானிருஞ் சிறையு மேந்தி
வந்தனென் மறைத்த லோடு
மற்றவன் மறையப் போனான்
வெந்துமெய் யிறகு தீய்ந்து
விழுந்தனென் விளிகி லாதேன்.

'முந்திய - எனக்குமுன் மேலே சென்ற, எம்பி மேனி - என் தம்பி சடாயுவின் உடலை, முருங்கு அழல் - எரித்தழிக்கும் நெருப்பு, முடுகும் வேலை - கடுமையாய்த் தாக்கும்போது, 'எந்தை நீ காத்தி' என்றான்- (அச் சடாயு என்னை நோக்கி), எந்தையே நீ என்னைக் காப்பாற்றுவாயாக' என்று வேண்டிக்கொண்டான்; யான் - யானும், இரும் சிறையும் ஏந்தி - என்னிரு சிறகுகளால் அந்தச் சூரிய வெப்பத்தைத் தாங்கிக்கொண்டு, வந்தனென் மறைத்தலோடும் - வந்து அவன்மீது சூரியன் கிரணம் படாமல் மறைத்ததும், அவன் மறைய போனான் - அச் சடாயு என் சிறைநிழலில் மறைந்து சென்றான்; (அதனால்) மெய் வெந்து-உடல் வெந்து, இறகு தீய்ந்து-இறகுகள் கருகி, விளிகிலாதேன்- என் உயிர் அழியாதவனாக, விழுந்தனென் - கீழே விழுந்தேன்.

முருங்கழல் - சுட்டு அழிக்கும் நெருப்பு: பால. கார்முகப்: 29. எந்தை: தமையனாதலின் எந்தை யென்றனன். விளிகிலாதேன்-சாகாது இருக்கின்றேன் என்றதும் ஆம். மற்று: அசை.

பி - ம். 1. *முழங்கும் வேலை; முற்றும் வேலை; மொய்கதிர்ச் சூட்டின் வெம்பி; முழங்கழன் முருங்கும் வேலை; முருக்கும் வேலை.*

2. *யானிரு சிறையுமேந்தி; னென்னிரு சிறையு மேந்தி.*

3. *வந்தனன் மறைதலோடும்; மற்றவனுய்ந்து போனான்.*

4. *மிறகு தீய; வீழ்ந்தனென்.*

(52)

972. மண்ணிடை விழுந்த வென்னை
வானிடை வயங்கு வள்ளல்
கண்ணிடை நோக்கி யுற்ற
கருணையாற் சனகன் காதற்
பெண்ணிடை யீட்டின் வந்த
வாநர ரிராமன் பேரை
எண்ணிடை யுற்ற காலத்
திறகுபெற் றெழுதி யென்றான்.

'மண்ணிடை விழுந்த என்னை - அவ்வாறு தரையில் விழுந்த என்னை, வானிடை வயங்கு வள்ளல் - வானில் ஒளிரும் சூரிய தேவன், கண்ணிடை நோக்கி - கண்களால் பார்த்து, உற்ற கருணை யால் - என்மீது கொண்ட இரக்கத்தால். 'சனகன் காதல் பெண் இடையீட்டின் வந்த - சனகராஜன் பெண்ணாகிய சீதாப்பிராட்டியை தேடிக் காணும் பொருட்டு இடைவந்த, வாநரர் - வாநர வீரர்கள், இராமன் பேரை - இராமபிரான் திருப் பெயரை, எண்ணிடை உற்ற காலத்து - எண்ணி உச்சரித்துத் துதித்தபொழுது, இறகு பெற்று எழுதி என்றான் - நீ உன் இறகுகளை மீண்டும் அடைந்து எழுந்து செல்வாயாக ' என்று அருள்புரிந்தான்.

மண்ணிடை, வானிடை, கண்ணிடை: இவற்றில் இடையென்பது இடம் என்னும் பொருளது. பெண்ணிடை யீட்டின் வந்த - பெண்ணாகிய சீதாப்பிராட்டியை இழந்த துன்பத்தால் அவளைத் தேடிவந்த என்றும் பொருள் கொள்ளலாம். இடையீடு-விக்கினம்; பகற்குறியிடையீடு என்று கோவை முதலிய அகப்பொருள் நூல்களில் உள்ளமை காண்க. இங்குச் சூரிய பகவானை வள்ளல் என்றது, தனக்கருள் புரிந்ததை முன்னிட்டு; இனி புல் பூடு முதலிய உயிர்கள் யாவும் தழைப்பதும் அவற்றிற்கு ஆதாரமான மழை பொழிவதும் அவனுடைய கிரண சக்தியால் என்பது கருதிக் கூறியதும் ஆம்;

பி - ம். 1. வழங்கு வள்ளல், வழங்கும் வள்ளல், வயங்கும் வள்ளல், விளங்கும் வள்ளல்.

2. கருணையன் சனகன், கருணையின்.

3. ணிடையூற்றின் வந்த; யீட்ட வந்த, தேடிவந்த; வாநர மிராமன்.

4. எண்ணிமற் றுரைத்த போதுன், எண்ணிடனுற்ற, எண்ணிட வுற்ற போதுன்; னிறகு மகதெழுதி, னிறகு பெற்றிடே. (53)

973. எம்பியு மிடரின் வீழ்வா
னேயது மறுக்க வஞ்சி
அம்பரத் தியங்கும் யாணர்க்
கழுகினுக் கரச ஞனுன்
நம்பிமீ ரீதெந் தன்மை
நீரிவ ணடைந்த வாற்றை
உம்பரு முவப்பத் தக்கீ
ருணர்த்துமி னுணர வென்ருன்.

'உம்பரும் உவப்ப தக்கீர் - தேவர்களும் மகிழத்தக்க தொழிலை யுடையவர்களாகிய, நம்பிமீர் - சிறந்த வீரர்களே! (என் துன்பத்தைக் கண்டு), இடரின் வீழ்வான் - துயரில் மூழ்கியவனுகிய, எம்பியும் - எனது தம்பியான சடாயுவும், ஏயதுமறுக்க அஞ்சி - (யான்) ஏவியதை மறுக்கப்பயந்து, அம்பரத்து இயங்கும் யாணர் கழுகினுக்கு அரசன் ஆனுன் - விண்ணில் சஞ்சரிக்கின்ற வலிய கழுகினுக்கு அரசனு யினுன். ஈது எம் தன்மை - இதுவே எமது வரலாறு; நீர் இவண் அடைந்த ஆற்றை உணர உணர்த்துமின் - நீங்கள் இங்குவந்த வரலாற்றை நான் உணருமாறு கூறுவீராக' என்ருன் - என்று கூறி நிறுத்தினுன் (சம்பாதி).

எம்பி என்றம்பி என்றதன் மருஉ. அம்பரம் - ஆகாயம்

பி - ம். 1. *வீழ்ந்தான்.*

2. *இயங்கு வாய்மை; இயங்கும் ஆணைக்.*

3. *நடந்த வார்த்தை, அடைந்த வார்த்தை.* (54)

இனி, மற்றும் சில பிரதிகளில் அடியிற் காணும் பாடல்கள் அதிகமாக உள்ளன. அவை யாவும் பழைய சிறந்த ஏடுகளில் இல்லாமையாலும் அவை வான்மீக ராமாயணத்துள்ள செய்திகளை நிரப்பக்கருதி இடைச் செருகலாகப் புனைந்து சேர்க்கப் பெற்றவை யெனக்கருத இடந் தருவதாலும், அவற்றைப் பாட வரிசையிற் சேர்த்துக் கொள்ளவில்லை.

1. தாழ்ந்தமா தவத்து லோக சாரங்க னுறையுஞ் சாரல்
வீழ்ந்தனென் சிறைக டிய வெவ்வுயிர்த் துளமுமெய்யும்
போழ்ந்தன துன்ப மூன்ற வுயிர்ப்பொறை போற்ற கில்லேன்
தாழ்ந்தனென் ருழ்ந்த வென்னை யருந்தவ னெதிர்ந்து தேற்றி.

2. கற்றிலார் போல வுள்ளக் களிப்பினு லமரர் காப்பூ
டுற்றிடக் கருதி மீப்போ யாதபத் துனது மேனி
முற்றழன் முருங்க மண்ணை முயங்கினை யினியென் சின்னுள்
மற்றுநின் னுயிரை யோம்பா திகழ்வது மாலைத் தன்ருல்.

3. களித்தவர் கெடுத றிண்ணஞ் சனகியைக் கபடன் வெளவி
ஒளித்தவாய் துருவி யுற்ற வானர ரிராம நாமம்
விளித்திடச் சிறைவந் தோங்கும் வெவ்வுயிர்த் தயர லென்றன்
றளித்தன னதனு லாவி யாற்றினே னுற்றன் மொய்ம்பீர்.

4. அன்றியு மலருள் வைகு மயனைநேர் முனிவன் வாய்மை
நன்றிகொள் ளீசற் காண்பான் நணுகலும் வினையே னுற்ற
தொன்ருெழி வுருமற் கேட்ட தியோகத்தி னுணர்ச்சி பேணிப்
பொன்றுத லொழிமின் யானே புகல்வது கேண்மி னென்ருன்.

5. தசரத ராமன் தேவர் தவத்தினுற் ருய்சொற் ருங்கிக்
கசரத துரக மின்றிக் கானிடை யிறந்த காலை
வசைதரு மிலங்கை வேந்தன் வவ்விய திருவை நாடித்
திசைதிரி கவிக ளுற்ருற் சிறகுபெற் றெழுதி யென்ன.

1. எனக்குண வியற்றுங் காத லென்மகன் சுபார்சு வன்பேர்
சினக்கொலை யரக்கன் மூதூர் வடதிசை நின்று செல்வான்
நினைக்குமுன் றிருவோ டந்த நீசனை நோக்கி யெந்தை
தனக்கிரை யெய்திற் றென்னுச் சிறகினுற் றகைந்து
[கொண்டான்.

2. காமத்தா னலியப்பட்டுக் கணங்குழை தன்னைக் கொண்டு
போமத்தா போக லெந்தை புன்பசிக் கமைந்தா யென்று
தாமத்தார் மெளலி மைந்தன் றடுத்திடை விலக்க நீசன்
நாமத்தால் விரலைக் கவ்வ நாணிமீண் டெனக்குச்
[சொன்னுன்.

3. முன்னரந் நிசாசர முனிமொ ழிந்ததும்
பின்னரச் சுபார்சுவன் பெலத்தி ராவணன்
தன்னெடு மமர்பொரச் சமைந்து நின்றதும்
பொன்னியற் சனகியைக் கொண்டு போனதும்.

4. நினைத்துசம் பாதியு நீதி யாவையும்
இனைந்தனன் வானர ரெவருங் கேட்கவே
நினைந்துகண் ணீர்விழ நெடிது யிர்த்தனர்
வினைந்தனர் புரண்டனர் விதியை நொந்தனர்.

வாநர வீரர் சீதையைத் தேடிவந்த வரலாறு கூறச் சம்பாதி
அவள் நிலை உரைத்தது.

974. என்றலு மிராமன் றன்னை
யேத்தின ரிறைஞ்சி யெந்தாய்
புன்றொழி லரக்கன் மற்றத்
தேவியைக் கொண்டு போந்தான்
தென்றிசை யென்ன வுன்னித்
தேடிநாம் வந்து மென்றார்
நன்றுநீர் வருந்தல் வேண்டா
நானிது நவில்வ லென்றான்.

என்றலும்-என்று சம்பாதி தன் வரலாறு கூறிய பின், (அவ் வாநர வீரர்), இராமன் தன்னை ஏத்தினர் இறைஞ்சி - இராமபிரானைத் துதித்து வணங்கிச் (சம்பாதியை நோக்கி), 'எந்தாய்-எம் தந்தையே! புன் தொழில் அரக்கன் - இழி தொழிலை யுடைய இராக்கதனான அவ்விராவணன். அ தேவியை- அந்த இராமபிரான் தேவியான சீதாப்பிராட்டியை, தென் திசை கொண்டுபோந்தான் என்ன - தென்றிசையாகக் கொண்டு சென்றான் என்று, உன்னி-எண்ணி. நாம் தேடி வந்தும் என்றார் - நாங்கள் அப்பிராட்டியைத் தேடிக்கொண்டு வந்தோம்.' என்று கூறினர்; (அது கேட்ட சம்பாதி) 'நன்று - நல்லது; நீர் வருந்தல் வேண்டா - நீவிர் வருந்தாதீர்; நான் இது நவில்வல் - நான் இது விஷயமாய் அறிந்துள்ளதைக் கூறுவேன்.' என்று சொல்லத் தொடங்கினான். (இதனைப் பின் வரும் மூன்று செய்யுட்களிற் காண்க).

நன்று; உங்கள் செயல் சிறப்புடையது, நலம் தரத்தக்கது என்னும் பொருள்களை மேற்கொண்டதும் ஆம். மற்று அசை.

பி - ம் 1. *மிராமன் பாத மெண்ணிமற் றேத்தி.*

2. *லரக்கன் பூவிற் றேவியைக் கவர்ந்து போந்தான்.*

3. *தேடியே விடுது மென்றார், தேடியே வருது மென்றார், தேடிநாம் வருது மென்றார்.*

4. *வருந்தன் மின்யான், வருந்த லையா, வருந்த லீண்டு, நவில்வன் கேண்மின், நவில்வன் வாயால்.* (55)

975. பாகொன்று குதலை யாளைப்
பாதக வரக்கன் பற்றிப்
போகின்ற பொழுது கண்டேன்
புக்கன னிலங்கை புக்கு
வேகின்ற வுள்ளத் தாளை
வெஞ்சிறை யகத்து வைத்தான்
ஏகுமின் காண்டி ராங்கே
யிருந்தன ளிறைவி யின்னும்.

'பாகு ஒன்று குதலையாளை - தேன்பாகு போன்ற (இனிய) குதலை மொழியையுடைய சீதாப்பிராட்டியை, பாதக அரக்கன் பற்றி- கொடிய இராக்கதனான இராவணன் கவர்ந்து, போகின்றபொழுது - செல்லும்போது, கண்டேன் - நான் பார்த்தேன் : இலங்கை புக்கனன் - (அவன்) இலங்கையிற் போய்ச்சேர்ந்தான்; புக்கு - அங்குச் சென்று, வேகின்ற உள்ளத்தாளை - உள்ளம்வெந்ததுபோல வருந்திய அப்பிராட் டியை, வெம்சிறை அகத்துவைத்தான் - கொடிய சிறையுள் வைத்து விட்டான் ; இறைவி - தலைவியாகிய அப்பிராட்டி, இன்னும் ஆங்கே இருந்தனள் - இப்பொழுதும் அங்கே இருக்கின்றவளாவள்; ஏகுமின் காண்டிர் - நீவிர் சென்று காண்பீராக ;

குதலை - மதலையின் வேறாயினும், இவைமகளிர் பேச்சுக்குப் பொது வாக வழங்கப்பெறும்; 'கோகிலஞ், செற்றதன்ன குதலையள் சீறுவாள்' (அயோத். நகர் நீங்கு; 222) என்றமை காண்க. இருந்தனள் ; கால வழுமைதி.

பி - ம். 1. குதலையாளைப் படியொடுங் கேண்டு கொண்டு.
2. பொழுதுங் கண்டேன் ; னிலங்கைபுக்க.
3. வெஞ்சிறை யதனின் வையத்தான் ; வெஞ்சிறை படுத்து வைத் தான் ; வெஞ்சிறைப் படுத்து வைத்தான்.
4. காண்டி ரந்தில், காண்பி ராங்கே, காண்டி ராங்கண், காண்டி ரையா.

இதன்பின், சில அச்சுப்பிரதிகளிலும் ஏடுகளிலும் அடியிற்காணும் இருபாடல்கள் அதிகமாக உள்ளன.

1. யோசனை யெழுநா றுண்டா லொலிகட லிலங்கை யவ்வூர்
பாசவெங் கரத்துக் கூற்றுங் கட்புலன் பரப்ப வஞ்சும்
நீசனவ் வரக்கன் சீற்ற நெருப்புக்கு நெருப்பு நீங்கள்
ஏசறுங் குணத்தீர் சேற லெப்புரி சியைவ தென்றான்.

2. நால்முகத் தொருவன் மற்றை நாரியோர் பாகத் தண்ணல்
பால்முகப் பரவைப் பள்ளிப் பாம்பணைப் பரனென் றுலும்
காலனுக் கேயுஞ் சேற லரிதது காவற் றன்மை
மேலுமக் குறுவ தெண்ணிச் செல்லுமின் விளிவி னுளீர்.(56)

சம்பாதி சீதையைக் காணும் முறையை வாநரருக் குரைத்தது.

976. எல்லீருஞ் சேற லென்ப
தெளிதன்றவ் விலங்கை மூதூர்
வல்லீரே லொருவ ரேகி
மறைந்தவ ணொழுகி வாய்மை
சொல்லீரே துயரை நீக்கித்
தோகையைத் தெருட்டி மீடிர்
அல்லீரே லென்சொற் றேறி
யுணர்த்துமி னழகற் கம்மா.

'அ இலங்கை மூதூர் - அந்த இலங்கை என்னும் பழமையான நகரத்திற்கு, எல்லீரும் - நீவிர் எல்லாரும், சேறல் என்பது - (ஒரு மிக்கப்) போய்ச் சேர்வது என்பது, எளிது அன்று - எளிதான காரியம் அன்று; வல்லீரேல் - திறமையுடையீராஞல், ஒருவர் ஏகி - ஒருவர் மட்டும் (தனித்துச்) சென்று, அவண் மறைந்து ஒழுகி - அங்கு (இலங் கையில் உள்ளவர் அறியாமல்) மறைந்து (பிராட்டியைத்தேடிப்பார்க்குஞ்) செயலைப் புரிந்து, வாய்மை சொல்லீர் - இராமபிரான் கூறிய உண்மை மொழிகளை அப்பிராட்டியிடம் சொல்லி, தோகையை துயரை நீக்கி - பிராட்டியின் துன்பத்தைப் போக்கி, தெருட்டி - தெளிவடையச் செய்து, மீடிர் - திரும்பிவருவீராக! அல்லீரேல் - அவ்வாறு உங்க ளுள் ஒருவர் மட்டும் போகமுடியாதென்றுல், என்சொல் தேறி - யான் கூறிய சொல்லில் உறுதிகொண்டு, அழகற்கு உணர்த்துமின் - இராம பிரானுக்குப் பிராட்டி இலங்கையில் இருக்கிருள் என்று யான்கூறிய செய்தியை அறிவியுங்கள். அம்மா அசை.

வாய்மை ; நன்மை, நன்மொழியும் ஆம் ; குறள். 291.

பி - ம். 1. *சேற லென்னல்; தெளிதன்றிவ், சேறலென்றற் கெளிதன்று.*
2. *வல்லீரே ; தவணொதுங்கி.*
3. *சொல்வி நீர், துயர் நீக்கி, தோகையைத் தேடி மீள்மின்; மீளும்.*
4. *மறையுமி னழகர்க் கம்மா, புல்லீரே லென்சொற் றேறி யுணர்த் துமின் புக்கதம்மா,* (57)

சம்பாதி வானரரிடம் விடைபெற்றுச் சென்றது.

977. காக்குந ரின்மை யாலக்
கழுகின முழுதுங் கன்றிச்
சேக்கைவிட் டிரியல் போகித்
திரிதரு மதனைத் தீர்ப்பான்
போக்கெனக் கடுத்த தாகும்
நல்லது புரிமி னென்னு
மேக்குற விசையிற் சென்றான்
சிறையினல் விசும்பு போர்ப்பான்.

'காக்குநர் இன்மையால் — தம்மைப் பாதுகாக்கும் அரசர் இல்லாமையால், அ கழுகு இனம் முழுதும் - அந்தக் கழுகுச் சாதி யனைத்தும், கன்றி - வருத்தமுற்று, சேக்கை விட்டு இரியல் போகி - தம்தம் இருப்பிடங்களைவிட்டு நிலைகெட்டுத் தடுமாறிச் சென்று, திரிதரும் - அலையா நிற்கும்; அதனை தீர்ப்பான் - அவற்றிற்குண்டான அத்துயரத்தை நீக்கும் பொருட்டு, போக்கு எனக்கு அடுத்தது ஆகும்-போவது எனக்கு செய்யத் தக்க செயல் ஆகும்; நல்லது புரிமின்-(ஆதலின், நான் கூறிய இரண்டினுள் உங்கட்கு) எது நல்லதாகத் தோன்றுகிறதோ அதனைச் ,செய்யுங்கள்;' என்னு - என்று கூறி, சிறையினல் விசும்பு போர்ப்பான் - தன் சிறகுகளால் ஆகாயத்தைப் போர்ப்பது போல மறைந்தவனான அச் சம்பாதி, மேக்குஉற - மேலே பொருந்த, விசையில் சென்றான் - வேகமாகச் சென்றான்.

சேக்கை - தங்குமிடம்; மணி 4; 117 நாலடி. 30.

பி - ம். 1. *காக்குன ரில்லையால்.* 2. *மதனைத் தீர்க்கப்.*
3. *கடுத்த நண்பீர்; கடுத்ததையா; கடுத்ததென்ன; போக்கெனக் கருளுமென்று புகன்றது புரிமி னென்னு.*
4. *மேக்குறப் பறந்து சென்றான், மேலிவர் வினைத்தல் சொல்வாம்.*

(58)

சம்பாதிப் படலம் முற்றும்.

# 16. மயேந்திரப் படலம்

இது, மயேந்திரமலையை அடைந்த வானரவீரர்கள் செயல்களை விளக்கிக் கூறும் படலம் என விரியும். இப்படலத்தில், சம்பாதியின் சொல்லால் சீதை இலங்கையில் இருப்பது அறிந்த வானரவீரர்கள், தாம் மேற் செய்யவேண்டியதை ஆலோசித்தலும், அவர்கள் தம் தமக்குள்ள திறமைகளைக் கூறியதும், சாம்பவனால் புகழ்ந்து தூண்டப் பெற்ற அநுமன், தனது பேராற்றலையுணர்ந்து, தான் கடல் கடந்து இலங்கை செல்ல உடன் படுதலும் ஆன செய்திகள் கூறப்பெறும். இது மகேந்திரப்படலம் எனவும் வழங்கும்.

மேலே செய்ய வேண்டுவ குறித்து வானர வீரர் ஆலோசித்தது

**978.** பொய்யுரை செய்யான் புள்ளர சென்றே புகலுற்றார்
கய்யுறை நெல்லித் தன்மையி னெல்லாங் கரைகண்டாம்
உய்யுரை பெற்றா நல்லவை யெல்லா முறவெண்ணிச்
செய்யுமி னெய்திற் செய்வகை யாவும் செயவல்லீர்.

(சில வானரவீரர்கள் மற்றவர்களை நோக்கி), 'புள் அரசு - கழுகுகளுக்கு அரசனான சம்பாதி, பொய் உரை செய்யான் என்றே - பொய்வார்த்தை பேசமாட்டான் என்பதாகவே, புகலுற்றார் - சொல்வார்களாகி, கைஉறை நெல்லி தன்மையின் - (உள்ளங்) கையிற் பொருந்திய நெல்லிக்கனியின் நிலைபோல, எல்லாம் கரை கண்டாம் - பிராட்டியிருக்கும் இடம் முதலிய செய்திகள் யாவும் தெளிவாக முடிவுகண்டு கொண்டோம்; உய் உரை பெற்றாம் - அந்தச் சம்பாதியால் நாம் ஈடேறி வாழ்தற்குரிய உறுதிமொழிகளையும் அடைந்தோம்; (ஆதலின்), நல்லவை எல்லாம் உற எண்ணி - நலந்தரத்தக்கவையான எல்லாவற்றையும் பொருந்த ஆலோசித்து, செய்வகை யாவும் நொய்தில் செயவல்லீர் - செய்யும் காரியங்களை விரைவில் செய்து முடிக்கும் திறமுடையீர், செய்யுமின் - செய்யுங்கள்.

புள்ளரசு என்பது கருடாழ்வானுக்கே சிறப்பாக வழங்கப்பெறும் பெயர் எனினும் இங்குச் சரிதத் தொடர்பு நோக்கிப் புள்ளரசு, கழுகரசன் என்றே பொருள் கொள்ளப்பட்டது. கையுறை நெல்லி, உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனியின் உருவம், அதனுள்ளே அமைந்துள்ள கொட்டை, வரைகள், சதைப்பற்று முதலியன தெளிவாய்த்தோற்றுவிப்பன ஆதலின், ஒன்றைத் தெளிவுற அறிதலுக்கு அதனை உவமை கூறுவது மரபு; இதனால் உள்ளங்கை நெல்லிக்கனி

போல என்று ஒரு பழமொழியும் வழங்குவதாகும்: "கரதல முற்றௌிர் நெல்லி கடுப்ப' (பால திருவவதாரப்; 121.); கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால், (சுந்தர. 513): என்பன காண்க. உய்யுரை - கடைத்தேறும் வார்த்தை எனலும் ஒன்றும். நொய்தில் - எளிதில் எனலும் ஆம்.

பி - ம். 1. பொய்யுரை செய்தான்; புள்ளரசின்னே புகலுற்றுன்.
2. கைபுரை நெல்லித்; சுரை கண்டான்.
3. மெய்யுரை பெற்றும்; பெற்றேம்; நல்லதை யெல்லாம், நல்லவை யெல்லாம் மிகவெண்ணி; உய்ய நமக்கே யோதினன் மற்றிங் குறவெண்ணி;
4. செய்யுமி னென்றே,

இதன் முன் தொடக்கத்தில் ஒரு சுவடியில் அடியிற்காணும் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

ஆயவ னங்குப் போகிய பின்ன ரகமீதே
நோயுறு தன்மைத் தாகிய வீரர் தமைநோக்கித்
தூய மனத்த னாகிய வாலி தருதொன்மைச்
சேயு மவர்க்கே செப்பின னுடுஞ் செயலோர்வான். (1)

979. மாள வலித்தே மென்றுமிம்மாளா வசையோடு
மீளவு முற்றே மன்னவை தீரும் வெளிபெற்றேம்
காள நிறத்தோ டொப்பவர் மாளக் கடருவுற்
ருளு நலத்தீ ராளுமி னெம்மா ருயிரம்மா.

(மேலும் அவர்கள்), 'மாள வலித்தேம் - (நாம் தவணை கடந்தமையால்) இறந்துபோகத் துணிவு கொண்டோம்; (அதன்பின்) என்றும் இ மாளாவசையோடும் - எப்பொழுதும் (பிராட்டியைக் காணமுடியாததான) அழியாத இந்தப் பழியோடும், மீளவும் உற்றேம் - திரும்பிச் செல்லவும் துணிந்தோம்; (பிறகு) அன்னவை தீரும் - அவ்விரண்டு பிழைச் செயல்களும் நீங்கும்படியான, வெளி பெற்றேம் - சம்பாதி வார்த்தையான் ஒரு நல்ல வழியாகிய இடைவெளியை அடைந்தோம்; (ஆதலின்), காள நிறத்தோடு ஒப்பவர் - விடத்தைப் போன்றகருநிறத்தவரான அரக்கர்கள், மாள - அழிவதற்குக் காரணமாக, கடல் தாவுற்று - கடலைத்தாவிச் சென்று, ஆளும் நலத்தீர் - வீரத்தன்மை கொண்ட சிறப்புடைய நீவிர், எம் ஆருயிர் - எங்கள் அரிய உயிர்களை, ஆளுமின் - பாதுகாத்தருள்வீராக! (என்று கூறினர்

எனவருவித்து முடிக்க). அம்மா - இங்கு இரக்கத்தை யுணர்த்திய இடைச்சொல்.

பி - ம். 1. *மாளயலித்தோ வலித்தே மன்றியுமாயா ; மன்றெனின் மாயா ;*

2. *மீளவு முற்றேம் ; விளிபெற்றேம்.*

3. *நிறத்தோ டொப்பரின் முன்னே ; காலை நிறத்தி ரொப்பவ ரில்லீர்.* (2)

980. சூரியன் வெற்றிக் காதல னேடுஞ் சுடர்விற்கை
ஆரிய னைச்சென் றேதொழு துற்ற தறைகிற்பின்
சீரிய தன்று தேருதல் கொற்றச் செயலம்மா
வாரிக டப்பார் யாவ ரெனத்தம் வலிசொல்வார்.

(மேலும், முற்கூறிய அவ்வாநர வீரர்கள்), 'சூரியன் வெற்றி காதல னோடும் - வெற்றிகொண்டு விளங்கும் சூரியன் மைந்தனான சுக்கிரீவ னோடும், சுடர் வில்கை ஆரியனை - ஒளி வீசும் வில்லேந்திய கையனான இராமபிரானை, சென்றே - (இட்டபணியைச் செய்து முடிக்காமல் (நாம்) போய், தொழுது - வணங்கி, உற்றது அறைகிற்பின் - நிகழ்ந்த செய்திகளைச் சொல்வோமானால், சீரியது அன்று - அது சிறப்புடையதாகாது; (ஆனால்), தேருதல் கொற்ற செயல் - பிராட்டி யைத் தேடுதல், வீரச் செய்கையாகும்; (ஆதலின்) வாரி கடப்பார் - இனி இக்கடலைக் கடந்து இலங்கைக்குச் செல்வோர், யாவர் என - நம்முள் யாரே உள்ளார்' என்று கேட்க, தம் வலி சொல்வார் - (அது கேட்டு) மற்ற வானரவீரர்கள் தத்தம்வலிமையை எடுத்துரைப்பாராயினர்.

ஆரியன் - பெருமைக் குரியவன்; இராமபிரானை ஆரியன் என்று குறிப்பது இந் நூலில் பெரு வழக்காகும். (3)

நீலன் முதலோர் கடல் கடக்க முடியாமையும் அங்கதன் கடல் கடந்து செல்வேன் ஆனால் மீண்டு வர முடியாது என்றமையும்.

981. நீலன் முதற்பேர் போர்கெழு கொற்ற நெடுவீரர்
சால வுரைத்தார் வாரி கடக்குந் தகவின்மை
வேலை கடப்பென் மீள மிடுக்கின் றெனவிட்டான்
வாலி யளிக்கும் வீர வயப்போர் வசையில்லான்.

நீலன் முதல் - நீலன் என்பானை முதலாகக் கொண்ட, பேர் - பெரிய, போர் கெழு - போர் புரிவதிற் சிறந்த, கொற்றம் நெடுவீரர் -

வலிமை தங்கிய பெரு வாநர வீரர்கள், வாரி கடக்கும் தகவு இன்மை - கடல் கடந்து செல்லும்வலிமை தமக்கு இல்லாமையை, சால உரைத்தார் - நன்ருக எடுத்துக் கூறினர்; வாலி அளிக்கும் - வாலி பெற்ற, வீர வயம் போர் - வீரத்தோடு கூடிய வெற்றிதரும் போர்த்தொழிலே யுடைய, வசை இல்லான் - குற்றமற்றவனுகு அங்கதன், 'வேலே கடப்பென் - நான் இந்தக் கடலேக் கடந்து செல்வேன் ; (ஆனுல்) மீள மிடுக்கு இன்று - மீண்டுவந்து சேரும் வலிமை எனக்கு இல்லே', என விட்டான் என்று தன் வலிமையைக் கூறிமுடித்தான்.

நீலன் ; அங்குச் சென்ற வாநரவீரர்களுள் ஒருவன், இவன் அக்கினி தேவன் அம்சமாய்ப் பிறந்தவன்; (பால : திருவவதார, 27) ; இவனே பின் வாநரப்படைகளுக்குத் தலேவனுக இருந்து இலங்கையிற் போர் புரிந்தவன். இச் செய்யுளால் அங்கதன், முதலிய வாநர வீரர்களினும் நீலன் வலியுடையவன் என்பது பெறப் பெற்றது, சில சுவடிகளில் இப்பாடல் இல்லே.

பி - ம். 1. *நீலன் முறற்பே ராகிய, கொற்ற நெடுவீரன் ;*
2. *சதிரின்மை.*
3. *வேலே கடப்பான்,*
4. *வாலி யளிக்குஞ் சேயு முரைத்தான் ; வாலி யளிக்கும் வீரன்.*(4)

சாம்பன் தன் ஆற்றல் அழிந்து போனமை கூறியது

982. வேத மனைத்துந் தேர்தர வெட்டா வொருமெய்யன்
பூதல முற்று மோரடி வைத்துப் பொலிபோழ்தின்
மாதிர மெட்டுஞ் சூழ்பறை வைத்தே வரமேரு
மோத விளைத்தே தாளுளே வுற்றேன் விறன் மொய்ம்பீர்.

நாலு முகத்தான் உதவுற்ருன் - நான்கு திருமுகங்களே யுடைய பிரமதேவர் அருளிய சாம்பவன், (அவ்வாநர வீரர்களே நோக்கி), 'விறல் மொய்ம்பீர் - வலிய தோள்களே யுடையீர்களே ! வேதம் அனேத்தும் - வேதங்கள் யாவும், தேர்தர - தேடிக்காண, எட்டா-எட்டாது அப்புறத்துள்ள, ஒரு மெய்யன் - ஒப்பற்ற திவ்விய சரீரத்தையுடைய திருமால், பூதலம் முற்றும் ஓர் அடி வைத்து - பூமி முழுவதும்தன் ஒரு அடியை வைத்து அதனுள் அடங்குமாறு செய்து, பொலி போழ்தின் - (திரிவிக்கிரமனுய்) விசுவருபம் எடுத்து விளங்கிய காலத்தில், மாதிரம் எட்டும் - எட்டுத் திக்குக்களிலும், பறைவைத்தே - பறையடித்து அப் பெருமாள் உலகமளக்கும் செய்தியை தெரிவித்துக்

கொண்டே, சூழ் வர - நான் சுற்றிக்கொண்டு அவன்முன்னே செல்லுங் கால், மேரு மோத - மேருமலை இடையே தாக்கியதால், இளைத்தே - அதனால் நான் இளைப்புற்று, தாள் உளைவு உற்றேன்-என் கால்கள் வலியெடுத்து வருந்துவானனேன்.

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராய் இயைந்து பொருண் முடிவு கொண்டது ஆதலின், அடுத்த செய்யுளின் ஈற்றில் உள்ள, 'நாலு முகத்தா னுதவுற்றான்' என்ற தொடர் இங்கு எழுவாயாக அமைந்தது. மொய்ம்பு - வலிமையும் ஆம், திருமால் உலகளந்த காலை அவர் முன்னே பறை யறைந்து சென்றது: பால. எழுச்சிப்; 8.

பி-ம். 1. தேர்தர வொட்டா.
2. பொலி போதின்; பொலி போதியான்.
3. சூழ்பறைகொட்டி வரமேரு; பறைவைத்தே னுரமேரு; வடமேரு.
4. திறன் மொய்ம்பீர். (5)

983. ஆதலி னிப்பே ரார்கலி குப்புற் றகழிஞ்சி
மீது கடத்தித் தீயவ ருட்கும் வினையோடும்
சீதை தனைத்தேர்ந் திங்குடன் மீளுந் திறனின்றென்
றோதி யிறுத்தா னாலு முகத்தா னுதவுற்றான்.

'ஆதலின் - ஆதலால், இ பேர் ஆர்கலி - இந்தப் பெரிய கடலை, குப்புற்று - தாண்டி, அகழ் இஞ்சிமீது கடத்தி - அகழிகளையும் மதில்களையும், மேலாகக் கடந்து சென்று, தீயவர் உட்கும் வினையோடும் - கொடியோரான அவ்வரக்கர்கள் அஞ்சியொடுங்கும் வீரச் செயலுடனே, சீதைதனை தேர்ந்து - சீதாப்பிராட்டியைத் தேடிக் கண்டு பிடித்து, இங்கு உடன் மீளும் - இங்கு உடனே திரும்பிவரும், திறன் இன்று என்று - வலிமை எனக்கு இல்லையென்று' ஓதி இறுத்தான் - சொல்லி முடித்தான்.

ஆர்கலி - கடல்; மிகுதியான ஒலியையுடையது என்னும் பொருளைக் கொண்டது. குப்புறுதல் - தாண்டிக் கடத்தல்; சுந்தர. 15. அகழ் - அகழப்படுவது; முதனிலைத் தொழிற் பெயர்; இது அகழி எனவும் வழங்கும், இஞ்சி - மதில்; பால. நகரப். 10: அயோத். நகர்நீங்கு: 214; சுந்தர. 251, 261, இங்குள்ள 'நாலு முகத்தா னுதவுற்றான்' என்பது முன் செய்யுளிலேயே எழுவாயாக எடுத்துக் கொள்ளப் பெற்றது.

சில பிரதிகளில் இச் செய்யுள் இல்லை.

பி - ம். 1. னிப்போதார்கலி, னிப்போ தாழ்கடல், னிப்போழ்தார்கலி,
2. மீது நடத்தித், ளுது கடக்கத் ; மிடலோடும்.
3. தேரா வகை முற்றும்.
4. நாலு முகத்தோ னுதவிட்டோன். (6)

சாம்பன் கடல் கடந்து சென்று வரத் தக்கவன் அநுமனே
என்று அவன் ஆண்மை கூறியது.

984. யாமினி யிப்போ தாரிடர் துய்த்திங் கினியாரைப்
போமென வைப்பே மென்பது புன்மைப் புகழன்றே
கோமுதல் வர்க்கே ருகிய கொற்றக் குமராநம்
நாம நிறுத்திப் பேரிசை தைக்கு நவையில்லோன்.

அயன் மைந்தன் - பிரமன் புதல்வனுன அச்சாம்பவன், (அங்கதனை நோக்கி), 'கோ முதல்வர்க்கு ஏருகிய - வாநரத் தலைவர்களுள் சிங்கம் போன்ற, கொற்ற குமரா - அரச குமாரனே! யாம் இனி இ போது - நாம் இனி இப்பொழுது, ஆர் இடர் துய்த்து - பெரும் துயரை அனுபவித்துக் கொண்டு, இங்கு - இவ்விடமிருந்து, இனியாரை - இச் செயலை விரும்பி ஏற்று மேற் கொள்வாரை, போம் என வைப்பேம் என்பது - போய் வருவீர் என்று சொல்லி அனுப்புவோம் என்று ஆலோசித்துக் கொண்டிருப்பது, புன்மை புகழ் அன்றே - நம்புகழுக்கு இழிவாகும் அல்லவோ? (ஆதலின்), நம் நாமம் நிறுத்தி - நம் நாமம் நிறுத்தி - நம் பெயரை நிலை நாட்டி, பேர் இசை தைக்கும் - பெரிய கீர்த்தியைச் சேர்த்துப் பொருந்த வைப்பவனுன, நவை இல்லோன்- குற்றமற்றவனும்;

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாக இயைந்து வினை முடிவுகொள்ளும், அயன் மைந்தன் என்ற எழுவாய் அடுத்த செய்யுளி லிருந்து கொள்ளப் பெற்றது. கொற்றம் - வெற்றி அல்லது வலிமை யும் ஆம். அன்றே என்பதை அசையாகக் கொள்ளலும் ஆம்.

பி - ம். 1. யிப்போ பேரிடர், கிதில்யாரை, கதில்யாரை.
2. மென்று நினைத்தல்; புகழன்ருல்;
4. நாமமகற்றிப் பேரிசை வைக்கும்; நவையில்லான்; பேரிசை கொள்ளும் நலமுள்ளோன். (7)

985. ஆரியன் முன்னர்ப் போதுற வுற்ற வதனுனும்
காரிய மெண்ணிச் சோர்வற முற்றுங் கடனுனும்
மாருதி யொப்பார் வேறிலை யென்னு வயன்மைந்தன்
சீரியன் மற்ருே ளாண்மை தெரிப்பா னிவைசெப்பும்.

ஆரியன் முன்னர் - இராமபிரான் முன்னுக, போதுற உற்ற அதனுனும் - முதலில் போய் (மகராஜாவுடன்) நட்புரிமை செய்ததை முன்னிட்டும், காரியம் எண்ணி - தான் மேற்கொண்ட செயலை (நன்கு) ஆலோசித்து, சோர்வு அறமுற்றும் - அக்காரியம் தளர்ச்சியுருமல் முடியும்படி செய்யும், கடனுனும் - கடமையே மேற் கொண்டமை யாலும், மாருதி ஒப்பார் வேறு இலை என்னு - அநுமனை ஒப்பான தகுதியுடையவர் வேறு ஒருவர் (நம்மில்) இல்லை என்று, அயன் மைந்தன்-பிரமகுமாரனுன சாம்பவன், சீரியன்-சிறப்புற்ருேனுன அவ்வநுமனுடைய, மல் தோள் ஆண்மை - மற்போர் புரிவதிற் சிறந்த தோள்வலிமையை, தெரிப்பான் - தெரிவிப்பானுய், இவை செப்பும்-பின் வரும் இவற்றைச் சொல்வானுனன்.

போதுற - போக; இனி போதுறவு உற்ற எனப் பிரித்தலும் ஆம். தெரித்தல் - தெரியச் சொல்லுதல். மூன்ரும் அடியில் அயன்மைந்தன் என்பதில் மைந்தன் என்பதைக் கள்ளமோனை என்பர்.

பி-ம். 1. ஆரியன் முன்னிற் பேரெழில் கூறு மமைவாலும்.
2. காரியமென்னச், காரியமுற்றச் சோர்வற.
3. மாருதியல்லார்; மனமெண்ணி, மகிழ்சாம்பன்.
4. வீரியன் மற்ருே ளாண்மை விரிப்பான்; ளாண்மை யுரைப் பான். (8)

ஒரு பிரதியில் இச்செய்யுள் அடியிற் காணுமாறு மாறியுள்ளது.
ஆரியன் மின்னின் பேரெழில் கூறு மமைவாலும்
காரிய முன்னுன் முற்றுமெனச் சொல் மடனுலும்
மாருதி யொப்பார் வேறிலை யென்ன மனமெண்ணிச்
சீரியன் மற்ருே ளாண்மை யுரைத்தாற் செயுமன்றே.

986. மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகைநாளீர்
நூலை நயந்து நுண்ணி துணர்ந்தீர் நுவலற்கீர்
காலனு மஞ்சுங் காய்சின மொய்ம்பீர் கடனின்றீர்
ஆல நுகர்ந்தா னென்ன வயப்போ ரடர்கிற்பீர்.

(சாம்பன் அநுமனை நேர் நோக்கி, நீவிர்) 'மேலை விரிஞ்சன்-யாவரினும் மேம்பட்ட பிரமதேவன், வீயினும் - இறந்து போனுலும், வீயா -

அழியாத, மிகை நாளீர் - மிகுந்ததான நீண்ட வாழ்நாட்களை யுடையீர்; நூலை - சாஸ்திரங்களை, நயந்து - விரும்பி, நுண்ணிது உணர்ந்தீர் - நுட்பமாக ஆராய்ந்துணர்ந்துள்ளீர்; நுவல் தக்கீர் - ஒன்றை எடுத்துக் கூறும் திறமையிலும் சிறந்தவராவிர்; காலனும் அஞ்சும் - யமனும் கண்டு அஞ்சத்தக்க, காய்சின மொய்ம்பீர் - கடுங்கோபத்துடன் கூடிய வலியுடையீர்; கடன் நின்றீர் - உமது கடமையிற் பிறழாது உறுதி யுடன் நின்றவராவீர்; ஆலம் நுகர்ந்தான் என்ன - ஆலாலம் என்னும் விடத்தையுண்ட சிவபெருமானைப் போல, வயபோர் அடர்கிற்பீர் - வெற்றியுடன் போரில் (யாரையும்) அழிக்க வல்லீர்.

மேலை விரிஞ்சன்; உலகங்களுக்கெல்லாம் மேலான சத்திய லோகத்தில் உள்ள பிரமதேவன் என்னலும் ஆம். அநுமன் வீயாமிகை நாள் உடையவன்; (சுந்தர. 561), (உயுத்த. மருத்துமலைப். 114) காண்க. வருணன், யமன், சிவபிரான், பிரமன், மற்றைத் தேவர்கள், மறை யோர் முனிவர் முதலானோர் வீயாவரம் அளித்துள்ளமை, உத்திர. அநு மப் படலத்திற் காண்க. ஆலநுகர்ந்தானன்ன; சிவ பெருமானைப் பல இடங்களில் அநுமனுக்கு ஒப்புக்கூறுவது இந்நூலிற் காணலாம். இது சிவபெருமான் ஆற்றலை யுவமை கூறுவது மட்டுமன்றி, அநுமன் சிவபெருமானின் அம்சமாய் அவதரித்தவன் என்பதை உட்கொண் டதும் ஆம்.

பின் 99 இல் அநுமன், 'பகலோன் முன் தேர்முனடந்தே யாரியநூலும் தெரிவுற்றீர்' என்று தனியே சிறப்பிக்கப்பெறுவதால், இங்கு, 'நூலை நயந்தீர்' என்பதற்குப் பொதுவாக, சாஸ்திரங்களை விரும்பிப் பயின்றவர் என்றே பொருள்கொள்ளப் பெற்றது. இதனால் அநுமன் வியாகரணங்களோடு மற்ற சாஸ்திரங்களையும் பயின்று தேர்ச்சி பெற்றவன் என்பதாம்.

பி - ம். 1. *மிகுநாளீர், மிகநாளீர், மிகை நாளீர்; வீயினும் வீயிர்வினை வெல்லும்.*

2. *நூலைநயந்தே, நூலை யளந்தும், நூலை நயந்தும், நயநுங்கால்.*

3. *காலனு மஞ்சுஞ் சால்பின மொய்ம்பின், கடை நின்றீர்; காய் சின முள்ளீர் கடைகாவத்.*

4. *நுகர்ந்தானுமென வெம்போ ரடல்வல்லீர்.* (9)

987. வெப்புறு செந்தீ நீர்வளி யாலும் விளியாதீர்
செப்புறு தெய்வப் பல்படை யாலுஞ் சிதையாதீர்
ஒப்புறி னொப்பார் நும்மல தில்லீ ரொருகாலே
குப்புறி னண்டத் தப்புற மேயுங் குதிகொள்வீர்.

'வெப்பு உறு - வெப்பம் பொருந்திய, செம் தீ - சிவந்த நெருப்பாலும், நீர் - நீரினாலும், வளியாலும் - காற்றினாலும், விளியாதீர் - நீவிர் அழியாதவர் ஆவிர்; செப்பு உறு - சிறப்பாகப் பேசப்படுகிற, பல் தெய்வபடையாலும் - பல வகைப்பட்ட தெய்வத் தன்மையுடைய படைக் கலங்களாலும், சிதையாதீர் - நீவிர் பிளவுற்று அழியமாட்டீர்; ஒப்புறின் - ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, ஒப்பார் நும் அலது இல்லீர் - உமக்கு நிகர் நீவிரே யல்லால் பிறர் இல்லாதவர் ஆவிர்; ஒரு காலே குப்புறின் - ஒரு முறையில் நீவிர் தாண்டுவதாயின், அண்டத்து அப்புற மேயும் - இவ்வண்ட கோளகைக்கப்புறத்திலும், குதிகொள்வீர் - போய்க் குதிக்கக் கூடியவர் ஆவீர்.

பஞ்ச பூதங்களில், தீ, நீர் காற்று என்னும் மூன்றே அழிக்கும் தன்மையுடையன ஆதலின், அவையே இங்குக் குறிப்பிடப்பட்டன என்க. தீ, நீர், காற்றாலும், மற்ற தெய்வப்படைகளாலும் அநுமன் அழிவுறாதவன் என்பது, உத்தர. அநுமப்படலத்தில் அக்கினி, வருணன் வாயு முதலிய தேவர்களும் பிறரும் அவனுக்கு முன் அளித்துள்ள வரங்களால் அறியலாம். தீநீர்வளி; உம்மைத் தொகைகள்.

பி - ம். 1. வளிகாலும்.
3. ஒப்பிடி லொப்பார், ஒப்புறிலொப்பார்; ரொருகாலில்.
4. தப்புறமேனும். (10)

988. நல்லவு மொன்றோ தீயவுநாடி நவைதீரச்
சொல்லவும் வல்லீர் காரிய நீரே துணிகிற்பீர்
வெல்லவும் வல்லீர் மீளவும் வல்லீர் மிடலுண்டேல்
கொல்லவும் வல்லீர் தோள்வலி யென்றுங் குறையாதீர்.

'நல்லவும் ஒன்றோ - நல்லவை மட்டுமேயோ, தீயவும் நாடி - தீயவற்றையும் ஆராய்ந்து பார்த்து, நவை தீர - குற்றம் நீங்குமாறு, சொல்லவும் வல்லீர் - (உண்மையை) எடுத்துக் கூறுவதிலும் வல்லவர் ஆவீர்: காரியம் நீரே துணிகிற்பீர் - எது செய்யத்தக்க காரியம் என்பதை நீவிரே துணிந்து செய்யும் திறமுடையீராவீர்; வெல்லவும் வல்லீர் - அவ்வாறு துணிந்து மேற்கொண்ட காரியத்தில் வெற்றி பெறுவீருமாவிர்; மீளவும் வல்லீர் - மேற்கொண்ட காரியத்தை முடித்துப் பின்

திரும்பி வரக் கூடியவரும் ஆவீர்; மிடல் உண்டேல் - (அங்கு) வலியுடன் எதிர்ப்பினுல் போர் உண்டானுல், கொல்லவும் வல்லீர் - அப்பகைவர்களைக் கொல்லுந் திறமுடையவரும் ஆவீர்; தோள்வலி என்றும் குறையாதீர் - அதனுல் உம் புயவலியில் ஒருபோதும் குறை வடைய மாட்டீர்.

இச்செய்யுளில், அநுமனிடம் ஒரு சிறந்த அமைச்சனுக்கு உரியன வும், ஒரு சிறந்த போர்வீரனுக்கு உரியனவுமான அரிய திறல்கள் ஒருங்கே அமைந்திருப்பன குறிப்பிடப் பெற்றது. மிடலுண்டேல் என்பதற்கு - உமக்கு உம் வலிகாட்டும் வாய்ப்புக் கிடைக்குமானுல் என்றும், மீளவும் வல்லீர் என்பதற்கு இக்கடல் கடந்து சென்று (பிராட்டியைத்தேடித்) திரும்பி மீண்டு இங்கு வரும் ஆற்றலுமுடையீர் என்றும் கொள்ளலாம்.

பி - ம். 1. *நல்லவு மன்றோர், தீயவு மொன்றே நவைநாடி; நல்லவை நாடி, தீய்யைநீக்கி நவில் வாய்மை.*

2. .........*துணி வுற்றால்; காரியம் யாவுந் துணிவுற்றால்.*

3. *மிடல் கண்டால், மிடலோரை.*

4. *தோள்வலி யொன்றுங், தோள்வலி யாதும்.* (11)

989. மேரு கிரிக்கு மீதுற நிற்கும் பெருமெய்யீர்
மாரி துளிக்குந் தாரை யிடுக்கும் வரவல்லீர்
பாரை யெடுக்கும் நோன்மை வலத்தீர் பழியற்றீர்
சூரிய னைச்சென் றொண்கை யகத்துந் தொடவல்லீர்.

'மேரு கிரிக்கும் மீது உற நிற்கும் - மேருமலைக்கும் மேலாக (ஓங்கி) நிற்கும், பெரு மெய்யீர் - பெரிய சரீரத்தையுடையீர்; மாரி துளிக்கும் - மழை துளிகளாகப் பெய்யும், தாரை இடுக்கும் - அம்மழை யொழுக்கு களின் இடையேயுள்ள இடுக்குகள் வழியாகவும், வரவல்லீர் - சிறிய உருவுடன் நுழைந்து வரவும் திறமுடையவராவீர்; பாரை எடுக்கும் நோன்மை வலத்தீர் - இப்புவியைப் பெயர்த்து எடுக்கும் பெருவலி யுடையீராவீர்; பழி அற்றீர் - (இவ்வாறு செய்தற்கரிய செயலாற்றும் வலியுடையீராயினும்) நிந்தனை அல்லது குற்றம் இல்லாதவரும் ஆவீர்; சென்று - மேலே சென்று, சூரியனை-சூரிய தேவனை, ஒள்கை அகத்தும் தொடவல்லீர் - உமது ஒளி தங்கிய கையால் தொடவும் வல்லவராவீர்.

மேருகிரிக்கும்; உம்மை உயர்வு சிறப்பினது. நோன்மை வலம்; ஒரு பொருட்பன் மொழி; மிகுந்த வலிமை என்றபடி; நோன்மை - பெருமை, தாங்குந்தன்மையும் ஆம். இதனுல் அநுமன் பேருரு எடுத்

தால் மேருவுக்கும் பெரியவனுவன், மழைத்தாரை யிடுக்கும் நுழைந்து செல்லத்தக்க சிற்றுருவும் எடுக்கக் கூடியவன் என்பதாம்; இது முதலில் இராமபிரான் முன்னரும் பின் இலங்கையில் பிராட்டி முன்னரும் பேருரு எடுத்ததாலும், 'புகை புகா வாயிலும் புகுவான்' சுந்தர.235 என்றமையாலும், 'இலங்கையில் எள்ளுறையு மொழியாமல் யாண்டையுளுமுளனுகி உள்ளுறையு மழகனைப்போ லெம்மருங்கு முலாவினன்' (சுந்தர. 329.) என்று கூறப் பெற்றமையாலும்; பிறியா வறத்தி னநுமான் வளர்ச்சி பெருமேருவினிற் பெரியனும், சிறிதா யொடுக்குமெனின் மேனியற்ப வணுவானதிற் சிறியனும்; (உத்தர. அநுமப்; 7.) என்றதாலும் பெறப்படும். சூரியனைத் தொடவல்லீர் என்றது, முன் அநுமன் பிறந்தவுடனேயே சூரியனை ஒரு கனியெனக் கருதி வானூடு சென்று அதனைத் தாவிப் பிடிக்கச் சென்றதைக் குறிப்பிட்டபடி. தொடவல்லீர்; என்றதால் கையாற் றொடக்கூடிய அவ்வளவு அருகே சென்றவன் என்பதாம். இது அநுமன் பிறந்த உடனே புரிந்த செயல்.

பி-ம். 1. *உருமெய்யீர், உறுமெய்யீர், உருவத்தீர், நெடுமெய்யீர்.*
2. *மாரியிடுக்கும், தாரையிடைக்கும்.*
3. *தோண்மை வலத்தீர், பாரவலத்தீர், பனிகாலின்; பழியிற்றீர், பழியாற்றீர்.*
4. *சூரியனைச் சென்தாணடை கற்றும், தாணடைகற்பிற், தாணடையிட்டுத்; சென்றே நடைகற்றுத்.* (12)

990. அறிந்து திறத்தா றெண்ணி யறத்தா றழியாமை
மறிந்துரு ளப்போர் வாலியை வெல்லு மதிவல்லீர்
பொறிந்திமை யார்கோன் வச்சிர பாணம் புகமூழ்க
எறிந்துழி யிற்றோர் புன்மயி ரேனு மிழவாதீர்.

'திறத்து ஆறு எண்ணி அறிந்து - சிறந்த வழி அல்லது உபாயத்தை ஆலோசித்து, அறத்து ஆறு அழியாமை - தருமத்தின் வழி கெடாமல், வாலியை - வாலி என்பானை, போர் - போரில், மறிந்து உருள - (கீழே) குப்புற வீழ்ந்து உருண்டழியுமாறு, வெல்லும் - வெல்லச் செய்த, மதி வல்லீர்-அறிவு வலி பெற்றவராவீர்; இமையார் கோன்-தேவர்க்கரசனுன இந்திரன், வச்சிர பாணம் - வச்சிராயுதம் என்னும் தன் ஆயுதம், பொறிந்து - நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டு, புக மூழ்க - புகுந்து உம் உடலில் மூழ்குமாறு, எறிந்துழி - எறிந்தபோதும், ஓர் புன்

மயிரேனும் - உடலில் உள்ள ஒரு சிறு உரோமங்கூட, இற்று இழவா தீர் - அறுபட்டு இழக்காதவரும் ஆவீர்.

திருக்குறளில், 'வினை செயல் வகை' என்ற அதிகாரத்துக் கூறப் பட்ட செய்திகள் முற்றும் அநுமனிடம் பொருந்தியுள்ளமை காண்க. அநுமன் பிறந்தவுடன் சூரியனை ஒரு கனியெனக் கருதி அதனைப் பற்றியுண்ண வானில் எழுந்தபோது, இந்திரன் அவன்மீது தன் வச்சிரப் படையை ஏவினது; உத்தர. அநுமப்:22, புன்மயிரேனும்; உம்மை இழிவு சிறப்பு.

பி - ம். 1. *அறிந்து திறத்தோ டெண்ணி யறத்தா றழியாவிம்; றழியாமல்.*

3. *பொறிந்திமையோர் கோன், பொறிந்திமை யத்தோன்; பொறிந் திமை யற்றோன்; பொறிந்திமையக்கோன்; செறிந்தமரர்கோன்; வச்சிர றம்மேற் சினமோடங்.*

4. *யற்றோர் புன்மயிர், மற்றோர் புன்மயிர்.* (13)

991. போர்மு னெதிர்ந்தான் மூவுல கேனும் பொருளாகா
ஓர்வில் வலங்கொண் டொல்கலில் வீரத் துயர்தோளீர்
பாருல கெங்கும் பேரிருள் சீக்கும் பகலோன்முன்
தேர்மு னடந்தே யாரிய நூலுந் தெரிவுற்றீர்.

மூ உலகேனும்- மூன்று உலகங்களில் உள்ளோர்களும், போர்முன் எதிர்ந்தால்-போரில் உம் முன்னே எதிரேற்று வந்தால், பொருள் ஆகா- அவர்கள் ஒரு பொருளாக மதிக்க இடமில்லாத, ஓர்வு இல் - பிறரால் உணர்தற்கரிய, வலம் கொண்டு - பெருவலிகொண்டு, ஒல்கல் இல் வீரத்து - குறையாத வீரத்தன்மையால், உயர் - சிறந்து விளங்கும், தோளீர்-தோள் வலியுடையீர்! பார் உலகு எங்கும் - இப்புவியோடு மற்ற உலகங்களெங்கிலும் உள்ள, பேர் இருள் - பெரிய இருட்டை, சீக்கும் - அழித்து அகற்றும், பகலோன் முன் - சூரியன் எதிர்முகமாய், தேர் முன் நடந்தே- அவன் தேரின் முன்னே நடந்து சென்றே, ஆரிய நூலும் - வடமொழி நூல்கள் அனைத்தையும், தெரிவுற்றீர் - கேட்டுத் தெரிந்து ணர்ந்தவராவீர்.

பாருலகு: பாராகிய உலகு என இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாகவுங் கொள்ளலாம். சீத்தல்-அழித்தல் அல்லது துடைத்தல்; 'இருள் சீக்குஞ்சுடரே போல்'; (கலி. 100); 'மந்தி சீக்கும் மாதுஞ்சு முன்றில்' (பெரும்பாண் : 497.). அநுமன் சூரிய பகவானிடம் வியா கரணம் முதலிய சாஸ்திரங் கற்க விரும்பினனாக, அவன் தான் எப்

பொழுதும்' வானவீதி வழியே உலகங்களைச் சுற்றிச் சஞ்சரிப்பவனாத லால், தான் ஓரிடத்திலிருந்து அவனுக்குப் பாடம் சொல்ல இயலாது என, அநுமன் அவர் எதிர்முகமாய் நடந்து சென்றே பாடங் கேட்டு நவவியாகரண பண்டிதன் ஆயினன் என்ற வரலாறு உத்தர. அநுமப் : 46-ம் பாடலால் விளங்குவது காண்க.

பி - ம். 1. பொருளாக.
2. ஓங்கவில் வீரத்துயர் தோளீர்.
3. பேருலகெங்குங் காரிருள் சிந்துங் கதிரோனும்; பாயிருள் சிக்கும், காரிருள் சிக்கும்; காயிருள் சிந்தும் பெரியோன்றன்.
4. தெளிவுற்றீர். (14)

992. நீதியி னின்றீர் வாய்மை யமைந்தீர் நினைவாலும்
மாதர் நலம்பே ணாது வளர்ந்தீர் மறையெல்லாம்
ஓதி யுணர்ந்தீ ரூழி கடந்தீ ருலகீனும்
ஆதி யயன்றா னேயென யாது மறைகின்றீர்.

'நீதியின் நின்றீர் - நீதி நெறியில் நிலைபெற்றுள்ளீர்; வாய்மை அமைந்தீர்-மெய்ம்மை யுடையவராவீர்; மாதர் நலம் - மகளிர் இன்பத்தை நினைவாலும்-மனத்தினால்கூட, பேணாது - விரும்பாது, வளர்ந்தீர் - வளர்ந் துள்ளீர்; மறை எல்லாம் - வேதங்கள் அனைத்தையும், ஓதி உணர்ந்தீர் - அத்யயனம் செய்து அவற்றின் பொருள்களையும் அறிந்தவராவீர்; ஊழி கடந்தீர்-பிரமகற்பம் ஆன ஊழிக்காலத்தையும் கடந்த ஆயுளையுடையீர்; உலகு ஈனும் - உலகங்களைப் படைத்த, ஆதி அயன் தானே என யாதும் அறைகின்றீர் - முதற் கடவுளாகிய பிரமதேவனே தான் நீவிர் என யாவரும் சொல்லும்படியான சிறப்புடையீர் ஆவீர்,

நினைவாலும் என்றது மற்ற, சொல்லாலும் செயலாலும் என்பதை உள்ளடக்கிய உயர்வைக் குறித்தது. ஓதி யுணர்ந்தீர்: வேதங்களை ஓதுத லோடு உணர்தல் சிறப்புடைமை யாதலின்: 'ஆதிமறை நூலனைத்துந் தெரிந்துணர்ந்த, நீதி நெறியாளர்' (நள. 366) என்றமை காண்க. அறைகிற்பீர் - அறிந்து சொல்லும் ஆற்றலுடையீராவிர் என்னலும் ஒன்றும், அநுமன் பிரமசாரி யாதலின், 'மாதர் நலம் பேணாது வளர்ந்தீர்' என்றும், சிரஞ்சீவி யாதலின் 'ஊழி கடந்தீர்' என்றும், சிறப்பித்ததோடு, இனி அடுத்த பிரமபட்டம் அவர் அடைபவர் என்பதைக் குறிப்பாய்க் கொண்டு, 'ஆதியயன்றானே யென யாரும் அறைகின்றீர்' என்று பாராட்டினான் சாம்பன் என்க. அநுமன் அடுத்த பிரமனாக அமைபவன் என்பது, உத்தர. அநுமப் : 40. ஆம் பாடலால் விளங்கும்.

பி - ம். 1. வாய்மை நயந்தீர், வாய்மை யுயர்ந்தீர்.
2. மறையாவும்.
4. யயன்றுளுமென ; மமைமின்றீர் ; ஆதி யயன்போ லியாது முணர்ந்தே யறைகின்றீர். (15)

993. அண்ண லமைந்தற் கன்புசிறந்தீ ரதனுனே
கண்ணி யுணர்ந்தீர் கரும நுமக்கே கடனென்னத்
திண்ணி தமைந்தீர் செய்து முடிப்பீர் சிதையாதீர்
புண்ணிய மொன்றே யென்று நிலைக்கும் பொருள்கொண்டீர்.

'அண்ணல் அ மைந்தற்கு - பெருமை தங்கிய அந்த இராமபிரானிடத்தில், அன்பு சிறந்தீர் - அன்பில் மேம்பட்டவரானீர்; அதனுனே- அதன் நிமித்தமாக, கருமம் கண்ணி உணர்ந்தீர் - செய்ய வேண்டிய காரியத்தைத்(தீரக்)கருதி யுணர்ந்தீராகி, நுமக்கே கடன் என்ன-உமக்கே உரிய கடனுகும் என்று, திண்ணிது அமைந்தீர் - திடமாக மேற்கொண்டீர்; செய்து முடிப்பீர் - அவ்வாறு நினைத்தபடியே அக்காரியத்தை (நீவிரே)செய்து முடிப்பவரும் ஆவீர். சிதையாதீர்-அழியக் கூடிய வரல்லீர்; நிலைக்கும் பொருள் புண்ணியம்ஒன்றே என்று கொண்டீர்-என்றும் நிலையாக உள்ள பொருள் புண்ணியம் ஒன்றுதான் என்னும் உண்மையை உட்கொண்டுள்ளீர்.

என்றும் நிலைக்கும் பொருள் எனக் கோடலுமாம். மைந்தன் என்றது வலிமைச் சிறப்பை யுணர்த்தியபடி. கண்ணுதல் - கருதுதல்; 115 ; சுந்தர. 308.

பி - ம். 1. எதனுலே, ரவனுலே.
2. எண்ணி யுணர்ந்த காரியம் யாவு மிசைவெய்தத்; காரிய மெற்கே, காரிய நிற்கே.
3. திண்ணி துணர்ந்தீர் ; சிதைவின்றும், சிதை வின்றிப், சிதை வன்றும், சிதையாமல்.
4. புண்ணிய முற்றுஞ் செய்ய நினைக்குங் புலன் வல்லீர், புண்ணிய றொன்றே வென்று நினைக்கும் புகழ் வல்லீர் ; புண்ணியரன்றே. புண்ணிய மென்னுமென்று, புண்ணிய மென்னச்செய்து முடிக்கு, புண்ணிய மென்ன வென்று நினைக்கும்.

ஒரு சுவடியில் இப்பாடல் அடியிற் காணுமாறு அமைந்துள்ளது.
அண்ண லமைந்தாற் கன்பு சிறந்தீ ரவனுலே
கண்ணி யுணர்ந்திக் காரிய நிற்கே கடனென்னத்
திண்ணி தமைந்தீர் செய்து முடிப்பீர் சிதைவின்றும்
புண்ணிய மென்னு வென்று நினைக்கும் புகழ்வல்லீர். (16)

994. அடங்கவும் வல்லீர் காலம தன்றே லமர்வந்தால்
மடங்கன் முனிந்தா லன்ன வலத்தீர் மதிநாடித்
தொடங்கிய தொன்ருே முற்று முடிக்குந் தொழில் வல்லீர்
இடங்கெட வெவ்வா யூறு கிடைத்தா லிடையாதீர்.

'காலம் அது அன்றேல்-அது ஏற்ற காலமல்லாவிடில், அடங்கவும் வல்லீர் - (அப்போது) அடங்கியிருக்கவும் வல்லவராவீர்; அமர் வந்தால் - போர் நேரிட்டபோது, மடங்கல் முனிந்தால் அன்ன - (ஓர்) ஆண் சிங்கம் சினந்து எதிர்த்தது போல, வலத்தீர் - வலிமை யுடையவராவீர்; மதி நாடி - புத்தியால் ஆராய்ந்து பார்த்து, தொடங்கியது ஒன்ருே - செய்யத் தொடங்கிய காரியம் ஒன்றை மட்டுமோ, முற்றும் முடிக்கும் தொழில் வல்லீர் - அதனேடு தொடர்பான எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்கும் செயலில் வல்லவராவீர்; இடம் கெட - சந்தர்ப்பம் கேடுபயப்பதாக, வெம் வாய் ஊறு கிடைத்தால் - கொடியதான இடையூறு எதிர்ப்பட்டதானுலும், இடையாதீர் - அதற்கு அஞ்சிப் பின்னெதுங்கமாட்டீர்.

'அடங்கவும்......காலமதன்றேல்': இவ்வரிய குணம், அநுமனிடத்துள்ள தென்பது, அவன் இலங்கையில் பிராட்டியைத் தேடிச்சென்ற போது அரமனையில், இராவணன் துயில்வதுகண்டு, அவனைக்கொன்று தீர்ப்பதென்று எழுந்த தன் வெகுளியை, 'ஆலம் பார்த்துண்டவன் போலாற்றலமைந் துளரெனினும், சீலம்பார்க்குரியோர்க ளெண்ணுது செய்பவோ, மூலம்பார்க் குறினுலகை முற்றுவிக்கு முறைதெரினும், காலம்பார்த் திறைவேலை கடவாத கடலொத்தான்; இற்றைப் போர்ப் பெருஞ்சீற்றமென்னேடு முடிந்திடுக, கற்றைப்பூங் குழலாளைச் சிறைவைத்த கண்டகனை, முற்றப் போர் முடித்ததொரு குரங்கென்ருன் முனைவீரன், கொற்றப் போர்ச் சிலைத்தொழிற்குக் குறையுண்டா மெனக் குறைந்தான்' (சுந்தர. 317, 318) என்ற பாசுரங்களாலும், பின் மேகநாதன் தன்னைக் கட்டிப் பிணித்த நாகபாசமானது மற்றை யரக்கர்கள் கயிறுகொண்டு மேலும் பிணித்ததால் விலகவும், அந்நிலையில் தான் விடுவித்துக் கொண்டு வெளிவராமல் இரவணனைப் பார்த்து அவனுக்கு நீதி அறிவுறுத்திப் பிராட்டியை விடுவிக்க இட மேற்படும் என்று எண்ணிக் கட்டுப்பட்டவன் போல அடங்கியிருந்தமையாலும் அறியலாம். மேலும், இவ்வருங்குணத்தின் சிறப்பு, திருக்குறளில், காலமறிதல் அதிகாரத்தால் நன்கு விளக்கப்பெறுவதும் நோக்கற்பாலதாம். ஓகாரம் எதிர்மறைப் பொருளது; இழிவு சிறப்புமாம். இடங்கெடல்; சமயத்தில் மாறுபடுதல்; முறை கெடுதலும் ஆம். இடங்கெடல்; இஃது உலக வழக்கு. ஊறு - துன்பம், தடை: உறு

என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர்; உண் என்பது ஊண் என வந்ததுபோல.

பி - ம். 1. காலம தன்மேலமர்...... 2. முனிந்தாலென்ன மலைப்பீர்.
3. தொன்றே செய்து முடிக்குந் தொழில் வல்லீர்.
4. இடங்கெடவல்லேயூறு, இடங்கெட வந்தால். (17)

995. ஈண்டிய கொற்றத் திந்திர னென்பான் முதல்யாரும்
பூண்டு நடக்கு நன்னெறி யானும் பொறையானும்
பாண்டிதர் நீரே பார்த்தினி துய்க்கும் படிவல்லீர்
வேண்டிய போதே வேண்டுரு வெய்தும் வினைவல்லீர்.

'கொற்றத்து ஈண்டிய - வலிமை அல்லது வெற்றியால் செறிந்த, இந்திரன் என்பான் முதல் யாரும் - இந்திரன் முதலான அனைவரும், பூண்டு நடக்கும் - மேற்கொண்டு நடக்கத் தக்க, நல்நெறியானும் - நல்லொழுக்கத்தாலும், பொறையானும் - பொறுமைப் பண்பினை, (மேற்கொண்டுள்ளீர் ஆதலானும்), பாண்டிதர் நீரே - தேர்ச்சி பெற்றவர் நீவிரே ஆவீர்: பார்த்து இனிது உய்க்கும்படி வல்லீர் - (எச்செயலையும்) ஊகித்துப் பார்த்து நன்கு நடத்தும் விதத்தில் வல்லவராவீர்; வேண்டிய போதே - விரும்பிய அப்பொழுதே, வேண்டு உரு எய்தும் - (நீவிர்) விரும்பிய உருவத்தை அடையும், வினை வல்லீர் - செயலிலும் வல்லவர் ஆவீர்.

பாண்டிதர் .-தேர்ச்சி யுடையவர்: பண்டிதர் என்ற சொல் ஆதி நீண்டது. அநுமன் பொறையுடையவன் என்பது முன் உள்ள 992ஆம். செய்யுளால் விளங்கும். அநுமன், வேண்டியபோதே வேண்டுரு வெடுக்குந் திறமுடைமை; இராமபிரான்முன்னர் முதலில் மாண்பியாய்ச் சென்றமையாலும் பின் அப்பெருமான் முன்பும், அசோக வனத்தில் பிராட்டி முன்பும் தன் பேருரு எடுத்து நின்றமையாலும், சிற்றுருவுடன் அங்காரதாரை உடலிற் புகுந்துபின் பேருருவுடன் அவள் உடலைப் பிளந்து வெளிவந்தமையாலும், சுந்தர. 195, 235, பாடல்களாலும் பிறவற்றாலும் அறியலாம்.

பி - ம். 1. ஈண்டுயர் கொற்றத்; திந்திரனென்போன், திந்திரனென்பார், திந்திரனுறிய விமையோர்கள்.
2. நன்னெறியாமப், நன்னெறியாயப், நன்னெறிபூணப், பன்னெறி யாம்பற் பொறியானும்.
3. பாண்டிதனீரே, பாண்டியனீரே.
4. வேண்டிய துய்க்கும், வேண்டுவ தெய்தும், வேண்டுவ வெய்தும், வேண்டி வெறுக்கும் வினைவல்லீர்.

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணும் இரு பாடல்கள் அதிக மாக உள்ளன.

நாலு மறைக்கும் வேலியு மாகி நடுநிற்கும்
சீல மிகுந்தீர் திங்கண் மிலேச்சித் திகழ்வேணி
ஆல மிடற்றன் மேலு முதித்தீ ரதுபோதில்
காலி னிறைக்கோ காலனு மாகக் கடிதுற்றீர்.

ஆதி யரிப்புத் தேளடிப் பாரித் தணவாதற்
கோது கருத்திற் சால நினைத்திட் டொழிவில்லாப்
போது தளத்திற் புக்கிய செய்கைத் திறனாலே
சாதல் கெடுத்துத் தானழி யாதீ ரதனாலே. (18)

996. ஏகுமி னேகி யெம்முயிர் நல்கீ ரிசைகொள்வீர்
ஓகை கொணர்ந்தெ மன்னையு மின்னற் குறையில்லாச்
சாகர முற்றுந் தாவிடும் நீரிக் கடலுவும்
வேக மமைந்தீ ரென்று விரிஞ்சன் மகன்விட்டான்.

'நீர் இ கடல் தாவும் வேகம் அமைந்தீர் - நீவிர் இந்தக் கடலைத் தாண்டிச் செல்லும் வேகம் அமையப் பெற்றுள்ளீர்; (ஆதலின்), ஏகுமின் - நீவிரே செல்லும்; (ஏகி) ஓகை கொணர்ந்து - பிராட்டியைப் பற்றிய நற் செய்திகளைக் கொண்டு தந்து, எம் உயிர் நல்கீர் - நாங்கள் இறவாமல் எங்கட்கு உயிர்ப்பிச்சை யருளி, இசை கொள்ளீர் - சீர்த்தியை அடையுங்கள்; எம் அன்னையும் குறைவு இல்லா இன்னல் சாகரம் முற்றும் தாவிடும் - எங்கள் பிராட்டியும் குறையாத துன்பக் கடலைத் தாண்ட ஏதுவாகும்' என்று விரிஞ்சன் மகன் விட்டான் - என்று பிரம குமாரனான சாம்பவன் கூறிமுடித்தான்.

ஓகை: உவகை என்ற சொல்லின் திரிவு. எம்முயிர் நல்கி: தமக்கு அளித்த கெடுக் கடந்த நிலையில் இறந்துபடுவதாகத் தீர்மானித்த அவ் வானர வீரர்களின் உயிர்களை நீவிர் கடந்து செல்வதால் அளிக்கும் பெருமையுடையராவீர் என்றும், நீர் இச் சிறிய கடல் கடந்தால் பிராட்டி துயரப் பெருங்கடல்கடக்க இடமாகும் என்றும் நயம்படக் கூறியதாகும். இசை கொள்ளீர்: பிராட்டி இராமபிரான் முதலிய அனைவர் துயரமும், தேவர் துயரும் நீங்கக் காரணமாகிய இசை என்க.

பி - ம். 1. ஏகுதிர் நீரே;
2. ஓகை கொணர்ந்தும்; கொணர்ந்து குறையில்லாச்.
3. தாவிடுநீர், தாவிடில், தாவிட, தாழ்வுற நீரிக் கடலுவும்.
4. வேகமும் வல்லீர், வேகமினைப்பீர்; என்று புகழ்ந்தான்; விதிதந்தான்; மகன் விண்டான். (19)

அநுமன் கடல்கடந்து சென்று பிராட்டியைக் கண்டு வருவதாக உறுதி கூறுதல்,

997. சாம்ப னியம்பத் தாழ்வத னத்தா மரைநாப்பண்
ஆம்பல் விரிந்தா லன்ன சிரிப்பா னறிவாளன்
கூம்ப லொடுஞ்சேர் கைக்கம லத்தன் குலமெல்லாம்
ஏம்பல் வரத்தன் சிந்தை தெரிப்பா னிவைசொன்னான்.

சாம்பன் இயம்ப - அவ்வாறு சாம்பவன் புகழ்ந்து கூறிமுடிக்க, அறிவாளன் - அறிவிற் சிறந்த அநுமன், தாழ் வதனம் தாமரை நாப்பண் - இறங்கிய முகமாகிய செந்தாமரையின் நடுவில், ஆம்பல் விரிந்தால் அன்ன - ஒரு அல்லிப்பூ மலர்ந்ததுபோல, சிரிப்பான் - பற்கள் தோனறப் புன் சிரிப்புக்கொண்டவனும், கூம்பலொடும் சேர் கை கமலத்தன் - குவித்துச் சேர்த்த கைத்தாமரைகளையுடையவனுமாகி. குலம் எல்லாம் ஏம்பல் வர - தன் குலமாகிய வானரர் அனைவர்க்கும் மகிழ்ச்சி யுண்டாக, தன் சிந்தை தெரிப்பான் - தன் மனக்கருத்தைத் தெரிவிப்பானாய், இவை சொன்னான் - இவ்வார்த்தைகளைக் கூறினான். அவை அடுத்த பாடல்களில் காணப்பெறும்.

தாழ்வதனம்; தாழ்ந்தமை, புகழ்ச்சியால் பெருமிதமடையாது, அடக்க மேலிட்டுத் தலை குனிந்த நிலையில் வதனம் தாழ நின்றமை; இது அவன் தற்புகழ்ச்சியை விரும்பாத தன்மையை உணர்த்திய தென்க. ஒப்பு. சுந்தர. 1253, 1254. அநுமன் முகத்திற்குச் செந் தாமரையும், பற்களுக்கு ஆம்பல் மலரும், இவை முறையே பெருமை யாலும் நிறத்தாலும் உவமைகள். அநுமன் அறிவாளன்; 60; 427: சுந்தர. 69, 599, 'என் குலம் எனக்குத் தந்தாள்; (சுந்தர. 1272.) என்றமையால் விளங்கவைத்தமை காண்க. இதுவும் தற்புகழ்ச்சியாய்த் தானே கூறாமல் பிராட்டி திறத்தில் அமையவைத்த அருமை உய்த் துணரப் பாலதாம். கூம்பலொடுஞ்சேர் கைக் கமலத்தன் என்றதால் அவ்வநுமனது. அடக்கமும் வினயமும் புலனாகும்.

பி - ம். 1. *தண் கமலப்பூ நடுவேதான்.*
2. *ஆம்பல் விரிந்தா லன்ன செப்பின்.*
3. *கூம்பலமைந்தகைக்; கைக்கமலத்தின் குலமெல்லாம்.*
4. *ஏம்பல் வாததான் சிந்தை தெவிந்தா னிவை சொல்வான்; னிவை செப்பும்.* (20)

சில சுவடிகளில் இதனுடன் சம்பாதிப் படலம் முற்றும்.

வேறு

998. நீயிரே நினையின் முன்னே நெடுந்திரைப் பரவையேழும்
தாயுல கனைத்தும் வென்று தையலைத் தருதற் கொத்தீர்
போயிது புரிதி யென்று புலமைதீர் புன்மைகாண்டற்
கேயினி ரென்னி னென்னிற் பிறந்தவர் யாவரின்னும்.

(அனுமன் சாம்பனை நோக்கி), 'நீயிரே நினையின் - நீவிரே நினைந் தீரானால், முன்னே - முன்னமேயே, நெடும்திரை பரவை ஏழும் தாய் - பெரிய அலைகளையுடைய கடல்கள் ஏழையும் தாவி, உலகு அனைத்தும் வென்று - உம்மை எதிர்த்த உலகத்தவர் அனைவரையும் வென்று, தையலை தருதற்கு ஒத்தீர் - பிராட்டியைத் தேடிக்கொண்டு வருதற்கு தகுதியுடையீராவீர்; போய் இது புரிதி என்று - நீ போய் இதைச் செய் என்று, புலமை தீர் புன்மை காண்டற்கு - என் அறிவின்மையை யான் கண்டு கொள்வதற்கு, ஏயினிர் - என்னை இக்காரியத்தில் ஏவி னீர் ; என்னின் - என்றால், என்னில் பிறந்தவர் இன்னும் யாவர்- என்னைப் போலப் பிறந்த பயனை அடைந்தவர் இன்னும் வேறு யாரே யுள்ளார்? (வேறு யாரும் இல்லை); யானே பிறந்தபயன் எய்தினேன் ஆனேன் என்றபடி).

இச் செய்யுளால், சாம்பவனே பிராட்டியைத் தேடிக் கண்டுவரும் ஆற்றல் உடையவன் என்பதும், தன்னை ஏவியதால், தன் அறிவின் குறைவு இத் தன்மையது என்பதைத்தான் அறிந்து கொள்ள ஓர் இடம் ஏற்பட்டது என்பதும் அனுமன் கருதினான் எனக் கொள்ளற் பாலதாம் ; இதனால் அனுமன் தானே அறியும் ஆற்றலும் அமைந்தவன் என்ற பெருமித மில்லாத அடக்க நிலையை மேற்கொண்டவன் என்பது விளங்குவது காணலாம், இப்பணியில் தன்னைச் சாம்பன் ஊக்கியது தனக்கு அவன் அளித்த பெறலரும் பேறு எனக்கொண்டு தன் கடப் பாட்டை அனுமன் தெரிவித்துக்கொண்டதும் ஆகும், இச்செய்யுள், சாம்பனை நோக்கிக் கூறியதாகமட்டும் கொள்ளாமல் அனுமன் வானர வீரர் அனைவரையும் நோக்கிக் கூறியதாகக் கொண்டாரும் உளர்.

பி - ம். 1. *நீவிரே நினைவின் முன்னர், நினைவின் முன்னம்; நீவிர் மற்றுன்னும் முன்னே.*

2. *யுலகனைத்து மீன்ற ; தாயுமற்றெவையும் வென்று.*

3. *போயிது தருதியென்றென்; புலமைதீர் புன்மை கண்டு, புன்மைதீர் புலமை கண்டு, புன்மைதீ ராண்மை கண்டு ; புரிதி நீ யென் றெனையொரு பொருளாக் கொண்டு.*

4. *எயினி ராயில் மண்மேற் பிறந்தவர் யாவரென்போல் ; யாவரென்றும்.*

இதன்பின் சில பிரதிகளில் அடியிற் காணும் இருபாடல்கள் அதிக மாக உள்ளன. அவை பல பழைய ஏடுகளில் இல்லை.

இலங்கையை யிடந்து வேரோ டிவ்வயின் றருகென்றாலும்
விலங்கினர் தம்மை யெல்லாம் வேரொடு விளிய நூறிப்
பொலன்குழை மயிலைக் கொண்டு போதெனப் புகன்றிட் டாலும்
கலங்கலீ ருரைத்த மாற்றம் முடிக்குவல் கடிது காண்டிர்.

ஓசனை யொன்று நூறு முள்ளடி யுள்ள தாக
ஈசன்மண் ணளந்த தேய்ப்ப விருங்கட லினிது தரவி
வாசவன் முதலோர் வந்து மலையினு மிலங்கை வாழும்
நீசரை யெல்லாநூறி நினைத்தது முடிப்பல் பின்னும், (21)

**999. முற்றுநீ ருலக முற்றும் விழுங்குவான் முழங்கி முந்நீர்**
**உற்றதே யெனினு மண்ட முடைந்துபோ யுயர்ந்த தேனும்**
**இற்றைநும் மருளு மெங்கோ னேவலு மிரண்டு பாலும்**
**கற்றைவார் சிறைக ளாகக் கலுழனிற் கடப்பல் காண்டிர்.**

'நீர் முற்றும் உலகம் முற்றும்-நீரால் முழுதும் சூழப்பெற்ற உலகம் முழுவதும், விழுங்குவான் - விழுங்கும் பொருட்டு, முழங்கி - முழக்க மிட்டுக்கொண்டு, முந்நீர் உற்றதே எனினும் - கடல் எதிரிட்டுப் பொங்கி வந்தாலும், அண்டம் உடைந்து போய் உயர்ந்ததேனும் - இவ்வண்ட கோளம் உடைந்துபோய் வானவெளி உயர்ந்து போனாலும், இற்றை நும் அருளும் - இப்பொழுது உங்களுடைய அனுக்கிரகமும், எம்கோன் ஏவலும் - எம் தலைவராகிய இராமபிரான் எனக்கிட்ட கட்டளையும், இரண்டு பாலும் கற்றைவார் சிறைகள் ஆக - என் இருபுறமும் தொகுதியாக நீண்ட சிறகுகளாய் அமைய, கலுழனில் கடப்பல் - யான் கருடனைப் போலக் கடந்து செல்வேன்; காண்டிர் - இதனை நீவிர் காண்பீராக!

முழுவதும் நீராற் சூழப்பெற்ற உலகம்; உலகில் நிலப்பகுதியினும் நீர்ப்பகுதி மும்மடங்கு அதிக மாதலால், முற்றுநீர் உலகம் எனப்பட்டது. எம்கோன் ஏவல்: சுக்கிரீவன், பிராட்டியிருக்குமிடம் கண்டறிந்து வர வானரர்களை அனுப்பியபோது, இராமபிரான், அநுமனைத் தனியே அழைத்துப் பிராட்டியின், உருவ இலக்கணங்களையும், மற்றும் பல அடையாளச் செய்திகளையும் கூறி அருள்புரிந்து ஏவினன் ஆதலின் என்க. உம் அருள், எங்கோன் ஏவல் இரண்டும் இருசிறைகளாகக் கொண்டு கருடனுக்கு ஒப்பாயினன் என்று கூறியதாம்; இதனால் திருவடி என்னும் அநுமன் பெரிய திருவடி யென்னும் கலுழ

னுக்கு ஒப்பான ஒற்றுமைதோன்றக் கூறப்பெற்ற நயம் ஓர்க. இது திருவடி யென்னுந் தன்மை யாவர்க்குந் தெரிய நின்ருன். (999) என்று பின் சிறப்பித்ததாலும் அறியலாம். இற்றை: ஐயீற்றுக் குற்றுகரம், கடப்பல்; எதிர்காலத்தையுணர்த்தும் தன்மை ஒருமை வினைமுற்று. இச் செய்யுளின் பின்னிரண்டு அடிகள் உருவகத்தி னிடமாய் அமைந்த உவமையணி. அநுமனுக்குத் திருவடி என்ற பெய ருண்டு.

பி-ம். 1. விழுங்குவான் முழங்கு வானம், முற்று நீ ருலகமெல்லா முடிந் திடற் கடுத்தகாலம்.

2. மண்ட முடைந்துமீ துயர்ந்த தேனும், மண்டத்தூடுபோ யுயர்ந்த தேனும், மண்ட முடைந்திட வரினும் யாவீர்.

3. மற்றைநம் மருளுமெங்கோ னிராகவ னருளுங் கொண்ட; சொற்றவாசகமு மெங்கோ.

4. சிறைகளாலே கலுழனிற் கடத்தல்; கலுழனிற் பறப்பென். (22)

அநுமன் வானர வீரரிடம் விடைபெற்று மயேந்திரமலை உச்சியை அடைதல்.

1000. ஈண்டினி துறைமின் யானே யெறிகட லிலங்கை யெய்தி
மீண்டிவண் வருதல் காறும் விடைதம்மின் விரைவி னென்னு
ஆண்டவ ருவந்து வாழ்த்த வலர்மழை யமரர் தூவச்
சேண்டொடர் சிமயத்தெய்வ மயேந்திரத் தும்பர்ச்சென்ருன்

'யானே - யான் ஒருவனாகவே, எறி கடல் இலங்கை எய்தி - அலைகளை வீசி எறியும் கடலாற் சூழப்பெற்ற இலங்கை நகரை அடைந்து, மீண்டு இவண் வருதல் காறும் - நான் இங்குத் திரும்பிவரும் வரையில், ஈண்டு இனிது உறைமின்-இங்கே நீவிர் கவலையின்றி இனிது தங்கியிருப் பீராக; விரைவின் விடை தம்மின் - விரைவில் விடைகொடுங்கள்;' என்னு - என்று அநுமன் கூற, ஆண்டு - அப்பொழுது, அவர் - இவ் வாநரவீரர், உவந்து வாழ்த்த - மகிழ்ந்து வாழ்த்துக்கூற, அமரர் அலர் மழை தூவ - தேவர்கள் மலர் மாரி பொழிய, சேண் தொடர் - வான் அளாவிய, சிமய - சிகரங்களையுடைய, தெய்வ - தெய்வத் தன்மை வாய்ந்த, மயேந்திரத்து உம்பர் சென்ருன் - மயேந்திர மலையின் உச்சியில் போய்ச் சேர்ந்தான்.

உறைமின், தம்மின் என்பன - முன்னிலைப் பன்மை வியங்கோள் வினைமுற்றுக்கள்; தம்மின்: தா என்னும் வினைப்பகுதி குறுகிற்று; வம்மின் என்பதுபோல. மலர்தூவி ஆசீர்வதித்தல், சுபமாய்க் காரியம் நடைபெறச் செய்யும் செயல்.

பி-ம். 1. ஈண்டிவனுறைமின், யானவ், ஈண்டிவனுறையும்; னுறைமி னீவிர்,
2. வருதன் மன்னும், வருதல் பின்னும், வருயகாறும்;
3. மலர்மழை.
4. சேண்டொடர் குடுமித் தெய்வ; மகேந்திரத்.

ஒரு சுவடியில் இதனுடன் மயேந்திரப் படலம் முற்றும். (23)

அநுமன் தன் பெருவடிவுகொண்டு மயேந்திரமலைமேல் நிற்றல்.

1001. பொருவரு வேலை தாவும் புந்தியான் புவனந் தாய
பெருவடி வுயர்ந்த மாயோன் மேக்குறப் பெயர்ந்த [தாள்போல்
உருவறி வடிவி னும்ப ரோங்கின னுவமை யாலும்
திருவடி யென்னுந் தன்மை யாவர்க்குந் தெரிய நின்றான்.

வேலை தாவும் - கடலைத் தாவிச்செல்ல முற்பட்ட, பொருவு அரு புந்தியான் - உவமை சொல்வதற்கு இல்லாத அறிவு அமைந்த அநுமன், புவனம் தாய - உலகங்களைத் திரிவிக்கிரமனாய்த் தாவி அளந்த, பெருவடிவு உயர்ந்த - பெரிய உருவினால் உயர்ந்து விளங்கிய, மாயோன்-திருமாலினுடைய, மேக்கு உற பெயர்ந்த - மேல் பொருந்திச் சென்று வியாபித்த, தாள்போல் - திருவடிபோல, உருவு அறிவடிவின் - யாவர்க்கும் புலனாகும் உருவத்தோடு, உம்பர் ஓங்கினன் - வானளாவி வளர்ந்து நின்றான்; (அவ்வாறு உயர்ந்தோங்கிய நிலையால்), திருவடி என்னும் தன்மை - திருவடி என்று ஆன்றோர் அவனைக் கூறும் பெயர்த் தன்மை, உவமையாலும் - (இப்பொழுது) உவமை முகத்தாலும் யாவர்க்கும் தெரிய நின்றான் - யாவருக்கும் தெரிந்து கொள்ளும்படி தோன்றி நின்றான்.

பொருவரு என்பதை வேலைக்கே இயைத்துப் பொருள் கொண்டாரும் உளர். இங்குத் திரிவிக்கிரமன் திருவடிபோல மேக்குறப் பெயர்ந்து நின்ற நிலையில் உவமையாகு பெயராக நம் ஆசிரியர் பெருந்தகை அநுமனைச் சிறப்பித்த செவ்வி உணரத்தக்கதாகும். இச்செய்யுள் பிரிநிலைநவிற்சியணி. தாய - தாவிய, தா பகுதி; 'கை உலகம்தாயவனை யல்லது தாம்தொழா' (முதற்திருவந்தாதி: 11.)

பி-ம். 1. புவனந்தாவப்.
2. பெருவடி வமைந்த மாயோன்; பெயர்த்ததாள் போல்.
3. உருவறி வடிவன், ரோங்கினான். (24)

1002\. பார்நிழல் பரப்பும் பொற்றேர் வெயிற்கதிர்ப் பரிதி மைந்தன்
போர்நிழல் பரப்ப மேலோர் புகழென வுலகம் புக்குத்
தார்நிழல் பரப்புந் தோளான் றடங்கட ருவாமுன்னம்
நீர்நிழ லுவரி தாவி யிலங்கைமேற் செல்ல நின்றான்.

மேலோர் புகழ் என - சிறந்த கவிஞர் முதலிய பெரியோர்களின் புகழ் வடிவம் என்றே கருதத் தக்கவனும், தார் நிழல் பரப்பும் தோளான்- கௌஸ்துப மணிமாலை ஒளி வீசும் புயங்களையுடையவனுமான மாருதி; உலகம் புக்கு - அரக்கர் உலகமாகிய இலங்கையிற் புகுந்து, நிழல் பார் பரப்பும் பொன்தேர் - தனது ஒளியைப் பூவுலகின் கண் பரவச் செய்யும் அழகிய தேரையும், வெயில் கதிர்-வெப்பமான கிரணங்களையும் உடைய, பரிதி மைந்தன் - சூரியன் வழித் தோன்றலான இராமபிரானுடைய, போர் நிழல் பரப்ப - போர் வீரத்தின் ஒளியைப் பரப்புமாறு, தட கடல் தாவா முன்னம் - பெரிய கருங்கடலைத் தாண்டிச் செல்லும் முன்பே, நீர் நிழல் - நீரிலே காணப்படும் அவனது நிழல் (சாயை), உவரி தாவி- உப்புக் கடலைக் கடந்து, இலங்கைமேல் செல்ல - இலங்கா நகரில் சென்று சேரும்படி, நின்றான் - (மகேந்திர மலையில்) நின்றான்.

பரிதிமைந்தன் : இராமபிரான். தயரதனைச் சூரியன் சேய் (அயோத்தி) கைகேசி. 61) என்றது காண்க, 'மேலோர் புகழென' (ஒப்பு) : 'அயோத்தி வேந்தன் புகழ் எனக்குவவுத் தோளான்' (சுந்தர. 195)' 'இராகவன் புகழெனு நலத்தான்' (சுந்தர. 228) : இனி மேலோர் புகழெனப் போர் நிழல் பரப்பும் எனினுமாம். இனி, பரிதி மைந்தனைப் பரிதியாகிய மைந்தன், எனவே சூரியன் என்று கொண்டு, அவன் தட கடல் தாவி மேலைக்கிரியை அடையும் முன்பு என்றும், பரிதி மைந்தனென சுக்கிரீவனுடைய போர் வீரர்களின் ஒளியைப் பரப்பும் என்றும் பொருள் கொள்வர். அநுமன் மாலை யணிந்துள்ளமை 'பொற்றாரகன் மார்பன்' (சுந்தர. 58)ல் காண்க. 'நீர் நிழல் உவரி தாவி' என்பதற்கு நீர் மயமான அழகிய கடலைத் தாவி எனக் கொள்வர் ஒருசாரார்.

பி-ம். 1. பரவும் பொற்றேர் ; எரிகதிர்ப்பரிதி ; பரப்பு மொற்றை.

2\. போர்நிழல் பரப்பும் ; வுலகம் புக்கார், வுலகம் புக்கான்.

3\. தாவு முன்னம், தாவு முன்னின்.

4\. திமிர நின்றான், செல்லா நின்றான். (25)

1003. பகுவாய மடங்கல் வைகும் படர்வரை முழுது மூழ்க
உகுவாய விடங்கொ ளுகத் தொத்தவால் சுற்றி யூழின்
நெகுவாய சிகரகோடி நெரிவன தெரிய நின்றான்
மகவாமை முதுகிற் றோன்று மந்தர மெனலு மானான்.

பகுவாய மடங்கல் வைகும் - பிளந்த வாயையுடைய சிங்கங்கள் தங்கியிருக்கும், படர்வரை - பரந்து கிடந்த் அந்த மயேந்திரமலை, முழுதும் - முழுவதும், மூழ்க - அநுமன் ஏறிநின்ற பாரத்தால் அழுந்தி உள்ளே மறைய, ஊழின் - வரிசையாக, நெகுவாய - சிதைந்து போன வையான, சிகர கோடி - அம்மலையின் சிகரங்கள் பலவும், நெரிவன - நெரிந்து பொடியாகிப்போக, விடம் உகுவாய கொள் நாகத்து - விடத்தைக்கக்குகின்ற வாயையுடையதும், பிறஉயிர்களைக் கொள்ளுவது மான நாகத்தை, ஒத்த வால் - ஒப்பான தன் வாலை, சுற்றி - தன் உடம்பிற் சுற்றிக் கொண்டு, தெரிய நின்றான் - அம்மலை மீது பலரும் காணும்படி நின்ற அநுமன், மக ஆமை முதுகில் தோன்றும் - திருமாலாகிய பெரிய ஆமையின் முதுகின் மீது விளங்கிய, மந்தரம் எனலும் ஆனான் - மந்தர மலை என்று சொல்லத்தக்கவனுமானான்.

மயேந்திரகிரி, திருமாலின் கூர்மாவதாரமாகிய பேர் ஆமையாக வும், அநுமன், அவ்வாமை மேல் நிறுத்திய மந்தரகிரிபோலவும், அவன் உடலைச் சுற்றியிருந்த வால், வாசுகி என்னும் கயிறுபோலவும் கொண்டு விளங்கின என்பதாம்.

மடங்கல் - ஆண் சிங்கம்: மக: மகத் என்ற வடசொல்லின் சிதைவு. எனலுமானான்: எனலும் என்றதில் உள்ள உம்மை, முன், 999 இல் திருவடியென்னுந் தன்மை யாவர்க்கும் தெரிய நின்ற நிலையை உடன் கூட்டிய இறந்தது தழுவிய எச்சவும்மையாகும், சிகரகோடி; அநுமனை மந்தரகிரிக்கு உவமித்தது; சுந்தர. 195,735, 774. மயேந் திரமலை மேல் நின்ற அநுமனுக்கு ஆமை முதுகில் நாட்டிய மந்தரத்தை உவமித்தமையால் - மயேந்திர மலை அநுமன் ஏறி நின்ற பாரம்தாங்காது ஆமைபோல் குறைந்து மழுங்கி அதன் மற்ற உறுப்புக்களும் உள் ளொடுங்கிப் போயின என்பதாம், இப்போதும் அந்த மயேந்திரமலை தென்கடற்கரையில் தரை மட்டமான பாறையாக விளங்குகின்றது என்பது அடுத்த செய்யுளாலும் விளங்குவது காண்க.

பி - ம். 2. நாகத் தொற்றைவால் சுற்ற வூழி.

3. செகுவாய சிகரகோடி; தேவரிற்றெரிய,

**1004.** மின்னெடுங் கொண்ட லுளின் வீக்கிய கழலி னார்ப்பத்
தன்னெடுந் தோற்றம் வானோர் கட்புலத் தெல்லை தாவ
வன்னெடுஞ் சிகர கோடி மயேந்திர மண்டம் தாங்கும்
பொன்னெடுந் தூணின் பாத சிலையெனப் பொலிய நின்றான்.

(அவ்வநுமன்), மின் நெடும் கொண்டல் - மின்னலோடு கூடிய பெரிய நீருண்ட மேகம், தாளின் வீக்கிய-தன் பாதத்தில் கட்டப்பெற்ற, கழலின் - வீரக் கழலைப்போல, ஆர்ப்ப - ஒலிசெய்ய, தன் நெடும் தோற்றம் - தனது நீண்டுயர்ந்த உருவத் தோற்றம், வானோர் கண் புலத்து எல்லை தாவ-தேவர்களின் கட்பார்வையின் எல்லையைத் தாண்டி அப்பால் கடந்து செல்ல, வல் நெடும் சிகர கோடி - வலிய உயர்ந்த சிகரங்களின் தொகுதிகளையுடைய, மயேந்திரம் - மயேந்திரமலை யானது, பாதசிலை என - மலையின் அடிவாரப் பகுதிபோல, பொலிய - விளங்க, அண்டம் தாங்கும் - இவ்வண்ட கோளத்தைத் தாங்கி நிற்கும், பொன் நெடும் தூணின் - பொன்னாலமைந்த உயர்ந்த தூண்போல, நின்றான் - நிமிர்ந்து நின்றான்.

மேருமலை இப்புவியின் இடையே நின்று இவ்வண்டத்தைத் தாங்கும் பொற்றூண்போன்றது என்பது நூற்றுணிபு, அநுமன் மேருபோலவும், மயேந்திரமலை அம்மேருவின் அடிவாரம் போலவும் விளங்கின என்க. இச் செய்யுளிலும் மயேந்திரமலை முன் (1000) செய்யுளைப் போல உயரம் அற்றுப்போன நிலை கூறப்பெற்றமை காண்க. அநுமன் பொன் நிறத்தாலும், வானுயர்ந்த தோற்றத்தாலும் மேருமலைக்கு உவமை; அநுமனுக்கு மேரு: சுந்தர. 28, 589, 698, 737. வானோர் பூமிக்கு மேலேயுள்ள சுவர்க்க லோகத்திலிருந்தும், தம் கண்கள் இமையாச் சிறப்பமையப் பெற்றிருந்தும் அன்னோர்கட் புலனுக்கும் எட்டாப் பேருருவும் ஒளியும் அமைந்து நின்றான் அநுமன் என்க. சிகர கோடி; 1003 இல் காண்க,

பி - ம். 1. மேகம் தாளின்; கழலோடார்ப்ப, கழலோடொப்பத்.
2. தொல்லை யாவ.
3. மகேந்திர; மண்டந்தாவும்.
4. பொலிந்த நின்றான். (27)

மயேந்திரப் படலம் முற்றும்.

கிட்கிந்தா காண்டம் மூலமும் உரையும் முற்றும்.

---

# செய்யுள் முதற் குறிப்பகராதி

(எண் - செய்யுள் எண்]

# அரும்பத முதலியவற்றின் அகராதி

(எண் - செய்யுள் எண்)

